கவிஸார்வபௌமரான

# காளிதாஸர்

இயற்றிய

# ரகுவம்ச மஹாகாவ்யம்

வே. ஸ்ரீ. வேங்கடராகவாச்சாரியர்
எழுதிய தமிழ் உரையுடன்

தி லிட்டில் ப்ளவர் கம்பெனி
சென்னை-17



ஸீதா லக்ஷ்மண ஹனுமத் ஸமேத **ஸ்ரீரகு** வீரன்
(கும்பகோணம் ஸ்ரீ ராமஸ்வாமி கோவிலிலுள்ள திவ்ய மூர்த்திகள்)
[படம் உதவியவர்: ஸ்ரீ டி. என். ஸ்ரீநிவாஸன் எம். ஏ.]

கவிஸார்வபௌமரான

# காளிதாஸர்

இயற்றிய

# ரகுவம்ச மஹாகாவ்யம்

வே. ஸ்ரீ. வேங்கடராகவாச்சாரியர்
எழுதிய தெளிவான தமிழ் உரையுடனும்

டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்களின்
முகவுரையுடனும்

தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,
சென்னை-17

# PREFACE

KALIDASA! What a flood of ideas rushes in! What a fine fantasy does it kindle! What an amount of thrill do his poems produce in the minds of the readers! What a sublime rank does he occupy in the galaxy of poets! What an out topping genius! One is bound to remain in bewildering wonderment when one thinks of the marvellous art of Kalidasa, 'the supreme poet of senses, of aesthetic beauty, of sensuous emotion,' the consummate artist profound in conception and wonderful in expression. The vision, the majestic and vigorous style, the warm humanism, the wealth of striking similes, the vividness of thought and fancy, the expressive and happy descriptions, all these and very many more easily and undoubtedly mark out his poems as perfect patterns of exquisite poetic grace and charm. Can every one reach and enjoy the perennial fountain-head of this ambrosia? Would it not be better if a canal is drawn, so that more might drink of the limpid stream?

A reverie of this kind as well as the national poet Bharathi's message to enrich our mother tongue prompted me to bring out the present edition of Raghuvamsa with a commentary in Tamil for the benefit of all lovers of literature. This is the first attempt of its kind..

In writing this commentary, the main aim has been to present a correct interpretation, and a clear explanation of the '*tatparya*' in transparent language. The Raghuvamsa has attracted a good number of Commentators and there are editions of the Raghuvamsa containing extracts from the commentaries of Hemadri, Charitravardhana, Vallabha, Sumativijaya and Dinakara Misra, in addition to the full text of Mallinatha.

Besides these, I have consulted two more unpublished commentaries, the *Padarthadipika* of Narayana, and the *Prakasika* of Arunagirinatha, who are well-known to the scholar-world through their commentaries on Kumarasambhava. I have

made a comparative study of these eight commentaries and in the light of the interpretation offered by them have endeavoured to get at the correct import of the slokas.

But I have to state with some reluctance that many of the commentaries have not clearly explained some of the problematic verses of the Raghuvamsa ; in such cases, I have discussed those verses with some scholars. To add to the value of this book extracts are given from the unpublished commentaries.

It is my ardent hope that the present edition will be a happy and welcome addition and that the utility and correctness of the commentary will be appreciated by discerning scholars.

I wish to express my sincere thanks to Dr. V. Raghavan, of the Madras University, Sri Sahitivallabha T. Sundaracharya with whom I have discussed some verses; Messrs. U. Venkata-Krishna Rao and V. S. Ranganathan of the Madras Christian College, for their valuable suggestions ; T. Chandrasekharan, Curator, The Madras Oriental Manuscripts Library and P. K. Narayana Pillai, Curator, Travancore Manuscripts Library, for making available the manuscript copy of the comments of Narayana and Arunagirinatha.

In particular, I am profoundly grateful to Dr. C. P. Rama-swami Aiyar whose suave and eloquent foreword on the sublimity of Kalidasa adorns this book and enriches its value.

If the pleasant hours I have given to the preparation of the book should help others, in however small a measure to understand and appreciate Kalidasa, the prince among poets, better than before, I shall deem myself doubly rewarded for my labour.

For valuable suggestions from the readers, I shall feel thankful.

V. S. VENKATA RAGHAVACHARI.

# FOREWORD

IT is not often that a great dramatist is also a supreme lyrical poet. Shakespeare is, of course, the most celebrated instance of such a combination. It is rarer still to find, along with the gift of lyrical poetry, the capacity to produce Epics or narrative poems of authentic excellence. Kalidasa, however, has triumphantly achieved this triune greatness. In the Rithusamhara, he has given us a marvellous description of the Indian seasons and his Meghasandesa is, in my view, the finest example of descriptive poetry interwoven with one of the greatest love poems of the world. His work as a dramatist has evoked world-wide admiration and the name of Goethe is enrolled amongst his devotees. In Kumarasambhava and Raghuvamsa, he has essayed a most comprehensive task and the latter is a memorable example of a historical-narrative containing descriptive and poetic passages of transcendent merit. It is not as well known as it should be that Kalidasa was one of those who dreamt centuries ago of a unified and powerful India.

It is only appropriate that such a poem should be made easily available to the Tamil speaking people of India and Mr. Venkata Raghavachariar has attempted this task with success. He has wisely utilised several well-known commentaries and his Tamil translation is simple, accurate and expressive. He deserves the congratulations and thanks of those interested in the popularisation of the masterpieces of our literature.

Madras,
2-4-1951.

C. P. RAMASWAMY AIYAR.

# முன்னுரை

**கா**வ்யம்—என்ற பதத்திற்குக் கவி எழுதியது என்பது பொருள். பாட்டின் வடிவிலே அமைந்தது மாத்திரமே காவ்யம என்பது இல்லை. வசன நடையிலே அமைந்துள்ளதையும் காவ்யம் என்றே கூறுவர் வடமொழி அறிஞர்கள். தண்டியாசிரியர் காவ்யத்தைப்பகுக்குங்கால், செய்யுளாலானது,வசனநடையாலானது, இரண்டும் கலந்து அமைந்தது என மூவகையாகப் பிரித்தனர். இனி காவ்யத்தை வேறு வகையிலும பிரிப்பர்; காதால் கேட்டும், படித்தும் அனுபவித்தற்குரிய காவ்யத்தை ச்ரவ்ய காவ்யம் என்பர். இவ்வகைக்கு ராமாயணம், ரகுவம்சம் முதலியன உதாஹரணங்களாகும். நடித்தற்கு வசதியாக எழுதப்தப்பட்டு, நடித்தும அனுபவித்தற்குரிய காவ்யத்தை த்ருச்ய காவ்யம் என்பர் ; நாடகக் காவ்யம் என்ற மறுபெயரும் இதற்குண்டு. இவ்வகைக்கு உதாஹரணம், உத்தரராமசரிதம், சாகுந்தளம் முதலியனவாம். இனி இக்காவ்யங்களை மஹாகாவ்யம்—கண்ட காவயம் என அவற்றின் அளவு முதலியன கருதி மற்றொரு வகையிலும் பகுப்பர். மஹாகாவ்யத்திற்குத் தேவையான அம்சங்கள் அலங்கார சாஸ்திரங்களிலே விரிவாகக் கூறப்பட்டுளளன. மஹாகாவ்யத்தின் உட்பிரிவுகள் ஸர்க்கங்கள் என அழைக்கப்படும். காவ்யத்தின் தலைவன், தேவனாகவோ, நற்குடியில் பிறந்து, தீரஉதாத்தனுக்குரிய குணங்களுடன் கூடிய க்ஷத்ரியனாகவோ இருக்கலாம். ரகுவம்சத்தில் இருப்பது போல் ஒரே வம்சத்தில் தோன்றிய பலரும் நாயகர்களாக இருக்கத் தக்கவர்களே. ச்ருங்காரம், வீரம், சாந்தம் என்ற மூன்றினுள் ஒன்று முக்யமான ரஸமாகவும், மற்ற ரஸங்கள் அதற்குப் புஷ்டி தருகின்றனவாகவும அமைதல் வேண்டும். கதை இதிஹாஸஙகளிலிருந்து எடுக்கப்பட்டதாகவோ, அல்லது உத்தமமான ஒரு மனிதனைப் பற்றியதாகவோ இருக்கலாம. துஷ்டர்களின் இழிகுணத்தை நிந்தித்தும், நல்லோர்களின் சிறப்பியல் புகளைப் புகழ்ந்தும் கூறவேண்டும்.

நகரம், ஸமுத்ரம், மலை, பருவங்கள், சந்திர ஸூர்யோ தயங்கள், ஜலக்கிரீடை, பூங்காவில் விளையாடுதல், மது பானம், காதலர்களின் பிரிவு, சேர்க்கை, விவாஹம், புத் திரன் பிறப்பு, போர் முதலியன பற்றிய வர்ணனைகள் மஹாகாவ்யத்தில் இடம்பெற்றிருக்க வேண்டும். ரஸம், பாவம், பலவகை அணிகள் இவை நிரம்பி, காதிற்கினிய விருத்தங் களிலே அமைந்து, மனத்தை மகிழவிப்பதாகவும் மஹாகாவ் யம் இருக்க வேண்டும். ஸர்க்கங்களின் மொத்த எண், எட்டிற் குக் குறையாமலும், முப்பதிற்கு மேற்படாமலும் இருக்க வேண்டும் என்பது சிலர் கருத்து. ஸர்க்கங்கள் மிக நீண் டிருத்தலும் கூடாது. ஒவ்வொரு ஸர்க்கததின் இறுதியிலும் விருத்தங்கள் மாற்றப்பட வேண்டும். தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நால்வகைப் புருஷார்த்தங்களையும் அடைவதற் கான முறைகளைத் தெளிவாகக் கூறவேண்டும். பொதுவாக காவ்யத்தின் பயனைக் கூறுமிடத்து, பொருள், புகழ், உலக அறிவு, தீயன நீக்கி நலனை அடைதல், பிரம்மானந்தத்திற்கு ஒத்த காவ்யச் சுவையைத் துய்த்தல், ஒரு காதலி தன கருத் தைக் காதலனுக்குத் தெரிவிப்பதுபோல் சொல்லாமற் சொல்லி அறத்தின் அறிவைப் புகட்டுதல் முதலியன பயனாகக் குறிக்கப் பட்டுள்ளன. இவற்றில் சில காவயத்தை இயற்றும் கவிக்கும், சில காவ்யத்தைப் படிக்கும் ரஸிகர்க்கும், சில இருவருக்கும் உண்டாவன என்பர். ஆனால் உண்மையான காவயப்பயனை ஆராய்ந்த பெரியோர்கள் இலக்கியச் சுவையனுபவித்தலே பயன் என்றும், நீதி புகட்டுதலிலே காவ்யத்திறகு முக்ய நோக்கு இருக்க வேண்டுவதில்லை என்றும் கருதுகின்றனர். அத் தகைய சுவை காவ்யத்தினின்றும வெளிப்படையாகத் தெரி கின்ற பதப்பொருளைக் காட்டிலும் தொனிக்கினற உட்பொரு ளான இறைச்சிப் பொருளாலேயே மிகுதியும் பெறப்படும் என வும் கூறுவர். இறைச்சிப் பொருளை வடமொழியில் த்வனி என்பர்.

இத்தொனி என்பது என்னவெனின் சுலோகத்திலுள்ள பதங்கள் ஒனறோடு ஒன்று அன்வயம் பெற்றுத் தெளியான ஒரு

பொருளைத் தெரிவித்து நின்றுவிடுகின்றன. ஆனால் அவ்வாறு வெளியிடப்பட்ட கருத்து பிறிதொரு கருத்தை வெளியிடும் தன்மை வாய்ந்ததாக இருபபதுண்டு. இவ்வாறு உள்ளதை த்வனி என்றும், வ்யங்யம என்றும் கூறுவர். இதுவே காவ்யத்தின் ஜீவன். இத்தகைய த்வனியைப் புலப்படுத்தும் சக்தி ஒரு கருத்துக்கும் உண்டு, ஒரு பதத்துக்கும் உண்டு. இவ்வாறு தொனிக்கப்படுவது, காதல் முதலிய் ரஸமாகவோ, உவமை முதலிய அணியாகவோ, அல்லது கதையின் ஒரு பகுதியாக யாகவோ இருக்கலாம். இவற்றை முறையே ரஸத்வனி, அலங்காரத்வனி, வஸ்துத்வனி என்பர். இம்மூவகை த்வனியிலும் ரஸத்வனியே சிறந்தது. அது குன்றாது இருக்கச் செய்வதே கவியின் முக்யமான நோக்காக இருக்க வேண்டும். இத்தகைய ரஸத்வனி நிறைந்த காவ்யமே காவ்யங்களிலே சிறந்ததாகக் கருதபபடுவது. இத்தகைய தொனியை அனுபவிக்கும் பொழுது, கவியினது மனத்துடன் ஒத்தமனமுடைய ரஸிகனது மனம் மட்டற்ற ஒரு மகிழ்ச்சியை அடைகின்றது. இம் மகிழச்சி உலகப் பொருளினின்றும் பெறப்படும் இன்பம் போன்றதன்று. அது பிரம்மானந்தத்திற்கு ஒப்பானது.

மஹா காவ்யத்திற்கு இன்றியமையாவெனக் கருதப்பட்ட அம்சஙகளில் ஒன்றிரண்டு இல்லாவிடினும் அதனல் காவ்யத்திற்கு இழுக்கொன்றுமில்லை. காளிதாஸர் முதலிய சில கவிகளின் காவயஙகளை நோக்கிய பின்பே அணியாசிரியர்கள் மஹாகாவ்ய லக்ஷணத்தை வகுத்துள்ளனர். எனவே, காளிதாஸரின் காவ்யங்களிலே இந்த லக்ஷணங்கள் பெரும்பாலும் உள்ளன. மகாகாவ்யமல்லாதது சிறுகாவ்யம் எனப்படும.

காளிதாஸர் எங்கு எக்காலத்தில் வாழ்ந்தார் என்பதைப் பற்றித் திண்ணமாய் அறிவதற்குத் தக்க சான்றுகள் கிடைக்கவில்லை. அவரும் தமது நூல்களிலே குறிப்பிட்டாரில்லை. வித்வான்கள் பலரும் பலவிதமான கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். அவர் காஷ்மீரத்தில் பிறந்தவர் எனவும், உஜ்ஜயினில் வாழ்ந்தவர் எனவும் சிலர் கூறுவர். கர்ணபரம்பரை

யாக வழங்கும் செய்திகள் அவர் போஜராஜனோடு வாழ்ந்தவர் எனக் கூறுகின்றன. இவ்வாறே அவர் வாழ்ந்த காலத்தைப் பற்றியும் கருத்து வேறுபாடு மிக உள்ளது. கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து, கி.பி. ஐந்தாம் நூற்றாண்டுவரையுள்ள ஆறு நூற்றாண்டுவரை அறிஞர்களின் கொள்கைக்கிணங்க அவர் வாழ்ந்த காலம் ஊசலாடி வருகின்றது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு நூற்றாண்டைக் குறிப்பிடுகின்றனர். காளிதாஸரின் காலத்தையும் வாழ்ந்த இடத்தையும் அறுதியிடுதற்காக அறிஞர்கள் கூறுகின்ற காரணங்களை எல்லாம இங்கே ஆராயதல் பயனற்ற செய்கையாதலால் அவ்வாராய்ச்சியை விட்டுச் செல்லல் சாலச் சிறந்ததாம். ஸர்வதேச கவியான காளிதாஸரை ஒரு இடத்திற்கு மாத்திரம் உரியவராகச் செய்தலும், ஸர்வகால கவியான அவருக்கு ஒரு காலத்தை மாத்திரம் குறிபபிடுதலும ஈசுவர ஸம்மதமன்று போலும்!

காளிதாஸரைப்பற்றிக் கர்ணபரம்பரையாக வழங்கும் கதைகள, அவர் நன்னடத்தை இல்லாத காமுகரெனக் கூறுகின்றன. 'காளிதாஸர்' எனற நூலில் அரவிந்தர், "காளிதாஸர் அறநெறிக் கொள்கையை ஏற்றுப் புகழ்ந்து ஆங்காங்குக் கூறியுள்ளனராயினும், தன்னளவிலே நனனடககைக்கான நெறியற்றவர் எனத் தோன்றுகிறது. அவரைப் பற்றி வழஙகப்படும் கிராம்யமான ஹாஸ்யம் மிகுந்த கதைகளை நாம ஏற்றுக் கொள்ள வேணடாமாயினும், பக்ஷபாதமின்றிக் காளிதாஸரது நூலைப் படித்தவர்கள, அறநெறியில் காளிதாஸருககு ஊக்கமுண்டு என்றோ, நன்னடக்கையில் அவர் உறுதியான நிலை உடையவர் என்றோ கூறத்துணியார். அவரது நூல்கள் சிறந்த கொள்கைகளையும, உயர்ந்த கருத்துக்களையும் புகழ்ந்து கூறுகின்றனவாயினும், அவைகள் அக்கருத்துக்களின் அழகு பற்றிக் கூறுகின்றனவேயன்றி, வாழ்க்கையில் அவற்றிற்கு உரிய மதிப்பைக் கருதி அன்று" எனகிறார். இவ்வாறு அரவிந்தர் கூறியது முற்றிலும் ஆதாரமற்றது. காளிதாஸர் குணநலன் இல்லாதவர் என்று கொள்வதற்கு அகச்சான்றோ, புறச்சான்றோ இல்லை. ச்ருஙகார ரஸத்தை முக்யமாக அவருக்கே

உரியதான தனிப்பட்ட ஒரு உத்ஸாஹத்துடன் நூல்களிலே வர்ணித்துள்ளார் என்பதாலேயே அவர் நன்னடக்கையற்றவர் என அனுமானிப்பது மிகமிகப் பிழைபட்டதாகும். ராவணனது அந்தப்புர ஸ்திரீகளையும், சரத்கால நதியை இளம் யுவதியுடன் ஒப்பிட்டும், அஹல்யை-இந்திரன் வரலாற்றையும், தாரை-ஸுக்ரீவன் வாழ்க்கையையும், மற்றும் பல காதற் காட்சிகளையும் வருணித்த வால்மீகி முனிவரைக் குணமில்லாதவர் என எவரும் கூறத் துணிவதில்லை. வாழவதிலே விருப்புள்ளவர் காளிதாஸர். அழகு ஆனந்தந்திற்காகவே அமைந்தது எனக்கருதிப் போற்றுபவர். உலகத்தைத் துறந்து ஓடவேண்டும் என்பது அவர் எண்ணமன்று. சுருங்கக்கூறின் 'வாழ்க்கை வாழ்வதற்கே' என்பதும், 'பக்தியினால் முக்தி பெறலாம்' என்பதும், 'பொருளை ஈட்டவேண்டும, ஆனால் பேராசையுடனல்ல;' 'உலகப் பொருளை அனுபவிக்கவேண்டும், ஆனால் விசேஷமான பற்றுதலுடன் அல்ல,' எனபதும, 'இவ்வுலகில் வாழும் ஒவ்வொரு நிமிஷத்தையும் மனிதன தான் பெற்ற ஒரு பெரிய லாபமாகக் கருதவேணடும்' என்பதும் அவர் கருத்து. இக்காரணங்களாலே அவர் வாழ்வை உத்ஸாஹத்துடன் வர்ணித்தாரேயன்றி, வேறு காரணங்களால் அன்று.

ரகுவம்சத்தின் முதல் ஸர்க்கத்திலே ரகுவம்ச மன்னர்களின் சிறப்பியல்புகளை வர்ணிக்கத் தொடங்கிய கவி, முதலிலே கூறிய குணம் தூயமைதான். அத்தூய்மை பிறவிமுதற்கொண்டே அமையவேண்டும் என வலியுறுத்துகின்றார். வேத தர்மங்களிலே மிகப் பற்றுள்ளவர் காளிதாஸர். ஆங்காங்கு யாகாதி காரியங்களையும் நித்ய கர்மானுஷ்டானங்களையும விடாது கூறுகின்றார். சாகுந்தலத்தின் இறுதி சுலோகத்தில் தமக்கு முக்தி தரவேண்டுமெனச் சிவபிரானை வேண்டுகின்றார். வேத தர்மததிலே பற்றும், சிவபக்திச் செல்வமும், குணநலன்களிலே ஆர்வமும் உளள கவியை, அவர் காதற் சுவையை வர்ணித்துள்ளார் என்ற காரணத்தினாலே நன்னடக்கை அற்றவர் என்று கூறுவது மிகவும் தவறானது.

ரகுவம்சத்திலே அவர் வலியுறுத்திச் சென்ற தர்மங்களை இங்கே குறிப்பதும் பொருத்தமானதே. மரியாதைக் குரியவர்

களை அவமதிப்பது நன்மைக்கு இடையூறுகும் எனவும், சக்ர வர்த்திகளும் கூடத் தாம் செய்த வினைக்குப் பிராயச்சித்தம் அனுஷ்டிக்க வேண்டும எனவும், செல்வத்தை ஈட்டுவது பிறர்க்கு அளித்தற்கே எனவும், விஷய சுகங்களிலே அதிகம் பற்று வைத்தல் முடிவிலே துன்பமே பயக்கும் எனவும் கூறி மற்றும் பல அறங்களையும் கவி காட்டியுளளார்.

காளிதாஸரது ரகுவம்சத்தினின்றும் அறியப்படும் தத்து வத்தைப் பற்றிக் கவி ரவீந்த்ரர் கூறுவதும் கவனிக்கத் தக்கதே.

"காளிதாஸரின் காலத்தில் பாரததேசம், செல்வம், இலக்கி யம், கலை இவைகளிலே உயர்ந்திருந்தது போனறே நாகரிகத்தி லும் சிறந்திருந்ததாகப் புலனுகின்றது. ஆனல் இச்செல்வச் சிறப்பும் அதன் நுகர்ச்சியும, அமைதியும் தூய்மையும் வாய்ந்த தபோவனங்களினின்றும் தோன்றிய சிறந்த வாழ்க்கைக் கொள்கைகளுக்கு எதிராக இயங்கி வந்தன என்பதும் அவரது காவ்யங்களினின்று அறியப்படுகின்றது. படுபள்ளத்தை நோக்கி ஊர்ந்து செல்லும் பெரும் பனிச் சரிவுபோல் நாசத்தை நோக்கிச் செல்லும் பகட்டான இச் செல்வ வாழ்க்கையைக் குறித்துக் காளிதாஸர் செய்துள்ள எச்சரிக் கையை அவரது பாடல்களிலே காணலாம். விக்ரமாதித்யனது சபையில் பல்வகைச் செல்வங்களிடையிலிருந்த காளிதாஸ ரின் உள்ளம், ஆத்ம குணங்களை விருத்தி செய்துகொள்வதில் ஈடுபட்டிருந்த புராதன இந்தியாவின் எளிமையையும் தூய்மை யையும் விரும்பியது. இத்தகைய விருப்பமே ரகுமன்னனது வம் சத்தில் தோன்றிய அரசர்களின் சரித்திரத்தைத் தமது காவ் யத்திற்குப பொருளாகக் கொள்ளும்படி அவரைத் தூண்டி யது. இக் காவ்யத்திலே அவர் மன்னர்களின் வாழ்க்கைக்கு வழிகாட்டியாயுள்ள சிறந்த தர்மங்களின் எழுச்சி, அவற்றின் வீழ்ச்சி இவைகளின் வரலாற்றையே வெளியிடுகின்ருர்".

"அரசன் திலீபன் தன் மனைவி ஸுதக்ஷிணையுடன் காடு சென்று மஹரிஷிகளின் வாழ்க்கையை மேற்கொண்டான். பெரும் சக்ரவர்த்தியான அவன், ஆச்ரமத்திலே மாடு மேய்ப்பதிலே ஈடுபட்டான். இவ்வாறு, தன்னலத் தியாகமும்,

எளிமையும் நிறைந்துள்ள ஆச்ரமத்திலே தொடங்குகின்ற ரகு வமச காவ்யம் அரண்மனையின் செல்வச் சிறப்பு வர்ணனையி லும அதிக ஸுகானுபத்தைக் கூறுவதிலும் முடிவு பெறு கிறது. அமைதியும அடக்கமுமுள்ள சொல் நடையிலே, அவர், தூய நன்னடையால் உயர்ந்துள்ள அரசரது பெருமையைப் பேசுகின்ருர். அமைதியான ஸூர்யோதயத்துடன் தொடங்கும் காலைபபொழுதுபோல் அவரது காவ்யம் சாந்தத்துடன் ஆரம் பிக்கின்றது. பல வர்ணக் கதிர்களுடன் காட்சியளிக்கும் சூரி யாஸ்தமயமபோல், காவயததின முடிவு, உணர்ச்சி ஊட்டத்தக்க சொல்வளத்திலே விவரிக்கபபட்டுள்ளது. சூரியாஸ்தமயத்திற் குப்பின் இருள கவிவதுபோல், காவ்யத்தின் முடிவில் ஒளி முழு வதையும மறைத்து ஒரு இருள் சூழ்கின்றது".

"அரண்யத்திலே வாழும் மஹரிஷிகளின் உபதேசம் ரகு வம்சத்தின் இவவகையான தொடக்கத்திலும், முடிவிலுமே புதைந்து கிடைக்கின்றது. அச் சந்தேகமே காளிதாஸரின் கவிதையிலேயே இடம் பெற்றுள்ளது. அமைதியான தன் னடக்கம், தூய்மை, தியாகம் என்ற இம்மூன்றும் சுற்றிலும உள்ள வரையில்தான் மககளின் நலம் நிறைந்த எதிர்கால வாழவு மிளிரும் என்ற இவ்வுண்மை அவரது காவ்யமான ரகு வம்சம முழுவதிலுமே ஊடுருவியுளளது. விநாசம் திண்ணம் என்ற நிலை ஏற்படின், பெரும் பசியுள்ள ஆசைத் தீ பல திசை களிலும் ஜ்வாலைகளைக் காட்டுவதாய் தனது ஒளியால் மக் களின மனக்கண்களைப் பறித்துக் குருடாக்குகின்றது."

ஸம்ஸ்கிருத பாஷையில் ஐம்பெருங் காவ்யங்களில் ஒன்ருன இது பத்தொன்பது ஸர்க்கங்கள் கொண்டது. திலீபன் தொடங்கி அக்னிவர்ணன் ஈருகவுள்ள இருபத்தொன்பது அர சர்களின் வரலாற்றைக் கூறுமுகமாகத் தர்மார்த்த காமங்களின் உணமையான இயல்புகளைப் பலவகையிலும தெளியக்கூறுகின் றது. வைதர்பம் என்று அழைக்கப்படும் சொல் நடையிலே அமைந்து, சொல் பொருள் சுவைகளிலே சிறந்து, தான் கூறும் பொருளைக் கண்முன் காட்டுவது போன்று மனத்திலே பதியும் படி தெள்ளிய இனிய முறையிலே எடுத்துக் கூறுவது.

சிறந்த உவமைகளும, ஆழ்ந்த கருத்துக்களும் காவ்யம முழுவதுமே விரவிக்காணப்படும். இக்காவ்யம் பல தலைவர்களைக் கொண்டது. இதில் முக்யமான சுவை மஹாபாரதத்தில் இருப்பது போல சாந்தரஸமே என்பர் சிலர். ச்ருங்காரம் என்பது பலர் கருத்து. ச்ரவ்ய காவ்யங்களிலே காளிதாஸர் கடைசியாக இயற்றியது ரகுவம்சம் என்பர். அக்னிவர்ணனது மரண வர்ணனையில் முடிகின்ற இந்நூல் முற்றுப்பெறாது நின்று விட்டதெனவும், ஏதோ இடையூற்றினால் கவி மேற்கொண்டு எழுதவில்லை எனவும், அல்லது எழுதிய பகுதிதான் கிடைக்கப் பெறவில்லை எனவும், கருத்து வேறுபாடுகள் உள்ளன. இக் காவ்யத்திலுள்ள பத்தொன்பது ஸர்க்கங்களில் முதல் எட்டு ஸர்க்கங்கள் திலீபன், ரகு, அஜன் இவர்களைப் பற்றியும, ஒன்பது தொடங்கிப் பதினைந்து வரையுள்ள ஏழு ஸர்க்கங்கள், தசரதர், ராமர் இவர்களைப்பற்றியும் கூறுகின்றன. பதினாறுவது ஸர்க்கம் குசனதுவரலாற்றையும், பதினேழாவது ராமனது பேரனான அதிதியைப் பற்றியும், பதினெட்டாவது ஸர்க்கம் மிகச் சுருக்கமான முறையில் இருபத்தொரு அரசர்களைப்பற்றியும், பத்தொன்பதாவது ஸர்க்கம் அக்னிவர்ணனது காமத்தைப் பற்றியும் கூறுகின்றன.

ரகுவம்சத்திற்குப் பெரும்பாலும் முதல் நூலாக இருந்தது வால்மீகி ராமாயணமே. பதினெட்டாவது ஸர்க்கத்தில் கூறியுள்ள பகுதிக்கு மாத்திரமே கவி விஷ்ணு புராணத்தையோ, வாயு புராணத்தையோ ஆதாரமாகக் கொண்டிருக்க வேண்டுமெனத் தெரிகின்றது.

காளிதாஸர் சிறந்த ப்ரதிபையுடையவர். கலைகளில் சிறந்த அறிவு வாய்ந்தவர். காவ்ய ரஸத்தைத் தாமும் அனுபவித்துப் பிறரையும் அனுபவிக்கச் செய்யும் ஆற்றல் வாய்ந்தவர். சாஸ்த்ர அறிவும் பெற்றவர். இத்தகைய சிறப்புகள் வாய்ந்தவர் அவர் என்பது அவரது நூலைப் படிப்போர்க்கு எளிதிலே புலனாகும். மற்றுமொன்று: ஒத்த இரண்டு கருத்துக்களை இணைத்துக்காட்டுவதென்பது கல்வியறிவு, பிரதிபை, மனத்தின்

சிறந்த பண்பாடு இவற்றின் பயனாக உள்ளது. இம்மூன்றும் உடையவர்தாம தாம் கூற விரும்பிய பொருளுக்கேற்ற உபமானத்தைக் கூற முடியும். ஏற்ற உபமானங்களை அமைப்பது காளிதாஸரின் சிறந்த குணமாகும். அவரது உவமைகள மிகப் பொருத்தமானவையாக இருப்பதுடன் மனத்தைக்கவரும் அழகு வாய்ந்தனவாகவும் இருக்கின்றன. மற்ற அணிகளைக் காட்டிலும் உவமையில்தான் அவர் மனம் அதிகம் லயித்துள்ளது.

அபகயாதி ஜனங்களிடையில் வெகுவேகமாகப் பரவுவதற்கு எண்ணெய் நீர்மேல் பரவுவதுடனும, தாளிட்ட அறையில் தாள் நீக்காமலே உள்ளே வந்து நின்ற அயோத்யா தேவதைக்குக் கண்ணாடியில் தோன்றும் பிரதிபிம்பத்தையும், நுரை நிறைந்துள்ள நீலக்கடலுக்கு நக்ஷத்ரங்களுடன் கூடிய நீல வானத்தையும், புத்திரனில்லாது வருந்திய தசரதர்க்குப் புத்திர சோகத்தினால் மரணம் நேரும் என்று முனிவர் கொடுத்த சாபத்திற்கு நிலத்திற்கு வளமூட்டக் கருதிக் காய்ந்தபுல், வைக்கோல் முதலியன பரப்பி எரித்தலையும, இந்துமதியுடன் கீழே விழுந்த அஜனுக்கு எண்ணெய்ச்சொட்டுடன கீழே விழுகின்ற சுடரையும, அஜன தன் மடியிலே எடுத்து வைத்துக்கொண்ட இறந்த இந்துமதிக்குச் சுருதி சேர்த்தலுக்காக மடியிலே வைக்கப்படும் வீணையையும் உவமித்தார். இவ்வாறு மற்றும் பல உவமைகளையும், சிறந்த கருத்துக்களையும் இக் காவ்யத்திலே காணலாம்.

# ரகு வம்சம்: கதைச் சுருக்கம்

**முதல் ஸர்க்கம்**

உலகத்தின் தாய் தந்தையரான பார்வதியையும், சிவ பிரானையும வணங்கியபின் கவி, தமது விநயத்தை வெளி யிட்டு, ஸூர்யவம்ச மன்னர்களின் குண நலன் களைக் கூறத் தொடங்குகின்றார். அம்மன்னர்கள் முறைப்படி யாகாதி தேவ பூஜைகளைச் செய்த னர். யாசகரின மனம் வருந்தா வகையில் தானம் செய்தனர். குற்றத்திற்கேற்ற தண்டனை விதித்தனர். காலத்திற்கு உரிய அறிவு பெற்றிருந்தனர். வழங்குதற்காகவே பொருளை ஈட்டி னர். ஸத்யத்தைக் கருதி மிதமாகப் பேசினர். புகழிற்காக வென்றனர். ஸந்ததியின தொடர்ச்சியைக் கருதி மணம புரிந்து கொண்டனர். பால்யத்திலே கல்வி கற்றனர். யௌவனப் பருவத்திலே உலக இன்பங்களைத் துயத்தனர். வயோதிகப் பருவத்தில் தவத்தை மேற்கொண்டு யோகமுறையினால் உடலை நீத்தனர். இத்தகைய சிறப்பு வாய்ந்த மன்னர்களுக்கெல்லாம் முதல்வர் வைவஸ்வதமனு. அவரது வம்சத்தில் திலீபன் என்ற அரசன் தோன்றினன். பல குணநலனகளைப் பெற்றி ருந்த அவ்வரசன் வெகுகாலம் மகப்பேறின்றி இருந்தான. ஸந் ததி இல்லாததன் காரணத்தை அறிய விரும்பிய திலீபன், மனைவி ஸுதக்ஷிணையுடன், தன் குலகுருவான வஸிஷ்டரிடம் சென்று குறையைத் தெரிவிககவும் அவர், "அரசே! ஒரு சமயம் நீ தேவருலகினின்றும் திரும்புங்கால் கல்பக விருக்ஷத்தினடியில் நின்றிருந்த காமதேனுவைப் பிரதக்ஷிணம் செயயாது வந்தாய். 'எனது ஸந்ததியைப் பூஜித்தாலன்றி உனக்கு ஸந்ததி உண் டாகாது' எனக் காமதேனு கூறியுள்ளது. காமதேனுவின் பெண்ணான நந்தினி எனது ஆச்ரமத்திலுள்ளது. அதை நன்கு உபசரிப்பாயாக. அது எல்லாப் பயனையும் அளிக்க வல் லது." என்றார். முனிவர் கூறியதை ஏற்று அரசன் தன் மனைவியுடன் ஆச்ரமத்திலே தங்கியிருந்தான்.

குருவின் ஆணைப்படி மறுநாள் காலை முதல் திலீபன் நந்தினிக்குப் பணிவிடை செய்யத் தொடங்கினன். ஸுதக்ஷிணை சிறிது தூரம் பின்தொடர, அரசன், மேய்ப்பதற்காக அதைக் காட்டிற்கு ஓட்டிச் சென்றான். நல்ல ருசியுள்ள இளம்புல்லைப் பிடுங்கி அதற்குக் கொடுத்தான். அதன்மேல் உட்கார்ந்த ஈக்களை ஓட்டினன். நந்தினி விரும்பியபடியே செல்லவிட்டு நிழல்போல் அதன்பின் தொடர்ந்து சென்றான். ஸாயங்காலம் அது திரும்புங்கால் ஸுதக்ஷிணை அதனை எதிர்கொண்டு சென்று பூஜித்து வரவேற்றாள். பசு தூங்கியபின்பே அத்தம்பதிகள் உறங்கினர். இவ்வாறு இருபத்தொரு நாட்கள் சென்றன. அரசனது அன்பைச் சோதிக்க விரும்பிய நந்தினி மறுநாள் ஹிமயமலையின் குகையருகில் சென்று புல் மேய்ந்து கொண்டிருந்தது. அரசனும் மலையின் அழகை நோக்கியவனாய் க்ஷணநேரம் பசுவைப் பாராது நின்றான். அச்சமயம் திடீரென ஒரு சிங்கம் பசுவின் மேல் பாய்ந்து அதனைப் பிடித்து இழுக்கவும் நந்தினி கதறியது. பசுவைக் காக்க விரும்பி அம்பை எடுக்க முயன்ற அரசனது கை சித்திரத்தில் உள்ளதுபோல் ஸ்தம்பித்து நின்றது. கை செயலற்றுப்போனதால் முன்பே வியப்புற்ற அரசனை நோக்கி மனிதக் குரலில் சிங்கம் பேசத் தொடங்கியது. அவனது வியப்புணர்ச்சி இதனால் அதிகமாயிற்று.

**இரண்டாவது ஸர்க்கம்**

“அரசே! சிரமப்படாதே. நீ அஸ்திரத்தைப் பிரயோகித்திருந்தாலும் அது என்னை ஒன்றும் செய்திருக்காது. நான் சிவஸேவகன். இதோ எதிரிலுள்ள தேவதாரு பார்வதியினால் வளர்க்கப்படுவது. ஒரு யானை தன் கன்னத்தை இத்தேவதாருக் கன்றின்மேல் தேய்த்ததால் இதன பட்டை உரிந்தது. அதனால் இதற்குப் பாதுகாப்பைச் செய்ய விரும்பிய சிவபிரான, சிங்கவடிவினனாக எனனைச் செய்து அண்மையிலே வருவதை உணவாகக் கொள்ளும்படி கூறி என்னை இம்மரத்திற்குக் காவலாக நியமித்துள்ளார். சிவபிரான் கூறியபடி, அருகிலே வந்த இப்பசு எனது சிறந்த உணவாகும். உன்னால் செய்யமுடியாத விஷயத்தில் நீ ஏன் வெட்கப்படவேண்டும்?”

சிங்கம் கூறியதைக் கேட்ட திலீபன், "மிருக ராஜனே! சிவ ஸேவகனாகிய நீ என் உள்ளத்தில் இருப்பதை அறிவாய். நானும் உன்னருகில் உள்ளவன்தானே. என்னை உட்கொண்டாலும் சிவனது ஆணைப்படி நடந்ததாகுமே. என் குருவின பொருளான இப்பசு என் கண்முன அழிவதைக் காண நான் ஒரு நாளும் ஒப்பமாட்டேன். இதன் கன்று மாலையில் ஆவலுடன் எதிர்பார்த்திருக்கும்," என்றான். "ஒரு சிறிய பொருளான இப்பசுவிற்காக எவ்வளவு பொருள்களை இழக்கத் துணிகின்றாய் நீ! ராஜ்யம், யௌவனப்பருவம், அழகிய இவ்வுடல் ஆகிய மூன்றையும்விட்டு இப்பசுவின க்ஷேமத்தை மாத்திரம் விரும்புகின்ற நீ விவேகமற்றவன் என்பது என கருத்து. நீ இறந்தால் இவ்வுயிர் ஒன்றுதான் காப்பாறறப்படும். நீ இருந்தால் உன நாட்டிலுள்ள பிரஜைகள பலரும பலகாலம் காப்பாற்றப்படுவர் அல்லவா? குருவினது கோபத்திற்கும் நீ அஞ்சவேண்டியதில்லை. இதைபபோல் ஆயிரக்கணக்கான பசுக்களைக் கொடுத்தால் கோபம் தணிந்துவிடும். செல்வம் நிறைந்த ராஜ்யம் ஸ்வர்க்கத்தைவிட மேலானது. அதை இழக்க முற்படாதே," என்று சிங்கம் கூறியது.

திலீபன், "நான் க்ஷத்திரியன். எனது தர்மம் உயிரைக் காப்பது. என் கடமையைச் செய்யாத நிலையில் நான் இருந்தென்ன பயன்? இப்பசுவை நீ சாதாரணமானதாகக் கருதாதே. உன்னைப் போல் இதுவும் பெருமையுடையதே. வஸிஷ்டரின் பசுவான இது காமதேனுவின் பெண். குணச்சிறப்பிலே அதற்கு ஒப்பானது. சிவஸேவகனான நீ உன் கடமையைச் செய்து தேவதாரு மரத்தைக் காக்க முற்படுவதுபோல் வஸிஷ்டரின் ஸேவகனாகிய நான் என்னிடம் ஒப்படைக்கப்பட்ட இப்பொருளைக் காக்க வேண்டாமோ? ஸேவகனின் கஷ்டத்தை ஸேவகனான நீயும் அறிவாய். இதை அழித்தபின் குருவை நான் காணபது எங்ஙனம்? என்னிடம் உனக்கு இரக்க மிருக்குமாயின் எனது புகழுடலை அழிக்காதே; இப்பூதவுடல் அழிவதில் எனக்கு ஆக்ஷேபமில்லை. என்னை உண்டு பசுவை விடு. ஸம்பாஷணையை நட்புக்கு முதற் காரணமாகக் கூறுகின்றனர். இவ்வளவு நேரம் பேசிய நாம் நண்பர்களாவோமே. நண்பனின் வேண்டுகோளை

மறுக்காதே," என்றான். "அவ்வாறே" என்று சொல்லிச் சிங்கம் அரசன் கூறியதை ஏற்றுக்கொண்டவுடன், ஆயுதத்தைக் கீழே வைத்துவிட்டுத் தலை குனிந்து தன் உடலை அதற்கு அர்ப்பணம் செய்தான். சிங்கம் தன்மேல் பாய்வதை எதிர்நோக்கி நின்றான். என்ன ஆச்சர்யம்! அவனது தியாகத்தைக் கொண்டாடித் தேவர்கள் பொழிந்த பூமாரி அவன்மேல் விழவும், தலை நிமிர்த்திய திலீபன், சிங்கத்தைக் காணாது பசு மாத்திரம் நிற்பதைக் கண்டான். நந்தினி கூறியது: "அப்பனே! இம்மாயத் தோற்றத்தை உண்டாக்கி உனது பக்தியைப் பரீக்ஷித்தேன். வஸிஷ்டரின் அருளிருபபதால் என்னை யமன் கூட அணுகமுடியாது. என்னிடத்தில் நீ வைத்த இரக்கம், உனது குருபக்தி இரண்டையும் பார்த்து மனம் மகிழ்ந்தேன். விரும்பியதைக் கேள்."

திலீபன் நல்ல மகன் ஸுதக்ஷிணையிடம் பிறக்கவேண்டுமென வேண்ட தனது பாலைத் தொன்னையில் கறந்து பருகும்படி நந்தினி கூறவும், குருவின் அனுமதிபெற்றுச் சாப்பிடுவதாகத் திலீபன் கூறி அப்பசுவுடன் ஆச்ரமம் திரும்பினான். பின் குருவினிடம் தெரிவித்து நந்தினியின் பாலைப் பருகியபின் மறுநாட்காலை பாரணை முடித்து, எல்லோரையும் வணங்கி விடைகொண்டு நகர் திரும்பினான். சில நாட்களில் ஸுதக்ஷிணையும் கருவுற்றாள்.

**மூன்றாவது ஸர்க்கம்**

ஸுதக்ஷிணை கருவுற்றதை அறிந்து மன்னன், மிக மகிழ்ந்தவனாய் கரு வளர்வதற்குரிய முறைகளைத் தேர்ந்த வைத்தியர்களைக் கொண்டு செய்வித்தான். உரிய சமயத்தில் பும்ஸவனம், ஸீமந்தம் முதலிய நற்சடங்குகளைச் செய்தான். நல்ல வேளையில் ஐந்து கிரஹங்கள் உச்சத்தில் இருக்குங்கால் ஸுதக்ஷிணைக்கு ஒருமகன் பிறக்கவும, அவனுக்கு ரகு எனப் பெயரிட்டு ஏற்ற காலத்தில் ஜாதகர்மம் முதலியவற்றைச் செய்தான் திலீபன. ரகு தந்தையிடமிருந்தே வில் வித்தையையும், பிற ஆசிரியர்களிடமிருந்து மற்றக் கல்விகளையும் கற்றான். நல்ல உடல்

வலிமையுடன் யௌவனப் பருவம் அடைந்துள்ள அவனுக்கு மணம் செய்வித்துப்பின் இளவரசனாக முடி சூட்டினான் திலீபன்.

முன்பே தொண்ணூற்றொன்பது அசுவமேதம் செய்திருந்த திலீபன் நூறாவது யாகத்தையும் செய்யக் கருதி, அதற்கான குதிரையைப் பாதுகாக்கும்படி தன் மகன் ரகுவைப் பணித்து விட்டு யாகம் செய்யத் தொடங்கினான். திலீபன் யாகம் செய் வதிலே பொறாமை கொண்ட இந்திரன் பிறர் அறியாவண்ணம் குதிரையைக் கவர்ந்து செல்லவும், நந்தினியின் அருளால் ரகு இந்திரனைக்கண்டு, "தேவேந்திர, யாகத்தில் அவிர்ப்பாகம் பெறுகின்ற நீ,—யாகத்திற்கு இடையூறு செய்பவர்களைத் தண் டிக்க வேண்டியவனாகிய நீ—அதற்கு முரணாக யாகத்திற்கு ஸாத னமான இதைக் கவருவது முறையா? நீயே இவ்வாறு செய்தால் இனி உலகில் யார் யாகம் செய்வர்? தகாத வழியில் செல்லாதே; இக்குதிரையை விடு," என்றான். தனது திருடு வெளியாகாதென நினைத்திருந்த இந்திரன் ரகு கூறியதைக் கேட்டுப் பேராச்சர்யமடைந்து, "இளவரசனே, உன் தந்தை என் புகழைப் பெறவிரும்புகின்றார். என் ஒருவனுக்குத்தான் 'சதக்ரது' என்ற பெயர் உண்டு. நூறாவது யாகம் செய்யப்படு மாயின் அவரும் அப்பெயரைப் பெறுவர். அது எனக்கு விருப்பமானதன்று. என்னுடன் பகைகொள்ளாதே. அது உனக்குத் தீங்கு விளைவிக்கும்," என்றான்.

இவ்வார்த்தையைக் கேட்ட ரகு அவமதிப்புத் தோன்றும் வகையில் இளநகை செய்து, "இந்திர! என்னை வெல்லாத வரை இக்குதிரையைக் கவர்ந்து செல்வது முடியாது. எடு ஆயுதத்தை," என மிக அலக்ஷ்யமாகக் கூறவும், கோபம் கொண்ட இந்திரன் வில்லில் நாண் பூட்டி ஒரு பாணத்தை ரகு வின் மார்பை நோக்கி எய்தான். ரகுவும் தனது பாணத் த்தை இந்திரனது தோளிலே புதையும்படி எய்து, மற்றொரு பாணத்தினால் அவனது கொடியையும் நாண் கயிற்றையும் அறுத்தான். இந்திரனது வாஜ்ராயுதத்தினால் அடிக்கப் பட்டு ஒரு க்ஷணத்தில் அதனாலுண்டான வலியை உதறி விட்டு

எழுந்த ரகுவின் வீரத்தினால் மகிழ்ந்த இந்திரன், குதிரையைத் தவிர வேறு எந்த வரம் வேண்டுமாயினும் தருவதாகக் கூறவும், ரகு, குதிரை இன்றியே நூறுவது யாகத்தின் பயனைத் தன் தந்தை திலீபன் அடையவேண்டும் என வரம் கேட்டான். இந்திரனும்அதை அளித்துவிட்டுக் குதிரையுடன் மறைந்தான். இச் செய்தியைத் தேவதூதன் மூலம் அறிந்த திலீபன் தன் மகனை அன்புடன் வரவேற்று அரசை அவனிடம் ஒப்படைத்த பின், தவம் செய்யக் காடு சென்றான்.

யுவராஜனாக இருக்கும் பொழுதே ஜனங்களின அன்பைப் பெற்றிருந்த ரகு, அரசனாகிய பொழுது அவர்களது மனத்தைத் தனது நற்குணங்களால் மிகவும் கவர்ந்தான். அவனது நல்லாட்சியில் இருந்த மக்கள் திலீபனையும் மறந்தனர். அரசன் என்ற பெயர் அவனுக்கு எவ்வகையிலும் பொருந்தி இருந்தது. விஷயங்களை சாஸ்திர அறிவைக்கொண்டு நோக்கித் தீர்மானித்தான்.

**நான்காவது ஸர்க்கம்**

அவன் ஸிம்மாஸனம் அமர்ந்தபின் வந்த சரத்ருது, படை எடுத்தற்குரிய காலமாகையால் திக்விஜயம் செய்யும்படி அவனைத் தூண்டியது. எனவே, ரகு, வாஜி நீராஜனம் என்ற சடங்கை செய்தான். பல்வகைப் படைகளையும் திரட்டிக்கொண்டு முதலில் கீழ்திசை நோக்கிச் சென்றான். ஸும்ஹர்கள் அவனது அடிபணிந்தனர். வங்கநாட்டு மன்னர்களை வென்று வெற்றித் தூண்களை அந்நாட்டில் நாட்டினான். பின் கலிங்கரை வென்று தெற்குநோக்கிய ரகு கடற்கரையோரமாகவே பிரயாணம் செய்து பாண்டிய நாட்டை அடையவும், பாண்டியர் முத்துக் குவியல்களை அவனுக்குக் கொடுத்தனர். கேரள அரசர்களை வென்றபின் தரை மார்க்கமாகவே பாரசீகம சென்று யவனர்களை ஜயித்துப்பின், வடதிசை நோக்கிச்சென்றான. ஸிந்து நதியின் கரையில் சிறிது நாள தங்கி ஹூணர்களையும் காம்போஜர்களையும் அடி வணங்கச் செய்தான். காம்போஜர்கள் அளித்த பொற் குவியல்களையும், சிறந்த குதிரைகளையும் பெற்றுக் கொண்டு ஹிமாலயம் சென்று அம்மலை மீது சிறிது காலம் தங்கியிருந்

தான். பின் மலைவாசிகளான வேடர்கள் எதிர்க்க, அவர்களுடன் பெரும் போர் செய்து வென்றபின் கிழக்கு நோக்கிக் காமரூபம் செல்லவும், அந் நாட்டு அரசன் யானைப்படையுடன் வந்து ரகுவினிடம் சரணமடைந்து அவனது பாதங்களைப் பொற்காசுகளால் அர்ச்சித்தான். இவவாறு பல திசைகளையும் வென்று, நாடு திரும்பிய ரகு, தான கொணர்ந்த செல்வத்திற்குப பயனாக 'விச்வஜித்' என்ற யாகத்தைச் செய்து, செல்வம் முழுவதையுமே வறியர்களுக்கு வழங்கினான். வெகுநாளாகத தனனுடன் வந்துகொண்டிருந்த சிற்றரசர்கள் அனைவரையும் தத்தமது நாடு செல்ல உத்தரவளித்தான்.

**ஐந்தாவது ஸர்க்கம்**

விச்வஜித் யாகம் செய்து சிறிதேனும் பொருளின்றி இருந்த ரகுவிடம் கௌத்ஸர் என்ற முனிவர் தாம் குருவிற்குத் தர வேண்டிய பொருளைப்பெற விருமபி வந்தார். ரகு தக்க முறையில் அவரை உபசரித்து குசலப்ரச்னம செய்தபின் அவர் வந்ததன காரணத்தை வினவ, கௌத்ஸர், "நீங்கள் அரசராக இருக்கும நாட்டில் நலக்கேடு எவ்வாறு உண்டாகும்? பெரியோர்களிடத்தில் மிக அன்பு உடையவர் தாங்கள. ஆனால் செல்வமின்றி இருக்கின்ற இச்சமயத்தில் தங்களிடம் பணம் பெற வந்தேனே என என் மனம வருந்துகின்றது. நான் கல்வியைக் கற்றபின் எனது ஆசிரியர் வரதந்து முனிவருக்குத் தரவேண்டிய குரு தக்ஷிணையைப் பற்றி அவரிடம் கேட்டபொழுது, நான தவறாது செய்து வந்த பணிவிடையே போதுமானதெனக் கூறினார். பின நான் நிர்ப்பந்தம் செய்யவும் சிற்றங்கொண்டு அம்முனிவர் பதினான்கு கோடிப் பொன் தரும்படி பணித்துளளார். வேறு மன்னரிடம் பெற முயல்வேன. ஆதலால் தங்களை வருத்த நான் விரும்பவில்லை," என்றார். இதைச் செவியுற்ற ரகு, "குரு தக்ஷிணை விருமபி வந்தவர் அதைப் பெறாமல் திரும்பிச் சென்றார் என்ற அபகீர்த்தி—இதுவரை இல்லாதது—இனி எனக்கு உண்டாதல் கூடாது. எனது வீட்டில் இரண்டு மூன்று நாட்கள் தங்கியிருங்கள். அதற்குள் இப்பணத்தைப் பெறமுயல்வேன," என்று கூறிவிட்டு குபேரனை வென்று பொன் கொண்டுவரும்

நோக்கத்துடன் விடியற்காலையில் புறப்படுவதற்காக முன்னிரவே ரதத்தில் ஏறிப்படுத்திருந்தான்.

காலையில் ரகு புறப்படும் தறுவாயில் பொக்கிஷ அதிகாரிகள் நிதியறையில் இரவு பொன்மாரி பெய்ததெனத் தெரிவித்தனர். அரசன் தன் பிரயாணத்தை நிறுத்தியவனாய் குபேரன் தந்த அப்பொன் முழுவதையும் கௌத்ஸருக்குக் கொடுத்தான். சந்தோஷமடைந்த முனிவர் ரகுவிற்கு ஸத்புத்திரன் பிறக்க வேண்டுமென அருள்செய்து சென்றார். அவர் அருளாலே பிறந்த மகன் அஜன் எனப் பெயரிடப்பட்டவனாக, கல்விகளைக் கற்று விவாஹம் செய்தற்குரிய பருவத்தை அடைந்தான். அதே சமயத்தில் விதர்ப்ப நாட்டு மன்னன் போஜன் தன் ஸஹோதரியான இந்துமதியின் ஸ்வயம்வரத்தைக் கருதி தூதரை அனுப்ப, ரகு தன் மகனை விதர்ப்ப நாட்டிற்கு அனுப்பினான்.

அஜன் போகும் வழியில் நர்மதைக் கரையில் தங்கி இருந்தான். அச்சமயம் மதம் பிடித்த காட்டு யானையினால் தன் ஸைன்யங்களுக்கு உண்டான கலக்கத்தைப் பொறுக்காதவனாய் காட்டு யானையை வெருட்டுவதற்காக அதன் மத்தகத்தை மெதுவாக ஒரு பாணத்தினால் அடித்தான். பாணம் பட்டமாத்திரத்தில் அந்த யானை பிரியம்வதன் என்ற கந்தர்வனாக மாறி, தான் மதங்க முனிவரிடம் சாபம் பெற்ற வரலாற்றைக் கூறிப்பின் ஸம்மோஹனம் என்ற அஸ்த்ரத்தைக் கொடுத்துவிட்டு மறைந்தது. பிறகு அஜன் போஜனுடைய நகரத்தை அடையவும் போஜனால் நன்கு வரவேற்கப்பட்டு உபசரிக்கப்பட்டான். மறுநாள காலை நன்கு அலங்காரம் செய்துகொண்டு ஸ்வயமவர மண்டபத்தை அடைந்தான்.

**ஆறாவது ஸர்க்கம்**

ஸ்வயம்வர சபையை அடைந்த அஜன், அச் சபையில் தேவர்களைப் போல் அழகான பல அரசர்களைக் கண்டான். அஜனுடைய அழகைக் கண்ணுற்ற மற்ற அரசர்கள், இந்துமதி தமக்கு மாலையிட மாட்டாள் என எண்ணி மனமுடைந்தனர். அச்சபையில் போஜன் காட்டிய ஆஸனத்தில் அமர்ந்த அஜன், மயிலின் மீதிருக்கும் குமரக் கடவுளைப் போல் விளங்கினான்.

அங்கு கூடியிருந்தோரனைவரும் மற்ற அரசர்களை விட்டு அஜனையே பார்த்துக்கொண்டிருந்தனர்.

பிறகு ஸ்துதி பாடகர்கள் அங்கு கூடியிருந்த அரசர்களைப் புகழ்ந்து பாடினர். மங்கள வாத்தியங்கள் முழங்கின. இச்சமயத்தில் இந்துமதி மணக் கோலத்துடன் சபைக்குள் வந்தாள். அவளைக் கண்டதும் அரசர்கள் மெய்மறந்தனர். அருகில் அவள் வரவும் அவ்வரசர்களிடம் சிலசேஷ்டைகள் உண்டாயின.

ஓர் அரசன் தாமரைப் பூவைக் கையில் பிடித்துச் சுழற்றினான். மற்றொருவன் தன் மாலையைத் திருத்திக் கொண்டான். இன்னுமொருவன் கால் விரல் நகத்தால் தரையைக் கீறினான். வேறொரு அரசன் இங்குக் கவனமில்லாதவன்போலப் பக்கத்திலிருந்த அரசனுடன் பேசிக்கொண்டிருந்தான். இன்னொரு அரசன் சூதாடுங் காய்களை உருட்டிக் கொண்டிருந்தான். ஒருவன் சரியாகவே இருந்த கிரீடத்தைச் சரியில்லாதது போல் நினைத்து அதைத் தள்ளி வைத்துக் கொண்டிருந்தான்.

பிறகு இந்துமதியுடன் வந்த ஸுநந்தை என்னும் பணிப் பெண் ஒவ்வொரு அரசரையும் பற்றிக் கூறினாள் :

"இவர் மகத தேச அரசர். பரந்தபர் என்பது இவர் பெயர். பகைவர் இவரைக் கண்டு அஞ்சுவர். பிரஜைகளை நன்கு பரிபாலிப்பவர். நக்ஷத்திரங்கள் பல இருப்பினும் சந்திரனொருவனே இரவைப் பிரகாசிக்கச் செய்வதுபோல, பல அரசர்கள் இருபபினும், இப்பூமி இவரொருவராலேயே புகழுற்று விளங்குகிறது. அடிக்கடி யாகங்கள் செய்பவர். புஷ்பபுரம் என்னும் ஊர் இவர் தேசத்தின் தலைநகர்."

இந்துமதி அவரை விரும்பாது மேலே செல்ல, ஸுநந்தை அவளை அடுத்த அரசரிடம் அழைத்துச் சென்று கூறினாள்.

"இவ்வரசர் அங்கதேச மன்னர். நல்ல அழகுடையவர். பழகிய யானைப் படையையுடையவர். பகைவர்களை அழிப்பவர். இவரிடத்தில் செல்வம், கல்வி இரண்டும் பொருந்தியுள்ளது."

பிறகு ஸுநந்தை இந்துமதிக்கு அவந்தி தேச அரசரைக் காண்பித்து உரைத்தாள் :

"இவ்வரசர் அவந்தி தேச ராஜராவார். மிக அழகிய கம்பீரமான தோற்றமுள்ளவர். திக்விஜயஞ் செய்து எதிரிகளை அழிப்பவர். ஸிப்ரை என்னும் நதிக் கரையிலமைந்த மஹாகாலம் என்ற இடத்தில் வசிப்பவர்."

ஸுநந்தை இந்துமதியை அனூபராஜன் எதிரே அழைத்துச் சென்று கூறினாள்:

"இவ்வரசர் பிரசித்தி பெற்ற கார்த்த வீரியன் வம்சத்தில் வந்தவர். கார்த்த வீரியர் திறமை மிக்க ஓர் அரசர். அவருடைய அரசாட்சியில் குற்றத்தை மனத்திலே நினைப்பவர் கூட இல்லை. அத்தகைய கார்த்த வீரியன் வம்சத்தில் பிறந்த பிரதீபன் என்ற இவ்வரசர் அழியாத செல்வமுடையவர். போரில் பரசுராமரையும் எதிர்க்கக் கூடிய சக்தி பெற்றவர். ரேவாநதியின்பக்கத்திலுள்ள மாஹிஷ்மதீ என்ற நகரத்திலுள்ளவர்."

பிறகு ஸுநந்தை சூரஸேன தேசத்தரசரான ஸுஷேணனைப்பற்றிச்சொன்னாள்:-

"இவ்வரசர் நீப வம்சத்தில் பிறந்தவர். யாகங்கள் செய்பவர். எல்லா நற்குணங்களும் பொருந்தியவர். தமது வீட்டில் மிக்க தண்மையுடன் இருப்பார். பகைவர்களுக்கு சூரியன் போல் மிகக் கடுமையாகக் காணப்படுவர். இவ்வரசர் காளியன் என்னும் நாகம் அளித்த ரத்னத்தை மார்பில் அணிந்துள்ளார். குபேரனுடைய உத்தியானவனம் போன்ற பிருந்தாவனம் என்ற அழகிய நந்தவனமொன்று இவரது ஊரில் உண்டு. இவருடைய ஊர் கோவர்த்தன மலைக்குச் சமீபத்திலுள்ளது. இவரை மணந்தால் அம்மலையிலுள்ள அழகிய பாறைகளில் உட்கார்ந்து நீ மயில்கள் எப்பொழுதும் ஆடிக்கொண்டிருத்தலைக் காணலாம்.

பிறகு கலிங்க தேச அரசனான ஹேமாங்கதனைப்பற்றி ஸுநந்தை கூறினாள்:-

"இவ்வரசர் மஹேந்திர மலையைப் போன்ற பலமுள்ளவர். பெரிய யானைப்படையை யுடையவர். சிறந்த வில்லாளி. போரில் பகைவர்களைப் புறங்காட்டியோடச் செய்பவர். இவரது அரண்மனைக்கு மிகச் சமீபத்திலுள்ள சமுத்திரம் தனது ஒலியால்

இவ்வரசரை நித்திரையிலிருந்து எழுப்புகிறது. இவரது ஊரில் பனை மரச்சாலைகள் பல உள்ளன. லவங்க வாஸனை யுள்ள கடற்காற்று நன்கு வீசும்."

பிறகு, அங்கு அமர்ந்திருந்த பாண்டியனைப்பற்றி ஸுநந்தை சொன்னாள்:

"அழகிய மாலையை அணிந்துள்ள இவ்வரசர் பாண்டியர். விந்தியமலையை வளராமல்தடுத்தவரும், கடல்நீர் முழுவதையுங் குடித்தவருமான அகஸ்த்யர் அன்புடையவராகி, இவர் செய்யும் யாகங்களில் சிரத்தை எடுத்துக் கொள்ளுகிறார். பரமசிவனிட மிருந்து பிரம்மசிரஸ் என்ற அஸ்திரத்தைப் பெற்றவர். ராவணன் இவருடன் போர் புரிய மாட்டாமல் சமாதானஞ் செய்து கொண்டு இந்திரனை வெற்றி கொள்ளப் புறப்பட்டான். இவருக்கு நீ மனைவியாயின் வெற்றிலை, ஏலக்கொடி, சந்தன மரங்கள் முதலியவை நிறைந்துள்ள மலய பர்வதச் சாரலில் சுகமாக இருக்கலாம்."

பிறகு இந்துமதி அஜன் அருகில் வந்தாள். அஜன், இந்துமதி தன்னைத் தெரிந்தெடுப்பாளோ மாட்டாளோ என ஐயமுற்றான. இந்துமதியின் எண்ணத்தை அறிந்த ஸுநந்தை இவ்வாறு கூறினாள்:

"இக்ஷ்வாகு வம்சத்தில் நற்குணங்களமைந்த ககுத்ஸ்தர் என்ற அரசர் ஒருவரிருந்தார். அவர் யுத்தத்தில் அஸுரர்களையும் வென்றவர். இந்திரனுடன ஒரே ஆஸனத்தில் அமர்ந்தவர். அத்தகைய ககுத்ஸ்தரின் குலத்தில் திலீபர் என்ற புகழ் பெற்ற அரசர் ஒருவர் உண்டு. தொண்ணூற்றொன்பது அசுவமேதங்களைச் செய்தவர். ரகு என்பவர் அவருடைய புதல்வர். விச்வஜித்' என்னும் யாகத்தைச் செய்து தமது செல்வமனைத்தையும் தானஞ் செய்தவர். மிகுந்த கீர்த்தி பெற்றவர். அந்த ரகுவின் குமாரராக அவரைப் போன்றே திறமையுள்ள இவ்வஜர் பிறந்துள்ளார். குலம், காந்தி, வயது, குணங்கள் முதலிய எல்லாவற்றிலும் உனக்கு ஏற்றவர். இவரை நீ மணந்தால் ரத்னம் தங்கத்துடன் சேருவது போலிருக்கும்."

இவ்வாறு ஸுநந்தை கூறக்கேட்ட இந்துமதி, அஜனை நேராகப் பார்த்து, மயிர்க் கூச்சமடைந்தாள். இதைக் கண்ட ஸுநந்தை பரிஹாஸமாக "வேறு அரசரிடம் செல்வோமே," என்று கூற, அவளைக் கோபத்துடன் இந்துமதி நோக்கினாள். பிறகு, ஸுநந்தை மூலமாக மாலையை அஜனுக்குச் சூட்டினாள். அம்மாலை சூடிய அஜன், இந்துமதியை விவாஹஞ் செய்து கொண்டதாகவே நினைத்து ஆனந்தமடைந்தான். நகரமாந்தரனைவரும் இவ்விவாஹம் மிகபொருத்தமுள்ளதெனக் கொண்டாடினர். இதைக் கேட்ட மற்ற அரசர் மனம் புழுங்கினர். ஒரு புறம் சந்தோஷமுள்ள அஜனைச் சேர்ந்தோரும், மறுபுறம் வருத்தமுற்ற மற்ற அரசர்களும் இருந்த அச்சபை, காலை வேளையில் தாமரைகள் மலர்ந்தும், ஆம்பல்கள் கூம்பியுமிருக்கும் தடாகத்தைப் போலிருந்தது.

**ஏழாவது ஸர்க்கம்**

இந்துமதி அஜனது கழுத்தில் ஸ்வயம்வர மாலையை அணிவித்தவுடன் போஜன் அவ்விருவரையும் அழைத்துக் கொண்டு நகருக்குள் சென்றான். ராஜவீதி நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. மாளிகைகளிலிருந்து அவ்விருவரையும் நகரப் பெண்கள் மகிழ்ச்சியுடன் கண்டு புகழ்ந்தனர். அரண்மனையையடைந்ததும் அஜன் விவாஹ மண்டபத்திற்கு அழைத்துச் செல்லபட்டான். அங்கு புரோஹிதர், ஹோமம் முதலியவற்றைச் செய்த பின் அவவிருவரையும் கணவனும் மனைவியுமாக வாழும்படி பாணிக்ரஹணம் செய்வித்தார். ஏமாற்றமடைந்த மற்ற அரசர்கள், கல்யாணம் முடிந்ததும், சந்தோஷமுடையவர்கள்போல் பாவனை செய்து போஜனிடம் விடைபெற்றுச் சென்றனராயினும் அஜன் அயோத்திக்குச் செல்லும் வழியில் அவனை எதிர்ப்பதாகத் திட்டமிட்டு மார்க்கத்தில் மறைந்திருந்தனர். போஜன் மிக உத்ஸாகத்துடன் இந்துமதிக்கு ஏராளமான ஸ்திரீதனமளித்து, அஜனை ஊருக்கு அனுப்பித் தானும் சிறிது தூரம் பின் சென்று திரும்பினான். அஜனிடம் பொறாமைகொண்ட அரசர்கள் தருணம பார்த்து அவனை எதிர்க்கவும், பெரும்போர் மூண்டது. இந்துமதிக்குத் தக்க பாதுகாப்பை அமைத்து விட்டு அஜன் தன் படையுடன் அவ்வரசர் ஸேனையை எதிர்த்

தான். யுத்தகளம் வீரர்களின் உடல் நிறைந்ததாயிற்று. ஒரே காலத்தில் பலரும் அஜனைச் சூழ்ந்தனர். எனவே, அஜன் ஸம்மோஹனாஸ்த்ரத்தை உபயோகித்தான். அவ்வஸ்த்ர பலத்தினால் பகைவர் அனைவரும் தூக்கத்திற்கு வசப்பட்டவராயினர். பகைவர்கள் எல்லோரும் தூங்கவும் வெற்றிச் சங்கநாதம் செய்து தன் வீரர்களைத் திரட்டிக்கொண்டு இந்துமதியுடன் தன் நகரம் சென்றான் அஜன். தன் மகன் வெற்றித்திருவுடனும், சிறந்த மனைவியுடனும் வந்ததைக் கொண்டாடினன ரகு.

ரகு தன் மகனுக்கு மணம் முடிந்தவுடனேயே அரசையும் அளித்தான். எல்லாவகையிலும் தந்தை போன்றே இருந்த அஜனை மக்கள் யௌவனம் பெற்றுத் திரும்பிய ரகுவாக நினைத்தனர். ரகு காடு செல்லவே விரும்பினனாயினும் அஜனது வேண்டுகோளுக்கிணங்கி நகருக்கு வெளியிலுள்ள ஆச்ரமத்தில் தங்கி மனத்தை அடக்கித் தவமியற்றி முக்திபெற முயன்றான்.

**எட்டாவது ஸர்க்கம்**

அஜன் நாட்டின் நலத்திற்காகப் பல்வகை உபாயங்களைக் கைக்கொண்டு முயன்று வந்தான். சிறிது நாட்களுக்குப்பின் ரகு முக்தி அடைய, அஜன் அவனுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களைச் சிரத்தையுடன் செய்தான். சிறிது காலததிற்கெல்லாம் இந்துமதி ஒரு மகவைப் பெறவும், அக்குழந்தைக்குத் தசரதன எனப் பெயர் வைத்தான்.

ஒரு சமயம் அஜனா பூங்காவில் இருக்குங்கால் ஆகாயத்தில் சென்ற நாரத முனிவரது வீணைமீதிருந்த தேவலோக மலர் மாலை காற்றினால் கவரப்பட்டு இந்துமதியின் மேல் விழுந்தது. அதைக் கணட உடன் அவள் உயிர் துறந்தாள். அவள் இறந்ததை அறிந்தபொழுது அஜன் மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். பின் நினைவுபெற்ற அவன் “அந்தோ! புஷ்பங்கூட உயிரைக் கவரும் சக்தியுடையதாயின் யமனுக்கு எதுதான் ஆயுதமாகாது? இம்மாலைக்கு உயிர்போக்கும சக்தி உண்டோ? ஆயின் என் உயிர் ஏன் நீங்காது இருக்கின்றது? கடவுளின் சித்

தப்படி விஷமும் அம்ருதமாகலாம். அம்ருதமும் விஷமாகலாம. அன்பே! நான உனக்கு ஒரு குற்றமும செய்தேனில்லையே! என்னிடம் கேட்டுக்கொள்ளாமல் சென்று விட்டனையே! வாழக்கை எவவளவு நிலையற்றது என்பது எனக்கு இபபொழுதுதான் புலனுகினறது. உன் முகத்தில் தோன்றிய வேர்வை உலருவதற்குள் நீ இறந்து விட்டாய். காறறிலே அசைகின்ற உனது அளகங்கள நீ உயிர்பெற்று விட்டாய் என்ற மதிமயக்கத்தை எனக்கு உண்டாக்குகின்றன. மெல்லிய தளிர்ப்படுக்கையும் உன் உடலுக்கு வருத்தம் தரும். அத்தகைய உனது மெனமையான உடல் எவ்வாறு கடினமான சிதைக் கட்டைகளையும் தீயையும ஸஹிக்கும்? நீ வளர்த்த மகிழமரம் பூக்கப்போகின்றது. அப்பூவை அனுபவிக்காது செல்கின்றனை. நான் தைர்யமிழந்தேன. மனவலிமை குன்றியது. இன்பம இனி எனக்கு இல்லை. உத்ஸவஙகள் மனம் மகிழவிக்காதன. எனக்கு ஆடையாபரணங்களால் இனிமேல் யாது பயன்?" என்றிவ்வாறு பல கூறிப் புலம்பினுன். பின் பணியாளர்கள மிக கஷ்டத்துடன் அவன் மடியிலிருந்த இந்துமதியை எடுத்து தஹனம செய்தனர்.

அவன மிக வருந்துவதை அறிந்த வஸிஷ்டரால் அனுப்பெற்ற சிஷ்யர் ஒருவர், அஜனிடம், "அரசே இந்துமதி முற்பிறப்பில் ஹரிணி என்ற தேவமகளாக இருந்தாள. த்ருண பிந்து என்ற முனிவரால் சபிக்கப்பட்டு இவ்வுலகில் பிறந்து உனக்கு மனைவியாக ஆனுள். தேவலோக மாலையைக் கண்டதால் சாபம் நீஙகித் தன்னுலகு சென்றுள். ஆதலால் அவளைக் குறித்து வருந்தாதே. உடலெடுப்பவர் இறப்பது ஸஹஜம். வாழ்வதுதான் விசித்ரமானது. உடலும் உயிருமே பிரிகினறபொழுது உறவினரைவிட்டுப் பிரிவதில் வியப்பென்ன? ஆதலால் அறிவற்றவர்போல் வருந்துவது தகாது," என ஆறுதல் கூறினுர். ஆனுல் அஜன் மனத்திலிருந்து சோகம் நீங்கவே இல்லை. இந்துமதி இறந்தபின் எட்டு வருஷம வாழ்ந்த அவன, மனக் கவலையால் வியாதியுற்று தசரதனை அரசனுகச் செய்து, கங்கை ஸரயூ இவ்விரண்டின் ஸங்க

மஸ்தலத்தில் மூழ்கி இறந்தான். பின் தேவருலகு சென்று ஹரிணியுடன் மகிழ்ந்திருந்தான்.

**ஒன்பதாவது ஸர்க்கம்**

தந்தைக்குப்பின் அரசைப் பெற்றுத் தசரதர் ராஜ்யத்தை நன்கு ஆண்டுவந்தார். வேலைக்காரருக்கு உரியகாலத்தில் சம்பளமும் பரிசுப்பொருளும் கொடுத்து மகிழ்வித்தார். மற்ற அரசர்களின மனத்தை வசப்படுத்தும மது வேட்டை, வனிதையர், சூதாட்டம் முதலியன தசரதர் மனத்தைக் கவரவில்லை. எளிய சொல்லை இந்திரனிடம் கூடப் பேசியதில்லை. அவருக்கு மூன்று மனைவியர் இருந்தனர். அவர் பல யாகங்களைச் செய்து அவப்ருதஸ்நாநம் செய்தார். இத்தகைய பெருமைபெற்ற அரசர் ஒருசமயம மந்திரிகளின அனுமதிபெற்று வேட்டையாடக் காடு சென்றார். ஒரு மானைப் பினதொடர்ந்து சென்ற அவர், குடத்தில் நீர் நிரப்புவது போன்ற ஒலி தமஸா நதியினின்றும் எழுவதைக் கேட்டு, யானையின் சத்தமென எண்ணி அம்பை எய்யவும், அஃது குடத்தில் தண்ணீர் மொண்டுகொண்டிருந்த ரிஷிகுமாரன் மார்பில் பாய்ந்தது. 'தந்தாய்' என அலறிக்கொண்டு பையன் கீழே விழவும், தசரதர் மிக மனங்கலங்கி முனிகுமாரனிடம் ஓடினார். அப்பையன் குழறுகின்ற குரலிலே தன்னைத் தாய்தந்தையரிடம் சேர்க்கும்படி கூற, தசரதர் அப்பையனைத் தூக்கிக்கொண்டு போய் அவர்களமுன் வைத்துத் தாம் அறியாமல் செய்த செயலையும் கூறினார். அத்தம்பதிகள் மிகப் புலம்பினர். மார்பிலிருந்து பாணத்தை எடுத்தவுடன அப்பையன் இறந்தான. 'புத்ர சோகத்தினால் என்னைப்போலவே நீரும் வயோதிகப் பருவத்தில் இறக்கவேண்டும்' என தசரதரைச் சபித்தார் அம்முனிவர். புத்ரன இல்லாதிருந்த தசரதருக்கு இச்சாபத்தினுள ஒரு வரம் இருப்பதும் புலனாயிற்று. மகனோடு அனுமரணம் செய்ய விரும்புவதாகக் கூறி முனிவர் சிதைகளைத் தயார் செய்யும்படி வேண்ட, தசரதர், இதற்கிடையில் தம்மருகில் வந்த பணியாட்களின மூலம் அவ்விருபபத்தை பூர்த்தி செய்வித்தார். சாபத்தை வெளியில் கூறாது மனத்திலேயே வைத்துக்கொண்டு ஊக்கமின்றி தசரதர் நகர் திரும்பினார்.

சாபம் பெற்றபின் தசரதருக்குப் பதினாயிரம் ஆண்டுகள் சென்றன. ஆயினும் பிதிரர் கடன் தீர்ப்பதற்குக் காரணமாக மகப்பேறு தசரதருக்குக் கிடைக்கவில்லை. முடிவில் ரிஷ்யச்ருங்கர் முதலிய மகரிஷிகள் தசரதருக்கு மகப் பேறறை அடைவிக்கும் புத்திரகாமேஷ்டியைச் செய்யத் தொடங்கினர்.

**பத்தாவது ஸர்க்கம்**

இத் தருணத்தில், ராவணனால் மிகவும் துன்புறுத்தப்பட்ட தேவர்கள பாற்கடலில் அறிதுயிலிலிருந்த பரமபுருஷனைச் சரண மடைந்தனர். தேவர்கள் ஆங்குச் செல்லவும் பகவான் யோக நித்திரை நீக்கி எழுந்தார்.

ஆதிசேஷ சயனத்தில் சாய்ந்தமர்ந்துள்ள விஷ்ணுவைத் தேவர்கள் கண்டனர். தாமரை மலரிலிருந்த லக்ஷ்மீதேவி, தமது இடையிலுள்ள மேகலையைப் பட்டினால் மறைத்துப் பகவானது திருவடித் தாமரையைத் தமது மடியிலே ஏந்திப் பணிவிடை செய்து கொண்டிருந்தார். பகவான் அன்றலர்ந்த தாமரை இதழபோன்றதாய்க் கருணையைப் பெருக்கும் கண்களுடனும், இளம் வெயில்போல் ஒளிருகின்ற பீதாம்பரத்துடனும் காணப்பட்டார். அவரது மார்பிலிருந்த ஸ்ரீவத்ஸம் என்னுமமரு கௌஸ்துப ஒளியினால் பிரகாசித்தது. ஆபரணங்கள் அணிந்த நீண்ட நான்கு புஜங்களுடன் விளங்கும் பகவான் ஸமுத்திரத்திடை தோன்றிய புதியதொரு பாரிஜாதம் போன்றிருந்தார். அஸுரர்களைக் கொன்று வெற்றிகண்ட பஞ்சாயுதங்களின் அதிதேவதைகள் அவருக்கு ஜயகோஷம் செய்துகொண்டிருந்தனர். ஒருபுறம் விநயத்துடன் கருடன் கைகூப்பிக் கொண்டு பகவானது ஆணையை எதிர் நோக்கி நின்றிருந்தான். பிருகு முதலான மஹரிஷிகள் அருகில் நின்று 'ஸுகசயனம்' விசாரிக்கவும், அவர்களைத் தமது குளிர்ந்த கடாக்ஷங்களினால் நோக்கிப் பகவான அனுக்ரஹித்துக் கொண்டிருந்தார். இத்தகைய பரமனை—தேவசத்ருவை யழிக்கின்ற விஷ்ணுவை-அடிபணிந்து, சொல்லுக்கும் மனத்திற்கும் எட்டாத பெருமையுள்ள அவரைத் தேவர்கள் துதித்தனர்.

மேலும், தாங்கள் ராவணனிடமிருந்து பட்ட இன்னல்களைக் கூறவும், பகவான் கம்பீரமான குரலில் அபயமளித்துப் பதிலுரைத்தார்.

"தேவர்களே! உங்களது பராக்ரமம், பெருமை இரண்டும், ராவணனால் அழிவுற்றதை நான் அறிவேன். அவனால் இவ்வுலகம் படும் துன்பங்களும் எனக்குத் தெரியும். உலகத்தைக் காப்பதென்ற தொழிலில் நாம் ஈடுபட்டுள்ளோம். ஆகையால் நீங்கள் என்னை இவ்விஷயத்தில் வேண்டிக் கொள்ள வேண்டுமென்பதில்லை. தனது ஒன்பது தலைகளை அறுத்து ஆஹுதி செய்து பிரம்மனை மகிழ்வித்த ராவணனது பத்தாவது தலை, எனது சக்ராயுதத்தால் அறுபடப்போகின்றது. கொடுஞ் செயல் செய்த அவனை இதுவரை ஒன்றுஞ் செய்யாது விடுத்ததற்குக் காரணம், பிரம்மதேவரிடம அவன் பெற்றுள்ள வரங்களே. அவன் மனிதரைத் தவிர மற்றவர் யாரும் தன்னைக் கொல்லுதல் கூடாதென வரம் பெற்றுள்ளான். ஆதலால் நான் தசரதரது மகனாக (மனுஷ்யனாக)ப் பிறந்து அவனைக் கொல்வேன். 'இனி நீங்கள் யாகங்களில் ஹவிர்ப்பாகத்தை இடையூறின்றிப் பெறுவீர்கள். தேவமகளிருடன் இனிது வாழ்வீர்கள்," என்றார்.

இவ்வாறு கூறியபின் விஷ்ணு மறைந்தார். தேவர்களும் மனிதனாகப் பிறக்கவிருக்கின்ற பகவானுக்குத் துணை செய்ய விரும்பி வானரர்களாகப் பூமியில் பிறந்தனர்.

புத்திரகாமேஷ்டியில் ஹோமத் தீயினின்றும் தோன்றிய புருஷன் அளித்த பாயஸான்னத்தைத் தசரதர் தம் மனைவியருக்குக் கொடுத்துச் சாப்பிடச் செய்தார். பின் அவர்கள் கருவுற்றனர். அவர்கள் கர்ப்பிணிகளாக விருந்தபொழுது, பஞ்சாயுதங்களைத் தரித்த திவ்யபுருஷர்கள் தங்களைப் பாதுகாப்பதாகவும், கருடன் முதுகிலே சுமந்து வானவீதியில் செல்வதாகவும, லக்ஷ்மி தங்களை உபசரிப்பது போன்றும, பிரம்மரிஷிகள் வேதகோஷத்துடன் அருகிலிருப்பது போனறும, கனவு கண்டனர். உரியகாலத்தில் கௌஸல்யைக்கு ராமனும், கைகேயிக்குப் பரதனும், ஸுமித்ரைக்கு லக்ஷ்மண சத்ருக்னர்களும் பிறந்தனர்.

புத்திரர்கள் பிறந்தவுடன், உலகம் இன்னல்களின்றித் தன தான்யங்கள் நிறைந்திருந்தது. புழுதியற்ற ஸுகமான காற்று வீசியது. அக்னியும், சூரியனும் ஒளியுடனிருந்தனர். ராவண னது கிரீடங்களிலுள்ள ரத்னங்கள் உதிர்ந்து அவனது அழிவை முன்கூட்டித் தெரிவித்தன. பகவானது அவ தாரத்தை முதலில் கொண்டாடியவர்கள் தேவர்கள். அவர்கள் துந்துபி வாத்யத்தை முழக்கி, ஸந்தான மலர் மாரி பொழிந் தனர். எல்லாச் சடங்குகளும் முறைதவறாது செய்விக்கப்பெற்ற அக்குமாரர்கள் நன்கு வளர்ந்தனர். இயற்கையிலே விநயமுள்ள அவர்கள் கல்வியால் அதிக விநயமுடையோராயினர். அக் குமாரர்கள் பரஸ்பரம் ஸஹோதர வாஞ்சையுடன் இருந்து கொண்டு தங்கள் குலத்திற்குப் பெருமையளித்தனர். தந்தை யையும் மகிழ்வித்தனர். நான்கு மக்களுடன் கூடிய தசரதர், நான்கு தந்தங்களையுடைய ஐராவதம் போன்றும், நான்கு புஜங் களுடன் விளங்கும் விஷ்ணு போன்றும் திகழ்ந்தார்.

**பதினொன்றாவது ஸர்க்கம்**

இவவாறு பிள்ளைகள் இனிதே வளர்ந்து வருங்காலத்தில், குசிக முனிவரின் புதல்வரான விசுவாமித்திரர், தாம் செய்யும யாகத்தை ராக்ஷஸர்களிடமிருந்து காக்கவிரும்பி, தசரதரிடம் வந்து ராமரைத் தம்முடன் அனுப் பும்படி வேண்டினார். தசரதர், முதலில் கொடுக்க விரும்பாவிடினும், பினபு பெரியோர்களின் எண் ணப்படி ராமலக்ஷ்மணர்களை முனிவருடன் அனுப்பினார். அவர்கள் வில்லைக் கையிலேந்தித் தாய் தந்தையரை வணங்கி விட்டுக் கௌசிகரின் பின் நடந்து சென்றனர்.

தாடகையின் காட்டு வழியாக அம்மூவரும் சென்றனர். தாடகை ஒரு கையை ஓங்கிக்கொண்டு ராமரைக் கொல்ல ஓடி வரவும், ராமர், இரக்கத்தை விட்டுப் பாணத்தைப் பிரயோகித் தார். அது அவளது மார்பை ஊடுருவிச் சென்றது. மார்பு பிளக்கப்பட்டுத் தாடகை தரையில் விழுந்து உயிர் துறந்தாள. பராக்ரமத்தைக் கண்டு மகிழ்ந்த மஹரிஷி ராமலக்ஷ்மணர் களுக்குப் பல அஸ்திரங்களை உபதேசித்தார்.

பிறகு, முனிவர் ராஜகும்ாரர்களுடன் தமது ஆச்ரமமான ஸித்தாச்ரமத்தை அடைந்தார். அவரது சிஷ்யர்கள் யாகத் திற்கு வேண்டிய பொருள்களைச் சேமித்து வைத்திருந்தனர். முனிவர் யாகத்தைத் தொடங்கினர். ராமர் அதைக் காக்கச் சித்தராக நின்றார். அச்சமயம் அரக்கர்கள் ஆகாயத்திலிருந்து கொண்டு, ரத்தத்தை யாக மேடையில் தெளித்தனர். ஒவ் வொரு துளியும் செம்பருத்திப்பூ அளவு பெரியதாகவும் சிவந்து மிருந்தது. திடீரெனத் தோன்றிய ரத்தத்தைக் கண்டு துணுக் குற்ற புரோகிதர்களின் கையிலிருந்து ஆஹூதி செய்யும் கரண்டிகள் நழுவித் தரையில் விழுந்தன. அவர்கள் பெரும் கலவரம் அடைந்தனர். ராமர் தலை நிமிர்த்தி, ஆகாயத்தில் பெரியதொரு ராக்ஷஸ ஸேனையைக் கண்டார். அச்சேனைக்குத் தலைவனான மாரீசனை வாயு அஸ்திரத்தின் மூலம் கடலில் எறிந் தார். மற்றொரு தலைவனாகிய ஸுபாகுவைத் துண்டாக்கி ஆச்ரமத்திற்கு வெளியில் விழச் செய்தார். அவனது உடலைக் கழுகுகள் தின்றன. இவ்வாறு அரக்கர்களின் தலைவர்களைக் கொன்றும், மற்றவர்களை அச்சமூட்டித் துரத்தியும், யாகத்தின் இடையூறுகளை நீக்கியதால் யாகம் தடையின்றி முடிவுபெற்றது.

இச்சமயத்தில் மிதிலையின் அரசர் ஜனகர் தாம் செய்யும் யாகத்திற்கு விசுவாமித்திரரை அழைத்திருந்தார். சிவதனு சைப்பற்றி முன்பே கேள்வியுற்று அதைப்பார்க்க விரும்பிய ராம லக்ஷ்மணர்களை முனிவர் மிதிலைக்கு அழைத்துச் சென்றார். யாகம் முடிந்தபின் சமயமறிந்து கௌசிகர் ஜனகரிடம் ராமரது விருப் பத்தைத் தெரிவிக்க, அவர், "மகரிஷியே! பெரிய யானை செய்யக் கூடிய வேலையில் யானைக்குட்டியை ஏவுவது தருமா? பல பெரிய வீரர்கள் இவ்வில்லுக்குத் தோற்று அவமானத்துடன் தங்கள் கைகளை உதறிக்கொண்டு சென்றனர். ஆதலால் ராமனை இவ்விஷயத்தில் அனுமதிக்க அஞ்சுகின்றேன்," என்றார். விசுவாமித்திரர் ராமரது பலத்தைப்பற்றிக் கூறவும், ஜனகர் சிவதனுஸைக் கொண்டுவரச் செய்தார். ராமர் ஆயாசமின்றி வில்லைத்தூக்கித் தரையில் ஊன்றி, வளைத்து மறுமுனையில் நாணைப் பூட்டி இழுத்தார். அப்பொழுது மிக வளைக்கப்பட்ட அவ்வில் இடையிலே முறிந்தது.

ராமரது பலத்தைச் சிவதனுஸில் கண்ட ஜனகர் தாம் செய்துள்ள பிரதிக்ஞைப்படி ஸீதையை ராமருக்குக் கொடுக்க விரும்பி, தசரதரை அழைத்துவரத் தமது புரோஹிதரை அனுப்பினர். நல்ல மருமகனைத் தேடிக்கொண்டிருந்த தசரதருக்கு இச்செய்தி பெருமகிழ்ச்சியை விளைவித்தது. தசரதர் மற்ற குமாரர்களுடன் மிதிலைக்குச் சென்றார். ராமர் ஸீதையையும், லக்ஷ்மணன் ஊர்மிளையையும், பரதன மாண்டவியையும், சத்ருக்னன் சுருதகீர்த்தியையும் விவாஹம் செய்து கொண்டனர்.

விவாஹம் முடிந்தவுடன் தசரதர் தமது நான்கு புதல்வர்களுடன் அயோத்தி நோக்கிப் புறப்பட்டார். வழியில் அவருக்குச் சில துர்நிமித்தங்கள் தோன்றின. திடீரெனப் பயங்கரமான எதிர் காற்று வீசி த்வஜத்தைமுறித்துச் சேனையைச் சிதறவடித்தது. சூரியனைச் சுற்றிலும் பரிவேஷம் தென்பட்டது. சூரியனுள்ள திசையிலிருநது கொண்டு நரிகள் அச்சமூட்டும் வகையில் ஊளையிட்டன. இத்தகைய அபசகுனங்களைக் கண்டு மனம் கலங்கிய தசரதருக்கு வஸிஷ்டர் ஆறுதல் கூறினார். இச்சமயத்தில் திடீரென ஸேனையின் முன்னணியில் பரசுராமர் தோன்றினார். தசரதர் மிக்க பரபரப்புடன் அவரை உபசரிக்க விரைந்தாராயினும் பரசுராமர், அவரைப் புறககணித்து ராமர் நிற்குமிடம் சென்று, “தசரதபுத்திரனே! க்ஷத்ரிய ஜாதியே எனக்கு எதிரியானது. அதைப் பல முறையும அழித்து நான் ஒருவாறு அமைதி பெற்றிருந்தேன். இப்பொழுது உன்னுடைய பராக்கிரமத்தைக் கேட்டதும் எனக்கு மறுபடியும் க்ஷத்ரிய ஜாதியிடத்தில் கோபமுண்டாகிறது. மற்றவர்கள் வளைக்காதவில்லை நீ வளைத்தாய் எனக் கேள்வியுற்றேன. இது எனது வீர்யமாகிய கொம்பு முறிந்ததற்கொப்பாகும. இதற்கு முன்பெல்லாம் ராமன் என்ற சொல் என் ஒருவனையே குறித்தது. இப்பொழுது உன்னையும் குறிப்பதால் அச் சொல்லே எனக்கு வெட்கத்தை உண்டாக்குகின்றது. நான், என் தந்தையின் கன்றைக் கவர்ந்த கார்த்தவீரியனையும், என் புகழைக் கவர்ந்த உன்னையுமே என் எதிரிகளாக எண்ணுகின்றேன. நான் க்ஷத்ரியர்கள் எல்லோரையும் அழித்தவனாயினும் உன்னை வெல்லாத

வரை எனக்கு மன அமைதியில்லை. நீ முறித்த வில்லுக்குப் பலம் கிடையாது. விஷ்ணு அதைப பலமற்றதாக முன்பே செய்து விட்டார். ஆதலால் என கையிலுள்ள இந்த வில்லை நாணேற்றி அம்புடன் இழு. சண்டையிட்டுத்தான் வெற்றி காணவேண்டு மென்ற விருப்பமில்லை. இந்த வில்லை வளைத்தால் நீ என்னை வென்றவன் என்றே கருதுகின்றேன். அல்லது, எனது கோடாலியின் முனையைக்கண்டு அஞ்சுவாயானால் கூப்பு கையை. உன்னை உயிருடன் விட்டுவிடுகின்றேன்," என்றார்.

இவ்வாறு பரசுராமர் கூறவும், ராமர் புன்னகையால் சிறிதே உதடு அசைய, பதில் ஏதும கூறாமல் பரசுராமர் கையிலிருந்த வில்லை வாங்கினார். அதன் ஒரு முனையைத்தரையில் நாட்டி நாணைப் பூட்டவும் பரசுராமர் ஒளியிழந்து கரும்புகை போல் நின்றார். மனத்தில் இரக்கமுடைய ராமர், அவரைப் பார்த்து, "பிராம்மணரே! என்னை நீர் அவமதித்தீராயினும, உம்மை நான் துன்புறுத்த விரும்பவில்லை. ஆனால் தொடுக்கப் பட்ட இவ்வம்பு வீணுதல் கூடாது. இதனால் எதை நான் அழிக்க லாம்? யோகசக்தியால் எங்கும் ஸஞ்சரிக்கத் திறமைபெற்ற உமது சக்தியை அழிக்கட்டுமா? அல்லது, நல்ல உலகங்களை அடைவதற்காக நீர் சேமித்துள்ள புண்யஙகளை இந்தப் பாணத் திற்கு இலக்காகச் செயயலாமா?" என்று கேட்டார். அதற்கு பரசுராமர், "உம்மை நான நனகு அறிவேன். உமது பலத்தைக் காண வேண்டுமென்றே கோபமூட்டினேன். எனது தந்தையின எதிரிகளைச் சாம்பராக்கினேன். இப்பூமியையே தானம செய் துளளேன். இத்தகைய எனக்குப் பரமபுருஷராகிய உம்மிடம் தோல்வியுறுவதுதான் கௌரவமானது. நான் புண்யதீர்த்தங் களுக்குச் செல்ல விரும்புவதால் எனது ஸஞ்சார சக்தி அழிய வேண்டாம். ஸவர்க்கத்தில் விருப்பற்ற எனது புண்ணியஙகள் அழிவதால் எனக்கு நஷ்டம ஒன்றுமில்லை. எனவே அவைகளே உமது அமபுக்கு இலக்காகட்டும்," என்றார். ராமர் அதை ஏற் றுக்கொண்டு பாணத்தை விட்டார். பரசுராமர், "ராம, உம மால் எனது ராஜஸகுணம் நீஙகியது. ஸத்வகுணம் பெற்றேன். நீர் வெற்றி காண்பீர்," எனக்கூறிச் சென்றார்.

பரசுராமர் சென்றதும், தசரதர், திரும்பவும் ராமர் பிறந்ததாக எண்ணி மகிழ்ந்து அயோத்தி சென்றார். நகரிலுள்ள பெண்கள் ஸீதையை மிக ஆவலுடன் நோக்கினர்.

ராமருக்கு முடிசூட்ட விரும்பிய தசரதரின் எண்ணம் கைகேயியினால் தடையுற்றது. எனவே, ராமர் ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் காடு சென்றார். தசரதர் இறக்கவும், பரதனை மாமன் வீட்டிலிருந்து மந்திரிகள் அழைப்பித்தனர். மந்திரிகள் வேண்டியும் ராஜ்யத்தை விரும்பாத பரதன், ராமரைத் தேடிக் காடு சென்று பாதுகையை மாத்திரமே பெற்று அதன் அடிமையாக இருந்து ராஜ்யத்தைப் பாதுகாத்தான். சித்ரகூடம் அயோத்திக்கு அருகிலிருந்த காரணத்தால் தொலைவிலே இருக்க விரும்பிய ராமர் மேலும் தெற்குநோக்கிச் சென்றார். ஸீதையைத் தூக்கிகொண்ட விராதனைக் கொன்று பூமியில் புதைத்தார். பின் பஞ்சவடியில் அவர் தங்கியிருந்த சமயத்தில் அங்குவந்த சூர்ப்பணகை, தன் காமம் நிறைவேறாமைக்கு ஸீதையே காரணம் என நினைத்து அவளைக் கவர முயன்றபொழுது, லக்ஷ்மணன் அவளது மூக்கையும் காதுகளையும் அறுத்துவிட்டான். அவளது முறையீட்டைக் கேட்டு ராமரை எதிர்த்த கரன் முதலியவர்களும் கொல்லபபட்டனர்.

**பன்னிரண்டாவது ஸர்க்கம்**

இச்செய்தியைக் கேட்ட ராவணன் தன் தலைகளின்மேல் ராமர் பாதத்தை வைத்து அவமதித்ததாகவே கருதி ஸீதையைக் கவர்ந்து சென்றான். ஸீதையைத் தேடிவந்த ராம லக்ஷ்மணர்கள் ஜடாயுவிடமிருந்து ராவணன் கவர்ந்து சென்றதாக ஒருவாறு அறிந்தனர். பின் இறந்த ஜடாயுவிற்குத் தகனம் முதலியவற்றைச் செய்தனர். பிறகு வாலியைக் கொன்று ஸுக்ரீவனுடன் ராமர் நட்புக் கொண்டார். ஸுக்ரீவன் வானரர்களைப் பல திசைகளிலும் ஸீதையைத் தேடும்படி அனுப்பினான். ஸீதையைக் கண்டதாக ஹனுமார் கூறிச் சூடாமணியை ராமரிடம் தரவும, அவர் வானரர்களுடன் லங்கையை நோக்கிச் சென்று தம்மைச் சரணடைந்த விபீஷணனுக்கு இலங்கை அரசைத் தருவதாக வாக்களித்தார். பின் அணைகட்டிக் கடலைக் கடந்து லங்

கையை அடைந்தார். பிறகு நிகழ்ந்த யுத்தத்தில் இந்திரஜித், கும்பகர்ணன் முதலிய பலரும் கொல்லப்பட்டனர். ராமர் மாதலி கொணர்ந்த தேரில் அமர்ந்து ராவுணனுடன் போரிட்டுப் பிரம்மாஸ்திரத்தை உபயோகித்து அவனது தலைகளை அறுத்து வீழ்த்தினர்.

ஸீதை அக்னிப்ரவேசம் செய்து தனது தூயமையை நிலை நாட்டவும், அவளை ஏற்றுப் புஷ்பக விமானத்திலேறி அயோத்தி நோக்கிப் புறப்பட்டார்.

**பதின்மூன்று வது ஸர்க்கம்**

ஆகாயத்தில் விமானத்தின் மூலம் வடதிசை நோக்கிச் சென்ற ராமர் பூமியிலுள்ள அந்தந்த இடங்களை ஸீதைக்குக் காட்டிக்கொண்டு சென்றார். "ஸீதே! நமது முன்னோர்களான ஸகரபுத்திரர்களால் விஸ்தரிக்கப்பட்டுள்ளது இக்கடல். இதன் பெருமை அளவிட முடியாதது. இந்திரனிடம் பயந்த மலைகளுக்குச் சரணம் தந்தது இக்கடல்தான். இதன் கரையிலுள்ள மணலில் கிடக்கின்ற பாம்புகள் அலைகள் போல் காணபபடுகின்றன. பாக்குமரங்களும் பனங்காடுகளும் இங்கே உள்ளன. இதோ புலப்படுவது ஜனஸ்தானம். அரக்கர்களுக்கு அஞ்சி ஆச்ரமத்தை விட்டு ஓடிய முனிவர்கள் இப்பொழுது தமது ஆச்ரமங்களிலே குடியேறுகின்றனர். இங்கேதான் உன் பாதச் சிலம்பைக் கண்டெடுத்தேன். இதோ தெரிவது மால்யவான் என்ற மலையாகும். இங்குத்தான் உன்னைவிட்டுப் பிரிந்த காலத்தில் கண்ணீர் பெருக்கிக் காலங் கழித்தேன். இப்பொழுது நாம் காண்பது பம்பாஸரஸ்; இது பஞ்சவடி; இங்கு நீ பல மரங்களை நீர் வூற்றி வளர்த்து வந்தாய். அதோ தெரிகின்ற குளம்தான் சாதகர்ணி முனிவரின் தடாகம். இது சரபங்க முனிவரின் ஆச்ரமம். சித்ரகூட மலையும், மந்தாகினி நதியும் கண்களுக்குப் புலனாகின்றன. இதோ தெரிவது அத்ரி முனிவரின் தபோவனம். கங்கை, யமுனை இவ்விரண்டு நதிகளின் ஸங்கமஸ்தலம் நாம் இப்பொழுது காண்பது. ச்ருங்கிபேரம் என்ற குஹனது நகரம் இப்பொழுது புலனாகின்றது. இதோ ஸரயூநதி அலைக் கைகளாலே என்னைத் தழுவுவதுபோல் காணப்படுகிறது. இந்நேரம்

பரதன் நம்மை எதிர்கொண்டழைக்க வருவான் என நினைக்கிறேன். ராஜ்யத்தை நிச்சயம் எனக்குத் தரப்போகின்றான்,'' என்றார்.

இவ்வாறு அவர் கூறும்பொழுது அவர் விருப்பத்தை அறிந்து விமானம் தரையில் இறங்கவும், ராமர் அதனினின்றும் இறங்கிப பரதனை அணைத்துக்கொண்டார். பின் விபீஷணனையும், ஸுக்ரீவனையும், பரதனுககு அறிமுகப்படுத்தியபின், வானரர்கள், ராமர் உத்தரவின்படி மனித வடிவுடன் யானைமேல் ஏறி அயோத்திக்குச் செல்லத் தொடங்கினர். விபீஷணனும மற்ற அரக்கர்களும் ரதஙகளில் சென்றனர். ராமர் புஷ்பகத்தில் அமரவும், பரதன் விமானத்துள் சென்று ஸீதையை வணங்கினான். பிறகு எல்லோரும் சிறிது தூரம் சென்று அயோத்திக்குப் புறத்திலுள்ள உத்யான வனத்தை அடைந்தனர்.

உத்யானத்தில் தம் தாய்மார்களைக்கண்ட ராமலக்ஷமணர்கள் அவர்களை வணங்கினார்கள். பின் வயதுமுதிர்ந்த மந்திரிகள் ராமருக்கு அபிஷேகம் செய்தனர். ராமர் தமக்கு உதவி செய்த விபீஷணன், ஸுக்ரீவன் முதலியவர்களுக்குத் தக்க மரியாதைகளைச் செய்தபின் அவரவர் இடங்களுக்குச் செல்ல அனுமதியளித்தார். குபேரனுக்குரிய புஷ்பகவிமானத்தை அவனுக்கே அனுப்பினார். பிறகு ராமர் அயோத்தி சென்று ராஜ்யத்தை ஆண்டுவந்தார். தமது ஆட்சியைப்பற்றி மக்களின் கருத்தை அறிவதற்காக அனுப்பிய வேவுகாரன் ஒருவன், ஸீதையை ராமர் ஏற்றுக்கொண்டதைப்பற்றி அவதூறுசெய்வதாகக் கூறவும் ராமர் மனம் உடைந்தவரானார். ஸீதையை விட்டாலன்றி அம்மாசு நீங்காதென்ற முடிவிற்கு வந்து, தன் தம்பியரை அழைத்துத் தாம் செய்த முடிவை அவர்களுக்குக் கூறினார். லக்ஷ்மணனிடம், "லக்ஷ்மணா! கருவுற்றிருக்கின்ற ஸீதை கஙகைக் கரையிலுள்ள தபோவனத்திற்கு ஒருமுறை போய்வர வேண்டுமெனத் தன விருப்பத்தைத் தெரிவித்துள்ளாள். அதை வியாஜமாகக் காட்டி அழைத்துச்சென்று வால்மீகி முனிவரின் ஆச்ரமத்தினருகில் விட்டு விடு,'' என்று கட்டளை இட்டார்.

பதினான்காவது ஸர்க்கம்

லக்ஷ்மணனும் ஸீதையை அழைத்துச்சென்று கங்கையைத் தாண்டியபின் ஸீதையினிடம் உண்மையைக் கூறி வால்மீகி ஆச்ரமத்தின் வழியையும் காட்டினன். லக்ஷ்மணன் கூறியதைக் கேட்ட ஸீதை மூர்ச்சித்து விழுந்தாள். நினைவு பெற்ற அவள், அக் காலத்திலும் கணவர்மீது குற்றம் கூருது, லக்ஷ்மணன் மூலம ராமருக்குச் சில கூறினள்.

"அரசே! பதிவ்ரதை என்பதை அக்னிப் பிரவேசத்தின் மூலம் அறிந்தபின்பும் என்னைத் தியாகம செய்தது நியாயமா? அல்லது உம்மைக் குற்றம் சொல்லிப் பயனில்லை. நான் முற்பிறவியில் செய்த தீவினைகள இப்பொழுது பயன் அளிக்கத்தொடங்கியுள்ளன. உமது அருளால் மஹரிஷிகளின் மனைவியாக்கு, முன்பு அபயமளித்த நான், இப்பொழுது நீஙகள அரசராகத் திகழும் காலத்தில் என்ன காரணத்தைக் கூறிக்கொண்டு மஹரிஷிகளின் பாதுகாப்பில் இருப்பேன்? உமது ஸந்ததியைக் காப்பாற்றவேண்டிய கடமை இல்லையாயின் நான் உயிர் மாய்த்துக் கொள்வேன். ஸந்ததியைக் கருதியே உயிர் வாழ்கின்றேன். மறு பிறவியிலும் தங்களையே கணவராகப் பெறுதற்காகவும், ஆனல் இத்தகைய பிரிவு நேராமை கருதியும், பிரஸவத்திற்குப் பின் தவம் செய்து வருவேன்," என்ருள்.

'அவ்வாறே' எனக்கூறி லக்ஷ்மணன் சென்றதும் தனிமையிலே விடப்பட்ட ஸீதை புலம்பினள். அவளது அழுகைக் குரலைக் கேட்ட வால்மீகி அவளுக்கு ஆறுதல் கூறி, தமது ஆச்ரமம் அழைத்துச்சென்று தாபத பெண்களிடம் அவளை ஒப்படைத்தார். ஸீதை தினந்தோறும் தேவபூஜை செயபவளாய குழந்தையின் நலனைக் கருதி உயிர் வாழ்ந்து வந்தாள்.

ராமர் ஸீதையை விட்டபின் வேறு ஸ்திரீயை மணக்காமல் ஸீதை போன்ற தங்கப் பதுமையையே துணையாகக்கொண்டு யாகாதிகளைச் செய்து வந்தார். இச்செய்தியைக் கேள்வியுற்ற ஸீதை தன்னிடம் ராமர் வைத்துள்ள அன்பை இதன்மூலம் உணர்ந்து மனம் தேறி இருந்தாள்.

ராமர் ராஜ்யம் ஆண்டு வருங்கால் யமுனதீர வாஸிகளான மஹரிஷிகள், லவணன் என்ற அரக்கனல் தங்களுக்கு

நேருகின்ற துன்பங்களைக் கூறி அவனை அடக்கும்படி வேண்டவும், ராமர் சத்ருக்னனைப் பெரும் படையுடன் லவணனைக் கொல்லஅனுப்பினார். செல்லுங்கால் சத்ருக்னன் ஓர் இரவு வால்மீகி முனிவரின் ஆச்ரமத்தில் தங்க நேர்ந்தது. அவ்விரவு

**பதினைந்தாம் ஸர்க்கம்**

ஸீதைக்குஇரு குமாரர்கள் பிறந்தனர். பின அவன் லவணனைக் கொன்று யமுனையின் கரையில் மதுரை என்ற நகரத்தை அமைத்தான். அங்குச் சிறிதுகாலம் தங்கியிருந்தான். வால்மீகி முனிவர் ஸீதையின் குமாரர்களுக்குக் குசன், லவன் எனப் பெயரிட்டு உரிய காலத்தில் கல்வி முதலியன கற்பித்துப் பின், தாம் எழுதிய ஸ்ரீமத் ராமாயணத்தையும் போதித்தார். சில வருஷங்களுக்குபின் அயோத்தி திரும்பிய சத்ருக்னன், வால்மீகியின் விருப்பத்திற் கிணங்க, ஸீதைக்கு மக்கள் பிறந்தைக் கூறாது விடுத்து, மற்ற வரலாறுகளை எல்லாம் ராமரிடம் தெரிவித்தான்.

பிறகு ராமர் செய்த அச்வமேதத்திற்குப் பல மஹரிஷிகள் வந்திருந்தனர். வால்மீகியுடன வந்திருந்த குச லவர்கள், ராமாயணத்தை ராமர் முனனிலையில் மிக இனிமையாகப் பாடினார்கள். ராமாயணத்தைக் கேட்டு மகிழ்ச்சியுற்ற ராமர், வால்மீகி முனிவருக்குத் தமது ராஜ்யம் முழுவதையும் தர முன்வந்தார். வால்மீகி, ராஜ்யம் வேண்டாமெனவும், குச லவர்கள் ராமரது குமாரர்கள எனவும், ஸீதையைத் திரும்பவும் அவர் ஏற்றுக் கொள்வதே தமக்குப் பெருமகிழ்ச்சி தருமெனவும் கூறி, ஸீதையை அங்கீகரிக்குமாறு வேண்டினார். ஸீதை தனது தூய்மையை ஜனங்களுக்கு நிரூபித்தால் அவளைத் தாம் ஏற்பதாக ராமர் பதிலுரைததார். ஆச்ரமத்திலின்றும் வரவழைக்கப்பட்ட ஸீதை, "பூமி தேவியே! நான் நெறிதவறாதவளாயின் என்னை உன்னிடம் அழைத்துக்கொள்" எனறு கூற, தெய்வ வடிவத்தில் பூமிதேவி தோன்றி ஸீதையை எடுத்துக்கொண்டு சென்றாள். ஸீதையை இழந்த ராமர் தம்மிருபுதல்வரிடம் மிக அன்பு பாராட்டினார். ஒரு சமயம் காலன் முனிவர் வேஷத்தில் வந்து ராமரிடம் பரமபதம் செல்லும் நாள் வந்துற்றதெனக் கூற, ராமர் தேகத்தைவிட விரும்பி வடக்கு நோக்கிப் புறப்பட்டார்.

தம்முடன் வந்த மக்கள் அனைவருக்கும் முக்தி யளித்துத் தாமும பரமபதம் சென்றார்.

ஸ்ரீராமர் பரமபதம் ஏகியதும், அவரது குமாரனான குசன் விந்தியமலைக்கு அருகில் அமைந்த குசாவதியில் அரசாண்டு வந்தான். அவனது ஸஹோதரர்கள் அணைகள கட்டி நீர்வளம் பெருக்கி உழவுத் தொழிலை வளர்த்தனர். காட்டினின்றும் யானைகளைப் பிடித்துப் பழக்கிப் படையைப் பெருக்கினர். எல்லோரும் ஒற்றுமையுடன் இருந்தனர்.

**பதினாறுவது ஸர்க்கம்**

ஓரிரவு குசன, கதவுகள் மூடப்பட்டு, அசையாது எரியும் தீபங்களையுடைய தனது அறையில் ஒரு ஸ்திரீ நிற்பதைக் கண்டு யாரென வினவவும், அந்த ஸ்திரீ கூறலுற்றாள்.

" அரசே ! நான் அயோத்தியா நகரத்தின் அதி தேவதை. உமது தந்தை தம்முடன் எல்லோரையும் அழைத்துச் சென்றதால் நகரம் பாழடைந்துள்ளது. செல்வத்தினால் அளகாபுரியையும் வென்று நித்ய உத்ஸவத்துடன் விளங்கிய நகரம் இப்பொழுது காண்போர் மனத்தில் வருத்தத்தை விளைவிக்கின்றது. மாளிகைகள் இடிந்தும் மதில்கள சரிந்தும் இருக்கின்றன. முன்பு இரவில் ராஜ வீதிகளில் காற்சிலம்பு ஒலிகக அபிஸாரிகைகள் காதலர் இடம் நோக்கிச் சென்றனர். இப்பொழுதோ அவ்விடங்களில் நரிகள் ஊளையிடுகின்றன.

பெண்கள் தம கையால் அடித்து விளையாடிய தடாக ஜலம் இப்பொழுது காட்டு எருமைகளின் கொம்புகளால் தாக்கப்பட்டுக் கர்ண கடூரமாக ஒலிக்கின்றது. வீட்டு மயில்கள் எல்லாம் தீப்பொறி பட்டுத் தோகை இழந்து காட்டு மயில்களாயின. செம்பஞ்சுக்குழமபு தடவிய பாதங்களை மெல்லெலன வைத்துப் பெண்கள் நடந்த தடாகங்களின் படிகள், இப்பொழுது, மான்களைக் கொன்றதால் ரத்தக்கறையுடைய புலிகளின் அடிச்சுவடுகளைப் பெறுகின்றன. தூண்களிலே அமைக்கப்பட்டுள்ள பதுமைகளின் மேல் இப்பொழுது பாம்புகள் உரித்த சட்டைகள் தொங்குகின்றன.

"முன்பு ஸ்திரீகளால் கருணையுடன் வளர்த்துப் புஷ்பங்கள் பறிக்கப்பட்ட கொடிகளையும் செடிகளையும் இப்பொழுது குரங்குகளும் வேடர்களும கசக்குகின்றனர். வீடுகள் எங்கும சிலந்திக் கூண்டுகளே உள்ளன. முன்போல் நதிக்கரையிலுள்ள கொடிவீடுகள் காதலர்கள் சந்திக்கும் ஏகாந்த ஸ்தலமாக இல்லை. ஆதலால் உமது முன்னோரின் வாசஸ்தானமாகிய அயோத்திக்குச் சென்று, அந்நகரம் இழந்த பெருமையை மறுபடியும் பெறச்செய்யவேண்டும்," என்று கூறினாள்.

தேவதையின் வேண்டுகோளை ஏற்று, குசன் அவ்வாறே செய்வதாகக் கூறியதும் அவள் மறைந்தாள். பொழுது புலர்ந்ததும், இரவில் நடந்ததைப் பெரியோர்களிடம் கூறி அவர்களது அனுமதி பெற்று அயோத்திகு அருகில் சென்று, சிற்பிகளைக்கொண்டு நகரத்தைச் செப்பனிடச் செய்து அதில் புகுந்தான. குசன் சென்றபின் நகரம் முன்போல் பொலிவு பெற்று விளங்கியது.

ஒரு சமயம் கோடை காலத்தில் குசன் தனது அந்தப்புர ஸ்திரீகளுடன் புனல் விளையாடுவதற்காக விரும்பி, ஸரயூநதி சென்றான. நதியிலுள்ள முதலைகளை வலைஞர்கள அப்புறப் படுத்தியிருந்தனர். கரையில் பலவகையான கேளிக்கைகளுக்கும் உதவும வண்ணம் கூடாரங்கள் அமைக்கப்பட்டிருந்தன.

குசனது காதலிகள் அனைவரும் ஒருங்கே படிகள் வழியே இறங்கி, ஒருவர்மேல் ஒருவர் நீரை வாரி இறைத்து விளையாடினர். நீர் விளையாடுங்கால் அவர்களது கண் மை கரைந்தாயினும் கண்ணழகு குறையவில்லை. அவர்களது மேனி மீது எழுதியுள்ள மகரிகாபத்ரங்கள் அழிந்தன. சிறிதுநேரம் படகில் அமர்ந்து ஸ்திரீகள் விளையாடுதலை நோக்கிக்கொண்டிருந்த குசன் தானும் நீரில் இறங்கி விளையாடத் தொடங்கினான். பெண்கள் அவன்மீது பீச்சுங்குழலால் வர்ணத் தண்ணீரை இறைத்தனர். ஸ்திரீகளுடன் நீரில் விளையாடுகின்ற அவன் தேவமகளிருடன் ஆகாசகங்கையில் நீராடுகின்ற இந்திரன்போல் காணப்பட்டான்.

ஜலக்ரீடை முடிந்தபின், அவன் கரையிலுள்ள கூடாரம் சென்று அணிகளை அணியத் தொடங்கியபொழுது, அகஸ்த்யரால் ராமருக்கு அளிக்கப்பட்டுப்பின் அவரால் தனக்குத் தரப்பட்ட தோள்வளையைத் தனது புஜத்தில் காணாது ஸரயூநதியில் வீழ்ந்து விட்டதென ஒரு நொடியில் உணர்ந்தான். பின் வலைஞர்கள் முயன்று தேடியும் ஆற்றுநீரில் அவ்வணியைக் காணாமல் அந்நதியில் வசிக்கின்ற ஸர்ப்பராஜன் குமுதனே அதைக் கவர்ந்திருக்கவேண்டுமெனக் குசனிடம் கூறினர். கூடாரத்தைவிட்டு வெளிவந்து, குமுதனை அடிக்கக் கருடாஸ்த்ரத்தைக் குசன் தொடுக்கவும், அக்குமுதன தன் தங்கை குமுத்வதியுடன் வந்து, வணங்கி, "அரசே! இவள் எனது தங்கை எங்கள் உலகில் பந்து விளையாடிக்கொண்டிருந்த இவள் நக்ஷத்ரம்போல் ஜவலித்துக் கொண்டு கீழே விழுந்த அணியை அவாவினால் எடுத்தாள். தான் செய்த குற்றத்திற்குப் பரிஹாரமாகத் தங்களுக்குப் பணிவிடைசெய்ய விரும்புகின்றாள். ஆதலால் இவளையும் இதனையும் தாங்கள் ஏற்கவேண்டும்," எனக் கூறினான்.

பின் குசன், குமுதன் கூறியதை ஏற்று உறவினர்களின் அனுமதியுடன் அவளை சாஸ்திர முறைப்படி மணந்துகொண்டான். ஸர்ப்பராஜனான குமுதனது ஆணையால் குசனது நாட்டில் பாம்பு பயமே இல்லை. ஜனங்கள் இனிதே வாழ்ந்து வந்தனர்.

குசனுக்கும் குமுத்வதிக்கும் பிறந்த அதிதி உபய குலங்களையும் தன் நற்குணங்களால் தூய்மையுடையதாகச் செய்தான். பின் குசன் இந்திரனுக்கு உதவுவதற்காகச் செய்த போரில் துர்ஜயன் என்ற அஸுரனால் கொல்லப்படவே, மந்திரிகள் அதிதியை அரசனாக அபிஷேகம் செய்விக்க முயன்றனர்.

**பதினேழாவது ஸர்க்கம்**

சிற்பிகள் அமைத்த நாற்கால் மண்டபத்தில் பத்ராஸனத்தில் அவனை அமர்த்தி, புண்ய தீர்த்தங்களால் அபிஷேகம் செய்தனர். பின் தந்தத்தினாலான அணியாஸனத்தில் அமர்ந்து உடை உடுத்து, அணிகள் அணிந்து நறுமணம் கமழும் சாந்து பூசி, புஷ்பம் தரித்துக் கண்ணாடியில் தன் தோற்றத்தைக் கண்ட

பின் பணியாட்கள் ஜயகோஷம் செய்ய, ஆஸ்தான மண்டப மடைந்தான். தந்தை அமர்ந்திருந்த பொன் சிங்காதனத்தில் வீற்றிருந்து, சிற்றரசர்களின் வணக்கத்தைப் பெற்றபின், யானையின் மீதேறி நகரத்தை வலம் வந்தான். தெய்வங்களும் அவனுக்கு அருள புரிந்தன. தான் மகுடம் தரித்த காலத்தில் பொருள்களை ஏராளமாக வழங்கினான். சிறையிலிருந்த எல்லோரையும விடுதலை செய்தான். கூண்டிலிருந்த பறவைகளும் விடுதலை பெற்றன. மரண தண்டனை விதிக்கப்பட்டவர்களுக்கும் தண்டனை நீக்கப்பட்டது.

நியாய ஸபையில் தானே அமர்ந்து வாதி பிரதிவாதிகளின் குறைகளைக் கேட்டு நீதி வழஙகினான். வேலைக்காரர்களுக்கு வேலை முடிந்தவுடனேயே ஊதியமளித்தான். குசன் ஆட்சியில் செல்வத்துடனிருந்த மக்கள அதிதியினது ஆட்சியில் வெள்ளப் பெருக்குள்ள மழைகாலத்து நதிகள்போல் மிக்க செல்வப் பெருக்குடன் வாழ்ந்தனர். அவன்சொன்ன சொல் தவறவில்லை. கொடுத்ததைத் திரும்பவும் எடுத்துக் கொள்ளவில்லை. வம், அழகு, செல்வம் எனற இவற்றில் ஒவ்வொன்றும் மனிதனைக் கர்வம் கொளளச் செய்வதாகும். அவனிடம் இம்மூன்றும் இருப்பினும் செருக்கின்றி இருந்தான். மக்கள் அவனிடம் விசேஷமாக அன்பு கொண்டனர். உட்பகைவர்களான காமம் முதலியவற்றை அடக்கி இருந்ததால் நிலையற்ற லக்ஷ்மியும் அவனிடம் நீடித்து உறைந்தாள். முரட்டுப் பலத்தையோ, வஞ்சனையான தந்திரத்தையோ தனியே உபயோகிக்காமல் இரண்டையும் தக்க அளவிலே உபயோகித்து வெற்றிகண்டான். ஒற்றர்களைக் கொண்டு தன்நாட்டிலும் பிறநாட்டிலும் நடப்பன அனைத்தும் அறிந்தான். ராஜநீதியை அனுசரித்து அரண்களை அமைத்திருந்தானேயன்றிப் பகைவர்களிடம் அச்சத்தினாலன்று. ஜனங்களுக்கு வருத்தம் விளைவிக்கும் காரியம் எதையும் அவன் செய்தவனல்லன். தர்மார்த்த காமங்களை ஏற்ற வகையில் அனுபவித்தான்.

பகைவர்களின் பலமறிந்து யுத்தம் செய்தான். செல்வமிருந்தால்தான் பிறருக்கு உதவ இயலுமாதலால், பொருளீட்டி

ஞன். தான் அனுபவிக்க வேண்டுமென்ற விருப்பத்தால் அல்ல. தனது துர்பல நிலையை ஒருபொழுதும் வெளிக்காட்டவில்லை. அவனுடைய ஆட்சியில் வியாபாரிகள் கடலிலும், காட்டிலும், மலையிலும் அச்சமின்றிச் சென்றனர். நிலம் தான்யத்தையும், வனங்கள் யானைகளையும், சுரங்கங்கள் ரத்னங்களையும், அவனது ஆட்சிக்கு ஏற்ற வகையிலே அவனுக்குத் தந்தன. வஞ்சனை யுத்தம் அறிந்தும் நேர் முறையிலே போரிட்டான். தரித்ரர்களும்கூட அவனிடம் பொருள் பெற்றபின், பெரும் கொடையாளிகளாக ஆயினர். பிறர் தன்னைப் புகழுங்கால் நாணமுற்றான். பிறர் புகழும்படியான காரியங்களையே மேன்மேலும் செய்து வந்தான். பகைவர்களும்கூட அவனிடம் நற்குணங்களிருப்பதை ஒத்துக்கொண்டு புகழ்ந்தனர். அவனது ஆணையைச் சிற்றரசர்கள் தலையால் தாங்கினர். பல யாகங்கள் செய்து. **'தனதன்'** எனப் பட்டம் பெற்றான். திக்பாலகர்களான இந்திராதியரும் அவனுக்குத் துணைபுரிந்தனர்.

அதிதி நிஷதநாட்டரசன் மகளை மணந்து அவள் மூலம் **நிஷதன்** என்ற மகனை அடைந்தான். அதிதி வெகுகாலம் ராஜ்ய ஸுகங்களைத் துய்த்தபின் ஸ்வர்க்கமடைந்தான்.

**பதினெட்டாவது ஸர்க்கம்**

நிஷதனுக்குப்பின் அவனது தனயன் **நளன்** ராஜ்யமடைந்து பகைவர்களை ஒடுக்கினான். அவனது புத்ரன் **நபன்** என்பவன். நளன் ராஜ்யத்தை நபனிடம் கொடுத்து விட்டு, முக்திபெறுதற்காகத் தவம் செய்யக் காடு சென்றான். நபனது புதல்வன் **புண்டரீகன், க்ஷேமதன்வா** என்ற தன் ஸுதனிடம் அரசை ஒப்படைத்தான். அவனது மைந்தன் **தேவாநீகன்** தேவருலகிலும் புகழ் பெற்று விளங்கினான். தந்தைக்கு நன்கு பணிவிடை செய்து நற்பெயர் பெற்றான். இன்சொல்லால் எல்லோரது மனத்தையும் கவர்ந்த **அஹீநகு** என்பவன் தேவாநீகனது புதல்வன். அவன் நால்வகை உபாயங்களால் இவ்வுலகம் முழுவதையும் ஆண்டான். அவனிடம் குடி, சூது முதலிய கெட்ட பழக்கங்கள் எதுவும் இல்லை. அஹீநகு இறந்ததும் மலைபோல் பலம் வாய்ந்த அவனது மகன் **பாரியாத்ரன்** ராஜ்யலக்ஷ்மியை அடைந்தான். பாறை போல் விசாலமான

மார்புடைய **சிலன்** அவனது தநயன். பாரியாத்ரன் அரசபதவி யில் சிலனை வைத்துப்பின் உலக சுகங்களை அனுபவிக்க முயலாறு கிழப்பருவம் எய்தினன். சிலனது ஸுதனை **உந்நாபன்,** பனனிருவகை அரசர்களிலும் தலைசிறந்து விளங்கினன். பின் அவனது புதல்வனை **வஜ்ரநாபன்,** உலகிறகரசனுனன். வஜ்ரநாப னது மகன **சங்கணன்.** அவனது மைந்தன் **வ்யுஷிதாச்வன்** காசி யிலுள்ள விச்வேச்வரரைப் பூஜித்து அவர் அருளால **விச்வஸ ஹன்** என்ற மகனை அடைந்தான். அவன **ஹிரண்யநாபன்** என்ற தநயனைப் பெற்றுன. அவனது புதல்வன் **கௌஸல்யன்.** அவ னது மகன் **பிரம்மிஷ்டன்** ஆட்சிபுரியுங்கால் மக்கள மிக இன்ப மாக வாழ்ந்திருந்தனர். அவனது மகன் பெயர் **புத்திரன்** என பது. பிரம்மிஷ்டன் புண்யதீர்த்தங்களிலே ஸ்நாநம செய்து நற் கதி பெற்றுன். புத்திரனுக்குப் புஷ்யநக்ஷத்திரத்தில் **புஷ்யன்** என ஒரு தனயன் பிறந்தான். புஷ்யனது புதல்வனை **த்ருவஸந்தி,** தன் மகன் **சுதர்சனன்** சிறு குழந்தையாக இருக்கும் பொழுதே காட்டில் வேட்டையாடுங்கால் சிஙகத்தினல் கொல் லப்பட்டான்.

மந்திரிகள் குழந்தை சுதர்சனனை அரசனுக்கினர். முடிசூட் டியபின் மிகபொலிவுடன் அவன் விளங்கினன். மக்கள் அவ னிடம் மிக விசுவாசம் கொண்டிருந்தனர். சிற்றரசர்கள் அவ னது பாதங்களில் வணங்கினர். சிறிய நீலரத்னம் மஹாநீல மென அழைக்கப்படுவது போல் சிறுவனுன அவன், மஹா ராஜன் என விசேஷித்துக் கூறப்பட்டான். அவனது ஆணையை யாரும் மீறவில்லை. வாகைப் பூவை விட மென்மையான மேனி உடையவனுயினும் அவன் பரந்த பூமியின் பாரத்தைச் சிரம மின்றித் தாங்கினன். எழுத்துக்களைக கற்பதன முன்னமேயே பெரியோர்களின் ஸஹவாஸத்தால் சாஸ்திரபொருள்களை எல் லாம் அறிந்திருந்தான். உடல் உறுபபுக்கள் வளர்ச்சியுற்றது போலவே அவனது குணங்களும் வளர்ந்தன. ஆசிரியர்களுக் குச் சிரமம் தராமல் கல்வியை எளிதிலே கற்றுன. யௌவனப் பருவம் எய்திய அவன அழகுள்ள ராஜகுமாரிகளை நற்சந்த தியை விரும்பி மணந்துகொண்டான்.

**பத்தொன்பதா வது ஸர்க்கம்**

சுதர்சனன் தனது கிழப்பருவத்தில் தன மகன அக்னி வர்ணனுக்கு அபிஷேகம் செய்து, தவமியற்ற நைமிசாரண்யம சென்றான. அக்னிவர்ணன சிலவருஷம் வரை அரசைத் தானே நடத்திப் பின் மந்திரிகளிடம் ஒப்படைத்து விட்டு யௌவனப் பருவத்திற்குரிய இன்பங்களைத் துய்க்கத் தொடங்கினான. அவனது அரண்மனையில எப்பொழுதும விழாக்கள் ஒன்றன் பின் ஒன்றாகக் கொண்டாடப்பட்டன. பின் வந்தவிழா முன் சென்றதைக் காட்டிலும் சிறந்தே இருந்தது. இன்பநுகர்ச்சியின்றி நொடிப் பொழுதும் அக்னிவர்ணன் இருக்க விரும்பாததால், எப் பொழுதும் காதலிகளுடனேயே பொழுது போக்கினான். அரசனைக் காணவிரும்பிய மக்களுக்கு ஜன்னலின இடைவெளி மூலம் தன் காலை மட்டுமே தரிசிக்க அவகாசம் தந்தான். பெண்களுடன் நடைவாவிகளிலே இறங்கிப் புனலாடினான. மதுவைக் காதலி களிடம் பெற்று அருந்தினான். அந்தப்புரஸ்திரீகளுக்கு அபி நயம் கற்பித்து ஆடச்செய்து களித்தான. அவனது மடியில் ஸதாகாலமும் வீணையும் ஸ்திரீயும் இருந்து, மகிழ்ச்சியை உண் டாக்கினர்.

பல சமயங்களில் அவனுடைய காதலிகள் தங்களைவிட்டு அவன வேறு இடம செல்லாதிருக்க விரும்பி மேகலை நூலினால் பிணித்து அவனைத் தமமிடமே நிறுத்திக் கொணடனர். ஊடல் கொண்ட மனைவியர் ஏதாவது ஒரு விழாவைக் கொண்டாடுதல் என்ற வியாஜத்திலே அவனைத் தம்மிடம் வரவழைத்து அவனை மகிழவித்தனர். கோபங்கொணட காத லிகளை அவன கைகூப்பி வணங்கித் தேற்றியதுமுண்டு. மனைவியருக்குத் தெரியாமல் உத்யானங்களிலே கொடிவீடு களில் புஷ்பசயனங்களிலே இருந்து பணிப்பெண்களின் கலவியை நுகர்ந்தான அவனுடைய சயனங்கள் அவன் அனுபவித்த பலவகைக் கலவிகளை எடுத்துக்காட்டும சான்றாக இருந்தன. கோடைகாலத்தில் செய்குன்றுகளிலே இருந்தும், சரத்காலத்தில் மாடியினமேல்தளத்தில் நிலவில் அமர்ந் தும், பனிக்காலத்தில் காற்றற்ற உள்ளறைகளிலே உறைந் தும், எல்லாவகையான கலவி முறைகளையும் ஒன்றன்பின்

ஒன்ருக அனுபவித்தான். வஸந்தருதுவில் ஊஞ்சல் ஆடியும், க்ரீஷ்ம ருதுவில் பாதிரிப்பூவின் வாஸனையூட்டப்பெற்ற மதுவைக் குடித்தும் இன்பம் துய்த்தான்.

பகைவர் எதிர்க்க முடியாத அக்னிவர்ணனை அதிகக் கலவியினுலுண்டான க்ஷயரோகம் பற்றியதாய் மெலியச் செய்தது. வைத்யர்கள் கூறியதைக் கேளாது மேன்மேலும் இன்பப் பொருள்களையே அனுபவிக்க அவன் விரும்பினுன். அவனது முகம் வெண்ணிறம் கொண்டது. குரலும் ஈனமாயிற்று. மந்திரிகளோவெனில், அரசன் யாகாதி காரியங்களை நற்சந்ததியைக் கருதிச் செய்து வருகிருன் எனக்கூறி வந்தனர். பெருங்காற்றில் விளக்கு அணைவது போல முடிவிலே அவ்வியாதிக்கு வசப்பட்டு அக்னிவர்ணன் இறக்கவும், அவனை அரண்மனைக்கு அருகிலுள்ள உத்யானத்திலே பகைவர்அறியாதபடி தஹனம் செய்தனர். பின் அமைச்சர்கள் நகரஜனங்களின் தலைவர்களைக் கூட்டி அவர்களின் விருப்பப்படி. அரசனது மனைவியரில் ஒருத்தி கர்ப்பிணியாக இருப்பதை அறிந்து அவளை அரசுரிமை பெறச்செய்தனர். அவளும் மந்திரிகளின் உதவி பெற்று கணவனது ராஜ்யத்தை நன்கு ஆண்டு வந்தாள்

— : —

## காளிதாஸர் கூறியுள்ள
## ரகுவம்ச அரசர்கள்

---

विवस्वान्
मनुः
....
दिलीपः
रघुः
अजः
दशरथः
रामः
कुशः
अतिथिः
निषधः
नलः
नभाः
पुण्डरीकः
क्षेमधन्वा
देवानीकः

अहीनगुः
पारियात्रः
शिलः
उन्नाभः
वज्रणाभः
शङ्खणः
व्युषिताश्वः
विश्वसहः
हिरण्यनाभः
कौसल्यः
ब्रह्मिष्ठः
पुत्रः
पुष्यः
ध्रुवसन्धिः
सुदर्शनः
अग्निवर्णः

श्रीः

## अवतरणिका

---

वृषशैलावतंसं तं वेङ्कटेशवलाहकम् ।
आलोकेनापि जगतस्तापहारिणमीड्महे ॥ १ ॥

श्री श्रीनिवासवरदान् तातपादानुपास्महे ।
यत्कृपावशतः प्राप्तं देववाणीनिषेवणम् ॥ २ ॥

कालिदासकवेः सूक्तिः पूर्वसूरिपदानुगा ।
रसभावपरिस्पन्दैः रसिकस्वान्तनन्दिनी ॥ ३ ॥

व्यङ्ग्यभावा पदैर्हृद्यैश्चार्वलङ्कारभूषिता ।
रथ्यां गता नन्दयति कविता वनितेव नः ॥ ४ ॥

रघुवंशस्य सन्त्येव व्याख्या विबुधनिर्मिताः ।
देवभाषां बुभुत्सूनां न ताभिः काप्युपक्रिया ॥ ५ ॥

कालिदासीयसरससूक्त्यास्वादस्पृहावताम् ।
रसिकानां कृते सैषा क्रियते माधुरी मया ॥ ६ ॥

---

|| श्रीः ||

# || रघुवंशः ||

## प्रथमस्सर्गः

முதல் ஸர்க்கம்.

கவி, பார்வதியையும் பரமசிவனையும் வணங்கிப் பின், தமது விநயத்தை வெளியிட்டு, ஸூர்யவம்சத்து மன்னர்களின் குணாதிசயங்களைக் கூறுகின்றார்: "ஸூர்யபுத்திரரான வைவஸ்வதமநு அரசர்களில் முதல்வர்; அவரது வம்சத்தில் திலீபன் என ஒரு அரசன் தோன்றினான். அவனுக்கு மகத வம்சத்தில் பிறந்த ஸுதக்ஷிணை என்ற மனைவியிருந்தாள். அவர்களுக்கு வெகுகாலம்வரை புத்திரன் பிறக்கவில்லை. ஸந்ததியில்லாததன் காரணத்தையறிய விரும்பித் திலீபன், மனைவியுடன் தன் குலகுருவான வஸிஷ்டருடைய ஆச்ரமம் சென்று வினவ, அவர், காமதேனுவை அரசன் அவமதித்ததால் சந்ததி உண்டாகவில்லை என்பதைக் கூறினார். மேலும், தமது ஆச்ரமத்திலுள்ளதும் காமதேனுவின் பெண்ணுமான நந்தினியைப் பூஜித்தால் அதன் அருளால் அரசனுக்குப் புத்திரன் பிறப்பான் என்றும் கூறி, நந்தினிக்குச் சுச்ருஷை செய்யவேண்டிய வகையையும் சொன்னார். அரசனும் அவர் கூறியதை ஏற்றுக் கொண்டு ஆச்ரமத்திலேயே தங்கி இருந்தான்.

वागर्थाविव सम्पृक्तौ वागर्थप्रतिपत्तये ।
जगतः पितरौ वन्दे पार्वतीपरमेश्वरौ ॥ १ ॥

**वागर्थौ इव** - சொல்லும் பொருளும்போலே, **सम्पृक्तौ** - சேர்ந்திருப்பவர்களும், **जगतः** - உலகத்திற்கு, **पितरौ** - தாய்

தந்தையருமான, **पार्वतीपरमेश्वरौ** - பார்வதியையும் பரம சிவனையும், **वागर्थप्रतिपत्तये** - சொல், பொருள் இவைகளை அறியும் பொருட்டு, **वन्दे** - நமஸ்கரிக்கின்றேன்.

(கருத்து): பார்வதியும் பரமசிவனும் உலகத்திற்குத் தாய் தந்தையர். சொல்லும், அதன் பொருளும் சேர்ந்திருப்பதுபோல் அவ்விருவரும் சேர்ந்து இருப்பவர்கள். பக்தர்களுக்கு அருள்புரிவதில் ஒரே மனம் கொண்டவர்கள். அத்தகைய திவ்யதம்பதிகளான பார்வதியையும் பரமசிவனையும், சொல் பொருள் இவைகளுடைய அறிவை அவர்களின் அருளால் பெறவிரும்பி மஹாகவி காளிதாஸர் வணங்குகின்றார்.

क्व सूर्यप्रभवो वंशः क्व चाल्पविषया मतिः ।
तितीर्षुर्दुस्तरं मोहात् उडुपेनास्मि सागरम् ॥ २ ॥

**सूर्यप्रभवः** - சூர்யனிடமிருந்து தோன்றிய, **वंशः**-வம்சம், **क्व**-எங்கே! **अल्पविषया**-சிறிதே அறிவுடைய, **मतिः** -(எனது) புத்தி, **क्व** - எங்கே! **दुस्तरं** - கடக்கமுடியாத, **सागरं** - கடலை, **मोहात्** - அறிவின்மையால், **उडुपेन** - சிறுபடகின்மூலம், **तितीर्षुः** - கடக்கவிரும்புபவனாக, **अस्मि** - இருக்கின்றேன்.

(கருத்து): "ஸூர்யனிடமிருந்து இந்த வம்சம் தோன்றியது; அவ்வம்சத்தின் பெருமை மிகச் சிறந்தது; நானோ மிகக் குறைவான அறிவுடையவன்; கடக்கமுடியாத ஸமுத்திரத்தைச் சிறுபடகின் மூலம் ஒருவன் கடக்க விரும்புவதுபோல் எனது குறைந்த அறிவினால் கடல்போன்ற இச்சரித்திரத்தைக் கூறப்போகின்றேன்."

मन्दः कवियशः प्रार्थी गमिष्याम्युपहास्यताम् ।
प्रांशुलभ्ये फले लोभाद् उद्बाहुरिव वामनः ॥ ३ ॥

**मन्दः**- குறைந்த அறிவுடையவனும், **कवियशः प्रार्थी**-கவியின் புகழை விரும்புகின்றவனுமான, **अहं** - நான், **प्रांशुलभ्ये** - உயரமான மனிதனால் அடையத்தகுந்த, **फले** - பழத்தில், **लोभात्** - ஆசையினால். **उद्बाहुः** - நீட்டிய கையையுடைய, **वामनः इव** - குள்ளன் போல், **उपहास्यतां** - பரிஹஸிக்கப்படும் நிலையை, **गमिष्यामि** - அடைவேன்.

(க-து) "அறிவற்ற நான் கவியின் புகழை அடைய விரும்பு கின்றேன். உயரமான மனிதன் பறிக்கக்கூடிய பழத்தை அடைய விரும்பும் ஒரு குள்ளன் கைநீட்டிக் குதிப்பானுயின் வீணே முயலு கின்ற அவனை யாவரும் பரிகசிப்பார்கள். அதுபோல் எனக்கு எட்டாத பொருளில் ஆசைவைத்து அதற்காக முயலுகின்ற நானும் பலருடைய நகைப்புகளுக்குப் பாத்திரமாவேன்."

अथवा कृतवाग्द्वारे वंशेऽस्मिन् पूर्वसूरिभिः ।
मणौ वज्रसमुत्कीर्णे सूत्रस्येवास्ति मे गतिः ॥ ४ ॥

**अथवा** - அல்லது, **पूर्वसूरिभिः** - முன்னிருந்த பெரியோர் களால், **कृत-वाग्-द्वारे** - செய்யப்பட்ட ராமாயணம் என்னும் துவாரமுடைய, **अस्मिन्** - இந்த, **वंशे** - சூரியவம்சத்தில், **मे** - என்னுடைய, **गतिः** - போக்கு (காவ்யம்), **वज्रसमुत्कीर्णे** - வஜ்ரத்தினுல் துளை யிடப்பட்ட, **मणौ** - ரத்னத்தில், **सूत्रस्य (गति) इव** - நூலின் போக்குப்போல், **भवति** - இருக்கின்றது,

(க-து) 'நான் காவ்யம் இயற்றும் திறமை இல்லாதவனே. ஆயினும் முன்னோர் சென்ற வழியில் சென்று எனது விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்வேன்," என்று இச்சுலோகத்தில் கவி கூறு கிறார்.

"சூர்யவம்சம் ஒரு ரத்னம்போன்றது. அதில் வால்மீகி, ராமாயணம் என்னும் ஒரு துவாரத்தை அமைத்தார். வஜ்ரத்தினுல் துளையிடப்பட்ட ரத்தினத்தில் நூல் எளிதில் புகுந்து செல்லும். அதுபோல ராமாயணம் என்ற துவா ரத்தையுடைய இச்சூர்யவம்சத்திலும் எனது நூல் செல்ல இயலும்.

"வால்மீகி இயற்றிய ராமாயணத்தின் மூலம் சூர்ய வம்சத்தின் சரித்திரத்தை நன்கு அறிந்து, இராமாயண மும் பயன்பெறும்படி, எனது காவ்யத்தை அமைப்பேன். நூலினுல் ரதனம் பயன்படுவதுபோல், எனது நூலினுலும் ராமாயணம் பலருக்கும் பயன்படும்."

सोऽहमाजन्मशुद्धानाम् आफलोदयकर्मणाम् ।
आसमुद्रक्षितीशानां आनाकरथवर्त्मनाम् ॥ ५ ॥

सः - அப்படிப்பட்ட, अहं - நான், आजन्म-शुद्धानां- பிறவி முதல் பரிசுத்தமானவர்களும், आफलोदय-कर्मणां - பயனுண்டாகும் வரை முயற்சி உடையவர்களும், आसमुद्र क्षितीशानां- சமுத்திரம்வரையுள்ள நிலத்திற்கு அரசர்களாக இருப்பவர்களும், आनाक-रथवर्त्मनां - ஸ்வர்க்கம்வரை தேரின் வழியுடையவர்களுமான, रघूणां - ரகுவம்சத்தவரின், अन्वयं - சரிதத்தை, वक्ष्ये - சொல்வேன்.

இதுமுதல் 9-வது சுலோகம்வரை சேர்ந்து ஒரு வாக்யமாகும்.

(க-து) ரகுவம்சத்தில் தோன்றிய மன்னர்கள் பிறவியிலேயே பரிசுத்தமானவர்கள். அவர்கள், பலன் உண்டாகும் வரையில் முயற்சிசெய்வார்கள். அவர்களது இராஜ்யம் சமுத்ரம் வரை இருந்தது. அவர்கள் தேவலோகத்திற்கும் செல்லத் திறமை வாய்ந்தவர்கள்.

यथाविधिहुताग्नीनां यथाकामार्चितार्थिनाम् ।
यथापराधदण्डानां यथाकालप्रबोधिनाम् ॥ ६ ॥

यथाविधि - முறைப்படி, हुताग्नीनां - ஹோமம் செய்யப்பட்ட அக்னியை உடையவர்களும், यथाकाम - விருப்பப்படி, अर्चितार्थिनां - கௌரவிக்கப்பட்ட யாசகர்களை உடையவர்களும், यथापराध - குற்றத்திற்கு தக்கபடி, दण्डानां - தண்டிப்பவர்களும், यथाकाल - காலத்திற்கு தகுந்தபடி, प्रबोधिनां - அறிவு பெறுகின்றவர்களுமான, रघूणां अन्वयं - ரகுவம்சத்தவரின் சரிதத்தை, वक्ष्ये - கூறப் போகிறேன்.

(க-து) ரகு மஹாராஜனுடைய வம்சத்தில் பிறந்த மன்னர்கள் சாஸ்திரத்தில் கூறியபடி யாகம் செய்பவர்கள்; தங்களை அணுகி யாசிக்கின்றவர்களின் விருப்பத்தை கௌரவத்துடன் பூர்த்திசெய்

வார்கள். அவர்கள் குற்றங்களின் தாரதம்யத்தை நன்கு அறிந்து தண்டனை விதிப்பார்கள். காலத்திற்கு தகுந்த அறிவு அவர்களுக்கு உண்டு.

त्यागाय संभृतार्थानां सत्याय मितभाषिणाम् ।

यशसे विजिगीषूणां प्रजायै गृहमेधिनाम् ॥ ७ ॥

**त्यागाय** - கொடுப்பதற்காகவே, **सम्भृतार्थानां** - சம்பாதிக்கப்பட்ட செல்வமுடையவர்களும், **सत्याय** - உண்மைக்காக **मितभाषिणां** - அளவாகப் பேசுபவர்களும், **यशसे** - புகழின் பொருட்டு, **विजिगीषूणां**-வெல்ல விரும்புபவர்களும், **प्रजायै** - ஸந்ததியின் பொருட்டு, **गृहमेधिनां** - விவாகம் செய்து கொள்பவர்களுமான, **रघूणां अन्वयं** - ரகுவம்சத்தவரின் சரிதத்தை, **वक्ष्ये** - சொல்வேன்.

(க-து) சூர்ய வம்சத்து மன்னர்கள் தானம் செய்வதற்காகவே செல்வத்தை சமபாதித்தனர்; அதிகம் பேசுவதினால் பொய் சொல்வதற்கு சமயம் நேருமாதலால் அவர்கள் எப்போதும் அளவாகப் பேசுவர். மற்ற அரசர்களை வெல்வது அவர்களது செல்வத்தை கொள்ளை கொள்ளவேணடும் என்ற எண்ணத்தினால் அல்ல. பின் அவர்களை வென்றோம் என்ற புகழைப் பெறுவதற்கே படை எடுத்தனர். தங்களது வம்சத்தின் விருத்தியைக் கருதி மணம் செய்துக் கொண்டு கிருஹஸ்தாகளாக இருந்தனர். வாழ்க்கையிலுள்ள சுகத்தை மாத்திரம் கருதி அல்ல.

शैशवेऽभ्यस्तविद्यानां यौवने विषयैषिणाम् ।

वार्द्धके मुनिवृत्तीनां योगेनान्ते तनुत्यजाम् ॥ ८ ॥

**शैशवे** பால்யப்பருவத்தில், **अभ्यस्तविद्यानां** - கற்கப்பட்ட கல்வியை உடையவர்களும், **यौवने** - வாலிபப்பருவத்தில், **विषयैषिणां** - சுகத்தை விரும்புவர்களும், **वार्द्धके** - கிழப்பருவத்தில், **मुनिवृत्तीनां** - முனிவர்களின தொழிலை (தவத்தை) உடையவர்களும், **अन्ते** - முடிவில், **योगेन** - ஈசுவரத்யானத்தினால் **तनुत्यजां** - உடலை விடுபவர்களுமான, **रघूणां अन्वयं** - ரகுவம்சத்தவரின் சரிதத்தை, **वक्ष्ये** - கூறப்போகிறேன்.

(க-து) சூர்ய வம்சத்து மன்னர்கள் கல்வியை இளமையிலே கற்பார்கள். யௌவனப்பருவத்தில் பொருள்களைச் சம்பாதித்துச் சுகத்தை அனுபவிக்க விரும்புவார்கள். வயது முதிர்ந்தபின் முனிவர்களுடைய வேலையான தவத்தைச் செய்வார்கள். முடிவில் யோக முறையினால் உடலை விடுவார்கள்.

रघूणामन्वयं वक्ष्ये तनुवाग्विभवोऽपि सन् ।
तद्गुणैः कर्णमागत्य चापलाय प्रचोदितः ॥ ९ ॥

**तनुवाग् विभवः** - குறைந்த சொற்செல்வ முடையவனாக, **सन् अपि**- இருக்கின்றவனாயினும்-நான், **कर्ण**-(எனது) காதை, **आगत्य** - அடைந்து (இருக்கின்ற), **तद् गुणैः** - ரகுவம்சத்தவரின் குணங்களால், **चापलाय** - யோசனையற்ற சிறுகாரியத்தைச் செய்யும்பொருட்டு, **प्रचोदितः** - தூண்டப்பட்டவனாய், **रघूणां** - ரகுவம்ச மன்னர்களின், **अन्वयं** - சரித்திரத்தை, **वक्ष्ये** - சொல்வேன்.

(க-து) "நான் சொல்லாகிய செல்வத்தைக் குறைவாக உடையவன். ஆயினும் ரகுவம்சத்து மன்னர்களின் நற்குணங்களைப் பல முறையும் கேட்டிருப்பதால், அக்குணங்கள் ஒரு சிறு காவ்யத்தை எழுதும்படி எனக்கு ஆவலை உண்டாக்கி என்னைத் தூண்டுகின்றன. ஆதலால் ரகுவம்ச அரசர்களின் சரிதத்தை கூறத் தொடங்குகின்றேன்."

तं सन्तः श्रोतुमर्हन्ति सदसद्व्यक्तिहेतवः ।
हेम्नः संलक्ष्यते ह्यग्नौ विशुद्धिः श्यामिकापि वा ॥ १० ॥

**तं** - அந்த காவ்யத்தை, **सदसद् व्यक्ति हेतवः** - குணம் தோஷம் இவைகள் புலப்படுதலுக்குக் காரணமான, **सन्तः** - பெரியோர்கள், **श्रोतुं**-கேட்பதற்கு, **अर्हन्ति** - தகுந்தவர்களாகின்றனர்; **हि**-ஏனெனில், **हेम्नः** - தங்கத்தின், **विशुद्धिः**-சுத்தமான தன்மையோ, **श्यामिका अपि वा** - சுத்தமற்ற தன்மையோ, **अग्नौ**-நெருப்பில், **संलक्ष्यते**-நன்றாகப் பார்க்கப்படும்.

(க-து) "நான் எழுதும் காவ்யத்தை பெரியோர்கள் செவி சாய்த்துக் கேட்கவேண்டும். பொன் பரிசுத்தமானதா அல்லது

வேறு உலோகத்தின் கலப்பை அடைந்திருப்பதால் மட்டமானதா என்பது அதை நெருப்பில் காய்ச்சிப்பார்த்தால் தெரியும். அதுபோல் பெரியோர்களே ஒரு காவ்யத்தின் குணத்தையும் குற்றத்தையும் எடுத்துக்காட்ட வல்லவர்கள்."

वैवस्वतो मनुर्नाम माननीयो मनीषिणाम् ।
आसीन्महीक्षितामाद्यः प्रणवश्छन्दसामिव ॥ ११ ॥

**मनीषिणां**-வித்வான்களால், **माननीयः**-மதிக்கத்தக்கவரும், **छन्दसां**-வேதங்களுக்கு, **प्रणवः इव**-பிரணவம்போல் **महीक्षितां** - அரசர்களுக்கு, **आद्यः** - முதல்வரும், **वैवस्वतः नाम**-வைவஸ்தர் எனப் பிரசித்திபெற்றவருமான, **मनु** - மநு, **आसीत्** யிருந்தார்.

(க-து) வேதங்களுக்கெல்லாம் முதலில் பிரணவம் இருப்பது போல அரசர்களுக்கெல்லாம் முதல் அரசராக இருந்தவர் வைவஸ்வத மநு என்பவர். அவர் சூர்யனுடைய புத்திரா. அறிவாளிகளாலும், மதிக்கத்தக்கவராய் அவர் இருந்தார்.

तदन्वये शुद्धिमति प्रसूतः शुद्धिमत्तरः ।
दिलीप इति राजेन्दुः इन्दुः क्षीरनिधाविव ॥ १२ ॥

**शुद्धिमति** - பரிசுத்தமான், **तदन्वये** - அம்மநுவின் வம்சத்தில், **शुद्धिमत्तरः**-மிகவும் பரிசுத்தனான, **दिलीप इति** - திலீபன் என்ற, **राजेन्दुः**- சந்திரன் போன்ற அரசன், **क्षीरनिधौ** - பாற்கடலில், **इन्दुः इव** - சந்திரன் பிறந்தது போல, **प्रसूतः** - பிறந்தான்.

(க-து)' பாற்கடலில் சந்திரன் பிறந்ததுபோல, மனுவின் வம்சத்தில் திலீபன் என்ற சிறந்த அரசன் பிறந்தான்.

व्यूढोरस्को वृषस्कन्धः सालप्रांशुर्महाभुजः ।
आत्मकर्मक्षमं देहं क्षात्त्रो धर्म इवाश्रितः ॥ १३ ॥

**व्यूढोरस्कः** - விசாலமான மார்பையுடையவனும், **वृषस्कन्धः** - காளையினுடையவைபோன்ற தோள்களையுடையவனும், **प्रांशुः** - உயரமானவனும், **महाभुजः** - பெரிய கைகளை

யுடையவனுமான, (सः) - அவன், आत्म-कर्म-क्षमं - தனது தொழிலுக்குத் தகுந்த, देहं- சரீரத்தை, आश्रितः - அடைந்த, क्षात्रः - க்ஷத்திரியனுடையதான, धर्मः इव - தர்மம்போல், स्थितः- இருந்தான்.

(க-து) அவன் விசாலமான மார்புடனும், பருத்த தோளுடனும், நீண்ட கைகளுடனும் உயரமாக இருந்தான். பிரஜைகளைக் காப்பதையே தொழிலாகக் கொண்டது க்ஷத்ரிய தர்மம். அத் தொழிலைச் சரியாகச் செய்வதற்கு அனுகூலமான உருவத்தை எடுத்துக்கொண்ட க்ஷத்ரிய தர்மம்போல் அவன் காணப்பட்டான்.

सर्वातिरिक्तसारेण सर्वतेजोऽभिभाविना ।
स्थितः सर्वोन्नतेनोर्वीम् क्रान्त्वा मेरुरिवात्मना ॥ १४ ॥

सर्वातिरिक्त सारेण - எல்லாவற்றைக் காட்டிலும் அதிக பலமுடையதும், सर्व तेजोऽभिभाविना - எல்லாவற்றையும் (தனது) ஒளியால் அடக்குவதும், सर्वोन्नतेन-எல்லாவற்றைக் காட்டிலும், உயர்ந்ததுமான, आत्मना - தனது சரீரத்தினால், मेरुः इव - மேருமலைபோல், उर्वीम् - பூமியை, क्रान्त्वा - ஆக்ரமித்துக்கொண்டு स्थितः - இருந்தான்.

(க-து) அவன் சிறந்த பலமுடையனாகவும், மேலான வீர்யமுடையனாகவும் இருந்தான். மற்றவகையிலும் சிறந்து உலகில் ஒரு முக்ய புருஷனாக அவன் இருந்தான். வன்மையிலும் உயர்விலும் மேருமலை அவனுக்கு உபமானமாகக் கூறப்படுகின்றது.

आकारसदृशप्रज्ञः प्रज्ञया सदृशागमः ।
आगमैः सदृशारंभ आरंभसदृशोदयः ॥ १५ ॥

आकार-सदृश-प्रज्ञः - உருவத்திற்கு தக்க அறிவுடையவனாகவும், प्रज्ञया - அறிவிற்கு, सदृशागमः - தக்க சாஸ்திரப் பயிற்சி யுடையவனாகவும், आगमैः - சாஸ்திரப்பயிற்சிக்கு, सदृशारंभः - தகுந்த முயற்சி யுடையவனாகவும், आरंभ-सदृशोदयः - முயற்சிக்குத் தக்க பயனுடையவனாகவும், (सः) - அவன், स्थितः - இருந்தான்.

(க-து) அவன் நல்ல தோற்றமுடையவன்; தோற்றம் போலவே அவனுக்குச் சிறந்த புத்தியும் இருந்தது. சிறந்த புத்தியைக் கொண்டு அதற்குத் தக்கவாறு சாஸ்திரங்களைப் பயின்று அறிவு பெற்றிருந்தான்; அறிவுக்குத்தக்க முயற்சிகளும் முயற்சிக்குத்தக்க பயனும் அவனுக்கு இருந்தன. இவ்வாறு, உருவம், புத்தி, அறிவு, முயற்சி பயன் எல்லாம் ஏற்றத்தாழ்வின்றி. ஒன்றுக்கொன்று ஸமமான அளவில் அவனுக்கு இருந்தன.

भीमकान्तैर्नृपगुणैः स बभूवोपजीविनाम् ।
अधृष्यश्चाभिगम्यश्च यादोरत्नैरिवार्णवः ॥ १६ ॥

**भीमकान्तैः** - அச்சம் உண்டாக்குவனவும் விரும்பத்தக்கனவுமான, **नृपगुणैः** - அரசர்க்குரிய குணங்களால், **सः** - அவன் (திலீபன்), **यादोरत्नैः** ஜலஜந்துக்களினாலும் ரத்தினங்களினாலும், **अर्णवः इव** - சமுத்ரம் (இருப்பது) போல, **उपजीविनां** - தன்னை அண்டிப்பிழைப்பவர்களுக்கு, **अधृष्यः च** - அவமதிக்க முடியாதவனாகவும், **अभिगम्यः च** - அணுக முடிந்தவனாகவும், **बभूव** - இருந்தான்.

(க-து) திலீபனிடம், வீர்யம், குற்றம் செய்தவர்களைத் தண்டித்தல் முதலான அஞ்சத்தக்க குணங்களும, தாக்ஷிணயம் முதலிய விரும்பத்தக்க குணங்களும் இருந்ததால், அவன் பிரஜைகளால் அவமதிக்க முடியாதவனாகவும், அந்த சமயத்தில் அவர்களால் அணுகத் தக்கவனாகவும் இருந்தான். திலீபனுக்கு உபமானம் சமுத்ரம். அச்சத்தைக் உண்டாக்கும் திமிங்கிலம் முதலியவை இருப்பதால் கடல் பயத்தை உண்டாக்குகின்றது. முத்து பவழம் முதலிய ரத்னங்கள் இருப்பதால் அவற்றிற்காக நாம கடலை அணுகுகின்றோம். இவ்வாறு கடல் அஞ்சத்தக்கதாகவும் அணுகத்தக்கதாகவும் இருப்பது போல், திலீபனும், சில குணங்களால அஞ்சத்தக்கவனாகவும, சில குணங்களின் காரணமாய் அணுகத்தக்கவனாகவும் இருந்தான்.

रेखामात्रमपि क्षुण्णात् आ मनोर्वर्त्मनः परम् ।
न व्यतीयुः प्रजास्तस्य नियन्तुर्नेमिवृत्तयः ॥ १७ ॥

**नियन्तुः** - அடக்குபவனான, **तस्य** - அவனுடைய, **नेमिवृत्तयः** - ரதசக்கரத்தின் முனைபோல் செயலையுடைய

**प्रजाः** - பிரஜைகள், **आ मनोः** - மநுமுதற் தொடங்கி, **क्षुण्णात्** - தேய்ந்த, **वर्त्मनः** - மார்க்கத்தைவிட்டு, **परं** - அதிகமாக, **रेखामात्रं अपि** - ஒரு கோடு அளவும், **न व्यतीयुः** - விலகிச் சென்றார்களில்லை.

(க-து) திலீபனுடைய பிரஜைகள் மநுகாலம் முதல் செய்து பழகிய முறையிலேயே வாழ்க்கையை நடத்தினர். வண்டியின் சக்கரம், தேய்ந்த பாதையைவிட்டு விலகாது செல்வதுபோல் முன்னோர்கள் சென்ற முறையிலேயே சென்றனர்.

प्रजानामेव भूत्यर्थं स ताभ्यो बलिमग्रहीत् ।
सहस्रगुणमुत्स्रष्टुम् आदत्ते हि रसं रविः ॥ १८ ॥

**सः** - அவ்வரசன், **प्रजानां** - ஜனங்களின், **भूत्यर्थं एव** - செல்வத்தின் பொருட்டே, **ताभ्यः** - அவர்களிடமிருந்து, **बलिं** - வரியை, **अग्रहीत्** - வாங்கினான்; **रविः** - ஸூர்யன், **सहस्रगुणं** - ஆயிரம் மடங்காக, **उत्स्रष्टुं** - கொடுப்பதற்காக, **रसं** - ஜலத்தை, **आदत्ते हि** - எடுத்துக்கொள்ளுகிறான் அன்றோ!

(க-து) சூரியன் பூமியிலுள்ள நீரை ஆவி வடிவத்தில் எடுத்து, பன்மடங்கு மழையாக அளிக்கின்றான். அதுபோல திலீபனும் ஜனங்களிடம் வரியை வாங்கி அதைப் பன்மடங்காக்கி திரும்பவும் அவர்களுக்கே உதவினான். பிரஜைகளின் நன்மையைக் கருதியே அவர்களிடம் வரியைப் பெற்றான். வரியை வாங்குவதிலும் ஜனங்களுக்குக் கஷ்டம் தோன்றாதபடி சிறிது சிறிதாக வாங்கினான்.

सेना परिच्छदस्तस्य द्वयमेवार्थसाधनम् ।
शास्त्रेष्वव्याहता बुद्धिः मौर्वी धनुषि चातता ॥ १९ ॥

**तस्य** - அவனுக்கு, **सेना** - சேனை, **परिच्छदः** - அணியாக, **(बभूव)** - இருந்தது; **शास्त्रेषु** - சாஸ்திரங்களில், **अव्याहता** - தடைபெறாத, **बुद्धिः** - புத்தி, **धनुषि** - வில்லில், **आतता** - இழுத்துக் கட்டப்பட்ட, **मौर्वी च** - நாண் (என்ற), **द्वयम् एव** - இரண்டுமே, **अर्थसाधनम्** - காரியத்தை சாதிப்பனவாக, **(बभूव)** - இருந்தன.

(க-து) திலீபன் சாஸ்திரங்களில் நல்ல பயிற்சிபெற்ற தனது புத்தி பலத்தினுலும், வில்லின் வலிமையினுலும் காரியங்களைச் சாதித்துக்கொண்டான். சக்தியற்ற மற்ற அரசர்களைப்போல ஸேனைகளை உபயோகிக்கவில்லை. ஆனால் அவனிடம் சேனைகள் இருந்தன. அவைகள் அவனுக்கு குடையும் சாமரமும்போல அணி யாக இருந்தன.

तस्य संवृतमन्त्रस्य गूढाकारेङ्गितस्य च ।
फलानुमेयाः प्रारंभाः संस्काराः प्राक्तना इव ॥ २० ॥

**संवृत-मन्त्रस्य**-நன்கு மறைக்கப்பட்ட மந்திரலோசனையுடையவனும், **गूढ-आकार-इंगितस्य च** - மறைக்கப்பட்ட தோற்றம், செயல் இவைகளையுடையவனுமான, **तस्य** - அவ்வரசனுடைய, **प्रारंभाः** - முயற்சிகள், **प्राक्तनाः** - முன்ஜன்மத்தில் ஏற்பட்ட, **संस्काराः-इव**-பண்புகள்போல, **फलानुमेयाः**-பலனைக் கொண்டு ஊஹிக்கத்தக்கவைகளாக, **(आसन्)** - இருந்தன.

(க-து) அரசன் தனது ஆலோசனையை நன்கு பாதுகாக்க வேண்டும். அவனது முகத் தோற்றமும் செயலும் அவன் மனத்தி லுள்ள கருத்தை வெளிக்காட்டுதல் கூடாது. திலீபனும் தனது ராஜ்ய ரஹஸ்யத்தை நன்கு பாதுகாத்தான். அவன் செய்யும் முயற்சிகள் எல்லாம், செய்யப்படும் காலத்தில் பிறரால் அறிய முடியாது இருந்தன. பயன் கிட்டியபின்பே அம்முயற்சி ஊஹிக்க முடிந்தது.

பூர்வஜன்மத்தில் ஏற்பட்ட அனுபவத்தினல் உண்டான பண்பு ஸம்ஸ்காரம் எனப்படும். இப்பண்பு இந்த ஜன்மத்தில் நினைவில் கொண்டு வர இயலாது. ஆயினும் இச் சன்மத்தில் உண்டான பயனைக்கொண்டு பூர்வஜன்ம ஸம்ஸ்காரத்தை ஊஹிக்க முடியும். அதுபோல் பயனைக்கொண்டே அவனது முயற்சிகள் ஊஹிக்கப்பட்டன. அவனது ராஜ்ய காரியங்கள் சத்ருக்கள் அறியாதபடி அவ்வளவு ரஹஸ்யமாக இருந்தன என்பது கருத்து.

जुगोपात्मानमत्रस्तः भेजे धर्ममनातुरः ।
अगृध्नुराददे सोऽर्थम् असक्तः सुखमन्वभूत् ॥ २१ ॥

**अत्रस्तः** - பயமற்றவனாக, **सन्** - இருந்துகொண்டு **सः** - அவன், **आत्मानं** - தன்னை, **जुगोप** - காத்துக்கொண்டான். **अनातुरः** - வியாதியற்றவனாக, **धर्मं** - தர்மத்தை, **भेजे** - அடைந்தான். **अगृध्नुः** - ஆசையற்றவனாக, **अर्थं** - செல்வத்தை, **आददे** - சம்பாதித்தான். **असक्तः** - பற்றில்லாதவனாக, **सुखं** - ஸுகத்தை, **अन्वभूत्** – அனுபவித்தான்.

(க-து) பயப்படுவதற்குக் காரணமான பொருள் எதுவுமே இல்லாமற் செய்துகொண்டான். உடல் நல்ல நிலையில் இருக்கும் பொழுதே உடலை வருத்தாது தர்மங்களைச் செய்தான்; பொருளைச் சம்பாதித்தான். ஆனால் பேராசை கொள்ளவில்லை. உலகசுகங்களை அனுபவித்தான். ஆனால் அவைகளில் அதிகம் பற்றுடையவனில்லை.

ज्ञाने मौनं क्षमा शक्तौ त्यागे श्लाघाविपर्ययः ।

गुणा गुणानुबन्धित्वात् तस्य सप्रसवा इव ॥ २२ ॥

**ज्ञाने** - (பிறருடைய குற்றத்தின்) அறிவு, **सत्यपि** இருக்கும்பொழுது, **मौनं** - பேசாதிருத்தலும், **शक्तौ** - (பிரதி அபகாரம் செய்யச்) சக்தி, **सत्यां अपि** - இருந்தபொழுதும், **क्षमा** - பொறுமையும், **त्यागे सति** - கொடை இருந்தபொழுதும், **श्लाघा विपर्ययः** - தற்புகழ்ச்சி இல்லாமையும் ஆகிய, **तस्य** - அவனுடைய, **गुणाः** - குணங்கள், **गुणानुबन्धित्वात्** - எதிரான குணங்களுடன் தொடர்ந்திருந்ததால், **सप्रसवाः इव** - ஸஹோதரர்கள்போல், (**आसन्**) - இருந்தன.

(க-து) பிறருடைய குற்றங்களை அறிந்தும் அவன் அவைகளைக் கூறாது இருந்தான். தனக்குத் தீங்கு செய்தவர்களுக்குப் பிரதிசெய்ய வல்லமையிருந்தும் அவன் அவர்களைப் பொறுத்தான். நல்ல கொடைகளைச் செய்தானாயினும் தற்புகழ்ச்சி கொள்ளவில்லை. ஆதலால் அறிவு, பலம் கொடை இவைகளுடன், புறங்கூறாமை பொறுத்தல், தற்புகழ்ச்சி இன்மை என்ற முரண்பட்ட இக்குணங்களும் அவனிடம் ஸஹோதரர்கள்போல் சேர்ந்து இருந்தன.

अनाकृष्टस्य विषयैः विद्यानां पारदृश्वनः ।

तस्य धर्मरतेरासीत् वृद्धत्वं जरसा विना ॥ २३ ॥

**विषयैः** - உலகப்பொருள்களால், **अनाकृष्टस्य** - கவரப்படா தவனும், **विद्यानां** - வித்தைகளின், **पारदृश्वनः** - கரையைக் கண்டவனும், **धर्मरतेः** - தர்மத்தில் பற்றுடையவனுமான, **तस्य** - அவனுக்கு, **जरसा विना** - வயதின் முதிர்ச்சியின்றியே, **वृद्धत्वं** - முதுமை, **आसीत्** - இருந்தது.

(க-து) வயதின் முதிர்ச்சியின்றியே வயது முதிர்ந்தவர்களுக் குரிய அறிவும் அனுபவமும் அவன் பெற்றிருந்தான். உலக விஷயங் களுக்கு வசப்பட்டு அவைகளுக்கு அடிமையாக அவன் இருந்தா னில்லை. கல்விக்கடலின் கரையைக் கண்டிருந்தான். தர்மங்களில் அவனது மனம் பற்றுடையதாயிருந்தது.

प्रजानां विनयाधानात् रक्षणाद् भरणादपि ।
स पिता पितरस्तासां केवलं जन्महेतवः ॥ २४ ॥

**प्रजानां** - ஜனங்களுக்கு, **विनयाधानात्** - விநயத்தை (பண்பை) உண்டாக்குவதாலும், **रक्षणात्** - (அவர்களைக்) காப்பதாலும், **भरणादपि** - போஷிப்பதினாலும், **सः** - அவன், **पिता** - தந்தையாக இருந்தான்; **तासां** - அந்த ஜனங்களின், **पितरः** - தந்தையர், **जन्महेतवः केवलम्** - பிறப்பிற்குக் காரண மாக மாத்திரமே இருந்தனர்.

(க-து) திலீபன் தனது பிரஜைகளுக்கு நல்ல கல்வியை யளித்து அவர்களது மனத்தைப் பண்படுத்தினான்; ஆபத்தினின் றும் காத்தான். உணவு முதலியவைகளை யளித்துப் போஷித்தான். இவ்வாறு ஒரு தந்தை தம் மக்களுக்குச் செய்யவேண்டியதை எல்லாம் திலீபன் தன் ஜனங்களுக்குச் செய்தான். அதனால் அவன் அவர் களுக்குத் தந்தையாக இருந்தான் என்று கூறலாம். ஜனங்களின் தாய்களும் தந்தையரும் அவர்களைப் பெற்றனரேயன்றி அவர்களுக்கு ஆகவேண்டியதை எல்லாம் திலீபன் செய்துவந்தான்.

स्थित्यै दण्डयतो दण्ड्यान् परिणेतुः प्रसूतये ।
अप्यर्थकामौ तस्यास्तां धर्म एव मनीषिणः ॥ २५ ॥

**स्थित्यै** - நற் நிலைக்காக, **दण्ड्यान्** - தண்டிக்கத்தக்கவர்களை, **दण्डयतः** - தண்டிப்பவனும், **प्रसूतये** - ஸந்ததியின்பொருட்டு,

**परिणेतुः** - விவாஹம் செய்துகொண்டவனும், **मनीषिणः** - அறிவுடையவனுமான, **तस्य** - அவனுடைய, **अर्थकामौ अपि**- அர்த்தம், காமம் என்ற இரு புருஷார்த்தங்களும் கூட, **धर्मः एव** - தர்மமாக, **आस्ताम्** - இருந்தன.

(க-து) மனிதர்கள் தாம்பெற விரும்புகின்றவைகளை நான்கு வகையாகப் பிரித்திருக்கின்றனர். அவைபாவன: தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்பனவாம். இவைகளில் தர்மமும் மோக்ஷமும் சிறந்தன.

திலீபன் குற்றவாளிகளுக்கு அபராதம் விதித்துப் பணம் பெற்றான். மனைவியுடன் இல்லத்தில் வாழ்ந்து வந்தான். அபராதத்தின் மூலம் பணம்பெற்றது அர்த்தம் என்பதாகும். மனைவியுடன் வாழ்ந்தது காமம் என்ற புருஷார்த்தமாகும். ஆயினும் இவ்விரண்டும் அவனால் தர்மத்தைக்கருதியே அனுஷ்டிக்கப்பட்டனவாதலால் அவைகளும் தர்மமாகவே கருதப்படவேண்டுவன.

दुदोह गां स यज्ञाय सस्याय मघवा दिवम् ।
संपद्विनिमयेनेभौ दधतुर्भुवनद्वयम् ॥ २६ ॥

**सः** - அவன், **यज्ञाय** - யாகம் செய்வதற்காக **गां** - பூமியை, **दुदोह** - கறந்தான்; **मघवा** - இந்திரன், **सस्याय** - பயிர்களின் நன்மையின் பொருட்டு, **दिवं** - ஸ்வர்க்கத்தை, **दुदोह** - கறந்தான்: **उभौ** - இவ்விருவரும், **संपद् विनिमयेन** - தங்களது செல்வத்தை மாற்றிக்கொள்வதால், **भुवनद्वयं** - இரு உலகங்களையும், **दधतुः** - காப்பாற்றினர்.

(க-து) திலீபன் யாகம் செய்வதற்காக பூமியினிடமிருந்து பொருள்களைப்பெற்று, யாகம் செய்து இந்திரன் முதலான தேவர்களை மகிழ்வித்தான். இந்திரன், திலீபன் ராஜ்யத்தில் பயிர்களின் விருத்தியைக்கருதி நல்லமழை பெய்வித்தான். இந்திரனும் திலீபனும் ஒருவர்க்கொருவர் உதவிசெய்து பூமியையும் ஸ்வர்க்கத்தையும் காப்பாற்றினர்.

न किलानुययुस्तस्य राजानो रक्षितुर्यशः ।
व्यावृत्ता यत् परस्वेभ्यः श्रुतौ तस्करता स्थिता ॥ २७ ॥

**राजानः** - மற்ற அரசர்கள், **रक्षितुः** - ஆபத்தினின்றும் காப்பவனாகிய, **तस्य**-அவனுடைய, **यशः** - புகழை, **न अनुययुः किल**-அனுசரிக்க முடியவில்லை; **यत्** -ஏனெனில், **तस्करता** - திருட்டு என்பது, **परस्वेभ्यः** - பிறருடைய செல்வத்தினின்றும், **व्यावृत्ता** - நீங்கியதாய், **श्रुतौ** - சொல்லில் மாத்திரமே, **स्थिता** - இருந்தது.

(க-து) திலீபன் ராஜ்யத்தில் திருட்டு என்பது சொல்லளவிலேதான் இருந்தது. காரியத்தில் இல்லை. பிறருடைய பொருள் விஷயத்தில் அது சொல்லவில்லை. அவனுடைய ராஜ்யத்தில் திருடனே இல்லை. அதனால் மற்ற அரசர்கள் திலீபனைப்போல் நற்புகழைப்பெற முடியவில்லை.

द्वेष्योऽपि संमतः शिष्टः तस्यार्तस्य यथौषधम् ।
त्याज्यो दुष्टः प्रियोऽप्यासीत् अंगुलीवोरगक्षता ॥ २८ ॥

**शिष्टः** - நல்ல மனிதன், **द्वेष्यः अपि**-திலீபனுக்குப் பகைவனாயினும், **आर्तस्य**-வியாதியஸ்தனுக்கு, **औषधं यथा**-மருந்து (இருப்பது) போல், **तस्य** - அவனுக்கு. **संमतः** பிரியமானவனாக- **आसीत्** - இருந்தான்; **दुष्टः** - துஷ்டன், **प्रियोऽपि**-அன்பனாயினும், **उरगक्षता** - பாம்பினால் கடிக்கப்பட்ட, **अंगुली इव**-விரல்போல், **त्याज्यः** - விடத்தக்கவனாக, **आसीत्** - இருந்தான்.

(க-து) திலீபன், தனது பகைவனாயினும்—நல்லவனாயிருப்பின்—வியாதிஸ்தன் மருந்தை விரும்புவதுபோல் அவனிடம் விருப்புக்கொண்டான். துஷ்டன் — தனக்கு அன்பனாயினும் — பாம்பு கடித்த விரலை வெட்டி எறிவதுபோல் அவனிடம் வெறுப்புக்கொண்டு விலக்கினான்.

तं वेधा विदधे नूनं महाभूतसमाधिना ।
तथाहि सर्वे तस्यासन् परार्थैकफला गुणाः ॥ २९ ॥

**वेधाः** - பிரம்மன், **तं** - அவனை, **महाभूतसमाधिना** - ஐந்து மஹாபூதங்களென்ற மூலப்பொருளால், **विदधे** - படைத்தான்; **नूनम्** - இஃது உண்மையே; **तथा हि**-எவ்வாறெனில்,

**तस्य** - அவனுடைய, **सर्वे गुणाः** - எல்லா குணங்களும், **परार्थैकफलाः** - பிறருடைய நன்மையைப் பயனுயுடையன வாக, **आसन्** - இருந்தன.

(க-து) ஐந்து மஹாபூதங்களாவன :—நிலம், நீர், அக்னி, காற்று, ஆகாயம் என்பனவாம். இவ்வைந்து பொருள்களான மூலப் பொருளைக்கொண்டே பிரம்மன் திலீபனைப் படைத்தான்போலும்; இவ்வாறு ஊஹிப்பதற்குக் காரணம் யாதெனில் ஐந்து மஹாபூதங் களின் குணங்களான நிறம் மணம் முதலியவை பிறர்க்குப் பயன்படு வதுபோல் இவனது குணங்களான பலம் அறிவு இரக்கம் முதலிய வைகளும் பிறர்க்கு உபகாரம் செய்யவே இருந்தன. பஞ்சபூதங் களைப்போல் அவனும் பிறர்க்கே பயன்பட்டான்.

स वेलावप्रवलयां परिखीकृतसागराम् ।
अनन्यशासनामुर्वीं शशासैकपुरीमिव ॥ २० ॥

**सः** - அவன், **वेला-वप्र-वलयां** - கடற்கரையையே கோட் டைச்சுவராக உடையதும், **परिखीकृत सागराम्** - அகழாக அமைந்த கடலையுடையதும், **अनन्यशासनां** - வேற்று அரசன் ஆணையற்றதுமான, **उर्वीम्** - அப்பூமியை, **एकपुरीं इव** - ஒரு நகரத்தை (ஆள்வது) போல, **शशास** - ஆண்டான்.

(க-து) திலீபன் கடல்வரை நீண்ட இப்பூமியை ஆண்டான். அவனுடைய ராஜ்யத்திற்குக் கடற்கரையே கோட்டைச் சுவராகவும், கடலே அகழாகவும் இருந்தன. அவனது ஆணைக்கு எதிர் ஆணை அந்த ராஜ்யத்தில் இல்லை. மற்றை அரசர்கள் அவனுக்குக் கீழ்ப்பட்ட சிற்றரசர்களாக இருந்தனர். சிறு நகரத்தை ஆள்வதுபோல் அப் பெரும் ராஜ்யத்தைச் சிரமமின்றி ஆண்டான்.

तस्य दाक्षिण्यरूढेन नाम्ना मगधवंशजा ।
पत्नी सुदक्षिणेत्यासीत् अध्वरस्येव दक्षिणा ॥ २१ ॥

**तस्य** - அவனுக்கு, **मगधवंशजा** - மகதவம்சத்தில் தோன் றியவளும், **दाक्षिण्य रूढेन** - தாக்ஷிண்யத்தினால் பிறந்த, **नाम्ना**-

பெயரோடு, **अध्वरस्य** - யாகத்திற்கு, **दक्षिणा-इव** - தக்ஷிணை என்ற மனைவிபோல், **सुदक्षिणा इति** - ஸுதக்ஷிணை என்று பிரசித்திபெற்ற, **पत्नी** - மனைவி, **आसीत्** - இருந்தாள்.

(க-து) திலீபனுக்கு ஸுதக்ஷிணை என்ற மனைவி யிருந்தாள். அவள் மகதராஜன் வம்சத்தில் பிறந்தவள். தாக்ஷிண்யம் என்ற குண முடையளாயிருந்ததால் அவளுக்கு ஸுதக்ஷிணை எனப் பெயர் ஏற்பட்டது,

பிறர் விருப்பத்தை அனுசரித்தலுக்குத் தாக்ஷிண்யம் எனப் பெயர்; யாகத்திற்குத் தக்ஷிணையை மனைவியாகக் கூறுவது வழக்கம்.

कलत्रवन्तमात्मानं अवरोधे महत्यपि ।

तया मेने मनस्विन्या लक्ष्म्या च वसुधाधिपः ॥ ३२ ॥

**वसुधाधिपः** - அவ்வரசன், **अवरोधे** - அந்தப்புர ஸ்திரீ கள், **महत्यपि** - பலர் இருந்தபொழுதிலும், **मनस्विन्या** - நல்ல மனமுடைய, **तया** - அவளாலும், **लक्ष्म्या च** - ராஜ்யத்தி னாலுமே, **आत्मानं** - தன்னை, **कलत्रवन्तं** - மனைவிகளுடன் கூடி யவனாக, **मेने** - எண்ணினான்.

(க-து) திலீபனுக்குப் பல மனைவியர் இருந்தனர்; ஆயினும் ஸுதக்ஷிணையையும் ராஜ்யத்தையுமே அவன் அதிகம் மதித்தான்.

ராஜ்யத்தை அரசர்களது மனைவியாகக் கூறுவது மரபு.

तस्यामात्मानुरूपायां आत्मजन्मसमुत्सुकः ।

विलम्बितफलैः कालं स निनाय मनोरथैः ॥ ३३ ॥

**सः** - அவன், **आत्मानुरूपायां** - தனக்குத் தகுந்த, **तस्यां** - அவளிடத்தில், **आत्मजन्मसमुत्सुकः** - புத்திரனை அடைவதில் விருப்புடையவனாக, **विलंबित फलैः** - தாமதித்த பயனை உடைய, **मनोरथैः** - ஆசைகளுடன், **कालं** - காலத்தை **निनाय**- போக்கினான்.

(க-து) திலீபன், எல்லாவகையிலும் தகுந்த ஸுதக்ஷிணை யிடத்தில் தனக்கொரு புத்ரன் பிறக்கவேண்டுமென விரும்பினான்.

ஆனால் அவனது ஆசை நிறைவேறாது காலம் சென்று கொண்டிருந்தது.

सन्तानार्थाय विधये स्वभुजादवतारिता ।
तेन धूर्जगतो गुर्वी सचिवेषु निचिक्षिपे ॥ ३४ ॥

**तेन** - அவ்வாறல், **सन्तानार्थाय** - புத்திரனை அடைவதற்கான, **विधये** - நற்காரியத்தைச் செய்வதன் பொருட்டு, **स्वभुजात्** - தனது தோளிலிருந்து, **अवतारिता** - இறக்கப்பட்ட, **जगतः** - உலகின், **गुर्वी** - பெரிய, **धूः** - பாரமானது, **सचिवेषु** - மந்திரிகளிடத்தில், **निचिक्षिपे** - வைக்கப்பட்டது.

(க-து) திலீபன், புத்திரனை அடையக்கருதி அதற்கான விரதம் முதலியவைகளை அனுஷ்டிக்க விரும்பியவனாய், ராஜ்யத்தைப் பாது காக்கும் பொறுப்பை மந்திரிகளிடம் ஒப்படைத்தான்.

अथाभ्यर्च्य विधातारं प्रयतौ पुत्रकाम्यया ।
तौ दम्पती वसिष्ठस्य गुरोर्जग्मतुराश्रमम् ॥ ३५ ॥

**अथ** - பிறகு, **पुत्रकाम्यया** - புத்ரனை அடைய விருப்பத்தினால், **तौ दंपती** - அந்த தம்பதிகள், **प्रयतौ** - பரிசுத்தர்களாக, **विधातारं** - பிரம்மதேவரை, **अभ्यर्च्य** - பூஜித்தபின், **गुरोः** - குலகுருவான, **वसिष्ठस्य** - வஸிஷ்டரின், **आश्रमं** - ஆச்ரமத்திற்கு, **जग्मतुः** - சென்றனர்.

(க-து) திலீபனும் ஸுதக்ஷிணையும் பிரம்மதேவரைப் பூஜித்த பின், புத்ரன் பிறவாததன் காரணத்தையும் அதற்காகச் செய்யவேண்டிய பரிகாரத்தையும் அறியக்கருதி, குலகுருவான வஸிஷ்டரின் ஆச்ரமம் சென்றனர்.

இதுமுதல் 45-வது சுலோகம்வரை அத்தம்பதிகள் ஆச்ரமம் சென்றமை கூறப்படுகின்றது.

स्निग्ध-गंभीर-निर्घोषं एकं स्यन्दनमास्थितौ ।
प्रावृषेण्यं पयोवाहं विद्युदैरावताविव ॥ ३६ ॥

**स्निग्ध-गंभीर-निर्घोषं** - இனிய கம்பீரமான ஓசையுடைய, **एकं** - ஒரு, **रथं** - ரதத்தில், **आस्थितौ** - அமர்ந்தவர்களாய்,— **प्रावृषेण्यं** - மழைக்காலத்திலிருந்த, **पयोवाहं** - மேகத்தில், **आस्थितौ** - அமர்ந்த, **विद्युदैरावतौ-इव** - மின்னலும் ஐராவத மும்போல், (**जग्मतुः**) - சென்றனர்.

(க-து) திலீபனும் ஸுதக்ஷிணையும் ஒரே ரதத்தில் அமர்ந்து சென்றனர். பாற்கடற் கடைந்தபொழுது அதில் தோன்றியது ஐராவதம். ஐராவதத்தின் மனைவியாக மின்னல் கருதப்படுகின்றது. திலீபன் தன் மனைவியுடன் ஒரே ரதத்தில் சென்றதற்கு ஒப்பாக, ஐராவதம் அதன் மனைவியான மின்னலுடன் ஒரே மேகத்தில் செல்வது கூறப்படுகிறது. மழைக்காலமேகம் இனிய கம்பீரமான சத்த முடையது. அதுபோல் திலீபனுடைய ரதமும் இனிய கம்பீரமான ஓசையுடன் சென்றது. பெருந்தன்மையுடன் கூடிய தோற்றத்தில் திலீபனுக்கு ஐராவதமும், அழகில் ஸுதக்ஷிணைக்கு மின்னலும் உப மானங்கள். ஐராவதம்-வானவில்-என்பாருமுண்டு.

मा भूदाश्रमपीडेति परिमेयपुरस्सरौ ।

अनुभावविशेषात् तु सेना परिवृताविव ॥ ३७ ॥

'**आश्रमपीडा** - (குருவின்) ஆச்ரமத்திற்கு உபத்ரவம், **मा भूत्** - உண்டாகவேண்டாம்,' **इति** - என்ற காரணத்தி ஞல், **परिमेयपुरस्सरौ** - குறைவான வேலைக்காரர்களையுடைய வர்களாகவும், **अनुभाव विशेषात् तु** - தோற்றச்சிறப்பினால், **सेना परिवृतौ इव** - ஸேனையால் சூழப்பட்டவர்கள்போல, **स्थितौ** - இருந்தவர்களாகவும், (**जग्मतुः**) - சென்றனர்.

(க-து) ஸேனையுடன் சென்றால் குருவின் ஆச்ரமத்திற்குக்கஷ்டம் உண்டாகும் என எண்ணி மிகக் குறைவான வேலைக்காரர்களுடன் சென்றான். ஆயினும் அவனுடைய சிறந்தத் தோற்றம் காரணமாக அவன் பெரும்படையுடன் கூடியவன்போல் காணப்பட்டான்.

सेव्यमानौ सुखस्पर्शैः सालनिर्यासगन्धिभिः ।

पुष्परेणूत्किरैर्वातैः आधूतवनराजिभिः ॥ ३८ ॥

**सुखस्पर्शैः** - சுகமான ஸ்பர்சமுடையவைகளும், **साल-निर्यासगन्धिभिः** - ஸாலமரப்பிசினுடைய வாசனை யுடையவை

இச்சுலோகத்தில் திக்பாலகர்களில் ஒருவனாகிய அக்னி தேவனுடன் திலீபன் ஒப்பிடப்பட்டிருக்கிறான்.

धनुर्भृतोऽप्यस्य दयार्द्रभावम् आख्यातमन्तःकरणैर्विशङ्कैः ।
विलोकयन्त्यो वपुरापुरक्ष्णां प्रकामविस्तारफलं हरिण्यः ॥ ११ ॥

**हरिण्यः**-பெண்மான்கள், **विशङ्कैः**-பயமற்ற, **अन्तः करणैः**-(தங்களுடைய) மனங்களால், **दयार्द्रभावं** - தயையால் குளிர்ந்த ஸ்வபாவமுடையதாக, **आख्यातं** - தெரிவிக்கப் பட்ட, **धनुर्भृतः अपि** - வில்லைத் தரித்தவனாயினும், **अस्य** - அவ்வரசனுடைய, **वपुः** - சரீரத்தை, **विलोकयन्त्यः** - பார்த்து, **अक्ष्णां** - கண்களுடைய, **प्रकामविस्तारफलं** - மிகவும் அகன்று இருப்பதன் பயனை, **आपुः** - அடைந்தன,

(க-து) வில்லைக் கையிலேந்தி அவ்வரசன் காட்டில் சென்ற பொழுது, வில் காரணமாக அவனிடம் அஞ்சவேண்டிய மான்களும் அஞ்சாது அவனருகில் நின்று, அவனது சாந்தமான வடிவத்தைக் கண்டு, விசாலமான கண்படைத்ததின் பயனைப்பெற்றன. மான்களின் பயமற்ற மனமே அவைகளுக்கு, அவ்வரசன் அசசத்தை உண்டாக்கும் வில்லுடையவனாயினும மிக்கத் தயை யுடையவன் என்பதையும் அறிவித்தது.

கண் பெற்றதன் பயன் நல்ல வடிவத்தைக் காண்பதே யாம். மான்கள், அரசனது வடிவைக் கண்டதால், அகன்ற கண் படைத்ததின் பயனை 'அடைந்தன. அரசன் நகர வீதியில் செல்லும்பொழுது மக்கள் இருபுறத்திலும் நின்று அன்புடன் நோக்குவர். அதுபோல் வனத்தில் பெண் மான்கள் இருமருங்கிலும் நின்று அரசனைப் பார்த்தன.

स कीचकैर्मारुतपूर्णरन्ध्रैः कूजद्भिरापादितवंशकृत्यम् ।
शुश्राव कुञ्जेषु यशः स्वमुच्चैः उद्गीयमानं वनदेवताभिः ॥ १२ ॥

**सः** - அவன், **मारुतपूर्णरन्ध्रैः** - காற்றினால் நிரம்பிய த்வாரங்களை யுடையவைகளும், **कूजद्भिः** - ஒலிப்பவைகளு

மான, कीचकैः - மூங்கில்களினால், आपादित वंश कृत्यम् - செய்யப்பட்ட புல்லாங்குழலின் செயலையுடையதும், कुञ्जेषु - புதர்களில், वनदेवताभिः - வனதேவதைகளால், उच्चैः - உரக்க, उद्गीयमानं - பாடப்படுகின்றதுமான, स्वं यशः - தனது புகழை, शुश्राव - கேட்டான்.

(க-து) திலீபன் காட்டிலுண்டான இனிய ஓசைகளைக் கேட்டுக்கொண்டு சென்றான்.

காட்டில் புதர்களிலும் செடிகளிலும் காற்று வீசும் பொழுது இயற்கையாகவே ஓசை உண்டாகும். அவ்வோசையை, வனதேவதைகளால் பாடப்படுகின்ற, திலீபனுடைய புகழ் ஒலியாகக் கவி உத்ப்ரேக்ஷிக்கின்றார்: இயற்கையிலே அமைந்த செய்கைகளில் கவிகள் தங்களது கருத்தை ஏற்றிக் கூறுவது உத்ப்ரேக்ஷையாகும். சுருதியற்ற பாட்டு இனிக்காததால் மூங்கிலின் ஓசை வனதேவதைகளின் பாட்டுக்கு சுருதியாயிருந்தது.

சமீப காலம்வரைகூடப் புல்லாங்குழல் சுருதி வாத்யமாகவும் இருந்தது என அறிந்தவர் கூறுகின்றனர்.

पृक्तस्तुषारैर्गिरिनिर्झराणाम् अनोकहाकम्पितपुष्पगन्धी ।
तमातपक्लान्तमनातपत्रम् आचारपूतं पवनः सिषेवे ॥ १२ ॥

गिरिनिर्झराणां - மலையருவிகளின், तुषारैः - ஜலத்துளிகளோடு, पृक्तः - சேர்ந்ததும், अनोकहा कंपित पुष्पगन्धी - மரங்களுடைய, சிறிதே அசைக்கப்பட்ட, புஷ்பங்களின் வாசனையுடையதுமான, पवनः - காற்று, अनातपत्रम् - குடையற்றவனும், आतपक्लान्तं - வெய்யிலினால் சிரமமடைந்தவனும், आचारपूतं - விரதத்தினால் பரிசுத்தனுமான, तं - அவ்வரசனை, सिषेवे - (ஸேவித்தது) உபசரித்தது.

(க-து) மணமுள்ள குளிர்ந்த காற்று அவன்மேல் வீசியது.

ஸுகமான காற்றுக்கு வேண்டிய மூன்று தன்மைகளும் அதற்கு இருந்தன. மலையருவியின் நீர்த்துளிகளால் குளிர்ந்ததாகவும், மரங்களிடையில் புகுந்து வந்ததால் மெதுவாகவும், புஷ்பங்களின் பரிமள முடையதாகவும் இருந்தது. அத்தகைய காற்று அரசன் மேல் வீசிக் களைப்பைப் போக்கியது.

शशाम वृष्ट्यापि विना दवाग्निः आसीद्विशेषा फलपुष्पवृद्धिः ।
ऊनं न सत्त्वेष्वधिको बबाधे तस्मिन् वनं गोप्तरि गाहमाने ॥१४॥

**गोप्तरि** - ரக்ஷகனுகிய, **तस्मिन्** - அவ்வரசன், **वनं** - அக்காட்டில், **गाहमाने सति** - புகும்பொழுது, **वृष्ट्या विना-अपि** - மழையின்றியே, **दवाग्निः** - காட்டுத்தீ, **शशाम** - அணைந்தது; **फलपुष्पवृद्धिः** - பழம், புஷ்பம் இவைகளின் விருத்தி, **विशेषा** - அதிகமாக, **आसीत्** - ஆயிற்று, **सत्त्वेषु** - பிராணிகளில், **अधिकः** - பலமுடையது, **ऊनं** - பலம் குறைந்ததை, **न बबाधे** - பாதிக்கவில்லை.

(க-து) திலீபன் காட்டில் புகுந்ததும் அங்கு இருந்த நிலையைப் பற்றிக் கூறுவது இச்சுலோகம்.

காட்டில் தீ யுண்டாகுமானல் மழைதான் அணைக்க முடியும். திலீபன் காடு சென்றபொழுது காட்டுத் தீ மழையின்றியே அணைந்தது. பழம், புஷ்பம் இவைகள் விசேஷமாக விருத்தியடைந்தன. பலமுள்ள பிராணிகள், பலம் குறைந்த பிராணிகளைத் துன்புறுத்தவில்லை.

இவ்வாறு, இயற்கையும் பணிந்து இருக்கும்படியான பெருமையுடையவன் திலீபன் என்பது இதனுல் பெறப்படுகின்றது.

सञ्चारपूतानि दिगन्तराणि कृत्वा दिनान्ते निलयाय गन्तुम् ।
प्रचक्रमे पल्लवरागताम्रा प्रभा पतङ्गस्य मुनेश्च धेनुः ॥ १५ ॥

**पल्लवरागताम्रा** - தளிரின் நிறம்போல் சிவந்த, **पतङ्गस्य** - ஸூர்யனுடைய, **प्रभा** - காந்தி, **दिगन्तराणि** - திசைகளிலுள்ள பிரதேசங்களை, **सञ्चारपूतानि** - ஸஞ்சாரத்தினால் பரிசுத்த மானவைகளாக, **कृत्वा** - செய்துவிட்டு, **दिनान्ते** - ஸாயங் காலத்தில், **निलयाय** - அஸ்தமயத்திற்கு, **गन्तुं** - செல்ல, **प्रचक्रमे** - ஆரம்பித்தது; **पल्लवरागताम्रा** - தளிரின் நிறம்போல் சிவந்த, **मुनेः** - முனிவருடைய, **धेनुश्च** - பசுவும், **दिगन्तराणि**- திக்பிரதேசங்களை, **सञ्चारपूतानि** - ஸஞ்சாரத்தினால் பரிசுத்த மானவைகளாக, **कृत्वा** - செய்துவிட்டு, **दिनान्ते** - ஸாயங் காலத்தில், **निलयाय** - இருப்பிடத்திற்கு, **गन्तुं** - செல்ல, **प्रचक्रमे** - ஆரம்பித்தது.

(க-து) பகல் முழுவதும் எங்கும் பரவி உலகத்தைத் தூயதாகச் செய்கின்ற சூரியனுடைய ஒளி, ஸாயங்காலத்தில் துளிர்போல் சிவந்த நிறமுடையதாய் அஸ்தமயத்தை நோக்கியது. ஸூரியன் அஸ்தமிக்க ஆரம்பித்தபொழுது, துளிர்போல் சிவந்த வர்ணமுடைய நந்தினியும் தனது ஸஞ்சாரத்தினால் பல இடங்களையும் பரிசுத்த மாகச் செய்தபின் ஆச்ரமம் நோக்கித் திரும்பியது.

பசு ஸஞ்சரித்த இடத்தை தூயதாகக் கொள்வர். தூயதாகச் செய்யவேண்டிய இடத்தில் பசுவை நடக்கச் செய்வதும் உண்டு. தூய்மை அளிக்கும் விஷயத்தில் பசு விற்கு உபமானமாக சூரிய ஒளி கூறப்படுகின்றது.

ஸாயங்காலமானவுடன் பசு ஆச்ரமம் நோக்கிப் புறப் பட்டது என்பது கருத்து.

तां देवतापित्रतिथिक्रियार्थाम् अन्वग्ययौ मध्यमलोकपालः ।
बभौ च सा तेन सतां मतेन श्रद्धेव साक्षाद्विधिनोपपन्ना ॥ १६ ॥

**मध्यमलोकपालः** - திலீபன், **देवतापित्रतिथिक्रियार्थाम्** - தேவதை, பித்ருக்கள், அதிதி இவர்களின் காரியத்தைப் பயனாக உடைய, **तां** - அப்பசுவை, **अन्वक्** - பின்தொடர்ந்து,

**ययौ** - சென்றான். **सतां** - ஸாதுக்களால், **मतेन** - மதிக்கப் படுகின்ற, **तेन** - அவ்வரசனுடன், **उपपन्ना** - கூடிய, **सा च** - அப்பசுவும், **विधिना**- அனுஷ்டானத்துடன், **उपपन्ना**-கூடிய, **साक्षात्** - கண்களுக்குப் புலனாகின்ற, **श्रद्धा इव** - நம்பிக்கை போல, **बभौ** - விளங்கிற்று.

(க-து) திலீபன் நந்தினியைப் பின்தொடர்ந்து திரும்பினான்.

ஸ்வர்க்கத்திற்கும் பாதாளத்திற்கும் இடையில் இருப்பதால், பூமி மத்யமலோகம்; அதற்குப் பாலகன் திலீபன்.

நந்தினியை வஸிஷ்டர் தன் நலன் கருதிப் பாதுகாத்துவரவில்லை. தேவபூஜை, பித்ருக்களுக்கான காரியங்கள், அதிதி உபசாரம் இவைகளுக்கான பொருளைத் தருவதற்காகவே உள்ளது நந்தினி; பரோபகாரத்திற்காகவே உள்ள நந்தினியைப் பின்தொடர்ந்து சென்றான் திலீபன்.

சாஸ்திரங்களில் கூறப்பட்டவைகளை நம்புதல் சிரத்தை எனப்படும். சிரத்தை யிருப்பின் அனுஷ்டானமும் ஏற்படும். சிரத்தையும் அனுஷ்டானமும் ஒன்றை விட்டு ஒன்று நீங்காதவை. அவைபோல நந்தினியைவிட்டு நீங்காது திலீபன் இருந்தான். நந்தினிக்கு ச்ரத்தையும் திலீபனுக்கு அனுஷ்டானமும் உபமானங்கள்.

स पल्वलोत्तीर्णवराहयूथानि आवासवृक्षोन्मुखबर्हिणानि ।
ययौ मृगाध्यासितशाद्वलानि श्यामायमानानि वनानि पश्यन् ॥१७॥

**सः** - அவ்வரசன், **पल्वलोत्तीर्ण - वराह-यूथानि** - குட்டைகளிலிருந்து எழுந்த பன்றிக் கூட்டங்களை யுடையவையும், **आवास-वृक्षोन्मुख-बर्हिणानि** - வாழும் மரங்களை நோக்கிய மயில்களை யுடையவைகளும், **मृगाध्यासित-शाद्वलानि** - மான்களால் அமரப்பட்ட புல் தரைகளை யுடையவைகளும்,

**श्यामायमानानि** - கறுத்துக் கொண்டிருப்பவைகளுமான, **वनानि**-காடுகளை, **पश्यन्**-பார்த்துக்கொண்டு, **ययौ**-சென்றான்.

(க-து) அரசன் இருட்டினால் கறுக்கின்ற காட்டைப் பார்த்துக் கொண்டு சென்றான்.

பொழுதமரும் நேரமாதலால், பகற்பொழுதில் குட்டைகளில் அமிழ்ந்திருந்த பன்றிகள் கூட்டம் கூட்டமாக எழுந்து சென்றன. மயில்கள் இரவு வந்ததைக்கருதி வாழும் மரங்களை நோக்கிப் பறந்தன. பகல் முழுவதும் மேய்ந்த மான்கள் இரவு வந்ததும் புல் தரைகளில் படுத்தன.

आपीनभारोद्वहनप्रयत्नाद् गृष्टिर्गुरुत्वाद्वपुषो नरेन्द्रः ।
उभावलंचक्रतुरञ्चिताभ्यां तपोवनावृत्तिपथं गताभ्याम् ॥ १८ ॥

**आपीन-भारोद्वहन-प्रयत्नात्** - மடியின் பாரத்தைத் தூக்குவதின் முயற்சியால், **गृष्टिः** - அப்பசு, **वपुषः** - சரீரத்தின், **गुरुत्वात्** - கனத்தினால், **नरेन्द्रः** - அரசன் ஆக, **उभौ** - அவ்விருவரும், **अञ्चिताभ्यां** - அழகிய, **गताभ्यां** - நடைகளால், **तपोवनावृत्तिपथं** - தபோவனம் திரும்பும் வழியை, **अलञ्चक्रतुः**- அழகுபெறச் செய்தனர்.

(க-து) திலீபனும் நந்தினியும் அழகிய மெதுவான நடையால் தபோவன மார்க்கத்தையே அழகு பெறச் செய்தனர்.

மடியின் கனத்தால் பசு மெதுவாக நடந்தது. திலீபன் அவனது உடலின் கனம் காரணமாக மெதுவாக நடந்து சென்றான்.

वसिष्ठधेनोरनुयायिनं तमावर्तमानं वनिता वनान्तात् ।
पपौ निमेषालसपक्ष्मपङ्क्तिरुपोषिताभ्यामिव लोचनाभ्याम् ॥ १९ ॥

**वसिष्ठधेनोः** - வஸிஷ்டருடைய பசுவை, **अनुयायिनं** - பின் தொடர்பவனும், **वनान्तात्** - காட்டிலிருந்து, **आवर्तमानं**-

திரும்புகின்றவனுமான, तं - அவனை, वनिता - ஸுதக்ஷிணை, निमेषालस-पक्ष्मपङ्क्तिः - இமைத்தலற்ற இமைகளையுடையவளாய், उपोषिताभ्यां इव - உபவாசம் செய்தவைகள் போன்ற, लोचनाभ्यां - இருகண்களாலும், पपौ - (பானம் செய்தாள்) கண்டாள்.

(க-து) ஸுதக்ஷிணை திலீபனை அன்பினால் கண்ணிமைக்காது கண்டாள்.

உபவாசமிருந்தவன் ஆவலுடன் உணவை உண்பதுபோல், பகல் முழுவதும் திலீபனைப் பாராததால் ஸுதக்ஷிணை, தன் கண்களால் திலீபனை ஆவலுடன் நோக்கினாள். ஆவலுடன் பார்த்தலைக் கண்களால் பருகுவதாகக் கூறுவது வழக்கம்.

पुरस्कृता वर्त्मनि पार्थिवेन प्रत्युद्गता पार्थिवधर्मपत्न्या ।
तदन्तरे सा विरराज धेनुः दिनक्षपामध्यगतेव सन्ध्या ॥ २० ॥

वर्त्मनि - வழியில், पार्थिवेन - அரசனால், पुरस्कृता - முன்னிருக்கும்படி செய்யப்பட்டதும், पार्थिव धर्मपत्न्या - அரசனுடைய தர்ம பத்னியால், प्रत्युद्गता - எதிர்சென்று வரவேற்கப்பட்டதுமான, सा - அந்த, धेनुः - பசு, तदन्तरे - அவ்விருவர்களினிடையில், दिनक्षपा मध्यगता - பகல், இரவு இவைகளின் மத்தியையடைந்த, सन्ध्या इव - ஸந்த்யா காலம்போல், विरराज - விளங்கிற்று.

(க-து) திலீபனுக்கு முன்னால் பசு சென்று கொண்டிருந்தது. ஆச்ரமத்தின் எல்லையருகில் வந்து ஸுதக்ஷிணை அப்பசுவை வரவேற்றாள். இவ்வாறு ஸுதக்ஷிணைக்கும் திலீபனுக்குமிடையிலுள்ள அப்பசு, பகலிற்கும் இரவிற்கும் இடையிலுள்ள ஸந்தியாகாலம் போல் இருந்தது.

திலீபனுக்குப் பகலும், ஸுதக்ஷிணைக்கு இரவும், நந்தினிக்கு ஸந்தியாகாலமும் உபமானங்கள்.

प्रदक्षिणीकृत्य पयस्विनीं तां सुदक्षिणा साक्षतपात्रहस्ता ।
प्रणम्य चानर्च विशालमस्याः शृङ्गान्तरं द्वारमिवार्थसिद्धेः ॥२१॥

**साक्षतपात्रहस्ता** - அக்ஷதைகளோடு கூடிய பாத்திரத்தைக் கையிலுடைய, **सुदक्षिणा** - ஸுதக்ஷிணை, **पयस्विनीं** - சிறந்த பாலையுடைய, **तां** - அப்பசுவை, **प्रदक्षिणीकृत्य** - வலம் வந்தும், **प्रणम्य** - நமஸ்கரித்தும், **अस्याः** - நந்தினியின், **विशालं** - விசாலமான, **शृङ्गान्तरं** - கொம்புகளின் மத்ய பாகத்தை, **अर्थसिद्धेः** - கார்யஸித்தியின், **द्वारं इव** - வாசற்படியைப்போல, **आनर्च** - பூஜித்தாள்.

(க-து) ஸுதக்ஷிணை, நந்தினியை வலம் வந்து வணங்கி, அக்ஷதைகளால் அதனுடைய இரண்டு கொம்புகளுக்குமிடையிலுள்ள பாகத்தில் பூஜித்தாள்.

वत्सोत्सुकापि स्तिमिता सपर्याम् प्रत्यग्रहीत् सेति ननन्दतुस्तौ ।
भक्त्योपपन्नेषु हि तद्विधानां प्रसादचिह्नानि पुरःफलानि ॥ २२ ॥

**सा** - அப்பசு, **वत्सोत्सुकापि** - கன்றினிடம் ஆவலுடையதாயினும், **स्तिमिता** - அசைவற்றதாக, **सपर्यां** - பூஜையை, **प्रत्यग्रहीत्** - ஏற்றுக்கொண்டது, **इति** - என்ற காரணத்தால், **तौ** - அவ்விருவரும், **ननन्दतुः** - ஸந்தோஷித்தனர். **हि** - ஏனெனில், **भक्त्या** - பக்தியோடு, **उपपन्नेषु** - கூடியவர்கள் விஷயத்தில், **तद्विधानां**-நந்தினிபோன்ற மஹான்களுடைய, **प्रसादचिह्नानि** - அனுக்ரஹத்தின் அடையாளங்கள், **पुरःफलानि** - ஸமீபத்திலுள்ள பயனையுடையன.

(க-து) கன்றினிடம் விருப்புள்ள அப்பசு அசையாது நின்று ஸுதக்ஷிணையின் பூஜையை ஏற்றதைக்கண்டு அத்தம்பதிகள் மிக மகிழ்ந்தனர். பக்தர்கள் செய்யும் பூஜையைப் பெரியோர்கள் ஏற்பராயின் அது அவர்களது அருள் கிட்டுதலுக்கு அடையாளமாகும். சீக்கிரத்திலேயே பயன் கிடைக்கும் என்பதையும் காட்டும். நந்தினி, பூஜை ஏற்றதை, அதன் அருளின் அடையாளமாக எண்ணி அவ்விருவரும் ஸந்தோஷமடைந்தனர்.

गुरोः सदारस्य निपीड्य पादौ समाप्य सान्ध्यं च विधिं दिलीपः ।
दोहावसाने पुनरेव दोग्ध्रीं भेजे भुजोच्छिन्नरिपुर्निषण्णाम् ॥ २३ ॥

**भुजोच्छिन्नरिपुः** புஜபலத்திஞல் அழிக்கப்பட்ட சத்ருவை யுடைய, **दिलीपः** - திலீபன், **सदारस्य** - மனேவியுடன்கூடிய, **गुरोः** - குருவான வஸிஷ்டரின், **पादौ** பாதங்களில், **निपीड्य** - வணங்கிவிட்டு, **सान्ध्यं** - ஸந்தியாகாலத்தில் செய்யவேண் டிய, **विधिं च** - கர்மானுஷ்டானத்தை, **समाप्य** - முடித்து விட்டு, **दोहावसाने** - பால் கறத்தலின் முடிவில், **निषण्णां** - படுத்த, **दोग्ध्रीं एव** - பசுவையே, **पुनः** - மறுபடியும், **भेजे** - அடைந்தான்.

(க-து) பிறர் உதவியின்றித் தனது தோள் வலிமையாலேயே சத்ருக்களை அழித்துப் பெருமை பெற்ற திலீபன், இப்பொழுது விரதம் காரணமாக பசுவிற்குப் பணிவிடை செய்தான். ஸாயங்காலம் குருவை வணங்கிப் பின், ஸந்தியானுஷ்டானத்தை முடித்துப் பசு வின் அருகிலே அமர்ந்தான்.

तामन्तिकन्यस्तबलिप्रदीपामन्वास्य गोप्ता गृहिणीसहायः ।
क्रमेण सुप्तामनुसंविवेश सुप्तोत्थितां प्रातरनूदतिष्ठत् ॥ २४ ॥

**गोप्ता** - ரக்ஷகனுகிய திலீபன், **गृहिणीसहायः** - மனேவி யோடுகூடியவனுக, **अन्तिकन्यस्तबलिप्रदीपाम्** - ஸமீபத்தில் வைக்கப்பட்ட பூஜா த்ரவ்யங்கள், விளக்கு இவைகளை யுடைய, **तां** - அப்பசுவை, **अन्वास्य** - அனுஸரித்து உட் கார்ந்து, **क्रमेण** - க்ரமமாக, **सुप्तां** - தூங்கிய அப்பசுவை, **अनु** - தொடர்ந்து, **संविवेश** - தூங்கினன். **प्रातः** - காலையில், **सुप्तोत्थितां** - தூங்கியெழுந்த, **तां** அதை, **अनु** - அனுசரித்து, **उदतिष्ठत्** - எழுந்தான்.

(க-து) திலீபனும், ஸுதக்ஷிணையும் நந்தினி தூங்கியபின் தூங்கி அது எழுந்திருக்கும்பொழுது எழுந்தனர். பசுவின் அருகில் அதை பூஜிப்பதற்கான பொருள்கள் வைக்கப்பட்டிருந்தன. இரவு முழுவதும் விளக்கும் எரிந்துகொண்டிருந்தது.

इत्थं व्रतं धारयतः प्रजार्थं समं महिष्या महनीयकीर्तेः ।
सप्त व्यतीयुस्त्रिगुणानि तस्य दिनानि दीनोद्धरणोचितस्य ॥ २५ ॥

**इत्थं** - இவ்வாறு, **प्रजार्थं** - ஸந்ததியின் பொருட்டு, **महिष्या समं** - மனைவியுடன், **व्रतं** - விரதத்தை, **धारयतः** - தரிக்கின்றவனும், **महनीयकीर्तेः** - கொண்டாடத்தக்க கீர்த்தியுடையவனும், **दीनोद्धरणोचितस्य** - எளியவர்களை உயர்த்துவதில் பழகியவனுமாகிய, **तस्य** - அவ்வரசனுக்கு, **त्रिगुणानि** - மும்மடங்கான, **सप्त** - ஏழு, **दिनानि** - நாட்கள், **व्यतीयुः** - சென்றன.

(க-து) இவ்வாறு மனைவியுடன் விரதம் அனுஷ்டித்து வந்த திலீபனுக்கு 21 நாட்கள் சென்றன.

अन्येद्युरात्मानुचरस्य भावं जिज्ञासमाना मुनिहोमधेनुः ।
गङ्गाप्रपातान्तविरूढघासं गौरीगुरोर्गह्वरमाविवेश ॥ २६ ॥

**अन्येद्युः** - மறுநாள், **मुनिहोमधेनुः**-முனிவரின் ஹோமப் பசு, **आत्मानुचरस्य** - தன்னைப் பின் தொடர்பவனுடைய, **भावं** - எண்ணத்தை, **जिज्ञासमाना** - அறிய விரும்பியதாக, **गङ्गाप्रपातान्तविरूढघासं** - கங்கை விழுமிடத்திற்கு அருகில் மிகவளர்ந்த புல்லையுடைய, **गौरी गुरोः** - ஹிமாலயத்தின், **गह्वरं** - குஹையை, **आविवेश** - புகுந்தது.

(க-து) நந்தினி, அரசனது பக்தியைச் சோதிக்க விரும்பி மறுநாள், ஹிமாலயத்தில் கங்கையின் நீர்வீழ்ச்சிக்கு அருகில் ஏராளமாகப் புல் வளர்ந்துள்ள சுற்றுப்புறமுடைய ஒரு குஹையின் வாசலை யடைந்தது.

सा दुष्प्रधर्षा मनसापि हिंस्रैः इत्यद्रिशोभाप्रहितेक्षणेन ।
अलक्षिताभ्युत्पतनो नृपेण प्रसह्य सिंहः किल तां चकर्ष ॥ २७ ॥

**सा** - அப்பசு, **हिंस्रैः** - துஷ்ட ப்ராணிகளினால், **मनसापि** - மனத்தாலும்கூட, **दुष्प्रधर्षा** - ஹிம்ஸிக்க முடியாதது, **इति** - என்ற காரணத்தினால், **अद्रिशोभाप्रहितेक्षणेन** - மலையின் அழகில் செலுத்தப்பட்ட கண்களையுடைய, **नृपेण** - அரசனால், **अलक्षिताभ्युत्पतनः** - பார்க்கப்படாத பாய்தலையுடைய, **सिंहः** - சிங்கம் ஒன்று, **तां** - அப்பசுவை, **प्रसह्य** - பலமாக, **चकर्ष किल** - இழுத்தது.

(க-து) "நந்தினி தெய்வத்தன்மை வாய்ந்தது. மேலும் முனிவரில் சிறந்தவரான வஸிஷ்டருடையது. ஆதலால் வனத்திலுள்ள துஷ்ட விலங்குகள் அதை துன்புறுத்த முடியா"தென்றெண்ணித் திலீபன் பசுவைப் பாராது மலையழகை நோக்கிக் கொண்டிருந்தான். அச்சமயம் ஒரு சிங்கம் அப்பசுவைப் பலமாகப் பற்றி இழுத்தது. சிங்கம் பாய்ந்ததை திலீபன் காணவில்லை.

तदीयमाक्रन्दितमार्तसाधोः गुहानिबद्धप्रतिशब्ददीर्घम् ।
रश्मिष्विवादाय नगेन्द्रसक्तां निवर्तयामास नृपस्य दृष्टिम् ॥ २८ ॥

**गुहानिबद्ध प्रतिशब्द दीर्घं** - குகையில் உண்டான எதிரொலியால் நீண்ட, **तदीयं** - அப்பசுவினுடையதான, **आक्रन्दितं** - கதறல், **आर्त साधोः** - கஷ்ட மடைந்தவர்களுக்கு நன்மையைச் செய்கின்ற, **नृपस्य** - அரசனுடைய, **नगेन्द्रसक्तां** - மலையில் பதிந்த, **दृष्टिं** - பார்வையை, **रश्मिषु** - கடிவாளங்களிலே, **आदाय इव** - பிடித்து (திருப்புவது) போல, **निवर्तयामास** - திருப்பியது.

(க-து) பசுவின் கதறலைக்கேட்டு அரசன் தனது பார்வையைத் திருப்பினான்.

பசுவின் கதறல் குகையில் எதிரொலித்தது அதனால் அது மிக நீண்டிருந்தது. திடீரெனத் தோன்றிய பசுவின் கதறல் அரசனது பார்வையைச் சட்டெனத் திருப்பியது.

கடிவாளத்தால் திருப்பப்படும் குதிரைபோல், மலையின் அழகில் பதிந்திருந்த அரசனது பார்வையும் திரும்பியது.

स पाटलायां गवि तस्थिवांसम् धनुर्धरः केसरिणं ददर्श ।
अधित्यकायामिव धातुमय्यां लोध्रद्रुमं सानुमतः प्रफुल्लम् ॥ २९ ॥

**धनुर्धरः** - வில்லைத்தரித்த, **सः** - அவ்வரசன், **पाटलायां** - சிவந்த நிறமுடைய, **गवि** - பசுவின்மேல், **तस्थिवांसं** - இருக்கின்ற, **केसरिणं** - சிங்கத்தை; **सानुमतः**-மலையின், **धातुमय्यां**- தாதுப்பொடிகள் நிறைந்த, **अधित्यकायां**-மேல் பிரதேசத்தில் (இருக்கின்ற), **प्रफुल्लं** - புஷ்பித்த, **लोध्रद्रुमं इव** - லோத்ர மரத்தைப் (காண்பது) போல, **ददर्श** - கண்டான்.

(க-து) அரசன் அப்பெரிய சிங்கத்தைக் கண்டான்.

திலீபன், சிவந்த நிறமான பசுவின்மேல் பாய்ந்து இருக்கின்ற பழுப்புநிறமான சிங்கத்தைக் கண்டான். சிவந்த கற்களையுடைய மலைச்சரிவில் புஷ்பித்த லோத்ர மரம்போல் அச்சிங்கம் இந்நிலையில் காணப்பட்டது.

**अधित्यका** - மலையின்மேல் பிரதேசம்; **धातु** - அப்ரகம், மனோசிலை முதலியவைகளுக்குப் பொதுப் பெயர். **लोध्रः** - ஒருவகை மரம். இம்மரத்தின் புஷ்பங்கள் சிங்கத்தின் நிறத்தை ஒத்திருக்கும். சிவந்த தாதுப்பொடிகள் நிறைந்த மலையின் மேற்புறம் சிவந்த பசுவிற்கும், பழுப்பு நிறமான புஷ்பங்களுடன் இருக்கும் லோத்ரவ்ருக்ஷம் பசுவின்மேல் இருக்கும் சிங்கத்திற்கும் உபமானமாகக் கூறப்பட்டுள்ளன.

ततो मृगेन्द्रस्य मृगेन्द्रगामी वधाय वध्यस्य शरं शरण्यः ।
जाताभिषङ्गो नृपतिर्निषङ्गादुद्धर्तुमैच्छत् प्रसभोद्धृतारिः ॥ ३० ॥

**ततः** - பிறகு, **मृगेन्द्रगामी** - சிங்கம்போல் கம்பீரமான நடையுடையவனும், **शरण्यः** - ரக்ஷிப்பதில் திறமையுடையவனும், **प्रसभोद्धृतारिः** - (தனது) பலத்தினால் அழிக்கப்பட்ட சத்ருக்களை யுடையவனுமாகிய, **नृपतिः** - அரசன், **जाताभिषङ्गः (सन्)** - புதிதாகத் தோன்றிய அவமானமுடையவனாய், **वध्यस्य** - கொல்லத்தக்க, **मृगेन्द्रस्य** - சிங்கத்தை, **वधाय** - கொல்வதின் பொருட்டு, **निषङ्गात्** - அம்புக் கூண்டிலிருந்து, **शरं** - பாணத்தை, **उद्धर्तुं** - எடுக்க, **ऐच्छत्** - விரும்பினான்.

(க-து) அரசன் சிங்கத்தைக் கொல்ல பாணத்தை எடுக்க எண்ணினான்.

वामेतरस्तस्य करः प्रहर्तुः नखप्रभाभूषितकङ्कपत्रे ।
सक्ताङ्गुलिः सायकपुङ्ख एव चित्रार्पितारम्भ इवावतस्थे ॥ ३१ ॥

**प्रहर्तुः** - அடிக்க முயலுகின்ற, **तस्य** - அவனுடைய, **वामेतरः** - வலது, **करः** - கை, **नखप्रभारूषित कङ्कपत्रे** - நகங்களுடைய காந்தி பரவிய கங்கச் சிறகையுடைய, **सायकपुङ्खे एव** - அம்பின் காம்பிலேயே, **सक्ताङ्गुलिः** - பதிந்த விரல்களையுடையதாக, **चित्रार्पितः** - படத்தில் எழுதப்பட்ட, **आरंभः इव** - முயற்சியையுடைய கைபோல, **अवतस्थे** - நின்றது.

(க-து) சிங்கத்தை அடிக்க எண்ணி அரசன் அம்பை எடுக்கக் கருதித்தனது வலது கையை அம்பின் காம்பில் வைத்தான். வைத்த கை செயலற்று படத்தில் எழுதப்பட்ட கைபோல் ஸ்தம்பித்து நின்றது. அம்பின் காம்பில் கட்டப்பட்டுள்ள சிறகுகளில் அவனது கைவிரல் நகங்களின் ஒளிபரவி அழகு செய்தது.

அம்புகள் வேகமாகச் செல்வதற்காக அவற்றில் கழுகு பருந்து இவைகளின் சிறகு இருபுறங்களிலும் கட்டப்பட்டிருக்கும்: **कंकः** - ஒருவகைப் பறவை.

बाहुप्रतिष्टम्भविवृद्धमन्युः अभ्यर्णमागस्कृतमस्पृशद्भिः ।
राजा स्वतेजोभिरदह्यतान्तः भोगीव मन्त्रौषधिरुद्धवीर्यः ॥ ३२ ॥

**बाहुप्रतिष्टम्भविवृद्धमन्युः** - கையின் தடையினால் விருத்தியடைந்த கோபமுடைய, **राजा** - அரசன், **मन्त्रौषधिरुद्धवीर्यः** - மந்த்ரம், ஒஷதி இவைகளால் தடுக்கப்பட்ட வீர்யமுடைய, **भोगी इव** - ஸர்ப்பம்போல், **अभ्यर्णं** - ஸமீபத்திலிருக்கின்றதும், **आगस्कृतं** - குற்றம் செய்கின்றதுமான சிங்கத்தை, **अस्पृशद्भिः** - ஸ்பர்சிக்காத, **स्वतोजोभिः** - தனது பராக்ரமங்களால், **अन्तः** - மனதிலே, **अदह्यत** - எரிக்கப்பட்டான்.

(க-து) திலீபன் சமீபத்திலிருக்கின்ற குற்றவாளியையும் தண்டிக்க முடியாத தன் பராக்ரமத்தை எண்ணிமிக வருந்தினன்.

சிங்கம் பசுவைப் பிடித்ததே எனக்கோபமடைந்த அரசன், கை தடையுற்றபொழுது அதிகம் கோபம் கொண்டான். மேலும், குற்றமிழைக்கின்ற சிங்கம் எதிரில்—ஸமீபத்தில் இருக்கும்பொழுதும், தான் சக்தியுடையவனாக இருந்தும் தனது பராக்ரமம் தனக்கு இச்சமயம் சிங்கத்தைக் கொல்வதில் உதவவில்லையே என எண்ணி மிக மனம் நொந்தான். மந்திரத்தாலும் ஒஷதிகளாலும் கட்டுப்பெற்றுச் செயலற்று இருக்கும் ஸர்ப்பம் போல், அவனது பராக்ரமம் தடைபெற்றபொழுது, அவ்வரசன் தனக்குள் மிக மிக வருந்தினான். அவனது பராக்ரமமே அவனது வருத்தத்திற்குக் காரணமாயிற்று.

तमार्यगृह्यं निगृहीतधेनुः मनुष्यवाचा मनुवंशकेतुम् ।
विस्माययन् विस्मितमात्मवृत्तौ सिंहोरुसत्त्वं निजगाद सिंहः ॥३३॥

**निगृहीतधेनुः** - நன்கு பிடிக்கப்பட்ட பசுவையுடைய, **सिंहः** - சிங்கம், **आर्यगृह्यं** - பெரியோர்களைச் சேர்ந்தவனும்,

**मनुवंशकेतु** - மனுவின் வம்சத்திற்கு த்வஜம்போல் இருப்பவனும், **सिंहोरुसत्वं** - சிங்கம்போல் அதிக பராக்ரமமுடையவனும், **आत्मवृत्तौ** - தனது நிலையில், **विस्मितं** - வியப்புற்றவனுமாகிய, **तं** - அவனை, **मनुष्य वाचा** - மனிதர்களுக்குரிய வாக்கினால், **विस्माययन्** - (மேலும்) ஆச்சரியப்படும்படி செய்துகொண்டு, **निजगाद** - சொல்லிற்று.

(க-து) சிங்கம் மனுஷ்யர்களின் குரலில் பேச ஆரம்பித்தது.

சிங்கம் பேசியபொழுது பசுவைப் பிடித்திருந்த பிடி சிறிதும் தளரவில்லை. திலீபன் பெரியோர்களால் மதிக்கப்படுபவன். மனுவின் வம்சத்திற்கே த்வஜம்போல் பெருமை தருபவன். மிகவும் பராக்ரமமுடையவன். எதிலும் எளிதில் வியப்புறாத திலீபன், தன் நிலையை எண்ணி ஆச்சர்யமடைந்திருந்தான். அவனது வியப்புணர்ச்சி, சிங்கம் மனிதர் குரலில் பேசத் தொடங்கியபொழுது, மிக அதிகமாயிற்று.

अलं महीपाल तव श्रमेण प्रयुक्तमप्यस्त्रमितो वृथा स्यात् ।
न पादपोन्मूलनशक्ति रंहः शिलोच्चये मूर्च्छति मारुतस्य ॥ ३४ ॥

**महीपाल** - அரசனே, **तव** - உனக்கு, **श्रमेण अलम्** - ச்ரமம் வேண்டாம். **इतः** - என்னிடத்தில், **प्रयुक्तं अपि** - ப்ரயோகிக்கப்பட்டதாயினும், **अस्त्रं** - அஸ்த்ரம், **वृथा** - பயனற்றதாகவே, **स्यात्** - ஆகும். **पादपोन्मूलनशक्ति** - மரங்களை அழிப்பதிலே சக்தியுள்ள, **मारुतस्य** - காற்றின், **रंहः** - வேகம், **शिलोच्चये** - மலையில், **न मूर्च्छति** - பயனளிப்பதில்லை.

(க-து) "அரசே நீ சிரமப்பட வேண்டாம். அஸ்திரத்தை நீ பிரயோகித்திருந்தாலும் அது என்னை ஒன்றும் செய்திருக்காது. நீ வல்லமையுடையவனே. ஆயினும் உனது பலம் என்னிடம் செல்லாது. மரங்களை அசைக்கும் காற்றுக்கு மலையை அசைக்கத் திறனுண்டா?

कैलासगौरं वृषमारुरुक्षोः पादार्पणानुग्रहपूतपृष्ठम् ।
अवेहि मां किङ्करमष्टमूर्तेः कुम्भोदरं नाम निकुम्भमित्रम् ॥ ३५ ॥

**कैलासगौरं** - கைலாச மலைபோல் வெண்மையான, **वृषं** - விருஷபத்தை, **आरुरुक्षोः** - ஏற விரும்புகின்ற, **अष्टमूर्तेः** - பரமசிவனுடைய, **पादार्पणानुग्रह पूतपृष्ठं** - பாதத்தை வைப்பதாகிய அருளினால் பரிசுத்தமான முதுகையுடையவனும், **निकुम्भमित्रं** - நிகும்பனுடைய நண்பனும், **कुम्भोदरं नाम** - கும்போதரன் எனப் பிரசித்தி பெற்றவனுமான, **किङ्करं** - (சிவ) ஸேவகனாக, **मां** - என்னை, **अवेहि** - அறிந்துகொள்.

(க-து) "நான் சிவபிரானுடைய ஸேவகன். என் பெயர் கும்போதரன் என்பது; சிவபிரான் விருஷபத்தின்மேல் ஏறும்பொழுது எனது முதுகில் பாதத்தை வைத்து ஏறுகின்றார். அவர் பாதமபடுவதை அருளாகக் கருதுகின்றவன் நான். அதனால் நான் தூய்மை பெறுகின்றேன். எனது நண்பன் நிகும்பன்:

நிகும்பன்:— பரமசிவனுடைய கணங்களில் ஒருவன் எனவும் பார்வதியின் வாஹனமாகிய சிங்கம் எனவும் கூறுவர்.

अमुं पुरः पश्यसि देवदारुं पुत्रीकृतोऽसौ वृषभध्वजेन ।
यो हेमकुम्भस्तननिःसृतानां स्कन्दस्य मातुः पयसां रसज्ञः ॥३६॥

**पुरः** - எதிரில், **अमुं** - அந்த, **देवदारुं** - தேவதாரு விருக்ஷத்தை, **पश्यसि** - காண்கின்றாயா? **यः** - எந்த மரம், **स्कन्दस्य** - ஸுப்ரஹ்மண்யருடைய, **मातुः** - தாயான பார்வதி தேவியின், **हेमकुंभ स्तन निस्सृतानां**-பொற்குடங்களினின்றும் பெருகிய, **पयसां** - ஜலத்தினுடைய, **रसज्ञः** - ருசியையறிந்ததோ, **असौ** - அப்படிப்பட்ட இத் தேவதாருமரம், **वृषभध्वजेन** - பரமசிவனால், **पुत्रीकृतः** - புத்ரனாக பாவிக்கப் பட்டது.

(க-து) "இதோ எதிரில் தேவதாரு மரத்தைப் பார்க்கின்றாய் அல்லவா? இம்மரத்தைச் சிவபிரான் புத்திரனாகப் பாவிக்கின்றார். பார்வதிதேவியும் பொற்குடத்தில் ஜலத்தை எடுத்து ஊற்றி இதை வளர்க்கிறாள். பார்வதி தேவியினால் ஊற்றப்பட்ட ஜலத்தைப் பருகும் பாக்யம் பெற்றது இம்மரம். ஸுப்ரஹ்மண்யனிடம் உள்ள பிரேமை, பார்வதிக்கு இம்மரத்தினிடம் உண்டு.

कण्डूयमानेन कटं कदाचिद्वन्यद्विपेनोन्मथिता त्वगस्य ।
अथैनमद्रेस्तनया शुशोच सेनान्यमालीढमिवासुरास्त्रैः ॥ ३७ ॥

**कदाचित्** - ஒரு சமயம், **कटं** - கன்னத்தை, **कण्डूयमानेन**- சொரிந்து கொள்ளுகின்ற, **वन्यद्विपेन** - காட்டு யானையினால், **अस्य** - இத் தேவதாருவின், **त्वक्** - மேற்பட்டையானது, **उन्मथिता** - உரிக்கப்பட்டதாயிற்று. **अथ** - பிறகு, **अद्रेः** - மலையின், **तनया** - மகளான பார்வதி, **असुरास्त्रैः** - அஸுரர்களின் பாணங்களினால், **आलीढं** - காயமுற்ற, **सेनान्यं इव** - ஸுப்ரமண்யரைக் குறித்து (வருந்தியது)போல, **एनं** - இம்மரத்தைக் குறித்து, **शुशोच** - வருந்தினாள்.

(க-து) ஒரு சமயம் யானை ஒன்று இம்மரத்தில் உராய்ந்து, கன்னத்தைச் சொரிந்து கொண்டதால் இம்மரத்தின் பட்டை உரிந்தது. அஸுராஸ்திரத்தினால் ஸுப்ரஹ்மண்யன் காயமுற்ற பொழுது வருந்தியதுபோல், பார்வதி, தான் வளர்த்த மரத்தின் பட்டை உரிந்தபொழுதும் வருந்தினாள்.

तदा प्रभृत्येव वनद्विपानां त्रासार्थमस्मिन्नहमद्रिकुक्षौ ।
व्यापारितः शूलभृता विधाय सिंहत्वमङ्कागतसत्त्ववृत्ति ॥ ३८ ॥

**तदाप्रभृति एव** அது முதலாகவே, **वनद्विपानां** - காட்டு யானைகளை, **त्रासार्थं** - பயமுறுத்துவதற்காக, **शूलभृता** - பரமசிவனால், **अङ्कागतसत्त्ववृत्ति** - ஸமீபத்தில் வந்த பிராணிகளையே உணவாகக்கொண்ட, **सिंहत्वं** - சிங்கவடிவத்தை

**विधाय** - செய்து (கொடுத்து), **अस्मिन्** - இந்த, **अद्रिकुक्षौ** - மலையின் குகையில், **अहं** - நான், **व्यापारितः** - நியமிக்கப் பட்டேன்.

(க-து) "அரனால் பரமசிவனார், காட்டு யானைகளை அச்சுறுத்து வதின் பொருட்டு, எனக்குச் சிங்க வடிவத்தை உண்டாக்கி, இங்கு இருக்கும்படி என்னை நியமித்துள்ளார். அருகில் வந்த பிராணியை உணவாகக் கொள்ளும்படியும் அவரது ஆணையிருக்கின்றது.

तस्यालमेषा क्षुधितस्य तृप्त्यै प्रदिष्टकाला परमेश्वरेण ।
उपस्थिता शोणितपारणा मे सुरद्विषश्चान्द्रमसी सुधेव ॥ ३९ ॥

**परमेश्वरेण** - பரமசிவனால், **प्रदिष्टकाला** குறிப்பிடப்பட்ட காலமுடையதும், **उपस्थिता** - அருகில் வந்ததுமான, **एषा** - இந்த, **शोणित पारणा** - ரக்த போஜனம், **सुरद्विषः** - ராகு விற்கு, **चान्द्रमसी** - சந்திரனுடைய, **सुधा इव** - அம்ருதம் (திருப்தியளிப்பது) போல், **क्षुधितस्य** பசியோடு இருக்கின்ற, **तस्य** - அப்படிப்பட்ட, **मे** - என்னுடைய, **तृप्त्यै** திருப்தியின் பொருட்டு, **अलम्** - போதுமானது.

(க-து) "சிவபிரான் கூறியபடி அருகில் வந்துள்ள இப்பசு, பசித்திருக்கின்ற எனக்குச் சிறந்த உணவாகும். ராஹுவிற்குச் சந்திரன்போல் இவ்வுணவு எனக்கு மிக மகிழ்ச்சியை அளிக்கின்றது.

स त्वं निवर्तस्व विहाय लज्जां गुरोर्भवान् दर्शितशिष्यभक्तिः ।
शस्त्रेण रक्ष्यं यदशक्यरक्षं न तद्यशः शस्त्रभृतां क्षिणोति ॥ ४० ॥

**सः** - அப்படிப்பட்ட, **त्वं** - நீ, **लज्जां** - வெட்கத்தை, **विहाय** - விட்டு, **निवर्तस्व** - திரும்பு; **भवान्** - நீ, **गुरोः** - குரு விற்கு, **दर्शित शिष्यभक्तिः** - காண்பிக்கப்பட்ட சிஷ்யர்களுக் குரிய பக்தியையுடையவனாக, **(अस्ति)** - இருக்கின்றாய். **यत्** - எந்த, **रक्ष्यं** - காப்பாற்றப்படவேண்டிய பொருள், **शस्त्रेण** - ஆயுதத்தினால், **अशक्यरक्षं** - காப்பாற்ற முடியாததாகின்

றதோ, **तत्** - அப் பொருள் (தான் அழிந்தாலும்), **शस्त्रभृतां**- ஆயுதமுடைய வீரர்களின், **यशः** - புகழை, **न क्षिणोति** - அழிப்பதில்லை.

(க-து) "அரசே, வெட்கத்தைவிட்டுத் திரும்பு. பசுவைக் காக்க முயலுகின்ற நீ, குருவினிடம் உனக்கு உள்ள அன்பைப் புலப் படுத்திவிட்டாய். இப்பசுவைக் காப்பாற்ருததால் உனது புகழ் குன்ருது. ஏனெனில், ஆயுதபலத்தினுல் காப்பாற்றப்பட முடியா மல் ஒரு பொருள் அழியுமாஞல், அதனுல் அதைக் காப்பாற்ற முயன்ற வீரர்களின் நற்பெயர் அழிவதில்லை. தெய்வபலமுடைய என்னிடமிருந்து இப்பசுவைக் காப்பாற்ருவிடின் அது உனக்கு இழுக்காகுமா?"

इति प्रगल्भं पुरुषाधिराजः मृगाधिराजस्य वचो निशम्य ।
प्रत्याहतास्त्रो गिरिशप्रभावात् आत्मन्यवज्ञां शिथिलीचकार ॥ ४१॥

**पुरुषाधिराजः** - அரசன், **इति**-இவ்வாறு, **मृगाधिराजस्य**- சிங்கத்தினுடைய, **प्रगल्भं** - கம்பீரமான, **वचः**-வார்த்தையை, **निशम्य** - கேட்டு, **गिरिशप्रभावात्** - பரமசிவனுடைய மகிமை யிஞல், **प्रत्याहतास्त्रः** - தடுக்கப்பெற்ற அஸ்த்ரமுடையவஞக இருந்துகொண்டு, **आत्मनि** - தன் விஷயத்தில், **अवज्ञां** - அவமதிப்பை, **शिथिलीचकार** - தளர்த்திக்கொண்டான்.

(க-து) இவ்வாறு சிங்கம் கூறியதைக் கேட்ட திலீபன், சிவபிரானுடைய பெருமையால்தான் தனது கை தடையுற்றதென அறிந்து, அவன் தன்னிடம் கொண்ட இகழ்வான எண்ணத்தைச் சிறிதே குறைத்துக் கொண்டான். சிறிது மன ஆறுதலும் அடைந் தான்.

प्रत्यब्रवीच्चैनमिषुप्रयोगे तत्पूर्वसङ्गे वितथप्रयत्नः ।
जडीकृतस्त्र्यम्बकवीक्षणेन वज्रं मुमुक्षन्निव वज्रपाणिः ॥ ४२ ॥

**तत्पूर्वसंगे** - அதையே முதல் இடையூருக உடைய, **इषुप्रयोगे** - பாணப் பிரயோகத்தில், **वितथप्रयत्नः** - பயனற்ற

முயற்சியுடையவனும், **वज्रं** - வஜ்ராயுதத்தை, **मुमुक्षन्** - பிரயோகிக்க விரும்பியவனும், **त्र्यम्बकवीक्षणेन** - பரமசிவனுடைய பார்வையினால், **जडीकृतः** - செயலற்றவனாகச் செய்யப்பட்டவனுமான, **वज्रपाणिः इव (स्थितः)** - இந்திரன்போல் இருந்தவனுமாகிய அரசன், **एनं** - அச் சிங்கத்தை நோக்கி, **प्रत्यब्रवीत् च** - பதிலும் சொன்னான்.

(க-து) திலீபன் சிங்கத்திற்குப் பதிலுரைத்தான்.

ஒரு சமயம் குழந்தை வடிவில் இருந்த சிவபிரானைக் கொல்லவிரும்பி இந்திரன் வஜ்ராயுதத்தை எடுத்ததாகவும் சிவபிரானுடைய பார்வையால் அவனது கை செயலற்று நின்றதாகவும் பாரதம் கூறுகின்றது.

संरुद्धचेष्टस्य मृगेन्द्र कामम् हास्यं वचस्तद्यदहं विवक्षुः ।
अन्तर्गतं प्राणभृतां हि वेद सर्वं भवान् भावमतोऽभिधास्ये ॥४३॥

**मृगेन्द्र** - மிருகராஜனே, **यत्** - எந்த, **वचः** - வார்த்தையை, **अहं** - நான், **विवक्षुः** - சொல்ல விரும்புகின்றேனோ, **संरुद्धचेष्टस्य** - தடுக்கப்பட்ட செயலோடு கூடிய, **मे** - என்னுடைய, **तत्** - அவ் வார்த்தையானது, **कामं** - மிகவும், **हास्यम्** - பரிஹஸிக்கத் தக்கதே. **भवान्** - நீ, **प्राणभृतां** - ஜீவர்களின், **अन्तर्गतं** - மனதிலுள்ள, **सर्वं** - எல்லா, **भावं** - அபிப்ராயத்தையும், **वेद हि** - அறிகின்றாய் அல்லவா; **अतः** - அதனால், **अभिधास्ये** - சொல்வேன்.

(க-து) "செயலுக்குத்திறனற்று இருக்கின்ற நான் பேசும் வார்த்தையைக் கேட்டுப் பிறர் பரிஹஸிப்பார்கள். நான் கூறுவதை நம்பார். ஆனால் நீ என் மனத்திலுள்ளதை யறியும் திறனுடையவன். நான் உண்மையாக எண்ணுவதைத்தான் கூறுகின்றேன் என அறிவாய். நம்பவும் செய்வாய். ஆதலால் நான் கூறுவதைச் சிறிது கேட்கவேண்டும்.

मान्यः स मे स्थावरजङ्गमानाम् सर्गस्थितिप्रत्यवहारहेतुः ।
गुरोरपीदं धनमाहिताग्नेः नश्यत् पुरस्तादनुपेक्षणीयम् ॥ ४४ ॥

**स्थावर जंगमानाम्**-அசையாப்பொருள் அசையும்பொருள் இவைகளுடைய, **सर्ग स्थिति प्रत्यवहार हेतुः**-ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவைகளுக்குக் காரணமாகிய, **सः** - அப் பரமசிவனும், **मे** - எனக்கு, **मान्यः** - மதிக்கத்தக்கவராகின் றார். **पुरस्तात्** - எதிரிலும், **नश्यत्** - நசிக்கின்ற, **इदं** - இந்த, **गुरोः** - (எனது) குருவும், **आहिताग्नेः** - ஆஹிதாக்னியுமான வஸிஷ்டருடைய, **धनं अपि** - செல்வமும் (பசுவும்), **अनुपेक्ष-णीयम्** - அலக்ஷ்யம் செய்யத் தக்கதன்று.

(க-து) "ஸமீபத்தில் வந்த மிருகத்தை உணவாகக் கொள்ளும் படி உனக்குச் சிவபிரானது ஆணையிருக்கின்றது. அவர் எனக்கும் இவ்வுலகிற்கும் தலைவர். அவரது ஆணையை நீ மதிப்பதுபோல் நானும் மதிக்கின்றேன். ஆனல் எனது குருவும், அக்னி பூஜை செய் கின்றவருமான வஸிஷ்டருக்குச் செல்வமாயுள்ள இப்பசு, என் கண் ணெதிரில் அழியும்படி நான் விடுதல் கூடாது. அவர் ஆஹிதாக்னி; அக்னியின்மூலம் தேவதைகளை வழிபடுவர். ஹோமத்திற்கு வேண்டிய பொருள்களை எல்லாம் தருகின்ற இப்பசு ஒன்றுதான் அவரது செல்வம். இது என் கண் முன் அழிதல் கூடாது.

स त्वं मदीयेन शरीरवृत्तिं देहेन निर्वर्तयितुं प्रसीद ।
दिनावसानोत्सुकबालवत्सा विसृज्यतां धेनुरियं महर्षेः ॥ ४५ ॥

**सः** - அப்படிப்பட்ட, **त्वं** - நீ, **मदीयेन** - என்னுடைய தான, **देहेन** - தேகத்தினல், **शरीरवृत्तिं** - உணவை, **निर्वर्तयितुं**- முடித்துக்கொள்ள, **प्रसीद** - தயை செய்; **दिनावसान उत्सुक-बालवत्सा** - பகலின் முடிவில் ஆவலுடனிருக்கின்ற இளம் கன்றையுடைய, **इयं** - இந்த, **महर्षेः** - மஹரிஷியின், **धेनुः** - பசு, **विसृज्यताम्** - விடப்படட்டும்.

(க-து) "பசு உன் அருகிலிருப்பதுபோல் நானும் உனது அருகிலிருப்பவனே. ஆதலால் இப்பசுவைவிட்டு என்னை உணவாகக் கொள். சிவபிரானது ஆணையும் மீறியதாகாது. மகரிஷியின் பசுவும் காப்பாற்றப்பட்டதாகும். இப்பசுவின் கன்று ஸாயங்காலம் ஆவலோடு இருக்கும். அதுவும் பிழைக்கும்."

अथान्धकारं गिरिगह्वराणां दंष्ट्रामयूखैः शकलानि कुर्वन् ।
भूयः स भूतेश्वरपार्श्ववर्ती किंचिद्विहस्यार्थपतिं बभाषे ॥ ४६ ॥

**अथ** - பிறகு, **भूतेश्वरपार्श्ववर्ती** - சிவபிரானுடைய ஸேவகனாகிய, **सः** - அச் சிங்கம், **किञ्चित्** - சிறிது, **विहस्य** - சிரித்து, **दंष्ट्रामयूखैः** - பற்களின் காந்திகளால், **गिरिगह्वराणां** - மலையின் குகைகளுடைய, **अन्धकारं**-இருளை, **शकलानि** - சிறு துண்டுகளாக, **कुर्वन्** - செய்துகொண்டு, **अर्थपतिं** - அரசனை நோக்கி, **भूयः** - மறுபடியும், **बभाषे** - பேசிற்று

(க-து) சிங்கம் புன்னகை செய்து பின், அரசனை நோக்கிப் பதில் கூறிற்று.

குகையில் இருள் நிறைந்திருந்தது. சிங்கம் சிரித்ததும் அதன் பற்களுடைய காந்தி அவ்விருளின் இடையில் புகுந்து அதை வெட்டிச் சிறு துண்டுகளாகச் செய்தது போல் காணப்பட்டது

एकातपत्रं जगतः प्रभुत्वम् नवं वयः कान्तमिदं वपुश्च ।
अल्पस्य हेतोर्बहु हातुमिच्छन् विचारमूढः प्रतिभासि मे त्वम् ॥ ४७ ॥

**एकातपत्रं** - ஒரே குடையையுடைய, **जगतः** - உலகின், **प्रभुत्वं** - தலைவனாக இருத்தல், **नवं वयः** - யௌவனப் பருவம், **इदं** - இந்த, **कान्तं** - அழகிய, **वपुः च** - தேகம், **बहु** - (ஆகிய) பலவற்றை, **अल्पस्य हेतोः** - ஒரு அல்பமான பயன் காரணமாக, **हातुं** - விட, **इच्छन्** - விரும்புகின்ற, **त्वं** - நீ,

**विचारमूढः** - பகுத்தறிவற்றவனாக, **मे**-எனக்கு, **प्रतिभासि** - தோற்றுகிறாய்.

(க-து) "சிறிது செலவுசெய்து பெரியதைப்பெற விரும்புவது முறையாகும். நீ ஒரு அல்பப் பசுவிற்காக ஏகாதிபத்யம் கொண்ட ராஜ்யம், யௌவனப்பருவம், அழகிய சரீரம் ஆகிய இவையனைத்தையும் விட விரும்புகின்றாய். உனக்குச் சிந்தனாசக்தி குறைவானதென எண்ணுகிறேன்.

भूतानुकम्पा तव चेदियं गौः एका भवेत् स्वस्तिमती त्वदन्ते ।
जीवन् पुनः शश्वदुपप्लवेभ्यः प्रजाः प्रजानाथ पितेव पासि ॥

**तव** - உனக்கு, **भूतानुकंपा** - பிராணிகளிடத்தில் இரக்கம், **(वर्तते) चेत्** - இருக்குமாயின், **त्वदन्ते** - உனக்கு நாசம், **(सति)** - ஏற்படும்பொழுது, **इयं** - இந்த, **एका गौः** - ஒரு பசு, **स्वस्तिमती** க்ஷேமமுடையதாக, **भवेत्** - ஆகும். **प्रजानाथ**- பிரஜைகளுக்கு நாதனே, **जीवन् पुनः** - உயிருடனிருப்பாயானால், **पिता इव** - தந்தைபோல, **प्रजाः** - பிரஜைகளை, **उपप्लवेभ्यः** - கஷ்டங்களிலிருந்து, **शश्वत्** - எப்பொழுதும்; **पासि** - ரக்ஷிப்பாய்.

(க-து) "நீ பிராணிகளிடத்தில் இரக்கமுடையவன். அதனால் இப்பசுவைக் காக்க உன் உடலைத் தருகின்றாய். நீ இறந்தால் இப்பசு ஒன்றுதான் பிழைக்கும். பிரஜைகளின் ரக்ஷகனாகிய நீ உயிருடனிருந்தால் எப்பொழுதும் பலரைப் பலகஷ்டங்களிலிருந்து காப்பாற்றலாம். ஒன்றைக்காப்பது சிறந்ததா? பலரைக்காப்பது மேலானதா? சொல்.

अथैकधेनोरपराधचण्डाद् गुरोः कृशानुप्रतिमाद्बिभेषि ।
शक्योऽस्य मन्युर्भवता विनेतुं गाः कोटिशः स्पर्शयता घटोध्नीः ॥

**अथ** - அல்லது, **एकधेनोः** - ஒரே பசுவையுடையவரும், **अपराधचण्डात्** - குற்றத்தினால் மிக்க கோபமுடையவரும்,

**कृशानुप्रतिमात्** - அக்னிக்கு ஒப்பானவருமான, **गुरोः** - குரு வினிடமிருந்து, **बिभेषि** - பயப்படுகின்றாயா? **अस्य** - அவருடைய, **मन्युः** - கோபம், **घटोध्नीः** - குடம்போல் மடியையுடைய, **गाः** - பசுக்களை, **कोटिशः** - கோடிகோடியாக, **स्पर्शयता** - கொடுக்கின்ற, **भवता** - உன்னால், **विनेतुं** - போக்க, **शक्यः** - கூடும்.

(க-து) "உனது குருவிற்கு இப்பசு ஒன்றே செல்வமென்று கூறினாய். இதை இழந்தால் அவர் கோபிக்கலாம். நெருப்புபோல், சாபத்தினால் அழிக்கும் சக்தி வாய்ந்த அவரிடமிருந்து நீ பயப்படவும் கூடும். ஆனால் ஒரு பசுவிற்குப் பதிலாகக் குடம்போல் மடியுள்ள கோடிக்கணக்கான பசுக்களை அவருக்குக் கொடுத்து அவரது கோபத்தை நீ தணிக்கக் கூடுமே. நீ ஏன் உயிரை விடவேண்டும்?

तद्रक्ष कल्याणपरम्पराणाम् भोक्तारमूर्जस्वलमात्मदेहम् ।
महीतलस्पर्शनमात्रभिन्नम् ऋद्धं हि राज्यं पदमैन्द्रमाहुः ॥ ६० ॥

**तत्** - ஆகையால், **कल्याणपरंपराणां** - க்ஷேமங்களின் வரிசைகளை, **भोक्तारं** - அனுபவிக்கின்றதும், **ऊर्जस्वलं** - மிகவும் பலமுடையதுமான, **आत्मदेहं** - உனது சரீரத்தை, **रक्ष** - பாதுகாத்துக்கொள். **हि** - ஏனெனில், **ऋद्धं** - செல்வம் நிறைந்த, **राज्यं** - ராஜ்யத்தை, **महीतल स्पर्शनमात्रभिन्नं** - பூமியின் ஸ்பர்சத்தினால் மாத்திரம் வேறுபட்ட, **ऐन्द्रं पदं** - இந்திரனின் ஸ்தானமாக (ஸ்வர்க்கமாக), **आहुः** - சொல்லுகின்றனர்.

(க-து) "ஆகையால் உனது உடலைப் பாதுகாத்துக்கொள். இது மிக பலமுடையதாகக் காணப்படுகிறது. வெகுகாலம் இவ்வுலகில் இருந்து நீ பலநன்மைகளை அனுபவிக்கலாம். உனது ராஜ்யம் செல்வம் நிறைந்தது. பூலோகத்திலுள்ள ஸ்வர்க்கம் அது. அதை நீ ஏன் இழக்கவேண்டும்?"

एतावदुक्त्वा विरते मृगेन्द्रे प्रतिस्वनेनास्य गुहागतेन ।
शिलोच्चयोऽपि क्षितिपालमुच्चैः प्रीत्या तमेवार्थमभाषतेव ॥ ५१ ॥

**मृगेन्द्रे** - சிங்கமானது, **एतावत्** - இவ்வளவு, **उक्त्वा** - சொல்லிவிட்டு, **विरते सति** - ஓய்ந்தபொழுது, **अस्य** - அச் சிங்கத்தினுடைய, **गुहागतेन** - குஹையில் உண்டான, **प्रतिस्वनेन** - எதிரொலியினால், **शिलोच्चयोऽपि** - மலையும், **प्रीत्या** - பிரீதியினாலே, **तम् एव अर्थम्**-அதே விஷயத்தை, **क्षितिपालं** - அரசனை நோக்கி, **उच्चैः** - உரக்க, **अभाषत इव** - கூறியது போலும் (இருந்தது.)

(க-து) சிங்கம் 'கூறுவதையே கூறுவதுபோல் குஹையில் அதன் எதிரொலி உண்டாயிற்று. அரசனிடம் அன்பினால் அவன் உயிரைக் காக்க விரும்பி மலையும்கூட அதே விஷயத்தை அவனுக்குக் கூறுவதுபோல் காணப்பட்டதெனக்கவி உத்ப்ரேக்ஷிக்கின்றார்.

निशम्य देवानुचरस्य वाचं मनुष्यदेवः पुनरप्युवाच ।
धेन्वा तदध्यासितकातराक्ष्या निरीक्ष्यमाणः सुतरां दयालुः ॥५२॥

**देवानुचरस्य** - சிவஸேவகனுடைய, **वाचं**-வார்த்தையை, **निशम्य** - கேட்டு, **मनुष्यदेवः** - அரசன், **तदध्यासित कातराक्ष्या**- சிங்கத்தின் பிடிப்பினால் பயந்த கண்களையுடைய, **धेन्वा** - பசுவினால், **निरीक्ष्यमाणः** - பார்க்கப்பட்டு, **सुतरां** - மிகவும், **दयालुः (सन्)** - தயை செய்கின்றவனாய் இருந்துகொண்டு, **पुनः अपि** - மறுபடியும், **उवाच** - சொன்னான்.

(க-து) சிங்கத்தின் பிடிப்பு உறுதியாக இருந்தது. அரசனுடைய வார்த்தையால் மாத்திரம் தனக்கு விடுதலை கிடைக்காதென அது அறிந்தது. தன்னைக் கை விடுவானோ என்று அஞ்சிய அதன் கண்கள் வார்த்தையின்றியே பயத்தைத் தெரிவித்தன.

அவ்வாறு பயந்து பசு நோக்குவதை அறிந்த அரசனது மனம் முன்பு இருந்ததைவிட அதிகம் தயையுடையதாயிற்று. திலீபன், சிவஸேவகனான சிங்கத்தை நோக்கிப் பதில் கூறத் தொடங்கினான்.

क्षतात् किल त्रायत इत्युदग्रः क्षत्रस्य शब्दो भुवनेषु रूढः ।
राज्येन किं तद्विपरीतवृत्तेः प्राणैरुपक्रोशमलीमसैर्वा ॥ ५३ ॥

**क्षतात्** - உபத்திரவத்திலிருந்து, **त्रायते** - காப்பாற்றுகிறான், **इति किल** - என்ற காரணத்தினாலேயன்றோ, **क्षत्रस्य** - க்ஷத்ரியனுக்கு, - **उदग्रः** - சிறந்த, **शब्दः** - (க்ஷத்ரியன் என்ற) பெயர், **भुवनेषु** - உலகங்களில், **रूढः** - பிரசித்தமாயிருக்கின்றது; **तद्विपरीतवृत्तेः** - அப்பதப்பொருளுக்கு விபரீதமான செயலையுடையவனுக்கு, **राज्येन** - ராஜ்யத்தினாலோ, **उपक्रोशमलीमसैः** - (ஜன) நிந்தையினால் களங்கமுற்ற, **प्राणैः वा** - உயிரினாலோ, **किम्** - என்ன பயன்?

(க-து) க்ஷத்ரியன் என்ற பதத்திற்கு 'ஆபத்திலிருந்து காப்பவன்' என்பது பொருள். இப்பொருளில்தான் இச்சொல் பிரசித்தி பெற்றுள்ளது. இப்பொழுது ஆபத்திலுள்ள இப்பசுவைக் காப்பாற்றுவிடில் நான் க்ஷத்ரியன் ஆவேனா? காப்பது க்ஷத்ரியதர்மம். ஸ்தர்மத்தை அனுஷ்டிக்காத க்ஷத்ரியன் உயிருடன் இருப்பதாலோ அரசனாக இருப்பதாலோ பயன் யாது?

இச்சுலோகத்தில் '**एकातपत्रं**' என்ற சுலோகத்திற்கு பதில் கூறப்பட்டது.

कथं नु शक्योऽनुनयो महर्षेः विश्राणनादन्यपयस्विनीनाम् ।
इमामनूनां सुरभेरवेहि रुद्रौजसा तु प्रहृतं त्वयास्याम् ॥ ५४ ॥

**अन्यपयस्विनीनां** - வேறு பசுக்களை, **विश्राणनात्** - கொடுப்பதால், **महर्षेः** - மஹரிஷியின், **अनुनयः** च - கோபத்தை நீக்கு

தல்தான், **कथं नु** - எவ்வாறு, **शक्यः** கூடும்? **इमां** - இப் பசுவை, **सुरभेः** - காமதேனுவிற்கு, **अनूनां** - தாழாததாக, (ஸமமாக), **अवेहि** - அறிந்துகொள். **अस्यां** - இப்பசுவினிடத் தில், **त्वया** - உன்னால் (செய்யப்பட்ட), **प्रहृतं तु** - அடியோ, **रुद्रौजसा** - பரமசிவனது பலத்தினால், **(जातम्)** - உண்டா யிற்று.

(க-து) வேறு பசுக்களைக் கொடுத்து மகரிஷியின் கோபத்தைத் தணிப்பதும் ஸாத்யமன்று. ஏனெனில் கோடிக்கணக்கான பசுத் களும் நந்தினிக்குச் சமம் ஆகா. இது காமதேனுவின் பெண். பெருமையில் அதற்கு ஒப்பானது. நீ இதைப் பிடித்ததுகூட பரம சிவனாது ஆணை உனக்கிருந்ததால்தான் முடிந்தது. மற்ற சிங்கங்கள் இதன் அருகிலும் வருதலும் முடியாது.

இச்சுலோகம் **अथैकधेनोः** என்பதற்குப்பதிலாகஉள்ளது.

நந்தினிக்குச் சமமான பசுக்களிருந்தால் அவைகளைக் கொடுத்து மஹரிஷியின் நஷ்டத்திற்கு ஈடு செய்துவிட லாம் என்பது இங்கு திலீபன் கருத்தன்று. வேறு பசுக்க ளிருந்தாலும் நந்தினியைச் சிங்கத்திற்கு இரையாக விட்டிருக்கமாட்டான். ஆயினும் சிங்கம் கூறிய வாதத்தை ஏற்றுக்கொண்டாலுங்கூட நந்தினியைவிட முடியாதென் பதை இச்சுலோகத்தில் வற்புறுத்துகின்றான். மிகப் பெருமை வாய்ந்தது நந்தினி என்பதும் கருத்தாகும்.

सेयं स्वदेहार्पणनिष्क्रयेण न्याय्या मया मोचयितुं भवत्तः ।
न पारणा स्याद्विहता तवैवं भवेदलुप्तश्च मुनेः क्रियार्थः ॥ ५५ ॥

**सा** - அப்படிப்பட்ட, **इयं** - இப்பசு, **मया** என்னாலே, **स्वदेहार्पणनिष्क्रयेण** - என் சரீரத்தைக் கொடுப்பதாகிய விலை யினால், - **भवत्तः** - உன்னிடமிருந்து, **मोचयितुं** - விடுவிப்ப தற்கு, **न्याय्या** - தகுந்தது. **एवं (सति)** - இவ்வாறு நேர்ந்தால்

**तव** - உன்னுடைய, **पारणा** - போஜனமும், **विहता** - கெடுக்கப்பட்டதாக, **न स्यात्** - ஆகாது. **मुनेः** - முனிவருடைய, **क्रियार्थः च** - ஹோமம் முதலிய பயனும், **अलुप्तः** - குறைவற்றதாக, **भवेत्** - ஆகும்.

(க-து) "நான் கூறுகிறபடி என்னைத் தின்பதால் உனக்கும் உணவு கிடைக்கின்றது. மஹரிஷியின் யாகாதிகாரியமும் குறையாது நடைபெற இப்பசு உதவும். இப்பசுவின் விடுதலைக்காக நான் கொடுக்கும் பொருள் எனது உடலே".

भवानपीदं परवानवैति महान् हि यत्नस्तव देवदारौ ।
स्थातुं नियोक्तुर्न हि शक्यमग्रे विनाश्य रक्ष्यं स्वयमक्षतेन ॥५६॥

**परवान्** - பிறர் வசத்திலிருக்கின்ற, **भवान् अपि** - நீயும், **इदं** - இதை, **अवैति** - அறிகின்றாய். **हि** - ஏனெனில், **तव** - உனக்கு, **देवदारौ** - தேவதாருமரத்தின் விஷயத்தில், **महान्** - அதிக, **यत्नः** - முயற்சி, **(अस्ति)** இருக்கின்றது ; **रक्ष्यं** - காப்பாற்றப்பட வேண்டியபொருளை, **विनाश्य** - நாசம் அடைவித்துவிட்டு, **स्वयं** - தான், **अक्षतेन** - காயமடையாத ஸேவகனால், **नियोक्तुः** - எஜமானனுக்கு, **अग्रे** - எதிரில், **स्थातुं**-நிற்பதற்கு, **न शक्यम् हि** - முடியாதல்லவா?

(க-து) இப்பசுவை இழந்து குருவின் எதிரில் நான் நிற்க விரும்பவில்லை.

"நீ சிவஸேவகன்; நான் வஸிஷ்டரின் ஸேவகன்; நீ காப்பாற்ற வேண்டியது தேவதாரு மரம் ; நான் பாதுகாக்க வேண்டியது இப்பசு. நீ இத்தேவதாருவைச் சிரத்தையுடன் பாதுகாப்பதுபோல நானும் இப்பசுவைக் காப்பாற்ற வேண்டும். இப்பசு அழிந்தபிறகு நான் குருவை எவ்வாறு காண்பது? ஸேவகன் கஷ்டத்தை ஸேவகனாகிய நீயும்

அறிவாய். ஆதலால் என்னை எடுத்துக்கொண்டு பசுவை விடு.'

किमप्यहिंस्यस्तव चन्मतोऽहम् यशश्शरीरे भव मे दयालुः ।
एकान्तविध्वंसिषु मद्विधानाम् पिण्डेष्वनास्था खलु भौतिकेषु ॥५७॥

**किमपि** - அல்லது, **अहं** - நான், **तव** - உனக்கு, **अहिंस्यः** - கொல்லத்தகாதவனாக, **मतः चेत्** - எண்ணப்படுகின்றேனா யின், **मे** - என்னுடைய, **यशश्शरीरे** - கீர்த்தியாகிய சரீரத் தில், **दयालुः** - தயையுடையவனாக, **भव** - ஆவாயாக. **मद्विधानां** - என்போன்றவர்களுக்கு, **एकान्तविध्वंसिषु** - நிச்சய மாக அழிகின்ற, **भौतिकेषु** - பஞ்சபூதங்களாலான, **पिण्डेषु** - சரீரங்களில், **अनास्था खलु** - விருப்ப மில்லையல்லவா?

(க-து) எனக்கு ஹிம்சை செய்யக்கூடாதென உன் கருத்து இருக்குமானால் எனது புகழுடலை அழிக்காதே. இப்பூத உடல் அழி வதைப்பற்றி நான் கவலையுறவில்லை. இவ்வுடல் என்றும் அழியக் கூடியதே. ஆதலால் என் புகழைக் கெடுக்காதே. என்னை உண்டு பசுவை விடு.

संबन्धमाभाषणपूर्वमाहुः वृत्तः स नौ सङ्गतयोर्वनान्ते ।
तद्भूतनाथानुग नार्हसि त्वं सम्बन्धिनो मे प्रणयं विहन्तुम् ॥५८॥

**संबन्धं** - ஸ்நேகத்தை, **आभाषणपूर्वं** - ஸம்பாஷணை யைக் காரணமாயுடையதாக, **आहुः** - சொல்லுகின்றனர். **सः** - அப்படிப்பட்ட ஸ்நேகம், **वनान्ते** - காட்டுப் பிரதேசத்தில், **सङ्गतयोः** - சந்தித்த, **नौ** - நம்மிருவருக்கும், **वृत्तः** - உண்டா யிருக்கிறது. **तत्** - ஆதலால், **भूतनाथानुग** - சிவஸேவகனே, **संबन्धिनः** - நண்பனாகிய, **मे** - என்னுடைய, **प्रणयं** - வேண்டு கோளை, **विहन्तुं** - அழிப்பதற்கு, **नार्हसि** - நீ தகுந்தவனில்லை.

(க-து) நட்பு ஸம்பாஷணையால் உண்டாகின்றதெனப் பெரி யோர் கூறுவர். இவ்வனத்தில் சந்தித்து இவ்வளவு நேரம் பேசிய

நாமிருவரும் இப்பொழுது நண்பர்களாகின்றோம். ஆதலால் உனது நண்பனாகிய எனது வேண்டுகோளை மறுக்காது நான் விரும்பியபடி செய்.

तथेति गामुक्तवते दिलीपः सद्यः प्रतिष्टम्भविमुक्तबाहुः ।
स न्यस्तशस्त्रो हरये स्वदेहमुपानयत् पिण्डमिवामिषस्य ॥ ५९ ॥

**तथेति** - அவ்வாறே என, **गां** - வார்த்தையை, **उक्तवते** - சொல்லிய, **हरये** - சிங்கத்தின் பொருட்டு, **सद्यः** - உடனே, **प्रतिष्टंभविमुक्तबाहुः** - தடையினின்றும் விடுபட்ட கையையுடைய, **सः** - அந்த, **दिलीपः** - திலீபன், **न्यस्तशस्त्रः** - கீழே வைக்கப்பட்ட ஆயுதமுடையவனாக இருந்துகொண்டு, **स्वदेहं** - தனது தேகத்தை, **आमिषस्य** - மாம்ஸத்தின், **पिण्ड इव** - உருண்டையைக் கொடுப்பதுபோல, **उपानयत्** - கொடுத்தான்.

(க-து) திலீபன் தனது உடலைச் சிங்கத்திற்கு அர்ப்பணம் செய்தான்.

அரசனுடைய வார்த்தையை, 'அவ்வாறே' எனக் கூறிச் சிங்கம் ஏற்றுக்கொண்டு பசுவை விட்டது. அரசனும் கையின்தடை நீங்கப்பெற்றவனாக, ஆயுதத்தைக் கீழே வைத்துவிட்டுத் தனது உடலைச் சிங்கத்திற்கு உணவாக அர்ப்பணம் செய்தான்.

तस्मिन् क्षणे पालयितुः प्रजानामुत्पश्यतः सिंहनिपातमुग्रम् ।
अवाङ्मुखस्योपरि पुष्पवृष्टिः पपात विद्याधरहस्तमुक्ता ॥ ६० ॥

**तस्मिन्** - அந்த, **क्षणे** - க்ஷணத்தில், **उग्रं** பயங்கரமான, **सिंहनिपातं** - சிங்கத்தின் பாய்தலை (பாய்ச்சல்), **उत्पश्यतः** - எதிர்பார்க்கின்றவனும், **अवाङ्मुखस्य** - கீழ்நோக்கிய முகமுடையவனும், **प्रजानां** - பிரஜைகளின், **पालयितुः उपरि** - ரக்ஷகனுமாகிய அரசன்மேல், **विद्याधरहस्तमुक्ता** - வித்யாதரர்க

ளின் கைகளிலிருந்து போடப்பட்ட, **पुष्पवृष्टिः** - பூமாரி, **पपात** - விழுந்தது.

(க-து) சிங்கம் பாய்வதற்கு அதிக நேரமாகாததால் தனது உடலை அர்ப்பணம் செய்த க்ஷணத்திலேயே சிங்கம் தன்மேல் பாய்வதைத் திலீபன் எதிர்பார்த்தான். ஆனால் அவன்மேல் சிங்கம் விழவில்லை. தன்னலமற்ற அவனது தியாகத்தைக் கொண்டாடிய தேவர்களின் பூமாரி அவன்மேல் விழுந்து அவனுக்குப் பேராச்சரியத்தை விளைவித்தது.

उत्तिष्ठ वत्सेत्यमृतायमानम् वचो निशम्योत्थितमुत्थितः सन् ।
ददर्श राजा जननीमिव स्वां गामग्रतः प्रस्त्रविणीं न सिंहम् ॥६१॥

**राजा** - அரசன், "**वत्स** - குழந்தாய், **उत्तिष्ठ** எழுந்திரு" **इति** - என்று, **उत्थितं** - உண்டான, **अमृतायमानं** - அம்ருதம் போன்ற, **वचः** - வார்த்தையை, **निशम्य** - கேட்டு, **उत्थितः सन्** - எழுந்தவனாக, **अग्रतः** - எதிரில், **प्रस्त्रविणीं** - பாலைப் பெருக்குகின்ற, **गां** - பசுவை, **स्वां** - தன்னுடைய, **जननीं इव** - தாயைக் காண்பதுபோல - **ददर्श** கண்டான்; **सिंहं** - சிங்கத்தை, **न (ददर्श)** - காணவில்லை.

(க-து) "குழந்தாய் எழுந்திரு" என்ற குளிர்ந்த சொற்களைக் கேட்டு அரசன் தலைநிமிர்த்தியபொழுது சிங்கத்தைக்காணாது நந்தினியை மாத்திரமே கண்டான்.

तं विस्मितं धेनुरुवाच साधो मायां मयोद्भाव्य परीक्षितोऽसि ।
ऋषिप्रभावान्मयि नान्तकोऽपि प्रभुः प्रहर्तुं किमुतान्यहिंस्राः ॥६२॥

**विस्मितं** - ஆச்சர்யமடைந்த, **तं** - அந்த திலீபனை நோக்கி, **धेनुः** - நந்தினி, **उवाच** - கூறிற்று: "**साधो** - ஸாதுவே, **मया** - என்னால், **मायां** - மாயையை, **उद्भाव्य** - உண்டாக்கி, **परीक्षितः** - பரீக்ஷை செய்யப்பட்டவனாக, **असि** - இருக்கிறாய். **ऋषिप्रभावात्** - மஹரிஷியின் பிரபாவத்தினால்,

**मयि** - என்னிடத்தில், **अन्तकः अपि** - யமனும்கூட, **प्रहर्तुं** - அடிக்க, **न प्रभुः** சக்தியுடையவனல்லன்; **अन्यहिंस्राः** - மற்ற துஷ்டப்பிராணிகள், **किमुत** - மிகவும், **न प्रभवः** சக்தியுடையன அல்ல.

(க-து) நந்தினி, அரசனை நோக்கி, "பரோபகாரம் செய்வதை ஸ்வபாவமாக உடைய அரசனே, உன்னைப் பரீக்ஷிப்பதற்காகவே இப்படிப்பட்ட மாயையை (பொய்யான தோற்றத்தை) உண்டாக்கினேன். ரிஷியின் மஹிமையால் நான் நன்கு பாதுகாக்கப்பட்டுள்ளேன்; எமனும் என்னை ஒன்றும் செய்யமுடியாது. மற்ற ஜந்துக்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டாம்.

भक्त्या गुरौ मय्यनुकम्पया च प्रीतास्मि ते पुत्र वरं वृणीष्व ।
न केवलानां पयसां प्रसूतिम् अवेहि मां कामदुघां प्रसन्नाम् ॥६३॥

"**पुत्र**-புத்ரனே, **गुरौ** - குருவினிடத்திலுள்ள, **भक्त्या**-பக்தியினாலும், **मयि** என்னிடத்திலுள்ள, **अनुकम्पया च**-கருணையினாலும், **ते** -உன்பொருட்டு, **प्रीताऽस्मि** பிரீதியடைந்தவளாக இருக்கிறேன்; **वरं** - வரத்தை, **वृणीष्व** - கேள். **मां** - என்னை, **केवलानां पयसां** - பாலுக்கு மாத்திரமே, **प्रसूतिं** - காரணமாக, **न अवेहि** - எண்ணாதே. **प्रसन्नां** - ஸந்தோஷமடைந்த என்னை, **कामदुघां** - விரும்பியதைக் கறப்பவளாக, **अवेहि** - அறிந்துகொள்.

(க-து) "மகனே, உன்னுடைய குரு பக்தியைக் கண்டேன். என்னிடம் நீ கொண்டுள்ள கருணையையும் உணர்ந்தேன். உன் விஷயத்தில் நான் மிகவும் பிரீதி யடைந்துள்ளேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேள். நான் பால் மாத்திரம்தான் தரக்கூடியவள் என நினைக்கவேண்டாம். நான் எதையும் தரமுடியும்".

ततः समानीय स मानितार्थी हस्तौ स्वहस्तार्जितवीरशब्दः ।
वंशस्य कर्तारमनन्तकीर्तिम् सुदक्षिणायां तनयं ययाचे ॥ ६४ ॥

**ततः** பிறகு, **मानितार्थी**- கௌரவிக்கப்பட்ட யாசகர்களை யுடையவனும், **स्वहस्तार्जितवीरशब्दः** - தன் கையினால் ஸம்பா திக்கப்பட்ட வீரன் என்ற பதமுடையவனுமான, **सः**- அவன், **हस्तौ** கைகளை, **समानीय** - ஒன்றுசேர்த்து, **वंशस्य** - வம்சத்தை, **कर्तारं**-(விருத்தி) செய்கின்றவனும், **अनन्तकीर्तिं**- சாசுவதமான புகழுடையவனுமான, **तनयं** - புத்திரனை, **सुदक्षिणायां** - ஸுதக்ஷிணையிடத்தில், (பிறக்கும்படி), **ययाचे** - வேண்டினான்.

(க-து) திலீபன், விரும்பிவந்தவர்களின் விருப்பத்தை எல் லாம் கௌரவத்துடன் பூர்த்தி செய்பவன். அத்தகைய திலீபன் இப்பொழுது யாசகனாக இருப்பவன். கைகளைக் குவித்து, வம்சத்தை விருத்தி செய்யக்கூடியவனும் அழிவற்ற புகழுடையவனுமான மகன் ஸுதக்ஷிணையினிடம் தனக்குப் பிறக்கவேண்டுமென நந்தினியி னிடம் வரம் கேட்டான்.

सन्तानकामाय तथेति कामम् राज्ञे प्रतिश्रुत्य पयस्विनी सा ।
दुग्ध्वा पयः पत्रपुटे मदीयम् पुत्रोपभुङ्क्ष्वेति तमादिदेश ॥ ६५ ॥

**सा**-அந்த, **पयस्विनी**-நந்தினி, **सन्तानकामाय**-ஸந்ததியை விரும்புகின்ற, **राज्ञे** - அரசனுக்கு, **तथा इति** - அவ்வாறே என, **कामं** - விருப்பத்தை, **प्रतिश्रुत्य** - பிரதிக்ஞை செய்து, "**पुत्र** - புத்ரனே, **मदीयं** - என்னுடைய, **पयः**-பாலை, **पत्रपुटे** - இலையாலான பாத்திரத்தில், **दुग्ध्वा** - கறந்து, **उपभुङ्क्ष्व** - குடி." **इति** - என, **तम्** - அவனை, **आदिदेश** - கட்டளை யிட்டது.

(க-து) அரசனது வேண்டுகோளை அங்கீகரித்து நந்தினி, தனது பாலை இலைத்தொன்னையில் கறந்து சாப்பிடும்படி கூறிற்று.

திலீபன் இதுவரை நந்தினியின் பாலைச் சாப்பிட வில்லை என்பதும் இதனால் அறியப்படும். காட்டில் பாத்திரம்

கிடைக்காதாகையால் இலைத்தொன்னையில் சாப்பிடும்படி கூறிற்று.

वत्सस्य होमार्थविधेश्च शेषम् ऋषेरनुज्ञामधिगम्य मातः ।
ऊधस्यमिच्छामि तवोपभोक्तुम् षष्ठांशमुर्व्या इव रक्षितायाः ॥६६॥

**मातः** - தாயே, **वत्सस्य** - கன்றுகுடித்ததின், **शेषं** - மிகுதியும், **होमार्थविधेः** - ஹோமானுஷ்டானத்தின், **शेषं च** - மிகுதியுமான, **तव ऊधस्यं** - உன்னுடைய பாலை, **ऋषेः** - மஹரிஷியின், **अनुज्ञां** - அனுமதியை, **अधिगम्य** - அடைந்து, **रक्षितयाः** - காப்பாற்றப்பட்ட, **उर्व्याः** - பூமியின், **षष्ठांशं इव** - ஆறுவதுபகுதியை (அடைவது) போல, **उपभोक्तुं** - அனுபவிக்க, **इच्छामि** விரும்புகிறேன்.

(க-து) "மகரிஷியின் அனுமதி பெற்ற பின், கன்றுக்கும் ஹோமத்திற்கும் சென்றது போக எஞ்சிய பாலைக் குடிக்க விரும்புகிறேன். இப்பொழுது குடிக்க விரும்பவில்லை" என அரசன் பதில் கூறினான்.

அரசன் உலகமுறை அறிந்தவன். ஆதலால், பாலைப் பருகும்படி நந்தினி கூறியபொழுதும், அதற்கும் எஜமானரான ரிஷியின் அனுமதியின்றிப் பருகுவது உசிதமன்று என்று நினைத்தான். பாலில் முதல் உரிமை கன்றுக்கும் இரண்டாவது உரிமை ஹோமத்திற்குமுண்டு என்பதையும் எண்ணிப் பிறகு பருகுவதாகக் கூறினான். நந்தினியின் பாலில் பங்குபெற தனக்கும் உரிமையுண்டு என்பதையும் 'காப்பாற்றப்பட்ட பூமியில் ஆறில் ஒரு பாகம் பெறுவது போல' என்ற உபமானத்தின் மூலம் அரசன் குறிப்பிக்கின்றான்.

इत्थं क्षितीशेन वसिष्ठधेनुः विज्ञापिता प्रीततरा बभूव ।
तदन्विता हैमवताच्च कुक्षेः प्रत्याययावाश्रममश्रमेण ॥ ६७ ॥

**इत्थं**-இவ்வாறு, **क्षितीशेन**-அரசனால், **विज्ञापिता** - விண்ணப்பிக்கப்பட்ட, **वसिष्ठधेनुः** - வசிஷ்டரின்பசு, **प्रीततरा** - மிகவும் ப்ரீதியடைந்ததாக, **बभूव** - ஆயிற்று. **तदन्विता** - அவ்வரசனோடு கூடியதாக, **हैमवतात्** - ஹிமவானுடையதான, **कुक्षेः** குகையிலிருந்து, **अश्रमेण** ச்ரமமின்றி, **आश्रमं** - ஆச்ரமத்தை. **प्रत्याययौ** - வந்து அடைந்தது.

.(க-து) முன்பே பணிவிடையால் அரசனிடம் அன்புகொண்ட பசு, பொருத்தமறிந்து அவன் கூறிய பதிலைக் கேட்டபொழுது மிக மகிழ்ச்சியுற்றது. பின் அது அரசனுடன் ஹிமாலயத்தின் குகையிலிருந்து சிரமமின்றி ஆச்ரமம் சென்றது.

तस्याः प्रसन्नेन्दुमुखः प्रसादम् गुरुर्नृपाणां गुरवे निवेद्य ।
प्रहर्षचिह्नानुमितं प्रियायै शशंस वाचा पुनरुक्तयेव ॥ ६८ ॥

**प्रसन्नेन्दुमुखः**-தெளிவான சந்திரன்போல முகமுடையவனும், **नृपाणां** - அரசர்களுக்கு, **गुरुः** - குருவுமான திலீபன் **प्रहर्षचिह्नानुमितं** - ஸந்தோஷ அடையாளங்களினால் ஊஹிக்கப்பட்ட, **तस्याः** - நந்தினியின், **प्रसादं** - அனுக்ரஹத்தை, **पुनरुक्तया** - மறுமுறை சொல்லப்பட்டதுபோன்ற, **वाचा** - வார்த்தையினால், **गुरवे** - குருவின்பொருட்டு, **निवेद्य** - தெரிவித்தபிறகு, **प्रियायै** - மனைவியின் பொருட்டு, **शशंस** - சொன்னான்.

(க-து) நந்தினியினிடம் வரம்பெற்ற திலீபனது முகம் தெளிவான சந்திரன்போல் பிரகாசித்தது. அவனது முகத்தெளிவே நந்தினி செய்த அருளை எல்லோருக்கும் தெரிவித்தது. அவன் வார்த்தை

களால் கூறியது மறுமுறை கூறியதுபோல் இருந்தது. நந்தினியின் அருளை முதலில் மஹரிஷிக்கும் பிறகு மனைவிக்கும் தெரிவித்தான்.

स नन्दिनीस्तन्यमनिन्दितात्मा सद्वत्सलो वत्सहुतावशेषम् ।
पपौ वसिष्ठेन कृताभ्यनुज्ञः शुभ्रं यशो मूर्तमिवातितृष्णः ॥ ६९ ॥

**अनिन्दितात्मा** - உயர்ந்த ஸ்வபாவமுடையவனும், **सद्वत्सलः** - ஸாதுக்களிடம் அன்புடையவனும், **वसिष्ठेन** - வஸிஷ்டரால், **कृताभ्यनुज्ञः** - செய்யப்பட்ட அனுமதியை யுடையவனுமாகிய, **सः** - அவ்வரசன், **वत्सहुतावशेषं**-கன்று, ஹோமம் இவைகளின் மிகுதியும், **शुभ्रं** - வெண்மையான தும், **मूर्तम्** - உருவமுடைய, **यशः इव** - (அவனது) கீர்த்தியைப்போல் இருப்பதுமான, **नन्दिनीस्तन्यं**-நந்தினியின் பாலை, **अतितृष्णः** - மிகவும் ஆவலுடையவனாக, **पपौ** - பானம் செய்தான்.

(க-து) உன்னதமான ஸ்வபாவமுடையவன் திலீபன். நல்ல வர்களிடம் அன்புடையவன். ஆதலால் பெரியோர்களின் அனுமதி பெற்று கன்றுக்கும் ஹோமத்திற்கும் செலவழிந்தது போக எஞ்சிய பாலைப்பானம் செய்தான். வெண்மையான அப் பால், உருவெடுத்த அவனது புகழ்போல் இருந்ததெனக் கவி கூறுகின்றார்.

प्रातर्यथोक्तव्रतपारणान्ते प्रास्थानिकं स्वस्त्ययनं प्रयुज्य ।
तौ दम्पती स्वां प्रति राजधानीं प्रस्थापयामास वशी वसिष्ठः ॥

**वशी** - இந்திரியங்களையடக்கிய, **वसिष्ठः** - வஸிஷ்டர், **प्रातः**-காலையில், **यथोक्तव्रतपारणान्ते** - முன்சொன்ன விரதத்தி னுடைய பாரணையின் முடிவில், **प्रास्थानिकं** - பிரயாண காலத்திற்குத்தகுந்த, **स्वस्त्ययनं** - ஆசீர்வாதத்தை, **प्रयुज्य** - செய்து, **तौ** - அந்த, **दम्पती**-தம்பதிகளை, **स्वां**-தங்களுடைய,

**राजधानीं प्रति** - ராஜதானியைக் குறித்து, **प्रस्थापयामास** - புறப்படச் செய்தார்.

(க-து) மறுநாள் காலையில், திலீபன் அனுஷ்டித்த விரதத்தின் முடிவில் பாரணை செய்யும்படி செய்து, பிராயணத்திற்குத் தகுந்த ஆசீர்வாதத்தைச் செய்து, வஸிஷ்டர், திலீபனையும் ஸுதக்ஷிணை யையும் தலைநகருக்கு அனுப்பினார்.

प्रदक्षिणीकृत्य हुतं हुताशमनन्तरं भर्तुररुन्धतीं च ।
धेनुं सवत्सां च नृपः प्रतस्थे सन्मङ्गलोदग्रतरप्रभावः ॥ ७१ ॥

**नृपः** - அரசன், **हुतं** - ஹோமம் செய்யப்பட்ட, **हुताशं** - அக்னியையும், **भर्तुः** - கணவராகிய வஸிஷ்டருக்கு, **अनन्तरं** - பிறகு, **अरुन्धतीं च** - அருந்ததியையும், **सवत्सां** - கன்றோடு கூடிய, **धेनुं च** - பசுவையும், **प्रदक्षिणीकृत्य** - ப்ரதக்ஷிணம் செய்துவிட்டு, **सन्मङ्गलोदग्रतरप्रभावः** - நல்ல மங்களகரமான கார்யங்களால் மிகவும் விருத்தியடைந்த பிரபாவமுடையவனாக, **प्रतस्थे** - புறப்பட்டான்.

(க-து) திலீபன், ஹோமக்னியையும், குருவையும், குருபத்னி யையும், கன்றுடன் கூடிய நந்தினியையும் வணங்கிப்பின் புறப் பட்டான்.

श्रोत्राभिरामध्वनिना रथेन स धर्मपत्नीसहितः सहिष्णुः ।
ययावनुद्घातसुखेन मार्गं स्वेनेव पूर्णेन मनोरथेन ॥ ७२ ॥

**धर्मपत्नीसहितः** - தர்மபத்னியான ஸுதக்ஷிணையுடன் கூடியவனும், **सहिष्णुः** - (விரதச்ரமத்தை) ஸஹிக்கின்ற வனுமாகிய, **सः** - அவ்வரசன், **श्रोत्राभिरामध्वनिना** - காதை மகிழ்விக்கின்ற த்வனியையுடையதும், **अनुद्घातसुखेन**-அசை வில்லாததினால் ஸுகமாக இருக்கின்றதுமான, **रथेन** - ரதத்

திஞல், **स्वेन** - தன்னுடைய, **पूर्णेन** - பூர்த்தியடைந்த, **मनोरथेन इव** - மனோரதத்துடன் செல்வதுபோல், **मार्गं** - வழியே, **ययौ** - சென்ருன்.

(க-து) விரத சிரமத்தை யெல்லாம் பொறுத்து அதன் முடிவைக் கண்ட திலீபன், இனிய சத்தமுள்ள ரதத்தில் தனது நகரம் சென்ருன்.

திலீபன் ரதத்தில் சென்றது அவனது மனோரதத்துடன் செல்வதாகக் கூறப்படுகின்றது.

तमाहितौत्सुक्यमदर्शनेन प्रजाः प्रजार्थव्रतकर्शिताङ्गम् ।
नेत्रैः पपुः तृप्तिमनाप्नुवद्भिः नवोदयं नाथमिवौषधीनाम् ॥ ७३ ॥

**अदर्शनेन** - காணுமையிஞல், **आहितौत्सुक्यं** - (ஜனங்கள் மனத்தில்) உண்டாக்கப்பட்ட ஆவலையுடையவனும், **प्रजार्थव्रत कर्शिताङ्गं** - ஸந்ததிக்கான விரதத்திஞல் இளைத்த சரீரமுடையவனும், **नवोदयं** - புதிய க்ஷேமத்தை யுடையவனுமான, **तं** - அவனை, **प्रजाः** - ஜனங்கள், **तृप्तिं** - திருப்தியை, **अनाप्नुवद्भिः** - அடையாத, **नेत्रैः** - கண்களால், **नवोदयं** - புதிதான உதயமுடைய, **ओषधीनां** - ஔஷதிகளுக்கு, **नाथं इव** - அரசனை சந்திரனைப் போல, **पपुः** பருகிஞர்கள். (கண்டனர்)

(க-து) பிரஜைகள் திலீபனைப் புதிதாக உதயமான சந்திரனைக் காண்பதுபோல் ஆவலுடன் கண்டனர்.

அரசனை இதுவரை காணுமலிருந்ததால் ஜனங்களது ஆவல் அவனைக் காண்பதில் அதிகமாயிற்று. பிரஜைகளின் நன்மைக்காகவே விரதத்தை அனுஷ்டித்து அவனது உடல் இளைத்திருந்தது.

पुरन्दरश्रीः पुरमुत्पताकम् प्रविश्य पौरैरभिनन्द्यमानः ।
भुजे भुजङ्गेन्द्रसमानसारे भूयः स भूमेर्धुरमाससञ्ज ॥ ७४ ॥

**पुरन्दरश्रीः** - இந்திரனுக்குச் சமமான செல்வமுடைய, **सः** - அவ்வரசன், **पौरैः** - நகரஜனங்களினால், **अभिनन्द्यमानः**- கொண்டாடப்பட்டவனாக, **उत्पताकं**-உயர்த்தப்பட்ட கொடிகளையுடைய, **पुरं** - நகரத்தில், **प्रविश्य** - பிரவேசித்து, **भुजङ्गेन्द्र समानसारे** - ஆதிசேஷனுக்குச் சமமான பலத்தையுடைய, **भुजे** - தனது புஜத்தில், **भूयः** - மறுபடியும், **भूमेः** - பூமியின், **धुरं** - பாரத்தை, **आससञ्ज** - பதியவைத்தான்.

(க-து) திலீபனை வரவேற்க ஜனங்கள் கொடியை உயர்த்திக் கட்டி நகரத்தை அழகு செய்திருந்தனர். நகரில் பிரவேசித்த அரசன், மந்திரிகளிடம் ஒப்படைத்திருந்த ராஜ்யத்தை மறுபடியும் ஏற்றுக்கொண்டான்.

ஆதிசேஷன் பூமியைத் தாங்குவதாகப் புராணம் கூறுகின்றது. திலீபனுடைய புஜம் பூபாரத்தைத் தாங்கும் திறமையுடையதாக இருந்ததால் ஆதிசேஷனுக்கு ஒப்பிடப் பட்டுள்ளது.

अथ नयनसमुत्थं ज्योतिरत्रेरिव द्यौः
सुरसरिदिव तेजो वह्निनिष्ठ्यूतमैशम् ।
नरपतिकुलभूत्यै गर्भमाधत्त राज्ञी
गुरुभिरभिनिविष्टं लोकपालानुभावैः ॥ ७५ ॥

**अथ** - பிறகு, **द्यौः** - ஆகாசம், **अत्रेः** - அத்ரிமஹர்ஷியின், **नयनसमुत्थं** - கண்களிலிருந்து எழுந்த, **ज्योतिः इव** - ஒளியாகிய சந்திரனை (தரித்தது)போலும், **सुरसरित्** - கங்கா

நதி, **वह्नि निष्ठ्यूतम्** - அக்னிதேவனால் கொடுக்கப்பட்ட, **ऐशं** - பரமசிவனுடைய. **तेजः इव** - தேஜஸாகிய ஸுப்ரஹ்மண்யனை (தரித்தது) போலும், **राज्ञी** - அரசியான ஸுதக்ஷிணை, **नरपति कुलभूत्यै** - ராஜகுலத்தின் க்ஷேமத்தின்பொருட்டு, **गुरुभिः** - அதிகமான, **लोकपालानुभावैः** - லோகபாலகர்களின் அம்சங்களினால், **अभिनिविष्टं** - பிரவேசிக்கப்பட்ட, **गर्भं** - கர்ப்பத்தை, **आधत्त** - தரித்தாள்.

(க-து) ஆகாசம் சந்திரனை தரித்ததுபோலும் கங்கை ஸுப்ரஹ்மண்யரைத் தரித்ததுபோலும் ஸுதக்ஷிணை கர்ப்பத்தை தரித்தாள்.

பிரம்ம புத்ரராகிய அத்ரி, தவம் செய்யும்பொழுது அவரது கண்களிலிருந்து நீர்த்துளிகள் விழுந்தனவென்றும், அத்துளிகளை திக்தேவிகள் என்ற திசைகளின் தேவதைகள் சேர்த்து எடுத்தனர் என்றும், அந்நீர்த்துளிகள் ஒன்று சேர்ந்து சந்திரனாக மாறியபொழுது ஆகாசம் அதைக் தரித்ததென்றும் புராணம் கூறுகின்றது.

பரமசிவனது கண்ணிலிருந்து ஆறு தீப் பொறிகள் வெளிவந்தன வென்றும், அப்பொறிகளை அக்னிதேவன் கங்கையினிடம் கொடுத்தான் எனவும், அப்பொறிகளே பின் ஆறுமுகமுடைய ஸ்கந்தபிரானாக உருவெடுத்தன என்றும் கூறுவர். ஸுதக்ஷிணையின் மகன் சந்திரன் போல் அழகாகவும், ஸுப்ரஹ்மண்யரைப்போல் பலம் பொருந்திய வீரனாகவும் ஆவான் என்பது இவ்விரண்டு உபமானங்களால் பெறப்படும். ஸுதக்ஷிணையின் கர்ப்பத்தில் இருந்த சிசு திக்பாலகர்களின் அம்சம் உடையதாகவும் இருந்தது.

லோகபாலகர்கள் :— இந்திரன், அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என எண்மர். இவர்களுடைய சக்தி அரசனிடம் பிரவேசிப்பதாக மனு கூறுவர்.

इति श्रीकालिदासकृतौ रघुवंशे महाकाव्ये

द्वितीयः सर्गः

---

|| श्रीः ||

# || रघुवंशः ||

## तृतीयः सर्गः

अथेप्सितं भर्तुरुपस्थितोदयं सखीजनोद्वीक्षणकौमुदीमुखम् ।
निदानमिक्ष्वाकुकुलस्य संततेः सुदक्षिणा दौर्हृदलक्षणं दधौ ॥ १ ॥

**अथ** - பிறகு, **सुदक्षिणा** - ஸுதக்ஷிணை, **उपस्थितोदयं** - தக்க காலத்தில் நேர்ந்ததும், **भर्तुः** - கணவனை திலீபனுக்கு, **ईप्सितं** - மிக விருப்பமானதும், **सखीजन उद्वीक्षण कौमुदीमुख**- தோழியருடைய கண்களுக்கு நிலவின் தோற்றம் போன்றதும், **इक्ष्वाकुकुलस्य**-இக்ஷ்வாகு வம்சத்தின், **संततेः**-தொடர்ச்சிக்கு, **निदानं** - காரணமுமான, **दौर्हृदलक्षणं** - கர்ப்பத்தின் அறிகுறியை, **दधौ** - தரித்தாள்.

(க-து) திலீபனின் மனைவி ஸுதக்ஷிணை கர்ப்பந்தரித்தாள். அவள் கர்ப்பிணியாயிருந்தாள் என்பதைக்காட்டும் குறிகள் அவளிடம் தோன்றலாயின. ஜனங்களின் கண்களுக்கு நிலவின் தோற்றம் ஆனந்தமளிப்பது போல் ஸுதக்ஷிணையின் அருகிலுள்ள தோழிகளுகளுக்குக் கர்ப்பத்தின் அறிகுறிகள் ஆனந்தமளித்தன. இக்ஷ்வாகுவம்சம் அழிவுறாமல் தொடர்ந்து நிலைபெறும் என்ற நம்பிக்கை அளிப்பதாயிருந்தன. இக்குறிகளைக்கண்ட மன்னன் மனம் மிகமகிழ்வுற்றது.

இரண்டுமுதல் 12-வது சுலோகம்வரை, ஸுதக்ஷிணை கருவுற்றிருந்ததைப்பற்றிக் கூறப்படுகிறது.

शरीरसादादसमग्रभूषणा मुखेन सालक्ष्यत लोध्रपाण्डुना ।
तनुप्रकाशेन विचेयतारका प्रभातकल्पा शशिनेव शर्वरी ॥ २ ॥

**शरीरसादात्** - உடலின் மெலிவினால், **असमग्रभूषणा** - குறைந்த அணிகளையுடைய, **सा** - அந்த ஸுதக்ஷிணை, **लोध्रपाण्डुना** - லோத்ர மலர்போல வெண்மையான, **मुखेन** - முகத்துடன், **विचेयतारका** - சில நக்ஷத்திரங்களையுடையதும், **प्रभातकल्पा** - பொழுதுவிடியும் தறுவாயிலுள்ள, **शर्वरी** - இரவானது, **तनुप्रकाशेन**-குறைந்த ஒளியையுடைய, **शशिना इव** - சந்திரனுடன் இருப்பதுபோல, **अलक्ष्यत** - காணப்பட்டாள்.

(க-து) ஸுதக்ஷிணை கர்ப்பவதியாக இருக்கையில் அவளது தோற்றம் எவ்வாறிருந்தது என்று இந்தச்லோகத்தில் கூறப்படுகிறது. அவளுடைய உடல் மிக மெலிவுற்று இருந்தது; ஆபரணங்களை அணியக்கூட வலிமை இல்லாததால்மங்கலம்கருதிச்சில அணிகளையே அவள் அணிந்திருந்தாள். முகம் வெண்மை நிறங் கொண்டு விளங்கியது. கர்ப்பவதிகளின் முகம் வெளுத்தல் இயல்பு. இத்தோற்றத்தைக் கவி விடிவானத்திற்கு ஒப்பிடுகிறார். விடியற்காலையில் ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள் பல தெரியா. சந்திரனின் ஒளி குன்றி வெளுத்துத் தோன்றுவான். அதைப்போல ஸுதக்ஷிணையின் மேனியில் ஆபரணங்கள் அதிகமில்லை. முகம் விடியற்காலை சந்திரனைப் போலவே ஒளிகுன்றி வெளுத்துக் காணப்பட்டது.

तदाननं मृत्सुरभि क्षितीश्वरो रहस्युपाघ्राय न तृप्तिमाययौ ।
करीव सिक्तं पृषतैः पयोमुचां शुचिव्यपाये वनराजिपल्वलम् ॥३॥

**क्षितीश्वरः** - பூமிக்கு அரசனாகிய திலீபன், **रहसि** - தனிமையில், **मृत्सुरभि** - மண்ணின் மணமுடைய, **तदाननं** - அவளது முகத்தை, **उपाघ्राय** - மோந்து,—**शुचिव्यपाये**-வெய்யிற்கால முடிவில், **पयोमुचां** - மேகங்களுடைய, **पृषतैः** - நீர்த்துளிகளால், **सिक्तं** - நனைக்கப்பட்ட, **वनराजिपल्वलं** - காட்டிலுள்ள சிறு தடாகத்தை, (**उपाघ्राय** - மோந்து) **करी इव**-யானை திருப்தியடையாததுபோல, **तृप्तिं** - திருப்தியை, **न आययौ** - அடையவில்லை.

(க-து) திலீபன், அவனது மனைவி கருவுற்றிருந்ததை அறிந்து மிக மகிழ்வெய்தினான் என இச்சுலோகத்தில் கூறப்படுகிறது.

கருவுற்றிருக்கையில் ஸ்திரீகள், சாம்பல் மண் முதலியவற்றில் விருப்பங்கொண்டு அவைகளைத்தின்பதுண்டு. அதனால் அவர்களது வாய் அவர்கள் தின்ற மண் முதலிய பொருள்களின் மணமுடையதாக இருக்கும். ஸுதக்ஷிணை மண்ணைத் தின்றதால் அவளது வாயும் மண் வாசனையுள்ளதாக இருந்தது. வெய்யிற்காலத்தில் உலர்ந்து நீரின்றி இருக்கும் வனதடாகங்களில் கோடைகாலம் முடிந்து மழைக்காலம் தொடங்கியதும் மேகங்கள் மழை பொழிய, உலர்ந்த மண்ணில் நீர்த் துளிகள் வீழ்ந்ததும் ஒருவகையான மண்வாசனை உண்டாகும். அவ் வாசனையை மோந்து பார்த்துக் காட்டிலுள்ள யானைகள் மேன்மேலும் மண் வாசனையை முகரவிரும்பும். அதுபோல திலீபனும் ஸுதக்ஷிணை யின் முகத்திலிருந்து எழுகின்ற மண் வாசனையை உணர்ந்தான்.

दिवं मरुत्वानिव भोक्ष्यते भुवं दिगन्तविश्रान्तरथो हि तत्सुतः ।
अतोऽभिलाषे प्रथमं तथाविधे मनो बबन्धान्यरसान्विलङ्घ्य सा ॥

**मरुत्वान्** - இந்திரன், **दिवं इव** ஸ்வர்க்கத்தை அனுபவிப்பதுபோல, **तत्सुतः** - அந்த ஸுதக்ஷிணையின் மகன், **दिगन्तविश्रान्तरथः** - திசைகளின் முடிவுவரை செல்லும் தேரையுடையவனாக, **भुवं** - பூமியை, **भोक्ष्यते हि** - அனுபவிப்பானன்றோ; **अतः** - அதனால், **प्रथमं** - முதலில், **सा** - அந்த ஸுதக்ஷிணை, **तथाविधे**- அவ்வகையான, **अभिलाषे** பொருளில், **अन्यरसान्** - மற்ற பொருள்களை, **विलङ्घ्य** - விட்டு, **मनः** - மனத்தை, **बबन्ध** - வைத்தாள்.

(க-து) ஸுதக்ஷிணை மண்ணைத் தின்றதற்குக் காரணத்தைக் கவி புனைந்து கூறுகிறார்.

ஸுதக்ஷிணையின் கருவிலுள்ள மகன், பிற்காலத்தில் இப் பரந்த உலகம் முழுவதையுமே, தேவேந்திரன் ஸ்வர்க்கத்தை ஆள்வதுபோல், ஆளப்போகின்றானென்ற காரணத்தினால் இப்பொழுதே அந்நிலத்தின் தொடர்பு அவனுக்கு ஏற்பட்டுமென்று நினைத்தவள்

போல, ஸுதக்ஷிணை மண்ணைத்தின்றாள் என்று கூறுகிறார் கவி. அரசியான ஸுதக்ஷிணைக்குப் பல்சுவைப் பொருள்கள் எளிதிற் கிடைக்கக் கூடுமாயினும் அவள் அவைகளை யெல்லாம் விரும்பாமல் மண்ணிலே விருப்பங்கொண்டது இக்காரணத்தினால் தான் போலும் எனத்தோன்றியது.

न मे ह्रिया शंसति किंचिदीप्सितं स्पृहावती वस्तुषु केषु मागधी ।
इति स्म पृच्छत्यनुवेलमादृतः प्रियासखीरुत्तरकोसलेश्वरः ॥ ५ ॥

"**मागधी** - மகதராஜனின் மகள் ஸுதக்ஷிணை, **ह्रिया** - வெட்கத்தினால், **ईप्सितं** - (அவள்) விரும்பிய **किञ्चित्**-எதையும், **मे** - எனக்கு, **न शंसति** - சொல்லுவதில்லை; **केषु** - எந்த, **वस्तुषु** - பொருள்களில், **स्पृहावती** - ஆசையுடையவள்", **इति** - என்று, **अनुवेलं**-அடிக்கடி, **आदृतः**-ஆதரவுடையவனாக, **प्रियासखीः** - மனைவியின் தோழி இத்தோற்றகோஸ-**लेश्वरः**-உத்தரகோஸல தேசத்தரசனை திலீபன், **पृच्छति स्म**-கேட்டான்.

(க-து) "வெட்கத்தினால் ஸுதக்ஷிணை தனக்கு விருப்பமான பொருள்களைப்பற்றி என்னிடம் ஒன்றும் கூறுவதில்லை. அவளுடைய தோழியரான நீங்களாவது அவளது விருப்பத்தை அறிந்து என்னிடங் கூறுங்கள்" என்று ஸுதக்ஷிணையின் தோழிகளைப் பார்த்து திலீபன் அடிக்கடி ஆதரவுடன் கேட்டான்.

उपेत्य सा दोहददुःखशीलतां यदेव वव्रे तदपश्यदाहृतम् ।
न हीष्टमस्य त्रिदिवेऽपि भूपतेरभूदनासाद्यमधिज्यधन्वनः ॥ ६ ॥

**सा** - அந்த ஸுதக்ஷிணை, **दोहददुःखशीलतां** - கருவுற்றிருப்பதால் வருந்தும் நிலையை, **उपेत्य** - அடைந்து, **यत्** - எப்பொருளை **वव्रे** - வேண்டினாளோ, **तत्** - அப்பொருளை, **आनीतं एव**-(கணவனால்) கொண்டுவரப்பட்டதாகவே, **अपश्यत्**-கண்டாள்; **हि** - ஏனெனில், **अधिज्यधन्वनः** - நாணேற்றிய

வில்லையுடைய, **अस्य भूपतेः** - இவ்வரசனுக்கு, **त्रिदिवेऽपि** - ஸ்வர்க்கத்திலும்கூட, **इष्टं** - விரும்பிய பொருள், **अनासाद्यं** - பெறமுடியாததாக, **न अभूत्** - இருக்கவில்லை.

(க-து) கருவுற்று வருந்தும் ஸுதக்ஷிணை எப்பொருளை வேண்டினும் அதைத் திலீபன் உடனே அவளுக்குக் கொண்டுவந்து கொடுத்தான். ஏனெனில் அவளது கணவன் திலீபன் மிகச்சிறந்த வீரன். அவன் மனம் வைத்தால் ஸ்வர்க்கத்தில் உள்ள பொருளைக்கூடக் கொண்டுவர இயலும். ஆகவே அவள் விரும்பியதனைத்தையும் உடனே தன்னெதிரில் கண்டாள்.

क्रमेण निस्तीर्य च दोहदव्यथां प्रचीयमानावयवा रराज सा ।
पुराणपत्रापगमादनन्तरं लतेव संनद्धमनोज्ञपल्लवा ॥ ७ ॥

**सा** - அந்த ஸுதக்ஷிணை, **क्रमेण**-முறையே, **दोहदव्यथां**-கருவுற்றிருக்கையில் ஏற்படும் சிரமத்தை, **निस्तीर्य च** - கடந்து, **प्रचीयमानावयवा** - புஷ்டியைப்பெறுகின்ற அவயவங்களை உடையவளாக, **पुराणपत्रापगमात्** - பழைய இலைகள் நீங்குவதன், **अनन्तरं** - பின், **सन्नद्ध मनोज्ञ पल्लवा** - புதிதே தோன்றியவையும் மனத்தைக் கவருபவையுமான தளிர்களையுடைய, **लता इव** - கொடிபோல, **रराज** - விளங்கினாள்.

(க-து) ஸுதக்ஷிணை, கருவுற்று உடல் மெலிந்து மிகவும் சிரமமடைந்து இருந்தாள். ஆனால் அக்கரு வளர வளர அவளது அங்கங்களும் பருத்து மிக அழகுள்ளவளாக விளங்கினாள். இந்நிலையில் அவள், பழைய இலைகள் நீங்கியபின் புதிய இளந்தளிர்களைப் பெற்று விளங்கும் கொடிபோல் அழகிய தோற்றத்துடன் காணப்பட்டாள்.

दिनेषु गच्छत्सु नितान्तपीवरं तदीयमानीलमुखं स्तनद्वयम् ।
तिरश्चकार भ्रमराभिलीनयोः सुजातयोः पङ्कजकोशयोः श्रियम् ॥ ८ ॥

**दिनेषु** - நாட்கள், **गच्छत्सु** - செல்ல, **नितान्तपीवरं**-மிகப் பருத்தவையும், **आनीलमुखं** - சிறிதே கறுத்த முகமுடைய

வைகளுமான, **तदीयं** - அவளுடைய, **स्तनद्वयं** - ஸ்தனங்கள், **भ्रमरासिलीनयोः** - வண்டு அமர்ந்த, **सुजातयोः** - அழகிய, **पङ्कजकोशयोः** - தாமரை மொட்டுக்களுடைய, **श्रियं**-அழகை, **तिरश्चकार** - வென்றன.

(க-து) நாட்கள் செல்லச் செல்ல, ஸுதக்ஷிணையின் ஸ்தனங்கள் பருத்து, வண்டு அமர்ந்த தாமரை மொட்டுப்போல் காணப் பட்டன.

निधानगर्भामिव सागराम्बरां शमीमिवाभ्यन्तरलीनपावकाम् ।
नदीमिवान्तःसलिलां सरस्वतीं नृपः ससत्त्वां महिषीममन्यत ॥ ९ ॥

**नृपः** - அரசனாகிய திலீபன், **ससत्त्वां** - கர்ப்பிணியான, **महिषीं** - மனைவியை, **निधानगर्भां** - நிதியை அகத்தேயுடையதும், **सागराम्बरां इव**-ஸமுத்ரத்தை ஆடையாகக் கொண்டதுமான பூமியைப்போலவும், **अभ्यन्तरलीनपावकां** - உள்ளே மறைந்திருக்கும் நெருப்பையுடைய, **शमीं इव** - வன்னிமரத்தைப்போலவும், **अन्तःसलिलां** - உள்ளே இருக்கின்ற தண்ணீரையுடைய, **सरस्वतीं नदीम् इव** - ஸரஸ்வதி நதியைப் போலவும், **अमन्यत** - நினைத்தான்.

(க-து) திலீபன், கர்ப்பிணியான தன் மனைவியை நிதியுடைய பூமிக்கும், நெருப்புடைய வன்னி மரத்திற்கும், உள்ளே நீருள்ள ஸரஸ்வதி நதிக்கும் ஒப்பிட்டு நினைத்தான்.

அளவற்ற செல்வத்தைத் தன்னுள்ளே கொண்டிருக்கும் பூமிபோலவும், வெளியிலே தெரியாதவாறு நெருப்பை உள்ளே அடக்கியிருக்கும் வன்னி மரம் போலவும், உள்ளேயே ஓடும் தண்ணீரையுடைய ஸரஸ்வதி நதிபோலவும் ஒப்பற்ற செல்வம், பராக்ரமம், தூய்மை முதலிய குணங்களையுடைய மகனை தன்னுள் தாங்கியிருந்தாள் ஸுதக்ஷிணை.

பூமி, வன்னிமரம், ஸரஸ்வதி நதி இவைகள் ஸுதக்ஷி

ணைக்கும் புதையல், நெருப்பு, தண்ணீர் இவைகள் ஸுதக்ஷி ணையின் கருவிலுள்ள குழந்தைக்கும் உபமானங்கள்.

வன்னி மரம் நெருப்பைத் தன்னுள்ளே அடக்கியிருப்ப தாகவும், ஸாஸ்வதி நதியில் தண்ணீர் மேல் மட்டத்தில் ஓடாமல் உள்ளேயே ஓடுவதாகவும் கூறுதல் மரபு.

प्रियानुरागस्य मनःसमुन्नतेर्भुजार्जितानां च दिगन्तसंपदाम् ।
यथाक्रमं पुंसवनादिकाः क्रिया धृतेश्च धीरः सदृशीर्व्यधत्त सः ॥

**धीरः** - உறுதியானமனமுடைய, **सः** - அவ்வரசன், **प्रियानुरागस्य** - மனைவியிடமுள்ள ஆசைக்கும், **मनस्समुन्नतेः** - மனத்தின் உயர்வுக்கும், **भुजार्जितानां** - தன் புயவலியால் சம்பாதிக்கப்பட்ட, **दिगन्तसंपदां** - திசைகளின் கோடிவரை பரந்திருக்கும் தன் செல்வங்களுக்கும், **धृतेः** - மன உத்ஸா ஹத்திற்கும், **सदृशीः** - தகுந்த, **पुंसवनादिकाः** - பும்ஸவனம் முதலிய, **क्रियाः** - சுபச்சடங்குகளை, **यथाक्रमं** - முறைப்படி, **व्यधत्त** - செய்தான்.

(க-து) ஸுதக்ஷிணை கர்ப்பந்தரித்ததும், திலீபன், கருவுற் றிருக்கும் ஸ்திரீகளுக்கு வேண்டிய பும்ஸவனம் முதலிய சடங்குகளை, தன் செல்வத்திற்கும், உதாரத்தனமைக்கும், மனைவியிடமுள்ள அன் பிற்கும் மன உத்ஸாஹத்திற்கும் தகுந்தவாறு நன்கு செய்தான்.

सुरेन्द्रमात्राश्रितगर्भगौरवात् प्रयत्नमुक्तासनया गृहागतः ।
तयोपचाराञ्जलिखिन्नहस्तया ननन्द पारिप्लवनेत्रया नृपः ॥ ११ ॥

**गृहागतः** - (ஸுதக்ஷிணையின்) விடுதிக்கு வந்த, **नृपः** - அரசன், **सुरेन्द्रमात्राश्रित गर्भ गौरवात्** - லோகபாலர்களுடைய அம்சங்களையுடைய கர்ப்பத்தின் பாரத்தினால், **प्रयत्नमुक्तासनया** - மிக முயற்சியுடன் ஆஸனத்தை விட்டெழுந்தவளும், **उपचाराञ्जलिखिन्नहस्तया** - மரியாதைக்கான கைகூப்புதலிலும் சிரமமடைந்த கைகளை உடையவளும், **पारिप्लवनेत्रया** -

சஞ்சலமான கண்களையுடையவளுமான, **तया** - அந்த ஸுதக்ஷிணையால், **ननन्द** - மகிழ்ந்தான்.

(க-து) ஸுதக்ஷிணையைக் காண திலீபன் அவளுடைய வீடு திக்கு வந்தபொழுது அவனை வரவேற்பதற்காக அவள், ஆசனத்தி லிருந்து மிகப்பிரயாசையுடன் எழுந்தாள். அவள் கருவுற்றிருந்ததால் எழுந்திருப்பதே மிக்க சிரமமாக விருந்தது. மரியாதைக்காக அஞ்சலி செய்வதும் ஸுதக்ஷிணைக்கு மிகவும் சிரமமாயிருந்தது. அவளது கண்கள் சஞ்சலமாக இருந்தன.

இத்தகைய கர்ப்ப சின்னங்களைக் கண்ணுற்ற திலீபன் மிக மகிழ்ச்சிகொண்டான். அரசனாகப்போகின்ற குழந்தை, கர்ப்பத்தில் இருக்கும்பொழுது அது திக்பாலகர்களின் சக்தியில் ஒரு பகுதியையுடையதாகக் கூறுவர்.

कुमारभृत्याकुशलैरनुष्ठिते भिषग्भिराप्तैरथ गर्भभर्मणि ।
पतिः प्रतीतः प्रसवोन्मुखीं प्रियां ददर्श काले दिवमभ्रितामिव ॥१२॥

**अथ** - பிறகு, **कुमरभृत्याकुशलैः** - குழந்தை வைத்தியத்தில் தேர்ந்தவர்களும், **आप्तैः** - நம்பிக்கையுள்ளவர்களுமான, **भिषग्भिः** - வைத்தியர்களால், **गर्भभर्मणि** - கருவின் வளர்ச்சிக்குரிய சிகிச்சை, **अनुष्ठिते** - செய்யப்பட்டதும், **काले** - தக்க சமயத்தில் (பத்தாவது மாதத்தில்) **प्रसवोन्मुखीं** - சமீபித்துள்ள பிரஸவகாலத்தையுடைய, **प्रियां** - மனைவியை, **अभ्रितां** - மேகங்கள் சூழ்ந்த, **दिवं इव** - ஆகாயத்தை (ஜனங்கள் காண்பது)போல, **पतिः** - கணவனாகிய திலீபன், **प्रतीतः**- மகிழ்ச்சியுற்றவனாக, **ददर्श** - பார்த்தான்.

(க-து) ஸுதக்ஷிணையின் கர்ப்பம் வளர்ந்து பத்து மாதங்கள் நிரம்பியதாக ஆயிற்று. கர்ப்ப காலத்தில் செய்யவேண்டிய சிகித்சைகளை வைத்தியர்கள் செய்தனர். மகனுடைய பிறப்பை எண்ணிய திலீபன், மேகங்கள் சூழ்ந்த ஆகாயத்தை மழையை எதிர்பார்க்கும் ஜனங்கள் விருப்புடன் நோக்குவதுபோல, பூர்ணகர்ப்பமுடைய ஸுதக்ஷிணையை மனமகிழ்ச்சியுடன் நோக்கினான்.

ग्रहैस्ततः पञ्चभिरुच्चसंश्रयैरसूर्यगैः सूचितभाग्यसंपदम् ।
असूत पुत्रं समये शचीसमा त्रिसाधना शक्तिरिवार्थमक्षयम् ॥ १३॥

**ततः** - பிறகு, **शचीसमा** இந்திராணிக்கு ஒப்பான, **(सा)** அந்த ஸுதக்ஷிணை, **समये** - உரிய காலத்தில், **उच्चसंश्रयैः** - உச்ச ஸ்தானங்களை அடைந்துள்ளவையும், **असूर्यगैः** - ஸூரியனை அடையாதவைகளும் (சக்தி குன்றாதவைகளும்) ஆன, **पञ्चभिः** - ஐந்து, **ग्रहैः** - கிரஹங்களினால், **सूचितभाग्य-संपदं** - உணர்த்தப்பெற்ற அத்ருஷ்டத்தையுடைய, **पुत्रं** - புத்திரனை, **त्रिसाधना** - பிரபு—மந்த்ர—உத்ஸாஹம் என்ற மூன்று காரணங்களையுடைய, **शक्तिः** - சக்தியானது, **अक्षयं** - அழிவற்ற, **अर्थं इव** - செல்வத்தை (அளிப்பது) போல, **असूत** - ஈன்றாள்.

(க-து) ஸுதக்ஷிணை தக்க சமயத்தில் ஒரு மகனை ஈன்றாள். அக்குழந்தை பிறந்த வேளையில் ஐந்து கிரஹங்கள் உச்சம் பெற்று இருந்தன. உச்ச நிலையிலுள்ள ஐந்து கிரஹங்களும் ஸூர்ய க்ரஹத்திற்கு அருகில் இல்லாததால் பலமுடையனவாக இருந்தன. இவ்வாறு ஐந்து கிரஹங்கள் நின்ற நிலையே, பிறந்த குழந்தை பெரிய அத்ருஷ்டமுடையவன் என்பதை உணர்த்தியது.

அரசர்கள் வெற்றிபெற மூன்றுவகை சக்திகள் தேவை: அவை, ப்ரபு சக்தி, மந்த்ர சக்தி, உத்ஸாஹ சக்தி எனப் படும். செல்வத்தினாலும் பெரும்படையினாலும் அரசர்க்கு உண்டாகும் பலம் பிரபு சக்தி ஆகும். புத்திசாலிகளான மந்திரிகளின் ஆலோசனையினால் உண்டாகின்ற பலத்திற்கு மந்த்ரசக்திஎனப்பெயர். அரசனுடைய சரீரபலம், மனோபலம், உத்ஸாகம், வெல்லவேண்டுமென்ற எண்ணம் இவைகளின் தொகுதியை உத்ஸாஹ சக்தி என்பர். இம்மூவகைச் சக்திகள் ஒரு அரசனிடம் காணப்படுமாயின் அவை நிச்சயம் அழிவற்றசெல்வத்தை அரசனுக்கு அளிக்கும். சக்தி செல்வத்தை ஈவதுபோல ஸுதக்ஷிணை மகனை ஈன்றாள்.

ராமர் பிறந்தபொழுதும் ஐந்து கிரஹங்கள் உச்ச நிலையில் இருந்தன என்பர் வால்மீகி.

दिशः प्रसेदुर्मरुतो ववुः सुखाः प्रदक्षिणार्चिर्हविरग्निराददे ।
बभूव सर्वं शुभशंसि तत्क्षणं भवो हि लोकाभ्युदयाय तादृशाम् ॥

**तत्क्षणं** - அச்சமயத்தில், **दिशः** - திசைகள், **प्रसेदुः** - தெளிவாக ஆயின; **मरुतः** - காற்றுகள், **सुखाः** - மனோஹரமாக, **ववुः** - வீசின; **अग्निः** தீ, **प्रदक्षिणार्चिः** - பிரதக்ஷிணமான ஜ்வாலையை உடையதாக, **हविः** - ஹவிஸ்ஸை, **आददे** - ஏற்றுக்கொண்டது; (இவ்வாறு) **सर्वं**-அனைத்தும், **शुभशंसि**-சுபஸூசகங்களாக, **बभूव**-இருந்தன, **हि**-ஏனெனில், **तादृशां**-அத்தகையோருடைய, **भवः** - பிறப்பு, **लोकाभ्युदयाय** - உலகத்தின் நன்மைக்காகவே (ஏற்படுகிறது).

(க-து) ஸுதக்ஷிணைக்குப் புத்திரன் பிறந்த அவ்வேளையில் திசைகள் தெளிவாக இருந்தன. காற்று ஸுகமாக வீசியது. அக்னி, பிரதக்ஷிணமான ஜ்வாலையை உடையதாக ஹோமங்களில் ஹவிஸ்ஸை வாங்கியது. இவ்வாறு எல்லாம், ஏற்படப்போகும் சுபத்தைக் குறிப்பிடுவனவாக இருந்தன. ஏனெனில் ரகு முதலியவர்களின் பிறப்பு உலகத்தின் க்ஷேமத்திற்காக ஏற்படுவதால் அக்னி முதலிய தேவர்களும் சந்தோஷமடைந்தனர்.

अरिष्टशय्यां परितो विसारिणा सुजन्मनस्तस्य निजेन तेजसा ।
निशीथदीपाः सहसा हतत्विषो बभूवुरालेख्यसमर्पिता इव ॥ १५ ॥

**अरिष्टशय्यां** - பிரஸவ அறையிலுள்ள படுக்கையை, **परितः** - சுற்றிலும், **विसारिणा** - பரவுகின்றதும், **सुजन्मनः** - நற்பிறப்பையுடைய, **तस्य** - அந்தக் குழந்தைக்கு, **निजेन** - இயற்கையாயுள்ளதுமான, **तेजसा**-ஒளியினால், **सहसा**-உடனே, **हतत्विषः**-பிரகாசத்தை இழந்த, **निशीथदीपाः** - இரவு விளக்கு

கள், **आलेख्यसमर्पिताः इव** - சித்திரத்தில் எழுதப்பெற்றவை போல, **बभूवुः** - ஆயின.

(க-து) பிறந்த அக்குழந்தையின் ஒளி அது படுத்திருந்த படுக்கையைச் சுற்றிலும் வீசியது. அவ்வொளியினால் அவ்வறையில் ஏற்றிவைக்கப்பட்டிருந்த விளக்குகளனைத்தும் ஒளிகுன்றிச் சித்திரத்தில் எழுதப்பெற்றவை போலிருந்தன.

जनाय शुद्धान्तचराय शंसते कुमारजन्मामृतसंमिताक्षरम् ।
अदेयमासीत्त्रयमेव भूपतेः शशिप्रभं छत्रमुभे च चामरे ॥ १६ ॥

**भूपतेः** - அரசனுக்கு, **अमृतसंमिताक्षरं** - அம்ருதத்திற்கொப்பான எழுத்துக்களையுடைய, **कुमारजन्म** - புதல்வனின் பிறப்பை, **शंसते**-சொல்லுகின்ற, **शुद्धान्तचराय जनाय**-அந்தப்புர வேலைக்காரனுக்கு, **शशिप्रभं** - சந்திரனைப் போன்ற ஒளி உடைய, **छत्रं** - குடையும், **उभे चामरे च** - இரண்டு சாமரங்களுமாகிய, **त्रयमेव** - இம்மூன்றுமே, **अदेयं** - கொடுக்கத்தகாதனவாக, **आसीत्** - இருந்தன.

(க-து) அந்தப்புர வேலைக்காரன் குழந்தை பிறந்த செய்தியைத் திலீபனிடம் வந்து கூறினான். அச்செய்தி அம்ருதத்தைப் போன்றிருந்தது. இச்செய்தியைக் கேட்ட அரசன், அரசருக்கே உரியனவாகிய குடை, சாமரங்கள் இவைகளைத்தவிர மற்ற எல்லாவற்றையும் அவனுக்கு அளித்தான்.

निवातपद्मस्तिमितेन चक्षुषा नृपस्य कान्तं पिबतः सुताननम् ।
महोदधेः पूर इवेन्दुदर्शनाद् गुरुः प्रहर्षः प्रबभूव नात्मनि ॥१७॥

**निवात पद्म स्तिमितेन**-காற்றில்லாவிடத்திலுள்ள தாமரை போல் அசையாத, **चक्षुषा** - கண்ணினால், **कान्तं** - அழகிய, **सुताननं** - புதல்வனின் முகத்தை, **पिबतः** - பருகும், **नृपस्य** - மன்னனுடைய, **गुरुः**-மிகுந்த, **प्रहर्षः**-மகிழ்ச்சி, **इन्दुदर्शनात्** - சந்திரனைக் காண்பதால், **महोदधेः** - பெருங்கடலின், **पूरः इव**-

நீர்த்திரள்போல, **आत्मनि** - தனக்குள், **न प्रबभूव** - அடங்கி இருக்கவில்லை.

(க-து) திலீபன் தன் மகனுடைய முகத்தை, காற்றில்லாவிடத்தில் அசையாமல் நிலைபெற்றிருக்கும் தாமரைபோன்ற இமை கொட்டாக் கண்ணினால் மகிழ்ச்சியுடன் பார்த்தான், அவனது மகிழ்ச்சி சந்திரோதய காலத்தில் கரைக்குள் அடங்காமல் பொங்கி வரும் கடல் வெள்ளம்போல் மிக அதிகமாக இருந்தது. ஸந்தோஷம் அவன் மனத்தில் அடங்கக்கூடியதாக இல்லை.

स जातकर्मण्यखिले तपस्विना तपोवनादेत्य पुरोधसा कृते ।
दिलीपसूनुर्मणिराकरोद्भवः प्रयुक्तसंस्कार इवाधिकं बभौ ॥ १८ ॥

**सः दिलीपसूनुः** - திலீபனின் புதல்வன், **तपस्विना** - தவத்தைச் செய்யும், **पुरोधसा** - புரோஹிதரால் (வஸிஷ்டரால்) **तपोवनात्** - தபோவனத்திலிருந்து, **एत्य** - வந்து, **जातकर्मणि** - ஜாதகர்மம், **अखिले** - முழுவதும், **कृते**-செய்யப்பட்டதும், **प्रयुक्तसंस्कारः** - செய்யப்பட்ட ஸம்ஸ்காரங்களையுடைய (சாணை தீட்டப்பட்ட) **आकरोद्भवः** - சுரங்கத்திலிருந்து உண்டான, **मणिः इव** - ரத்தினம் போல, **अधिकं** - மிகவும், **बभौ** - பிரகாசித்தான்.

(க-து) சுரங்கத்திலிருந்து எடுக்கப்பட்ட ரத்தினம் உயர்ந்த வகையைச் சேர்ந்ததாயினும், சாணை பிடித்தால் அது இன்னும் நன்றாகப் பிரகாசிக்கும். அதுபோல் திலீபனுக்குப் பிறந்ததாலேயே அவன் மகன் பெருமை பெற்றவனாயினும், தபஸ்வியான வஸிஷ்டர் அவனுக்கு ஜாதகாமம் முதலிய சடங்குகளைச் செய்ததால் அப்புதல்வன் இன்னும் பெருமை பெற்றுப் பிரகாசித்தான்.

ஜாதகாமம் என்பது குழந்தை பிறந்ததும் அதன் நன்மைக்காகத் தந்தையால் செய்யப்படவேண்டிய ஒரு சடங்கு.

सुखश्रवा मङ्गलतूर्यनिस्वनाः प्रमोदनृत्यैः सह वारयोषिताम् ।
न केवलं सद्मनि मागधीपतेः पथि व्यजृम्भन्त दिवौकसामपि ॥१९॥

**सुखश्रवाः** - கேட்பதற்கு இனிய, **मङ्गलतूर्यनिस्वनाः** - மங்கள வாத்திய சத்தங்கள், **वारयोषितां**-வேசிப்பெண்களின், **प्रमोदनृत्यैः सह** - ஆனந்த நடனங்களுடன் கூட, **मागधीपतेः**- மகத அரசனாகிய திலீபனுடைய, **सद्मनि केवलं** - வீட்டில் மாத்திரம், **व्यजृम्भन्त (इति) न** - முழங்கின என்பதில்லை, **किं तु** - ஆனால், **दिवौकसां** - தேவர்களுடைய, **पथि अपि** - வழியிலும் (ஆகாயத்திலும்) **व्यजृम्भन्त** - முழங்கின.

(க-து) திலீபனுக்கு மகன் பிறந்ததால் மண்ணுலகிலிருப்பவரைப்போல விண்ணுலகிலுள்ள தேவர்களும் மகிழ்வுற்றனர். அவன் பிறப்பைக் கொண்டாட திலீபனது அரண்மனையில் மங்கள வாத்தியங்கள் முழங்கின. வேசிப்பெண்கள் ஆடினர். இதைப்போலவே தேவர்களும் ஆடிப்பாடித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தனர்.

न संयतस्तस्य बभूव रक्षितुर्विसर्जयेद्यं सुतजन्महर्षितः ।
ऋणाभिधानात्स्वयमेव केवलं तदा पितॄणां मुमुचे स बन्धनात् ॥

**सुतजन्महर्षितः**-புத்திரனது பிறப்பால் மகிழ்வுற்றவனாக அத்திலீபன், **यं** - எந்தக் குற்றவாளியை, **विसर्जयेत्** - விடுதலை செய்வானோ, **(सः)** அத்தகைய, **संयतः** - சிறையிடப்பட்ட கைதி, **रक्षितुः** - நன்கு ரக்ஷிக்கும் தன்மையுள்ள, **तस्य** - அத்திலீபனுக்கு, **न बभूव** - இருக்கவில்லை; (ஆகலால்) **तदा** - அப்பொழுது, "**पितॄणां** - மூதாதையரின், **ऋणाभिधानात्** - கடன்" என்று பெயருள்ள, **बन्धनात् केवलम्** - கட்டினின்று மாத்திரம், **स्वयं एव** - அவன் ஒருவனே, **मुमुचे** - விடுதலை பெற்றான்.

(க-து) மகன் பிறத்தல், பகைவன்மேல் வெற்றி கொள்ளுதல் முதலான சந்தோஷ ஸந்தர்ப்பங்களில் அரசர்கள், காவலிலுள்ள கைதிகள் எல்லோரையும் தண்டனைக்காலம் முடியாவிடினும் விடுதலை செய்வார்கள். திலீபனுக்கு மகன் பிறந்தபொழுது அவன் யாரையும் விடுதலை செய்யவில்லை. ஏனெனில் அவன் விடுதலை செய்யும்படி

சிறைக்கூடங்களில் கைதியே இல்லை. அவன் ஜனங்களை நன்கு பாதுகாத்த காரணத்தால் அவனது ராஜ்யத்தில் குற்றமிழைப்பவர்களே இல்லை. அதனால் சிறைகள் எல்லாம் காலியாகவே இருந்தன.

ஆனால் இச்சமயம் விடுதலை பெற்றவனும் ஒருவன் உண்டு என்கிறார் கவி. அவன் எவன்? திலீபன்தான்:

மனிதன், தான் பிறக்கும்பொழுதே, தேவர்களுக்கும், மகரிஷிகளுக்கும், அவன் வம்சத்தின் மூதாதையருக்கும் கடன் பட்டவன் ஆகின்றான். இம்மூவகைக் கடன்களையும் மனிதன் மிக முயன்றும் நீக்கவேண்டுமெனச் சாஸ்திரங்கள் கூறுகின்றன. வேதாத்யயனத்தினால் ரிஷிகளின் கடன் நீங்குகிறது. யாகம் முதலியன செய்வதால் தேவர்களிடம் பட்ட கடன் தீரும். பித்ருக்களின் கடன், ஸந்ததியை விருத்தி செய்வதன்மூலமே முழுவதும் தீர்க்கப்பட்டதாகும். முதலிரண்டு கடன்களைச் செவ்வனே தீர்த்தும் இதுவரைத் திலீபன், மூன்றாவது கடனைத் தீர்க்காது இருந்தான். இப்பொழுது மகன் பிறந்ததும் மூன்றாவது கடனையும் தீர்த்து விடுதலை பெற்றான் எனக் கூறுகின்றார் கவி.

श्रुतस्य यायादयमन्तमर्भकस्तथा परेषां युधि चेति पार्थिवः ।
अवेक्ष्य धातोर्गमनार्थमर्थविच्चकार नाम्ना रघुमात्मसंभवम् ॥ २१ ॥

**अर्थवित्** - சொல்லின் பொருளை அறிந்த, **पार्थिवः** - அரசன், "**अयं अर्भकः** - இந்தச் சிறுவன், **श्रुतस्य**-சாஸ்திரங்களின், **अन्तं** - எல்லையை, **यायात्** - அடைவான்; **तथा** - அப்படியே, **युधि** - போரில், **परेषां** - எதிரிகளுடைய (எதிரிகளை) **अन्तं च** - எல்லையையும், **यायात्** - அடைவான்" **इति** - என்பதால், **धातोः (लंघि)**-என்ற தாதுவின் (முதனிலையின்) **गमनार्थं** - செல்லுதல் என்ற பொருளை, **अवेक्ष्य** - கண்டு, **आत्मसंभवं** - புதல்வனை, **नाम्ना** - பெயரினால், **रघुं** - ரகுவாக, **चकार** - செய்தான்.

(க-து) திலீபன் தன் மகனுக்கு ரகு என்று பெயர் வைத்தான். लघि என்ற முதனிலைக்குச் 'செல்லல்' என்று பொருள். ல என்னும் எழுத்து ர என, இலக்கணவிதியை ஒட்டிமாறும். ஆகவே 'ரகு' என்ற சொல்லுக்குச் 'செல்பவன், அடைபவன்' என்று பொருள். இந்த ரகு, படிப்பின் எல்லையை அடைபவனுயும், சத்துருக்களைக் கொன்று அவர்களின் முடிவை அடைபவனுயுமிருப்பான் என்று எண்ணி 'அடைபவன்' என்ற பொருளையுடைய 'ரகு' என்னும் பெயர் இவனுக்குப் பொருத்தமானதாக வைக்கப்பட்டது. இதைக் கருதியே போலும் திலீபன், தன்மகனுக்கு 'ரகு' எனப் பெயரிட்டான் என்று கவி சொல்லுகின்ருர்.

पितुः प्रयत्नात्स समग्रसंपदः शुभैः शरीरावयवैर्दिने दिने ।
पुपोष वृद्धिं हरिदश्वदीधितेरनुप्रवेशादिव बालचन्द्रमाः ॥ २२ ॥

**सः** - அந்த ரகு, **समग्रसंपदः** - நிறைந்த செல்வத்தை யுடைய, **पितुः** - தந்தையின், **प्रयत्नात्** - முயற்சியால், **शुभैः** - கவர்ச்சி பொருந்திய, **शरीरावयवैः** உடலின் உறுப்புக்களால், **हरिदश्व दीधितेः** - சூரியனுடைய கதிரின், **अनुप्रवेशात्** - உட்புகுதலினுல், **बालचन्द्रमाः इव**- இளஞ் சந்திரன் (வளர்வது) போல, **दिने दिने** - தினந்தோறும், **वृद्धिं** - வளர்ச்சியை, **पुपोष** - அடைந்தான்.

(க-து) எல்லாவகைச் செல்வங்களையும் பெற்றுள்ள தந்தை திலீபனின் கண்காணிப்பில், திடமான உடலுறுப்புக்களைப் பெற்று ரகு, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான். இது சூரியனுடைய கதிர்கள் சந்திரனுள் புகுந்து அதை ஒளியுடன் வளரச் செய்வது போலிருந்தது. சூரியனுடைய கிரணங்கள்தான் சந்திரனை ஒளிபெறச் செய்கின்றன என்பது பலரும் அறிந்த உண்மையாகும்.

திலீபனுக்குச் சூரியனும், திலீபனது செல்வத்திற்குச் சூரிய கிரணங்களும், ரகுவிற்குச் சந்திரனும், ரகுவின் அங்க வளர்ச்சிக்குச் சந்திரனுடைய கலை வளர்ச்சியும் உபமானங்களாக இருக்கின்றன.

उमावृषाङ्कौ शरजन्मना यथा यथा जयन्तेन शचीपुरंदरौ ।
तथा नृपः सा च सुतेन मागधी ननन्दतुस्तत्सदृशेन तत्समौ ॥२३॥

**उमावृषाङ्कौ** - *பார்வதியும் பரமேசுவரனும்,* **शरजन्मना** - *சரவணபவனான ஸுப்ரஹ்மண்யனால்,* **यथा** - *எப்படி,* **ननन्दतुः** - *மகிழ்ந்தனரோ,* **शचीपुरंदरौ** - *இந்திராணியும் இந்திரனும்,* **जयन्तेन** - *ஜயந்தன் என்ற புதல்வனால்* **यथा** - *எப்படி,* **ननन्दतुः** - *மகிழ்ந்தனரோ,* **तथा** - *அப்படி,* **तत्समौ** - *அவர்களுக்கு ஒப்பான,* **सा** - *அந்த,* **मागधी** - *மகததேசத்தாளான ஸுதக்ஷிணையும்,* **नृपश्च**-*அரசன் திலீபனும்,* **तत्सदृशेन**-*அந்த ஜயந்தனுக்கும் ஸுப்ரஹ்மண்யனுக்கும் நிகரான,* **सुतेन** - *பிள்ளையினால்,* **ननन्दतुः** - *களித்தனர்.*

(க-து) பார்வதியும் பரமேச்வரனும் ஸுப்ரஹமண்யன் என்ற புத்திரனைப்பெற்று மகிழ்ந்தனர். இந்திராணியும் இந்திரனும் ஜயந்தன் என்ற மகனைப் பெற்றுக் களித்தனர். அதுபோல, பார்வதிக்கும் இந்திராணிக்கும் சமமான ஸுதக்ஷிணையும், பரமேசுவரனுக்கும் இந்திரனுக்கும ஒப்பான திலீபனும், ஸுப்ரஹமண்யனுக்கும் ஜயந்தனுக்கும் நிகரான பிள்ளையைப் பெற்று மகிழ்ந்தனர்.

रथाङ्गनाम्नोरिव भावबन्धनं बभूव यत्प्रेम परस्पराश्रयम् ।
विभक्तमप्येकसुतेन तत्तयोः परस्परस्योपरि पर्यचीयत ॥ २४ ॥

**रथाङ्गनाम्नोः इव** - *சக்ரவாகப் பக்ஷிகள் போன்ற,* **तयोः** - *அத்தம்பதிகட்கு,* **भावबन्धनं** - *உள்ளத்தைக் கவருவதும்,* **परस्पराश्रयं** - *ஒருவரையொருவர் பற்றியதுமாக,* **यत्** - *எந்த,* **प्रेम** - *அன்பானது,* **बभूव** - *இருந்ததோ,* **तत्** - *அவ்வன்பு* **एकसुतेन** - *ஒரே பிள்ளையினால்,* **विभक्तं अपि** - *பிரிக்கப்பட்டபோதிலும்,* **परस्परस्य उपरि** - *ஒருவருக்கொருவர் மீது,* **पर्यचीयत** - *விருத்தி யடைந்தது.*

(க-து) சக்ரவாகப் பக்ஷிகள்போல், பிரிய விரும்பாது அன்புடன் இருப்பவர்கள் இத்தம்பதிகள்.

திலீபனும் ஸுதக்ஷிணையும் ஒருவரிடத்து ஒருவர் மிக்க அன்பு பூண்டிருந்தனர். ரகு பிறந்த பிறகு அந்த அன்பானது அப்பிள்ளையிடத்தும் வைக்கப்பட வேண்டியதாயிற்று. அவ்வாறு அன்பு இன்னொரு இடத்திலும் செலுத்தப்பட்டபோதினும் அத்தம்பதிகளுடைய பரஸ்பர அன்பு குறையாமல் அதிகமாகவே ஆயிற்று.

குழந்தை பிறந்தால் கணவன் மனைவி இவர்களுடைய பரஸ்பர அன்பு அதிகமாவது உலகம் அறிந்ததே.

उवाच धात्र्या प्रथमोदितं वचो ययौ तदीयामवलम्ब्य चाङ्गुलिम् ।
अभूच्च नम्रः प्रणिपातशिक्षया पितुर्मुदं तेन ततान सोऽर्भकः ॥२५॥

**सः अर्भकः** - அந்தக் குழந்தை, **धात्र्या** - செவிலித்தாயினால், **प्रथमोदितं** - முதலில் கூறப்பட்ட, **वचः** - வார்த்தையை, **उवाच** - சொல்லிற்று ; **तदीयां** - அவளுடைய, **अङ्गुलिं** - விரலை, **अवलम्ब्य** - பிடித்துக்கொண்டு, **ययौ च** - நடந்தது ; **प्रणिपातशिक्षया** - வணங்குவதற்குக் கற்றுக்கொடுத்ததால், **नम्रः** - வணங்கியதாக, **अभूत् च** - ஆயிற்று ; (என்ற) **तेन** - அதனால், **पितुः** - தந்தைக்கு, **मुदं** - சந்தோஷத்தை, **ततान** - செய்தது.

(க-து) அந்தக் குழந்தை செவிலித்தாய் முதலில் கூற, பின் வார்த்தைகளைக் கூறியது. அவளுடைய கைவிரல்களைப் பற்றிக் கொண்டு நடந்தது. பெரியோரை வணங்கும் முறையைக் கற்பிக்க, அதன்படி தாய் தந்தையரை வணங்கியது. இதையெல்லாங் கண்ட அரசன் மிக்க மகிழ்வெய்தினன்.

तमङ्कमारोप्य शरीरयोगजैः सुखैर्निषिञ्चन्तमिवामृतं त्वचि ।
उपान्तसंमीलितलोचनो नृपश्चिरात् सुतस्पर्शरसज्ञतां ययौ ॥२६॥

**शरीरयोगजैः**-சரீர ஸ்பர்சத்தினால் உண்டாகின்ற, **सुखैः**- ஸுகங்களால், **त्वचि** - (உடலில்) சருமத்தின்மேல், **अमृत** -

அமுதத்தை, **निषिञ्चन्तं इव**-பொழிகின்றவனைப்போன்றுள்ள, **तं** - அப்புதல்வனை, **अङ्कं** - மடியில், **आरोप्य** - ஏற்றுவித்துக் கொண்டு, **उपान्तसमीलितलोचनः** - கடைக்கண்களை மூடியவனாக, **नृपः** - அரசன், **चिरात्** - வெகுகாலத்திற்குப்பின், **सुतस्पर्शरसज्ञतां**-புத்திரனின் ஸ்பர்சத்தில் உள்ள இன்பத்தை அறியும் தன்மையை, **ययौ** - அடைந்தான்.

(க-து) திலீபன் புதல்வனைத் தன் மடியின்மீது உட்கார வைத்துக்கொண்டான். அப்புதல்வனைத் தழுவுவது அவனது உடலில் அமுதத்தைப் பொழிவது போலிருந்தது. அந்த ஸுகத்தில் ஆழ்ந்து கண்களை மூடிக்கொண்ட திலீபன் புத்திரனின் மெய் தீண்டலால் ஏற்படும் இன்பத்தை நன்கு உணர்ந்தனுபவித்தான்.

'மக்கள் மெய்தீண்டலுடற்கின்பம்' என்ற குறளின் பகுதி இங்கு நோக்கத் தக்கது.

अमंस्त चानेन परार्ध्यजन्मना स्थितेरभेत्ता स्थितिमन्तमन्वयम् ।
स्वमूर्तिभेदेन गुणाग्र्यवर्तिना पतिः प्रजानामिव सर्गमात्मनः ॥२७॥

**प्रजानां** - ஜனங்களுக்கு, **पतिः** - தலைவனும், **स्थितेः** - வரம்பை, **अभेत्ता** - மீறாதவனுமான திலீபன், **प्रजानां पतिः** - பிரஜைகளைப் படைத்த பிரம்மதேவர், **गुणाग्र्यवर्तिना** - முக்குணங்களிற் சிறந்த ஸத்வ குணத்துடன் தொழிலைச்செய்பவரும், **स्वमूर्तिभेदेन** - தம்முடைய மற்றொரு வடிவமாயிருப்பவருமான விஷ்ணுவினால், **आत्मनः** - தம்முடைய, **सर्गं** - (**स्थितिमन्तं**) **इव** - ஸ்ருஷ்டியைப் (பாதுகாப்புடையதாக எண்ணுவது)போல், **परार्ध्यजन्मना** - சிறந்த பிறப்புடையவனும், **गुणाग्र्यवर्तिना** - நற்குணங்களுடன் இருப்பவனுமான, **अनेन**-இந்த ரகுவினால், **अन्वयं**-தனது வம்சத்தை, **स्थितिमन्तं**-நிலைபெற்றதாக, **अमंस्त च** - எண்ணினான்.

(க-து) மகன் பிறந்தாலன்றித் தனது வம்சம் நிலைபெறாதென எண்ணிய திலீபன், மகன் பிறந்து, நன்கு வளர்வதைக்கண்ட

பின்பே, தன் வம்சம் நிலைபெற்றதென எண்ணிக் கவலை நீங்கினான். ரகு, லோகபாலகர்களின் அம்சமுடையவனாதலால் சிறந்த பிறப்புடையவன். விநயம் முதலான நற்குணங்கள் அவனிடம் காணப்பட்டன. 'மனிதன், தானே மகனாகப் பிறக்கின்றான்' என்று சாஸ்திரம் கூறுகின்றது. இவ்வகையில் ரகுவைத் திலீபனின் மற்றொரு வடிவம் எனலாம்.

மேற்கூறிய கருத்து ஒரு உபமானத்தினால் விளக்கப்பட்டுள்ளது. பிரம்மதேவர் படைக்கின்றார். அவர் படைத்த உலகை, அவரது மற்றொரு வடிவமானவரும் ஸத்வ குணத்துடன் இருப்பவருமான விஷ்ணு காக்கின்றார். பிரம்மதேவர், தனது ஸ்ருஷ்டி விஷ்ணுவினால் காக்கப்படுவதை எண்ணி யிருத்தல்போல், திலீபன் தனது வம்சம் ரகுவினால் நிலை பெறுவதை எண்ணி மகிழ்ந்தான். திலீபனுக்குப் பிரம்மதேவனும், ரகுவிற்கு விஷ்ணுவும், வம்சத்திற்குப் படைப்பும் உபமானங்கள்.

स वृत्तचूलश्चलकाकपक्षकैरमात्यपुत्रैः सवयोभिरन्वितः ।
लिपेर्यथावद्ग्रहणेन वाङ्मयं नदीमुखेनेव समुद्रमाविशत् ॥ २८ ॥

**वृत्तचूलः** - வைக்கப்பட்ட குடுமியையுடைய, **सः** - அந்த ரகு, **चलकाकपक्षकैः** - அசைந்தாடுகின்ற (காக்கைச் சிறகு போன்ற) குடுமியையுடைய, **सवयोभिः** - நண்பர்களான, **अमात्यपुत्रैः** - மந்திரி குமாரர்களுடன், **अन्वितः** - கூடியவனாக, **लिपेः** - எழுத்தை, **यथावत्** - உள்ளபடி, **ग्रहणेन** - கற்பதால், **वाङ्मयं** - சொல்லுலகில், **नदीमुखेन** ஆற்றின் முகத்துவாரம் வழியாக, **समुद्रं इव** - கடலுள் செல்வதுபோல, **आविशत्** - பிரவேசித்தான்.

(க-து) எழுத்துக்களைக் கற்று அவற்றின் உதவியால்தான் சொற்களைக் கற்கவேண்டும். சௌளம் (குடுமிவைத்தல்) என்ற சடங்கு செய்யப்பட்டவுடன் ரகு தன் நண்பர்களான மந்திரி குமாரருடன் கூடக் கல்வி கற்கத் தொடங்கினான்.

ஆற்றின் வழியாகக் கடலில் மரக்கலம் புகுவதுபோல் எழுத்துக்களைக் கற்று அதன் மூலம் பரந்துள்ள சொல் லுலகில் புகுந்தான் ரகு. நூல்களைப் படிக்கும் திறன் பெற்றான் என்பது கருத்து.

अथोपनीतं विधिवद्विपश्चितो विनिन्युरेनं गुरवो गुरुप्रियम् ।
अवन्ध्ययत्नाश्च बभूवुरत्र ते क्रिया हि वस्तूपहिता प्रसीदति ॥२९॥

**अथ** - பிறகு, (பத்தாம் வயதில்) **विधिवत्**-முறைப்படி, **उपनीत** - உபநயனம் செய்விக்கப்பட்டவனும், **गुरुप्रियं** - குரு வுக்குப் பிரியனுமான, **एनम्** - இந்த ரகுவை, **विपश्चितः** - வித்வான்களான, **गुरवः** - உபாத்தியாயர்கள், **विनिन्युः**-படிப் பித்தனர்; **ते** - அவ்வுபாத்தியாயர்கள், **अत्र** - இந்த ரகுவி னிடத்தில், **अवन्ध्ययत्नाः च** - வீண்போகாத முயற்சியை யுடையவர்களாகவும், **बभूवुः** - ஆயினர்; **हि** - ஏனெனில், **क्रिया** - படிப்பித்தல் என்னும் தொழில், **वस्तूपहिता**-(தகுந்த) பாத்திரத்தில் செய்யப்படும்பொழுது, **प्रसीदति** - பயனுள்ள தாக ஆகிறது.

(க-து) பிறகு உரியகாலத்தில் ரகுவிற்கு உபநயனஞ் செய்த னர். கற்றுத் தேர்ந்த உபாத்தியாயர்கள் ரகுவைப் படிப்பித்தனர். அவர்கள் முயற்சி வீணாகாமல் ரகு எல்லாவற்றையும் நன்கு கற்றறிந் தான். தகுந்தவர்களுக்குக் கற்பித்த வித்யைதான் பயனுள்ளதாக ஆகிறது. ரகுவிற்குக் கற்பித்த வித்யை, ரகு அவ்வித்யையை நன்கு கற்றதால் மிக்க பயனுள்ளதாக ஆயிற்று.

धियः समग्रैः स गुणैरुदारधीः क्रमाच्चतस्रश्चतुरर्णवोपमाः ।
ततार विद्याः पवनातिपातिभिर्दिशो हरिद्भिर्हरितामिवेश्वरः ॥३०॥

**उदारधीः** - சிறந்த புத்தியை உடைய, **सः**-அந்த ரகு-, **हरितां** - திசைகளுடைய, **ईश्वरः** - தலைவனான சூரியன், **पवनातिपातिभिः** - காற்றையும் கடந்து செல்லும், **हरिद्भिः** -

குதிரைகளால், दिशः इव - திக்குகளைக்கடப்பதுபோல, धियः- புத்தியின், समग्रैः - எல்லா, गुणैः - குணங்களாலும், चतुर्णवोपमाः - நான்கு கடல்களை நிகர்த்த, चतस्रः - நான்கு, विद्याः - வித்யைகளையும், क्रमात् - முறையே, ततार - கடந்தான்.

(க-து) திசைகளுக் கதிபனான சூரியன் காற்றினும் கடிது செல்லுங் குதிரைகளின் உதவியால், திசைகளை யெல்லாங் கடந்து செல்வதுபோல் நுண்ணிய அறிவைப் பெற்றுள்ள ரகு, தன் புத்தியின் வலிமையால் நான்கு கடல்கள் போல் பரந்த நான்கு வித்யைகளையும் வெகு சீக்கிரத்தில் கற்றான்.

சூரியனின் குதிரைகள் ஏழு; புத்தியின் குணங்களும் ஏழாகும். அவையாவன: (1) புது விஷயங்களை அறிதற்கு ஆவல், (2) கேட்டல், (3) கொள்ளல், (4) நிலை நிறுத்தல், (5) பொருள்களின் கூறுபாட்டை யறிதல், (6) பொருள்களின் உண்மையைப் பற்றுதல், (7) தத்துவத்தைத் தீர்மானமாக அறிதல் என்பன.

தருக்க சாஸ்திரம், வேதங்கள் (ருக், யஜுஸ், ஸாம அதர்வண வேதங்கள்), விவசாயம் (வியாபாரம் முதலியன), ராஜநீதி என்பன நான்கு வித்யைகளாம்.

त्वचं स मेध्यां परिधाय रौरवीमशिक्षतास्त्रं पितुरेव मन्त्रवत् ।
न केवलं तद्गुरुरेकपार्थिवः क्षितावभूदेकधनुर्धरोऽपि सः ॥ २१ ॥

सः - அந்த ரகு, मेध्यां - தூய, रौरवीं - மானினது, त्वचम् - தோலை, परिधाय - அணிந்து, मन्त्रवत् - மந்திரத்துடன் கூடிய, अस्त्रं - அஸ்திரத்தை, पितुः एव - தந்தையிடமிருந்தே, अशिक्षत - கற்றான்; तद्गुरुः - அவனுடைய தந்தை, एकपार्थिवः - இணையற்ற அரசனாக மாத்திரம், न अभूत् - இல்லை, क्षितौ - இவ்வுலகில், सः - அதகிலீபன், एकधनुर्धरः अपि - ஒப்பற்ற வில்லாளியாகவும், अभूत् - இருந்தான்.

(க-து) ரகுவிற்கு உபநயனம் ஆகிவிட்டதால் பிரம்மசாரிகள் அணியவேண்டிய மான்தோலை அணிந்துகொண்டு, வில் வித்தையில் பயிற்சியுற்றான். திலீபன் அரசு புரிவதில் மட்டுமன்றி, வில் வித்தையிலும் உலகத்திலேயே இணையற்ற கைவன்மை பெற்றிருந்ததால் ரகு அஸ்திரங்களையும் தந்தையினிட மிருந்தே கற்று வல்லவனானான்.

महोक्षतां वत्सतरः स्पृशन्निव द्विपेन्द्रभावं कलभः श्रयन्निव ।
रघुः क्रमाद्यौवनभिन्नशैशवः पुपोष गाम्भीर्यमनोहरं वपुः ॥ ३२ ॥

**रघुः** - ரகு, **क्रमात्** - முறையே, **यौवनभिन्नशैशवः** - வாலிபப் பருவத்தினால் நீக்கப்பட்ட குழந்தைப் பருவத்தையுடையவனாக, **महोक्षतां** - பெருங்காளைப் பருவத்தை, **स्पृशन्**- அடைகின்ற, **वत्सतरः इव**-சிறு கன்றுபோலவும், **द्विपेन्द्रभावं**- பெரும் யானைத் தன்மையை, **श्रयन्**-அடைகின்ற, **कलभः इव**- யானைக்குட்டி போலவும், **गाम्भीर्यमनोहरं** - பெருந்தன்மையுடன் அழகிய, **वपुः** - உடலை, **पुपोष** - பெற்றான்.

(க-து) சிறு கன்றுக்குட்டி பெருங்காளையாக மாறுவது போலவும், யானைக்குட்டி பெரிய யானையாக ஆவது போலவும், ரகு குழந்தைப் பருவத்தை விட்டு யௌவனத்தை அடைந்தான், எதற்கும் கலங்காத மனத்திண்மையைப் பெற்றுள்ளதால் அவனது உடல் மிக அழகிய தோற்றங் கொண்டதாக விருந்தது.

அச்சம், வருத்தம், மகிழ்ச்சி முதலியவற்றால் மாறுபடாத மனநிலை, காம்பீர்யம் எனப்படும்.

अथास्य गोदानविधेरनन्तरं विवाहदीक्षां निरवर्तयद्गुरुः ।
नरेन्द्रकन्यास्तमवाप्य सत्पतिं तमोनुदं दक्षसुता इवाबभुः ॥ ३३ ॥

**अथ** - பிறகு, **गुरुः** - தந்தையான திலீபன், **अस्य**-இந்த ரகுவிற்கு, **गोदानविधेः** - கோதானம் என்ற சடங்கிற்கு, **अनन्तरं** - பிறகு, **विवाहदीक्षां**-விவாஹத்திற்கான தீக்ஷையை,

**निरवर्तयत्** - செய்வித்தான்; **दक्षसुताः** — தக்ஷனின் பெண்க ளான ரோஹிணீ முதலியவர்கள், **तमोनुदं इव** - இருளைப் போக்கும் சந்திரனைக் கணவனாகப் பெற்றதுபோல, **नरेन्द्र-कन्याः** - அரசர்களின் பெண்கள், **तं** - அந்த ரகுவை, **सत्पतिं**-நல்ல கணவனாக, **अवाप्य** - அடைந்து, **आबभुः**-திகழ்ந்தனர்.

(க-து) பிராம்மணருக்குப் பதினாறும் வயதிலும், க்ஷத்ரியர் களுக்கு இருபத்தொன்றும் வயதிலும் செய்யப்படும் ஒருவகைச் சடங்கு கோதானம் எனப்படும். கோதானம் என்பதற்குத் தலைமயிரை வெட்டுதல் என்று பொருள். இச்சடங்கில் தலைமயிர் வெட்டப்படும்.

திலீபன் ரகுவிற்குக் கோதானம் செய்வித்தபின் மணத் தைச் செய்துவைத்தான். அரச குமாரிகள் பலர் ரகுவை மணந்தனர். ரகு கிடைத்தற்கரிய கணவனானமையால் அவனை மணந்து அப்பெண்கள் மிகவும் மனமகிழ்ந்தனர். தக்ஷனின் பெண்களான ரோஹிணி முதலியோர் சந்திரனைக் கணவ னைப் பெற்று மனமகிழ்வு கொண்டதுபோல் அரச குமாரி களும் ரகுவை மணந்து இன்புற்றனர்.

சிலர் 'கோதானம்' என்பதற்குப் பசுவைத் தானம் செய்தல் என்ற பொருள் கொண்டு, கல்வி கற்றபின் ரகு கோதானம் செய்தான் என்று பொருள் கூறுகின்றனர்.

युवा युगव्यायतबाहुरंसलः कपाटवक्षाः परिणद्धकंधरः ।
वपुःप्रकर्षादजयद्गुरुं रघुस्तथापि नीचैर्विनयाददृश्यत ॥ ३४ ॥

**युवा** - வாலிபனும், **युग व्यायतबाहुः** - நுகத்தடிபோல் நீண்ட கைகளையுடையவனும், **अंसलः** - பலசாலியும், **कपाट-वक्षाः** - கதவுபோன்ற (பரந்த) மார்பையுடையவனும், **परिणद्धकंधरः**-திரண்டு வளர்ந்த கழுத்தை யுடையவனுமான, **रघुः**-ரகு, **वपुः प्रकर्षात्**-உடலின் சிறப்பினால், **गुरुं**-தந்தையை, **अजयत्** - ஜயித்தான், **तथाऽपि** - ஆயினும், **विनयात्** - வணக்

கத்திஞல், **नीचैः**-(அடங்கியவஞக) தாழ்மையுடன், **अदृश्यत**- காணப்பட்டான்.

(க-து) ரகு வாலிபன். நுகத்தடிபோல் நீண்ட வலிமிக்க கைகளையுடையவன். கதவுபோல் பரந்த மார்பையுடையவன். உருட்சியும் திரட்சியும் பெற்று வளர்ந்த கழுத்தையுடையவன். இவ்வாறு ரகு உடற் கட்டிஞல் தந்தையினும் மிக்கவஞக விளங்கிஞன்; ஆஞல் தந்தையிடமுள்ள பணிவிஞல் அவருக்குத் தாழ்ந்தவஞகத் தோன்றிஞன். ரகு விநயத்தால் சிறந்தவஞக இருந்தான் என்பது கருத்து.

ततः प्रजानां चिरमात्मना धृतां नितान्तगुर्वीं लघयिष्यता धुरम् ।
निसर्गसंस्कारविनीत इत्यसौ नृपेण चक्रे युवराजशब्दभाक् ॥ ३५ ॥

**ततः** - பிறகு, **आत्मना** - தன்ஞல், **चिरं** - வெகுகாலமாக, **धृतां** - வஹித்து வரப்பட்டதும், **नितान्तगुर्वीं**-மிகப் பெரியதுமான, **प्रजानां धुरं** - பிரஜைகளுடைய பாரத்தை, (ஜனங்களைப் பாதுகாப்பதிலுள்ள ச்ரமத்தை,) **लघयिष्यता** - குறைக்க விரும்புகின்ற, **नृपेण** - அரசஞல், **असौ** - இந்த ரகு, '**निसर्गसंस्कारविनीतः** - ஸ்வபாவத்திஞலும் கல்வியிஞலும் விநயமுள்ளவன்', **इति** - என்ற காரணத்திஞல், **युवराजशब्द**-**भाक्** - இளவரசன் என்ற சொல்லை அடைந்தவஞக (இளவரசஞக) **चक्रे** - செய்யப்பட்டான்.

(க-து) இயற்கையிலேயும், தான் கற்ற கல்வியாலேயும் விநய குணத்தைப் பெற்றுள்ளவனே அரசஞகத் தகுதியுடையவன். ரகு அவ்வாறிருப்பதைத் திலீபன் கண்டான். ஆகவே அவனுக்கு இளவரசுப்பட்டஞ் சூட்டிஞன். தானும் வெகுகாலமாக ராஜ்யத்தை ஆண்டு வருவதால், அப்பெரிய பாரத்தைக் குறைக்க விரும்பினவன்போல், அதன் பொறுப்பை ரகுவினிடமும் பிரித்து அளித்தான்.

नरेन्द्रमूलायतनादनन्तरं तदास्पदं श्रीर्युवराजसंज्ञितम् ।
अगच्छदंशेन गुणाभिलाषिणी नवावतारं कमलादिवोत्पलम् ॥३६॥

**गुणाभिलाषिणी** - விநயம் முதலிய நற்குணங்களை விரும்புகின்ற, **श्रीः** - ராஜ்யலக்ஷ்மீ, **नरेन्द्रमूलायतनात्** - அரசன் என்ற பண்டைய இருப்பிடத்தினின்றும், **अनन्तरं** - அருகிலுள்ள, **युवराजसंज्ञितं** - இளவரசு என்ற பெயரை யுடைய, **तदास्पदं** - ரகு என்ற இருப்பிடத்தை,—**गुणाभिला-षिणी** - நல்ல வாசனை முதலிய குணங்களை விரும்புகின்ற, (**श्रीः**) - லக்ஷ்மீதேவி, **कमलात्** - (பழைய) தாமரையினின் றும், **नवावतारं** - புதிதாகத் தோன்றியுள்ள, **उत्पलं इव** - தாமரைமலரை அடைவது போல,—**अंशेन**-ஒரு பகுதியால், **अगच्छत्** - அடைந்தாள்.

(க-து) தாமரை மலரில் லக்ஷ்மி வஸிப்பதாகக் கூறுவர். லக்ஷ்மீதேவி, காந்தி குறைந்த பழைய மலரைவிட்டு நீங்கிப் புதிதே மலர்ந்த தாமரைப்புஷ்பத்திற்குச் செல்வது போல, ராஜ்யலக்ஷ்மியும் அவளது பழைய ஸ்தானமான திலீபனிடமிருந்து சிறிதே நீங்கி, ரகுவினிடமும் வஸிக்கத் தொடங்கினாள்.

யுவராஜனாக்கப்பட்ட ரகு ராஜசோபையுடன் விளங்கி னான் என்பது கருத்து.

विभावसुः सारथिनेव वायुना घनव्यपायेन गभस्तिमानिव ।
बभूव तेनातितरां सुदुःसहः कटप्रभेदेन करीव पार्थिवः ॥ ३७ ॥

**सारथिना** - துணைபுரிகின்ற, **वायुना** - காற்றினால், **विभावसुः इव** - அக்னிபோலவும், **घनव्यपायेन** - மேகங்கள் நீங்கிய சரத் காலத்தினால், **गभस्तिमान् इव** - ஸூரியன் போலவும், **कटप्रभेदेन** - மதம் தோன்றுவதினால், **करी इव** - யானைபோலவும், **पार्थिवः** - அரசன், **तेन** - ரகுவின் காரணமாக, **अतितरां** மிகவும், **सुदुःसहः** - சுலபமாக எதிர்க்க முடியாதவனாக, **बभूव** - ஆனான்.

(க-து) காற்றுடன் கூடிய நெருப்பு சுலபத்தில் அணைக்க முடியா தது; மேகங்களின்றி சரத்காலத்து ஆகாயத்தில் ஒளிவீசும் சூரியனின்

உஷ்ணம் பொறுக்க முடியாதது; மதங்கொண்ட யானையை வெல்வது எளிதன்று; இவைகளைப் போல, புதல்வனுடைய ரகுவுடன் கூடிய திலீபன் எவராலும் எதிர்க்கமுடியாதவனாக ஆனான்.

நெருப்பு, சூரியன், யானை இவை திலீபனுக்கும் காற்று, மேகங்களில்லா, சரத்காலம் மதம் இவை ரகுவுக்கும் உபமானங்கள்.

**नियुज्य तं होमतुरंगरक्षणे धनुर्धरं राजसुतैरनुद्रुतम् ।**
**अपूर्णमेकेन शतक्रतूपमः शतं क्रतूनामपविघ्नमाप सः ॥ ३८ ॥**

**शतक्रतूपमः**- இந்திரனுக்கு ஒப்பான, **सः** - அத்திலீபன், **राजसुतैः** - ராஜ குமாரர்களால, **अनुद्रुतं** - பின்தொடரப்பட்டவனும், **धनुर्धरं** - வில்லையேந்தியவனுமான, **तं** - அந்த ரகுவை, **होमतुरङ्गरक्षणे** - யாகததிற்கான குதிரையைக் காப்பதில், **नियुज्य** - நியமித்து, **एकेन** - ஒரு (யாகத்தினால்) **अपूर्णं** - குறைவுள்ள, **क्रतूनां शतम्** - (அசுவமேத) யாகங்களின் நூற்றை, **अपविघ्नं** - இடையூறின்றி, **आप** - அடைந்தான் (செய்தான்).

(க-து) திலீபன் தன் மகன் ரகுவின் உதவி பெற்றுத் தொண்ணூற்றொன்பது அசுவமேதங்களை யாதொரு இடையூறுமின்றிச்செய்து முடித்தான்.

அசுவமேதம் செய்பவர், அதற்கான குதிரையை அதன் இஷ்டப்படி செல்லவிடுவர். வேற்றரசர் அதைப் பிடித்தால் அவருடன் சண்டையிட்டுக் குதிரையை மீட்பர். திலீபனது குதிரையை ரகு, அரச குமாரர்கள் பின்தொடரச் சென்று காத்தான்.

**ततः परं तेन मखाय यज्वना तुरंगमुत्सृष्टमनर्गलं पुनः ।**
**धनुर्भृतामग्रत एव रक्षिणां जहार शक्रः किल गूढविग्रहः ॥३९॥**

**ततः परं** - அதற்குப் பிறகு, **यज्वना** முறைப்படி யாகஞ் செய்த, **तेन** - அத்திலீபனால், **पुनः** - மறுபடியும், **मखाय** - யாகத்திற்காக, **उत्सृष्टं** - விடப்பட்டதும், **अनर्गलं** - தடையற்றதுமான, **तुरङ्गं** - குதிரையை, **धनुर्भृतां** - வில்லை யேந்திய, **रक्षिणां** - காவலர்களின், **अग्रतः एव** - எதிரிலேயே, **गूढविग्रहः**- மறைந்த உருவையுடையவனாக, **शक्रः**- இந்திரன், **जहार किल**- கவர்ந்தான்.

(க-து) திலீபன் இவ்வாறு தொண்ணூற்றொன்பது அசுவமேதயாகங்களைச் செய்து, நூறாவது யாகஞ் செய்ய யாகக்குதிரையை விட்டான். வழக்கம் போல், ஆயுதங்களைத் தரித்த வீரர்கள் அக் குதிரைக்குக் காவலாளராகச் சென்றனர். அச்சமயத்தில் இந்திரன் அக்காவலர்கள் கண்ணுக்குப் புலனாகாமல் அங்கு வந்து அக் குதிரையைக் கவர்ந்து சென்றான்.

எவரேனும் நூறு அசுவமேதங்கள் முறையாகச் செய்துவிடின் இந்திர பதவியை யடைவர் என்று சாஸ்திரங்கள் கூறுவதால் திலீபன் நூறாவது யாகத்தை முடிப்பின், தனது பதவிக்கு வந்துவிடுவான் என எண்ணி இந்திரன் திலீபனது யாகக் குதிரையைக் கவர்ந்தான்.

विषादलुप्तप्रतिपत्ति विस्मितं कुमारसैन्यं सपदि स्थितं च तत् ।
वसिष्ठधेनुश्च यदृच्छयागता श्रुतप्रभावा ददृशेऽथ नन्दिनी ॥४०॥

**तत्** - அந்த, **कुमारसैन्यं** - குமாரனை ரகுவின் சேனை, **सपदि** - உடனே, **विषादलुप्तप्रतिपत्ति** - வருத்தத்தினால் செய்ய வேண்டியதை அறியாததாகவும், **विस्मितं** - ஆச்சரியமுற்றதாகவும், **स्थितं च** - இருந்தது; **अथ** - பிறகு, **श्रुतप्रभावा** - புகழ்பெற்ற பெருமையை யுடையதும், **यदृच्छया** - தன் போக்கில், **आगता** - வந்ததுமான, **नन्दिनी नाम** - நந்தினி என்ற, **वसिष्ठधेनुः च** - வஸிஷ்டருடைய பசுவும், **ददृशे** - காணப்பட்டது.

(க-து) கண்ணெதிரே இருந்த குதிரை திடீரெனக்காணமற் போனமையால் அதற்குக் காவலாக வந்த ரகுவின் சேனை ஆச்சரியங்கொண்டு, இனி செய்வது யாது என்றறியாமல் திகைத்து நிற்கவும் அக் கணத்திலேயே பெருமை பெற்ற நந்தினி என்னும் வஸிஷ்டருடைய ஹோமப்பசு அவ்விடத்திற்கு வந்தது.

तदङ्गनिस्यन्दजलेन लोचने प्रमृज्य पुण्येन पुरस्कृतः सताम् ।
अतीन्द्रियेष्वप्युपपन्नदर्शनो बभूव भावेषु दिलीपनन्दनः ॥ ४१ ॥

**सतां** - பெரியோர்களால், **पुरस्कृतः**-கௌரவிக்கப்பட்ட, **दिलीपनन्दनः** - திலீபனுடைய புதல்வன் ரகு, **पुण्येन**-பரிசுத்தமான, **तदङ्गनिस्यन्दजलेन** - அப்பசுவினுடலிலிருந்து பெருகும் நீரினால் (கோஜலத்தினால்), **लोचने** - கண்களை, **प्रमृज्य** - துடைத்து, **अतीन्द्रियेषु** - பொறிகளுக்குப் புலனாகாத, **भावेषु अपि** - பொருள்களிலும், **उपपन्नदर्शनः** - காணும் சக்தியைப் பெற்றவனாக, **बभूव** - ஆனான்.

(க-து) நடந்த செய்தியை யறிய விரும்பிய ர நந்தினியின் கோஜலத்தினால் தன் கண்களைத் துடைக்க அவன விரும்பிய வண்ணமே சாதாரண கண்களுக்குப் புலனாகாத பொருள்களையுங் காணும் தகைமை பெற்றான்.

கோ ஜலத்தினால் கண்களைக் கழுவுவது பல நன்மைகளைப் பயக்கும் என அறிஞர் கூறுகின்றனர். ' **तदंग.... जलेन** ' என்பதற்கு ' நந்தினியின் வியர்வை நீர் ' என உரை செய்பவரும் உண்டு.

स पूर्वतः पर्वतपक्षशातनं ददर्श देवं नरदेवसंभवः ।
पुनः पुनः सूतनिषिद्धचापलं हरन्तमश्वं रथरश्मिसंयतम् ॥ ४२ ॥

**नरेन्देवसंभवः** - அரசன் மகனாகிய, **सः** - அந்த ரகு, **पुनः पुनः**-திரும்பத் திரும்ப, **सूतनिषिद्धचापलं**- தேர்ப்பாகனால் தடுக்கப்பட்ட சபலகுணமு (மருட்சியு)டையதும், **रथरश्मि** -

**संयतं**-தேரில் கடிவாளங்களால் கட்டப்பட்டதுமான, **अश्वं**-குதிரையை, **हरन्तं** - எடுத்துச்செல்லுகின்ற, **पर्वतपक्षशातनं**-மலைகளின் இறக்கைகளை வெட்டிய, **देवं** - தேவனை இந்திரனை, **पूर्वतः** - கிழக்கு திசையில், **ददर्श** - கண்டான்.

(க-து) இந்திரன், திலீபனுடைய யாகக்குதிரையைக் கடிவாளங்களால் தன்தேரில் கட்டிக் கொண்டு சென்றான். திலீபனுடைய குதிரை மருண்டு இந்திரனுடைய தேருடன் செல்லவிரும்பாது பின் வாங்கிய பொழுது இந்திரனுடைய தேர்ப்பாகன் மாதலி அதைத்தடுத்து ஓட்டிக்கொண்டிருந்தான். இத்தகைய நிலையில் இந்திரன் குதிரையைக் கவர்ந்து செல்லுவதை ரகு கண்டான்.

இந்திரன் மலைகளின் சிறகை வெட்டியவன் எனப் புராணம் கூறுகின்றது. முற்காலத்தில் மலைகள் சிறகுகளுடன் பறந்தன வென்றும், அதனால் அச்சமுற்ற ஜனங்களின் பயத்தைப் போக்கக்கருதி இந்திரன், வஜ்ராயுதத்தால் அவைகளின் சிறகை வெட்டி மலைகளை ஒவ்வோரிடத்தில் இருக்கச் செய்தான் எனவும் கூறப்பட்டுள்ளது.

ரகு போரிட வேண்டிய இந்திரன் எத்தகையவன்மையுடையவன் என்பதைக் காட்ட '**पर्वतपक्षशातनं**' (மலைகளின் சிறகை வெட்டியதேவன்) என்ற அடைமொழி கொடுக்கப்பட்டுள்ளது.

शतैस्तमक्ष्णामनिमेषवृत्तिभिर्हरिं विदित्वा हरिभिश्च वाजिभिः ।
अवोचदेनं गगनस्पृशा रघुः स्वरेण धीरेण निवर्तयन्निव ॥ ४३ ॥

**रघुः** - ரகு, **तं** - அவனை, **अनिमेषवृत्तिभिः** - இமைத்தற்றொழிலற்ற, **अक्ष्णां** - கண்களுடைய, **शतैः** - நூறுகளாலும், **हरिभिः** - பச்சையான, **वाजिभिः च** - குதிரைகளாலும், **हरिं** - இந்திரனை, **विदित्वा** - அறிந்து, **एनं** - இவ் விந்திரனைப் (பார்த்து), **गगनस्पृशा** - ஆகாயத்தில் பரவும் (உரத்த),

**धीरेण** - கம்பீரமான, **स्वरेण** - குரலுடன், **निवर्तयन् इव** - தடுப்பவன்போல, **अवोचत्** - உரைத்தான்.

(க-து) குதிரையைக் கவர்ந்து செல்பவன் இந்திரன் என, அவனது ஆயிரம் கண்கள் இமையாமையாலும், அவனது தேரில் பூட்டியிருந்த குதிரைகள் பச்சையாயிருந்தமையாலும், ரகு அறிந்து கொண்டான். உடனே ரகு உரக்கக் கூவி, இவ்வாறு கூறினான்.

தேவர்களுடைய கண்கள் இமைபாவென்றும், இந்திரனுடைய குதிரைகள் பச்சை நிறத்தன என்றும் கூறுவர்.

मखांशभाजां प्रथमो मनीषिभिस्त्वमेव देवेन्द्र सदा निगद्यसे ।
अजस्रदीक्षाप्रयतस्य मद्गुरोः क्रियाविघाताय कथं प्रवर्तसे ॥ ४४ ॥

"**देवेन्द्र** - தேவேந்திரனே! **मनीषिभिः** வித்வான்களால், **त्वं एव** - நீயே, **मखांशभाजां** - யாகங்களில் அவிர்ப்பாகத்தைப் பெறுபவர்களுள், **प्रथमः** - முதல்வனக, **सदा** - எப்பொழுதும், **निगद्यसे** - சொல்லப்படுகிறாய். (அப்படியிருந்தும்), **अजस्र-दीक्षा प्रयतस्य** - எப்பொழுதும் யாகதீக்ஷையினால் பரிசுத்தரான், **मद्गुरोः** - என் தந்தையினுடைய, **क्रियाविघाताय** - யாகத்தைக் கெடுக்க, **कथं**-எப்படி, **प्रवर्तसे** தொடங்குகிறாய்?

(க-து) ரகு கூறினான் :—"இந்திரனே! யாகங்கள் சரியாக நடைபெறுமாறு கவனித்துக் கொள்ள வேண்டியவன் நீ. ஏனெனில் யாக ஹவிஸ்ஸை உண்ணும் தேவர்களுள் முதல்வன் நீயே. அப்படி யிருக்கையில் என் தந்தையினுடைய யாகத்தைக் கெடுப்பதற்கு நீ ஏன் முயற்சி செய்கிறாய்? உனது நலத்தைக் கருதியாவது நீ இக்குதிரையைக் கவரலாகாது அல்லவா?

त्रिलोकनाथेन सदा मखद्विषस्त्वया नियम्या ननु दिव्यचक्षुषा ।
स चेत् स्वयं कर्मसु धर्मचारिणां त्वमन्तरायो भवसि च्युतो विधिः॥

"**त्रिलोकनाथेन** - மூன்று உலகங்களுக்கு நாதனும், **दिव्यचक्षुषा** - புலனாகாதவற்றையும் காணும் கண் படைத்த

வனுமாகிய, त्वया - உன்னால், मखद्विषः - யாகத்தின் பகை
வர்கள், सदा - எப்பொழுதும், नियम्याः ननु - தண்டிக்கப்பட
வேண்டியவர்களல்லவா? सः - அத்தகைய, त्वं - நீ, धर्म-
चारिणां - தர்மத்தை அனுஷ்டிப்பவர்களின், कर्मसु - தொழில்
களான யாகங்களில், स्वयं - தானே, अन्तरायः - இடையூறாக,
भवसि चेत् - ஆவாயானால், विधिः - (கர்ம) அனுஷ்டானம்,
च्युतः - அழிந்ததே.

(க-து) "யாகங்களுக்கு இடையூறு செய்யும் அசுரர் முதலியவர்களைத்
தண்டித்து, உலகில் யாகங்கள் போன்ற நற் செயல்கள் சரியாக
நடைபெறச் செய்வது உன் கடமை. அவ்வாறிருக்க, யாகம் முத
லானவற்றைச் செய்யும் நல்லோருக்கு நீயே இடையூறு விளை
வித்தால் பின் அவற்றைச் செய்பவர்தாம் யாவர்? வேலியே பயிரை
மேய்வது போலன்றோ உள்ளது உன் செய்கை. இனி யாகாதி நற்
காரியங்கள் அழிந்தனவென்றே கொள்ளலாம்.

तदङ्गमग्र्यं मघवन् महाक्रतोरमुं तुरंगं प्रतिमोक्तुमर्हसि ।
पथः श्रुतेर्दर्शयितार ईश्वरा मलीमसामाददते न पद्धतिम् ॥ ४६ ॥

"मघवन् - இந்திரனே! तत् - ஆகையினால், महाक्रतोः -
சிறந்த யாகமான அசுவமேதத்திற்கு, अग्र्यं - முக்கியமான,
अङ्गं - அங்கமாகிய, अमुं - இந்த, तुरङ्गं - குதிரையை, प्रति-
मोक्तुं - விடுவிக்க, अर्हसि - உரியவனாகிறாய். श्रुतेः - வேதத்
தின், पथः - வழியை, दर्शयितारः - காட்டுகின்ற, ईश्वराः -
பெரியோர்கள், मलीमसां - குற்றமுள்ள (அழுக்குற்ற),
पद्धतिं - வழியை, न आददते - அங்கீகரிப்பதில்லை"

(க-து) "யாகத்தைக் காப்பதே உன் கடமையாகையால், அசுவ
மேத யாகத்திற்குப் பிரதான அங்கமாகிய இக் குதிரையை நீ விடுத்
தல் வேண்டும். வேதங்களில் கூறப்பட்ட தர்மங்களை உலகிற்கு
அனுஷ்டித்துக் காட்டவேண்டிய உன்னைப்போன்ற பெரியோர்கள்
யாகத்திற்கு இடையூறு செய்தல் என்ற இழிவான வழியைக் கடைப்
பிடிக்க மாட்டார்கள்."

इति प्रगल्भं रघुणा समीरितं वचो निशम्याधिपतिर्दिवौकसाम् ।
निवर्तयामास रथं सविस्मयः प्रचक्रमे च प्रतिवक्तुमुत्तरम् ॥ ४७ ॥

**इति** - இவ்வாறு, **रघुणा** - ரகுவினால், **समीरितं** - கூறப்பட்ட, **प्रगल्भं** - கம்பீரமான, **वचः** - வார்த்தையை, **निशम्य** - கேட்டு, **दिवौकसां** - தேவர்களின், **अधिपतिः** - அரசன் (இந்திரன்) **सविस्मयः सन्** - ஆச்சரியத்துடன் கூடினவனாக, **रथं** - தேரை, **निवर्तयामास** - திருப்பினான்: **उत्तरं** - பதிலை, **प्रतिवक्तुं च** - சொல்வதற்கும், **प्रचक्रमे** - தொடங்கினான்.

(க-து) ரகு தன்னைக்காண முடியாதென்றும், தனது திருட்டுச் செயல் வெளியாகாதென்றும் எண்ணியிருந்த இந்திரன், ரகுவினால் தான் பார்க்கப்படுவதை உணர்ந்து பேராச்சரிய முற்றான். தேரை நிறுத்தி அவன் கூறியதற்குப் பதிலும் கூறத்தொடங்கினான்.

यदात्थ राजन्यकुमार तत्तथा यशस्तु रक्ष्यं परतो यशोधनैः ।
जगत्प्रकाशं तदशेषमिज्यया भवद्गुरुर्लङ्घयितुं ममोद्यतः ॥ ४८ ॥

"**राजन्यकुमार** - இளவரசனே! **यत्** - எதை, **आत्थ** - நீ கூறுகிறாயோ, **तत्** - அது, **तथा** - உண்மைதான். **किं तु** - ஆனால், **यशोधनैः** - புகழையே செல்வமாகக்கொண்ட (எம் போன்ற)வரால், **परतः** - சத்துருவிடமிருந்து, **यशः** - புகழானது, **रक्ष्यं** - காக்கப்படவேண்டும்: **भवद्गुरुः** - உன் தந்தை, **जगत्प्रकाशं** - உலகறிந்த, **मम** - எனது, **तत् अशेषं** - அப்புகழ் எல்லாவற்றையும், **इज्यया** - யாகத்தினால், **लङ्घयितुं** - அபகரிக்க, **उद्यतः** - முயற்சி எடுத்துள்ளான்.

(க-து) இந்திரன் கூறினான் :—

"இளவரசனே! நீ என் கடமையைப்பற்றிக் கூறியதனைத்தும் உண்மையே. ஆயினும் நான் புகழையே பொருளாகக் கொண்டவன்; புகழிலே வாழ்பவன். அப் புகழுக்கு இழுக்கு வராமல் காப்பது

கடமை; உன் தந்தை நூறு அசுவமேத யாகங்கள் செய்து, அதன் மூலம் நான் பெற்றுள்ள புகழைப் பெற விரும்புகிறான். அது எனது புகழுக்குக் குறைவு விளைவிப்பதாகும்.

हरिर्यथैकः पुरुषोत्तमः स्मृतो महेश्वरस्त्र्यम्बक एव नापरः ।
तथा विदुर्मां मुनयः शतक्रतुं द्वितीयगामी न हि शब्द एष नः॥४९॥

**यथा** - எப்படி, **हरिः** - விஷ்ணு, **एकः एव** - ஒருவரே, **पुरुषोत्तमः** - (புருஷோத்தமன்) மனிதரிற் சிறந்தோர் (என), **स्मृतः** - எண்ணப்பட்டுள்ளாரோ, **त्र्यंबकः एव** - முக்கண்ணரான சிவபிரான் ஒருவரே, **महेश्वरः** - மஹேசுவரர் என, **स्मृतः** - எண்ணப்படுகிறாரோ, **अपरः** - மற்றொருவர் (எனவும்) **न स्मृतः** - எண்ணப்படுவதில்லையோ, **तथा** - அப்படியே, **मां** - என்னை, **मुनयः** - முனிவர்கள், **शतक्रतुं** - (நூறு யாகங்களைச் செய்தவன் என்ற பொருளுடைய) சதக்ரது என, **विदुः** - அறிகின்றனர். **नः** - (விஷ்ணு, சிவன், இந்திரன் ஆகிய) எங்களுடைய, **एषः** - இந்த, **शब्दः** - (மூன்று) சொல்லும், **द्वितीयगामी** - மற்றொருவரைக் குறிப்பதாக, **न हि** - ஆகாதன்றோ.

(க-து) விஷ்ணு ஒருவரே புருஷோத்தமர்; சிவபிரான் ஒருவரே, மஹேசுவரன் என அழைக்கப்படுவார். அதைப்போல 'சதக்ரது' என்று என்னைமட்டுமே அழைப்பர். ஆகவே இம்மூன்று சொற்களும் வேறு எவரையும் குறித்தல் கூடாது. உனது தந்தை நூறு யாகங்கள் செய்து என் பெயராகிய சதக்ரது என்ற பெயரைப் பெறுதல் தகாது. அதை நான் ஸஹிக்கமாட்டேன்.

अतोऽयमश्वः कपिलानुकारिणा पितुस्त्वदीयस्य मयापहारितः ।
अलं प्रयत्नेन तवात्र मा निधाः पदं पदव्यां सगरस्य संततेः ॥५०॥

" **अतः** - ஆகையினால், **त्वदीयस्य** - உன்னுடைய, **पितुः** - தந்தையின், **अयं** - இந்த (நூறாவது) **अश्वः** - குதிரை,

**कपिलानुकारिणा** - கபில முனிவரைப் போன்ற, **मया** - என்ஞல், **अपहारितः** - கவரப்பட்டது. **अत्र** - இக்குதிரையின் விஷயத்தில், **तव** - உன்னுடைய, **प्रयत्नः** - முயற்சி, **अलं** - பயனற்றது. **सगरस्य** - ஸகரனுடைய, **संततेः** குலத்தவரின், **पदव्यां** - வழியில், **पदं** - அடியை, **मा निधाः** - வைக்காதே.

*(க-து) மற்ருருவன் சதக்ரது என்ற பெயரை அடைதல் கூடாது என்ற காரணத்தால் நான் உனது தந்தையின் இக்குதிரையைக் கவர்ந்தேன். இதை நீ விடுவிக்க முயன்ருல் அது பயனளிக்காது. கபில முனிவரின் கோபத்துக்காளாகி உன் முன்னோர்களான ஸகரபுத்ரர்கள் மடிந்ததுபோல நீயும் என் கோபத்தால் உயிரிழக்காதே.*

*ஸூர்ய வம்சத்து மன்னன் ஸகரன் என்பவன் அசுவமேதம் செய்ய விரும்பி அதற்கான குதிரையை அவிழ்த்து விட்டான். அவனது புதல்வர்கள் அறுபதினுயிரவர் அதைக் காத்துப் பின் சென்றனர். அப்பொழுதும் இந்திரனே அக் குதிரையைக் கவர்ந்து பாதாள லோகத்தில் கபில முனிவரின் எதிரில் கொண்டு கட்டிவிட்டுச் சென்ருன். ஸகரபுத்திரர்கள் பாதாளம் சென்று மகரிஷியின் எதிரில் குதிரையைக் கண்டு, அவர் தாம் குதிரையைக் கவர்ந்தார் என எண்ணிப் போராரவாரத்துடன் அவரை எதிர்த்தனர். அதனுல் கோபமடைந்த கபில முனிவர், தமது தவ வலிமையால் எல்லோரையும் சாம்பலாகச் செய்தார்.*

*ரகுவின் முன்னோர்களாகிய ஸாகரர்கள் மடிந்ததைப் பற்றி இப்பொழுது இந்திரன் நினைவூட்டுவதன் நோக்கம் ரகுவின் மனத்தில் அச்சத்தை உண்டாக்குவதற்காகவே. ஸாகரர்களைப் போல் அவனும் அழிவான் என்கிருன் இந்திரன். கபில முனிவரைப்போல் தானும் பலமுடையவன் எனவும், அவர் அறுபதினுயிரவரை அழித்ததைப் போல் ரகுவைத்*

தான் அழிக்கமுடியும் எனவும் குறிப்பாகத் தெரிவிக்கக்கருதி இந்திரன் தன்னைக் கபிலருடன் ஒப்பிட்டுக் கொள்கிறான். இவ்விஷயத்தில்தான் இந்திரனுக்கும் கபிலருக்கும் ஒற்றுமை உள்ளது. குதிரையைக் கவர்ந்த விஷயத்தில் அல்ல. ஏனெனில் முன்பும் குதிரையைக் கவர்ந்தவன் இந்திரனே. கபில முனிவரல்லர்.

அல்லது, கபிலர் ஸகரனுடைய குதிரைக் கவர்ந்தது போல் தான் ரகுவின் குதிரையைக் கவர்வதாக இந்திரன் கூறியதாகக் கொள்ளினும் தகும். "வேதமார்க்கத்தைக் காட்டும் பெரியோர் குற்றமுள்ள வழியைப்பின்பற்றார்" என ரகு 46-ம் சுலோகத்தில் கூறியதற்குப் பதிலாக இந்திரன், தான் செய்த காரியத்திற்கு ஆதாரமாக மஹரிஷியான கபிலரும் குதிரையைக் கவர்ந்தார் எனக்கூறி, பெரியோர் சென்ற வழியில் தானும் செல்வதாகக் கூறுகின்றான் எனலாம். ஆனால் சரித்திர சம்பவம் ஒன்றைச் சிறிது மாற்றிக் கூறி யிருக்கிறான் இந்திரன் என்றால், திருடியவன் பொய் கூற முற்படுவதில் வியப்பொன்று மில்லை.

ततः प्रहस्यापभयः पुरन्दरं पुनर्बभाषे तुरगस्य रक्षिता ।
गृहाण शस्त्रं यदि सर्ग एष ते न खल्वनिर्जित्य रघुं कृती भवान् ॥

**ततः** - பிறகு, **तुरगस्य** - குதிரையின், **रक्षिता** - காவலனாகிய ரகு, **प्रहस्य** - நகைத்து, **अपभयः** - அச்சமற்றவனாக, **पुनः** - மறுபடியும், **पुरंदरं** - இந்திரனை (ப்பார்த்து), **बभाषे** - கூறினன். "**एषः** - இது (தான்) **ते** - உனது **सर्गः यदि** - முடிவான எண்ணமாயின், **शस्त्रं** - ஆயுதத்தை, **गृहाण** - எடுத்துக்கொள்; **भवान्** - நீ, **रघुं** - ரகுவாகிய என்னை, **अनिर्जित्य** - ஜயிக்காமல், **कृती** - உனது வேலைமுடித்தவனாக, **न खलु** - ஆகமாட்டாய்" என்றான்.

(க-து) இந்திரன் வார்த்தையைக் கேட்ட ரகு, இந்திரன் விஷயத்தில் மதிப்பின்மை தோன்ற நகைத்து, பயமற்றவனாக அவனைப் பார்த்துக் கூறினான்: "இக்குதிரையை விடமுடியாது என்பது உனது தீர்மானமாக இருந்தால் ஆயுதத்தைக் கையில் எடு. என்னை வெல்லாத வரை நீ இங்கிருந்து செல்ல முடியாது. உனது எண்ணம் ஈடேறாது என்பதை உணர்ந்துகொள்" என்றான்.

स एवमुक्त्वा मघवन्तमुन्मुखः करिष्यमाणः सशरं शरासनम् ।
अतिष्ठदालीढविशेषशोभिना वपुःप्रकर्षेण विडम्बितेश्वरः ॥ ५२ ॥

**सः** - அந்த ரகு, **उन्मुखः** - நிமிர்த்திய முகத்துடன் **मघवन्तं** - இந்திரனைப் (பார்த்து), **एवं** - இவ்வாறு, **उक्त्वा** - சொல்லியபின், **शरासनं** - வில்லை, **सशरं** - அம்புடன் கூடியதாக, **करिष्यमाणः** - செய்ய விரும்புகிறவனாக, **आलीढविशेषशोभिना** - 'ஆலீடம்' என்ற நிற்கும் நிலையினால் மிகவும் அழகாக உள்ள, **वपुःप्रकर्षेण** - கம்பீரமான சரீரத்தினால், **विडंबितेश्वरः** - பரமசிவனை ஒத்து, **अतिष्ठत्** - நின்றான்.

(க-து) ரகு தைரியத்துடன் இந்திரனைப் பார்த்து மேற்கண்டவாறு கூறிவிட்டு, வில்லில் அம்பைப்பூட்டி இந்திரனுடன் போர்புரியத் தயாராக நின்றான். அவன் நின்ற நிலை பரமசிவன் திரிபுரஸம்மாரம் செய்யும் பொழுது வில்லைக் கையிலேந்தி நின்ற நிலையை ஒத்திருந்தது.

ஆலீடம் என்பது வில்லாளிகள் நிற்கும் நிலைகளுள் ஒன்று. இந்நிலைகள், வைசாகம், மண்டலம், ஸமபதம், ஆலீடம், பிரத்யாலீடம் என ஐந்தாகும். ஆலீடம் என்பது, வலதுகாலை முன்வைத்து, இடதுகாலைச் சற்றுப்பின் வைத்து உடல் முழுவதையும் நேரே நிமிர்த்திக் கையில் வில்லேந்தி நிற்றலாகும்.

रघोरवष्टम्भमयेन पत्रिणा हृदि क्षतो गोत्रभिदप्यमर्षणः ।
नवाम्बुदानीकमुहूर्तलाञ्छने धनुष्यमोघं समधत्त सायकम् ॥ ५३ ॥

**रघोः** - ரகுவின், **अवष्टम्भमयेन** - மனஉறுதியாகிய, **पत्रिणा** - பாணத்திஞல், **हृदि** - மார்பில், **क्षतः** - அடிக்கப் பட்டு, **अमर्षणः** - கோபங்கொண்ட, **गोत्रभित् अपि** - இந்திரனும், **नवाम्बुदानीकमुहूर्तलाञ्छने**, புதிய மேகங்களின் கூட்டத்திற்குச் சிறிதுநேரம் அணியாகவிருக்கும், **धनुषि** - (தனது) வில்லில், **अमोघं** - வீணுகாத, **सायकं** - அம்பை, **समधत्त** - பூட்டினன்.

(க-து) ரகு பாணத்திஞல் இந்திரனை அடிக்கத் தொடங்கவில்லை. ஆனல் ரகுவின் வீரவாதமே பாணமாக இருந்து இந்திரன் மனத்தைத் தாக்கியது. அவன் காட்டிய மன உறுதியும், கூறிய சொல்லம்பும் இந்திரனின் ஹிருதயத்தைப் பிளந்தன. அதஞல் கோபம் கொண்ட இந்திரன், ரகுவின் பாணம் தன்மேல் விழுவதன் முன்னமே, தனது வில்லில் அம்பைப் பூட்டி ரகுவின் மார்பை நோக்கி விடுத்தான்.

दिलीपसूनोः स बृहद्भुजान्तरं प्रविश्य भीमासुरशोणितोचितः ।
पपावनास्वादितपूर्वमाशुगः कुतूहलेनेव मनुष्यशोणितम् ॥ ५४ ॥

**भीमासुरशोणितोचितः** - பயங்கரமான அசுரர்களின் ரத்தத்தில் பழக்கமுள்ள, **सः** - அந்த, **आशुगः** - (இந்திரன் விடுத்த) அம்பு, **दिलीपसूनोः** - திலீபன் மகஞன ரகுவின், **बृहत्** - பரந்த, **भुजान्तरं** - மார்பில், **प्रविश्य** - நுழைந்து, **अनास्वादितपूर्वं** - முன்ஞல் சுவைக்கப் பெருத, **मनुष्यशोणितं** - மனித ரத்தத்தை, **कुतूहलेन इव** - ஆவலுடன் (பருகுவது) போல, **पपौ** - குடித்தது.

(க-து) இந்திரன் விடுத்த அஸ்திரம் ரகுவின் மார்பைப் பிளந்து உட்சென்றது. இந்திரன் இதுவரை மனிதருடன் போர்புரிந்ததில்லை

யாகையால், முதன் முறையாக அவனது அம்பு ஒரு மனிதனுடைய மார்பினில் சென்றது.

அரக்கர்களின் ரத்தத்தைக் குடித்துப் பழகியிருந்த அம்பு, மனித ரத்தத்தின் சுவையறிய விரும்பியது போல் ரகுவின் மார்பில் புகுந்து அவனது ரத்தத்தைக் குடித்தது என அழகுடன் கூறுகின்றார் கவி

हरेः कुमारोऽपि कुमारविक्रमः सुरद्विपास्फालनकर्कशाङ्गुलौ ।
भुजे शचीपत्रविशेषकाङ्किते स्वनामचिह्नं निचखान सायकम् ॥५५॥

**कुमारविक्रमः** - குமாரக் கடவுளைப் போன்ற பராக்ரமத்தையுடைய, **कुमारः अपि** - இளவரசனாகிய ரகுவும், **सुरद्विपास्फालन कर्कशाङ्गुलौ**-தேவ யானையாகிய ஐராவதத்தைத் தட்டிக்கொடுத்தலால் கடினமான விரல்களையுடையதும், **शची पत्रविशेषकअङ्किते** - இந்திராணியினுடைய, இலைபோன்ற சித்திரங்களால் அடையாளஞ் செய்யப்பட்ட, **हरेः भुजे** - இந்திரனின் தோளில், **स्वनामचिह्नं** - தன் பெயர் பொறித்த, அம்பை, **निचखान** , (புதையும்படி செய்தான்) செலுத்தினான்.

(க-து) ரகு, தேவஸேனைக்குத் தலைவரும், தேவேந்திரனுக்குச் சண்டையில் உதவி செய்பவருமான ஸுப்ரஹ்மண்யன் போல் பலமுடையவன். ஆதலால் தன் பெயர் பொறித்த பாணத்தை இந்திரனின் தோளில் தைக்கும்படி செய்தான். இந்திரனுடைய கை நல்லவலிமையுடையதே. ஐராவதத்தின் மேல் செல்லும்பொழுது அதை ஓட்டுவதற்கு வேறு ஆயுதத்தைத் தேடாது தன் கைகளாலேயே தட்டி ஓட்டியதால் விரல்கள் கடினமாயிருந்தன. இதனால் அவன் கை எவ்வளவு வலிமையுடைய தென்பதையறியலாம். அவன்கை, வலிமையுடையது மாத்திரமல்ல. நல்லஸௌக்யத்திலே இருப்பது. இந்திராணி அன்புடன் தனது முகத்தைப் புதைக்குமிடம் அவனது தோள். இப்பொழுதும் கூட, இந்திரன் குதிரையைக் கவரவருமுன், இந்திராணி தனது முகத்தை அவனது தோளில் அழுத்தி அன்புடன் விடைகொடுத்தனுப்

பியுள்ளாள். அவளது முகத்தில் எழுதப் பட்டுள்ள அலங்காரவர்ண சித்திரங்கள் அவனது தோளில் பதிந்து அழகுறச் செய்கின்றன. அத்தகைய தோளில் தழும்பு உண்டாகும்படி இந்திராணிக்கும் வருத்த முண்டாக்கும் கருத்துடன் பாணத்தைப் பிரயோகித்தான் ரகு.

जहार चान्येन मयूरपत्त्रिणा शरेण शक्रस्य महाशनिध्वजम् ।
चुकोप तस्मै स भृशं सुरश्रियः प्रसह्य केशव्यपरोपणादिव ॥५६॥

**मयूरपत्त्रिणा** - மயிலிறகையுடைய, **अन्येन** - மற்றொரு, **शरेण** - அம்பினால், **शक्रस्य** - இந்திரனுடைய, **महाशनिध्वजं** - வஜ்ராயுத வடிவமுடைய கொடியை, **जहार** - அறுத்தான். **सः** - அவ்விந்திரன், **प्रसह्य** - பலாத்காரமாக, **सुरश्रियः** - தேவலக்ஷ்மியின், **केशव्यपरोपणात् इव** - கூந்தலை நீக்குவதால் கோபமடைவது போல, **तस्मै** - அந்த ரகுவினிடம், **भृशं** - மிகவும், **चुकोप** - கோபங்கொண்டான்.

(க-து) ரகு மயிலிறகினால் அலங்கரிக்கப்பட்ட ஒரு பாணத்தினால் இந்திரனின் கொடியை அறுத்தான். அக்கொடி வஜ்ராயுத வடிவத்தை அடையாளமாகக் கொண்டது. ரகு அக்கொடியை அறுத்ததை, தேவலக்ஷ்மியின் கூந்தலைப் பலாத்காரமாக நீக்கி அவமானம் செய்ததைப் போல் நினைத்து, இந்திரன் மிகக் கோபங் கொண்டான்.

तयोरुपान्तस्थितसिद्धसैनिकं गरुत्मदाशीविषभीमदर्शनैः ।
बभूव युद्धं तुमुलं जयैषिणोरधोमुखैरूर्ध्वमुखैश्च पत्त्रिभिः ॥ ५७ ॥

**जयैषिणोः** - ஒருவரை ஒருவர் வெல்ல விரும்புகின்ற, **तयोः** - அவ்விருவருக்கும், **गरुत्मत् आशीविष भीमदर्शनैः** - இறக்கைகளை உடைய-கொடிய ஸர்ப்பங்களைப்போல-அச்சந் தரும் காட்சியையுடையவையும், **अधोमुखैः** - கீழ்நோக்கிச் செல்பவையும், **ऊर्ध्वमुखैश्च** - மேல்நோக்கிச் செல்பவையுமான **पत्त्रिभिः**-பாணங்களால், (முறையே) **उपान्तस्थितसिद्धसैनिकम्** - இருபுறங்களிலும் நின்ற (இந்திரனின்) தேவர்களையும்

(ரகுவின்) சேனைகளையும் உடைய, **तुमुलं** - கடுமையான, **युद्धं** - போரானது, **बभूव** - நடைபெற்றது.

(க-து) தாமே வெற்றி பெறவேண்டும் என்ற நோக்கத்துடன் ரகுவும் இந்திரனும் கடுமையாகப் போரிட்டனர். அவர்கள் எய்த அம்புகள் இறக்கைகளுடனிருக்கும் கொடிய விஷத்தையுடைய ஸர்ப்பங்களைப்போன்றிருந்தன. இந்திரன் ஆகாயத்திலிருந்து எய்தமையால் அவனது அம்புகள் கீழ்நோக்கியும், ரகு தரையிலிருந்து எய்தமையால் அவனது அம்புகள் மேல் நோக்கியும் சென்றன. இவ்வாறு இந்திரனும் ரகுவும் எதிரே நின்று போரிட்டமையால், இந்திரன் ஸைன்யங்களும்,ரகுவின் சேனைகளும் இருபுறங்களிலும் போரிடாமல் ஒதுங்கி நின்று யுத்தத்தைப் பார்த்துக் கொண்டு நின்றன.

अतिप्रबन्धप्रहितास्त्रवृष्टिभिस्तमाश्रयं दुष्प्रसहस्य तेजसः ।
शशाक निर्वापयितुं न वासवः स्वतश्च्युतं वह्निमिवाद्भिरम्बुदः ॥

**वासवः** - இந்திரன், **दुष्प्रसहस्य** - ஸஹிக்க முடியாத, **तेजसः** - (ஒளிக்கு) பிரதாபத்திற்கு, **आश्रयं** - இருப்பிடமாக உள்ள, **तं** - அந்த ரகுவை,—**अम्बुदः** - மேகம், **स्वतः** - தன்னிடமிருந்தே, **च्युतं**- நழுவிய (வெளிவந்த), **वह्निं इव** - (இடியின்) நெருப்பை,**अद्भिः इव** - ஜலத்தினுல் (அணைக்க முடியாதது) போல, **अतिप्रबन्धप्रहितास्त्रवृष्टिभिः** - இடையீடின்றி, எய்யப்பட்ட அம்பு மாரிகளினுலும், **निर्वापयितुं** - தணிக்க, **न शशाक** - சக்தியுடையவனுக இல்லை.

(க-து) ரகுவின் பராக்ரமம் மிக அதிகமாயிருந்தது. அதனுல் இந்திரன் ரகுவை வெல்லக்கூடவில்லை. மேகத்தினிலிருந்தே வெளிக்கிளம்பும் தீயை அம்மேகம் நீர்கொண்டு அணைக்க முடிவதில்லை. அதைப்போல லோகபாலகனுன இந்திரனுடைய அம்சமுடைய ரகுவை இந்திரன் இடையருது அம்புமாரிபெய்தும் அடக்கமுடியவில்லை.

ஓயாது அம்புகளைப் பொழிந்ததால் ரகுவின் பராக்ரமம் பொறுக்கக் கூடியதாக இல்லை என்றும் கொள்ளலாம்.

ततः प्रकोष्ठे हरिचन्दनाङ्किते प्रमथ्यमानार्णवधीरनादिनीम् ।
रघुः शशाङ्कार्धमुखेन पत्त्रिणा शरासनज्यामलुनाद्बिडौजसः ॥५९॥

**ततः** - பிறகு, **रघुः** - ரகு, **हरिचन्दनाङ्किते** - ஹரிசந்தனம் பூசப்பட்ட, **प्रकोष्ठे** - முன்கையில், **प्रमथ्यमान अर्णवधीरनादिनीं** - கடையப்படும் சமுத்திரம் போல் கம்பீரமாக ஒலிப்பதும், **बिडौजसः** - இந்திரனுடையதுமான, **शरासनज्यां** - வில்லின் நாண்கயிற்றை, **शशाङ्कार्धमुखेन** - சந்திர கலை போன்ற முனையுடைய, **पत्त्रिणा** - அம்பினால், **अलुनात्** - அறுத்தான்.

(க-து) இந்திரன் கையிலிருந்த வில்லின் நாணை, ரகு ஒரு பாணத்தினால் அறுத்துவிட்டான். அந்தப்பாணத்தின் முனை பிறைச் சந்திரனைப்போன்று இருந்தது. இந்திரனுடைய முன் கையில் சந்தனம் பூசப்பட்டிருந்தது.

स चापमुत्सृज्य विवृद्धमत्सरः प्रणाशनाय प्रबलस्य विद्विषः ।
महीध्रपक्षव्यपरोपणोचितं स्फुरत्प्रभामण्डलमस्त्रमाददे ॥ ६० ॥

**विवृद्धमत्सरः** - மிக விருத்தியடைந்த கோபமுடைய, **सः** - அவ்விந்திரன், **चापं** - வில்லை, **उत्सृज्य** - போட்டுவிட்டு, **प्रबलस्य** - அதிகபலமுள்ள, **विद्विषः** - பகைவனை, (ரகுவை) **प्रणाशनाय** - அழிப்பதற்காக, **महीध्रपक्ष व्यपरोपण उचितं** - மலைகளின் இறக்கைகளை நீக்குவதில் பழகியதும், **स्फुरत्प्रभामण्डलं** - ஒளிருகின்ற ஒளிவட்டமுடையதுமான, **अस्त्रं** - வஜ்ராயுதத்தை, **आददे** - எடுத்தான்.

(க-து) ரகு நாண்கயிற்றை யறுத்ததால் அவனிடம் இந்திரன் மிக்க கோபங் கொண்டான். ரகு மிகுந்த பலமுள்ளவன் என்பதையும், வேறு ஆயுதங்களால் அவனை ஒன்றுஞ் செய்ய இயலாது எனவும் அறிந்த தேவேந்திரன், மலைகளின் இறக்கைகளை வெட்டிப் பழக்கமுள்ளதும், அதிக சக்தியுள்ளதுமான வஜ்ராயுதத்தைப் பிரயோகிக்கலாம் என எண்ணி அதனை எடுத்தான்.

रघुर्भृशं वक्षसि तेन ताडितः पपात भूमौ सह सैनिकाश्रुभिः ।
निमेषमात्रादवधूय तद्व्यथां सहोत्थितः सैनिकहर्षनिःस्वनैः ॥ ६१ ॥

**रघुः** - ரகு, **तेन** - அவ்வாயுதத்திஞல், **वक्षसि** - மார்பில், **भृशं** - மிகவும், **ताडितः** - அடிக்கப்பட்டவஞக, **सैनिकाश्रुभिः सह** - போர்வீரரின் கண்ணீருடன் கூட, **भूमौ** - நிலத்தில், **पपात** - வீழ்ந்தான். **निमेषमात्रात्** - இமைகொட்டும் நேரத்தில், **तद्व्यथां** - அந்த வேதனையை, **अवधूय** - உதறிவிட்டு (நீக்கி), **सैनिकहर्षनिस्स्वनैः सहः** - போர்வீரர்களின் ஆனந்த ஆரவாரத்துடன் கூட, **उत्थितः** - எழுந்தான்.

(க-து) வஜ்ராயுதத்திஞல் மார்பில் அடிக்கப்பட்ட ரகு, அதைத் தாங்காமல் நிலத்தில் வீழ்ந்தான். அதைக்கண்ட போர்வீரரனைவரும் துக்கத்திஞல் கண்ணீர் விட்டனர். ரகு இமைகொட்டும் நேரத்திற்குள் அவ்வலியை மறந்து எழுந்தான். இதைப் பார்த்த வீரர்கள் மகிழ்ச்சியிஞல் தங்களையும் மறந்து ஆரவாரம் செய்தனர்.

तथापि शस्त्रव्यवहारनिष्ठुरे विपक्षभावे चिरमस्य तस्थुषः ।
तुतोष वीर्यातिशयेन वृत्रहा पदं हि सर्वत्र गुणैर्निधीयते ॥ ६२ ॥

**तथापि** - அத்தகைய நிலையிலும், **शस्त्रव्यवहारनिष्ठुरे** - ஆயுதங்களைப் பிரயோகிப்பதிஞல் கடுமையான, **विपक्षभावे** - எதிரியின் தன்மையில், **चिरं** - வெகுநேரம், **तस्थुषः** - நின்ற, **अस्य** - இந்த ரகுவினுடைய, **वीर्यातिशयेन** - சிறந்த பராக்ரமத்திஞல், **वृत्रहा** இந்திரன், **तुतोष** - மகிழ்ச்சி கொண்டான். **हि** - ஏனெனில், **गुणैः** - பராக்ரமம் முதலிய குணங்களால், **सर्वत्र** - எல்லாவிடங்களிலும், **पदं** - இடம், **निधीयते** - (பெறப்படுகின்றது) வைக்கப்படுகிறது.

(க-து) வஜ்ராயுதத்திஞல் அடிக்கப்பட்டும் ரகு, தளராது போர் செய்ய முயன்ருன். ஆயுதங்களை வெகுநேரம் பிரயோகித்ததின் மூலம் ரகு இந்திரனுக்குக் கடும் பகைவஞகி விட்டான். இவ்வாறு தொடர்ந்து வெகுநேரம் போர்செய்ததைக் கண்ட இந்திரன் அவனது பராக்ர

மத்தைக் கண்டு ஸந்தோஷமடைந்தான். சத்துருவின் திறத்தில் மகிழ்ச்சி யுறுதல் தகுமோ எனின், நற்குணங்கள், சத்ரு, மித்ரர், நடுநிலையிலுள்ளவர் என்ற எல்லோரையுமே வசீகரிக்கின்றன. ரகு சத்ருவாயினும், அவனது குணமான பராக்ரமம் எதிரியான இந்திரன் மனத்திலும் இடம் பெற்றுவிட்டது, இந்திரனும் மன மகிழ்ந்தான்.

असङ्गमद्रिष्वपि सारवत्तया न मे त्वदन्येन विसोढमायुधम् ।
अवेहि मां प्रीतमृते तुरंगमात्किमिच्छसीति स्फुटमाह वासवः ॥

"**सारवत्तया** - பலமுள்ளதாயிருக்குந் தன்மையால், **अद्रिषु अपि** - மலைகளிலுங் கூட, **असङ्गं** - தடையற்ற, **मे** - எனது, **आयुधं** - வஜ்ராயுதம், **त्वत् अन्येन** - உன்னைத் தவிர வேறு எவராலும், **न विसोढम** - தாங்கப் பட்டதில்லை. (ஆகையால்), **मां** - என்னை, **प्रीतम्** - சந்தோஷமடைந்தவனாக, **अवेहि** - அறிவாயாக. **तुरङ्गमात् ऋते** - குதிரையைத்தவிர, **किं इच्छसि** - எதை விரும்புகிறாய்;" **इति** என்று, **स्फुटं** - தெளிவாக, **वासवः** - இந்திரன், **आह** - கூறினான்.

(க-து) இந்திரன் ரகுவைப் பார்த்து இவ்வாறு கூறினான்—"எனது வஜ்ராயுதம் மலைகளைக் கூட உடைத்து, அதனால் மிக வலிமை பெற்ற ஆயுதம் எனப் பெயர் பெற்றுள்ளது. அதன் தாக்குதலை, உன்னைத் தவிர வேறு எவரும் இதுவரை எதிர்த்து நின்றதில்லை. வஜ்ராயுதத்தின் அடியையும் வெற்றிகரமாகத் தாங்கிய உன்னைக் கண்டு மிக மகிழ்ச்சி கொண்டுள்ளேன். ஆகையால் நீ, குதிரையைத் தவிர வேறு எதைக் கேட்டாலும் தருகிறேன், கேள்."

ततो निषङ्गादसमग्रमुद्धृतं सुवर्णपुङ्खद्युतिरञ्जिताङ्गुलिम् ।
नरेन्द्रसूनुः प्रतिसंहरन्निषुं प्रियंवदः प्रत्यवदत् सुरेश्वरम् ॥ ६४॥

**ततः** - பிறகு, **निषङ्गात्** - அம்புத்தூணியிலிருந்து, **असमग्र** - பாதி, **उद्धृतं** - எடுக்கப்பட்டதும், **सुवर्ण पुङ्ख द्युति-रञ्जित अङ्गुलि** - பொன்மயமான பிடியின் காந்தியால் (ரகுவின்கை) விரல்களை அழகுசெய்ததுமான, **इषुम्** - அம்பை,

**प्रतिसंहरन्**- தூணியிலிட்டுக் கொண்டு, **प्रियंवदः** - இன்சொல்லை யுடைய, **नरेन्द्रसूनुः** - அரசனின் குமாரனுகிய ரகு, **सुरेश्वरं** - இந்திரனைப் பார்த்து, **प्रत्यवदत्** - பதிலுரைத்தான்.

(க-து) ரகு வில்லில் பூட்டவேண்டுமென்று அம்பறாத்தூணியி லிருந்து எடுத்த அம்பை இந்திரன் வார்த்தைகளைக் கேட்டபின் மறுபடி யும் தூணியிலேயே வைத்தான். அம்பின் பொன்மயமான காம்பினு டைய காந்தி அவனது விரல்களில் பரவி அவைகளை அழகுடையன வாகச் செய்தது. அத்தகைய ரகு இந்திரனைப் பார்த்து இனிய சொற் களால் பதிலுரைத்தான்.

अमोच्यमश्वं यदि मन्यसे प्रभो ततः समाप्ते विधिनैव कर्मणि ।
अजस्रदीक्षाप्रयतः स मद्गुरुः क्रतोरशेषेण फलेन युज्यताम् ॥६५॥

"**प्रभो** - பிரபுவே, **अश्वं** - குதிரையை, **अमोच्यं** - விடத் தகாததாக, **यदि मन्यसे** - நினைக்கின்றாயானால், **ततः** - அப் பொழுது, **अजस्रदीक्षाप्रयतः** -ஓயாது யாகதீக்ஷையினுல் பரி சுத்தரான, **सः मद्गुरुः** - என்னுடைய தந்தை, **विधिना एव** - முறைப்படியே, **कर्मणि** - யாகமானது, **समाप्ते** - முடியும் பொழுது, **क्रतोः** - யாகத்திற்கு, **(यत्)** - எந்தப் பலன் உண்டோ, **अशेषेण** - முழுவதுமான, **(तेन) फलेन** - அந்தப் பலனுடன், **युज्यताम्** - கூடியவராகட்டும்.

(க-து) "இந்திர, குதிரையை விடலாகாது என நீ கருதினுல் எப்பொழுதும் யாகங்களைச் செய்து பரிசுத்தரான என் தந்தை இந்த யாகத்தையும் முறைப்படி செய்தால் என்ன பயனை அடைவாரோ அந்தப் பலன் முழுவதையும் யாகம் முடியாவிடினும் அவர் பெறும்படி அருள் செய்வாயாக.

यथा च वृत्तान्तमिमं सदोगतस्त्रिलोचनैकांशतया दुरासदः ।
तवैव संदेशहराद्विशांपतिः शृणोति लोकेश तथा विधीयताम् ॥

"लोकेश - இந்திரனே, सद्योगतः - யாகஞ் செய்யுமிடத்திருப்பவரும், त्रिलोचनैकांशतया - சிவபிரானின் ஒரு அம்சமாயிருத்தலால், दुरासदः - நெருங்க இயலாதவருமான, विशांपतिः - அரசர் (திலீபர்), यथा - எப்படி, इमम् - இந்த, वृत्तान्तं - செய்தியை, तव - உனது, सन्देशहरात् एव - தூதுவனிடமிருந்தே, शृणोति - கேள்விப்படுகிறாரோ, तथा - அப்படி, विधीयताम - செய்யப்படட்டும்"

(க-து) "நீ வரம் கொடுத்த வகையையும் இங்கு நடந்த வரலாற்றையும் உனது தூதனே நான் செல்வதற்கு முன் சென்று, யாக ஸபையில் அமர்ந்திருக்கும் என் தந்தைக்குக் கூறவேண்டும்."

"யாகம் செய்பவரிடம் பரமசிவன் ஸாந்நித்யம் செய்வதாகச் சாஸ்திரம் கூறுகின்றது. ஆதலால் 'யாவரும் மரியாதையுடனன்றி வேறு வகையில் அவரை அணுகுதல் கூடாது' சிவனது அம்சம்பெற்ற என் தந்தையிடம் உனது தூதன் செல்வது உனது கௌரவத்திற்குத் தாழ்ந்ததல்ல."

தன் வெற்றியைப்பற்றித் தானே கூறிக்கொள்வது தகாதாகையால் இந்திரனுடைய தூதனைக் கொண்டு கூறவேண்டினான் ரகு. ரகு குதிரையைக் கொண்டு போகாமல் திரும்பிச் சென்று வரம்பெற்றதையும் போர் செய்ததையும் பற்றிக் கூறினால் பலர் நம்பவும் மாட்டார்களாகையால் இந்திரனுடைய தூதன் மூலமாய் வெற்றியைத் தெரிவிக்க விரும்பினான்.

तथेति कामं प्रतिशुश्रुवान् रघोर्यथागतं मातलिसारथिर्ययौ ।
नृपस्य नातिप्रमनाः सदोगृहं सुदक्षिणासूनुरपि न्यवर्तत ॥ ६७ ॥

मातलिसारथिः - மாதலியைப் பாகனாக உடைய இந்திரன், रघोः - ரகுவின், कामं - விருப்பத்தை, तथा इति - அப்படியே (ஆகுக) என்று, प्रतिशुश्रुवान् - உறுதிகூறி, यथागतं - வந

படியே, **ययौ** - சென்றான்; **सुदक्षिणासूनुः अपि** - ஸுதக்ஷிணை யின் புதல்வனாகிய ரகுவும், **नातिप्रमनाः** - அதிக மகிழ்ச்சி யில்லாதவனாக, **नृपस्य** - அரசன் திலீபனுடைய, **सदोगृहं** - யாகசாலையைக் குறித்து, **न्यवर्तत** - திரும்பினான்.

(க-து) இந்திரன், 'ரகு வேண்டியபடியே ஆகுக' என்று வர மளித்து, வந்தவாறே (மறைந்து) திரும்பச் சென்றான். ரகு வெற்றி பெற்றும் குதிரை கைவிட்டுப் போனமையால் அதிக மகிழ்ச்சி யில்லாதவனாகத் தந்தையிடம் திரும்பிப் போனான்.

तमभ्यनन्दत् प्रथमं प्रबोधितः प्रजेश्वरः शासनहारिणा हरेः ।
परामृशन् हर्षजडेन पाणिना तदीयमङ्गं कुलिशव्रणाङ्कितम् ॥६८॥

**हरेः** - இந்திரனுடைய, **शासनहारिणा** - கட்டளையைக் கொண்டு செல்லும் தூதுவனால், **प्रथमं** - முன்னாலேயே, **प्रबोधितः** - அறிவிக்கப்பட்ட, **प्रजेश्वरः**-அரசனாகிய திலீபன், **हर्षजडेन** - சந்தோஷத்தினால் குளிர்ந்த, **पाणिना** - கையினால், **कुलिशव्रणाङ्कितं** - வஜ்ராயுதத்தால் ஏற்பட்ட புண்களாலே அடையாளம் செய்யப்பட்ட, **तदीयं** - அந்த ரகுவினுடைய, **अङ्गम्** - உடலை, **परामृशन्** தடவி, **तं** - அந்த ரகுவை, **अभ्यनन्दत्** - பாராட்டினான்.

(க-து) இந்திரனுடைய தூதுவன் ரகு வருவதற்கு முன்பே, திலீபனிடஞ் சென்று நிகழ்ந்தவற்றை யனைத்தையும் கூறினான். அதைக்கேட்ட திலீபன் மிக மகிழ்ச்சியுற்று, ரகுவைக் கண்டதும் அவன் வஜ்ஜிராயுதத்தினால் பெற்ற காயத்தைத் தடவிப்பார்த்து ரகுவின் வீரத்தைப் பாராட்டினான்.

इति क्षितीशो नवतिं नवाधिकां महाक्रतूनां महनीयशासनः ।
समारुरुक्षुर्दिवमायुषः क्षये ततान सोपानपरम्परामिव ॥ ६९ ॥

**महनीयशासनः**-பாராட்டத்தக்க அரசுபுரியும், **क्षितीशः** - அரசன், **इति** - இவ்வாறு, **महाक्रतूनां** - அச்வமேதங்களின்,

**नवाधिकां** - ஒன்பது அதிகமான, **नवतिं** - தொண்ணூற்றை, **आयुषः** - ஆயுளின், **क्षये** - முடிவில், **दिवं** - ஸ்வர்க்கத்தை, **समारुरुक्षुः** - ஏற (அடைய) விரும்பியவனாக, **सोपानपरंपरां इव** - படிகளின் வரிசையை அமைப்பதுபோல, **ततान** - இயற்றினன்.

(க-து) ஸ்வர்க்கத்தை அடைவதற்கு வழி யாகம் புரிதல். ஆகவே யாகம் படிக்கட்டு போலுள்ளது. ஸ்வர்க்கத்தை அடைய விரும்பிய திலீபன் இவ்வாறு படிகள் போலுள்ள தொண்ணூற் றொன்பது அசுவமேத யாகங்களைச் செய்தான்.

अथ स विषयव्यावृत्तात्मा यथाविधि सूनवे
नृपतिककुदं दत्त्वा यूने सितातपवारणम् ।
मुनिवनतरुच्छायां देव्या तया सह शिश्रिये
गलितवयसामिक्ष्वाकूणामिदं हि कुलव्रतम् ॥ ७० ॥

**अथ** - பிறகு, **विषयव्यावृत्तात्मा** - உலக இன்பங்களிலிருந்து திரும்பிய மனத்தையுடைய, **सः** - அத்திலீபன், **यथाविधि** - முறைப்படி, **यूने**-வாலிபனாகிய, **सूनवे**-பிள்ளைக்கு, **नृपतिककुदं** - அரசர்களின் அடையாளமான, **सितातपवारणं**-வெள்ளைக்குடையை, **दत्त्वा** - கொடுத்து, **तया** - அந்த, **देव्या सह** - மனைவி (ஸுதக்ஷிணை)யுடன் கூட, **मुनिवनतरुच्छायां** - முனிவர்களின் வனத்திலுள்ள மரத்தின் நிழலை, **शिश्रिये** - அடைந்தான்; **हि** - ஏனெனில், **गलितवयसां**-வயது முதிர்ந்த, **इक्ष्वाकूणां** - இக்ஷ்வாகு வம்சத்தோருக்கு, **इदं**-இது (வனஞ் செல்லல்), **कुलव्रतम्** - குலமுறையாக வந்த விரதமாகும்.

(க-து) இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவரனைவரும் வயது முதிர்ந்ததும் பிள்ளையினிடம் அரசுரிமையை ஒப்படைத்து, மனைவியுடன் வானப்பிரஸ்தராகக் காட்டில் தவஞ் செய்யச் செல்வது

பரம்பரை வழக்கம். அதற்கேற்பத் திலீபனும் உலகப்பற்றை ஒழித்து, மகன் ரகுவிற்கு அரசுரிமையை அளித்து, மனைவியுடன் தவஞ் செய்வதற்காக, ரிஷிகள் வசிக்கும் காட்டையடைந்தான்.

इति महाकवि श्री कालिदासकृतौ
रघुवंशे महाकाव्ये तृतीयः सर्गः

---

# ॥ रघुवंशः ॥

## चतुर्थः सर्गः

स राज्यं गुरुणा दत्तं प्रतिपद्याधिकं बभौ ।
दिनान्ते निहितं तेजः सवित्रेव हुताशनः ॥ १ ॥

**सः** - *ரகு*, **गुरुणा** - *தந்தையினால்*, **दत्तम्** - *கொடுக்கப் பட்ட*, **राज्यं** - *அரசை*, **प्रतिपद्य** - *பெற்று*, **दिनान्ते** - *பகலின் முடிவில், (ஸாயங்காலத்தில்)*, **सवित्रा** - *ஸூரியனால்*, **निहितं** - *தன்னிடம், வைக்கப்பட்ட*, **तेजः** - *ஒளியை*, **(प्रतिपद्य)** - *அடைந்து*, **हुताशनः इव** - *அக்னி ஒளிருவது போல்*, **अधिकं** - *மிகவும்*, **बभौ** - *விளங்கினான்.*

*(க-து) யுவராஜனாக இருக்கையிலேயே விளங்கிய ரகு, தந்தை தந்த அரசைப்பெற்று மிக விளங்கினான். சூரியனுடைய ஒளி ஸாயங்காலத்தில் அக்கினியில் பிரவேசிப்பதாக வேதம் கூறும். அக்கினி ஸூரிய ஒளியைப் பெற்று விளங்குவதுபோலத் தந்தையின் அரசு பெற்று ரகு மிக விளங்கினான்.*

दिलीपानन्तरं राज्ये तं निशम्य प्रतिष्ठितम् ।
पूर्वं प्रधूमितो राज्ञां हृदयेऽग्निरिवोत्थितः ॥ २ ॥

**दिलीपानन्तरं** - *திலீபனுக்குப் பிறகு*, **राज्ये** - *ராஜ்யத்தில்*, **प्रतिष्ठितं** - *நிலைபெற்றுள்ள*, **तं** - *ரகுவைப்பற்றி*, **निशम्य** - *கேள்வியுற்று*, **पूर्वं** - *முன்பே*, **राज्ञां** - *அரசர்களின்*, **हृदये** - *மனத்தில்*, **प्रधूमितः** - *புகைந்த*, **अग्निः** - *(வருத்தமாகிய) அக்னி*, **उत्थितः इव** - *ஜ்வாலையுடன் எழுந்தது போலாயிற்று.*

*(க-து) ரகு, யுவராஜனாக இருக்கும் பொழுதே பல அரசர்களையும் வென்று தனது பலத்தை அவர்கள் உணரும்படி செய்திருந்*

தான்; அதனால் சிற்றரசர்கள் மனத்தில் பொறாமைப் புகைந்து கொண்டிருந்தது. ரகு அரசனாக வந்ததும் அப் பொறாமைத் தீ கொழுந்து விட்டெரியத் தொடங்கியது. மன்னர்கள், ரகுவிற்கு அடங்கியிருக்க வேண்டிய நிலையை எண்ணி மிக வருத்தமடைந்தனர் என்பது கருத்து.

पुरुहूतध्वजस्येव तस्योन्नयपङ्क्तयः ।
नवाभ्युत्थानदर्शिन्यो ननन्दुः सप्रजाः प्रजाः ॥ ३ ॥

**पुरुहूतध्वजस्य इव** - இந்திரனது துவஜத்தின் ஏற்றத்தைக் காண்பது போல, **तस्य** - ரகுவின், **नवाभ्युत्थानदर्शिन्यः**-புதிய எழுச்சியைக் காண்கின்றவர்களும், **उन्नयनपङ्क्तयः**-(சந்தோஷத்தினால்) மலர்ந்த கண்களையுடையவர்களுமான, **प्रजाः** பிரஜைகள், **सप्रजाः** - தம்மக்களுடன், **ननन्दुः** - ஸந்தோஷித்தனர்.

(க-து) சிற்றரசர்கள் பொறாமை கொண்டனராயினும், ரகுவின் பிரஜைகள், அவன் அரசனாக உயர்வுபெற்றதைக்கண்டு மிக மகிழ்ந்தனர். இந்திர விழாவில் இந்திரத்வஜத்தை ஏற்றுவித்துச் சிறியோர் பெரியோர் என்ற பாகுபாடின்றி யாவரும் அதைக்கண்டு களிப்பது போல் ரகு அரசனாக வந்ததை நாட்டிலுள்ள மக்கள் எல்லோரும் கொண்டாடி ஆனந்தமடைந்தனர்.

இந்திரனைப் பூசிப்பதற்காக ஜனங்கள், அரண்மனை வாசலில் பெரிய கொடி மரத்தை நட்டு அதில் ஒரு கொடியைக் கட்டி ஐந்து நாட்கள் வரை பூஜை செய்து விழாக் கொண்டாடுவர். இதனால் நாட்டிற்கு நன்மையுண்டாகும் என்பர்.

सममेव समाक्रान्तं द्वयं द्विरदगामिना ।
तेन सिंहासनं पित्र्यमखिलं चारिमण्डलम् ॥ ४ ॥

**द्विरदगामिना** யானைபோல் (கம்பீரமாகச்) செல்லுகின்ற, **तेन** - அந்த ரகுவினால், **पित्र्यं** - தந்தையினிடமிருந்து வந்த,

**सिंहासनम्** - ஸிம்மாஸனம் ; **अखिलं** - பரந்த, **अरिमण्डलं च** - சத்ருக்களின் ராஜ்யம் (என்ற), **द्वयम्** - இவ்விரண்டும், **समं एव** - ஒரே ஸமயத்திலேயே, **समाक्रान्तम्** - அமரப் பட்டன.

(க-து) ரகு தந்தையினிடமிருந்து பெற்ற ஸிம்மாஸனத்தில் யானைபோல் கம்பீரமாக நடந்து சென்று அமர்ந்தான். யானைகளுடன் போர்க்களத்திற்குச் செல்பவன் ரகு. அவன் ஸிம்மாஸனத்தில் அமர்ந்த க்ஷணத்திலேயே எதிரிகளின் ராஜ்யமும் அவனது ஆட்சியில் அடங்கியதாயிற்று.

छायामण्डललक्ष्येण तमदृश्या किल स्वयम् ।
पद्मा पद्मातपत्रेण भेजे साम्राज्यदीक्षितम् ॥ ५ ॥

**पद्मा** - லக்ஷ்மி, **स्वयं** - தான், **अदृश्या** - பார்க்கப்படாதவளாய் இருந்து கொண்டு, **छायामण्डल लक्ष्येण** - ஒளி வட்டத்தினால் ஊஹிக்கத் தகுந்த, **पद्मातपत्रेण** - தாமரைப் புஷ்பமாகிய குடையின்மூலம், **साम्राज्यदीक्षितम्** - சக்ரவர்த்திப் பதவியில் அபிஷேகம் செய்யப்பட்டுள்ள, **तम्** - ரகுவை, **भेजे किल** - உபசரித்தாள் போலும் !

(க-து) ரகு, சக்ரவர்த்திகளுக்குரிய கம்பீரமான தேஜஸுடன் இருந்தான். இவ்வாறு மிக ஒளியுடன் ரகு தோன்றியதற்குக் கவி ஒரு காரணத்தை உத்ப்ரேக்ஷித்துக் கூறுகிறார். 'லக்ஷ்மி தேவியே கண்களுக்குப் புலப்படாது நின்று, தாமரைப் புஷ்பமாகிய குடையைத் தாங்கி அவனுக்கு ராஜோபசாரம் செய்தாள் போலும்'. லக்ஷ்மியின் குடையும் கண்களுக்குப் புலப்படவில்லை. ரகுவைச் சுற்றிலுமுள்ள ஒளிவட்டத்தினால் (நிழலினால்) தாமரைக்குடை பிடிக்கப்பட்டுள்ளதென்பதும் ஊஹிக்க வேண்டியதாயிற்று. நிழலைக் கொண்டு உருவத்தை ஊஹிப்பதுபோல் வட்டமான ஒளியைக் கொண்டு குடையுள்ளது அறியப்பட்டது. இவ்வாறு லக்ஷ்மியும் உபசரிக்கும்படியான பெருமை பெற்றிருந்தான் ரகு.

परिकल्पितसांनिध्या काले काले च वन्दिषु ।
स्तुत्यं स्तुतिभिरर्थ्याभिरुपतस्थे सरस्वती ॥ ६ ॥

**सरस्वती च** - ஸரஸ்வதியும், **काले काले** - அவ்வக் காலங்களில், **वन्दिषु** - புகழ் கூறுபவர்களிடம், **परिकल्पित सान्निध्या- (सती)** - செய்யப்பட்ட தோற்றமுடையவளாய் இருந்து கொண்டு, **स्तुत्यं** - புகழத்தக்க ரகுவை, **अर्थ्याभिः** - பொருளோடுகூடிய (உண்மையான), **स्तुतिभिः** - புகழுரைகளால், **उपतस्थे** - தொழுதாள்.

(க-து) முன் சுலோகத்தில் லக்ஷ்மி ரகுவிற்குத் தொண்டு செய்தவகை கூறப்பட்டது. இச்சுலோகத்தில் ஸரஸ்வதி, எவ்வாறு ரகுவிற்குப் பணிவிடை செய்தாள் என்பது சொல்லப்படுகிறது.

ஸரஸ்வதிதேவி பிரத்யக்ஷமாகத் தோன்றவில்லை. அவள், ஸ்துதி பாடகர்களிடம் உறைந்து அவர்களின் பாடல்களின் மூலம் ரகுவினது புகழைப்பாடினாள். இவ்வகையில் ஸரஸ்வதியும் ரகுவைத் தொழுதாள் எனக்கூறுகிறார் கவி. வந்திகளின் புகழுரைகளை ஸரஸ்வதியின் சொற்களாகக் கவி புனைந்து சொல்லுகிறார்.

வந்திகள் : அரண்மனையில் தினந்தோறும் குறிப்பிட்ட காலங்களில் அரசனது புகழைப் பாடுவதற்காக நியமிக்கப் பட்டுள்ளவர்கள்.

मनुप्रभृतिभिर्मान्यैर्भुक्ता यद्यपि राजभिः ।
तथाप्यनन्यपूर्वेव तस्मिन्नासीद्वसुन्धरा ॥ ७ ॥

**वसुन्धरा** - இப்பூமி, **मनुप्रभृतिभिः** - மனுமுதலான, **मान्यैः** - மரியாதைக்குரிய (சிறந்த), **राजभिः** - அரசர்களால், **भुक्ता यदि अपि** - அனுபவிக்கப்பட்டாள் என்பது உண்மையே; **तथापि** - அவ்வாறிருந்தும், **तस्मिन्** - அவ்வரசனிடத்தில், **अनन्यपूर्वा इव** - மற்றவர்களால் அனுபவிக்கப்படாதவள் போலவே (புத்தம் புதியவளாகவே), **आसीत्** - இருந்தாள்.

(க-து) பூமியை அரசரது மனைவியாகக் கூறுவது கவி மரபு. மனு முதலிய அரசர்களுக்கும் உரியதாக இருந்த பூமி இப்பொழுது ரகுவிற்கு உரியதாயிற்று ஆயினும் பூமி, புதுமை குன்றாது இளமையுடன் ரகுவினிடம் அன்பு கொண்டது.

பிரஜைகள் முன்னிருந்த அரசரிடம் வைத்த அன்பைக் காட்டிலும் அதிக அன்பை ரகுவினிடம் வைத்தனர் என்பது கருத்து.

स हि सर्वस्य लोकस्य युक्तदण्डतया मनः ।
आददे नातिशीतोष्णो नभस्वानिव दक्षिणः ॥ ८ ॥

**हि** - ஏனெனில், **सः** - அவன், **युक्तदण्डतया** - குற்றத்திற்கேற்ற தண்டனை யளித்த காரணத்தினால், **सर्वस्य** - எல்லா, **लोकस्य** - ஜனங்களின், **मनः** - மனத்தையும், **नातिशीतोष्णः** - மிதமான குளிர்ச்சியும் உஷ்ணமுமுள்ள, **दक्षिणः** - தென் திசையிலுண்டான, **नभस्वान् इव** - காற்று (வசீகரிப்பது) போல, **आददे** - கவர்ந்தான்.

(க-து) ரகு குற்றத்திற்கேற்ற தண்டனை விதித்தான். தண்டனை மிகக் கடுமையாகவோ, மிக் மிருதுவாகவோ இல்லை. அதனால் ஜனங்கள் அவனது நீதிமுறையைக் கொண்டாடினர். மித சீதோஷ்ணமான தென்றல், ஜனங்களின் மனத்தைக் கவர்வது போல, ரகுவும் அதிகம் கடுமையாகவோ அதிகம் மிருதுவாகவோ இல்லாத காரணத்தால் ஜனங்களது மனத்தை வசீகரித்தான்.

ஜனங்கள், மற்ற அரசரிடம் காட்டாத அன்பை அவனிடம் காட்டியதற்குக் காரணம் இச்சுலோகத்தில் கூறப்பட்டது.

मन्दोत्कण्ठाः कृतास्तेन गुणाधिकतया गुरौ ।
फलेन सहकारस्य पुष्पोद्गम इव प्रजाः ॥ ९ ॥

**सहकारस्य** - மாமரத்தின், **फलेन** - பழத்தினால், **पुष्पोद्गमे** **इव** - மாம்பூவின் தோற்றத்தில் (ஜனங்கள் ஆவல் குறைந்த

வர்களாகச் செய்யப்படுவது) போல், **प्रजाः** - ஜனங்கள், **तेन** - அந்த ரகுவினால், **गुरौ**-திலீபன் விஷயத்தில், **गुणाधिकतया**-(தனது) அதிக குணம் காரணமாக, **मन्दोत्कण्ठाः**- குறைந்த அன்புடையவர்களாக, **कृताः** - செய்யப்பட்டனர்.

(க-து) வஸந்த ருதுவின் தொடக்கத்தில் மாமரங்களில் புஷ்பங்கள் தோன்றுகின்றன. புஷ்பங்கள் தோன்றியதைக் கண்டு ஜனங்கள் அவைகளின் வாசனையால் கவரப்பட்டு அவைகளை விரும்புகின்றனர். ஆனால் பூவினின்று காயும் பழமும் தோன்றிய உடன் பூவை அடியோடு மறந்து விடுகின்றனர். பூவினிடம் மணம் ஒன்றே உள்ளது. பழத்தினிடம் மணமும் ருசியும் உள்ளன. இவ்வகையில் பழம் புஷ்பத்தைக் காட்டிலும் அதிக குணமுடையது. இவ்வதிக குணம் காரணமாகப் பூவினின்றும் தோன்றிய பழமே ஜனங்களைப் பூவை மறக்கும்படி செய்கின்றது. அது போல ரகு அரசனாக வந்ததும் திலீபனை ஜனங்கள் மறந்தனர். ரகு திலீபனிடமிருந்து தோன்றியவன்தான். ஆயினும் ஜனங்கள் திலீபனை மறந்ததற்குக் காரணம் திலீபனைவிட ரகு அதிக குணமுடையவனாக இருந்தான் என்பதே. பழத்திற்குக் காரணமான புஷ்பம், திலீபனுக்கு உபமானம்; பூவினின்றும் தோன்றுகின்ற பழம், ரகுவிற்கு உபமானமாகின்றது,

नयविद्भिर्नवे राज्ञि सदसच्चोपदर्शितम् ।
पूर्व एवाभवत् पक्षस्तस्मिन्नाभवदुत्तरः ॥ १० ॥

**नयविद्भिः** - நீதி சாஸ்திரமறிந்தவர்களால், **नवे** - புதிய, **राज्ञि** - அரசன் விஷயத்தில், **सत्**-(காரியங்களை சாதிப்பதற்கான) தர்ம வழியும், **असच्च** - அதர்ம வழியும், **उपदर्शितम्** - காண்பிக்கப்பட்டன; **तस्मिन्** - அவனிடத்தில், **पूर्वः** - முதலாவதான, **पक्षः एव**-(தர்ம) வழியே, **अभवत्**-இருந்தது; **उत्तरः** - (பின் கூறிய) இரண்டாவது வழி, **नाभवत्**-இருக்கவில்லை.

(க-து) ராஜ நீதியில் தேர்ந்த மந்திரிகள், புதிதாய் அரசனாக வந்துள்ள ரகுவிற்கு, காரியங்களைச் சாதிப்பதற்கான தர்மமான

வழிகளையும் அதர்மமான வழிகளையும் எடுத்துக் கூறினர். சத்துருவை வெல்லும் விஷயத்தில் அதர்மமான முறையைக் கொள்ளலாமாயினும் ரகு முதலவழியான தர்மவழியையே பின்பற்றினுன். அதர்ம முறையைப் பின்பற்றவில்லை. ஆனுல் அதர்மவழியைப் பற்றியும் அவன் நன்கு அறிந்திருந்தான்.

पञ्चानामपि भूतानामुत्कर्षं पुपुषुर्गुणाः ।
नवे तस्मिन् महीपाले सर्वं नवमिवाभवत् ॥ ११ ॥

**पञ्चानां** - ஐந்து, **भूतानां** - பூதங்களின், **गुणाः अपि** - குணங்களும், **उत्कर्षम्** - சிறப்பை, **पुपुषुः** - அடைந்தன; **तस्मिन्** - அந்த ரகு, **नवे** - புதிய, **महीपाले सति** - அரசனுக வந்தபொழுது, **सर्वं** - எல்லாம், **नवमिव** - புதுமையுடையன போல, **अभवत्** - இருந்தன.

(க-து) ரகு அரசனுக வந்தவுடன், மண், ஜலம், காற்று, தீ, ஆகாயம் என்ற பஞ்சபூதங்களின் குணங்களான வாசனை முதலியவை சிறப்புற்று விளங்கின. அவனது அரசாட்சியில் எல்லாப் பொருள் களும் புதுமை பெற்றன போல் விளங்கின.

यथा प्रह्लादनाच्चन्द्रः प्रतापात्तपनो यथा ।
तथैव सोऽभूदन्वर्थो राजा प्रकृतिरञ्जनात् ॥ १२ ॥

**प्रह्लादनात्** - களிப்பூட்டுவதால், **चन्द्रः** - சந்திரன், **यथा** - எவ்வாறு பொருளுக்கு ஒத்த பெயருடையவனே, **प्रतापात्** - காய்வதால், **तपनः** - ஸூரியன், **यथा** - எவ்வாறு பொருளுக்கு ஒத்த பெயருடையவனே, **तथैव** - அவ்வாறே, **सः राजा** - அவ்வரசன், **प्रकृतिरञ्जनात्** - ஜனங்களை மகிழ் வித்த காரணத்தினுல், **अन्वर्थः** - பொருளுக்கு ஒத்த (ராஜா என்ற) பெயரை உடையவனுக, **अभूत्** - இருந்தான்.

(க-து) தனது குளிர்ந்த கிரணங்களால் சந்திரன், ஜனங்களை ஸந்தோஷப் படுத்துகிருன்; அதனுல் களிப்பூட்டுதல் என்ற பொருளை யுடைய, '**चद्**' என்ற வினையடியாக வந்த **चन्द्रः** என்ற பெயர்,

பொருளுடையதாக அவனுக்கு அமைந்துள்ளது. **चन्द्रः**-களிப்பூட்டு பவன். காய்தல் என்ற செயல் காரணமாக, **तप** என்ற வினையடியாகச் சூரியனுக்கு, **तपनः** என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது; **तपनः**-எரிப்பவன், காய்பவன்; அதுபோலவே ரகுவிற்கும் **राजा** என்ற பதம் பொருளுடையதாக அமைந்திருந்தது.

**राज्**-என்ற வினையடிக்கு மகிழ்வித்தல் எனப்பொருள். ஜனங்களை நீதியுடன் பரிபாலித்து மகிழ்வித்ததால் ரகு விற்குப் பெயர் பொருந்தி யிருந்தது.

**राज** - என்பது 'விளங்குதல்' என்ற பொருளே யுடையது. ஆயினும் கவி, அவ்வினையடிக்கு 'மகிழ்வித்தல்' என்ற பொருளும் இருப்பதாகக் கருதி, **राजा** - என்ற சொல்லை இப்பொருளில் உபயோகித்திருக்கிறார்.

काम कर्णान्तविश्रान्ते विशाले तस्य लोचने ।
चक्षुष्मत्ता तु शास्त्रेण सूक्ष्मकार्यार्थदर्शिना ॥ १२ ॥

**तस्य** - அவனுடைய, **लोचने** - கண்கள், **विशाले** - அகன்றும், **कर्णान्तविश्रान्ते** - காதுவரை நீண்டவையுமாக, **(आस्ताम्)** - இருந்தன; **कामम्** - (இஃது) உண்மைதான்; **किंतु** - ஆனால், **चक्षुष्मत्ता** - கண் உடையவனாக இருத்தல் என்பது, **सूक्ष्मकार्यार्थदर्शिना** - அறிதற்கரிய நுண்ணிய காரியங்களைக் காண்பிக்கின்ற, **शास्त्रेण एव** சாஸ்திரத்தினால்தான் (அவனுக்கு இருந்தது.)

(க-து) ரகுவிற்கு விசாலமான நீண்ட, அழகான கண்கள் இருந்தன வென்பது வாஸ்தவமே; ஆனால் இப்புறக் கண்களை அவன் கண்களாகவே கருதவில்லை. சாஸ்திரங்களே அவனுடைய உண்மையான கண்கள்; நுணுக்கமான விஷயங்களைக் கண்டு அறிய உதவினமையால் சாஸ்திரங்கள் அவனுக்குக் கண்களாக இருந்தன.

'கண்ணுடைய ரென்பர் கற்றோர் முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர்' என்ற குறளும் இக்கருத்தை விளக்குகின்றது.

लब्धप्रशमनस्वस्थमथैनं समुपस्थिता ।
पार्थिवश्रीर्द्वितीयेव शरत्पङ्कजलक्षणा ॥ १४ ॥

**अथ** - பிறகு, **लब्ध प्रशमन स्वस्थं** - கிடைத்த ராஜ்யத்திற்கு அமைதி யுண்டாக்கியதால் கவலை நீங்கிய, **एनं**-இந்த ரகுவை, **पङ्कजलक्षणा** - தாமரை மலர்களை அடையாளமாக உடைய, **शरत्** - சரத்காலம், **द्वितीया** இரண்டாவது, **पार्थिवश्रीः इव** - ராஜலக்ஷ்மி போல், **समुपस्थिता** - வந்தடைந்தது.

(க-து) ரகு தந்தையிட மிருந்து ராஜ்யம் பெற்று, ஜனங்களிடையே அமைதி நிலவச் செய்து, கவலை யற்று அரசு புரிந்து வரும் பொழுது சரத் காலம் வந்தது.

வருஷத்திலுள்ள ஆறு ருதுக்களில் சரத்காலம் என்பது வர்ஷருதுவிற்குப்பின் வருவது. சரத் காலத்திற்கு அடையாளமாக இருப்பன தாமரை மலர்கள். இந்த ருதுவில் தாமரை மலர்கள் ஏராளமாக மலர்கின்றன. முன்பே ராஜலக்ஷ்மியினால் உபசரிக்கப்பட்ட ரகுவிற்கு, சரத்காலமும் தாமரை மலருடன் உபசரிக்க வந்ததுபோல் தோன்றிற்று.

அடுத்துவரும் பத்து சுலோகங்களில் சரத்காலம் வர்ணிக்கப்படுகின்றது.

निर्वृष्टलघुभिर्मेघैर्मुक्तवर्त्मा सुदुस्सहः ।
प्रतापस्तस्य भानोश्च युगपद्व्यानशे दिशः ॥ १५ ॥

**निर्वृष्टलघुभिः** - மிச்சமின்றி மழையை வர்ஷித்ததால் கனமற்ற, **मेघैः** - மேகங்களால், **मुक्तवर्त्मा** - விடப்பட்ட வழியுடையதும், **सुदुःसहः** - மிகவும் ஸஹிக்க முடியாததுமான, **तस्य** - ரகுவின், **प्रतापः** - பராக்ரமும், **भानोः** - சூரியனுடைய, **प्रतापश्च** - வெய்யிலும், **युगपत्** - ஒரே சமயத்தில், **दिशः** - திசைகள் எங்கும், **व्यानशे** - பரவின.

அழகான, रघु-ரகுவின், विक्रमं - பராக்ரமத்தை, अनुप्रापुः- அனுசரித்தன.

(க-து) சரத் காலத்தில் காணப்படும் காட்சி ஒன்று இச்சலோகத்தில் கூறப்படுகின்றது.

மழை பெய்தபின், சரத் காலத்தில் எங்கும் புல் செழித்து வளர்ந்துள்ளதால் எருதுகள் அப்புல்லை மேய்ந்து கொழுத்திருந்தன. நன்கு வளர்ந்து அழகான தோற்றமுடைய திமில்கள், எருதுகளின் புஷ்டிக்கு அடையாளமாக இருந்தன. மண் முட்டுகளைக் கண்டால், முட்டி விளையாடுதல் என்பது கொம்புள்ள பிராணிகளின் ஸ்வபாவமாகும். எருதுகளும் நதிக்கரைகளில் மேயும்பொழுது நதிகளின் கரையைக் கொம்புகளால் குத்தி இடித்து விளையாடின. அவ்வாறு முட்டி இடிப்பது, எருதுகளுக்கு விளையாட்டாகவும் அனாயாசமான காரியமாகவும் இருந்தது. அவ்விளையாட்டு பார்ப்பதற்கு அழகாகவும் இருந்தது.

அழகு, ஆயாசமின்மை, விளையாட்டு என்ற இம் மூன்று வகையிலும் எருதுகளின் செயல் ரகுவின் பராக்ரமத்தை ஒத்திருந்தது. ரகு, யுத்தத்தில் தனது பராக்ரமத்தைப் புலப்படுத்துவதும் ஆயாசமின்றி, விளையாடுவதுபோல், அழகாக இருக்கும்.

நதிக்கரையில் எருதுகளுக்கு மண் முட்டை இடித்து விளையாடுவது எவ்வளவு எளிதோ அவ்வளவு எளிது ரகுவிற்கு யுத்தத்தில் பராக்ரமத்தைக் காட்டுவதும். 'யுத்தம் அவனுக்கு ஒரு விளையாட்டு; ஆயாசமான காரியமல்ல' என்பதும் இதனால் அறியப்படும்.

प्रसवैः सप्तपर्णानां मदगन्धिभिराहताः ।

असूययेव तन्नागाः सप्तधैव प्रसुस्रुवुः ॥ २३ ॥

(க-து) சரத்காலத்திற்கு முன்னுள்ள பருவமான வர்ஷருதுவில் மேகங்கள் நீர் நிறைந்து கனமாக இருந்தன. அதனால் சூரியன் ஒளி பரவத் தடை இருந்தது. வர்ஷ ருதுவில் நீரைச் சிறிதும் மிச்சமின்றிப் பெய்ததால், சரத்ருதுவில் மேகங்கள் லேசாக இருந்தன. காற்றினால் விலக்கப்பட்டபடியாலே சூரியனுடைய ஒளியானது எங்கும் பரவியது; இப்பருவத்தில் வெய்யில், கடுமையாகயிருப்பதால் ஸஹிக்க முடியாததாக இருக்கும்.

வர்ஷருதுவில் மழையினால் வழிகள் நன்றாக இல்லாத காரணத்தால் அரசர்களும் திக் விஜயத்திற்காகப் படை எடுக்கமாட்டார்கள். மழைக்காலம் முடிந்து சரத்காலம் வந்ததும் படையெடுப்புத் தொடங்குவது வழக்கம்.

ரகுவின், பராக்ரமத்தை முன்பே சிற்றரசர்கள் உணர்ந்திருந்தனர். இடையிலே மழைக்காலம் காரணமாக அவன் படையெடுக்க மாட்டான் என மனந்தேறி யிருந்தனர். சரத்காலம் வந்தவுடன் படை எடுப்பை எதிர்பார்த்துச் சிற்றரசர்கள் மனம் புழுங்கினர். சரத்காலத்தில் சூரியனது ஒளி எங்கும் தடையின்றிப் பரவுவதுபோல் ரகுவின் பராக்ரமமும் எங்கும் பரவியது. சூரியனது ஒளியைப்போல் பராக்ரமமும் பொறுக்க முடியாததாக இருந்தது.

वार्षिकं सञ्जहारेन्द्रो धनुर्जैत्रं रघुर्दधौ ।
प्रजार्थसाधने तौ हि पर्यायोद्यतकार्मुकौ ॥ १६ ॥

**इन्द्रः** - இந்திரன், **वार्षिकं** - மழைக்கு அறிகுறியான, **धनुः** - (வான) வில்லை, **सञ्जहार** - எடுத்துக்கொண்டான்; (வானிலிருந்து எடுத்துவிட்டான்.) **रघुः**-ரகு, **जैत्रं** - வெற்றியையே அளிக்கின்ற, (**धनुः**) வில்லை, **दधौ** (கையில்) எடுத்துக் கொண்டான். **हि**-ஏனெனில், **तौ** - அவ்விருவரும், (ரகுவும் இந்திரனும்), **प्रजार्थसाधने** - ஜனங்களுக்கு நல்லதைச் செய்வதில், **पर्याय-उद्यत-कार्मुकौ** - முறையே, (மாறி மாறி)

எடுக்கப்பட்ட வில்லையுடையவர்களாக, (स्तः) - இருக்கின்றனர்.

(க-து) இச்சுலோகம் மழைக் காலம் முடிந்தது என்பதைக் கூறுகிறது.

வானவில் ஆகாயத்தில் தோன்றுமாயின் மழை பெய்யுமென்பர். அஃது மழையின் அறிகுறியாக இருக்கின்றது.

வேண்டிய அளவு மழை பெய்துவிட்டபடியால், மழையை அளிக்கின்ற இந்திரன், தனது வில்லை ஆகாயத்தினின்றும் எடுத்துவிட்டான். மழையும் ஓய்ந்தது.

ஆனால், ரகு, சரத்காலம் வந்தவுடன் திக் விஜயத்திற்காக வில்லைக் கையில் எடுத்தான். ஒருவன் (இந்திரன்) வில்லைக் கீழை வைக்க, மற்றவன் (ரகு) வில்லைக் கையிலெடுத்தான். ஏனெனில் இவ்விருவரும் ஒரே பயனைக்கருதி வில்லை எடுக்கின்றனர். ஜனங்களைப் பாதுகாத்தல் என்பது தான் அப்பயன். இந்திரன் மழையளித்துக் காத்தான். ரகு, துஷ்டர்களை அடக்கியும் யாகாதி நற்காரியங்களை நடைபெறச் செய்தும் ஜனங்களைப் பரிபாலித்தான். இவ்வாறு இருவரும், ஒருவர்பின் ஒருவராக மாறி மாறி, உலகைக் காப்பாற்றினர்.

पुण्डरीकातपत्रस्तं विकसत्काशचामरः ।
ऋतुर्विडम्बयामास न पुनः प्राप तच्छ्रियम् ॥ १७ ॥

**पुण्डरीकातपत्रः** - வெண்தாமரை மலராகிய குடையுடையதும், **विकसत्काशचामरः** - மலர்ந்த நாணல் புஷ்பங்களாகிய சாமரமுடையதுமான, **ऋतुः** - சரத்ருதுவானது, **तं** - ரகுவை, **विडम्बयामास** - அனுகரித்தது. **तच्छ्रियं पुनः** - அவனுடைய அழகை, **न प्राप** - அடையவில்லை.

(க-து) சரத் காலத்தில் வெண் தாமரை எங்கும் மலர்ந்திருந்தது. நாணல் புஷ்பித்தது.

ரகு வெண்மையான குடையுடையவன் ராஜ சின்னமாகிய சாமரங்களும் அவனுக்கு உண்டு. , சரத்காலம், ரகுவைப்போல் இருக்கக்கருதி வெண் தாமரை மலராகிய குடையும், நாணல் புஷ்பமாகிய சாமரமுமுடையதாக இருந்தது. அழகு செய்து கொள்ள முயன்றது சரத்காலம். ஆனால், அவனது அழகைப் பெறவில்லை.

प्रसादसुमुखे तस्मिंश्चन्द्रे च विशदप्रभे ।
तदा चक्षुष्मतां प्रीतिरासीत् समरसा द्वयोः ॥ १८ ॥

**प्रसादसुमुखे** - அருளினால் அழகானமுகமுடைய, **तस्मिन्** - அந்த ரகு, :—**विशदप्रभे** - தெளிந்த காந்தியுடைய, **चन्द्रे**-சந்திரன் என்ற, :—**द्वयोः**-இவ்விருவரிடத்திலும், **तदा**-அப்பொழுது, **चक्षुष्मताम्** - கண்படைத்த மக்களுக்கு, **प्रीतिः** - அன்பானது, **समरसा** - ஒத்த சுவையுடையதாக, **आसीत्** - இருந்தது.

(க-து) எப்பொழுதும் அருள் நிறைந்திருந்த காரணத்தால் ரகுவின் முகம் அழகாயிருந்தது. மேகங்கள் விலகிய படியால் சரத் காலத்தில் சந்திரன் தெளிவான பிரகாச முடையவனாக இருந்தான். அக்காலத்தில் சந்திரனைக் கண்டவர் எந்த அளவு ஸந்தோஷத்தை அனுபவித்தனரோ அதே அளவு இன்பத்தை ரகுவின் முகத்தைக் கண்டபோதும் அனுபவித்தனர்.

சரத்கால சந்திரன்போல் ரகுவின் முகம் தெளிவுடன் பொலிவுற்று விளங்கியது. வரப்போகின்றயுத்த யாத்திரையினால் அவன் மனத்தில் கலக்கம் ஏதுமில்லை.

हंसश्रेणीषु तारासु कुमुद्वत्सु च वारिषु ।
विभूतयस्तदीयानां पर्यस्ता यशसामिव ॥ १९ ॥

**हंसश्रेणीषु** - ஹம்ஸங்களின் கூட்டங்களிலும், **तारासु** - நக்ஷத்திரங்களிலும், **कुमुद्वत्सु** - ஆம்பல் புஷ்பங்களையுடைய, **वारिषु च** - நீரிலும், **तदीयानां** - ரகுவினுடையதான, **यशसां** - கீர்த்தியின், **संपदः** - செல்வங்கள், **पर्यस्ता इव** - பரவிக் கிடந்தனபோலும்!

(க-து) சரத் காலத்தில் ஹம்ஸங்கள் கூட்டம் கூட்டமாகத் திரிந்தன. நக்ஷத்திரங்கள் பிரகாசமாக ஒளிர்ந்தன. நீரில் வெண்ணிற மான ஆம்பல் மலர்கள் ஏராளமாகப் புஷ்பித்தன. ஆக, எங்கு நோக்கினும் ஒரே வெண்மையாக இருந்தது. இவ்வாறு எங்கும் தோன்றுகின்ற வெண்மைக்குக் கவி ஒரு காரணத்தை உத்ப்ரேக்ஷிக்கின்றார்.

'ரகுவினது புகழே எங்கும் பரவி வெண்ணிறத் தோற்றத்தை எல்லாவற்றிற்கும் அளித்தது; அவனது புகழ்ச் செல்வம் பொங்கிப் பரவி எல்லாவற்றையும் வெண்ணிற முடையதாகச் செய்தது போலும்' என்கின்றார் கவி.

புகழை வெண்ணிறமுடையதாகக் கூறுவது கவிகளின் மரபு.

इक्षुच्छायनिषादिन्यस्तस्य गोप्तुर्गुणोदयम् ।
आकुमारकथोद्घातं शालिगोप्यो जगुर्यशः ॥ २० ॥

**इक्षुच्छायनिषादिन्यः** - கரும்பின் அடர்ந்த நிழலில் அமர்ந்து, **शालिगोप्यः** - நெற்பயிரைக் காக்கின்ற பெண்கள், **गोप्तुः** - ரக்ஷகனுகிய, **तस्य** - ரகுவினுடைய, **गुणोदयम्** - நற்குணங்களின்று தோன்றியதும், **आकुमारकथोद्घातम्** - குமரப் பருவச் செய்தி தொடங்கியதுமான, **यशः** - புகழை, **जगुः** - பாடினர்.

(க-து) சரத் காலத்தில் எல்லோரும் களிப்புடன் இருந்தனர். நெல் வயலைக் காக்கின்ற பெணகளும் கரும்பு நிழலில் அமர்ந்து ரகுவின் புகழைப் பாடினர் புகழ், அவனுக்கு நற்குணம் காரணமாகத் தோன்றியது. இந்திரனை வென்றது முதலான சிறுபருவச்

**मदगन्धिभिः** - (யானையின்) மதஜலம்போல் நாற்ற முள்ள, **सप्तपर्णानाम्** - ஏழிலைப்பாலை மரங்களின், **प्रसवैः** - புஷ்பங்களினுல் (புஷ்பங்களின் நாற்றத்தால்), **आहताः** - தாக் கப்பட்ட, **तन्नागाः**-ரகுவின் யானைகள், **असूयया इव**-பொறுமை யினுலே போல், **सप्तधा एव** - ஏழுவகையாலும், **प्रसुस्रुवुः** - மதத்தைப் பெருக்கின.

(க-து) சரத் ருதுவில் ஏழிலைப்பாலை மரங்கள் புஷ்பித்தன. அம்மலர்களின் நாற்றம், யானையின் மதஜல நாற்றத்தை ஒத்து இருக்கும். அந்த நாற்றத்தை மோந்த ரகுவின் யானைகள், வேற்று யானைகளின் மத ஜல மணமென நினைத்துப் பொறுமையால் மத ஜலத்தைத் தங்களது சரீரத்தின் ஏழு அவயவங்களின் வழியாகவும் பெருக்கின.

சரத் காலத்தில் யானைகளுக்கு மதமுண்டாவது இயற்கை. ரகுவின் யானைகளும் மதம் கொண்டு விளங்கின என்பது கருத்து.

மதத்தைப் பெருக்கும் அவயங்கள் :—மஸ்தகத்தின் இருபுறம், கண்கள், துதிக்கை முதலியனவாம்.

सरितः कुर्वती गाधाः पथश्चाश्यानकर्दमान् ।
यात्रायै चोदयामास तं शक्तेः प्रथमं शरत् ॥ २४ ॥

**सरितः** - நதிகளை, **गाधाः** - ஆழமற்றனவாகவும், **पथः च**- வழிகளை, **आश्यन कर्दमान्** - நன்கு உலர்ந்த சேறுடையன வாகவும், **कुर्वती** - செய்கின்ற, **शरत्** - சரத்காலம், **तं** அந்த ரகுவை, **शक्तेः** - உத்ஸாக சக்திக்கு, **प्रथमम्** - முன்பே, **यात्रायै** - யுத்த யாத்திரையின் பொருட்டு, **चोदयामास** - தூண்டியது.

(க-து) சரத் காலத்திற்கு முன்னுள்ள மழைக் காலத்தில் ஆறுகள் வெள்ளத்துடன் ஆழமாக இருந்தன. அவைகளை எளிதில் கடப்பது முடியாது. வழிகளும் மழையினுல் சேறுடன் இருந்தன.

சரத்காலம் தோன்றியதும் மழை நின்றுவிட்டபடியால் ஆறுகளில் வெள்ளம் குறைந்து அவைகள் ஆழமற்று இருந்தன. நல்ல வெய்யில் இருந்ததால் வழிகள் சேறின்றிப் படைகள் நடந்து செல்ல வசதியுடனிருந்தன. இவ்வாறு யுத்தத்திற்கு வேண்டிய ஸௌகரி யங்களைக் கொடுத்த சரத்காலமானது, அவனுடைய உத்ஸாகம் யுத்தத்திற்குத் தூண்டுவதன் முன்னமேயே அவனைப் படையெடுக்கத் தூண்டியது.

படைகளின் ஆற்றலும் மந்திரிகளின் ஸஹாயமு முடைய ரகுவிற்கு, சரத்காலம், சண்டை செய்வதற்கு வேண்டிய ஊக்கத்தையும் அளித்தது என்பது கருத்து.

तस्मै सम्यग्घुतो वह्निर्वाजिनीराजनाविधौ ।
प्रदक्षिणार्चिर्व्याजेन हस्तेनेव जयं ददौ ॥ २५ ॥

**वाजि नीराजना विधौ** - 'வாஜி நீராஜனம்' என்ற சடங்கைச் செய்கையில், **सम्यक्** - நன்றாக, **हुतः** - ஹோமத்தினால் மகிழ்விக்கப்பட்ட, **वह्निः** - அக்னி, **प्रदक्षिणार्चिर्व्याजेन** - வலமாக வருகின்ற ஜ்வாலையாகிய, **हस्तेन** - கையினால், **जयं** - ஜயத்தை, **तस्मै** - அவனுக்கு, **ददौ इव** - கொடுத்தான் போலும்!

(க-து) யுத்தத்திற்கு அனுகூலமான சரத்காலம் வந்ததும் ரகு, யுத்த யாத்திரையைச் செய்யவிரும்பி முதன் முதலில் 'வாஜி நீராஜனம்' என்ற சடங்கைச் செய்தான். அப்பொழுது ஹோமத்தினால் திருப்தி செய்விக்கப்பட்ட அக்னியினின்றும் ஜ்வாலை எழுந்து வலமாகச் சுழன்றது. அஃது ரகுவிற்குப் பின்வரப்போகின்ற வெற்றிக்கு அறிகுறியாக இருந்தபடியால், கவி, 'அக்னிதேவனே தனது ஜ்வாலை என்ற கையால் ரகுவிற்கு வெற்றியை எடுத்து அளிப்பவன் போல் காணப்பட்டான்' என்று கூறுகிறார்.

வாஜிநீராஜனமென்பது, யுத்தக்களத்திற்குச் செல்வதற்குமுன் அரசனது வெற்றியைக் கருதியும் படையி

லுள்ள எல்லோருடைய நன்மையைக் கருதியும் செய்யப் படும் ஒரு சடங்காகும். இச்சடங்கின் பொழுது அக்னியில் ஹோமம் செய்து தேவர்களை மகிழ்விப்பர். நல்ல லக்ஷ ணம் பொருந்திய குதிரையையும், யானையையும் தேர்ந் தெடுத்து அவைகளுக்குப் புஷ்பம், வஸ்திரம், ஆபரணம் முதலியவற்றை அணிவித்துப் பூஜை செய்தபின், தீபங்களைக் கொண்டு ஆரத்தி எடுப்பார்கள். இவ்வாரத்தி, குதிரைக்கு மாத்திரமன்றி, அரசர், மந்திரி, புரோஹிதர், சேனைத் தலைவர், யானை, படைக்கலன்கள் முதலிய எல்லாவற்றிற்கும் செய்யப்படும்.

'**वाजि**-குதிரைகளுக்கான, **नीराजना**-ஆரத்தி' என்பது பதப்பொருள்.

> स गुप्तमूलप्रत्यन्तः शुद्धपार्ष्णिरयान्वितः ।
> षड्विधं बलमादाय प्रतस्थे दिग्जिगीषया ॥ २६ ॥

**गुप्तमूल प्रत्यन्तः** - நன்கு பாதுகாக்கப்பட்ட தலைநகரை யும் எல்லைப்புறங்களையு முடையவனாகவும், **शुद्धपार्ष्णिः** - ஆபத்தற்ற பின்புறமுடையவனாகவும், **अयान्वितः** - தெய்வ பலமுடையனாகவும், **सः** - அந்த ரகு, **षड्विधं** - ஆறுவகை யான, **बलम्** - படை வீரர்களை, **आदाय** - எடுத்துக்கொண்டு, **दिग्जिगीषया** - திசைகளை வெல்லும் விருப்பத்துடன், **प्रतस्थे**- புறப்பட்டான்.

(க-து) வெளி நாடு சென்று யுத்தம் செய்யுங் காலத்தில் தனது தலைநகரைப் பகைவர்கள் அணுகாதிருக்க, வேண்டிய பாதுகாப்புக்களை அமைத்தான். எல்லைப்புறங்களையும் நன்கு பாதுகாத்துக் கொண் டான். தான் முன்னேக்கிச் செல்லும்பொழுது பகைவன் பின்னல் வந்து தாக்காதிருக்கவேண்டி, அதற்கான ஏற்பாடுகளைச் செய்து பின்புறத்தையும் ரக்ஷித்துக் கொண்டான். இவ்வாறு மனித யத்னத் தினல் செய்யக்கூடியவை எல்லாவற்றையும் செய்துகொண்டு நல்ல

அதிருஷ்டம் உடன்வரத் திசைகளை வெல்லும் கருத்துடன் ரகு புறப்பட்டான்.

ஆறுவகைப் படை வீரர்கள் :—

1. मौलाः—நற்குடியில் பிறந்து, பாம்பரையாகவே அரசனுக்கு ஊழியம் செய்பவர்கள். இவர்களைச் சுலபத்தில் பகைவர், பணத்தினலோ மற்ற வகையினலோ வசப்படுத்த முடியாது. தம்மரசரிடத்தில் உறுதியான விசுவாஸமுடையவர்கள். நம்பத் தகுந்தவர்கள்.

2. भृत्याः—கூலிப்படை. இவர்கள் அரசனிடம் சம்பளத்திற்கு வேலை செய்பவர்கள். இவர்கள் நிரந்தரமாக உள்ளவர். சண்டைக்காலத்தில் மாத்திரமன்றி மற்றச் சமயங்களிலும் இருப்பர். இவர்களை அதிகம் நம்புதல் கூடாது.

3. सुहृद:—நண்பர்கள். அரசனது நண்பர்களும், நண்பர்களின் வீரர்களும் இப்பிரிவில் அடங்குவர். இவர்கள் நட்பைக் கருதி அரசனுக்கு உதவுபவர். இவர்கள் நம்பத்தக்கவர்கள்.

4 श्रेणय:—சண்டை ஏற்பட்டபொழுது அவ்வக் காலத்தில் திரட்டப்பட்ட போர் வீரர்கள் இவர்கள். சம்பளத்திற்காக வேலை செய்பவர். சண்டை முடிந்ததும் கலைக்கப்பட்டு வீடு செல்வர். இவர்கள் தாற்காலிகமானவர்கள். இவர்களை அதிகம் நம்புதல் கூடாது.

5. द्विषद:—சத்ருவின் சேனையைவிட்டுத் தாமாக ஓடிவந்தவர்களாலும் சிறை பிடிக்கப்பட்டவர்களாலும் ஆவது இப்படை. நிறையப் பணம் கொடுத்துச் சத்ருவின் படையிலுள்ள ஆட்களைத் தம் படையில் சேர்த்துக்கொள்வதாலும் அமையும். பகைவனுக்குப் பகைவனுயுள்ள வேறு ஒரு

அரசனது ஆட்களைக் கொண்டும் இப்பிரிவு ஏற்படலாம். இவர்களை முழுவதும் நம்புதல் கூடாது.

6. आटविकम् :—காட்டுப்படை. காட்டில் வாழு கின்ற வேடர் முதலியவர்களைக் கொண்டு ஏற்படுத்துவது. மலைப்பாங்கான இடங்களிலும் காடுகளிலும் சண்டையிடுவ திலும் வேவுபார்ப்பதிலும், காடுகளை வெட்டுதல், சாலைகளை அமைத்தல் முதலியவற்றிலும் இவர்கள் மிகவும் பயன் படுவர். முழுவதும் நம்புதற்குரியவரல்லர்.

अवाकिरन् वयोवृद्धास्तं लाजैः पौरयोषितः ।
पृषतैर्मन्दरोद्धूतैः क्षीरोर्मय इवाच्युतम् ॥ २७ ॥

**वयोवृद्धाः** - வயது முதிர்ந்த, **पौरयोषितः**-பட்டணத்து ஸ்திரீகள்,—**क्षीरोर्मयः** - பாற்கடலின் அலைகள், **अच्युतम्** - விஷ்ணுவின்மேல், **मन्दरोद्धूतैः** - மந்தர மலையினால் எழுப்பப் பட்ட, **पृषतैः इव** - (பால்) துளிகளைத் தெளிப்பது போல, **तं** - ரகுவின்மேல், **लाजैः** - பொரிகளை, **अवाकिरन्**-தூவினர்.

(க-து) யுத்த யாத்திரை தொடங்கிய ரகுவின்மேல் நகரத்தி லுள்ள வயதுமுதிர்ந்த ஸ்திரீகள் நெற்பொரியைத் தூவினர்.

தேவர்கள் அம்ருதத்திற்காகப் பாற்கடலில் மந்தர மலையை யிட்டுக் கடைந்தபொழுது விஷ்ணு அருகில் நின்று மந்தரமலையைச் சரியான நிலையிலிருக்கும்படி செய்து வந்தார். மந்தரமலை சுற்றும்பொழுது எழுந்த பால் துளிக ளைப் பாற்கடலின் அலைகள், அருகில் நின்ற விஷ்ணுவின் மேல் தெளித்தன. பால் துளிபோல் வெண்மையான நெற் பொரியை ஸ்திரீகள் ரகுவின்மேல் தூவினர். பொரிதூவு வது ஒரு சுபமான செய்கையாகும். ரகு இச்சுலோகத்தில் விஷ்ணுவுடன் ஒப்பிடப்பட்டிருக்கிறான். பாற்கடல் கடை வதில் உதவிய விஷ்ணு லக்ஷ்மியை அடைந்ததுபோல்

ரகுவும் விஜயலக்ஷ்மியை அடைவான் என்பது உபமானத்தால் பெறப்படுவதாகும்.

स ययौ प्रथमं प्राचीं तुल्यः प्राचीनबर्हिषा ।
अहिताननिलोद्धूतैस्तर्जयन्निव केतुभिः ॥ २८ ॥

**प्राचीनबर्हिषा** - இந்திரனுக்கு, **तुल्यः** - ஒப்பான, **सः** - அவன், **अनिलोद्धूतैः** - காற்றினால் அசைக்கப்பட்ட, **केतुभिः** - கொடிகளால், **अहितान्** - பகைவர்களை, **तर्जयन् इव** - பயமுறுத்துபவன்போல் இருந்துகொண்டு, **प्रथमम्** - முதலில், **प्राचीम्** - கிழக்குத் திசையை நோக்கி, **ययौ** - சென்றான்.

(க-து) ரகு முதலில் கிழக்குத் திக்கை நோக்கிச் சென்றான். ஏனெனில், கிழக்குத் திசையின் அதிபனான இந்திரனுக்கு ஒப்பானவன் அவன். இந்திரனுக்கு ஒப்பாகக் கிழக்குத் திசைக்கும் உரிமையுடையவன்; இந்திரனுடன் சண்டையிட்டு, அதன்மூலம் அவனுக்குத் தாழ்ந்தவனல்லன் என்பதை நிரூபித்தவன். செல்லும்பொழுது ரகு செல்லும் திசையை நோக்கிக் காற்று வீசியதால் அவனது துவஜத் துணிகள் காற்றில் முன்னோக்கி அசைந்தன. அவைகள் காற்றில் அசைவது, ரகு கையை அசைத்து எதிரிகளை அச்சுறுத்துவதுபோலிருந்தது. காற்று முன்னோக்கி வீசுவது சுபசகுனமாகக் கருதப்படும்.

रजोभिः स्यन्दनोद्धूतैर्गजैश्च घनसंनिभैः ।
भुवस्तलमिव व्योम कुर्वन् व्योमेव भूतलम् ॥ २९ ॥

**स्यन्दनोद्धूतैः** - தேர்களால் கிளப்பப்பட்ட, **रजोभिः** - புழுதிகளால், **व्योम** - ஆகாயத்தை, **भुवः तलम् इव** - (பூமியின்) தரைபோல், **कुर्वन्** - செய்துகொண்டும், **घनसन्निभैः** - மேகங்களுக்கு நிகரான, **गजैः** - யானைகளால், **भूतलं**-பூமியை, **व्योम इव** - ஆகாயம் போல், **कुर्वन् च** - செய்துகொண்டும், **ययौ** - சென்றான்.

(க-து) ரகு செல்லும்பொழுது, ஆகாசம், தேர்கள் கிளப்பிய புழுதிகள் நிறைந்திருந்ததால் தரைபோல் காணப்பட்டது. அவ்வாறே, நிறத்திலும் வடிவத்திலும் மேகத்திரள்போல் இருந்த யானைக் கூட்டம் தரையில் ஊர்ந்து சென்றதால் பூமி, மேகக்கூட்டம் நிறைந்த ஆகாயம் போல் காணப்பட்டது.

பூமியை ஆகாசமாகவும், ஆகாயத்தை பூமியாகவும் மாற்றிய அவன், பஞ்ச பூதங்களில் ஒன்றை மற்றொன்றாக மாற்றும் வன்மை பெற்றவனாக இருந்தான் என்று கூறுகிறார் கவி.

प्रतापोऽग्रे ततः शब्दः परागस्तदनन्तरम् ।

ययौ पश्चाद्रथादीति चतुस्कन्धेव सा चमूः ॥ ३० ॥

**अग्रे** - முதலில், **प्रतापः** - (அவனுடைய) பராக்ரமம், **ततः** - பிறகு, **शब्दः** - (ஸேனையின்) ஆரவாரம், **तदनन्तरम्** - அதற்குப்பின், **परागः** - (ஸேனையின்) புழுதி, **पश्चात्**·பிறகு, **रथादि** - தேர் முதலியன, **इति** - என்றிவ்வாறு, **सा चमूः** - அப்படையானது, **चतुस्कन्धा इव** - நான்கு பிரிவுடையது போல, **ययौ** - சென்றது.

(க-து) தேர், யானை, குதிரை, காலாட்படை என நான்கு வகையாகச் சேனையைப் பகுப்பது ஒருமுறை. கவி இங்கு வேறு முறையில் ரகுவின் சேனையைப் பிரித்துக் கூறுகின்றார்.

ரகு, யாத்திரை தொடங்கியபொழுது, அவனது பராக்ரமத்தைப்பற்றிய செய்தி, அவன் செல்வதற்கு முன்பே பகைவர்களின் நகரை அடைந்து அச்சத்தை உண்டாக்கியது. பின் சேனைகளின் ஆரவார ஒலி பகைவரின் நகரை அடைந்தது. அதன்பின் சேனைகள் கிளப்பிய புழுதியும், பின் ரதம் முதலிய சேனைகளும் அடைந்தன.

அரசனது பிரதாபம், ஸேனைகளின் ஆரவாரம், புழுதி, ஸேனைகள் என இந்நான்கு பிரிவுகளாகப் பிரிந்து ரகுவின் படை எதிரிகளின் நகரங்களை நோக்கிச் சென்றது என்கிறார் கவி.

मरुपृष्ठान्युदम्भांसि नाव्याः सुप्रतरा नदीः ।
विपिनानि प्रकाशानि शक्तिमत्त्वाच्चकार सः ॥ ३१ ॥

**सः** - அவன், **शक्तिमत्त्वात्** - நல்ல ஆற்றலுடையவனாயிருந்தமையால், **मरुपृष्ठानि** - பாலைவன நிலங்களை, **उदंभांसि** - நீர் நிறைந்தவைகளாகவும், **नाव्याः** - படகுகளால் கடக்க வேண்டிய நதிகளை, **सुप्रतराः** - எளிதிலே கடக்கக்கூடியவைகளாகவும் (நல்ல பாலங்களையுடையவைகளாகவும்), **विपिनानि** - காடுகளை, **प्रकाशानि** - நல்ல வெளிகளையுடையனவாகவும், **चकार** - செய்தான்.

(க-து) ரகு, யாத்திரைக் காலத்தில், பாலை வனங்களையும் நீருடையதாகச் செய்தான். படகுகளின் மூலமே கடக்கக்கூடிய ஆறுகளில் தண்ணீரைக் குறையும்படி செய்தும், பாலங்களை அமைத்தும் எளிதில் அவைகளைக் கடக்கக் கூடியனவாகச் செய்தான். மற்றும், மரங்கள் அடர்ந்து இருள் நிறைந்த காடுகளில் மரங்களை வெட்டி வெளிச்சமுள்ள பாதைகளை அமைத்தான். இவைகளைச் சாதிப்பதற்குரிய ஆற்றல் அவனுக்கிருந்தது.

स सेनां महतीं कर्षन् पूर्वसागरगामिनीम् ।
बभौ हरजटाभ्रष्टां गङ्गामिव भगीरथः ॥ ३२ ॥

**पूर्वसागरगामिनीं** - கிழக்கு ஸமுத்திரத்தை நோக்கிச் செல்லுகின்ற, **महतीं** - மிகப்பெரிய, **सेनां** - ஸேனையை, **कर्षन्** - இழுத்துச் செல்லுகின்ற, **सः** - அவன், **हरजटाभ्रष्टां** - சிவபிரானது சடையினின்று நழுவியதும், **पूर्वसागरगामिनीं**

கிழக் கடலை நோக்கிச் செல்வதும், **महतीं** - பெரியதுமான, **गंगां** - கங்கா நதியை, **कर्षन्** - அழைத்துக்கொண்டு சென்ற, **भगीरथः इव** - பகீரதன் போல், **बभौ** விளங்கினான்.

(க-து) ரகுவினது சேனை, கங்கையின் பிரவாகம்போல் பரந்து இருந்தது. கஙகா நதிபோல் சேனையும் கிழக்கு நோக்கிச் சென்றது. அப்பெரிய சேனையைக் கொண்டுசென்ற ரகு, கஙகையைக் கொண்டு சென்று பகீரதனுக்கு ஒப்ப விளங்கினான்.

பகீரதன் கங்கையைக் கொண்டு சென்ற வரலாறு :—

கபில முனிவரால் சாம்பலாக்கப்பட்ட ஸகர புத்திரர்கள் அறுபதினாயிரம் பேரையும் கங்கா ஜலத்தில் நனைத்து நற்கதி யடைவிக்கக் கருதி, தேவருலகத்திலுள்ள கங்கையைப் பூலோகத்திற்குக் கொண்டுவர விரும்பிப் பகீரதன் பிரம்மதேவரை நோக்கிக் கடுந்தவம் செய்தான். அவர், பகீரதன் தவத்தினால் மகிழ்ந்து, கங்கையை யழைத்துப் பகீரதனுடன் செல்லும்படி ஆணையிட்டார். கங்கை தேவலோகத்திலிருந்து பூமியில் இறங்கும்பொழுது அதன் வேகத்தைத் தாங்கி அதைத் தரையில் விடச் சிவபிரானை வேண்டும்படி அவர் பகீரதனுக்குக் கூறினார். பகீரதன் சிவபிரானை வேண்ட, அவர் தமது முடியில் கங்கையை ஏற்று ஹிமயமலையின் சிகரத்தில் விடுத்தார். பின் பகீரதன் முன்செல்ல, கங்காநதி அவன் பின்னே சென்று ஸகர புத்திரர்களின் சாம்பலை நனைத்து அவர்களை உய்வித்தது.

ரகு, பகீரதனைப்போல் எடுத்த காரியத்தை முடிக்கும் திறன் பெற்றவன் என்பதும் உபமானத்தால் பெறப்படும்.

त्याजितैः फलमुत्खातैर्भग्नैश्च बहुधा नृपैः ।
तस्यासीदुल्बणो मार्गः पादपैरिव दन्तिनः ॥ ३३ ॥

**फलम्** - செல்வத்தை, **त्याजितैः** - விடும்படி செய்யப் பட்டவர்களும், **उत्खातैः** - பதவியினின்றும் இறக்கப்பட்ட வர்களும், **बहुधा** - பலவகையிலும், **भग्नैः च** - முறியடிக்கப் பட்டவர்களுமான, **नृपैः** - அரசர்களால், **तस्य**-அவனுடைய, **मार्गः** - வழியானது,—**फलम्** - பழத்தை, **त्याजितैः** - உதிர்க் கும்படி செய்யப்பட்டவைகளும், **उत्खातैः** - வேர்பறிக்கப் பட்டவைகளும், **बहुधा** - பலவகையிலும், **भग्नैः च**-முறிக்கப் பட்டவைகளுமான, **पादपैः** - மரங்களால், **दन्तिनः** - யானை யின், **मार्गः इव** - வழி (தெளிவாகத் தெரிவது) போல், **उल्बणः** - தெளிவானதாக, **आसीत्** - இருந்தது.

(க-து) ஒரு காட்டிலே யானை சென்ற வழி எளிதிலே அறிய லாம்படி இருக்கும். அது, தான் சென்ற வழியிலுள்ள மரங்களி லிருந்து புஷ்பம், தழை காய் கனி இவைகளை உதிர்த்துக் கொண்டு செல்லும். பல செடிகளையும் மரங்களையும் வேர் பறிக்கும்; சிலவற்றை முறிக்கும். இவ்வாறுள்ள அடையாளங்களைக் கொண்டு, 'இது யானை சென்ற வழி' எனத் தெளிவாக அறியலாம். அவ்வாறே, ரகு சென்ற வழியும், எளிதில் புலப்பட்டது. அவன் சென்ற வழியி லுள்ள அரசர்கள் செல்வத்தை இழக்கும்படி செய்யப்பட்டனர். சிலர் தமது அரச பதவியிலிருந்து இறக்கப்பட்டனர், சிலர் பலவகையிலும் முறியடிக்கப்பட்டனர். யானை சென்ற வழிபோல் ரகு சென்ற வழியும் ஸுலபத்தில் அறியும்படி இருந்தது.

पौरस्त्यानेवमाक्रामंस्तांस्ताञ्जनपदाञ्जयी ।
प्राप तालीवनश्याममुपकण्ठं महोदधेः ॥ ३४ ॥

**जयी** - வெற்றியையே இயற்கையாகக் கொண்ட ரகு, **एवम्** - இவ்வாறு, **पौरस्त्यान्** கிழக்குத்திசையிலுள்ள, **तान् तान्** - அந்த அந்த, **जनपदान्** - தேசங்களை, **आक्रामन्**-வசப்படுத்திக் கொண்டு, **तालीवनश्यामम्** - பனங்காட்டினால் கறுத்துள்ள **महोदधेः उपकण्ठम्** - கிழக்கடலின் சமீபத்தை, **प्राप** - அடைந் தான்.

(க-து) ரகு எப்பொழுதும் வெற்றியுடையவனாகவே இருந்தான். அவன் கிழக்குத் திசையிலுள்ள பல நாடுகளையும் வென்று தன் வசப்படுத்திக்கொண்டு கிழக்கடலின் கரையை அடைந்தான். பனை மரங்கள் ஏராளமாக வளர்ந்திருந்ததால் ஸமுத்ரக்கரை தொலைவிலிருந்து நோக்கக் கறுத்த நிறமுடையதாக இருந்தது.

अनम्राणां समुद्धर्तुस्तस्मात् सिन्धुरयादिव ।
आत्मा संरक्षितः सुह्मैर्वृत्तिमाश्रित्य वैतसीम् ॥ ३५ ॥

**सिन्धुरयात् इव** - நதியின் வேகத்திலிருந்து (செடிகள் வளைந்து தங்களைக் காத்துக்கொள்வது) போல, **सुह्मैः** - ஸுஹ்ம தேசத்தரசர்களால், **वैतसीम्** - நீர் நொச்சியின், **वृत्तिं** - செயலை, **आश्रित्य** - அனுசரித்து, **आत्मा** - உயிர், **अनम्राणां** - வணங்காதவர்களை, **समुद्धर्तुः** - வேரோடு பறிக்கின்ற (அழிக்கின்ற), **तस्मात्** - அவனிடமிருந்து, **संरक्षितः** - காப்பாற்றிக் கொள்ளப்பட்டது.

(க-து) ரகு, வணங்காதவர்களை வேரோடு அழிப்பவன். இதையறிந்த ஸுஹ்ம தேசத்து அரசர்கள், அவனை வணங்கித் தம் உயிரைக் காத்துக்கொண்டனா. நதியின் கரையிலுள்ள பெரிய மரங்கள் ஆற்றின வேகத்தால் வேர்பறிக்கப்பட்டு வீழ்கின்றன. நீர் நொச்சி முதலிய சிறு செடிகள், வேகத்திற்குத் தப்பிப் பிழைக்கின்றன. காரணம், மரஙகள் வளைவதில்லை. சிறு செடிகள் வணங்கி விடுகின்றன. அவ்வாறே நீர் நொச்சிகளின் செயலை அனுசரித்து ஸுஹ்மர்கள் ரகுவினிடமிருந்து தஙகளது உயிரைக் காத்துக்கொண்டனர்'

'ஆறு கிண்ணகம் (வெள்ளம்) எடுத்தால் நேர்நின்ற மரங்களை பறியுண்டு போய்க் கடலிலே புகும்; நீர்வஞ்சி தொடக்கமானவை வளைந்து பிழைக்கும்' எனபது ஆன்றோர் வாக்கு.

**वेतसः** - நாணல், பிரம்பு, நீர்வஞ்சி என்ற பொருளுமுண்டு.

ஸுஹ்மதேசம் மேற்கு வங்காளம் எனவும், வங்கத்திற்கும் கலிஙகத்திற்கும் இடையிலுள்ள நாடு எனவும் கூறுவர்.

वङ्गानुत्खाय तरसा नेता नौसाधनोद्यतान् ।
निचखान जयस्तम्भान् गङ्गास्रोतोन्तरेषु सः ॥ ३६ ॥

**नेता** - தலைவனாகிய, **सः** - அந்த ரகு, **नौसाधन उद्यतान्**- படகுப்படையுடன் எழுந்த (எதிர்த்த), **वङ्गान्** - வங்க நாட்டரசர்களை, **तरसा** - பலத்தினால், **उत्खाय** - வேர்களைந்து, **गङ्गास्रोतोन्तरेषु** - கங்கா நதியின் பெருக்கிற்கு இடையிலுள்ள பிரதேசங்களில், **जयस्तंभान्** - வெற்றித் தூண்களை, **निचखान** - நாட்டினான்.

(க-து) வங்க நாட்டரசர்கள், படகுப் படையினால் கர்வம் கொண்டு, அவனை எதிர்க்க முற்பட்டனர். அவர்கள் எல்லோரையும் வென்று அரசபதவியினின்றும் தள்ளி, கங்கா பிரவாஹத்தின் இடையிலுள்ள தீவுகளில் அவனது வெற்றிக் குறிகுறியான ஸ்தம்பங்களை நாட்டினான்.

आपादपद्मप्रणताः कलमा इव ते रघुम् ।
फलैः संवर्धयामासुरुत्खातप्रतिरोपिताः ॥ ३७ ॥

**आपाद्-पद्म प्रणताः**-தாமரை போன்ற (அவனது) பாதங்கள் வரை வணங்கியவர்களும், **उत्खात प्रतिरोपिताः**- (ராஜ்யத்திலிருந்து) வீழ்த்தி (மறுபடியும் அரச பதவில்) ஸ்தாபிக்கப்பட்டவர்களுமான, **ते** - அவ்வங்க மன்னர்கள் ;—**उत्खात-प्रतिरोपिताः** – (நாற்றங்காலிலிருந்து) பெயர்த்து நடப்பட்டவையும், **आपाद्पद्मप्रणता.** - (தங்களுடைய) வேருக்கு அருகிலுளள தாமரை வரையில் வணங்கி இருப்பவையுமான, **कलमाः इव** - நெற் பயிர்கள் (நெல்லை அளிப்பது) போல, **फलैः** - (பலவகையான) பொருள்களால், **तम्** - அந்த ரகுவை, **संवर्धयामासुः** - செல்வமுடையவனாகச் செய்தனர்.

(க-து) நெற் பயிர்கள் முதலில் நாற்றங்காலில் வளரும். பிறகு அவற்றைப் பெயர்த்துக் கழனியில் நடுவர். அவ்வாறு நடப்பட்டபின்

அவை செழிப்புடன் வளர்ந்து அதிகம் நெல்லைத்தரும். கதிர்களில் நெல் நிறைந்துள்ளபொழுது நெற்பயிர், தன்னருகில் முளைத்துள்ள தாமரையின்மேல் வணங்கியிருக்கும்

வங்க மன்னர்களும், முதலில் ரகுவினால் அவர்களுடைய இடங்களிலிருந்து நீக்கப்பட்ட பிறகு பதவியில் அமர்த்தப்பட்டனர். பறித்து நடப்பட்ட நெற்பயிர்களைப் போல் அவ்வரசர்களும் ரகுவிற்கு ஏராளமான செல்வத்தைக் கொடுத்தனர்.

கவி, வங்க நாட்டில் மிகுதியும் காணப்படுகின்ற ஒரு ஸம்பவத்தையே இடமறிந்து உபமானமாக உபயோகப் படுத்தியது ரஸிக்கத்தக்கதாகும்.

स तीर्त्वा कपिशां सैन्यैर्बद्धद्विरदसेतुभिः ।
उत्कलादर्शितपथः कलिङ्गाभिमुखो ययौ ॥ ३८ ॥

**सः** - அவன், **बद्ध-द्विरद-सेतुभिः** - அமைக்கப்பட்ட பானைப்பாலமுடைய, **सैन्यैः** -ஸேனைவீரர்களுடன், **कपिशाम्** - 'கபிசை' என்ற நதியை, **तीर्त्वा** - கடந்து, **उत्कलै आदर्शित-पथः** - உத்கல நாட்டரசர்களால் காண்பிக்கப்பட்ட வழியுடையவனாக, **कलिङ्गाभिमुखः** - கலிங்க நாட்டை நோக்கி, **ययौ** - சென்றான்.

(க-து) யானைகளை வரிசையாக நிறுத்திப் பாலம் அமைத்து அதன்மூலம் கபிசை என்ற நதியைக் கடந்தான். பின் உத்கலநாடு செல்லவும், அத்தேச அரசர்கள் அவனை எதிர்கொண்டழைத்து உபசரித்துக் கலிங்க நாட்டிற்குச் செல்லும் வழியைக்காட்ட ரகு கலிங்கம் சென்றான்.

உத்கலர்கள் சண்டையிடாமல் முதலிலேயே அடி பணிந்தனர். வீரர்கள்,யானையைக்கொண்டு பாலம் அமைத்ததும் கவனிக்கத்தக்கதாகும். உத்கலம் என்பது தற்காலத்தில்

ஒரிஸ்ஸா என அழைக்கப்படுவது. ஒரிஸ்ஸாவின் தென் எல்லையிலிருந்து தொடங்கித் தெற்கே கோதாவரிவரை கடற் கரையை ஒட்டியுள்ள இடம் கலிங்கமாகும்.

स प्रतापं महेन्द्रस्य मूर्ध्नि तीक्ष्णं न्यवेशयत् ।
अङ्कुशं द्विरदस्येव यन्ता गम्भीरवेदिनः ॥ ३९ ॥

**यन्ता** - யானைப்பாகன், **गम्भीरवेदिनः** - கம்பீரவேதி என்றவகையைச் சேர்ந்த, **द्विरदस्य** - யானையின், **मूर्ध्नि** - தலையில், **तीक्ष्णम्** - கூரான, **अङ्कुशं इव** - அங்குசத்தை (செலுத்துவது) போல, **सः**- அந்த ரகு, **महेन्द्रस्य** - மஹேந்திர மலையின், **मूर्ध्नि** - சிகரத்தில், **तीक्ष्णम्** - பொறுக்க இயலாத, **प्रतापम्** - தனது பராக்ரமத்தை, **न्यवेशयत्** - நிலைநாட்டினான்.

(க-து) தோலைக் கிழித்தாலும், ரத்தம் பெருகச் செய்தாலும், சதையை அறுத்தாலும் தன்னைப்பற்றிய உணர்வில்லாது மதம் கொண்டுள்ள யானைக்குக் கம்பீரவேதி எனப் பெயர்.

கற்றுக்கொடுப்பதை அறிந்து கொள்வதில் மெதுவாக இருக்கும் யானையையும் கம்பீரவேதி என்பர். அடங்காது மந்தபுத்தியுள்ள யானையைப் பழக்குவதற்காகப் பாகன் அங்குசத்தால் அதன் மஸ்தகத்தில் குத்துவதுபோல, கலிங்க நாட்டு மஹேந்திரமலையின்மேல் ரகு தனது வெற்றியை நாட்டினான்.

மஹேந்திரமலை யானைக்கும், ரகு பாகனுக்கும், பிரதாபம் அங்குசத்திற்கும் ஒப்பிடப்பட்டிருக்கின்றன. அல்லது, ‘மஹேந்திர’ என்பதற்குக் கலிங்க மன்னன் எனப்பொருள் கொண்டு ‘அவ்வரசன் தனது பிரதாபத்தை உணரும்படி ரகு செய்தான்’ எனவும் பொருள் கொள்ளலாம்.

மஹேந்திரம் என்பது, கிழக்குத்தொடர் மலைகளுக்குப் பொதுப்பெயராகும். கஞ்சம் ஜில்லாவிலுள்ள ஒரு மலைப் பகுதிக்கும் அப்பெயர் உள்ளது. இம்மஹேந்திரம்,புராணங் களிலே கூறப்பட்ட குலபர்வதங்கள் ஏழனுள் ஒன்று: மற்றவை: ஸஹ்யமலை, சுக்திமான், ரிக்ஷமலை, விந்தியம், பாரியாத்ரம், மலயம் என்பனவாம்.

प्रतिजग्राह कालिङ्गस्तमस्त्रैर्गजसाधनः ।
पक्षच्छेदोद्यतं शक्रं शिलावर्षीव पर्वतः ॥ ४० ॥

**पक्षच्छेदोद्यतम्** - சிறகுகளை வெட்டமுற்படுகின்ற, **शक्रम्** - இந்திரனை, **शिलावर्षी** - கற்களை வர்ஷிக்கின்ற, **पर्वतः इव** - மலை (எதிர்ப்பது) போல, **गजसाधनः** - யானைப்படையுடைய **कालिगः** - கலிங்க மன்னன், **अस्त्रैः** - அஸ்த்ரங்களால், **तम्** - அந்த ரகுவை, **प्रतिजग्राह** - எதிர்த்தான்.

(க-து) மலை, கல்மாரி பெய்து, சிறகுகளை வெட்ட முயன்ற இந்திரனை எதிர்ப்பதுபோல், கலிங்க மன்னன், யானைப்படையுடன் ஆயுதங்களைக் கொண்டு ரகுவை எதிர்த்தான்.

द्विषां विषह्य काकुत्स्थस्तत्र नाराचदुर्दिनम् ।
सन्मङ्गलस्नात इव प्रतिपेदे जयश्रियम् ॥ ४१ ॥

**काकुत्स्थः** - ககுத்ஸ்தன் வம்சத்தில் தோன்றிய ரகு, **तत्र**- அங்கு (மஹேந்திர மலையில்), **द्विषाम्** - பகைவர்களின், **नाराच दुर्दिनम्** - அம்பு மாரியை, **विषह्य** - தாங்கி, **सन्मङ्गलस्नातः इव** - சாஸ்திர முறைப்படி மங்களகரமான ஸ்நாநம் செய்தவன் போல், **जयश्रियम्** - வெற்றியாகிய லக்ஷ்மியை, **प्रतिपेदे** - அடைந்தான்.

(க-து) ரகு பகைவர்களின் அம்பு மாரியைப் பொறுத்து, மங்கள ஸ்நாநம் செய்தவன் போலிருந்தான். அம்புகளின் இடை

யிலே அவன் நின்றது 'விஜயலக்ஷ்மியைப் பெறுவதற்கு முன்செய்த மங்கள ஸ்நாநம் போலுள்ளது' எனக் கவி கூறுகின்றார்.

ताम्बूलीनां दलैस्तत्र रचितापानभूमयः ।
नारिकेलासवं योधाः शात्रवं च पपुर्यशः ॥ ४२ ॥

**तत्र** - அம்மஹேந்திர மலையில், **योधाः** - (ரகுவின்) வீரர்கள், **रचित आपान भूमयः** - அமைக்கப்பட்ட பான பூமியையுடையவர்களாக, **नारिकेलासवम्** - தென்னங்கள்ளை, **तांबूलीनां** - வெற்றிலைக் கொடிகளின், **दलैः** - இலைகளால், (இலைகளுடன்), **पपुः** - குடித்தனர்; **शात्रवं** - சத்ருவினுடைய தான, **यशश्च** - புகழையும், **पपुः** - குடித்தனர்.

(க-து) பலர் சேர்ந்து மதுபானம் செய்வதற்கான இடம் **आपानभूमि** எனப்படும். ரகுவின் வீரர்கள் எளிதில் கலிங்கப் படையை வென்றதினால், கட்குடித்து ஸுகமான முறையில் அவ் வெற்றியைக் கொண்டாடினர். குடிப்பதற்காக வசதியான இடங்களை அமைத்துக்கொண்டு, வெற்றிலைகளால் தொன்னைகள் செய்து அவை களில் தென்னங்கள்ளை ஊற்றிப் பருகினர்; 'கள்ளைப்பருகி வெற் றிலையைச் சுவைத்தனர்' என்றும் பொருள் கொள்ளலாம். அவர்கள் வெண்ணிறமுள்ள தென்னங்கள்ளைப் பருகியது, சத்ருக்களின் புகழையும் உடன் பருகியதாக நினைக்கும்படி செய்தது.

गृहीतप्रतिमुक्तस्य स धर्मविजयी नृपः ।
श्रियं महेन्द्रनाथस्य जहार न तु मेदिनीम् ॥ ४३ ॥

**धर्मविजयी** - தர்மத்திற்காக வெல்லுகின்ற, **सः नृपः** - அவ்வரசன் ரகு, **गृहीत प्रतिमुक्तस्य** - (முதலில்) சிறை பிடிக் கப்பட்டு(ப் பின்பு) விடுவிக்கப்பட்டவனாகிய, **महेन्द्रनाथस्य** - மஹேந்திர மன்னனின், **श्रियम्** - செல்வத்தை மாத்திரம், **जहार** - கவர்ந்து கொண்டான்; **किन्तु** - ஆனால், **मेदिनीम्** - பூமியை, **न जहार** - எடுத்துக் கொள்ளவில்லை.

(க-து) வெற்றிகொள்பவர், தர்மவிஜயி, லோபவிஜயி, அஸுரவிஜயி என மூவகைப்படுவர். தர்ம காரியங்களான யாகம் முதலியவற்றைச் செய்வதற்குத் தேவையான செல்வத்தைப் பெற வேண்டிப் பிற மன்னர்களை வெல்பவர் தர்மவிஜயி எனப்படுவர். இவர்கள், வெல்லப்பட்ட அரசனது பொருளை மாத்திரம் எடுத்துக் கொண்டு அவ்வரசனை மறுபடியும் அரசபதவியில் அமைப்பர். பகைவனது உயிரை மாய்க்காது விடுத்து அவனது பொருளையும் பூமியையும் எடுத்துக் கொள்ளுபவர் லோபவிஜயி எனப்படுவர். இவர்கள் இரண்டாவது வகையினராவர். பகைவனது செல்வம், நிலம், உயிர் என்ற மூன்றையும் கவர்ந்து அவனை அடியோடு அழித்து நிர்மூலமாக்குபவர் அஸுரவிஜயி எனப்படுவர்.

ரகு தர்மவிஜயி யாதலால் கலிங்க மன்னனுடைய பொருளை மாத்திரம் எடுத்துக்கொண்டு, சிறைபிடிக்கப் பட்டவனாயினும் அவ்வரசனை விடுதலை செய்து முன்போல் அரசுரிமை அளித்தான்.

ततो वेलातटेनैव फलवत्पूगमालिना ।
अगस्त्याचरितामाशामनाशास्यजयो ययौ ॥ ४४ ॥

**ततः** - பிறகு, **फलवत्पूगमालिना** - காய்களோடுகூடிய பாக்கு மரங்களின் கூட்டமுடைய, **वेलातटेन एव** - ஸமுத்திரக்கரை வழியாகவே, **अगस्त्याचरिताम्** - அகஸ்தியர் வசித்த, **दिशम्** - திசையை நோக்கி, **अनाशास्य जयः** - கோர வேண்டாத வெற்றியை யுடையவனாக, **(सः)** - அவன், **ययौ** - சென்றான்.

(க-து) ரகு, கலிங்க மன்னனை வென்றபின் கடற்கரை யோரமாகவே அகஸ்திய முனிவர் வசிக்கும் தெற்குத் திசையை நோக்கிச் சென்றான். கடற்கரை முழுவதும் பாக்கு மரங்கள், பழக்குலைகளுடன் ஏராளமாக இருந்தன. அதிகம் பலமுடைய ரகுவிற்கு வெற்றி தேடப்பட வேண்டியதாக இல்லை; வெற்றியே அவனைத் தேடி வந்தது.

स सैन्यपरिभोगेण गजदानसुगन्धिना ।
कावेरीं सरितां पत्युः शङ्कनीयामिवाकरोत् ॥ ४५ ॥

**सः** - அவன், **गजदानसुगन्धिना** - யானையின் மதஜல வாசனையுள்ள, **सैन्यपरिभोगेण**-ஸேனையின் அநுபவத்தினால், **कावेरीम्** - காவேரி நதியை, **सरितां पत्युः** - நதிகளின் கணவனான ஸமுத்ரராஜனால், **शङ्कनीयाम् इव** - ஸந்தேகிக்கத் தகுந்தவள் போல், **अकरोत्** - செய்தான்.

(க-து) நதிகளை ஸமுத்ரராஜனின் மனைவியராகக் கூறுவது கவிஸமயம்.

ரகு தென்திசை நோக்கிச் செல்லும்பொழுது அவனது சேனைகள் காவேரி நதியில் குளித்தும், அதன் நீரைப் பருகியும் அநுபவித்தன. யானைகள் குளிக்கும்பொழுது அவைகளின் மதஜல வாசனை காவேரியின் ஜலத்தில் கலந்தது. அவ்வாசனையுடன் காவேரி ஸமுந்திரத்தை அடையும்பொழுது, ஸமுத்ரராஜன், தன் மனைவியான காவேரி நதிக்குள்ள புதிய வாசனையால் அதனிடம் அவநம்பிக்கை கொள்ளும்படி இருந்தது என்கின்றார் கவி. இதற்குக் காரணம் ரகுவின் யானைகளின் மதஜலம் பெரிய ஆற்றின் வெள்ளம் முழுவதும் மதஜல வாசனை யுடையதாகச் செய்ய வல்ல யானைக் கூட்டம் அவனிடம் இருந்ததென்பதும், அவனது சேனை, பலநாள் காவிரிக் கரையில் தங்கி அதை அநுபவித்தது என்பதும் சுலோகத்தின் கருத்தாகும்.

बलैरध्युषितास्तस्य विजिगीषोर्गताध्वनः ।
मारीचोद्भ्रान्तहारीता मलयाद्रेरुपत्यकाः ॥ ४६ ॥

**विजिगीषोः** - வெல்கின்றவனும், **गताध्वनः** - வெகுதூரம் வழியைக் கடந்தவனுமான, **तस्य** - அவனுடைய, **बलैः** -

ஸேனைகளால், **मारीचोद्भ्रान्त हारीताः** - மிளகுக் காடுகளில் திரிகின்ற கிளிகளையுடைய, **मलयाद्रेः** - மலயமலையின், **उपत्यकाः** - சரிவுகள், **अध्युषिताः** - வஸிக்கப்பட்டன.

(க-து) ரகுவின் ஸேனைகள் வெகுதூரம் நடந்துவந்த களைப் புத்தீர மலயமலையின் சுற்றிலுமுள்ள மிளகுக் காடுகளில் தங்கியிருந்தன. அம்மிளகுக் காடுகளில் பச்சைக் கிளிகள் இங்குமங்கும் பறந்து கொண்டிருந்தன.

ससञ्जुरश्वक्षुण्णानामेलानामुत्पतिष्णवः ।
तुल्यगन्धिषु मत्तेभकटेषु फलरेणवः ॥ ४७ ॥

**अश्वक्षुण्णानाम्** - குதிரைகளால் நசுக்கப்பட்ட, **एलानां** - ஏலச் செடிகளின், **फलरेणवः** - (காய்ந்த) காய்களின் தூகள்கள், **उत्पतिष्णवः** - மேலே கிளம்புகின்றனவாக, **तुल्यगन्धिषु** - ஒத்த மணமுள்ள, **मत्तेभ कटेषु** - மதங்கொண்ட யானைகளின் கன்னங்களில் - **ससञ्जुः** - படிந்தன.

(க-து) அக்காடுகளில், குதிரைக் குளம்புகளால் நசுக்கப்பட்ட ஏலச்செடிகளின் காய்களுடைய தூள், மதஜலம் பெருகுவதால் ஈரமுள்ள யானைகளின் கன்னஙகளில் ஒட்டிக்கொண்டது. ஏலக்காய்களின் வாசனை, யானையின் மதஜல வாசனையை ஒத்திருந்தது.

भोगिवेष्टनमार्गेषु चन्दनानां समर्पितम् ।
नास्रसत् करिणां ग्रैवं त्रिपदीच्छेदिनामपि ॥ ४८ ॥

**चन्दनानाम्** - சந்தன மரங்களுடைய, (மரங்களில்), **भोगिवेष्टन मार्गेषु**-பாம்புகள் சுற்றிய பள்ளங்களிலே, **समर्पितम्**- கட்டப்பட்டுள்ளதும், **त्रिपदीछेदिनाम् अपि** - கால் சங்கிலிகளை அறுக்கும் தன்மை கொண்ட, **करिणाम्** - யானைகளுடைய, **ग्रैवम्** - கழுத்திலிடப்பட்டுள்ளதுமான கயிறு, **न अस्रसत्** - சிறிதும் நழுவவில்லை.

(க-து) சந்தன மரங்களில் அவைகளின் வாசனையை விரும்பிப் பாம்புகள் சுற்றிக்கொள்வதால் அம்மரங்களில் வட்டமான பள்ளங்கள் இருந்தன. ரகுவின் யானைகளின் கழுத்தில் கயிற்றைக் கட்டி அதனைச் சந்தன மரங்களின் பள்ளங்களில் கட்டியிருந்தனர். அவனது யானைகள் காலில் கட்டியுள்ள இரும்புச் சங்கிலியையும் அறுக்கும் பலமும் சுவபாவமும் உடையன. இப்பொழுது கயிற்றால் கட்டப்பட்டிருப்பினும் அவைகள் கயிற்றை அறுக்கவில்லை. கயிறு சிறிதும் வரிவிட்டு நழுவாதிருந்தது. காரணம்: கயிறு சந்தன மரத்தின் வரிகளில் நன்கு பதிந்திருந்தது. யானைகளும் சந்தன வாசனையால் கவரப்பட்டுச் சாதுவாக இருந்தன.

दिशि मन्दायते तेजो दक्षिणस्यां रवेरपि ।
तस्यामेव रघोः पाण्ड्याः प्रतापं न विषेहिरे ॥ ४९ ॥

**दक्षिणस्याम्** - தெற்கு, **दिशि** - திசையில், **रवेः** - சூரியனுடைய, **तेजः अपि**-ஒளிகூட, **मन्दायते**-குறைந்துவிடுகிறது; **तस्यां एव** - அதே திசையில், **रघोः** - ரகுவின், **प्रतापम्** - பிரதாபத்தை, **पाण्ड्याः** - பாண்டிய மன்னர்கள், **न विषेहिरे** - தாங்கவில்லை.

(க-து) தக்ஷிணாயனத்தில் சூரியன் தென் திசையில் வருகிறான். அப்பொழுது அவன் தேஜஸ் குறைவாக இருக்கிறது. இது இயற்கை; ஆனால் இதற்குக் கவி ஒரு காரணத்தைக் கற்பனை செய்கிறார். 'தென் திசையிலுள்ள பாண்டிய மன்னர்களின் அருகில் வரும்பொழுது சூரியனும் பயந்து ஒளிகுன்றி வருகிறான். அவ்வளவு பராக்ரமமுடையவர்கள் பாண்டியர்கள்,' என்கிறார். ஆனால் அவர்கள்கூட, ரகு அருகில் வரும்பொழுது அவனது பராக்ரமத்தைத் தாங்கமுடியாது தவித்தனர். இதனால் ரகுவின் பலம் எத்தகையதென்பது புலப்படும்.

ताम्रपर्णीसमेतस्य मुक्तासारं महोदधेः ।
ते निपत्य ददुस्तस्मै यशः स्वमिव संचितम् ॥ ५० ॥

ते - அப்பாண்டியர்கள், ताम्रपर्णीसमेतस्य - தாம்ரபர்ணி நதியுடன் சேர்ந்துள்ள, महोदधेः - ஸமுத்ரத்திலுடையதும், सञ्चितम् - குவிக்கப்பட்டுள்ளதுமான, मुक्तासारम् - சிறந்த முத்துக்களை, सञ्चितम् - சேமிக்கப்பட்டுள்ள, स्व - தங்களுடைய, यशः इव - புகழைத் தருவதுபோல, तस्मै - ரகுவிற்கு, निपत्य - அடிபணிந்து, ददुः கொடுத்தனர்.

(க-து) பாண்டிய மன்னர்கள், தாம்ரபர்ணிநதி சேருகின்ற கடலிலிருந்து எடுக்கப்பட்டுள்ள வெண்மையான நல்ல முத்துக்களின் குவியல்களை, தாங்கள் சேமித்துள்ள புகழைக் கொடுப்பது போல், ரகுவின் அடிபணிந்து அவனுக்குக் காணிக்கையாகத் தந்தனர்.

புகழை வெண்ணிறமுடையதாகக் கூறுவர்.

स निर्विश्य यथाकामं तटेष्वालीनचन्दनौ ।
स्तनाविव दिशस्तस्याः शैलौ मलयदर्दुरौ ॥ ६१ ॥

असह्यविक्रमः सह्यं दूरान्मुक्तमुदन्वता ।
नितम्बमिव मेदिन्याः स्रस्तांशुकमलङ्घयत् ॥ ६२ ॥

असह्यविक्रमः - தாங்கமுடியாத பராக்ரமமுடைய, सः - அவன், तस्याः - அந்த, दिशः - திசையின்,........तटेषु - சுற்றுப் பிரதேசங்களில், आलीढचन्दनौ - வியாபித்துள்ள சந்தன மரங்களையுடைய, मलयदर्दुरौ - மலயம், தர்துரம் என்ற, शैलौ - இரண்டு மலைகளையும், यथाकामम् - விருப்பப்படி, निर्विश्य - அனுபவித்துவிட்டு, उदन्वता - கடலினால், दूरात् - தொலைவிலேயே, मुक्तम - விடப்பட்டுள்ள,...........सह्यम् - ஸஹ்ய மலையை, अलङ्घयत् - கடந்தான்.

(க-து) இதுவரை தென் திசையில் சென்று கொண்டிருந்த ரகு, பாண்டியர்களை வென்றபின், அந்நாட்டிலுள்ள மலயம்,

தர் துரம் என்ற மலைகளில் விருப்பப்படி தங்கி இருந்த பிறகு, மேற்குத் திசைக்குச் சென்றான். சென்று, மேற்கு மலைகளில் ஒன்றான ஸஹ்ய மலையைக் கடந்து அதற்கு மேற்கிலுள்ள தேசத்தை யடைந்தான்.

ஒரு காலத்தில் ஸஹ்ய மலைக்கு அருகிலிருந்த கடல், தற்பொழுது அதைவிட்டு விலகி வெகு தொலைவிலிருந்தது. கடலுக்கும் ஸஹ்ய மலைக்கும் இடையிலுள்ள நாட்டிற்குக் கொங்கணம் என்பது பழைய பெயர். மலையாளம், கன்னடம் இரண்டும் இதனுள் அடங்கும். இப்பொழுது கொங்கணம் என்பது கன்னடப் பகுதியை மாத்திரம் குறிக்கின்றது.

ஸமுத்ரம் விலகியதற்குக் காரணம் அடுத்த சுலோகக் குறிப்பில் விளக்கப்பட்டுள்ளது.

तस्यानीकैर्विसर्पद्भिरपरान्तजयोद्यतैः ।
रामास्त्रोत्सारितोऽप्यासीत् सह्यलग्न इवार्णवः ॥ ५३ ॥

**अपरान्तजयोद्यतैः** - மேலை நாட்டை வெல்ல முயலுகின்றவையும், **विसर्पद्भिः** - பரவிச் செல்கின்றவையுமான, **तस्य** - அவனுடைய (ரகுவினுடைய) **अनीकैः** - ஸேனைகளால், **अर्णवः** - ஸமுத்ரம், **राम अस्त्र उत्सारितः अपि** - பரசுராமரின் அஸ்திரத்தினால் விலக்கப்பட்டதாயினும், **सह्यलग्नः इव** - ஸஹ்ய மலையுடன் (மறுபடியும்) சேர்ந்ததுபோல, **आसीत्** - இருந்தது.

(க-து) பரசுராமர் க்ஷத்ரியர்களை எல்லாம் வென்று பூமிமுழுவதையும் தனக்குரியதாகச் செய்து கொண்டார். பின் அவர் செய்த யாகத்தில் தக்ஷிணையாகப் பூமியைக் கச்யபர் என்ற முனிவருக்குக் கொடுத்தார். பரசுராமரிடமிருந்து பூமியைத் தானம்பெற்ற கச்யபர், அவரைத் தன் நிலம் விட்டுச்செல்ல வேண்டினார். தானம் செய்தபின்

அந்த நிலத்தில் வசிப்பது தகாதாகையால் பரசுராமர் ஸஹ்ய மலைக்கு வந்தார். அக்காலத்தில் ஸமுத்ரம் ஸஹ்ய மலையின் அடிவாரம்வரை இருந்தது. பரசுராமன் ஸமுத்ரராஜனிடம் ஸஹ்ய மலையிலிருந்து விலகித் தனக்கு நிலம் தருயபடி கேட்க, ஸமுத்ர ராஜன், பரசுராமரின் கோடரியை ஸமுத்ரத்தில் வீசி எறியும்படியும் அது எங்கு விழுகின்றதோ அதுவரை தான் விலகிச்சென்று இடம் தருவதாகவும் சொன்னான். பரசுராமர் பிறகு கோடாலியை வீசி எறிய, அதுவரை ஸமுத்ரம் விலகி இடம் தந்தது. பரசுராமரால் உண்டாக்கப்பட்ட காரணத்தால் இப்பொழுதும் மலையாளத்திற்குப் பரசுராம க்ஷேத்ரம் எனப் பெயர் இருக்கின்றது.

ரகுவினது சேனைகள் ஸஹ்ய மலைக்கும், கடலுக்கும் இடையிலுள்ள நாடு முழுவதும் பரந்து இருந்தன. சேனைக்கு ஒருபுறம் கடல்; மறுபுறம் மலை. இவ்விரண்டிற்கும் இடையிலே சென்று கொண்டிருநத சேனை, ஓயாது அலைவீசும் கடல்போல் இருந்தது. பரந்து கிடக்கின்ற சேனையைக் காண்பவர் மனத்தில், பரசுராமரால் ஸஹ்ய மலையினின்றும் விலக்கப்பட்ட ஸமுத்ரம், மறுபடியும் அம்மலையுடன் சேர்ந்து கொண்டதுபோல் தோன்றியது.

பரவியிருந்த நிலையிலும், ஓயாது சென்று கொண்டிருந்த நிலையிலும் ரகுவின் சேனை, அலைகளுடன் இருக்கும் கடலுக்கு ஒப்பிடப்பட்டுள்ளது.

भयोत्सृष्टविभूषाणां तेन केरलयोषिताम् ।
अलकेषु चमूरेणुश्चूर्णप्रतिनिधीकृतः ॥ ५४ ॥

**भयोत्सृष्टविभूषाणाम्**-பயத்தினால் ஆபரணங்களை விட்ட, **केरलयोषिताम्** - கேரள நாட்டு ஸ்திரீகளின், **अलकेषु** - முன்னுச்சிக்கேசங்களில், **चमूरेणुः** - சேனையின் புழுதியானது,

**तेन** - அந்த ரகுவினால், **चूर्णप्रतिनिधीकृतः** - வாசனைப் பொடிகளுக்குப் பதிலாகச் செய்யப்பட்டது.

(க-து) ரகுவின் படைகள் வருவதைக்கண்டு கேரளப் பெண்கள் அஞ்சினர். பயந்த அவர்களது மனம், ஆபரணங்களை அணிவதிலும் வாசனைப் பொடிகளை உபயோகித்து அழகு செய்து கொள்வதிலும் செல்லவேயில்லை. அணிகலன்களை விட்டனர். ரகுவின் படை கிளப்பிய புழுதி எங்கும் பரவிக் கேரள ஸ்திரீகளின் கூந்தலிலும் படிந்தது. அப்புழுதி, அவர்கள் உபயோகிக்கும் வாசனைப் பொடிக்குப் பதிலாக இருப்பது போலாயிற்று. கேரளம்—மலையாளம்.

मुरलामारुतोद्धूतमगमत्कैतकं रजः ।
तद्योधवारवाणानामयत्नपटवासताम् ॥ ५५ ॥

**मुरला मारुतोद्धूतम्** - முரளா என்ற நதியின் காற்றினால் தூவப்பட்ட, **कैतकं रजः** - தாழம்பூவின் மகரந்தப் பொடி, **तद्योधवारवाणानां** - ரகுவினுடைய வீரர்களின் சட்டைகளுக்கு, **अयत्नपटवासताम्** - முயற்சியின்றி(த் தானாகக்) கிடைத்த வாஸனைப் பொடியின் தன்மையை, **अगमत्** - அடைந்தது.

(க-து) கேரள நாட்டிலுள்ள முரளா நதியின் காற்று தூவிய தாழம்பூவின் மகரந்தப் பொடிகள், ரகுவின் சேனை வீரர்களின் உடைகளில் படிந்து அவைகளுக்கு வாசனை யளித்தன. அப்பொடிகள் முயன்று பெறப்பட்டன அல்ல; முயற்சியின்றித் தாமாகக் கிடைத்தன.

**पटवासः** - வஸ்திரங்களுக்கு வாசனை யளிப்பதற்காக உபயோகிக்கப்படும் வாசனைப்பொடி.

**वारवाणः** - சட்டை; உலோகத்தாலான கவசமென்ற பொருளும் உண்டு.

**मुरला** - மலையாளத்திலுள்ள ஒரு நதி; இப்பொழுது பாரதப் புழை என்ற பெயரால் அழைக்கப்படுவது என்பர்.

अभ्यभूयत वाहानां चरतां गात्रशिञ्जितैः ।
वर्मभिः पवनोद्धूतराजतालीवनध्वनिः ॥ ५६ ॥

**चरताम्** - செல்லுகின்ற, **वाहानाम्** - குதிரைகளுடைய, **गात्रशिञ्जितैः** - சரீரங்களில் ஒலிக்கின்ற, **वर्मभिः** - கவசங்களால், **पवन उद्धूत राजताली वनध्वनिः** - காற்றினால் அசைக்கப்பட்ட ராஜதாளி மரக்காடுகளின் (சலசலப்புச்) சத்தமும்- **अभ्यभूयत** - தோற்கடிக்கப்பட்டது.

(க-து) ரகுவின் குதிரைகள் கவசங்களுடன் சென்றன. அவை செல்லும்பொழுது கவசங்களிலிருந்து உண்டான சத்தம் மிக அதிகமா யிருந்தது. அவ்வொலி, அந்நாட்டிலுள்ள பனங்காட்டின் சத்தத்தையும் தோற்கடித்தது. பனங்காட்டில் பனை மட்டைகள் காற்றினால் உண்டாக்கும் சத்தத்தைக் காட்டிலும் குதிரைகள் செல்லும்பொழுது இரும்புக் கவசங்கள் உராய்வதால் உண்டாகும் சத்தம் அதிகமாயிருந்தது என்பது கருத்து. இதனால் குதிரைப் படையின் அளவு புலனாகும்.

**राजताली** - ஒருவகைப் பனை; இதன் மட்டைகள் மிகப் பெரியனவாக இருக்கும்.

खर्जूरीस्कन्धनद्धानां मदोद्गारसुगन्धिषु ।
कटेषु करिणां पेतुः पुंनागेभ्यः शिलीमुखाः ॥ ५७ ॥

**खर्जूरीस्कन्ध नद्धानाम्**-ஈச்ச மரங்களின் அடியில் கட்டப்பட்ட, **करिणाम्** - யானைகளின், **मदोद्गारसुगन्धिषु** - மதஜலப் பெருக்கால் வாசனையுள்ள, **कटेषु** - கன்னங்களில், **पुन्नागेभ्यः**- புன்னாக மரங்களின் புஷ்பங்களை விட்டு, **शिलीमुखाः** - வண்டுகள், **पेतुः** - வந்து அமர்ந்தன.

(க-து) ரகு, தனது யானைகளை அந்நாட்டில் வளர்ந்துள்ள ஈச்சமரங்களின் அடிப்பகுதியில் கட்டினான். யானைகளின் மதஜல வாசனை அதிகமாயிருந்ததால், மகிழ மரங்களிலுள்ள தேனீக்களும் மகிழம்பூக்களை விட்டு யானைகளின் கன்னங்களில் வந்து விழுந்தன.

இதனால் நாட்டின் இயற்கை யழகு ஒருவாறு புலனாவ துடன், பல யுத்தங்களுக்குப் பிறகும் யானைகள் மதம் குன் ருது, பலத்துடன் இருந்தன வென்பதும் அறியப்படும்.

புன்னுகம் :—புன்னை என்றும் கூறுவர்.

अवकाशं किलोदन्वान् रामायाभ्यर्थितो ददौ ।
अपरान्तमहीपालव्याजेन रघवे करम् ॥ ५८ ॥

**उदन्वान्** - ஸமுத்ரராஜன், **अभ्यर्थितः** - வேண்டப் பட்டு, **रामाय** - பரசுராமருக்கு, **अवकाशम्** - இடத்தை, **ददौ** - **किल**-கொடுத்தான் என்பது பிரசித்தம். **किं तु** ஆனால், **रघवे**-ரகுவிற்கு, **अपरान्त महीपाल व्याजेन** - மேல்நாட்டு மன்னர்க ளின் மூலம், **करम्** - கப்பத்தை, **ददौ** - கொடுத்தான்.

(க-து) பரசுராமர் கேட்டுக் கொண்டதால் ஸமுத்ரராஜன் அவருக்கு இடமளித்தான். ஆனால் ரகுவிற்கோ, அவன கேளாத பொழுதே, அவனிடம் பயந்தவனாய், ஸமுத்ரராஜன், மேலநாட்டு மன்னர்களின்மூலம் கப்பத்தைக் கொடுத்தான். இதனால் பரசுராம ரைக் காட்டிலும் ரகு சிறந்தவன் என்பது அறியப்படும்.

ரகு கொங்கணம் சென்றவுடன் அந்நாட்டு அரசர்கள் அவனை எதிர்த்துப் போரிடவில்லை. அவனுடைய பலத் தைக்கண்டு அஞ்சி அடிபணிந்துக் கப்பம் கொடுத்தனர். மேல் நாட்டரசர் பலரும் தம்மினத்தவருடன் பெருங்கூட்ட மாகக் கூடி நின்று ரகுவிற்குக் கப்பம் கட்டியதை, ஸமுத்ர ராஜனே பயந்து காணிக்கை கொடுத்ததாகக் கூறுகிறார் கவி. அவர்களது கூட்டம் ஸமுத்ரம்போல் விசாலமானதாக இருந்தமையால் ஸமுத்ரம் கப்பம் கட்டுவதாகக் கூறக் காரணமாயிற்று.

मत्तेभरदनोत्कीर्णव्यक्तविक्रमलक्षणम् ।
त्रिकूटमेव तत्रोच्चैर्जयस्तम्भं चकार सः ॥ ५९ ॥

**तत्र** - அந்நாட்டில், **रघुः** - ரகு, '**मत्त इभ रदन उत्कीर्ण**'- (தன்னுடைய) மதங்கொண்ட யானைகளின் தந்தத்தால் (உண்டாக்கப்பட்ட) வடுக்களாலான,—**व्यक्त विक्रम लक्षणम्**- தெளிவாகப் புலனாகின்ற — பராக்ரமக குறிகளையுடைய, **त्रिकूटम् एव** - திரி கூடம் என்ற மலையையே, **उच्चैः** - உன்னதமான, **जयस्तम्भं** - (தனது) வெற்றித் தூணாக, **चकार** - செய்தான்.

(க-து) அரசர்கள் தமது வெற்றிக்கு அறிகுறியாகத் தூண்களை நடுவர். அவைகளுக்கு ஜயஸ்தம்பம் எனப்பெயர். அவைகளில் தங்களது வெற்றியைப் பொறிப்பர். ரகு, மேலே நாட்டு வெற்றியைப் பொறிக்கத் தூண் ஒன்றும் நாட்டவில்லை. அந்நாட்டிலுள்ள திரிகூட மலையே அவனது வெற்றித் தூணாக இருந்தது. அம்மலையில் அவனது யானைகள் கொம்பினால் குத்தி உண்டாக்கின கீறல்களும் குழிகளுமே அவனுடைய வெற்றியை எடுத்துக்கூறும் எழுத்துக்களாக அமைந்தன. அவ்வடுக்கள் அவனது பெருமையை விளக்கத் தெளிவான குறிகளாக இருந்தன.

'மலையையும் குத்திக் குழிகளை யுண்டாக்கின, ரகுவின் யானைகள்' என்று கூறுவதால், யானைகளின் உயரம், பலம், ஊக்கம், மதம், விளையாடும் தன்மை முதலியனவும், அதன் மூலம் அவ் யானைகளுக்குத் தலைவனாயுள்ள ரகுவின் பெருமையும் விளங்கும்.

மேற்குத் தொடர்ச்சி மலைகளில் ஒன்று திரிகூடம்.

पारसीकांस्ततो जेतुं प्रतस्थे स्थलवर्त्मना ।
इन्द्रियाख्यानिव रिपूंस्तत्त्वज्ञानेन संयमी ॥ ६० ॥

**ततः**-பிறகு, **संयमी**-யோகி ஒருவர், **तत्त्वज्ञानेन** உண்மையறிவினால், **इन्द्रियाख्यान्** - புலன்கள் என்ற பெயருள்ள, **रिपून् इव** - பகைவர்களை ஒடுக்க விரும்புவதுபோல, **(सः)**,

அவன், **स्थलवर्त्मना** - தரைவழியாக. **रिपून्** - பகைவர்களான, **पारसीकान्** - பாரஸீக நாட்டரசர்களை, **जेतुम्** - ஜயிக்க, **प्रतस्थे** - புறப்பட்டான்.

(க-து) ரகு மேலை நாட்டு மன்னர்களை வென்றபின், பாரஸீக நாட்டரசர்களை வெல்ல விரும்பி, கடல்வழியாக அந்நாட்டுக்குச் செல்லலாமாயினும், அவன் தரை வழியாகவே சென்றான். ஏனெனில் தரை வழியாகச் செல்வது ஆபத்தற்றது. வெற்றியும் திண்ணமாகக் கிடைக்கும்.

யோகி ஒருவர் ஸித்திபெற வேண்டுமாயின் முதலில் புலன்களை அடக்கவேண்டும். ஆசைக்கு விஷயமான பொருள்களின் உண்மை நிலையை யறிந்து அவ்வறிவினால், பொருள்களை அனுபவிப்பதாலே வரும் குற்றங்களைக்கண்டு, அதன்மூலம் இந்திரியங்களை அடக்குவது எளிது. உண்மை யறிவினால் புலனடக்கம் ஏற்படுமாயின் அது ஸ்திரமாக இருக்கும். அவ்வாறின்றிப் பலாதகாரமாகப் புலனை யடக்கி யிருந்தால் எந்த நொடியிலும் புலன்கள் அடங்காது போகலாம். இவ்வகையில் பெறப்பட்ட அடக்கம் நிலையாக இராது. ஆகவே, யோகி ஒருவர், புலனை அடக்க விரும்புங்கால் உறுதியான உபாயமான தத்வ ஞானத்தைக் கொள்வதுபோல், ரகுவும், 'பாரஸீகர்களை வெல்லத தரைவழியே செல்வதுதான் திண்ணமாகக் கோரிய பயனை அளிக்கும் என நினைத்துத் தரைவழியே சென்றான்' என்று, அவன் தரை மார்க்கமாகச் சென்றதன் காரணம் உபமானத்தால் அறியப்படுகிறது. உரையாசிரியர் மல்லிநாதர் 'கடல் கடந்து செல்லுதல் சாஸ்திரங்களாலே தடுக்கப்பட்டுள்ளதால் ரகு, தரை வழியே சென்றான்' என்பர்.

இந்திரியஙகள் :—கண், மெய், வாய், மூக்கு, செவி, என அறிவுக்கான ஐந்தும் க்ஞானேந்திரியம் எனப்படும்.

கை, கால் முதலிய செயலுக்கானவைகளைக் கர்மேந்திரியம் என்பர்.

*பாரஸீகம் :—பாரத நாட்டிற்கு வடமேற்கில் உள்ளது.*

यवनीमुखपद्मानां सेहे मधुमदं न सः ।
बालातपमिवाब्जानामकालजलदोदयः ॥ ६१ ॥

**अकालजलद उदयः** - *அகாலத்தில் ஏற்பட்ட மேகத் தோற்றம்,* **अब्जानाम्** - *தாமரை மலர்களுக்கு (இருக்கின்ற),* **बालातपम् इव** - *இளம் வெய்யிலை (ஸஹிக்காதது) போல,* **सः**-*ரகு,* **यवनी मुख पद्मानाम्** - *யவன ஸ்திரீகளின் தாமரைப் புஷ்பம் போன்ற முகங்களுக்கு,* **मधुमदम्** - *மதுபானத்தினு லுண்டாகும் மதத்தை,* **न सेहे** - *ஸஹிக்கவில்லை.*

*(க-து) காலை வேளையில் சூரியன் உதயமானவுடன் தாமரை மலர்கின்றது. முன்பே செந்நிறம் பெற்றுள்ள தாமரைப் புஷ்பங் கள், சூரியனது இளம் வெய்யில் தொடும்பொழுது மிக அழகு பெறு கின்றன. அச்சமயம் திடீரென ஒரு மேகக் கூட்டம் தோன்றி வெய்யிலை மறைத்துத் தாமரைப்பூவின் மேல் படாது செய்யுமாயின் பூவின் அழகு சிறிதே குறையும்.*

*பாரஸீகப் பெண்களின் முகம் தாமரைப் புஷ்பம்போல் சிவந்து இயற்கையிலே அழகு வாய்ந்தது. அப்பெண்கள் மதுபானம் செய்வதால், முகம் மேலும் நிறம் பெற்று ஒளி யுடன் விளங்கும். ரகுவின் வரவைக் கேள்வியுற்ற பார ஸீகப் பெண்கள், அச்சத்தினால் மதுபானம் செய்வதைத் தவிர்த்தனர். அவர்களது முகம் சிறிது பொலிவிழந்து இருந்தது.*

*யவனர்கள்மேல் ரகு படை எடுத்ததற்குக் காரணம், 'அவன், யவன ஸ்திரீகள் மதுபானம் செய்து களிவெறி*

கொண்டிருப்பதை விரும்பவில்லை' எனக் கவி கற்பனை செய்கின்றார்.

யவன ஸ்திரீகளின் முகங்களுக்குத் தாமரை மலர்களும், மதுபானத்தினால் வரும் மதத்திற்கு இளம் வெய்யிலும், திடீரென வந்த ரகுவிற்கு, அகாலத்தில் வந்த மேகங்களின் தோற்றமும் உபமானங்களாம்.

பாரஸீகநாடு திராக்ஷைக்கும், திராக்ஷா ரஸத்திற்கும் பிரசித்தி பெற்றது. யவனர் :--இங்கு, பாரஸீகர்கள்.

सङ्ग्रामस्तुमुलस्तस्य पाश्चात्त्यैरश्वसाधनैः ।

शार्ङ्गकूजितविज्ञेयप्रतियोधे रजस्यभूत् ॥ ६२ ॥

**तस्य** - அந்த ரகுவிற்கு, **अश्वसाधनैः** - குதிரைப் படைகளையுடைய, **पाश्चात्यैः** - மேற்குதேசத்து அரசர்களான பாரஸீகர்களுடன், **तुमुलः** - உக்ரமான, **संग्रामः** - சண்டையானது, **शार्ङ्ग कूजित विज्ञेय प्रतियोधे** - வில்லின் (நாண்) ஒலியினால் அறியத்தகுந்த எதிர் வீரனையுடைய, **रजसि** - புழுதியில், **अभूत्** - உண்டாயிற்று.

(க-து) பாரஸீக நாட்டில் குதிரைகள் அதிகமானபடியால் பாரஸீகர்கள், குதிரைப்படை கொண்டு ரகுவுடன் போர் புரிந்தனர். அவர்கள் சண்டையிட்ட இடத்தில் ஏராளமாகப் புழுதி கிளம்பியதால் எதிரிலுள்ள எதிரியும் கண்களுக்குப் புலப்படவில்லை. எதிர் வீரனின் நாணொலி மூலமே,'முன்னே பகைவன் இருக்கிறான்' என அறிய முடிந்தது. கண் பார்வையை மறைக்கும்படி அவ்வளவு புழுதி, யுத்த பூமியில் கிளம்பியது.

भल्लापवर्जितैस्तेषां शिरोभिः श्मश्रुलैर्महीम् ।

तस्तार सरघाव्याप्तैः स क्षौद्रपटलैरिव ॥ ६३ ॥

**सः** - அந்த ரகு, **भल्लापवर्जितैः** - பல்லம் என்ற ஒரு வகைப் பாணங்களால் அறுக்கப்பட்டவைகளும், **श्मश्रुलैः** - தாடியுடையவையும், **सरघाव्याप्तैः** - தேனீக்கள் பரவியுள்ள, **क्षौद्रपटलैः इव (स्थितैः)**-தேன் அடைகள்போல் இருப்பவையுமான, **तेषां** - அப்பாரஸீகர்களின், **शिरोभिः** - தலைகளால், **महीम्** - தரையை, **तस्तार** - மூடினான்.

(க-து) ரகு, பாரஸீகர்களின் தலையை அறுத்துத் தள்ளித் தரையை மூடினான். தரையெங்கும் பாரஸீகர்களின் தலைகள் கிடந்தன ; பாரஸீகர்கள், தலையின் மேல்புறத்தை மழுங்கச் சிரைத்துத் தாடி வளர்ப்பவர்கள். ஒருபுறம் ஒன்று மில்லாதும், மறுபுறம் தேனீக்கள் கூட்டமாக மொய்த்துக்கொண்டு தொங்கும்படியும் இருக்கின்ற தேனடைகளைக் கவி, அவர்களுடைய தாடியுள்ள முகங்களுக்கு உபமானமாகக் கூறுவது மிகவும் பொருத்தமானதாகும்

"தேனீக்கள் நிறைந்த தேனடைகளால் தரையை மூடுவதுபோல் பாரஸீகர்களின் தலைகளால் தரையை மறைத்தான்" என்றும் பொருள் கொள்ளலாம்.

பல்லம் :—பிறைச்சந்திரன் போல் முனையுள்ள பாணம்.

अपनीतशिरस्त्राणाः शेषास्तं शरणं ययुः ।
प्रणिपातप्रतीकारः संरम्भो हि महात्मनाम् ॥ ६४ ॥

**शेषाः** - (கொல்லப்படாது) எஞ்சியவர்கள், **अपनीतशिरस्त्राणाः** - தலைப்பாகைகளை எடுத்துவிட்டு, **तं** - அவனை, **शरणं ययुः** - சரணமடைந்தனர். **महात्मनाम्** - பெருமனம் படைத்தவர்களின், **संरम्भः** - கோபம், **प्रणिपातप्रतीकारः** - கும்பிடுதலையே பரிகாரமாக உடையது, **हि** - அல்லவா ?

(க-து) கொல்லப்படாது எஞ்சிய பாரஸீகர்கள், 'மஹான்களைக் கும்பிட்டால் அவர்களது கோபம் தணிந்துவிடும்' என்பதை அறிந்து,

ரகுவின் கோபத்தைத் தணிக்கக்கருதி அவனைத் தஞ்சமடைந்தனர். ரகு, கோபம் நீங்கிச் சண்டையை நிறுத்தினன்.

தலைப்பாகையை எடுப்பது மரியாதைக்கான செயல் போலும்!

**शिरस्त्राणम्** 'இரும்பினுலான தலைமூடி' என்றும் கொள்ளலாம்.

विनयन्ते स्म तद्योधा मधुभिर्विजयश्रमम् ।
आस्तीर्णाजिनरत्नासु द्राक्षावलयभूमिषु ॥ ६५ ॥

**तद्योधाः** - ரகுவின் போர் வீரர்கள், **आस्तीर्ण अजिन, रत्नासु** - விரிக்கப்பட்ட சிறந்த தோல்களையுடைய, **द्राक्षावलयभूमिषु** - திராக்ஷைக் கொடிகள் நிறைந்த இடங்களில், **विजय श्रमम्** - வெற்றியினுல் உண்டான களைப்பை, **मधुभिः** - திராக்ஷ ரஸங்களால், **विनयन्ते स्म** - நீக்கிக் கொண்டனர்.

(க-து) போர் ஓய்ந்தவுடன், ரகுவின் வீரர்கள், திராக்ஷைத் தோட்டங்களில் தரையில் தோலை விரித்து யவனர்கள் நல்ல இருக்கையைத் தயார் செய்ய, அதன்மேல் அமர்ந்து, திராக்ஷா ரஸத்தைப் பருகி, யுத்த சிரமத்தைப் போக்கிக் கொண்டனர்.

ततः प्रतस्थे कौबेरीं भास्वानिव रघुर्दिशम् ।
शरैरुस्रैरिवोदीच्यानुद्धरिष्यन् रसानिव ॥ ६६ ॥

**ततः** - பிறகு, **भास्वान् इव** - சூரியன் போன்ற, **रघुः**-ரகு, **उस्रैः इव** - கிரணங்களைப் போன்ற, **शरैः** - பாணங்களால், **रसान् इव** - ஜலம்போன்ற, **उदीच्यान्**-வடதிசை மன்னர்களை, **उद्धरिष्यन्** - எடுக்கப் போகின்றவனுக (அழிக்கப் போகின்றவனுக), **कौबरीम्** - குபேரனுடையதான, **दिशम्** - (வடக்குத்) திசையை நோக்கி, **प्रतस्थे** - புறப்பட்டான்.

(க-து) வடமேற்கிலுள்ள அரசர்களை எல்லாம் வென்றபின் வடதிசையிலுள்ள அரசர்களை ஜயிக்க விரும்பி அத்திசையைநோக்கிச்

சென்றான் ரகு திக் பாலகர் எண்மரில் ஒருவனான குபேரன் பாதுகாக்கும் திசை அது. உத்தராயணயத்தில் சூரியன் வடதிசையில் செல்லுகின்றான். ஸூர்யனைப்போல் வடக்குத் திசையில் சென்ற ரகுவும் அத்திசையிலுள்ள அரசர்களை வற்ற அடிக்க முற்பட்டான்.

विनीताध्वश्रमास्तस्य सिन्धुतीरविचेष्टनैः ।
दुधुवुर्वाजिनः स्कन्धाँल्लग्नकुङ्कुमकेसरान् ॥ ६७ ॥

**सिन्धुतीर विचेष्टनैः** - ஸிந்து என்ற நதியின் கரையில் புரளுவதால், **विनीताध्व श्रमाः** - போக்கப்பட்டவழி (நடை)க் களைப்பை யுடையவைகளான, **तस्य वाजिनः** - அவனுடைய குதிரைகள், **लग्न कुङ्कुमकेसरान्** - குங்குமப்பூவின் கேஸரங்கள் ஒட்டிக்கொண்ட, **स्कन्धान्** - பிடரிகளை, **दुधुवुः** - உதறின.

(க-து) குதிரைப்படையை மிகவும் கொண்ட பாரஸீகர்களுடன் செய்தயுத்தத்தில் ரகுவின் குதிரைகளுக்கு அதிகம் வேலை யிருந்தது. மேலும், வழிநடையினாலும் அவைகள் சிரமமடைந்திருந்தன. ஆகையால் ஸிந்து நதிக்கரையில் குங்குமப்பூவின் கேஸரங்கள் விழுந்துள்ள மணற்பாங்கான இடங்களிலே புரண்டு தங்களது சிரமத்தைப் போக்கிக் கொண்டன. பிடரியில் ஒட்டிய குங்குமப்பூவின் கேஸரங்களை அக்குதிரைகள் எழுந்த பின் உதறின.

இச்சுலோகத்தில் குதிரைகள் களைப்பை நீக்கிக் கொள்ளும் வகை கூறப்பட்டுள்ளது. மேலும், குதிரைகளின் பிடரியில் ஒட்டும்படி குங்குமப்பூ சிதறிக் கிடந்ததென்பதால் நாட்டின் வளமும் புலனாகும்.

இங்கு கூறப்பட்டுள்ள 'ஸிந்து' என்பது காஷ்மீரத்திலுள்ள ஒரு நதி என மல்லிநாதர் கூறுகின்றார். ஸிந்து நதியின் உத்பத்தி ஸ்தானத்திற்கு அருகிலுள்ள இடமாக இருப்பினும் இருக்கலாம்.

तत्र हूणावरोधानां भर्तृषु व्यक्तविक्रमम् ।
कपोलपाटलादेशि बभूव रघुचेष्टितम् ॥ ६८ ॥

**तत्र** - அத்திசையில், **भर्तृषु** - (ஹூண ஸ்திரீகளின்) கணவன்மார்களிடத்தில், **व्यक्त विक्रमम्** - காண்பிக்கப்பட்ட பராக்ரமமுடைய, **रघुचेष्टितम्** - ரகுவின் செயல், **हूणावरोधानाम्** - ஹூண ராஜர்களின் ஸ்திரீகளுடைய, **कपोलपाटलादेशि**-கன்னங்களுக்குச் சிவப்பு நிறமளிப்பதாக, **बभूव** - இருந்தது.

(க-து) ரகு தனது பராக்ரமத்தை ஹூணர்களிடம் செலுத்தினான். அவர்களில் பலர் கொல்லப்பட்டனர். கணவன்மார் இறந்ததால் ஹூண ஸ்திரீகள், முகத்தில் அறைந்துகொண்டு புலம்பினர். அதனால் அவர்களுடைய கன்னங்கள் சிவந்தன. இவ்வகையில் ரகுவின் பராக்ரமம் ஹூணப் பெண்களின் கன்னத்தில் சிவப்பு நிறத்தைக் கொடுப்பதாக ஆயிற்று.

ஹூணர்கள், ஸிந்துநதிக் கரையில் குடியேறி இருந்த ஒரு கூட்டத்தினர்; இந்நாட்டவரல்லர். ரகு காலத்தில் ஹூணர்கள் நாட்டில் இருந்ததாகக் கூறுவது காலப் பொருத்தமற்றதாகும்.

काम्बोजाः समरे सोढुं तस्य वीर्यमनीश्वराः ।
गजालानपरिक्लिष्टैरक्षोटैः सार्धमानताः ॥ ६९ ॥

**समरे** - யுத்தத்தில், **तस्य** - அவனுடைய, **वीर्यम्** - பராக்ரமத்தை, **सोढुम्** - ஸஹிக்க, **अनीश्वराः** - சக்தியற்றவர்களான, **काम्बोजाः** - காம்போஜ தேச அரசர்கள், **गजालानपरिक्लिष्टैः**-(ரகுவின்) யானைகளைக் கட்டியதால் கஷ்டமடைந்த,

**अक्षोटैः सार्धम्** - அக்ஷோடமரங்களுடன், **आनताः** - வணங்கினர்.

(க-து) ரகு, பின் காம்போஜ நாடு சென்றான். அந்நாட்டிலே உள்ள அக்ஷோட மரங்கள், அவனது யானைகளைக் கட்டத் தூண்களாக இருந்தன. யானைகளால் இழுக்கப்பட்ட அம்மரங்கள் வளைந்தன. ரகுவினது பராக்ரமத்தைத் தாங்கமுடியாது காம்போஜ நாட்டு மன்னர்களும் வணங்கினர்.

அக்ஷோடம்:—மரவகையில் ஒன்று.

तेषां सदश्वभूयिष्ठास्तुङ्गा द्रविणराशयः ।
उपदा विविशुः शश्वन्नोत्सेकाः कोसलेश्वरम् ॥ ७० ॥

**सदश्वभूयिष्ठाः**-நல்ல (ஜாதிக்) குதிரைகளை மிகுதியாகக் கொண்ட, **तुङ्गाः द्रविणराशयः**-உயரமான பொற் குவியல்கள், **तेषां** - அக்காம்போஜர்களின், **उपदाः** - காணிக்கைகளாக, **शश्वत्** - அடிக்கடி, **कोसलेश्वरम्** - ரகுவை, **विविशुः**-அடைந்தன; **उत्सेकाः** - கர்வங்கள், **न** - அடையவில்லை.

(க-து) பணிந்த காம்போஜர்கள் நல்ல ஜாதிக் குதிரைகளையும் பொற் குவியல்களையும் ரகுவிற்குக் கப்பமாக அளித்தனர். அவர்கள் சிறிதும் கர்வம் கொள்ளவில்லை. ரகுவும், அவர்களை வென்றமை குறித்தும் ஏராளமான கப்பம் பெற்றமை குறித்தும் கர்வம் அடையவில்லை.

ततो गौरीगुरुं शैलमारुरोहाश्वसाधनः ।
वर्धयन्निव तत्कूटानुद्धूतैर्धातुरेणुभिः ॥ ७१ ॥

**ततः** - பிறகு, **अश्वसाधनः** - குதிரைகளை மாத்திரமே ஸாதனங்களாகக் கொண்ட ரகு, **गौरीगुरुम्** - பார்வதியின்

தந்தையான, शैलम् - மலையை, उद्धूतैः - கிளப்பப்பட்ட, धातुरेणुभिः - தாதுக்களின் பொடிகளால், तत्कूटान् - அம் மலையின் சிகரங்களை, वर्धयन् इव - விருத்தி செய்பவன் போல், आरुरोह - ஏறினன்.

(க-து) மலைகளில் ரதங்களுடன் செல்வது முடியாதாகையால், ரகு, குதிரைகளுடன் மாத்திரமே ஹிமயமலையில் ஏறினன். அவனது குதிரைகள் கிளப்பிய தாதுப் பொடிகள், ஹிமயமலையின் சிகரங்களில் படிந்து அவைகளை மிக உயரமானவைகளாகச் செய்து விடுவன போல் அவ்வளவு அதிகமாக இருந்தன.

शशंस तुल्यसत्त्वानां सैन्यघोषेऽप्यसंभ्रमम् ।
गुहाशयानां सिंहानां परिवृत्यावलोकितम् ॥ ७२ ॥

(सः) - அவன், सैन्यघोषेऽपि - சேனையின் சத்தமிருக்கும்பொழுதும், तुल्यसत्त्वानाम् - (தனக்குச்) சமமான மனோபலமுடையவைகளும், गुहाशयानां-குஹைகளில் படுத்திருப்பவையுமான, सिंहानाम् - சிங்கங்களின், असंभ्रमं - பயமற்றதாயிருக்கும்படி, परिवृत्य - (தலையைத்) திருப்பி(ச் செய்யப்பட்ட),-अवलोकितम् - பார்வையை, शशंस - புகழ்ந்தான்.

(க-து) ரகுவின் சேனைகள் மலையில் ஏறியபொழுது பெரும் சத்தமிட்டுக்கொண்டு சென்றன. அச்சத்தை யுண்டாக்கும் அச்சத்தத்தைக்கேட்டும் ஹிமாலயத்தின் குஹைகளில் இருந்த சிங்கங்கள் சிறிதும் பரப்பரப்பின்றி, தைரியத்துடன் தலையைச் சிறிதே திருப்பிச் சேனையை நோக்கின. ரகு, தன்னைப்போல மனோபலத்துடன் இருக்கின்ற சிங்கங்களின் மனத்திண்மையை, அவைகளின் பார்வையைக் கொண்டு அறிந்து, மெச்சினன்.

இச்சுலோகத்திற்கு மல்லிநாதர் கூறும் பொருள்: "சேனைகளுக்குச் சமமான பலமுடையவைகளும், குகை யில் படுத்திருப்பனவுமான சிங்கங்களின் பார்வை, ஸேனை யின் ஆரவாரமிருக்கும் பொழுதும் அவைகளின் மனங் குழம்பாத நிலையைக் காட்டியது" என்பதாம்.

भूर्जेषु मर्मरीभूताः कीचकध्वनिहेतवः ।
गङ्गाशीकरिणो मार्गे मरुतस्तं सिषेविरे ॥ ७३ ॥

**भूर्जेषु** - பூர்ஜ விருக்ஷத்தின் இலைகளில், **मर्मरीभूताः** - 'மர்மர' சத்தமுண்டாக்கியவையும், **कीचक ध्वनि हेतवः** - மூங்கில்களில் நாதமெழக் காரணமானவையும், **गङ्गाशी-करिणः** - கங்கையின் நீர்த்துளிகளையுடையனவுமான, **मरुतः**- காற்றுக்கள், **मार्गे** - வழியில், **तम्** - அவனை, **सिषेविरे** - உப சரித்தன.

(க-து) ஹிமாலயத்தில் வீசிய குளிர்ந்த காற்று அவனுக்கு ஸுகமுண்டாக்கியது. காய்ந்த பூர்ஜ இலைகளின்மேல் வீசும் பொழுது, காற்று மர்மர சத்தமுண்டாக்கியது. மூங்கிற்காட்டின் வழியே வரும்பொழுது அவைகளிலே இனியநாதம் எழும்படி செய் தது. கங்கா ஜலத்தின் சிறு திவலைகளைக் கொண்டு வந்த அக்காற்று 'குளிர்ந்து' இருந்தது.

பூர்ஜம் :—ஒருவகை மரம்.

विशश्रमुर्नमेरूणां छायास्वध्यास्य सैनिकाः ।
दृषदो वासितोत्सङ्गा निषण्णमृगनाभिभिः ॥ ७४ ॥

**सैनिकाः** - போர் வீரர்கள், **नमेरूणाम्** - நமேரு மரங் களின், **छायासु**-நிழல்களில், **निषण्णमृगनाभिभिः**-படுத்திருந்த

கஸ்தூரி மான்களின் கஸ்தூரிகளால், **वासितोत्सङ्गाः**-வாசனை பூட்டப்பெற்ற இடங்களையுடைய, **दृषदः** - பாறைகளின்மேல், **अध्यास्य** - உட்கார்ந்து, **विशश्रमुः** – சிரம பரிஹாரம் செய்து கொண்டனர்.

(க-து) ரகுவின் வீரர்கள், நமேரு மரங்களின் நிழலில் கற் பாறைகள்மேல் இருந்து களைப்பாறினர். வீரர்கள் அமர்வதற்குமுன் அப்பாறைகளின் மேல் கஸ்தூரிமான்கள் படுத்திருந்ததால் பாறைகள் கஸ்தூரி வாசனையுடையனவாக இருந்தன.

நல்ல நிழலும், வாசனைபொருந்திய இடமும், குளிர்ந்த காற்றும், அருகிலே கங்கா நதியுமுடைய ரகுவின் வீரர்கள் எளிதில் சிரமத்தை நீக்கிக் கொண்டனர்.

सरलासक्तमातङ्गग्रैवेयस्फुरितत्विषः ।
आसन्नोषधयो नेतुर्नक्तमस्नेहदीपिकाः ॥ ७५ ॥

**'सरल आसक्त मातङ्ग ग्रैवेय'** - ஸரள மரங்களில் கட்டப்பட்டுள்ள யானைகளின் கழுத்துச் சங்கிலிகளில், **स्फुरित-त्विषः** - பிரதிபலிக்கின்ற ஒளியையுடைய, **ओषधयः** - ஒரு வகைச் செடிகள், **नेतुः** - தலைவனை ரகுவிற்கு, **नक्तम्** - இரவிலே, **अस्नेहदीपिकाः**- எண்ணெ யில்லா விளக்குகளாக **आसन्** - இருந்தன.

(க-து) ஹிமாலயத்தில் ரகு தங்கி யிருந்தபொழுது, அங்குள்ள ஒளிருகின்ற ஒருவகைச் செடிகளே இரவுக் காலங்களில் எண்ணெ யில்லாது ஒளிதரும் விளக்குகளாக இருந்தன. ஓஷதிகளின் ஒளி, ஸரள மரத்தில் கட்டப்பட்டுள்ள யானைகளின் கழுத்துச் சங்கிலி களில் பிரதி பலித்தன. அதனால் பிரகாசம் அதிகமாக இருந்ததெனலாம்.

ஸரளம் :—தேவதாரு இனத்தைச் சேர்ந்த ஒருவகை மரம்.

तस्योत्सृष्टनिवासेषु कण्ठरज्जुक्षतत्वचः ।
गजवर्ष्म किरातेभ्यः शशंसुर्देवदारवः ॥ ७६ ॥

**उत्सृष्ट निवासेषु**-(வசித்தபின் ரகு) விட்டு நீங்கிய இடங்களில், **कण्ठरज्जु क्षत त्वचः** - கழுத்துச் சங்கிலிகளால் நசுக்கப்பட்ட பட்டைகளையுடைய, **देवदारवः** - தேவதாரு மரங்கள், **तस्य** - ரகுவின், **गजवर्ष्म** - யானைகளின் உயரத்தை, **किरातेभ्यः** - (அங்கு வந்த) வேடர்களுக்கு, **शशंसुः** - சொல்லின.

(க-து) ரகு தங்கியபின் விட்டுச்சென்ற இடங்களுக்கு வந்த வேடர்கள் அவ்விடங்களிலே, யானை கட்டிய தேவதாருவின் பட்டை உரிக்கப்பட்டுள்ள உயரத்திலிருந்து யானையின் உயரத்தை அறிந்தனர். ரகுவின் யானைகள் மிக உன்னதமாக இருந்தன. அவைகள், தம் கழுத்தைத் தேவதாரு மரத்தில் தேய்த்துக் கொண்டபொழுது யானைகளின் உயரத்திற் கேற்ப மரங்களின் உயரமான பாகத்திலேயே பட்டையும் உரிக்கப்பட்டிருந்தது. பட்டை உரிபட்டுள்ள உயரமே யானையின் உயரத்திற்கும் அளவாயிருந்தது.

வேடர்கள், ரகு தங்கியிருந்த இடங்களுக்குத் தம்மிச்சையாக வந்திருக்கலாம். அல்லது, பயந்து, ரகு வரும்பொழுது ஓடிப்போய், அவன் நீங்கியபின் வந்திருக்கலாம். அல்லது, முதலில் ரகுவின் வருகையை யறியாது அவன் சென்ற வழியைக் கவனித்துப் பின் அவனைத் தொடர்ந்து அவன் பின்னால் வருபவர்களாகவும் இருக்கலாம். இவ்

வேடர்கள் ரகுவுடன் சண்டையிட்டதாகவோ, சரண மடைந்ததாகவோ கூறப்படவில்லை.

तत्र जन्यं रघोर्घोरं पर्वतीयैर्गणैरभूत् ।
नाराचक्षेपणीयाश्मनिष्पेषोत्पतितानलम् ॥ ७७ ॥

**तत्र**-அந்த ஹிமயமலையில், **रघोः**-ரகுவிற்கு, **पर्वतीयैः**-மலைவாஸிகளான, **गणैः**-கூட்டங்களோடு, **नाराच क्षेपणीयाश्म-निष्पेष-उत्पतित अनलम्** - இரும்பு பாணங்களும் கவண் கற்களும் மோதுவதால் தோன்றிய தீயையுடைய, **घोरम्**-பயங்கரமான, **जन्यम्** - சண்டையானது, **अभूत्** - உண்டாயிற்று.

(க-து) ரகுவுடன் பர்வத வாஸிகளின் கூட்டங்கள் சண்டையிட்டன. பர்வத வாஸிகள் கவண்மூலம் கற்களை எறிந்து போர் செய்தனர். ரகுவின் வீரர்கள், முழுவதும் இரும்பாலான பாணங்களால் தாக்கினர். பாணங்களும் கற்களும் மோதித் தீ எழுந்ததால் யுத்தம் மிக பயங்கரமானதாக இருந்தது.

**क्षेपणीय** - கவண்; **अश्म** - கல்.

शरैरुत्सवसंकेतान् स कृत्वा विरतोत्सवान् ।
जयोदाहरणं बाह्वोर्गापयामास किन्नरान् ॥ ७८ ॥

**सः** - அவன், **उत्सव संकेतान्** - உத்ஸவர், ஸங்கேதர் என்ற கூட்டங்களை, **विरतोत्सवान्** - களிப்பற்றவர்களாக, **कृत्वा**-செய்தபின், **बाह्वोः**-தனது தோள்களின், **जयोदाहरणम्**-வெற்றியைக் கூறும் பாடலை, **किन्नरान्** - கின்னரர்களைக் கொண்டு, **गापयामास** - பாடச் செய்தான்.

(க-து) ரகு, உத்ஸவர் ஸங்கேதர் என்ற கூட்டத்தினரை வென்றான். அவனது புகழைப் பாட்டில் அமைத்து, ஹிமாலயத்தில் வசித்த தேவஜாதியினரான கின்னரர்கள் பாடினர்.

परस्परेण विज्ञातस्तेषूपायनपाणिषु ।
राज्ञा हिमवतः सारो राज्ञः सारो हिमाद्रिणा ॥ ७९ ॥

**तेषु** - அக்கூட்டத்தினர், **उपायनपाणिषु** - காணிக்கைகளை கையில் ஏந்தியவராய் இருந்தபொழுது, **राज्ञा**-அரசன் ரகுவினால், **हिमवतः** - ஹிமய பர்வதத்தின், **सारः** - செல்வமும், **हिमाद्रिणा** - ஹிமய மலையால், **राज्ञः** - ரகுவினுடைய, **सारः** - பராக்ரமமும், **परस्परम** - ஒருவர்க்கொருவரால், **विज्ञातः** - நன்கு அறியப்பட்டன.

(க-து) வெல்லப்பட்ட பர்வத வாஸிகள், ஹிமய மலையில் கிடைக்கும் சிறந்த பொருள் எல்லாவற்றையும் காணிக்கையாகக் கொண்டு வந்தனர். அவைகளைக் கண்டபின்பே ரகு, ஹிமாலயத்தின் செல்வம் முழுவதையும் அறிந்தான். மலையிலே வசித்த பலமுள்ள கூட்டத்தினரை வென்றதால் ரகுவின் பலத்தை ஹிமாலயமும் உணர்ந்தது.

ஹிமாலயத்திலுள்ள ஜனங்களும் ரகுவின் பராக்ரமத்தை அறிந்தனர் என்பது கருத்து.

तत्राक्षोभ्यं यशोराशिं निवेश्यावरुरोह सः ।
पौलस्त्यतुलितस्याद्रेरादधान इव ह्रियम् ॥ ८० ॥

**सः** - ரகு, **तत्र** - அங்கு, **अक्षोभ्यम** - அசைக்கமுடியாத, **यशोराशिम्** - புகழின் குவியலை, **निवेश्य** - வைத்து (அதன்

மூலம்), **पौलस्त्य तुलितस्य** - ராவணனால் அசைக்கப்பட்ட, **अद्रेः**- (கைலாய) மலைக்கு, **ह्रियं** - வெட்கத்தை, **आदधानः इव**- உண்டாக்குபவன்போல், (அதனிடம் செல்லாது), **अवरुरोह** - இறங்கினான்.

(க-து) ரகு, ஹிமாலயத்தில் வெண்மையான (தனது) புகழ்க் குன்றை நாட்டினான். அவனது புகழை யாரும் அசைக்க முடியாது. கைலாசமலை, ரகுவின் புகழ்போல் வெண்மையா யிருப்பினும் அசைக்கப்படாமல் இருந்ததில்லை. ராவணனால் ஒரு சமயம் அசைக் கப்பட்ட காரணத்தால், அவன், கைலாசமலையும் ரகுவின் புகழ்மலை யைக் கண்டு வெட்கப்படும் நிலையை உண்டாக்கியவன் போலிருந் தான். ரகு அவனது புகழ்க்குன்றே கயிலையை வென்றதால் கைலாச மலைக்குச் செல்லவில்லை என்பது கருத்து.

ராவணன் அசைத்த மலையை நோக்கிச் செல்வது தனது கௌரவத்திற்குத் தாழ்வென வெண்ணி ரகு கைலாச மலைக்குப் போகவில்லை என்றும் கொள்ளலாம்.

ராவணன் கைலாசத்தை அசைத்த வரலாறு :—

ஒரு சமயம் ராவணன் திக் விஜயத்திற்காக விமானத் தில் சென்றான். விமானம் கைலாஸகிரியின் அருகில் சென்றபொழுது மேற் செல்லாமல் தடைபெற்று நின்றது. நந்திகேசுவரர், சிவபிரான் வசிக்கும் காரணத் தால் கைலையங்கிரிக்கு மேல் விமானம் செல்லாதென்றும் விலகிச் செல்லும்படியும் அவனுக்குக்கூற, அவன் கோபம் கொண்டு, மலையையே பெயர்த்தெறிந்து வழிசெய்து கொள் வதாகக் கூறித் தனது இருபது கைகளையும் உபயோகித்து மலையைத் தூக்க முயன்றான். சிவபிரான் இடது கால்

விரலால் மலையை அழுத்தவும் ராவணனது கைகள் மலையின்கீழ் அகப்பட்டுக் கொண்டன. பின் சிவபிரானைத் துதித்து விடுதலை பெற்றான் ராவணன்.

பௌலஸ்த்யன் : புலஸ்த்ய முனிவரின் வம்சத்தில் பிறந்தவன் : ராவணன்.

चकम्पे तीर्णलौहित्ये तस्मिन् प्राग्ज्योतिषेश्वरः ।
तद्गजालानतां प्राप्तैः सह कालागुरुद्रुमैः ॥ ८१ ॥

**तस्मिन्** - அந்த ரகு, **तीर्णलौहित्ये** - லௌஹித்யா நதியைக் கடந்தபொழுது **प्राग्ज्योतिषेश्वरः** - பிராக்ஜ்யோதிஷம் என்ற நாட்டின் அரசன், **तद्गज आलानतां** - ரகுவின் யானைகளுக்குக் கட்டுத்தறிகளாய் இருக்கும் நிலையை, **प्राप्तैः** - அடைந்த, **कालागुरु द्रुमैः** - காரகில் மரங்களுடன், **चकम्पे** - நடுங்கினான்.

(க-து) ரகு, லௌஹித்யா நதியைக் கடந்தவுடனேயே ப்ராக்ஜ்யோதிஷ மன்னன் நடுங்கினான். அந்நாட்டிலுள்ள காரகில் மரங்கள் ரகுவின் யானைகளைக் கட்டத் தூண்களாக இருந்தன. யானைகள் இழுத்தபொழுதெல்லாம் அம்மரங்கள் அசைந்தன. அம்மரங்களோடு ஒப்ப அரசனும் அஞ்சி நடுங்கினான்.

கைலாஸமலையிலுள்ள லோஹிதம் என்ற ஸரஸிலிருந்து தோன்றியதால் பிரம்மபுத்ர நதிக்குப் லௌஹித்யா எனப்பெயர்.

ப்ராக்ஜ்யோதிஷம் என்பதைத் தற்காலத்து கௌஹாதி நகராகக் கருதுகின்றனர் இஃது காமரூபம் என்ற நாட்டிற்

குத் தலைநகர். காமரூபம், இப்பொழுது அஸ்ஸாம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது.

न प्रसेहे स रुद्धार्कमधारावर्षदुर्दिनम् ।
रथवर्त्मरजोऽप्यस्य कुत एव पताकिनीम् ॥ ८२ ॥

**सः** - பிராக்ஜ்யோதிஷ அரசன், **रुद्धार्कम** - மறைக்கப்பட்ட ஸூரியனையுடையதும், **अधारा वर्ष दुर्दिनम्** - மழை பொழிதலின்றியே இருண்ட பகலையுடையதுமான, **अस्य** - ரகுவின், **रथवर्त्मरजः अपि** - தேர்வழியிலுண்டான புழுதியையும்கூட, **न सेहे** - தாங்கவில்லை; **पताकिनीम्** - ஸேனையை, **कुतः एव** - எவ்வாறுதான் ஸஹித்திருப்பான்?

(க-து) பிராக்ஜ்யோதிஷ மன்னன், ரகுவின் ரதப் புழுதியையும் தாங்க வல்லமையற்றவனா யிருந்தான். அப்புழுதி ஸூரியனையும் மறைத்தது. மழை மேகம் இரண்டுமில்லாத பொழுதும்கூட அப்புழுதிகளால் ஆகாசம் நிறைந்து பகற்பொழுது இருண்டிருந்தது. புழுதியையும் ஸஹிக்க முடியாத அவ்வரசன், ஸேனையின் எதிர்ப்பைத் தாங்கக்கூடவில்லை என்பது கூறவேண்டுவதன்று.

**दुर्दिनम** - மேகம் மூடிச் சூரியன் தென்படாத நாள்.

तमीशः कामरूपाणामत्याखण्डलविक्रमम् ।
भेजे भिन्नकटैर्नागैरन्यानुपरुरोध यैः ॥ ८३ ॥

**कामरूपाणाम्** - காமரூப நாட்டின், **ईशः** - அரசன், **भिन्नकटैः** - மதம்கொண்ட, **यैः** - எந்த, **नागैः** - யானைகளால், **अन्यान्** - மற்றவர்களை, **उपरुरोध** - தகைந்தானோ, **तैः** - அந்த யானைகளைக் கொண்டே, **अत्याखण्डलवि क्रमम्** - இந்திர

னுடைய பராக்கிரமத்தையும் விஞ்சிய பராக்ரமமுடைய, **तम्** - ரகுவை, **भेजे** - கௌரவித்தான்.

(க-து) காமரூப மன்னன் யானைப்படை யுடையவன். அதன் உதவி கொண்டு அவன் பல அரசரையும் வென்றவன். அத்தகைய காமரூப மன்னன், தனது சிறந்த யானைகளை ரகுவிற்குக் கொடுத்து அவனை உபசரித்தான்.

कामरूपेश्वरस्तस्य हेमपीठाधिदेवताम् ।
रत्नपुष्पोपहारेण छायामानर्च पादयोः ॥ ८४ ॥

**कामरूपेश्वरः** - காமரூபராஜன், **हेमपीठाधिदेवताम्** - பொன்மயமான பாதபீடத்திற்குத் தெய்வமாயிருப்பதும், **तस्य** - ரகுவின், **पादयोः** - பாதங்களுடையதுமான, **छायाम्** - காந்தியை, **रत्नपुष्प-उपहारेण** - ரத்னங்களாகிற புஷ்பங்களை அர்ப்பணம் செய்வதால், **आनर्च** - அர்ச்சித்தான்.

(க-து) காமரூபராஜன் ரத்னங்களைப் புஷ்பங்களுக்குப் பதிலாக உபயோகித்து ரகுவின் பாதங்களை அர்ச்சித்தான். அவனது பாதங்களின் காந்தி, பொன்மயமான பீடத்தின் அதிதேவதையாக இருந்தது.

इति जित्वा दिशो जिष्णुर्न्यवर्तत रथोद्धतम् ।
रजो विश्रामयन् राज्ञां छत्रशून्येषु मौलिषु ॥ ८५ ॥

**जिष्णुः** - ஜயசீலனான ரகு, **इति** - இவ்வாறு, **दिशः** - திசைகளை எல்லாம், **जित्वा** - வென்று, **राज्ञां**-சிற்றரசர்களின், **छत्रशून्येषु** - குடைகளற்ற, **मौलिषु** - கிரீடங்களில், **रथोद्धतम्** - தேரினால் கிளப்பப்பட்ட, **रजः** - புழுதியை, **विश्रामयन्** - படி

யும்படி செய்து கொண்டு, न्यवर्तत - (தன் தேசத்திற்குத்) திரும்பினான்.

(க-து) குடை, சுதந்திரமுடைய அரசனது சின்னமாகும். ரகு எல்லோரையும் வென்றவன்; சக்ரவர்த்தி; ஏகச்சத்ரபதி; அவன் ஒருவனே குடையுடனிருக்கலாம். மற்ற அரசர்கள் அவனெதிரி லிருக்கும்பொழுது குடையின்றி இருக்கவேண்டியவர்கள். அதனால் ரகுவின் தேர் கிளப்பிய புழுதி, குடையினால் மறைக்கப்படாத மற்ற அரசர்களின் கிரீடங்களில் படிந்தது.

இவ்வாறு பல அரசர்கள் சூழ, ரகு தன்நாட்டை அடைந்தான்.

स विश्वजितमाजह्रे यज्ञं सर्वस्वदक्षिणम् ।
आदानं हि विसर्गाय सतां वारिमुचामिव ॥ ८६ ॥

**सः** - ரகு, **सर्वस्वदक्षिणम्** - எல்லாச் செல்வத்தையும் தக்ஷிணையாகக் கொண்ட, **विश्वजितम्** - விச்வஜித் என்ற யாகத்தை, **आजह्रे** - செய்தான். **वारिमुचाम् इव** - மேகங்க ளுக்கு (இருப்பது) போலவே, **सताम्**-பெரியோர்களுக்கும், **आदानम्**-(பிறரிடமிருந்து) வாங்குதல் என்பது, **विसर्गाय हि**- தியாகம் செய்வதற்காகவே உள்ளது.

(க-து) மேகம் நீரை எடுத்துத் திரும்பவும் மழையாக அளிக் கின்றது. அதுபோல் நல்லோர் பிறரிடமிருந்து பொருள் பெற்று அவற்றைப் பலருக்கும் தந்து விடுகின்றனர். தாமகள் அனுபவிப்ப தில்லை.

அதுபோல ரகு, அரசர்களை வென்று பெற்ற செல்வம் முழுவதையும் தக்ஷிணையாகக் கொடுத்து, விசுவஜித் யாகம்

செய்தான். அவன் பொருளை அரசர்களிடமிருந்து பெற்றது, தான் அனுபவிக்கவன்று. பிறருக்கு அளிக்கவே. விச்வஜித் யாகம் செய்தது, செல்வத்தைப் பலருக்கும் அளிக்க ஒரு நல்ல ஸந்தர்ப்பத்தை உண்டாக்கியது.

सत्रान्ते सचिवसखः पुरस्क्रियाभि-
गुर्वीभिः शमितपराजयव्यलीकान् ।
काकुत्स्थश्चिरविरहोत्सुकावरोधान्
राजन्यान् स्वपुरनिवृत्तयेऽनुमेने ॥ ८७ ॥

**काकुत्स्थः** - ரகு, **सत्रान्ते** - யாகத்தின் முடிவில், **सचिवसखः** - மந்திரிகளுடன் கூடியவனாக, **गुर्वीभिः** - சிறந்த, **पुरस्क्रियाभिः** - மரியாதைகளால, **शमितपराजय व्यलीकान्** - போக்கப்பட்ட அபஜய அவமானமுடையவர்களும், **चिरविरह उत्सुक अवरोधान्** - வெகுநாட் பிரிவினால் ஏங்கின மனைவியரை யுடையவர்களுமான, **राजन्यान्** - அரசர்களை, **स्वपुरनिवृत्तये** - தங்களது நகரத்திற்குத் திரும்ப, **अनुमेने** - அனுமதித்தான்.

(க-து) யாகத்தின் முடிவில் மந்திரிகளுடனிருந்து கொண்டு, சிற்றரசர்கள் எல்லோருக்கும் விசேஷமான மரியாதைகள் செய்தான் ரகு. அவ்வரசர்கள், தாங்கள் தோல்வியுற்றதை எண்ணி அவமான உணர்ச்சியுடன் இருந்தனர். ரகு செய்த சிறந்த மரியாதை, அரசர்களின் அவமான நினைவை அறவே நீக்கியது. வெகு நாளாகச் சிற்றரசர்கள் தன்னுடன் வந்துகொண்டிருந்ததால் அவர்களின் மனைவியர், வருந்துவதை எண்ணி, மன்னர்கள் எல்லோரையும் ரகு அவரவர் நகரத்திற்குச் செல்லும்படி உத்தரவளித்தான்.

ते रेखाध्वजकुलिशातपत्रचिह्नं
सम्राजश्चरणयुगं प्रसादलभ्यम् ।
प्रस्थानप्रणतिभिरङ्गुलीषु चक्रु-
र्मौलिस्रक्च्युतमकरन्दरेणुगौरम् ॥ ॥ ८८ ॥

**ते** - அவ்வரசர்கள், **रेखाध्वज कुलिश आतपत्र चिह्नम्** - ரேகையின் வடிவிலுள்ள, துவஜம், கலசம், குடை இவைகளை அடையாளமாக வுடையதும், **प्रसादलभ्यम्** - அருளால் கிடைக்கக் கூடியதுமான, **सम्राजः**-ராஜாதி ராஜன் ரகுவின், **चरणयुगम्** - அடியிணையை, **प्रस्थान प्रणतिभिः** - புறப்படும் பொழுது செய்யப்பட்ட வணக்கங்களால், **अङ्गुलीषु** - விரல்களில், **मौलिस्रक्च्युत मकरन्दरेणु गौरम्** - (தலை) முடியிலுள்ள மாலையினின்றும் நழுவிய தேனாலும் பொடிகளாலும், சிவந்ததாக, **चक्रुः** - செய்தனர்.

(க-து) ரகுவின் பாதங்களில் சக்ரவர்த்தியின் அடையாளமான துவஜம், கலசம், குடை இவைகள், ரேகையின் வடிவத்தில இருந்தன. அவனது அருளின்றிக் கிடைத்தற்கரியதான அவனது பாதங்களில் சிற்றரசர்கள் விடைபெற்றுச் செல்லும்பொழுது தங்கள் தலையை வைத்து வணங்கினா. அரசாகளின் முடியிலுள்ள மாலைகளிலிருந்து தேனும் மகரந்தப்பொடிகளும் விழுந்து, அவனது பாத விரல்களைச் சிவந்த நிறமுடையனவாகச் செய்தன.

அவ்வளவு அரசர்களின் கூட்டம் அவனை வணங்கியது என்பது கருத்து.

ராஜஸூயம் செய்தவனும் பரந்த நிலத்திற்கு அரசனும் பல சிற்றரசர்களை ஆள்பவனும் ஸம்ராட் எனப்படுவன்.

கீழ்க் கொடுக்கப்பட்டுள்ள சுலோகமும் இதையே கூறும்.

**येनेष्टं राजसूयेन मण्डलस्येश्वरश्च यः ।**
**शास्ति यश्चाज्ञया राज्ञः स सम्राडिति कथ्यते ॥**

**गौरम्** - மஞ்சள் நிறம், வெண்மை நிறம் என்ற பொருளுமுண்டு.

इति महाकवि श्री कालिदासकृतौ
रघुवंशे महाकाव्ये चतुर्थः सर्गः ॥

---

॥ श्रीः ॥

# ॥ रघुवंशः ॥

## पञ्चमः सर्गः

तमध्वरे विश्वजिति क्षितीशं निश्शेषविश्राणितकोशजातम् ।
उपात्तविद्यो गुरुदक्षिणार्थी कौत्सः प्रपेदे वरतन्तुशिष्यः ॥ १ ॥

**विश्वजिति** - விச்வஜித் என்னும், **अध्वरे** - யாகத்தில், **निश्शेष विश्राणित कोशजातं** - மிச்சமில்லாமல் கொடுக்கப்பட்ட நிதிக் குவியல்களையுடைய, **तं** - அந்த, **क्षितीशं** - அரசனை, **उपात्त-विद्यः** - கற்கப்பட்ட வித்தைகளை உடைய வரும், **वरतन्तु शिष्यः** - வரதந்து - மகரிஷியின் - சிஷ்யருமான- **कौत्सः** - கௌத்ஸர், **गुरु दक्षिणा अर्थी** - குரு தக்ஷிணையை, விரும்பியவராக, **प्रपेदे** - அடைந்தார்.

(க-து) வரதந்து மகரிஷியின் சிஷ்யரான கௌத்ஸர் என்பவர், தாம் குருவுக்குத் தரவேண்டிய பொருளை, ரகுவினிடமிருந்து பெற வேண்டி அவனிடம் வந்தார்.

**विश्वजित्** - திக்விஜயம் செய்த சக்ரவர்த்தி செய்யத் தகுந்த ஒரு யாகம். இந்த யாகத்தில், யாகம் செய்பவர் தம் சொத்தின் பெரும்பகுதியைத் தக்ஷிணையாகக் கொடுத்து விடவேண்டும். ரகுவும் தான் திக்விஜயம் செய்து பெற்ற செல்வமனைத்தையும் தானம் செய்தபின் சிறிதும் பொருளின்றி இருந்தான்.

**विद्या** :—பதினான்கு என்பர்.

१. शिक्षा २. व्याकरणम् ३. छन्दः ४. निरुक्तम् ५. ज्योतिषम् ६. कल्पः ७. ऋग्वेदः ८. यजुर्वेदः ९. सामवेदः

१०. अथर्ववेदः ११. मीमांसा १२. न्यायः १३. पुराणम् १४. धर्मशास्त्रम् என்பனவாம்.

கீழ்க் கொடுக்கப்பட்டுள்ள சுலோகம் அவைகளைத் தொகுத்துக் கூறுகின்றது.

अङ्गानि वेदाश्चत्वारो मीमांसा न्यायविस्तरः ।
पुराणं धर्मशास्त्रं च विद्या ह्येताश्चतुर्दश ॥

स मृन्मये वीतहिरण्मयत्वात् पात्रे निधायार्घ्यमनर्घशीलः ।
श्रुतप्रकाशं यशसा प्रकाशः प्रत्युज्जगामातिथिमातिथेयः ॥ २ ॥

**अनर्घ शीलः** - சிறந்த - நடக்கை யுடையவனும், **यशसा** - புகழால், **प्रकाशः** - விளங்குபவனும், **आतिथेयः** - அதிதிகளிடத்தில் அன்புடையவனுமான, **सः** - அவன் (ரகு), **वीत हिरण्मयत्वात्**-தங்கப் பாத்திரம் இல்லாமையால், **मृन्मये** - மண்ணுலாகிய, **पात्रे** - பாத்திரத்தில், **अर्घ्यं** - பூஜைக் குரிய பொருளை, **निधाय** - வைத்துக்கொண்டு, **श्रुत - प्रकाशं** - படிப்பினுல் பிரஸித்தரான, **अतिथिम्** - அதிதியை; (கௌத்ஸரை), **प्रत्युज्जगाम** - எதிர்கொண்டு சென்முன்.

(க-து) ரகு, குற்றம் காணமுடியாத நன்னடக்கை யுடையவன்; மிகவும் புகழ் பெற்றிருப்பவன்; அதிதிகளிடத்தில் அன்புடையவன். கௌத்ஸர் வந்தபொழுது அவனிடம் பொன் பாத்திரம் எதுமில்லை. ஆதலால் அவனிடம் எஞ்சியுள்ள மண் பாத்திரத்தில் அதிதிகளைப் பூஜிப்பதற்கான புஷ்பம், பழம், தீர்த்தம் முதலியவைகளை எடுத்துக் கொண்டு, கௌத்ஸரை எதிர்கொண்டு சென்முன்.

तमर्चयित्वा विधिवद्विधिज्ञस्तपोधनं मानधनाग्रयायी ।
विशांपतिर्विष्टरभाजमारात् कृताञ्जलिः कृत्यविदित्युवाच ॥ ३ ॥

**विधिज्ञः** - சாஸ்திர மறிந்தவனும், **मान - धन-अग्रयायी** மானத்தைச் செல்வமாகக் கொண்டவர்களில் சிறந்தவனும், **कृत्यवित्** - செய்ய வேண்டுவனவற்றை நன்கு அறிந்தவனு

மான, विशांपतिः - அரசன், विष्टर-भाजं - ஆஸனத்தில் அமர்ந்த, तं-அந்த, तपोधनं-முனிவரை, विधिवत् - முறைப் படி, अर्चयित्वा-பூஜித்து, आरात्-ஸமீபத்தில், कृताञ्जलिः - கை கூப்பியவனாக (நின்று), इति - இவ்வாறு, उवाच - சொன் ளுன்.

(க-து) சாஸ்திரங்களை அறிந்தவன் ரகு; மானத்தைச் செல்வ மாகக் கருதுபவர்களில் தலைசிறந்தவன்; கார்யங்கள் செய்யவேண்டிய முறையை நன்கு உணர்ந்தவன்; ஆதலால் அவன், அதிதியைப் பூஜிப்பதில் சிறிதும் பிழை நேராதவாறு கருத்துடன், கௌத்ஸரை ஆஸநத்தில் அமரச் செய்தபின், முறைப்படி பூஜித்து அருகில் கைகூப்பிக்கொண்டு நின்று பேசத் தொடங்கினான்.

अप्यग्रणीर्मन्त्रकृतामृषीणां कुशाग्रबुद्धे कुशली गुरुस्ते ।
यतस्त्वया ज्ञानमशेषमाप्तं लोकेन चैतन्यमिवोष्णरश्मेः ॥ ४ ॥

कुश - अग्र-बुद्धे - தர்ப்பத்தின் - நுனிபோல் (கூரான) புத்தியுடைய முனிவரே ! लोकेन - உலகத்தினால், उष्णरश्मेः- சூரியனிடமிருந்து, चैतन्यमिव - உணர்வு (அடையப்படுவது) போல், यतः - எக்குருவிடமிருந்து, त्वया - உம்மால், अशेष - எல்லா, ज्ञानम् - அறிவும், आप्तं - அடையப்பட்டதோ, मन्त्रकृतां - வேத மந்திரங்களைக்கண்ட, ऋषीणाम् - மஹரிஷி களுள், अग्रणीः - சிறந்தவரான, ते - உம்முடைய, गुरुः - அப்படிப் பட்ட குரு, अपि कुशली - க்ஷேமத்துடன் இருக் கின்றாரா ?

(க-து) உலகம் சூர்யனிடமிருந்து உணர்வு பெறுகின்றது. சூரியனில்லையேல் உலகத்திற்கு உணர்வு இல்லை. உயிர் இல்லை. வாழ்க்கையும் இல்லை. ஞான ஸூரியனை வரதந்து முனிவரிட மிருந்து அறிவாகிய ஒளியைப் பெற்றுள்ளார் கௌத்ஸர். வரதந்து மகரிஷி, வேத மந்திரங்களைக்கண்டு உலகிற்கு வெளியிட்ட முனிவர் கட்கெல்லாம் தலைவர். அத்தகைய முனிவரின், க்ஷேமத்தை ரகு வினவுகின்றான்.

இது முதல் எட்டு சுலோகங்களில் ரகு, முனிவரைப் பற்றிய குசல ப்ரச்னம் செய்கிறான்.

कायेन वाचा मनसापि शश्वद्यत्संभृतं वासवधैर्यलोपि ।
आपाद्यते न व्ययमन्तरायैः कच्चिन्महर्षेस्त्रिविधं तपस्तत् ॥ ९ ॥

**कायेन** - சரீரத்தினாலும், **वाचा** - வாக்கினாலும், **मनसाऽपि** - மனத்தினாலும், **शश्वत्** - எப்பொழுதும், **संभृतं** - சேமிக்கப்பட்டுள்ளதும், **वासव-धैर्य-लोपि**-இந்திரனுடைய தைர்யத்தையும் அழிக்கக் கூடியதுமான, **यत्** - யாதொரு தவம் இருக்கின்றதோ, **महर्षेः** - மஹரிஷியின், **तत्** - அந்த **त्रिविधं**-மூன்றுவிதமான, **तपः**-தவமும், **अन्तरायैः**-இடையூறுகளால், **व्ययं** - செலவை, **नापाद्यते कच्चित्** - அடைவிக்கப் படுகிறதில்லையா?

(க-து) "உமது குரு, உடலாலும், வாக்கினாலும், மனத்தாலும் எப்பொழுதுமே தவம் செய்து வருபவர். அவரது தவம், இந்திரனும் கண்டு அஞ்சும்படி யுள்ளது. ஆனால் இத்தவத்திற்கு இடையூறுகள் பல உண்டாகலாம். இவ் இடையூறுகளை நீக்கத் தவத்தைச் சிறிதே செலவு செய்ய நேரலாம். அவ்வகையான செலவு ஒன்றும் தவத்திற்கு நேராது இருக்கின்றதா? தவம் இடையூறின்றி நடைபெறுகின்றதா?".

தவம், **कायिकं**, **वाचिकम्**, **मानसिकम्**, என மூவகையாகும்.

**कायिकम्** - உடலைக் கருவியாகக் கொண்டு செய்யப்படுவது; பெரியோர்களிடம் மரியாதையுடன் நடந்து கொள்ளுதல், சரீரத்திற்குத் தூய்மை யளிக்கக்கூடிய வகையில் புண்ய தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்தல், நேர்மையுடனிருத்தல், பிரம்மசர்யம் அஹிம்ஸை இவைகளை அனுஷ்டித்தல் ஆகிய இவை எல்லாம் சரீரத்தினால் சாதிக்கக்கூடிய தவமாகும்.

**वाचिकम्** - வாக்கினால் செய்யக்கூடிய தவம்: பிறருக்கு

வெறுப்பையும் அச்சத்தையும் உண்டாக்காததும், உண்மை யானதும் ஹிதமுமான சொல்லைக் கூறுதலும், வேதாத்ய யனம் செய்தலும் பேச்சினால் செய்யக்கூடிய தவமாகும்.

मानसिकम् - மனத்தால் செய்யப்படுவது :

காமம், கோபம் இவைகளுக்கு மனத்தில் இடமளியா திருப்பது, பிறர் விஷயத்தில் நன்மையையே நினைப்பது, மௌன விரத மனுஷ்டித்தல், மனத்தை அடக்குதல், கபட மான எண்ணமில்லா திருத்தல் ஆகிய இவை எல்லாம் மானஸமான தவமாகும்.

"देवद्विज गुरुप्राज्ञपूजनं शौचमार्जवम् ।
ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते ॥
अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् ।
स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते ॥
मनः प्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।
भावसंशुद्धिरित्येतत् तपो मानसमुच्यते ॥"

என்பது கீதை.

आधारबन्धप्रमुखैः प्रयत्नैः संवर्धितानां सुतनिर्विशेषम् ।
कच्चिन्न वाय्वादिरुपप्लवो वः श्रमच्छिदामाश्रमपादपानाम् ॥ ६ ॥

आधार - बन्ध-प्रमुखैः - பாத்தி கட்டுதல் - முதலிய, प्रयत्नैः - முயற்சிகளால், सुतनिर्विशेषं - புத்திரர்களுக்குச் சம னாக, संवर्धितानां - வளர்க்கப்பட்டவைகளும், वः - உங்களு டைய, श्रमच्छिदां - சிரமத்தைப் போக்குபவையுமான, आश्रम-पादपानां - ஆச்ரமத்திலுள்ள மரங்களுக்கு, वाय्वादिः - அதிகக் காற்று, (காட்டுத் தீ) முதலிய, उपप्लवः - துன்பம் न(अस्ति)कच्चित् - இல்லையே?

(க-து) "ஆச்ரமத்திலுள்ள மரங்கள், புயல், காட்டுத் தீ முதலியவைகளால் சேதமின்றி இருக்கின்றனவா? ஏனெனில் நீங்கள், பாத்தி யமைத்து உரிய காலத்தில் நீர் ஊற்றி, அம்மரங்களை மக்களோடொப்ப அன்புடன் வளர்க்கின்றீர்கள். அவைகள், நிழல், பழம் முதலியவைகளைக் கொடுத்து உங்களுக்கு உதவுகின்றன. அவைகளுக்குத் தீங்கு வருமாயின அஃது உங்களுக்கு வந்ததாகவே ஆகும். ஆதலால், அவைகள் துன்பமின்றி இருக்கின்றனவா?"

क्रियानिमित्तेष्वपि वत्सलत्वादभग्नकामा मुनिभिः कुशेषु ।
तदङ्कशय्याच्युतनाभिनाला कच्चिन्मृगीणामनघा प्रसूतिः ॥ ७ ॥

**वत्सलत्वात्** - அன்புடைய காரணத்தினால், **मुनिभिः** - முனிவர்களாலே, **क्रिया - निमित्तेषु** - அனுஷ்டானங்களுக்குச் சாதனமான, **कुशेषु अपि** - தர்ப்பைகளிடத்திலும், **अभग्न-कामा** - தடை செய்யப்படாத - ஆசையையுடையவைகளும், **तत् - अङ्कशय्या - च्युत - नाभिनाला** - முனிவர்களின் - மடியாகிய படுக்கையில் நழுவிய-நாபிக் கொடியையுடையவையுமான, **मृगीणां** - பெண்மான்களின், **प्रसूतिः** - குட்டிகள், **अनघा कच्चित्?** அபாயமின்றி இருக்கின்றனவா?

(க-து) "கர்மாவை அனுஷ்டிப்பதற்காக முனிவர்கள் கையில் எடுத்துள்ள தாப்பத்தைத்தின்ன மான குட்டிகள் விரும்பும். ஆயினும், மகரிஷிகள், மான குட்டிகளின் விருப்பத்திற்குத் தடை செய்யாது கையிலுள்ள - அனுஷ்டானத்திற்கான - தாப்பங்களையும் கொடுத்து அவைகளின் இஷ்டத்தை நிறைவேற்றுவர். இவ்வாறு கருணையுள்ளத்துடன் மான்கள் போஷிக்கப்படுகின்றன. புதிதாகப் பிறந்த மான குட்டிகளும் மகரிஷிகளின மடியில் படுத்துறங்க, அவைகளின் தொப்புழ் கொடியும் முனிவரின் மடியிலே உதிர்ந்து விழும்படி இருக்கும். இவ்வாறு முனிவர்களாலும் அன்புடன் காப்பாற்றப்படுகின்ற மான குட்டிகள இனிது வளர்கின்றனவா?"

निर्वर्त्यते यैर्नियमाभिषेको येभ्यो निवापाञ्जलयः पितॄणाम् ।
तान्युञ्छषष्ठाङ्कितसैकतानि शिवानि वस्तीर्थजलानि कच्चित् ॥ ८ ॥

यैः - எந்த நிர்மலமான ஜலத்தினால், नियम-अभिषेकः - நித்யஸ்நாநம், निर्वर्त्यते - செய்யப்படுகிறதோ ; येभ्यः - எந்த ஜலத்திலிருந்து, (उद्धृत्य) - எடுத்து, पितॄणां - பித்ருக்களுக்கு, निवापाञ्जलयः - தர்ப்பணங்கள், (निर्वर्त्यन्ते) - செய்யப்படுகின்றனவோ, उञ्छ षष्ठ - अङ्कित - सैकतानि - பொறுக்கப்பட்ட தான்யங்களின், ஆறில் ஒரு பாகத்தினால் அடையாளமான மணல் திட்டுகளையுடைய, तानि - அந்த, तीर्थजलानि - புண்யதீர்த்தங்கள், शिवानि कच्चित् - நன்கு இருக்கின்றனவா ?

(க-து) "உங்களது நித்ய ஸ்நாநத்திற்கும் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்வதற்கும் உபயோகமான புண்ய தீர்த்தங்கள் நன்கு இருக்கின்றனவா ?"

நீர் நிலைகளின் அருகிலுள்ள மணற் பாங்கான இடத்தில், மகரிஷிகள் தாம் காட்டினின்றும் பொறுக்கிச் சேர்த்த தானியங்களில் ஆறில் ஒரு பகுதியை அரசனுக்காக வைப்பர். இவ்வாறு வைக்கப்பட்டுள்ள தானியம், மகரிஷிகள் ஸ்நாநம் செய்யுமிடத்திற்கு அடையாளமாக உள்ளது. (அத்தானியங்களை அரசனது சேவகர்கள் வந்து எடுத்துப் போகலாம்). அத்தகைய நீர்நிலைகள் கெடுக்கப்படாமல் இருக்கின்றனவா என ரகு வினவுகின்றான்.

नीवारपाकादि कडंगरीयैरामृश्यते जानपदैर्न कच्चित् ।
कालोपपन्नातिथिकल्प्यभागं वन्यं शरीरस्थितिसाधनं वः ॥ ९ ॥

काल - उपपन्न - अतिथि - कल्प्य-भागं - உரிய காலத்தில் வந்த விருந்தினர்களுக்கு அளிக்கப்பட வேண்டிய பாகத்தை உடையதும், वन्यं - காட்டில் விளைவதும், शरीरस्थिति-साधनं - உடல் நிலைக்குச் சாதனமானதுமான, वः - உங்களுடைய, नीवार पाकादि - செந்நெல் முதலிய தான்யம்,

**जानपदैः** - நாடுகளிலிருந்து வரும், **कडङ्गरीयैः** - மாடு முதலியவைகளால், **न आमृश्यते कच्चित्** - மேயப்படாமல் இருக்கின்றதா?

(க-து) "காட்டில் தானாக விளைகின்ற செந்தினை முதலான தான்யங்களைக் கிராமங்களிலிருந்து வருகின்ற ஆடுமாடுகள் மேய்ந்து அழிக்காதிருக்கின்றனவா? ஏனெனில் அத்தான்யங்களே மகரிஷிகளுக்கு உணவாக இருப்பதுடன் அதிதி பூஜைக்கும் உபயோகமாகின்றன."

अपि प्रसन्नेन महर्षिणा त्वं सम्यग्विनीयानुमतो गृहाय ।
कालो ह्ययं संक्रमितुं द्वितीयं सर्वोपकारक्षममाश्रमं ते ॥ १० ॥

**प्रसन्नेन** - கருணை கொண்ட, **महर्षिणा** - வரதந்து மஹரிஷியினால், **सम्यक्** - நன்றாக, **विनीय** - கற்பிக்கப்பட்டு, **गृहाय** கிருகஸ்தாசிரமத்தை அடைய, **त्वं** - நீர், **अपि अनुमतः**- அனுமதிக்கப்பட்டீரா? **हि** - ஏனெனில், **ते** - உமக்கு, **सर्व-उपकारक्षमं** - எல்லா ஆச்ரமத்தினருக்கும் - உதவுவதில் - சக்தி வாய்ந்த, **द्वितायं** - இரண்டாவதான, **आश्रमं** - (கிருகஸ்த) ஆசிரமத்தை, **संक्रमितुं** - அடைவதற்கு, **अयं** - இது, **कालः** - ஸமயம்.

(க-து) கருணையுள்ள உமது ஆசிரியர், உமக்கு வித்தைகளைக் கற்பித்து, நீர் கிருஹஸ்தாச்ரமத்தை அடைய அநுமதித்தனரா?

பிராம்மணர்களின் வாழ்க்கையை நான்கு நிலைகளாகப் பிரித்திருக்கின்றனர். அந்நிலைகள் ஆச்ரமங்கள் எனப்படுகின்றன; அவை:—பிரம்மசர்யம், கார்ஹஸ்த்யம், வானப்ரஸ்தம், ஸந்யாஸம் என்பனவாம்.

இந்நிலையிலுள்ளோர் முறையே, பிரம்மசாரி, கிருஹஸ்தர், வானப்ரஸ்தர், ஸந்யாஸி எனப்படுவர்.

இவற்றில் கிருஹஸ்தாச்ரமத்திலுள்ளவர்களே மற்றவர்களுக்கு அன்னமளித்துக் காப்பதால் அஃது எல்லோருக்கும் உதவுகின்ற ஆச்ரமமாகின்றது.

'இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.'
என்ற குறளும் இக்கருத்தை விளக்கும்.

"एवं गार्हस्थ्यमाश्रित्य वर्तन्ते इतराश्रमा ।
यथा मातरमाश्रित्य सर्वे जीवन्ति जन्तवः ।
तथा गृहाश्रमं प्राप्य सर्वे जीवन्ति चाश्रमाः ।"
என்பர் பெரியோர்.

तवार्हतो नाभिगमेन तृप्तं मनो नियोगक्रिययोत्सुकं मे ।
अप्याज्ञया शासितुरात्मना वा प्राप्तोऽसि संभावयितुं वनान्माम् ॥

**अर्हतः** - பூஜிக்கத்தக்க, **तव** - உம்முடைய, **अभिगमेन (एव)** - வரவினால் மாத்திரம், **मे** - எனனுடைய, **मनः** - மனம், **न तृप्तम्** - திருப்பதி யடையவில்லை, **(किंतु)** - ஆனால், **नियोगक्रियया** - (உமது) ஆஜ்ஞையைச் செய்வதில், **उत्सुकं** - ஆவலுள்ளதாக, **(अस्ति)** - இருக்கின்றது. **शासितुः** - ஆசிரியருடைய, **आज्ञया** - கட்டளையினாலா, **वा** - அல்லது, **आत्मना** - தாமாகவா, **मां** - என்னை, **संभावयितुं** - கௌரவிக்க, **वनात्** - வனத்தினின்று, **अपि प्राप्तः असि** - வந்திருக்கின்றீர்?

(க-து) "மகரிஷியே, தங்களது வருகையால் மாத்திரம் நான் மனமகிழ்ச்சி யடையவில்லை. தங்களுடைய உத்தரவு எத்தகையதாயினும நிறைவேற்ற விரும்புகின்றேன். தாங்கள் சொந்தக் காரியத்தைக் கருதி வந்திருக்கின்றீர்களா? தங்களது குரு எனக்கு ஏதேனும் கட்டளை இட்டிருக்கின்றனரா? கூறுக" என்றான் ரகு.

इत्यर्घ्यपात्रानुमितव्ययस्य रघोरुदारामपि गां निशम्य ।
स्वार्थोपपत्तिं प्रति दुर्बलाशस्तमित्यवोचद्वरतन्तुशिष्यः ॥ १२ ॥

**अर्घ्यपात्र- अनुमित व्ययस्य** - பூஜைக்கான பாத்ரங்களினால்- ஊஹிக்கப்பட்ட - செலவையுடையவனான, **रघोः** -

ரகு மஹாராஜனுடைய, **उदारां** - கம்பீரமான, **गां** - வார்த்தையை, **निशम्य अपि** - கேட்ட பிறகும், **वरतन्तु-शिष्यः** - வரதந்துவின் சிஷ்யர், **स्व-अर्थ-उपपत्तिं प्रति**-தம்முடைய கார்ய ஸித்தியைக் குறித்து, **दुर्बलाशः** - நம்பிக்கை குறைந்தவராக, **तं** - அந்த ரகுவினிடம், **इति** - இவ்வாறு, **अवोचत्** - சொன்னார்.

(க-து) கௌத்ஸர், ரகுவினிடம் செல்வமில்லை என்பதை அவன் வைத்திருந்த மண் பாத்திரங்களைக் கொண்டே ஊஹித்தறிந்தார். அவரது விருப்பத்தைப் பூர்த்தி செய்வதாகவே ரகு கூறினான். அவன் பேச்சு, அவனது வள்ளல் தன்மையைக் காட்டுவதாகவே இருந்தது. ஆயினும் கௌத்ஸர் தமது காரியம் கைகூடும் என்ற நம்பிக்கையற்றுப் பேசத் தொடங்கினார்.

सर्वत्र नो वार्तमवेहि राजन्नाथे कुतस्त्वय्यशुभं प्रजानाम् ।
सूर्ये तपत्यावरणाय दृष्टेः कल्पेत लोकस्य कथं तमिस्रा ॥ १३ ॥

**हे राजन्** - அரசே!, **सर्वत्र** - எல்லா விஷயங்களிலும், **नः** - எங்களுடைய, **वार्तं** - க்ஷேமத்தை, **अवेहि** - அறிந்து கொள்ளுங்கள்; **त्वयि** தாங்கள், **नाथे (सति)** நாதனாக இருக்கும் பொழுது, **प्रजानां** - பிரஜைகளுக்கு, **अशुभं** - துன்பம், **कुतः**-எங்கிருந்துண்டாகும்? **सूर्ये**-சூரியன், **तपति (सति)** - பிரகாசித்து கொண்டிருக்கும்பொழுது, **तमिस्रा** - இருட்டு, **लोकस्य** - ஜனங்களின், **दृष्टेः** - பார்வையை, **आवरणाय** - மறைப்பதற்கு, **कथं** - எவ்வாறு, **कल्पेत** - சக்தி வாய்ந்ததாகும்?

(க-து) "ஸூரியன் பிரகாசித்துக் கொண்டிருக்கும்பொழுது இருள், அரசே, ஜனங்களின் பார்வையை மறைக்க முடியுமா? நீர் பிரஜைகளுக்கு ரக்ஷகராக இருக்கும்பொழுது துன்பம் எவ்வாறு உண்டாகும்?"

உண்டாகாது என்பது கருத்து. கிரஹங்களிடையில் ஸூரியன் இருப்பது போல் அரசர்களிடையில் ரகு

இருப்பதால் பிற மன்னரிடமிருந்தும் துன்பமுண்டாகாது என்பது பெறப்படும்.

भक्तिः प्रतीक्ष्येषु कुलोचिता ते पूर्वान् महाभाग तयातिशेषे।
व्यतीतकालस्त्वहमभ्युपेतस्त्वामर्थिभावादिति मे विषादः ॥ १४ ॥

**प्रतीक्ष्येषु** - பெரியோர்களிடத்தில், **भक्तिः**-பக்தியானது **ते** - உம்முடைய, **कुल-उचिता** - வம்சத்திற்குப் பழகியதே; **महाभाग** - பெரும் பாக்யமுடைய அரசே! **तया** - அக்குணத்தினால் (பக்தியினால்), **पूर्वान्** - உமது முன்னோர்களையும், **अतिशेषे** - ஜயிக்கின்றீர்; **अहं** - நான், **व्यतीतकालः** - காலம கடந்தவனாக, **अर्थिभावात्** - யாசகதன்மையுடன், **त्वां** - உம்மை, **अभ्युपेतः** - அடைந்திருக்கிறேன், **इति** - என்று, **मे विषादः** - எனக்கு வருத்தம் (உண்டாகின்றது).

(க-து) "அரசே, பெரியோர்களிடத்தில் பக்தியுடன் நடந்து கொள்வது உமது வம்சத்தினருக்குப் பழகிய குணமாகும். இவ்விஷயத்தில் நீர் உமது முன்னோா எல்லோரையும் விஞ்சிவிடுகின்றீா. உமது முன்னோர்கள் காட்டிய அன்பைக் காட்டிலும் அதிக அனபை நீா பெரியோாகளிடம் காடடுகினறீா. இவ்வளவு அன்புடைய உம்மிடததில், உரிய காலததில வாாமல் காலம் கடந்து, நீர் செல்வம் எல்லாவற்றையும் செலவு செயதபின் யாசகம செய்ய வந்தேனே என நினைக்கினறேன. இந்த ஒனறே எனக்கு வருத்தம உண்டாக்குகின்றது. உமது மனம் நோகுமே என நான் வருநதுகின்றேன்."

**महाभागः** - என்பதற்கு, 'பிறவி முதல் மரணம் வரை எவ்விதக் குற்றமுமின்றி ஒப்பற்ற புகழுடன் இருப்பவன்' என்றும் பொருள உண்டு. கீழ்க்காணும் சுலோகம் இதை வலியுறுத்துகின்றது:—

आरभ्योत्पत्तिमा मृत्योः कलङ्को यस्य नो भवेत्।
स्याच्चैवानुपमा कीर्तिर्महाभागः स उच्यते ॥

शरीरमात्रेण नरेन्द्र तिष्ठन्नाभासि तीर्थप्रतिपादितर्द्धिः ।
आरण्यकोपात्तफलप्रसूतिः स्तम्बेन नीवार इवावशिष्टः ॥ १५ ॥

**नरेन्द्र** - அரசரே, **तीर्थ - प्रतिपादित - ऋद्धिः** - ஸத்பாத்திரங்களில் செலவு செய்யப்பட்ட ஐசுவரியமுடையவரும், **शरीरमात्रेण** - தம் சரீரத்தினுல் மட்டும், **तिष्ठन्** - மிகுந்து இருப்பவருமான, **त्वं** - நீர், **आरण्यक-उपात्त - फलप्रसूतिः** - முனிவர்களால் எடுக்கப்பட்ட தான்யத்தை யுடையதும், **स्तम्बेन** - தண்டினுல் (மாத்திரம்), **अवशिष्टः** - மிகுந்திருப்பதுமான, **नीवार इव** - செந்நினைப் பயிர்போல், **आभासि** - விளங்குகின்றீர்.

(க-து) " முனிவர்கள் தானியங்களைக் கொண்டு செல்லத் தண்டு மாத்திரம் எஞ்சி யிருக்கின்ற செந்நினைப் பயிர்போல் செல்வம் முழுவதையும் நல்லோருக்கு அளித்தபின் ஒன்றுமில்லாது, இருக்கின்றீர்.

स्थाने भवानेकनराधिपः सन्नकिंचनत्वं मखजं व्यनक्ति ।
पर्यायपीतस्य सुरैर्हिमांशोः कलाक्षयः श्लाघ्यतरो हि वृद्धेः ॥ १६ ॥

**भवान्** - நீர், **एकनराधिपः सन्** - இணையற்ற சக்ரவர்த்தியாய் இருந்தும், **मखजं**-யாகத்தினுல் உண்டான, **अकिंचनत्वं** ஏழ்மையை, **व्यनक्ति** - தெரிவிக்கின்றீர்; (அவ்வாறு இருப்பதும்), **स्थाने** - தகுநததே; **सुरैः** - தேவர்களால், **पर्याय - पीतस्य** - முறையே பானம் செய்யப்பட்ட, **हिमांशोः** - சந்திரனின், **कला·क्षयः** - கலைகளின் குறைவு, **वृद्धेः** - (கலைகளின்) விருத்தியைக் காட்டிலும், **श्लाघ्यतरः हि** - சிறந்ததல்லவா?

(க-து) " நீர் ஒப்பற்ற அரசர். ஆயினும் யாகம் செய்து செல்வத்தைச் செலவிட்டு வறுமையைத் தேடிக்கொண்டீர். இவ்வாறு வறுமையுடன் இருப்பதும் நன்றேயுள்ளது. பிறர்க்குப் பயன்படாது செலவத்துடன் வாழ்வதைக் காட்டிலும் பிறர்க்குப் பயன்பட்டு ஏழைமை யடைவது சாலச் சிறந்ததாகும்,

கிருஷ்ணபக்ஷத்தில் நாளுக்கு ஒரு கலை வீதம் சந்திர னுடைய பதினாறுகலைகளையும் தேவர்கள் உண்கின்றனர். அதனால் சந்திரன் குறைந்து கொண்டே வருகிறான். தேவர்களுக்காகத் தன் உடலை அர்ப்பணம் செய்கின்றதால் சந்திரனது கலைக்குறைவு, அவனது கலை வளர்ச்சியைக் காட்டிலும் சிறந்தது என்பது கௌத்ஸர் கருத்து.

பௌர்ணமிசந்திரனைப் போற்றாது மூன்றாம் பிறைச் சந்திரனை ஜனங்கள் வணங்குவது, அவனது தியாகம் கருதியே போலும்! இவ்வுபமானம் ஸ்ரீ தேவீ புராணத்தில் கூறியுள்ள கருத்தை ஒட்டி வந்தது.

"சந்திரனது முதற் கலையை அக்னிதேவனும், இரண் டாவது கலையை வாயுதேவனும், மூன்றாவதை விச்வேதேவர் களும், நான்காவதை பிராஜபதியும், ஐந்தாவதை வருண னும், ஆறாவதை வாஸவனும், ஏழாவதை தேவரிஷிகளும், எட்டாவதை அஷ்டவஸுக்களும், ஒன்பதாவதை இந்திர னும், பத்தாவதை மருத்துக்களும், பதினொன்றாவதைருத்ரர் களும், பன்னிரண்டாவதை விஷ்ணுவும், பதின்மூன்றா வதைக் குபேரனும், பதினான்காவதைப் பசுபதியும், பதினைந் தாவதைப் பித்ருதேவதைகளும் சாப்பிடுகின்றனர். ஒரு கலை மாத்திரம் மிஞ்சியுள்ள சந்திரன், சூரிய மண்டலத்தில் அமாவாஸ்யையன்று புகுகின்றான். பின் சூரியனுடைய சக்தியால் சுக்ல பக்ஷத்தில் முறையே வளர்கின்றான்" என்பர்.

धर्मार्थं क्षीणकोशस्य क्षीणत्वमपि शोभते ।
सुरैः पीतावशेषस्य कृष्णपक्षे विधोरिव ॥

என்பர் காமந்தகர்.

तदन्यतस्तावदनन्यकार्यो गुर्वर्थमाहर्तुमहं यतिष्ये ।
स्वस्त्यस्तु ते निर्गलिताम्बुगर्भं शरद्घनं नार्दति चातकोऽपि ॥ १७ ॥

**तत्** - ஆகையால், **तावत् अनन्य-कार्यः** - முற்றிலும் வேறு காரியமே இல்லாதவனாக, **अहं**-நான், **अन्यतः**-வேறு ஒருவரிட மிருந்து, **गुर्वर्थं** - குருவிற்கான தனத்தை, **आहर्तुं**-ஸம்பாதிப் பதற்கு, **यतिष्ये**-முயல்வேன், **ते**-உமக்கு, **स्वस्ति** - மங்களம், **अस्तु**-உண்டாகட்டும்; **चातकोऽपि**-சாதகப் பக்ஷியும், **निर्गलित-अम्बु गर्भं** - ஜலமற்ற, **शरद् घनं** - சரத்கால மேகத்தை **नार्दति** - யாசிப்பதில்லை.

(க-து) "வேறு பயன் எதையும் நான் விரும்பவில்லை; ஆகையால் நான் குருவிற்குத் தரவேண்டிய பணத்தை வேறு ஓர் அரசரிட மிருந்து பெற முயல்வேன். என்னுடைய விருப்பத்தை நிறை வேற்ற வில்லையே என்ற கவலை உமக்கு வேண்டாம். நான் வாழ்த்து கின்றேன், ஸுகமே இருப்பீராக."

"பகுத்தறிவற்ற சாதகப் பட்சியும், நீரற்ற மேகத்தி னிடம் தண்ணீரை எதிர்ப்பார்ப்பதில்லையே! செல்வமற்ற உம்மிடம் பொருளை நான் எதிர்பார்ப்பது தகுமா? ஆக லால் உமக்குச் சிறிதும் சிரமம் கொடுக்க நான் விரும்ப வில்லை!"

பட்சி வகையினுள் ஒன்று சாதகப் பட்சி; அது பூமியி லுள்ள நீரைப் பருகாது மேகத்திலிருந்துவரும் ஜலத்தைக் குடிப்ப தாகக் கவிகள் கூறுகின்றனர். அவைகள் தலை நிமிர்த்திக் கூவுவது, மேகங்களை நோக்கித் தண்ணீர் கேட்பது போலிருக்கும் என்பர்.

एतावदुक्त्वा प्रतियातुकामं शिष्यं महर्षेर्नृपतिर्निषिध्य ।
किं वस्तु विद्वन् गुरवे प्रदेयं त्वया कियद्वेति तमन्वयुङ्क्त ॥ १८ ॥

**एतावत्** - இவ்வளவு வார்த்தையை, **उक्त्वा** சொல்லிய பிறகு, **प्रतियातुकामं** - செல்ல விருப்பமுற்ற, **महर्षेः** - முனி வருடைய, **शिष्यं** சிஷ்யரை, **नृपतिः**-அரசன், **निषिध्य**-தடுத்து, "**विद्वन्** - வித்வானே, **त्वया** - உம்மால், **गुरवे** - குருவிற்கு, **प्रदेयं** - கொடுக்கப்பட வேண்டிய, **वस्तु** - பொருள், **किम्** -

என்ன ? **कियद्वा** - எவ்வளவு ? " **इति** - என்று, **तं** - அவரை **अन्वयुङ्क्त** - கேட்டான்.

(க-து) இவ்வாறு கூறிவிட்டுக் கௌத்ஸர் செல்ல விரும்பிய பொழுது, ரகு, அவரைப் போகவேண்டாமெனத் தடுத்து, அவர் குருவிற்குத் தரவேண்டிய பொருள் என்னவென்றும், எவ்வளவென்றும் கூறும்படி கேட்டான்.

ततो यथावद्विहिताध्वराय तस्मै स्मयावेशविवर्जिताय ।
वर्णाश्रमाणां गुरवे स वर्णी विचक्षणः प्रस्तुतमाचचक्षे ॥ १९ ॥

**ततः** - பிறகு, **यथावत्** - முறைப்படி, **विहित-अध्व-राय**-யாகத்தைச் செய்தவனும், **स्मय आवेश विवर्जिताय** - கர்வம் பற்றுதல் இரண்டும் இல்லாதவனும், **वर्ण - आश्रमाणां**- வர்ணங்களுக்கும் ஆச்ரமங்களுக்கும், **गुरवे** - ரக்ஷகனுமான, **तस्मै** - அவனுக்கு, **विचक्षणः** - கெட்டிக்காரரான, **सः वर्णी** - அப்பிரம்மசாரி, **प्रस्तुतं** - உத்தேசித்த விஷயத்தை, **आचचक्षे**- சொன்னார்.

(க-து) கௌத்ஸர் அரசனிடம் தாம் உத்தேசித்து வந்த விஷயத்தைச் சொல்ல ஆரம்பித்தார்.

समाप्तविद्येन मया महर्षिर्विज्ञापितोऽभूद्गुरुदक्षिणायै ।
स मे चिरायास्खलितोपचारां तां भक्तिमेवागणयत् पुरस्तात् ॥ २० ॥

**समाप्त-विद्येन** - வித்யாப்யாஸத்தை முடித்த, **मया** - என்னால், **महर्षिः** - முனிவர், **गुरु-दक्षिणायै** - குரு தக்ஷிணை பெறுவதின் பொருட்டு, **विज्ञापितः** - விண்ணப்பம் செய்யப் பட்டவராக, **अभूत्** - ஆனார்; **सः** - அவர், **चिराय** - வெகு காலமாக, **अस्खलित - उपचारां** - தவறாத பணிவிடையை யுடைய, **तां** - அந்த, **भक्तिमेव** - என் பக்தியையே, **पुरस्तात्** - முதலில், **अगणयत्** - (தக்ஷிணையாக) எண்ணினார்.

(க-து) "வித்யாப்யாஸத்தை முடித்தபின் நான், தக்ஷிணையைப் பெற்றுக் கொள்ளும்படி எனது குரு வரதந்து முனிவரைக் கேட்

டேன். அவர், நான் தவறாது செய்துவந்த பணிவிடைகளை எண்ணி, எனது குரு பக்தியையே முதலில் தக்ஷிணையாகக் கருதினார்."

निर्बन्धसंजातरुषार्थकार्श्यमचिन्तयित्वा गुरुणाहमुक्तः ।
वित्तस्य विद्यापरिसंख्यया मे कोटीश्चतस्रो दश चाहरेति ॥ २१ ॥

**निर्बन्ध - संजात - रुषा** - நிர்ப்பந்தத்தினால் உண்டான கோபத்தையுடைய, **गुरुणा** - குருவினால், **अर्थ-कार्श्यं** - பணக் கஷ்டத்தை, **अचिन्तयित्वा** - யோசியாமல், "**वित्तस्य** - செல்வத்தின் (பொன்னின்), **चतस्रः** - நான்கும், **दश च** - பத்தும் ஆகிய, **कोटीः** - கோடிகளை, **मे** - எனக்கு, **आहर** - கொண்டுவா", **इति** - என்று, **विद्या परिसंख्यया** - வித்யைகளின் சங்கியையனுசரித்து, **अहं** - நான், **उक्तः** - சொல்லப்பட்டேன்.

(க-து) "தக்ஷிணை வேறு வேண்டாமென்று அவர் கூறிய பொழுதும் நான், ஏதாவது பெறவேண்டுமென அவரை வற்புறுத்தினேன். அதனால் கோபங்கொண்டு, பணம் பெறுவதில் உள்ள கஷ்டத்தை யோசியாமல், பதினான்கு கோடிப்பொன் கொண்டுவரும் படி கட்டளை யிட்டார்."

நான்கு வேதங்கள், ஆறு வேதாங்கங்கள், மீமாம்ஸா, நியாயம், புராணம், தர்மசாஸ்திரம் என இவைகள் வித்யைகளாம். வித்யைகளின் தொகை பதினான்காதலால் வரதந்து முனிவரும் பதினான்கு கோடிப் பொன் தரும்படி கேட்டார்.

सोऽहं सपर्याविधिभाजनेन मत्वा भवन्तं प्रभुशब्दशेषम् ।
अभ्युत्सहे संप्रति नोपरोद्धुमल्पेतरत्वाच्छ्रुतनिष्क्रयस्य ॥ २२ ॥

**सः** - அப்படிப்பட்ட, **अहं** - நான், **सपर्याविधि - भाजनेन** - பூஜாபாத்திரத்தினால், **भवन्तं** - உம்மை, **प्रभु-शब्द - शेषं** - "பிரபு" என்னும் சொல்லை மாத்திரம் மிச்சமாய் உடையவராக, **मत्वा** - அறிந்தபின், **श्रुतनिष्क्रयस्य** - குரு தக்ஷிணையானது, **अल्पेतरत्वात्** - அதிகமாய் இருப்பதால், **संप्रति** -

இப்பொழுது, **उपरोद्धुं** - நிர்ப்பந்திப்பதற்கு, **न अभ्युत्सहे** - தைர்யம் கொள்ளவில்லை (விரும்பவில்லை).

(க-து) "குருவிற்கு நான் தரவேண்டிய தொகையோ மிக அதிகம். அரசர் என்ற பெயர் மாத்திரமே இப்பொழுது தங்களுக்கு எஞ்சியுள்ளது. செல்வம் எதுமில்லை. ஆகையால் இச்சமயம் தங்களை நிர்ப்பந்திக்க நான் தைரியம் கொள்ளவில்லை."

इत्थं द्विजेन द्विजराजकान्तिरावेदितो वेदविदां वरेण ।

एनोनिवृत्तेन्द्रियवृत्तिरेनं जगाद भूयो जगदेकनाथः ॥ २३ ॥

**द्विज-राज-कान्तिः** - சந்திரன் போல் ஒளியுடையவனும், **एनः-निवृत्त-इन्द्रियवृत्तिः** - பாபத்திலிருந்தது விலகிய இந்திரியங்களின் செயலையுடையவனும், **जगदेकनाथः** - உலகத்தின் ஒப்பற்ற அரசனுமான, **सः** - அவன் (ரகு), **वेदविदां** - வேதமறிந்தவர்களுள், **वरेण** - சிறந்த, **द्विजेन** - பிராம்மணரால், **इत्थम्** - இவ்வாறு, **आवेदितः** - தெரிவிக்கப்பட்டவனாக, **एनम्** - அந்தப் பிராம்மணரை நோக்கி, **भूयः**-மேலும், **जगाद**- சொன்னான்.

(க-து) இவ்வாறு கௌத்ஸர் கூறியதைக் கேட்ட ரகு, சிறிதும் கவலை கொள்ளவில்லை. எப்படியும் கௌத்ஸர் விரும்பிய அளவு பொன்னைத்தான் தரமுடியும் என்ற நம்பிக்கையுடனிருந்ததால் ரகு, சந்திரன் போல் பொலிவுடன் விளங்கினான். குற்றம் கூறத்தகும் காரியங்களை அறவே வெறுத்தவன் அவன். ஆதலால் முனிவருக்கு உதவி செய்ய உறுதிகொண்டு பேச ஆரம்பித்தான்.

गुर्वर्थमर्थी श्रुतपारदृश्वा रघोः सकाशादनवाप्य कामम् ।

गतो वदान्यान्तरमित्ययं मे मा भूत् परीवादनवावतारः ॥ २४ ॥

**श्रुत-पार दृश्वा** - சாஸ்திரங்களின் கரையைக் கண்டவரும், **गुर्वर्थं अर्थी** - குருவிற்காக யாசகருமான ஒருவர், **रघोः सकाशात्** - ரகுவினிடமிருந்து, **कामं** - விருப்பத்தை, **अनवाप्य** - அடையாமல், **वदान्यान्तरं** - வேறு ஒரு கொடை

யாளிவை, **गतः**-அடைந்தார்,'' **इति**-என, **अयं**-இந்த, **परीवाद-नव-अवतारः**- அபவாதத்தின் புதிய தோற்றம், **मे** - எனக்கு, **मा भूत्** - உண்டாக வேண்டாம்.

(க-து) "குருதக்ஷிணை வேண்டி வந்தவர் ரகுவிடம் அதைப் பெருமல் வேறு ஒருவரிடம் சென்றார்" என்ற அபகீர்த்தி-இதுவரையில் இல்லாதது-இப்பொழுது எனக்கு உண்டாகுதல் கூடாது.

स त्वं प्रशस्ते महिते मदीये वसंश्चतुर्थोऽग्निरिवाग्न्यगारे ।
द्वित्राण्यहान्यर्हसि सोढुमर्हन् यावद्यते साधयितुं त्वदर्थम् ॥ २५ ॥

**सः** அப்படிப்பட்ட, **त्वं** - நீர், **महिते** - பூஜிக்கப்பட்டதும், **प्रशस्ते** - புகழ் பெற்றதுமான, **मदीये** - என்னுடைய, **अग्न्यगारे** - அக்னிஹோத்ர கிருஹத்தில், **चतुर्थः** - நான்காவது, **अग्निरिव** - அக்கினியைப்போல், **वसन्** - வஸித்துக் கொண்டு, **द्वित्राणि** - இரண்டு அல்லது மூன்று, **अहानि** - தினங்கள், **सोढुं** - பொறுத்துக் கொள்ள, **अर्हसि** - தகுதியுள்ளவராய் இருக்கிறீர்; **हे अर्हन्** - பூஜிக்கத்தக்கவரே, **त्वदर्थं** - உம்முடைய காரியத்தை, **साधयितुं** - சாதிக்க, **यावत् यते** - முயல்வேன்.

(க-து) 'எனது அக்கினிஹோத்திரசாலையில் தங்கி, இரண்டு அல்லது மூன்று நாட்கள்வரை பொறுத்திருங்கள். அதற்கிடையில் தங்களது காரியத்தைச் சாதிப்பேன்'.

கௌத்ஸரை அக்கினிக்கு ஒப்பிட்டுக் கூறியது அவருடைய பரிசுத்தத் தன்மையைக் கருதி. மிகப் பரிசுத்தரான அவர் தங்கி இருப்பதற்குத் தகுந்த இடம் யாக சாலையாகுமாதலால் ரகு, கௌத்ஸரை அங்குத் தங்கி இருக்க வேண்டினன். அக்னிசாலையில், கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணக்னி என மூன்று அக்னிகள் இருப்பதால் கௌத்ஸர் நான்காவது அக்னியாகக் கூறப்படுகிறார்.

तथेति तस्यावितथं प्रतीतः प्रत्यग्रहीत् संगरमग्रजन्मा ।
गामात्तसारां रघुरप्यवेक्ष्य निष्क्रष्टुमर्थं चकमे कुबेरात् ॥ २६ ॥

**अग्रजन्मा** - பிராம்மணர், **प्रतीतः** - சந்தோஷமடைந்தவராக, **तस्य** - அரசனுடைய, **अवितथं** - உண்மையான, **संगरं**- பிரதிஜ்ஞையை, "**तथेति** - அப்படியே" என, **प्रत्यग्रहीत्** - ஏற்றுக்கொண்டார். **रघुरपि** - ரகுவும், **गां** - பூமியை, **आत्तसारां** - கிரஹிக்கப்பட்ட ஐசுவர்யத்தை யுடையதாக, **अवेक्ष्य** - அறிந்து, **कुबेरात्** - குபேரனிடமிருந்து, **अर्थम्** - தனத்தை, **निष्क्रष्टुम्** - கொண்டுவர, **चकमे** - விரும்பினன்.

(க-து) திக் விஜயத்திற்காகச் சென்ற ரகு, அரசர்களிடமிருந்து செல்வத்தை எல்லாம் முன்பே எடுத்துக் கொண்டு விட்டதால் மறுபடியும் அரசர்களிடம் செல்ல விரும்பவில்லை. குபேரனிடமிருந்து பணத்தைப் பெறவிரும்பினன்.

वसिष्ठमन्त्रोक्षणजात् प्रभावादुदन्वदाकाशमहीधरेषु ।
मरुत्सखस्येव बलाहकस्य गतिर्विजघ्ने न हि तद्रथस्य ॥ २७ ॥

**वसिष्ठ-मन्त्र-उक्षणजात्** - வசிஷ்டரின் - மந்திரத்துடன் கூடிய ப்ரோக்ஷணத்தினல் உண்டான, **प्रभावात्**-சக்தியினல் **उदन्वत् - आकाश-महीधरेषु** - ஸமுத்திரம் ஆகாசம் பர்வதம் இவைகளில், **मरुत्सखस्य**-காற்றின் நண்பனுன, **बलाहकस्येव** - மேகத்தின் (சஞ்சாரம்) போல், **तद्रथस्य** - அவ்வரசனுடைய ரதத்தின், **गतिः** - சஞ்சாரம், **न विजघ्ने हि** - தடை செய்யப் பட்டதில்லை.

(க-து) காற்றின் பலத்தினல் மேகம், கடல்மேலும் ஆகாசத்திலும் மலைகளிலும் செல்வது போல், வஸிஷ்டரின் அருளால், ரகுவின் ரதம், தடையின்றி எங்கும் செல்லச் சக்தி வாய்ந்ததாக இருந்தது. ஆதலால் குபேரனுடைய இடத்திற்குச் செல்வதில் அதற்குத் தடை ஏதுமில்லை,

अथाधिशिश्ये प्रयतः प्रदोषे रथं रघुः कल्पितशस्त्रगर्भम् ।
सामन्तसंभावनयैव धीरः कैलासनाथं तरसा जिगीषुः ॥ २८ ॥

**अथ** -பிறகு, **प्रदोषे**-முன்னிரவிலேயே, **प्रयत**. - பரிசுத்த னும், **धीर**:-தைர்யமுடையவனுமான, **रघु**:-ரகு மஹாராஜன் **सामन्त - संभावनयैव** - சிற்றரசன் என்ற எண்ணத்துட னேயே, **कैलासनाथम्** - குபேரனை, **तरसा** - பலத்தினால், **जिगीषुः** - ஜயிக்க விரும்பியவனாக, **कल्पित-शस्त्र-गर्भं** - ஆயுதங்கள் வைக்கப்பட்ட, **रथं** - ரதத்தில், **अधिशिश्ये** - படுத்துக்கொண்டான்.

(க-து) குபேரனைத் தேவர்களில் ஒருவனாக ரகு கருதவில்லை. தன்னுடைய சிற்றரசர்களில் ஒருவனாகவே எண்ணினான். அவனை வென்று செல்வத்தைப்பெற விரும்பி யுத்தத்திற்கு வேண்டிய ஆயுதங் கள் வைக்கப்பட்டுள்ள ரதத்தில், மறுநாள் காலையில் புறப்பட விருந்த ரகு, முதல் நாள்முன்னிரவிலேயே ஏறி அமர்ந்தான்.

வாஹனத்தில் அமர அதுவே சிறந்த காலம் என்பர் மல்லிநாதர்.

प्रातः प्रयाणाभिमुखाय तस्मै सविस्मयाः कोषगृहे नियुक्ताः ।
हिरण्मयीं कोषगृहस्य मध्ये वृष्टिं शशंसुः पतितां नभस्तः ॥ २९ ॥

**प्रातः** - காலையில், - **प्रयाण-अभिमुखाय** - புறப்படத் தயா ராக இருந்த, **तस्मै**-அவ்வரசனிடம், **कोशगृहे** - நிதி அறை யில், **नियुक्ताः** - நியமிக்கப்பட்டவர்கள், **सविस्मयाः** - ஆச் சர்யம் அடைந்தவர்களாய், **कोशगृहस्य** - நிதி அறையின், **मध्ये** - நடுவில், **नभस्तः** - ஆகாசத்தினின்றும், **पतितां** - விழுந்த, **हिरण्मयीं** **वृष्टिं** - பொன் மாரியைப்பற்றி, **शशंसुः** - சொன்னார்கள்.

(க-து) விடியற்காலையில் ரகு புறப்படும் தறுவாயில், நிதி யறையைப் பாதுகாப்பதில் நியமிக்கப்பட்டுள்ள அதிகாரிகள் ஆச்சரி

யத்துடன் வந்து, நிதி யறையின் நடுவில் பொன்மாரி பெய்ததெனத் தெரிவித்தனர்.

ரகு வரப்போவதை உணர்ந்த குபேரன், பொன் மாரி பெய்வித்து, ரகுவின் தேவைக்கு அதிகமாகவே பொற் குவியலை அளித்தான்.

तं भूपतिर्भासुरहेमराशिं लब्धं कुबेरादभियास्यमानात् ।
दिदेश कौत्साय समस्तमेव पादं सुमेरोरिव वज्रभिन्नम् ॥ ३० ॥

**भूपतिः** - அரசன், **अभियास्यमानात्** - எதிர்க்கப்பட விருந்த, **कुबेरात्** - குபேரனிடமிருந்து, **लब्धं** - கிடைக்கப் பெற்றதும், **वज्रभिन्नम्** - வஜ்ராயுதத்திஞல் பிளக்கப்பட்ட, **सुमेरोः**-மேரு பர்வதத்தின், **शृङ्गमिव** - சிகரம்போல், (**स्थितं**) - இருந்ததுமான, **तं** - அந்த, **भासुर-हेमराशिं** - பிரகாசிக்கின்ற தங்கக் குவியல், **समस्तमेव** - முழுவதையுமே, **कौत्साय** - கௌத்ஸர் பொருட்டு, **दिदेश** - கொடுத்தான்.

(க-து) குபேரனிடமிருந்து பெற்ற அப்பொற் குவியல் முழு வதையும் ரகு கௌத்ஸருக்கு அளித்தான்; ஒளிருகின்ற அப்பொற் குவியல், வஜ்ராயுதத்திஞல் வெட்டி வீழ்த்தப்பட்ட மேருமலையின் சிகரம்போல் காணப்பட்டது.

மேருமலை முழுவதும் பொன்ஞலானது என்பர்.

जनस्य साकेतनिवासिनस्तौ द्वावप्यभूतामभिनन्द्यसत्त्वौ ।
गुरुप्रदेयाधिकनिस्स्पृहोऽर्थी नृपोऽर्थिकामादधिकप्रदश्च ॥ ३१ ॥

**गुरु - प्रदेय - अधिक - निस्स्पृहः** - குருவிற்குக் கொடுக்க வேண்டியதைக் காட்டிலும் அதிகமான பொருளில் ஆசை யில்லாத, **अर्थी** - யாசகரும், **अर्थिकामात्** - யாசகரின் விருப் பத்தைக் காட்டிலும், **अधिक-प्रदः** - அதிகம் கொடுக்கின்ற, **नृपश्च** - அரசனுமாகிய, **तौ** - அந்த, **द्वावपि** - இருவரும், **साकेतनिवासिनः** - அயோத்தியில் வசிக்கும், **जनस्य** - ஜனங்

களால், **अभिनन्द्यसत्त्वौ** - கொண்டாடத் தகுந்த பெருந் தன்மை யுடையவர்களாக, **अभूताम्** - இருந்தார்கள்.

(க-து) குபேரன் கொடுத்த பொன், பதினான்கு கோடிகளுக்கு அதிகம் இருந்தது ; அவ்வளவையும் கௌத்ஸரே எடுத்துக்கொள்ள வேண்டுமென்று ரகு வற்புறுத்தினான். கௌத்ஸரோ பதினான்கு கோடிக்குமேல் ஒருபொற் காசையும் ஏற்க மறுத்தார். இவ்வாறு ஒரு விநோதமான முறையில் யாசகருக்கும் கொடையாளிக்கு மிடையே உண்டான விவாதத்தைக் கண்டு அயோத்தியா நகர ஜனங்கள், இருவரின் பெருந்தன்மையை அறிந்து அவர்களைக் கொண்டாடினர்.

விவாதம் எவ்வாறு முடிந்தது ? கௌத்ஸர் அவ்வளவு பொன்னையும் எடுத்துக் கொண்டாரா ? இல்லையா ? விவாதத்தில் வென்றவர் யார் ? இதை எல்லாம் காவ்யம் படிப்பவர்களின் ஊஹத்திற்கு விட்டுவிட்டார் கவி.

अथोष्ट्रवामीशतवाहितार्थं प्रजेश्वरं प्रीतमना महर्षिः ।
स्पृशन् करेणानतपूर्वकायं संप्रस्थितो वाचमुवाच कौत्सः ॥ ३२ ॥

**अथ** - பிறகு, **प्रीत-मनाः** - திருப்தி அடைந்த மனமுடைய, **महर्षिः कौत्सः** - மஹரிஷி கௌத்ஸர், **संप्रस्थितः** - புறப்படுகின்றவராக, **उष्ट्र-वामी-शत-वाहित-अर्थं** - பல ஒட்டகங்கள், பெண் குதிரைகள் இவைகளின் மேல் பணத்தை ஏற்றியவனும், **आनत-पूर्वकायं** - (விநயத்தினால்) வணங்கிய முன் சரீரமுடையவனுமான, **प्रजेश्वरं** - அரசனை, **करेण** - கையினால், **स्पृशन्** - தொட்டுக் கொண்டு, **वाचं** - இவ்வார்த்தையை, **उवाच** - சொன்னார்.

(க-து) விரும்பியகாரியம் சீக்கிரமே கைகூடியதால் கௌத்ஸர் மிகமகிழ்ச்சியுற்றார். அவர் புறப்படத்தயாரான பொழுது, அப்பொன் முழுவதையும் நூற்றுக்கணக்கான ஒட்டகங்கள்மீதும் குதிரைகள் மீதும் ரகு ஏற்றியனுப்பினான். இவ்வளவு பெரிய உபகாரத்தைச் செய்தும், அவன் சிறிதும் காவமின்றி விநயத்தினால் வணக்கத்துடன்

கௌத்ஸர் அருகில் நிற்க, அவர், அன்பு தோன்ற அரசனைத் தமது கரங்களால் ஸ்பர்சித்துக் கொண்டு பேசத் தொடங்கினார்.

பிரஜைகளுக்குத் தலைவனான சக்கரவர்த்தி ஒருவன், அறிஞர் ஒருவரைப் போற்றிய முறை கவனிக்கத்தக்கதாகும்.

किमत्र चित्रं यदि कामसूर्भूर्वृत्ते स्थितस्याधिपतेः प्रजानाम् ।
अचिन्तनीयस्तु तव प्रभावो मनीषितं द्यौरपि येन दुग्धा ॥ २३ ॥

**वृत्ते** - நன்னெறியில், **स्थितस्य** - இருக்கின்ற, **प्रजानां-अधिपतेः** - அரசருக்கு, **भूः** - பூமியானது, **कामसूः यदि** - விரும்பியதைக் கொடுக்கிறதாயின், **अत्र** - இவ்விஷயத்தில், **किं चित्रम्** - என்ன ஆச்சரியம்? **किंतु** - ஆனால், **येन**-(எந்த) உம்மால், **द्यौरपि** - ஆகாசமும்கூட, **मनीषितं**-விரும்பியதை, **दुग्धा**-கறக்கப்பட்டதோ, **तव**- (அப்படிப்பட்ட) உம்முடைய, **प्रभावः** - மஹிமை, **अचिन्तनीयः** - நினைக்கவும் முடியாதது.

(க-து) நெறியுடன் இருக்கின்ற அரசனுக்குப் பூமி, அவன் விரும்பியதை எல்லாம் தரும். இது ஒரு பெரிய ஆச்சரியமான விஷயமன்று. நன்னெறியில் இருக்கின்ற உமக்குப் பூமி மாத்ரமின்றி ஆகாசமும் கூட நீர் விரும்பிய பொருளை யீந்தது என்பது பேராச்சரியமாகும். உமது பெருமை நினைக்கவும் முடியாததாக உள்ளது."

**वृत्तम्** - என்பது அரசர்கள் செய்ய வேண்டிய நான்கு வகைக் கடமைகளைக் குறிக்கின்றது: அவை:- நியாயமான வழியில் பொருளீட்டல், ஈட்டிய பொருளை விருத்தி செய்தல், ஈட்டியதும் விருத்தி செய்யப்பட்டதுமான பொருளைப் பாதுகாத்தல், பாதுகாக்கப்பட்ட பொருளை ஸத்பாத்திரத்தில் உபயோகித்தல் என்பனவாம்.

आशास्यमन्यत् पुनरुक्तभूतं श्रेयांसि सर्वाण्यधिजग्मुषस्ते ।
पुत्रं लभस्वात्मगुणानुरूपं भवन्तमीड्यं भवतः पितेव ॥ २४ ॥

**सर्वाणि** - எல்லா, **श्रेयांसि**-நன்மைகளையும், **अधिजग्मुषः**-

அடைந்திருக்கும், **ते** - உமக்கு, **आशास्यं** - ஆசீர்வதிக்கத் தக்க, **अन्यत्** - வேறு எதுவும், **पुनरुक्तभूतं** - கூறியது கூறல் போல் ஆகும்; **अतः** - ஆகையால், **ईड्यं** - புகழத் தகுந்த, **भवन्तं** - உம்மை, **भवतः** - உம்முடைய, **पिता इव** - தந்தை (புத்திரனுக அடைந்தது) போல், **आत्म-गुण-अनुरूपं** - உமது குணங்களுக்குத் தகுந்த, **पुत्रं** - குமாரனை, **लभस्व**-அடைவீராக.

(க-து) "ஸகலவிதமான நன்மைகளும் பெற்றுள்ள உமக்கு நான் ஆசீர்வதிக்க என்ன இருக்கிறது? எவ்விதமான ஆசீர்வாதமும் உமக்கு உள்ளதையே கூறுவதால் புனருக்தம் என்ற குற்றத்தின் பாற்படும். ஆனல் ஒன்று கூறுவேன். உமது தந்தை, புகழ் பெற்ற உம்மை மகனுகப் பெற்றது போல், நீரும் உமது குணங்களுக்கு ஒத்த மகனைப் பெறுவீராக."

इत्थं प्रयुज्याशिषमग्रजन्मा राज्ञे प्रतीयाय गुरोः सकाशम् ।
राजापि लेभे सुतमाशु तस्मादालोकमर्कादिव जीवलोकः ॥ ३५ ॥

**अग्रजन्मा** - (கௌத்ஸர்) பிராம்மணர், **इत्थं** - இவ்வாறு, **राज्ञे** - அரசருக்கு, **आशिषं** - ஆசீர்வாதத்தை. **प्रयुज्य**-செய்து, **गुरोः सकाशं** - குருவின் சமீபம், **प्रतीयाय** - சென்றார்; **राजाऽपि** - அரசனும், **जीवलोकः** - பிராணிகள், **अर्कात्** - சூர்யனிடமிருந்து, **आलोकमिव** - பிரகாசத்தைப் (பெறுவது) போல், **तस्मात्** - ஆசீர்வாதத்தினல், **आशु** - சீக்கிரமாக, **सुतं** - குமாரனை, **लेभे** - அடைந்தான்.

(க-து) இவ்வாறு கூறி ஆசீர்வதித்த பின் கௌத்ஸர் தம் குருவினிடம் சென்றார். அரசனும், முனிவரரின் ஆசீர்வாத பலத்தால் ஒரு மகனை அடைந்தான்.

ब्राह्मे मुहूर्ते किल तस्य देवी कुमारकल्पं सुषुवे कुमारम् ।
अतः पिता ब्रह्मण एव नाम्ना तमात्मजन्मानमजं चकार ॥ ३६ ॥

**तस्य** - அந்த அரசனுடைய, **देवी** - பட்ட மஹிஷி,

**ब्राह्मे** - பிரம்மாவைத் தேவதையாக உடைய, **मुहूर्ते** - முகூர்த் தத்தில் (பொழுதில்), **कुमारकल्पं** - ஸுப்ரஹ்மண்யனுக்குச் சமனான, **कुमारं** - புத்திரனை, **सुषुवे** - பெற்றாள்; **अतः** - ஆகையால், **पिता** - தகப்பன், **तं** - அந்த, **आत्मजन्मानं** - புத்தி ரனை, **ब्रह्मणः एव** - பிரம்மாவினுடையதேயான, **नाम्ना** - பெய ரினால், **अजं** - அஜன் என்று, **चकार** - செய்தான்.

(க-து) சூரியன் உதிப்பதற்கு முன்னுள்ள மூன்றரை நாழிக்குப் பிராஹ்ம முகூர்த்தம் எனப் பெயர். ஏனெனில் அப் பொழுதிற்கு அதி தேவதையாக இருப்பவர் பிரம்ம தேவர். ரகுவின் பட்டமகிஷி, பிரம்ம தேவரின் பொழுதான அம் முகூர்த்தத்தில் ஒரு மகனைப் பெற்றாள். பிராஹ்ம முகூர்த்தத்தில் பிறந்த காரணத்தால் அம்மகனுக்கு ரகு, பிரஹ்மதேவரின் பெயர்களுள் ஒன்றான அஜன் என்பதைப் பெயராக வைத்தான்.

रूपं तदोजस्वि तदेव वीर्यं तदेव नैसर्गिकमुन्नतत्वम् ।
न कारणात् स्वाद्बिभिदे कुमारः प्रवर्तितो दीप इव प्रदीपात् ॥३७॥

**ओजस्वि** - பலமுள்ள, **रूपं** - சரீரமும், **तदेव**-அதுவே; (பிதாவினுடையதே); **वीर्यम्** - வீர்யமும், **तदेव** - அஃதே; **नैसर्गिकं** - இயற்கையான, **उन्नतत्वं** - பெருந்தன்மையும் (உயரமும்), **तदेव** - அஃதே; **कुमारः** - ராஜ குமாரன், **प्रवर्तितः** - ஏற்றிய, **दीपः** - விளக்கு, **प्रदीपात् इव** ஏற்றப்பட்ட விளக்கினின்றும் (வேறுபடாதது) போல், **स्वात्** - தன்னு டைய, **कारणात्** - காரணமான பிதாவினின்றும், **न बिभिदे** - வேறுபடவில்லை.

(க-து) மகன் தந்தையைக்காட்டிலும் எவ்வகையிலும் வேறு படாது இருந்தான்; உருவம், பலம், பெருந்தன்மை ஆகிய எல்லாவற் றிலும் தந்தையைப்போலவே மகனும் இருந்தான்.

ஒருவிளக்கு மற்றொரு விளக்கிலிருந்து ஏற்றப்பட்டி ருப்பினும் அவைகளுக்குள்வித்தியாசமில்லை. அஃதேபோல் தந்தையும் மகனும் குணங்களில் ஒத்திருந்தனர்.

उपात्तविद्यं विधिवद्गुरुभ्यस्तं यौवनोद्भेदविशेषकान्तम् ।
श्रीः साभिलाषापि गुरोरनुज्ञां धीरेव कन्या पितुराचकाङ्क्ष ॥ ३८॥

**गुरुभ्यः** - உபாத்தியாயர்களிடமிருந்து, **विधिवत्** - முறைப்படி, **उपात्त-विद्यं** - கல்விகற்றவனும், **यौवन - उद्भेद-विशेष-कान्तं** - யௌவனத் தோற்றத்தால் அதிக அழகுடைய வனுமான, **तं** - அவனிடம், **श्रीः** - ராஜ்யலக்ஷ்மி, **साभिला-षाऽपि** - ஆசையுள்ளவளாயினும், **धीरा** - நற்குணமுள்ள, **कन्या** - பெண், **पितुः** - தந்தையின், **अनुज्ञां इव** - அனுமதியை (எதிர்பார்ப்பது) போல, **गुरोः** - தந்தையின் (ரகுவின்), **अनुज्ञां** - அனுமதியை, **आचकाङ्क्ष** - விரும்பினாள். (எதிர் பார்த்தாள்.)

(க-து) அஜன், முறையே ஆசிரியர்களிடம் கல்வி பயின்றான். யௌவனப் பருவத்தையுமடைந்தான்; நற்குணமுள்ள பெண் ஒருத்தி, ஒருவனிடம் அன்புகொண்டு அவனைக் கணவனாக அடைய விரும் பினும் தனது தந்தையின் உத்தரவை எதிர்பார்த்திருப்பது போல ராஜ்யலக்ஷ்மி அஜனை இளவரசனாக அடையவிரும்பினாளாயினும்' ரகுவின் உத்தரவை எதிர்பார்த்திருந்தாள்.

அஜன் இளவரசுப் பதவியை ஏற்பதற்கும், விவாஹம் செய்து கொள்வதற்குகுரிய பருவத்தை அடைந்தான் என்பது பொருள்.

अथेश्वरेण क्रथकैशिकानां स्वयंवरार्थं स्वसुरिन्दुमत्याः ।
आप्तः कुमारानयनोत्सुकेन भोजेन दूतो रघवे विसृष्टः ॥ ३९ ॥

**अथ** - பிறகு, **स्वसुः** - ஸஹோதரியான, **इन्दुमत्याः** - இந்துமதியின், **स्वयंवरार्थम्** - ஸ்வயம்வரத்திற்காக, **कुमार-आनयन-उत्सुकेन** - அஜனை அழைத்துவர ஆவலுடையவனும், **क्रथकैशिकानां** - விதர்ப்ப தேசத்திற்கு, **ईश्वरेण** - அரசனு மான, **भोजेन** - போஜ ராஜனால், **आप्तः** - நம்பிக்கைக்குரிய,

दूतः - ஒரு தூதன், रघवे - ரகுவின் பொருட்டு, विसृष्टः - அனுப்பப்பட்டான்.

(க-து) போஜன், தன் ஸஹோதரி இந்துமதியின் ஸ்வயம் வரத்திற்காக, அஜனை அழைத்துவரத் தூதன் ஒருவனை ரகுவிடம் அனுப்பினான்.

"क्रथकैशिका: க்ஷத்திரியர்களில் ஒரு வகையினர். அவர்கள் விதர்ப்ப நாட்டை அரசாண்டு வந்தனர். ஆதலால் அந்நாடு क्रथकैशिकम् எனப்படும்.

तं श्लाघ्यसंबन्धमसौ विचिन्त्य दारक्रियायोग्यदशं च पुत्रम् ।
प्रस्थापयामास ससैन्यमेनमृद्धां विदर्भाधिपराजधानीम् ॥ ४० ॥

असौ - ரகு மகாராஜன், तं - போஜராஜனை, श्लाघ्य-संबन्धं - ஸம்பந்தம் செய்யத்தக்கவன் எனவும், पुत्रं-புதல்வனை அஜனை, दारक्रिया-योग्य-दशं च - விவாஹத்திற்குத் தக்க பருவமுடையவன் எனவும், विचिन्त्य-எண்ணி, ससैन्यं- ஸைனியத்தோடு கூடிய, एनं - இவனை (அஜனை), ऋद्धां - ஐசுவரியம் நிறைந்த, विदर्भाधिप-राजधानीं - விதர்ப்ப தேசத்தின் தலைநகரத்திற்கு, प्रस्थापयामास - பிரயாணப்படுத்தினான்.

(க-து) போஜனுடைய ஸம்மதம் விரும்பத்தக்கதென்றும், அஜன் விவாஹம் செய்து கொள்ளத்தக்க பருவம் அடைந்துள்ளானெனவும் கருதி, ரகு அஜனைப் பரிவாரங்களுடன் ஸ்வயம்வரத்திற்குச் செல்ல அனுப்பினான்.

तस्योपकार्यारचितोपचारा वन्येतरा जानपदोपदाभिः ।
मार्गे निवासा मनुजेन्द्रसूनोर्बभूवुरुद्यानविहारकल्पाः ॥ ४१ ॥

तस्य - அந்த, मनुजेन्द्रसूनोः - ராஜகுமாரனுக்கு, मार्गे - வழியில், निवासाः - தங்குமிடங்கள், उपकार्या - रचित - उपचाराः - கூடாரங்களில அமைக்கப்பட்ட உபசாரப் பொருள்களை யுடையனவாகவும், जानपद-उपदाभिः - கிராம

ஜனங்களின் காணிக்கைகளால், **वन्येतराः** - காட்டில் இல்லாதவைகளாகவும், **सन्तः** - இருந்துக்கொண்டு, **उद्यान-विहारकल्पाः** - உல்லாஸத் தோட்டங்களிலுள்ள விளையாடு மிடங்கள் போன்று, **बभूवुः** - இருந்தன.

(க-து) அஜன் ஸ்வயம்வரத்திற்குச் செல்லும்பொழுது காட்டின் வழியே செல்லவேண்டியிருந்தது. அவன் சென்ற வழியில் அவன் தங்கியிருப்பதற்குக் கூடாரங்கள் அமைக்கப் பட்டிருந்தன. கூடாரங்களில் அவனுடைய வசதிக்குத் தேவையான படுக்கை, இருக்கை முதலியன எல்லாம் இருந்தன. அஜனது வருகையறிந்து அவனது நாட்டிலுள்ள ஜனங்கள் பலவகைப் பொருளையும் காணிக்கைகளாக அவனுக்கு அளித்தனர். அப் பொருள்கள் கூடாரம் எங்கும் நிறைந்திருந்தபடியால், காட்டிலுள்ளதுபோல் தோன்றுமல் நகரத்தின் மத்தியில் இருப்பது போன்றே காணப்பட்டன. வன மத்தியில் அவன் தங்கியிருந்த இடங்கள் நகரத்தின் உத்யான வனத்திடையே விளையாடுவதற்காக அமைக்கப்பட்டுள்ள இடங்கள் போலிருந்தன.

. அஜன் எல்லாவிதமான வசதிகளுடனும் பிரயாணம் செய்தான் என்பது கருத்து.

स नर्मदारोधसि सीकरार्द्रैर्मरुद्भिरानर्तितनक्तमाले ।
निवेशयामास विलङ्घिताध्वा क्लान्तं रजोधूसरकेतु सैन्यम् ॥ ४२ ॥

**विलङ्घित-अध्वा**-(சிறிது) வழிகடந்த, **सः**-அந்த அஜன், **सीकर आर्द्रैः**-ஜலத்திவலைகளால் ஈரமான (குளிர்ந்த), **मरुद्भिः**-காற்றினல், **आनर्तित-नक्तमाले** - அசைக்கப்பட்ட நக்தமால விருக்ஷங்களையுடைய, **नर्मदा-रोधसि**-நர்மதையின் கரையில், **क्लान्तं** - களைப்படைந்ததும், **रजो-धूसर-केतु** - புழுதி படிந்த த்வஜங்களையுடையதுமான, **सैन्यं** - ஸைன்யத்தை, **निवेशयामास** - இருக்கச் செய்தான்.

(க-து) அஜன், நர்மதையின் கரையில் சேனைகளோடு தங்கினன்.

अथोपरिष्टाद्भ्रमरैर्भ्रमद्भिः प्राक्सूचितान्तःसलिलप्रवेशः ।
निर्धौतदानामलगण्डभित्तिर्वन्यः सरित्तो गज उन्ममज्ज ॥ ४३ ॥

**अथ** - பிறகு, **उपरिष्टात्** - மேலே, **भ्रमद्भिः** - வட்டமிடுகின்ற, **भ्रमरैः** - வண்டுகளினால், **प्राक्** முதலில், **सूचित-अन्तः-सलिल-प्रवेशः** - அறிவிக்கப்பட்ட, ஜலப்பிரவேசத்தையுடையதும், **निर्धौत-दान-अमल गण्डभित्तिः** - மதஜலம் நன்றாக அலம்பப்பட்டதால் சுத்தமான சிறந்த கன்னங்களையுடையதுமான, **वन्यः गजः** - காட்டு யானை, **सरित्तः** - நதியிலிருந்து, **उन्ममज्ज** - எழுந்தது.

*(க-து) அஜன், நர்மதையின் கரையில் தங்கியிருந்தபொழுது ஆற்றினின்றும் வெளிவந்த யானை ஒன்றைக் கண்டான். யானை நீரில்மூழ்கியதை அவன் காணவிடினும் யானை நீரிலுள்ளதென்பது, நீருக்கு மேல் வண்டுகள்வட்டமிட்டுக் கொண்டிருந்ததால் ஊஹிக்க முடிந்தது. அவ்வண்டுகள் யானை நீரில் மூழ்குவதற்கு முன் மதஜலவாசனையால் கவரப்பட்டு யானையின் மஸ்தகத்தில் இருந்தன. யானை நீரில் மூழ்கியதும் அவைகள் நீருக்குமேலே பறந்து கொண்டிருந்தன. தண்ணீரில் மூழ்கி எழுந்ததால் மத்தகத்தினின்றும் பெருகிய மதஜலம் அலம்பப்பட்டு யானையின் கன்னங்கள் சுத்தமாக இருந்தன.*

निश्शेषविक्षालितधातुनापि वप्रक्रियामृक्षवतस्तटेषु ।
नीलोर्ध्वरेखाशबलेन शंसन् दन्तद्वयेनाश्मविकुण्ठितेन ॥ ४४ ॥

**निश्शेष - विक्षालित - धातुनाऽपि** - முழுதுமலம்பப்பட்ட செங்காவிப்பொடி யுடையனவாயினும், **नील - ऊर्ध्वरेखा - शबलेन**-நீலமான மேல்நோக்கிய கோடுகளால் பலநிறமுடையனவும், **अश्मविकुण्ठितेन** - கற்களில் (முட்டுவதால்) மழுங்கியனவுமான, **दन्तद्वयेन**-இரண்டு தந்தங்களினால், **ऋक्षवतः**-ரிக்ஷவான் என்னும் மலையினுடைய, **तटेषु**-அடிவாரங்களில்,

**वप्रक्रियां** - முட்டி விளையாடியதை, **शंसन्** - தெரிவிக்கின்ற, (**वन्यः गजः** - காட்டு யானை, **सरित्तः** - நதியினின்றும், **उन्ममज्ज** - வெளி வந்தது).

(க-து) நீரிலிருந்து வெளிவந்த யானை, நீரில் மூழ்குவதற்கு முன் விளையாடியுள்ளது. அருகிலுள்ள ரிக்ஷவான் என்ற மலையின் சரிவில் முட்டி விளையாடிய பொழுது அதன் தந்தங்களில் ஒட்டிக் கொண்ட செங்காவிப்பொடிகள் நீரில் நன்கு அலம்பப்பட்டனவாயினும் கற்கள் கீறியதால் உண்டான நீலநிறக் கோடுகள் தந்தங்களில் காணப்பட்டன. கற்களில் முட்டியதால் தந்தங்களின் முனை மழுங்கியிருந்தது. இவ் வடையாளங்களைக் கொண்டு அந்த யானை, பர்வதத்தில் முட்டி விளையாடியுள்ளதென்பது புலப்பட்டது.

**धातुः** - மலைகளில் உள்ள காவிக் கற்களின் பொடி.

**ऋक्षवान्** - குலபர்வதங்கள் ஏழனுள் ஒன்று.

மற்றவை :—(1) மஹேந்திரம் (2) மலயம் (3) ஸஹ்யம் (4) சுக்திமான் (5) விந்தியம் (6) பாரியாத்ரம் என்பனவாம்.

இச்சுலோகத்தையும் இதற்குமுன்னுள்ள சுலோகத்தையும் சேர்த்து ஓரே வாக்கியமாக வைத்துப்பொருள் கூறுதல் முறையாகும்.

இரண்டு சுலோகங்கள் சேர்க்கப்படின் யுக்மம் எனவும், மூன்று சுலோகங்கள் சேர்க்கப்படின் விசேஷகம் எனவும் நான்கு சேர்க்கப்படின் கலாபகம் எனவும், நான்கிற்கு மேற்பட்ட சுலோகங்கள் சேர்க்கப்படின் குலகம் எனவும் கூறுவர்.

'**वन्यः गजः सरित्तः उन्ममज्ज**' என வருவித்துப் பொருள் கூறப்பட்டது.

संहारविक्षेपलघुक्रियेण हस्तेन तीराभिमुखः सशब्दम् ।
बभौ स भिन्दन् बृहतस्तरंगान् वार्यर्गलाभङ्ग इव प्रवृत्तः ॥ ४९ ॥

**संहार-विक्षेप-लघु-क्रियेण** - மடக்குவதிலும், நீட்டுவதிலும் சீக்ரமான செயலை உடைய, **हस्तेन** - துதிக்கையினால், **सशब्दं** - சத்தத்துடன், **बृहत:** - பெரிய, **तरङ्गान्** - அலைகளை, **भिन्दन्** - பிளந்து கொண்டு, **तीर-अभिमुखः** - கரையை நோக்கிவரும், **स:** - அந்த யானை, **वारी-अर्गलाभङ्गे** - யானைச் சாலையிலுள்ள, தாழை ஒடிப்பதில், **प्रवृत्तः इव** - முயற்சி உடையதுபோல், **बभौ** - விளங்கிற்று.

(க.து) யானை, தன் துதிக்கையை வேகமாக நீட்டியும் மடக்கியும் நதியின் அலைகளை உடைத்துக் கொண்டு கரையை நோக்கிவந்தது. அப்பொழுது, அது, கொட்டிலினின்றும் யானை வெளிவராது இருக்கக் குறுக்கே போடப்பட்டுள்ள தாழை ஒடிக்க முயலுகின்றது போல் காணப்பட்டது.

நர்மதையின் அலைகள், யானைச்சாலையிலுள்ள தாழ் மரங்கள் போலிருந்தன. இவ்வகையான மரத் தாழைக் குதிரைக் கொட்டகைகளிலும் காணலாம்.

शैलोपमः शैवलमञ्जरीणां जालानि कर्षन्नुरसा स पश्चात् ।
पूर्वं तदुत्पीडितवारिराशिः सरित्प्रवाहस्तटमुत्ससर्प ॥ ४६ ॥

**तत्-उत्पीडित-वारिराशिः** - அந்த யானையினால், தள்ளப் பட்ட ஜலத்திரளையுடைய, **सरित्प्रवाहः**-நதியின் பிரவாஹம், **पूर्वं** - முன்பு, **तटं** - கரையை, **उत्ससर्प** - அடைந்தது. **शैलोपमः** - பர்வதத்திற்கு ஒப்பான, **सः** - அந்த யானை, **शैवलमञ्जरीणां** - பாசிக் கொத்துக்களின், **जालानि** - குவியல்களை, **उरसा** - (தன்) மார்பினால், **कर्षन्**-இழுத்துக்கொண்டு, **पश्चात्** - பின்பு, **तटम्** - கரையை, **उत्ससर्प** - அடைந்தது.

(க-து) நதியிலுள்ள பாசிக்கொத்துக்களை இழுத்துக் கொண்டு யானை கரைக்கு வந்தது. ஆனால் யானை கரையை யடைவதற்கு முன்னமேயே அதனால் தள்ளப்பட்ட நீர்த்திரள் கரையின் மேல் பரவியது.

तस्यैकनागस्य कपोलभित्त्योर्जलावगाहक्षणमात्रशान्ता ।
वन्येतरानेकपदर्शनेन पुनर्दिदीपे मददुर्दिनश्रीः ॥ ४७ ॥

**तस्य** - *அந்த,* **एकनागस्य** - *மிகப் பெரிய யானையின்,* **कपोलभित्त्योः** -*விசாலமான கன்னங்களிலிருந்து,* **जल-अवगाह-क्षणमत्र-शान्ता** - *ஜலத்தில் மூழ்கிய(தனால்) க்ஷணநேரம் மாத்திரம் குறைந்த,* **मददुर्दिन श्रीः** - *மத ஜலப்பெருக்கு,* **वन्येतर - अनेकप - दर्शनेन** - *நகர யானைகளைப் பார்த்ததினால்,* **पुनः** - *மறுபடியும்,* **दिदीपे** - *விருத்தி யடைந்தது.*

*(க-து) தனியே இருந்தக் காட்டு யானைக்கு, காட்டினின்றும் வந்துள்ள அஜனுடைய பல யானைகளைக் கண்டதும் மதம் மிக அதிகமாயிற்று.*

सप्तच्छदक्षीरकटुप्रवाहमसह्यमाघ्राय मदं तदीयम् ।
विलङ्घिताधोरणतीव्रयत्नाः सेनागजेन्द्रा विमुखा बभूवुः ॥ ४८ ॥

**सप्तच्छद-क्षीर कटु-प्रवाहं** - *ஏழிலைப்பாலை மரத்தின் பால் போல் வாசனையுள்ள மதப்பெருக்கை உடையதும்,* **असह्यं** - *ஸஹிக்கமுடியாததுமான,* **तदीयं** - *அக்காட்டு யானையினுடைய,* **मदं** - *மத ஜலத்தை,* **आघ्राय** - *முகர்ந்து,* **सेनागजेन्द्राः** - *சேனையிலுள்ள யானைகள்,* **विलङ्घित - आधोरण-तीव्र-यत्नाः** - *யானைப்பாகர்களின் பெரு முயற்சிகளையும் மீறி,* **विमुखाः** - *வேறு திசையை நோக்கியவையாக,* **बभूवुः** -*ஆயின.*

*(க-து) காட்டு யானையின் மதவாசனையை முகர்ந்த மாத்திரத்தில், அஜனுடைய யானைகள் மிரண்டன. யானைகளை அடக்க முயன்ற பாகர்களின் முயற்சிகளும் வீணாயின.*

स च्छिन्नबन्धद्रुतयुग्यशून्यं भग्नाक्षपर्यस्तरथं क्षणेन ।
रामापरित्राणविहस्तयोधं सेनानिवेशं तुमुलं चकार ॥ ४९ ॥

**सः** - அது (காட்டு யானை), **छिन्न-बन्ध-द्रुत-युग्य-शून्यं** - கட்டுக்களை அறுத்துக் கொண்டு ஓடிவிட்டதால் குதிரைகளற்றதும், **भग्न-अक्ष-पर्यस्त-रथं** - அச்சு முறிந்து சிதறிய தேர்களையுடையதும், **रामा-परित्राण विहस्त-योधं** - ஸ்த்ரீகளைக் காப்பாற்றுவதில் குழப்பமடைந்த வீரர்களை யுடையதுமான, **सेनानिवेशम्** - சேனை தங்கியிருக்கும் இடத்தை, **क्षणेन** - க்ஷணநேரத்தில், **तुमुलं चकार** - கலக்கிற்று.

(க-து) காட்டு யானையைக் கண்டு குதிரைகள் எல்லாம் கட்டறுத்துக் கொண்டு ஓடின. ரதங்கள் இங்குமங்கும் தள்ளப்பட்டு அலைகளின் அச்சுகள் முறிந்தன. ஸேனா வீரர் தம் மனைவியரைக் காப்பதில் ஈடுபட்டிருந்தனர். இவ்வாறு அக்கூடாரமெங்கும் குழப்பம் விளைவித்தது அக்காட்டு யானை.

तमापतन्तं नृपतेरवध्यो वन्यः करीति श्रुतवान् कुमारः ।
निवर्तयिष्यन् विशिखेन कुम्भे जघान नात्यायतकृष्टशार्ङ्गः ॥ ५० ॥

"**नृपतेः** - அரசனால், **वन्यः करी** - காட்டு யானை, **अवध्यः** - கொல்லத்தக்கதன்று", **इति** - என்று, **श्रुतवान्** - (சாஸ்திரங்களிலிருந்து) தெரிந்துகொண்ட, **कुमारः** - ராஜ குமாரன், **आपतन्तं** - எதிர்நோக்கி வரும், **तं** - அந்த யானையை, **निवर्तयिष्यन्** - திருப்ப விரும்பியவனாக, **नात्यायत-कृष्ट-शार्ङ्गः** - சிறிதே இழுக்கப்பட்ட வில்லை யுடையவனாய், **विशिखेन** - பாணத்தினால், **कुम्भे** - (அந்த யானையின்) மஸ்தகத்தில், **जघान** - அடித்தான்.

(க-து) "செல்வத்தை விரும்பும் அரசன், யுத்தம் செய்யும் காலம் தவிர பிறசமயங்களில் யானையைக் கொல்லுதல் கூடாது" என சாஸ்திரம் கூறுவதால், அஜன் காட்டு யானையைக் கொல்ல விரும்பாமல், குழப்பம் விளைவிக்கின்ற அதை அச்சுறுத்தி வெருட்டக் கருதி வில்லின் நாணைச் சிறிதே இழுத்து ஒரு பாணத்தினால் யானையின் மத்தகத்தில் மெல்ல அடித்தான்.

स विद्धमात्रः किल नागरूपमुत्सृज्य तद्विस्मितसैन्यदृष्टः ।
स्फुरत्प्रभामण्डलमध्यवर्ति कान्तं वपुर्व्योमचरं प्रपेदे ॥ ९१ ॥

सः - அந்த யானை, विद्धमात्रः (किल) - அடிக்கப்பட்ட மாத்திரத்திலேயே, नागरूप - யானையின் உருவத்தை, उत्सृज्य - விட்டு, तन् - विस्मित - सैन्य - दृष्ट - அதனால் ஆச்சரியமடைந்த பரிவாரங்களினால் பார்க்கப்பட்டு, स्फुरत् - प्रभामण्डल - मध्य - वर्ति - பிரகாசிக்கின்ற ஒளி வட்டத்தின் நடுவில் இருப்பதும், कान्तं - அழகியதும், व्योमचरम् - ஆகாசத்தில், ஸஞ்சரிக்கக் கூடியதுமான, वपुः - (கந்தர்வ) சரீரத்தை, प्रपेदे - அடைந்தது.

(க-து) பாணம் பட்ட மாத்திரத்தில் அந்த யானை, அழகிய சரீரமுள்ள, ஆகாசத்தில் சஞ்சரிக்கும் திறமை பெற்ற கந்தர்வனாக மாறியது. கந்தர்வனைச் சுற்றிலும் ஒளிவட்டமிருந்தது.

இவ்வாறு யானை கந்தர்வனாக மாறியதை ஸேனா வீரர்கள் பெரும் வியப்புடன் நோக்கினர்.

अथ प्रभावोपनतैः कुमारं कल्पद्रुमोत्थैरवकीर्य पुष्पैः ।
उवाच वाग्मी दशनप्रभाभिः संवर्धितोरःस्थलतारहारः ॥ ९२ ॥

अथ - பிறகு, प्रभाव - उपनतैः - (தேவர்களுக்குரிய) சக்தியால் கிடைத்தவையும், कल्प द्रुम - उत्थैः - கல்பகவிருக்ஷத்தில் உண்டானவையுமான, पुष्पैः - புஷ்பங்களை, कुमारं - அஜன் மேல், अवकीर्य - வர்ஷித்து, दशनप्रभाभिः - பற்களின் காந்தியினால், संवर्धित-उरःस्थल-तारहारः - அகன்ற மார்பிலுள்ள சிறந்த முத்துமாலையின் ஒளியை விருத்தி செய்தவனாக, वाग्मी - பேசுவதிற் சிறந்த, सः - அந்த கந்தர்வன், उवाच - சொன்னான்.

(க-து) கந்தர்வன் தனக்குரிய சக்தியினால் தேவலோகத்தில் இருக்கும் புஷ்பங்களைத் தானிருக்கு மிடத்திற்கு வரச் செய்து அப்புஷ்பங்களை அஜன்மேல் பொழிந்தான். பின் பேசத்தொடங்கினான். அவன்பேசியபொழுது அவனது பற்களின் வெண்மையான காந்தி, அவன் மார்பிலுள்ள முத்து மாலையின் வெண்மையான ஒளியுடன் சேர்ந்தபொழுது முத்துமாலையே நீண்டு விட்டதுபோல் காணப்பட்டது.

கந்தர்வனுடைய பற்களின் காந்தி, அவன் மார்பிலுள்ள முத்துமாலையின் காந்தியை அதிகப்படுத்தியது என்றும் பொருள் கொள்ளலாம்.

मतङ्गशापादवलेपमूलादवाप्तवानस्मि मतङ्गजत्वम् ।
अवेहि गन्धर्वपतेस्तनूजं प्रियंवदं मां प्रियदर्शनस्य ॥ ५३ ॥

**अवलेपमूलात्** - (என்) கர்வம் காரணமான, **मतङ्गशापात्** - மதங்க முனிவரின் சாபத்தினால், **मतङ्गजत्वं** - யானையின் ரூபத்தை, **अवाप्तवान् अस्मि** - அடைந்தேன்; **मां** - என்னை, **प्रियदर्शनस्य** - பிரியதர்சனன் என்னும், **गन्धर्वपतेः** - கந்தர்வராஜனின், **प्रियंवदं** - பிரியம்வதன் என்னும், **तनूजं** - புத்திரனாக, **अवेहि** - அறிந்துகொள்.

(க-து) "நான், பிரியதர்சனர் என்ற கந்தர்வராஜரின் புதல்வன்; பிரியம்வதன் எனப் பெயருடையவன். * மதங்க முனிவர் என்னை யானையாகும்படிச் சபித்தார்."

மதங்கமுனிவர், ஈசுவரபூஜை செய்யும்பொழுது பிரியம்வதன் இடையூறு செய்ததினால் கோபமுற்று அவனை யானையாகச் சபித்துவிட்டார் என்பர் ஓர் உரைகாரர். தேவர்களில் ஒரு வகையினர் கந்தர்வர்.

स चानुनीतः प्रणतेन पश्चान्मया महर्षिर्मृदुतामगच्छत् ।
उष्णत्वमग्न्यातपसंप्रयोगाच्छैत्यं हि यत् सा प्रकृतिर्जलस्य ॥५४॥

**सः** - அந்த, **महर्षिः च** - மஹரிஷியும், **प्रणतेन** - வணங்கிய, **मया** - என்னால், **अनुनीतः** - ஸமாதானம் செய்யப்பட்டவராய், **पश्चात्** -பிறகு, **मृदुतां**-சாந்தஸ்வபாவத்தை, **अगच्छत्**- அடைந்தார். **हि** - ஏனெனில், **जलस्य** ஜலத்திற்கு, **उष्णत्वं** - உஷ்ணம், **अग्नि - आतप-संप्रयोगात्** - அக்னி வெய்யில் இவைகளின் சேர்க்கையால் (உண்டாகிறது). **यत्** - யாதொரு, **शैत्यम्** - குளிர்ச்சி என்ற குணம் இருக்கின்றதோ, **सा**- அது, **प्रकृतिः** - (ஜலத்திற்கு) இயற்கை.

(க-து) "நான் அவர் பாதத்தில் விழுந்து வணங்கி அவருடைய கோபத்தை நீக்கினேன். அவர் சாந்தஸ்வபாவத்தை அடைந்தார். ஜலம் குளிர்ந்திருப்பது இயற்கையாகும். நெருப்பு வெய்யில் இவைகளால் உஷ்ணமடைகின்றது. அதுபோல் மஹரிஷிகளுக்குக் கோபம் ஏதாவது ஒரு காரணத்தால் உண்டாகின்றது. இயற்கையாக அவர்களின் மனம் நீர்போல் தண்மையுடையதாகும்".

इक्ष्वाकुवंशप्रभवो यदा ते भेत्स्यत्यजः कुम्भमयोमुखेन ।
संयोक्ष्यसे स्वेन वपुर्महिम्ना तदेत्यवोचत् स तपोनिधिर्माम् ॥ ५५ ॥

"**इक्ष्वाकुवंश - प्रभवः** - இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த, **अजः** - அஜன், **यदा** - எப்பொழுது, **ते** - உன்னுடைய, **कुम्भं**- மஸ்தகத்தை, **अयोमुखेन** - இரும்பு முனையையுடைய பாணத்தினால், **भेत्स्यति** - பிளப்பானோ (அடிப்பானோ), **तदा** - அப்பொழுது, **स्वेन** - உன்னுடையதான, **वपुर्महिम्ना** - சிறந்த சரீரத்துடன், **संयोक्ष्यसे** - சேருவாய்" **इति** - என்று, **सः** - அந்த, **तपोनिधिः** - முனிவர், **मां** - என்னிடம், **अवोचत्** - சொன்னார்.

(க-து) "இக்ஷ்வாகுவம்சத்தில் தோன்றிய அஜனுடைய பாணம் உன் மஸ்தகத்தில் பட்டமாத்திரத்திலே, நீ கந்தர்வ சரீரத்தைப் பெறுவாய்" என முனிவர் சாபநிவ்ருத்தியையும் கூறினார்.

இக்ஷ்வாகு:—ஸூரியவம்ச அரசர்களில் ஒருவன்.

संमोचितः सत्त्ववता त्वयाहं शापाच्चिरप्रार्थितदर्शनेन ।
प्रतिप्रियं चेद्भवतो न कुर्यां वृथा हि मे स्यात् स्वपदोपलब्धिः ॥५६॥

**चिर-प्रार्थित दर्शनेन** - வெகு நாட்களாக எதிர்பார்க்கப் பட்ட காட்சியுடையவரும், **सत्त्ववता** - பலமுள்ளவருமான, **त्वया** - உம்மால், **अहम्** - நான், **शापात्** - சாபத்தினின்றும், **संमोचितः**-விடுவிக்கப் பெற்றேன்; **भवतः**- உமக்கு, **प्रतिप्रियं**- ப்ரத்யுபகாரத்தை, **न कुर्याम् चेत्**-செய்யாவிடில், **मे**-எனக்கு, **स्व-पद-उपलब्धिः** - தன் நிலையை அடைந்தது, **वृथा** வீணாக, **स्यात् हि** ஆகுமன்றோ.

(க-து) "வெகு நாட்களாக உமது தர்சனத்தை வேண்டி நின் றேன். இன்று, பெருந்தன்மை வாய்ந்த உம்மால் எனது சாபம் நீங்கப்பெற்றேன். இதற்குப் பதிலாக அன்புடன் ஒரு உதவியை நான் உமக்குச் செய்யாவிடின், நான் இக்கந்தர்வ சரீரம் பெற்றதற்குப் பயன் என்ன?

संमोहनं नाम सखे ममास्त्रं प्रयोगसंहारविभक्तमन्त्रम्।
गान्धर्वमादत्स्व यतः प्रयोक्तुर्न चारिहिंसा विजयश्च हस्ते ॥ ५७ ॥

**सखे** - நண்பரே, **यतः** - எந்த அஸ்திரத்தினால், **अरिहिंसा** - சத்துருக்களுக்கு ஹிம்ஸை, **न च** - உண்டாவ தில்லையோ, **प्रयोक्तुः** - அஸ்திரத்தை பிரயோகிப்பவருக்கு, **विजयश्च** - ஜயமும், **हस्ते** - கையில் இருக்கின்றதோ, **तत्** - அப்படிப்பட்டதும், **प्रयोग-संहार-विभक्त - मन्त्रं**-விடுவதற்கும் அடக்குவதற்கும் வெவ்வேறு மந்திரங்களை யுடையதும், **गान्धर्वं** - கந்தர்வனைத் தேவதையாகக் கொண்டதும், **संमोहनं नाम** - ஸம்மோஹநம் என்று பிரசித்தி பெற்றதுமான, **मम** - என்னுடைய, **अस्त्रम्** - அஸ்திரத்தை, **आदत्स्व** - பெற்றுக் கொள்ளும்.

(க-து) "நண்பரே! நான் அன்புடன் கொடுக்கும் ஸம்மோஹ னாஸ்திரத்தைப் பெற்றுக்கொள்ளும். இதைப் பிரயோகிப்பதற்கும் திரும்பப் பெறுவதற்கும் தனித்தனியே மந்திரமுள்ளது.

இது எவர்கையில் இருக்கின்றதோ அவர்கள் கையில் ஜயமும் இருக்கிறது.

இவ்வஸ்திரத்தின் சிறப்பு என்னவெனில் சத்ருக் களுக்குச் சிறிதும் ஹிம்ஸை இன்றி அவர்களைத் தூங்கச் செய்து, பிரயோகிப்பவருக்கு ஜயத்தைக் கொடுப்பதாகும்.

अलं ह्रिया मां प्रति यन्मुहूर्तं दयापरोऽभूः प्रहरन्नपि त्वम् ।
तस्मादुपच्छन्दयति प्रयोज्यं मयि त्वया न प्रतिषेधरौक्ष्यम् ॥ ५८ ॥

**मां प्रति** - என்னிடம், **ह्रिया अलम्** - வெட்கப்பட வேண் டாம். **यत्** - எதனால், **त्वं** - நீர், **प्रहरन्नपि** - அடிப்பவராயி னும், **मुहूर्तं** - சிறிது நேரம், **दयापरः** - கருணையுள்ளவராக, **अभूः** - இருந்தீரோ, **तस्मात्** - அதனால், **उपच्छन्दयति**-பிரார்த் திக்கின்ற, **मयि** - என் விஷயத்தில், **प्रतिषेध रौक्ष्यं** -மறுத்த லாகிய கடுந்தன்மை, **त्वया** - உம்மால், **न प्रयोज्यम्** - உபயோ கிக்கத் தக்கதன்று.

(க-து) "'இவனை நாம் அடித்தோமே! இவனிடம் உபகாரம் பெறலாமா?' என்றெல்லாம் எண்ணி வெட்கப்படாதீர். என்னை அடிக்க விரும்பிய பொழுதும் நீர் கருணைகாட்டினீர். ஆதலால் நான் கொடுப்பதை நீர் மறுக்காமல் ஏற்கவேண்டும். மறுப்பீராயின் அஃது நீர் எனக்குச் செய்கின்ற கொடுமையாகும்."

तथेत्युपस्पृश्य पयः पवित्रं सोमोद्भवायाः सरितो नृसोमः ।
उदङ्मुखः सोऽस्त्रविदस्त्रमन्त्रं जग्राह तस्मान्निगृहीतशापात् ॥ ५९ ॥

**नृसोमः** - புருஷரிற் சிறந்தவனும், **अस्त्रवित्** - அஸ்திரங் களை அறிந்தவனுமான, **सः** - அந்த அஜன், "**तथेति**"- "அப்படியே" என **सोमोद्भवायाः सरितः** - நர்மதா நதியின்,

**पवित्रम्** - பரிசுத்தமான, **पयः** - ஜலத்தை, **उपस्पृश्य**-ஆசமனம் செய்துவிட்டு, **उदङ्मुखः** - வடக்கு நோக்கியவனாய் இருந்து கொண்டு, **निगृहीतशापात्** - போக்கப்பட்ட சாபமுடைய, **तस्मात्** - அக் கந்தர்வனிடமிருந்து, **अस्त्रमन्त्रं** - ஸம்மோஹனாஸ்திர மந்திரத்தை, **जग्राह** - பெற்றுக் கொண்டான்.

(க-து) அஜன், ஆசமனம் செய்து கிழக்குநோக்கி இருந்து கொண்டு கந்தர்வனிடமிருந்து அஸ்திரத்தைப் பெற்றான்.

**सोमोद्भवा** - நர்மதா நதி; ஸோமனிடமிருந்து தோன்றிய தென்பது பதப்பொருள்.

एवं तयोरध्वनि दैवयोगादासेदुषोः सख्यमचिन्त्यहेतु ।
एको ययौ चैत्ररथप्रदेशान् सौराज्यरम्यानपरो विदर्भान् ॥ ६० ॥

**एवं** - இவ்வாறு, **अध्वनि**-வழியில், **दैवयोगात्**-அதிர்ஷ்ட வசத்தினால், **अचिन्त्यहेतु** - காரணங் காணக் கூடாத, **सख्यं** - ஸ்நேகத்தை, **आसेदुषोः**-அடைந்த, **तयोः**-அவ்விருவர்களில், **एकः** - ஒருவன் (கந்தர்வன்), **चैत्ररथ-प्रदेशान्** - குபேரனின் உத்யான வனப்ரதேசத்தை, **ययौ** - அடைந்தான். **अपरः** - மற்றவன் (அஜன்), **सौराज्यरम्यान्** - நல்ல அரசன் ஆளுவதால் அழகியதான, **विदर्भान्** - விதர்ப்ப தேசத்தை, **ययौ** - அடைந்தான்.

(க-து) இவ்வாறு அத்ருஷ்ட வசத்தால் நண்பர்களாயினர் அஜனும் கந்தர்வனும். பின் ப்ரியம்வதன் அளகைக்குச் சென்றான். அஜன் விதர்ப்ப தேசம் சென்றான். விதர்ப்ப நாட்டை நல்ல அரசன் ஆண்டதால் அந்நாடு மிக அழகுடன் இருந்தது.

तं तस्थिवांसं नगरोपकण्ठे तदागमारूढगुरुप्रहर्षः ।
प्रत्युज्जगाम क्रथकैशिकेन्द्रश्चन्द्रं प्रवृद्धोर्मिरिवोर्मिमाली ॥ ६१ ॥

**नगर - उपकण्ठे** - நகரத்திற்குச் சமீபத்தில், **तस्थिवांसं** -

இருந்த, तं - அந்த அஜனை, तत् - आगम - आरूढ - गुरु - प्रहर्षः - அவனுடைய வரவினால் அதிக ஸந்தோஷங் கொண்ட, क्रथकैशिकेन्द्रः - போஜன், प्रवृद्ध - ऊर्मिः - அதிக அலைகளையுடைய, ऊर्मिमाली - ஸமுத்திரம், चन्द्रं इव - சந்திரனை (நோக்கிச் செல்லுவது) போல், प्रत्युज्जगाम - எதிர் கொண்டு சென்றான்.

(க-து) அஜன் நகரத்திற்கருகில் வந்துள்ளான் என்பதைக் கேட்டு மனம் மகிழ்ந்த போஜன், சந்திரோதயத்தால் மகிழ்ந்து பொங்கும் கடல்போல், பரிவாரங்களுடன் அவனை எதிர் கொண்டு சென்றான்.

प्रवेश्य चैनं पुरमग्रयायी नीचैस्तथोपाचरदर्पितश्रीः ।
मेने यथा तत्र जनः समेतो वैदर्भमागन्तुमजं गृहेशम् ॥ ६२ ॥

तत्र - அந்தப்பட்டணத்தில், समेतः - கூடியுள்ள, जनः - ஜனங்கள், वैदर्भं - போஜனை, आगन्तुम् - (வந்தவனாகவும்) விருந்தினனாகவும், अजम् - அஜனை, गृहेशं - யஜமானாகவும், यथा - எப்படி, मेने - நினைத்தார்களோ, तथा - அப்படி, भोजः - போஜன், नीचैः अग्रयायी - வணக்கத்துடன் (அஜனுக்கு முன்) சென்று கொண்டும், अर्पितश्रीः च - தன் ஐசுவரியத்தைக் கொடுத்தும், पुरं प्रवेश्य - பட்டணப் பிரவேசம் செய்வித்து, एनं - இவ்வஜனை, उपाचरत् - உபசரித்தான்.

(க-து) போஜன், ராஜ சின்னங்களான தனது குடை, சாமரம், வாஹனம் முதலிய பொருள்களை எல்லாம் உபயோகித்தும், அஜனுக்கு முன் வணக்கத்துடன் சென்றும் அவனை வரவேற்று நகருக்குள் அழைத்துச் சென்றான். போஜன் செய்த உபசாரம், அதைக் கண்டவர் மனத்தில், 'அஜன் விதர்ப்ப நாட்டு மன்னனே' என்ற எண்ணத்தை உண்டாக்குவதா யிருந்தது. அவ்வாறே போஜன் காட்டிய விநயம், போஜன் பிறநாட்டினின்றும் வந்த விருந்தினன் போலும், என நினைக்கக் காரணமா யிருந்தது.

அவ்வளவு சிறந்த முறையில் அஜன் உபசரிக்கப் பட்டான் என்பது கருத்து.

तस्याधिकारपुरुषैः प्रणतैः प्रदिष्टां
प्राग्द्वारवेदि-विनिवेशित-पूर्णकुम्भाम् ।
रम्यां रघुप्रतिनिधिः स नवोपकार्यां
बाल्यात् परामिव दशां मदनोऽध्युवास ॥ ६३ ॥

**रघुप्रतिनिधिः** - ரகுவிற்குச் சமமான, **सः** - அந்த அஜன், **तस्य** - அந்த போஜனுடைய, **प्रणतैः** - வணங்கிய, **अधिकारपुरुषैः** - அதிகாரிகளால், **प्रदिष्टां** - காண்பிக்கப்பட்டதும், **प्राग्द्वारवेदि - विनिवेशित - पूर्णकुम्भां** - கீழ்ப்புற வாசலிலுள்ள மேடைகளில் வைக்கப்பட்ட பூர்ண கும்பங்களையுடையதும், **रम्यां** - அழகுள்ளதுமான, **नव - उपकार्याम्** - புதிய ராஜ மாளிகையில், **मदनः** - மன்மதன், **बाल्यात् - परां** - பால்யத்திற்கு அடுத்த, **दशामिव** - யௌவனப் பருவத்தை (அடைவது) போல, **अध्युवास** - வசித்தான்.

(க-து) ரகுவிற்குச் சமமான அஜன், போஜனது அதிகாரிகள் மிக வணக்கத்துடன் காட்டிய மாளிகையில் சென்று தங்கினான். அம் மாளிகையின் வாசலில் இருபுறமுமுள்ள மேடைகளில் மங்களகரமான பூர்ண கும்பங்கள் வைக்கப்பட்டிருந்தன. அஜன் மாளிகையில் புகுந்தது, மன்மதன் யௌவனப் பருவமடைந்ததுபோல் இருந்தது.

இயற்கையிலே அழகான மன்மதன் யௌவனமும் அடைவானாயின் அவனது அழகைப்பற்றிக் கூறவேண்டுவதன்று; அதுபோல், முன்பே மேன்மை பெற்றுள்ள அஜனுக்கு, அவன் தங்கியிருந்த இடம், மேலும் சோபையையும் கௌரவத்தையும் அளித்தது. அவன் அங்கு மன்மதன் போல் காணப்பட்டான் என்பது அறியப்படுவதாகும்.

तत्र स्वयंवरसमाहृतराजलोकं
कन्याललाम कमनीयमजस्य लिप्सोः ।
भावावबोधकलुषा दयितेव रात्रौ
निद्रा चिरेण नयनाभिमुखी बभूव ॥ ६४ ॥

**तत्र** - அங்கு, **स्वयंवर - समाहृत - राज - लोकं** - ஸ்வயம் வரத்திற்காகக் கூட்டப்பட்ட அரசர்களை உடையதும், **कमनीयं** - அழகியதுமான, **कन्याललाम** - கன்யாரத்னத்தை, **लिप्सोः** - அடையவிரும்பும், **अजस्य** - அஜனுக்கு, **भाव अवबोध - कलुषा** - கணவனுடைய அபிப்ராயத்தை அறிவதில் கலக்கமடைந்த, **दयितेव** - மனைவிபோல், **रात्रौ** - இரவில், **निद्रा** - தூக்கம், **चिरेण** - வெகுநேரத்திற்குப் பின், **नयनाभिमुखी बभूव** - கண்களை வந்தடைந்தது.

(க-து) விதாப்ப நகரத்தில் நடக்க விருந்த ஸ்வயம்வரம் நாட்டிலுள்ள பல அரசர்களையும் அங்கே கூடும்படி செய்தது இந்துமதியோ மிக அழகானவள். பெண்களில் ரத்னம் போன்றவள். அவளை அடைய விரும்பிய அஜன், மறுநாள் நடக்கும் ஸ்வயம்வரத்தில் இந்துமதி தன்னை வரிப்பாளோ மாட்டாளோ என்று எண்ணியதால் அவனுக்கு அன்றிரவு உரிய காலத்தில் தூக்கம் வரவில்லை.

கணவனது கருத்தை அறிய விரும்பித் தயங்கும் விநயமுள்ள மனைவி மெல்லமெல்ல கணவனை அணுகுவதுபோல், நித்ரை அவனுக்கு வெகு நேரத்திற்குப்பின் வந்தது.

तं कर्णभूषणनिपीडितपीवरांसं
शय्योत्तरच्छदविमर्दकृशाङ्गरागम् ।
सूतात्मजाः सवयसः प्रथितप्रबोधं
प्राबोधयन्नुषसि वाग्भिरुदारवाचः ॥ ६५ ॥

**कर्ण-भूषण - निपीडित - पीवर - अंसं** - குண்டலங்களால் அழுத்தப்பட்ட, பருத்த தோள்களையுடையவனும், **शय्या - उत्तरच्छदविमर्द - कृश - अङ्गरागं** - படுக்கையின் - விரிப்பில் உராய்ந்ததால் - அழிந்த சந்தன முடையவனும், **प्रथित - प्रबोधं** - சிறந்த அறிவுள்ளவனுமான, **तं** - அந்த அஜனை, **सवयसः** - ஸமவயதுள்ளவர்களும், **उदारवाचः** - கம்பீரமான வாக்கு உடையவர்களுமான, **सूतात्मजाः** - ஸ்துதிபாடகர்களின் குமாரர்கள், **वाग्भिः** - ஸ்துதிகளால், **उषसि** - காலையில், **प्राबोधयन्** - எழுப்பினார்கள்.

(க-து) அரசர்களைக் காலையில் ஸ்துதிபாடகர்கள் பாடி எழுப்புவது வழக்கம். அஜனையும் ஸ்துதி பாடகர்கள் காலையில் பாடி எழுப்பினர். ஸ்துதிபாடகர் எல்லோரும் அஜனுக்கு ஒத்த வயதினர். எல்லோரும் யுவா. இனிய குரலும் வாழ்வில் விருப்புமுடையவர். அஜன் இரவு முழுவதிலும் படுக்கையில் அதிகம் தூக்கமின்றிப்புரண்டபெழுது அவன் சரீரம் படுக்கையின் மேலுள்ள விரிப்பில்உராய்ந்ததால்,சந்தனம சிறிதே அழிந்திருந்தது. அவனது காதணிகள், பருத்த அவனுடைய தோள்களில் அழுந்திக் குணடல வடிவத்தில் அடையாளஙகளை உண்டாக்கி இருந்தன.

இதனின்றும் அஜன் இரவில் தூக்கம் கொள்ளவில்லை என்பது புலனாகும்.

அடுத்துவரும் ஒன்பது சுலோகங்களால் காலைப் பொழுதை வர்ணனம் செய்து ஸ்துதி பாடகர்கள் இளவரசனை எழுப்புகின்றனர். இச்சுலோகங்களில் உள்ள வர்ணனையும், அச்சுலோகங்கள் அமைக்கப்பட்டுள்ள விருத்தமும் ரஸிகர்கள் ஆராய்ந்து அனுபவிக்கத்தக்க வகையிலுள்ளன.

रात्रिर्गता मतिमतां वर मुञ्च शय्यां
धात्रा द्विधैव ननु धूर्जगतो विभक्ता ।

तामेकतस्तव बिभर्ति गुरुर्विनिद्र-
स्तस्या भवानपरधुर्यपदावलम्बी ॥ ६६ ॥

**मतिमतां** – புத்திசாலிகளில், **वर** - சிறந்தவரே, **रात्रिः** - இரவு, **गता** - சென்று விட்டது; **शय्यां** - படுக்கையை, **मुञ्च** - விடும்; **धात्रा** - பிரம்மாவினல், **जगतः** - உலகத்தினுடைய, **धूः** - பாரம், **द्विधैव** - இரண்டாகவே, (இருவரை யுத்தேசித்தே), **विभक्ता ननु** - பிரிக்கப்பட்டிருக்கிறதல்லவா? **तां** - அந்த பாரத்தை, **एकतः** - ஒருபுறம், **तव** - உம்முடைய, **गुरुः** - தகப்பனர், **विनिद्रः** - தூக்கம் நீங்கியவராக, **बिभर्ति** - தாங்குகிறார்; **भवान्** - நீர், **तस्याः** - அதனுடைய, **अपर-धुर्यपदावलम्बी** - மற்றொருபக்கத்தின் பாரத்தைத் தாங்குபவராக, **(अस्ति)** - இருக்கின்றீர்.

(க-து) அறிஞரே! இரவு சென்றது; சயனத்தைவிட்டு எழுந்திருப்பீராக. பிரம்மதேவர் இவ்வுலகத்தின் பாரத்தை நீரும் உமது தந்தையும் தாங்கவேண்டுமென வைத்திருக்கின்றார். இந்நேரம் கண் விழித்த உமது பிதா இப்பொழுது பாரத்தின் ஒருபாதியைத் தாங்கிக் கொண்டிருக்கிறார். (இந்நேரம் அவர் ராஜ்ய காரியங்களைக் கவனித்துக் கொண்டிருப்பார). மற்றொரு பாதி பாரத்தைத் தாங்கும் நிலையிலுள்ள நீரும் இப்பொழுது எழுந்து அதைத் தாங்க வேண்டும்.

ஒரு வண்டியின் பாரத்தை இரு எருதுகள் தாங்குவது போல் ராஜ்யத்தின் பாரத்தை அரசனும் இளவரசனுமான ரகுவும் அஜனும் தாங்குகின்றனர் என்ற கருத்து இங்கு குறிப்பிடப்படுகிறது. அஜன் ராஜ்ய நிர்வாஹத்தில் தந்தைக்கு உதவி செய்ததால் இவ்வாறு கூறப்பட்டது.

निद्रावशेन भवताप्यनवेक्षमाणा
पर्युत्सुकत्वमबला निशि खण्डितेव ।

लक्ष्मीर्विनोदयति येन दिगन्तलम्बी
सोऽपि त्वदाननरुचिं विजहाति चन्द्रः ॥ ६७ ॥

**निद्रावशेन** - தூக்கத்திற்கு வசப்பட்டுள்ள, **भवता** - உம்மால், **अनवेक्ष्यमाणा** - பார்க்கப்படாத, (அலக்ஷ்யம் செய்யப்பட்ட), **लक्ष्मीः** லக்ஷ்மி, **खण्डिता** - (அலக்ஷ்யம் செய்த கணவனிடத்தில்) கோபம் கொண்டுள்ள, **अबला इव** - பெண்போல், **निशि** - இரவில், **पर्युत्सुकत्वं अपि** - (உம் விஷயத்தில் தனக்குள்ள) ஆவலையும்கூட, **येन** - எந்த சந்திரன் மூலம், **विनोदयति** - ஆற்றிக் கொள்ளுகின்றனளோ, **सः चन्द्रः अपि** - அந்த சந்திரனும், **दिगन्तलम्बी** - திசையின் கோடியை அடைந்தவனாக, **त्वदानन रुचिं** - உமது முகத்தின் காந்திக்கு ஒப்பான காந்தியை (உமது முகத்திற்கு ஒப்பான நிலையை), **विजहाति** - விடுகின்றான்.

(க-து) இரவு முழுவதும் சோபையுடனிருந்த சந்திரன் பொழுது விடிந்தால் சோபையின்றி இருக்கிறான் பொழுது புலர்ந்தது; எழுந்திருப்பீராக என்பது கருத்து.

தாமரை இரவில் குவிகின்றதால் அதில் லக்ஷ்மி அச்சமயத்தில் வசிப்பதில்லை. எஞ்சியுள்ள இடம் சந்திரனும் அஜனது முகமும். ஆனால் அஜன் நித்திரை என்ற ஸ்திரீக்கு வசப்பட்டுள்ளதால், லக்ஷ்மி, அவன் தன்னை-தன்னுடைய அன்பை-அலக்ஷ்யம் செய்ததாகக்கருதி, கணவனால் திரஸ்கரிக்கப்பட்ட பெண்ணினுடைய நிலையில் இருக்கின்றாள். கணவனுடைய திரஸ்காரத்தையும், தனக்கு அவனிடம் அன்பு காரணமாயுண்டான மன ஏக்கத்தையும் மறக்கக் கருதி அஜனது முகத்திற்கு ஒப்பானவனும் அவளுக்கு ஸஹோதரனுமான சந்திரடன் இரவுப் பொழுதைப் போக்குகின்றாள். (கணவனால் திரஸ்கரிக்கப்பட்ட பெண்கள் வருத்தத்தை மறக்க ஸஹோதரர்களுடனோ தாய் தாந்தையருடனோ இருப்பது முறையாகும்.) அவ்வாறு லக்ஷ்மி வஸிக்கும் ஸ்தானமாக இருந்த சந்திரனும்கூட இப்பொழுது மேற்குத் திசையின் கோடியை அடைந்து காந்தி இழந்து நிற்கிறான்.

ஆகவே லக்ஷ்மிக்கு ஒரேபுகலிடமான நீர், கண்விழித்து அவளை ஆதரிப்பீராக.

சந்திரன், தாமரை, அழகான ஆண் பெண்களின் முகம், இவைகளை லக்ஷ்மி வஸிக்குமிடங்களாவும், லக்ஷ்மியை அரசரின் மனைவியாகவும் கூறுவர் கவிகள்.

**खण्डिता** - கணவன் வேறு ஸ்திரீயிடம் அன்பு கொண்டதை அறிந்து மனங் குழம்பிய ஸ்திரீ. .

तद्वल्गुना युगपदुन्मिषितेन तावत्
सद्यः परस्परतुलामधिरोहतां द्वे ।
प्रस्पन्दमानपरुषेतरतारमन्त-
श्चक्षुस्तव प्रचलितभ्रमरं च पद्मम् ॥ ६८ ॥

**तत्** - ஆகையால், **प्रस्पन्दमान - परुषेतर - तारं** - அசைகின்ற அழகான கருவிழியையுடைய, **तव** - உம்முடைய, **चक्षुः** - கண்ணும், **अन्तः** - உள்ளே, **प्रचलित - भ्रमरं** - சஞ்சரிக்கும் வண்டையுடைய, **पद्म च** - தாமரையும் ஆக, **द्वे** - இவ்விரண்டும், **युगपत् तावत्** - ஒரே சமயத்தில் உண்டான- **वल्गुना** - அழகிய, **उन्मिषितेन** - மலர்ச்சியால், **सद्यः** - உடனே **परस्परतुलां** - ஒன்றுக்கொன்று சமமாக இருத்தலை, **अधिरोहताम्** - அடையட்டும்.

(க-து) "அழகு குன்றிய சந்திரன் லக்ஷ்மி வஸிப்பதற்குரிய நிலையை இழந்து விட்டான். ஆகையால் உம்மிடம் அன்புள்ள லக்ஷ்மி இப்பொழுது மலருகின்ற தாமரைகளிடம் செல்வாள். நீரும் கண்விழித்து லக்ஷ்மியை வரவேற்பீராக".

அழகான கருவிழிகளுள்ள உமது கண்கள், உள்ளே அமர்ந்துள்ள வண்டையுடைய தாமரை மலர், ஆக இரண்டும் இவ் வேளையில் அழகுடையனவாகட்டும்,

वृन्ताच्छ्लथं हरति पुष्पमनोकहानां
संसृज्यते सरसिजैररुणांशुभिन्नैः ।
स्वाभाविकं परगुणेन विभातवायुः
सौरभ्यमीप्सुरिव ते मुखमारुतस्य ॥ ६९ ॥

**विभातवायुः** - காலைக் காற்று, **ते** - உம்முடைய **मुखमारुतस्य** - மூச்சுக் காற்றின், **स्वाभाविकं** - இயற்கையான, **सौरभ्यं** - வாசனையை, **परगुणेन** - மற்றவர்களின் குணத்தி னால், **ईप्सुरिव** - அடைய விரும்பியதுபோல், **अनोकहानां** - மரங்களினுடைய, **श्लथं** - தளர்ந்த, **पुष्पं** - புஷ்பத்தை, **वृन्तात्** - காம்பிலிருந்து, **हरति** - எடுக்கிறது; **अरुणांशुभिन्नैः** - சூர்யகிரணங்களினால் மலரும்படி செய்யப்பட்ட, **सरसिजैः**- தாமரையோடு, **संसृज्यते** - சேருகிறது.

(க-து) "பொழுது புலர்ந்ததால் குளிர்ந்த காற்று, புஷ்பங் களுடைய வாஸனையுடன் வீசுகின்றது. எழுந்திருப்பீராக."

அஜனது மூச்சுக்காற்று இயற்கையிலே மணமுடை யது; காற்றுக்கு வாசனையில்லை. அஜனுடைய மூச்சுக் காற்றைப்போல் தானும் வாசனையுடன் இருக்கக்கருதி, காற்று, மரங்களினின்றும் புஷ்பங்களை எடுத்து வருகிறது. மலர்ந்த தாமரை மலருடன் சேர்ந்து வாசனை பெற முயல் கிறது.

இச்சுலோகத்தில், புஷ்பங்களுடைய மணத்துடன் காலைவேளையில் காற்று வீசுவதற்குக் கவி ஒரு காரணத் தைக் கற்பனை செய்து கூறியிருக்கிறார். அஃது, காற்றும் வாஸனை பெறவிரும்புகின்றது என்பதாம்.

உத்தமர்களின் மூச்சுக்காற்றை வாசனையுடன் இருப்ப தாகக் கூறுவது கவிஸமயம்.

ताम्रोदरेषु पतितं तरुपल्लवेषु
निर्धौत-हारगुलिका विशदं हिमाम्भः ।
आभाति लब्धपरभागतयाधरोष्ठे
लीलास्मितं सदशनार्चिरिव त्वदीयम् ॥ ७० ॥

**ताम्रोदरेषु** - நடுவில் சிவந்த, **तरुपल्लवेषु** - துளிர்களில், **पतितं** - விழுந்ததும், **निर्धौत - हारगुलिका - विशदं** அழுக்கற்ற முத்துக்கள் போல் வெண்மையானதுமான, **हिमाम्भः** - பனித்துளி, **लब्धपरभागतया** - சிறந்த இடத்தை (மேன்மையை) அடைந்துள்ளதால், **अधरोष्ठे** - (உமது) கீழ் உதட்டில், **सदशनार्चिः** - பற்களின் ஒளியோடுகூடிய, **त्वदीयं** - உம்முடையதான, **लीलास्मितमिव** - புன்சிரிப்பு போல், **आभाति** - விளங்குகிறது.

(க-து) "நடுவில் சிவந்த தளிர்களில் விழுந்த பனித்துளிகள் அவைகளிருக்கும் இடம் காரணமாக நல்ல நிறம் பெற்று வெள்ளிய முத்துக்கள் போலுள்ளன. இவ்வகையிலுள்ள அத்துளிகள், பற்களின் ஒளியுடன் சிவந்த உதட்டில் திகழும் உமது புன்னகைபோலுமுள்ளன".

यावत् प्रतापनिधिराक्रमते न भानु-
रह्नाय तावदरुणेन तमो निरस्तम् ।
आयोधनाग्रसरतां त्वयि वीर याते
किं वा रिपूंस्तव गुरुः स्वयमुच्छिनत्ति ॥ ७१ ॥

**प्रतापनिधिः** - கிரணங்களுக்கு இருப்பிடமான, **भानुः** - ஸூர்யன், **यावत्** - எவ்வளவு வரையில், **न आक्रमते** - உதிக்கவில்லையோ, **तावत्** - அதற்குள்ளேயே, **अह्नाय** - சீக்கிரமாக, **अरुणेन** - அருணனால், **तमः** - இருட்டு, **निरस्तम्** - நீக்கப்

பட்டது. वीर - வீர, त्वयि - நீர், आयोधन - अग्रसरतां याते - யுத்தத்தின் முன்னணியில் செல்கின்ற நிலையை யடைந்தால், तव - உம்முடைய, गुरुः - தகப்பனார், रिपून् - சத்துருக்களை, स्वयं - தாமே, उच्छिनत्ति किम् - அழிக்கின்றாரா ?

(க-து) "நீர் யுத்தகளத்திற்குச் சென்றால் சத்ருக்களைத் தாங்களன்றோ அழிப்பது? தங்களது தந்தையின் வரவை நீங்கள் எதிர்பார்ப்பதில்லையே;

"அதுபோல், இருட்டை அழிப்பவன் சூரியனேயாயினும் அவனுடைய உதயத்திற்குமுன் வந்த அருணனே இருளைப் போக்கிவிட்டான். ஸூரியன் வந்துதான் இருளை நீக்கவேண்டுமென்ற நியதியில்லை.

'அருணோதயமாகி வெளிச்ச முண்டாயிற்று. எழுந்திரும்' என்பது கருத்து.

அருணன் :—ஸூரியனுடைய தேரை யோட்டுபவன்.

शय्यां जहत्युभयपक्षविनीतनिद्राः
स्तम्बेरमा मुखरशृङ्खलकर्षिणस्ते ।
येषां विभान्ति तरुणारुणरागयोगा-
द्भिन्नाद्रिगैरिकतटा इव दन्तकोशाः ॥ ७२ ॥

येषां - எந்த யானைகளின், दन्तकोशाः - (தாமரை) மொட்டுப்போன்ற தந்தங்கள், तरुण - अरुण - राग - योगात् - இளம் வெய்யிலின் செந்நிறம் படுவதால், भिन्न - अद्रि - गैरिक - तटा इव - செங்காவிப் பொடிகளுள்ள மலைப்பிரதேசத்தைப் பிளந்தனபோல், विभान्ति - காணப்படுகின்றனவோ, ते - அந்த, स्तम्बेरमाः - யானைகள், उभयपक्ष-विनीत -

**निद्राः**-இருபுறமும் (புரண்டதினுல்) தூக்கம் நீங்கியனவாக, **मुखर - शृङ्खल - कर्षिणः** - ஒலிக்கின்ற சங்கிலிகளை இழுத்துக் கொண்டு, **शय्यां** - படுக்கையை, **जहति** - விடுகின்றன.

(க-து) "தாமரை மொட்டுப் போன்ற யானைகளின் தந்தங்களில் செந்நிற இளம்வெய்யில் படுகின்றது. அதனுல், செங்காவிப் பொடிகளுள்ள மலைத்தடங்களில் முட்டி அவ்யானைகள் விளையாடின போல் காணப்படுகின்றன. அத்தகைய யானைகள் இருபுறமும் புரண்டு தூக்கம் நீங்கிக் காலில்கட்டிய சங்கிலிகள் ஒலிக்க எழுந்திருக்கின்றன".

யானைகள் இரவில் சிறிது நேரமே தூங்கு மென்றும், படுக்கும் பொழுது துதிக்கையை வாய்க்குள்ளோ அல்லது தலையின் கீழ் மடக்கிவைத்துக்கொண்டோ விலாப்புறம் தரையில் பதிய நான்கு கால்களையும் நீட்டிப்படுக்கும் என்றும் கூறுகின்றனர்.

दीर्घेष्वमी नियमिताः पटमण्डपेषु
निद्रां विहाय वनजाक्ष वनायुदेश्याः ।
वक्त्रोष्मणा मलिनयन्ति पुरोगतानि
लेह्यानि सैन्धवशिलाशकलानि वाहाः ॥ ७३ ॥

**वनजाक्ष**-தாமரைக்கண்ண ! **दीर्घेषु** - நீண்ட, **पटमण्डपेषु**-துணிக் கூடாரங்களில், **नियमिताः** - கட்டப்பட்டுள்ள, **वनायुदेश्याः** - வாநயு தேசத்திய, **अमी** - இந்த, **वाहाः** - குதிரைகள், **निद्रां** - தூக்கத்தை, **विहाय** - விட்டு, **पुरोगतानि** - எதிரில் வைக்கப்பட்ட, **लेह्यानि** - நக்கித்தின்ன வேண்டிய, **सैन्धवशिलाशकलानि** - உப்புக் கற்கட்டிகளை, **वक्त्रोष्मणा** -

மூச்சுக்காற்றின் நீராவியால், **मलिनयन्ति** - ஒளி மங்கச் செய்கின்றன.

(க-து) "தாமரை இதழ்போன்ற கண்களையுடைய ராஜகுமாரரே! இதோ நீண்ட துணிக் கூடாரங்களில் கட்டப்பட்டுள்ள உமது குதிரைகள், தூக்கம் நீக்கி, எதிரில் வைக்கப்பட்டுள்ள உப்புக் கட்டிகளை நாவினல் நக்கிச் சுவைக்கின்றன. அவைகள் சுவைக்கும்பொழுது வெண்மையான உப்புக் கட்டியும், குதிரைகளின் மூச்சுக் காற்றிலுள்ள நீராவி படுவதால் ஒளிகுன்றியதாகக் காணப்படுகிறது.

குதிரைகள் எழுந்தன என்பது கருத்து.

**वनायु:** ஒரு தேசத்தின் பெயர்; இதைக் காபூல் என்றும், பாரசீகம் என்றும் சொல்லுகின்றனர்.

மாடு, குதிரை முதலியவைகளுக்கு உப்புக்கட்டிகளைக் கொடுப்பது இப்பொழுதும் வழக்கத்தில் இருப்பதே. காலையில் உப்பைச் சாப்பிடுவதால் குதிரைகள், சோர்வு, உணவில் வெறுப்பு, வயிற்றுவலி, அஜீரணம் முதலியன இன்றிச் சுகமாக இருக்கும்.

கீழ்க்காணும் சுலோகம் இக் கருத்தைத் தெரிவிக்கின்றது.

पूर्वाह्णकाले चाश्वानां प्रायशो लवणं हितम् ।
अरुचिग्लानिशूलघ्नं लवणं सैन्धवं वरम् ॥

भवति विरलभक्तिर्म्लानपुष्पोपहारः
स्वकिरणपरिवेषोद्भेदशून्याः प्रदीपाः ।

अयमपि च गिरं नस्त्वत्प्रबोधप्रयुक्ता-

मनुवदति शुकस्ते मञ्जुवाक् पञ्जरस्थः ॥ ७४ ॥

**म्लान - पुष्प - उपहारः** - (உமக்கு) அளிக்கப்பட்ட பூமாலை வாடியதாய், **विरल - भक्तिः** - இடைவெளி பொருந்திய தொடுத்தல் உடையதாக, **भवति** - இருக்கின்றது; **प्रदीपाः** - விளக்குகளும், **स्व - किरण - परिवेष - उद्भेद - शून्याः**- அவற்றின் ஒளிவட்டத்தின் பிரகாசம் குறைந்தவைகளாக, **भवन्ति** - இருக்கின்றன; **अपि च** - மேலும், **अयं** - இந்த, **मञ्जुवाक्** - மதுரமான வாக்கையுடைய, **पञ्जरस्थः** - கூண்டிலிருக்கின்ற, **ते** - உம்முடைய, **शुकः** - கிளி, **त्वत् - प्रबोध-प्रयुक्तां** - உம்மை எழுப்புவதற்காக சொல்லப்பட்ட, **नः** - எங்களுடைய, **गिरं** - வார்த்தையை, **अनुवदति** - அனுவாதம் செய்கிறது.

(க-து) "முன்னிரவில் உமக்கு அளிக்கப்பட்ட பூமாலை, நேரமானதால் வாடிச் சுருங்கி, புஷ்பங்களுக்கிடையில் இடை வெளியுடன் இருக்கின்றது. இரவில் வெகுதூரம் ஒளி பரப்பிய விளக்குகளும் பகலில் பிரகாசமின்றி இருக்கின்றன. கூண்டிலுள்ள உமது கிளிகளும் உம்மை எழுப்புவதற்காக நாங்கள் கூறும் சொற்களையே திருப்பிக் கூறுகின்றன".

इति विरचितवाग्भिर्वन्दिपुत्रैः कुमारः

सपदि विगतनिद्रस्तल्पमुज्झांचकार ।

मदपटुनिनदद्भिर्बोधितो राजहंसैः

सुरगज इव गाङ्गं सैकतं सुप्रतीकः ॥ ७५ ॥

**इति** - இப்படி, **विरचित वाग्भिः**-அமைக்கப்பட்ட பாடல் களையுடைய, **वन्दिपुत्रैः** - குமாரர்களால், **सपदि**-உடனே, **विगत-निद्रः** -நித்திரை நீங்கியவனாக, **मदपटु** - களிப்பினால் இனிமை யாக, **निनदद्भिः** - சப்திக்கின்ற, **राजहंसैः** - சிறந்த அன்னப் பறவைகளினால், **बोधितः** - எழுப்பப்பட்ட, **सुप्रतीकः** - ஸுப் ரதீகம் என்னும், **सुरगजः** - திக்கஜம், **गाङ्गं**-கங்கையின், **सैकतमिव** - மணல்திட்டை (விட்டு எழுந்திருப்பது) போல், **कुमारः**-அஜன், **तल्पं** - படுக்கையை, **उज्झांचकार** - விட்டான்.

(க-து) இவ்வாறு ஸந்தர்ப்பத்திற்கேற்ற முறையில், வைதாளி கர்கள் பாடல்களை அமைத்துப் பாடவும், அஜன், கங்கையின் மண லில் படுத்துறங்கும் ஸுப்ரதீகம் என்ற திக்கஜம், நதியிலுள்ள அன்னப் பறவைகளின் இனிய ஒலியைக் காலையில் கேட்டு எழுந்திருப்பது போல், நித்திரை நீங்கிப் படுக்கையை விட்டு எழுந்தான்.

**सुप्रतीकः** - திக்கஜங்கள் எட்டினுள் ஒன்று. இது வடகிழக்கில் நின்று உலகைக்காக்குமென்பர்.

மற்றவை:

**ऐरावतः, पुण्डरीकः, वामनः, कुमुदः, अञ्जनः;**

**पुष्पदन्तः, सार्वभौमः**—என்பனவாம்.

अथ विधिमवसाय्य शास्त्रदृष्टं दिवसमुखोचितमञ्चिताक्षिपक्ष्मा ।
कुशलविरचितानुकूलवेषः क्षितिपसमाजमगात् स्वयंवरस्थम् ॥७६॥

**अथ** · பிறகு, **अञ्चित** - **अक्षिपक्ष्मा** - அழகிய இமைகளை யுடைய, **सः** - அந்த அஜன், **शास्त्रदृष्टं** - சாஸ்திரத்தினால்

அறிவிக்கப்பட்ட, **दिवसमुखोचितं** - காலை வேளைக்குரிய, **विधिं** - அனுஷ்டானத்தை, **अवसाय्य** - முடித்துக்கொண்டு, **कुशल - विरचित - अनुकूल वेषः** - திறமை வாய்ந்தவர்களால் செய்யப்பட்ட (ஸ்வயம்வரத்திற்கு) அனுகூலமான - அலங்காரமுடையவனாக, **स्वयंवरस्थम्** - ஸ்வயம்வர மண்டபத்தில் இருந்த, **क्षितिप - समाजं** - ராஜஸமூஹத்தை, **अगात्** - அடைந்தான்.

(க-து) "கண்ணழகுள்ள அஜன், எழுந்தபின் காலை வேளையில் செய்ய வேண்டிய ஸ்நாநம், ஜபம், தேவபூஜை முதலியவற்றை முறைப்படி முடித்து, அலங்காரக்கலையில் கைதேர்ந்தவர்களால் ஸ்வயம் வரத்தில் வெற்றி பெறுவதற்கான வகையில் நன்கு அழகு செய்யப் பட்டவனாக, ஸ்வயம்வர மண்டபத்தை அடைந்தான்.

இச்சுலோகத்தில் கவி, பார்வையினாலே பிறர் மனத்தைக்கவரும் கண்ணழகு அஜனுக்கு இருந்ததென்றும், உள்ளத்தில் ஸ்வயம் வரத்தைப் பற்றிய வேக மிருந்த பொழுதும் நித்தியகர்மாக்களைச் செய்வதில் அஜன் தவறவில்லை என்றும் தெரிவிக்கின்றார்.

அலங்காரம் செய்தல் ஒரு கலை என்பதும், அதிலும் தேர்ந்த நிபுணர்கள் இருந்து தொழில் செய்து வந்தனர் என்பதும் புலனாகின்றது.

इति महाकवि श्री कालिदासकृतौ

रघुवंशे महाकाव्ये पञ्चमः सर्गः ॥

---

॥ श्रीः ॥

# ॥ रघुवंशः ॥

## षष्ठः सर्गः

स तत्र मञ्चेषु मनोज्ञवेषान् सिंहासनस्थानुपचारवत्सु ।
वैमानिकानां मरुतामपश्यदाकृष्टलीलान्नरलोकपालान् ॥ १ ॥

**सः** - அவ்வஜன், **तत्र** - அந்த ஸ்வயம்வர மண்டபத்தில், **उपचारवत्सु** - (அரசர்க்குரிய) உபசாரப் பொருள்களையுடைய, **मञ्चेषु** - மேடைகளில், **मनोज्ञवेषान्** - அழகிய அணியுடையவர்களும், **सिंहासनस्थान्** - ஸிம்மாஸனங்களில் வீற்றிருப்பவர்களும், **वैमानिकानां** - விமானங்களில் ஸஞ்சரிக்கின்ற, **मरुतां** - தேவர்களுடைய, **आकृष्टलीलान्**-அழகான சோபையை உடையவர்களுமான, **नरलोकपालान्** - அரசர்களை, **अपश्यत्** - கண்டான்.

(க-ரு) அஜன் ஸ்யம்வர மண்டபத்திற்குச் சென்று, அரசர்களுக்குரிய பலவகையான உபசாரப் பொருள்களுடன்கூடிய மேடைகளிலே அமைக்கப் பட்டிருந்த ஸிம்மாஸனங்களின்மீது வீற்றிருந்த அரசர்களைக் கண்டான். அவ்வரசர்கள், ஆகாயத்தில் விமானங்களிற் செல்கின்ற தேவர்களைப் போன்ற அழகும் அணிகளுமுடையவராயிருந்தனர்.

रतेर्गृहीतानुनयेन कामं प्रत्यर्पितस्वाङ्गमिवेश्वरेण ।
काकुत्स्थमालोकयतां नृपाणां मनो बभूवेन्दुमतीनिराशम् ॥ २ ॥

**रतेः** - (மன்மதனின் மனைவியான) ரதியினுடைய, **गृहीत-अनुनयेन** - வேண்டுகோளை அங்கீகரித்த, **ईश्वरेण** - பரம

சிவனால், प्रत्यर्पितस्वांगं - திருப்பித் தரப்பட்ட தனது சரீரத்தையுடைய, कामं इव - மன்மதனைப் போல, (स्थितं), இருக்கின்ற, काकुत्स्थं-(ககுத்ஸ்த வம்சத்தில் பிறந்த) அஜனை, आलोकयतां - பார்க்கின்ற, नृपाणां - அரசர்களுடைய, मनः - மனம், इन्दुमती-निराशं - இந்துமதியினிடம் ஆசையற்றதாக, बभूव - ஆயிற்று.

(க-து) பரமசிவன் மன்மதனை எரித்ததனால் துயரமடைந்த ரதி மன்மதனைப் பிழைப்பிக்கும்படி பரமசிவனிடம் வேண்டினாள். அவளது வேண்டுகோளை ஏற்றுப் பரமசிவனால் உயிர்ப்பிக்கப்பட்ட மன்மதன்தானோ இவன் என ஐயுறும்படி அவ்வளவு அழகனாக அஜன் இருந்தான். 'இத்தகைய அழகையுடைய அஜனை விட்டு நம்மை எங்கு இந்துமதி வரிக்கப் போகிறாள்' என்று ஒவ்வொரு அரசன் மனமும் இந்துமதியை யடைவதில் நம்பிக்கையிழந்து இருந்தது.

वैदर्भनिर्दिष्टमसौ कुमारः क्लृप्तेन सोपानपथेन मञ्चम् ।
शिलाविभङ्गैर्मृगराजशावस्तुङ्गम् नगोत्सङ्गमिवारुरोह ॥ ३ ॥

मृगराजशावः - சிங்கக் குட்டியானது, शिला-विभङ्गैः - சிறு பாறைகளின் வழியாக, तुङ्गं - உயரமான, नगोत्सङ्गं इव - மலையின் உச்சியில் (ஏறுவது) போல, असौ - அந்த, कुमारः - அஜன், वैदर्भ निर्दिष्टं - விதர்ப்பதேச அரசனான போஜனால் காண்பிக்கப்பட்ட, मञ्चम् - மேடையில், क्लृप्तेन நன்கு அமைக்கப்பட்ட, सोपान-पथेन - படிகளின் வழியாக, आरुरोह - ஏறினான்.

(க-து) விதர்ப்பதேச அரசனான போஜன், அஜன் அமரவேண்டிய ஆஸனத்தைக் காண்பித்தான். சிங்கக் குட்டியானது சிறுபாறைகளின் மேல் கால்களை வைத்து மலையின் மீது ஏறுவது போல், படிகளின் வழியாக அஜன் மிடுக்குடன் அம்மேடை மீதேறினான்.

परार्ध्यवर्णास्तरणोपपन्नमासेदिवान् रत्नवदासनं सः ।
भूयिष्ठमासीदुपमेयकान्तिर्मयूरपृष्ठाश्रयिणा गुहेन ॥ ४ ॥

**परार्ध्यवर्ण-आस्तरण-उपपन्नत्** - மிகச் சிறந்த நிறங்களை யுடைய, விரிப்புக்களுடன் கூடியதும், **रत्नवत्** - ரத்தினங் கள் பதிக்கப்பெற்றதுமான, **आसनं** - ஸிம்மாஸனத்தில், **आसेदिवान्** - அமர்ந்திருந்த, **सः** - அந்த அஜன், **मयूर पृष्ठ-आश्रयिणा** -மயிலின் முதுகில் அமர்ந்துள்ள, **गुहेन** -ஸுப்ரஹ்ம ண்யக் கடவுளுடன், **भूयिष्ठम्** - மிகவும், **उपमेयकान्तिः** - ஒப்பிடத்தகுந்த காந்தியுடையவனாக, **आसीत्** - இருந்தான்.

(க-து) அஜனது ஆஸனம் சிறந்த நிறமுள்ள விரிப்புக்கள் விரிக்கப் பெற்றும், நல்ல ரத்தினங்கள் பதிக்கப் பெற்றும் இருந்தது. அவ்வாஸனத்தில் அவன் வீற்றிருந்தான். அக் காட்சி, பலவர்ணங் கள் செறிந்த தோகையையுடைய மயிலின்மீது குமரக் கடவுள் அமர்ந் திருத்தலை ஒத்திருந்தது. பலநிறமுள்ள விரிப்புடன் கூடிய ரத்ந மிழைத்த ஆஸநத்திற்குப் பலநிறமுள்ள தோகையுடைய மயிலும், அஜனுக்கு ஸுப்ரஹ்மண்யரும் உபமானங்கள்.

तासु श्रिया राजपरम्परासु प्रभाविशेषोदयदुर्निरीक्ष्यः ।
सहस्रधात्मा व्यरुचद्विभक्तः पयोमुचां पङ्क्तिषु विद्युतेव ॥ ५ ॥

**पयोमुचां** - மேகங்களின், **पङ्क्तिषु** - வரிசைகளில், **विद्युता** - மின்னலினுல், **सहस्रधा** - பலவகையில், **विभक्तः** - பரவும்படி செய்யப்பட்ட, **आत्मा इव** - (மின்னலின்) வடி வம் (விளங்குவது) போல, **तासु** - அந்த **राजपरम्परासु** - அரசர்களின் வரிசையில், **श्रिया** - சோபையினுல், **सहस्रधा** - பலவகையில், (பலரிடத்தும்), **विभक्तः** - பிரிக்கப்பட்டுள்ள தும், **प्रभाविशेषोदय दुर्निरीक्ष्यः** - அதிக சோபையின் தோற் றத்தினுல் காணக்கூடாததுமான, **आत्मा** - (சோபையின்) வடிவமானது, **व्यरुचत्** (அச்சபையில்) விளங்கியது.

(க-து) இச்சுலோகம், அரசர்கள் எல்லோரும் அமர்ந்திருந்த ஸமயத்தில் ஸ்வயம்வர சபையிலுள்ள சோபையை வர்ணிக்கின்றது.

மின்னல் ஒன்றே, ஒளிரும்பொழுது, ஆகாயத்திலுள்ள பல மேகங்களிலும் பரவி மிக அழகாகக் காணப்படுகின்றது. அரசர்களிடம் லக்ஷ்மி வாஸம் செய்வதாகக் கூறுவர். லக்ஷ்மியின் வாஸத்தினுல் ஒவ்வொரு அரசனும் சோபையுடன் இருந்தான். பல மன்னர்கள் கூடியுள்ள அச்சபையில் லக்ஷ்மி தன்னேயே பகுத்துக்கொண்டு அவர்கள் எல்லோரிடத்தும் உரைந்ததால் லக்ஷ்மியின் ஸமுதாய சோபை மிக அதிகமாயிருந்தது. பல அரசர்கள் கூடியிருந்த அச்சபை ஒரு தனியழகுடன் விளங்கிற்று என்பது கருத்து.

பல மேகங்களிடையே பரவியுள்ள மின்னல் அழகாயிருப்பது போல், லக்ஷ்மி, பல மன்னரிடம் பகிர்ந்திடப்பினும், அவளது ஒளி, முழுவதும் காணும்படி. அச்சபையில் திகழ்ந்தது.

இச் சுலோகத்திற்கு முன்னும் பின்னுமுள்ள சுலோகங்கள் அஜனேப்பற்றிக் கூறுவதால் இஃதும் அஜனேப்பற்றிக் கூறவேண்டுமேயன்றிப் பொதுவாக அரசர்களேப்பற்றிக் கூறுவதாகக் கொள்வது தகுந்ததன்று. அப்படியிருப்பின் இச்சுலோகம் இந்த ஸர்க்கத்தில் இரண்டாவது சுலோகமாக இருக்க வேண்டும். இடத்தைக் கருதி இஃது அஜனேப்பற்றிக் கூறுவதாகக் கொள்வதே முறையாகும். அவ்வகையில் இச்சுலோகத்தின் கருத்தும் பதவுரையும் வருமாறு.

“மின்னல் ஒன்ருக இருப்பினும் ஆகாயத்திலுள்ள எல்லா மேகங்களிலும் அதன் ஒளி கலந்து பலவாகி மிக அழகாகக் காணப்படும். அதைப் போல், அஜன் ஒருவனே

யாயினும் அவனது ஒளி, அவ்வரசர்களின் கூட்டத்தில் பரவி விளங்கியது. அவ்வரசர்களின் கூட்டத்தில் அஜன் ஒருவனே மேகங்கள் நடுவில் மின்னல் போல் விளங்கினன் என்பது கருத்து. இவ்வாறு கொள்வதில் आत्मा - என்ற சொல்லிற்கு அஜனது வடிவம், அல்லது சோபை என்று பொருள் கொள்ளவேண்டும்.

பதவுரை வருமாறு.

तासु - அந்த, राजपरंपरासु - அரசர்களின் வரிசைகளில், श्रिया - (அஜனது) ஒளியினுல், पयोमुचां - மேகங்களுடைய, पङ्क्तिषु - வரிசைகளில், विद्युता इव - மின்னலினுல் போல், सहस्रधा - பல வகைகளாக, विभक्तः - பிரிக்கப்பட்டதும், प्रभाविशेषोदय-दुर्निरीक्ष्यः - அதிகமான ஒளி காரணமாகப் பார்க்க முடியாததுமான, आत्मा - (அஜனுடைய) வடிவம், व्यरुचत् - பிரகாசித்தது.

तेषां महार्हासनसंस्थितानामुदारनेपथ्यभृतां स मध्ये ।
रराज धाम्ना रघुसूनुरेव कल्पद्रुमाणामिव पारिजातः ॥ ६ ॥

महार्हासन संस्थितानां - மிகச் சிறந்த ஆஸனங்களில் அமர்ந்திருப்பவர்களும், उदारनेपथ्यभृतां - ஒளிவீசும் உடைகளை அணிந்தவர்களுமான, तेषां - அவ்வரசர்களின், मध्ये - இடையில், कल्पद्रुमाणां - கல்பக விருக்ஷங்களின், (मध्ये - இடையில்) पारिजात इव - பாரிஜாத விருக்ஷம்போல, सः - அந்த, रघुसूनुः एव - ரகுவின் புதல்வனுன அஜனே, धाम्ना - ஒளியினுல், रराज - பிரகாசித்தான்.

(க-து) அச் சபையில் சிறந்த ஆடைகளையும் அணிகளையு மணிந்து பல அரசர்கள் ஸிம்மாஸனங்களில் அமர்ந்திருந்தனர். அவ்வரசர்களுக்கு ஆடையிலும் அணியிலும் குறை ஒன்று

யில்லை. ஆயினும் அவர்களிடையே அஜன் ஒருவனே, தேவலோகத்திலுள்ள கல்பக விருக்ஷங்களிடையில் பாரிஜாத மரமே மிகச்சிறந்து இருப்பது போல், விளங்கினான்.

தேவலோகத்தில் உள்ள ஐந்து கற்பக மரங்கள் :- மந்தாரம், பாரிஜாதம், ஸந்தானம், கல்பவிருக்ஷம், ஹரிசந்தனம் என்பன. கல்பம் - ஸங்கல்பம் - எண்ணம் - விருப்பம்; விரும்பியதைத் தருவதால் அம்மரங்களுக்குக் கல்பகவிருக்ஷம் என்பது பொதுப் பெயராயிற்று. பாற்கடலை அம்ருதத்திற்காகத் தேவர்கள் கடைந்தபொழுது இவ்வைந்தும் அதில் தோன்றின.

नेत्रव्रजाः पौरजनस्य तस्मिन् विहाय सर्वान्नृपतीन्निपेतुः ।
मदोत्कटे रेचितपुष्पवृक्षा गन्धद्विपे वन्य इव द्विरेफाः ॥ ७ ॥

**पौरजनस्य** - நகர ஜனங்களுடைய, **नेत्रव्रजाः** - கண்களின் கூட்டங்கள், **सर्वान्** - எல்லா **नृपतीन्** - அரசர்களையும், **विहाय** - விட்டு, **तस्मिन्** - அந்த, **अजे** - அஜனிடத்தில், **मदोत्कटे** - அதிக மதமுடையதும், **वन्ये** - காட்டிலுள்ளதுமான, **गन्धद्विपे**-வாஸனையுள்ள யானையிடம், **रेचित पुष्पवृक्षाः**- மலர் மரங்களைவிட்ட, **द्विरेफाः इव** - வண்டுகள் (செல்வது) போல, **निपेतुः** - விழுந்தன (சென்றன).

(த-து) மரங்களிலுள்ள புஷ்பங்களில் தேனை உண்ணும் வண்டுகள், மத ஜலம் பெருகும் காட்டுயானை அருகில்வரவும் மரங்களை விட்டு யானையிடம் வந்து விடுவது போல், ஸ்வயம்வர மண்டபத்திலிருந்த நகர ஜனங்களின் கண்கள், அஜன்வரவும் மற்ற அரசர்களைப் பார்ப்பதை விட்டு அஜனையே நோக்கின.

கந்த கஜம் யானைகளிற் சிறந்தது. இதன் வாஸனை மற்ற யானைகளுக்குப் பொறுக்க முடியாததாக இருக்கும். இவ்வகையான யானை, தன்னரசனுக்கு வெற்றியையே அளிக்கும்.

**यस्य गन्धं समाघ्राय न तिष्ठन्ति प्रतिद्विपाः ।**
**तं गन्धहस्तिनं प्राहुः नृपतेर्विजयावहम् ॥**

*என்று, கஜசாஸ்திரகாரர்கள் கூறுவர்.*

अथ स्तुते वन्दिभिरन्वयज्ञैः सोमार्कवंश्ये नरदेवलोके ।
संचारिते चागुरुसारयोनौ धूपे समुत्सर्पति वैजयन्तीः ॥ ८ ॥

पुरोपकण्ठोपवनाश्रयाणां कलापिनामुद्धतनृत्यहेतौ ।
प्रध्मातशङ्खे परितो दिगन्तांस्तूर्यस्वने मूर्च्छति मङ्गलार्थे ॥ ९ ॥

मनुष्यवाह्यं चतुरस्रयानमध्यास्य कन्या परिवारशोभि ।
विवेश मञ्चान्तरराजमार्गं पतिंवरा क्लृप्तविवाहवेषा ॥ १० ॥

**अथ** - *பிறகு,* **अन्वयज्ञैः** - *(அரச) வம்ச சரித்திரத்தை அறிந்தவர்களான,* **वन्दिभिः** - *ஸ்துதி செய்பவர்களால்,* **सोमार्कवंश्ये** - *சந்திர ஸூரியவம்சத்தைச்சேர்ந்த,* **नरदेवलोके,** *அரசர்களின் கூட்டமானது,* **स्तुते** - *புகழப்பட்டவுடன்,* **सञ्चारिते** - *பரவும்படி செய்யப்பட்ட,* **अगुरुसारयोनौ** - *காரகில் கட்டையினின்றும் உண்டான,* **धूपे** - *புகையானது* **वैजयन्तीः** - *கொடிகளை,* **समुत्सर्पति** - *தாண்டிச் செல்லும் பொழுதும்,*

**पुरोपकण्ठ-उपवन-आश्रयाणां** - *நகரத்திற்குச் சமீபத்தி லுள்ள நந்தவனத்திலிருக்கின்ற,* **कलापिनां** - *மயில்களுடைய* **उद्धतनृत्य हेतौ** - *அதிகமான நாட்டியத்திற்குக் காரணமாயுள் ளதும்,* **प्रध्मातशङ्खे** - *நன்கு ஊதப்பட்ட சங்குகளையுடைய தும்,* **मङ्गलार्थे** - *மங்களத்தைப் பயனக உடையதுமான* **तूर्यस्वने** - *வாத்ய சப்தமானது,* **दिगन्तान् परितः** - *திசைகளின் கோடிவரையில்,* **मूर्च्छति** - *பரவும்பொழுதும்,*

**पतिंवरा** - கணவனை வரிப்பவளும், **क्लृप्तविवाहवेषा** - அணிந்துகொள்ளப்பட்ட விவாஹ உடைகளையுடையவளு மான, **कन्या** - பெண் (இந்துமதி), **मनुष्यवाह्यम्** - மனிதர்க ளால் சுமக்கப்படுவதும், **परिवारशोभि** - பரிவாரத்தினால் விளங்குவதுமான, **चतुरस्रयानम्** - பல்லக்கில், **अध्यास्य** - அமர்ந்து, **मञ्चान्तरराजमार्गम्** - மேடைகளின் இடையே யுள்ள விசாலமான வழியில், **विवेश** - பிரவேசித்தாள்.

(க-து) அரண்மனையிலிருந்த அரசர்களின் ஸ்துதிபாடகர்கள் ஸ்வயம்வரத்திற்கு வந்திருக்கும் அரசரனைவருடைய புகழையும் பாடினர். அம்மண்டபத்தில் கறுப்புச் சந்தனக் கட்டைகளினின்றும் எழுந்த வாசனையுள்ள புகை மண்டபத்தின்மேல் கட்டியுள்ள கொடி களைக்கடந்து ஆகாசத்தில் பரவிக்கொண்டிருந்தது. மங்களகர மான சங்குகள் எங்கும் ஊதப்பட்டன. அச்சத்தம் மேகத்தின் ஒலி யைப்போன்றிருந்ததால் நந்தவன மயில்கள் தோகைகளை விரித்தாடின. வாத்தியங்களின் முழக்கம் எத்திசையிலும் பரவியது. அத்தருணத்தில் இந்துமதி விவாகத்திற்காக நல்லஉடைகளை அணிந்து, தகுந்த கண வனைத் தெரிந்தெடுக்க, பல்லக்கில் ஏறி, இருபுறமும் அரசர்கள் அமர்ந்திருக்க, அவர்களுக்கு இடையிலுள்ள வழியிலே சென்றாள்.

तस्मिन् विधानातिशये विधातुः कन्यामये नेत्रशतैकलक्ष्ये ।
निपेतुरन्तःकरणैर्नरेन्द्रा देहैः स्थिताः केवलमासनेषु ॥ ११ ॥

**नेत्रशतैकलक्ष्ये** - பல கண்களுக்கும் ஒரே குறியான, **कन्यामये** - பெண்ணுருவத்தில் இருக்கின்ற, **तस्मिन्** - அந்த, **विधातुः** - பிரம்மாவினுடைய, **विधानातिशये** - அத்புதமான படைப்பில், **नरेन्द्राः** - அரசர்கள், **अन्तःकरणैः** - மனங்களால், **निपेतुः** - லயமடைந்தனர்; **आसनेषु** - ஆஸனங்களில், **देहैः केवलम्** - உடல்களால் மாத்திரம், **स्थिताः** - இருந்தனர்.

(க-து) அச்சபையில் பிரவேசித்த இந்துமதியை அரசர்களனை வரும் ஒருங்கே நோக்கினர். பிரம்மாவின் அவ்வத்புதமான படைப் பைக்கண்டு, அவர்கள் மனமெல்லாம் அவர்களுடைய உடலைவிட்டு

இந்துமதியிடமே சென்று பதிந்து விட்டதால் அரசர்கள் அமர்ந்திருந்த ஆஸனங்களில் அவர்களுடைய தேகம் மாத்திரமே இருந்தது.

तां प्रत्यभिव्यक्तमनोरथानां महीपतीनां प्रणयाग्रदूत्यः ।
प्रवालशोभा इव पादपानां शृङ्गारचेष्टा विविधा बभूवुः ॥ १२ ॥

**तां प्रति** - அவ்விந்துமதியைக் குறித்து, **अभिव्यक्तमनोरथानां** - தோன்றிய காதலை உடைய, **महीपतीनां** - அரசர்களின், **प्रणयाग्रदूत्यः** - காதலைத் தெரிவிப்பதில் முதல் தூதுவர்களாக, **विविधाः**-பலவகையான, **शृङ्गारचेष्टाः**-விருப்பத்தைத் தெரிவிக்கும் செயல்கள், **पादपानां** - மரங்களுடைய, **प्रवालशोभाः इव** - புதியதளிர்கள்போல, **बभूवुः**-தோன்றின.

(க-து) சபையில் இருந்த அரசர்களின் ஆசை, இந்துமதியைக் காணவும் விருத்தியடைந்தது. அதனுல் அவர்கள், இந்துமதியிடம் தாங்கள் கொண்ட காதலைத் தெரிவிக்கச் சிலசெய்கைகளைப் புரிந்தனர். அச்செயல்கள் தூதுவர்களைப்போல் அவர்களின் எண்ணங்களைத் தெரிவிப்பனவாய்இருந்தன. மரஙகளில் தளிர் தோன்றுவதுபோல் இச்செயல்கள் அவ்வரசர்களிடம் தாமே தோன்றின.

அடுத்து வரும் ஏழு சலோகங்களில் அரசர்களின் சிருங்காரச் செயல்கள் வர்ணிக்கப் படுகின்றன.

कश्चित् कराभ्यामुपगूढनालमालोलपत्राभिहतद्विरेफम् ।
रजोभिरन्तःपरिवेषबन्धि लीलारविन्दं भ्रमयांचकार ॥ १३ ॥

**कश्चित्**-ஒரு அரசன், **कराभ्यां**-கைகளால், **उपगूढनालम्**-பிடிக்கப்பட்ட தண்டு உடையதும், **आलोलपत्र-अभिहत-द्विरेफम्** - அசைகின்ற இதழ்களால் அடிக்கப்பட்ட வண்டுகளை உடையதும், **रजोभिः** - மகரந்தத் தூள்களால், **अन्तः-परिवेषबन्धि** - உள்ளே வட்டத்தைஏற்படுத்தி இருக்கிறதுமான, **लीलारविन्दम्** அழகிய தாமரைப்பூவை, **भ्रमयाञ्चकार**-சுழற்றினுன்.

(க-து) ஒரு அரசன் தாமரை மலரைக் கையில் பிடித்துக் கொண்டு சுழற்றினன். அதனருகில் வந்த வண்டுகள் தாமரை இதழ்களால் அடிக்கப்பட்டன. உள்ளிருந்த மகரந்தப் பொடி மலரைச் சுழற்றும் வேகத்தில் ஒரு வட்டத்தை அமைப்பதுபோல் காணப் பட்டது.

கூடியிருந்த அரசர்கள் தங்களது ஆசையைத் தெரிவிக் கவும், இந்துமதியின் கவனத்தைத் தம் புறம் இழுப்பதற் காகவும் இம்மாதிரியான செயல்களைப் புரிந்தனர். ஆனல். உரையாசிரியர் மல்லிநாதர், இவ்வரசர்களின் செயலுக்கு மற்ெருரு உட்கருத்து உண்டெண அதைவிளக்கி, அர சர்களைப்பற்றி இந்துமதிகொண்ட எண்ணம் இதுவென்றும் தமது உரையில் கூறுகின்றார். அவர்கூறுகின்ற கருத் துக்களில் சிலவற்றை ரஸிகர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை.

'இத்தாமரை மலரைப்போல் நான் உன் கைப்பொரு ளாக இருப்பேன்' என்பது அரசன் கருத்து; 'கையை வீணே அசைத்துக் கொண்டிருப்பது அவலக்ஷணம்' என் பது இந்துமதியின் எண்ணம் என்பர் மல்லிநாதர்.

विस्रस्तमंसादपरो विलासी रत्नानुविद्धाङ्गदकोटिलग्नम् ।
प्रालम्बमुत्कृष्य यथावकाशं निनाय साचीकृतचारुवक्त्रः ॥ १४ ॥

**विलासी** - உல்லாஸ புருஷனை, **अपरः** - மற்ெருரு அரசன், **अंसात्** - தோளிலிருந்து, **विस्रस्तम्** - நழுவியதும், **रत्नानुविद्ध-अङ्गदकोटिलग्नम्** - ரத்தினங்கள் பதிக்கப்பெற்ற தோள்வளையின் நுனியில் சிக்கியதுமான, **प्रालम्बम्** - நீண்ட பூமாலையை, **उत्कृष्य** - எடுத்து, **साचीकृत-चारुवक्त्रः** -(சிறிது) சாய்க்கப்பட்ட அழகிய முகத்தை உடையவனாக, **यथावकाशम्**-அதற்கு) உரிய இடத்தை, **निनाय** - அடைவித்தான்.

(க-து) உல்லாஸ புருஷனை மற்ெருரு அரசன் தனது புஜத் தில் அணிந்திருந்த ரத்தினங்கள் இழைக்கப் பெற்ற வளையில்

சிக்கிய பூமாலையை எடுத்து அது இருக்கவேண்டிய இடத்தில் வைத்துக் கொண்டான். அவ்வாறு வைக்கும் பொழுது மாலையை நோக்காது இந்துமதியையே நோக்கிக் கொண்டிருந்ததால், அவன் தலை சிறிதே சாய்ந்திருந்தது.

आकुञ्चिताग्राङ्गुलिना ततोऽन्यः किंचित्समावर्जितनेत्रशोभः ।
तिर्यग्विसंसर्पिनखप्रभेण पादेन हैमं विलिलेख पीठम् ॥ १९ ॥

**ततः** - முன் கூறிய அரசனைக்காட்டிலும், **अन्यः** - மற்றொருவன், **किञ्चित्-समावर्जित नेत्रशोभः** - சற்றே கீழ்நோக்கிய கண்ணின் அழகை யுடையவனாக, **आकुञ्चित-अग्राङ्गुलिना** - சிறிது வளைக்கப்பட்ட நுனிவிரல்களையுடையதும், **तिर्यग्वि-संसर्पि - नखप्रभेण** - குறுக்காகப் பரவுகின்ற நகங்களின் காந்தியையுடையதுமான, **पादेन** - காலால், **हैमम्** - பொன்னாலான, **पीठम्** - பாத பீடத்தை, **विलिलेख** - கீறினான்.

(க-து) மற்றொரு அரசன் கீழ்நோக்கிய பார்வையுடன், ஒளி பொருந்திய நகங்களுடன் கூடிய கால் விரல்களைச் சிறிது வளைத்துப் பொன்னால் செய்யப் பெற்ற பாத பீடத்தில் கீறிக்கொண்டிருந்தான்.

निवेश्य वामं भुजमासनार्धे तत्संनिवेशादधिकोन्नतांसः ।
कश्चिद्विवृत्तत्रिकभिन्नहारः सुहृत्समाभाषणतत्परोऽभूत् ॥ १६ ॥

**वामं** - இடது, **भुजं** - கையை, **आसनार्धे** - ஆஸனத்தின் ஒரு பாதியில் (பகுதியில்), **निवेश्य** - வைத்து, **तत्सन्निवेशात्** - அக்கையை வைப்பதனால், **अधिकोन्नतांसः** - மிக உயர்ந்த (இடது) தோளை உடையவனும், **विवृत्तत्रिकभिन्नहारः** - திருப்பப்பட்ட நடுமுதுகில் புரளும் முத்து மாலையுடையவனுமான, **कश्चित्** - ஒருவன், **सुहृत्समाभाषणतत्परः** - நண்பனுடன் பேசுவதில் கவனமுள்ளவனாக, **अभूत्** - இருந்தான்.

(க-து) ஒரு அரசன் தனது இடது கையைத் தான் உட்கார்திருந்த ஆசனத்தின் ஒருபகுதியில் ஊன்றிக்கொண்டு பக்கத்திலிருந்த

நண்பனுடன் பேசிக்கொண்டு இருந்தான். அதனால் இடது தோள் வலது தோளை விடச் சற்று உயர்ந்திருந்தது. ஆகவே அவன் அணிந்திருந்த முத்துமாலை, ஸமமாக இல்லாத முதுகுப் பக்கம் புரண்டிருந்தது.

विलासिनीविभ्रमदन्तपत्रमापाण्डुरं केतकबर्हमन्यः ।
प्रियानितम्बोचितसंनिवेशैर्विपाटयामास युवा नखाग्रैः ॥ १७ ॥

**अन्यः** - மற்றொரு, **युवा** - யுவபுருஷன், **विलासिनी - विभ्रम-दन्तपत्रम्** - ஸ்திரீகளின் அழகான தந்தபத்ரம்போலுள்ளதும், **आपाण्डुरम्** - சிறிதே வெண்ணிறமாயிருப்பதுமான, **केतकबर्हम्** - தாழம்பூ மடலை,.........., **नखाग्रैः** - நகங்களின் நுனிகளால், **विपाटयामास** - கிழித்துக்கொண்டிருந்தான்.

(க-து) மற்றொரு ராஜகுமாரன், சிறிதே வெண்ணிறமுடைய தாழம்பூமடலை எடுத்துக் கிழித்துக் கொணடிருந்தான். அத்தாழை மடல், வெண்ணிறத்தினாலும், அதன் வடிவத்தினாலும், பெண்கள் அழகிற்காகக் காதிலணியும் தந்த பத்ரம்போல் இருந்தது.

**दन्तपत्रम्** - யானையின் தந்தத்தில் இலைபோலும், புஷ்பம் போலும், மீன், மகரம் இவைகள் போலும் வடிவமுடையதாகச் செய்யப்பட்ட காதணி; தாழம்பூவின் மடல் போன்றும் சிறியதாக அஃது செய்யப்படலாம். இங்கு அவ்வரசன் வைத்துக் கொண்டிருந்த தாழைமடல், பெண்கள் அழகிற்காகக் காதிலணியும் தந்தபத்ரம் போன்றிருந்தது.

தாழைமடலின் வடிவமும், வெண்ணிறமும் அதனை தந்தபத்ரத்துடன் ஒப்பிடக்காரணமா யிருந்தன.

இத்தகைய தந்தபத்திரங்களை இப்பொழுதும் பெண்கள் அணிந்திருப்பதைக் காணலாம்.

कुशेशयाताम्रतलेन कश्चित् करेण रेखाध्वजलाञ्छनेन ।
रत्नाङ्गुलीयप्रभयानुविद्धानुदीरयामास सलीलमक्षान् ॥ १८ ॥

**कश्चित्** - ஒரு அரசன், **कुशेशय-आताम्र तलेन** - தாமரை மலர்போல் சிவந்த உட்பாகத்தையுடையதும், **रेखाध्वजला-ञ्छनेन** -ரேகையின் வடிவத்திலுள்ள த்வஜத்தை அடையாள மாகவுடையதுமான, **करेण** - கையால், **रत्नाङ्गुलीय-प्रभया** - ரத்தினமிழைத்த மோதிரங்களின் ஒளியினுல், **अनुविद्धान्**- பரவப்பட்டுள்ள, **अक्षान्** - (சூதாடும்) காய்களை, **सलीलम्** - அழகாக, **उदीरयामास** - உருட்டினுன்.

(க-து) ஒரு அரசன், தாமரை மலர்போலச் சிவந்துள்ளதும், கொடிபோன்ற ரேகைகளாலாகிய அடையாளங்களமைந்ததுமான கையினுல், விரல்களில் அணிந்திருந்த மோதிரங்களில் பதிக்கப் பெற்ற ரத்தினங்களின் ஒளி, ஆடும் பாச்சிகைகளில் பிரதிபலிக்க, அக்காய்களை உருட்டிக் கொண்டிருந்தான்.

कश्चिद्यथाभागमवस्थितेऽपि स्वसंनिवेशाद्व्यतिलङ्घिनीव ।
वज्रांशुगर्भाङ्गुलिरन्ध्रमेकं व्यापारयामास करं किरीटे ॥ १९ ॥

**कश्चित्**-ஒரு அரசன், **यथाभागम्**-(அது) இருக்கவேண்டிய இடத்தில், **अवस्थितेऽपि**-இருந்த போதிலும், **स्वसन्निवेशात्**-தனது இடத்திலிருந்து, **व्यतिलङ्घिनि इव** - நழுவியது போல், **किरीटे** - கிரீடத்தில், **वज्रांशुगर्भा गुलिरन्ध्रम्** - (கிரீட) ரத்தினத்தின் ஒளியை விரல்களின் இடையேயுடையதான, **एकम्** - ஒரு, **करम्** - கையை, **व्यापारयामास** - வைத்தான்.

(க-து) ஒரு அரசன், தனது கிரீடம் சிரசில் உரிய விடத்தில் இருந்தபோதிலும் அதுதகுந்த ஸ்தானத்திலில்லாமல் நழுவி விட்டது போல் பாவித்து, கிரீடத்தைச் சரியான இடத்தில் திரும்ப வைப்பவன்போல, கிரீட வைரங்களின் ஒளி தன் விரல்களிடையே வீச, அதைச் சரிப்படுத்திக் கொண்டிருந்தான்.

ततो नृपाणां श्रुतवृत्तवंशा पुंवत् प्रगल्भा प्रतिहाररक्षी ।
प्राक्सन्निकर्षं मगधेश्वरस्य नीत्वा कुमारीमवदत् सुनन्दा ॥ २० ॥

**ततः** - பிறகு, **नृपाणां** - அரசர்களுடைய, **श्रुतवृत्तवंशा** - சரித்திரத்தையும் வம்சத்தையுமறிந்தவளும், **प्रगल्भा** - நன்கு பேசக்கூடியவளும், **सुनन्दा** - ஸுநந்தை என்ற பேருடைய வளுமான, **प्रतिहाररक्षी** - வாயிற்காப்பவள், **प्राक्** - முதலில், **कुमारीं** - இந்துமதியை, **मगधेश्वरस्य** - மகதராஜனுடைய, **सन्निकर्षम्** - அருகில், **नीत्वा** - அழைத்துச் சென்று, **पुंवत्** - ஆண் பிள்ளையைப் போல், **अवदत्** - பேசினாள்.

(க-து) அரசர்களின் வம்சங்களையும், அவர்களுடைய சரித்திரங்களையும் நன்கு அறிந்துள்ள ஸுநந்தை என்ற வாயிற்காப்பவள், முதன் முதலில் இந்துமதியை மகத நாட்டு மன்னனிடம் அழைத்துச் சென்று, ஆண்மகனைப் போலத் தைரியத்துடன் பேசினாள்.

இது முதல் ஐந்து சுலோகங்கள் மகத அரசரைப் பற்றிக் கூறுகின்றன.

असौ शरण्यः शरणोन्मुखानामगाधसत्त्वो मगधप्रतिष्ठः ।
राजा प्रजारञ्जनलब्धवर्णः परन्तपो नाम यथार्थनामा ॥ २१ ॥

**असौ** - இந்த, **राजा** - அரசர், **शरणोन्मुखानां** - பாதுகாப்பை விரும்புபவருக்கு, **शरण्यः** - சரணமளிப்பவர்; **अगाधसत्त्वः** - கம்பீரமான ஸ்வபாவமுடையவர்; **मगधप्रतिष्ठः** - மகத தேசத்தில் நிலை பெற்றிருப்பவர்; (மகததேச அரசர்); **प्रजारञ्जनलब्धवर्णः** - பிரஜைகளை மகிழ்விப்பதில் திறமை வாய்ந்தவர்; **परतपः नाम** - (சத்ருக்களைத் தபிக்கச் செய்பவர்) பரந்தபன் என்ற, **यथार्थनामा** - பொருளோடு கூடிய பெயருடையவர்.

(க-து) "இதோ எதிரில் அமர்ந்திருக்கும் இவ்வரசர், தஞ்சமென வந்தோருக்குத் தஞ்சமளிப்பவர். பெருந்தன்மை வாய்ந்த ஸ்வ

பாவமுடையவர். மகததேசத்தின் அரசர். பிரஜைகளை நன்குஆள்வ தால் நற்புகழ்பெற்றவர். பகைவர்களைத் தபிக்கச் செய்வதால் பரந் தபர் என்ற உண்மையான பெயருடையவர்.

**पर** - எதிரியை, **तपः** - வருத்துபவர் என்பது பதப் பொருள்.

**कामं नृपाः सन्तु सहस्रशोऽन्ये राजन्वतीमाहुरनेन भूमिम् ।**
**नक्षत्रताराग्रहसंकुलापि ज्योतिष्मती चन्द्रमसैव रात्रिः ॥ २२ ॥**

**अन्ये** - மற்ற, **नृपाः**-அரசர்கள், **सहस्रशः** - ஆயிரக்கணக் காக, **सन्तु कामम्**- இருக்கவே செய்கின்றனர்; **भूमिं**-உலகத்தை, **अनेन** -இவ்வரசராலேயே, **राजन्वतीं**-சிறந்த அரசரையுடைய தாக, **आहुः**-சொல்லுகிறார்கள்; **नक्षत्र-तारा-ग्रह - सङ्कुला अपि**- நக்ஷத்திரங்கள், தாரகைகள், கிரஹங்கள் இவைகளால் நிறைந்திருந்தபோதிலும், **रात्रिः**-இரவானது, **चन्द्रमसा एव** - சந்திரனாலேயே, **ज्योतिष्मती**-பிரகாசமுடையதாயிருக்கிறது.

(க-து) "ஆகாயத்தில்அசுவினி முதலிய நக்ஷத்திரங்களும், மற் றும் பல தாரகைகளும், செவ்வாய் முதலிய கிரஹங்கள் பலவும் நிரம்பியிருப்பினும் இரவைச் சந்திரனுடைய ஒளிதான் பிரகாசிக்கும் படிச் செய்கிறது. அதைப் போல் உலகத்தில் பல அரசர்கள் இருப் பினும் இவ்வரசரால் தான் இவ்வுலகு நல்லரசருடையதாகின்றது. சந்திரனது ஒளியில் நக்ஷத்திரஙகளின் ஒளி குன்றி விடுவது போல் இம்மகத அரசர்முன் மற்ற அரசர்கள் புகழ் மஙகி இருக்கின்றனர்.

**क्रियाप्रबन्धादयमध्वराणामजस्रमाहूतसहस्रनेत्रः ।**
**शच्याश्चिरं पाण्डुकपोललम्बान् मन्दारशून्यानलकांश्चकार ॥२३॥**

**अयं** - இவ்வரசர், **अध्वराणां**-யாகங்களை, **क्रियाप्रबन्धात्**- இடைவிடாது செய்வதனல், **अजस्रम्** - எப்பொழுதும், **आहूतसहस्रनेत्रः** - அழைக்கப்பட்ட இந்திரனை உடையவராக, **शच्याः** - இந்திராணியின், **अलकान्** - முன்னுச்சி மயிர்களை

**पाण्डुकपोल-लम्बान्** - வெளுத்த கன்னங்களில் தொங்குபவை களாகவும், **मन्दारशून्यान्** - மந்தார புஷ்பங்களில்லாதவைக ளாகவும், **चिरम्** - வெகு காலம், **चकार** - செய்தார்.

(க-து) "யாகத்தில் இந்திரன் முக்கியமான தேவன். யாககாலத்தில் தேவதைகள் அவர்களுடைய பங்கான ஹவிஸ்ஸை வாங்கிப் போக அழைக்கப்படுவார்கள். இவ்வரசர் யாகங்களை இடைவிடாது செய்து வருபவர். ஆகையால் அடிக்கடி இந்திரனை இவ்வரசர் அழைப்பார். இந்திரன் எப்பொழுதும் இவரது யாகசாலையிலிருந்ததால் இந்திரன் மனைவியாகிய சசிதேவி (இந்திராணி) கணவனைப் பிரிந்த வருத்தத்தினால் தனது கூந்தலை வாரிப் பின்னிக் கொள்ளாமலும், புஷ்பங்களணியாமலும் முன்னுச்சிமயிர் கன்னங்களில் தொங்க, இருப்பாள்.

கணவனை விட்டுப் பிரிந்துள்ள சமயங்களில் பெண்கள் அலங்காரம் செய்து கொள்ளுவதில்லை. ஆதலால் இந்திராணியும் அணி செய்துகொள்ளாது இருந்தாள். கவலையால் அவள் முகம் வெளிறி இருந்தது.

இவ்வரசர் இடைவிடாது யாகங்களைச் செய்து வருபவர் என்பது கருத்து.

अनेन चेदिच्छसि गृह्यमाणं पाणिं वरेण्येन कुरु प्रवेशे ।
प्रासादवातायनसंश्रितानां नेत्रोत्सवं पुष्पपुराङ्गनानाम् ॥ २४ ॥

**वरेण्येन** - வரிக்கத் தகுந்த, **अनेन** - இவ்வரசரால், **पाणिं** - (உனது) கை, **गृह्यमाणम्** - பிடிக்கப்படுவதை, **इच्छसि चेत्** - விரும்புவாயானால், **प्रवेशे** - (விவாஹம் ஆனபின் பட்டணப்) பிரவேசகாலத்தில், **प्रासाद-वातायन संश्रितानां** - மாளிகைகளின் ஜன்னல்களில் இருப்பவர்களான, **पुष्पपुराङ्गनानां** - புஷ்பபுரப் பெண்களின், **नेत्रोत्सवम्** - கண்களுக்கு மகிழ்ச்சியை, **कुरु** - செய்வாய்.

(க-து) "இவ்வரசரை விரும்பி மணம் புரிவாயானால், நீ

இவருடன் நகரப்பிரவேசம் செய்யுங் காலத்தில் புஷ்பபுரப் பெண்களுக்குச் சந்தோஷத்தைத் தருவாய்.

'புஷ்பபுரப் பெண்கள் உன்னை மிக மகிழ்ச்சியுடன் காண்பர். உனது அழகு அவர்களது கண்களுக்கு விருந்தாகும். ஏனெனில் நீ, அவர்களும் கண்டு மகிழும்படியான அவ்வளவு அழகுடையவள்."

புஷ்பபுரம் - பாடலீபுத்ரம்; இது மகத தேசத்தின் தலைநகர். இதன் தற்காலப் பெயர் பாட்னா என்பது.

एवं तयोक्ते तमवेक्ष्य किंचिद्विस्रंसिदूर्वाङ्कमधूकमाला ।
ऋजुप्रणामक्रियमैव तन्वी प्रत्यादिदेशैनमभाषमाणा ॥ २९ ॥

**एवम्** - இவ்வாறு, **तया** - அந்த ஸுநந்தையால், **उक्ते** - சொல்லப்பட்டதும், **तम्**-அந்தப்பரந்தபனை, **अवेक्ष्य**-பார்த்து, **किञ्चित्** - சற்று, **विस्रंसि** - **दूर्वाङ्क मधूकमाला**-தாழ்கின்றதும் அறுகம் புல்லை இடையே யுடையதுமான மதூக மாலையை யுடைய, **तन्वी** - மெல்லிய இந்துமதி, **अभाषमाणा** - (ஏதும்) பேசாதவளாகவே, **ऋजुप्रणामक्रियया एव**-கருத்தற்ற நமஸ்காரத்தைச்செய்தலினாலேயே, **एनम्** - அவ்வரசனை, **प्रत्यादिदेश**-நிராகரித்தாள்.

(க-து) அழகிய மாலையை யணிந்த இந்துமதிக்கு ஸுநந்தை பாடலீபுரத் தரசனைப் பற்றி இவ்வாறு கூறவும், அவ்வரசனைக் கவனித்துப்பார்த்த இந்துமதி, ஏதும் பேசாமல் வெறும் வணக்கத்தை மாத்திரம் செலுத்தித் தன் விருப்பமின்மையை உணர்த்தினாள்.

மதூகம்—இலுப்பைப் பூ என்பர். இவ் இலுப்பைப் பூ மாலை ஸ்வயம்வரத்திற்கெனத் தயாரிக்கப்பட்டுள்ளது; இம்மாலையின் இடையே அறுகம்புல் மங்களம் கருதித் தொகுக்கப் பட்டிருந்தது.

இந்துமதியின் கையில் இருந்த இம்மாலை அவள் வணங்கிய பொழுது சிறிதே தாழ்ந்தது.

तां सैव वेत्रग्रहणे नियुक्ता राजान्तरं राजसुतां निनाय ।
समीरणोत्थेव तरंगलेखा पद्मान्तरं मानसराजहंसीम् ॥ २६ ॥

**वेत्रग्रहणे** - பிரம்பைப் பிடிப்பதில், **नियुक्ता** - ஏற்படுத்தப் பட்டிருந்த, **सा एव** - அதே ஸுநந்தை, **तां** - அந்த, **राजसुतां** - ராஜகுமாரியை, **राजान्तरम्** - வேறு அரசனிடம், **समीरणोत्था** - காற்றினுல் எழுந்த, **तरङ्गलेखा** - அலை வரிசை, **मानसराजहंसीं** - மானஸஸரஸில் இருக்கிற பெண் அன்னத்தை, **पद्मान्तरम् इव** - வேறொரு தாமரைக்கு (க்கொண்டு செல்லுவது) போல, **निनाय** - அழைத்துச்சென்றுள்.

(க-து) மானஸ ஸரஸ்ஸில் ஒரு தாமரையில் அமர்ந்திருக்கும் ராஜஹம்ஸத்தை, காற்றினுல் உண்டாக்கப்பட்ட அலைகள் மெதுவாக மற்றொரு தாமரையிடம் கொண்டு சேர்ப்பது போல, வாயிற்காப்பாளான ஸுநந்தை இந்துமதியை மற்றொரு அரசனிடமழைத்துச் சென்றுள்.

அடுத்துவரும் மூன்று சுலோகங்கள் அங்கதேச அரசரைப் பற்றிக் கூறுகின்றன.

जगाद चैनामयमङ्गनाथः सुराङ्गनाप्रार्थितयौवनश्रीः ।
विनीतनागः किल सूत्रकारैरैन्द्रं पदं भूमिगतोऽपि भुङ्क्ते ॥ २७ ॥

(**सा** - அந்த ஸுநந்தை), **एनां** - இவ்விந்துமதியை (நோக்கி), **जगाद च** - கூறினுள் : - **अयम्** இவர், **अङ्गनाथः** - அங்கதேச அரசர்; **सुराङ्गना-प्रार्थित-यौवनश्रीः** தேவஸ்த்ரீகளால் விரும்பப்பட்ட-யௌவன சோபையுடையவர்; **सूत्रकारैः** - (பாலகாப்யர், கௌதமர் முதலிய) கஜசாஸ்திர ஆசிரியர்களால், **विनीतनागः** - பழக்கப்பட்ட யானைகளையுடையவர்; **भूमिगतः अपि** - பூவுலகத்தில் இருந்தபோதிலும், **ऐन्द्रं** - இந்திரனுடைய, **पदं** - பதவியை, **भुङ्क्ते** - அனுபவிக்கிறுர்.

(க-து) ஸுநந்தை இந்துமதியிடம் கூறினாள் :- "இதோ எதிரில் இருப்பவர் அங்கதேச அரசர். அப்ஸரஸ்த்ரீகளாலும் விரும்பப்பட்ட யௌவனப் பொலிவுடையவர். பாலகாப்யர் முதலான கஜசாஸ்திர மறிந்த முனிவர்களைக் கொண்டு யானைகளைப் பழக்கியவர். இவ் வுலகத்திலேயே ஸ்வர்க்கஸுகத்தை யனுபவிப்பவர்.

ஒரு சமயம் அவ்வரசன் யுத்தத்தில் தேவேந்திரனுக்குத் துணை செய்ய ஸ்வர்க்கம் சென்றபொழுது அப்ஸரஸுகளும் அவனது அழகைக்கண்டு வியந்து அவனை அடைய விரும்பினர் என்பர்.

முன்னொரு காலத்தில் சாபத்தினால் திக்கஜங்கள் எட்டும் பூமிக்கு வரவும், அவற்றை வசப்படுத்தக் கருதி இவ்வரசன் இந்திரனைப் பிரார்த்தித்துப் பாலகாப்யர் கௌதமர் முதலான தேவரிஷிகளைக் கொண்டு அவ் யானைகளை வசப்படுத்தினான் என்பது இங்குக் குறிப்பிடப்படும் வரலாறு.

பாலகாப்யர் முதலியவர்கள் கஜசாஸ்திரம் எழுதியவர்கள். தேவஸ்திரீகளால் விரும்பப்படுவது, தேவரிஷிகளால் உபகாரம் செய்யப்பெறுவது என்ற காரணங்களால் இவ் வரசன் இந்திர லோகத்தை இப்பூமியிலேயே பெற்றுள்ளான் எனலாம்.

अनेन पर्यासयताश्रुबिन्दून् मुक्ताफलस्थूलतमान् स्तनेषु ।
प्रत्यर्पिताः शत्रुविलासिनीनामुन्मुच्य सूत्रेण विनैव हाराः ॥ २८ ॥

**शत्रुविलासिनीनाम्** - சத்ருக்களின் மனைவிமார்களுடைய, **स्तनेषु** - மார்பில், **मुक्ताफलस्थूलतमान्** - முதிர்ந்த முத்துக்களைப் போல் மிகப்பெரிய, **अश्रुबिन्दून्** - கண்ணீர்த் துளிகளை, **पर्यासयता**-(சிதறி) விழும்படி செய்கின்ற, **अनेन** - இவ்வங்கதேசமன்னரால், **उन्मुच्य** - (முத்துமாலைகள்)பறிக்

கப்பட்டு, **सूत्रेण विना एव** - நூலின்றியே, **हाराः** - முத்து மாலைகள், **प्रत्यर्पिताः** - திரும்பவும் இடப்பட்டன.

(க-து) "இவ்வரசர் சத்ருக்களைக்கொன்றார். அதனால் அவர்களது மனைவிமார்கள், தம்கழுத்திலிருந்த முத்து மாலைகளைக் கழற்றி எறிந்தனர். மிகுதியான சோகத்தினால் ஓயாது ஏராளமாகக் கண்ணீர் வடித்தனர். இவ்வாறு செய்தார் இம்மன்னர். அத்தகைய பராக்ரமமுடையவர் இவர்.

அப்பெண்கள் உகுத்த கண்ணீர்த்துளிகள் முத்துப்போல் வெண்மையாகவும், பெரியனவாகவும், ஒன்றன்பின் ஒன்றாகவும் விழுந்து அவர்களது மார்பில் தங்கியிருந்ததால், நூலில்லாது அமைக்கப்பட்ட முத்துமாலை போல் தோன்றின.

ஆகவே, பெண்களணிந்துள்ள நூலுள்ள முத்துமாலைகளைக் கழற்றிவிட்டு நூலில்லா முத்துமாலையையே இவ்வரசர் அவர்களுக்கு அணிவித்தார் போலும் என ஸுநந்தை சமத்காரமாகக் கூறுகின்றாள்.

निसर्गभिन्नास्पदमेकसंस्थमस्मिन् द्वयं श्रीश्च सरस्वती च ।
कान्त्या गिरा सूनृतया च योग्या त्वमेव कल्याणि तयोस्तृतीया ॥

**निसर्गभिन्नास्पदं** - இயற்கையிலேயே வேறுபட்ட இடத்தையுடைய (ஓரிடத்தில் ஒன்று சேர்ந்திராத) **श्रीः च**-லக்ஷ்மியும் (செல்வமும்), **सरस्वती च**-ஸரஸ்வதியும் (கல்வியும்) (ஆகிய) **द्वयं** - இவ்விருவரும், **अस्मिन्**-இந்த அங்கதேச அரசரிடத்தில், **एकसंस्थम्**-ஓரிடத்தில் நிலைபெற்றுள்ளனர்: **कल्याणि** - மங்களமுடையவளே, **कान्त्या** - ஒளியினாலும், **सूनृतया** - உண்மையான, **गिरा च** - பேச்சினாலும், **योग्या** - தகுந்தவளான, **त्वं एव** - நீயே, **तयोः** - அவர்களுக்கு **तृतीया** - மூன்றாமவளாக இருப்பவள்.

(க-து) "செல்வமும் கல்வியும் சேர்ந்து எவரிடத்துமிரா. ஆனல் இவ்வங்கதேச அரசரிடம் இரண்டு முள்ளன. லக்ஷ்மியைப் போன்ற அழகும், ஸரஸ்வதியைப் போன்ற பேச்சுத்திறனும் படைத்துள்ள நீயே, அவ்விருவரோடு சேர்ந்து இவ்வரசரிடம் மூன்ருமவளாக இருக்கத் தகுந்தவள்."

अथाङ्गराजादवतार्य चक्षुर्याहीति जन्यामवदत् कुमारी ।
नासौ न काम्यो न च वेद सम्यग् द्रष्टुं न सा भिन्नरुचिर्हि लोकः ॥

**अथ** - பிறகு, **कुमारी** - இந்துமதி, **अङ्गराजात्** - அங்க தேச அரசனிடமிருந்து, **चक्षु**: - கண்ணை, **अवतार्य** - எடுத்து, **जन्यां** - தன் தோழியான ஸுநந்தையை, '**याहि** - செல்', **इति** - என்று, **अवदत्** - சொன்னள். **असौ** - இவ்வரசன் **काम्य**: **न** - விரும்பத் தகுந்தவன் - அல்லன் (என்பது), **न** - இல்லை; (விரும்பத் தகுந்தவனே); **सा** - அப்பெண்ணும், **सम्यक्**-நன்கு, **द्रष्टुं** - பரிசீலனை செய்வதற்கு, **न वेद** - அறியாள் (என்பதும்), **न** - இல்லை. **लोकः** - உலகம், **भिन्नरुचिः हि** - பல திறப்பட்ட ருசியையுடையது அல்லவா?

**जन्या** - மணப்பெண்ணின் தோழி.

**जन्या मातृवयस्या स्याज्जन्या जनिवरप्रिया** என்பர்.

**जनी**-மணப்பெண்; **स्नुषाजनीवध्व**: என்பது அமரம்.

(க-து) இந்துமதி அவ்வரசனை விட்டு, 'அப்புறஞ் செல்'லென ஸுநந்தையைப் பார்த்துக் கூறினள். அவ்வரசன் அழகு முதலிய குணங்களற்றவன் என்பதும், அதனல் விரும்பத்தகாதவன் என்பதும் இல்லை. அவன் எல்லோராலும் விரும்பத்தக்கவனே. இந்துமதியும் தகுந்த வரனைத் தெரிந்தெடுக்க அறியாதவள் என்பதுமில்லை; இந்துமதி சிறந்த அறிவுள்ளவளே. ஆயினும் அவள் அவனை வரிக்கவில்லை. வரிக்காமைக்குக் காரணம், அவனிடம் அவள் மனம் பற்றுக்கொள்ளவில்லை. உலகத்தில் ஒருவருக்குப் பிரியமாயிருப்பது இன்னெருவருக்குப் பிரியமானதாயிருப்பதில்லை என்பதைத் தான் காரணமாகக் கூற முடியும்.

ततः परं दुष्प्रसहं द्विषद्भिर्नृपं नियुक्ता प्रतिहारभूमौ ।
निदर्शयामास विशेषदृश्यमिन्दुं नवोत्थानमिवेन्दुमत्यै ॥ ३१ ॥

ततः - பிறகு, प्रतिहारभूमौ - வாயிற்புறத்தில், नियुक्ता - நியமிக்கப்பட்டவளான ஸுநந்தை, द्विषद्भिः - பகைவர்களால், दुष्प्रसहं - பொறுக்க முடியாதவனும், विशेषदृश्यं - மிக அழகுடையவனுமான, परं - வேறு, नृपं - அரசனை, नवोत्थानं - புதிதாக உதித்திருக்கிற, इन्दुं इव சந்திரனை (க்காட்டுவது) போல, इन्दुमत्यै - இந்துமதிக்கு, निदर्शयामास - காண்பித்தாள்.

(க-து) பகைவர்களுக்கு அச்சமுண்டாக்குபவனும், சிறந்த அழகனுமான மற்றொரு அரசனைப் புதிதாக உதித்த சந்திரனைக் காட்டுவதுபோல், இந்துமதிக்கு ஸுநந்தை காண்பித்தாள்.

अवन्तिनाथोऽयमुदग्रबाहुर्विशालवक्षास्तनुवृत्तमध्यः ।
आरोप्य चक्रभ्रममुष्णतेजास्त्वष्ट्रेव यत्नोल्लिखितो विभाति ॥ ३२ ॥

उदग्रबाहुः - நீண்ட கைகளையுடையவரும், विशालवक्षाः - பரந்த மார்பையுடையவரும், तनुवृत्तमध्यः - மெல்லிய திரண்ட இடையையுடையவருமான, अयम् - இவர், अवन्तिनाथः - அவந்திதேச மன்னர்; चक्रभ्रमं - (ஆயுதங்களைச் சாணை பிடிக்கும்) சக்ர யந்திரத்தில், आरोप्य - ஏற்றி, त्वष्ट्रा - த்வஷ்டாவினால், यत्नोल्लिखितः - முயற்சியுடன் செதுக்கப்பட்ட, उष्णतेजाः इव - ஸூரியன் போல, विभाति - (இவர்) பிரகாசிக்கிறார்.

(க-து) "நீண்ட கைகளையும், பரந்த மார்பையும், மெல்லிய திரண்ட இடையையும் உடையவர் இவ்வவந்திதேசவாசர். த்வஷ்டாவினால் சாணைக்கல்லில் தேய்த்துக் குறைக்கப்பட்ட சூரியன் போல் ஒளியுடனும் அழகுடனும் உள்ளார் இவர்.

சந்திரனைப்போல் அழகும், சூரியனைப்போல் தேஜஸும் உடையவன் என்பது இரண்டு சுலோகங்களால் பெறப் படும் கருத்தாகும். நண்பர்களுக்குச் சந்திரன்போல் தண்மையுள்ளவன், பகைவர்களுக்குச் சூரியன்போல் காய்த லுடையவன் எனலாம்.

த்வஷ்டா என்பவன் தேவர்களின் சில்பியாவான். அவன் தனது மகளான ஸம்ஜ்ஞாதேவி என்பவளை ஸூர் யனுக்கு மணம் செய்துகொடுத்தான். ஸூர்யனது ஒளி தாங்க முடியாமலிருப்பதை ஸம்ஜ்ஞாதேவி தன் தந்தையிடம் தெரிவித்தாள். த்வஷ்டா, ஸூர்யனுடைய அனுமதி பெற்று கடைசல் யந்திரத்தில் ஸூர்ய பிம்பத்தை வைத்து அதில் எட்டில் ஒரு பாகத்தை மிகவும் முயன்று குறைத்தான் என்பது இங்குக் கூறப்படும் வரலாறு. வெட்டியெடுத்த ஸூர்யபிம்பத்தின்பகுதியைக் கொண்டு விஷ்ணுவின் சக்ரா யுதம், சிவபிரானது திரிசூலம், யமனது தண்டாயுதம் முதலியன செய்யப்பட்டன என்பர்.

अस्य प्रयाणेषु समग्रशक्तेरग्रेसरैर्वाजिभिरुत्थितानि ।
कुर्वन्ति सामन्तशिखामणीनां प्रभाप्ररोहास्तमयं रजांसि ॥ २२ ॥

**समग्रशक्तेः** - (ப்ரபு சக்தி, உத்ஸாஹ சக்தி, மந்த்ர சக்தி, என்ற) எல்லாச் சக்திகளையுமுடைய, **अस्य** - இவ்வரச ருடைய, **प्रयाणेषु** - யுத்தயாத்ரைகளில், **अग्रेसरैः** - முன்னால் செல்கின்ற, **वाजिभिः** - குதிரைகளால், **उत्थितानि** - எழுப் பப்பட்ட, **रजांसि** - தூள்கள், **सामन्तशिखामणीनां** - பக்கத்துத் தேசங்களிலிருக்கும் அரசர்களின் தலைகளிலுள்ள ரத்னங் களின், **प्रभाप्ररोहास्तमयं** - ஒளிக்கதிர்களுக்கு அழிவை, **कुर्वन्ति** - செய்கின்றன.

(க-து) "இவ்வரசர் நிரம்பச் செல்வமுள்ளவர். பகைவர்களை வெற்றி கொள்ளத் தேவையான உத்ஸாஹம் நிரம்பியவர். சந்தி, விக்ரஹம் முதலிய உபாயங்களை ஆளுவதில் நிபுணர். இவர் திக் விஜயத்திற்காகச் செல்லுகையில், குதிரைகளால் எழுப்பப்பட்ட தூளானது பகைவர்களின் தலைமேல் படிந்து, அவர்கள் அணிந்துள்ள கிரீட மணிகளின் பிரகாசத்தையும் மங்கச் செய்கிறது.

असौ महाकालनिकेतनस्य वसन्नदूरे किल चन्द्रमौलेः ।
तमिस्रपक्षेऽपि सह प्रियाभिर्ज्योत्स्नावतो निर्विशति प्रदोषान् ॥ ३४ ॥

**असौ** - இந்த அவந்தி தேசவரசர், **महाकालनिकेतनस्य** - மஹாகாலத்தை இருப்பிடமாக உடைய, **चन्द्रमौलेः** - சந்திரனைத் தலையில் அணிந்த சிவபெருமானுக்கு, **अदूरे** - ஸமீபத்தில், **वसन्** - வசித்துக்கொண்டு, **तमिस्रपक्षे अपि** - கிருஷ்ண பக்ஷத்திலும், **प्रियाभिः सह** - மனைவியருடன் கூட, **ज्योत्स्नावतः** - நிலவுள்ள, **प्रदोषान्** - முன்னிரவுகளை, **निर्विशति किल** - அநுபவிக்கிறார்.

(க-து) "அவந்தி நாட்டின் தலைநகரான உஜ்ஜயினிக்கு அருகிலுள்ள இடம் மஹாகாலம். அங்குச் சிவபெருமான் வசிக்கிறார். அவரது தலையில் அணிந்துள்ள சந்திரனது ஒளி சமீபத்திலுள்ள உஜ்ஜயினியிலும் பிரகாசிக்கிறது. அதனால் இவ்வவந்தியரசர் கிருஷ்ணபக்ஷ முன்னிரவுகளிலும், தம்மனைவியருடன் நிலவை அனுபவிக்கிறார். இவரது ராஜதானியில் எப்பொழுதும் நிலவு நிலவுகின்றது. மற்றவர்க்கில்லாத அத்தகைய தனிச் சிறப்புப் பெற்றவர் இவர்.

अनेन यूना सह पार्थिवेन रम्भोरु कच्चिन्मनसो रुचिस्ते ।
सिप्रातरङ्गानिलकम्पितासु विहर्तुमुद्यानपरम्परासु ॥ ३५ ॥

**रम्भोरु** - வாழைமரம்போன்ற தொடைகளையுடையவளே, **यूना** - வாலிபரான, **अनेन** - இந்த, **पार्थिवेन सह** - அரசரோடு கூட, **सिप्रातरङ्गानिल कम्पितासु** - ஸிப்ரா நதியின் அலை

களுடைய காற்றினால் அசைக்கப்பட்ட, **उद्यानपरंपरासु** - உத்யானவனங்களின் வரிசைகளில், **विहर्तुं** - விளையாட, **ते** - உன்னுடைய, **मनसः** - மனத்திற்கு, **रुचिः कच्चित्** - ஆசையுள்ளதா ?

(க-து) "தலைநகரான உஜ்ஜயினிக்குச் சமீபத்தில் ஸிப்ரா என்ற நதி ஓடுகிறது. அவ்வாற்றிலிருந்து வரும் குளிர்ந்த காற்று உத்யான வனங்களில் ஸுகமாக வீசும். ஸுகமனுபவிக்கத்தேவையான நிலவும், குளிர்ந்த காற்றை வீசுகின்ற நதியும், உத்யானவனமும் இவர் நாட்டிலுள்ளன. பலமனைவியரை யுடையவராயினும் இன்னும் யௌவனத்துடன் இருக்கின்றார். இவ்வரசரை மணம் புரிந்து கொள்ள உனக்கு விருப்ப மிருக்கின்றதா ?"

तस्मिन्नभिद्योतितबन्धुपद्मे प्रतापसंशोषितशत्रुपङ्के ।
बबन्ध सा नोत्तमसौकुमार्या कुमुद्वती भानुमतीव भावम् ॥ ३६ ॥

**उत्तमसौकुमार्या** - சிறந்த அழகுடைய, **सा**-அந்த இந்துமதி, **अभिद्योतित-बन्धुपद्मे** - மலரச் செய்யப்பட்ட உறவினராகிய தாமரையை யுடையவனும், **प्रताप-संशोषित-शत्रुपङ्के** - பராக்ரமத்தினால் உலரும்படி செய்யப்பட்ட பகைவர்களாகிய சேற்றையுடையவனுமான, **तस्मिन्** - அவ்வரசனிடத்தில், **कुमुद्वती** - அல்லிப்பூ, **भानुमति इव** - சூரியனிடத்தில் (அன்பு வைக்காதது) போல, **भावम्** - மனத்தை, **न बबन्ध**-செலுத்தவில்லை.

(க-து) அவந்திதேசவரசன் பந்துக்களிடம் மிக்க அன்பு கொண்டவனாகவும், பகைவர்களைத் துன்புறுத்துபவனாகவும் இருந்தான். சூரியனை அல்லிப்பூ விரும்பாதது போல் அவ்வரசனை இந்துமதி விரும்பவில்லை.

तामग्रतस्तामरसान्तराभामनूपराजस्य गुणैरनूनाम् ।
विधाय सृष्टिं ललितां विधातुर्जगाद भूयः सुदतीं सुनन्दा ॥ ३७ ॥

**सुनन्दा** - ஸுநந்தை, **तामरसान्तराभां** - தாமரை மலரின் உட்பாகத்தைப் போன்ற நிறமுடையவளும், **गुणैः** - குணங்களால், **अनूनां** - குறைவற்றவளும், **सुदतीं** - அழகிய பற்களையுடையவளும், **विधातुः** - பிரம்மாவினுடைய, **ललितां** - அழகிய, **सृष्टिं** - படைப்புமான, **तां** - அந்த (இந்துமதியை), **अनूपराजस्य** - அனூபதேசத்தரசரின், **अग्रतः** - எதிரில், **विधाय** - (இருக்கும்படி) செய்து, **भूयः** - மறுபடியும், **जगाद** - கூறினாள்.

(க-து) தாமரைமலரின் உட்புறம் போன்ற நிறமுள்ளவளும், நற்குணங்கள் நிரம்பியவளுமான இந்துமதியை அனூபம் என்ற தேசத்தினரசன் முன்னிலையில் அழைத்துச் சென்று ஸுநந்தை கூறினாள்.

सङ्ग्रामनिर्विष्टसहस्रबाहुरष्टादशद्वीपनिखातयूपः ।
अनन्यसाधारणराजशब्दो बभूव योगी किल कार्तवीर्यः ॥ ३८ ॥

**संग्राम-निर्विष्ट-सहस्रबाहुः** - யுத்தசமயத்தில் அடையப்பட்ட ஆயிரம் கைகளையுடையவரும், **अष्टादश-द्वीप - निखात-यूपः** - பதினெட்டுத் தீவுகளிலும் நாட்டப்பட்ட யூபஸ்தம்பங்களை யுடையவரும், **अनन्य साधारण-राजशब्दः** - பிறருக்குப் பொதுவல்லாத அரசன் என்ற சொல்லையுடையவரும், **योगी** - யோகமுறையறிந்தவருமான, **कार्तवीर्यः** - கார்த்தவீரியர், என்ற அரசர், **बभूव किल** - இருந்தார்.

(க-து) " இவ்வரசரது முன்னோர்களில் ஒருவர் கார்த்தவீரியர் என்பவர். அவர் யுத்தஞ் செய்யும்பொழுது ஆயிரங்கைகளைப் பெறுவார்; எல்லா யாகங்களையும் செய்து பதினெட்டுத் தீவுகளிலும் யூபஸ்தம்பம் நாட்டியவர்; அரசர் 'என்ற பட்டமானது அவரொருவருக்கே தகும். யோக முறையறிந்தவர்; கிருதவீர்யர் என்பவருடைய பிள்ளை.

அவ்வரசன் கார்த்த வீரியார்ஜுனன் என்றும் அழைக்கப்படுவான். அவன் தத்தாத்ரேய முனிவரைப் பூஜித்து

அவரிடமிருந்து பல வரங்களைப் பெற்றான். அவ் வரபலத்தினால் அவனுக்கு யுத்தம் செய்யும் காலத்தில் ஆயிரம் கைகள் உண்டாகும். பிறர் தம் மனத்தில் தீங்கை நினைப்பினும் அவன் அதை அறிவதுடன் அதே சமயத்தில் அவர் முன் தோன்றவும் சக்தி பெற்றிருந்தான். அதனால் அவன் நாட்டில் ஜனங்கள் மனத்திலும் தீய எண்ணமின்றி இருந்தனர்.

अकार्यचिन्तासमकालमेव प्रादुर्भवंश्चापधरः पुरस्तात् ।
अन्तःशरीरेष्वपि यः प्रजानां प्रत्यादिदेशाविनयं विनेता ॥ ३९ ॥

**विनेता** - (குற்றஞ் செய்வோரைத்) தண்டிக்கின்ற, **यः** - (எந்த)கார்த்த வீரியர், **अकार्य-चिन्ता समकालं एव**-(ஜனங்கள்) கெட்ட காரியங்களை நினைக்கும் பொழுதே, **पुरस्तात्** - எதிரில், **चापधरः** - வில்லைத் தாங்கியவராக, **प्रादुर्भवन्** - தோன்றிக் கொண்டு, **प्रजानां** - மக்களுடைய, **अन्तश्शरीरेषु अपि** - மனத்திலும் (உள்ள), **अविनय**-குற்றத்தை, **प्रत्यादिदेश**-போக்கினார்.

(க-து) "கார்த்த வீரிய மன்னருக்குத் தனியான ஒரு சக்தியிருந்தது. அவருடைய ராஜ்யத்தில் எவனேனுமொருவன மனத்திலும் தீங்கை நினைப்பானாயின், அதே சமயத்தில் வில்லைக் கையிலெடுத்துக் கொண்டு அவனெதிரே தோன்ற அவருக்குச சக்தி இருந்தது. ஆகையினால் அவன் ராஜ்யத்தில் மனத்தினால் கூட யாருங் குற்றம் செய்ய முடியவில்லை. அநியாயத்தை எவரும் மனத்திலும் நினைக்க முடியாதெனில் செய்வது ஸாத்யமா?

ज्याबन्धनिष्पन्दभुजेन यस्य विनिःश्वसद्वक्त्रपरम्परेण ।
कारागृहे निर्जितवासवेन लङ्केश्वरेणोषितमा प्रसादात् ॥ ४० ॥

**ज्याबन्ध-निष्पन्द-भुजेन** - நாண், கயிற்றால் கட்டியதால் அசைவற்ற கைகளையுடையவனும், **विनिश्वसद् वक्त्रपरम्परेण** -

பெருமூச்சு விடுகின்ற முகங்களின் வரிசையையுடையவனும், **निर्जितवासवेन** - வெற்றிகொள்ளப்பட்ட இந்திரனையுடையவனுமான, **लङ्केश्वरेण** - லங்கைக்கரசனான ராவணனால், **यस्य** - (எந்த) கார்த்தவீரியருடைய, **कारागृहे** - சிறைச்சாலையில், **आ प्रसादात्** - (அவர்) மனமிரங்கும் வரை, **उषितम्** - வசிக்கப்பட்டது.

(க-து) "கார்த்த வீரியமன்னர், இந்திரனையும் போரில் ஜயித்த ராவணனைத் தம் வில்லின் நாண் கயிற்றால் கட்டி, மூச்சு விடுவது கூடக் கடினமாக விருக்கும்படி செய்து, தமது சிறைச்சாலையில், தாம் மனமிரங்கி அவனை விடுதலை செய்யும்வரை வைத்திருந்தார். ராவணனையும் சிறைபிடிக்கும்படியான பலமுடையவர் கார்த்தவீரிய மன்னர்.

ஒரு சமயம் கார்த்த வீரியன் தன் மனைவியருடன் நர்மதை நதியில் தன் கைகளால் தண்ணீரைத் தடுத்து ஜலக்ரீடை புரிந்து கொண்டிருந்தான். அப்பொழுது ராவணன், கிழக்கே நர்மதை நதியில் தண்ணீரில்லாமலிருக்கும் ஒரு திட்டில் சிவபூஜை செய்துகொண்டிருந்தான். அச்சமயம் கார்த்த வீரியன் தன் கைகளை எடுத்துவிடவே தண்ணீர் பெருகி, ராவணனையும் அவன் பூஜை செய்துவந்த லிங்கத்தையும் நீரில் ஆழ்த்தியது. அதனால் கோபங்கொண்ட ராவணன் கார்த்தவீரியனுடன் போர் புரிந்து தோற்க, அவனைக் கார்த்தவீரியன் தனது நாண் கயிற்றால் கட்டித் தூக்கிக்கொண்டு போய்ச் சிறையில் வைத்தான். பின் புலஸ்திய முனிவரின் வேண்டுகோளின்மேல் மனமிரங்கி ராவணனை விடுதலை செய்தான்.

तस्यान्वये भूपतिरेष जातः प्रतीप इत्यागमवृद्धसेवी ।
येन श्रियः संश्रयदोषरूढं स्वभावलोलेत्ययशः प्रमृष्टम् ॥ ४१ ॥

**तस्य** - அப்படிப்பட்ட கார்த்த வீரியருடைய, **अन्वये** -

वंशत्தில், **आगमवृद्धसेवी** - சாஸ்திரங்களையும், பெரியோர்களையும் கௌரவிக்கின்ற, **प्रतीप इति** - பிரதீபர் என்ற, **एषः** - இந்த, **भूपतिः** - அரசர், **जातः** - பிறந்தவர் ; **येन** - (எந்த) இப்பிரதீபரால், **आश्रयदोषरूढं** - ஆச்ரயித்திருக்கிற மனிதனின் தவற்றினால் உண்டானதும், '**स्वभावलोला** இயற்கையாக நிலையில்லாதவள்' **इति** - என்றதுமான, **श्रियः** - லக்ஷ்மியினுடைய, **अयशः** - மாசு, **प्रमृष्टम्** - போக்கடிக்கப்பட்டது.

(க-து) "அத்தகைய கார்த்த வீரியருடைய வம்சத்தில் பிறந்தவர் இந்த அரசர். 'பிரதீபர்' என்று பெயர் சாஸ்திரங்களிடத்தும் பெரியோர்களிடத்தும் நன்மதிப்புள்ளவர். லக்ஷ்மி (செல்வம்), தான் எம்மனிதரிடம் சென்றுள்ளனளோ, அம்மனிதனுடைய குற்றங்களால் அங்கு நீடித்திருப்பதில்லை அதனால் அவளுக்கு 'நிலையில்லாதவள்' என்று பெயர். ஆனால் இவ்வரசரிடம் நற்குணங்களை நிரம்பியிருந்தமையின், இவரை விட்டு அவள் நீங்கவில்லை. ஆகையால் 'இயற்கையில் நிலையற்றவ' ளென்று லக்ஷ்மிக்கு இருந்த கெட்ட பெயரை இவ்வரசர் நீக்கினார்.

आयोधने कृष्णगतिं सहायमवाप्य यः क्षत्रियकालरात्रिम् ।
धारां शितां रामपरश्वधस्य संभावयत्युत्पलपत्रसाराम् ॥ ४२ ॥

**यः** - (எந்த) பிரதீபர், **आयोधने**-யுத்தத்தில், **कृष्णगतिम्**- அக்னியை, **सहायं** - துணையாக, **अवाप्य**- அடைந்து, **क्षत्रिय-कालरात्रिम्** - க்ஷத்ரியர்களுக்குக் காளராத்ரியான, **रामपरश्वधस्य** - பரசுராமனுடைய கோடரியின், **शितां** - கூர்மையான, **धारां** - முனையை, **उत्पलपत्रसारां** - நெய்தல் பூவினுடைய இதழின் சக்தியுடையதாக, **सम्भावयति** - நினைக்கிறார்.

(க-து) "இந்தப் பிரதீப அரசருக்கு யுத்தத்தில் அக்னிதேவன் துணைவன். அத்துணையைக் கொண்டு இவர் எல்லா அரசர்களையும் பயப்படும்படி செய்தார். பரசுராமருடைய புகழ் பெற்ற கோடரி கூட இவ்வரசரை ஒன்றுஞ் செய்ய இயலவில்லை.

தலைநகரான மாஹிஷ்மதியின் அரசனும், பிரதீப மன்னனுடைய முன்னோர்களில் ஒருவனுமான நீலனுக்கு ஒரு அழகிய பெண் இருந்தாள். நீலன் ஹோமம் முதலியன செய்யும்பொழுது அவள், அக்னியின் அருகில் அமர்ந்து அதை ஊதி எரியச் செய்வாள். அவளிடம் அக்னிதேவன் காதல் கொண்டு பிராம்மண உருவமெடுத்து அப்பெண்ணை மணந்தான். இம்மணத்தால் திருப்தி யடைந்த அக்னி, பெண்ணின் தந்தையான அவ்வரசனுக்கு ஒரு வரமீந்தான். அதன்படி, நீலனது தலைநகரான மாஹிஷ்மதியின்மீது படையெடுத்து வருபவரையும் அவர்களது சேனையையும்அக்னிதேவன், தான்எரித்து அழித்து விடுவதாகக்கூறினான். அதனால் யாரும் மாஹிஷ்மதியின் மீது படையெடுக்கவில்லை. நீலனுக்கு மாத்திரமேயன்றி அவன் வம்சத்தில் வந்த மற்ற மன்னர்களுக்கும் அக்னி உதவினான். அவ்வம்சத்தில் பிறந்தவனாதலால் பிரதீபனுக்கும் அக்னியின் உதவி இருந்தது.

காளராத்ரி:- ஒவ்வொரு கல்பத்தின் முடிவிலும் உலகம் அழியும் என்பர். உலகம் அழிகின்ற அவ் இரவைக் 'காளராத்ரி' என்று கூறுவர். அவ்விரவில், ஸமுத்ரம் பொங்கும்; பயங்கரமான மின்னல், இடி, காற்று இவைகளுடன் மழை ஓயாது பெய்து உலகத்தை மூழ்கச் செய்யும்.

இச்சுலோகத்தில் பரசுராமருடைய கோடரி அதனுடைய அழிக்கும் தன்மையைக் கருதிக் காளராத்திரிக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது.

கார்த்தவீரியன், ஜமதக்னி முனிவரின் காமதேனுவை அவரில்லாதபோது பலாத்காரமாகக் கொண்டு போனதால் ஜமதக்னியின் புதல்வரான பரசுராமரால் கொல்லப்பட்

டான். இதனால் கோபமடைந்த கார்த்தவீரியனின் பிள்ளை கள் பரசுராமரில்லாதபோது ஜமதக்னியைக் கொன்று விட் டனர். இதையறிந்த பரசுராமர் அடங்காச் சினங் கொண்டு இருபத்தொரு தலைமுறைகள் க்ஷத்ரிய வம்சத் தையே நாசஞ் செய்து விடுவதாகச் சபதஞ் செய்து, அவ் வாறே பல க்ஷத்ரியர்களைக் கொன்று, அவர்கள் ரத்தத்தால் ஐந்து ஏரிகளை நிரப்பி, அவ்விரத்தத்தினால் தன் வம்சத்தா ருக்குத் தர்ப்பணம் செய்தார்.

அக்னி தேவரது துணையிருந்ததால் கார்த்தவீரியனது வமிசத்தில் வந்த இப் பிரதீப மன்னர் பரசுராமரையும் மதிக்கவில்லை.

अस्याङ्कलक्ष्मीर्भव दीर्घबाहोर्माहिष्मतीवप्रनितम्बकाञ्चीम् ।
प्रासादजालैर्जलवेणिरम्यां रेवां यदि प्रेक्षितुमस्ति कामः ॥ ४३ ॥

**माहिष्मती-वप्र-नितम्ब-काञ्चीं** - மாஹிஷ்மதீ நகரத்தின் சுற்றுச்சுவராகிய இடையில், மேகலையாக இருப்பதும், **जलवेणि-रम्यां** - ஜலப்ரவாஹத்தினால் அழகியதுமான, **रेवां** - நர்மதா நதியை, **प्रासादजालैः** - அரண்மனை ஜன்னல்களின் வழியாக, **प्रेक्षितुम्**- பார்ப்பதற்கு, **कामः** - விருப்பமானது, **यदि अस्ति** - (உனக்கு) இருக்குமேயானால், **दीर्घबाहोः** - நீண்ட கைகளையுடைய, **अस्य** - இவ்வரசருடைய, **अङ्कलक्ष्मीः**- மடியில் அமரும் லக்ஷ்மியாக, **भव** - ஆவாயாக; (இவ்வர சரை மணப்பாயாக).

(க-து) "இவ்வரசரை நீ மணந்தால் மாஹிஷ்மதீ நகரத்தைச் சுற்றியோடும் நர்மதா நதியின் அழகிய நீரோட்டத்தை அரண்மனை யின் ஜன்னல்கள் வழியாகப் பார்த்துக் களிக்கலாம்."

तस्याः प्रकामं प्रियदर्शनोऽपि न स क्षितीशो रुचये बभूव ।
शरत्प्रमृष्टाम्बुधरोपरोधः शशीव पर्याप्तकलो नलिन्याः ॥ ४४ ॥

**प्रकामं** - மிகவும், **प्रियदर्शनः अपि** - காட்சிக்கு இனியனாகவிருந்தபோதிலும், **सः** - அந்த, **क्षितीशः** - அரசன், **शरत्प्रमृष्टाम्बुधरोपरोधः** - சரத் காலத்தினால் போக்கடிக்கப் பட்ட மேகமாகிய மறைப்பையுடையவனும், **पर्याप्तकलः** - நிரம்பிய கலைகளையுடையவனுமான, **शशी** - சந்திரன், **नलिन्याः इव**-தாமரைக்கு (ருசிக்காதது) போல, **तस्याः**-அவ்விந்துமதிக்கு, **रुचये**-ஆசையின் பொருட்டு, **न बभूव** - காரணமாகவில்லை.

(க-து) சரத்காலத்துச் சந்திரன் தனது பூரண கலைகளுடன் மேகமில்லாத தெளிந்த வானில் விளங்கும் பொழுது மிக அழகியவனாகவே காணப்படுகிறான். ஆயினும், அவனைக் கண்டு தாமரை சந்தோஷங் கொண்டு மலர்வதில்லை. அதைப் போல், காண்பதற்கு மிக இனியனாக விருந்தபோதிலும், குறை யொன்று மில்லாதவனாயினும் பிரதீபனை இந்துமதி விரும்பவில்லை.

सा शूरसेनाधिपतिं सुषेणमुद्दिश्य लोकान्तरगीतकीर्तिम् ।
आचारशुद्धोभयवंशदीपं शुद्धान्तरक्ष्या जगदे कुमारी ॥ ४९ ॥

**लोकान्तरगीत कीर्तिं** - (ஸ்வர்க்கம் முதலான), பிற உலகங்களிலும் பாடப்பட்ட புகழை யுடையவனும், **आचारशुद्धोभय वंशदीपं** - நன்னடக்கையால் பரிசுத்தமாயிருக்கிற (தாய் தந்தையரின்) இரண்டு குலங்களையும் விளக்குபவனும், **शूरसेनाधिपतिम्** - சூரஸேனம் என்ற தேசத்திற்குத் தலைவனுமான, **सुषेणं - उद्दिश्य** - ஸுஷேணனைக் குறித்து **शुद्धान्तरक्ष्या** - அந்தப்புரத்தின் காவற்காரியான ஸுநந்தையால், **सा** - அந்த, **कुमारी** - இந்துமதி, **जगदे** - கூறப்பட்டாள்.

(க-து) ஸுநந்தை, மிகப் புகழையுடையவனும், பரிசுத்தமான குலத்தில் பிறந்தவனும், சூரஸேன தேசாதிபதியுமான ஸுஷேணனைக் குறித்துக் கூறினாள்.

नीपान्वयः पार्थिव एष यज्वा गुणैर्यमाश्रित्य परस्परेण ।
सिद्धाश्रमं शान्तमिवैत्य सत्त्वैर्नैसर्गिकोऽप्युत्ससृजे विरोधः ॥ ४६ ॥

**शान्तं**-சாந்தமான, **सिद्धाश्रमं**-முனிவரின் ஆசிரமத்தை, **एत्य** -அடைந்து, **सत्त्वैः** - (யானை, சிங்கம் முதலிய) மிருகங்களால், **इव** -(பகைமை விட்டு இருக்கப்படுவது) போல, **यम्** - (எந்த) ஸுஷேண மன்னரை, **आश्रित्य** - அடைந்து, **गुणैः** - (அறிவு, அடக்கம் முதலிய) குணங்களால், **नैसर्गिकः अपि** - இயற்கையானதாகவிருந்த போதிலும், **परस्परेण** - ஒன்றுக் கொன்று, **विरोधः** - பகைமை, **उत्ससृजे** - விடப்பட்டதே [illegible] **सः** - அத்தகைய, **एषः**-இந்த, **पार्थिवः** - அரசர், **नी**[illegible] வம்சத்திற் பிறந்தவர் ; **यज्वा**-முறைப்படி யாக[illegible]

(க-து) "சாந்தமான முனிவரின் ஆசிரமத்தி[illegible] பகைமையுள்ள சிங்கம், யானைமுதலிய மிருகங்க[illegible] மையை விட்டு நேசப்பான்மையுடன் உலவும்[illegible] யாகங்களை முறைப்படி செய்துள்ளவரும் நீபவ[illegible] மான ஸுஷேணரிடம் உயர்ந்த அறிவு முதலி[illegible] கொண்டிருக்கின்றன. நற்குணங்களனைத்தும் ஒரு[illegible] பிரா. அவ்வாறின்றி இவ்வரசரிடத்தில் எல்லா [illegible]டி கொண்டிருக்கின்றன.

நீபன் : இவன் இதிஹாஸத்தில் பிரவசி[illegible] ஒரு அரசன். இவன் மிகுந்த பராக்ரம முடைய[illegible]யிருந்த தால் இவ்வம்சம் இவனது பெயரால் அழைக்[illegible]படுவதா யிற்று.

முரண்பட்ட குணங்களும் சேர்ந்துள்ளன என்ற இக் கருத்து முதல் ஸர்க்கம் 22-ஆம் சுலோகத்திலும் கூறப்பட் டுள்ளதைக் காணலாம்.

यस्यात्मगेहे नयनाभिरामा कान्तिर्हिमांशोरिव संनिविष्टा ।
हर्म्याग्रसंरूढतृणाङ्कुरेषु तेजोऽविषह्यं रिपुमन्दिरेषु ॥ ४७ ॥

**हिमांशोः** - சந்திரனுடைய, **कान्तिः इव** - காந்தி போல் **नयनाभिरामा** - கண்களை மகிழ்விக்கின்ற, **यस्य** - ஸுஷேண ருடைய, **कान्तिः** - சோபையானது, **आत्मगेहे** - தனது அரண்மனையில், **सन्निविष्टा** - பரவியிருக்கிறது ; **अविषह्यं** - பொறுக்கமுடியாத, **तेजः तु** - பிரதாபமோவெனில், **हर्म्याग्र-संरूढ तृणाङ्कुरेषु** - அரண்மனைகளின் உச்சி மீது முளைத் [...]ள்ள புற்களின் முளைகளையுடைய, **रिपु मन्दिरेषु** - பகைவர் [...] அரண்மனைகளில், **सन्निविष्टम्** - நிலைபெற்றுள்ளது.

[...]வ்வரசர் சந்திரனுடையது போன்ற குளிர்ந்த நோக் [...]டைய காந்தி போன்ற பிரதாபமும் பெற்றுள் [...]ந்ததன்மை, தம்மைச் சேர்ந்தோரிடம் காட்டப்படு [...] தமது பகைவர்களிடம் காட்டபபடுகின்றது. [...]கவர்களின் நகரங்கள் அழிக்கப்பட்டு அந்நகர [...] முளைத்துள்ளன.

[...]न्दनानां प्रक्षालनाद्वारिविहारकाले ।
[...]थुरां गतापि गङ्गोर्मिसंसक्तजलेव भाति ॥ ४८ ॥

[...]ஷேணருடைய, **वारिविहारकाले** - நீர் விளை யாட்[...]ங்களில், **अवरोधस्तन-चन्दनानाम्** - அந்தப்புற ஸ்திரீக[...] மார்பிலுள்ள சந்தனங்களை, **प्रक्षालनात्** - நன்கு அலம்பு[...]லால், **कलिन्दकन्या** - யமுனை நதி, **मथुरां** - மதுரா நகரத்தை, **गता अपि** - அடைந்திருக்கும் பொழுதே, **गङ्गोर्मि-संसक्त-जला इव** - கங்கையின் அலைகளோடு கலந்த நீருடையது போல, **भाति** - விளங்கின்றது.

(க-து) "இச்சுஷேணர் பலமனைவியரை யுடையவர். இவர் அவர்களுடன் யமுனையில் ஜலக்ரீடை செய்வார். இவரது மனைவி

யரின் மார்பில் பூசியுள்ள சந்தனம் அக்காலங்களில் யமுனையின் ஜலத்தினால் அலம்பப்பட்டு அதனுடன் கலக்கின்றது. வெண்மையான சந்தன ஜலத்துடன் கலந்த கறுத்த ஜலமுடைய யமுனாநதி, மதுரையிலேயே கங்கையுடன் கலந்துவிட்டது போல் காணப்படுகிறது. அவ்வளவு பெரிய அந்தப்புரமும், செல்வமும், ஸம்போகானுபவத்தில் உத்ஸாகமும் உடையவர் இவ்வரசர்.

யமுனையின் ஜலம் கறுத்த தோற்றமுடையது. கங்கையின் ஜலம் வெண்ணிறமுடையது. உண்மையில் மதுரைக்கும் கிழக்கிலுள்ள பிரயாகையில் யமுனை கங்கையுடன் சேருகின்றதாயினும், வெண்ணிறச் சந்தன நீருடன் கலந்த யமுனை, மதுரையிலிருக்கும் பொழுதே கங்கா பிரவாஹத்துடன் சேர்ந்தது போன்ற தோற்ற முடையதாகின்றது.

களிந்தம் என்ற மலையில் தோன்றியதால் களிந்தகன்யா- என்ற பெயரை யமுனை பெற்றது. கன்யா - மகள்.

त्रस्तेन तार्क्ष्यात् किल कालियेन मणिं विसृष्टं यमुनौकसा यः ।
वक्षःस्थलव्यापि रुचं दधानः सकौस्तुभं ह्रेपयतीव कृष्णम् ॥ ४९ ॥

**तार्क्ष्यात्** - கருடனிடமிருந்து, **त्रस्तेन** - பயந்ததும், **यमुनौकसा** - யமுனா நதியை இருப்பிடமாக உடையதுமான, **कालियेन** - 'காளியன்' என்னும் பாம்பினால், **विसृष्टं** - கொடுக்கப்பட்டதும், **वक्षःस्थल व्यापि रुचं** - மார்பு முழுவதும் பரவியிருக்கிற ஒளியுடையதுமான, **मणिं** - ரத்னத்தை, **दधानः** - அணிந்து கொண்டிருக்கிற, (**यः**-எந்த) ஸுஷேண மன்னர், **सकौस्तुभं**-கௌஸ்துபமணியுடன் கூடிய, **कृष्णं**-விஷ்ணுவை, **ह्रेपयति इव** - வெட்கப்படுத்துகின்றவர் போலும் உள்ளார்.

(க-து) "ஸுஷேணர் 'காளியன்' என்னும் பாம்பினால் கொடுக்கப்பட்ட ஒளி மிகுந்த ரத்தினத்தைத் ,தமது மார்பில் அணிந்திருக்கிறார். அந்த ரத்னம், விஷ்ணு அணிந்திருக்கும்

கௌஸ்துப ரத்னத்தைவிடப் பிரகாசமுடையது. சிறந்த ரத்னமணிந் துள்ள காரணத்தால், விஷ்ணுவும் இவரைப் பார்த்து வெட்கப்படும் படியான அழகுடைவராக இருக்கின்றார்.

காளியன் என்ற ஸர்ப்பம் முதலில் ஸமுத்ரத்திலிருந்த 'ரமணகம்' என்ற தீவில் வசித்து வந்தது. பின் கருடனுடன் பகைகொண்டு அவனுடன் சண்டையிட்டுத் தோல்வியுற்றது. கருடனிடம் பயந்து, சூரஸேன நாட்டிற்கு அருகில் யமுனை நதியில் மறைந்து வாழ்ந்தது. ஸௌபரி முனிவரின் சாபத்தினால் கருடன் அவ்விடத்திற்கு வர முடியாதிருந்தது. யமுனையில் வாழத் தனக்கு அனுமதியளித்தமைக்காகக் காளியன் ஒளி பொருந்திய ஒரு ரத்தினத்தை ஸுஷேணனுக்குப் பரிசாக அளித்தது என்பர்.

संभाव्य भर्तारममुं युवानं मृदुप्रवालोत्तरपुष्पशय्ये ।
बृन्दावने चैत्ररथादनूने निर्विश्यतां सुन्दरि यौवनश्रीः ॥ ५० ॥

**सुन्दरि** - அழகானவளே, **युवानं** - யௌவனப் பருவமுள்ள, **अमुं** - இந்த ஸுஷேணரை, **भर्तारं** - கணவராக, **संभाव्य** - எண்ணி (ஏற்று), **मृदुप्रवालोत्तर-पुष्पशय्ये** - மெல்லிய தளிர்கள்-பரப்பப்பட்டுள்ள-புஷ்பப் படுக்கையையுடையதும், **चैत्ररथात्** - குபேரனுடைய உத்யான வனத்திற்கு, **अनूने** - (சிறிதும்) குறைவில்லாததுமான, **बृन्दावने** - 'ப்ருந்தாவனம்' எனப் பெயரையுடைய உத்தியானவனத்தில், **यौवनश्रीः** - யௌவனத்தின் செல்வம், **निर्विश्यताम्** - அனுபவிக்கப்படட்டும்.

(க-து) "இந்த ஸுஷேண ராஜருக்குச் சொந்தமானது பிருந்தாவனம். அது குபேரனுடைய உத்யானவனமாகிய சைத்ரரதத்திற்குச் சிறிதும் தாழாது; இவ்வரசரை மணந்து, உனது செழித்த யௌவனத்தின் பயனை நீ பிருந்தாவனத்தில் புஷ்பசயனங்களிலே அனுபவிக்கலாம்,

இந்துமதியின் ஸௌந்தர்யம், ஸௌகுமார்யம், யௌவநஸம்பத் இவைகளுக்கு ப்ருந்தாவனமும் புஷ்பசயனமுமே ஏற்றவை என ஸூசநந்தை குறிப்பிடுகிறாள்.

अध्यास्य चाम्भःपृषतोक्षितानि शैलेयगन्धीनि शिलातलानि ।
कलापिनां प्रावृषि पश्य नृत्यं कान्तासु गोवर्धनकन्दरासु ॥ ५१ ॥

**किंच** - மேலும், **प्रावृषि** - மழை நாட்களில், **कान्तासु** - அழகிய, **गोवर्धनकन्दरासु** - கோவர்த்தன மலையினுடைய குகைகளில், **अम्भः पृषतोक्षितानि** - (மழை) நீர்த்துளிகளால் நனைக்கப்பட்டவைகளும், **शैलेयगन्धीनि** - 'சிலாபுஷ்பம்' என்ற மூலிகையின் வாஸனையையுடையவுமான, **शिलातलानि**- பாறைகளின்மேல், **अध्यास्य** - அமர்ந்து, **कलापिनां** - மயில்களுடைய, **नृत्यं** - ஆட்டத்தை, **पश्य** - பார்.

(க-து) "'கோவர்த்தனம்' என்ற மலை இவரது ராஜ்யத்திலுள்ளது. அம்மலையின் குகைகளின் அருகிலுள்ள பாறைகளின்மீது மழைநாட்களில் மழைத் துளிகள் பட்டதும் அவைகுள்ள ஓஷதிகளால் ஒரு வகையான வாசனை உண்டாகும். அப்படிப்பட்ட பாறைகளில் அமர்ந்து நீ மயில்கள் ஆடுவதைப் பார்க்கலாம்."

**शैलेयम्** - 'சிலாஜது' என்ற பொருளும் உண்டு.

नृपं तमावर्तमनोज्ञनाभिः सा व्यत्यगादन्यवधूर्भवित्री ।
महीधरं मार्गवशादुपेतं स्रोतोवहा सागरगामिनीव ॥ ५२ ॥

**सागरगामिनी** - கடலை நோக்கிச் செல்லுகின்ற, **स्रोतोवहा** - நதியானது, **मार्गवशात्** - வழியிலே, **उपेतम्** - எதிர்ப்பட்டிருக்கிற, **महीधरं इव** - மலையை விட்டு நீங்கிச் செல்வது போல, **अन्यवधूः** - மற்றொருவருக்கு மனைவியாக, **भवित्री** - ஆகப்போகிறவளும், **आवर्तमनोज्ञनाभिः**- நீர்ச்சுழல் போல் அழகிய நாபியையுடையவளுமான, **सा** - அந்த இந்துமதி, **तं** -

அந்த, **नृपं** - அரசன் ஸுஷேணனை, **व्यत्यगात्** - கடந்து சென்றாள்.

(க-து) பெரிய நதிகள் எல்லாம் சமுத்திரத்தை அடைகின்றன. ஆகவே அவை செல்லும் வழியில் அழகிய உயர்ந்த மலைகள் எதிர்ப்படினும் அவற்றோடு நின்று விடுவதில்லை, சமுத்திரத்தையே அடைகின்றன. அதைப் போல், அஜமஹாராஜனை மணக்க வேண்டிய இந்துமதி ஸுநந்தையால் காண்பிக்கப்பட்ட அரசர் எவரையும் கண்டு நில்லாமல் மேலே சென்றாள்.

ஸுஷேணனை இந்துமதி வரிக்காமைக்குக் காரணம் என்ன? குணக்குறைவு அன்று. அவளை வேறொருவனுக்காகப் படைத்திருக்கும்பொழுது ஸுஷேணனுக்கு எப்படி அவள் மனைவியாக முடியும் என்றகேள்வியே இதற்குப் பதில் கூறுகின்றது. இக்கருத்தைக்கவி, **अन्यवधूः भवित्री**-என்பதால் குறிப்பிடுகிறார். **आवर्तमनोज्ञनाभिः** - என்பதை - **स्रोतोवहा** - என்பதற்கு விசேஷணமாகக் கொண்டு நீர்ச்சுழலாகிய நாபியையுடையது என்றும் பொருள் கொள்ள வேண்டும்.

**सागरगामिनी** - என்பதை இந்துமதிக்கும் விசேஷணமாகக்கொண்டால் 'ஸகரவம்சத்தில் பிறந்தவனான அஜனை அடையப் போகின்றவள்' என்ற பொருளும் தொனிக்கின்றது.

अथाङ्गदाश्लिष्टभुजं भुजिष्या हेमाङ्गदं नाम कलिङ्गनाथम् ।
आसेदुषीं सादितशत्रुपक्षं बालामबालेन्दुमुखीं बभाषे ॥ ५३ ॥

**अथ** - பிறகு, **भुजिष्या** - பணிமகள் ஸுநந்தை, **अङ्गदाश्लिष्टभुजं** - தோள்வளை தழுவிய புஜத்தையுடையவனும், **सादितशत्रुपक्षं** - அழிக்கப்பட்ட பகைக் கூட்டத்தையுடையவனும், **हेमाङ्गदं नाम** - 'ஹேமாங்கதன்' எனப் பிரசித்தி பெற்றவனுமான, **कलिङ्गनाथं**-கலிங்கதேசவாசனை, **आसेदुषीं**-

அணுகிய, अबालेन्दुमुखी-பூரணசந்திரனைப்போன்றமுகத்தையுடைய, बाला-இந்துமதியை(ப்பார்த்து), बभाषे - கூறினாள்.

(க-து) புஜங்களில் கேயூரங்களை அணிந்தவனும், பகைவர்களை வெற்றி கொண்டவனுமான கலிங்கதேசவரசன் ஹேமாங்கதனது சமீபத்தில் அழகிய இந்துமதி சென்றதும், ஸுநந்தை இவ்வாறு கூறினாள்.

நான்கு சுலோகங்கள் கலிங்க மன்னனைப்பற்றிக் கூறுபவை.

असौ महेन्द्राद्रिसमानसारः पतिर्महेन्द्रस्य महोदधेश्च ।
यस्य क्षरत्सैन्यगजच्छलेन यात्रासु यातीव पुरो महेन्द्रः ॥ ५४ ॥

महेन्द्राद्रि-समानसारः - மஹேந்திர மலையைப் போன்ற பலத்தையுடையவரான, असौ-இந்த ஹேமாங்கதர், महेन्द्रस्य-மஹேந்திர மலைக்கும், महोदधेः च - ஸமுத்திரத்திற்கும், पतिः - அரசர். यस्य - கலிங்கமன்னருடைய, यात्रासु - விஜய யாத்திரைகளில், क्षरत् सैन्यगज च्छलेन - மதஜலத்தைப் பெருக்குகின்ற - படையிலுள்ள யானைகள் என்ற வ்யாஜத்தினால், महेन्द्रः - மஹேந்திரமலையே, पुरः - முன்னால், याति इव - போகின்றது போலும் (இருக்கிறது).

(க-து) மஹேந்திர மலையைப் போன்ற பலத்தையுடைய இவர், ஸமுத்திரத்திற்கும் மஹேந்திர மலைக்கும் அதிபதி. இவ்வரசர் எதிரிகளுடன் போர் புரியப் படை திரட்டிக் கொண்டு செல்கையில் மத ஜலத்தைப் பெருக்கும் பெரும் யானைகளைக் கொண்டு செல்வர். அக்காட்சி, அருவிகள் வீழ்ந்து கொண்டிருக்கும் மஹேந்திர மலையே முன் செல்வது போலுள்ளது,

இவரது யானைகள் மலைபோலுள்ளன. மஹேந்திர மலை தொடங்கி ஸமுத்திரம் வரையிலுள்ள பூமிக்கு அரசர் என்பது கருத்து. 4-ஆம் ஸர்க்கம் 38-வது சுலோகக் குறிப்பைக் காண்க.

ज्याघातरेखे सुभुजो भुजाभ्यां बिभर्ति यश्चापभृतां पुरोगः ।
रिपुश्रियां साञ्जनबाष्पसेके बन्दीकृतानामिव पद्धती द्वे ॥ ९५ ॥

सुभुजः - அழகிய புஜங்களையுடையவரும், चापभृतां - வில்லாளிகளுள், पुरोगः - முதன்மையுடையவருமான, यः - (எந்த) இவர், बन्दीकृतानां - சிறை பிடிக்கப்பட்ட, रिपुश्रियां - பகைவர்களுடைய ராஜ்ய லக்ஷ்மிகளின், साञ्जनबाष्पसेके - மையுடன் கூடிய கண்ணீரால் நனைந்த, पद्धती इव - வழிகளைப்போன்ற, द्वे - இரண்டு, ज्याघातरेखे - நாண் கயிற்றின் அடிகளால் ஏற்பட்ட கோடுகளை, भुजाभ्यां - கைகளால், बिभर्ति - தரிக்கின்றார்.

(க-து) வில்லில் கட்டப்பட்டுள்ள நாண்கயிற்றை இழுத்து விடும்பொழுது அது உராய்ந்து அவ்வரசனுடைய இரண்டு கைகளிலும் நீண்ட கறுத்த அடையாளம் ஏற்பட்டிருக்கிறது; அவ்வடையாளங்களைப்பற்றிக் கவி, ஸூநந்தை கூறுவதாகப் புனைந்து கூறுகிறார்.

"அடிக்கடி ஹேமாங்கதர் பகைவர்களை வென்று அவர்களின் ராஜ்யலக்ஷ்மிகளைச் சிறைபிடித்துவருவதால், ராஜ்யலக்ஷ்மிகள் பலரும், தாம் முன்பிருந்த இடத்தைவிட்டுப்பிரிய நேரும் வருத்தத்தினால் அழுதனர். மையோடு கலந்த அவர்களது கண்ணீர் வழிந்து, அவர்கள் வந்த வழிகள் போலுமுள்ளன அவ்வரசரின் புஜங்களில் நாண் கயிற்றுக் கோடுகள்.

यमात्मनः सद्मनि संनिकृष्टो मन्द्रध्वनित्याजितयामतूर्यः ।
प्रासादवातायनदृश्यवीचिः प्रबोधयत्यर्णव एव सुप्तम् ॥ ९६ ॥

आत्मनः - தம்முடைய, सद्मनि - அரண்மனையில், सुप्तं - தூங்கிய, यम् - (எந்த) ஹேமாங்கதரை, सन्निकृष्टः - அருகிலுள்ளதும், प्रासाद वातायन-दृश्यवीचिः - அரண்மனையின்

ஜன்னல் வழியாகக் காணக்கூடிய அலைகளையுடையதும், **मन्द्र ध्वनि त्याजित यामतूर्यः** - கம்பீரமான ஒலியினால் பயனற்றதாகச் செய்யப்பட்ட யாம வாத்தியத்தை உடையதுமான, **अर्णवः एव**-ஸமுத்திரமே, **प्रबोधयति**-எழுப்புகின்றது.

(க-து) "இவ்வரசருடைய அரண்மனையின் ஜன்னல்கள் மூலமாகப் பார்க்கக் கூடிய தூரத்தில் ஸமுத்திரமுள்ளது. யாம வாத்யங்களின் ஒலி கேட்காதவாறு சமுத்திரம் முழங்குகின்றது. அவ்வொலியைக் கேட்டே இவர் காலையில் துயிலெழுகின்றார்.

யாம வாத்யம் செய்யும் வேலையைச் சமுத்ரம் செய்து விடுவதால் யாம வாத்யம் பயனற்றதாகின்றது.

யாம வாத்யம்:—அரசர்களின் அரண்மனையில் நேரத்தைத் தெரிவிக்க ஒவ்வொரு ஜாமத்திலும் வாசிக்கப்படும் வாத்யம்; கலிங்க மன்னரைத் தூக்கத்தினின்றும் எழுப்புவது ஸமுத்ரகோஷமே; யாம வாத்யமல்ல.

अनेन सार्धं विहराम्बुराशेस्तीरेषु तालीवनमर्मरेषु ।
द्वीपान्तरानीतलवङ्गपुष्पैरपाकृतस्वेदलवा मरुद्भिः ॥ १७॥

**अनेन-सार्धं** - இவ்வரசரோடு, கூட, **तालीवनमर्मरेषु** - பனங்காட்டின் 'மர்மர' ஒலியையுடைய, **अम्बुराशेः**-சமுத்திரத்தின், **तीरेषु** - கரைகளில், **द्वीपान्तर-आनीत-लवङ्गपुष्पैः** - வேறு தீவுகளிலிருந்து- கொண்டு வரப்பட்ட லவங்க புஷ்பங்களையுடைய, **मरुद्भिः** - காற்றுகளால், **अपाकृत-स्वेदलवा** - நீக்கப்பட்ட - வேர்வைத் துளிகளையுடையவளாக, **विहर** - (விளையாடு) களிப்பாயாக.

(க-து) "அச்சமுத்திரத்தின் கரைகளில் பனை மரங்கள் உள்ளன. அம்மரங்கள் காற்றில் சலசலப்புச் சத்தத்தைச் செய்கின்றன. அங்கு வீசும் காற்று லவங்கம் உற்பத்தியாகும் தீவுகளிலிருந்து வருவதால் காற்றில் லவங்க புஷ்ப வாசனை வீசுகின்றது. அத்தகைய காற்றினால் சிரமம் நீங்கப் பெற்றுக் களிப்பாயாக.

प्रलोभिताप्याकृतिलोभनीया विदर्भराजावरजा तयैवम् ।
तस्मादपावर्तत दूरकृष्टा नीत्येव लक्ष्मीः प्रतिकूलदैवात् ॥ ९८ ॥

**आकृतिलोभनीया** - (உண்மையான) அழகினால் வசீகரிக்கத் தகுந்த, **विदर्भराजावरजा** - விதர்ப்பதேசவரசனது தங்கையான இந்துமதி, **तया** - அந்த ஸுநந்தையால், **एवं** - இவ்வாறு, **प्रलोभिता अपि** - தூண்டப்பட்ட போதிலும் (ஆசை காட்டப்பட்டாளாயினும்), **नीत्या** - முயற்சியினால், **दूरकृष्टा** - வெகு தொலைவிலிருந்து கொண்டு வரப்பட்டதாயினும், **लक्ष्मीः**- செல்வம், **प्रतिकूलदैवात् इव** - துரதிருஷ்டமுள்ள மனிதனிடமிருந்து (நீங்குவது) போல, **तस्मात्** - அவ்வரசனிடமிருந்து, **आपवर्तत** - திரும்பினாள்.

(க-து) மிக முயற்சி செய்து அடையுந் தருவாயிலும் செல்வம் துரதிருஷ்டமுள்ள மனிதனிடம் செல்வதில்லை. அது போன்று ஸுநந்தையால் தூண்டப்பட்டும் அழகிய அவ்விந்துமதி ஹேமாங்கதனுக்குக் கிட்டவில்லை. ஏனெனில் இந்துமதியை உண்மையழகுதான் வசீகரிக்குமே யன்றி, வெற்று வர்ணனை வசப்படுத்தாது.

अथोरगाख्यस्य पुरस्य नाथं दौवारिकी देवसरूपमेत्य ।
इतश्चकोराक्षि विलोकयेति पूर्वानुशिष्टां निजगाद भोज्याम् ॥९९॥

**अथ** பிறகு, **दौवारिकी** - வாயிற்காப்பாளான ஸுநந்தை, **देवसरूपं** - தேவதைக்கு ஒப்பான வடிவுடையவனும், **उरगाख्यस्य** - பாம்பின் பெயரைத் தன் பெயராகவுடைய **पुरस्य** - பட்டணத்திற்கு, **नाथं**- அரசனுமான பாண்டியனை, **एत्य** - அடைந்து, '**चकोराक्षि** - சகோர பக்ஷியின் கண்கள் போன்ற கண்களையுடையவளே, **इतः** - இங்கு, **विलोकय** - பார்', **इति** - என்று, **पूर्वानुशिष्टां** - முதலில் கூறப்பட்ட, **भोज्यां** - இந்துமதியை, **निजगाद** - சொன்னாள்.

(க-து) தேவதை போன்ற அழகுடையவனும், பாம்பின் பெயரில் ஒன்றைப் பெயராக உடைய நகருக்குத் தலைவனுமான பாண்டியன் எதிரிற் சென்று ஸுநந்தை இந்துமதிக்கு இவ்வாறு கூற ஆரம்பித்தாள்.

கவி, இச்சுலோகத்தில், उरगाख्यस्य पुरस्य - என்ற சொற்களால் எந்த நகரத்தைப் பாண்டியர்களின் ராஜதானியாகக் கூறுகின்றார் என்பது தெளிவாக இல்லை. உரையாசிரியர்கள் கூறுவதும் பொருத்தமாயில்லை.

மல்லிநாதர், 'பாண்டிய தேசத்தில் கான்ய குப்ஜநதியின் கரையிலுள்ள நாகபுரம்' என்றும், அருணகிரிநாதர், 'பாண்டிய நாட்டில் காய குடி என்ற நதியின் கரையிலுள்ள நாகபுரம்' என்றும் கூறுவர். தற்கால வடநாட்டுப் புலவர்களில் ஒருவர் 'இது ராஜமஹேந்திரத்திற்கு அருகிலுள்ள நாகப்பட்டினம்' என்றார்!

பாம்பின் பெயர்கள் பலவற்றில், हालास्यम् என்பது ஒன்று; 'வாயிலே விஷமுடையது' என்பது பதப்பொருளாகி, இச்சொல் பாம்பைக் குறிக்கின்றது. மதுரைக்கு हाला-स्यम् என்ற பெயர் புராணங்களில் காணப்படுவதால், उरग- என்பதின் பிரதிபதமான, हालास्य-என்பதைக்கொண்டு இச்சொல் மதுரையைக் குறிப்பதெனக்கொள்ளவேண்டும். பாண்டியர்களுக்கு மதுரையே தலைநகராக இருந்ததன்றி வேறு எதுவும் இருந்ததில்லை யாதலால் இது பொருந்துகின்றது. பாண்டிய மன்னன் ஒருவன் மதுரையின் எல்லையைக் காட்டுமபடி சிவபிரானிடம் வேண்ட, அவர் தமது ஆபரணமான பாம்பு ஒன்றை ஏவவும், அப்பாம்பு மண்டலமிட்டு நகர எல்லையைக் காட்டியதால்நகருக்கு ஹாலாஸ்யமெனப் பெயர் வந்ததென ஹாலாஸ்யமாஹாத்ம்யம் கூறும். ஹாலாஸ்யம் என்பது தமிழில் ஆலவாய் என வழங்குகின்றது. தமிழ் இலக்கியங்களில் மதுரைக்கு நாகபுரம் என்ற பெயரும் காணப்படுகின்றது. 'நாகமாபுரத்து வாழ்வோன்' என்பது நம்பியின் திருவிளையாடற் புராணம்.

பின், இச் சொல், தாம்ரபர்ணியின் முகத்வாரத்திற்கு அருகிலுள்ள 'கொற்கை' என்னுமிடத்தைக் குறிப்பதாகக் கொள்வர் சிலர். ஏனெனில் பாண்டிய வம்ச இளவரசர்களும், ராஜப் பிரதிநிதிகளும் கொற்கையில் இருந்ததாகக் கூறுவர். பவநதூதம் என்ற நூலின் ஆசிரியர் தோயி என்பவர் கொற்கையை 'புஜகநகரம்' 'உரகபுரம்' என்ற பெயர்களால் அழைப்பதும் இதற்கு ஆதரவளிக்கின்றது. அடுத்த சுலோகததிலேயே பாண்டியர் முத்து மாலை யணிந்திருந்ததாகக் கூறுவதும் முத்துக் குளிக்குமிடமான கொற்கையை நினைவூட்டும்.

**चकोराक्षि** சகோரபக்ஷியின் கடைக்கண் சிவந்து இருக்கும். அதுபோல் இந்துமதியின் கடைக்கண் செவவரியோடி அழகுடனிருநததால் அவளது கண்கள், சகோர பக்ஷியின் கண்களுக்கு ஒப்பிடப்பட்டன. '**चकितमृगदशामे प्रान्तरक्ते च नेत्रे**' என்பது கண்ணழகைக் கூறுகின்றது.

ஆறு சுலோகங்கள் பாண்டிய மன்னனைப் பற்றிக் கூறுபவை.

पाण्ड्योऽयमंसार्पितलम्बहारः क्लृप्ताङ्गरागो हरिचन्दनेन ।
आभाति बालातपरक्तसानुः सनिर्झरोद्गार इवाद्रिराजः ॥ ६० ॥

**अंसार्पितलम्बहारः** - (இரு) தோள்களிலும் தரிக்கப்பட்டுத் தொங்குகின்ற முதது மாலையையுடையவரும், **हरिचन्दनेन** - 'ஹரிசந்தனம்' என்ற சந்தனத்தினல், **क्लृप्ताङ्गरागः** - செய்யப்பட்ட உடற் பூச்சையுடையவருமான, **अयम्** - இந்த, **पाण्ड्यः** - பாண்டியர், **बालातपरक्तसानुः** - இளம் வெய்யிலினுல் செந்நிறம் பெற்றுள்ள தாழ்வரை

யுடையதும், सनिर्झरोद्गारः - மலையருவியுடன் கூடியதுமான, अद्रिराजः इव - இமயமலை போல, आभाति - விளங்குகின்றார்.

(க-து) "கழுத்தில் முத்து மாலைகளைத் தரித்து உடலில் சிவந்த சந்தனத்தைப் பூசிக்கொண்டிருக்கும் இப்பாண்டிய மன்னர், இளஞ் சூரியனின் செந்நிறக் கதிர்கள் பட்டுத் தாழ்வரை சிவந்து, அருவிகளுடன் விளங்கும் இமயமலை போல் இருக்கிறார்.

ஹரிசந்தனம் - சிறந்த ஒருவகைச் சந்தனம். இவ் வகைச் சந்தனக்கட்டை, வெட்டப்பட்டபொழுது சிவந்தும் இழைத்தபொழுது பொன்னிறமுடையதாகவும் இருக்கும் என்பர். छेदे रक्तं कषे पीतम् हरिचन्दनमुच्यते என்றதும் காண்க. குங்குமப்பூ என்று கூறினும் ஆம்.

विन्ध्यस्य संस्तम्भयिता महाद्रेर्निश्शेषपीतोज्झितसिन्धुराजः ।
प्रीत्याश्वमेधावभृथार्द्रमूर्तेः सौस्नातिको यस्य भवत्यगस्त्यः ॥ ६१ ॥

विन्ध्यस्य - விந்த்யம் என்ற, महाद्रेः - பெரிய மலையை, संस्तम्भयिता - தடுத்தவரும், निश्शेष-पीतोज्झित-सिन्धुराजः - மிச்சமின்றிக் குடித்துப் பின் விடப்பட்ட ஸமுத்திரத்தை யுடையவருமான, अगस्त्यः - அகஸ்தியர், अश्वमेध-अवभृत-आर्द्रमूर्तेः - அச்வமேத யாகத்தினுடைய - அவபிருத ஸ்நானத்தால்-நனைந்த உடலையுடைய, यस्य - (எந்த) இப்பாண்டியருக்கு, प्रीत्या - அன்பினால், सौस्नातिकः - ஸுக ஸ்நானத்தைக்கேட்பவராக, भवति - இருக்கிறார்.

(க-து) "விந்தியமலை உயர்ந்து வளர்ந்த போது அதை வளர வொட்டாமல் தடுத்தவரும், கடல் நீரை மிச்சமின்றிக் குடித்தவருமான அகஸ்த்யர், பாண்டியமன்னரை அவப்ருதஸ் ஸ்நானமுடிவில் அன்பினாலே 'நீர் ஸௌகர்யமாக ஸ்நானத்தைச் செய்து முடித்தீரா' எனக் கேட்கிறார்.

அகஸ்த்யர் போன்ற முனிவர்கள் வியக்கும் வண்ணம் யாகங்களைப் பாண்டியர் செய்து வந்தார். பெருமைபெற்ற மக

ரிஷி அகஸ்தியரும் குசலப்ரச்னம் செய்யும்படி அவருடைய அன்பையும் பெற்றவர்.

விந்தியமலை வளர்ந்தது:—மேரு மலையைச் சுற்றிச் சூரியன் வலம் வருகிறது. அதைப்போலத் தன்னையும் சூரியன் சுற்றிவர வேண்டும் என எண்ணி வளர்ந்த விந்தியமலை சூரியனுடைய வழியைத் தடை செய்யவும், தேவர்கள் அம்மலையை வளர வொட்டாமற்செய்ய அகஸ்தியரை வேண்டினர். அவர், ஹிமாலயத்திலிருந்து தெற்கு நோக்கிப் புறப்பட்டு, வழியில் விந்தியமலையைச் சந்தித்தார்; அம்மலை முனிவரைக் கண்டு தலை வணங்கவும், அகஸ்த்யர், தென்திசை சென்று தாம் திரும்பி வரும் வரை அவ்வாறே வளராமல் இருக்க வேண்டுமென்று சொல்லித் தெற்கே சென்றார். ஆனால் அகஸ்த்யர் திரும்பவேயில்லை. விந்தியமலையும் அவர் கூறியபடி வளராது நின்றது என்பர்.

அகஸ்தியர் கடல்நீரைக் குடித்தது;—இந்திரன் விருத்திராசுரனைக் கொன்றதும் அவனைச் சேர்ந்தவர்களான காலேயர்கள் பகலெல்லாம் சமுத்திரத்தினுள் மறைந்திருந்து இரவானதும் தேவர்களையும், முனிவர்களையும் கொல்ல வெளி வருவார்கள். விஷ்ணுவினிடமிருந்து அவர்கள் ஒளிந்திருக்குமிடத்தை யறிந்த தேவர்கள், கடல் நீரைக் குடித்துக், காலேயர்களை வெளிப்படுத்தும்படி அகஸ்தியரை வேண்டினர். அகஸ்தியர் அவ்வாறே சமுத்திரத்தைக் குடித்துக் காலேயர்களைத் தேவர்களின் கண்களுக்குப் புலப்படச் செய்தார்.

**सौस्नातिकः** - 'சாஸ்திரோக்தமான முறையில் ஸ்நாநம் செய்தீர்களா' என ப்ரச்னம் செய்பவர் என்பது இப்பதப் பொருள்: ஸுகஸ்நாநத்தை விசாரிப்பவர். தீபாவளியன்று

ஸ்நாநத்தைப்பற்றி விசாரிக்கும் வழக்கம இப்பொழுதும் உள்ளதே.

अस्त्रं हरादाप्तवता दुरापं येनेन्द्रलोकावजयाय दृप्तः ।
पुरा जनस्थानविमर्दशङ्की संधाय लङ्काधिपतिः प्रतस्थे ॥ ६२ ॥

**पुरा** - முன்பு, **जनस्थान-विमर्द-शङ्की** - ஜனஸ்தானத்திற்கு துன்பத்தை-சந்தேஹித்தவனும், **दृप्तः** - கர்வமுடையவனுமான, **लङ्काधिपतिः** - லங்கைக்கரசனான ராவணன், **दुरापं** - கிடைத்தற்கரிய, **अस्त्रम्**-பிரம்மசிரஸ் என்ற அஸ்திரத்தை, **हरात्** - பரமசிவனிடமிருந்து, **आप्तवता** - அடைந்திருக்கிற, **येन** - (எந்த) இப்பாண்டியருடன், **सन्धाय** - சமாதானம் செய்துகொண்டு, **इन्द्रलोकावजयाय** - இந்திரலோகத்தை ஜயிப்பதற்காக, **प्रतस्थे** - புறப்பட்டான்.

(க-து) "தான் இல்லாத பொழுது ஜன ஸ்தானத்தைப் பாண்டியர் எதிர்த்து அழித்து விடுவாரோ என்று பயந்த ராவணன், பரமசிவனைத் தோத்திரஞ் செய்து 'பிரம்மசிரஸ்' என்ற அஸ்திரத்தைப் பெற்றுள்ள பாண்டியருடன் சமாதானஞ் செய்து கொண்டு இந்திரலோகத்தை வெற்றி கொள்ளச் சென்றான்.

ராவணனும் தனக்குச் சமமானவர் என்று நினைக்கத் தக்க பெருமையுடையவர் பாண்டியர் என்பது கருத்து. பாண்டியர்கள் பரமசிவனாரது அருளால் பிரம்மசிரஸ் என்ற பலம் பொருந்திய அஸ்திரத்தைப் பெற்றிருந்தனர்.

ஜனஸ்தானம் :—ராவணனுக்குரிய ஓர் இடம். பாரத தேசத்தில் தண்டகாரண்யத்தின் கீழ்ப்புறத்திலிருந்தது என்பர்.

अनेन पाणौ विधिवद्गृहीते महाकुलीनेन महीव गुर्वी ।
रत्नानुविद्धार्णवमेखलाया दिशः सपत्नी भव दक्षिणस्याः ॥ ६३ ॥

**महाकुलीनेन** - மிகச் சிறந்த குலத்திற் பிறந்துள்ள, **अनेन** - இவ்வரசரால், **पाणौ** - (உனது) கை, **विधिवत्** - முறைப்படி, **गृहीते** பிடிக்கப்படும்பொழுது, **गुर्वी** - பெரிய தான, **मही इव** - இப்பூமியைப் போல், **रत्नानुविद्ध-अर्णवमेखलायाः** - ரத்தினங்கள் நிரம்பியுள்ள - சமுத்திரத்தை மேகலையாக உடைய, **दक्षिणस्याः दिशः** - தெற்குத் திசைக்கு, **सपत्नी** - ஸகளத்ரமாக, **भव** - ஆவாயாக.

(க-து) "தென் திசைக்குச் சமுத்திரம், ரத்தினங்கள் பதித்துள்ள ஒட்டியாணம் போலுமுள்ளது. அத்தென் திசையை, நற்குலத்தில் தோன்றிய இவர் முறைப்படி ஆண்டு வருகிறார். ஆகவே நீ இவ்வரசரைக் கலியாணம் செய்து கொண்டால் ஏற்கனவே இவருக்கு மனைவியாயுள்ள பூமியுடனும் தென்திசையுடனும் சேர்ந்து நீயும் இவருக்கு மனைவியாகலாம்.

பூமியை அரசருடைய மனைவியாகக் கூறுவதுபோல் இங்குத் தென் திசை, பாண்டிய மன்னரின் மனைவியாகக் கூறப்பட்டுள்ளது.

ताम्बूलवल्लीपरिणद्धपूगास्वेलालतालिङ्गितचन्दनासु ।
तमालपत्रास्तरणासु रन्तुं प्रसीद शश्वन्मलयस्थलीषु ॥ ६४ ॥

**ताम्बूलवल्ली - परिणद्ध-पूगासु**-வெற்றிலைக் கொடிகள் தழுவிய பாக்கு மரங்களையுடையனவும், **एलालतालिङ्गित-चन्दनासु**-ஏலக் கொடிகள் அணைந்த சந்தன மரங்களையுடையனவும், **तमालपत्रास्तरणासु**-தமால இலைகளாலாகிய விரிப்புக்களையுடையவையுமான, **मलयस्थलीषु**-இயற்கை வனப்புள்ள மலயமலைப் பிரதேசங்களில், **शश्वत्** - எப்பொழுதும். **रन्तुम्** - களிப்பதற்கு, **प्रसीद** - மனமுடையவளாய் ஆவாயாக.

(க-து) "மலய மலைச் சாரல்களில் உள்ள பாக்கு மரங்களை வெற்றிலைக் கொடிகள் சுற்றிக் கொண்டுள்ளன. சந்தன மரங்களில்

ஏலக் கொடிகள் படர்ந்துள்ளன. மலயமலைச்சாரலில் தமால மரத்தின் தளிர்களாலானபடுக்கையில் இருந்து இன்பம் நுகரலாம். இவரை மணந்து அப்படிப்பட்ட விடத்தில் எப்பொழுதும் களிப்புறு.

ஏலம், செடியேயாயினும் கொடி என்று கூறியது கவிமரபு பற்றி. மரங்களையும் கொடி என்ற பெயரால் அழைப்பதுண்டு. கல்பக விருக்ஷத்தை, **कल्पलता** - எனவும், சந்தன மரத்தை, **चन्दनलता** - எனவும் கவிகள் கூறுவர். தமாலம் - ஒருவகை மரம்.

इन्दीवरश्यामतनुर्नृपोऽसौ त्वं रोचनागौरशरीरयष्टिः ।

अन्योन्यशोभापरिवृद्धये वां योगस्तडित्तोयदयोरिवास्तु ॥ ६५ ॥

**असौ** - இந்த, **नृपः** - அரசர், **इन्दीवर-श्याम-तनुः** நீலத் தாமரை போன்றுகறுத்த உடலுடையவர்; **त्वं** - நீ, **रोचना-गौर शरीरयष्टिः** - கோரோஜனை போல் பொன்னிறமான மெல்லிய சரீரமுடையவள். (ஆகையினால்), **तडित्तोयदयोः इव** - மின்னல் மேகங்களுடைய (சேர்க்கை) போல், **वां** - உங்களுடைய, **योगः** - சேர்க்கை, **अन्योन्य शोभा-परिवृद्धये** - ஒருவருக்கொருவருடைய அழகின் வளர்ச்சிக்குக் காரணமாக, **अस्तु** - ஆகட்டும்.

(க-து) இவ்வரசர் நீலத்தாமரை போல் மென்மையும், நீல நிறமுமுள்ள உடலுடையவர். நீ கோரோசனை போல் மஞ்சளான மெல்லிய சரீரம் பெற்றவள். மின்னலும் மேகமும் சேர்ந்தது போல, நீங்கள் இருவரும் மணம் புரிந்து கொள்வீர்களேயானால், உங்களுடைய அழகு மேலும் அதிகமாகக் காணப்படும்.

स्वसुर्विदर्भाधिपतेस्तदीयो लेभेऽन्तरं चेतसि नोपदेशः ।

दिवाकरादर्शनबद्धकोशे नक्षत्रनाथांशुरिवारविन्दे ॥ ६६ ॥

**विदर्भाधिपतेः** - போஜனுடைய, **स्वसुः** - தங்கையின், (இந்துமதியின்), **चेतसि** மனத்தில், **तदीयः**-ஸுநந்தையினது,

**उपदेशः** - வார்த்தை, **दिवाकर अदर्शन बद्धकोशे** - சூரியனைக் காணாததால் குவிந்த இதழ்களையுடைய, **अरविन्दे** — தாமரையிடத்தில், **नक्षत्रनाथांशुः इव** - நக்ஷத்ரங்களின் அரசனான சந்திரனது கிரணம் (இடம் பெறாதது) போல், **अन्तरं** - இடத்தை, **न लेभे** — அடையவில்லை.

(க-து) தாமரை, சூரியனைக் கண்டால்தான் மலரும். சந்திர கிரணங்கள் பட்டு மலர்வதில்லை. இது தாமரையின் குற்றமுமன்று; சந்திரனுடையதுமன்று. ஆனால் இது ஒருநியதி. அதைப்போல, இந்துமதி அஜனைக் கண்டே மகிழ வேண்டியவளாக விருந்தாள். ஆகவே மற்ற அரசரைக்கண்டபொழுது அவள் மனம் விகாஸமடையவில்லை. ஸுநந்தை பாண்டியனைப்பற்றிக் கூறிய தெதுவும் அவள் மனத்தில் புகவில்லை.

सञ्चारिणी दीपशिखेव रात्रौ यं यं व्यतीयाय पतिंवरा सा ।
नरेन्द्रमार्गाट्ट इव प्रपेदे विवर्णभावं स स भूमिपालः ॥ ६७ ॥

**पतिंवरा** - கணவனை வரிக்கின்ற, **सा** - அவ்விந்துமதி, **रात्रौ** - இரவில், **साञ्चारिणी** - சஞ்சரிக்கின்ற, **दीपशिखा इव** - விளக்கின் சுடர் போல, **यम् यम्**-எங்கெந்த, **भूमिपालं** - அரசனை, **व्यतीयाय** - கடந்து சென்றனளோ, **स स भूमिपालः** - அந்தந்த அரசனும் (அனைவரும்), **नरेन्द्रमार्गाट्ट इव** - ராஜ வீதியிலுள்ள வீடுபோல், **विवर्णभावं** - ஒளியற்ற நிலையை, **प्रपेदे** - அடைந்தான்.

(க-து) இந்துமதி ஒவ்வொரு அரசனையுங் கடந்து செல்லுகையில் அவ்வவ்வரசன் முகமும் 'இந்துமதி மாலையிடவில்லையே' என்ற வருத்தத்தால் வாடிப் பொலிவிழந்தது. அக்காட்சி, இருபுறமும் மாளிகைகளுள்ள ராஜ வீதியில் விளக்கொன்று எடுத்துச் செல்லப்படின், விளக்கு ஒரு மாளிகையைத் தாண்டிச் சென்றதும் அம் மாளிகையின் வாசல் பிரகாசமின்றி இருளடைவது போல், இருந்தது. விளக்கு எதிரில் இருந்தால் மாளிகை பொலிவுடன் விளங்கும்.

அவ்வாறே இந்துமதி எதிரில் இருக்கையில் தனக்கு மாலையிடுவாள் என்ற நம்பிக்கையால் ஒவ்வொரு அரசனும் பொலிவுடன் விளங்கினான். விளக்கு அப்புறஞ் சென்றதும் மாளிகை இருளடைந்து விடுவதுபோல், இந்துமதி அப்பாற் சென்றதும் அரசர்கள் சோபையிழந்து விட்டனர்.

अट्ट - மாளிகை; மாளிகையின் முன்புற மேல் தளம் என்றும் பொருள் உண்டு. ஒளியுள்ள அழகுடையவளாக இருந்ததால் இந்துமதி தீபஜ்வாலைக்கு ஒப்பிடப்பட்டுள்ளாள்.

तस्यां रघोः सूनुरुपस्थितायां वृणीत मां नेति समाकुलोऽभूत् ।
वामेतरः संशयमस्य बाहुः केयूरबन्धोच्छ्वसितैर्नुनोद ॥ ६८ ॥

**तस्यां** - அவ்விந்துமதி, **उपस्थितायां** - அருகில் வந்ததும், **रघोः** - ரகுவினுடைய, **सूनुः** - குமாரனான அஜன், '**मां** - என்னை, **वृणीत** - வரிப்பாளோ; **न** - வரிக்கமாட்டாளோ', **इति** - என்று, **समाकुलः** - ஐயமுற்றவனாக, **अभूत्** - ஆனான். **अस्य** - அவனுடைய, **वामेतरः** - வலது, **बाहुः** - கை, **केयूरबन्धोच्छ्वसितैः** - தோள் வளை அணியுமிடத்தின் துடிப்புக்களால், **संशयं** - (அவனது) ஸந்தேஹத்தை, **नुनोद** - போக்கியது.

(க-து) இந்துமதி தன்னெதிரில் வந்ததும், 'இவ்விந்துமதி நம்மை வரிப்பாளோ மாட்டாளோ', என அஜன் கொண்ட ஸந்தேஹத்தை அவனுடைய வலதுகைத் துடிப்புப் போக்கியது.

வலது புஜம் துடிப்பின் ஆண்களுக்கு நன்னிமித்தம் என்று சொல்லுவர். அத்துடிப்பின் பயனை உணர்ந்த பொழுது அஜனது ஐயப்பாடு நீங்கியது.

अङ्गविस्फुरणं नृणां दक्षिणं सर्वकामदम् ।
तदेव शस्यते सद्भिः नारीणामप्रदक्षिणम् ॥ என்பர்.

तं प्राप्य सर्वावयवानवद्यं व्यावर्ततान्योपगमात् कुमारी ।
न हि प्रफुल्लं सहकारमेत्य वृक्षान्तरं काङ्क्षति षट्पदाली ॥ ६९ ॥

**कुमारी** - இந்துமதி, **सर्वावयवानवद्यं** - எல்லா அங்கங்களிலும் குற்றமற்ற, **तम्** - அவ்வஜனை, **प्राप्य** - அடைந்து, **अन्योपगमात्** - வேறு அரசனிடம் செல்வதிலிருந்து, **व्यावर्तत** - நின்றுவிட்டாள். **हि** - ஏனெனில், **षट्पदाली** - வண்டுகளின் கூட்டம், **प्रफुल्लं** - மலர்ந்த, **सहकारं** - ஒட்டு மாமரத்தை, **एत्य**-அடைந்த பின், **वृक्षान्तरं**-வேறு மரத்தை, **न काङ्क्षति** - விரும்புகிறதில்லை.

(க-து) நன்கு மலர்ந்த ஒட்டுமாமரத்தை அடைந்த வண்டுகள் வேறு மரத்தை நாடிச் செல்ல விரும்பாதது போல, அஜனிடம் வந்த இந்துமதி, அவனது குற்றமற்ற அழகைக் கண்டபின், மேலே செல்ல விரும்பாமல் அங்கேயே நின்று விட்டாள்.

**सहकारः** - மிகவும் மணமுள்ள ஒருவகை மாமரம்.

तस्मिन् समावेशितचित्तवृत्तिमिन्दुप्रभामिन्दुमतीमवेक्ष्य ।
प्रचक्रमे वक्तुमनुक्रमज्ञा सविस्तरं वाक्यमिदं सुनन्दा ॥ ७० ॥

**इन्दुप्रभां**-சந்திரனது காந்திபோன்ற காந்தியையுடைய, **इन्दुमतीं** - இந்துமதியை, **तस्मिन्** - அவ்வஜனிடத்தில், **समावेशित चित्तवृत्तिम्** - செலுத்திய கருத்தையுடையவளாக, **अवेक्ष्य** - அறிந்து, **अनुक्रमज्ञा** - (பேச வேண்டிய) முறையை அறிந்த, **सुनन्दा** - ஸுநந்தை, **इदं** - இந்த, **वाक्यं** - வார்த்தையை, **सविस्तरं** - விரிவாக, **वक्तुं** - சொல்வதற்கு, **प्रचक्रमे** - தொடங்கினாள்.

(க-து) இந்துமதி அஜனிடம் பற்றுடையவளாக விருக்கிறாள் என்பதை அறிந்த ஸுநந்தை, அஜனைப்பற்றி இவ்வாறு விரிவாகச் சொல்லத் தொடங்கினாள்.

இதுமுதல் ஒன்பது சுலோகங்கள் அஜனைப்பற்றிக் கூறுபவை.

इक्ष्वाकुवंश्यः ककुदं नृपाणां ककुत्स्थ इत्याहितलक्षणोऽभूत् ।
काकुत्स्थशब्दं यत उन्नतेच्छाः श्लाघ्यं दधत्युत्तरकोसलेन्द्राः ॥७१॥

**इक्ष्वाकुवंश्य** :- இக்ஷ்வாகுவின் வம்சத்தில் பிறந்தவரும், **नृपाणां** - அரசர்களுக்குள், **ककुदं** - சிறந்தவரும், **आहितलक्षण**:- பிரஸித்தமான நற்குணங்களை யுடையவருமான, **ककुत्स्थः इति** - ககுத்ஸ்தர் என்ற அரசர், **अभूत्** - இருந்தார். **यतः** - அக் ககுத்ஸ்தர் தொடங்கி, **उन्नतेच्छाः** - உயரிய கருத்துடைய, **उत्तरकोसलेन्द्राः** - உத்தரகோஸல தேச அரசர்கள், **श्लाघ्यं** - சிறந்த, **काकुत्स्थ - शब्दं** - காகுத்ஸ்தர், என்ற பெயரை, **दधति** - தரிக்கின்றனர்.

(க-து) இக்ஷ்வாகு வம்சத்தில் தோன்றியவரும், சிறந்த அரசரும், பல நற்குணங்களையுடையவருமான, 'ககுத்ஸ்தர்' என்ற ஒரு அரசர் முன்பு இருந்தார். அவருக்குப் பின் தோன்றிய கோஸல தேசத்தரசரனைவரும் 'காகுத்ஸ்தர்' என்ற பெயரினுல் தங்களை அழைத்துக் கொள்ளுகின்றனர்.

ககுத்ஸ்தர் வரலாறு:—இஃது அடுத்த சுலோகத்தில் கூறப்படுகிறது. இக்ஷ்வாகு வம்சத்தில் புரஞ்ஜயரென்ற ஒரு அரசரிருந்தார். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் போர் மூண்ட காலத்தில் எருதுருவங் கொண்ட இந்திரன் மீதேறிச் சண்டை செய்து அஸுரரை அழித்தார். அதனுல் 'ககுத்ஸ்தர்' என்ற பெயருண்டாயிற்று. **ककुद्** - எருதின் திமில்; அதன்மேல், **स्थः**-அமர்ந்தவர் என்பது பதப்பொருள்.

महेन्द्रमास्थाय महोक्षरूपं यः संयति प्राप्तपिनाकिलीलः ।
चकार बाणैरसुराङ्गनानां गण्डस्थलीः प्रोषितपत्रलेखाः ॥ ७२ ॥

**यः** - (எந்த) ககுத்ஸ்தர், **संयति**-யுத்தத்தில், **महोक्षरूपं** - பெரிய எருதின் உருவத்தையுடைய, **महेन्द्रं**-இந்திரன் மீது, **आस्थाय**-அமர்ந்து (அதனால்), **प्राप्त पिनाकि लीलः** - அடையப் பட்ட பரமசிவனின் செயலையுடையவராக, **बाणैः** - பாணங் களால், **असुराङ्गनानां** - அஸுர ஸ்த்ரீகளுடைய, **गण्डस्थलीः** - அழகான கன்னங்களை, **प्रोषितपत्रलेखाः**-(வர்ணங்களால் எழு தப்படும்) அலங்கார வரிகளற்றனவாக, **चकार** - செய்தார்.

(க-து) அந்த ககுத்ஸ்தர், எருது வடிவில் வந்த இந்திரன்மீதேறி அஸுரர்களுடன் போரிட்டார். ரிஷபத்தின்மீதமர்ந்திருக்கும் பரம சிவனைப்போல எருதின்மீதமர்ந்த ககுத்ஸ்தர் அச்சமயம் காணப் பட்டார். ககுத்ஸ்தர் அஸுரர்களைச் சண்டையில் கொன்று விட்டதால் துக்கமடைந்த அஸுரர்களின் மனைவியர் தங்களது கன்னங்களில் வர்ணத்தினால் அலங்காரம் செய்து கொள்ளவில்லை. அத்தகைய பராக்ரமமுடையவர் நம்மன்னர்.

ऐरावतास्फालनविश्लथं यः संघट्टयन्नङ्गदमङ्गदेन ।
उपेयुषः स्वामपि मूर्तिमग्र्यामर्धासनं गोत्रभिदोऽधितष्ठौ ॥ ७३ ॥

**यः** - (எந்த) ககுத்ஸ்தர், **ऐरावतास्फालनविश्लथं** - ஐராவ தம் என்ற யானையைத் தட்டுவதால் நழுவுகின்ற, **अङ्गदं**-(இந் திரனது) தோள்வளையை, **अङ्गदेन** - தன் தோள் வளையால், **संघट्टयन्** - உராயும்படி செய்து கொண்டு, **स्वां**-தன்னுடைய, **अग्र्यां** - சிறந்த, **मूर्तिं** - உருவத்தை, **उपेयुषः अपि** - அடைந் தவனாகவிருக்கின்ற, **गोत्रभिदः** - இந்திரனுடைய, **अर्धासनं** - ஆஸனத்தின் பாதியில், **अधितष्ठौ** - அமர்ந்திருந்தார்.

(க-து) இந்திரனுடைய தோள்வளைகள் ஐராவதத்தைத் தட்டி ஓட்டுவதால் நழுவுதலுண்டு. அவ்வளைகளை அணிந்துள்ள இந்திர னுடன் சமமாகக் ககுத்ஸ்தர் ஒரே ஆஸனத்தில் அமர்ந்திருக்கும் கௌரவத்தைப் பெற்றவர். அப்படி அமர்ந்திருக்கையில் அவ்வர சர் அணிந்திருக்கும் தோள்வளை இந்திரனுடைய வளையுடன் உராய

யும். எருதுருவத்தில் இந்திரனிருந்தபொழுது அவன் மேலேயே அமர்ந்தார். அவன் தன் சொந்த தேவ வடிவத்துடன் இருக்கையில் அவனுடன் சமமாக ஒரே ஆசனத்தில் அமரும் பெருமையைப் பெற்றார் ககுத்ஸ்தர்.

जातः कुले तस्य किलोरुकीर्तिः कुलप्रदीपो नृपतिर्दिलीपः ।
अतिष्ठदेकोनशतक्रतुत्वे शक्राभ्यसूयाविनिवृत्तये यः ॥ ७४ ॥

**उरुकीर्तिः** - பெரும் புகழ் படைத்தவரும், **कुलप्रदीपः** - வம்சத்தை விளங்கவைப்பவருமான, **दिलीपः नृपतिः** - திலீப அரசர், **तस्य** - அந்தக் ககுத்ஸதருடைய, **कुले** - குலத்தில், **जातः किल**-பிறந்தவர். **यः**-(எந்த) அத்திலீபர், **शक्र-अभ्यसूयाविनिवृत्तये** - இந்திரனுடைய பொறாமையைப் போக்குவதற்காக, **एकोनशतक्रतुत्वे** - ஒன்று குறைந்த நூறு யாகங்களைச் செய்தவர் என்ற நிலையிலேயே, **अतिष्ठत्** - இருந்தார்.

(க-து) ககுத்ஸ்தருடைய வம்சத்தில் பிறந்த 'திலீபர்' என்ற அரசர் மிக்க புகழ் படைத்தவர். அவர் தொண்ணூற்றொன்பது யாகங்களைச் செய்து முடித்திருக்கிறார். நூறு யாகங்களையும் அவர் செய்து முடிக்கச் சக்தியுள்ளவர் தான். ஆனால் நூறு யாகங்களைச் செய்தவர் இந்திர பதவிக்கு வருவார் என்று சாஸ்திரங்கள் கூறுவதால், இந்திரன், திலீபர் தனது பதவிக்கு வந்து விடுவார் என்று பொறாமை கொண்டிருந்தான். இந்திரன் பொறாமைப் படவேண்டாம் என நினைத்து நூறாவது யாகத்தைச் செய்யாமலிருந்தார் திலீப மன்னர்.

இவ்வரலாறு மூன்றாவது ஸர்க்கத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

यस्मिन् महीं शासति वाणिनीनां निद्रां विहारार्धपथे गतानाम् ।
वातोऽपि नास्रंसयदंशुकानि को लम्बयेदाहरणाय हस्तम् ॥ ७५ ॥

**यस्मिन्** - (எந்த) அத் திலீபர், **महीम्**-பூமியை, **शासति** - ஆளும்பொழுது, **विहारार्धपथे**-உத்யானவனத்தின் நடுவழியி

லேயே, **निद्रां गतानां** - தூங்கிய, **वाणिनीनाम्** - (மதுவினால்) மயங்கியுள்ள ஸ்திரீகளின், **अंशुकानि** - வஸ்திரங்களை; **वातोऽपि**- காற்றும் கூட, **न अस्रंसयत्**-அசைக்கவில்லை; **आहरणाय** -அவற்றை அபகரிக்க, **कः** - எவன், **हस्तं** கையை, **लंबयेत्** - நீட்டுவான்?

(க-து) திலீபருடைய ஆட்சி மிகச் சிறந்தது. அவரது ராஜ்யத்தில் திருட்டு அறவே இல்லை. அவரது நகரத்தில் பெண்கள், உத்யானவனத்திற்குப் போகும் வழியில் மதுபானத்தால் மயங்கித் தூங்கும் பொழுது, காற்றுக் கூட அவர்களது உடையை ஸ்பர்சியாது. எனின், வேறு எவனாவது அவர்களுடைய பொருளைக் கவரத் துணிவானோ? அத்தகைய சிறந்த அரசாட்சியுடையவர் திலீப மன்னர்.

திலீபனது ராஜ்யத்தில் திருட்டு இல்லை என்பது முதல் ஸர்க்கம் இருபத்தேழாவது சுலோகத்தில் கூறப்பட்டுள்ளது.

**वाणिनी** - மதுபானத்தினால் மயங்கியவர்கள்; நாட்டியமாடும் பெண்கள் எனவும் பொருள் உண்டு; **विहारः** - உத்தியான வனம்; காதலர்கள் சந்திக்குமிடம் என்றும் கூறுவர்.

பெண்கள் மதுபானம் செய்வதாகக் கவிகள் வர்ணனை செய்வர்.

पुत्रो रघुस्तस्य पदं प्रशास्ति महाक्रतोर्विश्वजितः प्रयोक्ता ।
चतुर्दिगावर्जितसंभृतां यो मृत्पात्रशेषामकरोद्विभूतिम् ॥ ७६ ॥

**विश्वजितः** - விச்வஜித் என்ற, **महाक्रतोः** - பெரிய யாகத்தை, **प्रयोक्ता** - அனுஷ்டித்தவரும், **तस्य** - அத்திலீபருடைய, **पुत्रः** - புத்திரருமான, - **रघुः** ரகு என்பவர், **पदं** - ராஜ்யத்தை, **प्रशास्ति** - ஆள்கின்றார். **यः** - (எந்த) ரகு மகாராஜர், **चतुर्दिगावर्जित संभृतां** - நான்கு திசைகளிலிருந்தும் கொண்டுவரப்பட்டு விருத்தி செய்யப்பட்ட, **विभूति** -

செல்வத்தை, **मृत्पात्रशेषां** - மண்பாத்திரம் மாத்திரமே மிச்சமுடையதாக இருக்கும்படி, **अकरोत्** - செய்தார்.

(க-து) திலீப மன்னரது புதல்வரான ரகுமகாராஜர் திக் விஜயஞ் செய்து ஏராளமான செல்வத்தைச் சேர்த்து அச்செல்வத்தை விருத்தி செய்து, 'விச்வஜித்' என்ற யாகத்தைச் செய்தார்; அவ்யாகத்திற்குத் தன்னிடமுள்ள எல்லாப் பொருள்களையும் தக்ஷிணையாகக் கொடுத்தல் வேண்டும். அவ்வாறே எல்லாவற்றையும் யாகத்தில் செலவிட்டு மண் பாத்திரங்களையே தன்னுடைய உபயோகத்திற்கு வைத்துக் கொண்டிருந்தார். அத்தகைய பெரும்புகழ்படைத்தவர் ரகு.

आरूढमद्रीनुदधीन् वितीर्णं भुजंगमानां वसतिं प्रविष्टम् ।
ऊर्ध्वं गतं यस्य न चानुबन्धि यशः परिच्छेत्तुमियत्तयालम् ॥७७॥

**अद्रीन्** - மலைகளில், **आरूढं** - ஏறியதாகவும், **उदधीन्** - சமுத்திரங்களை, **वितीर्णं** - கடந்திருப்பதாகவும், **भुजङ्गमानां** - ஸர்ப்பங்களுடைய, **वसतिं** - இருப்பிடமான பாதாளத்தில், **प्रविष्टं** - பிரவேசித்ததாகவும், **ऊर्ध्वं** - உயரேயுள்ள சுவர்க்கத்தில் **गतं** - சென்றதாகவும், **अनुबन्धि च** - இடையறாமல் இருக்கிறதுமான, **यस्य** - (எந்த) ரகு மகாராஜருடைய, **यशः** - புகழானது, **इयत्तया** - (இடத்தினாலோ காலத்தினாலோ) இவ்வளவென்று, **परिच्छेत्तुं** - அளவிடுவதற்கு, **न अलम्** - முடியாதது.

(க-து) ரகுவின் புகழைப்பற்றி, இது இவ்வளவுஎன்று அளந்து கூற இயலாது. அப்புகழ் மலைகளிலும், கடல்களிலும், பாதாளத்திலும், சுவர்க்கத்திலும் பரவி நிலைபெற்றுள்ளது.

असौ कुमारस्तमजोऽनु जातस्त्रिविष्टपस्येव पतिं जयन्तः ।
गुर्वीं धुरं यो भुवनस्य पित्रा धुर्येण दम्यः सदृशं बिभर्ति ॥७८॥

**असौ** - இந்த, **अजः** - அஜன் என்ற, **कुमारः** - ராஜகுமாரர், **त्रिविष्टपस्य** - ஸ்வர்க்கத்திற்கு, **पतिं** - அரசனாகிய

இந்திரனுக்கு, जयन्तः इव - ஜயந்தன் (பிறந்தது) போல, तं - अनु - அந்த ரகுவிற்கு, जातः - பிறந்திருப்பவர், (அவருடைய புத்திரர்); दम्यः-கற்றுக் கொடுக்கப் படவேண்டிய நிலையிலுள்ள, यः-(எந்த) இவ்வஜர், भुवनस्य - உலகத்தின், गुर्वीं கனமான, धुरं - பாரதத்தை, धुर्येण - (வெகுகாலமாகப்) பழக்கமுள்ள, पित्रा-தகப்பனாருக்கு, सदृशं-ஒப்பாக, बिभर्ति - வஹிக்கின்றார்.

(க-து) இதோ எதிரிலிருக்கும் ராஜகுமாரர் 'அஜன்' எனப் பெயருள்ளவர். இந்திரனுக்கு ஜயந்தன் பிறந்ததுபோல் ரகுவிற்குப் புத்திரராகப் பிறந்தவர். ராஜ்யத்தை ஆளுவதில் அதிகம் பழக்கம் பெற முடியாத சிறு பருவத்தினராயினும், வெகு காலமாக ராஜ்யத்தை ஆண்டு பழக்கப்பட்டிருக்கிற தம் தந்தை ரகுவைப் போல் பெரிய ராஜ்யத்தை ஆண்டு வருகிறார்.

कुलेन कान्त्या वयसा नवेन गुणैश्च तैस्तैर्विनयप्रधानैः ।
त्वमात्मनस्तुल्यममुं वृणीष्व रत्नं समागच्छतु काञ्चनेन ॥ ७९ ॥

कुलेन - குலத்தினாலும், कान्त्या - அழகினாலும், नवेन - புதிய, वयसा - யௌவனத்தினாலும், विनयप्रधानैः - அடக்கத்தை முதன்மையாகக் கொண்ட, तैः तैः गुणैः च - அந்தந்த (கல்வி முதலிய) குணங்களாலும், आत्मनः - உனக்கு, तुल्यं - சமமான, अमुं - இவ்வஜமகாராஜரை, त्वं - நீ, वृणीष्व - வரிப்பாயாக; रत्नं - ரத்னமானது, काञ्चनेन - பொன்னுடன், समागच्छतु - சேரட்டும்.

(க-து) நீயும், நற்குடிப்பிறப்பு, அழகு, யௌவனம், அடக்கம் முதலிய நற்குணங்களை உடையவளாக இருக்கிறாய். இவ்வஜரும அவ்வெல்லாக் குணங்களும் படைத்துள்ளார். ஆகையால் இவ்வரசரை நீ தேர்ந்தெடுப்பது மிகப் பொருத்தமுள்ளது. ரத்தினம் பொன்னோடு சேர்ந்தது போலிருக்கும் நீ இவரையடைவது.

ततः सुनन्दावचनावसाने लज्जां तनूकृत्य नरेन्द्रकन्या ।
दृष्ट्या प्रसादामलया कुमारं प्रत्यग्रहीत् संवरणस्रजेव ॥ ८० ॥

**ततः** - பிறகு, **सुनन्दावचनावसाने** - ஸுநந்தையின் வார்த்தை முடிவில், **नरेन्द्रकन्या** - அரசகுமாரியான இந்து மதி, **लज्जां** - வெட்கத்தை, **तनूकृत्य** - குறைத்துக் கொண்டு (விட்டு), **प्रसादामलया** - மனத் தெளிவினால் பரிசுத்தமான, **दृष्ट्या**-பார்வையினால், **संवरणस्रजा इव**-ஸ்யம்வர மாலையினால் (ஏற்றுக்கொள்வது) போல, **कुमारं** - அஜனை, **प्रत्यग्रहीत्** - ஏற்றுக் கொண்டாள்.

(க-து) ஸுநந்தை அஜனைப்பற்றிக் கூறி முடித்ததும், இந்து மதி வெட்கத்தை விட்டு அஜனைத் தெளிந்த மனத்துடன் ஒருமுறை கண்களால் நன்கு நோக்கினாள். சுயம்வரத்தில் தான் விரும்பியவனுடைய கழுத்தில் மாலையை இட்டுக் கணவனாக ஏற்றதை அறிவிப்பது வழக்கம். இங்கு இந்துமதி அஜனைப் பார்த்த பார்வையே மாலை போலிருந்து அவள் அஜனைக் கணவனாக ஏற்றாள் என்பதை அறிவித்தது.

सा यूनि तस्मिन्नभिलाषबन्धं शशाक शालीनतया न वक्तुम् ।
रोमाञ्चलक्ष्येण स गात्रयष्टिं भित्त्वा निराक्रामदरालकेश्याः ॥८१॥

**सा** - அவ்விந்துமதி, **यूनि** - வாலிபனான, **तस्मिन्**-அந்த அஜனிடத்தில், **अभिलाषबन्धम्** - ஆசை வைத்திருப்பதை, **शालीनतया** - வெட்கத்தினால், **वक्तुं** - சொல்வதற்கு, **न शशाक**- சக்தியுடையவளாக இல்லை. (அப்படி இருந்த போதிலும்), **अरालकेश्याः** - சுருண்ட கூந்தலுள்ள இந்துமதியின், **सः** - அவ்விருப்பமானது, **रोमाञ्च लक्ष्येण** - மயிர்க் கூச்சம் என்ற வியாஜத்தில், **गात्रयष्टिं** - அழகிய சரீரத்தை, **भित्त्वा**-பிளந்து கொண்டு, **निराक्रामत्** - வெளி வந்தது.

(க-து) அஜனிடம் தனக்குள்ள விருப்பத்தை இந்துமதி, வெட்கத்திலுலே சொற்களைக்கூறித் தெரிவிக்க வில்லை. ஆயினும் அவள் மனத்துள்ள விருப்பம் அவள் அடைந்த மயிர்க்கூச்சத்தால் நன்கு புலப்பட்டது.

तथागतायां परिहासपूर्वं सख्यां सखी वेत्रभृदाबभाषे ।
आर्ये व्रजामोऽन्यत इत्यथैनां वधूरसूयाकुटिलं ददर्श ॥ ८२ ॥

**सख्यां** - தோழியான இந்துமதி, **तथागतायां** - அந்நிலையையடைந்ததும் (விருப்பங்கொண்டதும்), **वेत्रभृत्** - பிரம்பைப் பிடித்துள்ள தோழியான, **सखी** - ஸுநந்தை, '**आर्ये** - சிறந்தவளே, **अन्यत:** - வேறு அரசரைக் குறித்து, **व्रजाम:** - செல்வோம்' **इति** - என்று, **परिहासपूर्वं** - பரிஹாஸத்துடன், **आबभाषे** - கூறினுள்; **अथ** - பிறகு, **वधू:**-மணப்பெண்ணுன இந்துமதி, **एनां**-இந்த ஸுநந்தையை, **असूया-कुटिलं** - கோபத்தினுல் குடிலமாக (சாய்வாக), **ददर्श** - பார்த்தாள்.

(க-து) இந்துமதி அஜனிடம் விருப்பங் கொண்டுள்ளதை ஸுநந்தை அறிந்தாள். உடனே அவள், பரிஹாஸமாக 'நாம் வேறு அரசரிடஞ் செல்வோமே' எனக் கூறினுள். அதைச் சகியாத இந்துமதி கண்களில் கோபந் தோன்ற அவளைப் பார்த்தாள். அஜனை விட்டு வேறு அரசரிடம் போக இந்துமதிக்கு விருப்பமில்லை.

सा चूर्णगौरं रघुनन्दनस्य धात्रीकराभ्यां करभोपमोरूः ।
आसञ्जयामास यथाप्रदेशं कण्ठे गुणं मूर्तमिवानुरागम् ॥ ८३ ॥

**करभोपमोरू:** - துதிக்கைபோன்ற தொடைகளையுடைய, **सा**- அவ்விந்துமதி, **चूर्णगौरं** - (மங்களகரமான) பொடியினுல் வெண் சிவப்பான, **गुणम्** - மாலையை, **मूर्तम्** - உருவமுள்ள, **अनुरागं इव**-காதலை(அர்ப்பணம்செய்வது)போல, **धात्रीकराभ्यां**.

தோழியின் கைகளால், **रघुनन्दनस्य** - ரகுவின் புதல்வனை அஜனுடைய, **कण्ठे** - கழுத்தில், **यथाप्रदेशं** - தகுந்த இடத்தில், **आसञ्जयामास** - அணிவித்தாள்.

(க-து) இந்துமதியின் மனத்திலுள்ள காதலின் உருவெனத் தோன்றிய சிவந்த ஒரு மாலையை ஸுநந்தையைக் கொண்டு அஜனுக்கு இந்துமதி அணிவித்தாள்.

மாலையில் சிவந்த வாசனைப் பொடிதூவி இருந்ததால் மாலை சிவந்த வெண்ணிறமு முடையதாக இருந்தது.

तया स्रजा मङ्गलपुष्पमय्या विशालवक्षःस्थललम्बया सः ।
अमंस्त कण्ठार्पितबाहुपाशां विदर्भराजावरजां वरेण्यः ॥ ८४ ॥

**वरेण्यः** - சிறந்த, **सः** - அந்த அஜன், **मङ्गलपुष्पमय्या** - மங்களகரமான புஷ்பங்கள் நிறைந்ததும், **विशाल वक्षःस्थल - लम्बया** - பரந்த மார்பில் தொங்கிக் கொண்டிருப்பதுமான, **तया** - அந்த, **स्रजा** - மாலையினால், **विदर्भराजावरजां** - விதர்ப்ப ராஜனின் தங்கையான இந்துமதியை, **कण्ठ अर्पित बाहुपाशां** - (தன்) கழுத்தில் போடப்பட்டிருக்கிற மெல்லிய கைகளை யுடையவளாக, **अमंस्त** - எண்ணினான்.

(க-து) ஸுநந்தை அணிவித்த அம்மாலை தனது பரந்த மார்பில் தொங்குவதைக் கண்ட அஜன், இந்துமதியே அவளது கைகளைத் தன் கழுத்தில் சேர்த்து ஆலிங்கனம் செய்து கொண்டிருப்பதாக நினைத்தான். மாலையை மாலையாக எண்ணாமல் இந்துமதியின் கையாக எண்ணினான்.

அஜன், இந்துமதியைத் தான் அடைந்து விட்டதாகவே நினைத்தான் என்பது கருத்து.

शशिनमुपगतेयं कौमुदी मेघमुक्तं
जलनिधिमनुरूपं जह्नुकन्यावतीर्णा ।

इति समगुणयोगप्रीतयस्तत्र पौराः
श्रवणकटु नृपाणामेकवाक्यं विवव्रुः ॥ ८९ ॥

**तत्र** - அச் சுயம்வரத்தில், **समगुणयोगप्रीतयः** - ஒத்த குணங்களையுடையவர்களின் (அஜன் - இந்துமதி) சேர்க்கையினால் சந்தோஷமடைந்த, **पौराः** - பட்டணத்து ஜனங்கள், '**इयम्** - இந்த இந்துமதி, **मेघमुक्तम्** - மேகங்களினின்றும் நீங்கிய, **शशिनम्** - சந்திரனை, **उपगता** - அடைந்துள்ள, **कौमुदी** - நிலவு; **अनुरूपं** - தகுந்த, **जलनिधिं** சமுத்திரத்தில், **अवतीर्णा** - பிரவேசித்துள்ள, **जह्नुकन्या** - ஜஹ்னு மகரிஷியின் புதல்வி கங்கை;' **इति** - என்று, **नृपाणां** - (மற்ற) அரசர்களின், **श्रवणकटु**, - காதுகளுக்குக் கடூரமான, **एकवाक्यम्** - ஒரே பேச்சை, **विवव्रुः** - பேசினர்; (வெளியிட்டனர்).

(க-து) இந்துமதியும் அஜனும் எல்லா வகையிலும் ஒத்திருந்தனர். இவர்களின் சேர்க்கையைக் கண்டு களிகொண்ட நகர மாந்தர்கள் அனைவரும் 'இவ்விருவரின் சேர்க்கை, மேகங்களின்றி இருக்கும் சந்திரனிடம் நிலவொளி சேர்ந்தது போலவும், தனக்குத் தகுந்த சமுத்திரத்தை கங்கை அடைந்தது போலவும் உள்ளது' என்று ஒரே மாதிரியாய்க் கூறினர். இப்பேச்சு, தங்களை இந்துமதி வரிக்காத காரணத்தால் மற்ற அரசர்களுக்குக் கர்ண கடோரமாய் இருந்து மனவேதனையைத் தந்தது.

ஜஹ்நுகன்யை :—பகீரதன் தன் முன்னோர்களை நற்கதியடைவிக்கக் கடுந்தவஞ் செய்து கங்கையை ஸ்வர்க்கத்திலிருந்து பூமிக்குக் கொண்டுவந்தான். அக் கங்கை பகீரதன் பின் செல்கையில் வழியில் இருந்த ஜஹ்னு முனிவரின் ஆசிரமத்தை மூழ்கடித்தது. அதனால் கோபங்கொண்ட முனிவர் அதைக் குடிக்கவும், பிறகு பகீரதனால் வேண்டப்பட்டுத் தனது காது வழியாய் அங்

நதியை வெளிவிட்டார். அவரிடமிருந்து வெளி வந்த தால் கங்கைக்கு ஜஹ்னுவின் புதல்வி-ஜாஹ்நவி-என்னும் பெயர் ஏற்பட்டது.

प्रमुदितवरपक्षमेकतस्तत् क्षितिपतिमण्डलमन्यतो वितानम् ।
उषसि सर इव प्रफुल्लपद्मं कुमुदवनप्रतिपन्ननिद्रमासीत् ॥ ८६ ॥

**एकतः** - ஒரு புறம், **प्रमुदित वरपक्षम्** - மகிழ்வடைந்த-வரனுடைய (அஜனுடைய) இனத்தவரையுடையதும், **अन्यत:** - மறுபுறம், **वितानम्** - சந்தோஷமற்றிருப்பதுமான, **तत्** - அந்த, **क्षितिपतिमण्डलम्** - அரசர்களின் கூட்டம், **उषसि** - விடியற்காலையில், **प्रफुल्लपद्मम्** - மலர்ந்த தாமரைகளையுடையதும், **कुमुदवनप्रतिपन्ननिद्रम्** - ஆம்பல் காட்டினால் அடையப் பட்ட தூக்கத்தையுடையதுமான, **सर इव** - தடாகம் போல, **आसीत्** - இருந்தது.

(க-து) இந்துமதி அஜனுக்கு மனைவியாகப் போகிறாள் என்று அறிந்ததால் அஜனைச் சேர்ந்தோரனைவரும் மிக மகிழ்வெய்தினர். தங்களுக்கு இந்துமதி கிடைக்காததால் மற்ற அரசரனைவரும் வருத்த முற்றனர். இந்நிலையிலுள்ள அச்சபை ஒரு தடாகத்திற்கு ஒப்பிடப் பட்டிருக்கிறது. சூரியன் உதித்ததும் தாமரைகள் மலரும்; ஆம்பல்கள் கூம்பும். ஒருபுறம் மகிழ்ச்சியுள்ள ஜனங்களையும், மற்றொரு புறம் களிப்பற்ற அரசர்களையுமுடைய அச்சபை, விடியற்காலையில் மலர்ந்த தாமரைகளையும் குவிந்த ஆம்பல்களையுமுடைய தடாகம்போ லிருந்தது.

इति महाकवि श्री कालिदासकृतौ
रघुवंशे महाकाव्ये षष्ठः सर्गः ॥



॥ श्रीः ॥

# ॥ रघुवंशः ॥

## सप्तमः सर्गः

अथोपयन्त्रा सदृशेन युक्तां स्कन्देन साक्षादिव देवसेनाम् ।
स्वसारमादाय विदर्भनाथः पुरप्रवेशाभिमुखो बभूव ॥ १ ॥

**अथ** - பிறகு, **विदर्भनाथः** - விதர்ப்பநாட்டரசனுகிய போஜன், **सदृशेन** - ஒத்த, **उपयन्त्रा** - வரனுடன், **युक्तां**-கூடிய வளும், **साक्षात्** - கண்களுக்குப் புலப்படும் வகையில், **स्कन्देन** - ஸுப்ரஹ்மண்யரோடு, (**युक्तां**) - கூடிய, **देवसेनां इव** - தேவஸேனை என்பவள் போல், (**स्थितां**) - இருந்தவளு மான, **स्वसारम्** - தங்கையான இந்துமதியை, **आदाय** - அழைத்துக்கொண்டு, **पुरप्रवेशाभिमुखः** - நகர ப்ரவேசத் திற்குத் தயாராக, **बभूव** - ஆனுன்.

(க-து) இந்துமதி அஜன் கழுத்தில் ஸ்வயம்வர மாலையை அணி வித்தவுடன் போஜன், அவளையும், அவனையும் அழைத்துக்கொண்டு நகருக்குள் செல்லத் தயாராக ஆனுன்.

தேவஸேநா என்பவள் இந்திரனுடைய மகள். இந்திரன் அவளை ஸுப்ரஹ்மண்யருக்கு விவாகம் செய்வித்தான் என வாயு புராணத்தில் கூறப்பட்டுள்ளது.

'शतक्रतोः रूपवती देवसेनेति या सुता ।
सा महेन्द्रेण स्त्यर्थम् भार्यात्वेनोपपादिता ॥
उदीर्णसेनापतये महासेनाय सुव्रता'

ஸ்வயம்வரம், நகருக்கு வெளியில் அதற்கென அமைக் கப்பட்ட மண்டபத்தில் நடைபெற்றது.

सेनानिवेशान् पृथिवीक्षितोऽपि जग्मुर्विभातग्रहमन्दभासः ।
भोज्यां प्रति व्यर्थमनोरथत्वाद्रूपेषु वेषेषु च साभ्यसूयाः ॥ २ ॥

**भोज्यां प्रति** - இந்துமதியைக் குறித்து, **व्यर्थमनोरथत्वात्** - பயனற்ற ஆசையுடையவர்களாக இருந்ததினால், **रूपेषु** (தங்களது) அழகிலும், **वेषेषु च** - அலங்காரங்களிலும், **साभ्यसूयाः** - அருவருப்பை யுடையவர்களும், **विभात ग्रह - मन्दभासः** - விடியற் காலையில் உள்ள கிரகங்களைப்போல் குறைந்த ஒளியுடையவர்களுமான, **पृथिवीक्षितः अपि** - (மற்ற) அரசர்களும், **सेनानिवेशान्** - (தங்கள்) கூடாரங்களுக்கு, **जग्मुः** - சென்றனர்.

(க-து) மற்றைய அரசர்கள், இந்துமதியின் மதிப்பைப் பெறாத தங்களது அழகிலும், தாங்கள் செய்துகொண்ட அணியிலும் வெறுப்படைந்து, விடியற்காலையில் இருக்கின்ற சந்திரன் முதலிய கிரகங்களைப்போல் முகப்பொலிவிழந்து தங்கள் கூடாரங்களுக்குச் சென்றனர்.

सांनिध्ययोगात् किल तत्र शच्याः स्वयंवरक्षोभकृतामभावः ।
काकुत्स्थमुद्दिश्य समत्सरोऽपि शशाम तेन क्षितिपाललोकः ॥ ३ ॥

**तत्र** - ஸ்வயம்வரம் நடைபெற்ற இடத்தில், **शच्याः** - இந்திராணியின், **सान्निध्ययोगात्** - ஸாந்நித்யம் காரணமாக, **स्वयंवरक्षोभकृतां** - ஸ்வயம்வரத்தில் குழப்பத்தை உண்டாக்குபவர்களுக்கு, **अभावः** - நாசம், (**भवति**) **किल** - ஏற்படுகின்றது என்பர் பெரியோர். **तेन** - அதனால், **काकुत्स्थम्** - அஜனை, **उद्दिश्य** - குறித்து, **समत्सरः अपि** - பொறாமையுடையதாயினும், **क्षितिपाललोकः** - அரசர்களின் கூட்டம், **शशाम** - தணிந்திருந்தது.

(க-து) ஸ்யம்வரம் நடக்கும்பொழுது அந்த இடத்தில் இந்திராணி ஸாந்நித்யம் செய்வதாகவும் ஸ்யம்வரத்தில் குழப்பம் உண்டாக்குபவர்களை அழிப்பதாகவும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. இந்திராணியின் ஸாந்நித்யம் காரணமாக இந்துமதியின் ஸ்யம்வரத்தில் குழப்பத்தை உண்டாக்குபவர்கள் யாரும் இல்லை. அஜனிடத்தில் பொறுமையுற்றிருந்தும் அவ்வரசர்கள் ஒன்றும் செய்யாது தணிந்திருந்தனர்.

**असूया**-குணமுள்ள பொருளிலும் குற்றம் காணுதல்.

இந்திராணி, ஸௌமங்கலி ஸ்திரீகளுள் சிறந்தவளாகக் கருதப்படுகின்றாள். ஆதலால், மணப் பெண்ணுக்குக் கூறும் ஆசீர்வாதங்களில், 'அவள் இந்திராணியைப் போல் தீர்க்க ஸௌமங்கலியாக இருக்க வேண்டு' மென்பது ஒன்று. இவ் ஆசீர்வாதம் வேதமந்திரங்களிலும் உள்ளது.

तावत्प्रकीर्णाभिनवोपचारमिन्द्रायुधद्योतिततोरणाङ्कम् ।
वरः स वध्वा सह राजमार्गं प्राप ध्वजच्छायनिवारितोष्णम् ॥ ४ ॥

**तावत्-प्रकीर्ण अभि नव-उपचारम्** - முழுவதும் நன்கு செய்யப்பட்ட புதிய உபசாரப் பொருள்களை யுடையதும், **इन्द्रायुध-द्योतित-तोरणांकम्** - வான வில்போல் பிரகாசிக்கின்ற தோரணங்களை (வாசல்களை) அடையாளமாக உடையதும், **ध्वजच्छाय-निवारितोष्णम्** - துவஜங்களின் அடர்ந்த நிழலினால் உஷ்ணமற்றதுமான, **राजमार्गम्** - ராஜவீதியை, **सः वरः** - அந்த வரன், **वध्वा सह**-பெண்ணுடன், **प्राप** - அடைந்தான்.

(க-து) ராஜவீதி முழுவதும், புதிய பொருள்களால் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. வான வில்போல் நிறமும் உருவுமுடைய வளைவுகள் வீதிகளில் அமைக்கப்பட்டிருந்தன. வீதி எங்கும் கட்டப்பட்டிருந்த கொடிகள், நல்லநிழலைக் கொடுத்துஉஷ்ணமில்லாமற் செய்தன. அத்தகைய ராஜவீதியை அஜன் இந்துமதியுடன் அடைந்தான்.

ततस्तदालोकनतत्पराणां सौधेषु चामीकरजालवत्सु ।
बभूवुरित्थं पुरसुन्दरीणां त्यक्तान्यकार्याणि विचेष्टितानि ॥ ५ ॥

**ततः** - பிறகு, **चामीकर-जालवत्सु** - பொன்மயமான ஜன்னல்களையுடைய, **सौधेषु**-மாளிகைகளில், **तदालोकन तत्पराणां**- அஜனைக் காண்பதில் கருத்துள்ள, **पुरसुन्दरीणां** - (அழகிய) நகர மாதர்களுக்கு, **इत्थम्** - இவ்வாறு, **त्यक्तान्यकार्याणि** - விடப்பட்ட மற்ற வேலைகளையுடைய, **विचेष्टितानि** - (கீழ்க் கூறப்படும்) செயல்கள், **बभूवुः** - உண்டாயின.

(க-து) அஜனைப் பார்க்க விரும்பிய நகரத்துப் பெண்கள் மற்ற வேலைகளை எல்லாம் விட்டனர். கீழ்க்கூறப்படும் சில செயல்கள் அவர்களிடம் அறியாமலே தோன்றின. தங்களது மாளிகையின் பொன் மயமான ஜன்னல்களின் அருகில் வந்து அவர்கள் நின்றனர்.

आलोकमार्गं सहसा व्रजन्त्या कयाचिदुद्वेष्टनवान्तमाल्यः ।
बन्धुं न संभावित एव तावत् करेण रुद्धोऽपि च केशपाशः ॥ ६ ॥

**सहसा** - வேகமாக, **आलोकमार्गम्** - ஜன்னலுக்குப் போகும் வழியில், **व्रजन्त्या** - செல்லுகின்ற, **कयाचित्** - ஒருத்தியால், **उद्वेष्टनवान्तमाल्यः** - முடி அவிழ்ந்து உதிர்ந்த புஷ்பங்களையுடைய, **केशपाशः** - சிறந்த கூந்தல், **करेण** - கையினால், **रुद्धः अपि च** - தாங்கப் பட்டதாயினும், **तावत्** - ஜன்னலின் சமீபம் செல்லும்வரை, **बन्धुम्**-கட்டுவதற்கு, **न सम्भावितः एव** - எண்ணப்படவேயில்லை.

(க-து) ஒருஸ்திரீ ஜன்னலை நோக்கி வேகமாகச் சென்றபொழுது அவளது கூந்தல் அவிழ்ந்து புஷ்பங்கள் உதிர்ந்தன. அவிழ்ந்த கூந்தலைக் கையினால் தாங்கிக் கொண்டே, ஜன்னலின் அருகில் சென்றாள். ஜன்னலை அடையும் வரை கூந்தலை முடிய வேண்டுமென்று அவள் எண்ணவே இல்லை.

प्रसाधिकालम्बितमग्रपादमाक्षिप्य काचिद् द्रवरागमेव ।
उत्सृष्टलीलागतिरागवाक्षादलक्तकाङ्कां पदवीं ततान ॥ ७ ॥

**काचित्** - ஒருத்தி, **प्रसाधिकालंबितम्** - அலங்காரம் செய்யும் பணிப்பெண்ணால் தாங்கப்பட்ட, **अग्रपादम्**-(தனது) நுனிக்காலை, **द्रवरागमेव** - உலராத வர்ணமுடையதாக இருக்கும்பொழுதே, **आक्षिप्य** - இழுத்துக் கொண்டு, **उत्सृष्ट-लीलागतिः** - தனது அழகிய நடையை விட்டவளாய், **आ गवाक्षात्** - ஜன்னல்வரை (உள்ள), **पदवीम्** - வழியை, **अलक्तक-अङ्कां** - செம்பஞ்சு வர்ணத்தினால் அடையாளமுடையதாக, **ततान** - செய்தாள்.

(க-து) ஒரு பணிப்பெண் தனது யஜமானியின் பாதத்தைக் கையில் தாங்கி, செம்பஞ்சுரஸத்தைத் தடவி அழகு செய்துகொண்டிருந்தாள். அஜன் வீதியில் வருவதைக் கேட்ட அந்த ஸ்திரீ, பாதத்தில் பூசிய வர்ணம் உலருவதற்கு முன்பே அதை 'சட்டெ'ன இழுத்துக்கொண்டு வழக்கமான தனது அழகிய நடையை விட்டு வெகு வேகமாக ஜன்னலுக்கு வந்தாள். அவள் காலிலிருந்த செம்பஞ்சு வர்ணம் வழியெங்கும் பதிந்தது.

विलोचनं दक्षिणमञ्जनेन संभाव्य तद्वञ्चितवामनेत्रा ।
तथैव वातायनसंनिकर्षं ययौ शलाकामपरा वहन्ती ॥ ८ ॥

**अपरा** - மற்றொருத்தி, **दक्षिणम्** - வலது, **विलोचनम्** - கண்ணை, **अञ्जनेन**-மையினால், **सम्भाव्य** - அழகு செய்த பின், **तद्वञ्चित वाम नेत्रा** - மையிடப் பெறாத இடது கண்ணையுடையவளாக, **तथैव** - அப்படியே, **शालकां** - மையிடும் தூலிகையை, **वहन्ती** - (கையில்) எடுத்துக்கொண்டு, **वाता-यन सन्निकर्षम्** - ஜன்னலின் ஸமீபத்தை, **ययौ** - அடைந்தாள்.

(க-து) வலது கண்ணிற்கு மையிட்ட ஒருத்தி, அஜன் வருவதைக் கேட்டவுடன் இடது கண்ணிற்கு மையிடாமலே மையிடும் தூலிகையைக் கையிலேந்திக்கொண்டு ஜன்னலை நோக்கி வெகுவேகமாக ஓடினாள்.

जालान्तरप्रेषितदृष्टिरन्या प्रस्थानभिन्नां न बबन्ध नीवीम् ।
नाभिप्रविष्टाभरणप्रभेण हस्तेन तस्थाववलम्ब्य वासः ॥ ९ ॥

**अन्या** - மற்றொருத்தி, **जालान्तर प्रेषितदृष्टिः** - ஜன்னல்களிடையே செலுத்தப்பட்ட பார்வையுடையவளாய், **प्रस्थान-भिन्नाम्** - வேகமான நடையினால் அவிழ்ந்த, **नीवीम्** - இடை வஸ்திரத்தின் முடிச்சை, **न बबन्ध** - கட்டவில்லை; **किन्तु** - ஆனால், **नाभि प्रविष्ट आभरण प्रभेण** - நாபியினருகில் பரவிய ஆபரண ஒளியையுடைய, **हस्तेन** - கையினால், **वासः** - துணியை, **अवलंब्य** - பிடித்துக் கொண்டு, **तस्थौ** - நின்றாள்.

(க-து) பெண் ஒருத்தி அஜனைப் பார்க்க ஜன்னலை நோக்கி ஓடிய பொழுது, வேகமான நடையால் அவளது இடை ஆடையின் முடிச்சு அவிழ்ந்தது. ஆயினும், வஸ்திரம் முடிவதில் நேரத்தைச் செலவு செய்ய விருப்பமின்றி, வஸ்திரத்தைக் கையினால் தாங்கிக் கொண்டே ஜன்னலின் ஸமீபம் சென்றாள். அவள் அவ்வாறு தாங்கிச் சென்றபொழுது, அவளது கையிலுள்ள ஆபரணங்களின் ஒளி அவளது இடையைச் சோபையுடையதாகச் செய்தது.

अर्धाचिता सत्वरमुत्थितायाः पदे पदे दुर्निमिते गलन्ती ।
कस्याश्चिदासीद् रशना तदानीमङ्गुष्ठमूलार्पितसूत्रशेषा ॥ १० ॥

**सत्वरम्** - வேகமாக, **उत्थितायाः** - எழுந்த, **कस्याश्चित्** - ஒரு பெண்ணினுடைய, **अर्धाचिता** - பாதி கோக்கப்பட்டதும், **दुर्निमिते** - அவசரத்துடன் வைக்கப்பட்ட, **पदे पदे** - ஒவ்வொரு அடியிலும், **गलन्ती**-நழுவுகின்ற (மணிகளை யுடைய)

தமான, रशना - மேகலையானது, तदानीम् - அப்பொழுது, अङ्गुष्ठ-मूलार्पित सूत्रशेषा - கட்டை விரலின் அடியில் கட்டப் பட்ட நூல்மாத்திரமே மிகுந்ததாக, आसीत् - ஆயிற்று.

(க-து) ஒரு பெண், நூலின் ஒரு முனையைத் தன் கால் கட்டை விரலில் கட்டிவிட்டு அந்நூலில் ரத்னங்களைக் கோத்து மேகலை தயார் செய்து கொண்டிருந்தாள். அஜன்வருவதைக் கேட்ட அவள், அந்நூலை அவிழ்த்து வைப்பதால் நேரும் கால தாமதத்தைச் சகியாமல் கையில் பிடித்திருந்த நூலின் மறுநுனியையும் விட்டு வேகமாக நடந்து சென்றாள். வழியில் மணிகளெல்லாம் நழுவ, நூல் மாத்திரமே அவள் காலில் இருந்தது. அவ்வளவு அவசரம் அவளுக்கு!

तासां मुखैरासवगन्धगर्भैर्व्याप्तान्तराः सान्द्रकुतूहलानाम् ।
विलोलनेत्रभ्रमरैर्गवाक्षाः सहस्रपत्राभरणा इवासन् ॥ ११ ॥

सान्द्रकुतूहलानां - அதிக ஆவலையுடைய, तासां - அந்தப் பெண்களின், आसव गन्धगर्भैः - மதுவின் மணமுடையவை யும், विलोल नेत्र भ्रमरैः - அசைகின்ற கண்களாகிய வண்டு களை யுடையவையுமான, मुखैः - முகங்களினால், व्याप्तान्तराः - வியாபிக்கப்பட்ட பிரதேசமுடைய, गवाक्षाः - ஜன்னல்கள், सहस्रपत्राभरणाः इव - தாமரைப்புஷ்பங்களாலான அலங்கார முடையனபோல், आसन् - இருந்தன.

(க-து) பெண்களின் முகம் தாமரைப் பூவையும், கண்கள் வண்டுகளையும், அவர்கள் அருந்திய மதுவின் மணம் தாமரைப் பூவி னுடைய தேனின் மணத்தையும் ஒத்திருந்தன. அப்பெண்கள் ஜன் னலின் அருகில் நின்றபொழுது ஜனனல்கள், தாமரைப் புஷ்பங்க ளால் அழகு செய்யப்பட்டன போல காணப்பட்டன.

ता राघवं दृष्टिभिरापिबन्त्यो नार्यो न जग्मुर्विषयान्तराणि ।
तथाहि शेषेन्द्रियवृत्तिरासां सर्वात्मना चक्षुरिव प्रविष्टा ॥ १२ ॥

ताः नार्यः - அந்தப் பெண்கள், राघवम् - அஜனை, दृष्टिभिः - கண்களால், आपिबन्त्यः - குடிப்பவர்களாய் (ஆவலுடன்

பார்க்கின்றவளாய்), विषयान्तराणि - மற்ற விஷயங்களை, न जग्मुः - அறியவில்லை. तथा हि - (அஃது) அவ்வாறுதான்; आसां - அவர்களின், शेषेन्द्रियवृत्तिः - மற்றப்புலன்களின் செயலானது, सर्वात्मना - முழுவதும், चक्षुः - கண்ணில், प्रविष्टा इव - புகுந்ததுபோல், (अदृश्यत) - காணப்பட்டது.

(க-து) நகரத்து ஸ்திரீகள் அஜனை ஆவலுடன் நோக்கினர். மற்ற விஷயங்களை அவர்கள் அறியாது மெய்ம்மறந்து இருந்தனர். அவர்கள் வேறு எதையும் உணரவில்லை. ஆதலால், காது முதலான மற்ற இந்திரியங்களின் செயலும் கண்ணிலே ஒடுங்கியதோவென நினைக்கும்படி இருந்தது.

स्थाने वृता भूपतिभिः परोक्षैः स्वयंवरम् साधुममंस्त भोज्या।
पद्मेव नारायणमन्यथाऽसौ लभेत कान्तम् कथमात्मतुल्यम्॥१३॥

'भोज्या - இந்துமதி, परोक्षैः-(தன்னால்) பார்க்கப்படாத, भूपतिभिः - அரசர்களால், वृता - வரிக்கப்பட்ட பொழுதும், स्वयंवरम् - ஸ்யம்வரத்தையே, साधुम् - தகுந்ததாக, अमंस्त - எண்ணினாள்; स्थाने - (இது) பொருத்தமானதே; अन्यथा - அவ்வாறு இல்லாவிடில், असौ - அவள், पद्मा - லக்ஷ்மி, नारायणम् इव-மஹாவிஷ்ணுவை அடைந்ததுபோல், आत्मतुल्यम्-(எல்லாவகையிலும்) தனக்குத் தகுந்த, कान्तम्- கணவனை, कथम् - எவ்வாறு, लभेत - அடைவாள்?'

(க-து) "இந்துமதியினால் முன்பு பார்க்கப்படாத அரசர்கள் பலர் அவளை மணம்புரிய வேண்டினர். பாராது மணம் செய்து கொள்வதை விரும்பாது, நேரில் பார்த்துத் தேர்ந்தெடுக்க வசதியளிக்கின்ற ஸ்யம்வரத்தையே அவள் விரும்பினாள். இவ்வாறு செய்ததனால், லக்ஷ்மி ஸ்ரீமந்நாரயணனை ஸ்வயம்வரத்தில் கணவனாக அடைந்தது போல், பல அரசர்களிடையில் தகுந்த கணவனை அவள் தேர்ந்து எடுத்தாள்.

परस्परेण स्पृहणीयशोभम् न चेदिदम् द्वन्द्वमयोजयिष्यत् ।
अस्मिन् द्वये रूपविधानयत्नः पत्युः प्रजानां विफलोऽभविष्यत् ॥

'**स्पृहणीयशोभं** - (எல்லோராலும் தமக்கு வேண்டு மென) விரும்பத்தக்க அழகையுடைய, **इदं** - இந்த, **द्वन्द्वं**-இரு வரையும், **परस्परेण** - பரஸ்பரம், **न अयोजयिष्यत् चेत्** - (ஒன்று) சேர்த்திராவிடில், **प्रजानां** - பிரஜைகளின், **पत्युः** - நாதரான பிரம்மதேவருக்கு, **अस्मिन् द्वये** - இவ்விருவரிடத் திலும், **रूप विधान यत्नः** - அழகை அமைப்பதில் (ஏற்பட்ட) பிரயாசை, **विफलः** - பயனற்றதாக, **अभविष्यत्** - ஆகி இருக் கும்.'

(க-து) "இவ்விருவரின் அழகைக் கண்ட யாவரும் அவர்களின் அழகு தமக்கு வேண்டுமென ஆசைப்படுவர். அவ்வாறு எல்லோரா லும் ஒப்பத்தகுந்த அழகைப்பெற்ற இவ்விருவரையும் பிரம்மதேவர், கணவனும் மனைவியுமாகச் சேர்த்திராவிடில் அவர் இவ்விருவருக்கும் அமைத்த அழகு வீணாகியிருக்கும். அழகு அழகுடன் சேர்வதே பொருத்தமானதாகும்.

रतिस्मरौ नूनमिमावभूताम् राज्ञाम् सहस्रेषु तथाहि बाला ।
गतेयमात्मप्रतिरूपमेव मनो हि जन्मान्तरसंगतिज्ञम् ॥ १९ ॥

'**रतिस्मरौ** - ரதியும் மன்மதனுமே, **इमौ** - இந்தமதியும் அஜனுமாக, **अभूताम्** - பிறந்தனர்; **नूनं** - இஃது உண்மை; **तथाहि** - ஏனெனில், **इयं बाला** - இப்பெண் **राज्ञां** - அரசர் களின், **सहस्रेषु** - ஆயிரங்களில், **आत्म प्रतिरूपं एव** - தனக் குத்தகுந்தவனையே, **गता** - அடைந்தாள்; **मनः** - மனம், **जन्मान्तर सङ्गतिज्ञम् हि** - பூர்வஜன்மத்தின் தொடர்பை அறியக் கூடியதல்லவா?'

(க-து) "இவ்விருவரும் மனித வடிவில் தோன்றிய இணை பிரியாத ரதியும் மன்மதனுமே ஆவர். மனம், பூர்வ ஜன்மத்தின்

அனுபவத்தினுல் ஏற்பட்ட ஸம்பந்தத்தை முன்னிட்டே பிரவர்த்திக்கு மாதலால், இவளுடைய மனமும் பல அரசர்களிடையில் அவளுக்குரியவனையே தோ்ந்தெடுக்க உதவியது".

इत्युद्गताः पौरवधूमुखेभ्यः शृण्वन् कथाश्श्रोत्रसुखाः कुमारः ।
उद्भासितम् मङ्गळसंविधाभिः संबन्धिनः सद्म समाससाद ॥ १६ ॥

**इति** - இவ்வாறு, **पौरवधूमुखेभ्यः** - பட்டணத்துப் பெண்களின் வாயிலிருந்து, **उद्गताः** - உண்டானவையும், **श्रोत्रसुखाः**-காதிற்கு இனியவையுமான, **कथाः**-வார்த்தைகளை, **शृण्वन्** - கேட்டுக்கொண்டு, **कुमारः** - ராஜகுமாரன் அஜன், **मंगल संविधाभिः** - மங்களத்திற்கான ஏற்பாடுகளினுல், **उद्भासितं** - பிரகாசிக்கின்ற, **संबन्धिनः** - ஸம்பந்தம் செய்து கொள்ளுகின்ற போஜனுடைய, **सद्म** - வீட்டை, **समाससाद**- அடைந்தான்.

(க-து) இவ்வாறு செவிக்கினியதாகப் பெண்கள் கூறிய புகழுரைகளைக் கேட்டுக்கொண்டு அஜன், போஜனுடைய மாளிகையை அணுகினுன். அம்மாளிகை மங்களப் பொருள்களால் அழகுசெய்யப்பட்டு விளங்கியது.

ततोऽवतीर्याशु करेणुकायाः स कामरूपेश्वरदत्तहस्तः ।
वैदर्भनिर्दिष्टमथो विवेश नारीमनांसीव चतुष्कमन्तः ॥ १७ ॥

**ततः** - பிறகு, **करेणुकायाः** - பெண் யானையிலிருந்து, **आशु** - சீக்ரமாக, **अवतीर्य** - கீழே இறங்கி, **कामरूपेश्वर-दत्तहस्तः** - காமரூப நாட்டரசனுல் கைகொடுக்கப்பட்டு, **सः** - அஜன், **अथो** - பிறகு, **वैदर्भ निर्दिष्टं** - விதர்ப்ப தேசராஜனுல் காண்பிக்கப்பட்ட, **अन्तः** உள்ளே இருக்கின்ற, **चतुष्कं** - சதுக்க மண்டபத்தை, **नारीमनांसि इव** - (அங்கு கூடியிருந்த) பெண்களின் மனத்தில் புகுவதுபோல, **विवेश**-புகுந்தான்.

(க-து) யானையினின்றும் இறங்கி, காமரூப அரசனால் கைலாகு கொடுத்து அழைத்துச் செல்லப்பட்ட அஜன், போஜன் காட்டிய மண்டபத்தை அடைந்தான். அங்குக் கூடியிருந்த பெண்கள் அவனை ஆவலுடன் கண்டனர். அச்சமயத்தில் பெண்களின் மனத்தில் அஜனைப்பற்றிய நினைவே இருந்ததால், கவி, அஜன் பெண்கள் மனத்திலும் பிரவேசித்ததாக உத்ப்ரேக்ஷித்துக் கூறுகின்றார்.

महार्हसिंहासनसंस्थितोऽसौ सरत्नमर्घ्यम् मधुपर्कमिश्रम् ।
भोजोपनीतम् च दुकूलयुग्मम् जग्राह सार्धम् वनिताकटाक्षैः ॥१८॥

**असौ** - அவன், **महार्ह सिंहासनसंस्थः** - மிக விலையுயர்ந்த சிம்மாஸனத்தில் அமர்ந்தவனாய், **भोजोपनीतं** - போஜனால் கொண்டுவரப்பட்டதும், **सरत्नं** - ரத்னங்களுடன் கூடியதும், **मधुपर्कमिश्रं** - மதுபர்க்கத்துடன் கலந்ததுமான, **अर्घ्यं** - அர்க்யத்தையும் - **दुकूलयुग्मं च** - இரண்டு வெண் பட்டுக்களையும், **वनिता कटाक्षैः सार्धम्** - ஸ்திரீகளின் கடைக் கண் பார்வைகளுடன், **जग्राह** - பெற்றுக் கொண்டான்.

(க-து) போஜன், அஜனை வரவேற்றுச் சிறந்த ஸிம்மாஸனத்தில் அமரும்படி செய்தான். பின், ரத்னம், மதுபர்க்கம், இவைகளுடன் கூடிய அர்க்யத்தையும், இரண்டு பட்டுவஸ்திரங்களையும் அவனுக்கு அளிக்கவும், அஜன் அவைகளை எல்லாம், பெண்கள் அன்புடன் நோக்கப் பெற்றுக் கொண்டான்.

சிறந்த அதிதிகளுக்கு மதுபர்க்கம் அளித்து உபசரிப்பது முறையாகும். சிறப்பாக, மணப்பிள்ளையை வரவேற்கும் பொழுது இது அளிப்பதுண்டு. இவ் வழக்கம் தற்காலத்திலுமுள்ளதே. வரனை வரவேற்கும் வகையைப்பற்றி ஆச்வலாயனர் கூறுவது. 'अलंकृतः सितच्छत्रोऽपदातिर्ज्ञातिबान्धवैः । वृतो वधूगृहं गत्वा मधुपर्केण पूजितः' என்பதாம். மதுபர்க்கம் என்பதற்குத் தேன்கலந்தது எனப்பொருள்.

தேன், தயிர், நெய், ஜலம், கற்கண்டு, இவைகள் கலந்த பண்டத்தை இங்கு இச்சொல் குறிக்கின்றது. दधि सर्पिर्जलं-क्षौद्रं सिता चैतैश्च पञ्चभिः । प्रोच्यते मधुपर्कः - என்பது மதுபர்க்கத்தைப் பற்றிக் கூறுவது.

दुकूलवासाः स वधूसमीपम् निन्ये विनीतैरवरोधरक्षैः ।
वेलासकाशम् स्फुटफेनराजिर्नवैरुदन्वानिव चन्द्रपादैः ॥ १९ ॥

**स्फुटफेन राजिः** - பிரகாசிக்கின்ற நுரைக் கூட்டத்தையுடைய, **उदन्वान्** - ஸமுத்ரம், **नवैः** - புதிய, **चन्द्रपादैः** - சந்திர கிரணங்களினால், **वेलासकाशं इव** - கரையின் ஸமீபத்திற்குக் கொண்டு போகப்படுவது போல, **दुकूलवासाः** - வெண்பட்டாடையுடைய, **सः** - அவன், **विनीतैः** - வணக்கமுடைய, **अवरोधरक्षैः** - அந்தப்புர ஆட்களால், **वधूसमीपं** - இந்துமதியின் சமீபத்திற்கு, **निन्ये** - அழைத்துச் செல்லப்பட்டான்.

(க-து) விநயமுள்ள அந்தப்புர வேலைக்காரர்கள் அஜனை இந்துமதியின் ஸமீபத்திற்கு அழைத்துச் சென்றனர்.

வெண்பட்டாடை அணிந்த அஜனுக்கு, வெண்ணிற நுரையையுடைய ஸமுத்ரமும், விநயமுள்ள வேலைக்காரர்களுக்குக் குளிர்ந்த சந்திர கிரணங்களும், இந்துமதிக்கு ஸமுத்திரத்தின் கரையும் உபமானங்கள். சந்திரோதயத்தில் ஸமுத்திரம் பொங்கிக் கரையின்மேல் பரவும்.

तत्रार्चितो भोजपतेः पुरोधा हुत्वाग्निमाज्यादिभिरग्निकल्पः ।
तमेव चाधाय विवाहसाक्ष्ये वधूवरौ संगमयांचकार ॥ २० ॥

**तत्र** - அங்கு, **अर्चितः** - பூஜிக்கப்பட்டவரும், **अग्निकल्पः** - அக்நிக்கு ஒப்பானவருமான, **भोजपतेः पुरोधाः** - போஜனுடையபுரோஹிதர், **आज्यादिभिः**-நெய் முதலியவைகளால்,

**अग्निं** - அக்னியை, **हुत्वा** - மகிழ்வித்தபின், **तं एव च** - அவ்வக்னியையே, **विवाहसाक्ष्ये**-விவாகத்திற்கு சாக்ஷியாக இருக்குந்தன்மையில், **आधाय** - வைத்து, **वधूवरौ** - பெண்ணையும் பிள்ளையையும், **संगमयांचकार** - ஒன்று சேர்த்தார்.

(க-து) புரோஹிதர், அக்னி ஸாக்ஷியாக அவ்விருவரையும் கணவனும் மனைவியுமாகச் சேர்த்து வைத்தார்.

அரண்மனையில் அஜன் சென்றவுடன், போஜனின்புரோஹிதர் நெய் முதலிய ஹோமத்ரவ்யங்களால் அக்னிதேவனை மகிழ்வித்துப் பின் அவ்வக்னியையே ஸாக்ஷியாகக் கொண்டு அஜனையும் இந்துமதியையும் கணவனும் மனைவியுமாகச் சேர்த்துவைத்தார்.

அப்புரோஹிதர் எல்லோராலும் கௌரவிக்கப்பட்டவர். அக்னிபோல் தேஜஸ் உடையவர். இவ்விரண்டு விசேஷணங்களாலும் அவரது பெருமை கூறப்பட்டது.

हस्तेन हस्तं परिगृह्य वध्वाः स राजसूनुः सुतरां चकाशे ।
अनन्तराशोकलताप्रवालम् प्राप्येव चूतः प्रतिपल्लवेन ॥ २१ ॥

**सः** - அந்த, **राजसूनुः** - ராஜகுமாரன், **हस्तेन** - தன்னுடைய கையினால் **वध्वाः** - இந்துமதியின், **हस्तं** - கையை, **परिगृह्य** - பிடித்தபின், **अनन्तर अशोक लताप्रवालं** - ஸமீபத்திலிருக்கின்ற கொடி போன்ற அசோகத்தின் தளிரை, **प्रतिपल्लवेन** - (தன்னுடைய) தளிரால், **प्राप्य** - அடைந்து, **(स्थितः)** - இருக்கின்ற, **चूतः इव** - மாமரம் போல், **सुतरां** - மிகவும், **चकाशे** - விளங்கினான்.

(க-து) அஜன், மாந்தளிர் போன்ற தனது கரத்தினால் அசோகத்தின் தளிர்போன்ற அவளது கரத்தைப் பற்றிச் சோபையுடன் விளங்கினான்.

आसीद्वरः कण्टकितप्रकोष्ठः स्विन्नाङ्गुलिः संववृते कुमारी ।
वृत्तिस्तयोः पाणिसमागमेन समं विभक्तेव मनोभवस्य ॥ २२ ॥

**वरः** - வரன் (அஜன்), **कण्टकित प्रकोष्ठः** - மயிர்க்கூச்சடைந்த மணிக்கட்டு உடையவனாக, **आसीत्** - ஆனான். **कुमारी** - இந்துமதி, **स्विन्नाङ्गुलिः** - வியர்த்த விரல்களையுடையவளாக, **संववृते** - ஆனாள். **पाणिसमागमेन** - (அவர்களது) கைகளின் சேர்க்கையினால், **तयोः** - அவ்விருவர்களிடத்தும், **मनोभवस्य** - மன்மதனுடைய, **वृत्तिः** - இருப்பு, **समं विभक्ता इव** - ஸமமாகப் பிரித்து வைக்கப்பட்டுள்ளது போலும் இருந்தது.

(க-து) ஒருவரை ஒருவர் ஸ்பர்சித்ததும், உணர்ச்சி மிகுதியால் அஜன் மயிர்க்கூச்சடைந்தான். இந்துமதி வியர்த்தாள். இவ்வாறு அன்பின் அடையாளங்கள் அவர்களிடம் தோன்றின. முன்பே அவ்விருவரும் ஒத்த அன்புடையவராக இருந்தனர். இப்பொழுது கரஸ்பர்சத்தினால் அவர்களது காதல் ஏற்றத்தாழ்வின்றி இருவரிடம் ஸமமாகச் செய்யப்பட்டது போலுமுள்ளது என்று கவி உத்ப்ரேக்ஷிக்கின்றார். அனுராகம் ஸமமாகச் செய்யப்பட்டுள்ளதென்பதைக் காட்டுகின்றன அஜனிடம் தோன்றிய மயிர்க்கூச்சும், இந்துமதியினிடம் உண்டான வியர்த்தலும்.

இச்சுலோகம், காதலுணர்ச்சிக்கு வசப்பட்டுள்ள இருவருக்குப் பிரதம ஸ்பர்சத்திலுண்டாகும் மாறுபாட்டைக் கூறுகின்றது. '**कन्या तु प्रथमसमागमे स्विन्नांगुलिः स्विन्नमुखी च भवति । पुरुषस्तु रोमाञ्चितो भवति । एभिरनयोर्भावं परीक्षेत ।**' என்பது வாத்ஸ்யாயநம்.

तयोरपाङ्गप्रतिसारितानि क्रियासमापत्तिनिवर्तितानि ।
ह्रीयन्त्रणामानशिरे मनोज्ञामन्योन्यलोलानि विलोचनानि ॥ २३ ॥

**अपांग प्रतिसारितानि** - கடைக்கண்ணில் செலுத்தப்பட்டவைகளும், **क्रिया समापत्ति-निवर्तितानि** பார்வையின் சந்திப்பினால் திருப்பப் பட்டவைகளும், **अन्योन्य लोलानि** - ஒருவரை ஒருவர் காண்பதில் ஆசையுடையவைகளுமான,

**तयोः विलोचनानि** - அவ்விருவரின் கண்கள், **मनोज्ञां** - மனத்திற்குப் பிடித்த, **ह्रीयन्त्रणां** - வெட்கத்தினால் (ஏற்படும்) ஸங்கோசத்தை, **आनशिरे** - அடைந்தன.

(க-து) அஜன் இந்துமதியையும், இந்துமதி அஜனையும் பார்க்க விரும்பி ஒருவரை யொருவர் கடைக்கண்களால் நோக்கினர். அவர்களது பார்வை ஒன்றை ஒன்று சந்திக்கும்பொழுது வெட்கத்தினால் சட்டெனத் திரும்பின. இவ்வாறு பார்ப்பதும், வெட்கத்தினால் பார்வையைத் திருப்பிக் கொள்வதும் கூட அவர்கள் மனத்திற்குப் பிடித்தவையா யிருந்தன.

प्रदक्षिणप्रक्रमणात् कृशानोरुदर्चिषस्तन्मिथुनं चकाशे।
मेरोरुपान्तेष्विव वर्तमानमन्योन्यसंसक्तमहस्त्रियामम् ॥ २४ ॥

**तत् मिथुनम्** - அத்தம்பதிகள், **उदर्चिषः** - எழுந்த ஜ்வாலைகளுடன் கூடிய, **कृशानोः** - அக்னியை, **प्रदक्षिण - प्रक्रमणात्** - வலம் வருவதால், **मेरोः**-மேருமலையின், **उपान्तेषु** - புறங்களில், **वर्तमानं** - சுற்றுகின்றதும், **अन्योन्यसंसक्तम्** - ஒன்றோடொன்று இணைந்திருப்பதுமான, **अहस्त्रियामं इव** - பகலும் இரவும் போல், **चकाशे** - விளங்கினர்.

(க-து) கை பற்றி, அத்தம்பதிகள் ஜ்வலிக்கின்ற அக்னியைப் பிரதக்ஷிணம் செய்தனர். அவ்வாறு சுற்றிவரும்பொழுது அவர்கள், பொன்மயமான மேருமலையைச் சுற்றிவரும் பகலும் இரவும்போல், காணப்பட்டனர்.

பொன்மயமான மேருமலையைச் சுற்றிச் சூரியன் செல்வதாகக் கூறுவர். சூரியன் மேருமலையைச் சுற்றுவதால் அவன் உள்ள இடத்தில் பகலும், இல்லாத இடத்தில் இரவும் உண்டாகின்றன. ஆகவே, பகலும் இரவும் மேருவைச்சுற்றி ஒன்றன்பின் ஒன்றாக வருகின்றன எனலாம். கை பற்றிய தம்பதிகள் போல் ஒன்றோடொன்று

இணைந்துமுள்ளன பகலும் இரவும் என்பதைக்குறிக்கின்றது, **अन्योन्यसंसक्तम्** என்றவிசேஷணம்; **उदर्चिषः** - என்பதை மேருமலைக்கும் விசேஷணமாகக் கொண்டு, 'ரத்னங்களாலும் பொன்னாலும் ஒளிர்கின்ற' எனப்பொருள் கொள்ளலாம்.

नितम्बगुर्वी गुरुणा प्रयुक्ता वधूर्विधातृप्रतिमेन तेन ।
चकार सा मत्तचकोरनेत्रा लज्जावती लाजविसर्गमग्नौ ॥ २५ ॥

**नितम्बगुर्वी** - பருத்த நிதம்பமுடையவளும், **मत्त-चकोरनेत्रा** - மதங்கொண்ட சகோரப் பக்ஷியின் கண்களைப் போன்ற கண்களையுடையவளும், **लज्जावती** - வெட்கமுடையவளுமான, **सा वधूः** - அந்தப்பெண், **विधातृ प्रतिमेन**-பிரம்மதேவருக்கு ஒப்பான, **तेन** - அந்த, **गुरुणा** - புரோகிதரால், **प्रयुक्ता** - ஏவப்பட்டவளாய், **अग्नौ** - அக்னியில், **लाजविमोक्षं** - பொரியிடுதலை, **चकार** - செய்தாள்.

(க-து) இந்துமதி புரோஹிதர் கூறியபடி பொரிகளை அக்னியில் இட்டு ஹோமம் செய்தாள்.

பொரிஹோமம் இப்பொழுதும் செய்யப்படுகின்றது. ஹோமம் செய்யும்பொழுது பெண் கூறுவதாக உள்ள மந்த்ரம்:

**'इमान् लाजानावपामि समृद्धिकरणान् मम।**
**दीर्घायुरस्तु मे पतिरेधन्तां ज्ञातयो मम ॥'**

இதன்பொருள்: 'எனக்கு எவ்வகையிலும் மேன்மையளிக்கின்ற இப்பொரிகளை அக்னிதேவருக்கு அர்ப்பணம் செய்கின்றேன். என் கணவர் நீண்ட ஆயுளுடையவராக இருக்கவேண்டும். எனது சுற்றத்தினர் மேன்மேலும் நன்மை பெறவேண்டும்' என்பது. **विधातृप्रतिमेन** என்பதால்

புரோஹிதரின் பெருமை புலப்படும். முன்பே செவ்வரி யுள்ள இந்துமதியின் கண்கள், இப்பொழுது புகைகாரண மாக அதிகம் சிவந்ததால் मत्तचकोर - என, மதங்கொண்ட சகோரப்பக்ஷியின் கண்களுக்கு ஒப்பிடப்பட்டன. (6-ஆம் ஸர்க்கம் 59-ஆம் சுலோகத்தைப் பார்க்க).

हविश्शमीपल्लवलाजगन्धी पुण्यः कृशानोरुदियाय धूमः ।
कपोलसंसर्पिशिखः स तस्या मुहूर्तकर्णोत्पलतां प्रपेदे ॥ २६ ॥

**हविः-शमीपल्लव-लाज गन्धी** - நெய், வன்னிமரத்தளிர், பொரி இவைகளின் வாசனையுடைய, **पुण्यः** - பரிசுத்தமான, **धूमः** - புகை, **कृशानोः** - அக்னியிலிருந்து, **उदियाय** - எழுந்தது; **कपोल-संसर्पि-शिखः** - (இந்துமதியின்) கன்னத்தில் பரவுகின்ற நுனியையுடைய, **सः** - அப்புகை, **तस्याः** - அவளுக்கு, **मुहूर्तकर्णोत्पलतां** - க்ஷணநேரம் காதிற்கு அணியான கருநெய்தல் புஷ்பத் தன்மையை, **प्रपेदे** - அடைந்தது.

(க-து) அக்னியிலிருந்து எழுந்த புகை, அவளது கன்னத்தில் பட்டு மேலே செல்லும் பொழுது, காதில் அணியாக வைக்கப்படும் நீலோத்பலம்போல் காணப்பட்டது.

புகையின் நிறமும், சுருண்ட தன்மையும், இந்துமதி யின் கன்னத்தின் அருகிலிருத்தலும், புகையைக் காதிலணி யும் நீலோத்பலமாகக் கூறக் காரணமாயின; புகை சில க்ஷணங்களே கன்னத்தினருகி லிருக்குமாதலால், **मूहूर्त-कर्णोत्पल** -எனப்பட்டது. **मुहूर्त** - சிறிது நேரம். புகை நல்ல மணமுடையதாக இருந்தது. பாவத்தைப் போக்கும் தன்மையுமுள்ளது.

तदञ्जनक्लेदसमाकुलाक्षं प्रम्लानबीजाङ्कुरकर्णपूरम् ।
वधूमुखं पाटलगण्डलेखमाचारधूमग्रहणाद्बभूव ॥ २७ ॥

**तत्** - அந்த, **वधूमुखं** - பெண்ணின் முகம், **आचारधूम-ग्रहणात्** - வழக்கத்தை அனுசரித்துப் புகையை ஏற்றதனால், **अञ्जनक्लेद समाकुलाक्षं** - மை கரைந்ததால் கலங்கிய கண்களையுடையதாகவும், **प्रम्लान बीजांकुर-कर्णपूरं** - மிக வாடிய விதைகளின் முளைகளாலான காதணியை யுடையதாகவும் **पाटल गण्डलेखं** - சிவந்த அழகிய கன்னமுடையதாகவும், **बभूव** - ஆயிற்று.

(க-து) விவாக காலத்தில் ஹோமத்தினின்றும் எழுந்த பரிசுத்தமான புகை முகத்தில் படும்படி ஏற்பது, தொன்று தொட்டு உண்டான வழக்கம். அதன்படி இந்துமதி, புகை தன் முகத்தில் படும்படி ஏற்றபொழுது, அவளது கண், மை கரைந்து, கலங்கியது; கன்னம் சிவந்தது. காதில் அணிந்திருந்த தான்யமுளை மிக வாடியது.

அநாதிகாலம் தொடங்கி வழக்கத்திலுள்ளது ஆசாரம் எனப்படும். பொரியை அக்னியிலிட்டபின் அதனின்றும் எழும்புகையை முகரவேண்டும் என்பர் பெரியோர்; **'लाजा-ञ्जलिंविसृज्य धूमाग्रं जिघ्रेत्'** - என்பது பிரயோகவாக்யம்.

கோதுமை, கடுகு போன்ற சிலவற்றை விதைத்து வர்ண நீரைத் தெளித்து அவை முளைத்தவுடன் அம்முளைகளைக் காதிலும் தலையிலும் அணிவது வழக்கம்.

तौ स्नातकैर्बन्धुमता च राज्ञा पुरन्ध्रिभिश्च क्रमशः प्रयुक्तम् ।
कन्याकुमारौ कनकासनस्थावार्द्राक्षतारोपणमन्वभूताम् ॥ २८ ॥

**कनकासनस्थौ** - பொன்மயமான ஆஸநத்தில் இருந்த, **तौ** - அந்த, **कन्याकुमारौ** பெண்ணும் பிள்ளையும், **स्नातकैः** - கிருஹஸ்தர்களாலும், **बन्धुमता** - பந்துக்களோடு கூடிய, **राज्ञा च** - அரசனாலும், **पुरन्ध्रिभिश्च** - ஸுமங்கலிகளாலும், **क्रमशः** - க்ரமமாக, **प्रयुक्तं** செய்யப்பட்ட, **आर्द्राक्षतारोपणं** - ஈரமான அக்ஷதை இடுதலை, **अन्वभूताम्** - அனுபவித்தனர்.

(க-து) பெரியோர்கள் ஆசீர்வாதம் செய்து இட்ட அக்ஷதையை அத்தம்பதிகள் ஏற்றுக் கொண்டனர்.

इति स्वसुर्भोजकुलप्रदीपः संपाद्य पाणिग्रहणं स राजा ।
महीपतीनां पृथगर्हणार्थं समादिदेशाधिकृतानधिश्रीः ॥ २९ ॥

**अधिश्रीः**-அதிகம் செல்வமுடையவனும், **भोजकुल-प्रदीपः**-போஜவம்சத்திற்குத் தீபம் போன்றவனுமான, **सः राजा**-அவ்வரசன், **इति** - இவ்வாறு, **स्वसुः** - தங்கையின், **पाणिग्रहणं** - விவாகத்தை, **संपाद्य** செய்து, **महीपतीनां** - அரசர்களை, **पृथक्** - தனித் தனியே, **अर्हणार्थं** - கௌரவிப்பதின்பொருட்டு, **अधिकृतान्** - அதிகாரிகளை, **समादिदेश** - ஆஜ்ஞாபித்தான்.

(க-து) அரசர்களுக்கு மரியாதை செய்ய போஜன் தக்க ஏற்பாடுகளைச் செய்தான்.

**पृथक्** - என்பதை, **आदिदेश** - என்பதுடன் கூட்டி, அவ்வவ்வரசரின் பிரதாபம், குலம், வித்யை, வயது இவை களுக்கு ஏற்றவாறு மரியாதைகளைச் செய்யும்படி 'தனித் தனியே ஆணையிட்டான்' எனவும் கொள்ளலாம். மனிதர்களின் தாரதரம் தெரிந்து அதற்குத்தக்க மரியாதைகளைச் செய்ய வல்லவன் போஜன் என்பதைக் காட்டுகின்றது

**भोजकुलप्रदीपः** - என்பது. அவ்வரசர்கள் எல்லோரையும் நன்கு மரியாதை செய்யத்தக்க செல்வமுமுடையவன் என்பது, **अधिश्रीः** - என்பதால் பெறப்படும்.

लिङ्गैर्मुदः संवृतविक्रियास्ते ह्रदाः प्रसन्ना इव गूढनक्राः ।
वैदर्भमामन्त्र्य ययुस्तदीयां प्रत्यर्प्य पूजामुपदाच्छलेन ॥ ३० ॥

**मुदः** - ஸந்தோஷத்தின், **लिङ्गैः** - (சிரிப்பு, புகழுரை முதலிய) அடையாளங்களினால், **संवृतविक्रियाः** - மறைக்கப்பட்ட த்வேஷமுடையவர்களாய், **प्रसन्नाः**-தெளிவானவையும், **गूढनक्राः** - மறைந்த முதலைகளை யுடையவையுமான, **ह्रदाः इव** - மடுக்கள் போன்ற, **ते** - அவ்வரசர்கள், **वैदर्भं** - போஜனிடத்தில், **आमन्त्र्य** - விடைபெற்றுக்கொண்டு, **तदीयां** - அவன் தந்த, **पूजां** - மரியாதைக்கான பொருள்களை, **उपदाच्छलेन** - பரிசு என்ற வியாஜத்தினால், **प्रत्यर्प्य** - (அவனிடம்) திருப்பிக் கொடுத்துவிட்டு, **ययुः** - சென்றனர்.

(க-து) அரசர்கள் தங்களது பகையை வெளிக்காட்டாது, புன்னகை முதலியவற்றால் மறைத்துக்கொண்டு, போஜன் அளித்த பொருள்களைப் பரிசு என்ற வகையில் அவனிடமே திருப்பிக் கொடுத்து விட்டுச் சென்றனர்.

தெளிந்தனவும் முதலைகளையுடையனவுமான மடுக்களுடன் அரசர்கள் ஒப்பிடப்பட்டுள்ளனர். மனத்துள்ள த்வேஷம், பொறாமை, கோபம் முதலியவற்றை மறைக்கும் ஸாமர்த்ய முடையவர்களாக அவர்கள் இருந்தனர் என்பதைக்காட்ட தெளிந்த என்ற சொல்லும், உண்மையிலேயே தீங்கிழைக்கப் போகின்றனர் என்பதைக் காட்ட மறைந்த முதலைகளையுடையன என்ற சொல்லும் மடுக்களுக்கு விசேஷணமாக வந்துள்ளன.

स राजलोकः कृतपूर्वसंविदारम्भसिद्धौ समयोपलभ्यम् ।
आदास्यमानः प्रमदामिषं तदावृत्य पन्थानमजस्य तस्थौ ॥ ३१ ॥

**आरम्भसिद्धौ** (நினைத்த) காரியத்தை முடிப்பதில், **कृतपूर्व-संवित्** - முன்பே செய்யப்பட்ட ஆலோசனையுடைய, **सः** - அந்த, **राजलोकः**-ராஜஸமூஹம், **समयोपलभ्यम्** - தக்க சமயத்தில் அடையத்தக்க, **तत्**-அந்த, **प्रमदा-आमिषं** - பெண் என்ற சிறந்த பொருளை, **आदास्यमानः** - அபகரிக்க விரும்பியதாய், **अजस्य** - அஜனுடைய, **पन्थानं** - வழியை, **आवृत्य** - மறைத்துக் கொண்டு, **तस्थौ** - இருந்தது.

(க-து) அவ்வரசர்கள், அஜன் தனியே ஊருக்குத் திரும்பும் பொழுது அவனிடமிருந்து சுலபமாக இந்துமதியை அபகரிக்க எண்ணி, முன்யோசனையுடன், அவன் வரும் வழியில் இருந்தனர்.

**आमिषम्** - சிறந்தபொருள்; இங்கு இந்துமதி; **कृतपूर्व - संवित्** - संवित्-பிரதிஜ்ஞை; 'இந்துமதியை அஜனிடமிருந்து கவர்ந்தே விடுவது என்ற பிரதிஜ்ஞை செய்த' என்றும் பொருள் கொள்ளலாம்.

भर्तापि तावत् क्रथकैशिकानामनुष्ठितानन्तरजाविवाहः ।
सत्त्वानुरूपाहरणीकृतश्रीः प्रास्थापयद्राघवमन्वगाच्च ॥ ३२ ॥

**अनुष्ठित-अनन्तरजा-विवाहः** - தங்கையின் விவாகத்தைச் செய்தவனும், **क्रथकैशिकानां** - க்ரதகைசிகம் என்ற நாட்டின், **भर्ता** - அரசனுமான போஜன், **तावत्** - அப்பொழுது, **सत्त्वानुरूप-आहरणीकृत-श्रीः** - தனது உத்ஸாகத்திற்குத் தக்கவாறு ஸ்திரீதனமாகக் கொடுக்கப்பட்ட செல்வமுடையவனாய், **राघवं** - அஜனை, **प्रस्थापयामास** - புறப்படச்செய்தான்; **अन्वगात् च** - (தானும் அவன்) பின் சென்றான்.

(க-து) போஜன், விவாஹம் முடிந்தவுடன், உத்ஸாகத்துடன் இந்துமதிக்கு ஏராளமான ஸ்திரீ தனமளித்து அஜனை ஊருக்கு அனுப்பித் தானும் பின் தொடர்ந்து சென்ருன்.

**क्रथकैशिकाः** - விதர்ப்பதேசம் :

तिस्रस्त्रिलोकप्रथितेन सार्धमजेन मार्गे वसतीरुषित्वा ।
तस्मादपावर्तत कुण्डिनेशः पर्वात्यये सोम इवोष्णरश्मेः ॥ ३३ ॥

**कुण्डिनेशः** - குண்டின நகர அரசன் போஜன், **त्रिलोक-प्रथितेन** - மூன்று உலகங்களிலும் பிரசித்தி பெற்ற, **अजेन-सार्धं** - அஜனோடுகூட, **मार्गे** - வழியில், **तिस्रः** - மூன்று, **वसतीः** - இரவுகள், **उषित्वा** - வசித்துவிட்டு, **पर्वात्यये** - அமாவாஸ்யையின் முடிவில், **सोमः** - சந்திரன், **उष्णरश्मेः इव** - ஸூர்யனிடமிருந்து (திரும்புவது) போல், **तस्मात्** - அஜனிடமிருந்து, **अपावर्तत** - திரும்பினன்.

(க-து) அஜனுடன் வழியில் மூன்றுநாள் தங்கிவிட்டுப் போஜன் தனது நகரம் திரும்பினன்.

பிரியம்வதன் மூலம் அஜனது புகழ் ஸ்வர்க்கபாதாளங்களிலும் சென்றுள்ளதால், **त्रिलोकप्रथितेन**-என்ருர். அஜனது பராக்ரமத்தையும், இனிவரப்போகும் சண்டையில் ஏற்படப் போகின்ற வெற்றியையும் காட்ட, அஜனுக்கு உபமானமாக ஸூரியன் கூறப்பட்டுள்ளான்.

அமாவாஸ்யை யன்று சந்திரன் ஸூர்யனுடன் இருப்பதாகவும், மறுநாள் சந்திரன் ஸூர்யனை விட்டு விலகிச் செல்வதாகவும் கூறுவர். போஜனுக்கு உபமானம் சந்திரன்.

प्रमन्यवः प्रागपि कोसलेन्द्रे प्रत्येकमात्तस्वतया बभूवुः ।
अतो नृपाश्चक्षमिरे समेताः स्त्रीरत्नलाभं न तदात्मजस्य ॥ ३४ ॥

**नृपाः** - அரசர்கள், **प्रत्येकं**- ஒவ்வொருவரும், **आत्तस्वतया**- (ரகுவினால்) கவரப்பட்ட செல்வமுடையவர்களாதலால், **कोसलेन्द्रे**-கோஸல நாட்டரசனாகிய ரகுவினிடத்தில், **प्रागपि**- முன்பே, **प्रमन्यवः** - மிகவும கோபமுடையவர்களாக, **बभूवुः**- இருந்தனர்; **अतः** - ஆகையால், **समेताः** - ஒன்றுகூடிய அவர்கள், **तदात्मजस्य** - ரகுவின் மகனுக்கு (ஏற்பட்ட), **स्त्रीरत्नलाभं** - சிறந்த பெண்ணின் லாபத்தை, **न चक्षमिरे** - பொறுக்கவில்லை.

(க-து) ரகு, திக்விஜயம் செய்த காலத்தில், அவ்வரசர்களின் செல்வங்களைக் கவர்ந்ததனால் ரகுவினிடம் அவர்களில் ஒவ்வொருவனும் மிகவும் பகை கொண்டிருந்தான். அது காரணமாகவே, அஜனுக்கு அழகிய மனைவி கிடைத்ததையும் அவர்கள் ஸஹிக்காது பொறாமை கொண்டனர்.

**समेताः** - அரசர்களுக்கு ரகுவினிடம் முன்புண்டான கோபம் இன்னும் தீர்ந்தபாடில்லை; ரகு முன்பு அவர்களது செல்வத்தைத் கவர்ந்தான். அவனது மகன் இப்பொழுது அவர்களில் ஒருவனுக்குக் கிடைக்கவேண்டிய ஸ்திரீரத்னத்தைக் கவர்ந்து புகழைக் குறைவுபெறச் செய்தான். ஆதலால் இது அவர்கள் கோபமடைவதற்கு மற்றொரு காரணமாயிற்று. தங்கள் பகைவனான ரகுவின் மகன் இந்த லாபத்தை அடைந்தானே என எண்ணியபொழுது இது பொறுக்கக் கூடியதாக இல்லை. முன்பு அரசர்கள் தனித்தனியே இருந்ததால் செல்வத்தை ரகு கவர்ந்தான். இப்பொழுது அவர்கள் எல்லோரும் ஒற்றுமையுடன் ஒன்றுசேர்ந்துள்ளதால் அஜன், பெண்ணைக் கொண்டுபோதல் எளிதன்று என்பதைக் காட்டுவது **समेताः** - என்ற விசேஷணம்.

तमुद्वहन्तं पथि भोजकन्यां रुरोध राजन्यगणः स दृप्तः ।
बलिप्रदिष्टां श्रियमाददानं त्रैविक्रमं पादमिवेन्द्रशत्रुः ॥ ३९ ॥

**बलिप्रदिष्टां** - பலியினால் கொடுக்கப்பட்ட, **श्रियं** - செல்வத்தை, **आददानं** - எடுத்துக் கொள்ளுகின்ற, **त्रैविक्रमं** - த்ரிவிக்ரமனுடையதான, **पादं** - பாதத்தை, **इन्द्रशत्रुः इव** - இந்திரசத்ருவான பிரஹ்லாதன் (தடுத்தது) போல, **दृप्तः** - கர்வம் கொண்ட, **सः** - அந்த **राजन्यगणः** - க்ஷத்ரியர் கூட்டம் **भोजकन्यां** - போஜ வம்சத்துப் பெண்ணான இந்துமதியை, **उद्वहन्तं** - அழைத்துச் செல்லுகின்ற, **तं** - அவனை, **पथि** - வழியில், **रुरोध** - தகைந்தது.

(க-து) அரசர்கள் அஜனை வழியில் எதிர்த்தனர்.

*பிரஹ்லாதனுடைய பேரன் பலி, இந்திரனை வென்று தேவர்களைத் துன்புறுத்தினான்; பலியை யடக்கி அவனிடம் இருந்த தேவர்களின் ஐசுவர்யத்தை அவர்களுக்குத் திருப்பி யளிக்கக் கருதி விஷ்ணு, வாமன வடிவில் தோன்றி, அவனிடம் மூன்றடி மண் யாசித்தார். அவன் கொடுத்தவுடன் பெரிய உருவந்தாங்கி, ஓரடியால் பூமியையும், இரண்டாவது அடியால் ஆகாசத்தையும் அளந்தார். மூன்றாவது அடிக்குப் பலி தனது தலையையே அளித்தான். பகவான் அளக்க முயன்றபொழுது பலியின் பாட்டனான பிரஹ்லாதன் தனது ராக்ஷஸ குணத்தினால் அவருடைய பாதத்தைத் தடுத்ததாகப் புராணம் கூறுகின்றது.*

*பகவான் பலியை எப்பொழுதும் பாதாளத்திலிருக்கச் செய்தார். தேவர்களின் ஐசுவர்யத்தை அவர்களிடம் திருப்பியளித்தார். விஷ்ணு குறுகிய உருவம் தாங்கியபொழுது*

வாமனர் எனவும், நெடியஉருவம் எடுத்து மூவடியால் உலகை அளந்தபொழுது திரிவிக்ரமர் எனவும் அழைக்கப்படுவர்.

அஜனுக்குத் திரிவிக்ரமரின் பாதமும், ராஜ ஸமூகத்திற்கு பிரஹ்லாதனும் உபமானங்கள். இங்கும் உபமானத்தினால் அஜனது வெற்றி காட்டப்படுகிறது.

இனிவரும் இருபத்தெட்டு சுலோகங்கள் சண்டையைப்பற்றிக் கூறுபவை.

तस्याः स रक्षार्थमनल्पयोधमादिश्य पित्र्यं सचिवं कुमारः ।
प्रत्यग्रहीत् पार्थिववाहिनीं तां भागीरथीं शोण इवोत्तरंगः ॥२६॥

सः - அந்த, कुमारः - அஜன், तस्याः - அவளுடைய, रक्षार्थं - ரக்ஷணத்திற்காக, अनल्पयोधं - அதிகமான வீரர்களையுடையவனும், पित्र्यं தந்தையினுடைய (நம்பத் தகுந்த), सचिवं - மந்திரியை, आदिश्य - ஆஜ்ஞாபித்து விட்டு, तां - அந்த, पार्थिववाहिनीं - அரசர்களின் சேனையை, उत्तरंगः - உயரமான அலைகளையுடைய, शोणः சோண நதியானது, भागीरथीं इव - கங்கையை(ச்சேருவது) போல, प्रत्यग्रहीत् - எதிர்த்தான்.

(க-து) அஜன் அரசர்களுடைய சேனையை எதிர்த்தான்.

அரசர்களுடைய சேனைக்கு உபமானம் கங்காநதி; இதனால் சேனையின் பரந்த தன்மை புலப்படும். சோணநதி - கங்கையைக் காட்டிலும் சிறியதான ஒரு நதி.

पत्तिः पदातिं रथिनं रथेशस्तुरंगसादी तुरगाधिरूढम् ।
यन्ता गजस्याभ्यपतद्गजस्थं तुल्यप्रतिद्वन्द्वि बभूव युद्धम् ॥ २७ ॥

**पत्तिः** - காலாள், **पदातिं** - காலாளை, **अभ्यपतत्** - எதிர்த்தான்; **रथेशः** - தேர்வீரன், **रथेशं**-தேர்வீரனையும், **तुरंगसादी** - குதிரைவீரன், **तुरगाधिरूढं** - குதிரைவீரனையும், **गजस्य** - யானையை, **यन्ता**-அடக்குகின்றவன் (யானை வீரன்), **गजस्थं** - யானை வீரனையும், **अभ्यपतन्**-எதிர்த்தனர்; **एवं** - இவ்வாறு. **युद्धं** - யுத்தம், **तुल्य प्रतिद्वन्द्वि**-சமமான பகைவனையுடையதாக, **बभूव** - இருந்தது.

(க-து) வீரர்கள் தந்தமக்குச் சமமான வீரர்களுடன் சண்டையிட்டனர்.

வீரர்கள் சமபலமுடையவர்களுடன் சண்டையிட வேண்டுமென்பதும் சாஸ்திரங்களிலே கூறப்பட்டுள்ளது:

'रथी च रथिना सार्धं पदातिश्च पदातिना।
कुञ्जरस्थो गजस्थेन युध्येत भृगुनन्दन' என்பர்.

नदत्सु तूर्येष्वविभाव्यवाचो नोदीरयन्ति स्म कुलोपदेशान् ।
बाणाक्षरैरेव परस्परस्य नामोर्जितं चापभृतः शशंसुः ॥ ३८ ॥

**तूर्येषु** - (ரண) பேரிகைகள், **नदत्सु**-ஒலிக்கும்பொழுது, **अविभाव्यवाचः** - அறியமுடியாத வார்த்தைகளையுடைய, **चापभृतः** - வில் வீரர்கள், **कुलोपदेशान्** - (தங்களுடைய) வம்சத்தின் பெயர்களை, **न उदीरयन्ति स्म** - சொல்லவில்லை; **ऊर्जितं** - பிரசித்தமான, **परस्परस्य** - ஒருவருக்கொருவர், **नाम**-பெயரை, **बाणाक्षरैः एव** - பாணங்களிலுள்ள எழுத்துக்களினாலேயே **शशंसुः** - தெரிவித்துக் கொண்டனர்.

(க-து) வீரர்கள், சண்டையிடும் பொழுது தமது குலம், பிரதாபம் முதலியவைகளைக் கூறிக்கொண்டு சண்டையிடுவது வழக்கம். பேரிகைகளின் சத்தத்தினால் தாங்கள் கூறுவது எதிரியின் காதில்

விழாவென எண்ணிச் சொற்களால் தெரிவிக்காது தம் பெயர் பதிந்த பாணங்களினுலேயே தமது குலத்தையும் வீரத்தையும் தெரிவித்துக் கொண்டனர்.

उत्थापितः संयति रेणुरश्वैः सान्द्रीकृतः स्यन्दनवंशचक्रैः ।
विस्तारितः कुंजरकर्णतालैर्नेत्रक्रमेणोपरुरोध सूर्यम् ॥ ३९ ॥

**संयति** - சண்டையில், **अश्वैः** - குதிரைகளினுல், **उत्थापितः** - கிளப்பப்பட்டதும், **स्यन्दनवंशचक्रैः** - தேர்க் கூட்டங்களின் சக்கரங்களினுல், **सान्द्रीकृतः** - அதிகமாக்கப் பட்டதும், **कुञ्जरकर्णतालैः** - யானைகளுடைய காதுகளின் சலனத்தினுல், **विस्तारितः** - எங்கும் பரப்பப் பட்டதுமான, **रेणुः** - புழுதி, **नेत्रक्रमेण** - துணி(மறைப்பது)போல், **सूर्यं** - சூரியனை, **उपरुरोध** - மறைத்தது.

(க-து) யுத்த பூமியில் குதிரைகளின் குளம்புகளால் எழுப்பப் பட்ட புழுதி, ரத சக்கரங்களால் அதிகமாகி, யானைகளின் காதடிப் பால் எங்கும் பரவி, திரையிட்டு மறைப்பது போல் ஸூரியனையும் கண்களுக்குப் புலப்படாதவாறு மறைத்தது.

मत्स्यध्वजा वायुवशाद्विदीर्णैर्मुखैः प्रवृद्धध्वजिनीरजांसि ।
बभुः पिबन्तः परमार्थमत्स्याः पर्याविलानीव नवोदकानि ॥ ४० ॥

**वायुवशात्** - காற்றின் வேகத்தினுல், **विदीर्णैः** - திறந்து கொண்ட, **मुखैः** - வாய்களால், **प्रवृद्ध ध्वजिनी रजांसि** - அதிக மான சேனையின் புழுதிகளை, **पिबन्तः** - உட்கொள்ளுகின்ற, **मत्स्यध्वजाः**-மீன் வடிவத்தையுடைய கொடிகள், **पर्याविलानि** - கலங்கிய, **नवोदकानि** - புதிய ஜலத்தை, **पिबन्तः** - பானம் செய்கின்ற, **परमार्थ मत्स्याः इव** - வாஸ்தவமான மீன்கள் போல், **बभुः** - விளங்கின.

(க-து) அரசர்களின் த்வஜங்கள் பல, மீன் வடிவத்தில் இருந்தன. காற்றடிக்கும் பொழுது அம்மீன்களின் வாய்கள் திறந்து கொள்ளவே புழுதிகள் அவைகளின் வாய்களில் புகுந்தன. அதனால், அத் த்வஜ மீன்கள், ஆற்றில் வந்துள்ள கலங்கிய புதிய வெள்ளத்தைப் பானம் செய்கின்ற உண்மையான மீன்கள் போலும் காணப்பட்டன.

**इव** - என்பதை, **पिबन्तः** - என்பதுடனும் சேர்த்து, 'த்வஜ மீன்கள் நதியின் கலங்கிய நீரைக்குடிப்பன போலும் காணப்பட்டன' என உத்ப்ரேக்ஷையாகவும் கொள்ளலாம். இம்முறையில் அன்வயம்: **परमार्थमत्स्या इव स्थिता मत्स्यध्वजाः वायुवशाद् विदीर्णैः मुखैः प्रवृद्धध्वजिनीरजांसि पिबन्तः पर्याविलानि नवोदकानि पिबन्त इव बभुः'** என்பர் ஓர் உரையாசிரியர்.

रथो रथाङ्गध्वनिना विजज्ञे विलोलघण्टाक्वणितेन नागः ।
स्वभर्तृनामग्रहणाद् बभूव सान्द्रे रजस्यात्मपरावबोधः ॥ ४१ ॥

**सान्द्रे** - அடர்ந்த, **रजसि** - புழுதியில், **रथः** - தேர், **रथाङ्गध्वनिना** - தேர்ச் சக்கரத்தின் ஓசையினால், **विजज्ञे** - அறியப்பட்டது; **नागः** - யானை - **विलोल-घण्टा-क्वणितेन** - அசைகின்ற மணியின் ஓசையால், **विजज्ञे** - அறியப்பட்டது; **(योधानां)** - வீரர்களில், **आत्मपरावबोधः** - தன்னைச் சேர்ந்தவன் பகைவன் என்ற அறிவு, **स्वभर्तृ-नामग्रहणात्** - தம்முடைய தலைவர் பெயரைக் கூறுவதால், **बभूव** - உண்டாயிற்று.

(க-து) புழுதி எங்கும் பரவியதால் சத்ருமித்ரன் என்று அறிவதும் கடினமாயிருந்தது. தேர், சக்கர ஓசையாலும், யானை மணி ஓசையாலும், வீரர்கள் தமது தலைவர்களின் பெயரைக் கூறுவதாலும் அறியப்பட்டனர்.

आवृण्वतो लोचनमार्गमाजौ रजोऽन्धकारस्य विजृम्भितस्य ।
शस्त्रक्षताश्वद्विपवीरजन्मा बालारुणोऽभूद् रुधिरप्रवाहः ॥ ४२ ॥

**आजौ** - யுத்தத்தில், **लोचनमार्ग** - கண்ணின் வழியை (பார்வையை), **आवृण्वतः** - மறைக்கின்றதும், **विजृंभितस्य** - பரவியிருப்பதுமான, **रजोन्धकारस्य** - புழுதியாகிய இருட்டிற்கு, **शस्त्र क्षताश्व द्विपवीर जन्मा** - ஆயுதத்தினால் வெட்டப்பட்ட குதிரை, யானை, போர்வீரர் இவர்களிடமிருந்து உண்டான, **रुधिरप्रवाहः** - ரத்த வெள்ளம், **बालारुणः** - இளம் சூர்யனாக, **बभूव** - ஆயிற்று.

(க-து) யுத்தத்தில் எழுந்த புழுதி எங்கும் பரவி இருள்போல் பார்வையை மறைத்தது. அத்தகைய இருட்டிற்கு இளம் சூரியனாக இருந்தது பின் உண்டான ரக்தப்ரவாஹம். ஆயுதங்களால் வெட்டப்பட்ட குதிரை, யானை, வீரர்கள் இவர்களிடமிருந்து பெருகிய ரக்த வெள்ளம், இளம் சூரியன் இருட்டை நீக்குவது போல், புழுதி எழுவதைக் குறைத்தது.

இதன் மூலம் சண்டையின் உக்ரமான தன்மை புலப்படும்.

स च्छिन्नमूलः क्षतजेन रेणुस्तस्योपरिष्टात् पवनावधूतः ।
अङ्गारशेषस्य हुताशनस्य पूर्वोत्थितो धूम इवाबभासे ॥ ४३ ॥

**क्षतजेन** - ரத்தத்தினால், **छिन्नमूलः** - அறுக்கப்பட்ட வேருடையதும் (பூமியின் தொடர் பற்றதும்), **तस्य** - ரத்தத்திற்கு, **उपरिष्टात्** - மேற்பாகத்தில், **पवनावधूतः** - காற்றினால் அலைக்கப்பட்டதுமான, **सः** - அந்த, **रेणुः** - புழுதியானது, **अंगारशेषस्य** - தணலினால் மட்டும் எஞ்சியிருக்கும், **हुताशनस्य** - நெருப்பினுடைய, **पूर्वोत्थितः** - முதலில் எழுந்த, **धूमः इव** - புகைபோல், **आबभासे** - விளங்கியது.

(க-து) தரையில் ரத்தவெள்ளம் ஓடியதால் புழுதிக்கும் தரைக்கு முள்ள தொடர்பு நீங்கிவிட்டது. காற்றினால் புழுதி அலைக்கப் பட்டபொழுது, ரத்தம் தணல் போலவும், புழுதி அதனின்று எழுந்த புகைபோலவும் காணப்பட்டன.

प्रहारमूर्च्छापगमे रथस्था यन्तॄनुपालभ्य निवर्तिताश्वान् ।
यैः सादिता लक्षितपूर्वकेतूंस्तानेव सामर्षतया निजघ्नुः ॥ ४४ ॥

**रथस्थाः**-ரதத்திலிருந்த வீரர்கள், **प्रहारमूर्च्छापगमे**(**सति**)-(சத்ருவின்) தாக்குதலால் ஏற்பட்ட மூர்ச்சை தெளிந்த வுடன், **निवर्तिताश्वान्** - குதிரைகளை (யுத்தத்திலிருந்து) திருப்பிய, **यन्तॄन्** - சாரதிகளை, **उपालभ्य** - நிந்தித்துவிட்டு, **यैः** - எந்த வீரர்களினால், **सादिताः** - (முதலில்) அடிக்கப் பட்டனரோ, **लक्षितपूर्वकेतून्**-முன்பே பார்க்கப்பட்ட த்வஜங் களையுடைய, **तान् एव** - அவர்களையே, **सामर्षतया** - கோபத் துடன், **निजघ्नुः** - அடித்தனர் (எதிர்த்தனர்).

(க-து) தேர் வீரர்கள் எதிரியினால் தாக்கப்பட்டு நினைவிழந்த பொழுது ஸாரதிகள், குதிரைகளைத்திருப்பி, யுத்தபூமியினின்றும் வேறு இடங்களுக்குக் கொண்டு சென்று அவர்களுக்கு மூர்ச்சை தெளி வித்தனர். ஆனால் பிரஜ்ஞைவந்தவுடன் அவ் வீரர்கள், தங்களை யுத்த களத்தினின்றும் கொண்டு வந்ததற்காகத் தேரோட்டிகளை நிந்தித் தனர். ஏனெனில் அவ்வாறு செல்வது பயந்துப் பின் வாங்கியதற் கொப்பாகுமென அவ்வீரர்கள் எண்ணினர்.

நினைவு வந்தவுடன், மூர்ச்சையடைவதற்கு முன்பு யாரு டன் போர் புரிந்தனரோ அவர்களைத் துவஜங்களின் மூலம் கண்டு அறிந்து அவர்களுடனேயே தொடர்ந்து சண்டையிட்டனர்.

**सूतः कृच्छ्रगतं रक्षेत् रथिनं, सारथिं रथी** ' என்று கூறி யுள்ளபடி தேரோட்டி, தேர்வீரனைக்காத்தது நியாயமே.

ஆயினும் தேர்வீரன், தன் உயிரைக் காத்த ஸாரதியைக் கோபத்தினால் அவ்வாறு நிந்தனை செய்தான் என, सामर्षतया என்பதை उपालभ्य என்பதுடன் சேர்த்தும் பொருள் கூறலாம்.

अप्यर्धमार्गे परबाणलूना धनुर्भृतां हस्तवतां पृषत्काः ।
संप्रापुरेवात्मजवानुवृत्त्या पूर्वार्धभागैः फलिभिः शरव्यम् ॥ ४५ ॥

हस्तवतां - தேர்ந்த கையையுடைய, धनुर्भृतां - வில்லாளிகளின், पृषत्काः - பாணங்கள், अर्धमार्गे-பாதிவழியில், परबाणलूनाः अपि - சத்ருவின் பாணத்தால் துண்டிக்கப்பட்ட பொழுதும்கூட, फलिभिः - கூரான முனையையுடைய, पूर्वार्धभागैः-முன் பாதிபாகங்களினால், आत्मजवानुवृत्त्या தங்களது வேகத்தின் தொடர்ச்சி காரணமாக, शरव्यं - குறியை संप्रापुः एव - அடையவே அடைந்தன.

(க-து) திறமையுள்ள வீரர்கள் பிரயோகித்த பாணங்கள் ஆகாயத்தில் செல்லும் பொழுது இடையிலே எதிரியினால் துண்டிக்கப்பட்டனவாயினும், அவைகளின் வேகம் குறையாததனால் அப்பாணங்களினுடைய கூரான முன் பாதி பாகங்கள் குறித்த லக்ஷ்யத்திலேயே போய் விழுந்தன. அவைகளின் வேகம், துண்டிக்கப்பட்டதனால் சிறிதும் குறையவில்லை.

आधोरणानां गजसंनिपाते शिरांसि चक्रैर्निशितैः क्षुराग्रैः ।
हृतान्यपि श्येननखाग्रकोटिव्यासक्तकेशानि चिरेण पेतुः ॥ ४६ ॥

गज सन्निपाते - யானைகளின் சண்டையில், निशितैः - தீட்டப்பட்டனவும், क्षुराग्रैः - கத்திபோல் கூரான முனையையுடையனவுமான, चक्रैः - சக்ராயுதங்களினால், हृतानि-अपि - வெட்டப்பட்டனவாயினும், आधोरणानां யானை வீரர்களின், शिरांसि - தலைகள், श्येन-नखाग्रकोटि व्यासक्त केशानि - கழுகு

களுடைய நகங்களின் முனைகளில் சிக்கிய மயிர்களையுடைய னவாய், चिरेण - வெகு நேரத்திற்குப் பின், पेतुः - (கீழே) விழுந்தன.

(க-து) யானைப் படை வீரர்கள் சண்டையிடும் பொழுது கூரான சக்ராயுதங்களைப் பிரயோகித்து, யானைமேலுள்ள வீரர்களின் தலைகளை வெட்டினர். ஆனால் வெட்டப்பட்ட தலைகள், வீரர்களின் உடல்கள் தரையில் விழுந்ததன் பின் வெகுநேரம் கழித்துப் பூமியில் விழுந்தன. ஏனெனில் யானைமேல் இருந்த காரணத்தினாலே யானை வீரர்கள், முன்பே உயரமான இடத்திலிருந்தனர். அவர்களது தலைகள் சக்ராயுதத்தினால் வெட்டப்பட்டு மேலே தூக்கி எறியப்பட்டன. அவ்வாறு மேலே எழுந்த தலைகளை ஆகாசத்தில் வட்டமிடுகின்ற கழுகுகள் கால்நகங்களால் பற்றின. பிறகு அக்கழுகுகள் போடவும் தலைகள் தரையில் விழுந்தன.

மேலே கிளம்பிய தலைகள், போர்க்களத்தில் வட்டமிடும் கழுகுகளின் கால்களில் தற்செயலாகச் சிக்கிப்பின் கீழே விழுந்தன என்றும் கூறலாம்.

पूर्वं प्रहर्ता न जघान भूयः प्रतिप्रहाराक्षममश्वसादी ।
तुरङ्गमस्कन्धनिषण्णदेहं प्रत्याश्वसन्तं रिपुमाचकाङ्क्ष ॥ ४७ ॥

पूर्वं - முதலில், प्रहर्ता - அடிக்கின்ற, अश्वसादी - குதிரை வீரன், प्रतिप्रहाराक्षमम् - திருப்பியடிக்கச் சக்தியற்றவனும், तुरंगम-स्कन्ध-निषण्ण देहम् - குதிரையின் கழுத்தில் சாய்ந்த தேகமுடையவனுமான, रिपुं - சத்ருவை, भूयः - மறுபடியும், न जघान - அடிக்கவில்லை; प्रत्याश्वसन्तं மூர்ச்சை தெளிகின்ற, रिपुं - அவனை, आचकांक्ष - விரும்பினான் (எதிர்பார்த்திருந்தான்.)

(க-து) அடிப்பட்ட குதிரைவீரன் ஒருவன் திருப்பியடிக்கத் திறமையற்று நினைவிழந்து குதிரையின் கழுத்தின் மேல் சாய்ந்து

இருந்தான். அப்பொழுது மேலும் அடிப்பது எளிதாயினும் முதலில் அடித்தவன் மறுபடியும் அவனை அடிக்கவில்லை. அவன் மூர்ச்சை தெளியும் வரை எதிர்பார்த்திருந்தான். ஏனெனில் கஷ்டமான நிலையிலுள்ளவனை அடிப்பது தர்மமன்று.

'नायुधव्यसनं प्राप्तं नार्तं नातिपरिक्षतम्।
न भीतं न परावृत्तं सतां धर्ममनुस्मरन्॥' என்பர் மநு.

तनुत्यजां वर्मभृतां विकोशैर्बृहत्सु दन्तेष्वसिभिः पतद्भिः।
उद्यन्तमग्निं शमयांबभूवुर्गजा विविग्नाः करशीकरेण ॥ ४८ ॥

**तनुत्यजां** - சரீரத்தை விடத் துணிந்த, **वर्मभृतां** - கவச மணிந்த வீரர்களுடையனவும், **बृहत्सु** - பெரிய, **दन्तेषु** - தந்தங்களில், **पतद्भिः** - விழுகின்றனவும், **विकोशैः** - உறைகளிலிருந்து எடுக்கப்பட்டனவுமான, **असिभिः** - கத்திகளால், **उद्यन्तं** - உண்டாகின்ற, **अग्निं** - நெருப்பை, **विविग्नाः** - பயமடைந்த, **गजाः** - யானைகள், **कर-शीकरेण** - துதிக்கையினின்றும்வரும் ஜலத்துளிகளால், **शमयांबभूवुः** - அணைத்தன.

(க-து) உயிரைத் துரும்பாக மதித்துச் சண்டையிடுகின்ற வீரர்கள் யானைப்போரில் உறையினின்றும் கத்தியை உருவி யானைகளின் தந்தத்தை அடித்தனர். கத்தி மோதுவதால் தோன்றிய நெருப்பை யானைகள் துதிக்கை நீரால் அணைத்தன.

शिलीमुखोत्कृत्तशिरःफलाढ्या च्युतैः शिरस्त्रैश्चषकोत्तरेव।
रणक्षितिः शोणितमद्यकुल्या रराज मृत्योरिव पानभूमिः ॥ ४९ ॥

**शिलीमुखोत्कृत्त-शिरः फलाढ्या** - பாணங்களினால் அறுக்கப்பட்ட தலைகளாகிய பழங்கள் நிறைந்ததும், **च्युतैः** - கீழே விழுந்த, **शिरस्त्रैः** - (இரும்பாலான) தலைமுடிகளினால், **चषकोत्तरा इव** - குடிப்பதற்கான பாத்திரங்களை உடையதும், **शोणित मद्य-कुल्या** - ரத்தமாகிய மதுவின் பெருக்கை உடையதுமான, **रणक्षितिः** - யுத்தபூமியானது, **मृत्योः** - மிருத்யு

தேவதையின், **पानभूमिः** - மதுபானம் செய்யுமிடம்போல், **रराज** - சோபித்தது.

(க-து) யுத்தபூமி மிருத்யுதேவதையின் பானபூமிபோல் அச்சந்தருவதாக இருந்தது. அவ்விடத்தில் தலைகள் பழங்களாகவும், இரும்பினாலான தலைமூடிகள் (குல்லாய்கள்) பானபாத்திரங்களாகவும், ரக்தம் மதுவாகவும் இருந்தன.

**चषकोत्तरेव** - என்பதிலுள்ள **'इव'** என்பதற்குப் பொருளில்லை.

उपान्तयोर्निष्कुषितं विहंगैराक्षिप्य तेभ्यः पिशितप्रियापि ।
केयूरकोटिक्षततालुदेशा शिवा भुजच्छेदमपाचकार ॥ ५० ॥

**विहङ्गैः** - பக்ஷிகளினால், **उपान्तयोः** - இரு முனைகளிலும், **निष्कुषितं** - கொத்தப்பட்டதான, **भुजच्छेदं**-துண்டிக்கப்பட்ட கையை, **तेभ्यः**-அப்பறவைகளிடமிருந்து, **आक्षिप्य**-பிடுங்கிக் கொண்ட பின், **शिवा**-நரி ஒன்று, **पिशितप्रियाऽपि**-மாமிசத்தில் ஆசை உடையதாயினும், **केयूर कोटि क्षत तालुदेशा** - தோள்வளையின் கூரானபாகத்தினால் புண்படுத்தப்பட்ட தாடையின்உட்புறமுடையதாய், **अपाचकार**-(கையை) விட்டு விட்டது.

(க-து) பறவைகள், யுத்தபூமியில், துண்டிக்கப்பட்டுக் கீழே கிடந்த கை ஒன்றின் இருமுனைகளிலுமுள்ள மாமிசத்தைத் தின்றுவிட்டன. இடையிலே மாத்திரம் மாமிசம் சிறிது இருந்தது. நரி ஒன்று மாமிசத்தில் விருப்புடன் பறவைகளிடமிருந்து அக்கைத்துண்டைப் பிடுங்கித்தின்ன முயன்று, அக்கையிலிருந்த தோள்வளை தாடையில் குத்தியதால் அதை விட்டுவிட்டது.

**शिवा** - நரிக்குப் பொதுப்பெயர். பெண்நரி எனப் பொருள் அல்ல.

कश्चिद्द्विषत्खड्गहृतोत्तमाङ्गः सद्यो विमानप्रभुतामुपेत्य ।
वामाङ्गसंसक्तसुराङ्गनः स्वं नृत्यत्कबन्धं समरे ददर्श ॥ ५१ ॥

**द्विषत्खड्ग हृतोत्तमाङ्गः** - சத்ருவின் கத்தியினல் தலை வெட்டப்பெற்ற, **कश्चित्** - ஒரு வீரன், **सद्यः**-உடனே, **विमानप्रभुताम्** விமானத்திற்கு உரியவஞன தன்மையை (தேவ வடிவத்தை), **उपेत्य**-அடைந்து, **वामाङ्ग संसक्त सुराङ्गनः सन्**-(தனது) இடது புறத்தில் சார்ந்த தேவஸ்திரீயை உடையவஞய், **समरे**-யுத்த பூமியில், **नृत्यत्** - குதிக்கின்ற, **स्वम्** - தன்னுடைய, **कबन्धं** - தலையில்லா உடலை, **ददर्श** - கண்டான்.

(க-து) சத்ருவினல் தலைவெட்டப்பட்டவுடன், ஒருவீரன் தேவஞக மாறி விமானத்தில் அமர்ந்து தன்னைவரித்த அப்ஸரஸ் இடதுபுறத்தில் தன்மேல் சார்ந்திருக்க, யுத்தபூமியில் தனது உடல், சிறிதுநேரம் உயிருடையதாக இருந்ததால் ஆடிக்கொண்டிருப்பதைக் கண்டான். உடலினின்றும் உயிர் நீங்குமுன்பே அவ்வீரன் பெற்ற பேறு இங்கு கூறப்படுகின்றது.

யுத்தத்தில் கொல்லப்பட்ட வீரர்கள் ஸ்வர்க்கம் செல்கின்றனர். அங்குத் தேவர்களோடொப்ப விமானம் பெறுகின்றனர். அத்தகைய வீரர்களை அப்ஸரஸ்திரீகள் தங்களது கணவராக வரிக்கின்றனர் என்பர்.

'वराप्सरःसहस्राणि शूरमायोधने हतम् ।
त्वरितान्यभिधावन्ति मम भर्ता ममेति च ॥'

என்பது அக்னி புராணம்.

अन्योन्यसूतोन्मथनादभूतां तावेव सूतौ रथिनौ च कौचित् ।
व्यश्वौ गदाव्यायतसंप्रहारौ भग्नायुधौ बाहुविमर्दनिष्ठौ ॥ ५२ ॥

**कौचित्** - இரு தேர் வீரர்கள், **अन्योन्य सूतोन्मथनात्** - ஒருவர்க்கொருவர் ஸாரதியைக் கொன்றுவிட்டதினல், **तौ एव** - அவர்களே, **सूतौ** - ஸாரதிகளாகவும், **रथिनौ** - தேராளிகளாகவும், **अभूताम्** - ஆஞர்கள். **तौ एव**-அவர்களே, **व्यश्वौ** - குதிரைகளற்றபொழுது, **गदाव्यायत संप्रहारौ** - கதாயுதத்திஞல் நீண்ட சண்டையுடையவர்களாக, **अभूताम्**-

ஆனார்கள்; **तौ एव** - அவர்களே, **भग्नायुधौ** - கதாயுதம் முறிந்தவர்களான பொழுது, **बाहु विमर्दनिष्ठौ** - கைச்சண்டையில் ஊக்க முடையவர்களாக, **अभूताम्** - ஆனார்கள்.

(க-து) இரண்டு தேராளிகள் பரஸ்பரம் தேரோட்டிகளைக் கொன்று கொண்டதால் தாங்களே ஸாரதியின் வேலையையும் செய்து கொண்டனர். குதிரைகள் கொல்லப்பட்டவுடன் கதாயுதத்துடன் நெடும் போர் புரிந்தனர். கதாயுதமும் முறிந்தபொழுது கைச்சண்டையில் ஊக்கமுடனிருந்தனர். ஆயுதம் முதலிய ஸாதனங்கள் இல்லையே எனப்போரை நிறுத்தவில்லை. முடிவு வரை சண்டையிட்டனர்.

இதனின்றும் வீரர்களின் வீரம் புலனாகும்.

परस्परेण क्षतयोः प्रहर्त्रोरुत्क्रान्तवाय्वोः समकालमेव ।
अमर्त्यभावेऽपि कयोश्चिदासीदेकाप्सरःप्रार्थितयोर्विवादः ॥ ५३ ॥

**परस्परेण**-பரஸ்பரம், **क्षतयोः**-அடிக்கப் பட்டவர்களும், **समकालमेव** - ஒரே ஸமயத்தில், **उत्क्रान्तवाय्वोः** - உயிரை விட்டவர்களும், **एकाप्सरःप्रार्थितयोः**- ஒரே அப்ஸர ஸ்திரீயை விரும்பியவர்களுமான, **कयोश्चित् प्रहर्त्रोः**-இரு வீரர்களுக்கு, **अमर्त्यभावेऽपि**-தேவர்களாக இருந்த நிலையிலும்கூட, **विवादः** - வாய்ச் சண்டையானது, **आसीत्** - உண்டாயிற்று.

(க-து) இரண்டு வீரர்கள் ஒருவரோடொருவர் போரிட்டு ஒரே சமயத்தில் உயிர் நீத்துச் சுவர்க்கம் சென்றனர். அங்கு ஒரே அப்ஸரஸை விரும்பியதால் தேவர்களானபின்பும் அவ்வீரர் இருவரும் சண்டையிட்டனர். பூமியில் தொடங்கிய சண்டை தேவலோகம் சென்றும் நின்றபாடில்லை.

இது மல்லிநாதர், நாராயணர், அருணகிரிநாதர் முதலிய உரையாசிரியர் கூறும் உரையாகும்.

"அக்னிபுராணம் கூறியபடி அப்ஸரஸ்திரீகள் வீரர்களை வரிக்கின்றனரேயன்றி, வீரர்கள் அப்ஸரஸை வரிப்பதில்லையாகையால், **एकाप्सरःप्रार्थितयोः**' - என்பதற்கு, 'ஒரே

அப்ஸரஸினிடம் விருப்புக்கொண்ட' என்ற பொருள் தகாது" என்பர் சிலர். யுத்தத்தில் மாணமடைபவர்களின் பெருமையைக் கூறவந்த அக்னிபுராணசுலோகம், 'ஆயிரம், அப்ஸரஸ்திரீகள் வீரனைக் கணவனாக வரிக்கின்றனர்' என்று கூறியதே ஒழிய, தனக்குப் பிடித்தமானவர்களைத் தேர்ந்து எடுக்கும் உரிமை அவ் வீரனுக்கு இல்லை எனக்கூற வந்ததன்று; ஆகையால் ஒரே அப்ஸரஸினிடம் இருவர் விருப்புக் கொண்டதாகக் கூறியதில் தவறு ஒன்றுமில்லை. 'ஒரே அப்ஸரஸினால் இருவீரர்கள் வேண்டப் பட்டனர்' என்று கூறுவது கிராம்யமாகும்.

व्यूहावुभौ तावितरेतरस्माद्भङ्गं जयं चापतुरव्यवस्थम् ।
पश्चात्पुरोमारुतयोः प्रवृद्धौ पर्यायवृत्त्येव महार्णवोर्मी ॥ ५४ ॥

**पश्चात्पुरोमारुतयोः** - பின்னும் முன்னும் நோக்கி வீசுகின்ற காற்றின், **पर्यायवृत्त्या**-மாறிவரும் நிலையால், **प्रवृद्धौ**-எழுகின்ற, **महार्णव ऊर्मी इव** - ஸமுத்திரத்தின் அலைகள் போல், **तौ** - அந்த, **उभौ** - இரண்டு, **व्यूहौ** - சேனையின் ஸமூஹங்கள், **इतरेतरस्मात्** - ஒன்றினின்று மற்றொன்று, **अव्यवस्थं** - நிலையற்ற, **भङ्गं** - தோல்வியையும், **जयं च** - வெற்றியையும், **(पर्यायवृत्त्या)** - மாறிமாறி, **आपतुः** - அடைந்தன.

(கூ-து) முன்பின்னாக வீசுகின்ற காற்றின் வேகத்தினால் சமுத்திரத்தில் அலைகள் எழுவதும் விழுவதுமாக இருப்பது போல் சேனைகள் வெற்றியையும் தோல்வியையும் மாறிமாறிப் பெற்றன.

சேனைகளுக்கு அலைகளும், வெற்றிக்கு அலைகளின் எழுச்சியும், தோல்விக்கு வீழ்ச்சியும் உபமானம்.

परेण भग्नेऽपि बले महौजा ययावजः प्रत्यरिसैन्यमेव ।
धूमो निवर्त्येत समीरणेन यतस्तु कक्षस्तत एव वह्निः ॥ ५५ ॥

**परेण** - சத்ருவினால், **बले** - தனது சேனை, **भग्नेऽपि** - முறியடிக்கப்பட்ட பொழுதும், **महौजाः** - மிகவும் பராக்ரம

முடைய, अजः-அஜன், अरिसैन्यं-प्रत्येव-சத்ருவின் சேனையை நோக்கியே, ययौ - சென்றான். समीरणेन - காற்றினால், धूमः- புகை, निवर्त्येत -(எரியுமிடத்திலிருந்து) திருப்பப் படலாம் - वह्निस्तु - அக்னியோ, यतः - எந்த இடத்தில், कक्षः - உலர்ந்த புல் இருக்கின்றதோ, ततः एव- அங்கேயே, (भवेत्)- இருக்கும்.

(க-து) புகையைக் காற்றடித்துக் கொண்டு போவதுபோல் அவனுடைய வீரர்கள் சத்ருக்களால் துரத்தப்பட, அஜன் தனியே யிருந்தும், நெருப்பு, காடுகளில் காய்ந்தபுற்களை எரிப்பது போல், அவ்வரசர்களின் சேனையை அழித்துக் கொண்டிருந்தான். புகை யைக்காற்றுத் தள்ளுமேயன்றி நெருப்பைத் தள்ளாது. பின் காற்றின் உதவி கொண்டு நெருப்பு மேன் மேலும் ஜ்வலிக்கும்.

रथी निषङ्गी कवची धनुष्मान् दृप्तः स राजन्यकमेकवीरः ।
निवारयामास महावराहः कल्पक्षयोद्वृत्तमिवार्णवाम्भः ॥ ५६ ॥

रथी-தேரை உடையவனும், निषङ्गी - அம்புத்தூணியை யுடையவனும், कवची கவசம் தரித்தவனும், धनुष्मान्-வில்லை யுடையவனும், दृप्तः - (யுத்தம் செய்வதில்) கர்வம் கொண்ட வனும், एकवीरः - அஸஹாய சூரனுமான, सः - அஜன், राजन्यकं - ராஜகுமாரர்களின் கூட்டத்தை, महावराहः- பெரும் வாராஹ அவதாரம் எடுத்தவிஷ்ணு, कल्पक्षयोद्वृत्तम्-கல்பாந்த காலத்தில் கரைபுரண்ட, अर्णवांभः इव - ஸமுத்ர ஜலத்தைத் தடுத்ததுபோல, निवारयामास - தடுத்தான்.

(க-து) அஜன் தனியே யிருந்து அப்பெரும் படையுடன் சண்டை செய்து கொண்டிருந்தான.

स दक्षिणं तूणमुखे न वामं व्यापारयन् हस्तमलक्ष्यताजौ ।
आकर्णकृष्टा सकृदस्य योद्धुर्मौर्वीव बाणान् सुषुवे रिपुघ्नान् ॥ ५७ ॥

सः - அவ்வஜன், आजौ - யுத்தத்தில், दक्षिणं हस्तं-வலது கையையும், वामं (च) - இடது கையையும், तूणमुखे-அம்புத்

தூணியில், व्यापारयन्-உபயோகிப்பவனுக, न अलक्ष्यत-காணப் படவில்லை. सकृत् - ஒரேதடவை, आकर्णकृष्टा - காதுவரை இழுக்கப்பட்டதும், योद्धुः - சண்டை செய்கின்ற, अस्य - அவனுடையதுமான, मौर्वी வில்லின்நாண், रिपुघ्नान्-சத்ருக் களைக் கொல்கின்ற, बाणान् - அம்புகளை, सुषुवे इव - ஈன்றது போலுமிருந்தது.

(க து) அஜன் வெகு வேகமாகப் பாணங்களைப்பிரயோகித்துக் கொணடிருந்ததால் அம்புகளைக் கூண்டிலிருந்தெடுப்பதும் விடுப்பதும் புலப்படவில்லை, அவனுடையகைகள் வேலைசெய்வதே கண்களுக்குப் புலனுகவில்லை. அவனிழுத்த நாண்கயிறு அஜன்காதருகில் நிலையாக நிற்பது போல் புலப்பட்டது.

அவனுடைய உதவியின்றி அதுவே பாணங்களைப் பிரயோகிப்பது போல் காணப்பட்டது.

वामं (च) என்பதில் चकारம், பொருளின் தன்மையைக் கருதி வருவித்துக் கொள்ளப் பட்டது; அஜனுடைய பாணங் களில், ஒவ்வொன்றும் பகைவர்களைத் தவருது கொன்றதால், 'रिपुघ्नान्' என அடைமொழி கொடுக்கப் பட்டுள்ளது. இதனுல் அஜனது பராக்கிரமம் புலனுகும்.

இச்சுலோகத்தின் முதற்பாதிக்கு மல்லிநாதர், 'அஜன் தனது வலதுகையை அம்புக்கூண்டின் வாயில் அழகாக உபயோகப்படுத்திக் கொண்டிருப்பவனுகக் காணப் பட்டான்' என்பர்.

स रोषदष्टाधिकलोहितोष्ठैर्व्यक्तोर्ध्वरेखा भ्रुकुटीर्वहद्भिः ।
तस्तार गां भल्लनिकृत्तकण्ठैर्हुंकारगर्भैर्द्विषतां शिरोभिः ॥ ९८ ॥

रोषदष्टाधिकलोहितोष्ठैः - கோபத்துடன் கடிக்கப்பட்டு மிகச்சிவந்த உதடுகளையுடையவையும், व्यक्तोर्ध्वरेखाः - நன்கு புலப்படுகின்ற நேர்க் கோடுகளையுடைய, भ्रुकुटीः - புருவ நெரிப்புகளை, वहद्भिः - உடையவைகளும், भल्लनिकृत्तकण्ठैः - 'பல்ல'ங்களினுல் அறுக்கப்பட்ட கழுத்தை யுடையவையும்,

**हुंकारगर्भैः** - 'ஹூம்' என்ற சத்தமுடையவைகளுமான, **द्विषतां** - சத்ருக்களின், **शिरोभिः** - தலைகளால், **सः** - அவன், **गां** - பூமியை, **तस्तार** - மூடினான்.

(க-து) சத்ருக்களின் தலைகளை வெட்டித் தரையை மூடினான். உயிருள்ள சிறிது நேரம்வரை அத்தலைகள் கோபத்துடன் உதட்டைக் கடித்துப் புருவத்தை நெரித்து ஹூம்' என உறுமின. புருவத்தை நெரித்ததால் நெற்றியில் வரிகள் புலப்பட்டன.

பல்லம்-பிறைச்சந்திரன்போல் முனையுள்ள பாணங்கள்.

सर्वैर्बलाङ्गैर्द्विरदप्रधानैः सर्वायुधैः कङ्कटभेदिभिश्च ।
सर्वप्रयत्नेन च भूमिपालास्तस्मिन् प्रजह्रुर्युधि सर्व एव ॥ ५९ ॥

**द्विरदप्रधानैः** - யானைகளை முக்யமாக உடைய, **सर्वैः** - எல்லா, **बलांगैः** - சேனைகளின் பிரிவுகளாலும், **कङ्कटभेदिभिः** - கவசத்தைப் பிளக்கின்ற, **सर्वायुधैः** - எல்லாவகை ஆயுதங்களாலும், **सर्वप्रयत्नेन च** - எல்லாவகையான முயற்சியினாலும் (முழு பலத்துடனும்), **भूमिपालाः सर्वे एव** - அரசர்கள் எல்லோருமே, **युधि** - யுத்தத்தில், **तस्मिन्** - அவனை, **प्रजह्रुः** - அடித்தார்கள்.

(க-து) அரசர்கள் தங்கள் சக்தி முழுவதையும் உபயோகித்துப் பலவகையிலும் அவனை அடித்தனர்.

அவ்வரசர்கள் எல்லோரும் அஜனை வென்றேதீருவதென முன்பே உறுதிகொண்டுள்ளதால், பலர் சேர்ந்து ஒருவனை எதிர்ப்பது அதர்மம் என்பதையும் மதியாது, அவர்கள் தங்களது நால்வகைச் சேனைகளையும், எல்லாவகையான ஆயுதங்களையும் உபயோகித்து முழு பலத்துடன் அவனைத் தாக்கினர்.

யானைகள் யுத்தத்தில் அதிகம் உதவிசெய்வதாலும், மற்றைப் படைகளையும் அழிக்கவல்லனவாகையாலும் **द्विरद-प्रधानैः** என விசேஷணம் தரப்பட்டது. மற்றைவகைப்படைகளைக்காட்டிலும் யானைப்படை உயர்ந்தது என்பர் காமந்தகர்.

யானைகள் செய்யும் வேலைகளைப் பற்றி அவர் வருமாறு கூறுகின்றார்.

' प्रयाणे पूर्वयायित्वं वनदुर्गप्रवेशनम् ।
अकृतानां च मार्गाणां तीर्थानां च प्रवर्तनम् ॥
तोयावतारसन्तारौ एकाङ्गविजयस्तथा ।
अभिन्नानामनीकानां भेदनं भिन्नसंग्रहः ॥
बिभीषिकाभिघातश्च प्राकारद्वारभञ्जनम् ।
कोशनीतिर्भयत्राणं हस्तिकर्म प्रचक्षते ॥
एकोऽपि वारणपतिर्द्विषतामनीकं
 व्यक्तं निहन्ति मदसत्त्वगुणोपपन्नः ॥
नागेषु हि क्षितिभृतां विजयो निबद्धः
 तस्माद् गजाधिकबलो नृपतिः सदा स्यात् ॥'

सोऽस्त्रव्रजैश्छन्नरथः परेषां ध्वजाग्रमात्रेण बभूव लक्ष्यः ।
नीहारमग्नो दिनपूर्वभागः किञ्चित्प्रकाशेन विवस्वतेव ॥ ६० ॥

**परेषां**-சத்ருக்களின், **अस्त्रव्रजैः**-அஸ்த்ரங்களின் கூட்டங்களினால், **छन्नरथः**-மறைக்கப்பட்ட ரதமுடைய, **सः**-அவன், **नीहारमग्नः** பனியில் மூழ்கிய, **दिनपूर्वभागः**-காலை நேரம், **किंचित्प्रकाशेन**-சிறிது பிரகாசமுடைய, **विवस्वता इव**-சூரியனால் (அறியப்படுவது)போல், **ध्वजाग्रमात्रेण**-கொடிமரத்தின் நுனியால் மாத்திரமே, **लक्ष्यः बभूव** - காணத்தகுந்தவனாக ஆனான்.

(க-து) சத்ருக்கள் பலரும் ஒன்று சேர்ந்து அஜன் மேல் பாணங்களைப் பொழிந்து அவனது ரதம் வேறு வீரர்களுக்குப் புலப்படாதவாறு மறைத்தனர். அஜன் உள்ளானென்பது அவனது கொடி மரத்தின் உச்சியைக் கண்டு ஊஹிக்கும்படி இருந்தது. காலை வேளையில் பனியினால் மூடிக்கிடக்கும் பொழுது சிறிது வெளிச்சத்துடன் இருக்கின்ற சூரியனால் பொழுது விடிந்ததென்பது புலப்படும்.

அதுபோல், துவஜத்தின் நுனியைக்கண்டு அஜனை அறிந்தனர்; 'नीहारमग्ने दिनपूर्वभागे किञ्चित्प्रकाशेन यथा

**विवस्वान्**' என்றபாடம் சிறந்தது என்பர் ஓர் உரையாசிரியர்.

प्रियंवदात्प्राप्तमसौ कुमारः प्रायुङ्क्त राजस्वधिराजसूनुः ।
गान्धर्वमस्त्रं कुसुमास्त्रकान्तः प्रस्वापनं स्वप्ननिवृत्तलौल्यः ॥ ६१ ॥

**अधिराजसूनुः** - சக்ரவாத்தியின் புத்திரனும், **कुसुमास्त्रकान्तः** - புஷ்பபாணமுடைய மன்மதன்போல் அழகானவனும், **स्वप्न निवृत्तलौल्यः** - அயர்வதில் ஆசையற்றவனுமான, **असौ कुमारः** - அஜன், **प्रियंवदात्** ப்ரியம்வதன் என்பவனிடமிருந்து, **प्राप्तं** - அடையப்பெற்றதும், **गान्धर्वं** - கந்தர்வனைத் தேவதையாக உடையதும், **प्रस्वापनं** - தூக்கத்தை விளைவிப்பதுமான, **अस्त्रं** - (ஸம்மோஹநம் என்ற) அஸ்திரத்தை, **राजसु** - அரசர்களின்மேல், **प्रायुङ्क्त** - பிரயோகித்தான்.

(க-து) அஜன், தான் பிரியம்வதன் என்ற கந்தர்வனிடமிருந்து பெற்ற ஸம்மோஹநாஸ்திரத்தை அரசர்கள்மேல் பிரயோகித்தான்.

ஸம்மோஹநாஸ்திரத்தைப் பற்றிய வரலாறு ஐந்தாம் ஸர்க்கத்தில் கூறப்பட்டுள்ளதைக் கவனிக்க:

அஜன், சக்ரவர்த்தியின் மகனுதலால், தன்னை எதிர்த்த சிற்றரசர்களையும் தன் பிரஜைகளாகக் கருதினன் என்பது தோற்ற **अधिराजसुनुः** என்றூர். அதனுல்தான் அவன், அவர்கள்மீது கடுமையான அஸ்திரங்களைப் பிரயோகிக்காது விட்டான். புஷ்ப பாணமுள்ள மன்மதனைப்போல் ஹிம்ஸையற்ற அஸ்திரத்தை உபயோகிக்கும் தன்மையுள்ளவன் என்பதைக் காட்ட அஜன், மன்மதனுடன் ஒப்பிடப்பட்டான். மற்றவர்களைத் தூங்கும்படி செய்த அஜன, அநத அஸ்த்ரத்திற்கு வசப் பட்டவனல்லன் என்பதைக் குறிக்க, **स्वप्न-निवृत्तलौल्यः**-எனப்பட்டது. தூக்கத்திலும் கூடசஞ்சல மற்றவன், ஜாக்ரதை யுடையவன், காரியத்திற்கு ஏற்றகாலமுணர்ந்தவன் என்றும் இச்சொல்லிற்குப் பொருள் கொள்ளலாம். '**यथाकालप्रबोधिनाम्**' என்று கூறியுள்ளதையும் காண்க.

ततो धनुष्कर्षणमूढहस्तमेकांसपर्यस्तशिरस्त्रजालम् ।
तस्थौ ध्वजस्तम्भनिषण्णदेहं निद्राविधेयं नरदेवसैन्यम् ॥ ६२ ॥

**ततः** - பிறகு, **नरदेवसैन्यं** - அரசர்களின்ஸேனை, **निद्राविधेयं** - தூக்கத்திற்கு வசப்பட்டதாய், **धनुष्कर्षण मूढहस्तं** - வில்லையிழுப்பதில் சோர்ந்த கையையுடையதாகவும், **एकांस-पर्यस्त-शिरस्त्र-जालम्** - ஒருதோளில் நழுவிய தலைமுடிகளையுடையதாகவும், **ध्वजस्तंभ-निषण्णदेहं**-கொடிமரத்தில் சாய்ந்த தேகமுடையதாகவும், **तस्थौ** - இருந்தது.

(க-து) "அஸ்திரத்தின் பலத்திற்கு வசப்பட்ட வீரர்கள் நாண்கயிற்றை இழுக்க வில்லை. தூக்கத்தினால் தலை சாயவும், தலைப்பாகை அவர்கள்தோளில் நழுவியது. துவஜ ஸ்தம்பத்தில் சாய்ந்து கொண்டுத் தூங்கினார்கள்.

ततः प्रियोपात्तरसेऽधरोष्ठे निवेश्य दध्मौ जलजं कुमारः ।
तेन स्वहस्तार्जितमेकवीरः पिबन् यशो मूर्तमिवाबभासे ॥ ६३ ॥

**ततः** - பிறகு, **कुमारः** - அஜன், **प्रियापोत्त रसे** - பிரியையினால் அனுபவிக்கப்படவேண்டிய இனிமையுள்ள, **अधरोष्ठे**- உதட்டில், **जलजं** சங்கை, **निवेश्य**-வைத்து, **दध्मौ**-ஊதினான்; **एकवीरः** - ஒப்பற்ற அவ்வீரன், **तेन** - அதனால், **स्वहस्तार्जितं** - தன் கையினால் சம்பாதிக்கப்பெற்ற, **मूर्तं** - உருவுடன் கூடிய, **शुभ्रं** - வெண்மையான, **यशः** (தனது) கீர்த்தியை, **पिबन् इव**- குடித்துக் கொண்டிருப்பவன்போல், **आबभासे** - காணப்பட்டான்.

(க-து) பகைவர்கள் எல்லோரும் தூங்கவும், தனது வெற்றியை அறிவிக்கச் சங்கை எடுத்து ஊதினான். வெண்மையான சங்கை உதட்டில் வைத்து அவன் ஊதிய பொழுது, ஒப்பற்ற அவ்வஜன் பிறர் உதவியின்றித்தான் ஒருவனுக்கே சம்பாதித்த தனது புகழைப்பானம் செய்பவன் போல் காணப்பட்டான் எனக் கவி உத்ப்ரேக்ஷிக்கின்றார்.

शङ्खस्वनाभिज्ञतया निवृत्तास्तं सन्नशत्रुं ददृशुः स्वयोधाः ।
निमीलितानामिव पङ्कजानां मध्ये स्फुरन्तं प्रतिमाशशाङ्कम् ॥ ६४ ॥

**शङ्खस्वनाभिज्ञतया**-சங்கின் ஓசையை அறிந்திருந்ததால், **निवृत्ताः** - திரும்பிய, **स्वयोधाः** - அவனது வீரர்கள், **सन्नशत्रुं**- தூங்குகின்ற சத்ருக்களையுடைய, **तं** - அவனை, **निमीलितानां**- குவிந்த, **पङ्कजानां**-தாமரைப் புஷ்பங்களின், **मध्ये**-நடுவில் **स्फुरन्तं** - பிரகாசிக்கின்ற, **प्रतिमाशशाङ्कं इव** - (நீரிலுள்ள) பிரதிபிம்ப சந்திரனைக் காண்பதுபோல், **ददृशुः** - கண்டனர்.

(க-து) நித்திரை யடைந்து சோபை குன்றியிருக்கும் சத்ருக்கள் நடுவில் இருந்த அஜனை அவனுடைய வீரர்கள் கண்டனர். குவிந்ததாமரைகள் நடுவில் காணப்படும் பிரகாசமான பிரதிபிம்ப சந்திரன்போல், அவன், தூங்கி வழிகின்ற வீரர்கள் நடுவில் ஒளி யுடன் இருந்தான்.

'இது அஜனது சங்கநாதம்' என உணர்ந்து திரும்பிய அவனது வீரர்கள் யுத்தகளத்தில் விழிப்புடனிருக்கின்ற அஜனையும், தூங்குகின்ற பகைவர்களையும் பார்த்தனர். குவிந்ததால் சோபையின்றிக் கிடக்கின்ற தாமரைகளின் நடுவில், பிரதிபலிக்கின்ற சந்திரன் போல் அஜன் காணப் பண்டான். அஜனை, ஆகாயத்திலுள்ள சந்திரனோடு ஒப் பிடாது நீரிலுள்ள பிரதிபிம்ப சந்திரனுடன் ஒப்பிட்டது, பகைவர்களும் அஜனும் ஒரே இடத்தில் இருந்தமைபற்றி. அவ்வாறின்றி ஆகாயத்திலுள்ள சந்திரனுடன் ஒப்பிடின், பகைவர்களுக்கு உபமானமாக வந்துள்ள தாமரைகள் குளத் திலும், அஜனுக்கு உபமானமாகவுள்ள சந்திரன் ஆகாயத் திலும் உள்ளன என்பதால் உபமான உபமேயங்கள் பொருந் தாமற்போம். இவ்வுபமானத்தால் சத்ருக்களின் ஒளியற்ற தன்மையும், வெற்றி காரணமாக அஜனது முகத்திலுள்ள பிரகாசமும் புலனாகும்.

सशोणितैस्तेन शिलीमुखाग्रैर्निक्षेपिताः केतुषु पार्थिवानाम् ।
यशो हृतं संप्रति राघवेण न जीवितं वः कृपयेति वर्णाः ॥ ६५ ॥

'**संप्रति** - இப்பொழுது, **राघवेण** - ரகுவின் புத்ரனான அஜனால், **वः** - உங்களுடைய, **यशः** - கீர்த்தி, **हृतं** - கவரப் பட்டது; **जीवितं** - உயிர், **कृपया** - தயையால், **न हृतं** - கவரப்

படவில்லை', इति - என்று, वर्णाः - எழுத்துக்கள், सशोणितैः- ரத்தத்துடன் கூடிய, शिलीमुखाग्रैः - பாணங்களின் முனைகளால், पार्थिवानां - அரசர்களின், केतुषु - கொடிகளில், निक्षेपिताः - எழுதி வைக்கப்பட்டன.

(கரு) "முன்பு ரகு மகாராஜரும், இப்பொழுது அவர்குமாரரும் உங்களது புகழைக் கவர்ந்தார்கள். தயையினால் உங்களைக் கொல்லவில்லை" என்று இம்மாதிரி வாக்யங்களை, ரத்தத்தில் பாணங்களைத் தோய்த்துத் த்வஜங்களில பணியாளர்கள் எழுதினர்.

स चापकोटीनिहितैकबाहुः शिरस्त्रनिष्कर्षणभिन्नमौलिः ।
ललाटबद्धश्रमवारिबिन्दुर्भीतां प्रियामेत्य वचो बभाषे ॥ ६६ ॥

चापकोटी निहितैकबाहुः - வில்லின் முனையில் வைக்கப்பட்ட ஒரு கையையுடையவனும், शिरस्त्रनिष्कर्षणभिन्नमौलिः- தலைப்பாகையை எடுப்பதால் அவிழ்ந்த கேசமுடையவனும், ललाट बद्ध श्रमवारिबिन्दुः-நெற்றியில் தோன்றிய வியர்வைத் துளிகளை யுடையவனுமான, सः - அவன், भीतां - பயந்த प्रियां - காதலியை, एत्य-அடைந்து, वचः இவ்வார்த்தையை, बभाषे - சொன்னான்.

(க-து) இந்துமதியின் அருகில் வெற்றியுடன் சென்று அவளது அச்சத்தைப் போக்க விரும்பி இவ்வாறு கூறினான்.

इतः परानर्भकहार्यशस्त्रान् वैदर्भि पश्यानुमता मयासि ।
एवंविधेनाहवचेष्टितेन त्वं प्रार्थ्यसे हस्तगता ममैभिः ॥ ६७ ॥

"वैदर्भि-இந்துமதி, इतः-இப்பொழுது(இங்கே), अर्भक-हार्य-शास्त्रान् - குழந்தைகளாலும் அபகரிக்கத் தக்க ஆயுதங்களையுடைய, परान् - சத்ருக்களை, पश्य-பார்; मया-என்னால், अनुमता - அனுமதிக்கப் பட்டவளாக, असि - இருக்கின்றாய்; मम - என்னுடைய, हस्तगता - கையில் இருப்பவளான, त्वं - நீ, एभिः - இவர்களால், एवंविधेन-இத்தகைய, आहव चेष्टितेन- சண்டையின் (வீரச்) செயல்மூலம், प्रार्थ्यसे - அடைய விரும்பப்பட்டாய்!"

(க-து) "இந்துமதி! இதோ தூங்குகின்ற இவ்வீரர்களைப் பார். இவர்கள் கையிலுள்ள ஆயுதத்தை இப்பொழுது சிறு குழந்தை கூடப் பிடுங்கிக் கொள்ள முடியும். இந்தவீரர்கள் தாம், இப்படிப்பட்ட யுத்தத்திஞல் என்னிடமிருந்து உன்னைப்பெற ஆசைப்பட்டனர்! எவ்வளவுபராக்ரமம் தூக்கத்தில் இவர்களுக்கு! தூக்கத்திஞலேயே ஜயிக்க விரும்புகின்றனர் ' போலும்!"

तस्याः प्रतिद्वन्द्विभवाद्विषादात्सद्यो विमुक्तं मुखमाबभासे ।
निःश्वासबाष्पापगमात्प्रपन्नः प्रसादमात्मीयमिवात्मदर्शः ॥ ६८ ॥

**प्रतिद्वन्द्विभवात्** - சத்ருக்களிடமிருந்து உண்டான, **विषादात्** - துக்கத்திலிருந்து, **सद्यः विमुक्तं** - உடனே விடுதலை பெற்ற, **तस्याः** - அவளுடைய, **मुखं** - முகம், **निःश्वास बाष्प-अपगमात्** - மூச்சுக் காற்றின் நீராவி சென்றதிஞல், **आत्मीयं** - தன்னுடைய, **प्रसादं** - தெளிவை, **प्रपन्नः** - அடைந்த, **आत्मदर्शः इव** - கண்ணுடிபோல், **आबभासे** - விளங்கிற்று.

(க-து) கவலை நீங்கிய அவளது முகம், மாசற்ற கண்ணுடி போல் விளங்கியது .

முகத்தைக் கண்ணுடியில் பார்க்கும் பொழுது மூச்சுக் காற்றிலுள்ள ஆவிபட்டுக் கண்ணுடி ஒளிகுன்றுகிறது. நீராவி நீங்கியபின் கண்ணுடி தனக்கு எப்பொழுதுமுள்ள பிரகாசத்தைப் பெறுகின்றது. நீராவி கண்ணுடியின்மேல் க்ஷண நேரமே இருப்பது போல் இந்துமதியின் முகத்திலும் கவலை சிறிது நேரமே இருந்ததென்பதும் உபமானத்தால் பெறப்படும்.

हृष्टापि सा ह्रीविजिता न साक्षाद्वाग्भिः सखीनां प्रियमभ्यनन्दत् ।
स्थली नवाम्भःपृषताभिवृष्टा मयूरकेकाभिरिवाभ्रवृन्दम् ॥ ६९ ॥

**सा** - அவள், **हृष्टा अपि** - (வெற்றியில்) ஸந்தோஷமடைந்தாளாயினும், **ह्रीविजिता** - வெட்கத்திற்கு வசப்பட்டவளாய், **प्रियं** - அன்பனை, **स्वयं** - தானே, **न अभ्यनन्दत्** - கொண்டாடவில்லை; **नवांभः पृषताभिवृष्टा** - புதிய ஜலத்துளிகளால் வர்ஷிக்கப்பட்ட, **स्थली** - பூமியானது, **मयूरकेकाभिः** -

மயில்களின் அகவுதலினால், अभ्रवृन्दं इव - மேகக்கூட்டத்தைக் கொண்டாடுவது போல், सखीनां - தோழிகளின், वाग्भिः - வார்த்தைகளால், प्रियं - கணவனை, अभ्यनन्दत् - புகழ்ந்தாள்.

(க-து) இந்துமதி அஜனுடைய வெற்றியைப் பற்றி மிகமிக மகிழ்ந்தாளாயினும், புகழுரைகளை நேரில்கூறவில்லை. ஏனெனில் அவளை வெட்கம் பேசவிடாது தடுத்தது. நன்கு மழைபெய்து குளிர்ச்சியடைவிக்கப்பட்ட பூமி, மயில்களின் அகவுதலினால் தனது மகிழ்ச்சியை மேகத்திற்குத் தெரிவிப்பது போல்அவள் தனது தோழிகளைக்கொண்டு அஜனைக் கொண்டாடித் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டாள்.

इति शिरसि स वामं पादमाधाय राज्ञा-
मुदवहदनवद्यां तामवद्यादपेतः ।
रथतुरगरजोभिस्तस्य रूक्षालकाग्रा
समरविजयलक्ष्मीः सैव मूर्ता बभूव ॥ ७० ॥

अवद्यात् - குற்றத்தினின்றும், अपेतः - விலகிய, सः - அவன், इति - இவ்வாறு, राज्ञां - அரசர்களின், शिरसि - தலையில், वामं पादं - இடதுகாலை, आधाय - வைத்துவிட்டு, अनवद्यां - குற்றமற்ற, तां - அவளை, उदवहत् - அழைத்துச் சென்றான் (தனக்குரியவளாகச் செய்து கொண்டான்); रथतुरगरजोभिः - ரதம், குதிரை இவை तस्य - அவனுடைய. रथतुरगरजोभिः - ரதம், குதிரை இவைகளின் புழுதியால், रूक्षालकाग्रा - மாசுபடிந்த முன்னெற்றி மயிர்களையுடைய, सा एव - அந்த இந்துமதியே, मूर्ता - உருவுடன் கூடிய, समरविजयलक्ष्मीः - யுத்தத்தின் விஜயலக்ஷ்மியாக, बभूव - இருந்தாள்.

(க-து) இவ்வாறு அஜன் அரசர்களை வென்றபின் உருவுடைய விஜயலக்ஷ்மி போலும் யுத்தப் புழுதிபடிந்துள்ள கூந்தலையுடைய இந்துமதியை அழைத்துக்கொண்டு அயோத்தி நோக்கிச் சென்றான்.

अनवद्यां - என்றும், अवद्यादपेतः - என்றும் கூறியது, இந்துமதிக்கு அஜனே தகுந்தவன் என்பதை உணர்த்த.

प्रथमपरिगतार्थस्तं रघुः संनिवृत्तं
विजयिनमभिनन्द्यश्लाघ्यजायासमेतम् ।
तदुपहितकुटुम्बः शान्तिमार्गोत्सुकोऽभू-
न्न हि सति कुलधुर्ये सूर्यवंश्या गृहाय ॥ ७१ ॥

**प्रथमपरिगतार्थः** - (அஜன் வருவதற்கு) முன்பே விஷயங்களை அறிந்த, **रघुः** - ரகு, **विजयिन**-வெற்றியுடையவனாகவும், **श्लाघ्यजाया समेतं** - சிறந்த மனைவியுடன் கூடியவனாகவும், **सन्निवृत्तं** - திரும்பிய, **तं** - அவனை, **अभिनन्द्य**-கொண்டாடி, **तदुपहितकुटुम्बः**- அவனிடத்தில் ஒப்படைக்கப்பட்ட குடும்பபாரமுடையவனாய், **शान्तिमार्गोत्सुकः** - மோக்ஷ மார்க்கத்தில் பற்றுடையவனாக, **अभूत्**-ஆனான் ; **हि** - ஏனெனில், **कुलधुर्ये** - குலத்தைத்தாங்கக் கூடியபுத்ரன், **सति**-இருக்கும் பொழுது, **सूर्यवंश्याः** - சூர்யவம்சத்து அரசர்கள், **गृहाय** - கிருஹஸ்த தர்மத்தை அனுஷ்டிப்பதன் பொருட்டு, **न भवन्ति** - (வீட்டில்தங்கி) இருப்பதில்லை.

(க-து)· ரகு, தன்மகன் சிறந்த மனைவியுடனிருப்பதையும், அரசாகள் பலரை வெற்றிகொண்டதையும்பற்றி முன்பே தூதுவர்மூலம் கேள்வியுற்றுக் கொண்டாடி, மகனை ராஜ்யத்தை நிர்வஹிக்கத் திறமையுடையவனாக நிச்சயித்து, அரசையும் தன்குடும்பத்தையும் அவனிடம் ஒப்படைத்தபின் மோக்ஷமார்க்கத்தை விரும்பியவனாகக் காடுசெல்ல விருப்பமுற்றான்.

**कुटुंबः** - காப்பாற்றப் படவேண்டிய மனைவி மக்கள் முதலியோர்.

அடுத்த ஸர்க்கத்தில் கூறப்போகின்ற ரகுவின் ராஜ்ய தியாகத்திற்கும், அஜராஜ்ய விருத்தாந்தத்திற்கும் வித்துப் போலுள்ளது இச்சுலோகத்தில் கூறிய பொருள். இதன் விரிவு அடுத்த ஸர்க்கமாகும்.

इति महाकवि श्री कालिदासकृतौ
रघुवंशे महाकाव्ये सप्तमः सर्गः ॥

---

॥ श्रीः ॥

# ॥ रघुवंशः ॥

## अष्टमः सर्गः

अथ तस्य विवाहकौतुकं ललितं बिभ्रत एव पार्थिवः ।
वसुधामपि हस्तगामिनीमकरोदिन्दुमतीमिवापराम् ॥ १ ॥

**अथ** - பிறகு, **पार्थिवः** - அரசன் ரகு, **ललितं** - அழகிய, **विवाहकौतुकं** - விவாஹத்திற்கான மங்களநூலை, **बिभ्रतः एव** - அணிந்துள்ளவனுகவே இருக்கின்ற, **तस्य** - அவ்வஜனுக்கு, **अपरां** - மற்ெருரு, **इन्दुमतीं इव** - இந்துமதி போலுமுள்ள, **वसुधां अपि** - பூமியையும், **हस्तगामिनीं** - கைவசமானவளாக (உரியதாக), **अकरोत्** - செய்தான்.

*(க-து) ரகு, தன்மகன் அஜனுக்கு, மணம் முடிந்தவுடனேயே அரசுரிமையையும் அளித்தான். விவாஹத்தின் போது வலது கையில் மங்களநூலை அணிவிப்பர். மணம் முடிந்த மூன்ருவது, அல்லது எட்டாவது நாளில் அக்கங்கணத்தை நீக்குவர். அவ்வாறு அதை நீக்குவதற்கு முன்பே, அஜனை ரகு, ராஜ்யத்தில் அபிஷேகம் செய் வித்தான்.*

*இந்துமதியின் விவாஹத்தின்போது அவனணிந்த மங்களநூலே, இப்பொழுது பூமிவிவாஹத்திலும் ப்ரதிஸரமாக இருந்ததுபோலும் என்பது, '**बिभ्रत एव**' என்பதனல் விளங்கும். இந்துமதி போல், பூமியும் அஜனை அடைவதில் ஆசையுடையதாக இருந்ததால் பூமி, 'மற்ெருரு இந்துமதி போலுமுள்ள' என விசேஷித்துக் கூறப்பட்டுள்ளது.*

दुरितैरपि कर्तुमात्मसात् प्रयतन्ते नृपसूनवो हि यत् ।
तदुपस्थितमग्रहीदजः पितुराज्ञेति न भोगतृष्णया ॥ २ ॥

**नृपसूनवः** - அரசகுமாரர்கள், **यत्** - எந்த ராஜ்யத்தை, **दुरितैः अपि** - பாவச்செயல்களினாலுங்கூட, **आत्मसात्** - தமதாக, **कर्तुं** - செய்துகொள்ள, **प्रयतन्ते हि** - முயலவேசெய்கின்றனரோ, **उपस्थितं** - தானாக வந்துள்ள, **तत्** - அந்த ராஜ்யத்தை, **अजः** - அஜன், **पितुः** - தந்தையின், **आज्ञा इति** - கட்டளை என்றகாரணத்தினால், **अग्रहीत्**-ஏற்றான்; **भोगतृष्णया**- ராஜ்யஸுகத்திலுள்ள ஆசையினால், **न** - அன்று.

(க-து) உலகத்தில் ராஜகுமாரர்கள் பலரும், அனுகூலமான மனிதர்கள்போல் பாவனை செய்து, விஷம் கொடுத்தல் முதலிய தீசசெயல்களைப் புரிந்தேனும் தந்தை முதலியவர்களைக் கொன்று ராஜ்யத்தைத் தமதாக்கிக் கொள்ள விரும்புகின்றனர். அத்தகைய ராஜ்யம் அஜனுக்குத் தானாகக் கிடைத்திருந்தும், அதைத் தந்தையின் கட்டளை என்பதற்காகவே ஏற்றுக் கொண்டான்; பின் அரசனாக இருந்து இன்பங்களை நுகரவேண்டுமென்ற ஆசையால் அன்று.

இச்சுலோகத்தினால், அஜனுக்குத் தன் தந்தையே அரசராக இருக்கவேண்டுமென விருப்பம் இருந்த தென்பதும், ராஜ்யத்தை அடைவதில் விருப்பில்லை என்பதும் விளங்கும்.

**'दुरितैरपि'** - ராஜபுத்ரர்கள், ராஜ்யத்தைப் பெறும்விருப்பத்தால் தந்தையையும் கொல்வர் என்பதுபற்றிக் காமந்தக நீதிஸாரம் கூறுவது நோக்கத்தக்கது.

राजपुत्रा मदोन्मत्ता गजा इव निरङ्कुशाः ।
भ्रातरं वापि निघ्नन्ति पितरं वाभिमानिनः ॥
राजपुत्रैर्मदोन्मत्तैः प्रार्थ्यमानमितस्ततः ।
दुःखेन रक्ष्यते राज्यं व्याघ्राघ्रातमिवामिषम् ॥
रक्ष्यमाणाः यदि च्छिद्रं कथञ्चित् प्राप्नुवन्ति ते ।
सिंहशावा इव घ्नन्ति रक्षितारमसंशयम् ॥

अनुभूय वसिष्ठसंभृतैः सलिलैस्तेन सहाभिषेचनम् ।
विशदोच्छ्वसितेन मेदिनी कथयामास कृतार्थतामिव ॥ ३ ॥

**मेदिनी** - நிலம், **वसिष्ठसंभृतैः** - வஸிஷ்டரால் ஸித்தஞ் செய்யப்பட்ட, **सलिलैः** - நீரினால், **तेन सह** - அவ்வஜனுடன் கூட, **अभिषेचनम्** - அபிஷேகத்தை, **अनुभूय** - அனுபவித்து, **विशदोच्छ्वसितेन** - தெளிவான ஆவியினால், **कृतार्थतां** - (தன்) விருப்பம் நிறைவேறினமையை, **कथयामास इव** - உரைத்தது போலும் காணப்பட்டது.

(க-து) வஸிஷ்டர் பல புண்யதீர்த்தங்களிலிருந்து ஜலத்தைக் கொண்டுவரச்செய்து அஜனுக்கு அபிஷேகம் செய்வித்தார். அச்சமயத்தில் அவ்வபிஷேக நீரானது தரையிற்பட்டு தெளிவான ஆவி எழுந்தது. இது, பூமி, தனக்கு மனத்திற்குகந்த அரசன் கிடைத்தான் என்ற மகிழ்ச்சியை நெட்டுயிர்ப்பின்மூலம் அறிவிப்பது போலிருந்தது எனக்கவி உத்ப்ரேக்ஷிக்கின்றார்.

தன் நிலைபற்றிக் கவலையுடனிருந்த ஒரு அரசி, அரசனுடன் அபிஷேகம் செய்யப்படின், கவலை நீங்கப்பெற்றவளாய் தனது மகிழ்ச்சியைப் பெருமூச்சின் மூலம் வெளியிடுவது போல், பூமியும் அஜன் அரசனாக வந்ததால் கவலை நீங்கியது என்பது பெறப்படும்.

स बभूव दुरासदः परैर्गुरुणाथर्वविदा कृतक्रियः ।
पवनाग्निसमागमो ह्ययं सहितं ब्रह्म यदस्त्रतेजसा ॥ ४ ॥

**अथर्वविदा** அதர்வவேதமறிந்த, **गुरुणा** - வஸிஷ்டரால், **कृतक्रियः**-செய்யப்பட்ட அபிஷேகத்தை உடைய, **सः** - அந்த அஜன், **परैः** - பகைவர்களால், **दुरासदः** - நெருங்கமுடியாதவனாக, **बभूव**-ஆனான்; **हि**-ஏனெனில், **अस्त्रतेजसा** - (க்ஷத்ரிய) அஸ்த்ர பலத்துடன், **सहितं** - கூடிய, **यत् ब्रह्म** - எந்தபிரம்ம

தேஜஸ் உள்ளதோ, अयं - இது, पवनाग्निसमागमः - காற்று, நெருப்பு இவைகளின் சேர்க்கை ஆகும்.

(க-து) பட்டாபிஷேகம் செய்வதற்கு வேண்டிய முறைகளும் மந்திரங்களும் அதர்வ வேதத்தில் கூறப்பட்டுள்ளன. அவற்றை நன்கு அறிந்த வஸிஷ்டர் அஜனுக்கு அபிஷேகம் செய்து வைத்தார். இம்மந்திரங்களால் அஜனுக்கு பிரம்மபலமும் சேர்ந்தது. அஜன் க்ஷத்திரிய குலத்திற் பிறந்து அஸ்திரவித்தையை முறையே கற்றுத் தேர்ந்தவனுகையால் அவனிடம் க்ஷத்ரிய தேஜஸ்ஸுமிருந்தது.

காற்றும் நெருப்பும் போன்ற க்ஷத்ரியபலமும் பிரம்மபலமும் அவனிடம் சேர்ந்திருந்ததால் அவனைப் பகைவர்கள் நெருங்கவும் கூடவில்லை. க்ஷத்திரியபலத்தினுலேயே அவன் எதிர்க்கமுடியாத நிலையிலிருந்தான்; பிரம்மபலமும் சேர்ந்தபொழுது அவனது பலம் கூறவேண்டாததாயிற்று.

रघुमेव निवृत्तयौवनं तममन्यन्त नवेश्वरं प्रजाः ।
स हि तस्य न केवलां श्रियं प्रतिपेदे सकलान् गुणानपि ॥ ९ ॥

प्रजाः - ஜனங்கள், नवेश्वरं - புதிய அரசனுகிய, तं - அவ்வஜனை, निवृत्तयौवनम्-யௌவனம் திரும்பிய, रघुं एव - ரகுவாகவே, अमन्यन्त - நினைத்தனர்; हि-ஏனெனில், सः - அவ்வஜன், तस्य - அந்த ரகுவினுடைய, श्रियं केवलां - ராஜ்யலக்ஷ்மியை மாத்திரம், न प्रतिपेदे -அடைந்தான் என்பதில்லை; सकलान् - எல்லா, गुणान् अपि - குணங்களையும், प्रतिपेदे - அவன் அடைந்திருந்தான்;

(க-து) அயோத்தியிலிருந்த குடிமக்கள், ரகுவே திரும்பவும் வாலிபப் பருவமடைந்து அஜன் உருவில் வந்துள்ளதாக நினைத்தனர். ஏனெனில் அரசாளுவதில் மட்டுமின்றிக் குணங்களிலும்அஜன் தன் தகப்பனைப் போன்றே சிறந்தவனுக விருந்தான். குணத்திலே வேறுபாடில்லாது வடிவிலே உள்ள வேறுபாட்டை நோக்கியபொழுது ஜனங்கள் அஜனை யௌவனம்பெற்ற ரகுவாக எண்ணினர்.

ரகுவினிடம் வைத்த அன்பை அஜனிடமும் மக்கள் கொண்டனர் என்பது கருத்து. 5-ஆம் ஸர்க்கத்தில் வரதந்து, **'पुत्रं लभस्वात्मगुणानुरूपम्'** எனக்கூறிய ஆசிர்வாதம் நினைவிற் கொள்ளத்தக்கது.

अधिकं शुशुभे शुभंयुना द्वितयेन द्वयमेव संगतम् ।
पदमृद्धमजेन पैतृकं विनयेनास्य नवं च यौवनम् ॥ ६ ॥

**शुभंयुना** - நன்மைவாய்ந்த, **द्वितयेन** - இரண்டு பொருள்களுடன், **संगतं** - சேர்ந்த பொழுது, **द्वयम् एव** - இரண்டு பொருள்கள், **अधिकं** - மிகவும், **शुशुभे** - விளங்கின; (அவை எவை எவை எனின்), **अजेन** - அஜனுடன், **संगतं** - சேர்ந்த, **पैतृकं** - (அவனது) தந்தையினுடைய, **ऋद्धं**-செழித்த, **पदम्**- பதவி (ராஜ்யம்) ஒன்று; (மற்றொன்று), **अस्य**-அவ்வஜனுடைய, **विनयेन**-விநயம் என்ற குணத்துடன், **संगतं**-சேர்ந்த, **नवं यौवनम् च** - (அவனது) புதிய வாலிபப்பருவமுமாம்.

(க-து) சில பொருள்கள் தனித்தனியே இருக்கும் பொழுது சோபையுடனிருப்பினும் வேறொன்றுடன் சேரும்பொழுது கெடுவதுண்டு. அஜனை அடைந்தபின் ராஜ்யம் எவ்வாறிருந்ததெனின், செழிப்புள்ள அவ்விராஜ்யம் அவனுடைய சேர்க்கையால் மேலும் விளக்கம் பெற்றது. காரணம்: அவன் நற்குணமுடையவனாக இருந்தமை;

யௌவனப்பருவமும் விநயமும் சேர்ந்திருப்பதில்லை. வாலிபர்கள் விநயமுடையோராக இருப்பது அரிது; ஆனால் அஜன், யௌவனமுடையவனாயினும் விநயத்துடனிருந்தான்; அவனது யௌவனப்பருவம் விநயத்துடன் சேர்ந்தபொழுது மிகவிளங்கியது. ஆகவே, ராஜ்யம் அஜனைச் சேர்ந்தும், அஜனுடைய யௌவனம் விநய குணத்தைச் சேர்ந்தும் சோபையுடனிருந்தன.

ராஜ்யம், யௌவனம் என்ற இரண்டு பொருள்களும், அஜன், விநயம் என்ற இரண்டு பொருள்களுடன் சேர்ந்த

பொழுது விளங்கின என்பது கருத்து. இவ்வளவு பெரிய ராஜ்யமும் யௌவனப் பருவமும் இருக்கும் பொழுது, அஜனைத்தவிர வேறுளவர், கர்வமின்றி விநயத்துடன் இருக்க முடியும் என்பது தொனி.

இங்குக் கூறப்பட்ட விநயம் புலனடக்கமாகும்:

'विनयो हीन्द्रियजयः........ ।'

'आत्मानं प्रथमं राजा विनयेनोपपादयेत् ।
परां विनीतः समुपैति सेव्यताम् महीपतीनां विनयो विभूषणम् ।
प्रवृत्तदानो मृदुसञ्चरत्करो करीव भद्रो विनयेन शोभते ॥ என விநயத்தைக் காமந்தகம் புகழ்ந்து கூறும்.

सदयं बुभुजे महाभुजः सहसोद्वेगमियं व्रजेदिति ।
अचिरोपनतां स मेदिनीं नवपाणिग्रहणां वधूमिव ॥ ७ ॥

**महाभुजः** - பெரிய புஜங்களையுடைய, **सः** - அவ்வஜன், **अचिरोपनतां** - சமீபத்தில் கிடைத்துள்ள, **मेदिनीं** பூமியை, '**सहसा**-பலத்தை உபயோகிப்பதனால், **इयं**-இந்த பூமி, **उद्वेगं**-வெறுப்பை, **व्रजेत्** - அடையும்', **इति**-என்ற காரணத்தினால், **नवपाणिग्रहणां**-புதிதாக மணந்த, **वधूं इव** - பெண்ணை (நடத்துவது) போல, **सदयं** - கருணையுடன், **बुभुजे** -அனுபவித்தான்.

(க-து) புதிதாக மணந்துகொண்டு வீட்டிற்கு அழைத்து வரப் பெற்ற பெண்ணைக் கணவன் வெறுப்பு உண்டாகாத வகையில் அன்புடன் நடத்துவது போல், அஜன் தான் அரசனானதும், குடிமக்களை வருத்தாது அன்புடன் காத்துப் பூமியை அனுபவித்தான்.

இதுமுதல் மூன்று சுலோகங்கள், **लब्धप्रशमन**-ம் என நீதி சாஸ்திரகாரர்கள் கூறும் முறையை அஜன் கைக்கொண்டு, அடைந்தபயனைத் தெரிவிக்கின்றன. கிடைத்த ராஜ்யத்தைப் பாதுகாத்தலை, **लब्धप्रशमन**-ம் என்பர். **रक्षा पौरजनस्य, देश**

नगरग्रामेषु गुप्तिः तथा, योधानामपि संग्रहश्च, तुल्यया मान-व्यवस्थापनम्। साम्यं लिंगिषु, दान, वृत्तिकरणं, त्यागः, समा-नेऽर्चनम् कार्याण्येव महीभुजां प्रशमनान्येतानि राज्ये नवे' என்பது, ஓர் அரசன் தான் பெற்ற அரசை நிலைநிறுத்துவ தற்காகச் செய்யவேண்டியவற்றைத் தொகுத்துக் கூறும்.

अहमेव मतो महीपतेरिति सर्वः प्रकृतिष्वचिन्तयत्।
उदधेरिव निम्नगाशतेष्वभवन्नास्य विमानना क्वचित् ॥ ८ ॥

प्रकृतिषु - ஜனங்களில், सर्वः - எல்லோரும், "अहम् एव - நானே, महीपतेः - அரசனுக்கு, मतः - பிரியமானவன்", इति - என்று, अचिन्तयत् - நினைத்தனர். उदधेः - சமுத்திரத்திற்கு, निम्नगाशतेषु इव - நூற்றுக்கணக்கான நதிகளிடத்தும் (பக்ஷபாதமின்மை) போல, क्वचित् (अपि) - எவரிடத்திலும், विमानना - அவமதிப்பான எண்ணம், अस्य - அஜனுக்கு, न अभवत् - இல்லை.

(க-து) ஸமுத்திரத்தில் பெரியநதிகளும் கலக்கின்றன; சிறிய நதிகளும் போய்ச் சேருகின்றன. அஜன் தன் குடிகளிடத்தில் சிறிதும் பக்ஷபாதமின்றி, எல்லோரையும் ஒன்றாக மதித்து வந்தான். அவ்வாறு மதிக்கப் பட்டதால் அவனுடைய குடிகளுள் ஒவ்வொருவனும் தான் ஒருவனே அஜனுக்கு வேண்டியவன் என நினைத்தான்.

न खरो न च भूयसा मृदुः पवमानः पृथिवीरुहानिव।
स पुरस्कृतमध्यमक्रमो नमयामास नृपाननुद्धरन् ॥ ९ ॥

सः - அவ்வரசன், भूयसा - மிக, खरः - கடுமையுள்ளவனாய், न - இல்லை; (भूयसा - மிக), मृदुः च - மென்மையான குணமுடையவனாகவும், न - இல்லை. पुरस्कृत मध्यमक्रमः - கைக்கொள்ளப்பட்ட நடுவழியையுடையவனாக, पवमानः - காற்று, पृथिवीरुहान् इव - மரங்களை (வளைப்பது) போல,

**नृपान्** - அரசர்களை, **अनुद्धरन्** - (பதவியினின்றும்) நீக்காமலேயே, **नमयामास** - வணங்கச் செய்தான்.

(க-து) அதிக வேகமாகவும் மிக மந்தமாகவும் இல்லாதகாற்று, மரங்களைக் கீழே வீழ்த்தாமல் அவைகளை வளையச் செய்யும். அதைப் போல அஜன், மிக்க கடுமையாக நடந்துகொண்டு, அரசர்களைப் பதவிகளிலிருந்து நீக்கவுமில்லை. அன்றி, மிக்ககருணை காட்டி அவ்வரசர் தன்னை மீறும்படி செய்யவுமில்லை. அவர்களுக்குத் தன்னிடம் பயமும் மரியாதையும் இருக்கும்படி கடுமை, மென்மை என்ற இரண்டிற்கும் இடையிலுள்ள ஒரு முறையைப் பற்றி நடந்து வந்தான்.

अथ वीक्ष्य रघुः प्रतिष्ठितं प्रकृतिष्वात्मजमात्मवत्तया ।
विषयेषु विनाशधर्मसु त्रिदिवस्थेष्वपि निःस्पृहोऽभवत् ॥ १० ॥

**अथ**-பிறகு, **रघुः**-ரகு, **आत्मजं**-புத்திரனை, **आत्मवत्तया** - மன உறுதியுடையவனாயிருத்தலால், **प्रकृतिषु**-குடிகளிடத்தில், **प्रतिष्ठितं**-நிலைபெற்றவனாக, **वीक्ष्य**-அறிந்து, **विनाशधर्मसु**-அழிவை இயல்பாக உடைய, **त्रिदिवस्थेषु** - சுவர்க்கத்திலுள்ள, **विषयेषु अपि** - பொருள்களிலும், **निः स्पृहः** - ஆசையற்றவனாக, **अभवत्** - ஆனான்.

(க-து) அரசனுடைய முதற்கடமை தன் குடிகள் சிறந்த ஆட்சியைப் பெற்றுச் சுகமாக விருக்கின்றனரா எனக் கவனிப்பதே. ரகு, மன உறுதியுள்ள அஜனது ஆட்சியில் குடிகள் சுகமாக விருக்கின்றனர் எனவும், ஜனங்களின் மனத்தில் அவன் அன்பினால் இடம் பெற்றுள்ளான் எனவும் அறிந்து கொண்டான்.

சுவர்க்க சுகத்தைக் காட்டிலும் அவன் அதிகம் விரும்பியது ஜனங்களின் நலம். பிரஜைகள் க்ஷேமத்துடன் இருப்பதைக் கண்டபொழுது, அழியும்தன்மையுள்ள ஸ்வர்க்க லோகத்திலும் அவன இச்சை கொள்ளவில்லை.

गुणवत्सुतरोपितश्रियः परिणामे हि दिलीपवंशजाः ।
पदवीं तरुवल्कवाससां प्रयताः संयमिनां प्रपेदिरे ॥ ११ ॥

**दिलीप-वंशजाः** - திலீபவம்சத்தில் பிறந்தோர், **परिणामे** - முதிர்ந்த பருவத்தில், **गुणवत्सुत-रोपित श्रियः** - நற்குணங்களையுடைய பிள்ளையினிடம் ஒப்புவிக்கப்பட்ட ராஜ்யத்தை உடையவர்களாகவும், **प्रयताः** - புலனடக்க முள்ளவராகவும் இருந்துகொண்டு, **तरुवल्क-वाससां** மரவுரிகளை ஆடைகளாக உடைய, **संयमिनां** முனிவர்களின், **पदवीं** - வழியை, **प्रपेदिरे हि** - அடைந்தனர்.

(க-து) இவ்வாறு ரகு எண்ணியதற்குக்காரணமுள்ளது. திலீப வம்சத்தினர் முதிர்ந்த பருவத்தில், ஆட்சி செய்யக்கூடிய தகுந்த புதல்வரிடம் ராஜ்யத்தை ஒப்படைத்த பின், மரவுரியணிந்து புலன்களையடக்கித் தவஞ்செய்யப் புகுவர். அதனல் ரகுவும் காடுசென்று முனிவரின் வாழ்க்கையைமேற்கொள்ள விரும்பினன்.

तमरण्यसमाश्रयोन्मुखं शिरसा वेष्टनशोभिना सुतः ।
पितरं प्रणिपत्य पादयोरपरित्यागमयाचतात्मनः ॥ १२ ॥

**अरण्य-समाश्रय-उन्मुखं** - காட்டை அடைவதில் நோக்குள்ள, **पितरं**-தந்தையாகிய, **तं** - அந்த ரகுவை, **सुतः**-புதல்வன் அஜன், **वेष्टनशोभिना**-தலைப்பாகையினல் அழகிய, **शिरसा**-தலையினல், **पादयोः**-பாதங்களில், **प्रणिपत्य** - வணங்கி, **आत्मनः**-**अपरित्यागं** - தன்னை விட்டு நீங்காமையை, **अयाचत** - வேண்டினன்.

(க-து) அஜன், தன்தந்தை ரகு, தன்னையும் ராஜ்யத்தையும் விட்டுக்காட்டுக்குச் செல்லத் தீர்மானித்துள்ளதை அறிந்து மனங்கலங்கினன். அதனல் தந்தையை வணங்கித் தன்னை விட்டுச் செல்லாமலிருக்கும்படி வேண்டினன்.

பெரியோர்களை வணங்கும் பொழுது வணங்குபவர்களின் கேசம் அவர்களது பாதத்தில் படாது இருக்க வேண்டுமாதலால், அஜன் தன் தலையில் தலைப்பாகை அணிந்திருந்தான் என்பர் ஓர் உரையாசிரியர்.

रघुरश्रुमुखस्य तस्य तत् कृतवानीप्सितमात्मजप्रियः ।
न तु सर्प इव त्वचं पुनः प्रतिपेदे व्यपवर्जितां श्रियम् ॥ १३ ॥

**आत्मजप्रियः** - புத்திரனிடம் அன்புகொண்ட, **रघुः** - ரகு, **अश्रुमुखस्य** - கண்ணீரை முகத்திலுடைய, **तस्य** - அவ்வஜனுடைய, **तत्** - (அவனைப் பிரிந்து செல்லாமை என்ற) அந்த, **ईप्सितं** - விருப்பத்தை, **कृतवान्** - செய்தான். **किंतु** - ஆனால், **सर्पः** - பாம்பு, **त्वचं इव** - (உரித்த) தோலை(மறுபடியும் ஏற்காதது)போல, **व्यपवर्जितां**-விடப்பட்ட, **श्रियं** ராஜ்யத்தை, **पुनः** - மறுபடியும், **न प्रतिपेदे** - ஏற்கவில்லை.

(க-து) ரகு, அஜனிடம்பேரன்புகொண்டவன்; அதனால் அஜன் கண்ணீர் விட்டுத் தன்னைக் காட்டிற்குப் போக வேண்டாமென்று வேண்டிய பொழுது, ரகுவினால் அவ்வேண்டுகோளை மறுக்க இயலவில்லை. அவனது விருப்பிற்கிணங்கக் காட்டிற்குச் செல்லாமல் அஜனுடனேயிருந்தான். ஆனால், பாம்பு ஒருமுறை உரித்த தோலைத் திரும்ப ஏற்காதது போல, அஜனுக்கு அளித்த ராஜ்யத்தைத் திரும்பவும் ஏற்று அரசுபுரியச் சம்மதிக்கவில்லை.

சட்டையை உரித்த பின்பே ஸர்ப்பத்திற்கு மனநிம்மதியும் பளப்பளப்பும் உண்டாவது போல், ரகுவிற்கும் அரசைத் துறந்தபின்பே மனத்தில் சாந்தியும், விசேஷ சோபையும் உண்டாயின என்பது உபமானத்தால் பெறப்படும்.

स किलाश्रममन्त्यमाश्रितो निवसन्नावसथे पुराद्बहिः ।
समुपास्यत पुत्रभोग्यया स्नुषयेवाविकृतेन्द्रियः श्रिया ॥ १४ ॥

**सः किल** - அந்த ரகு, **अन्त्यं आश्रमं** - கடைசியான ஆசிரமத்தை, **आश्रितः** - அடைந்தவனாக, **पुरात्** - பட்டணத்திற்கு, **बहिः** - வெளியேயுள்ள, **आवसथे** - இடத்தில், **निवसन्** - வஸித்துக்கொண்டு, **अविकृत-इन्द्रियः**-கலங்காத புலன்

களையுடையவனாக, स्नुषया इव-நாட்டுப் பெண்ணைப்போன்று, पुत्रभोग्यया - புதல்வனால் அனுபவிக்கத் தகுந்த, श्रिया-ராஜ்ய ஐசுவர்யத்தினால், समुपास्यत - உபசரிக்கப்பட்டான்.

(க-து). ஆச்ரமம் நான்கனுள் கடைசியான ஸந்யாஸ ஆச்ரமத்தை ஏற்று நகரத்திற்கு வெளியிலுள்ள ஒரு ஆச்ரமத்தில் ரகு வசித்து வந்தான். தலைநகருக்கு அருகிலிருப்பினும், ரகு, ராஜ்யஸௌக்யம் எதையும் விலக்கி, மற்ற முனிவர்களைப் போல் காய்கிழங்குகளை உண்டு வாழ்ந்தான். இக் கருத்தைக் கவி அழகுபடச்சொல்லுகின்றார். ராஜ்யம், இதுவரை அவனுக்கு மனைவியின் ஸ்தானத்தில் இருந்தது. இப்பொழுது அஜனுக்கு உரியதான பின், அது நாட்டுப்பெண் ஸ்தானத்தில் உள்ளது. மகனுக்கே உரியதாக இருத்தல் என்ற தன்மையிலே ராஜ்யம் நாட்டுப் பெண் போன்றுள்ளது. 'மகன் அனுபவிக்க வேண்டிய மருமகள் எவ்வாறு உபசரிப்பாளோ அவ்வாறே ராஜ்யம் ரகுவிற்கு உபசாரம் செய்தது' என்பதற்கு, ராஜ்யத்தினின்றும் ரகு எவ்வித உதவியும் பெறவில்லை என்பதுதான் கருத்து.

'भ्रम धार्मिक विस्रब्धः' என்னுமிடத்திற்போல் இச்சுலோகத்திலே வாக்யம், உடன்பாடாக இருப்பினும் எதிர்மறையிலே கருத்துள்ளது.

இப்படிப்பட்ட வாழ்க்கை ரகுவிற்குக் கஷ்டமானதன்று எனக்காட்ட अविकृतेन्द्रियः - என்ற விசேஷணம் தரப்பட்டது. वनं वा गेहं वा सदृशमुपशान्तस्य मनसः என்பதைக் காண்க.

இங்குச் சில உரையாசிரியர்கள், க்ஷத்ரியர்கள் ஸந்யாஸம் செய்துகொள்ள உரிமை யுண்டா என்பதைப்பற்றி விசாரணைசெய்து, உண்டு என முடிவு செய்துள்ளனர்.

ராஜ்யத்தை ரகு விடினும், ராஜ்யம் அவனை முற்றிலும் விடவில்லை. அதனால், மகனுக்கே உரிய மருமகள், புஷ்பம் பழம் முதலியன தந்து தன்மாமனாரை உபசரிப்பது போல்,

அஜனுக்கே உரிய ராஜ்யமும் ரகுவிற்குத் தர்மவிரோத மின்றி உதவியது என்பர் பழைய உரைகாரர்கள்.

உரையாசிரியர் நாராயணர், இச்சுலோகத்திலுள்ள **अन्त्यम्** - என்ற சொல்லுக்கு, க்ஷத்ரியர்களுக்குரிய மூன்று ஆச்ரமங்களில் கடைசியான வானப்ரஸ்தம் எனக் கூறுவர்.

प्रशमास्थितपूर्वपार्थिवं कुलमभ्युद्यतनूतनेश्वरम् ।
नभसा निभृतेन्दुना तुलामुदितार्केण समारुरोह तत् ॥ १९ ॥

**प्रशम-स्थित पूर्वपार्थिवम्**-நிவ்ருத்தி தர்மத்திலுள்ள பழைய அரசனையுடையதும், **अभ्युद्यत-नूतनेश्वरम्** - எழுந்துள்ள புதிய அரசனையுடையதுமான, **तत् कुलं** - அந்த வம்சமானது, **निभृतेन्दुना** - அஸ்தமிக்கின்ற சந்திரனையுடையதும், **उदितार्केण** - உதயமான ஸுர்யனையுடையதுமான, **नभसा** - ஆகாசத்துடன், **तुलां** - ஒப்புமையை, **समारुरोह** - அடைந்தது.

(க-து) அரசிலிருந்து ஓய்வு பெற்று மோக்ஷமடைவதில் மனம் வைத்து அஸ்தமிக்கும் நிலையில் இருந்தான் ரகு. அஜன், அப்பொழுதே அரசு பெற்று, உலகிற்கான நற்காரியங்களைச் செய்வதில் உத்ஸாஹத்துடன் இருந்தான். இவ்வாறு அவ்வம்சத்தில் ஒருவன் அஸ்தமிக்கும் நிலையிலும், மற்றவன் உதயமான நிலையிலுமிருந்த காரணத்தால் ரகு குலமானது, பௌர்ணமி இரவு முடிந்து விடியும் வேளையில், சந்திரன் மேற்குத்திசையில் அடிவானத்தில் மறையவும், அதே சமயத்தில் கிழ்த்திசையில் உதிக்கின்ற சூரியனையுடையதுமாய் இருக்கின்ற ஆகாசத்துடன் ஒப்பிடப்படுகிறது. சந்திரசூரியர்களில் ஒன்று அஸ்தமிக்க, மற்றொன்று உதயமாவது போல், அரசர்களில் ஒருவன் அஸ்தமிக்கும் நிலையிலிருக்க, மற்றவன் உதய நிலையிலுள்ளான்:

இந்த உதயஅஸ்தமயக்காட்சி, கவியின் மனத்தை மிகவும் கவர்ந்துள்ளது. சாகுந்தலத்திலும் இதையே 'यात्येक-

तोऽस्तशिखरं पतिरोषधीनामाविष्कृतोऽरुणपुरस्सर एकतोऽर्कः - எனக் கூறியுள்ளார்.

இனிவரும் எட்டு சுலோகங்களில் கவி, அஜனுக்கும் ரகுவிற்குமுள்ள ஒப்புமை வேற்றுமைகளைக் கூறி, அவ்விருவரும் தங்களது லக்ஷ்யங்களைப்பெற எவ்வாறு முயன்றனரென்றும், எவ்வாறு ஸித்திபெற்றனரென்றும் தெரிவிக்கின்றார்.

यतिपार्थिवलिङ्गधारिणौ ददृशाते रघुराघवौ जनैः ।
अपवर्गमहोदयार्थयोर्भुवमंशाविव धर्मयोर्गतौ ॥ १६ ॥

**यति पार्थिव-लिङ्गधारिणौ** - ஸந்யாஸியின் சின்னங்களையும், அரசனது அடையாளங்களையும் தரித்திருந்த, **रघु-राघवौ** - ரகுவும் அஜனும், **अपवर्ग-महोदय-अर्थयोः**-மோக்ஷம், இவ்வுலகிலுள்ள நன்மை இவைகளைப் பயனாகக் கொண்ட, **धर्मयोः** - (இருவகை) தர்மங்களின், **भुवं गतौ** - பூமியை அடைந்துள்ள, **अंशौ इव** - இரண்டு பகுதிகளைப் போன்று, **जनैः** - ஜனங்களால், **ददृशाते** - கருதப்பட்டனர்.

(க-து) நிவ்ருத்தி தர்மத்திலீடுபட்டுள்ள ஸந்யாஸியான ரகு, யதியின் சின்னங்களான காஷாயம், தண்டம் முதலியவைகளையுடையவனாக இருந்தான். ஸந்யாஸ ஆச்ரமத்தில் அவன் அனுஷ்டித்த தர்மத்திற்குப் பயன் மோக்ஷம்: அஜன், அரசர்க்குரிய அடையாளங்களான, மகுடம், செங்கோல் வெண்குடை முதலியன உடையவனாய் ப்ரவ்ருத்தி தர்மத்திலீடுபட்டிருந்தான். ஆக இவ்விருவரையும் கண்ட ஜனங்கள், தர்மமே தனது பகுதியுடன் இரு உருவெடுத்துப் பூமியில் வந்துள்ளதாகக் கருதினர்.

இம்மை மறுமையில் நன்மை பயப்பனவும் வேதத்திலே விஹிதமுமான செயல்கள் தர்மம் எனப்படும். தர்மம், அர்த்தம், காமம் இவற்றைக்கருதிச் செய்யப்படுவது

ப்ரவிருத்திதர்மம். இவ்வுலகப்பயனைக் கருதாது மோக்ஷத்தை விரும்பி ஈசுவரரார்ப்பணமாகச் செய்யப்படுவது நிவ்ருத்தி தர்மம். எனவே தர்மம் இருவகையாகும் என்பர்.

अजिताधिगमाय मन्त्रिभिर्युयुजे नीतिविशारदैरजः ।
अनपायिपदोपलब्धये रघुराप्तैः समियाय योगिभिः ॥ १७ ॥

**अजः** - அஜன், **अजिताधिगमाय** - வெல்லப்படாத ராஜ்யத்தைப் பெறுவதற்காக, **नीतिविशारदैः** - ராஜநீதியை நன்கு அறிந்த, **मन्त्रिभिः** - மந்திரிகளுடன், **युयुजे** - சேர்ந்தான். **रघुः** - ரகு, **अनपायि-पदोपलब्धये**-அழிவற்ற இடத்தை (மோக்ஷத்தை) அடைவதற்காக, **आप्तैः** - உண்மையான அறிவுபெற்றுள்ள, **योगिभिः** - யோகிகளுடன், **समियाय** - சேர்ந்தான்.

(க-து) அஜன் தன் ஆட்சிக்குப் புறம்பே இருந்த ராஜ்யத்தையும் அரசர்களையும் ஜயிக்க, ராஜநீதியை நன்கு அறிந்த மந்திரிகளின் துணையை நாடினான். ரகு மோக்ஷத்தை அடைவதற்காக, அந்நெறியை யறிந்த முனிவர்களின் உதவியைக் கோரினான்.

नृपतिः प्रकृतीरवेक्षितुं व्यवहारासनमाददे युवा ।
परिचेतुमुपांशु धारणां कुशपूतं प्रवयास्तु विष्टरम् ॥ १८ ॥

**युवा** - வாலிபனான, **नृपतिः** - அரசன் (அஜன்), **प्रकृतीः**- குடிகளை, **अवेक्षितुं** கவனிப்பதற்கு, **व्यवहारासनं** - நீதிவழங்கும் ஆஸனத்தை, **आददे** - ஏற்றான். **प्रवयाः तु** - வயது முதிர்ந்த அரசன் ரகு, **धारणां** - ஒன்றிய மனநிலையை, **परिचेतुं** - பழக்கிக்கொள்ள, **उपांशु** - தனிமையில், **कुशपूतं** தர்ப்பங்களால் தூயதான, **विष्टरं** - ஆஸனத்தை, **आददे** - கொண்டான்.

(க-து) அஜன் ரகு இருவரும் வெவ்வேறு வகையான ஆசனங்களை, வேறு பட்ட காரணங்களுக்காகக் கைக்கொண்டனர். விவா

தம் செய்கின்ற குடிகளின் வியவஹாரத்தை அறிந்து அஜன் நீதிவழங்குவதற்காக ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்தான். மனத்தை ஒருமிலைப் படுத்த ரகு அதற்குத்தகுந்த ஏகாந்தமான இடத்தில் தர்ப்பாஸனத்திலமர்ந்து தவம் புரிந்தான்.

மன ஒருமையைத் தாரணை என்பர்.

'यमादिगुणसंयुक्ते मनसः स्थिरतात्मनि ।
धारणा प्रोच्यते सद्भिः सर्वशास्त्रविशारदैः ॥'

என்பது தாரணையைப் பற்றிக் கூறுவது.

अनयत् प्रभुशक्तिसंपदा वशमेको नृपतीननन्तरान् ।
अपरः प्रणिधानयोग्यया मरुतः पञ्च शरीरगोचरान् ॥ १९ ॥

**एकः** - ஒருவன் (அஜன்), **अनन्तरान्** - அடுத்துள்ள, **नृपतीन्** - அரசர்களை, **प्रभुशक्ति संपदा** - பணம், சேனை இவைகளின் நிறைவினால், **वशं** - (தன்) வசமடைந்தவர்களாக, **अनयत्** - செய்தான். **अपरः** மற்றவன் (ரகு), **प्रणिधान-योग्यया** - தியான அப்யாஸத்தினால், **शरीरगोचरान्** - உடலிலுள்ள, **पञ्च** - ஐந்து, **मरुतः** - காற்றுக்களை, **वशं अनयत्** - வசமாக்கினான்.

(க-து) அரசர்கள், தம் நாட்டையடுத்துள்ள தேசங்களின் அரசர்களைச் சில உபாயங்களால் தம் வசப்படுத்துதல் வேண்டும் என்பர் நீதிசாஸ்திரக்காரர்கள். அதனால் அஜன், தனது பெருத்த ஐசுவரியத்தாலும், பராக்கிரமம் மிக்க சேனையினாலும், தன் நாட்டைச் சுற்றிலுமிருந்த தேசங்களினரசர்களைத் தன் வசமாக்கினான். ரகுவும் தனது உடலிலுள்ள, பிராண, அபாந, வியாந, உதாந, ஸமாந என்ற ஐந்து வாயுக்களையும் தியானத்தின் வலியால் தன்னிச்சைப்படி இயங்கச் செய்தான். **योग्या** - அப்யாஸம்.

பிரபுசக்தி—இதை, 'மூவகையாற்றலுள் பொருள், படை என இருவகைத்தாய பெருமை' என்பர் பரிமேலழகர்.

अकरोदचिरेश्वरः क्षितौ द्विषदारम्भफलानि भस्मसात् ।
इतरो दहने स्वकर्मणां ववृते ज्ञानमयेन वह्निना ॥ २० ॥

**अचिरेश्वरः** - புதிய அரசன் அஜன், **क्षितौ** - உலகில், **द्विषदारम्भफलानि** - பகைவர்களின் செயல்களுடைய பயன்களை, **भस्मसात् अकरोत्** - முற்றும் சாம்பலாகும்படிச் செய்தான்; **इतरः**- மற்றவன் (ரகு), **ज्ञानमयेन**-ஆத்மஜ்ஞானமாகிய, **वह्निना**- தீயினால், **स्वकर्मणां** - (பிறப்புக்குக் காரணங்களாகிய) தனது செயல்களை, **दहने** - எரிப்பதில், **ववृते** - முயற்சியுள்ளவனாக விருந்தான்.

(க-து) அஜன், பகைவர்கள் எவ்வகை முயற்சி செய்யினும் அவற்றை எல்லாம் அழித்து, அவர்களுடைய செயல் எவ்வகைப் பயனையும் அளிக்காதவாறு செய்து விட்டான். ரகுவும் மறுபிறப்புக்குக் காரணமாகிய பழைய வினைகளை ஆத்மஜ்ஞானமாகிய நெருப்பினால் அழிக்க முயன்று கொண்டிருந்தான்.

தீவினை போல் நல்வினையும் பிறப்புக்குக் காரணமாதலால் இருவினைகளையும் அழிக்கவேண்டும். ஆத்மஜ்ஞானம் அடைந்தால் அவை அழிகின்றன. **ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात् कुरुतेऽर्जुन** - என்பது பகவத் கீதை.

पणबन्धमुखान् गुणानजः षडुपायुङ्क्त समीक्ष्य तत्फलम् ।
रघुरप्यजयद्गुणत्रयं प्रकृतिस्थं समलोष्टकाञ्चनः ॥ २१ ॥

**अजः** - அஜன், **पणबन्धमुखान्** - ஸந்தி முதலிய, **षट्** - ஆறு, **गुणान्** - குணங்களை (உபாயங்களை), **तत्फलं** - அவைகளின் பயனை, **समीक्ष्य** - நன்கு ஆலோசித்து, **उपायुङ्क्त** - உபயோகித்தான். **समलोष्टकाञ्चनः** - கல்லையும், பொன்னையும் ஒன்றாகக் கருதுகின்ற (பற்றற்ற), **रघुः अपि** - ரகுவும்,

**गुणत्रयं** - (ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற) மூக்குணங்களையும், **प्रकृतिस्थं** - தம் நிலையிலிருக்கும்படி (மாறுதலற்றவையாக), **अजयत्** - வெற்றி கொண்டான்.

(க-து) அரசர்கள், அரசியலைச் சரிவர நடத்த ஸந்தி, விக்ர ஹம், யானம், ஆசனம், த்வைதீபாவம், ஸமாச்ரயம் என்ற ஆறு உபாயங்களைத் தக்க காலத்திலும் இடத்திலும் உபயோகித்து வரல் வேண்டும். எவற்றை, எப்பொழுது உபயோகித்தால் தகுந்த பயனைத் தரும் என்பதை ஆராய்ந்து அறிந்து செய்யவேண்டும். அஜன் இவ் ஆறு உபாயங்களையும் அவற்றின் விளைவுகளையும் முன்பே யோசித் துத் தகுந்தபடி பிரயோகித்து வெற்றி கண்டான்.

மனிதனுக்கு ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூக்குணங்கள் உண்டு. ஒவ்வொருவனிடத்தில் ஒவ்வொருதருணத்தில் ஒவ்வொன்று மிகுதியாக விருக்கும். ரகு அவ்வாறின்றி எல்லாக்குணங்களையும் அதனதன் நிலையில் அடக்கி வைத்திருந்தான். ரஜஸ், தமஸ் ஆகிய குணங்கள் நிலைமீறுது கட்டுக்கடங்கி இருந்ததால் ஒரு பொருளின் மீது வெறுப்போ அன்றி ஆசையோ ரகுவிற்கு ஏற்படவில்லை. அதனால் மண்ணையும் பொன்னையும் ரகு ஒன்றாகவே மதித்தான். ஸத்வம் ரஜஸ், தமஸ் இவைகளை ஸமநிலையில் வைத்ததால், ரகு அவைகளின் செயல்களான, ப்ரீதி, துக்கம், அறிவின்மை இவைகளை வெல்லமுடிந்தது. தவத்தினால் இத்தகைய மனநிலையை ரகு பெற் றிருந்தான்.

ஆறுவகை உபாயங்கள்:

1. **सन्धि** :—பலமுள்ள அரசனுடன் விரோதம் ஏற் படின், வேறுசெய்ய இயலாத நிலையில், பலத்தைச் சேகரித் துக்கொள்ளும் காலம்வரை ஸமாதானம் செய்து கொள் ளுதல்: **बलिना विगृहीतः सन् नृपोऽनन्यप्रतिक्रियः । आपन्नः सन्धिमन्विच्छेत् कुर्वाणः कालयापनम् ॥**

2. **विग्रह** :—பிறனால் உண்டான அவமானம் கருதியும், உடல், பொருள், இவைகளுக்குத் தீங்கைப் பிறன் உண்டாக்கு

வதை எண்ணியும், கோபம் கொண்டு அவனுடன் பகை கொள்வதும், அவனுக்குப் பிரதியாகத் தீங்கிழைக்க முற்படுதலும் விக்ரஹமாகும். தன்நன்மையைக்கருதித் தக்க சமயத்தில் பலமிருக்கும் பொழுது, முன்புஸந்தி செய்து கொண்டவனிடமும் விக்ரஹம் கொள்ளலாம். **अमर्षोपगृहीतानां मन्युसन्तप्तचेतसाम् । परस्परापकारेण पुंसां भवति विग्रहः । स्कन्धेनापि वहेत् काले प्रियाणि समुदाहरन् । संप्राप्ते चैव काले तु भिन्द्याद् घटमिवाश्मनि ॥**

3 **यानम्** :—சிறந்த பல முடையவனும், தன்மக்களால் நேசிக்கப்பட்டவனும், வெற்றியில் மிகவிருப்பமுடையவனுமான அரசன், பகைவன்மேல் படையெடுத்துச்செல்லுதல் யாநமாகும். **उत्कृष्टबलवीर्यस्य विजिगीषोर्जयैषिणः । गुणानुरक्तप्रकृतेर्यात्रा यानमिति स्मृतम् ॥**

4. **आसनम्** :—படை எடுத்தற்கு முன்னும் பின்னும், பகைவன் ஒத்தபலமுடைவனாயிருந்து வெல்வது அரிதெண அறிந்தால் ஒன்றும் செய்யாது வாளாயிருத்தல் ஆஸந மாகும். '**परस्परस्य सामर्थ्यविघातादासनं स्मृतम्**'

5. **द्वैधीभाव**:—பலமுள்ள இரு அரசர்கள் ஒருவரோடொருவர் பகைவர்களாக இருப்பின் அவர்களிடையில் இருவருக்கும் உதவுவதாகக் கூறிக்கொண்டு, உண்மையில் எவருக்கும் உதவாமல் சொல்லொன்றும் செயலொன்றுமாக இருத்தல் த்வைதீபாவம் எனப்படும். இவ்வுபாயம் மிகவும் விழிப்புடன் ஆளப்பட வேண்டியதாகும். **बलिनोर्द्विषतोर्मध्ये वाचात्मानं समर्पयन् । द्वैधीभावेन वर्तेत काकाक्षिवदलक्षितः ॥**

6. **आश्रय**:—பலமான பகைவனால் துன்புறுத்தப்படும் பொழுது, செயலற்று இருக்குங்கால், தன் இனத்தைச்

சேர்ந்த பலமுள்ள யோக்யனை ஒருவனை அண்டுதல் ஆச்ரயமாகும். उच्छिद्यमानो बलिना निरुपायप्रतिक्रियः। कुलोद्गतं सत्यमार्यमाश्रयेत बलोत्कटम् ॥

न नवः प्रभुराफलोदयात् स्थिरकर्मा विरराम कर्मणः।
न च योगविधेर्नवेतरः स्थिरधीरा परमात्मदर्शनात् ॥ २२ ॥

**स्थिरकर्मा** - உறுதியான முயற்சியுடைய, **नवः प्रभुः** - புதிய அரசன் (அஜன்), **आ फलोदयात्** - பயனுண்டாகும் வரை, **कर्मणः** - முயற்சியினின்றும், **न विरराम** - ஓயவில்லை. **स्थिरधीः** - நிலைபெற்ற மனத்தையுடைய, **नवेतरः (प्रभुः) च** - பழைய அரசன் ரகுவும், **आ परमात्म दर्शनात्** - பரமாத்மாவைக்காணும் வரை, **योगविधेः** - யோகத்தைப்பயில்வதினின்றும், **न विरराम** - ஓயவில்லை.

(க-து) சலியாத ஊக்கமுள்ள அஜன், தொடங்கிய எந்தச் செயலையும் இடையே நிறுத்திவிடாமல் பயனைக் காணும் வரை செய்து முடித்தான். ரகுவும் யோகஞ் செய்வதின் பயனாகப் பரமாத்ம உணர்வு ஏற்படும் வரையில், இடையில் அவ்யோகத்தை நிறுத்தாமல் செய்து முடித்தான். யோகம்-மன ஒருமைப்பாடு.

'**आफलोदयकर्मणां**' என்ற முதல் ஸர்க்க சுலோகத்தின் பகுதி இங்கு நினைக்கத் தக்கது;

इति शत्रुषु चेन्द्रियेषु च प्रतिषिद्धप्रसरेषु जाग्रतौ।
प्रसितावुदयापवर्गयोरुभयीं सिद्धिमुभाववापतुः ॥ २३ ॥

**इति** - இவ்வாறு, **प्रतिषिद्धप्रसरेषु** - தடுக்கப்பட்ட இயக்கங்களையுடைய, **शत्रुषु च** - பகைவரிடத்தும், **इन्द्रियेषु च** - புலன்களிடத்தும், **जाग्रतौ** - விழிப்புடனிருப்பவரும், **उदय-अपवर्गयोः** - இம்மையிலும் மறுமையிலும், **प्रसितौ**-பற்றுள்ள

வருமான, **उभौ** - இருவரும், **उभयीं** - இரண்டு வகையான **सिद्धिं** - பயனை, **अवापतुः** - அடைந்தனர்.

(க-து) அஜன், பகைவர்கள் தன்னை மீருதவாறு கவனித்துக் கொண்டு, இம்மையில் அடையவேண்டிய மனத்தின் முழு மகிழ்ச்சியையும் அடைந்தான். புலன்களுக்குச் சுதந்திரமளிக்காது அவைகளை அடக்கிக் காமம், க்ரோதம் முதலியவற்றை நீக்கி மறுமையில் பற்றுக் கொண்ட ரகு, அவன் விரும்பிய பயனையும் பெற்றான்.

अथ काश्चिदजव्यपेक्षया गमयित्वा समदर्शनः समाः ।
तमसः परमापदव्ययं पुरुषं योगसमाधिना रघुः ॥ २४ ॥

**अथ** - பிறகு, **समदर्शनः** - (எல்லாஉயிர்களிடத்தும்) சமநோக்கங்கொண்ட (பற்றற்ற), **रघुः**-ரகு, **अजव्यपेक्षया**-அஜனுடைய விருப்பப்படி, **काश्चित्** - சில, **समाः** - வருஷங்களை, **गमयित्वा** - கழித்து, **योगसमाधिना**-ஒன்றிய தியானத்தினுல், **तमसः** - பிரக்ருதிக்கு, **परं** - புறம்பான, **अव्ययं** - அழிவற்ற, **पुरुषम्** - பரமாத்மாவை, **आपत्** - அடைந்தான்.

(க-து) ஞானிகளுக்குரிய சமநோக்குடைய ரகு, அஜன் வேண்டியதால் சில வருஷங்கள் உயிர் வாழ்ந்திருந்தான். முடிவில் யோக முறையினுல், அழிவற்றவனும், பிரகிருதித்தொடர்பு இல்லாதவனுமான பரமனை அடைந்தான்.

**'योगेनान्ते तनुत्यजाम्'** - என்ற முதல் ஸர்க்கத்திலுள்ள சுலோகத்தின் பகுதி இங்கு நினைத்தற்குரியது. ஸமநோக்குடைய ரகு, பரமாத்மதர்சனம் கிட்டியபின்பும் இவ்வுலகில் சிலகாலம் வாழ்ந்தது, அஜனது வேண்டுகோளுக்கிணங்கியேயன்றி, வாழவேண்டுமென்ற இச்சையால் அன்று என்பதைக்காட்டுகின்றது, **अजव्यपेक्षया** - என்பது.

श्रुतदेहविसर्जनः पितुश्चिरमश्रूणि विमुच्य राघवः ।
विदधे विधिमस्य नैष्ठिकं यतिभिः सार्धमनग्निमग्निचित् ॥ २५ ॥

**अग्निचित्** - ஆஹிதாக்னியான, **राघवः** - அஜன், **पितुः** - தந்தையின், **श्रुतदेह विसर्जनः**-சரீரத்யாகத்தைக் கேள்வியுற்றவனாக, **चिरं** - வெகுநேரம், **अश्रूणि** - கண்ணீரை, **विमुच्य** - பெருக்கியபின், **अस्य** - அவனுக்கு, (ரகுவிற்கு), **अनग्नि** - அக்னி இல்லாத, **नैष्ठिकं-विधि** - உத்தரக்கிரியையை, **यतिभिः साधम्** - ஸந்யாஸிகளுடன் (இருந்து கொண்டு), **विदधे** - செய்தான்.

(க ரு) ரகு உயிர் நீத்ததைக் கேட்டு அஜன் மிக வருந்தினன். பிறகு அங்குள்ள முனிவர்களின் உதவியுடன் ரகுவிற்கு ஈமக்கடன்களை அக்னியின் உதவியின்றிச் செய்தான். உலகப்பற்றை விட்ட ஸந்யாஸிகளின் உடலை எரிக்காமல் புதைக்க வேண்டுமென்று சாஸ்திரம் கூறுமாதலால் ரகுவின் உடலை அஜன் புதைத்தான்.

**निष्ठा** - மரணம்; **नैष्ठिकम्** - மரணமடைந்தபின் செய்ய வேண்டிய கிரியை.

**'सर्वसंगनिवृत्तस्य ध्यानयोगरतस्य च । न तस्य दहनं कार्यं नैव पिण्डोदकक्रिया । निदध्यात् प्रणवेनैव बिले भिक्षोः कलेबरम् । प्रोक्षणं खननं चैव सर्वं तेनैव कारयेत्'** என்பது ஸந்யாஸிகளுக்கு உத்தரக்கிரியை செய்யப்பட வேண்டிய முறையைப் பற்றிக் கூறும்.

अकरोत् स तदौर्ध्वदेहिकं पितृभक्त्या पितृकार्यकल्पवित् ।
न हि तेन पथा तनुत्यजस्तनयावर्जितपिण्डकाङ्क्षिणः ॥ २६ ॥

**पितृकार्यकल्पवित्** - பித்ருக்கிரியைகளின் செய்முறையை அறிந்த, **सः** - அஜன், **पितृभक्त्या** - தந்தையிடத்துள்ள பக்தியினால், **तदौर्ध्वदेहिकं** - அவனுடைய (ரகுவினுடைய) உத்தரக்கிரியைகளை, **अकरोत्** - செய்தான்; **तेन पथा** - அந்த (யோக) மார்க்கத்தினால், **तनुत्यजः** - உடலை விடுபவர், **तनय-आवर्जित पिण्ड-काङ्क्षिणः** - புதல்வரால் அளிக்கப்பெறும்

பிண்டத்தை விரும்புபவராக, न हि (भवन्ति) இருப்பதில்லை யல்லவா?

(க-து) யோகத்தினால் சித்திபெற்று உடலை விடுபவர், தாமே நற்கதி யடைகின்றனர். அவர்களது புதல்வர் சரியான முறையில் சிராத்தம் முதலியவற்றைச் செய்துதான் அத்தகையோர் நற்கதி பெற வேண்டுமென்பதில்லை. ரகு யோகத்தினால் நற்கதியடைந்தவன். அவ னுக்கு அஜன் உத்தரக்கிரியை செய்தாலும் செய்யாவிட்டாலும் ஒன்று தான். ஆனால், அஜன் தன் தந்தையிடத்தில் அதிக பக்தியுள்ளவனா கையால் தன் கடமையாகிய சிராத்தம்செய்தல் முதலியவற்றை முறைப்படி செய்தான்.

'नैव पिण्डोदकक्रिया' என்பது இதுபற்றியே கூறப் பட்டது.

स परार्ध्यगतेरशोच्यतां पितुरुद्दिश्य सदर्थवेदिभिः ।
शमिताधिरधिज्यकार्मुकः कृतवानप्रतिशासनं जगत् ॥ २७ ॥

**परार्ध्यगतेः** - உயர்நிலையான மோக்ஷத்தை அடைந் துள்ள, **पितुः** - தந்தையின், **अशोच्यतां** - வருந்தக்கூடாத நிலையை, **उद्दिश्य**-குறித்து, **सदर्थवेदिभिः**-உண்மைப் பொருளை அறிந்தவர்களால், **शमिताधिः** - போக்கப்பட்ட மனநோயை (வருத்தத்தை)யுடைய, **सः** - அவ்வஜன், **अधिज्यकार्मुकः** - நாணேற்றிய வில்லையுடையவனாக, **जगत्** - உலகை, **अप्रति-शासनं** - வேறு ஆட்சியற்றதாக, **कृतवान्** - செய்தான்.

(க-து) 'யோகிகள் இறப்பின் அது வருந்தவேண்டியதொன்று அன்று. அவர்களுக்கு மரணம் என்பது உயர்ந்த நிலையை அடை வதற்கான வழியாகும். ஆதலால் மோக்ஷத்தை அடைந்த பெரி யோர்கள், நம்மைப் பிரிந்து விட்டனரே என நாம் வருந்தலாகாது' என்று இவ்வுண்மையை, வஸிஷ்டர் முதலிய அறிஞர் பலரும் அஜ னுக்கு உபதேசித்தனர். இவ்வுபதேசத்தால் அஜனின் மனவருத்தம் நீங்கியது. பிறகு தன் ஆட்சியைக் கவனிக்கத் தொடங்கினான்.

மற்ற அரசர்கள் எல்லோரையும் வென்று இவ்வுலகைத் தன் குடைக் கீழ் கொண்டு வந்தான்.

ஸங்யாவலிகளின் மரணத்தைப்பற்றி வருந்தக் கூடாதென ஸுமந்து முனிவர் கூறியுள்ளார்: **परिव्राजि विपन्ने तु पतिते चात्मवेदिनि । कार्यो न शोको ज्ञातीनामन्यथा दोषभागिनः ॥**

क्षितिरिन्दुमती च भामिनी पतिमासाद्य तमग्र्यपौरुषम् ।
प्रथमा बहुरत्नसूरभूदपरा वीरमजीजनत् सुतम् ॥ २८ ॥

**क्षितिः** - இப் பூமியும், **भामिनी** - அன்புள்ள, **इन्दुमती च** - இந்துமதியும், **अग्र्यपौरुषं** - சிறந்த ஆண்மையுள்ள, **तं** - அவ்வஜனை, **पतिं** - கணவனாக, **आसाद्य** - அடைந்து, **प्रथमा** - முதல்வி (பூமி), **बहुरत्नसूः** - பல சிறந்த பொருட்களை அளிப்பவளாக, **अभूत्** - ஆனாள்; **अपरा** - மற்றவள் (இந்துமதி), **वीरं** - வீரனை, **सुतं** - மகனை, **अजीजनत्** - ஈன்றாள்.

(க-து) பூமி, சிறந்த வீரனை அஜனை அரசனாகப் பெற்றுப்பல வகைநல்வளங்களை அளித்தது. ஆண்மையுள்ள அஜனைக் கணவனாகப் பெற்று இந்துமதி ஒரு வீரமகனை ஈன்றாள்.

**भाम** - ஸௌபாக்யம்; அன்பு; இதை உடையவள்- **भामिनी । भाम दैवानुकूल्यं च सौभाग्यं चापि कथ्यते** - என்பதை காண்க.

**आसाद्य** - என்பதற்கு எழுவாயாக வந்துள்ள **क्षितिः** - **इन्दुमती** - என்ற இரண்டும், பின்வந்துள்ள வாக்யத்தில் எழுவாயாக அமையாமல், **प्रथमा** - என்பது **अभूत्** - என்ற வினைக்கு எழுவாயாகவும், **अपरा** - என்பது **अजीजनत्** - என்ற வினைக்கு எழுவாயாகவும் வந்துள்ளன. இத்தகைய வாக்ய அமைப்புப் பிழைபட்டதாகும் என எண்ணி உரையாசிரிகள், **आसाद्य**-என்பதற்குப்பதிலாக **आजग्मतुः** - எனப் பாடபேதம் காண்கின்றனர். ஆனால் கவி இத்தகைய ப்ர

யோகத்தைக் கவனக்குறைவினால் செய்தார் என்று சொல்வ தற்கில்லை. इत्थं नागः - என்ற தொடங்கும் சுலோகமும் (16-ஆம் ஸர்க்கம் 88-ஆம் சுலோகம்) இவ்வாறே இருப்ப தால் காளிதாஸருக்கு இத்தகைய வாக்ய அமைப்புப் பிழை யற்றதென்பதே கருத்தென்று புலப்படுகிறது. இத்தகைய ப்ரயோகம் ஸரியானதே என அருணகிரி நாதர், ரகுவம்சத் திற்குத் தாம் எழுதிய 'ப்ரகாசிகா' என்ற உரையில் ஆராய்ந்து முடிவு செய்துள்ளார்.

दशरश्मिशतोपमद्युतिं यशसा दिक्षु दशस्वपि श्रुतम् ।
दशपूर्वरथं यमाख्यया दशकण्ठारिगुरुं विदुर्बुधाः ॥ २९ ॥

**दश-रश्मिशत-उपमद्युतिं** - ஆயிரங்கதிர்களையுடைய சூரிய னுக்குச் சமமான பொலிவையுடையவனும், **यशसा** - புகழினால், **दशसु** - பத்து, **दिक्षु अपि** - திசைகளிலும், **श्रुतं** - பிர சித்திபெற்றவனும், **दशकण्ठारि गुरुं** - பத்துத்தலைகளையுடைய ராவணனின் பகைவனான ராமனுடைய தந்தையுமாகிய, **यं** - எந்த மகனை, **आख्यया** - பெயரினால், **दशपूर्वरथं** - தச என்ற சொல்லை முன்னே உடையரதனாக (தசரதன் என்று), **बुधाः** - அறிஞர்கள், **विदुः** - அறிகின்றனரோ, **तं** - அத்தகைய மகனை, **अपरा** - இந்துமதி, **अजीजनत्** - பெற்றாள்.

(க-து) இந்துமதி பெற்ற புதல்வன் ஆயிரங் கிரணங்களை யுடைய சூரியனுக்குச் சமமானவனாகப் பொலிந்தான். அவனது புகழ் பத்துத் திசைகளிலும் பரவியது. அவன் பிற்காலத்தில் ராவணனை வெற்றி கொண்ட ராமனை ஈன்றான். அவனைத்தசரதன் என்ற பெய ரால் பெரியோர் அழைத்தனர்.

முன் சுலோகத்திலிருந்து, '**अपरा अजीजनत्**' என வருவித்துப் பொருள் கூறப்பட்டது. சூரியன் ஆயிரங் கிரணங்களை உடையவன் என்பர். பத்து முகமுடையவன்

என்ற பொருள் கொண்ட दशानन-என்ற சொல்லைப் போல், दशकण्ठ - என்ற சொல்லும் ராவணனைக் குறிக்கும். பத்துக் கழுத்துக்களையுடையவன் என்பது பதப் பொருள்.

ऋषिदेवगणस्वधाभुजां श्रुतयागप्रसवैः स पार्थिवः ।
अनृणत्वमुपेयिवान् बभौ परिधेर्मुक्त इवोष्णदीधितिः ॥ ३० ॥

**श्रुत-याग-प्रसवैः** - வேதாத்யயனம், யாகஞ்செய்தல் மகப்பேறு ஆகியவற்றால், **ऋषि-देवगण-स्वधाभुजां** - முனிவர், தேவர், பித்ருக்கள் ஆகியவருக்கு, **अनृणत्वं** - கடனற்ற தன்மையை, **उपेयिवान्** - அடைந்த, **सः** - அந்த, **पार्थिवः** - அரசன் (அஜன்), **परिधेः**-பரிவேஷத்திலிருந்து, **मुक्तः** - விடு பட்ட, **उष्णदीधितिः इव** - சூரியன் போல, **बभौ**-விளங்கினன்.

(க-து) மனிதர்க்குத் தேவர்கடன், ரிஷிகள்கடன், பிதிரர்கடன் என மூன்று கடன்கள் உண்டு. வேதங்களை முறைப்படி ஓதுதலினால் ரிஷிகள் கடனும், யாகஞ்செய்தலினால் தேவர்கடனும், புத்திரரைப் பெறுதலால் பிதிரர் கடனும் நீங்கு மென்பர். சூரியனைச் சுற்றிச் சிலசமயம் அமையும் மங்கலான வட்டத்திற்குப் பரிவேஷம் என்று பெயர். பரிவேஷம் உள்ளவரை சூரியன் பிரகாசம் குன்றி இருப் பான். பரிவேஷம் நீங்கின் ஒளியுடன் விளங்குவான். மூக்கடனை யும் நீக்கியதால் அஜன் பரிவேஷத்தினின்று விடுபட்ட சூரியன் போலிருந்தான். **पितृदेवर्षिसंबन्धमृणं जातस्य जायते । पुत्रयज्ञश्रुतैस्तस्य क्रमेण परिशोधनम् ॥** என்பர் பெரியோர்.

बलमार्तभयोपशान्तये विदुषां सत्कृतये बहुश्रुतम् ।
वसु तस्य विभोर्न केवलं गुणवत्तापि परप्रयोजना ॥ ३१ ॥

**तस्य** - அந்த, **विभोः** - வல்லமையுள்ள அஜனின், **वसु-केवलं** - பணம் மட்டுமே, **(परप्रयोजनं)** - பிறர்க்குதவுவதாக இருந்தது என்பது, **न** - இல்லை. (ஆனால்), **गुणवत्ता अपि** - நற்குணங்களைப் பெற்றிருக்குந் தன்மையும், **परप्रयोजना**

பிறருக்குப்பயன் படுவதாக இருந்தது; बलं - (அவனது) பலம், आर्त भयोपशान्तये - துன்புறுபவர்களின் அச்சத்தை நீக்குவதற்காகவும், बहु - அதிகமான, श्रुतं - படிப்பு, विदुषां- கற்றோரை, सत्कृतये-மேன்மைப்படுத்தற்காகவுமே இருந்தன.

(க-து) அஜன் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாக விருந்தான். தன் பணத்தையேமட்டுமன்றித் தனது நற்குணங்களையும் பிறர் நன்மைக்கே பயன் படுத்தினான். மெலிந்தோரின் அச்சத்தைப் போக்குதற்குத் தன் பலத்தை உபயோகித்தானே யன்றிப் பிறரை துன்புறுத்தற்கன்று. அதுபோல, அதிகமாகப் படித்ததால் செருக்குறாமல் கற்றோரின் பெருமையை யறிந்து அவர்களுக்குத்தகுந்த மதிப்பைத் தந்தான்.

'विद्या विवादाय धनं मदाय शक्तिः परेषां परिपीडनाय खलस्य; साधोर्विपरीतमेतत् ज्ञानाय दानाय च रक्षणाय' என்பர் பர்த்ருஹரி.

स कदाचिदवेक्षितप्रजः सह देव्या विजहार सुप्रजाः।
नगरोपवने शचीसखो मरुतां पालयितेव नन्दने ॥ ३२ ॥

अवेक्षित प्रजः - குடிகளை நன்கு கவனித்தவனும், सुप्रजाः- நல்ல மகனை யுடையவனுமான, सः - அவ்வஜன், कदाचित् - ஒருசமயம், देव्या सह - மனைவியுடன் கூட, नगरोपवने - பட்டணத்தைச் சார்ந்த பூங்காவில், शचीसखः - இந்திராணியுடன் கூடியவனும், मरुतां पालयिता - தேவர்களின் அரசனுமான இந்திரன், नन्दने इव - நந்தன வனத்தில் (களிப்பது) போல, विजहार - விளையாடினான்.

(க-து) அஜன் குடிமக்களது குறைகளை உரியகாலத்தில் கவனித்து நீக்கியபின், ஒருசமயம், தன் மனைவி இந்துமதியுடன் நகருக்குப் புறத்திலிருந்த உத்யானவனத்திற்குச சென்று, இந்திரன் இந்திராணியுடன் தேவர்களின் பூங்காவாகிய நந்தன வனத்தில் உல்லாசமாக இருப்பதுபோல் களிப்புடன் இருந்தான்.

உபவனம்-நகரத்திற்கு வெளியிலுள்ள உத்யானம்.

अथ रोधसि दक्षिणोदधेः श्रितगोकर्णनिकेतमीश्वरम् ।
उपवीणयितुं ययौ रवेरुदगावृत्तिपथेन नारदः ॥ ३३ ॥

**अथ**-பிறகு, **दक्षिणोदधेः** - தென்கடலின், **रोधसि** - கரையில், **श्रित गोकर्ण निकेतम्**-கோகர்ண க்ஷேத்திரத்தைத் தமது வாஸஸ்தானமாகக்கொண்ட, **ईश्वरं**-சிவபெருமானை, **उपवीणयितुं** - வீணையுடன் (புகழ்ந்து)பாட, **नारदः** - நாரதமுனிவர், **रवेः** - சூரியனின், **उदगावृत्तिपथेन** - வடக்கிலிருந்து திரும்பும் வழியாக (ஆகாச மார்க்கத்தில்), **ययौ** - சென்றார்.

(க-து) அஜன் தன் மனைவி இந்துமதியுடன் பூங்காவிலிருக்கையில், தென் சமுத்திரக்கரையிலுள்ள கோகர்ணம் என்னும் க்ஷேத்திரத்தில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானை வீணையுடன் பாடி வழிபடுவதற்காக நாரத முனிவர் ஆகாயமார்க்கமாக வடக்கிலிருந்து தெற்கு நோக்கிச் சென்றார்.

கோகர்ணம்: மலைநாட்டுத் திருப்பதிகளி லொன்றாகிய இது, பிரஸித்தி பெற்ற சிவஸ்தலமாகும். ஈசுவரன் பெயர் மகாதேவன் என்பது.

कुसुमैर्ग्रथितामपार्थिवैः स्रजमातोद्यशिरोनिवेशिताम् ।
अहरत् किल तस्य वेगवानधिवासस्पृहयेव मारुतः ॥ ३४ ॥

**अपार्थिवैः** - இவ்வுலகத்தவையல்லாத (தேவருலகத்து), **कुसुमैः** - புஷ்பங்களால், **ग्रथितां**-தொடுக்கப்பட்டதும், **तस्य** - அவருடைய, **आतोद्य-शिरो-निवेशितां** - வீணையின் நுனியில் வைக்கப்பட்டதுமான, **स्रजं**-மாலையை, **वेगवान्**-வேகமுள்ள, **मारुतः** - காற்று, **अधिवास-स्पृहया इव** - (தனக்கு) வாசனை யூட்டிக் கொள்வதில் விருப்பமுள்ளது போல, **अहरत् किल** - கவர்ந்தது.

(க-து) நாரதருடைய வீணையின் நுனியில் தேவருலகமலர்களால் தொடுக்கப்பட்ட மாலை ஒன்று அணியப்பட்டிருந்தது. நாரதர் செல்லுகையில் வேகமான காற்றினல் அம்மாலை வீணையினின்றும் நழுவியது.

அம்மாலையின் ஸம்பந்தத்தால் தன்னை வாசனையுடையதாகச் செய்துகொள்ளக் காற்று விரும்பியது போலும் எனக் காற்று அதைக் கவர்ந்ததற்குக் காரணத்தைக் கவி உத்ப்ரேக்ஷிக்கின்றார்.

**आतोद्यम्** - என்றசொல், தந்திவாத்யமான வீணை, இழுத்துக்கட்டப்பட்டுள்ள தோல் வாத்யமான மிருதங்கம், துவாரமுடைய வாத்யமான புல்லாங்குழல், கனவாத்யமான வெண்கலத்தாளம் என்ற நால்வகை வாத்யங்களுக்குப் பொதுப்பெயராயினும் இங்கு ஸந்தர்ப்பங் காரணமாக வீணை என்ற பொருள் கொண்டதாயிற்று. நாரதரின் வீணைக்கு மஹதீ எனப் பெயர்.

भ्रमरैः कुसुमानुसारिभिः परिकीर्णा परिवादिनी मुनेः ।
ददृशे पवनावलेपजं सृजती बाष्पमिवाञ्जनाविलम् ॥ ३९ ॥

**कुसुमानुसारिभिः** - மலர்களைத் தொடர்ந்த, **भ्रमरैः** - வண்டுகளால், **परिकीर्णा** - சூழப்பட்ட, **मुनेः** - நாரதமுனிவரின், **परिवादिनी** - வீணை, **पवनावलेपजं** - காற்றின் அவமதிப்பினல் உண்டாகியதும், **अञ्जनाविलं** - மையினல் குழம்பியதுமான, **बाष्पं** - கண்ணீரை, **सृजती इव** - பெருக்குகின்றது போலும், **ददृशे** - காணப்பட்டது.

(க-து) மலரிலுள்ள தேனுக்காக, நாரதரின் வீணையில் இருந்த மாலையை இதுவரை வண்டுகள் சூழ்ந்திருந்தன. காற்றினல் மாலை கீழே விழ, வண்டுகள் மட்டும் வீணையினருகில் இருந்தன. கருத்த அவ்வண்டுகள் வீணையைச் சுற்றிலுமிருப்பது, அவ்வீணைத்தானணிந்திருந்த மாலையைப் பலாத்காரத்தினல் நீக்கிக் காற்றுத் தன்னை அவ

மதித்து விட்டதே என எண்ணிக் கண்ணீர் பெருக்குவது போலிருந்தது என்பது கவியின் உத்ப்ரேக்ஷை. மையணிந்த கண்களிலிருந்து பெருகும் கண்ணீரும் கருநிறமுள்ள வண்டுகள் போல் கருத்திருக்கும்.

**परिवादिनी** - ஏழு தந்தியுள்ள வீணை:

अभिभूय विभूतिमार्तवीं मधुगन्धातिशयेन वीरुधाम्।
नृपतेरमरस्रगाप सा दयितोरुस्तनकोटिसुस्थितिम् ॥ ३६ ॥

**सा** - அந்த, **अमरस्रक्**- தேவமாலை, **मधु-गन्ध-अतिशयेन**- தேன், வாசனை இவற்றின் மிகுதியால், **वीरुधां** -(உபவனத்திலுள்ள) கொடிகளின், **आर्तवीं** - (வஸந்த) காலத்தினுலுண்டான, **विभूतिं** - (புஷ்பங்களின்) நிறைவை, **अभिभूय** - திரஸ்கரித்து (அடக்கியதாய்), **नृपतेः** - அரசனுடைய, **दयिता-उरुस्तन कोटि सुस्थितिं**-மனைவியினது பருத்த ஸ்தனங்களின் நுனியில் ஒருநல்ல இருப்பை, **आप** - அடைந்தது.

(க-து) வீணையிலிருந்து நழுவிய அம்மாலை தன் மணத்தினால் அயோத்தியின் உபவனத்தில் வஸந்தருதுவிலுண்டான அவ்வளவு மலர்களின் வாசனையையும் மீறியதாக இருந்தது. அங்குள்ளவர்கள் மாலையின் நறுமணத்தை உணர்ந்தனரேயன்றி மற்ற மலர்களின் வாசனையை நுகரவில்லை. அவ்வளவு சிறந்ததாக இருந்தது அம்மாலை. அத்தகைய மாலை, அரசன் அஜனருகிலிருந்த இந்துமதியின் மார்பில் விழுந்தது.

வீணையின் உச்சியைக் காட்டிலும் இந்துமதியின் ஸ்தனங்களே அம்மாலை இருப்பதற்கு ஏற்ற இடம் என்பதைக்காட்ட **सुस्थितिम्** - என்றார். வீணையில் இருந்த பொழுது, **स्थिति** - மாத்திரம் இருந்தது; இப்பொழுது **सुस्थिति**-ஏற்பட்டது.

'**दयितोरश्छदकोटिषु स्थितिम्**' என்பது அருணகிரி நாதர்கொண்ட பாடம்: '**उरश्छदः- कञ्चुलिका तस्याः कोटिषु**

अलिषु [अंश्रिषु?], तास्तु शल्विभिः [स्त्रीभिः?] चरुत्वाय विरच्यन्ते ' என்பது அவர் இடும் உரை.

क्षणमात्रसखीं सुजातयोः स्तनयोस्तामवलोक्य विह्वला ।
निमिमील नरोत्तमप्रिया हृतचन्द्रा तमसेव कौमुदी ॥ ३७ ॥

**सुजातयोः**-அழகாய்த்தோன்றியுள்ள, **स्तनयोः** - ஸ்தனங்களுக்கு, **क्षणमात्रसखीं** - ஒருகணநேரம் மட்டும் தோழியாகவிருந்த, **तां** - அம்மாலையை, **अवलोक्य** - பார்த்து, **विह्वला** - தன்வசமிழந்தவளான, **नरोत्तमप्रिया** - ஆண்தகையின் (அஜனின்) மனைவி (இந்துமதி), **तमसा** - ராஹுவினால், **हृतचन्द्रा**-அபகரிக்கப்பட்ட சந்திரனையுடைய, **कौमुदी इव**-நிலவு போல, **निमिमीलं** - கண்மூடினாள், (இறந்தாள்).

(க-து) தன் மார்பின்மீது வீழ்ந்து சிறிது நேரமே அங்கிருந்த மாலையை இந்துமதி பார்த்தாள். உடனே தன் உணர்வற்றுக் கண்களை மூடினாள். ராஹுவினால் சந்திரன் கவரப் படவும் நிலவு நீங்குவது போல் இந்துமதியும் மறைந்தாள்.

ஸமகுணமுடையவர்களுக்கே நட்பு உண்டாகுமாதலால் ஸௌந்தர்யம் கருதி, மாலை, ஸ்தனங்களுக்குத்தோழியாக உருவகம் செய்யப்பட்டது.

वपुषा करणोज्झितेन सा निपतन्ती पतिमप्यपातयत् ।
ननु तैलनिषेकबिन्दुना सह दीपार्चिरुपैति मेदिनीम् ॥ ३८ ॥

**करणोज्झितेन** - புலன்கள் நீங்கிய, **वपुषा** - உடலுடன், **निपतन्ती** - கீழே வீழ்கின்ற, **सा** - அவ்விந்துமதி, **पतिं अपि** - கணவன் அஜனையும், **अपातयत्** - வீழ்த்தினாள்; **तैलनिषेकबिन्दुना सह** - எண்ணெய்ப் பெருக்கின் துளியுடன் கூட, **दीपार्चिः** - விளக்கின் சுடர், **मेदिनीं** - நிலத்தை, **उपैति ननु** - அடைகின்றதன்றோ!

(க-து) விளக்கிலிருந்து சிலசமயம் சுடர், எண்ணெயுடன் கூடக் கீழே விழும். அது போல இந்துமதி உயிரற்றுக் கீழே வீழ்த்ததும், அவளுடன் மன்னவனும் பிரஜ்ஞை இழந்து கீழே வீழ்ந்தான். இந்துமதி சுடருக்கும், அஜன் எண்ணெய்க்கும் உபமேயங்கள். தீப் பொறி அணைந்தபின்பும் எண்ணெய்த்துளி இருக்கும். அதுபோல் இந்துமதி இறந்தும் அஜன் சிறிது காலம் உயிர் வாழ்ந்தது இவ்வுபமானத்தால் குறிப்பிக்கப் படுகிறது.

उभयोरपि पार्श्ववर्तिनां तुमुलेनार्तरवेण वेजिताः ।

विहगाः कमलाकरालयाः समदुःखा इव तत्र चुक्रुशुः ॥ ३९ ॥

**उभयोः अपि** - இருவருடையவும், **पार्श्ववर्तिनां** - அருகிலுள்ள பரிஜனங்களின், **तुमुलेन** - குழப்பமுற்ற, **आर्तरवेण** - தீன ஒலியினால், **वेजिताः** - அச்சமுற்ற, **कमलाकरालयाः** - தாமரைப் பொய்கையில் வசிக்கின்ற, **विहगाः** - பறவைகள், **तत्र** - அப்பூங்காவில், **समदुःखाः इव** -(பணியாளருடன்) ஒத்த துக்கத்தை உடையவைகள் போல, **चुक्रुशुः** - அரற்றின.

(க-து) இந்துமதி உயிர்நீங்கிக் கீழே வீழ்ந்ததையும், அதைக் கண்ட அரசன் மயக்கமுற்றதையும் பார்த்த அருகிலிருந்தபணியாளர்களும், நண்பர்களும் அச்சமுற்றுப் பேரொலி செய்தனர். இவ்வொலியைக் கேட்டு அருகிலிருந்த தாமரைப் பொய்கையில் வாழும் பக்ஷிகள் பயந்து, தாங்களும் அவர்களைப் போலத்துக்கம் கொண்டனவோ எனும்படி பெருஞ்சத்தமிட்டு அலறின.

नृपतेर्व्यजनादिभिस्तमो नुनुदे सा तु तथैव संस्थिता ।

प्रतिकारविधानमायुषः सति शेषे हि फलाय कल्पते ॥ ४० ॥

**नृपतेः** - அரசனுடைய, **तमः** - மயக்கம், **व्यजनादिभिः** - விசிறுதல் முதலியவற்றால், **नुनुदे** - போக்கப்பட்டது; **सा तु** - அவ்விந்துமதியோவெனில், **तथा एव**-அப்படியே, **संस्थिता** - இறந்துவிட்டாள்; **आयुषः** - ஆயுளின், **शेषे** - மிகுதி, **सति**- **हि** - இருந்தாலன்றோ, **प्रतिकारविधानं** - சிகித்ஸை செய்

தல், **फलाय** - பயனளிப்பதற்கு, **कल्पते** - திறனுடையதாகின்றது!

(க-து) ஆயுள்நாள் மிச்சமிருந்தால்தான் நோயாளி மருத்துவத்தினால் பிழைக்கிறான். அஜனுக்கு வாழ்நாள் இன்னும் இருந்ததால், வேலைக்காரர்கள் செய்த விசிறுதல் முதலிய உபசாரங்களால் அவன் மயக்கம்நீங்கி எழுந்தான். இந்துமதியின் ஆயுள்முடிந்துவிட்டதால் அவ்வுபசாரங்கள் பயன் படவில்லை. அவள் இறந்தேவிட்டாள்.

प्रतियोजयितव्यवल्लकीसमवस्थामथ सत्त्वविप्लवात् ।
स निनाय नितान्तवत्सलः परिगृह्योचितमङ्कमङ्गनाम् ॥ ४१ ॥

**अथ**-பிறகு, **सत्त्वविप्लवात्** - உயிர் நீங்கியதால், **प्रतियोजयितव्य-वल्लकी-समवस्थां** - திரும்பவும் தந்திகளை முடுக்கித் தயார் செய்யப்படவேண்டிய வீணையோடொத்த நிலையிலுள்ள, **अङ्गनां** - அழகியான இந்துமதியை, **नितान्तवत्सलः**- மிக்க அன்புள்ள, **सः** - அவ்வஜன், **परिगृह्य** - (கைகளால்) எடுத்து, **उचितं** - (அவள்) பழகிய, **अङ्कं** - தனது மடியை, **निनाय** - அடைவித்தான்.

(க-து) உயிர் நீங்கிய இந்துமதி, தந்திதளர்ந்த வீணையைப் போன்றிருந்தாள். அவளிடம் அதிக அன்பு கொண்ட அஜன் இந்துமதியை எடுத்துத் தன் மடிமீது வைத்துக்கொண்டான்.

'**अयुक्तामिव वल्लकीम्**' என்பர் வால்மீகி அசோகவனத்திலுள்ள ஸீதையைப்பற்றிக் கூறும்பொழுது.

पतिरङ्कनिषण्णया तया करणापायविभिन्नवर्णया ।
समलक्ष्यत बिभ्रदाविलां मृगलेखामुषसीव चन्द्रमाः ॥ ४२ ॥

**पतिः** - கணவனாகிய அஜன், **अङ्कनिषण्णया** - மடியில் சாய்ந்துள்ளவளும், **करणापाय-विभिन्न-वर्णया** - உயிர்நீங்கியதால் மாறிய காந்தியை யுடையவளுமான, **तया** - அவ்விந்து

மதியால், उषसि - காலையில், आविलां - மங்கிய, मृगलेखां - மான் ஆகிய அடையாளத்தை, बिभ्रत् - தரிக்கின்ற, चन्द्रमाः- इव - சந்திரன் போல, समलक्ष्यत - காணப்பட்டான்.

(க-து) இந்துமதி உயிர் நீங்கியதால் ஒளிகுன்றி இருந்தாள். அஜனும் அவளை யிழந்ததால் பொலிவின்றி இருந்தான். இந்நிலையில் அஜன், விடியற்காலையில் மங்கிய மான்போன்ற அடையாளத்தைக் கொண்டு பிரகாசங் குன்றியுள்ள சந்திரன் போல் இருந்தான்.

மங்கிய மான் அடையாளம் இறந்த இந்துமதிக்கும், ஒளிகுன்றிய விடியற்காலச் சந்திரன் அஜனுக்கும் உப மானங்கள்.

विललाप स बाष्पगद्गदं सहजामप्यपहाय धीरताम् ।
अभितप्तमयोऽपि मार्दवं भजते कैव कथा शरीरिषु ॥ ४३ ॥

'सः - அவ்வஜன், सहजाम्- இயற்கையான, धीरतां अपि- தைரியத்தையும், अपहाय - விட்டு, बाष्पगद्गदं-கண்ணீரினல் தழுதழுத்த குரலுடன், विललाप - புலம்பினன்; अभितप्तं - நன்கு காய்ச்சப்பட்ட, अयः अपि - இரும்பும், मार्दवम्-மென் மையை, भजते-அடைகின்றது; (எனின்), शरीरिषु-மனிதர் விஷயத்தில், कथा एव - பேச்சு, का - எது?

(க-து) 'கடினமான இரும்பும் கூட நன்ருகக் காய்ச்சப்பட்டால் மென்மையை அடைந்து விடுகிறது; உணர்ச்சியுள்ள மனிதர்களுக்குத் துக்கம் நேரின் அவர்கள் மன உறுதி குலைந்து விடும் என்பதைக் கூற வும் வேண்டுமோ? இதற்கேற்ப, அஜன் உறுதியான மனமுடைய வனயினும், இந்துமதி இறந்த துக்கத்தைப் பொறுக்காமல் கண்ணீ ருகுத்துப் புலம்பத் தொடங்கினன்.

விலாபம்: தன்னையும் தெய்வத்தையும் நொந்துகொண்டு செய்யப்படும் புலம்பல்; அடுத்துவரும் இருபத்தாறு சுலோ கங்கள் அஜனது விலாபமாக உள்ளன. அவைகளில் கூறி யுள்ள கருத்துக்கள் சிந்திக்கத்தக்கனவாம்.

कुसुमान्यपि गात्रसङ्गमात् प्रभवन्त्यायुरपोहितुं यदि ।
न भविष्यति हन्त साधनं किमिवान्यत् प्रहरिष्यतो विधेः ॥ ४४ ॥

'**कुसुमानि अपि** - மலர்களுங் கூட, **गात्र-संगमात्** - உடல் மீது படுவதால், **आयुः**-ஆயுளை, **अपोहितुम्**-போக்க, **यदि प्रभवन्ति** - கூடுமானல், **प्रहरिष्यतः** - கொல்லவிரும்பும், **विधेः** - தைவத்திற்கு, **अन्यत्** - வேறு, **किमिव** - எப்பொருள்தான், **साधनं** - கருவியாக, **न भविष्यति** - ஆகாது ? **हन्त** - அந்தோ!

(க-து) 'உயிரைக் கொல்லக் கத்திமுதலிய கடினமான கருவிகளே உபயோகிக்கப்படுகின்றன. மலரால் ஒரு உயிர் நீங்கியதைக் கண்டதில்லை. ஆனல் ஒரு புஷ்பத்தைக் கருவியாகக் கொண்டே தெய்வத்தால் இந்துமதியின் உயிர் கவரப்பட்டுள்ளது. மிக்க மென்மையுள்ள மலரே உயிரைக் கவரும் சாதனமானல், வேறு எப்பொருள்தான் கொல்லவிரும்பும் தெய்வத்திற்குக் கருவியாகாது? தெய்வத்தின் இச்சையொன்றே அதற்குக் கருவியாகவும் அமைகின்றது போலும்!

अथवा मृदु वस्तु हिंसितुं मृदुनैवारभते प्रजान्तकः ।
हिमसेकविपत्तिरत्र मे नलिनी पूर्वनिदर्शनं मता ॥ ४५ ॥

'**अथ वा** - அல்லது, **प्रजान्तकः**-உயிர்களுக்கு முடிவைச் செய்கின்ற யமன், **मृदु** - மென்மையுள்ள, **वस्तु** - பொருளை, **मृदुना एव**-மென்மையான பொருளினலேயே, **हिंसितुं** - கொல்வதற்கு, **आरभते** - தொடங்குகிருன்; **अत्र** - இவ்விஷயத்தில் **हिम-सेक-विपत्तिः**-பனி விழுவதால் அழியும், **नलिनी**-தாமரை, **पूर्व-निदर्शनं** - முதல் உதாரணமாக, **मे** - என்னல், **मता** - எண்ணப்படுகிறது.

(க-து) 'அன்றி, இவ்வாறிருக்கலாம். யமன் தான் கொல்ல வேண்டிய உயிரின் தன்மைக்கேற்ற பொருளையே கொலைக்கருவியாகக் கொள்ளுகிருன். மென்மையான பொருளை அழிக்க மெல்லிய

கருவியையே உபயோகிக்கிறன். மென்மையான தாமரைப்புஷ்பம், பனி விழுந்து அதனால் அழிந்து போவதைஇதற்கு முதல் உதாஹரண மாகக் கொள்ளலாம். இரண்டாவது திருஷ்டாந்தம் மலர் விழுந்ததால் இந்துமதி இறந்தது.

स्रगियं यदि जीविताफ्हा हृदये किं निहिता न हन्ति माम् ।
विषमप्यमृतं क्वचिद्भवेदमृतं वा विषमीश्वरेच्छया ॥ ४६ ॥

'**इयं स्रक्**-இந்தமாலை, **जीविनापहा यदि**-உயிரைக்கவருவ தாகில், **हृदये**-மார்பில், **निहिता (अपि)**-வைக்கப்பட்ட பின்பும், **मां**-என்னை, **किं न हन्ति** - ஏன் கொல்லவில்லை? **ईश्वरेच्छया** - கடவுளின் விருப்பத்தால், **क्वचित्** - சிலவிடங்களில், **विषं-अपि** - விஷமும், **अमृतं** - அமிர்தமாக, **भवेत्** - மாறும்; (**क्वचित्** - சிலவிடங்களில்), **अमृतम् वा**-அமிர்தமும், **विषम्** - விஷமாக, **भवेत्** - மாறும்,

(க-து) 'இந்த மாலைக்கே உயிரைப் போக்கும் சக்தி இருக்கு மானால், இதை நான் என் மார்பின்மீது வைத்துக் கொண்டும் என் உயிர்நீங்கவில்லையே! இந்துமதிக்கு நஞ்சாகஇருந்தது எனக்கு நஞ்சாக அமையவில்லையே! ஏன்? கடவுளின் விருப்பப்படி சிற்சிலவிடங்களில் விஷம் அம்ருதமாகவும், அம்ருதம் விஷமாகவும் மாறிவிடுகின்றன. ஆகவே பொருளின் தன்மையைக்கொண்டு எதையும் கூறுவதற்கில்லை. ஈசுவரனது விருப்பந்தான் எல்லாவற்றிற்கும் காரணமாகின்றது.

अथ वा मम भाग्यविप्लवादशनिः कल्पित एष वेधसा ।
यदनेन तरुर्न पातितः क्षपिता तद्विटपाश्रया लता ॥ ४७ ॥

'**अथ वा** - இல்லாவிடில், **मम** - எனது, **भाग्यविप्लवात्** - அத்ருஷ்டத்தின்மாறுதலால் (துரத்ருஷ்டத்தினால்), **एषः**-இம் மாலை, **वेधसा** - தெய்வத்தினால், **अशनिः** - இடியாக, **कल्पितः** - செய்யப்பட்டது; **यत्**-ஏனெனில், **अनेन** - இந்த மாலையினால், **तरुः** - (கொழு)மரம், **न पातितः** - வீழ்த்தப்படவில்லை; **तद्विट-**

**पाश्रया** - அம்மரத்தின்கிளையைச் சார்ந்துள்ள, **लता** - கொடியானது, **क्षपिता** அழிக்கப்பட்டது.

(க-து) 'எனது துரதிருஷ்டவசத்தால் தெய்வம் இம்மாலையை இடியாகச் செய்து விட்டது. அவ்விடியும் ஒருபுதுவகையான இடியாகும். சாதாரண இடியாக விருப்பின் அது, எதன் மீது வீழ்கின்றதோ அதையும், அதைச்சார்ந்துள்ள பொருள்களையும் நாசம் செய்யும். இது அபூர்வமான இடியாகையால் மரத்தை விட்டு விட்டு, அதைச்சார்ந்திருந்த கொடியை மாத்திரம் அழித்துவிட்டது.

மரம் - அஜன். கொடி - இந்துமதி.

कृतवत्यसि नावधीरणामपराद्धेऽपि यदा चिरं मयि ।
कथमेकपदे निरागसं जनमाभाष्यमिमं न मन्यसे ॥ ४८ ॥

'**मयि** - நான், **चिरं** - அதிகமாக, **अपराद्धे अपि** - தவறிழைத்தவனாயினும், **यदा** - எக்காரணத்தால், **अवधीरणां** - (என்னிடம்) அவமதிப்பை, **कृतवती**-செய்தவளாக, **न असि** - நீ இல்லையோ, **तत्**-அக்காரணத்தினாலேயே, **एकपदे** - அதே க்ஷணத்தில், **निरागसं** - குற்றமற்ற, **इमं जनं** - இம்மனிதனை (என்னை), **आभाष्यम्** - பேசத்தகுந்தவனாக, **कथम् न मन्यसे** - ஏன் நீ எண்ணவில்லை?

(க-து) 'நான் உனக்கு மிகமிகக் குற்றமிழைத்த காலங்களில் கூட, நீ என்னை அவமதித்து என்னுடன் பேசாமலிருந்ததில்லையே! அப்படியிருக்கையில் ஒரு குற்றமும் செய்யாத இச்சமயத்தில், பல சொல்லிப்புலம்புகின்ற என்னுடன் ஏன் ஒன்றும் பேசாது இருக்கின்றாய்? முன்பு எக்காரணம் கொண்டு என் குற்றங்களைப் பாராட்டாது இருந்தனையோ அக்காரணம் இப்பொழுதும் உள்ளதே. நானோ குற்றமொன்றும் இழைக்கவில்லை. அத்தகைய என்னைச் சம்பாஷணைக் குரியவனாக ஏன் நீ கருதவில்லை?

ध्रुवमस्मि शठः शुचिस्मिते विदितः कैतववत्सलस्तव ।
परलोकमसन्निवृत्तये यदनापृच्छ्य गतासि मामितः ॥ ४९ ॥

'शुचिस्मिते-வெண்மையானபுன்னகையை உடையவளே; कैतववत्सलः - (நான்) வஞ்சகமான அன்பையுடையவனாகவும், शठः - மறைவில் பிரியமில்லாததைச் செய்பவனாகவும், ध्रुवं - திண்ணமாக, तव - உன்னால், विदितः असि - அறியப்பட்டுள்ளேன்; यत् - ஏனெனில், माम् अनापृच्छ्य-என்னிடம் விடைபெறாமலே, इतः - இவ்வுலகிலிருந்து, परलोकं - மறுவுலகத்திற்கு, असन्निवृत्तये - திரும்பவாராமைக்கு, (திரும்பிவராத முறையில்), गता असि - நீ சென்று விட்டாய்.

(க-து) 'இந்துமதி! என்னை உன்னிடத்தில் அன்பற்றவனாகவும், உனக்குத் தெரியாமல் அப்ரியத்தைச் செய்பவனுமாகவே நீ கருதியுள்ளாய். இல்லாவிடில் நீ இவ்வாறு என்னிடம் சொல்லாமலேயே வேற்றுலகத்திற்குத் திரும்பி வாராதவகையில் செல்வாயா?

दयितां यदि तावदन्वगाद् विनिवृत्तं किमिदं तया विना ।
सहतां हतजीवितं मम प्रबलामात्मकृतेन वेदनाम् ॥ ५० ॥

मम - என்னுடைய, इदं - இந்த, हतजीवितं - பாழான உயிர், तावत्-முதலில், दयितां - காதலியை (இந்துமதியை), अन्वगात् यदि - தொடர்ந்து சென்றதே யாயின், तया विना- அவளின்றி, किं - எதற்காக, विनिवृत्तं திரும்பி வந்தது? आत्मकृतेन-தனது (தீச்) செயலால், प्रबलां-அதிகமான, वेद-नां-துன்பத்தை, सहतां ஸஹிக்கட்டும்; (அனுபவிக்கட்டும்).

(க-து) இந்துமதி இறந்ததும் அவளுடன் சென்ற என் உயிர் திரும்ப ஏன் வந்தது? (நான் ஏன் மயக்கம் தெளிந்து எழுந்தேன்?) அவளை விட்டுத் தான் மட்டும் திரும்பியது தவறு. தான் செய்த அத்தவறுக்குத் தண்டனையாகப்பொறுக்க இயலாத துன்பத்தை இவ்வுயிர் இப்பொழுது ஸஹித்துக் கொள்ளவேண்டியது தான்.

सुरतश्रमसंभृतो मुखे ध्रियते स्वेदलवोद्गमोऽपि ते ।
अथ चास्तमिता त्वमात्मना धिगिमां देहभृतामसारताम् ॥ ५१ ॥

'**सुरत-श्रम-संभृत:**-கலவியின் சிரமத்தினால் உண்டாக்கப் பட்ட, **स्वेदलवोद्गमः अपि** - வேர்வைத்துளி கூட, **ते** - உனது **मुखे** - முகத்தில், **ध्रियते** - உள்ளது; **अथ च** - அப்படியிருந் தும், **त्वं** - நீ, **आत्मना** - முற்றிலும், **अस्तम् इता** - மறைந்து விட்டாய்; **देहभृताम्** - உடல் தாங்கிய ஜீவன்களின்; **इमां**-இந்த **असारतां** - நிலையற்றதன்மையை, **धिक्** - வெறுக்கவேண்டும்.

(க-து) 'என்னுடன் இன்பந்துய்த்ததாலேற்பட்ட சிரமத்தினால் உன் முகத்தில் தோன்றிய வியர்வைத்துளிகள் கூட மறையாமல் அப்படியே உள்ளன. ஆனால் நீ இறந்துவிட்டாய். உயிர்வாழ் பிராணிகளின் நிலையற்ற வாழ்வுதான் என்னே! சீக்கிரம் உலரும் தன்மையுள்ள வியர்வைத்துளிகள் மறையும் முன் நீ மறைந்தனையே! ஐயோ! ஐயோ!! உலக வாழ்வைப்பற்றி என்ன கூறுவது!

मनसापि न विप्रियं मया कृतपूर्वं तव किं जहासि माम्।
ननु शब्दपतिः क्षितेरहं त्वयि मे भावनिबन्धना रतिः ॥ ५२ ॥

'**मया** - என்னால், **मनसा अपि** - மனத்தினாலும், **तव** - உனக்கு, **विप्रियं**-விருப்பமில்லாதது, **न कृतपूर्वम्**-முன்புசெய் யப்பட்டதில்லை; (அப்படியிருக்கையில்), **किं** - ஏன், **मां** - என்னை, **जहासि** - விடுகிறாய்? **अहं** - நான், **क्षितेः** - பூமிக்கு, **शब्दपतिः ननु** - சொல்லினால் மாத்திரமே பதி; **भावनिबन्धना** - உள்ளத்தினின்றும் எழும், **मे** - எனது, **रतिः** - அன்பானது, **त्वयि एव** - உன்னிடமே (உள்ளது).

(க-து) 'உனக்கு இஷ்டமில்லாததை மனத்தினால் கூட நான் நினைத்ததில்லை. உன்னிடத்தில் அவ்வளவு அன்புடைய என்னை எக்காரணங்கொண்டு நீ விட்டுப் பிரிந்து செல்லுகிறாய்? அரசர்ராஜ் யத்திற்கும் கணவரே என்றாலும், என்னைப் பொறுத்தவரையில் சொல்லளவிலேயே தான் நான் அதற்குப்பதி, உண்மையில் 'பதி' என்ற சொல்லின் பொருளுக்கிணங்க உண்மையான அன்பு செலுத்து வது உன்னிடமே.

ராஜ்யத்தைக் காட்டிலும் உன்னையே என் அன்பி, குரியவளாக மதிக்கிறேன்.

कुसुमोत्खचितान् वलीभृतश्चलयन् भृङ्गरुचस्तवालकान् ।
करभोरु करोति मारुतस्त्वदुपावर्तनशङ्कि मे मनः ॥ ५३ ॥

'**करभोरु** - புறங்கை போன்ற துடைகளையுடையவளே, **कुसुमोत्खचितान्** - மலர்களணியப் பெற்றவையும், **वलीभृतः** - சுருண்டவையும், **भृङ्गरुचः** - வண்டுகள் போன்ற நிறமுடைவையுமான, **तव अलकान्** - உனது, முன்னெற்றிக் கூந்தலை, **चलयन्** - அசைக்கின்ற, **मारुतः** - காற்று, **मे** - என்னுடைய, **मनः** - மனத்தை, **त्वदुपावर्तनशङ्कि** - உன்னுடைய (உயிர் பெற்று) மீட்சியில நம்புகையுள்ளதாக, **करोति**-செய்கிறது.

(க-து) 'மலர் சூட்டப்பெற்று சுருண்டு நெறிகின்ற உனது கரிய கூந்தல்களைக் காற்று அலைப்பதால் நீ அசைவதுபோல் எனக்குத் தோன்றுகின்றது. அதைக் காணும்போது நீ உயிர்பெற்றுத் திரும்புகின்றுயோ என என்மனம் நம்பிக்கை கொள்ளுகிறது.

**करभः**-மணிக்கட்டு தொடங்கி சுண்டுவிரல் வரையுள்ள கையின் வெளிப்பகுதி; இப் பகுதியைத் துடைக்கு உபமானமாகக் கூறுவர்.

तदपोहितुमर्हसि प्रिये प्रतिबोधेन विषादमाशु मे ।
ज्वलितेन गुहागतं तमस्तुहिनाद्रेरिव नक्तमोषधिः ॥ ५४ ॥

'**प्रिये**-அன்பே! **तत्**-ஆகையால், **नक्तम्**-இரவில், **ओषधिः**- திருணஜ்யோதி என்ற கொடியானது, **ज्वलितेन** - (தன்) ஒளியினுல், **तुहिनाद्रेः** - இமயமலையின், **गुहागतम्** - குகையிலுள்ள, **तमः इव** - இருளைப் போக்குவது போல, **प्रतिबोधेन** - உணர்வைப்பெறுவதால், **मे** - எனது, **विषादं** - வருத்தத்தை, **आशु** - சீக்கிரமாக, **अपोहितुं** - போக்க, **अर्हसि** - தகுந்தவளாக விருக்கிறுய்,

(க-து) 'இமயமலையிலுள்ள த்ருணஜ்யோதி என்னும் ஒருவகைக் கொடி இரவுநேரங்களில் ஒளி வீசி அம்மலையின் குகைகளில் சூழ்ந்துள்ள இருளைப் போக்கி வெளிச்சம் தரும் எனக்கூறுவர். அக்கொடியைப் போன்ற நீ உணர்வு பெற்றெழுந்து என் உள்ளத்திலுள்ள துக்கமாகிய இருளைப் போக்க வேண்டும்.

த்ருணஜ்யோதி இந்துமதிக்கும், மலைக்குகைகளில் சூழ்ந்துள்ள இருள் அஜன் மனத்தே இருக்கும் துக்கத்திற்கும் உபமானங்கள்.

इदमुच्छ्वसितालकं मुखं तव विश्रान्तकथं दुनोति माम् ।
निशि सुप्तमिवैकपङ्कजं विरताभ्यन्तरषट्पदस्वनम् ॥ ५५ ॥

'**निशि**-இரவில், **सुप्तं**-கூம்பியதும், **विरत-अभ्यन्तर-षट्पद-स्वनं** - நின்றுபோன உள்ளேயுள்ள வண்டுகளின் ஒலியையுடையதுமான, **एकपङ्कजम् इव** - இணையற்ற தாமரைபோல், **इदं** - இந்த, **उच्छ्वसित-अलकम्**-கலைந்த கூந்தலையுடையதும், **विश्रान्तकथम्** - பேச்சற்றதுமான, **तव** - உனது, **मुखं** - முகமானது, **माम्** - என்னை, **दुनोति** - வருந்தச் செய்கிறது.

(க-து) 'தாமரைமலர்கள் பகலில் மலர்ந்திருக்கும். அவற்றில் வண்டுகள் ரீங்காரம் செய்துகொண்டிருக்கும். இரவிலோ அம்மலர்கள் மூடிக்கொள்ளும். அப்பொழுது உள்ளே அகப்பட்டுக்கொண்ட வண்டுகள் மகிழ்ச்சியற்று ஒலியாதொழியும். அக்காட்சி, காண்போர் மனத்திற்கு வருத்தத்தையே தரும். அதுபோல, கூந்தலெல்லாம் கலைந்து உன்முகம் அழகுடன் விளங்கவில்லை, வண்டுகளின் நாதம் போன்ற உன் குரலொலியும் நின்றுபோய் விட்டது. இதைக் காண்பது என் மனத்திற்கு மிக்க வேதனையை அளிக்கிறது.

முகத்தைச் சுற்றிலும் கருத்த அலகம் இருப்பது போல் தாமரையைச் சுற்றிலும் இருள் சூழ்ந்திருந்த தென்பதைக் காட்டவும், கூம்பும் வேளையைக் காட்டவும் **निशि** - என்ற சொல் உபயோகிக்கப்பட்டது.

शशिनं पुनरेति शर्वरी दयिता द्वन्द्वचरं पतत्रिणम् ।
इति तौ विरहान्तरक्षमौ कथमत्यन्तगता न मां दहेः ॥ ५६ ॥

'**शर्वरी** - இரவு, **शशिनम्** - சந்திரனை, **पुनः** - திரும்பவும், **एति** - அடைகிறது; **द्वन्द्वचरम्** - சேர்ந்தே சஞ்சரிக்கின்ற (இணைபிரியாத), **पतत्रिणम्**-சக்ரவாக பக்ஷியை, **दयिता**-பெண்பக்ஷி, **पुनः एति** - (திரும்பவும் அடைகிறது); **इति** - என்ற இக்காரணத்தால், **तौ**-சந்திரனும் சக்ரவாகப்பக்ஷியும், **विरहान्तरक्षमौ** - பிரிவினால் ஏற்படும் இடைக்காலத்தைப் பொறுக்கின்றன ; **अत्यन्त-गता** - அடியோடு சென்றுவிட்ட, **त्वम्** - நீ, **कथम्** - எவ்வாறு, **मां**-என்னை, **न दहेः** - தஹிக்காமலிருப்பாய் ?

(க-து) 'க்ருஷ்ண பக்ஷத்தில் சந்திரனுக்கு இரவுடன் சேர்க்கையில்லை. இணைபிரியாது வாழும் சக்ரவாக பக்ஷிகள் இரவில் பிரிந்துவிடுகின்றன, அவைகள் உன்னைப்போல் வருந்தவில்லையே யெனின், சுக்லபக்ஷத்தில் திரும்பவும் இரவை அடைந்துவிடலாம் என்ற நம்பிக்கையால் சந்திரனும், பிரிந்த பெண்சக்ரவாகப் பக்ஷியை பொழுது விடிந்ததும் அடைந்து விடலாம் என்ற நம்பிக்கையால் ஆண் பக்ஷியும் அதிகமாக வருந்துவதில்லை. உன்னை முற்றும் இழந்துவிட்ட எனக்கு அத்தகைய ஆறுதல் எவ்வாறு கிடைக்கும்? உன் பிரிவு என்மனத்தைத் தபிக்கத்தானே செய்யும்!

சந்திரனைக் கணவனாகவும், இரவை மனைவியாகவும் கூறுவர். **अवधि** - என்பதற்கு எல்லை அல்லது முடிவு என்றும் பொருள் கொள்ளலாம்.

नवपल्लवसंस्तरेऽपि ते मृदु दूयेत यदङ्गमर्पितम् ।
तदिदं विषहिष्यते कथं वद वामोरु चिताधिरोहणम् ॥ ५७ ॥

'**वामोरु** - அழகிய துடையையுடையவளே! **मृदु** - மென்மையுள்ள, **ते** - உனது, **यत् अङ्गं** - எந்த உடலானது, **नव-**

**पल्लव-संस्तरे अपि** - புதிய தளிர்ப்படுக்கையிலும், **अर्पितम्** - கிடத்தப்பட்டு, **दूयेत** - வருத்தமுறுமோ, **तत् इदं** - அத்தகைய இவ்வுடல், **चिताधिरोहणं** - சிதையில் வைப்பதை, **कथं** - எப்படி, **विषहिष्यते** - ஸஹிக்கும்? **वद** - கூறு.

(க-து) 'மெல்லிய தளிர்ப்படுக்கையும் உனது உடலுக்குக் கடினமானதாகத் தோன்றி வருத்தத்தை விளைவிக்குமே. அத்தகைய மென்மை பொருந்திய உனது உடல் கடினமான சிதைக்கட்டைகளையும், தீயையும் எவ்வாறு ஸஹிக்கும்? இவ்வெண்ணம், நினைக்கும் பொழுதே எனக்குத் தாங்க வொண்ணாத துக்கத்தைத் தருகின்றதே!

इयमप्रतिबोधशायिनीं रशना त्वां प्रथमा रहःसखी ।
गतिविभ्रमसादनीरवा न शुचा नानु मृतेव लक्ष्यते ॥ ६८ ॥

'**इयं** - இந்த, **प्रथमा** - முதல், **रहःसखी** - ரகஸ்யத்துணையும், **गतिविभ्रम-साद नीरवा** - அழகிய நடை இல்லாமற் போனதால் ஒலியற்றதுமான, **रशना** - மேகலை, **अप्रतिबोध-शायिनीं** - விழித்தெழாதவாறு படுத்துள்ள (இறந்த), **त्वामनु** - உன்னுடன், **शुचा** - சோகத்தினால், **मृता इव** - இறந்ததைப் போல, **न न लक्ष्यते** - காணப்படவில்லை என்பதில்லை.

(க-து) 'நீ அணிந்துள்ள ஒட்டியாணம் உனது முதல் தோழி: எச்சமயத்திலும் நீ அணிந்துள்ளதால் அஃது ரஹஸ்யத்துணைவியுமாகும். இப்பொழுது நீ செயலற்றிருப்பதால் அதுவும் ஒலிக்காமலிருக்கிறது. இதைக்காணும் பொழுது, நீ இறந்த துக்கந் தாங்காமல் அதுவும் உன்னுடன் மரித்து விட்டது போன்று காணப் படுகிறது.

**न, न** - என்ற இரு எதிர்மறைகள் உடன்பாட்டுப் பொருளைத் தரும்.

कलमन्यभृतासु भाषितं कलहंसीषु मदालसं गतम् ।
पृषतीषु विलोलमीक्षितं पवनाधूतलतासु विभ्रमाः ॥ ६९ ॥

त्रिदिवोत्सुकयाप्यवेक्ष्य मां निहिताः सत्यममी गुणास्त्वया ।
विरहे तव मे गुरुव्यथं हृदयं न त्ववलम्बितुं क्षमाः ॥ ६० ॥

' **अन्यभृतासु** - பெண் குயில்களிடம், **कलम्** - இனிய **भाषितम्** - குரலும், **कलहंसीषु** - சிறந்த பெண் அன்னங்களிடம், **मदालसम्** - மதத்தினால் மெதுவான, **गतम्** - நடையும், **पृषतीषु**-பெண்மான்களிடம், **विलोलम्**-சஞ்சலமான, **ईक्षितम्**-பார்வையும், **पवनाधूत-लतासु** - காற்றினால் அசைக்கப்பட்ட கொடிகளில், **विभ्रमाः** - விலாஸங்களும் (என்ற), **अमी गुणाः**- இந்தக் குணங்கள், **त्रिदिवोत्सुकया अपि** - சுவர்க்கத்தில் ஆவலுடையவளாக இருப்பினும், **त्वया**-உன்னால், **माम्**-என்னை, **अवेक्ष्य**-கருதி, **सत्यम्** - உண்மையாக, **निहिताः** - வைக்கப்பட்டன; **किन्तु** - ஆனால், **तव** - உனது, **विरहे** - பிரிவில், **गुरुव्यथं**-அதிகத்துக்கமுடையதான, **मे हृदयं**-என் மனத்தை, **अवलंबितु** - தாங்க, **न क्षमाः** - அவைகள் வலியுடையனவல்ல.

(க-து) 'நீ குயிலைப் போன்ற இனிய மொழியுடையவள்; அன்னம் போன்ற நடையுடையவள்; மானைப்போன்ற மருண்ட பார்வையுடையவள்; காற்றில் அலையும் கொடிபோன்ற அசைவையுடையவள், இவற்றைக் கண்டு நான் மகிழ்கிறேன் என்பதை அறிந்து, 'நாம் இறப்பினும் இவற்றை நம் கணவர் பார்த்து மகிழட்டும்' என எண்ணி உன்மொழி முதலியவற்றைக் குயில் முதலியவற்றிடம் விட்டுப் போயுள்ளாய். ஆனால் இவைகளா என் மனத்திற்கு ஆறுதலைத் தருவன? இவை ஒவ்வொன்றும் ஒவ்வோரிடத்திலுள்ளன; அவைஎல்லாம் சேர்ந்து இருக்குமிடம் நீ ஒருத்திதான்; ஆகையால் இக்குணங்கள் உன்னிடமிருந்தால்தான் அவை எனக்கு மகிழ்வைத்தரும்; உடைந்த என் மனத்திற்கு ஆறுதலளிக்கும்.

இதுபோன்ற கருத்தைக் கவி மேகஸந்தேசத்திலும் கூறியுள்ளார்.

**श्यामास्वङ्गं, चकितहरिणीप्रेक्षणे दृष्टिपातं,**
**वक्त्रच्छायां शशिनि, शिखिनां बर्हभारेषु केशान्।**
**उत्पश्यामि प्रतनुषु नदीवीचिषु भ्रूविलासान्,**
**हन्तैकस्मिन् क्वचिदपि न ते चण्डि सादृश्यमस्ति ॥**

मिथुनं परिकल्पितं त्वया सहकारः फलिनी च नन्विमौ ।
अविधाय विवाहसत्क्रियामनयोर्गम्यत इत्यसांप्रतम् ॥ ६१ ॥

'**ननु** - அன்பே! **सहकारः** - மாமரம், **फलिनी च** - ப்ரியங்கு என்ற கொடி (ஆகிய), **इमौ** - இவ்விரண்டும், **त्वया** - உன்னால், **मिथुनम्**-கணவனும் மனைவியுமாக, **परिकल्पितम्** - எண்ணப்பட்டுள்ளன ; **अनयोः** - இவ்விரண்டிற்கும், **विवाह-सत्क्रियाम्** - மணமாகிய நற்சடங்கை, **अविधाय**-செய்யாமல், **गम्यते** (நீ) செல்லுதல், **इति**-என்பது, **असांप्रतम्** - தக்கதன்று.

(க-து) 'இதோ இங்கு இருக்கும் மாமரத்தையும் அதைச் சார்ந்துள்ள ப்ரியங்குக் கொடியையும் கணவனும் மனைவியுமாகச் சேர்த்து வைக்க வேண்டுமென நீ எண்ணியிருந்தாயே. இவ்விரண்டிற்கும் மணத்தைச் செய்து வைக்காமல் நீ போவது தகுந்ததா ?

कुसुमं कृतदोहदस्त्वया यदशोकोऽयमुदीरयिष्यति ।
अलकाभरणं कथं नु तत्तव नेष्यामि निवापमाल्यताम् ॥ ६२ ॥

'**त्वया** - உன்னால், **कृतदोहदः**-தோஹதம் செய்யப்பட்ட **अयम्**-இந்த, **अशोकः** - அசோகமரம், **यत्** - எந்த, **कुसुमम्** - புஷ்பத்தை, **उदीरयिष्यति** பூக்கப் போகிறதோ, **अलकाभरणम्** உன் கூந்தலுக்கு அணிகலனாகவேண்டிய, **तत्** - அந்த புஷ்பத்தை, **कथं नु** - எப்படி, **तव** - உனக்கு, **निवाप-माल्यताम्** - தர்ப்பண (சமயத்தில் சேர்க்கும்) புஷ்பமாக விருக்குந் தன்மையை, **नेष्यामि** - அடைவிப்பேன் ?

(க-து) 'நீ தோஹதமிட்டதால் இந்த அசோக மரம் முதன் முதலாகப் பூக்கப் போகிறது. அப்புஷ்பத்தை உன் தலையிலணிவித்தால் எனக்கு அது மகிழ்ச்சியைத் தரும். நீ உயிருடனிருந்தால் நான் அவ் விதம்தான் செய்து மகிழ்வேன். ஆனல் இப்பொழுது நீ இறந்து விட்டதால் உனக்குச் செய்யுந்தர்ப்பணத்தில் நான் அம்மலரை உப யோகிக்க வேண்டும். இதை என்மனம் எவ்வாறு ஸஹிக்கும்?

மரங்கள், கொடிகள் முதலியன புஷ்பியாத காலத்து அவைகளைப் புஷ்பிக்கச் செய்வதற்காகச் சில காரியங்கள் செய்வதுண்டு. அவற்றிற்குப் பொதுப் பெயர், दोहदं என்பது. तरुगुल्मलतादीनामकाले कुशलैः कृतम् । पुष्पाद्युत्पादकं द्रव्यम् दोहदं स्यात्तु तत्क्रिया॥-என்பதைக்காண்க. அசோகிற்குப் பெண்களின் காலுதை தோஹதமாகின்றது. नूपुरान्वितपादेन तरुण्या ताडितो भृशम्। अशोकः; केसरो वक्त्रसीधुसिक्तश्च फुल्लति என்பது, அசோகிற்கும் மகிழ மரத்திற்கும் செய்யவேண்டிய தோஹதத்தைப் பற்றிக்கூறும். கீழ்வரும் சுலோகம் பல வகையான தோஹதங்களைத் தொகுத்து அறிவிக்கின்றது. पादाघातादशोकः, तिलककुरवकौ वीक्षणालिङ्गनाभ्यां, स्त्रीणां स्पर्शात् प्रियङ्गुः, विकसति बकुलः सीधुगण्डूषसेकात्। मन्दारो नर्मवाक्यात्, पटुमृदुहसनाच्चम्पकः, वक्त्रवाताच्चूतः, गीतान्नमेरुः, विकसति च पुरो नर्तनात् कर्णिकारः ॥

स्मरतेव सशब्दनूपुरं चरणानुग्रहमन्यदुर्लभम् ।
अमुना कुसुमाश्रुवर्षिणा त्वमशोकेन सुगात्रि शोच्यसे ॥ ६२ ॥

'सुगात्रि - அழகிய உடலுடையவளே, अन्यदुर्लभम् - பிறர்க்குக்கிடைத்தற்கரியதும், सशब्दनूपुरम् - ஒலியுடன் கூடிய நூபுரங்களை உடையதுமான, चरणानुग्रहं - (உனது) பாதத்தினுல் செய்யப்பட்ட அனுக்ரஹத்தை, स्मरता इव - நினைவு கூர்வது போலுள்ளதும், कुसुमाश्रुवर्षिणा - புஷ்பங்களாகிய கண்ணீரை உகுக்கின்றதுமான, अमुना - அந்த,

**अशोकेन** - அசோகமரத்தினால், **त्वं** - நீ, **शोच्यसे** - இரங்கப் படுகிறாய்.

(க-து) 'இவ்வசோகு புஷ்பிக்காதிருந்தது. அதைப் புஷ்ப் பிக்கச் செய்ய நீ, நூபுரமணிந்த பாதத்தால் உதைத்து அதற்கு தோஹ தம் செய்தாய். நீ உதைத்தாயானாலும், அது அம்மரத்திற்குச் செய்த அனுக்ரஹமாகும். இவ்வனுக்ரஹம் எல்லாமரங்களுக்கும் எளிதிற் கிடைப்பதன்று. ஆகையால், 'இந்துமதியின் காலுதையால் நாம் புஷ்பித்தோம்' என நீ செய்தஉதவியை நினைவு கூர்ந்துள்ளது போன்று இம்மரம், உனது பிரிவை எண்ணி வருந்துவதாய்க்கண்ணீர் விடுவதுபோல் மலர்களைச் சொரிகின்றது. மரமும் உனக்காக வருந் துகின்றது.

**अन्यदुर्लभम्-अन्यस्याः दुर्लभं** - எனக்கொண்டு உத்தமஸ்தி ரீகளிடமிருந்தே தோஹதம் பெறப்படவேண்டுமாதலால் உன்னைத்தவிர்த்து வேறுஸ்திரீகளிடமிருந்து இத்தகைய உதவியை அசோகம் பெற முடியாது என்றும் பொருள் கொள்ளலாம்.

இச்சுலோகத்தை அருணகிரி நாதர் இடைச்செருகலாகக்கருதி உரை இடாது சென்றார்.

तव निःश्वसितानुकारिभिर्बकुलैरर्धचितां समं मया ।
असमाप्य विलासमेखलां किमिदं किन्नरकण्ठि सुप्यते ॥ ६४ ॥

'**किन्नरकण्ठि** - கின்னரரைப் போன்ற குரலையுடைய வளே! **तव** - உனது, **निःश्वसितानुकारिभिः** - மூச்சுக்காற்றை நிகர்க்கின்ற (மணமுள்ள), **बकुलैः** - மகிழ மலர்களால், **मया समम्** - என்னுடன்கூட, **अर्धचिताम्** - பாதிதொடுக்கப்பட்ட, **विलासमेखलां** - விளையாட்டு மேகலையை, **असमाप्य** - முடிக் காமல், **इदम्** - இப்படி, **किं** - ஏன், **सुप्यते** - தூங்கப்படு கிறது?

(க-து) 'உனது மூச்சுக்காற்றைப் போல் மணம் மிகுந்த இவ் வகுள மலர்களால் இடுப்பிலணிய மேகலையைத்தொடுக்க இருவருமாக

ஆரம்பித்தோமே! அதை இடையிலே நிறுத்திவிட்டு இவ்வாறு நீ உறங்கலாமா? எடுத்தகாரியத்தை முடிப்பதன்றோ அழகு.

'வகுளமேகலை தொடுத்தகாலத்தில் மகிழம்பூவின்பெருமையைப்பற்றி இந்துமதி பாடி இருக்கலாம். அவளது குரலின் இனிமையை நினைத்து அஜன், किन्नरकण्ठि - என அழைக்கின்றான்' என்பர் தக்ஷிணாவர்த்தர்.

கின்னரர்கள்—இனிய சாரீரத்திற்காகப் பிரசித்தி பெற்ற தேவஜாதியினர்.

समदुःखसुखः सखीजनः प्रतिपच्चन्द्रनिभोऽयमात्मजः ।
अहमेकरसस्तथापि ते व्यवसायः प्रतिपत्तिनिष्ठुरः ॥ ६५ ॥

'अयम्-இந்த, सखीजनः - தோழியர், समदुःखसुखः - துக்கத்திலும் ஸுகத்திலும் (உன்னுடன்) ஒத்ததன்மையையுடையவர்; (अयम्)-இந்த, आत्मजः - குமாரன், प्रतिपच्चन्द्र-निभः - சுக்லபக்ஷ பிரதமை (த்விதீயை) சந்திரனைப் போன்றவன். अहम् - நான், एकरसः - ஒரே நிலையான அன்புடையவன்; तथाऽपि-அப்படியிருக்கையிலும், ते -உனது, व्यवसायः - (எங்களை விட்டுச்செல்லுதல்என்ற) செய்கை, प्रतिपत्तिनि-ष्ठुरः - நினைக்கினும் கொடுமையானது.

(க-து) 'நீ இவ்வுலகத்தைத் துறந்து செல்லக் காரணமேயில்லை. உன் சுகத்தைக் கண்டு மகிழ்பவரும், துக்கத்தைக் கண்டு வருந்துபவருமான உண்மைத் தோழியரைப் பெற்றுள்ளாய். சுக்லபக்ஷத்விதீயை யன்று காணப்படும் இரண்டாம் பிறைச் சந்திரனைப் போல் அழகிய இளரும் மகனையுமடைந்துள்ளாய். உன் கணவனாகிய நானும் உன்னைத்தவிர வேறு எவரையும் விரும்பாத சீலமுடையவன். இப்படி எல்லா நலன்களையும் பெற்றுள்ள நீ எங்களையெல்லாம் விட்டுச் செல்ல வேண்டும் என்று முடிவு செய்தது மிகக் கொடுமையாகும். இதைப்பற்றிய நினைவும் கூடக் கொடிது: தாங்கமுடியாதது.

**प्रतिपत्** - என்ற சொல் பிரதமையைத்தான் குறிக்குமாயினும், அன்று சந்திரன் காணப்படாதாகையால், த்விதீயைச்சந்திரன் என்ற பொருள் கொள்ளவேண்டும்.

धृतिरस्तमिता रतिश्च्युता विरतं गेयमृतुर्निरुत्सवः ।
गतमाभरणप्रयोजनं परिशून्यं शयनीयमद्य मे ॥ ६६ ॥

'**अद्य** - இப்பொழுது, **मे**-எனது, **धृतिः** - மனவலிமை (அல்லது அன்பு), **अस्तं** - நாசத்தை, **इता** - அடைந்துவிட்டது ; **रतिः** - களிப்பு, **च्युता** - நீங்கிவிட்டது ; **गेयम्**-பாட்டு, **विरतम्**-முடிந்து விட்டது; **ऋतुः**-(வஸந்தம் முதலிய) பருவம், **निरुत्सवः** - விழாவற்றதாகியது; **आभरण-प्रयोजनम्**-அணிகளின் உபயோகம், **गतम्**-(இல்லாமற்) போய்விட்டது; **शयनीयम्** - படுக்கை, **परिशून्यम्** - முற்றிலும் சூனியமாகிவிட்டது.

(க-து) 'நீ இறந்ததால் என்தைர்யம் சென்றது. களிப்புடன் பொழுது போக்க நீ இல்லாததால் எனக்கு இனி விளையாட்டு இல்லை. உனது ஸங்கீதம் இனி எனக்குக் கிட்டாது. வஸந்தம் முதலான ருதுக்களில் அந்த அந்தக் காலங்களில் கொண்டாடப்படும் கொண்டாட்டங்களும் ஆடல் பாடல்களும் இனி எனக்கில்லை. நான் ஆபரணமணிந்து அவ்வழகைக்காண நீ இல்லாததால் இனி எனக்கணிகலன்களால் பயன் ஒன்றுமில்லை. ஆபரணங்களுக்கும் ஆபரணமான நீ அணிவதனாலேயே பயன் பெறும் அணிகள் இப்பொழுது பயனற்றுப் போய்விட்டன. நீ இல்லாததால் படுக்கை அடியோடு பாழாகிவிட்டது.

गृहिणी सचिवः सखी मिथः प्रियशिष्या ललिते कलाविधौ ।
करुणाविमुखेन मृत्युना हरता त्वां वद किं न मे हृतम् ॥ ६७ ॥

'(**त्वम्** - நீ), **गृहिणी**-(எனக்கு) மனைவியாகவும், **सचिवः**-மந்திரியாகவும், **मिथः** - தனிமையில், **सखी** - துணைவியாகவும், **ललिते** - மனோஹரமான, **कलाविधौ** - கலைகளின் பிரயோ

கத்தில், प्रियशिष्या - அன்பிற்குகந்த மாணவியாகவும், अभूः - இருந்தாய்; (ஆகையால்), त्वां - உன்னை, हरता - கவருகின்ற- करुणाविमुखेन - கருணையற்ற, मृत्युना யமனால், मे - என்னைச் சேர்ந்த, किं - எப்பொருள்தான், न हृतम् - அபகரிக்கப்படவில்லை? वद - சொல்.

(க-து) நீ எனக்குக் குடும்பத்தை நடத்திச் செல்லும் மனைவியாகவும், ஆலோசனை கூறும் மந்திரியாகவும், தனிமையிலும் துணை செய்யும் ஆப்த துணைவியாகவும், சங்கீதம்முதலிய லலிதமான கலைகளை நன்கு பயின்று என்னை மகிழ்விக்கும் மாணவியாகவும் இருந்தாய். இவ்வாறு எல்லாப் பண்புகளுடனும் இருந்த உன்னை மரணமடையச் செய்ததால் யமன், என்னிடமிருந்த எல்லாவற்றையும் கவர்ந்து விட்டான். நீ மறைந்து விட்டதால் எனக்கு இனி மந்திரி இல்லை, துணைவி இல்லை; மாணவி இல்லை; மனைவியில்லை; யாருமே இல்லை.

मिथः - என்பதை कलाविधौ - என்பதற்கு விசேஷணமாகக் கொண்டு இங்குக் கூறப்படும் லலிதகலை, வாத்ஸ்யாயனர் கூறுகின்ற ஆப்யந்தர கலையாகும் என்பாருமுண்டு.

शिष्यतां निधुवनोपदेशिनः शंकरस्य रहसि प्रपन्नया । शिक्षितं युवतिनैपुणं तया (குமா. 8. 17) என்பதும் இக் கருத்தை வலியுறுத்தும்.

मदिराक्षि मदाननार्पितं मधु पीत्वा रसवत् कथं नु मे ।
अनुपास्यसि बाष्पदूषितं परलोकोपनतं जलाञ्जलिम् ॥ ६८ ॥

'मदिराक्षि - மயக்கும் கண்களை உடையவளே, मदाननार्पितम् - என்வாயினின்று தரப்பட்டதும், रसवत् - இனிமையுள்ளதுமான, मधु - மதுவை, पीत्वा - குடித்து, (பழகிய நீ), परलोकोपनतं - மறுவுலகில் கிட்டியுள்ளதும், मे - எனது, बाष्प दूषितं - கண்ணீரால் கெடுக்கப்பட்டுள்ளதுமான, जलाञ्जलिं - (நான்

தரும்) தர்ப்பண நீரை, कथं नु - எப்படி, अनुपास्यसि - பருகப் போகிறாய்?

(க-து) 'நான் எப்பொழுதும், நறுமணமும் இனிமையுமுள்ள மதுவை முதலில் என்வாயில் ஊற்றிக்கொண்டு, பின் அதையே என் வாயினின்றும் உனக்கு அளித்துப் பருகச்செய்து மகிழ்விப்பது வழக்கம். இத்தகைய மதுவையே நீ விரும்பிப் பானம் செய்து பழகியுள்ளாய். இப்பொழுது பருகுவதற்காக என்சேர்ந்த நீரைத் தர்ப்பணம் செய்து உனக்கு அளிக்கப் போகிறேன். அத்துடன் கண்ணீரும் சேர்ந்துள்ளது. அதை நீ எவ்வாறு பருகப் போகிறாய்?

विभवेऽपि सति त्वया विना सुखमेतावदजस्य गण्यताम् ।
अहृतस्य विलोभनान्तरैर्मम सर्वे विषयास्त्वदाश्रयाः ॥ ६९ ॥

'विभवे - அதிகமான செல்வம், सति अपि - இருந்த போதிலும், त्वया विना - நீ இன்றி (இருக்கின்ற), अजस्य - அஜனுக்கு, सुखम् - சுகமானது, एतावत् - இவ்வளவுதான், (என), गण्यताम् - உணரப்படட்டும்; विलोभनान्तरैः - மனம் கவரும் பிறபொருள்களால், अहृतस्य - கவரப்படாத, मम - எனக்கு, विषयाः - இன்பங்கள், सर्वे - எல்லாம், त्वदाश्रयाः - உன்னைச் சார்ந்தவையே.'

(க-து) 'வாழ்வில் வேண்டிய இன்பங்களைத் துய்க்க நான் வசதிகள் எல்லாம் பெற்றிருந்தபோதிலும் இனி எனக்கு இன்பம் என்பதில்லை. நீ உயிரோடிருந்தவரை அனுபவித்ததோடு அது முடிந்து விட்டது. ஏனெனில் இன்பந்தரும் பொருள்கள் எல்லாம் நீ அருகிலிருந்தால்தான் என் மனத்தைக் களிப்பிக்கும். முன்பும் உன்னுடன் இருக்கும் பொழுதே அவைகள் எனக்கு இன்பமளித்தன. நீ இல்லாதபோது அப்பொருள்கள் என் மனத்தைக் கவரச் சக்தியுடையன அல்ல. அன்றி, அவை துன்பத்தையே யளிப்பனவாம்.

विलपन्निति कोसलाधिपः करुणार्थग्रथितं प्रियां प्रति ।
अकरोत् पृथिवीरुहानपि स्रुतशाखारसबाष्पदुर्दिनान् ॥ ७० ॥

**कोसलाधिपः** - கோஸலதேச அரசனாகிய அஜன், **इति** - இவ்வாறு, **करुणार्थग्रथितं** - சோகரஸத்தைப் பொருளாகக் கொண்டதாக, **प्रियां प्रति** - மனைவியைக் குறித்து, **विलपन्** - புலம்பிக்கொண்டு, **पृथिवीरुहान् अपि** மரங்களையுங் கூட, **स्रुत शाखा रस बाष्प दुर्दिनान्** - பெருகுகின்ற பிசினாகிய கண்ணீர் மழை சொரிவனவாக, **अकरोत्** - செய்தான்.

(க-து) அஜன் இவ்வாறு பார்ப்பவர் மனத்திலும் சோகமுண்டாகும்படிப் புலம்புகையில், அருகிலிருந்த மரங்களும் கிளைகளினின்றும் பிசினைப் பெருக்கியனவாய்ப் புலம்புவனபோல் இருந்தன.

ஸ்தாவரங்களுக்கும் உணர்ச்சியுண்டு என்பது சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளதே. மெதுவாக உணர்கின்ற மரங்களும் அறியும்படி அஜனது சோகமிருந்ததென்பதைக் காட்ட **अपि**-என்ற சொல், **पृथिवीरुहानपि** என்பதில் வந்துள்ளது. **अपि ग्रावा रोदित्यपि दळति वज्रस्य हृदयम्** என்பதுபோல் உணர்ச்சியற்ற கல் புலம்புவதாகக் கூறுது, மரங்கள் புலம்பியதாகக்கூறியது மிகவும் பொருத்தமானது' என்பர்.

**'विषये ते महाराज रामव्यसनकर्शिताः। अपि वृक्षाः परिम्लानाः सपुष्पांकुरकोरकाः। परिशुष्कपलाशानि वनान्युपवनानि च** என்பதுடன் ஒப்பிட்டு நோக்குக.

अथ तस्य कथंचिदङ्कतः स्वजनस्तामपनीय सुन्दरीम्।
विससर्ज कृतान्त्यमण्डनामनलायागुरुचन्दनैधसे ॥ ७१ ॥

**अथ** - பிறகு, **स्वजनः** - உற்றார், **तस्य**-அவ்வஜனுடைய, **अङ्कतः** - மடியிலிருந்து, **कथंचित्** - ஒருவாறு, **अपनीय** - (அவளை) எடுத்துச் சென்று, **कृतान्त्य मण्डनां** - செய்யப்பட்ட இறுதி அலங்காரங்களையுடைய, **तां** - அந்த, **सुन्दरीं** - அழகிய இந்துமதியை, **अगुरु चन्दनैधसे** - அகில், சந்தன

மரங்களை விறகாக உடைய, अनलाय - நெருப்பில், विससर्ज- கிடத்தினர்.

(க-து) பிறகு அஜனுடைய உறவினர், அவனது மடியிலிருந்த இந்துமதியை எடுத்துச் சென்று, கடைசியாகச் செய்யவேண்டிய அணிகளை அணிவித்து, அகிற்கட்டை, சந்தனக் கட்டை இவை களாலாகிய சிதையில் கிடத்தி நெருப்பிடச்செய்தனர்.

प्रमदामनु संस्थितः शुचा नृपतिः सन्निति वाच्यदर्शनात् ।
न चकार शरीरमग्निसात् सह देव्या न तु जीविताशया ॥ ७२ ॥

'नृपतिः - அரசன், सन् - அறிஞனாகவிருந்தும், शुचा - துக்கத்தினால், प्रमदां अनु - மனைவியுடன் கூட, संस्थितः - இறந்து விட்டான்' इति - என்ற, वाच्य दर्शनात् - பழியை நோக்கியதால், देव्या सह - மனைவியுடன் கூட, शरीरम् - தனது உடலை, अग्निसात् - தீப்படுவதாக, न चकार-(அஜன்) செய்யவில்லை; जीविताशया तु न - உயிர் வாழவேண்டுமென்ற ஆசையால் அன்று.

(க-து) இந்துமதியிடம், அரசன் தன் உயிரைக் காட்டிலும் அதி கம் பற்றுக்கொண்டிருந்தான். ஆனால் அவன் அவளுடன் தன்னைமாய்த் துக்கொள்ளவில்லை. ஏனெனின், உலகத்தார், ஒரு பெண்ணுக்காக ஓர் அரசன்-அறிஞன்-பிரஜைகளின் ஸுக துக்கங்களைக் கருதவேண் டியவன்-தன்னலம்மாத்திரம் கருதி உயிரைவிட்டான் எனத் தன்னைத் தூற்றப்போகின்றனரே என்ற எண்ணத்தினால் அவன் உயிர்விட வில்லையே தவிர வாழவேண்டும் என்ற ஆசையாலன்று.

अथ तेन दशाहतः परे गुणशेषामुपदिश्य भामिनीम् ।
विदुषा विधयो महर्द्धयः पुर एवोपवने समापिताः ॥ ७३ ॥

अथ - பிறகு, विदुषा - சாஸ்திரமறிந்த, तेन - அவ்வஜ னால், गुणशेषां - குணங்களால் மாத்திரம் மிகுந்துள்ள (இறந்த), भामिनीं - இந்துமதியை, उपदिश्य - குறித்து,

**दशाहतः**-பத்து நாட்களுக்கு(ப்பிறகு), **परे**-மேற்பட்ட, (செய்யப்படவேண்டிய), **विधयः** - ஈமக்கடன்கள், **महर्द्धयः** - மிகவும் நிறைவுள்ளனவாக, **पुरः** - பட்டணத்தின், **उपवने एव** - உத்யானவனத்திலேயே, **समापिताः** - முடிக்கப்பட்டன.

(க-து) பிறகு அஜன், இந்துமதிக்குப் பத்துநாட்களுக்குப்பின் செய்யவேண்டிய ஸபிண்டீகரணம் முதலான ஈமக்கடன்களை எவ்வகைக் குறைவு மின்றி, அவள் இறந்த அவ்வுத்யான வனத்திலேயே செய்து முடித்தான்.

**दशाहतः** - தசாஹத்திற்குப் பிறகு என்றும் கொள்ளலாம்.

स विवेश पुरीं तया विना क्षणदापायशशाङ्कदर्शनः ।
परिवाहमिवावलोकयन् स्वशुचः पौरवधूमुखाश्रुषु ॥ ७४ ॥

**तया विना** - அவ்விந்துமதியின்றி, **क्षणदा-अपाय-शशाङ्क-दर्शनः** - இரவின் முடிவிலுள்ள சந்திரனைப்போன்ற தோற்றமுடைய, **सः** - அவ்வஜன், **पौर वधू मुखाश्रुषु** - நகர மாதர்களின் கண்ணீர்களில், **स्वशुचः** - தன் துக்கத்தின், **परिवाहं इव** - போக்குவீடு (மதகை) போல், **अवलोकयन्** - பார்த்துக் கொண்டு, **पुरीं** - நகரத்துள், **विवेश** - புகுந்தான்.

(க-து) அஜன், மனைவியை இழந்ததால் வருத்தமுற்று விடியற்காலச் சந்திரனைப்போல் ஒளிகுன்றிய தோற்றத்துடனிருந்தான். அவன் அவளின்றி நகரில் புகுந்தபொழுது நகரமாதர்கள் கண்ணீர் பெருக்கினர். அது அஜன் மனத்தில் தேக்கியுள்ள துக்கத்திற்குப் போக்குவீடு போன்றிருந்தது. இதைக் கண்டு கொண்டே அஜன் நகரத்திற்குள் புகுந்தான்.

**परिवाहः**--வழிந்தோடுதல் என்றும் பொருள் கொண்டு, 'அஜன், பெண்களின் கண்ணீரைத் தன் மனத்தில் நிரம்பியுள்ள துக்கம் இடம் பற்றாது வழிந்தோடுவதாகக் கருதினான்' என்றும் சொல்லலாம்.

अथ तं सवनाय दीक्षितः प्रणिधानाद् गुरुराश्रमस्थितः ।
अभिषङ्गजडं विजज्ञिवानिति शिष्येण किलान्वबोधयत् ॥ ७५ ॥

**अथ** - பிறகு, **सवनाय** - யாகத்திற்காக, **दीक्षितः** - ஸங்கல் பித்துக்கொண்ட, **गुरुः** - வஸிஷ்டர், **आश्रमस्थितः** - ஆச் ரமத்தில் இருந்துகொண்டே, **तं** - அவ்வஜனை, **अभिषङ्गजडं** - சோகத்தினால் அறிவு குழம்பியவனாக, **प्रणिधानात्** - தியா னத்தினால், **विजज्ञिवान्** - அறிந்தவராக, **इति** - இவ்வாறு, **शिष्येण** - ஸிஷ்யர் மூலம், **अन्वबोधयत्** - அறிவுறுத்தினார்.

(க-து) அஜனின் குலகுருவாகிய வஸிஷ்டர், அவன் மனை வியை இழந்த துக்கத்தினால் அறிவு குழம்பியுள்ளானெனத் தியானத் தினால் அறிந்து, அவனுக்குத் தெளிவு புகட்டுவதற்காக ஒரு ஸிஷ்யரை அனுப்பி அறிவுறுத்தினார். வஸிஷ்டர் ஒரு யாகஞ்செய்யத் தொடங்கி இருந்தமையால் அவரே நேரில் வரக்கூடவில்லை.

**किल** - வாக்யாலங்காரம்:

असमाप्तविधिर्यतो मुनिस्तव विद्वानपि तापकारणम् ।
न भवन्तमुपस्थितः स्वयं प्रकृतौ स्थापयितुं पथश्च्युतम् ॥ ७६ ॥

'**मुनिः** - வஸிஷ்டமுனிவர், **असमाप्तविधिः यतः** - யா கத்தை முடிக்காதவராகவிருந்த காரணத்தால், **तव** - உனது, **तापकारणं** - துக்கத்தின் காரணத்தை, **विद्वान् अपि** - அறிந்த வராயினும், **ततः** - (உனது) இயல்பினின்றும், **च्युतं** - நழு வியுள்ள, **भवन्तम्** - உன்னை, **प्रकृतौ** - இயற்கைக் குணத்தில், **स्थापयितुं** - நிறுத்த (தேற்ற), **स्वयं** - தாமே, **न उपस्थितः** - வரவில்லை.

(க-து) 'உன் இயல்பான மனஉறுதி, இந்துமதியின் மரணத் தால் குலைந்துள்ளது என்பதை வஸிஷ்டர் அறிவார். ஆயினும் அவர், தொடங்கிய யாகத்தை இன்னும் முடிக்காததால் உனக்குத் தேறுதல் கூறிப் பழைய மனஉறுதியை நிலைநிறுத்த அவரேநேரில் வர இயலவில்லை.

இது முதல் பதினைந்து சுலோகங்கள் அஜனைத் தேற்று பவையாக அமைந்தவை.

मयि तस्य सुवृत्त वर्तते लघुसंदेशपदा सरस्वती ।
शृणु विश्रुतसत्त्वसार तां हृदि चैनामुपधातुमर्हसि ॥ ७७ ॥

'**सुवृत्त** - நன்னடக்கையுடையோனே! **लघु-सदेश-पदा** - சுருக்கமான செய்திச் சொற்களையுடைய, **तस्य सरस्वती** - அம்முனிவரின் வார்த்தை, **मयि** - என்னிடத்தில், **वर्तते** - உள்ளது; **विश्रुत-सत्त्वसार**-பிரசித்தமான சிறந்த மனஉறுதி யுடையோனே! **तां** - அவ்வார்த்தையை, **शृणु** - கேட்பாயாக; **एनां** - இதை, **हृदि** - ஹ்ருதயத்தில், **उपधातुं च** - வைத்துக் கொள்ளவும், **अर्हसि** - உரியவனாகவிருக்கிறாய்.

(க-து) 'வஸிஷ்டர் நேரில் வர இயலாவிடினும் அவர் என் மூலமாக உனக்குச் சுருக்கமான ஒரு செய்தியை அனுப்பியுள்ளார். அச்செய்தியை நீ கேட்டு உன் மனத்தில் பதித்துக் கொள்வாயாக. உன் மன உறுதியை உலகமெல்லாமறியும்.

**सुवृत्त** - என்பதால் அஜனது குருபக்தியும் புலனாகும்.

पुरुषस्य पदेष्वजन्मनः समतीतं च भवच्च भावि च ।
स हि निष्प्रतिघेन चक्षुषा त्रितयं ज्ञानमयेन पश्यति ॥ ७८ ॥

'**अजन्मनः** - பிறப்பற்ற, **पुरुषस्य** - பரமபுருஷனாகிய விஷ்ணுவின், **पदेषु** - அடிவைப்புக்களில் (மூன்று உலகங்களிலும்), **समतीतं च** - நடந்தது, **भवत् च** - நடப்பது, **भावि च** - நடக்கப்போவது என்ற, **त्रितयं** - மூன்றையும், **सः** - அம்முனிவர், **निष्प्रतिघेन** - தடையற்ற, **ज्ञानमयेन** - அறிவாகிய, **चक्षुषा**-கண்ணினால்,(ஜ்ஞானத்ருஷ்டியினால்), **पश्यति-हि** - காண்கிறார்.

(க-து) 'வஸிஷ்டர் ஆகாயம், பூமி, பாதாளம் என்ற மூவுலகங்களில் நிகழும், இறந்த-நிகழ்-எதிர் காலங்களின் எல்லாச் செய்திகளையும் தம் ஜ்ஞானதிருஷ்டியால் சிறிதும் தடையின்றி நன்கு அறியவர். ஆகையால் அவர் கூறுபவற்றைக் குறித்துச்சிறிதும் ஐயம் கொள்ளாது கேட்பாயாக:

चरतः किल दुश्चरं तपस्तृणबिन्दोः परिशङ्कितः पुरा ।
प्रजिघाय समाधिभेदिनीं हरिरस्मै हरिणीं सुराङ्गनाम् ॥ ७९ ॥

'**पुरा किल** - முன்னொரு காலத்தில், **दुश्चरं** - செய்தற்கரிய, **तपः** - தவத்தை, **चरतः** - செய்கின்ற, **तृणबिन्दोः** - திருணபிந்து என்ற முனிவரிடமிருந்து, **परिशङ्कितः** - பயந்த, **हरिः** - இந்திரன், **समाधिभेदिनीं** - தவத்தைக் குலைக்கத்திறமை வாய்ந்த, **हरिणीम्** - ஹரிணீ என்ற, **सुराङ्गनां** - அப்ஸரஸை, **अस्मै** - அந்த முனிவரிடம், **प्रजिघाय** - அனுப்பினன்.

(க-து) 'முன்னொரு காலத்தில் திருணபிந்து என்ற முனிவர் கடுமையான தவம் புரிந்தார். அதனல் அச்சமுற்ற இந்திரன், ஹரிணீ என்ற பெயருள்ள ஒரு தேவப்பெண்ணைத் தவத்தைக் குலைப்பதற்காக அவரிடம் அனுப்பினன்.

இது முதல் நான்கு சுலோகங்களில் இந்துமதியின் முற்பிறப்பு வரலாறு கூறப்படுகிறது.

स तपःप्रतिबन्धमन्युना प्रमुखाविष्कृतचारुविभ्रमाम् ।
अशपद्भव मानुषीति तां शमवेलाप्रलयोर्मिणा भुवि ॥ ८० ॥

'**सः** - அம்முனிவர், **शम वेला प्रलयोर्मिणा** - பொறுமையாகிய கரைக்குப் பிரளயகால அலைபோன்ற, **तपः प्रतिबन्ध-मन्युना** - தவத்தின் இடையூற்றினல் ஏற்பட்ட கோபத்தினலே, **प्रमुख आविष्कृत चारुविभ्रमां** - எதிரில் காண்பிக்கப்பட்ட அழகிய காதற்செய்கைகளை உடைய, **तां**-அந்த ஹரிணியை,

'भुवि - மண்ணுலகில், मानुषी - மனுஷ்யஸ்திரீயாக, भव - ஆவாயாக', इति - என்று, अशपत् - சபித்தார்.

(க-து) 'முனிவரின் கோபம் ஊழிக்கால அலைபோல் எல்லா வற்றையும் அழிக்கவல்லது. அக்கோபத்தை அடக்கி வைத்திருப்பது அவரது பொறுமை என்ற கரையாகும். ஹரிணீ அவரது மன உறுதியைத் தளரச் செய்யவேண்டு மென்பதற்காக அவரெதிரில் வந்துதன் உடலழகைக் காட்டினாள். இதனால் முனிவரது பொறுமையாகியகரையைக்கடந்து கோபம் என்ற ஊழிக்கால அலை புரண்டது. 'நீ தேவத் தன்மையை இழந்து மானிடப்பெண்ணாவாயாக' எனச்சபித்தார்.

तपःप्रतिबन्धमन्युना शशाप என அன்வயிக்க. கோபத்திற்குக் காரணம் தவத்தின் இடையூறு; அதாவது ஹரிணீ அவர் எதிரில்நின்று காதலைக்காட்டும் செயல்களைப்புரிந்தது. முனிவரை வசீகரிக்காவிடினும் அவளது செயல் அழகுடனே இருந்ததெனக்காட்ட, चारु विभ्रमाम्-என்றார். முனிவரை வசீகரிக்காத காரணத்தால் அவளது அழகிற்கு இழுக்கு ஒன்றுமில்லை என்பது கருத்து.

भगवन् परवानयं जनः प्रतिकूलाचरितं क्षमस्व मे ।
इति चोपनतां क्षितिस्पृशं कृतवाना सुरपुष्पदर्शनात् ॥ ८१ ॥

'भगवन् - முனிவரே, अयं जनः - இந்த ஸ்திரீ (நான்), परवान् - பிறருக்கு அடங்கியவள்; मे- எனது, प्रतिकूलाचरितं- மாறான நடக்கையை, क्षमस्व - பொறுப்பீராக', इति - என்று கூறி, उपनतां च - சரணமடைந்த ஹரிணியை, आ सुरपुष्पदर्शनात् - தேவமலரைக்காணும்வரை, क्षितिस्पृशं - பூமிஸ்பர்சமுடையவளாக (இருக்கும்படி), कृतवान् - செய்தார்.

(க-து) "சாபத்தைச் செவியுற்ற ஹரிணீ முனிவரிடம் 'இது நான் வேண்டுமென்று செய்த தவறன்று. நான் இந்திரனது அடிமை. அவர் கட்டளைப்படி நடந்தேன். என்னை மன்னிக்க வேண்டு'மென்று அடிபணிந்து வேண்டினாள். முனிவரும், 'நீ மானிடப் பெண்ணாகப்

பிறக்க வேண்டியதுதான். ஆனால் சுவர்க்கலோகத்துப் புஷ்பத்தை நீ எப்பொழுது காணப் பெறுவாயோ அப்பொழுது உன் சாபம் நீங்கும்' எனச்சாபத்திற்கு முடிவை அருளினர்.

क्रथकैशिकवंशसंभवा तव भूत्वा महिषी चिराय सा।
उपलब्धवती दिवश्च्युतं विवशा शापनिवृत्तिकारणम् ॥ ८२ ॥

'क्रथकैशिक वंश संभवा-விதர்ப்பவம்சத்தில் பிறந்த, सा-அந்தஹரிணீ, तव - உனது, महिषी - பட்டமஹிஷியாக, भूत्वा - ஆகி, चिराय - வெகுநாட்களுக்குப் பிறகு, दिवः - சுவர்க்கத்திலிருந்து, च्युतं - விழுந்த, शापनिवृत्ति-कारणम् - சாபம் நீங்குவதற்குக் காரணத்தை (மலரை), उपलब्धवती - அடைந்தவளாக, विवशा - இறந்துவிட்டாள்.

(க-து) 'அந்த ஹரிணியே இந்துமதி என்ற பெயருடன் விதர்ப்பராஜன் மகளாகப் பிறந்து உன்னை மணந்து வாழ்ந்திருந்தாள். முனிவர் கூறியபடி சுவர்க்கபுஷ்பத்தைக்கண்டதும் சாபம் நீங்கியது. அவள் இறந்து விட்டாள்.

तदलं तदपायचिन्तया विपदुत्पत्तिमतामुपस्थिता ।
वसुधेयमवेक्ष्यतां त्वया वसुमत्या हि नृपाः कलत्रिणः ॥ ८३ ॥

'तत् - ஆகையால், तदपायचिन्तया - அவள் பிரிவைப் பற்றி நினைத்தலால், अलम् - பயன்யாதுமில்லை; उत्पत्तिमतां - (உலகத்தில்) பிறந்தவர்க்கு, विपत् - மரணமானது, उपस्थिता- நிச்சயமாக ஏற்பட்டுள்ளது; त्वया - உன்னால், इयम् - இந்த, वसुधा - பூமி, अवेक्ष्यताम् - நன்கு கவனிக்கப் படட்டும்; हि - ஏனெனில், नृपाः - அரசர்கள், वसुमत्या - பூமியினால், कलत्रिणः - மனைவியை யுடையவர்கள்.

(க-து) 'ஆகையினால் இந்துமதியின் பிரிவைப்பற்றி நீ வருந்த வேண்டாம். உலகில் பிறந்தவர்க்கு என்றுவது ஒரு நாள் மரணம் ஏற்படுவது நிச்சயம். நீ இதைப் பற்றி நினையாமல் உலகத்தை நன்கு

பரிபாலிப்பதில் கவனத்தைச் செலுத்து. அரசர்களுக்கு உலகம் ஒரு மனைவியாகும். ஆகையால் நீ மனைவியை இழந்தவனென நினையாதே.

उदये मदवाच्यमुज्झता श्रुतमाविष्कृतमात्मवत्तया ।
मनसस्समुपस्थिते ज्वरे पुनरक्लीबतया प्रकाश्यताम् ॥ ८४ ॥

'**उदये** - செல்வம் வந்த காலத்தில், **मदवाच्यम्** செருக்கினால் வரும் நிந்தையை, **उज्झता** - நீக்குகின்ற, (त्वया)-உன்னால், **आत्मवत्तया** - உறுதியான மனத்தை உடையவனாகவிருக்குந்தன்மையாலே, **श्रुतम्**-சாஸ்திர அறிவு, **आविष्कृतम्**-புலப்படுத்தப்பட்டது; (அவ்வறிவு), **मनसः** - மனத்திற்கு, **ज्वरे**-தாபமானது, **समुपस्थिते** உண்டானபொழுது, **अक्लीबतया**-தைரியத்தின் மூலம், **पुनः**-மறுபடியும், **प्रकाश्यताम्** - (உலகிற்குக்) காட்டப்படவேண்டும்.

(க-து) 'மனிதர்கள் செல்வச்சிறப்பு வந்தபோது செருக்குடையவராவது இயல்பு. ஆனால் நீ உன வாலிபப்பருவத்தில் வளமிக்க ராஜ்யத்தை அடைந்தபொழுது சிறிதும் மன உறுதியை இழக்காமல், படித்த சாஸ்திரங்களினால் பெற்ற அறிவுக்கேற்ப நடந்து கொண்டாய். இப்பொழுது உன்மனம் வருத்தமுறக் காரணங்களுள்ளன. ஆனால் இச்சமயத்திலேதான் சாஸ்திரங்களினால் பெற்ற அறிவைக் கொண்டு மனத்தைத் தளரவிடாமலிருக்க வேண்டும். தைரியத்தைக் கண்டு உன் அறிவை உலகம் உணருமாக.

रुदता कुत एव सा पुनर्भवता नानुमृतापि लभ्यते ।
परलोकजुषां स्वकर्मभिर्गतयो भिन्नपथा हि देहिनाम् ॥ ८५ ॥

'**रुदता** - அழுகின்ற, **भवता** - உன்னால், **सा** - அவள், **कुत एव** - எவ்வாறுதான், **पुनः**-மறுபடியும், **लभ्यते** அடையப்படுவாள்? **अनुमृता अपि** - உடன் இறக்கின்றுயானாலும், **न लभ्यते** - அடையப்படாள்; **परलोकजुषां** - மறு உலகத்தை

அடைகின்ற (இறக்கின்ற), **देहिनां** - பிராணிகளுக்கு, **गतयः**- (அவர்கள்) செல்லவேண்டிய இடங்கள், **स्वकर्मभिः** - அவர்களுடைய புண்ய பாபங்களினால், **भिन्नपथाः हि** - வேறுபடுத்தப்பட்ட வழிகளை யுடையன அல்லவா ?

(க-து) 'நீ அழுவதனால் அவளை அடையமுடியாது. நீ அவளுடன் இறப்பதானாலுங் கூட அவளைப் பெற முடியாது எனெனில் இறந்த பின்பு உயிர்கள் எல்லாம் ஒரே இடம் செல்வனவல்ல. முற்பிறப்பிற் செய்த நல்வினை தீவினைகளுக்குத் தகுந்தவாறு அவைகள் செல்லும் இடங்களும் மாறுபடுகின்றன. ஆதலால் நீ உயிரை விட்டாலும் இந்துமதி சென்ற வழியே சென்று அவள் இருக்கும் இடத்தையே அடைவாயென்பது நிச்சயமில்லை.

**अनुमृता**-என்பதற்கு, 'அவள் அனுமரணம் செய்யப்படினும்' என்று பொருளுரைப்பர் அருணகிரி நாதர்.

**'अनुमृता-अनुम्रियमाणा । कर्मण्ययं प्रयोगः । म्रियतिरनुपसर्गयुक्त-स्सकर्मकस्स्यात् । तथा सेतुकाव्ये:—**

**इअ अज्जं चेअ मए णिहअम्मि दसाणणे णिआ किक्किन्धम् ।**
**अणुमरिहिइ व मरन्तं दच्छिहि व जिअन्तराहवं जणअसुआ ॥**
**[इत्यद्यैव मया निहते दशानने नीता किष्किन्धाम् ।**
**अनुमारिष्यति वा म्रियमाणं द्रक्ष्यतिवा जीवद्राघवं जनकसुता ॥]*'**

என்பது அவரது உரை.

अपशोकमनाः कुटुम्बिनीमनुगृह्णीष्व निवापदत्तिभिः ।
स्वजनाश्रु किलातिसंततं दहति प्रेतमिति प्रचक्षते ॥ ८६ ॥

---

* आश्वास 14, श्लोक 55. नागपाशबद्धौ निश्चेष्टौ रामलक्ष्मणौ दृष्ट्वा सुग्रीवो वानरान् वदति । 'सलक्ष्मणं रामं किष्किन्धां नीत्वा वीतव्रणं यूयं कुरुत । अहमपि तावत् रावणं हत्वा सीतां किष्किन्धामानेष्ये । तत्र यदि रामो जीवति तर्हि सीता तं जीवन्तं द्रक्ष्यति । यदि च व्रणवेदनामसहमानो म्रियते तदा म्रियमाणं तमनुमारिष्यती' त्यस्य श्लोकस्यार्थः ॥

'**अपशोकमनाः**-வருத்தம் நீங்கிய மனத்தனாய், **कुटुंबिनीं** - மனைவியை, **निवापदत्तिभिः** - தர்ப்பணம் முதலியவற்றால், **अनुगृह्णीष्व** - மகிழ்விப்பாயாக; **अतिसंततम्** - இடையீடற்ற, **स्वजनाश्रु** - தன் உறவினரின் கண்ணீர், **प्रेतम्** - இறந்தவரை, **दहति** - எரிக்கின்றது', **इति** - என்று, **प्रचक्षते किल** - (ஆன்றோர்) கூறுகின்றனர்.

(க-து) 'ஆகையால் நீ சிறிதும் வருந்தாமல் தர்ப்பணம் முதலியவற்றைச் செய்து உன் மனைவியைத் திருப்தியுறச்செய். இக்கடன்களைச் செய்யாமல் உறவினர் வருந்திக் கண்ணீர் விடுவாராயின், அக்கண்ணீர் இறந்தவரைத் துன்புறுத்துமெனப் பெரியோர் கூறுகின்றனர். இந்துமதி வருந்தாமலிருக்க நீ வருந்தாதே:

मरणं प्रकृतिः शरीरिणां विकृतिर्जीवितमुच्यते बुधैः ।
क्षणमप्यवतिष्ठते श्वसन् यदि जन्तुर्ननु लाभवानसौ ॥ ८७ ॥

"**शरीरिणां** - உடலெடுத்த பிராணிகளுக்கு, **मरणम्** - மரணமானது, **प्रकृतिः** - இயற்கையானது; (நிச்சயம்); **जीवितम्** - பிழைத்திருத்தல், **विकृतिः** - எதிர்பாராதது (நிலையற்றது),' (என), **बुधैः** - அறிஞர்களால், **उच्यते** - சொல்லப்படுகிறது, **जन्तुः** - பிராணியானது, **क्षणं अपि** - ஒரு கணமாயினும், **श्वसन्** - ஜீவித்துக்கொண்டு, **यदि अवतिष्ठते** - இருக்குமாயின், **असौ** - இப்பிராணி, **लाभवान् ननु**-பெரிய லாபமடைந்ததே.

(க-து) "உலகிலுள்ள மனிதன் முதலிய உயிர்வாழ்பிராணிகளனைத்திற்கும் மரணம் என்பது இயற்கையானது. எந்த நிமிஷத்தில் மரணம் ஏற்பட்டாலும் அதைப்பற்றி ஆச்சரியப் படுவதற்கு ஒன்றுமில்லை. சிறிது காலமாவது பிழைத்திருப்பதுதான் ஆச்சரியப் படுதற்குரியது' என்று அறிந்த பெரியோர் கூறுகின்றனர். ஆகையால் ஒரு நிமிஷநேரம் உயிருடன் வாழ்வதைக் கூட எதிர்பாராத லாபமாகவே ஒவ்வொரு உயிர்வாழ் பிராணியும் கருதவேண்டும்.

உயிர் வாழ்வது நிலையில்லை என்பதைக்காட்ட வந்தது यदि - என்பது.

अवगच्छति मूढचेतनः प्रियनाशं हृदि शल्यमर्पितम् ।
स्थिरधीस्तु तदेव मन्यते कुशलद्वारतया समुद्धृतम् ॥ ८८ ॥

**मूढचेतनः** - கலங்கிய அறிவையுடைய மனிதன், **प्रिय - नाशम्** - தனக்குப்பிரியமுள்ளவரின் மரணத்தை, **हृदि** - (தன்) ஹ்ருதயத்தில், **अर्पितम्** - செலுத்தப்பட்ட **शल्यम्** - இருப்புமுளையாக, **अवगच्छति**-நினைக்கிறான்; **स्थिरधीः तु**-நிலை பெற்ற அறிவையுடையவனோ, **तत् एव** - அச்சல்யத்தையே, **कुशलद्वारतया** - நன்மைக்கு வழியாயுள்ளதால், **समुद्धृतम्**- எடுக்கப்பட்டதாக, **मन्यते** - கருதுகின்றான்.

(க-து) கூரிய அறிவற்றவர், தமக்கு வேண்டியவர் இறந்தால் அதைப் பெருந்துக்கமாகக் கொள்கின்றனர். தம் ஹிருதயத்தில் சல்யம் பாய்ச்சப்பட்டதாக எண்ணி வருந்துவர். நல்லறிவு பெற்றோர், அத்தகைய மரணம் தமது பற்றுக்களைக் குறைத்துக் கொள்ளக் காரண மெனக்கருதி, மனத்திலிருந்தமுள் எடுக்கப்பட்டதாக நினைப்பர். எவ்வளவுக்கெவ்வளவு ஒருவனுக்கு உற்றோர் உறவினர் குறைவாக இருக்கின்றனரோ அவ்வளவுக்கவ்வளவு அவனுக்குக் கவலைகளும் குறைகின்றன. பிரியமானவர்களின் எண்ணிக்கை அதிகம் இருப்பின் துக்கமும் அதிகமாகும். **'यावतः कुरुते जन्तुः संबन्धान् मनसः प्रियान् । तावन्तोऽस्य नियम्यन्ते हृदये शोकशङ्कव.'** ॥ என்பர் பெரியோர்.

स्वशरीरशरीरिणावपि श्रुतसंयोगविपर्ययौ यदा ।
विरहः किमिवानुतापयेद् वद बाह्यैर्विषयैर्विपश्चितम् ॥ ८९ ॥

**स्व शरीर शरीरिणौ अपि** - தனது உடலும் ஆத்மாவுங் கூட, **यदा**-எக்காரணத்தினால், **श्रुत संयोग-विपर्ययौ** - வேதத்தினால் அறியப்பட்ட சேர்க்கையையும் பிரிவையுமுடையன வாக இருக்கின்றவோ, **तदा** - அதனாலேயே, **बाह्यैः** - புறத்

துள்ள, **विषयैः** - பொருட்களான மனைவிமக்களுடன், **विरहः**- பிரிவு, **विपश्चितम्** - அறிவுள்ளவனை, **किमिव** - எவ்வாறு தான், **अनुतापयेत्** - வருத்தும் ? **वद** சொல்;

(க-து) எப்பொழுதும் சேர்ந்தே இருப்பனவாகக் காணப்படுகின்ற உடலும் ஆத்மாவும், சில சமயங்களில் கூடுகின்றனவாகவும், சில சமயங்களில் பிரிகின்றனவாகவும், வேதங்கள் கூற அறிகின்றோம். அப்படி யிருக்கச் சேர்ந்திராத உறவினர் பிரிவதைப்பற்றி அறிந்தவர் வருந்தப் படலாமா ? '**सहजीविनयोर्नास्ति संबन्धः कायजीवयोः। पुत्रमित्रकळत्रेषु संबन्धः केन हेतुना**'॥ என்பர் பெரியோர்.

न पृथग्जनवच्छुचो वशं वशिनामुत्तम गन्तुमर्हसि ।
द्रुमसानुमतां किमन्तरं यदि वायौ द्वितयेऽपि ते चलाः ॥ ९० ॥

'**वशिनां** - புலனையடக்கியவரில், **उत्तम** - சிறந்தோனே! **पृथग्जनवत्** - பாமரரைப்போல், **शुचः** - துக்கத்தின், **वशं गन्तुं** - வசமாவதற்கு, **न अर्हसि** - நீ தகுந்தவனல்லன்; **वायौ** - காற்றில், **द्वितयेऽपि** - இரண்டுவகையான, **ते** - அவைகள், (மரங்களும் மலைகளும்), **यदि चलाः**-அசையுமாயின், **द्रुमसानुमताम्** - மரங்களுக்கும் மலைகளுக்கும், **किम्-अन्तरम्** - என்ன வித்யாஸம் ?'

(க-து) 'நீ புலனடக்கத்திற் சிறந்தவன் ; பாமரரைப் போல் நீ வருந்தல் தகாது ; மலைக்கு அசலம் எனப்பெயருண்டு. அசையாதது எனப்பொருள். காற்றடிக்கும் பொழுது மலை மரம் இரண்டுமே அசையுமாயின் அவ்விரண்டிற்கும் வித்யாசம்தான் என்ன ? அறிவற்றவரைப்போல் நீயும் வருந்தினால் பின் அறிந்தாருக்கும் அறியாதாருக்கும் பேதம் எது ?'

स तथेति विनेतुरुदारमतेः प्रतिगृह्य वचो विससर्ज मुनिम् ।
तदलब्धपदं हृदि शोकघने प्रतियातमिवान्तिकमस्य गुरोः ॥९१॥

**सः** - அவன், **उदारमतेः** - பெரும் மனமுடைய, **विनेतुः**- குருவின், **वचः** - வார்த்தையை, **तथा इति** - அவ்வாறே என, **प्रतिगृह्य** - ஏற்று, **मुनिं** - முனிவரை, **विससर्ज** - விடுத்தான். (ஆனல்) **तत्** - (குருவின்) வாக்கு, **शोकघने** - துக்கம் நிறைந்துள்ள, **अस्य** - அவனுடைய, **हृदि** - ஹ்ருதயத்தில், **अलब्ध - पदम्** - இடம்பெருததாக, **गुरोः** - குருவின், **अन्तिकं**-ஸமீபத்திற்கு, **प्रतियातम् इव** - திரும்பிச் சென்றுவிட்டதுபோலும் இருந்தது.

(க-து) குருவினது உபதேசப்படித் துக்கத்தை ஒழித்து வாழ்வதாகக் கூறி, முனிரை விடைகொடுத்தனுப்பினன். ஆனல் அஜனது துக்கம் சிறிதும் குறையவில்லையாதலால் குருவின் உபதேசம், விரும்பிய பலனளிக்கவில்லை. அஜனது ஹ்ருதயம் முற்றிலும் துக்கமே நிறைந்திருந்ததால், குருவின் உபதேசம் இடம் பெருது அவரிடமே திரும்பிச் சென்று விட்டது போலும் என்பது கவியின் உத்ப்ரேக்ஷை.

तेनाष्टौ परिगमिताः समाः कथंचिद्बालत्वादवितथसूनृतेन सूनोः ।
सादृश्यप्रतिकृतिदर्शनैः प्रियायाः स्वप्नेषु क्षणिकसमागमोत्सवैश्च ॥

**अवितथ - सूनृतेन** - உண்மையானதும் பிரியமானதுமான பேச்சையுடைய, **तेन** - அவ்வஜனலே,-**सूनोः** - மகன், **बालत्वात्** - சிறுவனுக இருந்தமையால்,-**प्रियायाः** - இந்துமதியின், **सादृश्य प्रतिकृतिदर्शनैः** - ஒப்புமையுள்ள பொருள், படம் இவைகளைக் காண்பதாலும், **स्वप्नेषु** - கனவுகளில், **क्षणिक समागम उत्सवैः च** - க்ஷணநேரமேயுள்ள சந்திப்புக்களிலுண்டாகும் இன்பங்களாலும், **कथञ्चित्** - கஷ்டத்துடன், **अष्टौ** - எட்டு, **समाः** - வருஷங்கள், **परिगमिताः** - போக்கப்பட்டன.

(க-து) மகன் தசரதன் சிறுவனுக இருந்து ராஜ்யத்தை ஏற்கும் பருவமடையாதவனுக இருந்ததால் அவனுடைய நன்மையைக் கருதி

அஜன், இந்துமதி இறந்தபின் எட்டு வருஷம் உயிர்வாழ்ந்தனன். இந்துமதி போன்று தோற்றமுள்ள பொருள்களையும் அவளது உருவப் படத்தையும் பார்த்தல், கனவுகளில் ஏற்படும் அவளது சந்திப்பு இவைகளே அஜன் உயிரைத் தாங்குவதற்குக் காரணமாயிருந்தன.

तस्य प्रसह्य हृदयं किल शोकशङ्कुः
प्लक्षप्ररोह इव सौधतलं बिभेद ।
प्राणान्तहेतुमपि तं भिषजामसाध्यं
लाभं प्रियानुगमने त्वरया स मेने ॥ ९३ ॥

**शोकशङ्कुः** - துயரமாகிய முளை, **तस्य** - அவ்வஜனின், **हृदयं**-ஹிருதயத்தை, **प्लक्षप्ररोहः**-ஆலமரத்தின் முளையானது, **सौधतलम् इव**-அரண்மனை மாடியைப்பிளப்பதுபோல, **प्रसह्य**-பலமாக, **बिभेद किल**-பிளந்தது. **सः**-அவ்வஜன், **प्राणान्तहेतुं** -மரணத்திற்குக் காரணமும், **भिषजां अपि** - வைத்தியர்களுக்கும், **असाध्यम्**-சிகித்ஸை செய்ய இயலாததும் ஆன, **तं** - அத்துயரமாகிய முளையை, **प्रियानुगमने त्वरया** - மனைவியைப் பின்தொடர்வதிலுள்ள ஆவலினால், **लाभं** - லாபமாகவே, **मेने** - நினைத்தான்.

(க-து) ஆலமரத்தின் வேர் சிறிதேயாயினும் பெரிய மாளிகைகளையும் பிளந்து விடுகின்றது காலக்ரமத்தில். அதைப்போல் இந்துமதியின் பிரிவுத்துயர் அஜனின் இதயத்தைத் தாக்கி அவனை நோயில் வீழ்த்தியது. இம்மனநோயைத் தீர்க்க வைத்யர்களால் கூடவில்லை. ஆனால் அஜன் சிறிதும் இந்நோயால் வருந்தவில்லை. மனைவியைப் பிரிந்து வாழ்வதினும் இறப்பதே நலமென அவன் எண்ணியதால், மரணத்திற்குக் காரணமாயினும் இத்துயரத்தை ஒரு வரமாகவே எண்ணினான்.

இம்மனநோய் பின்பு உடல் நோயையும் உண்டாக்கியது என்பது, அடுத்த சுலோகத்தில் **रोगोपसृष्ट** - என்பதால் புலனாகும்.

प्लक्षः - இத்திமரம், இரளிமரம், கல்லால் என்றும் கூறுவர்.

सम्यग्विनीतमथ वर्महरं कुमार-
मादिश्य रक्षणविधौ विधिवत् प्रजानाम् ।
रोगोपसृष्टतनुदुर्वसतिं मुमुक्षुः
प्रायोपवेशनमतिर्नृपतिर्बभूव ॥ ९४ ॥

**अथ** - பிறகு, **नृपतिः** - அரசன், **सम्यग्विनीतम्** - நன்கு பயிற்றுவிக்கப்பட்டவனும், **वर्महरं** - கவசத்தைத் தரிக்கும் வயதுவந்தவனும், **कुमारं**-வாலிபனுமான தசரதனை, **प्रजानाम्**- குடிகளை, **रक्षणविधौ** - பரிபாலிக்கும் செயலில், **विधिवत्** - முறைப்படி, **आदिश्य** - நியமித்து, **रोगोपसृष्ट-तनु-दुर्वसतिं** - பிணியினால் பீடிக்கப்பட்ட உடலிலுள்ள கஷ்டமான வாஸத்தை, **मुमुक्षुः**-விடவிரும்பியவனாக, **प्रायोपवेशन मतिः** - உணவின்றி இறக்க எண்ணமுடையவனாக, **बभूव** - ஆனான்.

(க-து) மகன் தசரதன் அரசுரிமையை ஏற்கத் தகுந்த வயதை யடைந்தான். பிறப்பிலேயே அவனுக்கு உண்டாகியிருந்த அடக்கம் பெரியோர்களின் அறிவுரைகளால் இன்னும் விளங்கியது. இத்தகைய நற்குணங்கள் பொருந்திய தசரதன் அரசனாக விருக்கத் தகுந்தவன் எனத்தீர்மானித்து, அஜன் அவனுக்குப் பட்டங்கட்டினான். பிணிகள் நிரம்பிய தனது உடலை விட்டுவிட எண்ணிப் பட்டினி கிடந்து உயிர்விடத் தீர்மானித்தான்.

**प्रायोपवेशः** - மிகப்பெரிய-கழுவாயற்ற—பாவங்கள் புரிந்தவனும், தீர்க்கமுடியாத பிணியால் வருந்துபவனும், ஸ்வர்க்கம் முதலான பெரும் பயன்களை விரும்புபவனும் உயிர் நீங்கும் தருவாயில் தீக்குளித்தோ, உபவாசமிருந்தோ உயிர்துறத்தல்.

तीर्थे तोयव्यतिकरभवे जह्नुकन्यासरय्वो-
देहत्यागादमरगणनालेख्यमासाद्य सद्यः ।
पूर्वाकाराधिकतररुचा संगतः कान्तयासौ
लीलागारेष्वरमत पुनर्नन्दनाभ्यन्तरेषु ॥ ९५ ॥

**असौ** - அவன், **जह्नुकन्यासरय्वोः** - கங்கைஸரயூநதிகளின், **तोय व्यतिकर भवे** - ஜலங்களின் சேர்க்கையால் உண்டான, **तीर्थे** - புண்ய தீர்த்தத்தில், **देहत्यागात्** - உடலை விடுவதால், **सद्यः** - உடனேயே, **अमरगणनालेख्यं** - தேவனுகக் கருதப் படும் நிலையை, **आसाद्य** - அடைந்து, **पूर्व-आकार-अधिकतर - रुचा** - முன்னிருந்த தோற்றத்தைக் காட்டிலும் அதிகக் காந்தியையுடையவளான, **कान्तया** - மனைவியுடன், **सङ्गतः** - சேர்ந்தவனுக, **नन्दनाभ्यन्तरेषु**-நந்தவனத்தின் உள்ளே இருக் கின்ற, **लीलागारेषु** - விளையாடுவதற்கான மாளிகைகளில், **पुनः** - மறுபடியும்,**अरमत** - மகிழ்ந்தான்.

(க-து) கங்கையும் ஸரயூநதியும் சேரும் புண்ணிய தீர்த்தத் தில் மூழ்கி அஜன் உயிரைவிட்டான். தேவருள் ஒருவனுக ஆகி ஸ்வர்க்கத்தை அடைந்தான். முன்னமே அங்குச் சென்றிருந்த இந்து மதி தெய்வத்தன்மை பெற்றதால் மேலும் அதிக அழகுடன் விளங் கினுள். அஜன் அவ்விந்துமதியுடன் தேவர்களின் உத்யானமாகிய நந்தனவனத்தில் மகிழ்ந்திருந்தான்.

**अमरगणना - लेख्यम्**—'தேவர்களின் எண்ணிக்கையில் எழுதப்படுபவனுக இருத்தலை' என்பது பதப்பொருள்,

इति महाकवि श्री कालिदासकृतौ
रघुवंशमहाकाव्ये अष्टमः सर्गः ॥

---

॥ श्रीः ॥

# ॥ रघुवंशः ॥

## नवमः सर्गः

पितुरनन्तरमुत्तरकोसलान् समधिगम्य समाधिजितेन्द्रियः ।
दशरथः प्रशशास महारथो यमवतामवतां च धुरि स्थितः ॥ १ ॥

**समाधि जितेन्द्रियः** - மன ஒருமையால் புலன்களை வென்றவரும், **यमवतां** - அடக்கமுடைய முனிவர்களுக்கும், **अवतां च** - காக்கின்ற அரசர்களுக்கும், **धुरि** - முதலில், **स्थितः** - இருந்தவரும், **महारथः** - மஹாரதருமான, **दशरथः** - தசரதர், **पितुः अनन्तरं** - தந்தைக்குப்பின், **उत्तरकोसलान्** - உத்தரகோஸல நாட்டை, **समधिगम्य** - பெற்று, **प्रशशास** - ஆண்டார்.

(க-து) தந்தைக்குப் பின் அரசைப் பெற்றுத் தசரதர் நன்கு ஆண்டுவந்தார். அவர் மன ஒருமை மூலம் புலன்களை வென்றவரா தலால் அடக்கமுடைய முனிவர்களுள் முதல்வராகக் கருதப்பட்டார். நன்கு பரிபாலனம் செய்த காரணத்தால் அரசர்களிலும் அவர் தலை சிறந்து விளங்கினார். ஆகவே தசரதர் ஒருவரே, உலகத்தைத் துறந் தவர், துறவாதவர் இருவரிலும் முன்னிலையிலிருந்தார் என்பது கருத்து.

**यमवताम्** - புலனடக்கம், இரக்கம், பொறுத்தல், கொடை, உண்மை பேசுதல், நேர்மை, கொல்லாமை, களவாடாமை, சொல்லினிமை, மன அடக்கம் முதலியன யமம் எனப்படும்.

**ब्रह्मचर्यं दया क्षान्तिर्दानं सत्यमकल्कता । अहिंसाऽस्तेयमाधुर्ये दमश्चेति यमाः स्मृताः** - என்பது யமத்தைப்பற்றிக் கூறுவது.

'यमवतां धुरि - स्थितः' என்பதால், பின் அவதரிக்கப் போகின்ற பகவானுக்குத் தந்தையாதற்குரிய தகுதி கூறிய தாயிற்று. இதேபோல், मेनां मुनीनामपि माननीयाम् என விசேஷித்ததையும் காண்க'

'महारथः'—अर्धरथ, रथ, महारथ, अतिरथ—என்ற நால் வகை வீரர்களுள் தசரதர் மூன்றாவது பிரிவைச் சேர்ந்தவர். एको दश सहस्राणि योधयेद् यस्तु धन्विनाम्। शस्त्रशास्त्रप्रवीणश्च विज्ञेयस्स महारथः। धनुर्वेदस्य तत्त्वज्ञः, सर्वशास्त्र विशारदः। सहस्रं योधयत्येकः स महारथ उच्यते - என்பன மஹாரதனது தன்மையைக் கூறுவன.

இந்த ஸர்க்கத்தில் முதல் ஐம்பத்து நான்கு சுலோகங் களிலும் நான்காவது அடிகளிலே கவி, யமகம் என்ற சொல்லணியை வைத்துள்ளார். யமகமாவது, பொருள் வேறு பட்டு ஒத்த ஒலியுடையனவான சொற்கள் திரும்பவருத லாம். நான்காவது அடியில், 'य मवतामवतां' என்பதில் मवतां मवतां - என ஒலிஒத்துப் பொருள் வேறு பாட்டுடன் வந்திருத்தலைக் காண்க.

अधिगतं विधिवद् यदपालयत् प्रकृतिमण्डलमात्मकुलोचितम् ।
अभवदस्य ततो गुणवत्तरं सनगरं नगरंध्रकरौजसः ॥ २ ॥

अधिगतम् - கிடைக்கப்பெற்றதும், आत्म कुल उचितम् - தமது வம்சத்திற்கு உரியதுமான அரசை, विधिवत् - முறைப்படி, यत् - எக்காரணத்தால், सः - அவர், अपालयत् - காத்தாரோ, ततः - அதனால், सनगरम् - நகரமக்களுடன் கூடிய, प्रकृति मण्डलम् - நாட்டின் ஜன ஸமூகமானது, नग-रन्ध्र-कर-ओजसः - மலையைத் துளைத்த ஸுப்ரஹமண்யருக்கு ஒத்தபலமுடைய, अस्य - அத் தசரதருக்கு, गुणवत्तरम् - மிகவும் குணமுடையதாக, अभवत् - இருந்தது.

(க-து) முறைப்படி பெற்ற அரசைத் தசரதர் நன்கு ஆண்ட காரணத்தால் நகரமக்கள் நாட்டு மக்கள் அனைவரும் அவரிடம் அன்பு கொண்டனர். குணமுடைய அரசனிருந்ததால் மக்கள் அதிகம் நன்மைகள் பெற்றிருந்தனர் என்றும் கூறலாம்.

ராஜ்யத்தைக் காக்கும் திறன் பெற்றிருந்தமைபற்றித் தசரதர், ஸுப்ரஹ்மண்யருடன் ஒப்பிடப்பட்டார். ஒருஸமயம் ஸுப்ரஹ்மண்யர் தமது பலத்தைக்காட்ட வேலை எறிந்து கிரௌஞ்ச மலையைத் துளைத்தார் என்பது புராண வரலாறு.

उभयमेव वदन्ति मनीषिणस्समयवर्षितया कृतकर्मणाम् ।
बलनिषूदनमर्थपतिं च तं श्रमनुदं मनुदण्डधरान्वयम् ॥ ३ ॥

**मनीषिणः** - அறிஞர்கள், **बल निषूदनम्** - பலன் என்ற அஸுரனைக்கொன்ற இந்திரன், **मनुदण्डधर-अन्वयम्** - மனு என்னும் அரசரின்வம்சத்தில் தோன்றிய, **अर्थपतिं तं च**-அரசரான தசரதர் (என்ற), **उभयम् एव** - இருவரை மாத்திரமே, **समयवर्षितया** - தக்க ஸமயத்தில் பொழிவதால், **कृतकर्मणाम्** - கடமையைச் செய்தவர்களின், **श्रमनुदम्** - ச்ரமத்தைப் போக்குவர்களாக, **वदन्ति** - கூறுகின்றனர்.

(க-து) முன் சுலோகத்தில் மக்கள் பொதுவாகப் பெற்ற நன்மை கூறப்பட்டது. இதில் அரசனிடம் அன்புகொண்டு கடமையைத் தவறாது செய்தவர்கள் பெற்ற நன்மை கூறப்படுகிறது. தசரதர், மக்களில் தம் தம் கடமையை விடாது செய்தவர்களுக்குத்தக்க சமயத்தில் வரையாது பொருளை வழங்கி அவர்களது கஷ்டங்களைப் போக்கி மேன்மேலும் தங்களது தர்மங்களைச் செய்யத் தூண்டினார். இவ்வகையில் தசரதர், யாகாதிதர்மங்களைச் செய்யும் நாட்டில் உரிய பருவத்தில் மழை பெய்விக்கும் இந்திரனோடு ஒப்ப இருந்தார். ஆகவே இவ்விருவரைத் தவிர பிறர் எவரும் இவ்வாறில்லை என்பது சான்றோர் கருத்து.

जनपदे न गदः पदमादधावभिभवः कुत एव सपत्नजः।
क्षितिरभूत् फलवत्यजनन्दने शमरतेऽमरतेजसि पार्थिवे ॥ ४ ॥

**शमरते** - அமைதியில் பற்றுள்ளவரும், **अमरतेजसि** - தேவர் போன்ற ஒளியுடையவருமான, **अजनन्दने** - தசரதர், **पार्थिवे (सति)** - அரசராக விருந்த பொழுது, **जनपदे**-நாட்டில் **गदः** - வியாதி, **पदं न आदधौ** - அடிவைக்கவில்லை; **सपत्नजः** - பகைவர்களாலுண்டான, **अभिभवः** - அவமதிப்பு, **कुतः एव** - எவ்வாறுதான் ஏற்படும்? **क्षितिः** - பூமி, **फलवती** - சிறந்த பலனுடையதாக, **अभूत्** - இருந்தது.

(க-து) தசரதர் அரசராக இருந்தபொழுது, தெய்வத்தால் வரும் தீமையான வியாதி அந்நாட்டில் அடிவைக்கவுமில்லை, எனவே மனிதர்களால் வரும் தீங்கு இல்லை என்பது கூறவேண்டுவதன்று. பூமி நிரம்பவும் பயனை அளித்தது.

**क्षितिः** - என்பதற்குப் பதிலாக, **कृषिः** - என்ற பாடம் கொண்டு, உபலக்ஷணத்தால் இச் சொல் உழவுத்தொழி லன்றிப் பிறதொழில்களையும் குறிக்கும் என்பர் நாராயண ரும் அருணகிரிநாதரும்.

दशदिगन्तजिता रघुणा यथा श्रियमपुष्यदजेन ततः परम् ।
तमधिगम्य तथैव पुनर्बभौ न न महीनमहीनपराक्रमम् ॥ ५ ॥

**मही** - பூமி, **दश-दिगन्त-जिता** - பத்துத் திசைகளையும் வென்ற, **रघुणा** - ரகுவினாலும், **ततः परम्** - ரகுவிற்குப் பின், **अजेन** - அஜனாலும், **यथा** - எவ்வாறு, **श्रियं** - செல்வத்தை, **अपुष्यत्**-விருத்திசெய்ததோ, **तथैव**-அவ்வாறே, **अहीनपराक्रमं**- (அவ்விருவர்க்கும்) குறையாத பராக்ரமமுடைய, **तम्** - அத் தசரதரை, **इनम्** - அரசராக, **अधिगम्य** - பெற்று, **पुनः** - மே லும், **न बभौ (इति) न** - விளங்கவில்லை என்பது இல்லை.

(க-து) ரகு பத்துத்திசைகளையும் வென்ற பராக்ரமமுடையவன். அஜனும் ஸ்வயம்வரத்திற்குப்பின் தன்னை எதிர்த்த அரசரனைவரையும் வென்றவன். தசரதர் அவ்விருவர்க்கு எவ்வகையிலும் தாழாத பராக்ரமமுடையவராதலால், அவர்கள் காலத்திலிருந்தது போன்றே பூமி செல்வம் நிறைந்திருந்தது.

'**अहीन पराक्रमम्** - என்பதற்கு, 'பாம்புகளின் தலைவனை ஆதிசேஷன் போல் பலமுடைய' என்றும் பொருள் கூறுவர்.

समतया वसुवृष्टिविसर्जनैर्नियमनादसतां च नराधिपः ।
अनुययौ यमपुण्यजनेश्वरौ सवरुणावरुणाग्रसरं रुचा ॥ ६ ॥

**नराधिपः** - அரசர் தசரதர், **समतया** - பட்சபாதமற்ற தன்மையாலும், **वसुवृष्टि-विसर्जनैः** - பொன் மழையை வழங்குவதாலும், **असतां** - துஷ்டர்களை, **नियमनात् च** - தண்டிப்பதினாலும், **सवरुणौ**-வருணனோடு கூடிய, **यम पुण्यजनेश्वरौ**- யமனையும் குபேரனையும், **अनुययौ** - (முறையே) அனுகரித்தார்; **रुचा** - ஒளியினால், **अरुणाग्रसरं** - அருணனைத் தேரோட்டியாகக் கொண்ட ஸூரியனை, **अनुययौ** - அனுகரித்தார்.

(க-து) பட்சபாதமின்மை, கொடை, துஷ்டர்களைத் தண்டித்தல் என்ற இக்குணங்களிலே தசரதர், முறையே யமனையும், குபேரனையும், வருணனையும் ஒத்திருந்தார். ஸூரியன் போல் ஒப்பற்ற ஒளியுடனும் இருந்தார்.

இச் சுலோகத்தில் தசரதர் திக்பாலகர் மூவருடனும் சூரியனுடனும் ஒப்பிடப்பட்டுள்ளார். பட்சபாதமின்மைக்கு யமன் பெயர்பெற்றவன். **समवर्ती**- என்பது அவனது பெயர்களுள் ஒன்று. கொடையில் குபேரன் பிரஸித்தனல்லனையினும் ஏராளமான செல்வமுடைமைபற்றிக் கொடையில் தசரதர் குபேரனுடன் ஒப்பிடப்பட்டார். அல்லது ரகுவிற்குப்பொன்மாரி பெய்தகாரணத்தாலும் கொடைக்கு உதாஹ

ரண புருஷனைக் குபேரன் கூறப்பட்டு இருக்கலாம். துஷ்டர்களைத் தண்டிப்பது வருணனது கடமையாகக் கூறப்பட்டுள்ளது. '**शास्ता हि वरुणो देवो मिथ्याह्याचरतां नृणाम्**' என்பதைக் காண்க.

न मृगयाभिरतिर्न दुरोदरं न च शशिप्रतिमाभरणं मधु ।
तमुदयाय न वा नवयौवना प्रियतमा यतमानमपाहरत् ॥ ७ ॥

**उदयाय**-நன்மைகளின் பொருட்டு, **यतमानम्** - முயலுகின்ற, **तम्**-தசரதரை, **मृगया-अभिरतिः**-வேட்டையில் மிகப் பற்று, **न अपाहरत्** - கவரவில்லை; **दुरोदरं** - சூதாட்டமும், **न-अपाहरत्** - ஈர்க்கவில்லை; **शशि-प्रतिमा-आभरणम्** - சந்திரனது பிரதிபிம்பத்தை அணியாகக்கொண்ட, **मधु च** - மதுவும்,**न-अपाहरत्** - இழுக்கவில்லை; **नव-यौवना** - புதிய யௌவனப் பருவமுள்ள, **प्रियतमा वा** - ஸ்திரீயும், **न अपाहरत्** - கவரவில்லை.

(க-து) ராஜ்யத்தின் நன்மையின் பொருட்டு முயன்று கொண்டிருந்ததால், மற்ற அரசர்களை எளிதிலே இழுத்துத் தம் வசப்படுத்தி அழிக்கின்ற மது, சூதாட்டம், காமம் முதலியன தசரதரை இழுக்க இயலவில்லை. தசரதர் அவைகள் வசப்படாது நாட்டின் நலன் கருதி மேன்மேலும் முயன்று கொண்டிருந்தார்.

இரவில் மாடியின் மேல் தளத்தில் சந்திர ஒளியிலே குடிக்கும்பொழுது, சந்திரபிம்பம் மதுவில் பிரதிபலிக்குமாதலால் மது, **शशि...भरणम्**-என விசேஷிக்கப்பட்டது. இதனால் அத்தகைய மதுவின் கவரும் சக்தி புலப்படும். ஸ்திரீ - என்றது தசரதரது மனைவியைத் தவிர்த்துப் பிறர் எனக் கொள்ளவேண்டும். மனிதனுக்கு மேன்மேலும் ஆசையை வளர்த்து அவனால் விடவும் முடியாதபடி அவனை உறுதியாகப்பற்றிக்கொண்டு முடிவில் படுகுழியில் தள்ளும் சிலவற்றிற்கு வ்யஸனங்கள் எனப்பெயர். '**यस्मात् तद् व्यस्यति श्रेयः**

तस्माद् व्यसनमुच्यते । व्यसत्यधो वा व्रजति तस्मात् तत् परिवर्जयेत् ॥'

இவ்வியஸனங்கள் காமத்தாலும் கோபத்தாலும் உண்டாவன. வேட்டையில் மிகப்பற்று, குடி, சூதாடுதல் பெண்களைவிரும்பல் என்ற இவை காமத்தால் வருவன. **'पानमक्षाः स्त्रियश्चेति मृगया च यथाक्रमम्। एतत् कष्टतमं विद्याच्चतुष्कं कामजे गुणे ॥ मृगयाक्षास्तथा पानं गर्हितानि महीभुजाम् । दृष्टास्तेभ्यस्तु विपदः पाण्डुनैषधवृष्णिषु ॥'**

கடுஞ்சொற்கூறல், துன்புறுத்தல், பொருளை அழித்தல் என்ற இவை கோபத்தால்வரும் வ்யஸனங்களாம்: **'वाग्दण्डयोश्च पारुष्यमर्थदूषणमेव च'**

வாக்பாருஷ்யமாவது: தேசம், ஜாதி, குலம் இவற்றைத் தூஷித்தல், உரத்துப் பேசுதல், பேச்சினால் அவமதித்தல், அருவருப்பு உண்டாக்க எதிராகப்பேசுதல், கல்வி, தொழில் இவைகளை நிந்தனை செய்து அதன் மூலம் அவற்றில்தேர்ந்த அறிவு பெற்றவர்களைத் தூற்றுதல், கிராம்யமாகவும் அஸப்யமாகவும் அமங்களமாகவும் பேசுதல் முதலியன. **'देशजातिकुलादीनामाक्रोशन्यङ्गसंयुतम् । यद्वचः प्रतिकूलार्थं वाक्पारुष्यं तदुच्यते ॥'** தண்டபாருஷ்யம் என்பது, சரீரத்தைத் தாக்குதல், கல், மண், சாம்பல் இவைகளைப் பிறர்மேல் வீசி மனத்திலும் உடலிலும் புண்உண்டாக்குதல் முதலியனவாம்.

न कृपणा प्रभवत्यपि वासवे न वितथा परिहासकथास्वपि ।
न च सपत्नजनेष्वपि तेन वागपरुषा परुषाक्षरमीरिता ॥ ८ ॥

**प्रभवति** - வல்லமை வாய்ந்த, **वासवेऽपि** - இந்திரனிடத்திலும், **कृपणा**-எளிமைதோன்றும், **वाक्**-வார்த்தையானது, **तेन** - தசரதரால், **न ईरिता** - சொல்லப்படவில்லை; **परिहास**-

**कथास्वपि** - பரிஹாஸமான பேச்சிலும்கூட, **वितथा** - பொய் வார்த்தை, **न (ईरिता)**-கூறப்பட்டதில்லை; **(किं) च** - மேலும், **अपरुषा** - கோபமற்ற அத் தசரதரால், **सपत्न जनेषु अपि** - பகைவர்களிடத்திலும், **वाक्** - வார்த்தையானது, **परुषाक्षरम्** - கடுமையான அக்ஷரங்களுடையதாயிருக்கும்படி, **न ईरिता** - சொல்லப்படவில்லை.

(க-து) தசரதர், இந்திரனிடத்தும் தமது எளிமை தோன்றப் பேசியதில்லை. பரிஹாஸத்திற்கேனும் பொய்பேசியதில்லை. கொடிய சொற்களுக்குத் தக்கவரான பகைவர்களிடமும் கடும்சொல் தசரதர் கூறியதில்லை. காரணம் கோபமில்லாமையே.

उदयमस्तमयं च रघूद्वहादुभयमानशिरे वसुधाधिपाः ।
स हि निदेशमलङ्घयतामभूत् सुहृदयोहृदयः प्रतिगर्जताम् ॥ ९ ॥

**वसुधाधिपाः** - அரசர்கள், **रघूद्वहात्** - ரகுவம்சத் தலைவராகிய தசரதரிடமிருந்து, **उदयं** - விருத்தி, **अस्तमयं च** - நாசம் (ஆகிய), **उभयं**-இருவகைப்பயனை, **आनशिरे** - அடைந்தனர்; **हि** - ஏனெனில், **सः** - அவர், **निदेशं** - (தனது) ஆணையை, **अलङ्घयतां** - மீறாதவர்களுக்கு, **सुहृत्** - நண்பராகவும், **प्रतिगर्जताम्** - எதிர்த்துக் கர்ஜனை செய்பவர்கட்கு, **अयोहृदयः**-இரும்பு மனமுடையவராகவும், **अभूत्**-இருந்தார்.

(க-து) தசரதர் தமது ஆணையைச் சிரமேற்கொண்டு வணங்கிய சிற்றரசர்க்கு நண்பராக இருந்து அவர்களது செல்வம் மேன்மேலும் செழிக்க உதவினார். தன்னை எதிர்த்த அரசர்கள் விஷயத்தில் அவரது மனம் இரும்போஎன நினைக்கும்படி கடினமனத்தினராய், அவர்களுக்கு அழிவை உண்டாக்கினார். இவ்வாறு சிற்றரசர்களில் வணங்கியவர்கள் மேன்மையையும், வணங்காதவர்கள் தாழ்மையையும் பெற்றனர்.

अजयदेकरथेन स मेदिनीमुदधिनेमिमधिज्यशरासनः ।
जयमघोषयदस्य तु केवलं गजवती जवतीव्रहया चमूः ॥ १० ॥

**अधिज्य शरासनः**-நாணேற்றிய வில்லையுடைய, **सः**-அத் தசரதர், **उदधिनेमिम्** - கடலைச்சுற்றிலுமுடைய, **मेदिनीम्** - பூமியை, **एकरथेन** - ஒரு ரதத்துடன் (மாத்திரம் இருந்து கொண்டு), **अजयत्** - வென்றார்; **गजवती** - யானைகளை யுடையதும், **जव-तीव्र-हया** - வேகம் மிகுந்த குதிரைகளை யுடையதுமான, **चमूः तु** - ஸேனையோ, **अस्य** - அவருடைய **जयं केवलम्** - வெற்றியை மாத்திரமே, **अघोषयत्** - கோஷித்தது.

(க-து) தசரதர், தமது வில்லைமாத்திரம் துணையாகக் கொண்டு, ரதத்திலமர்ந்து கடல் சூழ்ந்த இவ்வுலகை வென்றார். படைகளின் துணையினால் வெல்லவில்லை. உடன் சென்ற படைகள், அவர் வெற்றியடைந்தபிறகு ஜயகோஷமிடுவதற்கு மாத்திரமேஉபயோகமா யிருந்தன.

**नेमिः**-சக்கரத்தின் விளிம்பு; பூமியைச் சுற்றிலுமுள்ள தால் ஸமுத்ரம், நேமியாகக் கூறப்பட்டது. நாராயணர், அருணகிரிநாதர் இருவரும் இச் சுலோகத்திற்கு உரை செய்யவில்லை. அடுத்த சுலோகமும் ஒத்த கருத்தைத் தெரி விப்பதால் இதைஇடைச்செருகல் என எண்ணினர்போலும்.

अवनिमेकरथेन वरूथिना जितवतः किल तस्य धनुर्भृतः ।
विजयदुन्दुभितां ययुरर्णवा घनरवा नरवाहनसंपदः ॥ ११ ॥

**वरूथिना** - பாதுகாப்புடன் பொருந்திய, **एकरथेन** - சிறந்த ரதத்தின்மூலம், **अवनिं** - பூமியை, **जितवतः** - வென்ற வரும், **धनुर्भृतः** - வில்லைத் தாங்கியவரும், **नरवाहनसंपदः** - குபேரன்போல் செல்வமுடையவருமான, **तस्य** - அவருக்கு, **घनरवाः** - மேகம்போல் ஒலியுடைய, **अर्णवाः** - ஸமுத்திரங் கள், **विजय-दुन्दुभितां** - வெற்றி முழங்கும் துந்துபி வாத்யங் களின் தன்மையை, **ययुः किल** - அடைந்தன.

(க-து) தசரதர், ரதம் ஒன்றே துணையாகக் கொண்டு கடல் வரையுள்ள பூமியை வென்றதால், மேகம்போல் கர்ஜனை செய்கின்ற கடலே அவரது வெற்றியை முழங்கும் ஜயபேரிகையாக இருந்தது.

**वरूथः**-ரதங்கள் ஒன்றோடொன்று இடித்துக்கொள்ளாமைக்காக ரதத்தில் அமைக்கப்பட்டுள்ள ஒருவகை மரம் என்பர். ரதத்திலுள்ள வீரனைப் பாதுகாப்பதற்காக அதில் அமைக்கப்பட்டுள்ள ஒருபலகை என்பாருமுண்டு. முந்தைய பொருள், **वरूथो रथगुप्तिर्या तिरोधत्ते रथस्थितिम्** - என்ற அமர வாக்யத்தை ஆதாரமாகக் கொண்டது. இரண்டாவது கூறிய பொருள், **रथस्थितम्** - என்று பாடபேதம் கொள்வதால் பெறப்படும்.

शमितपक्षबलश्शतकोटिना शिखरिणां कुलिशेन पुरन्दरः ।
स शरवृष्टिमुचा धनुषा द्विषां स्वनवता नवतामरसाननः ॥ १२ ॥

**पुरन्दरः** - இந்திரன், **शतकोटिना** - நூறு முனைகளையுடைய, **कुलिशेन** - வஜ்ராயுதத்தினால், **शिखरिणां** மலைகளின், **शमित-पक्षबलः** - சிறகு பலத்தை அழித்தவனாக, **अभूत्** - இருந்தான்; **नव-तामरस-आननः**- புதிய தாமரை மலர்போன்ற முகமுடைய, **सः** - தசரதர், **स्वनवता** - ஒலிக்கின்றதும், **शरवृष्टि-मुचा** - அம்புமாரி பொழிவதுமான, **धनुषा** - வில்லினால், **द्विषां** - பகைவர்களின், **शमित-पक्षबलः**-துணைவர்களாகிய பலத்தை அழித்தவராக **अभूत्** - இருந்தார்.

(க-து) இந்திரன் வஜ்ராயுதத்தினால் மலைகளின் சிறகுகளை வெட்டி அவைகளின் பலத்தைப் போக்கியது போல் தசரதர் பகைவர்களின் துணைவர்களையும் கொன்று, அவர்களது பலத்தைக் குறைத்தார்.

இதனால் இந்திரனுக்கும் தசரதருக்கும் உள்ளஒப்புமை புலப்படும்.

**शितकोटिना** - என்பது நாராயணர் கொண்ட பாடம். **कुलिशेन** - என வந்துள்ளதால் - புனருக்த மின்மை நோக்க, **शितकोटिना** - (கூரான முனையுள்ள) என்பது தரமானதாகப் புலப்படுகிறது.

चरणयोर्नखरागसमृद्धिभिर्मुकुटरत्नमरीचिभिरस्पृशन् ।
नृपतयश्शतशो मरुतो यथा शतमखं तमखण्डितपौरुषम् ॥ १३ ॥

**मरुतः** - தேவர்கள், **शतमखं यथा** - இந்திரனை வணங்குவது போல், **शतशः** - நூற்றுக்கணக்கான, **नृपतयः** - அரசர்கள், **अखण्डित-पौरुषम्** -குறைக்கப்பெறாத பராக்ரமமுடைய, **तम्** - அவரை, **नख-राग-समृद्धिभिः** - (தசரதரது) நகத்தின் காந்தியினால் அதிகமான, **मुकुटरत्न-मरीचिभिः**:- கிரீட ரத்னங்களின் ஒளிகளால், **चरणोः** - பாதங்களை, **अस्पृशन्** - ஸ்பர்சித்தனர்.

(க-து) தேவேந்திரனைத் தேவர்கள் எவ்வாறு பயத்துடனும் பக்தியுடனும் வணங்குவரோ அவ்வாறே சிற்றரசர்கள் எல்லோரும் தசரதரது பாதங்களில் வணங்கினர். அவர்கள் தம் முடியைச் சாய்த்தபொழுது கிரீட மணிகளின் ஒளி, தசரதரது பாத நக காந்தி படுவதால், மிக அதிகமாயிற்று.

சிற்றரசர்கள், தலையையோ கிரீடத்தையோ பாதத்தில் வைத்து வணங்காது கிரீட ரத்னத்தின் ஒளிமாத்திரம் பாதத்தில் படும்படி வணங்கினர் என்றது, அவர்கள் தசரதரிடம் கொண்ட பக்தியையும் பயத்தையும் காட்ட.

निववृते स महार्णवरोधसस्सचिवकारितबालसुताञ्जलीन् ।
समनुकंप्य सपत्नपरिग्रहाननलकानलकानवमां पुरीम् ॥ १४ ॥

**सः** - அவர், **सचिव-कारित-बाल-सुत-अञ्जलीन्** - மந்திரிகளின் மூலம் செய்விக்கப்பட்ட இளம்பிள்ளைகளின் கைகூப்பு

தலையுடையவர்களும், **अनलकान्** -கேச அலங்காரமில்லாதவர் களுமான, **सपत्न परिग्रहान्** - பகைவர்களின் மனைவிமார்களை **समनुकंप्य** - நன்கு அனுக்ரஹித்தபின், **अलका-अनवमाम्** - அலகாபுரிக்குத் தாழாத, **पुरीं (प्रति)** - அயோத்தி நகரைக் குறித்து, **महार्णव-रोधसः** - கடல்களின் கரையினின்றும், **निववृते** - திரும்பினர்.

(க-து) அடங்காத அரசர்களைத் தசரதர் கொன்று விட்டதால் அவர்களது மனைவிமார்கள் கேச அலங்காரமின்றி இருந்தனர். மந்திரிகளின் உதவியால் தமது இளம் பிள்ளைகளைத் தசரதரது காலில் வீழ்ந்து வணங்கி அஞ்சலி செய்யும்படித் தூண்டினர். அதனால் மனம் இரங்கிய தசரதர், ராஜ்யம் முதலியன அளித்து முன்போல் அவர்கள் இருக்கும்படி அருள் புரிந்த பின், இனி வெல்லவேண்டிய இடம் எதுமில்லாததால் கடற்கரையினின்றும் தன் நகர் திரும்பினர்.

கணவனை இழந்து கைம்பெண்களான அரசிகள், தசரதர் முன்வருவது முறையன்றாதலால் **सचिव कारि....न्** - என்றார். ' **अनलकान्**'—**अलक**-முன்னுச்சி மயிர்; இங்கு அலங்காரமின்மைக்குக் காரணம் அவர்கள் கணவன்மார் இறந்தமை. **समनुकंप्य** - 'வேறு எவரும் அவர்களை நலியாதவாறு அருள் புரிந்து' என்றும் கொள்ளலாம்; அரசர்கள் தந்த காணிக்கை நிறைந்துள்ளதால் அயோத்தி, குபேரன் நகரமான அலகைக்குச் சிறிதும் தாழாதிருந்தது. இனி வெல்லவேண்டிய நில மில்லாததால், **महार्णवरोधसः** - என்றார்.

उपगतोऽपि च मण्डलनाभितामनुदितान्यसितातपवारणः ।
श्रियमवेक्ष्य स रन्ध्रचलामभूदनलसोऽनलसोमसमद्युतिः ॥ १९ ॥

**अनुदित-अन्य-सित-आतपवारणः** - மேலே எழாத பிற வெண்குடையை யுடையவரும், **अनल सोम समद्युतिः** - அக்னிக்கும் சந்திரனுக்கும் ஒத்தஒளியுடையவருமான, **सः**- அவ்வரசர், **श्रियम्**-லக்ஷ்மியை, **रन्ध्रचलाम्**-சிறுகுற்றத்திலும்

செல்பவளாக, **अवेक्ष्य** - கண்டு, **मण्डलनाभितां**-ராஜமண்டலத்தின் மையத்தை, **उपगतोऽपि च** - அடைந்தும், **अनलसः** - சோம்பலற்றவராக **अभूत्** - இருந்தார்.

(க-து) அர்த்த சாஸ்திரகாரர்கள் கூறும் பன்னிரண்டு வகை அரசர்கள் கொண்ட ராஜமண்டலத்தில் தசரதர், மையத்திலுள்ள முக்ய சக்ரவர்த்தியாக இருந்தார். ஆயினும் கவனக் குறைவினால் சிறிது குற்றம் ஏற்படினும் செல்வம் சென்றுவிடும் என்பதை உணர்ந்த அவர், பிறர்க்கு அஞ்சவேண்டிய நிலையிலில்லாதபொழுதும், செல்வத்தைக் காக்கும் விஷயத்தில் சிறிதும் சோம்பலின்றி இருந்தார். பொருளை ஈட்டும் காலத்திலும், சிற்றரசர்களை வெல்லும்பொழுதும் எவ்வளவு ஜாக்ரதையுடன் இருந்தாரோ அதே அளவு கவனத்தை அவர், கிடைத்த செல்வத்தைப் பாதுகாப்பதிலும் கொண்டார்.

பன்னிருவகை அரசர். 1. **अरिः**- பகைவன்; 2. **मित्रम्** - நண்பன்; 3. **अरिमित्रम्**-பகைவனின் நண்பன்; 4. **मित्रमित्रम्**-நண்பனின் நண்பன்; 5. **अरिमित्रमित्रम्** - பகைவனது நண்பனது நண்பன்; இவ்வைவரும் சக்ரவர்த்திக்கு முன்னுள்ளவர்; 6. **विजिगीषुः** - சக்ரவர்த்தி; 7. **पार्ष्णिग्राहः** - பின்னிருக்கின்ற பகைவன் 8. **आक्रन्दः** - பின்னுள்ள நண்பன்; 9. **पार्ष्णिग्राहासारः** - பின்னுள்ள பகைவனது நண்பன்; 10. **आक्रन्दासारः**-பின்னுள்ள நண்பனது நண்பன்; 11. **मध्यमः**- மத்யமன், 12. **उदासीनः** - உதாஸீநன்; இவர்களின் பலாபலத்தைப்பற்றிக் காமந்தகர் விரிவாகக் கூறியுள்ளார்.

तमपहाय ककुत्स्थकुलोद्भवं पुरुषमात्मभुवं च पतिव्रता ।
नृपतिमन्यमसेवत देवता सकमला कमलाघवमर्थिषु ॥ १६ ॥

**पतिव्रता** - பதிவ்ரதையும், **सकमला** - தாமரையைக் கையிலுடையவளுமான, **देवता** - தேவதை லக்ஷ்மி, **अर्थिषु** - இரப்பவரிடம், **अलाघवम्** - தாழ்ந்த எண்ணமற்றவரும்,

**ककुत्स्थ-कुल-उद्भवम्** - ககுத்ஸ்தரின் குலத்தில் தோன்றிய வருமான, **तं** - அத் தசரதரையும், **आत्मभुवं** - தாமாகத் தோன்றிய, **पुरुषम् च** - பரம புருஷரான விஷ்ணுவையும், **अपहाय**-விட்டு, **अन्यं कं नृपतिम्**-வேறெந்த அரசரை,**असेवत**- ஸேவித்தாள் ?

(க-து) இரப்போரிடம் அவமதிப்பற்ற தசரதருக்கு லக்ஷ்மியின் அருள் பூர்ணமாக இருந்தது. விஷ்ணுவை விட்டு நீங்காதிருந்த லக்ஷ்மி, விஷ்ணுவின் அம்சமுடைய தசரதரிடமும் நீடித்துறைந்தாள்.

இதனால் தசரதரது நீங்காத செல்வம் விளங்கும். அரசரை விஷ்ணுவினது மஹிமையின் ஒரு பகுதியுடையவராகக் கூறுவர். **नादेवांशो ददात्यन्नं, नारुद्रो रुद्रमर्चयेत् । नानृषिः कुरुते काव्यम् नाविष्णुः पृथिवीपतिः**-என்பதைக்காண்க.

तमलभन्त पतिं पतिदेवताः शिखरिणामिव सागरमापगाः ।
मगधकोसलकेकयशासिनां दुहितरोऽहितरोपितमार्गणम् ॥ १७ ॥

**शिखरिणाम्** - மலைகளின், **दुहितरः** - பெண்களான, **आपगाः** - நதிகள், **सागरम् इव** - ஸமுத்ரத்தை (க்கணவனாக அடைந்தது) போல், **पतिदेवताः** - கணவரைத் தெய்வமாகக் கருதுகின்ற, **मगध-कोसल-केकय - शासिनां-दुहितरः** - மகதம், தக்ஷிண கோஸலம், கேகயம் என்ற நாட்டரசர்களின் பெண்கள், **अहित-रोपित-मार्गणम्** - பகைவர் மேல் புதைக்கப் பட்ட அம்பையுடைய, **तम्**-அத்தசரதரை, **पतिम्**-கணவராக, **अलभन्त** - அடைந்தனர்.

(க-து) கோஸலமன்னரின் புதல்வியான கௌஸல்யை, மகத நாட்டரசர் மகள் ஸுமித்ரை, கேகய ராஜனுடைய மகள் கைகேயி இம் மூவரும் தசரதருக்கு மனைவியாக வாய்த்தனர்.

க்ஷத்திரியப்பெண்கள் வீரரையே மணக்க விரும்புவராதலால் தசரதரது வீரம்தோற்ற **अहितरोपित मार्गणम्**-என்றார்.

மலையில் தோன்றும் காரணத்தால் நதிகள், மலைகளின் புத்ரி களாகக் கருதப்படுவன; உபமானத்தால் தசரதரைக் கணவ ராக அடைந்ததால் அவர்கள் பேறு பெற்றனர் என்பது விளங்கும்; **नदीनां सागरो गतिः** - என்பதைக் காண்க.

प्रियतमाभिरसौ तिसृभिर्बभौ तिसृभिरेव भुवं सह शक्तिभिः ।
उपगतो विनिनीषुरिव प्रजा हरिहयोऽरिहयोगविचक्षणः ॥ १८ ॥

**अरि-हृ-योग-विचक्षणः** - சத்ருவைக் கொல்வதற்கான உபாயத்தில் தேர்ந்த, **असौ** - அத் தசரதர், **प्रजाः** - மக்களை **विनिनीषुः**-திருத்த விரும்பி, **तिसृभिः** -மூன்று, **शक्तिभिः सह एव**-சக்திகளுடனேயே, **भुवं उपगतः**-பூமியை யடைந்துள்ள, **हरिहयः इव** - இந்திரன் போல்,-**तिसृभिः**-மூன்று, **प्रियतमाभिः**-மனைவியருடன், **बभौ** - விளங்கினார்.

(க-து) மூன்று மனைவியுடன் இருந்துகொண்டு மக்களை ஆண்ட மன்னர் தசரதர், மூவகை ஆற்றலுடன் உலகிலுள்ள மக்களைப் பண்படுத்துவதற்குப் பூமியில் வந்துள்ள இந்திரன் போலும் விளங் கினார்.

**हरिहयः** - இந்திரன்; பொன்னிறமான குதிரைகளை யுடையவன் என்பது பதப்பொருள். ப்ரபு, மந்த்ரம், உத்ஸா ஹம் எனச் சக்தி மூவகையாகும்.

स किल संयुगमूर्ध्नि सहायतां मघवतः प्रतिपद्य महारथः ।
स्वभुजवीर्यमगापयदुच्छ्रितं सुरवधूरवधूतभयाश्शरैः ॥ १९ ॥

**महारथः** - மஹாரதரான, **सः** - அவர், **संयुगमूर्ध्नि** - யுத்த பூமியில், **मघवतः** - இந்திரனுக்கு, **सहायतां** - துணைவனாக இருக்கும் நிலையை, **प्रतिपद्य** - அடைந்து, **शरैः** - பாணங் களினால், **अवधूत भयाः** - பயம் நீங்கிய, **सुरवधूः** - தெய்வப் பெண்களை, **उच्छ्रितं**-மிக உன்னதமான, **स्वभुज-वीर्यम्**-தமது

புஜத்தின் வீரத்தை, अगापयत्-किल - (புகழ்ந்து) பாடும்படி செய்தார்.

(க-து) தசரதர், தேவருலகுசென்று இந்திரனுக்குத் துணையாக இருந்து போரில் அஸுரர்களை வென்றதால் தெய்வப் பெண்கள் எல்லோரும் பயம் நீங்கி இருந்தனர். அதனால் அவரது வீரத்தை அப் பெண்கள் தாமே பாட்டில் அமைத்துப் பாடிப் புகழ்ந்தனர்.

தேவமகளிரும் பாடும்படியான வீரம் பெற்றவர் தசரதர் என்பது கருத்து.

असकृदेकरथेन तरस्विना हरिहयाग्रसरेण धनुर्भृता ।
दिनकराभिमुखा रणरेणवो रुरुधिरे रुधिरेण सुरद्विषाम् ॥ २० ॥

**एकरथेन** - ரதமொன்றே உடையவரும், **तरस्विना** - மிக்கபலமுடையவரும், **हरिहय-अग्रसरेण**-(யுத்த சமயத்தில்) இந்திரனுக்கு முன்னே செல்பவரும், **धनुर्भृता** - வில்லைத் தரித்தவருமான தசரதரால், **असकृत्**-பல முறையும், **दिनकर-अभिमुखाः** - ஸூரியனை நோக்கி எழுகின்ற, **रणरेणवः** - யுத்த களப்புழுதிகள், **सुरद्विषां** - அஸுரர்களின், **रुधिरेण** - ரத்தத்தினால், **रुरुधिरे** - (மேலே எழாதவாறு) தடுக்கப்பட்டன.

(க-து) தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் மூண்ட போரில் யுத்த பூமியினின்றும் எழுகின்ற புழுதி, மேலும் எழாதவாறு தசாதரால் தடுக்கப்பட்டன. எவ்வாறெனின், பலமிகுந்த அவர், இந்திரன் செல்வதன் முன்னமே யுத்தகளம் சென்று, அஸுரர்களைக்கொன்று குருதியைத் தரையில் வெள்ளமாக ஓடச்செய்ததால் துகள்கள் மேலே எழாதவாறாயின.

முன் சுலோகத்தில் தேவஸ்திரீகள் தசரதரது புகழைத் தாமே பாடினர் எனக்கூறப்பட்டது. அவரது வீரத்தை நோக்கும் பொழுது பெண்கள் பாடியதில் வியப்பு ஒன்றும் இல்லை எனக்காட்ட இச்சுலோகத்தில் அவரது பராக்ரமம் கூறப்படுகிறது.

ऋतुषु तेन विसर्जितमौलिना भुजसमाहृतदिग्वसुना कृताः ।
कनकयूपसमुच्छ्रयशोभिनो वितमसा तमसासरयूतटाः ॥ २१ ॥

**ऋतुषु** - யாகங்களில், **विसर्जित-मौलिना** - கிரீடத்தை நீக்கியவரும், **भुज-समाहृत-दिग्वसुना**-புஜபலத்தால் கொண்டு வரப்பட்ட திசைகளின் செல்வமுடையவரும், **वितमसा** - தமோகுணமற்றவருமான, **तेन** - அத்தசரதரால், **तमसा-सरयू-तटाः** - தமஸா, ஸரயூ என்ற நதிகளின் கரைகள், **कनकयूप-समुच्छ्रय-शोभिनः**-பொன்மயமான யூபஸ்தம்பங்களை நாட்டுவதால் விளங்குவனவாக, **कृताः** - செய்யப்பட்டன.

(க-து) தசரதர், திசைகளை வென்று கொணர்ந்தசெல்வத்தைக் கொண்டு யாகங்களைச்செய்தார். ஸரயூ தமஸாநதிகளின் கரையில் நாட்டப்பட்டுள்ள பொன்மயமான யூபஸ்தம்பங்கள், அவர் செய்துள்ள யாகங்கள் பலவற்றை நினைவூட்டுபவையாயிருந்தன. இதனால் நதிக் கரைகள் தனியழகு பெற்று விளங்கின.

யூபஸ்தம்பம், அத்திமரத்தினால் அமைக்கப்பட வேண்டியதாயினும் அழகு கருதிப் பொன்தகடு போர்த்தியிருந்த காரணத்தால், **कनकयूप** - என்றார். முழுவதும் பொன்னாலானவையாகவுமிருக்கலாம்.

**वितमसा** - என்பதால் யாகம் செய்ததன் பயன் கூறப்பட்டது; **ऋतुषु** - என்ற பன்மையால் தசரதர் யாகங்களைத் தொடர்ந்து செய்தமை புலனாகும். 'யாகம் முடியும்வரை அத்வர்யு அரசராக இருப்பார்' என விதியுள்ளதால், அரசர் சின்னமாகிய முடியை நீக்கியிருந்தார் தசரதர்.

अजिनदण्डभृतं कुशमेखलां यतगिरं मृगशृंगपरिग्रहाम् ।
अधिवसंस्तनुमध्वरदीक्षितामसमभासमभासयदीश्वरः ॥ २२ ॥

**ईश्वरः** - சிவபிரான், **अजिन-दण्ड-भृतम्** - மான்தோல், அத்திதண்டம், இவைகளைத் தரித்ததும், **कुश-मेखलाम्**-தர்ப்

பத்திலான மேகலையணிந்ததும், **यतगिरम्** - மௌனவ்ரத முடையதும், **मृगशृङ्ग-परिग्रहाम्** - மான்கொம்பை ஏற்றதும், **अध्वर-दीक्षिताम्** - யாகத்திற்காகத் தீக்ஷை கொண்டதுமான, **तनुम्**-(தசரதரது) மேனியில், **अधिवसन्** - ஸாந்நித்யம் செய்பவராக, **असम - भासम्** - ஒப்பற்ற ஒளியுடனிருக்கும்படி, **अभासयत्** - விளங்கச்செய்தார்.

(க-து) யாகம் செய்பவர், மான்தோலை அணிந்து, அத்திமரத் தண்டைக்கையிலேந்தி இருப்பர்; அவர்களது இடையில் தர்ப்பத்தினலான மேகலை அணிசெய்யும். அவர்கள், நகத்தினல் சொரிந்து கொள்ளுதல் கூடாதாதலால் தினவை நீக்க மான்கொம்பை வைத்திருப்பர். யாகம் செய்வதற்குத் தகுதியளிக்கின்ற மற்றும் பல ஸம்ஸ்காரங்கள் செய்யப்பெற்று விளங்குவர். யாகத்திற்காகத் தீக்ஷைகொண்டுள்ள யஜமானரிடம் சிவபிரான் உறைவதாகச் சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆதலால் தீக்ஷை கொண்ட தசரதர், சிவபிரானது ஸாந்நித்யத்தால் தனியான ஒருதோற்றப்பொலிவுடன் விளங்கினர்.

अवभृथप्रयतो नियतेन्द्रियः सुरसमाजसमाक्रमणोचितः ।
नमयति स्म स केवलमुन्नतं वनमुचे नमुचेररये शिरः ॥ २३ ॥

**अवभृथ-प्रयतः** - அவப்ருதஸ்நாநங்களால் பரிசுத்தரும், **नियत-इन्द्रियः** - அடக்கப்பட்ட புலன்களையுடையவரும், **सुर-समाज-समाक्रमण-उचितः** - தேவர்களின் சபையிலமர்வதில் பழகியவருமான, **सः**-அத் தசரதர், **उन्नतम्** - நிமிர்ந்துள்ள, **शिरः** - (தமது) தலையை, **वनमुचे** ஜலத்தை வர்ஷிக்கின்றவனும், **नमुचेः** - நமுசி என்ற அஸுரனுக்கு, **अरये-केवलम्** - பகைவனுமான இந்திரனுக்கு மாத்திரமே, **नमयति स्म** - வணக்கினர்.

(க-து) அவப்ருதஸ்நாநங்கள் செய்து தூய்மை பெற்றும், புலனை யடக்கியுமிருப்பவர் தசரதர். இதனல்தேவர்களின் கூட்டத்தில் சேரத் தகுதியும் பெற்றவர்; அமர்ந்தும் பழகியவர். அத்தகைய தசரதர்

இவ்வுலகிலுள்ள அரசர் எவருக்கும் தலைவணங்கினரில்லை. தன் நாட்டில் மழைபெய்விக்கின்ற இந்திரன் ஒருவனுக்கே அவர் தலை சாய்த்தார்.

அவப்ருதம்-யாகத்தின் முடிவில் செய்யப்படும் ஸ்நாநம். இதை மிகவும் தூய்மையளிப்பதாகக் கருதுவர். யாகத்தில் உபயோகப்பட்ட பண்டங்களில் எஞ்சியவற்றை இச்சமயத்தில் நீரில் எறிவர்; யாகத்திற்கு உதவிய ரித்துவிக்குகளும், யஜமானரும், அவரது மனைவியும் மற்றும் பலரும் ஸ்நாநம் செய்வர். घनम्-ஜலம்; மழையளிப்பவன் இந்திரனுதலால் அவன் ஒருவனுக்கே தசரதர் தலைவணங்கினர். நமுசி—ஓர் அஸுரன்.

अथ समाववृते कुसुमैर्नवैस्तमिव सेवितुमेकनराधिपम् ।
यमकुबेरजलेश्वरवज्रिणां समधुरं मधुरञ्चितविक्रमम् ॥ २४ ॥

**अथ** - பிறகு, **यम-कुबेर-जलेश्वर-वज्रिणाम्** - யமன், குபேரன், வருணன், இந்திரன், இவர்களுக்கு, **समधुरम्** - ஸமமான செயலையுடையவரும், **अञ्चित-विक्रमम्** - மதிக்கப்பட்ட வீரமுடையவரும், **एक-नराधिपम्**-இணையற்ற அரசருமான, **तम्** - அவரை, **सेवितुम् इव** - ஸேவிப்பதற்குப்போல், **मधुः**-வஸந்தகாலம், **नवैः** - புதிய, **कुसुमैः** - புஷ்பங்களுடன், **समाववृते** - வந்தது.

(க-து) புதிய அரசரான தசரதரை உபசரிக்கவிரும்பியதுபோல் வஸந்த காலம் புஷ்பங்களுடன் தோன்றியது.

செல்வம், பெருமை காரணமாகத் தசரதர் இந்திரனுடன் ஒப்பிடப்பட்டார். மற்றவருடனுள்ள ஒப்புமை முன்பே கூறப்பட்டது. எளியாரை நலியாது அவர்களது பாதுகாப்பிற்காகப்பயன்பட்ட அவரது பராக்கிரமம், எல்லோரது மதிப்பையும் பெற்றிருந்ததால், **अञ्चितविक्रमम्** -

என்றார். வஸந்தகாலம் தோன்றியதற்குக் காரணத்தைக்கவி **सेवितुमिव** - என உத்ப்ரேக்ஷிக்கின்றார். வெற்றுக்கையுடன் அரசரைக்காண்பது முறையன்றாதலால் வஸந்தம் புதிய புஷ்பங்களுடன் வந்தது போலும்! வஸந்தத்தின் வருகை, புஷ்பங்களின் தோற்றத்தால் அறியப்பட்டது என்றும் கொள்ளலாம்.

தசரதர் வேட்டை யாடியதைக் கூறப்போகின்ற கவி, வேட்டையாடுதற்கு ஏற்றபருவமான வஸந்தருதுவை இது முதல் இருபத்துநான்கு சுலோகங்களால் வர்ணிக்கின்றார்.

जिगमिषुर्धनदाध्युषितां दिशं रथयुजा परिवर्तितवाहनः ।
दिनमुखानि रविर्हिमनिग्रहैर्विमलयन् मलयं नगमत्यजत् ॥ २५ ॥

**धनद-अध्युषितां** - குபேரனால் வசிக்கப்படுகின்ற, **दिशम्**- திசையை (நோக்கி), **जिगमिषुः** - செல்லவிரும்பியவனாய், **रथयुजा** - ஸாரதியான அருணனால், **परिवर्तित-वाहनः** - திருப்பப்பட்ட குதிரைகளையுடைய, **रविः** - சூரியன், **हिमनिग्रहैः** - பனியை நீக்குவதால், **दिनमुखानि** - காலைப்பொழுதை, **विमलयन्**-பிரகாசமுடையதாகச செய்து கொண்டு, **मलयम्-नगम्** - மலயமலையை, **अत्यजत्** - விட்டான்.

(க-து) வஸந்தருதுவில் சூரியன், தென்திசையினின்றும் திரும்பி வடதிசை நோக்கிச் சென்று கொண்டிருந்தான்.

குபேரன் வசிக்கும்திசை - வடதிசை; வஸந்தருதுவில் பனிநீக்கப்பட்டதால்,காலைவேளை பிரகாசத்துடன் இருந்தது. மலயம் என்பது, அம்மலையுள்ள தென்திசையைக்குறிக்கின்றது.

குதிரை வியாபாரி ஒருவன், விற்பதற்காகக் குதிரைகளை ஓட்டிக்கொண்டு தன்னூரினின்றும் செல்வருள்ள இடத்திற்குச்செல்பவனைத் தன்பிரிவினால் வருந்தும் உறவி

னரின் கண்ணீரைத்துடைத்தபின் வீட்டை விட்டுப்போதல் என்ற பிறிதொருபொருளும் தொனிக்கின்றது என்பர்.

कुसुमजन्म ततो नवपल्लवास्तदनु षट्पदकोकिलकूजितम् ।
इति यथाक्रममाविरभून्मधुर्द्रुमवतीमवतीर्य वनस्थलीम् ॥ २६ ॥

**कुसुमजन्म** - புஷ்பங்களின் தோற்றம் (முதலில்), **ततः** - பிறகு, **नव-पल्लवाः** - புதிய தளிர்கள், **तदनु** - அவற்றின்பின், **षट्पद-कोकिल-कूजितम्** - வண்டு, குயில் இவைகளின் நாதம், **इति** - என்றிவ்வாறு, **यथाक्रमम्** - முறையே, **द्रुमवतीं**-மரங்களடர்ந்த, **वनस्थलीम्** - (வனப்புள்ள) வனப்ரதேசத்தில், **अवतीर्य** - இறங்கி, **मधुः** - வஸந்தகாலம், **आविरभूत्** - தோன்றியது.

(க-து) முதலில், புஷ்பங்களும் பின் தளிர்களும், வண்டு குயில் இவைகளின் இனிய ஒலியும் தோன்றின. இவ்வாறு வஸந்தருது பல்வகையிலும் தோன்றி வனம் முழுவதிலும் விளங்கியது.

'முதலில் தளிர்களும் பிறகு புஷ்பங்களும்' என முறையிருக்க, 'முதலில் மலர்கள், பின் தளிர்கள்' என முறை பிறழக்கூறியது எவ்வாறு எனின், இலவு முதலியன முதலில் பூத்துப் பின் தளிர்ப்பனவாதலால் பிழை ஒன்றுமில்லை என்பர். “ **ननु कादम्बर्यां 'मधुमास इव पल्लवेन, पल्लव इव कुसुमेने' ति कुसुमात् प्राक् पल्लव इति क्रमः । तत् कथं 'ततो नव-पल्लवा' इति । उच्यते । शाल्मल्यादीनां पुष्पानन्तरं पल्लवोत्पत्ति-र्दृश्यते । मधूकादीनां विपर्ययः । तस्मादुभयदर्शनान्न विरोधः कश्चित् । '** [अरुणगिरिः।]

नयगुणोपचितामिव भूपतेः सदुपकारफलां श्रियमर्थिनः ।
अभिययुः सरसो मधुसंभृतां कमलिनीमलिनीरपतत्रिणः ॥ २७ ॥

**नयगुण - उपचिताम्** - நீதி, நற்குணம் இவைகளால் விருத்தி செய்யப் பெற்றதும், **सदुपकार-फलाम्** - நல்லோர்

களின் உபகாரத்தையே பயனுயுடையதுமான, **भूपते: श्रियं** - அரசனது செல்வத்தை, **अर्थिनः इव** - இரப்போர் (அடைவது) போல், **मधुसंभृताम्** - வஸந்த ருதுவினுல் விருத்தி செய்யப்பட்டதும், **सरसः**-குளத்தினுடையதுமான, **कमलिनीम्** -தாமரைமலரை, **अलि - नीर - पतत्रिणः** - வண்டுகளும், நீர்ப்பறவைகளும், **अभियगुः** - அடைந்தன.

(க-து) நியாயமான முறையில் ஸம்பாதித்துள்ள அரசனது செல்வத்தை இரப்போர் அணுகுவது போல், வஸந்தருதுவினுல் விசேஷமாகத்தோன்றிய தாமரைமலர்களை வண்டுகளும் நீர்வாழ் பறவைகளான அன்னம் முதலியனவும் அடைந்தன.

**मधुसंभृताम्** - 'தேன் நிறைந்தது' என்றும் கொள்ளலாம்;

कुसुममेव न केवलमार्तवं नवमशोकतरोः स्मरदीपनम् ।
किसलयप्रसवोऽपि विलासिनां मदयिता दयिताश्रवणार्पितः ॥२८॥

**आर्तवम्** - வஸந்த ருதுவிலுண்டான, **नवम्** - புதிய, **अशोक-तरोः-कुसुमम् एव केवलम्** - அசோக மரத்தின் மலர் மட்டுமே, **स्मरदीपनम्** - காதலைத்தூண்டுவதென்பது, **न** - இல்லை. **(किन्तु)** - ஆனல், **विलासिनां** - யுவர்களுக்கு, **मदयिता** - களிப்பை யுண்டாக்குவதும், **दयिता - श्रवणार्पितः** - காதலிகளின் காதிலணியப் பட்டதுமான, **किसलय प्रसवः अपि** - இளந்தளிர்க் கொத்தும், **(स्मरदीपनः)** -காமத்தை வளர்க்குவதாக, **(अभवत्)** - இருந்தது.

(க-து) வஸந்தருதுவில் அசோகமரத்தில் தோன்றிய மலர்களையன்றித்தளிர்களும், பெண்களின் காதில் அணியப்பெற்றபொழுது, அவற்றைக் கண்ட யுவர்களின் மனத்தில் காமத்தீயை ஜ்வலிக்கச் செய்வதாக இருந்தன.

தளிர்க்கொத்தைப் பெண்கள் காதின்மேல்வைத்து அலங்கரித்துக் கொள்வர். மரத்திலிருக்கும் பொழுதே யுவர்களை

மயங்க வைக்கின்ற (मदयिता) அத்தளிர்கள், பெண்கள் காதிலிருக்கும்பொழுது, ஸ்தான பலத்தால் அதிகம் வீர்யம் பெற்றன என்பது தொனி.

विरचिता मधुनोपवनश्रियामभिनवा इव पत्रविशेषकाः ।
मधुलिहां मधुदानविशारदाः कुरवका रवकारणतां ययुः ॥ २९ ॥

**मधुना** - வஸந்த காலத்தினால், **विरचिताः** - செய்யப் பட்டனவும், **उपवन-श्रियः** - உபவன லக்ஷ்மியின் (சோலை யின்), **अभिनवाः**-புதிய, **पत्र-विशेषकाः इव (स्थिताः)** அலங்கார வரிகள், திலகம் இவை போலிருப்பனவும், **मधुदान-विशारदाः**- தேனை அளிப்பதில் திறமை வாய்ந்தனவுமான, **कुरवकाः** - குரவகங்கள், **मधुलिहां** - வண்டுகளின், **रवकारणताम्**-சத்தத் திற்குக் காரணமான தன்மையை, **ययुः** - அடைந்தன.

(க-து) வஸந்தருதுவில் குரவகமலர்கள் தோன்றின. அவற்றி லுள்ள தேனை அருந்த வண்டுகள் இனிமையாக ரீங்காரம் செய்தன. இவ்வகையில் குரவகமலர்கள் வண்டுகளின் ஒலிக்குக்காரணமாயின.

குரவகம்-வாடாக் குறிஞ்சி; மருதோன்றி எனவும் கூறு வர். இதன் மலர்கள், வஸந்தருது என்ற தலைவனால் உபவன சோலை என்ற தலைவிக்குச் செய்யப்பட்ட புதிய அலங்கார வரிகள் போலும், திலகம்போலுமிருந்தன. **पत्रम् - पत्रलेखा ;** அழகைக் கருதி நெற்றி, கன்னம், மார்பு, தோள் இவை களில் வர்ணங்களைக்கொண்டு இலை, பூ, மீன்போல் பெண்கள் எழுதிக்கொள்ளுகின்ற கோடுகள்.

सुवदनावदनासवसंभृतस्तदनुवादिगुणः कुसुमोद्गमः ।
मधुकरैरकरोन्मधुलोलुपैर्बकुलमाकुलमायतपङ्क्तिभिः ॥ ३० ॥

**सुवदना - वदनासव - संभृतः** - அழகிய பெண்களின் வாய் மதுவினால் உண்டாக்கப்பட்டதாய், **तदनुवादि-गुणः** -

அம்மதுவை ஒத்த மணமுடையதாக, **कुसुम-उद्गमः** - தோன்றிய புஷ்பம், **मधु-लोलुपैः** - தேனில் மிக விருப்புள்ளவையும், **आयत-पङ्क्तिभिः** - நீண்டவரிசையுடையனவுமான, **मधुकरैः** - வண்டுகளால், **बकुलम्** - மகிழ மரத்தை, **आकुलम्**- அடர்த்தியுடையதாக, **अकरोत्** - செய்தது.

(க-து) மகிழ் பூக்க, பெண்களின் வாயினின்று மதுவை அதன் மேல் ஊற்றவேண்டும். அவ்வாறு தோஹதம் தரப்பெற்றுத் தோன்றிய புஷ்பம், தனதுதோற்றத்திற்குக் காரணமான மதுபோலும் குணமுடையதாக இருந்தது. பூவின்மணத்தால் கவரப்பட்ட வண்டுகள் வரிசை வரிசையாக வந்து மரமெஙகும் நிறைந்திருந்ததால் மகிழ மரம் மிக அடர்த்தியுடையதுபோல் காணப்பட்டது. இவ்வகைத் தோற்றத்திற்குக் காரணம் அம்மரத்தில் தோன்றிய புஷ்பமாகும்.

மரங்களுக்குத் தரவேண்டிய தோஹதத்தைப் பற்றிக் கூறியுள்ளதை 8-ஆம் ஸர்க்கம், 62-ஆம் சுலோக உரையில் காண்க.

उपहितं शिशिरापगमश्रिया मुकुलजालमशोभत किंशुके ।
प्रणयिनीव नखक्षतमण्डनं प्रमदया मदयापितलज्जया ॥ ३१ ॥

**शिशिरापगम - श्रिया** - வஸந்தருதுவின் சோபையினுல், **किंशुके**-பலாச மரத்தில், **उपहितम्**-உண்டாக்கப்பட்ட, **मुकुल-जालम्**-மொட்டுக்களின் கூட்டம், **मद-यापित-लज्जया**-களிப்பினுல் லஜ்ஜையைவிட்ட, **प्रमदया**-ஸ்திரீயினுல், **प्रणयिनि**-அன்பனிடத்தில், (**उपहितम्**)-உண்டாக்கப்பட்ட, **नख-क्षत-मण्डनम् इव** - நகக்குறியாகிய அணிபோலும், **अशोभत** - மிளிர்ந்தது.

(க-து) வஸந்தருது வரவும், பலாசமரத்தில் மொட்டுக்கள்தோன்றின. அம்மொட்டுக்கள் ரத்தம்போல் சிவப்பு நிறத்துடன் சிறிது வளைந்தனவாய் இருக்கும். அவற்றின் செந்நிறமும், வளைந்த வடிவும் அவைகளை நகக்ஷதமாகக் கூறக்காரணமாயின. அம்மொட்டுக்கள், மிக்க காமம்கொண்டு லஜ்ஜையைவிட்ட ஒருஸ்திரீ கலவிக்காலத்தில்

அவளது அன்பனது சரீரத்தில் உண்டாக்கிய நகக்குறிகள்போலு முள்ளனஎன்ருர். நகம் அழுந்துவதால் உண்டாகும் வளைவான வரி களும், ரத்தம் கசிவதால் சிவந்து காணப்படும். இங்கு, வஸந்தசோபை ஸ்திரீயாகவும், பலாசமரம் ஆணுகவும், மொட்டுக்கள் நகக்ஷதங்க ளாகவும் கூறப்பட்டன.

நகக்ஷதம்:—கலவி செய்யுங் காலத்தில் பற்றுதல் காரண மாய் நகம்அழுந்துதலால் உண்டாகும்குறிகள்: கீறல்கள்;இவ் வாறே பற்களால் உண்டாக்கப்படுவதை தந்தக்ஷதம் என்பர்.

நகக்ஷதம் ஆண்களால் உண்டாவதன்றிப் பெண்களால் உண்டாவ தன்று. பெண்களால் உண்டாகவேண்டுமாயின் அதற்குத் தக்க காரண மிருக்கவேண்டு மாதலால், கார ணத்தைக்காட்ட **मद्यापित लज्जया**—என்ருர். ' **बालेन्दुवक्राण्यविकासभावाद् बभुः पलाशान्यतिलोहितानि । सद्यो वसन्तेन समागतानां नखक्षतानीव वनस्थलीनाम् ॥** ' [குமா. 3, 29.] என்பதில் நகக்ஷதம் ஆணுல் உண்டாக்கப்பட்டதாய்க் கூறியுள்ளதைக் காண்க.

व्रणगुरुप्रमदाधरदुःसहं जघननिर्विषयीकृतमेखलम् ।
न खलु तावदशेषमपोहितुं रविरलं विरलं कृतवान् हिमम् ॥३२॥

**व्रण-गुरु-प्रमदाधर-दुःसहं** - விரணத்திஞல் பருத்துள்ள தான பெண்களின் உதடுகளுக்குத்தாங்க முடியாதிருப்பதும், **जघन - निर्विषयीकृत - मेखलम्** - இடையிலே இடம் பெருது செய்யப்பட்ட மேகலையுடையதுமான, **हिमम्**-பனியை, **रविः**-ஸூர்யன், **तावत्** - அதுவரை, **अशेषम्** - முற்றிலும், **अपोहितुम्** - போக்குவதற்கு, **न अलम्-खलु** - சக்தி யுடையவஞக இல்லை; **(किंतु)** -ஆனல், **विरलम्** - (சிறிதே) குறைவானதாக, **कृतवान्** - செய்தான்.

(க-து) வஸந்தகாலம் வரும்வரை சூரியனுலும் பனி மிச்ச மின்றிப் போக்க முடியாதிருந்தது. பனியினல் பெண்களின் உதடு

வெடித்து வீங்கியிருந்ததால் பனிக்காலம் அவர்களுக்கு ஸஹிக்கக் கூடியதாக இல்லை. முத்தினாலும், பொன்னாலுமான மேகலைகள், சில்லென்றிருந்ததால் பனிக்காலத்தில் பெண்களால் இடையிலே அணியப்படவில்லை.

இத்தகைய பனி சிறிதே சூரியனால் குறைந்தது. வஸந்தம் வந்த பின்பே அவை முற்றிலும் நீங்கின.

பெண்களது உதட்டின்விரணம், கலவிக்காலத்தில் உண்டான தந்தக்ஷதமாகவு மிருக்கலாம் என்பர்.

अभिनयान् परिचेतुमिवोद्यता मलयमारुतकम्पितपल्लवा ।
अमदयत् सहकारलता मनः सकलिका कलिकामजितामपि ॥२३॥

**अभिनयान्**- அபிநயத்தை, **परिचेतुम्** - பழக்கிக் கொள்ள, **उद्यता इव** - முயற்சியுடையது போலுள்ளதும், **मलय-मारुत-कम्पित-पल्लवा** - மலய மாருதத்தினால் அசைக்கப்பட்ட தளிர்களையுடையதும், **सकलिका**- அரும்புகளோடு கூடியதுமான, **सहकार-लता**- மாமரத்தின், மெல்லியகிளை, **कलि-काम-जिताम्**- பகை, வேட்கை இவைகளை வென்றவர்களின், **मनः अपि** - மனத்தையும் கூட, **अमदयत्** - மதம் கொள்ளச் செய்தது; (களிகொள்ளச் செய்தது).

(க-து) வஸந்தருதுவில் மாங்கொம்பில் அரும்பு தோன்றியது. தளிர்கள் தென்றலில் அசைந்தன. அவ்வாறு தளிர்கள் அசைவது, மாமரத்தின் கிளை விரல்களையசைத்து அபிநயம் கற்றுக்கொள்வது போலுமிருந்தது. இத்தகைய மாங்கொடியானது, விருப்பு, வெறுப்பு இரண்டையும் வென்ற முனிவர்களின் மனத்தையும் களிகொள்ளச் செய்தது.

**अभिनयः** - மனத்திலுள்ள கருத்தைக் காட்ட அங்கங்களிலே தோற்றுவிக்கப்படுகின்ற செயல். **लता** - மாங்களின் மெல்லிய கிளை; கொடிபோல் வளையும் தன்மையுடன் அழகாயிருப்பதால் கிளையைக் கொடியென்றும் கூறுவர்.

प्रथममन्यभृताभिरुदीरिताः प्रविरला इव मुग्धवधूकथाः ।
सुरभिगन्धिषु शुश्रुविरे गिरः कुसुमितासु मिता वनराजिषु ॥ ३४ ॥

**सुरभि-गन्धिषु** - நறுமண முள்ளனவும், **कुसुमितासु** - புஷ்பங்கள் நிறைந்தனவுமான, **वन-राजिषु** - காடுகளிலே, **अन्यभृताभिः** - வண்டுகளால், **प्रथमम्** - முதலிலே, **उदीरिताः** - கூவப்பட்ட, **मिताः** - அளவான, **गिरः** - ஒலிகள், **प्रविरळाः** - குறைவான, **मुग्धवधूकथाः इव** - இளம் பெண்களின் வார்த்தைகள்போல், **शुश्रुविरे** - கேட்கப்பட்டன.

(க-து) வஸந்தருதுவின் ஆரம்பகாலத்தில் வனமெங்கும் புஷ்பங்கள் நிறைந்து நறுமணம் வீசியது. வஸந்தம் முற்றிலும் வராத காரணத்தினுல் குயில்கள் அப்பொழுதே முதன் முதலாகக் கூவத் தொடங்கின. அவ்வொலிகள், நாணமுள்ள இளம் பெண்களின் சொற்கள் போல் குறைவாகவே இருந்தன. குயில்களின் இனிய ஒலி அதிகம் கேட்கப் படவில்லை என்பது கருத்து.

**मुग्धा** - யௌவனத்தொடக்க முள்ள இளம் பெண்; காவியங்களில் கூறப்படுகின்ற மூவகைத்தலைவிகளில் முதல்வள்; இரண்டாமவள் **मध्यमा** - நன்கு தோன்றிய யௌவன முடையவள்; மூன்றுமவள் **प्रौढा** - யௌவனம் முற்றிலும் தோன்றிக் காமமிகுதியால் வெட்கத்தைச்சிறிதே விட்டவள்.

श्रुतिसुखभ्रमरस्वनगीतयः कुसुमकोमलदन्तरुचो बभुः ।
उपवनान्तलताः पवनाहतैः किसलयैः सलयैरिव पाणिभिः ॥३५॥

**श्रुति-सुख-भ्रमर स्वन-गीतयः**- காதிற்கினிய வண்டுகளின் ஒலியாகிய ஸங்கீத முடையனவும், **कुसुम कोमल-दन्त-रुचः** - புஷ்பங்களாகிய அழகானபற்களின் காந்தியுடையனவுமான, **उपवनान्त-लताः** - உபவனத்திலுள்ள கொடிகள், **पवनाहतैः**- காற்றினுல் அசைக்கப்பட்ட, **किसलयैः**-துளிர்களால், **सलयैः**-

அபிநயத்துடன்கூடிய, **पाणिभिः इव**-கைகளுடன் (விளங்கு வன) போல், **बभुः** - அழகாகத்தோன்றின.

(க-து) வஸந்தம் தோன்றியதும் உபவனம் முழுவதிலு முள்ள கொடிகள் புஷ்பங்களுடையதாயின; மலர்களிலுள்ள தேனை விரும்பிவந்த வண்டுகளின் ஒலி அக்கொடிகளில் இருந்தது. தளிர்கள் காற்றில் அசைந்தன. இதனால் கொடிகளாகிய பெண்கள், உபவனங் களாகிய அரங்கில், வண்டுகளின் இனிய நாதமாகிய பாட்டுடன், புன்னகை செய்யும் காலத்தில் தோன்றும் அழகிய பற்களின் ஒளி யாகப் புஷ்பங்களின் காந்தி திகழ, காற்றில் அசையும் தளிர்கள் அபி நயம் பிடிக்கும் கைகளாய் விளங்க, நாட்டியமாடினர் என்று வர்ணிக் கின்றார் கவி.

கொடிகளாகிய பெண்கள் உபவனமாகிய அரங்கில் நாட்டிய மாடுகின்றனர். அந்நாட்டியத்திற்கு வண்டுகளின் நாதம், ஸங்கீதமாகின்றது. காற்றில் அசைகின்ற தளிர்கள், அபினயம் பிடிக்கின்ற கைகள் போலுமுள்ளன. புஷ்பங் களின் காந்தி, புன்னகையில் தோன்றும் பல்லொளியா யுள்ளது.

ललितविभ्रमबन्धविचक्षणं सुरभिगन्धपराजितकेसरम् ।
पतिषु निर्विविशुर्मधुमङ्गनाः स्मरसखं रसखण्डविवर्जितम् ॥ ३६ ॥

**अङ्गनाः**-பெண்கள், **ललित-विभ्रम-बन्ध-विचक्षणम्**-அழகிய கேளிக்கைகளைத் தருவதில் திறமை யுடையதும், **सुरभि-गन्ध-पराजित-केसरम्**-நறுமணத்தினால் மகிழம்பூவை வென்றதும், **स्मरसखम्**-காமனுக்குத்துணை செய்வதுமான, **मधुम्**-மதுவை, **पतिषु**-தம் கணவர் திறத்தில், **रस-खण्ड-विवर्जितम्** - அன்பு குன்றுதவகையில், **निर्विविशुः** - அனுபவித்தனர்.

(க-து) பெண்கள், தம் கணவரோடு மதுவை அருந்தி வஸந்தருதுவை அனுபவித்தனர். ஏனெனில் மது, பலவிதமான கேளிக்கைகளையும் செய்யும்படிப் பலமளித்துப் பெண்களைத் தூண்டு

வதில் திறமை வாய்ந்தது. இவ்வகையில் அதைக்காதலையுண்டாக்கும் மன்மதனது துணைவன் எனலாம். அவர்கள் பானம் செய்த மதுவின் மணம், மகிழம் பூவினது வாஸனையை வென்றிருந்தது. அளவோடு பானம் செய்யப்பட்ட மது, கணவர் திறத்தில் பெண்களின் அன்பு அதிகமாவதற்குக் காரணமாயிருந்தது.

**रसखण्डविवर्जितम्** - என்பதை மதுவிற்கு விசேஷண மாகக்கொண்டு, 'ருசிக்குறைவு அற்ற, அதாவது நல்ல ருசி யுள்ள' என்றும் பொருள் கொள்வர்.

शुशुभिरे स्मितचारुतराननाः स्त्रिय इव श्लथशिञ्जितमेखलाः ।
विकचतामरसा गृहदीर्घिका मदकलोदकलोलविहंगमाः ॥ ३७ ॥

**विकच-तामरसाः** - மலர்ந்த தாமரைகளையுடையனவும், **मदकल - उदक - लोल - विहंगमाः** - மதத்தினால் அழகான, நீரில் ஆசையுள்ள பறவைகளை யுடையனவுமான, **गृह-दीर्घिकाः** - வீட்டுத் தடாகங்கள், **स्मित-चारुतर -आननाः** - புன் சிரிப்பினால் மிக அழகான முகமுடையவர்களும், **श्लथ - शिञ्जित-मेखलाः**-தளர்ந்து ஒலிக்கின்ற மேகலைகளை யுடையவர் களுமான, **स्त्रियः इव**-ஸ்திரீகளைப்போல், **शुशुभिरे**-விளங்கின.

(க-து) வீட்டிற்கருகிலுள்ள வாவிகளில் தாமரைகள் மலர்ந்தன. நீரில் வாழ்வதில் விருப்புள்ள பறவைகள் இனிய ஒலியுடன் அத் தடாகங்களில் சஞ்சரித்தன. இந்நிலையிலுள்ள நீர்நிலைகள், புன்னகை யால் மிக அழகான முகமும், இனிதே ஒலிக்கின்ற மேகலையுமுடைய பெண்கள் போல் மனத்தில் களிப்பூட்டுவனவாய் இருந்தன.

மலர்ந்த தாமரைகள் - சிரித்த முகத்திற்கு உபமானம். முன்பே அழகான (**चारु**) பெண்களின் முகங்கள், புன்னகை யால் அதிகம் அழகுபெற்றன என்பதற்காக, **चारुतर** - என் றார். **उदकलोल** - 'நீரில் சஞ்சரிக்கின்ற' என்றும் பொருள் கொள்ளலாம்.

उपययौ तनुतां मधुखण्डिता हिमकरोदयपाण्डुमुखच्छविः ।
सदृशमिष्टसमागमनिर्वृतिं वनितयानितया रजनीवधूः ॥ ३८ ॥

**मधु खण्डिता** - வஸந்தருதுவினால் குறைக்கப்பட்டதும், (வஸந்தன் என்றதலைவனால் அலக்ஷ்யம் செய்யப்பட்டதும்), **हिमकर-उदय-पाण्डु मुखच्छविः**-சந்திரோதயத்தினால் வெளுத்த முகத்தின் (முன்னிரவின்) ஒளியுடையதுமான, **रजनी-वधूः**-இரவாகிய பெண், **इष्ट-समागम-निर्वृतिम्** - அன்பனைசந்திப்பதினாலடையும் இன்பத்தை, **अनितया** - பெறாத, **वनितया सदृशम्** - பெண்ணுக்கு ஒப்பாக, **तनुताम्** - மெலிந்த தன்மையை, **उपययौ** - அடைந்தது.

(க-து) மழைக்காலங்களில் இரவுப் பொழுது நீண்டிருக்கும். வெய்யிற் காலமாகிய வஸந்தருதுவில் இரவுநேரம் குறுகியிருக்கும். மேலும், சந்திரன் பிரகாசிப்பதால் இரவுக் காலங்களில் இருளும் அதிகமிராது. "வஸந்தருது என்றதலைவன், இரவு என்ற தலைவியைத் திரஸ்கரித்து விட்டான். அதனால் இரவுப் பெண், அன்பனுடைய சேர்க்கையைப் பெற்று இன்பம் பெறாத ஒருத்தி கவலையினால் இளைத்து விடுவது போல், சந்திரோதயத்தினால் வெளிறிய முகத்துடன் இளைத்துக்கொண்டிருந்தாள்" என வஸந்த காலத்தில் இரவுப்பொழுது சுருங்கியுள்ளதன் காரணத்தைக் கவி உத்ப்ரேக்ஷித்துக் கூறுகின்றார்.

**मधुः** - சித்திரைமாதம் என்றும் கொள்ளலாம்; **खण्डिता**- ஸம்ஸ்கிருத காவியங்களிலே கூறப்பட்டுள்ள எட்டுவகைத் தலைவியரில் ஒருத்தி. தன் கணவன் வேறு ஸ்திரீயிடம் அன்பு கொண்டு, அவளுடன் கலவி கொண்டதை அடையாளங்களினால் அறிந்து கோபமடைந்தவள்: கணவனால் திரஸ்கரிக்கப்பட்டவள். '**पार्श्वमेति प्रियो यस्या अन्यासंभोगचिह्नतः । सा खण्डितेति कथिता धीरैरीर्ष्याकषायिता**' என்பதைக் காண்க.

अपतुषारतया विशदप्रभैः सुरतसङ्गपरिश्रमनोदिभिः ।
कुसुमचापमतेजयदंशुभिर्हिमकरो मकरोर्जितकेतनम् ॥ ३९ ॥

**हिमकरः** - சந்திரன், **अपतुषारतया** - பனிநீங்கினமையால், **विशद-प्रभैः**-நிர்மலமான ஒளியுடையனவும், **सुरत-सङ्गपरि-श्रम-नोदिभिः** கலவியின் ஈடுபாட்டினலுண்டான களைப்பைப் போக்குவனவுமான, **अंशुभिः** - கிரணங்களினல், **मकर-ऊर्जित-केतनम्**-மகரத்தினல் சிறந்துள்ள துவஜமுடைய, **कुसुमचापम्**-மன்மதனை, **अतेजयत्** - பலமுடையவனுகச்செய்தான்.

(க-து) வஸந்தருது தோன்றியதும் பனி முற்றிலும் நீங்கியது. சந்திரனது கிரணங்கள் நிர்மலமாகப் பிரகாசித்தன. அவை, கலவியில் ஈடுபட்டுள்ளவர்களின் களைப்பைப் போக்கி மேன் மேலும் அவர்களுக்கு ஊக்கத்தை உண்டாக்கின. மன்மதன் முழுபலத்துடன் ஆட்சி புரியும் காலம் அது. அவனது மீன் கொடி எற்றப்பட்டு விட்டது. இந்த ருதுவின் ஸ்வபாவத்தினலேயே மனிதர்கள் மனத்தில் காதல் தோனறுகின்றது. அவ்வாறு தோன்றுகின்ற உணர்ச்சி, சந்திரிகையினல் விருத்தியடைகிறது. இதைக்கவி, சந்திரன் தனது கிரணங்களினல் மன்மதனுக்குப்பலத்தை அளித்தான் என்கிருர்.

**मकरः** - மீன்வகையில் ஒன்று.

हुतहुताशनदीप्ति वनश्रियः प्रतिनिधिः कनकाभरणस्य यत् ।
युवतयः कुसुमं दधुराहितं तदलके दलकेसरपेशलम् ॥ ४० ॥

**हुत-हुताशन-दीप्ति**-ஜ்வலிக்கும்படி செய்யப்பட்ட அக்னி போல் ஒளியுடைய, **यत्-कुसुमम्** - எந்தப் புஷ்பமானது, **वनश्रियः** - உபவனசோபை என்னும் ஸ்திரீயின், **कनक-आभरणस्य** - பொன்மயமான ஆபரணத்திற்கு, **प्रतिनिधिः** - பதிலாக, **अभूत्** - இருந்ததோ, **दल-केसर-पेशलम्** - இதழ்களிலும் கேஸரங்களிலும் மிருதுவாயுள்ளதும், **आहितम्** - (காதலரால்) வைக்கப்பட்டதுமான, **तत्** - அப் புஷ்பத்தை,

**युवतयः** - யுவதிகள், **अलके** - முன்னுச்சிக்கேசங்களில், **दधुः**- தரித்தனர்.

(க-து) வஸந்தருதுவில் கர்ணிகாரமரம் புஷ்பிக்கும். மலர்கள் அக்கினிக் கொழுந்துபோல் ஒளியுடையன. இதழ்களும் கேஸரங்களும் மிகமிருதுவானவை. பொன் போன்ற இம்மலர்கள், வஸந்த லக்ஷ்மியின்பொன்னணிகளுக்குப் பதிலாக உள்ளன போலும்! அத்தகையமலர்களை அன்பர்கள் அன்புடன் சூட்டவும், இளம்பெண்கள் ஆசையுடன் அவற்றைத் தங்களது அலகங்களில் தரித்தனர்.

**कर्णिकारः** - கோங்கு மரம் என்பர். இதன் மலர், வடிவில் நெய்தல் போன்றிருக்கும். இச்சுலோகத்தில் புஷ்பத்தின் பெயர் கூறப்படாவிடினும் கொடுத்துள்ள அடைமொழிகளால் கர்ணிகாரமென்பது பெறப்படும். **'आक्षिप्त - हेमद्युति-कर्णिकारम् ।' 'उमापि नीलालकमध्यशोभि विस्रंसयन्ती नव-कर्णिकारम्'** - என்று கூறியுள்ளதையும் காண்க.

மிருதுவான கேஸரங்களையுடையது என்றதால் இங்கு கூறப்படும் மலர் சம்பகமன்று என்பர்.

अलिभिरञ्जनबिन्दुमनोहरैः कुसुमपङ्क्तिनिपातिभिरङ्कितः ।
न खलु शोभयति स्म वनस्थलीं न तिलकस्तिलकः प्रमदामिव ॥

**अञ्जन-बिन्दु-मनोहरैः**-மைப்பொட்டு போல் அழகானவைகளும், **कुसुम-पङ्क्ति-निपातिभिः**-புஷ்பங்களின் தொகுதியில் வீழ்பவையுமான, **अलिभिः** - வண்டுகளால், **अङ्कितः** - அடையாளமிடப்பட்டுள்ள, **तिलकः** - திலகமரம் (மஞ்சாடி), **तिलकः** - (நெற்றியிலுள்ள) திலகம், **प्रमदाम् इव** - ஸ்திரீயை (அழகுசெய்வது) போல், **वनस्थलीम्** - (எழிலுள்ள) வனபிரதேசத்தை, **न शोभयति स्म न खलु** - சோபிக்கச்செய்யவில்லை என்பதில்லை (மிகவும் அழகுடையதாகச் செய்தது.)

(க-து) வஸந்தருதுவில் திலக விருக்ஷம் ஏராளமாகப் புஷ்பங்களையுடையதாயிற்று. மலர்களில் மைப்பொட்டு போல் கருத்த நிற

முன்ன வண்டுகள் வந்து விழுந்தன. நெற்றியிலிடப்பட்ட திலகம் பெண்களின் அழகை விருத்தி செய்வது போல வண்டுகளுடன் கூடிய மலர்களையுடைய திலகவிருக்ஷமும் வனப்ரதேசத்தை அழகு பெறவே செய்தது.

**तिलकः**- மஞ்சாடி என்ற இது,சிறு மரவகையைச்சேர்ந்தது. **न-न** - என இரண்டு எதிர் மறைச்சொற்கள் உறுதிப் பொருளைத்தருவன.

अमदयन्मधुगन्धसनाथया किसलयाधरसंगतया मनः ।
कुसुमसंभृतया नवमल्लिका स्मितरुचा तरुचारुविलासिनी ॥ ४२ ॥

**तरु-चारु-विलासिनी** - மரத்தின் அழகிய மனைவியான, **नव-मल्लिका** - நவமல்லிகை, **मधुगन्ध-सनाथया** - தேன், நறுமணம் இவைகளுடன் கூடியதும், **किसलय-अधर-संगतया** - தளிராகிய உதட்டுடன் தொடர்புடையதும், **कुसुम-संभृतया**- புஷ்பங்களாலான, **स्मितरुचा** - புன்னகையின் காந்தியால், **मनः** - (பார்ப்பவர்களின்) மனத்தை, **अमदयत्** - மதம் கொள்ளச்செய்தது;

(க-து) மரத்தின் மேல் படர்ந்துள்ள மல்லிகை, அதனதுஅழகான மனைவிபோலுமுள்ளது. தளிரின் மேல் வெண்ணிறமான புஷ்பங்கள் வஸந்தருதுவில் புதிதாகத் தோன்றின.

அவற்றில் தேனும் நறுமணமும் மிகுந்திருந்தன.சிவந்த தளிரின் மேல்தோன்றிய வெண்ணிறப்புஷ்பங்கள், கொடியின் புன்னகை போல் காணப்படுவதாய்க் காண்போரின் மனத்தைப் பரவசப்படுத்தின.

**नवमल्लिका** - இருவாக்ஷி; மல்லிகைவகையில் ஒன்று. மரத்தை ஆணகக்கொண்டு அதன் மேல் படர்ந்துள்ள இருவாக்ஷிக் கொடியை அதன் மனைவியாகக் கூறினர். ஸவந்தருதுவில் தான் மல்லிகையும் அதிகம் புஷ்பிக்கும்.

अरुणरागनिषेधिभिरंशुकैः श्रवणलब्धपदैश्च यवाङ्कुरैः ।
परभृताविरुतैश्च विलासिनः स्मरबलैरबलैकरसाः कृताः ॥ ४३ ॥

**विलासिनः**-யுவர்கள், **अरुण-राग निषेधिभिः**-அருணனது நிறத்தை நிகர்த்த, **अंशुकैः** - வஸ்திரங்களாலும், **श्रवणलब्ध-पदैः** - காதின்மேல் இடம் பெற்ற (வைக்கப்பட்டுள்ள), **यवाङ्कुरैः च** - யவதான்ய முளைகளாலும், **परभृता-विरुतैः च** - குயில்களின் இனியஒலிகளாலும் (ஆகிய), **स्मरबलैः** - மன்மதனது ஸேனைகளால், **अबलैक-रसाः** -பெண்களிடம் மாத்திரமே பற்றுடையவர்களாக, **कृताः** - செய்யப்பட்டனர்.

(கருத்து) வஸந்தருதுவில் பெண்கள் சிவந்த வஸ்திரங்களைத்தரித்து, காதின்மேல் யவதான்ய முளைகளை அணிந்து விளங்கினர். எங்கும் குயில்களின் இன்னொலி ஒலித்து மனத்தை மயக்கியது. இவைகளெல்லாம் மன்மதனது ஸேனைகளாக இருந்து, ஆண்களைப்பெண்களின் அடிமைகளாக்கின. பெண்களையன்றி வேறெவற்றையும் அவர்கள் விரும்பவில்லை.

**अरुणरागः**-அருணன் ஸூரியனது ஸாரதி; ஸூரியோதயத்திற்கு முன்னுள்ள சிவந்தநிறம், இங்கு அருணனது நிறமாகக்கூறப்படுகின்றது. **वासो वसाना तरुणार्करागम्** - என்றும் கவி கூறியுள்ளதால், **अरुण** - என்பதற்கு இளஞ்சூரியன் என்றும் பொருள் கொள்ளலாம்; **यवाङ्कुरः** - 7-ஆம் ஸர்க்கம் 27 - ஆம் சுலோகக் குறிப்பைக் காண்க:

उपचितावयवा शुचिभिः कणैरलिकदम्बकयोगमुपेयुषी ।
सदृशकान्तिरलक्ष्यत मञ्जरी तिलकजालकजालकमौक्तिकैः ॥४४॥

**शुचिभिः** - வெண்மையான, **कणैः** - மகரந்தப் பொடிகளால், **उपचित अवयवा**-பருத்தபாகங்களையுடையதும், **अलिक-दम्बक योगम्**-வண்டுகளின் கூட்டத்தின் தொடர்பை, **उपेयुषी** - அடைந்திருப்பதுமான, **तिलकजा मञ्जरी** - திலகவிருக்ஷத்தில்

தோன்றிய பூங்கொத்து, अलक-जालक - मौक्तिकैः - அலகங்களிலுள்ள ஜாலகத்தின் முத்துக்களோடு, सदृश-कान्तिः - ஒத்த காந்தியுடையதாக, अलक्ष्यत - காணப்பட்டது.

(க-து) திலகமரத்தின் மலர், மகரந்தப்பொடிகள் நிறைந்து பருத்துக் கொத்தாய் இருந்தது. அம்மலர்க்கொத்து, பெண்கள் முன்னுச்சியிலணியும் ஜாலகம் என்ற ஆபரணத்தினது முத்துக்களின் கூட்டம் போல் காணப்பட்டது.

ஜாலகம்-முற்றிலும் முத்தினாலான ஒருவகை ஆபரணம்; இதைப் பெண்கள் முன்னுச்சியில் அணிவர். கறுத்த அலகத்துடன் இருக்கும் ஜாலகம் கருவண்டுகளுடன் கூடிய திலகமஞ்சரிக்கு உபமானமாக வந்துள்ளது.

ध्वजपटं मदनस्य धनुर्भृतश्छविकरं मुखचूर्णमृतुश्रियः ।
कुसुमकेसररेणुमलिव्रजाः सपवनोपवनोत्थितमन्वयुः ॥ ४९ ॥

अलिव्रजाः - வண்டுகளின் கூட்டங்கள், धनुर्भृतः - வில்லைத்தரிக்கின்ற, मदनस्य - மன்மதனுடைய, ध्वजपटम् - த்வஜத்தின் துணிபோன்றதும், ऋतुश्रियः-வஸந்தலக்ஷ்மிக்கு छविकरम् - நல்லநிறம் தரக்கூடிய, मुखचूर्णम् - முகப்பொடியாக இருப்பதும், सपवन-उपवन-उत्थितम् - காற்றுடன் கூடிய உபவனத்தினின்று எழுந்ததுமான, कुसुम केसर-रेणुम्-புஷ்பங்களுடைய மகரந்தப்பொடியை, अन्वयुः - பின் தொடர்ந்து சென்றன.

(க-து) வஸந்தருதுவில் பலவகை ஸ்தாவரங்கள் புஷ்பிக்கவும், காற்றினால் வீசப்பட்ட மகரந்தப்பொடிகள் அடர்த்தியாய் எங்கும் பரவின; வெண்ணிறமான அப்பொடிகள் காற்றில்செல்லும்பொழுது, வஸந்தருதுவில் ஆட்சிபுரிகின்ற மன்மதனது த்வஜத்துணி போலுமிருந்தன. வஸந்தசோபை என்ற ஸ்திரீக்கு அழகைப்பெற உதவும் முகப்பொடியாக இருந்தன அவைகள். [பெண்கள் அழகைக் கருதி முகத்தில் வாசனைப்பொடிகளைப் பூசிக்கொள்வது இன்றும் வழக்

கத்திலுள்ளதே.] அத்தகைய நறுமணமுள்ள பொடிகளைத் தொடர்ந்து சென்றன வண்டுகள்.

இச் சுலோகத்தில் வஸந்தருதுவின் அழகை ஸ்திரீயாக உருவகம் செய்துள்ளார்.

अनुभवन्नवदोलमृतूत्सवं पटुरपि प्रियकण्ठजिघृक्षया ।
अनयदासनरज्जुपरिग्रहे भुजलतां जलतामबलाजनः ॥ ४६ ॥

**नवदोलम्** - புதிய ஊஞ்சலையுடைய, **ऋतूत्सवम्** - வஸந்தருதுவாகிய உத்ஸவத்தை, **अनुभवन्** - அனுபவிக்கின்ற, **अबलाजनः** - பெண்கள், **पटुः अपि** - திறமையுடையவர்களாயினும், **प्रिय-कण्ठजिघृक्षया** - கணவனைத் தழுவுதலில் விருப்பத்தினால், **आसन-रज्जु-परिग्रहे** - ஊஞ்சல் பலகையின் கயிற்றைப்பிடித்துக் கொள்வதில், **भुजलताम्**-கொடிபோன்ற மெல்லிய கையை, **जलताम्-अनयत्** - தளர்ந்திருக்கும்படி செய்துகொண்டனர்.

(க-து) வஸந்தருதுவில் உபவனங்களிலே புதிதாக ஊஞ்சல்களை அமைத்து அதில் அமர்ந்து ஆடி, ஆண் பெண்கள் விழாவைக் கொண்டாடுவர். பெண்கள், ஊஞ்சலாடுவதில் திறமையுள்ளவர்களே. ஆயினும் கணவர்களுடன் ஆடும்பொழுது அவர்களைத் தழுவுதற்கு விரும்பியவர்களாய், அதற்கேற்ற வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்வதற்காக, ஊஞ்சலின் கயிற்றைப் பிடித்துக்கொள்ளத் திறமை அற்றவர்கள் போல் கைப்பிடியைத் தளரவிட்டனர்.

'**जलताम्**' இச் சொல் **जडताम्** - என்றிருக்கவேண்டுமாயினும் யமகம் கருதி **जलताम्** - என வந்தது. யமக விஷயத்தில் डகார ळகாரங்களுக்குள் வித்யாஸமில்லை என்பது மரபு. **यमकश्लेष चित्रेषु बवयो डलयोर्न भित्** - என்பதைக் காண்க.

त्यजत मानमलं बत विग्रहैर्न पुनरेति गतं चतुरं वयः ।
परभृताभिरितीव निवेदिते स्मरमते रमते स्म वधूजनः ॥ ४७ ॥

" वत- பெண்களே ! मानम् - கோபத்தை, त्यजत-விட்டு விடுங்கள்; विग्रहैः अलम् - சச்சரவு வேண்டாம்; गतम् - சென்று போனதும், चतुरम् - (ஸுகமனுபவிக்கத்) திறனுடையதுமான, वयः - யௌவனப்பருவம், पुनः - மறுபடியும், न एति - வராது" इति - என்ற, स्मरमते-மன்மதனது விருப்பமானது, परभृताभिः - குயில்களால், निवेदिते इव - சொல்லப் பட்டது போன்றும், वधूजनः - பெண்கள், रमते स्म - களித் தனர்.

(க-து) வஸந்தருதுவில் பெண்கள், கோபத்தையும், சச்சரவுகளையும் விட்டுக் கணவருடன் விசேஷமாக இன்பமனுபவித்தனர். இதற்குக் கவி ஒரு காரணத்தைக் கற்பனை செய்து கூறுகின்றார். வஸந்தருதுவில் தாமாகக் கூவுகின்ற குயில்கள், மன்மதனது ஆணையைத் தெரிவித்தனபோல் இருந்தன. அவ் வாணைக்குக் கீழ்ப்படிந்து யுவதிகள் ஸுகத்தைத் துய்த்தனர். காமனது ஆணைதான் என்னவோ எனின் 'பெண்களே! உங்கள் கணவரிடம் கோபம் கொண்டு அதனால் பிரிந்து நிற்காதீர்கள்; உங்களது சண்டையை விடுங்கள். ஏனெனில் யௌவனப் பருவத்தில் இன்பம் நுகராது ஒரு நாள் சென்றாலும் அஃது உங்களுக்குப் பெரும் நஷ்டமே. சென்ற நாளை மீண்டும் பெற இயலாது. யௌவனமே ஸுகமனுபவித்தற்கு ஏற்ற காலம்," என்பதாம்.

स्मरमते - என்பதற்கு, 'மன்மதனது ஸித்தாந்தம், கொள்கை' என்றும் பொருள் கொள்ளலாம்: चूताङ्कुरास्वाद-कषायकण्ठः पुंस्कोकिलो यन्मधुरं चुकूज । मनस्विनी मान-विघातदक्षं तदेव जातं वचनं स्मरस्य-என்பதில் கூறிய மன்மத வசனம் என்ன வென்பதற்கு, இச் சுலோகம் உரையாயுள்ளது. அழகுத் தெய்வத்தின் ஆணையைத்தெரிவிப்பதற்கு இனிய குரலுள்ள குயிலைத் தவிரப் பிறிதொன்றும் தகாதாதலால் குயிலின் குரலில் மன்மதனது ஆணையை ஏற்றிக் கூறினார் என்பதும் புலப்படும்; वत-என்பது விளிப்பொருளி

னுள்ள இடைச்சொல். இடப்பொருத்தம் காரணமாகப் 'பெண்களே!' என்ற பொருளுடையதாயிற்று.

अथ यथासुखमार्तवमुत्सवं समनुभूय विलासवतीसखः ।
नरपतिश्चकमे मृगयारतिं स मधुमन्मधुमन्मथसंनिभः ॥ ४८ ॥

**अथ** - பிறகு, **मधुमत् - मधु - मन्मथ - सन्निभः** - விஷ்ணு, வஸந்தன், மன்மதன் இவர்களுக்கொப்பான **सः नरपतिः** - அவ் வரசர் தசரதர், **विलासवतीसखः** - ஸ்திரீகளுடன் கூடியவராக, **आर्तवम् उत्सवम्** - (வஸந்த) ருதுவினது விழாவை, **यथासुखम्** - ஸுகமாக, **समनुभूय** - அனுபவித்து விட்டு, **मृगया-रतिम्** - வேட்டையாடுவதின் இன்பத்தை, **चकमे** - (அடைய) விரும்பினர்.

(க-து) தசரதர் வஸந்தருதுவில் தம் மனைவியருடன் விழாக் கொண்டாடி அனுபவித்தார். பிறகு வேட்டையாடுவதனால் கிடைக்கும் இன்பத்தையும் பெற விரும்பினர்.

**मधुमत्**-மஹாவிஷ்ணு; வேதங்களைக்கவர்ந்த மது என்ற அரக்கனைக்கொன்றவர்; தசரதர், பலத்தில விஷ்ணுபோன்றும், அழகில் மன்மதன்போன்றும், பிறரை மகிழ்வித்தல், பிரகாசமான தோற்றமுடைமை இவைகளில் வஸந்தருதுபோன்றும் இருந்தார்.

परिचयं चललक्ष्यनिपातने भयरुषोश्च तदिङ्गितबोधनम् ।
श्रमजयात् प्रगुणां च करोत्यसौ तनुमतोऽनुमतः सचिवैर्ययौ ॥

**असौ** - அது (வேட்டையாடுதல் என்பது), **चल लक्ष्य-निपातने** - அசைகின்ற குறிகளை (மிருகங்களை) அடிப்பதில், **परिचयम्** - பழக்கத்தையும், **भयरुषोः (सतोः)** - பயம் கோபம் இவைகளிலிருக்கும்பொழுது, **तदिङ्गित-बोधनम् च**-அவற்றின் செயல்களுடைய அறிவையும், **श्रमजयात्** - களைப்பைவெல்வ

தால், **तनुम्** - உடலை, **प्रगुणां च** - சிறந்த தன்மைகளையுடைய தாகவும், **करोति** - செய்கின்றது; **अतः** - அதனால், **सचिवैः** - மந்திரிகளாலே, **अनुमतः** - அனுமதிதரப்பட்டவராக (தசரதர்), **ययौ** - சென்றார்.

(க-து) வேட்டையாடுதலில் பல தீமைகளிருப்பினும் சில நற்குணங்களுமிருக்கின்றன. ஓடுகின்ற மிருகங்களை அடிப்பதில் பழக்கம் ஏற்படுகின்றது. இது யுத்தத்தில் உபயோகமானது. வேட்டையாடும்பொழுது, பயத்தினாலும் கோபத்தினாலும் பிராணிகளிடம் உண்டாகின்ற செயல்களைப் பற்றிய அறிவும் ஏற்படும். களைப்பைச் சஹித்துக்கொள்ளும் சக்தி உண்டாவதால் உடலுக்குச் சிறந்த குணங்கள் பல ஏற்படுகின்றன; ஆதலால் மந்திரிகளின் அனுமதி பெற்றுத் தசரதர் வேட்டையாடச்சென்றார்; தன்னிஷ்டப்படி அன்று.

मृगवनोपगमक्षमवेषभृद्विपुलकण्ठनिषक्तशरासनः ।
गगनमश्वखुरोद्धतरेणुभिर्नृसविता सवितानमिवाकरोत् ॥ ५० ॥

**मृगवन - उपगम - क्षम - वेषभृत्** - மிருகங்கள் நிறைந்த வனத்தை அடைவதற்குத் தக்க உடை தரித்தவரும், **विपुल - कण्ठ - निषक्त - शरासनः** - விசாலமான கழுத்திலே சேர்ந்த வில்லையுடையவரும், **नृसविता** - ஆண்களில் சிறந்தவருமான அவ்வரசர், **अश्व-खुर-उद्धत-रेणुभिः**-குதிரைகளின் குளம்புகளாலே எழுந்த புழுதிகளால், **गगनम्**-ஆகாசத்தை, **सवितानम् - इव** - விதான முடையதுபோல் **अकरोत्** - செய்தார்.

(க-து) தசரதர் வேட்டைக்குத் தகுந்த உடைதரித்து, மிருகங்கள் நிறைந்த வனம் சென்றார்; அவருடன் சென்ற குதிரைகளின் குளம்புகளால் எழுந்த புழுதி, ஆகாயமெங்கும் பரவியதால், ஆகாயத்தில் விதானம் கட்டியது போன்றிருந்தது.

அவரது தோளிலே மாட்டிய வில் கழுத்தினருகிலிருந்ததால் **विपुलकण्ठनिषक्त** - என்றார்; **वितानम्** - மேற்கட்டு.

ग्रथितमौलिरसौ वनमालया तरुपलाशसवर्णतनुच्छदः ।
तुरगवल्गनचञ्चलकुण्डलो विरुरुचे रुरुचेष्टितभूमिषु ॥ ५१ ॥

**वनमालया** - வன புஷ்பமாலையினால், **ग्रथितमौलिः** - முடியப்பட்ட சிகையுடையவரும், **तरु - पलाश-सवर्ण - तनु-च्छदः** - மரங்களின் இலைகளோடு ஒத்த நிறமுள்ள கவச மணிந்தவரும், **तुरग-वल्गन-चञ्चल-कुण्डलः** - குதிரைகளின், நடையால் அசைகின்ற காதணியுடைவருமான, **असौ** - அத் தசரதர், **रुरुचेष्टित - भूमिषु** - மான்கள் திரிந்த இடங் களிலே, **विरुरुचे** - விளங்கினார்.

(க-து) தசரதர், காட்டிலுள்ள புஷ்பங்கள் துளிர்களிவை களாலான மாலையினால் இறுகக் கட்டிய சிகையுடனும, மரத்தின் இலைபோல் பசசை நிறமுள்ள கவசத்துடனும் குதிரைமீதேறி, மான்கள் திரிகின்ற காட்டில் ஸஞ்சரித்தார.

தசரதர், சிகையை வனமாலையால் கட்டிக்கொண்டதும், பச்சைநிறக் கவசமணிந்ததும், மிருகங்கள் தம்மை அடை யாளம் கண்டுகொள்ளாது மரம், செடி என எண்ணுதற்காக. **वनमाला** - காட்டுப்புஷ்பங்களாலும் தழைகளாலுமான மாலை; **'वनमाला विधातव्या पल्लवैः कुसुमैरपि'**. தசரதர் அமர்ந்திருந்த குதிரையின் நடையால் அவரது குண்டலம் அசைந்தது. **वल्गितम्** - என்பது, ஆஸ்கந்திதம், தோரிதகம், ரேசிதம், வல்கிதம், ப்லுதம் என்ற குதிரையின் ஐவகை கதிகளில் ஒன்று. உடலை நீட்டிக்கழுத்தையும் தலையையும் தாழ்த்திக் கொண்டு மிடுக்குடன் குதிரை செல்லுமாயின் அந்நடையை **वल्गितम्** என்பர். **'वल्गितम् पुनः । अग्रकायसमुल्लासात् कुञ्चिताख्यं नतत्रिकम्'** என்பதைக்காண்க. ச்லோகத்தைச்சொல்லும பொழுதே குதிரையின் நடையும், குண்டலத்தின் அசைவும் தோன்றும்வகையிலே கவி, **तुरगवल्गन चञ्चल कुण्डलः**- என்ற அடியை எழுதியுள்ளார்.

ருரு-மான்களிலே ஒருவகை; இது கறுத்த நிறத்துடன் வடிவிலே பெரியதாக இருக்கும்.

तनुलताविनिवेशितविग्रहा भ्रमरसंक्रमितेक्षणवृत्तयः ।
ददृशुरध्वनि तं वनदेवताः सुनयनं नयनन्दितकोसलम् ॥ ५२ ॥

**तनु-लता-विनिवेशित-विग्रहाः** - மெலலிய கொடிகளிலே வைத்த தேஹமுடையவைகளும், **भ्रमर-संक्रमित-ईक्षण-वृत्तयः** - வணடுகளிடம் வைக்கப்பட்ட பார்வையுடையவை களுமான, **वन देवताः** - வனதேவதைகள், **सुनयनम्** - அழகிய கண்களையுடையவரும், **नय-नन्दित - कोसलम्** - நீதியிலுலே மகிழ்விககப்பட்ட கோஸல நாட்டையுடையவருமான, **तम्** - அத் தசரதரை, **अध्वनि** - (காட்டிலுள்ள) வழியில், **ददृशुः** - கண்டனர்.

(க-து) தசரதர் அழகான தோற்றப் பொலிவுடையவர். நீதியினுலே ஜனஙகளை மகிழ்வித்தவா. அத்தகைய அரசர் காட்டில் வேட்டையாட வந்தபொழுது வனதேவதைகள் அவரைக் காண விரும்பியதில் வியப்பொன்று மில்லை. எனவே அத்தேவதைகள் தமது வடிவுடன் வாராது, காட்டிலுள்ள மெல்லிய கொடிகளில் தமது சரீரஙகளை வைத்து மறைந்தும, கண்களின் செயலான பாாவையை வண்டுகளிடம் அமைத்தும் அவ்வரசரைக் கணடனர்.

காட்டில் அரசர் தசரதர் சென்றபொழுது மெல்லிய கொடிகள் அசைந்தாடின. வண்டுகள் இங்குமங்கும் சென்று கொண்டிருநதன. இதைக் கவி வனதேவதைகள், கொடிகளில் தங்கி, வணடுகளாகிய கண்கள் மூலம் அரசரைப் பார்ப்பதாக உத்ப்ரேக்ஷிக்கின்றுர். உத்ப்ரேக்ஷையைக் காட்டும் சொற்களான ध्रुवम्, इव - முதலியன இல்லாவிடினும் பொருளின் தன்மையைக்கருதி உதப்ரேக்ஷயாககொள்ள வேண்டும். வனதேவதைகளும் கண்டனர் என்பதால் தச

ரதராது குணச் சிறப்புப் புலனாகும். 2-ஆம் ஸர்க்கம், 12-ஆம் சுலோகத்தைப் பார்க்க.

श्वगणिवागुरिकैः प्रथमास्थितं व्यपगतानलदस्यु विवेश सः ।
स्थिरतुरङ्गमभूमि निपानवन्मृगवयोगवयोपचितं वनम् ॥ ५३ ॥

**सः** - அத்தசரதர், **श्वगणि - वागुरिकैः** - நாய்க் கூட்டத்தினராலும், வலையுடையவராலும், **प्रथम-आस्थितम्** முன்பே இருக்கப்பெற்றதும், **व्यपगत-अनल दस्यु**-காட்டுத் தீ, திருடர் இவர்களை அறவே நீக்கியதும், **स्थिरतुरंगम-भूमि**-உறுதியான, -குதிரைக்குத் தக்க - தரையுடையதும், **निपानवत्** - குடிநீர் தொட்டிகளையுடையதும், **मृग-वयः-गवय- उपचितम्** - மான், பறவை, கவயம் இவைகள் நிறைந்ததுமான, **वनम्** - வனத்துள், **विवेश** · புகுந்தார்.

(க-து) வேட்டை நாய்களின் கூட்டமுடைய வேடர்களும், வலைகளையுடைய வேடுவர்களும், தசரதர் வனம் செல்வதற்கு முன்பே காட்டில் சென்று வேட்டையில் உதவுதற்காகத் தயாராக இருந்தனர். தீயினாலும் கள்வராலும் அரசருக்குத் தீங்கு நேருமாகையால் தசரதர் காட்டினுள் புகுவதற்கு முன்பே தீயையும் கள்வரையும் அறவே காட்டினின்றும் நீக்கினர். குதிரைகள் செல்லும்படிக் காடு, சேறின்றி உறுதியான தரையுடனிருந்தது. களைத்த குதிரைகளும் மனிதர்களும் நீர் குடிப்பதற்கு வேண்டிய தண்ணீர்த் தொட்டிகளை ஆங்காங்கு அமைத்திருந்தனர். இத்தகைய வனத்துள் தசரதர் சென்றார்.

அரசருக்குப் பாதுகாப்பு அவசியமாதலால் '**व्यपगतानल-दस्यु, स्थिरतुरंगमभूमि**' - என்றார். இதுபற்றிக் காமந்தகர், **दवाग्निधूमसंरोधो दिङ्मोहभ्रमणानि च । इत्यादि पृथिवीन्द्राणां मृगयाव्यसनं स्मृतम् ॥' 'गिरेरुपान्ते नद्या वा पर्याप्तजल-शाद्वलम् । पांसु पूरितनिश्छिद्रश्वभ्रप्रदरकन्दरम्' 'कारयेद् भवन-शोधनमादौ मातुरन्तिकमपि प्रविविक्षुः' । आप्तशास्त्र्यनुगतः प्रविशेद्वा**

संकटे च गहने च न तिष्ठेत्' என்பர். निपानम् - நீர்நிலை களுக்கு அருகே அமைக்கப்பட்டுள்ள தண்ணீர்த் தொட்டி. गवय: - பசுபோலுள்ள காட்டிலிருக்கும் ஒரு பிராணி.

अथ नभस्य इव त्रिदशायुधं कनकपिङ्गतडिद्गुणसंयुतम् ।
धनुरधिज्यमनाधिरुपाददे नरवरो रवरोषितकेसरी ॥ ५४ ॥

**अथ**-பிறகு, **नभस्य:**-புரட்டாசி மாதமானது, **कनकपिङ्ग-तडिद्गुण-संयुतम्** - பொன்போல் மஞ்சள் நிறமுள்ள மின்னலாகிய நாணோடு கூடிய, **त्रिदशायुधम्-इव** - வானவில்லை (கொள்வது) போல், **अनाधि:** - மனக்கவலையற்றவரும், **रव-रोषित-केसरी** - (நாண்) ஒலியினால் கோபமடைவிக்கப்பட்ட சிங்கமுடையவருமான, **नरवर:**-ஆண்களிற் சிறந்த தசரதர், **अधिज्यम्** - நாணேற்றப்பட்ட, **धनु:** -வில்லை, **आददे**-(கையில்) எடுத்தார்.

(க-து) தசரதர் வில்லைக் கையில் ஏந்தி நின்றார்.

வர்ஷ ருதுவான புரட்டாசி மாதத்தில் வானவில் ஆகாயத்தில் தோன்றும். அவ்வில்லுக்கு நாண்கயிறு, பொன் போல் நிறமுள்ள மின்னல்தான். தசரதர் வில்லைக் கையி லேந்தியிருந்தபொழுது விசேஷ சோபையுடன் காணப் பட்டதால் வானவில்லையுடைய புரட்டாசி மாதத்துடன் ஒப்பிடப்பட்டார். வானவில்லும் மின்னலும் ஒரே காலத் தில் ஒரே இடத்தில் தென்படுதல் அரிதாயினும், மின்னலை வானவில்லுக்கு நாணாகக் கூறியது, உபமானத்தின் குறை வின்மை கருதி.

இதுவரை தசரதருக்கு மனக்கவலை ஏதுமில்லை என் பதைக்காட்ட, **अनाधि:** - என்றார். 'सुखस्यानन्तरं दुःखं-दुःखस्यानन्तरं सुखम्' - என்ற முறையில் இனித் தசரதருக்கு

வரவேண்டியது துக்கமே என்பதும் உணர்த்தப்படுகிறது. **रवरोषितकेसरी**-என்பதால் தசரதரது பராக்ரமம் புலனாகும்:

तस्य स्तनप्रणयिभिर्मुहुरेणशावैर्व्याहन्यमानहरिणीगमनं पुरस्तात् ।
आविर्बभूव कुशगर्भमुखं मृगाणां यूथं तदग्रसरगर्वितकृष्णसारम् ॥

**स्तन-प्रणयिभिः** - பாலை விரும்புகின்ற, **एणशावैः** - மான் குட்டிகளால், **मुहुः** - அடிக்கடி, **व्याहन्यमान-हरिणी-गमनम्** - தடுக்கப்பெற்ற பெண்மான்களின் நடையுடையதும், **कुशगर्भ-मुखम्** - புற்களை வாயிலுடையதும், **तदग्रसर-गर्वित-कृष्णसार** - அப் பெண்மான்களின் முன் செல்கின்ற கர்வமுள்ள ஆண் மான்களையுடையதுமான, **मृगाणां यूथम्** - மான் கூட்டம், **तस्य पुरस्तात्** - அவர் முன்பு, **आविर्बभूव** - தோன்றியது.

(க-து) தசரதருக்கு முதன்முதலில் கண்ணில் தென்பட்டது ஒரு மான் கூட்டம். அக்கூட்டத்தில் ஆண் மான்களும் பெண்மான்களும் குட்டிகளும் இருந்தன. குட்டிகள் அடிக்கடி பால் குடிக்க விரும்பியதால் பெண் மான்கள் தம் இஷ்டப்படி நடக்க முடியாது, அவைகளின் நடை அடிக்கடி தடையுற்றது. மேய்ந்து கொண்டிருந்த அவைகளின் வாயில் புற்களிருந்தன. அக் கூட்டத்தின் முன்னணியில் ஆண்மான்கள் தலை நிமிர்ந்து கர்வத்துடன் சென்று கொண்டிருந்தன.

तत्प्रार्थितं जवनवाजिगतेन राज्ञा तूणीमुखोद्धृतशरेण विशीर्णपङ्क्ति ।
श्यामीचकार वनमाकुलदृष्टिपातैर्वातेरितोत्पलदलप्रकरैरिवार्द्रैः॥ ५६ ॥

**जवन-वाजि-गतेन**-வேகமான குதிரையின் மீதமர்ந்தவரும், **तूणी-मुख-उद्धृतशरेण** - அம்பறாத்தூணியின் வாயினின்றும் பாணத்தை எடுத்தவருமான, **राज्ञा** - அரசரால், **प्रार्थितम्** - பின்தொடரப்பட்டதும், **विशीर्ण-पङ्क्ति** - வரிசை கலைந்தது மான, **तत्** - அக் கூட்டம், **आर्द्रैः** - (கண்ணீரால்) நனைந்த, **आकुल-दृष्टिपातैः**-மருண்ட பார்வைகளால், **वात-ईरित-उत्पल-**

दल-प्रकरैः इव-காற்றினல் இறைக்கப்பட்ட நீலோத்பல இதழ்களின் கூட்டத்திஞற்போல், वनम् - காட்டை, श्यामी चकार-கறுத்ததாகச் செய்தது.

(க து) வேகமாகச் செல்லுகின்ற குதிரைமீதமர்ந்து அம்பைக் கையிலெடுத்து அக் கூட்டத்தைப் பின் தொடர்ந்தார் தசரதர். மனிதனைக்கண்ட அம்மான்கள், வரிசைகலேந்து நாற்புறமும் சிதறி ஓடின. பயத்தால் கண்களில் நீர் ததும்ப மருண்டு எங்கும் நோக்கின. வனமெங்கும் மான்களின் கருத்த கண்களே தென்பட்டதால், நீலோத்பல மலர்களை இறைத்தாற்போல் வனம் முற்றிலும் கருநிறமுடையதாகக் காணப்பட்டது:

लक्ष्यीकृतस्य हरिणस्य हरिप्रभावः
प्रेक्ष्य स्थितां सहचरीं व्यवधाय देहम् ।
आकर्णकृष्टमपि कामितया स धन्वी
बाणं कृपामृदुमनाः प्रतिसंजहार ॥ ५७ ॥

हरि-प्रभावः - விஷ்ணுவைப்போல் பெருமையுடைய, धन्वी-சிறந்த வில்லாளியான, सः - அவர், लक्ष्यी कृतस्य - இலக்காகச்செய்யப்பட்ட, हरिणस्य - மானுடைய, देहम् - உடலை, व्यवधाय - மறைத்துக்கொண்டு, स्थिताम् - இருந்த, सहचरीम्-பெண்மானை, प्रेक्ष्य - பார்த்து, कामितया- அன்பின் தன்மையறிந்தவராதலால், कृपामृदुमनाः - இரக்கத்திஞல் இளகியமனமுடையவராக, आकर्ण-कृष्टम् अपि - காதளவு இழுக்கப்பட்டதாயினும், बाणम् - பாணத்தை, प्रतिसंजहार - எய்யாது நிறுத்திஞர்.

(க-து) தசரதர், ஒரு ஆண் மானைத் தனது அம்பிற்கு இலக்காகச் செய்யவும், அதனுடன் திரிகின்ற பெண்மான், தான் முன்ஞல் நின்று ஆண்மானின் உடலில் அம்பு படாதபடி மறைத்துக் கொண்டது இச் செய்கையைக் கண்ட தசரதர், காதலர்களின் அன்புப்

பிணைப்பை நன்கு அறிந்தவராதலால், அவைகளிடம் இரக்கங்கொண்டு காதளவு இழுத்த அம்பினையும் எய்யாது விடுத்தார்.

தசரதர் துஷ்டர்களை மாத்திரமே தண்டிக்கும் தன்மையுடையவராதலால், **हरिप्रभावः** - என விசேஷிக்கப்பட்டார்; எடுத்த பாணத்தை எய்யவும், நிறுத்தவும் திறமை பெற்றவர் எனக்காட்ட, **धन्वी** - என்றார்.

> तस्यापरेष्वपि मृगेषु शरान् मुमुक्षोः
> कर्णान्तमेत्य बिभिदे निबिडोऽपि मुष्टिः ।
> त्रासातिमात्रचटुलैः स्मरयत्सु नेत्रैः
> प्रौढप्रियानयनविभ्रमचेष्टितानि ॥ ५८ ॥

**त्रास-अतिमात्र-चटुलैः**- பயத்தினால் மிகவும் சஞ்சலமான, **नेत्रैः** -கண்களால், **प्रौढप्रिया-नयन-विभ्रम-चेष्टितानि**-யௌவனம் நிறைந்த பெண்களின் கண்களது அழகான செயல்களை, **स्मरयत्सु** - நினைவூட்டுகின்ற, **अपरेषु** - மற்ற, **मृगेषु-अपि** - மான்களிடத்தும், **शरान्** - பாணங்களை, **मुमुक्षोः** - விட விரும்பிய, **तस्य**-அவருடைய, **मुष्टिः**- முஷ்டியானது, **निबिडः- अपि** - உறுதியானதாயினும், **कर्णान्तम् एत्य** - காது வரை சென்றும், **बिभिदे** - (தானே) தளர்ந்தது.

(க-து) தசரதர் வேறு சில மான்களை அடிக்க விரும்பிப் பாணத்தைத் தொடுத்துக் காதளவு இழுத்தார். பயத்தினால் மிகவும் சலனமுற்ற மான்களின் கண்கள், தசரதருக்கு, அவரது காதலிகளின் கண் நோக்கினை நினைவூட்டின. மான்களின் மருண்ட பார்வையைக் கண்ட தசரதர், 'இவ்வாறன்றோ நமது அன்புள்ள மனைவியரின் கண்ணோக்கு இருந்தபடி,' என எண்ணியபொழுது, அவர் மனம் கருணைகொள்ளவும் அம்பைப்பிடித்திருந்த முஷ்டி,தானே தளர்ந்தது.

**प्रौढा**-மூவகைத் தலைவிகளில் ஒருத்தி என்றும் கொள்ளலாம். 34 -ஆம் சுலோகத்தின் உரையைக் காண்க. முஷ்டி - மூடிய கை.

उत्तस्थुषः शिशिरपल्वलपङ्कमध्या-
न्मुस्ताप्ररोहकवलावयवानुकीर्णम् ।
जग्राह स द्रुतवराहकुलस्य मार्गं
सुव्यक्तमार्द्रपङ्क्तिभिरायताभिः ॥ ५९ ॥

**सः** - அவ்வரசர், **मुस्ता-प्ररोह-कवल-अवयव-अनुकीर्णम्** - கோரை முளைகளாகிய உணவுப்பகுதி சிதறியுள்ளதும், **आयताभिः**- நீண்ட, **आर्द्र-पद-पङ्क्तिभिः**- ஈரமான அடிச்சுவடுகளின் வரிசைகளால், **सुव्यक्तम्** - நன்கு தெளிவானதும், **शिशिर-पल्वल-पङ्क-मध्यात्**-குளிர்ந்த குட்டைச் சேற்றிடையினின்று, **उत्तस्थुषः** - எழுந்த, **द्रुतवराह-कुलस्य** - ஓடுகின்ற பன்றிக் கூட்டத்தினதுமான, **मार्गम्** - வழியை, **जग्राह** - பற்றினான்.

(க-து) வேட்டையாடுபவர்களின் சத்தத்தைக் கேட்ட பன்றிகள் குட்டைகளின்றும் எழுந்து ஓடின. ஓடும்பொழுது, பன்றிகளின் வாயினின்றும் அவை தின்றுகொண்டிருந்த கோரை முளைகள் வழி முழுவதும் சிதறின. அவைகள் சென்ற மார்க்கம், ஈரமான அடிச்சுவடுகளையுடையதாயிருந்ததால் எளிதிலேபுலப்பட்டது. தசரதர் பன்றிகளை வேட்டையாடுதற்காக அவைசென்ற வழியைப் பின் பற்றினார்.

**कवलः**-ஒருவாய் உணவு. குட்டையின் நீரைக்காட்டிலும் அதன் சேறு குளிர்ந்திருக்குமாதலால், **शिशिर**-என்பதை, **पङ्क**-என்பதுடன் அந்வயிக்க. குட்டைச்சேற்றிலுழலுவதும், கோரைக் கிழங்குமுளைகளைத் தின்பதும் பன்றிகளின் இயற்கையாகும்.

तं वाहनादवनतोत्तरकायमीष-
द्विध्यन्तमुद्धतसटाः प्रतिहन्तुमीषुः ।
नात्मानमस्य विविदुः सहसा वराहा
वृक्षेषु विद्धमिषुभिर्जघनाश्रयेषु ॥ ६० ॥

**वाहनात्**-குதிரையினின்றும், **ईषत् अवनत-उत्तरकायम्** - சிறிதே குனிந்த உடலின் மேற்பகுதியுடையவரும், **विध्यन्तम्**- அடிக்கின்றவருமான, **तम्** - அத் தசாதரை, **उद्धत-सटाः**- உதறின பிடரியையுடையனவாய், **वराहाः** - காட்டுப்பன்றி கள், **प्रतिहन्तुम्**-எதிர்த்துத் தாக்க, **ईषुः**-விரும்பின; (ஆனால்), **अस्य** - அவ்வரசருடைய, **इषुभिः** - பாணங்களால், **सहसा** - உடனே, **जघनाश्रयेषु**- (பன்றிகளது) பிருஷ்டத்திற்கு ஆதார மான, **वृक्षेषु** - மரங்களில், **विद्धम्** - தைக்கப்பட்டுள்ள, **आत्मानम्** - தங்களை, **न-विविदुः** - (அப் பன்றிகள்) உணரவில்லை.

(க-து) தசரதர், குதிரையினின்றும் சிறிதே குனிந்து, பன்றி களைப் பாணங்களால் அடிக்க முயன்றார். ஓடிய பன்றிகள், இப் பொழுது தமது வால்புறமானது அருகிலுள்ள மரங்களில் படும்படி நின்று கொண்டுத் தசரதரைத் தாக்க முயன்றன. ஆனால் அவைகள் தாக்குவதற்கு முன்பே தசரதர் எய்த பாணம் பன்றிகளது உடலின் முற்புறத்தில் பாய்ந்துப் பின்புறமாக வெளிப்பட்டுச் சார்ந்திருந்த மரங்களிலே அவைகளைத்தைத்தன. அவ்வாறு தாம் தைக்கப்பட்டுள் ளோமென்பதையும் அப் பன்றிகள் உணரவில்லை.

இதனின்றும் தசரதரது கைவன்மையும், நொடிப் பொழுதில் பாணம் பிரயோகிக்கும் திறனும் தெளிவாகும்.

तेनाभिघातरभसस्य विकृष्य पत्री
वन्यस्य नेत्रविवरे महिषस्य मुक्तः ।
निर्भिद्य विग्रहमशोणितलिप्तपुङ्ख-
स्तं पातयां प्रथममास पपात पश्चात् ॥ ६१ ॥

**अभिघात-रभसस्य** - எதிர்ப்பதற்காக வேகத்துடனிருக் கின்ற, **वन्यस्य महिषस्य** - காட்டு எருமையின், **नेत्रविवरे** - கண்களுக்கு மத்தியில், **तेन** - அவ்வரசரால், **विकृष्य** - நன்கு இழுத்து, **मुक्तः**- விடப்பட்ட, **पत्री**-பாணம், **विग्रहम्**-(எருமை

யின்) உடலை; निर्भिद्य - ஊடுருவியபின், अशोणित-लिप्त-पुङ्खः- ரத்தம் படாதகாம்பையுடையதாக, तम् - அவ்வெருமையை, प्रथमम् - முதலில், पातयाम् आस - வீழ்த்தியது; पश्चात् - பிறகு, पपात -(தான் கீழே) வீழ்ந்தது.

(க-து) தம்மை எதிர்க்க வேகத்துடன் வருகின்ற காட்டெரு மையின் கண்களுக்கு இடையிலுள்ள பாகத்தில் பாணத்தைத் தசரதர் எய்தார். அப்பாணம் எருமையின் உடலைக் கிழித்துக் கொண்டு ரத்தம் படுவதற்கு முன்பே ஒரு நொடியில் ஊடுருவிச்சென்று வெளி யில் வந்து வீழ்ந்தது. ஆனால் பாணம், தான் விழுவதற்கு முன்பே எருமையையும் வீழ்த்தியது.

பாணம், கண்ணிமைக்கும் நேரத்தில் எருமையின் உடலைக் கிழித்துவிட்டதால், ரத்தம் படாதிருந்தது. இதனின்று அம்பின் வேகமும், அதை எய்தவரின் வில்வித் தைத்திறனும் புலனாகும். पुङ्खः-அம்பின் காம்பு; அடிப்பாகம்; नेत्रविवरे-'கண்குழியில்' என்றும் பொருள் கொள்ளலாம்.

प्रायो विषाणपरिमोक्षलघूत्तमाङ्गान्
खड्गांश्चकार नृपतिर्निशितैः क्षुरप्रैः ।
शृङ्गं स दृप्तविनयाधिकृतः परेषा-
मत्युच्छ्रितं न ममृषे न तु दीर्घमायुः ॥ ६२ ॥

नृपतिः - அரசர் தசரதர், निशितैः - கூரான, क्षुरप्रैः பாணங்களாலே, खड्गान् - காண்டா மிருகங்களை, विषाण-परिमोक्ष-लघु-उत्तमाङ्गान् - கொம்புகளை நீக்குவதால் லேசான தலையுடையவைகளாக, प्रायः - பெரும்பாலும், चकार - செய் தார்; दृप्त विनय-अधिकृतः - கர்வம் கொண்டவர்களை வணக்கு வதிலே நியமிக்கப்பட்டுள்ள, सः - அவ்வரசர், परेषाम्- மற்ற வர்களின், अत्युच्छ्रितम् -மிக ஓங்கிய, शृङ्गम्-கொம்பை (முக்ய மான நிலையை), न ममृषे - பொறுக்கவில்லை; दीर्घम् आयुः तु -

(அவர்களது) நெடிய ஆயுளை, (**न ममृषे इति**) **न** - ஸஹிக்க வில்லை என்பதில்லை.

(க-து) தசரதர், காண்டாமிருகங்களைக் கொல்லாது அவை களின் கொம்புகளை மாத்திரம் வெட்டி வீழ்த்தினர். கனமான கொம்புகள் நீங்கியதால், மிருகங்களது தலை லேசாக இருந்தது. பெரும்பாலும் தசரதர், தாம் பார்த்த காண்டாமிருகங்கள் எல்லா வற்றிற்கும் இவ்வாறே செய்தார். தசரதர் ஏன் அவைகளைக் கொல்ல வில்லை எனின், அவர், பிறருடைய கர்வத்தை மாத்திரம் ஸஹிக்க மாட்டாரேயன்றி அவர்கள் உயிர் வாழ்வதை விரும்பாதவரல்லர்.

**शृङ्गम्** - இச் சொல்லுக்குக் 'கொம்பு, கர்வம்' என இரண்டு பொருள் உண்டு. இரண்டு பொருளையும் அபேத மாய்க்கொண்டு இச்சுலோகத்தின் கருத்து அமைந்துள்ளது. காண்டாமிருகத்திற்குக் கொம்பு மூக்கின்மேலுள்ளதன்றித் தலைமேலன்று. தலையிலுள்ள ஒரு அங்கமாகிய மூக்கின் மேலுள்ளதால் கொம்பைத் தலைதாங்கி யிருந்ததாகக்கூறினர்.

**क्षुरप्रः** - கத்திபோல் அகன்று கூரான முனையுள்ள ஒரு வகை அம்பு.

> व्याघ्रानभीरभिमुखोत्पतितान् गुहाभ्यः
> फुल्लासनाग्रविटपानिव वायुरुग्णान् ।
> शिक्षाविशेषलघुहस्ततया निमेषा-
> त्तूणीचकार शरपूरितवक्त्ररन्ध्रान् ॥ ६३ ॥

**अभीः** - பயமற்ற அவர், **गुहाभ्यः** - குகைகளினின்று, **अभिमुख-उत्पतितान्** - (தன்மை) நோக்கிப் பாய்கின்றனவும், **वायु-रुग्णान्** - காற்றினால் ஒடிக்கப்பட்ட, **फुल्ल-असन-अग्रविटपान् इव (स्थितान्)** - புஷ்பித்தவேங்கை மரத்தின் நுனிக்கிளை போல் இருப்பனவும், **शर-पूरित-वक्त्र-रन्ध्रान्** - அம்புகளால் நிரப்பப்பட்ட வாய்களையுடையனவுமான, **व्याघ्रान्**- புலிகளை,

**शिक्षा-विशेष-लघुहस्ततया** - சிறந்த பயிற்சியால் துரிதமான கையுடைய தன்மையால், **निमेषात्** -கண்ணிமைக்கும் பொழுதில், **तूणीचकार** - அம்பறாத்தூணிகளாகச் செய்தார்.

(க-து) தசரதர் அச்சமற்றவர். வேட்டையாடச் சென்ற பொழுது குகைகளினின்றும் வெளிவந்து புலிகள் அவரை நோக்கிப் பாய்ந்தன. பாய்கின்ற அப்புலிகள், காற்றினால் ஒடிக்கப்பட்டுக் கீழேவிழுகின்ற வேங்கை மரக்கிளைபோல் காணப்பட்டன. அம்பை எய்வதில் விசேஷமான பயிற்சி பெற்று நல்லகைத்திறனையுடையவராதலால் தசரதர், நொடிப்பொழுதில் பல அம்புகளை அவ்வேங்கைகளின் வாய்களில் புதைத்தார். பாணங்கள் நிறைந்த வாய்களுடனிருந்த அப் புலிகள், அம்பு நிறைந்த அம்பறாத் தூணிகள்போல் இருந்தன.

**असनः** - வேங்கை மரம்: மஞ்சள் நிறமான பூக்களையுடைய இம்மரம், புலியின் நிறத்தை ஒத்திருக்கும். பாய்கின்றபுலிக்குக் காற்றினால் ஒடித்துத் தள்ளப்பட்ட வேங்கை மரக்கிளை உபமானம்: வேங்கைமரத்தைக் கண்டவர்கள் இவ்வுபமானத்தை நன்கு ரஸிக்கக்கூடும்.

निर्घातोग्रैः कुञ्जलीनाञ्जिघांसुर्ज्यानिर्घोषैः क्षोभयामास सिंहान् ।
नूनं तेषामभ्यसूयापरोऽभूद् वीर्योदग्रे राजशब्दे मृगेषु ॥ ६४ ॥

**कुञ्जलीनान्** - புதர்களில் மறைந்திருந்த, **सिंहान्** -சிங்கங்களை, **जिघांसुः** - கொல்லவிரும்பிய அவர், **निर्घात-उग्रैः** - இடிபோல் பயங்கரமான, **ज्या-निर्घोषैः** - நாணொலிகளால், **क्षोभयामास** - கலங்கச் செய்தார்; **मृगेषु** - மிருகங்கள் திறத்தில், **तेषाम्**- அச்சிங்கங்களது, **वीर्य-उदग्रे** - பலத்தினால்சிறந்துள்ள, **राज-शब्दे**-ராஜன் என்றசொல்லில், **अभ्यसूया-परः**-பொறாமை கொண்டவராக, **अभूत् नूनम्** - இருந்தார் போலும்!

(க-து) தசரதர், இடிபோன்ற நாணொலியை எழுப்பி அதன் மூலம், புதர்களிலேயுள்ள சிங்கங்களை வெளிவரச் செய்தார். ஏனெ

னில் ராஜன் என்ற பதம் தமக்கே உரியதென நினைத்த தசரதர், சிங்கங்களுக்கு மிருகராஜன் என்று பெயர் இருப்பதை ஸஹிக்கவில்லை போலும் எனக் கவி புனைந்து கூறுகின்றார்.

**निर्घात:**-'ஆகாயத்தில் காற்றுக்கள்மோதுதலால் உண்டாவதும் அசுபத்தின் அறிகுறியுமான ஒலி' என்றும் கூறலாம். **कुञ्ज:** - கொடிகளால் மறைக்கப்பட்டுள்ள இடம்; **नूनम्** - திண்ணம் என்பது பதப் பொருள். இங்கே உதப்ரேக்ஷையைக்காட்டியது.

தூங்குகின்ற பிராணிகளை வேட்டையாடுதல் அதர்மமாகையால்தசரதர், முதலில் நாணொலியால் அவைகளை எழுப்பி வெளிவரச் செய்தார்.

तान् हत्वा गजकुलबद्धतीव्रवैरान् काकुत्स्थः कुटिलनखाग्रलग्नमुक्तान्।
आत्मानं रणकृतकर्मणां गजानामानृण्यं गतमिव मार्गणैरमंस्त ॥ ६५ ॥

**काकुत्स्थ:**-தசரதர், **गजकुल-बद्ध-तीव्र-वैरान्**-யானைக் குலத்தில்வைத்த உறுதியான பகையுள்ளனவும், **कुटिल नखाग्र-लग्न-मुक्तान्** - வளைந்த நகங்களின் நுனியில் சிக்கிய முத்துக்களையுடையனவுமான, **तान्** - அச் சிங்கங்களை, **हत्वा** - கொன்று, **आत्मानम्**-தம்மை, **रण-कृतकर्मणाम्**-யுத்தத்தில் வேலை செய்த **गजानाम्** - யானைகள் விஷயத்தில், **मार्गणै:** - அம்புகளால், **आनृण्यम्** - கடனற்றவனாயிருத்தலை, **गतम् इव** - அடைந்தவர் போல், **अमंस्त** - எண்ணினார்.

(க-து) தசரதர் சிங்கங்களைக் கொன்றார். இதைக் கவி உத்ப்ரேக்ஷிக்கும் வகை: சிங்கங்கள் யானைக்குலத்திடம் தீராப்பகை கொண்டன. யானைகளைக் கொன்று மஸ்தகத்தைப் பிளப்பதால் அங்குள்ள முத்துக்கள் சிங்கங்களது வளைந்த நகங்களிடையே சிக்கியுள்ளன. இதைப்பார்க்கும்பொழுது தசரதரது கோபம் விருத்தியடைகின்றது. சிங்கங்கள் யானைகளைக் கொன்றன என்பதற்கு இதைவிட வேறு ஸாக்ஷ்யம் என்னவேண்டும்? தசரதருக்குப் போரில் உதவி செய்த

தாகையால் யானைக்குலமே அவருடைய அன்பிற்கு உரியதாயிற்று. இதனால் தசரதர், அதனிடம் கடன் பட்டவர் போன்றும் கருதியானைக் குலத்திற்கே பகையாயுள்ள சிங்கங்களைக் கொன்று அக்கடனை நீக்கிக் கொண்டவர் போல் எண்ணினார்.

யானைகளின் மஸ்தகத்தில்முத்துண்டு என்பர். அதனால் மஸ்தகத்தைப்பிளந்த சிங்கங்களின் நகங்களில் முத்துக்கள் சிக்கிக்கொண்டன. முத்துண்டாகும் பிற இடங்கள்; மேகம், காட்டுப்பன்றி, சங்கு, மீன், ஒருவகைப்பாம்பு, சிப்பி, மூங்கிற் கணு; இவ்வாறு பல இடங்களில் முத்து உண்டாகுமாயினும் சிப்பியிலுண்டாவது தான் அதிகம். करीन्द्र जीमूत वराह शङ्ख-मत्स्य अहि शुक्त्युद्भव वेणुजानि । मुक्ताफलानि प्रथितानि लोके, तेषां हि शुक्त्युद्भवमेव भूरि' - என்பதைக் காண்க.

चमरान् परितः प्रवर्तिताश्वः क्वचिदाकर्णविकृष्टभल्लवर्षी ।
नृपतीनिव तान् वियोज्य सद्यः सितवालव्यजनैर्जगाम शान्तिम् ॥

**क्वचित्** - ஓரிடத்தில், **चमरान् परितः** - கவரி மான்களைச் சுற்றிலும், **प्रवर्तित-अश्वः**- செலுத்தப்பட்ட குதிரைகளையுடையவரும், **आकर्ण-विकृष्ट-भल्ल-वर्षी** - காதளவு இழுக்கப்பட்ட பல்லத்தை வர்ஷிப்பவருமான, (सः) - அவ் வரசர், **नृपतीन्-इव** - அரசர்களை (ச்செய்தது) போல், **तान्** - அக்கவரி மான்களை, **सित-वालव्यजनैः** - வெண்மையான வாலாகிய சாமரங்களினின்றும், **वियोज्य** - பிரித்து, **सद्यः** - உடனே, **शान्तिम्-जगाम** - மன அமைதி பெற்றார்.

(க-து) தசரதர் வனத்தில் ஓரிடத்தில் கவரி மான்களின் கூட்டத்தைக் கண்டு, - சிற்றரசர்களைக் கொல்லாது ராஜசின்னமாகிய அவர்களது சாமரங்களை மட்டும் நீக்கியது போல்,-மான்களைக் கொல்லாது அவைகளின் சாமர வால்களைமாத்திரம் அறுத்து மனம் மகிழ்ந்தார்.

चमरः - மான்வகையில் ஒன்று. இதன் வால் வெண்மையாய் அடர்ந்த மயிருடன் இருக்கும். இதனின்றும் செய்யப்படுவது சாமரம். பல்லம்-ஒருவகைப்பாணம்; பிறைவடிவத்தில் முனையுடையது.

अपि तुरगसमीपादुत्पतन्तं मयूरं
न स रुचिरकलापं बाणलक्ष्यीचकार ।
सपदि गतमनस्कश्चित्रमाल्यानुकीर्णे
रतिविगलितबन्धे केशपाशे प्रियायाः ॥ ६७ ॥

सः - அவர், तुरग-समीपात् - (தமது) குதிரையினருகினின்று, उत्पतन्तम् अपि - உயரே எழுகின்றதாயினும், रुचिर-कलापम् - ஒளிர்கின்ற தோகையுடைய, मयूरम् - மயிலை, - चित्र-माल्य-अनुकीर्णे - பலநிறமுள்ள புஷ்பஸரங்கள் இடையிலே செறுகப்பட்டுள்ளதும், रति - विगलित-बन्धे - கலவியினால் அவிழ்ந்தமுடிச்சையுடையதுமான, प्रियायाः केशपाशे - அன்பான மனைவியின் சிறந்த கூந்தலில், सपदि - உடனே, गत-मनस्कः - மனம்சென்றவராக, न बाण-लक्ष्यी-चकार - (தமது) அம்பிற்கு இலக்காகச்செய்யவில்லை.

(க-து) தசரதர், வேட்டையாடியகாலத்தில் மயில்களைக்கொல்லவில்லை. விரும்பினால் கொன்றிருக்கலாம். ஏனெனில் அவை அவரது குதிரைக்கு வெகு ஸமீபத்தினின்றும் பறந்துசென்றன. கொல்லாமைக்குக் காரணம் என்னவெனில் பறக்கின்ற மயில்களின் நீண்ட தோகைகளைப் பார்க்கும்பொழுது, தசரதருக்கு அவருடைய மனைவியரின் நீண்டகூந்தல் நினைவில் வந்தது. மயில் தோகைப் பல நிறத்துடன் இருப்பதுபோல் கூந்தலும் பல நிறப்புஷ்பங்கள் இடையிலே விளங்க அழகாயிருந்தது. முடிந்த கூந்தல், கலவிக் காலத்தில் முடி அவிழ்ந்ததால் நீண்டு, மயில் தோகை போன்றிருந்தது. தாமனுபவித்த கலவியை எண்ணி, அக்காலத்திலிருந்த கூந்தலினழகை.

பினை வூட்டிய தோகையைக் கண்ட தசரதர், இயற்கையிலே கருணையுடையவராதலால் மயில்களைக் கொல்லாது விடுத்தார்.

**केशपाश:** - **पाश** - என்பது கேசத்தின் சிறந்த தன்மையைக்காட்டவந்தது. கூந்தல், அவிழ்ந்த நிலையிலேதான் மயில் தோகை போன்றிருக்குமாதலால், **विगलितबन्धे** - என கேசத்தை விசேஷித்தார். அவிழ்தலுக்கு ரஸமான ஒரு காரணத்தை, **रति** -என்பதால்குறிப்பிட்டார். மயில் தோகை பல நிறமுடையதாகையால், கூந்தலும் பல நிறமுடையதென்பதைக் காட்ட, **चित्रमाल्यानुकीर्णे** - என்றார்.

तस्य कर्कशविहारसंभवं स्वेदमाननविलग्नजालकम् ।
आचचाम सतुषारशीकरो भिन्नपल्लवपुटो वनानिल: ॥ ६८ ॥

**कर्कशविहार-संभवम्** - வேட்டையினால் உண்டானதும், **आनन विलग्न-जालकम्** - முகத்தில் பதிந்த திவலைக் கூட்டமுடையதுமான, **तस्य स्वेदम्** - அவரது வேர்வையை, **सतुषार शीकर:** - குளிர்ந்த ஜலத் துளிகளையுடையதும், **भिन्न-पल्लवपुट:** - இணைந்துள்ள தளிர்களைப் பிரித்ததுமான, **वन-अनिल:** - வனத்தில் வீசிய காற்று, **आचचाम** - போக்கியது.

(க-து) வேட்டையாடியதனால் தசரதரது முகத்தில் தோன்றிய வியர்வைத் துளிகளை வனத்தில் வீசிய குளிர்ந்த காற்று நீக்கியது. மரங்களின் தளிர்களில் பட்டு வந்ததால் காற்று நறுமணமுடையதாக இருந்தது.

**कर्कशविहार:**-கடினமான விளையாட்டு: வேட்டை. **जालकम्**-ஜலத்துத்துளிகளின்தொகுதி; **तुषार:**-குளிர்ந்த; **आचचाम**-'குடித்தது' என்பது பதப்பொருள். குளிர்ந்ததன்மை, நறுமணமுடைமை, மெதுவாக வீசுதல் என்ற முக்குணங்களும் காற்றிற்கு இருந்தனவென்பது, **सतुषार...र:; भिन्न...पुट:** - என்ற விசேஷணங்களால் தெளிவாகும்.

इति विस्मृतान्यकरणीयमात्मनः सचिवावलम्बितधुरं धराधिपम् ।
परिवृद्धरागमनुबन्धसेवया मृगया जहार चतुरेव कामिनी ॥ ६९ ॥

**इति**-இவ்வாறு, **विस्मृत-अन्य-करणीयम्**-மற்ற வேலைகளை எல்லாம் மறந்தவரும், **आत्मनः**-தமது, **सचिव-अवलंबित-धुरम्**-மந்திரிகளால் தாங்கப்பட்ட ராஜ்யபாரமுடையவரும், **अनुबन्धसेवया** - தொடர்ந்து அனுபவித்தலால், **परिवृद्ध-रागम्** - (மேன்மேலும்) வளர்ந்த ஆசையுடையவருமான, **धराधिपम्** - அரசரை, **मृगया** - வேட்டையானது, **चतुरा** - ஸாமர்த்ய முள்ள, **कामिनी इव**-அழகான ஸ்திரீபோல், **जहार**-கவர்ந்தது.

(க-து) முதலில் மந்திரிகளின் அனுமதி பெற்று வேட்டையாட வந்த தசரதரும் முடிவில் அதற்கு வசப்பட்டார். அடிக்கடி பயில்வதால் சிலவற்றில் ஆசைவிருத்தியடையும். அவற்றுள் வேட்டையும் ஒன்று. ஆதலால் திருப்தியுண்டாகிப் போதுமென்ற எண்ண முண்டாவதற்கு மறுதலையாக மேலும் வேண்டுமென்ற ஆசையேயுண்டாகியது. தசரதர் மற்ற வேலைகளை எல்லாம் மறந்தார். தமது கடமையான ராஜ்ய பாரத்தை மந்திரிகளிடம் ஒப்படைத்திருந்தார். காமம் மிகுந்த, ஸாமர்த்தியமுள்ள அழகான பெண்ஒருத்தி பலவகையான கலவி முறைகளால் கணவனைத் தன் வசப்படுத்திக் கொள்வதுபோல், வேட்டையும் தசரதருடைய மனத்தைக் கவர்ந்து கொண்டது.

முனிவரின் சாபத்தைப்பெறும்படி, பெரிய தவற்றைத் தசரதர் பிறகு இழைத்ததற்குக் காரணம், அவர் வேட்டையில் அதிகம் ஆசை வைத்ததே எனக்கவி இதன்மூலம் குறிப்பிடுகின்றார்.

स ललितकुसुमप्रवालशय्यां ज्वलितमहौषधिदीपिकासनाथाम् ।
नरपतिरतिवाहयांबभूव क्वचिदसमेतपरिच्छदस्त्रियामाम् ॥ ७० ॥

**सः नरपतिः** - அவ்வரசர், **ललित-कुसुम-प्रवाल-शय्याम्** - மிருதுவான புஷ்பம் தளிர் இலைகளாலான படுக்கையுடை

யதும், ज्वलित-महौषधि-दीपिका सनाथाम्-ஜ்வலிக்கின்ற ஒஷதிகளாகிய விளக்குகளையுடையதுமான, त्रियामाम् - இரவை, क्वचित् - (வனத்தில்) ஓரிடத்தில், असमेत-परिच्छदः-பரிஜனங்களற்றவராக, अतिवाहयां बभूव - போக்கினார்.

(க-து) ஒரு சமயம் தசரதர், பரிஜனங்களின்றித் தனியே வேட்டைக்குச் சென்று, ஓரிடத்தில் புஷ்பங்களாலும் தளிர்களாலுமான சயனத்தில் படுத்து இரவைப் போக்கினார். ஆங்கு, ஒளிவீசுகின்ற ஒருவகைக் கொடிகளே தீபங்களாக இருந்தன.

படுக்கை கொண்டுவந்த பரிஜனங்களில்லாததால் சயனம், இலைகளாலும் புஷ்பங்களாலும் அமைந்திருந்தது.

परिच्छदः-பரிவாரம்; பரிஜனங்கள்; படுக்கை முதலிய உபகரணங்கள் என்றும் பொருள்கொள்ளலாம். ज्वलित महौषधि-ஜ்யோதிர்லதை. त्रियामा-மூன்றுயாமங்களையுடையது: இரவு; முதற்யாமத்தின் முற்பாதியிலும் கடைசி யாமத்தின் பிற்பாதியிலும் மக்கள் விழிப்புடனிருந்து செயலாற்றுவதாலும், மூன்று யாமங்களே தூக்கத்திற்கு உபயோகமாவதாலும் இரவிற்கு இப்பெயர் ஏற்பட்டது. யாமம் - ஏழரை நாழிப்பொழுது.

उषसि स गजयूथकर्णतालैः पटुपटहध्वनिभिर्विनीतनिद्रः ।
अरमत मधुराणि तत्र शृण्वन्विहगविकूजितवन्दिमङ्गलानि ॥ ७१ ॥

उषसि - விடியற்காலையில், पटु-पटह-ध्वनिभिः-தெளிவான பறையினது போன்ற தொனியுடைய, गजयूथ-कर्ण-तालैः - யானைக்கூட்டத்தின் காதுகளாகிய தாள வாத்யங்களினால், विनीत-निद्रः-நித்திரை நீங்கியவரான, सः- அவர், तत्र-அங்கு, मधुराणि - இனிய, विहग-विकूजित-वन्दि- मङ्गलानि - பறவைகளது ஒலிகளாகிய வந்திகளின் மங்கள கானங்களை, शृण्वन्-கேட்டுக்கொண்டு, अरमत - களித்தார்.

(க-து) தசரதர் விடியற்காலையில், காட்டில் திரிகின்ற யானைக் கூட்டத்தின் காதடிப்புச் சத்தத்தினால் நித்திரை நீங்கி எழுந்தார். அரசரை எழுப்பக் காலையில் வந்திகள் பாடுவர். வாத்தியங்கள் ஒலிக்கும். வனத்திலிருந்த தசரதருக்கு யானைகளின் காதடிப்புச் சத்தம் தாளவாத்ய ஒலியாகவும், பறவைகளின் இனிய நாதம் வந்திகளின் கானமாகவும் இருந்தன. இவ்வோசைகளைக் கேட்டுத் தசரதர் மகிழ்ந்திருந்தார்.

**कर्णतालैः** - 'காதடிப்புக்களால்' எனவும் கொள்ளலாம்.

अथ जातु रुरोर्गृहीतवर्त्मा विपिने पार्श्वचरैरलक्ष्यमाणः ।
श्रमफेनमुचा तपस्विगाढां तमसां प्राप नदीं तुरंगमेण ॥ ७२॥

**अथ** - பிறகு, **जातु** - ஒரு சமயம், **रुरोः** - மானுடைய, **गृहीतवर्त्मा**- வழியைப்பின்பற்றிய (**सः**)-அவர், **विपिने** - காட்டில், **पार्श्वचरैः**- பணியாட்களால், **अलक्ष्यमाणः** - பார்க்கப்படாதவராய், **श्रम-फेन-मुचा** - சிரமத்தினால் (வாய்) நுரையைத் தள்ளுகின்ற, **तुरङ्गमेण** - குதிரையின் மூலம், **तपस्वि-गाढाम्**- முனிவர்கள் நிறைந்த, **तमसां नदीम्** - தமஸாநதியை, **प्राप**- அடைந்தார்.

(க-து) பிறகு தசரதர், ஒரு மானைப் பின் தொடர்ந்து தமஸா நதியை அடைந்தார். குதிரையின் மீது வேகமாகச் சென்றதால் பணியாளர்கள் அவரைப் பின் தொடர முடியவில்லை. ஆகவே அவர் தனித்தவரானார்.

**तपस्वि गाढाम्** - என்பது, இனி கூறப்போகின்ற ஸம்பவத்திற்கு வித்துப்போன்றுள்ளது.

कुम्भपूरणभवः पटुरुच्चैरुच्चचार निनदोऽम्भसि तस्याः ।
तत्र स द्विरदबृंहितशङ्की शब्दपातिनमिषुं विससर्ज ॥ ७३ ॥

**तस्याः** - தமஸா நதியின், **अम्भसि** - ஜலத்தில், **कुम्भ - पूरण भवः**- குடத்தை நிரப்புவதால் உண்டான, **पटुः** -இனிய,

त्युच्चैः - உரத்த, निनदः - சத்தம், उच्चचार - ஒலித்தது. तत्र - அச் சத்தத்தை, द्विरद-बृंहित-शङ्की - யானையின் பிளிறுதலாகச் சந்தேஹித்த, सः - அவர், शब्दपातिनम् - சத்தத்தை அனுசரித்து வீழ்கின்ற, इषुम् - அம்பை, विससर्ज - விடுத்தார்.

(க-து) குடத்தில் நீர் நிரப்பும் சத்தம், தமஸா நதியின் ஜலத்தில் உண்டாயது. அவ்வொலியை யானையின் பிளிறுதலாக எண்ணி, யானை அருகிலுள்ளதென நினைத்து ஒரு அம்பை எய்தார். அவ்வம்பின் சிறப்பு யாதெனின், பொருள் கண்ணுக்குப் புலப்படாவிடினும் சத்தத்தை அனுசரித்துச் சென்று அப்பொருளை அடிக்கும் திறன் வாய்ந்தது.

नृपतेः प्रतिषिद्धमेव तत् कृतवान् पङ्क्तिरथो विलङ्घ्य यत् ।
अपथे पदमर्पयन्ति हि श्रुतवन्तोऽपि रजोनिमीलिताः ॥ ७४ ॥

यत् - எக்காரியத்தை, पङ्क्तिरथः - தசரதர், विलङ्घ्य - (சாஸ்திரத்தை) மீறி, कृतवान् - செய்தாரோ, तत् - அது, नृपतेः - அரசனுக்கு, प्रतिषिद्धम् एव - (சாஸ்திரங்களால்) தடுக்கப்பட்டுள்ளதே; हि - ஏனெனில், श्रुतवन्तः अपि - சிறந்த அறிவுள்ளவர்களும், रजोनिमीलिताः - ரஜோகுணத்தினால் (அறிவுக்) கண் மறைக்கப்பட்டவர்களாக, अपथे - தகாத மார்க்கத்தில், पदम्-अर्पयन्ति - அடி வைக்கின்றனர்.

(க-து) தசரதர் யானையை அடிக்க முயன்றது குற்றமே. ஏனெனில் அரசர்கள் யானைகளை யுத்தத்தில் கொல்லாமேயன்றி மற்றக்காலங்களில் கொல்லுதல் கூடாதெனச் சாஸ்திரங்கள் தடுத்துள்ளன. ஆனால் இத்தகைய தவற்றை அறிவாளியான தசரதர் ஏன்செய்தாரெனின், அறிவாளிகளும் ரஜோ குணம் மேலிடும்பொழுது பிழை செய்வதுண்டு எனக் கவி கூறுகின்றார் தசரதர் வேட்டையில் அதிகம் பற்று வைத்தது இதற்குக் காரணம். புழுதி (रजः) கண்ணில் விழுந்து பார்வையை மறைப்பதுபோல் ரஜோகுணம் தசரதரது

அறிவாகிய கண்ணை மறைத்துக் குருடாக்கியது. அதனால், செய்யத் தக்கது-தகாதது அறியாமற் போனார்.

**पङ्क्ति** - பத்து; **पङ्क्तिरथः** - பத்துத்திசையிலும் செல்லும் ரதமுடையவர்.

> हा तातेति क्रन्दितमाकर्ण्य विषण्ण-
> स्तस्यान्विष्यन्वेतसगूढं प्रभवं सः ।
> शल्यप्रोतं प्रेक्ष्य सकुम्भं मुनिपुत्रं
> तापादन्तःशल्य इवासीत्क्षितिपोऽपि ॥ ७९ ॥

'**हा तात** - ஆ! தந்தையே!' **इति** - என்ற, **क्रन्दितम्** - அலறலை, **आकर्ण्य** - கேட்டு, **विषण्णः** - துக்கித்தவராய், **वेतसगूढम्** - நீர்வஞ்சியில் மறைந்துள்ள, **तस्य प्रभवम्** - அவ் வலறலுக்குக் காரணத்தை, **अन्विष्यन्** - தேடிக்கொண்டு, **शल्य - प्रोतम्** - அம்புதைத்தவனும், **सकुम्भम्** - குடத்துட னிருப்பவனுமான, **मुनिपुत्रम्** - முனிகுமாரனை, **प्रेक्ष्य** - கண்டு, **सः क्षितिपः अपि** - அவ்வரசரும், **तापात्** - துக்கத்தினால், **अन्तः शल्यः इव** - உள்ளே சல்யமுடையவர் போல், **आसीत्** - ஆனார்.

(க-து) தமது அம்பு வீழ்ந்த இடத்தினின்றும் 'ஆ! தந்தையே!' என எழுந்த குரலைக் கேட்டதும், தசரதர், 'அடிக்கப்பட்டது யானை அன்று; மனிதனே' என உணர்ந்து வருந்தினார். அச்சத்தத்திற்குக் காரணமான மனிதன் நீர்வஞ்சிக்கொடிகளால் மறைக்கப் பட்டிருந்த தால், அவனைப் பார்ப்பதற்குச் சென்றார். சென்றதும் தமது பாணம் மார்பில் புதைந்துக் குடத்தின் மீது சாய்ந்துள்ள ஒரு ரிஷி குமாரனைக் கண்டார்.

தசரதர் எய்த அம்பு, சப்தவேதியாகையால் சப்தத்தை உண்டாக்கிய குடத்தை அடிக்கவேண்டியதாயினும், நீர் மொள்ளும் பொழுது முனிகுமாரன் குனிந்து குடத்தை

மறைத்துக் கொண்டிருந்ததால் அவனை அடித்தது; **वेतस-गूढम्**- என்பதை, **प्रभवम्** - என்பதுடன் அந்வயிக்க; **शल्यम्**- பாணத்தின் முனை.

तेनावतीर्य तुरगात् प्रथितान्वयेन
पृष्टान्वयः स जलकुम्भनिषण्णदेहः ।
तस्मै द्विजेतरतपस्विसुतं स्खलद्भि-
रात्मानमक्षरपदैः कथयांबभूव ॥ ७६ ॥

**प्रथित-अन्वयेन** - பிரசித்தமான குலத்தவரான, **तेन** - அவரால், **तुरगात्** - குதிரையினின்றும், **अवतीर्य** - இறங்கி- **जलकुम्भ -निषण्ण-देहः**:-ஜலமுள்ள குடத்தின் மேல் சாய்ந்த தேஹமுடைய, **सः**:-அம்முனிகுமாரன், **पृष्टान्वयः**:-குலத்தைப் பற்றிக் கேட்கப்பட்டவனாய், **तस्मै** - அவ்வரசருக்கு, **स्खलद्भिः**:- குழறுகின்ற, **अक्षर-पदैः**:- அக்ஷரங்களாலும் சொற்களாலும், **आत्मानम्**-தன்னை, **द्विजेतर - तपस्वि-सुतम्**-பிராம்மணனல்லாத முனிமகனாக, **कथयां बभूव** - தெரிவித்தான்.

(க-து) தசரதர் நற்குடியிற் பிறந்தவராதலால் தாம் செய்த பாவச் செயலை எண்ணி மிகமிகப் பயந்தார். இதனால் தன் குலத்திற்கு நேரும் அவப்பெயரை நினைத்தார். குதிரையினின்றும் சட்டென இறங்கி, குடத்தின்மேல் சாய்ந்துள்ள முனி குமாரனது வரலாற்றை வினவவும், அவன், தான் பிராம்மணனல்லாத முனிமகனெனத் தன்னைப்பற்றித் தெரிவித்தான்.

'**तुरगात् अवतीर्य तेन पृष्टान्वयः सः, आत्मानम् ..सुतम् कथयांबभूव**' என அந்வயித்துப்பொருள் கொள்ளவேண்டும்; **द्विजेतर** - என்பதை, **तपस्वि** - என்பதற்கு விசேஷணமாக்காது **सुत**-என்பதுடன் இணைக்க **अक्षरपदैः** - 'எழுத்துக்களாகிய சொற்களால், அதாவது முழுச்சொற்களைக்கூறாது ஒன்றிரண்டு எழுத்துக்களினால்' எனவும் கொள்ளலாம்.

तच्चोदितश्च तमनुद्धृतशल्यमेव
पित्रोः सकाशमवसन्नदृशोर्निनाय ।
ताभ्यां तथागतमुपेत्य तमेकपुत्र-
मज्ञानतः स्वचरितं नृपतिः शशंस ॥ ७७ ॥

**तच्चोदितः**-அம்முனிகுமாரனால் தூண்டப்பட்ட, **नृपतिः**-அரசர், **अनुद्धृत-शल्यम् एव** - அம்பு எடுக்கப்படாமலேயிருக்கின்ற, - **तम्** - அவனை, **अवसन्नदृशोः** - கண்ணிழந்த, **पित्रोः** - (அவனது)தாய்தந்தையரின், **सकाशम्** ஸமீபத்திற்கு, **निनाय च**-கொண்டுபோனார்; **(तौ)** - அவ்விருவரையும், **उपेत्य** - அணுகி, **तथागतम्** - அந்நிலையையடைந்துள்ள, **एकपुत्रम्**-ஒரு மகனாகிய,**तम्**-அவனைப்பற்றியும், **अज्ञानतः** - அறியாமையால், **स्वचरितम् (च)** - தான் செய்ததையும், **ताभ्याम्** - அவ்விருவருக்கும், **शशंस** - சொன்னார்.

(க-து) பிறகு முனிகுமாரன் தன்னைத் தாய்தந்தையரிடம் கொண்டு சேர்க்கும்படி கூறவும், தசரதர் அவனை அவர்களிடம் கொண்டு வந்தார்; முனி குமாரனது பெற்றோருகில்சென்று யானை என மயங்கித்தான் செய்த செயலையும், அதன் பயனாக அவர்களது ஒரு மகனடைந்துள்ள நிலையையும் கூறினார்.

ராமரது பிரிவுத் துயர் தாங்காத தசரதர், தாம் முன் செய்த தீவினைப்பயனையே தற்பொழுது அனுபவிப்பதாகக் கௌஸல்யையிடம் கூறுமிடத்து இவ்வரலாறு முற்றிலும் ராமாயணத்தில் அயோத்யாகாண்டத்தில் காணப்படுகிறது. முனிமகன் தமஸாநதியின் கரையில் இறக்கவும், தசரதர் அவனது பெற்றோர்களை நதியின் கரைக்கு அழைத்துச் சென்றதாக ராமாயணம் கூறும். கவி இச்சம்பவத்தை மாற்றிக் கூறியுள்ளார். **अज्ञानतः**-குடத்தின் சத்தத்தையானை

ஒலியாக எண்ணி மயங்கியது, இங்கே அஜ்ஞானம் எனப் படுகிறது.

उपेत्य-என்பதற்குமுன் तौ என்ற சொல்லைத் தேவை பற்றி வருவித்துப் பொருள் கூறப்பட்டது; तौ என்பதை வருவிக்காது பொருள் கூற முயன்று உரைகாரர்கள் எல்லோருமே மிக இடர்ப்பட்டுள்ளனர்.

तौ दंपती बहु विलप्य शिशोः प्रहर्त्रा
शल्यं निखातमुदहारयतामुरस्तः ।
सोऽभूत् परासुरथ भूमिपतिं शशाप
हस्तार्पितैर्नयनवारिभिरेव वृद्धः ॥७८ ॥

**तौ दम्पती** - அத்தம்பதிகள், **बहु विलप्य** - மிகப்புலம்பி, **शिशोः** - குழந்தையின், **उरस्तः** மார்பினின்றும், **निखातम्** - புதைந்துள்ள, **शल्यम्** - பாணத்தை, **प्रहर्त्रा**-எய்த தசரதரைக் கொண்டு, **उदहारयताम्** - எடுப்பித்தனர்; **सः**- அக்குழந்தை, **परासुः** - உயிர் நீங்கியதாக, **अभूत्** - ஆயிற்று; **अथ** - பிறகு, **वृद्धः**-வயது முதிர்ந்த தந்தை, **हस्त-अर्पितैः** -கையிலேவிழுந்த, **नयन- वारिभिः एव** - கண்ணீராலேயே, **भूमिपतिम्**-அரசனை, **शशाप**- சபித்தார்.

(க-து) அத்தம்பதிகள் தம்மகன் நிலையைக் கண்டு மிகப் புலம்பினர்; பின் அவனது மார்பில் புதைந்துள்ள பாணத்தைத் தசரதரைக் கொண்டு எடுப்பித்தனர். பாணம் எடுக்கப் பட்டதும் முனிமகன் இறந்தான். அவனது தந்தை, கண்ணீரைக் கையிலேந்தி தசரதரைச் சபித்தார்.

**शिशोः**' - பெற்றோர்கண்கொண்டு நோக்கியதால் கவி, முனிகுமாரனைச் 'சிசு' வென்றார். தானம் செய்யுங்கால் நீர் வார்த்துத்தருவது போல் சாபமிடும் பொழுதும் நீர் வார்ப்

பர். வயோதிகர் வேறு நீரைத் தேடாது தன் கண்ணீரையே கையில் ஏந்திச் சாபமிட்டார். இதனின்றும் கிழவரது மன வருத்தமும் சாபத்தின் கடுந்தன்மையும் புலனாகும்.

दिष्टान्तमाप्स्यति भवानपि पुत्रशोका-
दन्त्ये वयस्यहमिवेति तमुक्तवन्तम् ।
आक्रान्तपूर्वमिव मुक्तविषं भुजंगं
प्रोवाच कोसलपतिः प्रथमापराद्धः ॥ ७९ ॥

'भवान् अपि - நீரும், अन्त्ये वयसि - கடைசிப் பருவத்தில், अहम् इव - நான் (அடைந்தது) போல், पुत्र-शोकात् - புத்திரசோகத்தினால், दिष्टान्तम् - மரணத்தை, आप्स्यति - அடைவீர்,' इति उक्तवन्तम् - என்று கூறியவரும், आक्रान्तपूर्वम् - முதலில் மிதிக்கப்பட்டு, मुक्तविषम् - விஷத்தைப் பாய்ச்சிய, भुजङ्गम् इव - (स्थितम्) - ஸர்ப்பம் போலிருந்தவருமான, तम् - அவ்வயோதிகரை நோக்கி, प्रथम-अपराद्धः - முதலில் தவறு செய்தவரான, कोसल-पतिः - தசரதர், प्रोवाच - கூறினார்.

(க-து) "அரசே! நான் எனது அந்தியகாலத்தில் எவ்வாறு புத்திரசோகத்தினால் மரிக்கின்றேனோ அவ்வாறே நீரும் வயோதிகப் பருவத்தில் புத்திரசோகத்தினால் மரிப்பீர்" எனத் தசரதருக்கு அக்கிழவர் சாபமிட்டார். இந்நிலையில் அவர், தன்னை மிதித்தவன் காலைக் கடித்து விஷத்தை உடலில் செலுத்திய ஸர்ப்பம் போல் பழிவாங்கும் மனோபாவத்துடன் காணப்பட்டார். ஆயினும் தசரதர், முதலில் குற்றமிழைத்தவராதலால் இத்தண்டனையை ஏற்று விநயத்துடன் பதில் கூறினார்.

சாபமிட்டது குற்றமன்று என்பது உபமானத்தாற் பெறப்படும். புத்ரசோகம்: புத்திரன் நிமித்தமான சோகம் எனப்பொருள். புத்திரமரணத்தால் வரும் சோகம் எனப் பொருள் கொள்ளுதல் கூடாது: 'पुत्रव्यसनजं दुःखं यदेतन्मम

**सांप्रतम्। एवं त्वं पुत्रशोकेन राजन् कालं करिष्यसि** ' - என்பது ஸ்ரீ மத்ராமாயணம். சாபத்தைத் தசரதர் ஏற்றுக் கொண்ட தன்காரணம், **प्रथमापराद्धः** - என்பதால் கூறப்பட்டது.

शापोऽप्यदृष्टतनयाननपद्मशोभे
सानुग्रहो भगवता मयि पातितोऽयम् ।
कृष्यां दहन्नपि खलु क्षितिमिन्धनेद्धो
बीजप्ररोहजननीं ज्वलनः करोति ॥ ८० ॥

' **अदृष्ट तनय-आनन-पद्मशोभे**-மகனது முக கமல சோபையைக் காணாத, **मयि** - என் விஷயத்தில், **भगवता**-தேவரீரால், **पातितः**-வீழ்த்தப்பட்ட, **अयं शापः अपि** இச்சாபமும், **सानुग्रहः**-ஒரு அருளுடன் கூடியதே. **इन्धन-इद्धः** - விறகினால் ஜ்வலிக்கும்படி செய்யப்பட்ட, **ज्वलनः** - நெருப்பு, **कृष्याम्**-உழுதற்குரிய, **क्षितिम** - நிலத்தை, **दहन् अपि**-எரிக்கின்றதாயினும், **बीज-प्ररोह जननीम**-(அந்நிலத்தை) விதைகளினின்றும் முளைகளை நன்கு உண்டாக்கச்சக்தியுடையதாக, **करोति खलु**-செய்கின்றதல்லவா?'

(க-து) "முனிவரே, நான் இன்னும் என்மகனது முகத்தைக் கண்டேனில்லை. நான் பிள்ளையற்றவன். இத்தகைய எனக்குத் தாங்கள் கொடுத்த சாபத்தில் ஒரு அனுக்ரஹமும் சேர்ந்துள்ளது. நான் புத்திரனை யடையாவிடில் புத்திரசோகம் எனக்கு எவ்வாறு நேரும்? தங்களது சாபம் பலிக்க வேண்டுமாயின் எனக்கு மகன் பிறக்க வேண்டுமன்றோ! இதைத்தான் நான் அருளாகக் கருதுகின்றேன். உழவேண்டிய நிலத்தில் முதலில் துரும்புகளை இட்டு நெருப்பை வைத்து மண்ணைச்சுடுவர் விவசாயிகள். நெருப்பு எரிக்கின்றதாயினும் அது நிலத்திற்கு வளத்தை அளிக்கின்றது. அதனால் விதைத்த விதைகள் நன்கு முளைத்து விளைவு நன்றாக இருக்கும். அதுபோல் தங்கள் சாபம் என்னை வருத்துமாயினும் எனக்கு அது நன்மையையும் தருகின்றது"

கவி, அழகான ஒரு உபமானத்தைக் காட்டிச் சாபத்தில் உள்ள அருளை விளக்கியுள்ளார். இது சிந்தித்து ரஸித்தற் குரியதாகும். நிலத்தைச் சுடும் பழக்கம் இப்பொழுதும் உள்ளதே.

इत्थं गते गतघृणः किमयं विधत्तां
वध्यस्तवेत्यभिहितो वसुधाधिपेन ।
एधान् हुताशनवतस्स मुनिर्ययाचे
पुत्रं परासुमनुगन्तुमनास्सदारः ॥ ८१ ॥

'इत्थंगते - இவ்வாறு நிகழ்ந்தபொழுது, गतघृणः- இரக்கமற்றவனும், तव वध्य. - உம்மால் கொல்லத் தக்கவனுமான, अयम् - இம்மனிதன் (நான்), किम् - विधत्ताम् - (தங்களுக்கு) என்ன செய்யவேண்டும்?' इति என, वसुधा-अधिपेन- அரசரால், अभिहितः-கூறப்பட்ட, सः मुनि.-அம்முனிவர், सदारः - மனைவியுடன்கூடியவராய், परासुम् - இறந்த, पुत्रम्- மகனை, अनुगन्तुमनाः -பின்தொடரமனமுடையவராக, हुताशनवतः - நெருப்புடன் கூடிய, एधान् - கட்டைகளை, ययाचे- வேண்டினார்.

(க-து) 'இறக்கமற்றவன் நான்; நான் இழைத்த குற்றத்திற்காகத் தங்களால் கொல்லப்படவேண்டிய நிலையிலுள்ளவன்; இவ்வாறு தங்களது புத்ரமரணம் நேர்ந்தபின் நான் தங்களுக்குச் செய்யகூடிய காரியம் ஏதேனுமிருப்பின் உத்தரவிடுங்கள்' எனத் தசரதர் வேண்டவும், அக்கிழவர், தம்மகனுடன் தாமும் தமது மனைவியும் உடன் கட்டை ஏற விரும்பியதாகக் கூறி அதற்காகச் சிதையைத் தயார் செய்யும்படி வேண்டினார்.

கொலைக்குக் கொலையே தண்டனையாதலால், तव वध्यः - என்றார். किम् तव विधत्ताम्-என்றும் அந்வயிக்கலாம்; தமது

தாழ்க்கிலேனென்று, अहम् - என்றும், वयम् - எனப் படர்க்கையால் தம்மைக் குறிப்பிட்டுக் கொண்டார் தசரதர்.

> प्राप्तानुगस्सपदि शासनमस्य राजा
> सम्पाद्य पातकविलुप्तधृतिर्निवृत्तः ।
> अंतर्निविष्टपदमात्मविनाशहेतुं
> शापं दधज्ज्वलनमौर्वमिवांबुराशिः ॥ ८२ ॥

प्राप्त-अनुगः - வந்து சேர்ந்த பணியாளர்களையுடைய, राजा - அரசர் தசரதர், सपदि - உடனே, अस्य - அம்முனிவரின், शासनम् - ஆணையை, संपाद्य - செய்து முடித்து, पातक-विलुप्त-धृति - பாவத்தினால் அழிந்த ஊக்கமுடையவராக, अन्त-र्निविष्ट पदम् - தன்மனத்துள் இடம் பெற்றுள்ளதும், आत्म-विनाश-हेतुम् - தமது நாசத்திற்குக் காரணமுமான, शापम् - சாபத்தை, अम्बुराशिः - ஸமுத்திரம், और्वम् - வடவாவென்ற, ज्वलनम् इव - அக்னியை (த்தாங்கியிருப்பது) போல், दधत् - தாங்கியவராய், निवृत्तः - (நகர்) திரும்பினார்.

(க-ரு) இதற்கிடையில் தசரதரது பரிஜனங்கள் வந்து சேர்ந்தனர். அவர்களைக் கொண்டு முனிவர் விரும்பியபடிக் கட்டைகளைக் கொணர்ந்து சிதையைத் தயார் செய்து கொடுத்தார். முனிகுமாரனைக் கொன்ற பாவத்தினால் தசரதர் ஊக்கம் குன்றி நகர் சென்றார். தன்னை எரிக்கின்ற வடவாக்னியைத் தன்னுள் கொண்டுள்ள கடல் போல் தசரதரும், பின்பினும் வருத்தம் தருகின்ற அச்சாபத்தை தம் மனத்துள் அடக்கி வைத்திருந்தார். ஒருவருக்கும் கூறவில்லை.

முனிவர் சாபமிட்டபிறகே தசரது வேலைக்காரர்கள் வந்ததால் அவர்கள் சாபத்தை அறியவில்லை. அறிவாராயின் அரசரைப் பற்றி தாழ்வான எண்ணம் கொள்வாராதலால் வேலைக்காரர்களின் வருகையைக் கூறுமுன்பே சாப வரலாறு கூறப்பட்டது. தசரதரது தாழ்நிலையைக்குறித்த முனிவரின்

வேண்டுகோளை, शासनम् - என்று கூறினார். याचन மன்று. சாபத்திற்கு வடவாக்னி உபமானம். अन्तर्निविष्टपदम्, आत्म-विनाशहेतुम् - என்பவற்றைவடவாக்னிக்கும் விசேஷணமாகக் கொள்ளவேண்டும். வடவாக்னியும்ஸமுத்ரத்திலிருப்பது. பிரளய காலத்தில் அதைவற்றச் செய்வது. இவ்வுபமானத்தால் சாபத்தின் கடுமையும் அரசனது பெருமையும் புலனாகும். வடவாக்னி-ஸமுத்ரத்திலுள் இருப்பதாகக் கூறப்படும் தீ.

इति महाकवि श्री कालिदासकृतौ
रघुवंशे महाकाव्ये नवमः सर्गः ॥

---

॥ श्रीः ॥

# ॥ रघुवंशः ॥

## दशमः सर्गः

पृथिवीं शासतस्तस्य पाकशासनतेजसः ।
किञ्चिदूनमनूनर्द्धेश्शरदामयुतं ययौ ॥ १ ॥

**पृथिवीम** - பூமியை, **शासतः** - ஆள்பவரும், **पाकशासन-तेजसः** - இந்திரனுடையது போன்ற ஒளியுடையவரும், **अनून ऋद्धेः** - குறைவற்ற செல்வமுடையவருமான, **तस्य**-அவ்வரசர் தசரதருக்கு, **किञ्चिदूनम्** - சிறிது குறைந்த, **शरदां अयुतम्** - வருஷங்களின் பதினாயிரம், **ययौ** - சென்றது.

(க-து) இந்திரனைப் போன்ற ஒளியுடையவரும், மிகுந்த செல்வமுடையவருமான தசரதருக்கு முனிவரின் சாபம் பெற்றபின் சிறிது குறையப் பதினாயிரம் ஆண்டுகள் சென்றன.

**पाकशासनः** - பாகன் என்னும் அசுரனைக்கொன்றவன்: இந்திரன்; தசரதர் சாபம் பெற்ற பிறகு சென்ற ஆண்டுகள் பதினாயிரம் எனக்கொள்ளல் வேண்டும். அவரது பிறப்பு முதலென்றோ, அரசு பெற்றதன் பிறகென்றோ கருதுதல் கூடாது. ஏனெனில் விசுவாமித்ரர் ராமனை அழைத்துச் செல்லவந்தபொழுது, தசரதர், தாம் பிறந்து அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆய்விட்டன எனக்கூறுகின்றதாலும், யௌவனம் தொடங்கிய பொழுதே தசரதர் முடிசூட்டப் பெற்றதாலும் அவற்றிற்கு முரணின்றிப் பொருள் கொள்வது தான் சிறந்தது என்பர் உரையாசிரியர்கள். **अनूनर्द्धेः** -

என்பதால் தசரதருக்கு எல்லாவகையான செல்வச்சிறப்பு மிருந்ததெனப் புலனாகும்:

न चोपलेभे पूर्वेषामृणनिर्मोक्षसाधनम् ।
सुताभिधानं स ज्योतिस्सद्यश्शोकतमोऽपहम् ॥ २ ॥

सः - அத்தசரதர், पूर्वेषाम् - பிதிரர்களின், ऋण-निर्मोक्ष-साधनम् - கடனைத் தீர்ப்பதற்குக் கருவியும், सद्यः - உடனேயே, शोक तमोपहम् - துயரமாகிய இருட்டைப் போக்குவதுமான, सुताभिधानम् - புதல்வன் என்ற, ज्योतिः - ஒளியை, न उपलेभे - அடையவில்லை.

(க-ரு) மனிதர்களுக்குப் பிறவியிலேயே மூன்று கடன்கள் ஏற்பட்டுள்ளன. அவை, தேவர் கடன், பிதிரர் கடன், ரிஷிகளின் கடன் என்பன. இவற்றுள் பிதிரர் கடன், மனிதர்களுக்குப் புதல்வர் உண்டாகி அவர் செய்யும் தர்ப்பணம் சிராத்தம் முதலியவற்றால் தான் தீரும். தசரதருக்கு மகன் பிறவாததால் இக்கடன் நீங்க வழியில்லை. மேலும் எவ்வகைத் துக்கமும் புதல்வர் முகத்தைக் காணில் தீரும் என்பர். ஆகவே கடனைத் தீர்ப்பதற்குக் கருவியானவனும், துயரத்தைத் துடைப்பவனுமான புதல்வனைத் தசரதர் அடையவில்லை.

துயரத்தை இருளாகக் கூறியதால், அத்துயர் நீங்கக் காரணமான புதல்வனை ஒளியாக உருவகஞ் செய்துள்ளார். இறந்து மறுவுலகில் வாழும் முன்னோரைப் பிதிரர் என்பர். மனிதனுக்குள்ள முக்கடனைப்பற்றிக் கூறுவன. 'नरः पितृणामनृणः प्रजाभिः, वेदैर्ऋषीणां, क्रतुभिः सुराणाम् । उत्पद्यते सार्धमृणैस्त्रिभिस्तैर्यस्यास्ति मोक्षः किल तस्य मोक्षः ॥'

'जायमानो ह वै ब्राह्मणस्त्रिभिर्ऋणैर्ऋणवान् जायते ब्रह्मचर्येण ऋषिभ्यो यज्ञेन देवेभ्यः प्रजया पितृभ्यः । एष वा अनृणो यः पुत्री यज्वा ब्रह्मचारी च ॥'

अतिष्ठत् प्रत्ययापेक्षसन्ततिस्स चिरं नृपः ।
प्राङ्मन्थादनभिव्यक्तरत्नोत्पत्तिरिवार्णवः ॥ ३ ॥

प्रत्यय-अपेक्ष-संततिः - ஒரு காரணத்தை எதிர்பார்க்கின்ற மகப்பேற்றை உடைய, सः नृपः-அந்த அரசர், मन्थात्-प्राक् - கடைவதற்கு முன், अनभिव्यक्त-रत्न-उत्पत्तिः - வெளிப்படையாகத் தெரியாத ரத்தினங்களின் தோற்றத்தை உடைய, अर्णवः इव-கடல்போல, चिरम्-வெகுகாலம், अतिष्ठत्-இருந்தார்.

(க-ரு) தசரதர் நிச்சயமாக மகப்பேற்றை அடையப்போகின்றவர். ஆனால் அப்பேறு ஒரு காரணத்தை எதிர் பார்த்து நிற்கிறது. அக்காரணம் ஏற்பட்டதும் அதன் காரியமாகிய புத்திரனும் உண்டாகி விடுவான். கடலிலே விலைமதிப்பற்ற ரத்தினங்கள் இருந்தன. ஆனால் கடைதல் என்னும் காரணம் ஏற்படுவதற்கு முன் அவை வெளியாகவில்லை. மந்தர மலையைக் கடலிலிட்டுக் கடைந்தவுடன் சிறந்த பொருள்கள் பலவும் தோன்றின. அதைப்போல் தசரதருக்கும் புத்திரகாமேஷ்டியாகம் செய்தல்என்ற காரணம் ஏற்படாததால் புதல்வர்கள் உண்டாகவில்லை. प्रत्ययः - காரணம்.

முன்னொரு காலத்தில் தேவர்களும் அசுரர்களும் கூடி வாசுகி என்ற பாம்பைக் கயிறாகவும், மந்தரம் என்றமலையை மத்தாகவுங் கொண்டு கடலைக் கடைந்தனர். அப்பொழுது அக்கடலிலிருந்து கௌஸ்துபம் முதலிய சிறந்த பொருள்கள் உண்டாயின. रत्नम् - என்ற சொல்லுக்கு, जातौ जातौ यदुत्कृष्टं तद् रत्नमिति कथ्यते- என்றபடி, அந்தந்த இனத்தில் சிறந்துள்ள பொருள் எனப்பொருள். கடலிலுண்டான பொருள்களின் பெயர்களைத்தொகுத்துக் கூறுவது கீழ் வரும் சுலோகம்.

लक्ष्मीः कौस्तुभ पारिजातक सुरा धन्वन्तरिः चन्द्रमाः
गावः कामदुघाः सुरेश्वरगजो रम्भादिदेवाङ्गनाः ।

अश्वः सप्तमुखो विषम् हरिधनुः शङ्खोऽमृतं चाम्बुधेः
रत्नानीह चतुर्दश प्रतिदिनं कुर्युः सदा मङ्गलम् ॥

புத்திரர்களை ரத்னங்களுடன் ஒப்பிட்டதால், அவர்களது சிறப்பும், அவர்கள் பலர் என்பதும் உணர்த்தப்பட்டது. கடலோடு ஒப்பிட்டதால் தசரதரது பெருந்தன்மை புலப்படும்.

ऋष्यशृङ्गादयस्तस्य सन्तस्सन्तानकाङ्क्षिणः ।
आरेभिरे जितात्मानः पुत्रीयामिष्टिमृत्विजः ॥ ४ ॥

जितात्मानः - தன்னடக்கமுடையோரும், सन्तः -நல்லவர்களுமான, ऋष्यशृङ्गादयः - ரிஷ்யசிருங்கர் முதலிய, ऋत्विजः- ரித்விக்குகள் (யாகஞ்செய்து வைப்பவர்கள்), सन्तान-काङ्क्षिणः- புத்திரப்பேற்றை விரும்புகின்ற, तस्य - அக்கசரதருக்கு, पुत्रीयां-மகப்பேற்றுக்கான, इष्टिं-இஷ்டியை, आरेभिरे-தொடங்கினர்.

(க-து) தசரதருக்கு மகன் உண்டாக வேண்டு மென்பதற்காக, அடக்கமுடையோரும் நல்லவர்களுமான ரிஷியசிருங்கர் முதலிய முனிவர்கள் யாகஞ் செய்யத் தொடங்கினர்:

जितात्मानः-என்றதால், ரித்விக்குகள் தன்னலம் கருதாதவர்கள் என்றும், யாகத்தை யாதொரு குறைவு மின்றிச்செய்விக்கும் திறனுடையவரென்றும் கூறியதாயிற்று. सन्तः - தாமே வலியச்சென்று பிறருக்கு உதவுபவர்கள்; 'सन्तः स्वयं परहिते विहिताभियोगाः' - என்பதைக் காண்க. ऋष्य - ஒற்றைக் கலைமான்; ऋष्यशृङ्गः-காசிபருடைய குமாரரான விபண்டகருடைய புத்திரர் ரிச்யச்ருங்கர்; ரிச்யம் என்ற மானினது போன்ற கொம்பு அவரது முன்னெற்றியிலிருந்ததால் அவர் இப்பெயரால் அழைக்கப்பட்டார். காட்டிலே இருந்து தந்தைக்குப்பணிவிடை செய்து மகாதபஸ்வியாக இருந்தவர்.

சகலசாஸ்திரங்களிலும் வல்லவர். பிறகு ரோமபாதர் என்ற அங்கநாட்டு மன்னரது மகள் சாந்தையை மணந்து கொண்டவர். आदि என்ற சொல்லால் ஸுயஜ்ஞர், வாமதேவர், ஜாபாலி, காசயபர், வஸிஷ்டர் முதலிய முனிவர்கள் குறிப்பிடப்படுகின்றனர்.

सन्तानकाङ्क्षिणः - என்பதை, ऋत्विजः - என்பதற்கு விசேஷணமாகக் கொண்டால், 'அரசர்க்கு ஸந்ததியை விரும்பிய ரித்விக்குகள்' என்று உரைக்கவேண்டும்.

इष्टि - சமைத்த சருவைக்கொண்டு செய்யப்படுவது: இஷ்டி, யாகம், ஹோமம் இவைகளுக்குள்ள வேறுபாட்டை, 'इष्टिस्तु चरुणा प्रोक्ता, यागस्तु पशुना स्मृतः। एतच्छेषः क्रतुः प्रोक्तो होमोऽन्यत्पूजनं स्मृतम्' - என்பதினாலறிக.

तस्मिन्नवसरे देवाः पौलस्त्योपप्लुता हरिम्।
अभिजग्मुर्निदाघार्ताश्छायावृक्षमिवाध्वगाः॥ ५॥

तस्मिन् - அந்த, अवसरे - சமயத்தில், (யாகம் நடக்கும் ஸமயத்தில), पौलस्त्य-उपप्लुताः - புலஸ்தியர் மரபினனான ராவணனால் துன்புறுத்தப்பட்ட, देवाः தேவர்கள்,—निदाघ-आर्ताः - கோடையினால் வருந்திய, अध्वगाः -வழிநடப்போர், छाया-वृक्षम् इव-நிழல தரும் மரத்தை (அடைவது) போல,— हरिम् - விஷ்ணுவை, अभिजग्मुः - சென்றடைந்தனர்.

(க-து) புலஸ்தியர் மரபில் தோன்றிய ராவணன், தேவர்களுக்கு மிக்க துன்பத்தை இழைத்து வந்தான். அத்துன்பங்களால் மனம் நொந்த தேவர்கள், வெய்யிலினால் வருந்திய வழிபோக்கர்கள் நிழல் தரும் மரத்தடியை அடைவது போல், தங்கள் துன்பந்தீர விஷ்ணுவைச் சரணமடைந்தனர்.

पुलस्त्यः - பிரம்மாவின் மானஸபுத்திரர்களில் ஒருவர். இவரது குமாரரான விச்ரவஸ்முனிவருக்கு ஸுமாலியின் மகளான கைகஸி என்பவளிடம் பிறந்தவன் ராவணன்.

हरि: - சரணமடைந்தவரின் கஷ்டங்களை அபஹரிப்பவர் என்பது பதப்பொருள். விஷ்ணுவைக் குறிப்பிடும் சொல் பலவிருப்பினும் இடப்பொருத்தம் கருதிக் கவி இச்சொல்லை இங்கு ஆண்டுள்ளார். வெய்யிலில கஷ்டமடைந்தவர் கஷ்டம் நீங்க மரத்தினடிச்செல்லுதலன்றிப் பிறிதொரு ஸாதனமும் வேண்டாததுபோல், தேவர்களின் கஷ்டம் நீங்குதற்கு விஷ்ணுவையடைதலன்றி வேறொன்றும் தேவையில்லை என்பதும், உடனே துக்கம் நீங்குமென்பதும் உபமானத்தாற் பெறப்படும்.

ते च प्रापुरुदन्वन्तं बुबुधे चादिपूरुषः ।
अव्याक्षेपो भविष्यन्त्याः कार्यसिद्धेर्हि लक्षणम् ॥ ६ ॥

ते- च - அத்தேவர்களும், उदन्वन्तम् - பாற்கடலை, प्रापुः- அடைந்தனர்; आदिपूरुषः च - முதல்வரான விஷ்ணுவும், बुबुधे - (அறிதுயிலினின்று) விழித்தார். अव्याक्षेपः - (கருதிச் செல்லுபவர்) வேறு விஷயத்தில் ஈடுபடாமலிருத்தல், भविष्यन्त्याः - வரப்போகின்ற, कार्यसिद्धेः - காரியம் கைகூடுதற்கு, लक्षणम् हि - அடையாளமன்றோ!

(க-து) இராவணனால் துன்புற்ற தேவர்கள் விஷ்ணுவைச் சரணமடைய வெண்ணி, அவர் பள்ளி கொண்டிருக்கும் பாற்கடலையடைந்தனர். அங்கு அவர்கள் செல்லவும் விஷ்ணு யோகநித்திரையினின்றும் விழித்தெழுந்தார். தேவர்கள் சென்றவுடன் விஷ்ணு விழித்தெழுந்ததே நிச்சயமாக அவர்கள் நாடிவந்த பொருள் கைகூடும் என்பதை யுணர்த்திற்று. ஒரு பயனைக் கருதி, அதைத் தரவல்லாரிடம் செல்லுகையில், அவர்கள் வேறு விஷயத்தில் தங்கள் மனத்தைச் செலுத்தாமல் வருமவரைக் கவனிக்கும் நிலையிலிருந்தாலே அது காரியம் கைகூடும் என்பதற்கு அறிகுறியாகும்.

'ते च-आदिपूरुषः च '- என வந்த இரண்டு, चकारங்கள், 'தேவர்கள்வருதல், பகவான் எழுதல்' என்ற இரண்டு

தொழில்களும் இடைவிடின்றி ஒரே காலத்தில் நிகழ்ந்ததை உணர்த்தும். யோகநித்திரை-அறிதுயில்; எல்லாவற்றையும் உணர்ந்த நிலையிலேயே நித்திரை செய்தல்; கடவுள் மனிதரைப்போல ஒருவகையான அறிவுமின்றி உறங்குதல் என்பது இல்லை. அவர் உறங்குவது போலத் தோன்றினும் உலகில் நடைபெறும் ஒவ்வொன்றையும் அறிந்துகொண்டு தானிருப்பார். இந்நிலையே யோகநித்திரை என்றும், அறிதுயில் என்றும் கூறப்படும்.

अत्याक्षेपः–'कार्यार्थिनामागतानामभिगम्यस्य दर्शनम् । अनन्यपरता चास्य कार्यसिद्धेस्तु लक्षणम् ॥' என்பது நிமித்தஸங்கிரஹம்.

> भोगिभोगासनासीनं ददृशुस्तं दिवौकसः ।
>
> तत्फणामण्डलोदर्चिर्मणिद्योतितविग्रहम् ॥ ७ ॥

दिवौकसः - சுவர்க்கத்தில் வசிப்பவரான தேவர்கள், भोगि-भोग आसन-आसीनम् - ஆதிசேஷனது உடலாகிய ஆசனத்தில் (சாய்ந்து) அமர்ந்திருப்பவரும், तत्फणामण्डल-उदर्चिः-मणि-द्योतित-विग्रहम् - சேஷனுடைய படப்பரப்பிலுள்ள சுடர் விடும் ரத்தினங்களால் ஒளிபெறச் செய்யப்பட்ட திருமேனியுடையவருமான, तम् - மஹாவிஷ்ணுவை, ददृशुः - கண்டனர்.

(க-து) தேவர்கள், ஆதிசேஷன் மீது அமர்ந்திருந்த விஷ்ணுவைக் கண்டனர்.

சேஷனது படங்களிலுள்ள ரத்னங்களின் ஒளி, பகவானுடைய தேஹத்தை பிரகாசமுறச் செய்தது. भोगी - பாம்பு; இங்கு ஆதிசேஷனைக் குறித்தது. பகவான் சயனித்திராமல் அமர்ந்திருந்ததும் சுபஸூசகம் என்பர்.

இது முதல் எட்டு சுலோகங்கள், ददृशुः - என்ற கிரியா பதத்தைக் கொண்டு முடிந்து ஒரு வாக்யமாக உள்ளதால் மஹாகுலகம் எனப்படும்:

ஒரே சுலோகத்தில் ஒரு வாக்யப்பொருள் முடியுமா யின் முக்தகம் என்றும், இரண்டு சுலோகங்களில் முடியு மாயின் யுக்மம் என்றும், மூன்றில் முடியுமாயின் திலகம் என்றும், நான்கில் முடியுமாயின் கலாபகம் என்றும், ஐந்தில் முடிந்தால் குலகம் எனவும், ஐந்திற்கு மேற்பட்ட சுலோகங் களில் முடிந்தால் மஹாகுலகம் எனவும் கூறுவர். அல்லது, இனிவரும ஒவ்வொரு சுலோகத்திற்கும் ददृशुस्तं विबोकसः- எனக்கூட்டிப் பொருள் கொள்ளினும் அமையும்.

श्रियः पद्मनिषण्णायाः क्षौमान्तरितमेखले ।
अङ्के निक्षिप्तचरणमास्तीर्णकरपल्लवे ॥ ८ ॥

**पद्म-निषण्णायाः** - தாமரை மலரில் அமர்ந்துள்ள, **श्रियः**- லக்ஷ்மியின், **क्षौम-अन्तरित-मेखले** - பட்டாடையால் மறைக் கப்பட்ட மேகலை உடையதும், **आस्तीर्ण-करपल्लवे** - விரிந்த, தளிர்போன்ற கைகளை யுடையதுமான, **अङ्के** - மடியில், **निक्षिप्त चरणम्** - வைக்கப்பட்ட திருவடிகளை யுடையவரு மான, விஷ்ணுவைத் தேவர்கள் கண்டனர்.

(க-து) தாமரை மலரின் மேல் அமர்ந்திருந்த தேவி லக்ஷ்மி, தமது மடியில் பகவானது திருவடிகளைத் தாங்கியிருந்தாள். கடின மானமேகலை திருவடிகளில் படுமாயின் உறுத்து மெனக்கருதித் தேவி, பட்டினால் மேகலையை மறைத்திருந்தாள்.

இதனால் தேவிக்குப் பகவானிடமுள்ள பக்தி புலனா கும்.

प्रबुद्धपुण्डरीकाक्षं बालातपनिभांशुकम् ।
दिवसं शारदमिव प्रारम्भसुखदर्शनम् ॥ ९ ॥

**प्रबुद्ध-पुण्डरीक-अक्षम्**-மலர்ந்த தாமரை இதழ் போன்ற திருக்கண்களையுடையவரும், **बाल-आतप-निभ-अंशुकम्**- இளம்

வெய்யில் போன்று (மஞ்சளான) ஆடையுடையவரும், प्रारंभ-सुख-दर्शनम् யோகிகளுக்கு எளிதில் காட்சியுடைய வரும், [प्रबुद्ध-पुण्डरीक अक्षम् - மலர்ந்த தாமரையாகிய கண் களையுடைய, बाल-आतप-निभ अंशुकम्-இளம் வெய்யிலாகிய வஸ்திரமுடைய, प्रारंभ · सुख दर्शनम् - தொடங்குகையில் இனிய காட்சியுடைய], शारदम् दिवसम् इव-சரத்காலத்தின் பகற்பொழுதுபோல், (स्थितम्) - இருந்தவருமான, விஷ்ணு வைக் கண்டனர்.

(க-து) தேவர்கள், சரத்காலப் பகற் பொழுதுபோல் காண் பதற்கு இனியரான விஷ்ணுவைக் கண்டனர்.

இச்சுலோகத்தில் பகவான் சரதகாலப் பகலுடன் ஒப் பிடப்பட்டுள்ளார். அவ்வாறு ஒப்பிடுதற்குக் காரணமான பொதுத்தன்மைகள், (1)प्रबुद्ध...क्षम्. (2) बालात....शुकम्. (3) प्रारंभ....दर्शनम् - என்ற மூன்று விசேஷணங்களால் கூறப்படு கின்றன. உவமை சொல்லாவிலை உள்ளதன்றிப் பொருளில் இல்லை. பகவான் தாமரை இதழ்போன்ற கண்களையுடை யவர். சரதகாலப்பகல் தாமரை மலராகிய கண்களையுடை யது. பகவான் இளம வெயிலபோன்ற பீதாம்பரமணிந்தவர். பகலுக்கு, இளம் வெய்யில் பீதாம்பரமாயுள்ளது. யோகி களுக்கு எளிதில் தோன்றுபவர் விஷ்ணு. பகலும், தொடங் கும் பொழுது வெய்யில் குறைவாயிருப்பதால், ஆயாஸ மின்றிப் பார்க்கக்கூடியதாக இருக்கும். प्र-आरंभ. - சிறந்த முயற்சியுடையோர்: யோகிகள். மற்றொரு பொருள்- தொடக்கம் என்பது.

प्रभानुलिप्तश्रीवत्सं लक्ष्मीविभ्रमदर्पणम् ।
कौस्तुभाख्यमपां सारं बिभ्राणं बृहतोरसा ॥ १० ॥

प्रभा·अनुलिप्त·श्रीवत्सम् - ஒளி பரவிய ஸ்ரீவத்ஸம் என்னும் மருவை உடையவரும், लक्ष्मी-विभ्रम-दर्पणम्-லக்ஷ்மியின் அழகியகண்ணாடியாகிய, कौस्तुभ-आख्यम्-கௌஸ்துபம் என்னும் பெயரையுடைய, अपां - (கடலிலுடைய) தண்ணீரின், सारम् - ஸாரமாக இருக்கின்ற ரத்னத்தை, वृहता - பரந்த, उरसा- மார்பினால், बिभ्राणम्- தரிப்பவருமான, விஷ்ணுவைக் கண்டனர்.

(க-து) கௌஸ்துப ரத்னத்தினொளி பரவிய ஸ்ரீவத்ஸமுடைய பகவானைத் தேவர்கள் கண்டனர். கௌஸ்துப ரத்னம், எதிரிலுள்ளதை பிரதிபலிக்கும் தன்மையால், லக்ஷ்மிக்கு அழகிய கண்ணாடியாயுள்ளது.

श्रीवत्सः - விஷ்ணுவினது மார்பிலே உள்ள ஒரு மரு. இது மேன்மைக்கு அடையாளமானது என்பர். தயிரைக் கடைந்தால் அதன் ஸாரமாக வெண்ணெய் இருப்பதுபோல கடலைக் கடைந்தபொழுது தோன்றியதால், கடல் நீரின் 'திரண்ட ஸாராம்சம்' (अपां सारम्) என விசேஷித்தார் கௌஸ்துபரத்னத்தை. கௌஸ்துபத்தைப்பற்றி இங்குக் கூறியது, தேவர்களுக்காக முன்பும் பகவான் பெருமுயற்சியுடன் கடலைக் கடைந்து அவர்களுக்கு அருளியதை நினைவூட்டுதற்கும், இயற்கையிலே தேவர்களிடம் அவருக்கு அன்புண்டு என்பதைக்காட்டுதற்கும்.

बाहुभिर्विटपाकारैर्दिव्याभरणभूषितैः ।
आविर्भूतमपां मध्ये पारिजातमिवापरम् ॥ ११ ॥

विटप·आकारैः - கிளைகள் போல் தோற்றமுள்ளவையும், दिव्य आभरण-भूषितैः - திவ்யமான ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டவைகளுமான, बाहुभिः-கைகளால், अपाम् मध्ये- (கடல்) நீரிடையில், आविर्भूतम् - தோன்றியுள்ள, अपरम् -

மற்றொரு, पारिजातम् इव-(स्थितम्) - பாரிஜாத விருக்ஷம் போலிருப்பவருமான, விஷ்ணுவைக் கண்டனர்.

(க-து) கடலின் நடுவேயுள்ள விஷ்ணு, ஸமுத்திரத்திடை தோன்றிய மற்றொரு பாரிஜாத மரம் போன்று இருந்தார்.

சோலையுடனிருந்த புஜங்கள், கிளைகள் போலிருந்த தால், அவரைப் பாரிஜாத மரத்துடன் ஒப்பிடக் காரண மாயின. பாரிஜாதம்: தேவலோகத்திலுள்ள கல்பக விருக்ஷங் களிலொன்று. இம்மரம், விரும்பியவர் விரும்பியவனைத் தையும் தரவல்லது. இதுதன்மை கொண்டும் விஷ்ணுவுக்கு இம்மரம் உவமையாகும். பாரிஜாதத்தின் புஷ்பங்கள் எல்லாம் ஆபரணங்களாகவே யிருக்கும் என்பர். அதற்குத் தக்க படி, दिव्याभरणभूषितैः - எனக் கைகளை விசேஷித்தார்.

> दैत्यस्त्रीगण्डलेखानां मदरागविलोपिभिः ।
> हेतिभिश्चेतनावद्भिरुदीरितजयस्वनम् ॥ १२ ॥

दैत्यस्त्री गण्डलेखानां - அசுரஸ்த்ரீகளின் பரந்த கன்னங் களிலுள்ள, मदराग-विलोपिभिः - (மது) மதச் சிவப்பு நிறத் தைப் போக்குகின்றவையும், चेतनावद्भिः - அறிவுடையனவு மான, हेतिभिः - (சக்ரம் முதலிய) ஆயுதங்களால், उदीरित-जयस्वनम् - கூறப்பட்ட ஜயசப்தத்தை உடையவருமான, விஷ்ணுவைக் கண்டனர்.

(க-து) ஸுதர்சனம் என்ற சக்ரம், கௌமோதகீ என்ற கதை, நந்தகம் என்ற கத்தி, சார்ங்கம் என்ற வில், பாஞ்சஜன்யம் என்கிற சங்கு ஆகிய ஐந்து ஆயுதங்களால் அரக்கர்களை எல்லாம் ஸ்ரீ மஹா விஷ்ணு அழித்தார். அரக்கர்கள் இறக்கவே அவர்களுடைய மனைவிகள் துயருற்று மது அருந்தாதொழிய, அவர்களுடைய கன்னங்களும் மதுபானத்தாலேற்படும் சிவப்பு நிறத்தை இழந்தன. கன்னங்கள் செந் நிறமிழக்கக் காரணமாயிருந்த விஷ்ணுவின் ஐம்படைகளும் அறி

வுடையன; உயிருடையன. அவைகள் பகவானுக்கு ஜயகோஷம் செய்து கொண்டிருந்தன.

ஐம்பெரும் படைகளின் அதிஷ்டான தேவதைகள் கோஷித்தன என்றும், அதிதேவதைகள் கூறியதை ஆயு தங்கள் கூறியதாகச்சொன்னார் என்றும் உரைப்பர் சிலர்.

मुक्तशेषविरोधेन कुलिशव्रणलक्ष्मणा ।
उपस्थितं प्राञ्जलिना विनीतेन गरुत्मता ॥ १३ ॥

**मुक्त-शेष-विरोधेन** - ஆதிசேஷனுடன் பகையை விட்டவனும், **कुलिश-व्रण-लक्ष्मणा** - வஜ்ராயுதத்தினுல் ஏற்பட்ட தழும்பை அடையாளமாகக் கொண்டவனும், **प्राञ्जलिना** - கை கூப்பியவனும், **विनीतेन** - வணக்கமுடையவனுமான, **गरुत्मता** - கருடனால், **उपस्थितम्** - பணிவிடை செய்யப்பட்டவருமான, விஷ்ணுவைக் கண்டனர்.

(க-து) பாம்புக்கும் கருடனுக்கும் இயற்கைப் பகையுள்ளதாயினும், கருடன், ஆதிசேஷன விஷயத்தில் பகை நீங்கியிருந்தான். கருடனது பராக்ரமச சின்னமாக அவனது உடலில் வஜ்ராயுதத்தினுல் உண்டான தழும்பு இருந்தது. பகவானும் அவனது கர்வத்தைப் போக்கி விநயமுடையவனுகச செய்திருந்தார. இத்தகைய வீரனுன கருடனுல, கூப்பிய கையுடனும், விநயத்துடனும் ஆணையை எதிர்நோக்கிப்பணிவிடை செய்யப் படுகின்ற பகவானைத் தேவர்கள் கண்டனர்.

**कुलिशव्रणलक्ष्मणा** - என்பதால் கருடனது பராக்ரமச் சிறப்பு கூறியதாயிற்று. கருடனுக்கு வஜ்ராயுதத்தழும்பு ஏற்பட்ட காரணம்: கருடனின் தாயான விநதை என்பாள், தன் சக்களத்தியான கத்ரு என்பவளுக்கு ஒரு காரணத்தால் அடிமையானுள். தேவருலகில் தேவர்களின் பாதுகாப்பிலுள்ள அம்ருதத்தைக் கொண்டுவந்து கொடுத்தால் விநதைக்கு விடுதலையளிப்பதாகக் கத்ரு கூறவும், கருடன் தாயை

அடிமைத் தன்மையினின்றும் விடுவிக்கக்கருதி ஸ்வர்க்கத்
தினின்றும், அமிருதத்தை எடுத்துவர முயன்றான். அம்
முயற்சியில் கருடனுக்குத் தேவர்களுடன் போர் நேர்ந்தது.
இந்திரன் வஜ்ராயுதத்தினால் கருடனை அடித்தான். மிக்க
பலமுடைய கருடனுக்கு அவ்வடியினால் சிறிதும் வலி உண்
டாகவில்லை ஆயினும், வஜ்ராயுதம் ததீசி முனிவரின் முது
கெலும்பாலானதால் அம்முனிவரையும், எங்கும் தடை
யுறாதெனப் புகழ்பெற்றுள்ளதால் அவ் வாயுதத்தையும்,
தேவாதிராஜனாயுள்ள இந்திரனையும் கௌரவிக்க எண்ணிக்
கருடன், தனது சிறகு ஒன்றை உதிர்த்தான். இவ்வரலாறு
மகாபாரதம் ஆதிபர்வம் 34 ஆம் அத்தியாயத்தில் கூறப்பட்
டுள்ளது. வஜ்ராயுத அடியால் தழும்பு உண்டானதாகப்
பாரதம் கூறவிடினும், கவி கூறியதலிருந்து, கருடன் வலி
யத்தழும்பையும் கொண்டான் எனக் கருதவேண்டுமென்பர்
உரையாசிரியர்கள். "तमुवाचेन्द्रमाक्रन्दे गरुडः पततां वरः ॥"
"ऋषेर्मानं करिष्यामि वज्रं यस्यास्थिसंभवम् । वज्रस्य च करिष्यामि
तव चैव शतक्रतो ॥ एतत्पत्रं त्यजाम्येकं यस्यान्तं नोपलप्स्यसे ।
न च वज्रनिपातेन रुजा मेऽस्तीह काचन ॥"

विनीत - கருடன் கர்வம் நீங்கிய வரலாறு

இந்திரனது தேர்ப்பாகனாகிய மாதலிக்குக் குணகேசி
என்ற மிகமிக அழகான பெண் ஒருத்தி இருந்தாள். நாக
லோகத்திலிருந்த ஸுமுகன் என்ற நாகத்திற்கு அப்பெண்
ணைத் தந்து மணஞ் செய்விக்கலாமென மாதலி நினைத்தான்.
கருடனுக்கும் அந்நாகத்திற்கும் இருக்கும் பகைமை எண்ணி
ஸுமுகனை இந்திரனது பாதுகாப்பில் மாதலி வைத்தான்.
இந்திரனும், ஸுமுகனுக்குக் கருடனால் ஏதேனும் தீங்கு
நேரக்கூடுமென அஞ்சி, விஷ்ணுவிடஞ் சென்று அந்நாகத்
திற்கு நீண்ட ஆயுளைப் பெற்றுவந்தான். இச்செய்தியை

அறிந்த கருடன், இந்திரன் விஷ்ணு எல்லோரையுமே தன் பலத்திற்குக் குறைந்த பலமுள்ளவர் எனப் பழிக்கலானான் கருடனின் கர்வத்தைப் போக்க வேண்டுமென்று நினைத்து விஷ்ணு, கருடனைப் பார்த்து 'எனது வலது கையின்பாரத்தைச் சுமக்க வல்லாயேல் நீ பலசாலிதான்' என்று கூறிக் கருடனது கழுத்தின்மேல் கையைவைக்கவும், அச்சுமை தாங்காமல் கருடன் மயங்கி விழுந்தான். கடவுளின் கருணையால் எழுந்த கருடன் கர்வம் நீங்கப்பெற்று விநயமுள்ளவனானான். இவ்வரலாறு மகாபாரதம் உத்யோகபர்வம், 103, 104, 105-ஆம் அத்தியாயங்களில் கூறப்பட்டுள்ளது.

योगनिद्रान्तविशदैः पावनैरवलोकनैः ।
भृग्वादीननुगृह्णन्तं सौखशायनिकान् मुनीन् ॥ १४ ॥

योग-निद्रा-अन्त-विशदैः - யோகநித்திரையின் முடிவில் தெளிவானவையும், पावनैः - தூய்மையளிப்பனவுமான, अव-लोकनैः- பார்வைகளால், सौखशायनिकान् - ஸுகசயனத்தைக் கேட்கின்ற, भृगु-आदीन् - பிருகு முதலிய, मुनीन्-முனிவர்களை, अनुगृह्णन्तम् - அனுக்ரஹித்துக் கொண்டிருப்பவருமான, விஷ்ணுவைக் கண்டனர்.

(க-து) யோகநித்திரையினின்றும் விழித்தெழுந்த விஷ்ணுவினருகே நின்று, பிருகு முதலிய முனிவர்கள், 'ஸ்வாமின்! ஸுகமாக நித்திரை கொண்டீர்களா?' எனக் கேட்டனர்; பகவான், தூய்மை தருகின்ற தெளிவான கடாக்ஷங்களால் குளிர நோக்கி, அம்முனிவர்கள் எல்லோருக்கும் அருள் புரிந்துகொண்டிருக்கையில் அவரைத் தேவர்கள் கண்டனர்.

सौखशायनिकः-ஸுகநித்திரையை விசாரிப்பவர். இதை सौस्नातिक-என்றதுடன் [ஸ. 6, ச. 61] ஒப்பிட்டு நோக்குக.

மஹர்ஷிகளில் சிறந்தவர் ப்ருகு முனிவர். 'महर्षीणामहं भृगुः - என்பது பகவத்கீதை.

प्रणिपत्य सुरास्तस्मै शमयित्रे सुरद्विषाम् ।
अथैनं तुष्टुवुः स्तुत्यमवाङ्मनसगोचरम् ॥ १५ ॥

अथ - (பகவானைப் பார்த்த) பிறகு, सुराः - தேவர்கள், सुरद्विषाम् - தேவர்களின் பகைவரான அஸுரரை, शमयित्रे - அழிக்கின்ற. तस्मै - அவர் பொருட்டு, प्रणिपत्य - வணங்கி, स्तुत्यम् - துதிக்கத்தக்கவரும், अवाङ्मनस-गोचरम् - வாக்கிற்கும் மனத்திற்குமெட்டாதவருமான, एनम्-அவரை. तुष्टुवुः - ஸ்துதித்தனர்.

(க-து) மஹாவிஷ்ணுவைக் கண்டபின் தேவர்கள் ஸாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கி, ஸ்துதிக்கத் தக்கவரும், சொல்லிற்கும் மனத்திற்கும் எட்டாதவருமான பகவானை ஸ்துதிக்கத் தொடங்கினர்.

'अवाङ्मनसगोचरम्' சொற்களைக் கொண்டு அவரது குணங்களை முற்றிலும் கூறிவிடமுடியாது. மனத்திலும் முழுவதும் நினைத்தற்கரியது பரமனது பெருமை. இக்கருத்து, 'यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह' என்ற உபநிஷத்வாக்யத்திலுள்ளதைக் காண்க: சொற்களுக்கெட்டாதவரைச் சொற்களைக் கொண்டு புகழ முயன்றனர் தேவர்கள் என நகைச்சுவை தோன்றக் கூறினர்.

இனிவரும் பதினேழு சுலோகங்கள், தேவர்களின் ஸ்துதியாக உள்ளன; அவைகளின் கருத்துக்கள் சிந்தித்து சுவைத்தற்குரியன.

नमो विश्वसृजे पूर्वं विश्वं तदनु बिभ्रते ।
अथ विश्वस्य संहर्त्रे तुभ्यं त्रेधा स्थितात्मने ॥ १६ ॥

'पूर्वम् -முதலில், विश्वसृजे - உலகத்தை ஆக்கியவரும், तदनु - அதன் பின், विश्वम् - உலகத்தை, बिभ्रते காப்பவரும், अथ - பிறகு, विश्वस्य - உலகத்தை, संहर्त्रे - அழிப்பவரும்

ஆக, **त्रेधा** - மூவகையாய், **स्थित-आत्मने**-இருந்த தன்மையை உடைய, **तुभ्यम्** - உமக்கு, **नमः** - வணக்கம்.

(க-து) 'பகவான், ஆக்கல், காத்தல், அழித்தல், என மூவகைத் தொழில் புரிபவர். பிரம்மாவாக இருந்து உலகை உண்டாக்குகிறார். விஷ்ணுவாக இருந்து காக்கிறார். ருத்திரனாக இருந்து அழிக்கிறார். இப்படி மூவகைத்தன்மைகளைக் கொண்ட மூன்று உருவங்களுடன் விளங்குகின்ற உமக்கு வணக்கம்.

**'यतो वा इमानि भूतानि जायन्ते येन जातानि जीवन्ति - यत्प्रयन्त्यभिसंविशन्ति तद्विजिज्ञासस्व तद् ब्रह्म'** என்ற சுருதி வாக்யக் கருத்தைக் கொண்டது இச்சுலோகம்.

रसान्तराण्येकरसं यथा दिव्यं पयोऽश्नुते ।
देशे देशे गुणेष्वेवमवस्थास्त्वमविक्रियः ॥ १७ ॥

**'एकरसम्** - (இனிப்பு என்ற) ஒரே சுவையையுடைய, **दिव्यम् पयः**-ஆகாயத்திலுண்டான நீர் (மழை நீர்), **देशे देशे**-அந்த அந்த இடத்தில், **रसान्तराणि**-வெவ்வேறு சுவைகளை, **यथा** - எப்படி, **अश्नुते** - அடைகிறதோ, **एवम्** - இவ்வாறு, **अविक्रियः** - மாறுதலில்லாத (ஒரே தன்மையையுடைய), **त्वं**-நீர், **गुणेषु** - (ஸத்துவம் முதலிய) குணங்களில் (குணங்கள் காரணமாக), **अवस्थाः**-(பிரம்மனாயிருத்தல் முதலிய) தன்மைகளை, **(अश्नुषे)** - அடைகின்றீர்.

(க-து) 'மழை நீருக்கு இயற்கையாயுள்ள சுவை இனிப்பு, ஆனால் அது உவர் நிலத்தில் வீழ்ந்தால் உப்பாகவும், வேறுசுவையுள்ள தரையில் இருந்தால் அவ்வந்நிலத்திற்கேற்ப அவ்வச்சுவைகளைப் பெற்றும் விளங்குகிறது. அதைப்போல உமது நிலையான குணம் ஸத்துவம் ஒன்றே. உண்மையில் நீர் எவ்வகையான மாறுபாடுமில்லாதவர். ஆனால், நீர் கைக்கொள்ளும் குணங்களுக்கு ஏற்ப தொழில்களையும், பெயர்களையும் ஏற்கின்றீர். ஸத்வகுணம் காரணமாக விஷ்ணுத் தன்மையையும், ரஜோகுணம் காரணமாகப் பிரம்மத்தன்

மையையும், தமோகுணம் காரணமாக ருத்திரத் தன்மையையும் பெறுகின்றீர். எந்நிலையிலும் ஸத்வகுணம் மாறாமையால் நீர் அவிக்ரியர்: மாறாத தன்மையுடையவர்.

இச்சுலோகம், மாறாததன்மை வாய்ந்த ஈசுவரனுக்கு எவ்வாறு மூன்று நிலைகள் ஏற்படுகின்றன என்பதை விளக்குகின்றது. எவ்வாறு நடிகன் ஒருவன் பலவேஷங்களைக் கொள்ளினும், அவனது தானான தன்மை மாறுவதில்லையோ அவ்வாறே பகவான் ஸத்வம் முதலிய குணங்களினால் மூவகைத் தொழில்கொள்ளினும் எந்நிலையிலும் அவரது தாமான தன்மை மாறாத காரணத்தால், अविक्रियः - எனப் பட்டார். இதைக்கருதியே, सदैकरूपरूपाय- अनेकरूपम् - என இருவகையில் கூறியுள்ளதைக் காண்க.

अमेयो मितलोकस्त्वमनर्थी प्रार्थनावहः ।
अजितो जिष्णुरत्यन्तमव्यक्तो व्यक्तकारणम् ॥ १८ ॥

'त्वम् - நீர், अमेयः-அளவிடற்கரியர்; मितलोकः அளக்கப்பட்ட உலகத்தை உடையவர்; अनर्थी - விருப்பற்றவர்; प्रार्थना-आवहः - விருப்பத்தைத் தருபவர்; अजितः - ஜயிக்கப் படாதவர்; जिष्णुः - (எப்பொழுதும்) ஜயிப்பவர்; अत्यन्तम् - மிகவும், अव्यक्तः-புலனாகாதவர்; (ஸூக்ஷ்ம உருவங் கொண்டவர்); व्यक्तकारणम् - வெளிப்படையான பொருட்கெல்லாங் காரணமானவர்.

(க-து) 'நீர் உலகத்தோரால் அளவிடற்கரியர்; ஆனால் நீர் உலகத்தை அளந்தவர்; உமக்கு வேண்டியது ஒன்றும் இல்லை. ஆனால் வேண்டினோர்க்கு வேண்டியவற்றை அளிப்பவர்; நீர் மற்றவரால் ஜயிக்கப்படாதவர்; உலகத்தை ஜயிப்பவர். நீர் நுண்ணிய உருவங் கொண்டவர்; ஆனால் உருவத்தை உடைய இவ்வுலகிற்குக் காரணமானவர்.

**अमेयः** - காலம் இடம் இவைகளால் அளவிடமுடியாத வர் என்றும் உரைக்கலாம். **सितलोकः**-ஸர்வஜ்ஞர்; திரிவிக்ர மராக உலகை அளந்தவர் என்றும் கொள்ளலாம்.

हृदयस्थमनासन्नमकामं त्वां तपस्विनम् ।
दयालुमनघस्पृष्टं पुराणमजरं विदुः ॥ १९ ॥

'**त्वाम्** -உம்மை, **हृदयस्थम्** - இதயத்தில் இருப்பவராக வும், (ஆயினும்) **अनासन्नम्** - அருகில் இல்லாதவராகவும், **अकामम्** - ஆசையற்றவராகவும், (ஆயினும்) **तपस्विनम्**-தவம் புரிபவராகவும், **दयालुम्** - பிறர் துயரை நீக்க ஆசையுள்ள வராகவும், (ஆயினும்) **अनघस्पृष्टम्**-துயரத்தால் தீண்டப்படா தவராகவும், **पुराणम्**-பழைமையுடையவராகவும், (ஆயினும்) **अजरम्** - முதுமை யில்லாதவராகவும், **विदुः** - அறிவார்கள்.

(க-து) 'நீர் எல்லாப் பிராணிகளுடைய இதயத்தில் வசிப் பவர். அப்படி இதயத்திலேயே வசித்த போதிலும் நீர் எத்தகையர் என அறிய முடியாததால் தொலைவிலே இருப்பவர். அடைய வேண்டிய எல்லாம் உம்மிடத்து நிறைந்திருப்பதால் ஆசையற்றவர். ஆயினும் பயனைவிரும்புவோர் தவம்செய்வது போன்றே நரநாராயண வடிவத்தில் இருந்துகொண்டு பதரிகாரண்யத்தில் தவம்புரிபவர். பிறர் துயரத்தைக்கண்டு துக்கமடைபவர். ஆயினும் பிறரது துயரத்தால் சிறிதும் பாதிக்கப்படாதவர். மிகப்புராதனமானவர். ஆயினும் சிறிதும் முதுமையடையாதவர்.

இச்சுலோகத்தில், பகவானிடம் முரண்பட்ட தர்மங் களும் காணப்படுகின்றன என்கிறார். எல்லோருடைய ஹ்ருதயத்திலும் பகவான் உறைபவராயினும் எளிதிலே அறியமுடியாத தன்மையுடையவராதல் பற்றி, **हृदयस्थम्** - **अनासन्नम्**-என்றார். எல்லா வகைப் பேறும் பெற்றவராதலால் ஈசுவரன் ஆசையற்றவர். ஆசையற்றவர் தவம் செய்கின் றார் எனின் இது முரண்பட்டதாகும். அவர் தாம் பெற

விரும்பிய பயன் ஒன்றுமில்லாவிடினும் உலகத்தினருக்கு வழி காட்டவேண்டித் தவம் செய்கிறார். 'न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन। नानवाप्तमवाप्तव्यं वर्त एव हि कर्मणि॥' என்பது கீதை. பிறருடைய துக்கத்தைக் கண்டு துக்கிப்பவன் தயாளு எனப்படுவான். அத்தகையோன் எப்பொழுதும் துக்கத்துடனிருப்பான். 'ईर्ष्यी घृणी त्वसन्तुष्टः क्रोधनो नित्यशङ्कितः। परभाग्योपजीवी च षडेते नित्यदुःखिताः॥' என்பது மகாபாரதம். 'பகவான் தயாளு; ஆயினும் துக்கமில்லாது இருக்கின்றார்', என்பது முரண்பட்டதாகும். ஆனந்த வடிவினனாகிய பகவானுக்குத் துக்கமில்லை என்பதால் முரண்பாடு நீக்கப்படுகின்றது. பழமையானவர் முதுமையின்றி இருத்தல் என்பது முரணானது; மாறுபாடு அற்றவராதலால் பழமையுடனிருப்பினும் முதுமையின்றி இருக்கிறார்.

सर्वज्ञस्त्वमविज्ञातस्सर्वयोनिस्त्वमात्मभूः।
सर्वप्रभुरनीशस्त्वमेकस्त्वं सर्वरूपभाक्॥ २०॥

'त्वम्-நீர், सर्वज्ञः-ஸர்வஜ்ஞர், (எல்லாமறிந்தவர்); अविज्ञातः - (பிறரால் முற்றிலும்) அறியப்படாதவர்; त्वम् - நீர், सर्वयोनिः - எல்லாவற்றிற்கும் காரணமானவர்; आत्मभूः - (தமக்குத்)தாமே தோன்றியவர்; त्वम् - நீர், सर्वप्रभुः-எல்லாவற்றிற்கும் தலைவர்; अनीशः - (தமக்கு ஒரு) தலைவரற்றவர்; (இவ்வாறு), त्वम् - நீர், एकः - ஒருவரே, सर्वरूपभाक्-எல்லா வடிவங்களையுமுடையவர்.

(க-து) 'தேவரீர் எல்லாமறிந்தவர்; ஆயினும் மற்றவர் உம்மை முற்றிலுமறிந்தாரில்லை. உலகத்திற்கெல்லாம் காரணமாகஇருப்பவர். ஆனால் உமக்கொரு காரணமில்லை. நீர் அனைத்துக்கும் தலைவரேயன்றி உமக்கு ஒருதலைவரில்லை. நீர் ஒருவரே பலவாக இருக்கின்றீர்.

இச்சுலோகத்தில் கூறியுள்ள கருத்துக்கள் கீழ்வரும் உபநிஷத் வாக்யங்களை ஆதாரமாகக் கொண்டன.

सर्वज्ञः-एष सर्वेश्वर एष सर्वज्ञः [माण्डूक्य श्रुतिः]
सर्वयोनिः-यतो वा इमानि भूतानि जायन्ते [तैत्तिरीयम्]
योनिश्च हि गीयते [ब्रह्मसूत्रम्]
आत्मभूः-तदात्मानं स्वयमकुरुत [तैत्तिरीयम्]
अनीशः-'न तस्य कश्चित्पतिरस्ति लोके न चेशिता' [श्वेताश्वतरम्]
सर्वरूपभाक्-'ब्रह्मैतद्धि सर्वाणि रूपाणि बिभर्ति' [बृहदारण्यकम्]

सप्तसामोपगीतं त्वां सप्तार्णवजलेशयम् ।
सप्तार्चिर्मुखमाचख्युस्सप्तलोकैकसंश्रयम् ॥ २१ ॥

'त्वाम्- உம்மை, **सप्त-साम उपगीतम्** - ஏழுவகை ஸாமங்களால் பாடப்பட்டவராகவும், **सप्त-अर्णव-जलेशयम्** - ஏழ் கடல் நீரில் சயனிப்பவராகவும், **सप्त-अर्चिर्-मुखम्**-அக்னியை வாயாக உடையவராகவும், **सप्त-लोक-एक संश्रयम्** -ஏழுலகங்கட்கும் ஒரு ஒப்பற்ற அடைக்கலமாகவும், **आचख्युः**-(பெரியோர் தொன்று தொடங்கிக்) கூறுவர்.

(க-து) 'ஏழுவகை ஸாமங்களால் ஸ்துதிக்கப்படுவர் நீர். ஏழு ஸமுத்ரங்களும் பிரளயகாலத்தில் ஒன்று சேருவதால் அவற்றின் ஜலத்தில் சயனித்திருப்பவர். அக்னி தேவன் உமது வாயாக இருப்பவன்; ஸகல உலகிற்கும் தாங்களே சரண்.

ஏழுவகை ஸாமங்கள்: रथन्तरम्, बृहत्साम, वामदेव्य, वैरूप्य, पावमान, वैराज, चान्द्रमस - என்பனவாம்.

**सप्तार्चिः** - ஏழு ஜ்வாலைகளையுடைய அக்னிதேவன்: "काली, कराळी, धूम्रा च, लोहिता च मनोजवा । स्फुलिङ्गिनी विश्वरूपा" என்பது ஜ்வாலைகளின் பெயர்களைக் கூறுவது. தேவர்களுக்குக் கொடுக்கப்படும் ஹவிஸ் அவர்களிடம் நேரே தரப்படாது அக்னியில் ஆஹுதி செய்யப்படுவதால் அக்னியைத் தேவர்களின் வாய் என்பர். **सर्वदेवमयो हरिः** - என விஷ்ணு, ஸர்வ தேவர்களைத் தம்முள்ளடக்கியவராதலால்

'सप्तार्चिर्मुखम्' என்றார். भूः, भुवः, स्वः, महः, जनः, तपः, सत्यम् - என்பன ஏழு லோகங்கள்.

आचख्युः - 'கூறினர்' என்பது பதப் பொருள்.

चतुर्वर्गफलं ज्ञानं कालावस्थाश्चतुर्युगाः ।
चतुर्वर्णमयो लोकस्त्वत्तस्सर्वं चतुर्मुखात् ॥ २२ ॥

'चतुर्वर्ग फलम्-நான்கு (புருஷார்த்தங்களின்) தொகுதியைப் பயனாக உடைய, ज्ञानम् - (மெய்) அறிவும், चतुर्युगाः - நான்கு யுகங்கள் ஆகிய, कालावस्थाः - கால அளவுகளும், चतुर्वर्णमयः - நான்கு ஜாதிகள் கொண்ட, लोकः - உலகமும், (ஆகிய) सर्वम् - (இவை) அனைத்தும், चतुर्मुखात् - நான்கு முகங்களையுடைய பிரமராகிய, त्वत्तः - உம்மிடமிருந்து, (जातम्) - உண்டானவை.

(க-து) 'தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களைப் பெறக்காரணமாயுள்ள அறிவு; அகண்டமான காலதத்வத்தை,க்ருதயுகம், த்ரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகம் எனப் பகுத்த கால அளவுகள்; பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், நான்காம் வருணத்தவர் என்ற நான்கு சாதிகளைக் கொண்ட இவ்வுலகம் என்ற இவ்வனைத்தையும், நீரே பிரம்மரது உருவத்தை ஏற்றுப் படைத்தீர்.

பிரம்மதேவருக்கு முகங்கள் நான்கு. ஆதலினால் அவர் நான்கு பிரிவுகளைக் கொண்ட பொருளகளை உண்டாக்கினார் எனக் கூறப்பட்டுள்ளது. தர்மசாஸ்திரம், அர்த்த சாஸ்திரம், காமசாஸ்திரம் மோக்ஷ சாஸ்திரம் இவற்றினறிவால் முறையே தர்ம, அர்த்த, காம, மோக்ஷங்கள் ஏற்படுவதால், 'चतुर्वर्गफलम् ज्ञानम्' என்றார். चतुर्वर्गफलम्-என்பதால், புருஷார்த்தங்களும், चतुर्युगाः कालावस्थाः-என்பதால், யுகபேதத்தினால் தர்மம் முதலியவற்றை அனுஷ்டிப்பதிலுள்ள வித்யாஸத்தையும், चतुर्वर्णमयः - என்பதால், தர்மானுஷ்டான அதிகாரிகளையும் குறிப்பித்தார்.

अभ्यासनिगृहीतेन मनसा हृदयाश्रयम् ।
ज्योतिर्मयं विचिन्वन्ति योगिनस्त्वां विमुक्तये ॥ २३ ॥

'**अभ्यास-निगृहीतेन** - பழக்கத்தினாலே அடக்கப்பட்ட, **मनसा** - மனத்தினால், **योगिनः** - யோகிகள், **हृदय आश्रयम्** - இருதயத்துள்ள, **ज्योतिर्मयम्** - ஒளிவடிவான, **त्वाम्**-உம்மை, **विमुक्तये**-விடுதலையின் பொருட்டு, **विचिन्वन्ति**-தேடுகின்றனர், (தியானிக்கின்றனர்).

(க-து) 'உம்மை உள்ளபடி அறிந்தால்தான் பிறவித்துயரினின்றும் விடுபட்டு வீட்டுப் பேற்றை அடையலாம். நீர் உயிர்களின் இதயத்தில் ஒளி உருவாய் அமர்ந்துள்ளீர். யோகிகள், யோகஞ் செய்து செய்து தங்கள் மனத்தை மற்ற விஷயங்களில் செல்லவிடாமல் தடுத்து, உம்மைக் காண முயலுகின்றனர். நீர் இதயத்திலேயே இருந்தும், ஒளி உருவாக இருந்தும், யோகிகளுங் கூட உம்மைத் தேடி அறியவேண்டியதாக உள்ளது.

இறைவனது உண்மையறிவைப்பெற்று அவன் தாள் சேர்ந்தார்க்கன்றிப் பிறருக்கு முக்திபெறுதல் எளிதன்று என்பதை, "அறவாழி யந்தணன் தாள் சேர்ந்தார்க் கல்லால் பிறவாழி நீந்த லரிது" என்ற குறளும் வலியுறுத்தும்; கடவுள் ஒளிவடிவினராய் ஜீவனது ஹ்ருதய கமலத்திலுள்ளாரென்பதை, "**पद्मकोशप्रतीकाशं हृदयञ्चाप्यधोमुखम्**" "**तस्य मध्ये वह्निशिखा अणीयोर्ध्वा व्यवस्थितः**" '**नीवार शूकवत् तन्वी पीताभा स्यात् तनूपमा । तस्याः शिखाया मध्ये परमात्मा व्यवस्थितः । स ब्रह्मा स शिवः सेन्द्रः सोऽक्षरः परमः स्वराट्**' என்ற உபநிஷத்தாலறியலாகும்.

अजस्य गृह्णतो जन्म निरीहस्य हतद्विषः ।
स्वपतो जागरूकस्य याथार्थ्यं वेद कस्तव ॥ २४ ॥

' अजस्य - பிறவாதவரும், जन्म - பிறப்பை, गृह्णतः-எடுக்கின்றவரும், निरीहस्य - செயலற்றவரும், हत द्विषः-கொல்லப்பட்ட பகைவர்களையுடையவரும், जागरूकस्य - விழிப்புடனிருப்பவரும், स्वपतः - தூங்குபவருமான तव - உமது, याथार्थ्यम् - உண்மை நிலையை, कः - யார், वेद - அறிவார்?

(க-து) 'நீர் ஒன்றுக் கொன்று முரண்பட்ட தன்மைகளைக் கொண்டவராக இருப்பதால் உமது உண்மையான தன்மையையாரே அறிவார்? நீர் மற்ற உயிர்களைப் போல் பிறவாதவர்;ஆனால் மத்ஸ்யம், கூர்மம், வராஹம் முதலிய பல்வேறு உருவங்களை உலகைக் காப்ப தன்பொருட்டுத் தம்மிச்சைப்படி ஏற்றுப் பிறந்தவர். எப்பொருளிலும் பற்றில்லாமல் செயலற்றிருப்பவர். ஆனால் பகைவர்களைக் கொல்வதாகிய செயலையுடையவர். எப்பொழுதும் எல்லாவற்றையும் அறியும் நிலையிலுள்ளவர்; ஆனால் (யோக) நித்திரை செய்பவர். இவ்வகையான முரண்பட்ட தன்மைகளையுடைய உம்மை அறிவது கூடாதது.

'अजस्य जन्म गृह्णतः'- என்பதை 'अजायमानो बहुधा विजायते' என்பதுடன் ஒப்பிட்டு நோக்குக. ' अकिञ्चनस्सन् प्रभवः स संपदाम् त्रिलोकनाथः पितृसद्मगोचरः। स भीमरूपः शिव इत्युदीर्यते न सन्ति याथार्थ्यविदः पिनाकिनः' என்பதும் ஒத்த கருத்தினையுடையது.

शब्दादीन्विषयान् भोक्तुं चरितुं दुश्चरं तपः।
पर्याप्तोऽसि प्रजाः पातुमौदासीन्येन वर्तितुम् ॥ २९ ॥

' शब्दादीन् - ஒலி முதலிய, विषयान् - பொருள்களை, भोक्तुम्-அநுபவிக்கவும், दुश्चरम्-செய்தற்கரிய, तपः-தவத்தை, चरितुम्-செய்வதற்கும், पर्याप्तः असि-(நீர்) சக்தியுடையவராக இருக்கின்றீர்; प्रजाः - மக்களை, पातुम् - காப்பதற்கும், औदासीन्येन-நடுநிலையுடன், वर्तितुम् - இருப்பதற்கும், (पर्याप्तः) - சக்தியுடையவராக, (असि) - இருக்கின்றீர்.

(க-து) 'ஒலி (சங்கீதம் முதலியன) முதலிய புலனுகர் பொருட்களை நுகர்பவர், புலனையடக்கிச் செய்யவேண்டிய தவத்தைச் செய்தற் குரியராகார். ஆனால் நீரோ க்ருஷ்ணவதாரம் முதலியவற்றையெடுத்த காலத்தில் பலவகை இன்பங்களை நுகர்ந்தீர். பதரிகாசிரமத்தில் நரநாராயணர்களாக வந்து தவமுஞ் செய்தீர். நடுவு நிலையுடன் ஒன்றிலும் பற்றற்றிருப்பவர் மக்களைக் காப்பதரிது. நீரோ மக்களையுங் காக்கின்றீர்; ஒன்றிலும் பற்றில்லாமலுமுள்ளீர். இவையெல்லாம் தேவரீர் ஒருவரே செய்யக்கூடும். பிறருக்குச் சாத்யமன்று.

புலன்களால் அநுபவிக்கப்படுன்ற பொருள்களனைத்தையும் ஐந்துவகைகளாகப் பிரிக்கலாம்; காதினால் நுகரப்படுவன ஸங்கீதம் முதலானவை; கண்களால் நுகரப்படுவன அழகான வர்ணமும் தோற்றமும்; மூக்கினால் நுகரப்படுவது நறுமணம்; நாக்கினால் நுகரப்படுவன அறுசுவை. ஸ்பர்சத்தினால் நுகரப்படுவது ஸ்பர்சஸுகம்.

बहुधाप्यागमैर्भिन्नाः पन्थानस्सिद्धिहेतवः ।
त्वय्येव निपतन्त्योघा जाह्नवीया इवार्णवे ॥ २६ ॥

'आगमैः-சாஸ்திரங்களால், बहुधा-பலவகையாக, भिन्नाः-अपि - பிரிக்கப்பட்டுள்ளனவாயினும், सिद्धिहेतवः - பயனை அடைதற்குக் காரணங்களான, पन्थानः-வழிகள், जाह्नवीयाः-கங்கையின், ओघाः - பிரவாஹங்கள், अर्णवे इव - கடலில் (அடைவது) போல, त्वयि एव-உம்மிடத்திலேயே, निपतन्ति-அடைகின்றன.

(க-து) 'கங்கை நதியின் வெள்ளப் போக்கு பல கிளைகளாகப் பிரிந்து சென்றபோதிலும் இறுதியில் கடலையே அடைகின்றது. அதைப்போல் சாஸ்திரங்களிலே முக்திக்கான மார்க்கங்கள் பல பலவாகக் கூறப்பட்டுள்ளன. அப்படி வழிகள் பலவாக இருப்பினும், அவ்வழிகளால் அடையப்பட வேண்டியவர் நீர் ஒருவரேயாதலால் அவ்வழிகளெல்லாம் உம்மிடமே மனிதரை அடைவிக்கின்றன.

வைஷ்ணவர்கள் விஷ்ணு எனவும், சைவர்கள் சிவ பிரான் எனவும், பௌத்தர்கள் புத்தர் என்றும் பல நாமங் களைச் சொல்லி வழிபட்டபோதிலும் அவ்வவ் வழிபாடுகள் எல்லாம் பரம் பொருளாகிய பரமனையே அடைகின்றன என்பது இச்சுலோகக் கருத்து.

'यथाऽद्रिप्रभवा नद्यः पर्जन्यापूरिताः प्रभो ।
विशन्ति सर्वतः सिन्धुं अध्वानस्त्वां तथाऽखिलाः ॥'

[पद्मपुराणम्]

'येऽप्यन्यदेवताभक्ता यजन्ते श्रद्धयाऽन्विताः ।
तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम्' ॥ [गीता]
'त्रयी सांख्यं योगः पशुपतिमतं वैष्णवमिति
प्रभिन्ने प्रस्थाने परमिदमदः पथ्यमिति च ।
रुचीनां वैचित्र्यादृजुकुटिलनानापथजुषां
नृणामेको गम्यस्त्वमसि पयसामर्णव इव ॥'

[महिम्नस्स्तोत्रम्]

என்பனவும் இச்சுலோகத்தில் கூறிய கருத்தை விளக் கும். காளிதாஸரது ஸமநோக்கு அறிந்து புகழ்தற்குரியது.

கங்கையின் பிரவாஹங்கள்போல் மார்க்கங்கள் பலவும் தூய்மை யுடையனவென்பதும், கடலோடு ஒப்பிட்டதால் பகவானது பெருமையும் உபமானத்தாற் பெறப்படும்.

त्वय्यावेशितचित्तानां त्वत्समर्पितकर्मणाम् ।
गतिस्त्वं वीतरागाणामभूयःसन्निवृत्तये ॥ २७ ॥

'त्वयि - உம்மிடத்தில், आवेशित चित्तानाम् - நிலை நிறுத் தப்பட்ட மனத்தை உடையவர்களும், त्वत्समर्पित-कर्मणाम् - உம்மிடத்தில் அர்ப்பணம் செய்யப்பட்ட செயல்களையுடை வர்களுமாகிய, वीतरागाणां - பற்றற்றவருக்கு, अभूयः-सन्निवृत्तये-

திரும்ப வராமலிருத்தற்பொருட்டு (மோக்ஷத்திற்கு), त्वम्-एव - நீரே, गतिः ஸாதனமாக இருக்கின்றீர்.

(க-து) உம்மையே எப்பொழுதும் தியானம் செய்பவரும், பலனில் விருப்பின்றி உம்மிடமே எல்லாவகைச் செயல்களை அர்ப்பணம் செய்கின்றவரும், எதிலும் பற்றில்லாதவருமான அனைவரும் மறு பிறவியற்ற நிலையான வீட்டுப் பேற்றை அடைவதற்கு நீரே காரணமாக இருக்கின்றீர்.

'मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु। मामेवैष्यसि सत्यन्ते प्रतिजाने प्रियोऽसि मे॥' 'यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत्। यत्तपस्यसि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम्॥' 'मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते' என்ற கீதா வாக்கியக்கருத்தினை உள்ளடக்கியது இச்சுலோகம்.

प्रत्यक्षोऽप्यपरिच्छेद्यो मह्यादिर्महिमा तव ।
आप्तवागनुमानाभ्यां साध्यं त्वां प्रति का कथा ॥ २८ ॥

'प्रत्यक्षः अपि - கண்ணினால் பார்க்கப்படுகின்றதாயினும், तव-உம்முடைய, मह्यादिः-பூமி முதலிய, महिमा-ஐசுவரியம், अपरिच्छेद्यः - அளவிடற்கரியது; (எனின்), आप्तवाग्-अनुमानाभ्याम् - வேதங்களாலும் அனுமானத்தினாலும், साध्यम् - அறியத்தக்க, त्वाम् प्रति - உம்மைக் குறித்து, कथा का - பேச்சு எது?

(க-து) உலகத்தில் உள்ள பொருள்களை நான்கு பிரமாணங்களால் உறுதியாக அறியலாம். அவை; பிரத்யக்ஷம், அனுமானம், உபமானம், சப்தம் என்பனவாம். புலன்களால் அறிவது பிரத்யக்ஷம்; புகை இருப்பதால் தீயிருத்தல் வேண்டுமென்று ஊஹிப்பது அனுமானம்; ஒன்றைக் கண்டு அதைப்போன்ற மற்றொன்றைத் தெளிவது உபமானம்; வேதங்களைக் கொண்டு, யாகஞ் செய்தால் சுவர்க்கத்தை அடையலாம் என்பது போன்ற பொருள்களை அறிவது சப்தம்.

'கண்களால் பார்த்து அறியக் கூடியது இவ்வுலகம். இது உம்மால் உண்டாக்கப்பட்டது: உமது செல்வம். எதிரே கண்களால் பார்த்து அறியக் கூடியது என்று சொன்ன போதிலும் இவ்வுலகத்தின் பெருமை உள்ளவாறு அறியக் கூடவில்லை. உம்மால் சிருஷ்டிக்கப் பட்டதும், பிரத்தியக்ஷப் பிரமாணத்திலை அறியக் கூடியதுமான இவ்வுலகத்தையே நன்கு அறியமுடியாதபோது வேதத்தினுலும் அனுமானத்திலுைம் அறியக்கூடிய உம்மை அறிவது எங்ஙனம்?

அநுமானத்தால் கடவுளை அறிதலாவது—காணப்படும் பொருள்களெல்லாம் ஒருவனால் செய்யப்பட்டவை. உலகில் காணப்படும் குடம் முதலியவற்றைக் குயவன் முதலிய தொழிலாளிகள் செய்யக்காண்கிறோம். அதைப்போல், காணப்படும் மரம், செடி முதலியவற்றையும் ஒருவன் செய்திருத்தல் வேண்டும். நம்மனோர்க்கு அத்தகைய சக்தியில்லையாதலால் நம்மைப்போன்ற மனிதன் செய்திருத்தல கூடாதாகும். ஆகவே இத்தகையவற்றைச் செய்யவல்ல கடவுள் ஒருவன் உளன் என அறிதல்; 'எவனிடமிருந்து இவ்வுயிர்கள் உண்டாயினவோ, பிறந்தவை எவனால் வாழ்கின்றனவோ, முடிவில் எவனை அடைகின்றனவோ அவனே பிரம்மம்' என்ற பொருளைக் கொண்ட, 'यतो वा इमानि' - இவை முதலான வேதவாக்கு சப்தபிரமாணமாகும்.

केवलं स्मरणेनैव पुनासि पुरुषं यतः ।
अनेन वृत्तयः शेषा निवेदितफलास्त्वयि ॥ २९ ॥

'**स्मरणेन एव केवलम्** - *நினைத்தல் மாத்திரத்தினாலேயே,* **पुरुषम्** - (*நினைக்கின்ற*) *மனிதனை,* **यतः** - *எக்காரணத்தினாலே,* **पुनासि**-(*நீர்*) *தூயவனாக்குகின்றீரோ,* (*அதனால்*) **अनेन**-*இந்த நினைப்பின் மூலம்,* **त्वयि** - *உம் விஷயத்தில்,* **शेषाः-वृत्तयः** - (*பார்த்தல் முதலிய*) *பிற தொழில்கள்,* **निवेदितफलाः** - *தெரிவிக்கப்பட்டபயன்களை உடையன.*

(க-து) 'உம்மை நினைத்த மாத்திரத்திலேயே நீர், நினைப்பவரைப் பரிசுத்தராக்குகின்றீர். உம்மைப் பற்றிய நினைப்பே இத்தகைய பயனைத் தருமாயின், உம்மை நேருக்கு நேராகக் காணுதல், தொடுதல், பூஜித்தல் போன்ற மற்ற செய்கைகளால் ஏற்படும் பயன் அளவிடற்கரியது.

उदधेरिव रत्नानि तेजांसीव विवस्वतः ।
स्तुतिभ्यो व्यतिरिच्यन्ते दूराणि चरितानि ते ॥ ३० ॥

'**उदधेः** -கடலின், **रत्नानि इव** - ரத்தினங்கள் போலவும், **विवस्वतः** - சூரியனுடைய, **तेजांसि इव** - ஒளிகள் போலவும், **दूराणि**-(மனத்திற்கும் வாக்கிற்கும்) எட்டாத,**ते**-உம்முடைய, **चरितानि** - செயல்கள், **स्तुतिभ्यः** - தோத்திரங்களுக்கு, **व्यतिरिच्यन्ते** - மேற்பட்டன.

(க-து) 'கடலிலுள்ள ரத்தினங்களைக் கணக்கிட முடியாது. சூரியனின் ஒளிக்கதிர்களை அளவிட இயலாது. அதைப் போல மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாத உமது செயல்கள் தோத்திரங்களுக்கு அடங்காதன.

கடலிலுள்ள ரத்னங்களையும் ஸூர்யனது ஒளியையும் உபமானமாகக் கூறியதனின்றும் ஈசுவரனது குணங்களின் எண்ணற்றதன்மை, சிறப்பு, உலகத்திற்கு நன்மையுண்டாக்குதல் போன்றவை புலனாகும்.

अनवाप्तमवाप्तव्यं न ते किञ्चन विद्यते ।
लोकानुग्रह एवैको हेतुस्ते जन्मकर्मणोः ॥ ३१ ॥

'**अनवाप्तम्** -(இதுவரை) அடையப்படாதது, **अवाप्तव्यम्** -(இனி) அடையப்பட வேண்டியதாக, **ते** - உமக்கு, **किंचन**-ஒன்றும். **न विद्यते** - இல்லை; **लोकानुग्रहः** - உலகத்திற்கு நலம் செய்தல் (என்ற), **एकः एव** - ஒன்றே, **ते**- உமது, **जन्मकर्मणोः**- பிறப்பிற்கும் செயலுக்கும் **हेतुः** - காரணம்.

(க-து) 'ஸர்வேச்வரரான தேவரீர், எல்லாம் நிரம்பியவர். ஆத லால், இதுவரை அடையப்படாது இனி அடையப் படவேண்டிய பொருள் உமக்கு ஏதுமில்லை. ஆனால் நீர் அவதாரங்கள் எடுப் பதும், தீயவரைத் தண்டித்தல் முதலிய செயல்களைச் செய்தலும் எதற்காக வெனின் உலகத்தின் நன்மைக்காகவே. கருணை நிரம்பிய உமது செயலெல்லாம் பிறர் நன்மைக்காகவே யன்றி, அச்செயலால் உமக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை.

महिमानं यदुत्कीर्त्य तव संह्रियते वचः ।
श्रमेण तदशक्त्या वा न गुणानामियत्तया ॥ ३२ ॥

'**तव** - உம்முடைய, **महिमानम्**-பெருமையை, **उत्कीर्त्य** - வருணித்து, **वचः** - வார்த்தை, **संह्रियते** - நிறுத்தப்படுகிறது, **(इति) यत्**-என்பது யாதொன்று இருக்கின்றதோ, **तत्**-அது, **श्रमेण**-களைப்பினாலோ, **अशक्त्या वा** - (முழுதும் கூறச்)சக்தி யின்மையாலேயோதான்; **गुणानाम्** - (உமது) குணங்களின், **इयत्तया न** - இவ்வளவுதாம் என்பதனால் அன்று.

(க-து) 'உமது பெருமை அளவிடற்கரியது; உம் குணங்கள் கணக்கிட முடியாதன. ஆகவே தோத்திரத்தை நிறுத்துவது, துதிப்ப வர்களின் களைப்பினாலோ திறமையின்மையாலோ வன்றி, உமது குணங்கள் இவ்வளவுதாம் என்ற காரணத்தாலன்று.'

'**इषुक्षयान्निवर्तन्ते नान्तरिक्षक्षितिक्षयात्। मतिक्षयान्निवर्तन्ते न गोविन्दगुणक्षयात् ॥**' என்பதுடன் ஒப்பிட்டுக் காண்க.

इति प्रसादयामासुस्ते सुरास्तमधोक्षजम् ।
भूतार्थव्याहृतिः सा हि न स्तुतिः परमेष्ठिनः ॥ ३३ ॥

**इति** - இவ்வாறு, **ते सुराः** -அந்த தேவர்கள், **तं**-அந்த, **अधोक्षजम्** - விஷ்ணுவை, **प्रसादयामासुः**-உவப்பித்தனர். **सा**- அத்துதி, **परमेष्ठिनः** - பரமபுருஷரின், **भूतार्थ व्याहृतिः हि** - உண்மையான ஸ்வபாவத்தைக் கூறுவதே; **न स्तुतिः** -(இல் லாததைக் கூறும்) ஸ்தோத்திரமன்று.

(க-து) இவ்வாறு அத்தேவர்கள் விஷ்ணுவைத் தோத்திரஞ் செய்தனர்; ஆனல் அது, அவரிடம் இல்லாத குணங்களைக் கூறுந் தோத்திரமாக ஆகாமல் அவரிடம் உள்ளவற்றை உரைக்கும் உரையாகவே ஆயிற்று.

तस्मै कुशलसंप्रश्नव्यञ्जितप्रीतये सुराः ।
भयमप्रलयोद्वेलादाचख्युर्नैर्ऋतोदधेः ॥ ३४ ॥

**सुराः** - தேவர்கள், **कुशल-संप्रश्न-व्यञ्जित-प्रीतये**-க்ஷேமத்தைக் கேட்பதனால் தெரிவிக்கப்பட்ட அன்பையுடைய, **तस्मै**-அந்த விஷ்ணுவின் பொருட்டு, **अप्रलय-उद्वेलात्** - பிரளயமின்றியே கரை மீறிப் பெருகும், **नैर्ऋत-उदधेः**-ராக்ஷஸனாகிய கடலினின்று (உண்டான), **भयम्** - அச்சத்தை, **आचख्युः** - சொன்னார்கள்.

(க-து) தேவர்கள் இவ்வாறு தோத்திரஞ் செய்ததும், விஷ்ணு அவர்களைப்பார்த்து "நீங்கள் சுகமாக விருக்கின்றீர்களா" எனக் கேட்டார். இதனால், அவர் தேவர்களிடம் அன்புடனுள்ளாரென்று தெரியவந்தது. இக்கேள்விக்குப் பதிலாகத் தேவர்கள், ராக்ஷஸனிடமிருந்து தாங்கள் அச்சமுறுவதாகக் கூறினர். உலகம் முடிவுறுங்காலமாகிய பிரளய காலத்தில் சமுத்திரம் கரையை மீறிப்பெருகி உலகத்தை அழிக்கும். ஆனல் இந்த ராக்ஷஸனாகிய கடல்பிரளயம் எதுவும் இல்லாமலேயே ஒழுக்கம் என்ற எல்லையைக் கடந்து தங்களைத் துன்புறுத்துகின்றான் எனக் கூறினர்.

இங்கு ராக்ஷஸன் என்று கூறியது ராவணனை; அச்சமுண்டாக்குவதில் கடலைக் காட்டிலும் பெரிதொன்றில்லையாதலால் ராவணனைக் கடலாக உருவகம் செய்தார். கடல் பிரளய காலத்தில் தான் கரைபுரண்டு மக்களுக்கு அழிவை உண்டுபண்ணும். ராவணன் என்ற கடலுக்கு அப்படிப்பட்ட காலநியமமொன்றுமில்லை. இவன் எப்பொழுதுமே துன்பமளிப்பவன். ஆதலால் கடலினின்று வேறுபாடும் கூறியதாயிற்று. ராவணக்கடலுக்கு ஒழுக்கம் என்பது கரையா

கும். அதை மீறியுள்ளதால் அவன் ஒழுக்கமற்றவன் என்பதைக்காட்டினர்.

अथ वेलासमासन्नशैलरन्ध्रानुनादिना ।
स्वरेणोवाच भगवान् परिभूतार्णवध्वनिः ॥ ३५ ॥

**अथ** - பிறகு, **वेला समासन्न-शैल-रन्ध्र-अनुनादिना** - கடற்கரையில் நெருங்கியுள்ள மலைகளின் குகைகளில் எதிரொலி செய்யும், **स्वरेण** - குரலினல், **परिभूत-अर्णव-ध्वनिः** - சமுத்திர கோஷத்தை அடக்கியவராக, **भगवान्** - பகவான், **उवाच** - சொன்னர்.

(க-து) பிறகு விஷ்ணு தேவர்களைப் பார்த்துக் கூறினர். அவருடைய குரல் சமுத்திரக் கரையிலுள்ள மலைகளின் குகைகளில் எதிரொலி செய்து, கடலின் பேரொலியையும் வென்றது. அவ்வளவு கம்பீரமாக விருந்தது அவரது குரல்.

**'भगवान्'** - நிறைந்த பெருமை, வீர்யம், யசஸ், செல்வம், அறிவு, வைராக்யம் என்ற இவ்வாறும் பகம் எனப்படும். இவற்றையுடையவர் பகவான். **'ऐश्वर्यस्य समग्रस्य-वीर्यस्य यशसः श्रियः । ज्ञानवैराग्ययोश्चैव षण्णां भग इतीरणा ॥'**- என்பதைக் காண்க.

पुराणस्य कवेस्तस्य वर्णस्थानसमीरिता ।
बभूव कृतसंस्कारा चरितार्थैव भारती ॥ ३६ ॥

**वर्ण-स्थान-समीरिता**-எழுத்துக்களின் பிறப்பிடங்களிலே நன்கு உச்சரிக்கப்பட்டதும், **कृत-संस्कारा** - செய்யப்பட்ட தூய்மையுடையதுமான, **पुराणस्य** - பழைய, **कवेः**-கவியான, **तस्य** - பகவானது, **भारती** - வாக்கு, **चरित-अर्था-एव** - பயன் பெற்றதாகவே, **बभूव** - ஆயிற்று.

(க-து) பகவானல் பேசப்பட்டதனலே வாக்கும் தான் பெற வேண்டியபயனைப் பெற்றதாயிற்று. ஏனெனில், பகவான் எழுத்துக்

களை, மார்பு, நெஞ்சு, தலை, நாவின் அடிப்பாகம், பல், மூக்கு, உதடுகள், அண்ணம் என்ற அவை பிறக்குமிடங்களிலே வைத்து நன்கு உச்சரித்தார். மேலும், எழுத்துக்களை உச்சரிக்கும்பொழுதுகொள்ள வேண்டிய எடுத்தல், படுத்தல், நலிதல் முதலான முயற்சிகளை ஏற்று எக்குற்றமுமின்றித் தெளிவாகக் கூறி அவற்றிற்குத்தூய்மை யளித்தார். இக்காரணத்தால் வாக்கும் பயனெய்தியது.

வேதங்கள் ஈசுவரனிடமிருந்து தோன்றியதால் அவரை, **पुराणस्य कवेः** - என்று விசேஷித்தார். **कविः** - முற்றிலுமுணர்ந்தவர் எனினுமாம்: **'अष्टौ स्थानानि वर्णानामुरः कण्ठः शिरस्तथा। जिह्वामूलं च दन्ताश्च नासिकोष्ठौ च तालु च॥'** என்பது, எழுத்துக்களின் பிறப்பிடங்களைக் கூறுவது.

எழுத்துக்கள் பிறக்குமிடத்தை, **स्थान**ம் என்றும், அதற்கான முயற்சியை **प्रयत्न**ம் என்றும் கூறுவர்.

**कृतसंस्कारा** - 'இலக்கணப்பிழையையறவே நீக்கியது' என்றும் பொருள் கூறுவர்.

'**चरितार्थैव**' என்று பாடபேதம் கொண்டால் 'பயனடைந்தது போலும்!' என உரை செய்யவேண்டும்.

> बभौ सदशनज्योत्स्ना सा विभोर्वदनोद्गता ।
> निर्यातशेषा चरणाद्गङ्गेवोर्ध्वप्रवर्तिनी ॥ ३७ ॥

**विभोः** - விஷ்ணுவின், **वदन - उद्गता** - திருவாயினின்று தோன்றியதும், **सदशन-ज्योत्स्ना** - பற்களின் காந்தியோடு கூடியதுமான, **सा** - அப்பேச்சு, **चरणात्** - பாதத்திலிருந்து, **निर्यातशेषा** - கிளம்பியதன் மிச்சமும், **ऊर्ध्व-प्रवर्तिनी** - மேல் நோக்கிச் செல்வதுமான, **गङ्गा इव** - கங்கைபோல், **बभौ** - விளங்கியது.

(க-து) பகவான் கூறிய வாக்கு, அவரது பற்களின வெண்மையான காந்தியுடன் மிளிர்ந்தது. பல்லொளியுடன் கூடிய பேச்சைக்

கவி, விஷ்ணுவின் பாதத்தினின்றும் முன்பு புறப்பட்ட கங்கையின் மிகுதி இப்பொழுது மேல் நோக்கிப் பிரவஹிப்பதாகப் புனைந்து கூறுகிறார். கங்கையின் பிரவாஹம் வெண்ணிறமானதால் இவ்வாறு உத்ப்ரேக்ஷித்தார்.

மகாபலியினிடம் மூவடி மண் வேண்டிய விஷ்ணு, திரிவிக்ரமராகி ஓரடியால் மண்ணுலகத்தையும், மற்றொன்றால் விண்ணுலகத்தையும் அளந்தார். விண்ணுலகு சென்ற அவரது திருவடியைப் பிரம்மதேவர் அபிஷேகம் செய்து பூஜித்தார். அவ்வபிஷேக தீர்த்தமே கங்கையாகப் பிரவஹித்ததால் கங்கையைப் பகவானது பாதத்தினின்றும் தோன்றியதாகக் கூறுவர். இதனால் '**विष्णुपदी**' (விஷ்ணுவைத் தனக்கு உற்பத்திஸ்தானமாக வுடையது) என்ற பெயருங் கங்கைக்கு ஏற்பட்டது.

जाने वो रक्षसाक्रान्तावनुभावपराक्रमौ ।
अङ्गिनां तमसेवोभौ गुणौ प्रथममध्यमौ ॥ ३८ ॥

'**देवाः** - தேவர்களே! **अङ्गिनाम** - மனிதர்களின், **प्रथम-मध्यमौ**-முதல் இரண்டாவதாகிய, **उभौ**-இரண்டு, **गुणौ**-குணங்கள், **तमसा इव** -தமோகுணத்தினால் (கவரப்படுவது) போல, **वः** - உங்களுடைய, **अनुभाव-पराक्रमौ**-பெருமையும் வீரமும், **रक्षसा** - ராக்ஷஸனான ராவணனால், **आक्रान्तौ** - மங்கும்படி செய்யப்பட்டுள்ளனவாக, **जाने** - அறிகிறேன்.

(க-து) ஸத்வம், ரஜஸ், தமஸ் எனக் குணங்கள் மூன்று. முதலிரண்டுகுணங்களாகிய ஸத்வமும்ரஜஸும்மனிதரிடமிருப்பினும் மூன்றாவதாகிய தமோகுணத்தினால் அமுத்தப்பட்டுப் பிரகாசியாமல் போகின்றன. அதைப்போல் தேவர்களாகிய உங்களின் பெருமையும் வீரமும், இராவணனால் மங்கும்படி செய்யப்பட்டுள்ளன என்பதை நான் அறிவேன்.

**रक्षस्**-என்றஉபமேயத்திற்கேற்ப உபமானமாகிய **तमस्**-என்பதும் நபும்ஸகலிங்கத்தில் வந்துள்ளது. இது முதல்

பத்து சுலோகங்கள் பகவான் தேவர்களுக்குக்கூறுவதாக உள்ளன.

विदितं तप्यमानं च तेन मे भुवनत्रयम् ।
अकामोपनतेनेव साधोर्हृदयमेनसा ॥ ३९ ॥

'**अकाम-उपनतेन**-தன் விருப்பமின்றியே வந்திருக்கின்ற, **एनसा** - பாபத்தினால், **साधोः** - நல்லவருடைய, **हृदयम् इव** - மனம் (துன்புறுத்தப்படுவது) போல், **तेन** - அந்த ராக்ஷஸனால், **तप्यमानम्** - தபிக்கப்படுகின்ற, **भुवन-त्रयम्-च** - இம்மூவுலகமும், **मे** - என்னால், **विदितम्** - அறியப்பட்டுள்ளன.

(க-து) 'நற்குடியில் பிறந்த நல்லோன் ஒருவன் தன் விருப்பமின்றியே எதேனும் பாபம் செய்துவிடின் அப் பாப உணர்ச்சியால் அவன் மனம் மிக வருந்தும். ராவணனால் துன்புறுத்தப்படும் இம் மூவுலகமும் அந்நன் மகனின் மனத்தைப்போல் மிக வருந்துகின்றன என்பதை நான் அறிகின்றேன்.

कार्येषु चैककार्यत्वादभ्यर्थ्योऽस्मि न वज्रिणा ।
स्वयमेव हि वातोऽग्नेः सारथ्यं प्रतिपद्यते ॥ ४० ॥

'(किं) **च**-மேலும், **एक-कार्यत्वात्** - (நாங்கள் இருவரும்) ஒரே காரியத்தை உடையவராயிருத்தலால், **कार्येषु** - செய்ய வேண்டிய விஷயங்களில், **वज्रिणा** - இந்திரனால், **अभ्यर्थ्यः** - வேண்டிக் கொள்ளப்பட வேண்டியவனாக, **न अस्मि** - (நான்) இல்லை. **वातः**-காற்று, **स्वयम्-एव-हि**-தானாகவே, **अग्नेः**-நெருப்பிற்கு, **सारथ्यम्** - துணையை, **प्रतिपद्यते** - ஏற்கின்றது.

(க-து) 'இந்திரனும் நானும் உலகத்தைக்காத்தல் என்ற ஒரே தொழிலுடையவர்கள். ஆதலால் இதற்காக இந்திரன் என்னை வேண்டிக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. நெருப்பிற்குக் காற்று தானே உதவுகின்றது. அதையாரும் போய் வேண்டிக்கொள்வதில்லை. காற்று, அருகிலிருந்தால் போதும். அறிவுள்ளவர் தம் கடமையைப்

பிறர் தூண்டுதலின்றித் தாமே செய்வர். ஆதலால் என்னைப் பிறர் ஊக்க வேண்டு மென்பதில்லை.

**चक्रकार्यं** - என்பதற்கு 'ராவணனை அழித்தல் என்ற காரியம் என்றும்' உரைக்கலாம்.

स्वासिधारापरिहृतः कामं चक्रस्य तेन मे ।
स्थापितो दशमो मूर्धा लभ्यांश इव रक्षसा ॥ ४१ ॥

'**स्व-असिधारा-परिहृतः**-தன் கத்திமுனையினின்றும் விலக்கப்பட்ட (ராவணனது), **दशमः** - பத்தாவது, **मूर्धा**-தலை, **मे** - எனது, **चक्रस्य** - சுதர்சன சக்ரத்திற்கு, **कामम्**-போதுமான, **लभ्यांशः इव** - அடையத் தகுந்த பகுதிபோல, **तेन रक्षसा**-அவ்விராக்ஷஸனால், **स्थापितः**-(மிகுத்து)வைக்கப்பட்டுள்ளது.

(க-து) 'ராவணன் கோகர்ண ஆசிரமத்தில் பத்தாயிரம்வருஷங்கள் பஞ்சாக்னி மத்தியிலிருந்து தவம் புரிந்தான். ஒவ்வொரு ஆயிரம் ஆண்டு முடிவிலும் ஒவ்வொரு தலையாக ஒன்பதாயிரம் ஆண்டுகளில் தனது ஒன்பது தலைகளை அறுத்து அக்னியிலிட்டான். பத்தாவது தலையை அறுக்கப்போகும் தருணத்தில் பிரம்மா பிரத்யக்ஷமாகி, அவன் கேட்டவாறு, தேவர்கள், ராக்ஷஸர்கள், பூதங்கள், முதலானோரால் அவனுக்கு மரணம் ஏற்படாது என வரமளித்தார். மனிதர்களை இராவணன் ஒரு பொருளாகவே எண்ணவில்லை யாகையால் அவர்களால் மரணம் நேரக்கூடாதென வரம் கேட்கவில்லை. மற்றும், இழந்த தலைகளையும் பிரம்ம தேவரின் அருளால் திரும்பப்பெற்றான். ஆகவே இராவணன் தனது கத்தியால் வெட்டாமல் விட்ட ஒரு தலை என் சக்ராயுதத்தின் பங்காக மிறுத்திவைக்கப்பட்டுள்ளது போலும்!

स्रष्टुर्वरातिसर्गात्तु मया तस्य दुरात्मनः ।
अत्यारूढं रिपोः सोढं चन्दनेनेव भोगिनः ॥ ४२ ॥

'**किन्तु**-ஆனால், **भोगिनः**-பாம்பினது, (**अत्यारूढम्**) - ஏறியிருத்தலானது, **चन्दनेन-इव** சந்தனமரத்தினால் (ஸஹிக்கப்

படுவது) போல், तस्य - அந்த, दुरात्मनः - துராத்மாவான, रिपोः - பகைவனது, अत्यारूढम् - அதிக விருத்தியும், मया - என்னால், स्रष्टुः - பிரம்மதேவரது, वर-अतिसर्गात् - வரமளிப்புக் காரணமாக, सोढम् - (இதுவரை) பொறுத்துக் கொள்ளப் பட்டது.

(க-து) 'கொடிய விஷமுள்ள பாம்பு தன் மேலேறுவதைச் சந்தனமரம் சகிப்பது போல், நானும் ராவணனது அடாச்செயல்களை எல்லாம் இதுவரை பொறுத்தது, பிரம்மதேவர் அவனுக்கு அளித்த வரம் கருதியமையால்தான்.

இதனால் பகவான் தாம் ராவணனை இதுவரை தண்டிக்காது வாளாவிருந்ததற்குக் காரணம் கூறினார்.

धातारं तपसा प्रीतं ययाचे स हि राक्षसः ।
दैवात् सर्गादवध्यत्वं मर्त्येष्वास्थापराङ्मुखः ॥ ४२ ॥

'सः राक्षसः - அந்த ராக்ஷஸன், तपसा - தவத்தினால், प्रीतम् - மகிழ்ந்த, धातारम् - பிரம்மாவை, मर्त्येषु - மனிதர்களிடத்தில், आस्था-पराङ्मुखः - மதிப்பு அற்றவனாக, दैवात् - தெய்வத்தன்மை கொண்ட, सर्गात् - (எட்டு வகை) சிருஷ்டியிலிருந்து, अवध्यत्वम् - (தனக்குக்) கொல்லப்படாமையை, ययाचे हि - வேண்டினான்.

(க-து) 'தவத்தினால் சந்தோஷமடைந்த பிரம்மா அவனெதிரில் தோன்றியதும், ராவணன், மனிதர் தன்னைக்கொல்ல இயலாதென நினைத்து அவர்களிடம் அலக்ஷிய புத்தி கொண்டவனாய், தேவஸ்ருஷ்டியைச்சேர்ந்த மற்றவரால் தான் கொல்லப்படுதல் கூடாது என வரம் வேண்டினான்.

(1) विबुधाः, (2) पितरः, (3) असुराः, (4) गन्धर्वाप्सरसः (5) यक्ष रक्षांसि, (6) भूत प्रेत पिशाचाः, (7) सिद्धचारणविद्याधराः, (8) किन्नरादयः - என்ற இவ்வெண்மரும் தேவஸ்ருஷ்டியைச் சேர்ந்தவர்.

" सुपर्णनागयक्षाणां दैत्यदानवरक्षसाम् ।
अवध्योऽहं प्रजाध्यक्ष देवतानां च शाश्वत ॥
न हि चिन्ता ममान्येषु प्राणिष्वमरपूजित ।
तृणभूता हि ते मन्ये प्राणिनो मानुषादयः ॥ "

என்பன ராவணன் கேட்ட வரத்தைத் தெரிவிப்பன.

सोऽहं दाशरथिर्भूत्वा रणभूमेर्बलिक्षमम् ।
करिष्यामि शरैस्तीक्ष्णैस्तच्छिरः कमलोच्चयम् ॥ ४४ ॥

'सः-அத்தகைய, अहम्-நான், दाशरथिः-தசரதர் மகனாக, भूत्वा-தோன்றி, तीक्ष्णैः-கூரான, शरैः-பாணங்களால், तच्छिरः-कमल-उच्चयम् - அவ்விராவணனின் தலைகளாகிற தாமரைகளின் தொகுதியை, रण भूमेः-யுத்தகளத்தின், बलिक्षमम् - பூஜைக்குரியதாக, करिष्यामि - செய்யப் போகிறேன்.

(க-து) 'நான் தசரத சக்ரவர்த்தியின் மகனாக (மனிதனாக)ப் பிறந்து இராவணனின் தலைகளை என் அம்புகளால் கொய்யப்போகிறேன்.

இதனால் பகவான், தாம் இனிச் செய்ய உத்தேசித்துள்ளதைக் கூறினார். யுத்தபூமியில் தலைகளை வீழ்த்துதலைப் பூஜையாகக் கருதி அதற்கேற்ப ராவணனது தலைகளைத் தாமரை மலர்களாகக் கூறினார்.

अचिराद्यज्वभिर्भागं कल्पितं विधिवत् पुनः ।
मायाविभिरनालीढमादास्यध्वे निशाचरैः ॥ ४५ ॥

'यज्वभिः -யாகம் செய்பவர்களால், विधिवत्-சாஸ்திரப்படி, कल्पितम् - தரப்பட்ட, भागम्-(ஹவிஸின்) பகுதியை, मायाविभिः-மாயம் வல்ல, निशाचरैः-ராக்ஷஸர்களால், अनालीढम् - ருசிபார்க்கப்படாதபடி, अचिरात् - சீக்கிரத்தில், पुनः-மறுபடியும், आदास्यध्वे - ஏற்றுக்கொள்ளப் போகிறீர்கள்,

(க-து) 'இனி யாகஞ் செய்பவர்கள் தரும் ஹவிர்ப் பாகம் உங்களையே வந்தடையும், நான் இராமனுக வந்து ராக்ஷஸர்களை வதம் செய்து விடப் போவதால் அவர்களால் இடையில் ஏதும் இடையூறு நேராது.

**अनालीढम्** - என்பதால், ஹவிஸை இடையிலே பறிக்கின்ற அரக்கர்கள், நக்கித்தின்கின்ற நாய்கள் போலுள்ளனர் என்பது குறிப்பிடப்பட்டது.

> वैमानिकाः पुण्यकृतस्त्यजन्तु मरुतां पथि ।
> पुष्पकालोकसंक्षोभं मेघावरणतत्पराः ॥ ४६ ॥

'**मरुताम्**-காற்றுக்களின், **पथि**-வழியில் (வானவீதியில்), **वैमानिकाः** - விமானத்தில் சஞ்சரிப்பவர்களும், **मेघ आवरण-तत्पराः** - (ராவண பயத்தினுல்) மேகங்களில் மறைந்து கொள்ள விரைபவர்களுமான, **पुण्यकृतः** - புண்ணியஞ் செய்தோர் (தேவர்கள்), **पुष्पक-आलोक - संक्षोभम्** - புஷ்பகவிமானத்தைக் காண்பதால் ஏற்படும் மனக்கலக்கத்தை, **त्यजन्तु** - விடட்டும்.

(க-து) 'யாகம் முதலானவற்றைச் செய்த மனிதர், அப்புண்ணியத்தினுலே தெய்வத்தன்மை எய்தி விச்வேதேவர் என்ற பெயருடன் வானவீதியில் செல்வதற்குரியராகி ஸஞ்சரிக்கின்றனர். ஆனுல் புஷ்பகவிமானத்தில் வானத்தில் உலவும் ராவணனைக் காணவும் அவர்கள் அச்சமுற்று மேகங்களில் மறைந்து கொள்ளுகின்றனர். இனி அவர்கள் அவ்வாறு மறையவேண்டியதில்லை. ராவணன் சீக்கிரத்திலேயே அழியப்போகிருன்.

புஷ்பகவிமானம் குபேரனுடையது. தெய்வத்தன்மை பொருந்தியது. நினைத்த விடத்திற்குச் செல்லும் சக்தி வாய்ந்தது. குபேரனிடமிருந்து ராவணனுல் பலாத்காரமாகக் கைப்பற்றப் பட்டது. **मरुताम्**-'தேவர்களின்' என்றும் பொருள் கொள்ளலாம். பிறவியிலேயே தேவர்களாயுள்ள

வர், आजानदेவர்களாவர். புண்யங்களைச் செய்து தெய்வத் தன்மை பெற்றவர்கள் कर्मदेவர்கள் என அழைக்கப்படுவார்கள். இங்கு கூறப்பட்டவர் कर्मदेவர்கள். இவர்கள் ஆஜாந தேவர்களைக் காட்டிலும் ராவணனிடம் அதிகமாகப் பயந்தனர். காரணம், ராவணனுடைய உபத்திரவத்தில் அதிக அனுபவம் பெற்றிராமையே.

मोक्ष्यध्वे स्वर्गबन्दीनां वेणीबन्धानदूषितान् ।
शापयन्त्रितपौलस्त्यबलात्कारकचग्रहैः ॥ ४७ ॥

'शाप-यन्त्रित पौलस्त्य-बलात्कार-कचग्रहैः-(நளகூபர)சாபத்தினால் அடக்கப்பட்டுள்ளவனான ராவணனாலே பலாத்காரமாய்க் கூந்தலைப் பற்றுதலினால், अदूषितान्-கெடுக்கப்படாத, स्वर्ग - बन्दीनाम् - சிறைப்படுத்தப்பட்ட ஸ்வர்க்க ஸ்த்ரீகளுடைய, वेणी बन्धान्-கூந்தல்களின் பின்னல்களை, मोक्ष्यध्वे, விடுவிக்கப் போகிறீர்கள்.

(க-து) 'ராவணன், பெண்களைப் பலாத்காரஞ் செய்வதில்லை. அப்படிச் செய்தால் அவன்தலை சிதறிவிடும் எனச்சாபமுள்ளது. அதனால் சுவர்க்கத்தில் வசிக்கும் பெண்கள் சிறைப்படுத்தப்பட்டிருந்தபோதிலும் அவர்கள் கெடுக்கப்படவில்லை. ஆயினும் அவர்களுடைய காதலர்களாகிய நீங்கள் (தேவர்கள்), அவர்களுடனில்லாமையால் தேவமகளிர் தங்கள் கூந்தலை வாரிமுடியாமல் முதலிலிட்டபின்னலுடன் இருக்கின்றனர். இனி நான் ராவணனை அழித்துவிடப் போவதால், நீங்கள் அச்சமின்றி அப்பெண்களுடன் பழகி அவர்களது கூந்தலுக்கு அணிசெய்வித்து மகிழப் போகின்றீர்கள்'

நற்பெண்டிர் கணவரை விட்டுப் பிரிந்தகாலத்தில் தங்களை அலங்கரித்துக் கொள்ளார்.

ராவணனுக்குள்ள சாபமாவது.

நளகூபரன் என்பவன் ராவணனுடைய அண்ணனாகிய குபேரன் மகன். ஒரு சமயம் ராவணன் கைலாய மலையில்

ஓரிரவு தங்கியிருந்தான். அச்சமயம் ரம்பை என்னும் தேவப்பொதுமகள் நளகூபரனைச் சந்திக்கச் சென்றாள். அவளைக்கண்ட ராவணன் தனக்கிணங்குமாறு அவளைக் கேட்க, ரம்பை, அவனது அண்ணன் மகனிடம் செல்லுகின்றதால், தான் அவனது (ராவணனுடைய) நாட்டுப் பெண்ணுக்குச் சமமானவள் என்று கூறியும் அதைக் கேளாது பலாத்காரமாகக் கற்பழித்தான். கோபத்தோடும் வெட்கத்தோடும் நளகூபரனிடம் சென்று ரம்பை நடந்ததைக்கூற, அவன் 'இனி ராவணன் தன்னிடம் விருப்பமில்லாத பெண்களைப் பலாத்காரம் செய்தால் அவன் தலை வெடித்துப்போகும்' எனச் சபித்தான்.

'उत्ससर्ज तदा शापं राक्षसेन्द्राय दारुणम्।
यदाह्यकामां कामार्तो धर्षयिष्यति योषितम्॥
मूर्धा तु सप्तधा तस्य शकली भविता तदा॥"

என்பது நளகூபரனின் சாபவாக்கியம். (உத்தரகாண்டம், ஸர்க்கம் 27) 'शापयन्त्रित' - இச்சாபத்தினால் ராவணன் பெண்களை வலுவிலடைவதினின்றும் தடுக்கப்பட்டுள்ளான். 'बलात्कारकचग्रहैः': - ராவணன் பலாத்காரமாகப் பெண்களின் கூந்தலைப்பற்றலாமேயன்றிப் பெண்களின் கற்பைஅவர்களது உடன்பாடின்றிக் கெடுத்தல் முடியாது. कचग्रहैःअदूषितान्- கூந்தலில் பிடித்தல் மாத்திரமே இருப்பதால் அவர்களது கற்பு கெடுக்கப்படவில்லை. ஆதலால் சிறையினின்றும் மீட்கப் பட்ட பெண்களைத் தேவர்கள் ஏற்றுக்கொள்ளலாம் என்பதும் உணர்த்தப் பட்டது.

रावणावग्रहक्लान्तमिति वागमृतेन सः।
अभिवृष्य मरुत्सस्यं कृष्णमेघस्तिरोदधे ॥ ४८ ॥

**सः** - *அந்த,* **कृष्णमेघः** - *விஷ்ணுவாகிய மேகம்,* **रावण-अवग्रह-क्लान्तम्** - *ராவணனாகிய மழையின்மையினால் வாடிய,* **मरुत्सस्यम्** - *தேவர்களாகிய பயிரை,* **इति** - *இவ்வாறு,* **वाग्-अमृतेन** - *பேச்சாகிய நீரினால்,* **अभिवृष्य** - *வர்ஷித்து (மகிழ்வித்து),* **तिरोदधे** - *மறைந்தது.*

*(க-து) நீரின்றி வாடிய பயிர்களை மேகம் மழையினால் நலமுறச் செய்வது போல, ராவணனால் துன்புறுத்தப்பட்டுச் சோர்ந்து நிற்கும் தேவர்களைப் பகவான் விஷ்ணு, தன் பேச்சினால் களிப்புறச் செய்து மறைந்தார்.*

*விஷ்ணுவை மேகமாகவும், ராவணனை வறட்சியாகவும், தேவர்களைப் பயிர்களாகவும், பகவானது சொல்லை மழை நீராகவும் உருவகம் செய்துள்ளார்.*

पुरुहूतप्रभृतयः सुरकार्योद्यतं सुराः ।
अंशैरनुययुर्विष्णुं पुष्पैर्वायुमिव द्रुमाः ॥ ४९ ॥

**पुरुहूत प्रभृतयः** - *இந்திரன் முதலிய,* **सुराः** - *தேவர்கள்* **सुर-कार्य - उद्यतम्** - *தேவர்களின் காரியத்தில் முயற்சியுடனுள்ள,* **विष्णुम्** - *விஷ்ணுவை,* **अंशैः** - *(தங்களது) அம்சங்களால்,* **द्रुमाः** - *மரங்கள்,* **पुष्पैः** - *(தம் அம்சங்களாகிய) மலர்களால்,* **वायुम् इव** - *காற்றைத்தொடர்வது போல,* **अनुययुः** - *பின்பற்றினர்.*

*(க-து) தேவர்களின் துயரைத் துடைப்பதற்காக முயற்சி எடுத்துக் கொண்டுள்ள விஷ்ணு தசரதர்மகனாக அவதரித்தார். அவருக்குத் துணைபுரிய இந்திரன் முதலிய மற்ற தேவர்கள் தங்களது மஹிமையின் ஒரு பகுதியுடன் வாலி, ஸுக்ரீவன் முதலிய வானரர்களாகத் தோன்றினர். மரங்கள் தாமிருந்த இடத்திலேயே நிற்கின்றன. ஆயினும் காற்று வீசும்பொழுது மரங்களிலுள்ள மலர்கள் உதிர்ந்து சிறிது தூரம் காற்றிலே செல்லுகின்றன. அதனால் காற்றிற்கு வாசனை என்ற குணம் ஏற்படுகின்றது. புஷ்பங்கள் மரங்களது*

ஒரு அம்சமே [ஒருபகுதியே]. மரங்கள் தஙகளது அம்சமான புஷ்பங்களால் காற்றைப்பின் தொடர்வது போல் தேவர்களும் விஷ்ணுவைப் பின் தொடர்ந்தனர்.

புஷ்பங்கள் காற்றில் செல்வதை மரங்கள் பின்தொடர்வதாகக் கூறினர். புஷ்பங்கள் காற்றிற்கு வாஸனை யளிப்பது போல் தேவர்கள் விஷ்ணுவிற்கு உதவியளித்தனர் என்பதும், மரங்கள் நின்ற இடத்தில் இருப்பது போல் வானரராய்ப் பிறந்தாலும் ஸ்வர்க்கத்தில் இந்திராதிகள் தம்வடிவுடன் இருந்துகொண்டுமிருந்தனர்; தேவலோகம் தேவர்களற்றதாகவில்லை என்பதும் உவமையாற்பெறப்படும்.

अथ तस्य विशांपत्युरन्ते काम्यस्य कर्मणः ।
पुरुषः प्रबभूवाग्नेर्विस्मयेन सहर्त्विजाम् ॥ ५० ॥

**अथ** - பிறகு, **तस्य** - அந்த, **विशां पत्युः** - பிரஜைகளின் தலைவராகிய தசரதரின், **काम्यस्य कर्मणः** - விரும்பியதைத் தரும்யாகத்தின் (புத்திரகாமேஷ்டியின்), **अन्ते** - முடிவில், **अग्नेः** - தீயிலிருந்து, **पुरुषः** - புருஷன் ஒருவன், **ऋत्विजाम्** - யாகம் செய்து வைப்பவரின், **विस्मयेन सह**-ஆச்சரியத்துடன் கூட, **प्रबभूव** - தோன்றினன்.

(க-து) அயோத்தியில் தசரதர் புத்திரகாமேஷ்டி என்னும் யாகத்தைச்செய்தார். அவ் யாகத்தின் முடிவில் ஹோமத் தீயினின்றும் திவ்ய புருஷன் ஒருவன் தோன்றினன் அதைக்கண்டு யாகஞ் செய்து வைக்கும் ரித்விக்குகள் ஆசசரியமடைந்தனர்.

**काम्यकर्म**-ஒரு பயன் கருதிச்செய்யப்படுகின்ற யாகாதிகள். இங்கே புத்திரகாமேஷ்டி: '**ऋत्विजां विस्मयेन**' - என்றதால், 'திவ்யபுருஷனது தோற்றம், தசரதருக்கு ஆச்சரியம் விளைவிக்கவில்லை. ஏனெனில் மஹர்ஷிகளின் மந்த்ரபலத்தில் நம்பிக்கையுடையவராதலால் அவர் இதை ஸம்பவிக்கக்

கூடாத ஒன்ருகக் கருதவில்லை என்பதும், மஹாஸத்வர் என்பதும் குறிப்பிடப்படுகிறது.

हेमपात्रगतं दोर्भ्यामादधानः पयश्चरुम् ।
अनुप्रवेशादाद्यस्य पुंसस्तेनापि दुर्वहम् ॥ ५१ ॥

**आद्यस्य पुंसः** - ஆதி புருஷனை விஷ்ணுவின், **अनुप्रवेशात्** - உட்பிரவேசிப்பினல், **तेन अपि** - அந்த தெய்வத்தன்மை பொருந்திய புருஷனலும், **दुर्वहम्** - சுமக்கமுடியாததும், **हेम-पात्र-गतम्** - பொன்னலான பாத்திரத்திலுள்ளதுமான, **पयश्चरुम्** - பாலில் சமைக்கப்பட்ட அன்னத்தை, **दोर्भ्याम्** - இருகைகளால், **आदधानः** - எடுத்துக்கொண்டு, **(प्रबभूव)**- தோன்றினன்.

(க-து) உலகத்தின் முதல்வராகிய விஷ்ணு உட்பிரவேசித்திருந்ததால் கனமாயுள்ள அப் பாயஸத்தை ஒரு பொற்கலசத்தில் எடுத்துக் கொண்டு அப் புருஷன் யாகத்தீயின் மத்தியிலிருந்து தோன்றினன். இப்பாயஸம் உலகம் யாவற்றையும் தாங்கும் பரம புருஷரான விஷ்ணுவினது அம்சமுடையதாயிருந்ததால், திவ்ய புருஷனுக்கும் அப்பாயஸம் தாங்குவதற்குக் கனமாகவிருந்தது.

'வெள்ளி மூடியையுடையதும் திவ்யபாயஸத்தினல் நிறைந்ததுமான ஸ்வர்ணபாத்திரத்தைக் கொண்டு வந்தான் பிராஜாபத்யபுருஷன்' என ராமாயணம் கூறுகின்றது.
**चरुः** - கஞ்சிவடிக்கப்படாது சமைக்கப்பட்ட அன்னம்.

प्राजापत्योपनीतं तदन्नं प्रत्यग्रहीन्नृपः ।
वृषेव पयसां सारमाविष्कृतमुदन्वता ॥ ५२ ॥

**उदन्वता** - ஸமுத்ரத்தினல், **आविष्कृतम्**-தோற்றுவிக்கப்பட்ட, **पयसां सारम्** - பாலின் ஸாரமாகிய அம்ருதத்தை, **वृषा इव** - இந்திரன் (வாங்கிக்கொண்டது) போல், **नृपः** - அரசர் தசரதர், **प्राजापत्य-उपनीतम्** - விஷ்ணுவைச் சேர்ந்த

புருஷனால் கொண்டுவரப்பட்ட, तत् अन्नम् - அப்பாயஸான்னத்தை, प्रत्यग्रहीत् - ஏற்றுக்கொண்டார்.

(க-து) முன்னொருகாலத்தில் தேவர்களும் அஸுரர்களும் பாற்கடலைக்கடைய, அதனின்றும் பாலின் ஸாராம்சமான அம்ருதத்தைத் தந்வந்தரி பகவான் கொண்டுவரவும், அதை இந்திரன் வாங்கிக் கொண்டான். அது போல், விஷ்ணுவைச் சேர்ந்த அத் திவ்ய புருஷன் தந்த பாயஸத்தைத் தசரதர் பெற்றுக் கொண்டார்.

கடலிலிருந்து அம்ருதம் தோன்றியதும் அதை இந்திரன் முதன்முதல் வாங்கிக்கொண்டதாகப் புராணங்களில் கூறப்படவில்லை. தந்வந்தரியிடமிருந்த அம்ருதகலசத்தை அரக்கர்கள் பிடுங்கிக்கொண்டதாகக் கூறப்பட்டுள்ளது. 'तमालोक्यासुराः सर्वे कलशं चामृताप्लुतम्। लिप्सन्तः सर्ववस्तूनि कलशं तरसाहरन् ॥' என ஸ்ரீ பாகவதம் கூறும். கவிகள் தமது இஷ்டப்படி மாற்றிக் கூற உரிமை பெற்றுள்ளதால் காளிதாஸர், இந்திரன் அம்ருதகலசத்தை வாங்கிக்கொண்டதாக உரைத்தார். அமிருதத்துடன் ஒப்பிடப்பட்டதால் பாயஸத்தின் இனிமையும், பெரும்பயன் விளைவிக்கும் தன்மையும் விளங்கும்.

अनेन कथिता राज्ञो गुणास्तस्यान्यदुर्लभाः ।
प्रसूतिं चकमे तस्मिंस्त्रैलोक्यप्रभवोऽपि यत् ॥ ५२ ॥

यत्-எதனால், त्रैलोक्य-प्रभवः अपि - மூன்று உலகங்கட்கு காரணமான விஷ்ணுவும், तस्मिन् - அவ்வரசரிடத்தில், प्रसूतिम् - பிறப்பை, चकमे - விரும்பினாரோ, अनेन - இதனால், तस्य राज्ञः - அவ்வரசரின், अन्यदुर्लभाः - பிறரிடம் (காணுதற்கு) அரிதான, गुणाः - நற்குணங்களனைத்தும், कथिताः - கூறப்பட்டன.

(க-து) மஹாவிஷ்ணு தசரதரைத் தந்தையாக ஏற்று, அவருக்கு மகனாகப் பிறந்தார் என்பதே, அத்தசரதர் மிக்க நற்குணங்

களையுடையவர் என்பதைப் பரக்கக் கூறுகின்றது. ஆகவே அவரது குணங்களைத்தனியே எடுத்துக் கூறவேண்டிய அவசியமில்லை.

**अन्यदुर्लभाः** - மற்றவரிடம் காணப்பெறாத குணச் சிறப்பை உடையவர் தசரதர். மூவுலகிற்கும் காரணனான விஷ்ணுவிற்கும் காரணனாக இருத்தல் என்பது எல்லோருக்கும் கிட்டாதது எனினுமாம். **'पितरं रोचयामास तदा दशरथम नृपम्'** என விஷ்ணு, தசரதரைத் தமக்குத் தந்தையாக ஏற்றதை ஸ்ரீமத் ராமாயணம் கூறும்.

स तेजो वैष्णवं पत्न्योर्विभेजे चरुसंज्ञितम् ।
द्यावापृथिव्योः प्रत्यग्रमहर्पतिरिवातपम् ॥ ५४ ॥

**सः** - அத்தசரதர், **चरुसंज्ञितम्** - சரு என்னும் பெயரை உடைய, **वैष्णवम्** - விஷ்ணுவினது, **तेजः**-தேஜஸை, **पत्न्योः**- (கௌஸல்யைகேகேயிஎன்ற) இருமனைவியருக்கும், **अहर्पतिः**- சூரியன், **द्यावा पृथिव्योः** - ஆகாயம், பூமி இவைகளுக்கு, **प्रत्यग्रम्** - புதிய, **आतपम् इव**-வெய்யிலைப் (பகிர்ந்து தருவது) போல, **विभेजे** - பகிர்ந்தார்.

(து-க) சூரியன் காலையில் தன் இளம் வெய்யிலை ஆகாயத்திற்கும் பூமிக்குமாகப் பகிர்ந்தளிக்கின்றான் அதைப்போல தசரதர் தமது மனைவியரான கௌஸல்யை கைகேயி என்பவருக்கு விஷ்ணுவின் அம்சங்கொண்ட அப்பாயஸத்தைப் பகிர்ந்தளித்தார்.

சருவை **तेजः** - என்றதால், அதற்கேற்ப சூரியனது ஒளியை உவமையாகக் கொண்டார். வெய்யில், பூமி ஆகாயம் இரண்டிலும் பரவி உலகத்தை ஒளியுடையதாகச் செய்வது போல் சருவினால் அவ்விருவரும் மகிழ்ச்சியும் பிரகாசமும் பெற்றனர் என்பதும் பெறப்படும். **तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति** என்று கூறியுள்ளபடி ஸூர்யனுக்கும் ஒளி தருபவர் பகவானேயாதலைக் காண்க.

अर्चिता तस्य कौसल्या प्रिया केकयवंशजा।
अतः संभावितां ताभ्यां सुमित्रामैच्छदीश्वरः ॥ ५५ ॥

. **तस्य**-அத்தசரதரால், **कौसल्या**-கௌஸல்யை, **अर्चिता** - (மூத்த மனைவியாதலால்) மதிக்கப்படுபவள்; **केकयवंशजा** - கேகயவம்சத்தில் பிறந்த கைகேயி, **प्रिया** - பிரியமானவள்; **अतः** - ஆகையினால், **ईश्वरः** - கணவர் தசரதர், **सुमित्राम्** - ஸுமித்திரையை, **ताभ्यां** - (கௌஸல்யை கைகேயி ஆகிய) அவ்விருவராலே, **संभाविताम्** - (பாயஸத்தின் பங்கு தருவதால்) பெருமைப் படுத்தப் பட்டவளாக (ச்செய்ய), **ऐच्छत्** - விரும்பினார்.

(க-து) கௌஸல்யை மூத்த மனைவியாதலாலும், கைகேயி பிரியமான மனைவியாதலாலும், தசரதர் பாயஸான்னத்தை இரு கூறுகப்பகிர்ந்து அவ்விருவரிடமளித்தார். இதனால் ஸுமித்ரையை அவர் அலக்ஷ்யம் செய்தார் என்பதில்லை. கௌஸல்யை, கைகேயி இருவரும் அவர்களாகவே தமது இரண்டாவது மனைவியான ஸுமித்ரைக்குப் பாயஸத்தைத் தந்து அவளைக் கௌரவிக்க வேண்டுமென விரும்பினர். அதனால் அவர் தாமே ஸுமித்ரைக்குப் பாயஸம் தரவில்லை

கணவனது மதிப்பைக் காட்டிலும் சக்களத்திகள் மதிப்பு பாராட்டுதற் குரியதாகும்.

ते बहुज्ञस्य चित्तज्ञे पत्न्यौ पत्युर्महीक्षितः।
चरोरर्धार्धभागाभ्यां तामयोजयतामुभे ॥ ५६ ॥

**बहुज्ञस्य** - மிக்க அறிவாளியும், **पत्युः** - கணவருமான, **महीक्षितः** - அரசருடைய, **चित्तज्ञे** - மனத்தை அறிந்த, **ते** - அந்த, **उभे पत्न्यौ** - இரு மனைவியரும், **चरोः** - சருவின் **अर्धार्धभागाभ्यां** - பாதிப்பாதி பகுதிகளுடன், **ताम्** - அந்த ஸுமித்ரையை, **अयोजयताम्** - இணைவித்தனர், (கூட்டுவித்தனர்).

(க-து) தசரதர் மிக்க அறிவுபடைத்தவர். எச்சமயத்தில்யாருக்கு எதைச் செய்யவேண்டு மென்பதை நன்கு அறிந்தவர். 'ஸுமித்திரைக்குப் பாயஸத்தைத்தாமே நேரில் தரவேண்டாம்; மற்ற இருவருக்கும் கொடுத்து, அவர்களாக ஸுமித்ரைக்குத் தரவேண்டும்'' எனநினைத்திருந்தார். தசரதரின் இவ்வெண்ணத்தை அறிந்த கௌஸல்யையும் கைகேயியும் தங்களுக்குத் தசரதர் கொடுத்த பாகத்திலிருந்து பாதிப்பாதியை ஸுமித்திரைக்குக்கொடுத்தனர்; இவ்வாறு கால்பாகம் கௌஸல்யைக்கும், கால்பாகம் கைகேயிக்கும், அரைப் பாகம் (இரண்டு காற்பங்கு) ஸுமித்திரைக்கும் கிடைத்தது.

**अयोजयताम्** - பிறவினை; தசரதரைக்கொண்டு கொடுப்பித்தனர்.

காளிதாஸர் கூறுகின்ற இப்பாயஸப்பாகுபாட்டிற்கும் வால்மீகி முனிவர் கூறியதற்கும் வேறுபாடுள்ளது. 'கௌஸல்யைக்குப் பாயஸத்தின் பாதியைக் கொடுத்தார். மிச்சமான பாயஸத்திற் பாதியை [அதாவது மொத்தத்தின் நான்கில் ஒரு பங்கை] ஸுமித்ரைக்குக் கொடுத்தார். பின்பு மிச்சமான பாயஸத்தில் பாதிப் பகுதியை [மொத்தத்தின் எட்டிலொருபகுதியை]க் கைகேயிக்குக் கொடுத்தார். பின் கைகேயியைக் காட்டிலும் ஸுமித்ரை மூத்தவள் என்பதை யோசித்து மிச்சமான பகுதியை ஸுமித்ரைக்கே தசரதர் அளித்தார்' என ராமாயணத்தில் கூறியுள்ளது.

பாயஸத்தைச் சரி அளவுள்ள மூன்று பாகமாகப் பிரித்து மூவருக்கு மளிக்காது பாகங்களை ஏற்றத் தாழ்வுள்ளனவாகச் செய்து மனைவியருக்கு அளித்த காரணம், மனைவியரின் வரிசை முறைபற்றி. கௌஸல்யை மூத்த மனைவி. அவளுக்கு அடுத்தவள் ஸுமித்ரை. மூன்றாமவள், வயதிலும் இளையவள் கைகேயி. ஆதலால் மூன்று மனைவியருக்குமிடையேயுள்ள தாரதம்யத்தைக் கண்டு தசரதர், பாயஸத்தின் பாதியைக் கௌஸல்யைக்கும் காலே அரைக்காற் பங்கு

பாயஸத்தை ஸுமித்ரைக்கும், அரைக்காற் பங்கைக் கை கேயிக்கு மளித்தார் என்பர்.

காளிதாஸர், வால்மீகி கூறிய முறையை அனுசரிக்காது அத்யாத்ம ராமாயணம் கூறிய வகையைப் பின் பற்றிக் கூறியுள்ளார். அதன்படி பாயஸத்தில் காற்பங்கு கௌஸல்யைக்கும், காற்பங்கு கைகேயிக்கும், மற்றும் இரண்டு காற்பங்குகள் ஸுமித்ரைக்கும் கிடைககின்றன. '**कौसल्यायै स कैकेय्यै अर्धमर्धं प्रयत्नतः। ततः सुमित्रा संप्राप्ता जगृध्नुः पौत्रिकं चरुम्। कौसल्या तु स्वभागार्धं ददौ तस्यै मुदान्विता। कैकेयी च स्वभागार्धं ददौ प्रीतिसमन्विता।**' [அத்யாத்ம ராமாயணம்.]

பாயஸத்தின் காற்பகுதிக்கு ஒரு மகன் வீதம் புத்திரர்கள் இருக்க வேண்டுமென அத்யாத்மராமாயணம் கருதியது போலும்.

सा हि प्रणयवत्यासीत् सपत्न्योरुभयोरपि ।
भ्रमरी वारणस्येव मदनिस्यन्दरेखयोः ॥ ५७ ॥

**भ्रमरी** - பெண்வண்டு, **वारणस्य** - யானையின், **मद-निस्यन्दरेखयोः इव** - (கன்னங்களிலுள்ள) மதஜலத்தின் இரு தாரைகளிலும் (ஆசையுடையதாக இருப்பது) போல், **सा**- அந்த ஸுமித்ரை, **उभयोः** - இரண்டு, **सपत्न्योः अपि** - சக்களத்திகளிடத்தும், **प्रणयवती**-அன்புடையவளாக, **आसीत् हि** - இருந்தாள்.

(க-து) யானையின் இரு கன்னங்களிலிருந்து ஒழுகும் மதஜலம் வாசனையுடையதாக விருக்கும். அதைநாடி வண்டு வரும். அவ்வண்டு ஒரு கன்னத்திலிருந்து பெருகும் மதஜலத்தைத் தான் விரும்பும் என்பதில்லை. அதைப்போல ஸுமித்திரை, தன் சக்களத்திகளான கௌஸல்யை ஸுமித்திரை இருவரிடமும் சமமான அன்புள்ளவளாக

இருந்ததால், இருவருக்கும் பிரியமானவளாக விருந்தாள். அதனால் கௌஸல்யை கைகேயி இருவருமே அவளுக்குத் தங்களது பாயஸான்னத்தில் பங்களித்தனர்.

तामिर्गर्भः प्रजाभूत्यै दध्रे देवांशसंभवः ।
सौरीभिरिव नाडीभिरमृताख्याभिरम्मयः ॥ ५८ ॥

**ताभिः**- அக்கௌஸல்யை முதலிய மூவராலும், **प्रजाभूत्यै**- குடிகளின் நன்மைக்காக, **देवांश - संभवः** - தேவரான விஷ்ணுவின் அமிசத்தைக் காரணமாக உடைய, **गर्भः**-கர்ப்பமானது, **सौरीभिः**-ஸௌரியனுடைய, **अमृताख्याभिः**-'அம்ருதா' என்று பெயருடைய, **नाडीभिः** - கிரணங்களால், **अम्मयः**- ஜலமயமான, **(गर्भः) इव** - கர்ப்பம் (தரிக்கப் படுவது) போல, **दध्रे** - தரிக்கப்பட்டது.

(க-து) சூரியனுடைய கிரணங்கள், நீரை ஏற்று வைத்துக் கொள்வதால் நாடிகள் என்று கூறப்படுகின்றன. அந்த நாடிகளுக்கு 'அம்ருதா' என்று பெயர். உலகமக்களுக்கு நன்மையைச்செய்வதற்கே அவைகள் நீராகிய கர்ப்பத்தைத் தரிக்கின்றன. அதுபோல் சூரியனை ஒத்த தசரதரின் மனைவியர் மூவரும், உலகத்தின் நன்மைக்காக கர்ப்பந்தரித்தனர். அந்தக் கர்ப்பங்கள் கடவுளாகிய விஷ்ணுவின் அம்சங்களாலானவை. கௌஸல்யை முதலியோருக்கு உண்டாகப் போகும் புத்ரர்கள் உலகத்திற்கு க்ஷேமத்தைச் செய்யப் போகின்றனர் என்பது உவமையால் பெறப்படும்.

**नाडी** - குழல்: குழலால் நீரை உறிஞ்சுவது போல் சூரியனது கிரணங்கள் ஜலத்தை ஆவியாக மாற்றுவதால் அவை நாடிகள் எனப்பட்டன. ஆவி நீருண்ட மேகமாக மாறுவதால், ஆவிக்குங்காரணமான ஸௌரியகிரணங்கள் ஜலமயமான கர்ப்பத்தைத் தரித்ததாகக் கூறினார். தசரதருக்குச் சூரியனும், மனைவியருக்குக் கிரணங்களும் உபமானம். **देवांशसंभवः** - 'விஷ்ணுவின் அமிசத்தாலுண்டான' என்றும் கொள்ளலாம். **गर्भः**-கர்ப்பத்தைப் பொதுவாகக் குறித்ததால்

'கர்ப்பங்கள்' என்று பன்மையில் கூறாது ஒருமையில் கூறினர்.

सममापन्नसत्त्वास्ता रेजुरापाण्डुरत्विषः ।
अन्तर्गतफलारम्भाः सस्यानामिव संपदः ॥ ५९ ॥

**समम्** - ஒரேகாலத்தில், **आपन्न-सत्त्वाः** - கர்ப்பத்தை யடைந்தவர்களும், **आपाण्डुर-त्विषः** - சிறிது வெண்மையான நிறமுடையவர்களுமான, **ताः** - அம் மனைவியர் (மூவரும்), **अन्तर्गत फलारंभाः** - உள்ளே மறைந்துள்ள தான்யத் தோற்ற முடைய, **सस्यानाम्** - பயிர்களின், **संपदः इव** - மிகுதி போல, **रेजुः** - விளங்கினர்.

(க-து) கௌஸல்யை, ஸுமித்திரை, கைகேயி ஆகிய மூவரும் ஒரேகாலத்தில் கருவுற்றனர். கருவுற்றதால் அவர்களுடைய உடல் சற்றே வெளிறியது. கருவுடனும் வெண்ணிறத்துடனுமிருந்த அம் மூவரும், தொண்டையிலே கதிரையுடையதாய் நன்கு வளர்ந்துள்ள நெற்பயிர் போல் இருந்தனர். கதிர்கள் வெளியே தெரியாமல் வளர்ந்துள்ள பயிரும் பசுமை மாறி வெண்மை நிறங்கொள்ளும்.

கருவுற்ற மனைவியருக்குத் தொண்டையிலே கதிர்உள்ள நெற்பயிரும், கருவுக்கு-வெளிவராது மறைந்துள்ள நெற் கதிரும் உவமை. **सस्य** - என்பது பயிர்களுக்குப் பொதுப் பெயராயினும் இடப்பொருத்தம் கருதி, நெற்பயிர் எனப் பொருள் கொள்ளவேண்டும். இவ்வாறே, **फलम्** என்பதும் நெல் அல்லதுநெற்கதிர் என்ற பொருளுடையதாயிற்று. **संपदः**-செல்வம்; இங்கே 'மிகுதியான', என்பது பொருள்.

गुप्तं ददृशुरात्मानं सर्वाः स्वप्नेषु वामनैः ।
जलजासिगदाशार्ङ्गचक्रलाञ्छितमूर्तिभिः ॥ ६० ॥

**सर्वाः**:-கௌஸல்யை முதலிய அனைவரும், **स्वप्नेषु** - கனவு களில், **जलज-असि गदा-शार्ङ्ग-चक्र-लाञ्छित-मूर्तिभिः** - சங்கம்

கத்தி, கதை, வில், சக்ரம் ஆகிய இவற்றால் அலங்கரிக்கப் பட்ட தேஹமுடையவர்களான, वामनैः-குள்ளமான மனித ரால், गुप्तम् - காக்கப்பட்டவர்களாக, आत्मानम् - தங்களை, ददृशुः - கண்டனர்.

(க-து) கௌஸல்யை முதலிய மூவரும், சங்கு, கத்தி, கதை, வில், சக்கரம் ஆகிய ஆயுதங்களைத் தரித்த குள்ளமான சில மனித ரால் தாங்கள் காக்கப்படுவதாகக் கனவுகண்டனர்.

மேலே கூறிய சங்கு முதலியவை விஷ்ணுவின் ஆயுதங் கள். அவைகளுக்கு முறையே பாஞ்சஜன்னியம் நந்தகம், கௌமோதகி, சார்ங்கம், ஸுதர்சனம் எனப் பெயர்கள். இது முதல் நான்கு சுலோகங்களில் அவர்கள் கண்ட கனவுகள் கூறப்படுகின்றன. இக்கனவுகளினின்றும் கர்ப்பத்திலுள்ள குமாரர்களின் பெருமை விளங்கும். वामनैः கருவைக்காத்த வர், பகவானது பஞ்சாயுதங்களின் அதிதேவதைகளாக இருக்கலாம். கௌஸல்யைமுதலியவர்க்கு அச்சமுண்டாதல் கூடாதென்பதால் குறுகிய வடிவினராகத் தோன்றினர் போலும்!

हेमपक्षप्रभाजालं गगने च वितन्वता ।
उह्यन्ते स्म सुपर्णेन वेगाकृष्टपयोमुचा ॥ ६१ ॥

हेम-पक्ष-प्रभा-जालम् - பொன்மயமான இரக்கைகளின் ஒளித்திரளை, वितन्वता-பரப்புகின்ற, वेग-आकृष्टपयोमुचा-வேகத் தினால் இழுக்கப்பட்டமேகங்களை உடைய, सुपर्णेन च ஸுபர்ண (கருட)னாலும், गगने-ஆகாயத்தில் (அவர்கள்), (स्वप्ने)-கனவில், उह्यन्ते स्म - சுமந்து செல்லப்பட்டனர்.

(க-து) விஷ்ணுவின் வாகனமாகிய கருடன், தங்களை ஆகா யத்தில் சுமந்து செல்வதாகக் கனவுகண்டனர். கருடனது இரக்கை கள் பொன்னிறம் பெற்றிருந்ததால் அவன் செல்லும்பொழுது ஆகா யத்தில் தனக்கு இருபுறத்திலும் ஒளியைப் பரப்பிக்கொண்டு சென்

ருன். வேகத்தினுல் மேகங்களெல்லாம் அவனைப் பின்பற்றிச் சென் றன.

**सुपर्णः**; **सु**-அழகிய, பலம் பொருந்திய, **पर्ण**-சிறகுடைய வன்: கருடன்; இந்திரனது வஜ்ராயுதத்தை மதிப்பதற்காக உதிர்த்த சிறகின் அழகைக்கண்டு வியந்து இப்பெயரைத் தேவர்கள் கருடனுக்கு அளித்தனர். '**एवमुक्त्वा ततः पत्रमुत्ससर्ज स पक्षिराट्। तदुत्सृष्टमभिप्रेक्ष्य तस्य पर्णमनुत्तमम्। हृष्टानि सर्वभूतानि नाम चक्रुर्गरुत्मतः। सुरूपं पत्रमालक्ष्य सुपर्णोऽयं भवत्विति॥' [महाभारत आदि अ ३३, श्लो २३ २४]** 13-ஆம் சுலோகஉரையையும் காண்க. **स्वप्ने**-என்பது ஸந்தர்ப் பங் கருதி வருவிக்கப்பட்டது.

बिभ्रत्या कौस्तुभन्यासं स्तनान्तरविलम्बिनम्।
पर्युपास्यन्त लक्ष्म्या च पद्मव्यजनहस्तया॥ ६२॥

**स्तनान्तरविलंबिनम्** - (தமது) திருமார்பில் தொங்கு கின்ற, **कौस्तुभन्यासम्** - கௌஸ்துப மணியாக அடைக்கலப் பொருளை, **बिभ्रत्या** - தரிக்கின்றவளும், **पद्म-व्यजन-हस्तया** - தாமரைப்புஷ்பமாகிய விசிறியைக் கையிலுடையவளுமான, **लक्ष्म्या च**-லக்ஷ்மியினுலும், **पर्युपास्यन्त** -(கனவிலே) உபசரிக் கப்பட்டனர்:

(க-து) லக்ஷ்மி தமது திருமார்பில் கௌஸ்துப மணி விளங்க, கையில் தாமரைப் புஷ்பமாகிய விசிறியை ஏற்றுத் தங்களை உப சரித்தது போல் கௌஸல்யை முதலானோர் கனவு கண்டனர்.

பகவான் தரித்திருந்த கௌஸ்துப ரத்தினம் லக்ஷ்மியி னிடம் காணப்பட்டதற்கு இரண்டு காரணங்களை உத்ப்ரே க்ஷிக்கின்றனர்: ஒன்று: அவர் பூமியில் அவதரிக்கப்போவ தால் அக்கௌஸ்துபத்தைப் பாதுகாத்துவரும்படி அடைக் கலப் பொருளாகக் கொடுத்திருக்கலாம். இரண்டாவது:

கணவர்கள், தமது அணிகளை மனைவியருக்கு அன்பினால் அணிவிப்பதுமுண்டு. அவ்வகையில் பகவான் தாம் அணிந்திருந்த கௌஸ்துபத்தை லக்ஷ்மிக்கு அணிவித்திருக்கலாம் என்பர். 'कौस्तुभमणेर्न्यासम् - विष्णोरालिङ्गनवशात् कौस्तुभ-मणिमुद्राम्-धारयन्त्या' என்பர் ஓர் உரைகாரர். காப்பத்தின் ஸௌகுமார்யத்தைக் கருதித் தாமரைமலரைக் கொண்டு வீசி லக்ஷ்மி உபசரித்தாள் என்க.

कृताभिषेकैर्दिव्यायां त्रिस्रोतसि च सप्तभिः ।
ब्रह्मर्षिभिः परं ब्रह्म गृणद्भिरुपतस्थिरे ॥ ६३ ॥

**दिव्यायाम्** - தேவலோகத்திலுண்டான, **त्रिस्रोतसि** - ஆகாய கங்கையில், **कृताभिषेकैः** - ஸ்நானம் செய்தவர்களும், **परम्** - சிறந்த, **ब्रह्म** - வேதத்தை (உபநிஷத்தை), **गृणद्भिः** - மெதுவாகப் பாராயணம் செய்து கொண்டிருப்பவருமான, **सप्तभिः** - ஏழு, **ब्रह्मर्षिभिः च** பிரம்மரிஷிகளாலும், **उपतस्थिरे**- உபசரிக்கப்பட்டனர்.

(க-து) ஆகாச கங்கையில் ஸ்நாநஞ் செய்தவரும், உபநிஷத்தைப் பாராயணஞ் செயது கொண்டிருப்பவருமான ஏழு பிரம்மரிஷிகளால் உபசரிக்கப் படுவது போலக் கனவு கண்டனர்.

**त्रि** - மூன்று, **स्रोतस्** - பிரவாக முடையது; கங்கை; **दिव्या** - என்று கூறியதால் மஹர்ஷிகள் மந்தாகினியில் ஸ்நாநம் செய்தனர் என்பது புலனாகும்.

கங்கை ஆகாயததிலிருந்து பூமிக்கு வந்து பாதாளத்திற்குச் செல்லுகிறது. இவ்வகையில் அது மூன்று பிரவாஹங்களையுடையதாகின்றது. ஆகாயத்திலிருக்கும்பொழுது மந்தாகினி என்றும், பூமியை அடைந்து பாகீரதி என்றும், பாதாளத்தில் சென்று போகவதீ என்றும் பெயர் பெறுகின்றது.

'परं ब्रह्म - பரம் பொருளை, गृणद्भिः-ஸ்துதிசெய்கின்ற' என்றுமுரைக்கலாம். பிரம்மரிஷிகள் ஸ்துதி செய்வதாகக் கூறுவதால் அதற்கேற்ப வேதத்திலே அதிகம் வழங்கப்படும் சொல்லான, गृणद्भिः-என்பதை உபயோகித்தார். 'स्तुवद्भिः- அல்லது जपद्भिः என்ற சொல்லை வைத்தாரில்லை. மரீசி, அங்கிரர், அத்ரி,புலஸ்த்யர் புலஹர். க்ரது, வஸிஷ்டர் என இவ்வெழுவரும் பிரம்மரிஷிகளாவர். கச்யபர், அத்ரி, பாரத்வாஜர், விச்வாமித்ரர், கோதமர்,ஜமதக்னி,வஸிஷ்டர் என இவர்களையும்ஸப்தரிஷிகள் எனக் கூறுவதுண்டு.

ताभ्यस्तथाविधान् स्वप्नाञ्छ्रुत्वा प्रीतो हि पार्थिवः।
मेने परार्ध्यमात्मानं गुरुत्वेन जगद्गुरोः ॥ ६४ ॥

पार्थिवः - அரசர் தசரதர், ताभ्यः-அவர்களிடமிருந்து, तथाविधान्-அத்தகைய स्वप्नान्-கனவுகளை,श्रुत्वा-கேட்டு, प्रीतः-மகிழ்ந்தவராக, आत्मानम् - தம்மை, जगद्गुरोः -உலகிற்குத் தந்தையான விஷ்ணுவிற்கும், गुरुत्वेन - தந்தையாயிருக்கும் நிலையால், परार्ध्यं - (எல்லோரிலும்) சிறந்தவராக, मेने हि - எண்ணினார்.

(க-து) தசரதர் தம் மனைவியர் கண்ட கனவுகளைக் கேட்டு மகிழ்ச்சி யடைந்தார். மனைவிகளின் கர்ப்பத்திலிருப்போர் விஷ்ணுவின் அம்சமுள்ளவர் என்பது இக்கனவுகளால் தெரிந்தது. ஆகவே உலகிற்கெல்லாம் காரணரான விஷ்ணுவிற்குத் தாம் தந்தையாகும் பேறு பெற்றிருத்தலை அறிந்து மற்றவர் எல்லோரைக் காட்டிலும் தம்மைச் சிறந்தவராகக் கருதினார்.

विभक्तात्मा विभुस्तासामेकः कुक्षिष्वनेकधा।
उवास प्रतिमाचन्द्रः प्रसन्नानामपामिव ॥ ६५ ॥

प्रसन्नानाम् - தெளிந்த, अपाम्-நீரின், (कुक्षिषु)-உள்ளே, प्रतिमा-चन्द्रः इव - சந்திரனது பிரதிபிம்பம் போல, एकः -

ஒருவரான, विभुः-விஷ்ணு, तासाम्-அக்கௌஸல்யை முதலி யவரின், कुक्षिषु - கர்ப்பங்களில், अनेकधा பல (நான்கு)வகை யாக,विभक्तात्मा-பிரிக்கப்பட்ட தன்மையுடையவராக, उवास- வசித்தார்.

(க-து) சந்திரன் ஒன்ருகவிருந்தபோதிலும், அதன் பிரதிபிம் பம் நீர்களில் பலவாகக் காணப்படுகிறது. அதைப் போல் விஷ்ணு ஒருவரே அம்மூவருடைய கர்ப்பங்களில் நான்கு வடிவங்களுடன் வசித்தார்.

பகவான் நான்கு வடிவங் கொண்டு வந்ததாக ராமா யணமும்கூறும். ततः पद्मपलाशाक्षः कृत्वात्मानं चतुर्विधम् । पितरं रोचयामास तदा दशरथं नृपम् ॥ என்பதைக் காண்க.

अपां कुक्षिषु'-சந்திரன் ஒருவனே ஒவ்வொருநீர்நிலையி லும் தனித்தனியே முழுவடிவுடன் பிரதிபலிக்கின்ருன். எத் தனை நீர்நிலைகளுள்ளனவோ அத்தனை பிரதி பிம்பங்களிருக் கின்றன. நீர் நிலைகளின் பன்மையைக்கருதி, अपाम् - எனப் பன்மை வந்தது. சந்திரன் பூர்ணகலையுடனிருப்பின் பிரதி பிம்பம் பூர்ணகலையுடன் இருக்கும். அதுபோல் பகவான் நான்கு வடிவங்களில் வந்தாலும் ஒவ்வொன்றும் பூர்ண அமிசத்துடன் இருந்ததென்பது உவமையாற் குறிப்பிடப் படுகிறது.

अथाग्र्यमहिषी राज्ञः प्रसूतिसमये सती
पुत्रं तमोपहं लेभे नक्तं ज्योतिरिवौषधिः ॥ ६६ ॥

ओषधिः - ஜ்யோதிர்லதை, नक्तम् இரவில், (तमोपहम्)- இருளைப்போக்கும், ज्योतिः इव - ஒளியைப்பெறுவது போல, अथ - பிறகு, सती-நற்குணமுடையவளும், राज्ञः-அரசரின், अग्र्यमहिषी - முதல் மனைவியுமான கௌஸல்யை, प्रसूतिसमये-

பிரஸவஸமயத்தில், तमोपहम् - (தந்தையின் சோகமாகிய) இருளை அழிக்கின்ற, पुत्रम् - மகனை, लेभे - பெற்றாள்.

(க-து) பகலில் ஒளியின்றி இருக்கும் ஜ்யோதிர்லதை என்ற கொடி இரவிலே ஒளியைப் பெறும். அவ்வொளி அதைச் சுற்றியுள்ள இருளைப் போக்கவல்லதாக விருக்கும். அதுபோல, கௌஸல்யை, கர்ப்பம் வளர்ச்சியுற்றுப் பிரஸவிக்கவேண்டிய காலத்தில் தந்தையின் சோகமாகிய இருளைப்போக்கத்தக்க மைந்தனைப்பெற்றாள். சோகத்தை இருளாகக்கூறியிருப்பதை இரண்டாம் சுலோகத்திலும் காண்க. 'உலகத்தின் பாபவிருளைப் போக்கத் தக்க மைந்தன்' என்றும் கூறலாம்.

राम इत्यभिरामेण वपुषा तस्य चोदितः ।
नामधेयं गुरुश्चक्रे जगत्प्रथममङ्गलम् ॥ ६७ ॥

अभिरामेण - அழகிய, वपुषा - உடலினால், चोदितः - தூண்டப்பட்ட, गुरुः - தந்தை (தசரதர்), तस्य - அம்மைந்தனுக்கு, जगत्-प्रथम-मङ्गलम् - உலகத்திற்குச் சிறந்த மங்களமான, राम इति - ராமன் என்ற, नामधेयम् - பெயரை, चक्रे- செய்தார் (இட்டார்).

(க-து) ராமனின் உடல் மிக அழகியதாய் உள்ளங்கவர்வதாக விருந்தது. அவ்வழகிய தோற்றத்தைக் கண்டு, அதனால் தூண்டப்பட்டு 'அழகுடையவன்' என்ற பொருளைத் தரும் ராமன் என்ற பெயரைத் தசரதர் அம்மகனுக்கிட்டார். ராமன் என்ற சொல் உலகிற்கே மங்களமானது; நன்மையைச் செய்வது.

'गुरुः'-'ज्येष्ठं रामं महात्मानं भरतम् कैकयीसुतम्। सौमित्रिं लक्ष्मण इति शत्रुघ्नमपरं तथा। वसिष्ठः परमः प्रीतो नामानि कृतवांस्तदा' என்று ராமாயணம் கூறுவதால், गुरुः - என்பதற்கு வஸிஷ்டர் என்றும் கொள்ளலாம். 'मङ्गलानां च मङ्गलम्' - என பகவானை மஹாபாரதம் வருணிப்பதால், राम - என்ற பெயரை, जगत्प्रथममङ्गलम् - என விசேஷித்தார்.

रघुवंशप्रदीपेन तेनाप्रतिमतेजसा ।
रक्षागृहगता दीपाः प्रत्यादिष्टा इवाभवन् ॥ ६८ ॥

**रघुवंश प्रदीपेन** - ரகுவின் வம்சத்தை விளக்குகின்ற, **अप्रतिम-तेजसा** - நிகரற்ற ஒளியையுடைய, **तेन** - அந்த ராமனால், **रक्षा-गृह-गताः**-பிரஸவ அறையிலிருந்த, **दीपाः**-விளக்குகள், **प्रत्यादिष्टाः इव**-மங்கச் செய்யப்பட்டன போல, **अभवन्**-இருந்தன.

(க-து) பிரஸவ அறையில் இருந்த (ரத்தின) தீபங்களெல்லாம் ராமனது நிகரற்ற ஒளியினால் பிரகாசங் குன்றி மங்கிப்போயின. ராமன் அத்தகைய ஒளியுடன் விளங்கினான்.

'**रक्षागृह**' - பிறந்த குழந்தைக்கும், பிரஸவித்த தாய்க்கும் தீங்கு ஏதும் நேராமலிருப்பதற்காகப் பிரஸவ அறையில் சில ரக்ஷைகளைச் செய்வர். அதனால் அவ்வறைக்கு,**रक्षा-गृह**ம் எனப் பெயர்.

**दीपः** - சிறிய விளக்கு, **प्रदीपः** - பெரும் விளக்கு; ரகு வம்சத்து மற்றை அரசர் தீபம் போன்றிருந்தனர். ராமர் அவ்வம்சத்தில் **प्रदीप**மாக இருந்து விளங்கினார். '**दीप-प्रदीप**' பெரிய விளக்கினெதிரில் சிறிய விளக்கு மங்குவதில் வியப்பொன்றுமில்லை. 'ரகுவம்ச' என்ற சொல் இக்காவியத்தைக் குறிப்பதாகக் கொண்டு அதற்குச் சோபையளிக்கின்ற நாயகராக இருப்பவர் ராமர்' என்ற பொருளையும் கவி தொனிப்பிக்கின்றார் என்பர் சில உரையாசிரியர்கள். பத்தொன்பது ஸர்க்கமுள்ள ரகுவம்சத்தில் பத்தாவது ஸர்க்கம், முன் ஒன்பது பின் ஒன்பது ஸர்க்கங்களுக்கு மத்தியில் நாயக மணிபோலுள்ளதையும் காண்க.

शय्यागतेन रामेण माता शातोदरी बभौ ।
सैकताम्भोजबलिना जाह्नवीव शरत्कृशा ॥ ६९ ॥

**सैकत-अंभोज-बलिना**-மணல் திட்டில்(வைக்கப்பட்டுள்ள) தாமரை மலராகிய உபஹாரமுடையதும், **शरत्कृशा** - சரத் காலத்தினால், (நீர்) குறைந்திருப்பதுமான, **जाह्नवी इव**-கங்கா

நதிபோல், शातोदरी - (பிரஸவித்ததால்) மெல்லிய வயிற்றை உடைய, माता - தாயான கௌஸல்யை, शय्यागतेन - படுக்கையிலுள்ள, रामेण - ராமனுல், बभौ - விளங்கினுள்.

(க-து) மழைக்காலத்தில் அதிகம் நீர்ப் பெருக்குள்ள கங்கையில் சரத்காலத்தில் நீர்ப் பெருக்குக்குன்றி மணல் திட்டுக்கள் காணப்படும். அவ்வெண்மையான திட்டுக்களில் தாமரைமலரை இட்டுதேவ பூஜை செய்வர் முனிவர்கள். பிரவாஹமில்லாது வெண்ணிறமான மணல் திட்டில் தாமரைமலர்கள் பிரகாசிக்க இருக்கின்ற கங்கை, காண்பதற்கு மிக அழகாக இருக்கும். அதைப் போல் பிரஸவித்த கௌஸல்யை வெண்ணிறமான விரிப்புடன் கூடிய படுக்கையில், அருகே தாமரை மலர் போல் மிருதுவான அழகிய குழந்தையுடன் விளங்கினுள்.

நீர்ப்பெருக்கற்ற கங்கை கௌஸல்யைக்கும், வெண்ணிற மணல் திட்டு படுக்கைக்கும், திட்டிலுள்ள தாமரை மலர் ராமனுக்கும் உவமைகள். தாமரையிலுள்ள மென்மையும், சிவந்தநிறமும், அழகும் ராமனிடம்காணப்பட்டன.

उपहारः - காணிக்கை; அல்லது பூஜையில் உபயோகப் படும் பொருள்.

कैकेय्यास्तनयो जज्ञे भरतो नाम शीलवान् ।
जनयित्रीमलंचक्रे यः प्रश्रय इव श्रियम् ॥ ७० ॥

प्रश्रयः - விநயம் என்ற குணமானது, श्रियं इव - செல்வத்தை (அழகுறச் செய்வது)போல், जनयित्रीम् - தாயை, यः - எவன், अलंचक्रे - அழகுறச் செய்தானே, सः - அத்தகைய, शीलवान् - சிறந்த நன்னடக்கையுள்ள, भरतः नाम - பரதன் எனப பிரசித்திபெற்ற, तनयः - புத்திரன், कैकेय्याः - கைகேயியினிடமிருந்து, जज्ञे - பிறந்தான்.

(க-து) கைகேயிக்குப் பரதன் என்னும் மகன் பிறந்தான். செல்வத்தைப்பணிவு அணி செய்வது போலப் பரதன் கைகேயியை விளங்கச் செய்தான்.

பரதனுக்குத் தாயாக இருந்ததால்தான், அவளுக்கு உலகில் மதிப்பு ஏற்பட்டது. அதனுலே, "जहार लज्जां भरतस्य मातुः' - என்ருர் பின்பும் கவி. விநய மில்லாவிடில் செல்வமழியுமென்பதை, 'श्रियं ह्यविनयो हन्ति जरा रूपमिवोत्तमम्' என்பதனுலறிக.

सुतौ लक्ष्मणशत्रुघ्नौ सुमित्रा सुषुवे यमौ ।
सम्यगाराधिता विद्या प्रबोधविनयाविव ॥ ७१ ॥

**सुमित्रा** - ஸௌமித்திரை, **लक्ष्मण-शत्रुघ्नौ** - லக்ஷ்மணன் சத்ருக்னன் எனப்பிரசித்தி பெற்ற, **यमौ** - இரட்டையர்களான, **सुतौ** - மைந்தர்களை, **सम्यक्** - நன்ருக, **आराधिता**- மகிழ்விக்கப்பட்ட (கற்கப்பட்ட), **विद्या** படிப்பானது, **प्रबोध-विनयौ इव**-உண்மைஅறிவையும் புலனடக்கத்தையும் (ஈவது) போல, **सुषुवे** -ஈன்ருள்.

(க-து) நன்கு கற்ற வித்யையானது உண்மை அறிவையும், தன்னடக்கத்தையும் உண்டாக்கும். அதுபோல ஸௌமித்ரை, லக்ஷ்மணன் சத்ருக்னன் என்ற இரட்டைப் பிள்ளைகளைப் பெற்ருள்.

ஸௌமித்ரைக்கு வித்யையும், லக்ஷ்மணனுக்கு உண்மையறிவும், சத்ருக்னனுக்குப் புலனடக்கமும் உவமைகளாகும்.

**सम्यगाराधिता** - வித்தையை நன்கு கற்றலாவது, குருவிற்குப் பணிவிடை செய்து, விநயத்துடனும் சிரத்தையுடனும் அப்யஸித்தலாம். **सम्यगार्जिता** என்று பாடங் கொண்டால் 'நன்கு ஸம்பாதிக்கப்பட்ட' என்பது பொருள்.

निर्दोषमभवत्सर्वमाविष्कृतगुणं जगत् ।
अन्वगादिव हि स्वर्गो गां गतं पुरुषोत्तमम् ॥ ७२ ॥

**जगत् सर्वम्** - உலகம் முழுவதும், **निर्दोषम्** - (பஞ்சம் முதலிய) தொல்லையின்றியும், **आविष्कृत-गुणम्** - தோற்ற

விக்கப்பட்ட (ஆரோக்யம்முதலிய) குணங்களையுடையதாக வும், अभवत्-ஆயிற்று; गाम् - பூமியை, गतम्-அடைந்துள்ள, पुरुषोत्तमम् - விஷ்ணுவை, स्वर्गः - சுவர்க்கமானது, अन्वगात्-इव हि பின்தொடர்ந்தது போலும்!

(க-து) ராமாதியர் பிறந்ததும், உலகம் முழுவதும், பஞ்சம் முதலிய தொல்லைகளின்றி, ஆரோக்யம் முதலான நற்பண்புகளுடன் விளங்கியது.

இவ்வாறு பூமி விளங்கியதற்குக் காரணத்தைக் கவி உத்ப்ரேக்ஷிக்கின்றார். விஷ்ணு இராமனாக அவதரித்துள்ளதால் எவ்விதக் குற்றமுமின்றி எல்லாவித நிறைவுகளுடனிருக்கும் ஸ்வர்க்கமே அவரைப் பின் தொடர்ந்து வந்து விட்டது போலிருந்தது என்றார்.

'आविष्कृत गुणम्'-என்பதற்கு, 'தனமும் தான்யமும் மிகுந்துள்ளது' எனினுமாம்: पुरुषोत्तमः புருஷரில் உத்தமர், உத்தம புருஷர்; புருஷரும் உத்தமருமானவர் என்றும் கொள்ளலாம். 'स एव पुरुषः साक्षात् स्त्रीप्रायमितरज्जगत्' - என்பர். ராமருக்கு உதவி செய்ய ஸ்வர்க்கிகளான தேவர்கள் மாத்திரமன்றி ஸ்வர்க்கமும் வந்தது போலிருந்தது என்பது தாத்பர்யம்.

तस्योदये चतुर्मूर्तेः पौलस्त्यचकितेश्वराः ।
विरजस्कैर्नभस्वद्भिर्दिश उच्छ्वसिता इव ॥ ७३ ॥

चतुर्मूर्तेः - நான்கு வடிவங்களையுடைய, तस्य - அந்த விஷ்ணுவின், उदये(सति) அவதாரம் உண்டான பொழுது, पौलस्त्य-चकित - ईश्वराः - ராவணனிடம் அச்சமுற்றிருந்த (இந்திரன் முதலிய) தலைவர்களை உடைய, दिशः - (நான்கு) திசைகளும், विरजस्कैः-புழுதி இல்லாத, नभस्वद्भिः-காற்றுக்கள் மூலமாக, उच्छ्वसिता इव - பெருமூச்சு விட்டன போல் காணப்பட்டன.

(க-து) விஷ்ணு, ராமர், லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன் என்ற நான்கு வடிவங்களுடன் அவதரித்த சமயத்தில் நான்கு திசைகளிலிருந்தும் தூசி யில்லாத காற்று சுகமாகவீசியது. இது ராவணனிடம் அச்சங்கொண்டுள்ள தலைவர்களையுடைய திசைகள், 'ராமன் அவதரித்து விட்டதால் ராவணன் நிச்சயம் அழிந்து விடுவான்; இனி நமக்குப் பயமில்லை' எனப் பெருமூச்சு விட்டது போலிருந்தது. தொல்லை ஒன்று நீங்கினால் பெருமூச்சு விடுவது உலக வியற்கை. பெரியோரின் அவதாரகாலத்தில் காற்றுக்கள் சுகமாக வீசும், ஆகாசம் நிர்மலமாகவும், தண்ணீர் தெளிந்தும் காணப்படும் என்றும் கூறுவர்.

**दिशः** - என்ற சொல் ஸ்திரீலிங்கமாதலால், திசைகளை ஸ்திரீகளாகக் கூறினார். கணவனது கஷ்டம் நீங்கின் பதிவிரதைகள் ஸந்தோஷிப்பர். அதுபோல் திசைகளாகிய ஸ்திரீகள், தங்கள் நாதர்களுக்கு ராவணனுடைய தொல்லையினின்றும் விடுதலை ஏற்படப் போவதை எண்ணி நெட்டுயிர்த்தனர்.

கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, என முக்ய திசைகள் நான்கும், முறையே அவற்றிற்குத் தலைவரான இந்திரன், யமன், வருணன், குபேரன் என நான்கு தேவர்களும் இங்கே குறிப்பிடப்பட்டனர்.

कृशानुरपधूमत्वात् प्रसन्नत्वात् प्रभाकरः ।
रक्षोविप्रकृतावास्तामपविद्धशुचाविव ॥ ७४ ॥

**रक्षोविप्रकृतौ**-ராவணனால் துன்புறுத்தப்பட்ட, **कृशानुः** - அக்னியும், **प्रभाकरः** - சூரியனும் (முறையே), **अपधूमत्वात्** - புகையின்றி இருத்தலாலும், **प्रसन्नत्वात्**-பிரகாசமாக இருத்தலாலும், **अपविद्ध शुचौ इव** - போக்கடிக்கப்பட்ட துக்கத்தை உடையவர்கள் போல **आस्ताम्** - இருந்தனர்.

(க-து) அக்னியும் சூரியனும் கூட ராவணனால் துன்புறுத்தப் பட்டுத் தங்களது ஒளிகுன்றி இருந்தனர். ராமன் அவதரித்த காலத்

தில் அக்னி புகையின்றி ஒளியுடன் பிரகாசித்தான். சூரியனும் பிர காசமாக விளங்கினான். இதைக் காணும்போது இவ்விருவரின் வருத் தங்கூட ராமனது அவதாரத்தால் போக்கடிக்கப்பட்டது போலிருந் தது.

दशाननकिरीटेभ्यस्तत्क्षणं राक्षसश्रियः ।
मणिव्याजेन पर्यस्ताः पृथिव्यामश्रुबिन्दवः ॥ ७५ ॥

**तत्क्षणम्** - (ராமன் பிறந்த) அந்த க்ஷணத்தில், **राक्षसश्रियः** - ராக்ஷஸ லக்ஷ்மியின், **अश्रुबिन्दवः**- கண்ணீர்த்துளிகள், **दशानन - किरीटेभ्यः** - ராவணனது கிரீடங்களிலிருந்து, **मणिव्याजेन** இரத்தினங்கள் என்ற வியாஜத்தினால், **पृथिव्याम्** பூமியில், **पर्यस्ताः** - சிதறின.

(க-து) ராமன் பிறந்த அச்சமயத்தில் ராவணனின் கிரீடங்களி லிருந்து இரத்தினங்கள் கீழே உதிர்ந்தன இது "இனி நாம் அழிந்து விடுவோம்" என எண்ணி ராவணனின் செல்வத் தேவி கண்ணீர்த் துளிகளைச் சிந்தியது போலிருந்தது.

கிரீடத்திலிருந்து இரத்தினங்கள் சிந்துதல் வரவி ருக்கும் தீங்கைக் குறிப்பதாகும். '**किरीटेभ्यः**' - ராவணன் பத்துத்தலைகளிலும் கிரீடமணிந்திருந்ததால், **किरीटेभ्यः** - எனப்பன்மை வந்தது.

पुत्रजन्मप्रवेश्यानां तूर्याणां तस्य पुत्रिणः ।
आरम्भं प्रथमं चक्रुर्देवदुन्दुभयो दिवि ॥ ७६ ॥

**पुत्रिणः** - புதல்வனை அடைந்துள்ள, **तस्य** - அந்த தச ரதருக்கு, **पुत्र-जन्म प्रवेश्यानाम्** - புதல்வன் பிறந்ததும் அனு மதிக்க (வாசிக்கப்படவேண்டிய), **तूर्याणाम्** - வாத்யங்களின், **आरंभम्**-தொடக்கத்தை, **प्रथमम्**- முதலில், **दिवि** ஆகாயத்தில், **देव-दुंदुभयः** - தேவதுந்துபி வாத்யங்கள், **चक्रुः** - செய்தன.

(க-து) அரசர்களுக்குப் புதல்வர் பிறந்ததும் மங்களவாத்தியங் களை முழக்குவது வழக்கம். தசரதருக்குப் புதல்வர் பிறந்ததும் தேவ

லோகத்தில் தேவதைகளே முதலில் வாத்தியங்களை முழக்கத் தொடங்கி விட்டனர். ஏனெனில் ராமன் பிறந்ததால் தசரதரை விடத் தேவர்களே அதிக மகிழ்ச்சியடைந்தனர். எனவே தசரதர் கிரு ஹத்தில் வாத்தியங்கள் வாசிப்பதற்கு முன்னமே தேவர்கள் துந்து பியை முழக்கினர்,

संतानकमयी वृष्टिर्भवने चास्य पेतुषी ।
सन्मङ्गलोपचाराणां सैवादिरचनाभवत् ॥ ७७ ॥

**अस्य** - இவ்வரசனின், **भवने** - வீட்டில் - **संतानकमयी** - ஸந்தானமலர்மயமான, **वृष्टिः** - மழையும், **पेतुषी**-பெய்தது; **सा एव** - அம் மழையே, **सन्मङ्गल-उपचाराणाम्** - (மகப்பேறு போன்ற) சுபஸங்கர்ப்பங்களின் உபசாரங்களுக்கு, **आदि-रचना च** - முதல் செயலாக, **अभवत्** - இருந்தது.

(க-து) ராமன் பிறந்ததால் மகிழ்ந்த தேவர்கள் தங்களுலக மாகிய சுவர்க்கத்திலிருந்து தேவவிருக்ஷத்தின் புஷ்பங்களைத் தசரதர் அரண்மனையில் விழும்படித் தூவினர். குழந்தை பிறந்ததும் செய்யப் படவேண்டிய மங்களகரமான காரியங்களில் இதுவே முதலாவதாக ஆயிற்று. இத்தகைய காரியங்களைச் செய்வதில் தசரதரையும், அவரைச் சேர்ந்தோரையும் விட தேவர்களே மகிழ்ச்சிப் பெருக்கால் முந்திக் கொண்டனர். இதற்குப் பிறகே தசரதர் செய்த நற்காரியங்கள் நிகழ்ந்தன.

**मङ्गल-उपचारः** - மங்களகரமான ஸமயங்களில் செய்யப் படுகின்ற காரியங்கள். நீர்தெளித்தல், கோல மிடுதல், புஷ் பங்களால் அலங்கரித்தல், தோரணமமைத்தல், நறுமண மூட்டுதல் முதலியன. ஸ்வர்க்கத்தில் மந்தாரம், பாரிஜாதம், ஸந்தானம், கல்பகம், ஹரிசந்தனம் என ஐந்து மரங்களிருந் தும், தேவர்கள் ஸந்தான விருக்ஷத்தின் மலர்களைப் பொழிந் ததன் காரணம், தசரதர் ஸந்தானம் பெற்றமை பற்றி. ஸந்தர்ப்பம் நோக்கி கவி ஸந்தான விருக்ஷத்தைக் குறிப் பிட்டது ரஸிக்கற்குரியதாகும்,

कुमाराः कृतसंस्कारास्ते धात्रीस्तन्यपायिनः ।
आनन्देनाग्रजेनेव समं ववृधिरे पितुः ॥ ७८ ॥

**कृत-संस्काराः** - செய்யப்பட்ட (ஜாதகர்ம முதலிய) சடங்குகளை உடையவரும், **धात्री-स्तन्य पायिनः** - செவிலித் தாயரின் பாலை அருந்துகின்றவருமான, **ते** - அந்த, **कुमाराः** - பிள்ளைகள், **अग्रजेन इव** - மூத்தவன் போன்றுள்ளதான, **पितुः - आनन्देन समम्** - தந்தையின் மகிழ்ச்சியுடன் கூட, **ववृधिरे** - வளர்ந்தனர்.

(க-து) தசரதர் குழந்தைகளுக்கு ஜாதகர்ம நாமகரணம் முதலிய சடங்குகளைச் செய்தார். அவர்கள் செவிலித்தாயரின் பாலை அருந்தி வளர்ந்தனர். தந்தையான தசரதரின் மகிழ்ச்சியும் அதிகமாயிற்று.

புதல்வர்கள் பிறப்பதற்கு முன்னேயே உண்டானதால் ஆனந்தத்தை அண்ணனாகக் கூறினர். அவர்கள் பிறக்கப் போகின்றனர் என்ற எண்ணத்தால் மகிழ்ச்சி முன்பே தோன்றியதாகையால் அதைக் குழந்தைகள் எல்லோருக்கும் முன் பிறந்ததாகக் கூறியது பொருத்தமுடையதே.

**संस्काराः**-குழந்தைகள் பிறப்பதற்கு முன் தாயிடமும், பிறந்த பின் குழந்தைகளுக்கும் தூய்மை கருதி மந்திரபூர்வகமாய்ச் செய்யப்படும் சடங்குகள்: அவற்றில் சில: ஜாதகர்ம, நாமகரணம், நிஷ்க்ரமணம், அன்னப் பிராசனம், சௌளம், உபநயனம் முதலியன.

स्वाभाविकं विनीतत्वं तेषां विनयकर्मणा ।
मुमूर्च्छ सहजं तेजो हविषेव हविर्भुजाम् ॥ ७९ ॥

**तेषाम** - அப்புதல்வருடைய, **स्वाभाविकम्** - இயற்கையான, **विनीतत्वम्** - அடக்கமானது, **विनयकर्मणा** - அடக்கத்

தைக் கற்பித்தலால், हविर्भुजाम् - அக்னிகளுடைய, सहजम् - இயற்கையான, तेजः - காந்தியானது, हविषा इव - (நெய் போன்ற) ஹவிஸ்ஸினுல் (வளர்வது) போல, मुमूर्छ-வளர்ந்தது.

(க-து) நெருப்பு இயல்பாகவே காந்தியுள்ளது. அதில் நெய் முதலியவற்றை ஊற்றுவதால் அதன் காந்தி இன்னும் அதிகமாகின்றது. அதைப் போல் இப்புதல்வர்கள் இயல்பாகவே அடக்கமுடையவர்; உபாத்தியாயரின் கற்பித்தலால் அவ்விநய குணம் பன்மடங்கு அதிகமாயிற்று.

हविर्भुजाम् - என்றது, யாகத்திலுள்ள 'ஆஹவநீயம், கார்ஹபத்யம் தக்ஷிணுக்னி' என்ற மூன்று அக்னிகளை:

परस्पराविरुद्धास्ते तद्रघोरनघं कुलम् ।
अलमुद्द्योतयामासुर्देवारण्यमिवर्तवः ॥ ८० ॥

परस्पर-अविरुद्धाः-ஒருவருக்கொருவர் (கருத்தில்) மாறுபாடின்றி இருந்த, ते-அப்புதல்வர்கள், तत् - அந்த, अनघम् - குற்றமற்ற, रघोः कुलम्-ரகுவின் குலத்தை-ऋतवः-(வஸந்தம் முதலான) ருதுக்கள், देवारण्यम् इव-தேவர்களின் உத்யானமாகிய நந்தனத்தை (விளங்கச் செய்தது) போல, अलम् - மிகவும், उद्योतयामासुः - விளங்கச் செய்தனர்.

(க-து) தேவர்களின் உத்யான வனமாகிய நந்தனவனத்தில் வஸந்தம் முதலிய ஆறு ருதுக்களும் ஒருங்கே இருந்து, அவ்வக் காலத்திற்குரிய புஷ்பங்களை மலரச் செய்யும். ஒரு ருது இருந்தால் இன்னென்றிராது என்பதில்லை. அதைப்போல ராமலக்ஷ்மண பரத சத்ருக்னர்கள் தங்களுக்குள் சிறிதும் வேறுபாடின்றி பரஸ்பர வாத்ஸல்யத்துடன் இருந்துகொண்டு தாங்கள் பிறந்த ரகு குலத்திற்கே பெருமையைத் தந்தனர்.

ராஜகுமாரர்களாதலாலும் மாற்றாந்தாய்களின் மக்களாதலாலும் அவர்களுக்கிடையில் அன்பின்மையும், விரோத மனப் பான்மையுமுண்டாகலாமாதலால் அதற்கு மறுதலையாக பரஸ்பரம் மிக்கவாஞ்சையுடனிருந்தனர் என்றார். ரகு வம்சத்தினரின் ஸஹோதரவாஞ்சை உலகப் பிரசித்திபெற்றது. सौभ्रात्रमेषां हि कुलानुसारि - என்றார் கவி பிறகும். நற்குடியில் பிறந்துள்ளதால் அன்பிருந்ததெனக் காட்ட, குலத்தை अनघं - என்பதால் விசேஷித்தார்.

समानेऽपि हि सौभ्रात्रे यथोभौ रामलक्ष्मणौ ।
तथा भरतशत्रुघ्नौ प्रीत्या द्वन्द्वं बभूवतुः ॥ ८१ ॥

**सौभ्रात्रे** - ஸகோதரவாஞ்சை, **समाने अपि हि** - சமமாக இருந்தபோதிலும், **यथा** - எப்படி, **राम-लक्ष्मणौ** - ராமலக்ஷ்மணர், **उभौ** - இருவரும், **प्रीत्या** - அன்பினால், **द्वन्द्वम्** இரட்டையராக (இணைந்தவராக), **बभूवतुः** - ஆயினரோ, **तथा**-அப்படி, **भरत-शत्रुघ्नौ**-பரதனும் சத்ருக்னனும் **द्वन्द्वम्** - இரட்டையராக, **बभूवतुः** - ஆயினர்.

(க-து) ராமாதியர் நால்வரும் தங்களுக்குள் சமமான அன்பு பூண்டிருந்தனர். ஆயினும் ராமனுடன் லக்ஷ்மணனும், அவ்வாறே பரதனுடன் சத்ருக்னனும் அதிகம் சேர்ந்திருந்தனர்.

ஜனங்கள் ராமனுடன் லக்ஷ்மணனையும், பரதனுடன் சத்ருக்னனையும் எப்பொழுதும் கண்டனர். பிரிந்திருந்த நிலையில் அவர்களைக் காணவில்லை. கௌஸல்யை தந்த சருவின் பகுதியால் பிறந்த லக்ஷ்மணன் அவளுடைய மகன் ராமனுடனும், கைகேயி அளித்த சருவினால் பிறந்த சத்ருக்னன் அவளது மகன் பரதனுடனும் சேர்ந்திருந்தனர் என்பது

உட்கருத்து என்பர். 'कौसल्यादत्तचरुसंभवो लक्ष्मणः कौसल्यापुत्रघटितः; कैकेयीदत्तचरुसंभवः शत्रुघ्नः कैकेयीपुत्रघटितः इति निगूढोऽभिप्रायः;' [नारायण]. இக்கருத்தையே, 'लक्ष्मणो रामचन्द्रेण शत्रुघ्नो भरतेन च। द्वन्द्वीभूय चरन्तौ तौ पायसांशानुसारतः' என்று அத்யாத்ம ராமாயணம் கூறும்.

तेषां द्वयोर्द्वयोरैक्यं बिभिदे न कदाचन।
यथावायुविभावस्वोर्यथा चन्द्रसमुद्रयोः ॥ ८२ ॥

**यथा** - எவ்வாறு, **वायु विभावस्वोः**-காற்றுக்கும் அக்னிக்கும் (ஒற்றுமை நீங்குவதிலலையோ), **यथा** - எவ்வாறு **चन्द्रसमुद्रयोः** - சந்திரனுக்கும் ஸமுத்திரத்திற்கும் (ஒற்றுமை நீங்குவதில்லையோ), (**तथा**) - அவ்வாறே, **तेषाम्** - அந்நால்வரிலே, **द्वयोः द्वयोः** - (அந்தந்த) இருவருக்கும், **ऐक्यम्** - ஒற்றுமையானது, **कदाचन** - ஒருபொழுதும், **न बिभिदे** - சிதறவில்லை, (நீங்கவில்லை).

(க-து) காற்றுக்கும் நெருப்புக்கும் மிக ஒற்றுமையுண்டு. காற்றுள்ள இடத்தில் நெருப்பு நன்கு எரியும். சந்திரனைக்கண்டு ஸமுத்ரம் பொஙகுவதால் சந்திரனுக்கும் கடலுக்குமுள்ள ஒற்றுமை யாவரு மறிந்ததே. அதைப்போல்ராமனும்லக்ஷ்மணனும் ஒற்றுமையாக இருந்தனர். பரதனும் சத்ருக்னனும் கருத்து வேறுபாடின்றிக் காணப் பட்டனர்.

लक्ष्मणस्तु सदा राममनुगच्छति सादरम्।
सेव्यसेवकभावेन शत्रुघ्नो भरतं तथा ॥ என்பதும் காண்க.

**ऐक्यम**-ஒத்த கருத்து உடையவராக இருத்தல். முதல் உபமானத்தால் ஒரு காரியத்தைச் செய்வதிலுள்ள ஒற்றுமையும், இரண்டாவது உபமானத்தால் ஸுகதுக்கங்களில் ஸமமான பங்கு கொள்ளும் தன்மையும் உணர்த்தப்பட்டன.

**यथा** என்பதை, **इव** -என்ற பொருளில் கொண்டு, **तथा**-என்ற சொல்லை வருவிக்காதும் உரை செய்யலாம்.

ते प्रजानां प्रजानाथास्तेजसा प्रश्रयेण च ।
मनो जह्रुर्निदाघान्ते श्यामाभ्रा दिवसा इव ॥ ८३ ॥

**प्रजा-नाथाः** - குடிகளின் தலைவர்களான, **ते** - அக்குமாரர்கள், **तेजसा**- (தங்களது) பராக்கிரமத்தினாலும், **प्रश्रयेण च**- அடக்கத்தாலும், **-निदाघ-अन्ते**-கோடை காலமுடிவில், **श्याम-अभ्राः** - கறுத்த மேகங்களையுடைய, **दिवसाः इव** - நாட்கள் போல், **प्रजानाम्**-மக்களின், **मनः** - மனத்தை, **जह्रुः** - கவர்ந்தனர்.

(க-து) கடுங் கோடையின் முடிவில் வருஷருதுவின் தொடக்கத்தில் நீருள்ளதால் கறுத்த மேகங்கள் நிறைந்துள்ள பகற்பொழுது, குளிர்ச்சியைத் தந்து மக்களின் மனத்தை மகிழ்விக்கும். அவ்வாறே ராமாதியரும் தங்களது பராக்ரமத்தினாலும் விநயகுணத்தினாலும் மக்கள் மனத்தைக்கவர்ந்தனர்.

'**प्रजानाथाः**' - குமாரர்கள், இப்பொழுது அரசராக இல்லாவிடினும், பிற்காலத்தில் அரசராகத் தகுதியுடைவர்களாதலால் புத்திரர்களுக்கு இவ்விசேஷண மளித்தார்.

स चतुर्धा बभौ व्यस्तः प्रसवः पृथिवीपतेः ।
धर्मार्थकाममोक्षाणामवतार इवाङ्गवान् ॥ ८४ ॥

**चतुर्धा** - நான்காக, **व्यस्तः** - பிரிந்துள்ள, **पृथिवीपतेः** - அரசருடைய (தசரதருடைய) **सः** - அந்த, **प्रसवः** - ஸந்ததியானது, (**चतुर्धा** - நான்கான), **अङ्गवान्** - உருவுடன் கூடின **धर्म-अर्थ काम-मोक्षणाम्** - அறம், பொருள், இன்பம், வீடு இவற்றின், **अवतारः इव** - பிறப்பு போல, **बभौ** - விளங்கியது.

(க-து) அச்சகோதரர் நால்வரும் நான்கு புருஷார்த்தங்களாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றின் அவதாரங்கள் போல இருந்தனர். தசரதர் இந்நால்வரைப் புதல்வராகப் பெற்றதால் நான்கு பயன்களையும் இம்மையிலேயே அடைந்து விட்டார் போலும் காணப் பட்டார்.

**व्यस्तः** - என்பதை, **प्रसवः** - என்பதுடனும், **अंगवान्** - என்பதை **अवतारः** - என்பதுடனும் அந்வயிக்க.

गुणैराराधयामासुस्ते गुरुं गुरुवत्सलाः ।
तमेव चतुरन्तेशं रत्नैरिव महार्णवाः ॥ ८५ ॥

**गुरुवत्सलाः**-தந்தையிடம் பக்திகொண்டுள்ள, **ते**-அந்தக் குமாரர்கள், **गुणैः** - அடக்கம் முதலிய குணங்களால், **गुरुम्**- தந்தையை, **चतुरन्तेशम्** - நான்கு திசைகளுக்கும் தலைவரான, **तम एव** - அந்தசரதரையே, **महार्णवाः** - நான்கு சமுத்திரங் கள், **रत्नैः इव** - ரத்தினங்களால் (மகிழ்விப்பது) போல, **आराधयामासुः** - களிப்பித்தனர்.

(க-து) நான்கு கடல்கள் வரை பரவியுள்ள உலகிற்கு அதி பதியான தசரதரை, நான்கு சமுத்திரங்களும் தங்களிடமுள்ள உயர்ந்த ரத்தினங்களை அளித்து மகிழ்விப்பது போல, நான்கு புதல்வர்களும் தங்களுடைய நற்குணங்களால தசரதரை மகிழ்வித்தனர்.

**तम् एव**-தசரதரையன்றிப் பிற அரசர்களை ஸமுத்திரம் அவ்வாறு உபசரிக்கவில்லை என்பது, **एव** - என்பதால் பெறப் படும்:

सुरगज इव दन्तैर्भग्नदैत्यासिधार-
नय इव पणबन्धव्यक्तयोगैरुपायैः ।
हरिरिव युगदीर्घैर्दोर्भिरंशैस्तदीयैः
पतिरवनिपतीनां तैश्चकाशे चतुर्भिः ॥ ८६ ॥

**भग्न-दैत्य-असि-धारैः** - முறிக்கப்பட்ட அஸுரர்களது கத்தி முனைகளையுடைய, **चतुर्भिः** - நான்கு, **दन्तैः** - தந்தங்களால், **सुरगजः इव** - தேவயானையான ஐராவதம் போலவும், **पणबन्ध व्यक्त-योगैः** - பயனைப்பெறுதலால் ஊஹிக்கப்பட்ட முறைகளையுடைய, **उपायैः** - (நால்வகை) உபாயங்களினால், **नयः इव**-ராஜதந்திரம் போலவும், **युग दीर्घैः**-ஏர்க்கால் போல் நீண்ட, **दोर्भिः** - (நான்கு) கைகளால், **हरिः इव** - விஷ்ணு போலவும், **तदीयैः** - அவ்விஷ்ணுவினுடையதான, **अंशैः** - அம்சங்களான, **तैः** -அப் புதல்வர்களால், **अवनि पतीनां पतिः**- அரசர்க்கும் அரசரான தசரதர், **चकाशे** - விளங்கினார்.

(க-து) தேவாஸுரயுத்தத்தில் கலந்த ஐராவதத்தின் தந்தங்களை அஸுரர்கள் கத்தியால் வெட்டவும், தந்தங்கள் முறியாது அவர்களது கத்திகளே முறிந்தன. அத்தகைய வலிமை பொருந்திய நான்கு தந்தங்களால் ஐராவதம் சிறப்புற்று விளங்குவது போலும்;

ராஜ நீதி சரியாக இருக்கவேண்டுமாயின், ஸாமம், தானம், பேதம், தண்டம், என்ற நான்கு உபாயங்கள் பயனை அளிக்கும் வகையில் உபயோகிக்கப்படவேண்டும். பயனளித்தால்தான் அவை சரியான முறையில் உபயோகிக்கப்பட்டதாகக்கருதப்படும். இத்தகைய உபாயங்களால் ராஜதந்திரம் விளங்குவது போலும்;

ஏர்க்கால் போல் நீண்ட புஜங்களால் மஹாவிஷ்ணு விளங்குவது போலும்;

விஷ்ணுவின் அம்சங்களான நான்கு புதல்வர்களால் அரசர்க்கரசரான தசரதர் சிறந்து விளங்கினார்.

ஐராவதம்: இது நான்கு தந்தங்களையுடையது என்பர்.

**पणबन्धः** - பயனுண்டாதல்; இச் சொல் இங்கு **सन्धि** என்ற பொருளில் உபயோகிக்கப்படவில்லை. [8-ஆம் ஸர்க்கம் 21-ஆம் சுலோக உரையைக்காண்க.] **व्यक्तयोगैः**- உபாயங்கள் சரியாக உபயோகிக்கப்பட்டனவா என்பது அவைகள் பய

னளிப்பதனின்றும் புலனுகும். युगदीर्घैः - நீண்டகைக ளுடைமை உத்தமபுருஷலக்ஷணம். கைகளுக்கு உவமையாக ஏர்க்காலைக் கூறுவர்; நுகத்தடி என்றும் பொருள் கொள்ள லாம்.

இவ்வுவமைகளினின்றும் தசரதருக்கு ஏற்பட்ட புத்தி ரப் பேற்றின் பெருமை விளங்கும். இத்துடன் தசரதரது வரலாறு முடிவு பெற்றது; ராமரது சரித்திரம் இனிவரும் ஐந்து ஸர்க்கங்களிலே கூறப்படுகின்றது.

इति महाकवि श्री कालिदासकृतौ
रघुवंशे महाकाव्ये दशमः सर्गः ॥

---

॥ श्रीः ॥

# रघुवंशे

## एकादशः सर्गः

कौशिकेन स किल क्षितीश्वरो राममध्वरविघातशान्तये ।
काकपक्षधरमेत्य याचितस्तेजसां हि न वयः समीक्ष्यते ॥ १ ॥

**कौशिकेन** - குசிக முனிவரின் புதல்வரான விச்வா மித்ரரால், **एत्य** - வந்து, **सः** - அந்த, **क्षितीश्वरः** - அரசர் தசரதர், **अध्वर-विघात - शान्तये** - யாகத்தின் இடையூறு களை அழிப்பதற்காக, **काकपक्षधरम्** - காகபக்ஷத்தைத் தரிக் கின்ற, **रामं** - ராமரை (தரும்படி), **याचितः किल** - வேண் டப்பட்டார். **हि** - ஏனெனில், **तेजसाम्** - பலமுடையவர் களின், **वयः** - (இளமைப்) பருவமானது, **न समीक्ष्यते** - கவ னிக்கப்படுவதில்லை.

(க-து) விசுவாமித்ர முனிவர், தமது யாகத்தைக் காப்பதற்காக ராமரை அனுப்பும்படி தசரதரை வேண்டினார். "ராமர் சிறு பிள்ளை யாயிற்றே; யாகத்தைக் காக்கும் திறன் உண்டோ அவருக்கு" என்ற சந்தேகம் வேண்டுவதில்லை. ஏனெனில் ராமர் சிறுபிள்ளையாயினும் மிகவும் பலம் பொருந்தியவர். பலவான்களின் பலம் கருதப்படுமே யன்றி அவர்களது வயது யோசிக்கப்படுவதில்லை. ராமர் வயதில் சிறி யவராயினும் பலத்தில் பெரியவராயிருந்ததால் மகரிஷி அவரையே தமதுயாகத்தின் பாதுகாப்பிற்காக வேண்டினார்.

**एत्य** - வந்து; 'சிஷ்யர்களை அனுப்பாது தாமே நேரில் வந்து' என்பது கருத்து. இதனால் ராமரை அழைத்துப் போவதில் விச்வாமித்திரருக்கு உள்ள வேட்கை புலனாகின் றது. **काकपक्षधरः**- என்பது, ராமரின் வயதைக் குறிக்கின்றது;

பதினைந்து வயதுள்ள ராமரை என்பது கருத்து; 'अजातव्यञ्जनो यस्तु युद्धकर्मविशारदः। ऊनषोडशवर्षश्च काकपक्षधरः स्मृतः' என்பதைக்காண்க. तेजसाम् -'என்பதற்கு பலமுடைய வர்களின்' என்பது பொருள்.

कृच्छ्रलब्धमपि लब्धवर्णभाक् तं दिदेश मुनये सलक्ष्मणम् ।
अप्यसुप्रणयिनां रघोः कुले न व्यहन्यत कदाचिदर्थिता ॥ २ ॥

**लब्धवर्ण-भाक्** - அறிவாளிகளுக்குப் பணிசெய்கின்ற தசரதர், **कृच्छ्र-लब्धं अपि** - மிக்க முயற்சிசெய்து அடையப் பெற்றவராயினும், **सलक्ष्मणम्** - லக்ஷ்மணனுடன்கூடிய, **तं रामं** - அந்த ராமரை, **मुनये** - விசுவாமித்ர முனிவருக்கு, **दिदेश** - கொடுத்தார். **असुप्रणयिनां अपि** - உயிரையேகூடக் கேட்கின்றவர்களின், **अर्थिता** - வேண்டுகோள், **रघोः कुले** - ரகுவினது வம்சத்தில், **कदाचित्** - ஒருபொழுதும், **न व्यहन्यत** - மறுக்கப்படவில்லை.

(க-து) தசரதர், பெரியோர்களின் கருத்தை ஒட்டி நடப்பவர்; அவரிடம் கற்றறிந்த பல பெரியோர்கள் அவசியமான காலத்தில் யோசனை கூறச் சித்தமாயிருந்தனர். அவர்களது யோசனையின்மீது தசரதர் தாம் புத்திர காமேஷ்டி முதலியவை செய்து அடைந்த ராமரை விசுவாமித்திரருடன் காட்டிற்கு அனுப்பி வைத்தார். ரகுவினது வம்சமே யார் எதைக் கேட்பினும் மறுக்காது கொடுப்பதற்குப் பெயர் பெற்றது. அந்த வம்சத்தில் வந்த தசரதரும் அக்குணத்தைப் பெற்றிருந்தார். ஆதலால் ராமர் லக்ஷ்மணர் இருவரையும் முனிவரிடம் ஒப்புவித்தார்.

தசரதர், அறிவாளிகளை அடுத்துள்ளவராதலால், அதன் பயனாக, கஷ்டப்பட்டுப் பெற்ற அரும் பொருளான ராமரை ஸத்பாத்ரமான விசுவாமித்ரரிடம் ஒப்படைத்தார், என்பது कृच्छ्र लब्धमपि दिदेश என்பதால் கூறியதாயிற்று. लब्धवर्णभाक्' என்பதால், 'வஸிஷ்டரின் உபதேசத்தினால் தசரதர் மகனைத் தந்தார்' என்ற ராமாயண வரலாறும் குறிப்

பிட்டதாயிற்று. 'ऐक्यं विभिदे न कदाचन' எனப் பத்தாவது ஸர்க்கத்தில் கூறியதற்கு இயைய, இணைபிரியாத லக்ஷ்மணனையும் ராமருடன் அனுப்பினர். असुप्रणयिनाम्........न व्यह्स्यत - இங்குக் குறிப்பிடப்படும் வரலாறு என்னவென்பது தெளிவாக இல்லை. திலீபன், சிங்கத்திற்குத் தன் உயிரையும் உடலையும் கொடுத்ததைக் குறிப்பதாகக் கொள்ளினும் கொள்ளலாம்.

यावदादिशति पार्थिवस्तयोर्निर्गमाय पुरमार्गसंस्क्रियाम् ।
तावदाशु विदधे मरुत्सखैः सा सपुष्पजलवर्षिभिर्घनैः ॥ ३ ॥

**पार्थिवः** - அரசர் (தசரதர்), **तयोः** - அவ்விராம லக்ஷ்மணர்களின், **निर्गमाय**-புறப்பாட்டிற்காக, **पुरमार्गसंस्क्रियां**- நகர மார்க்கத்தின் அலங்காரத்தை, **यावत् आदिशति** - எப்பொழுது கட்டளையிடுகின்றாரோ, **तावत्** - அப்பொழுதே, **मरुत्सखैः** - காற்றுடன் கூடியவையும், **सपुष्पजलवर्षिभिः** - புஷ்பத்துடன் கூடிய நீரை வர்ஷிக்கின்றவையுமான, **घनैः** - மேகங்களால், **सा** - அவ் வலங்காரமானது, **आशु** , துரிதமாக, **विदधे** - செய்யப்பட்டது.

(க-து) அரசர்கள் செல்லும் வழிகளைத் தண்ணீர் தெளித்து, தூசியின்றிச் சுத்தமாக்கி, மலர் முதலானவற்றைப் பரப்பி அழகுபடுத்தல் மரபு, அவ்வாறே ராம லக்ஷ்மணர்கள் செல்லும் வழியை அழகு செய்யும்படி தசரதர் கட்டளையிட்டார். ஆனால் அக்கட்டளைக்கு அவசியமில்லாதபடி மேகங்கள் நீரைத் தெளித்தும், புஷ்பங்களைத் தூவியும், காற்று வீதிகளைச் சுத்தமாக்கியும் வழியை அழகு செய்தன. தேவதைகளின் காரியத்திற்காகவே செல்லுகின்ற ராமலக்ஷ்மணர்களுக்கு வாயு தேவனும், வருணதேவனும் உதவி புரிந்த வகை இதனால் கூறப்பட்டது.

तौ निदेशकरणोद्यतौ पितुर्धन्विनौ चरणयोर्निपेततुः ।
भूपतेरपि तयोः प्रवत्स्यतोर्नम्रयोरुपरि बाष्पबिन्दवः ॥ ४ ॥

**निदेशकरण-उद्यतौ** - கட்டளையைச் செய்வதற்குச் சித்த மானவர்களும், **धन्विनौ** - வில்லை(க்கையில்) உடையவர் களுமான, **तौ** - அவ்விரு சிறுவர்களும், **पितुः** - தந்தை யின், **चरणयोः** - கால்களில், **निपेततुः** - விழுந்தனர் (பணிந் தனர்). **भूपतेः** - அரசரான தசரதருடைய, **बाष्पबिन्दवः अपि** - கண்ணீர்த் துளிகளும், **प्रवत्स्यतोः** - யாத்திரை செய் யப்போகின்றவர்களும், **नम्रयोः** - (அதனால்) வணங்கியவர் களுமான, **तयोः** - அந்த ராமலக்ஷ்மணர்களின், **उपरि** - மீது **निपेतुः** - விழுந்தன.

(க-து) அவ்விராம லக்ஷ்மணர்கள் எப்பொழுதும் தங்களுக்கு இட்ட பணியைச் செய்வதற்குச் சித்தமாயிருப்பவர்கள். வில்லைக் கையில் ஏந்தியவர்கள்; இத்தகைய அவ்விருவரும், வெளியூருக்குச் செல்லும்போது பெரியோரை வணங்கிச் செல்லல் முறையாகையால் அவ்வாறே தந்தையை வணங்கினர். அருமந்த புத்திரர்களைப் பிரியும் வருத்தத்தால் தசரதர் கண்ணீர் விட்டுக் கலங்கினார்.

तौ पितुर्नयनजेन वारिणा किंचिदुक्षितशिखण्डकावुभौ ।
धन्विनौ तमृषिमन्वगच्छतां पौरदृष्टिकृतमार्गतोरणौ ॥ ९ ॥

**पितुः** - தந்தையின், **नयनजेन** - கண்களிலிருந்து உண்டாகிய, **वारिणा** - நீரினால், (கண்ணீரினால்), **किञ्चित्** - சிறிது, **उक्षित-शिखण्डकौ** - நனைக்கப்பட்ட சிகையை உடைய வர்களும், **धन्विनौ** - வில்லை உடையவர்களுமான, **तौ उभौ** - அவ்விருவரும், **पौर दृष्टि-कृत मार्गतोरणौ** - பட்டணத்து ஜனங்களின் கண்களாலே அமைக்கப்பட்ட வழியிலுள்ள தோரணங்களை உடையவர்களாக, **तं ऋषिं** - அந்த (விசுவா மித்திர) முனிவரை, **अन्वगच्छताम्** - பின் தொடர்ந்தனர்.

(க-து) தசரதர் மிக்க மனவருத்தத்துடன் கண்ணீர் பெருக்கி ராமரையும் லக்ஷ்மணனையும் விசுவாமித்ரருடன் அனுப்பி வைத்தார். அவர்கள் வில்லைக் கையில் ஏந்தியிருந்தனர். மரியாதைக்கும் அன்பிற்

கும் உரியவர்கள், தாங்கள் வசிக்கும் வீதி வழியாகச் செல்லுகையில் வீதியிலுள்ளவர்கள் அவ்வழியை மலர்மாலை முதலியவற்றால் அலங்கரிப்பது வழக்கம். ராம லக்ஷ்மணர்கள் பட்டணத்து வழியாகச் செல்லுகையில் இருபுறமும் மக்கள் கூடியிருந்து, வைத்த விழி வாங்காது பேராவலுடன் அவர்களைப் பார்த்துக்கொண்டே இருந்தனர். மக்களுடைய தாமரை போன்ற கண்களே மலர்த்தோரணங்களாக அமைக்கப் பட்டனபோல் இருந்தன.

लक्ष्मणानुचरमेव राघवं नेतुमैच्छदृषिरित्यसौ नृपः ।

आशिषं प्रयुयुजे न वाहिनीं सा हि रक्षणविधौ तयोः क्षमा ॥६॥

**ऋषिः** - விசுவாமித்திர முனிவர், **लक्ष्मण-अनुचरं एव** - லக்ஷ்மணனால் மாத்திரமே பின்தொடரப்பட்ட, **राघवम्** - ரகுவின் வம்சத்தினரான ராமனை, **नेतुम्**-அழைத்துச் செல்வதற்கு, **ऐच्छत्** - விரும்பினார், **इति** - என்ற காரணத்தினால், **असौ नृपः** - இந்த அரசர் (தசரதர்), **आशिषम्** - ஆசீர்வாதத்தை, **प्रयुयुजे** - பிரயோகித்தார் (செய்தார்.); **वाहिनीं** - சேனையை, **न प्रयुयुजे** - அனுப்பவில்லை. **हि** - ஏனெனில், **सा**- அந்த ஆசீர்வாதமே, **तयोः** - அவ்விரு குமாரர்களின், **रक्षण-विधौ** - காப்பாற்றுதலைச் செய்வதற்கு, **क्षमा** - சக்தியுள்ளது.

(க-து) விசுவாமித்திரர், ராமருடன் லக்ஷ்மணன் ஒருவனை மட்டுமே அழைத்துச் செல்ல விரும்பினார். பெரிய சேனை முதலானவற்றை விரும்பவில்லை. ஆகவே தசரதர் தம் புதல்வர்களுக்கு எத்தகைய அபாயமும் நேரக்கூடாது என்பதற்காக ஆசீர்வாதஞ் செய்து அனுப்பினார். பெரியோர்களுடைய மனப்பூர்வமான ஆசீர்வாதங்கள் தாம் உண்மையில் அவர்களைக் காக்கவல்லன.

मातृवर्गचरणस्पृशौ मुनेस्तौ प्रपद्य पदवीं महौजसः ।

रेजतुर्गतिवशात् प्रवर्तिनौ भास्करस्य मधुमाधवाविव ॥ ७ ॥

**मातृवर्ग-चरणस्पृशौ** - தாய்மார்களின் பாதங்களில்வணங்கிய, **तौ** - அவ்விருவரும், **महौजसः** - மிக்க பொலிவை

யுடைய, मुनेः - முனிவரின் (விசுவாமித்ரரின்), पदवीं - வழியை, प्रपद्य - அடைந்து, महौजसः - மிக்க ஒளியையுடைய, भास्करस्य - சூரியனுடைய, गतिवशात् - வழியை அனுசரித்து, प्रवर्तिनौ - நடக்கின்ற, मधु-माधवौ इव - சித்திரை வைகாசி மாதங்களைப்போல, रेजतुः - விளங்கினர்.

(க-து) ராமரும் லக்ஷ்மணனும் தங்கள் தாய்மார்கள் எல்லோரையும் வணங்கிவிட்டு, மகரிஷி விசுவாமித்திரரைத் தொடர்ந்து சென்றனர். சூரியனுடைய கதியை (ஸஞ்சாரத்தை) அனுசரித்து சித்திரை வைகாசி முதலிய மாதங்கள் ஏற்படுகின்றன. சித்திரைக்குப் பின், வைகாசி வருகிறது. அதுபோல் விசுவாமித்ரருக்குப் பின் ராமரும், ராமருக்குப்பின் லக்ஷ்மணனும் சென்றனர். சித்திரையும் வைகாசியும் வஸந்தருது மாதங்களாதலால் அம்மாதங்கள், சூரிய ஒளியுடன் பிரகாசிக்கின்றன ; மரங்களில் புதிய தளிரும் புஷ்பங்களும் காய்களும் பழங்களும் தோன்றுவதால் இவைகளாலும் இம்மாதங்கள் சோபையுடன் இருக்கின்றன. அவைகளைப் போல் ராம லக்ஷ்மணர்களும், உத்ஸாகத்துடன் விளங்கினர் என்பது உபமானத்தினால் பெறப்படும்; மகரிஷிக்கு உபமானம் சூரியன்.

'विश्वामित्रो ययावग्रे ततो रामो महायशाः ।
काकपक्षधरो धन्वी तं च सौमित्रिरन्वगात् ॥'

பாலகாண்டம் 22-6.

मातृवर्ग-என்றதால் ராமலக்ஷ்மணர்கள், தம்மைப்பெற்ற தாய்மார்களையன்றித் தசரதரின் மனைவியர் அனைவரும் தாய் முறையுடையவர்களாதலால் அவர்கள் எல்லோரையுமே வணங்கினர். இதனால் ராமலக்ஷ்மணர்களது பக்ஷபாதமின்மை புலனாகும். இதே கருத்தை, सर्वासु मातृष्वपि वत्सलत्वात् सनिर्विशेषप्रतिपत्तिरासीत्' (14-22) எனக்கவி பின்னும் கூறுகின்றார்.

தசரதருக்கு முன்னூற்றைம்பத்து மூன்று மனைவியரிருந்தனர் என்பர். अर्धसप्तशताः (अयोध्या 43·10) என்று வால்மீகி கூறியதைக் காண்க.

वीचिलोलभुजयोस्तयोर्गतं शैशवाच्चपलमप्यशोभत ।
तोयदागम इवोद्ध्यभिद्ययोर्नामधेयसदृशं विचेष्टितम् ॥ ८ ॥

**तोयदागमे** - மேகம் வரும்போது (மழைக் காலத்தில்), **उद्ध्यभिद्ययोः** - உத்யம் பித்யம் என்ற நதிகளுடைய, **नामधेयसदृशं** - பெயருக்குப் பொருத்தமான, **विचेष्टितं इव** - செய்கைபோல, **वीचिलोलभुजयोः** - அலைகளைப்போல் அலை கின்றகைகளையுடைய, **तयोः** - அவர்களுடைய, **चपलं अपि** - வேக மானதாக இருந்தபோதிலும், **गतम्** நடையானது, **शैशवात्** - சிறு பருவம் காரணமாக, **अशोभत** - அழகுற்று விளங்கியது.

(க-து) உத்யம், என்பதற்கு 'தண்ணீரைப் பெருக்குவது' என்றும், பித்யம் என்பதற்கு 'கரையைப் பிளக்கிறது' என்றும் பொருள். மழைக் காலத்தில் தண்ணீர் வரும்போது அந்நதிகள் தமகள் பெயருக் கேற்ப வெள்ளத்தைப் பெருக்கியும் வெள்ளத்தின் வேகத்தினுல் கரைகளை இடித்தும் ஒரு நிலையான தன்மையோடில்லாமல் வேகமாக உள்ளன. அத்தன்மையே பார்ப்பதற்கு அழகாக இருக்கின்றது. அதைப் போல் ராம லக்ஷ்மணர்கள் தம் பருவத்திற் கேற்ப கைகளை வீசிக்கொண்டு விசுவாமித்திரரை பின் தொடாவதற்காக (மாறிமாறி) வேகமான நடையுடன் சென்றபொழுதும் அவர்களது நடை அழகாக இருந்தது.

तौ बलातिबलयोः प्रभावतो विद्ययोः पथि मुनिप्रदिष्टयोः ।
मम्लतुर्न मणिकुट्टिमोचितौ मातृपार्श्वपरिवर्तिनाविव ॥ ९ ॥

9. **मणिकुट्टिमोचितौ** - ரத்தினங்கள் இழைத்த தரை யில் (நடந்து) பழகிய, **तौ** - அவ்விருவரும், **मुनिप्रदिष्टयोः** - விசுவாமித்திர முனிவரால் உபதேசிக்கப்பட்ட, **बलातिबलयोः** - பலை, அதிபலை என்ற, **विद्ययोः** - மந்திரங்களின், **प्रभावतः** - பிரபாவத்தினுல், **मातृ-पार्श्व-परिवर्तिनौ इव** - தாயின் அரு கில் உள்ளவர்கள்போல, **पथि** - வழியில், **न मम्लतुः** - வாட வில்லை (களைப்படையவில்லை).

(க-து) அரண்மனையில் எல்லா வகையான செளகரியங்களுடன் வசித்த அச்சிறுவர்கள் காட்டில் செல்லுகையில் களைப்படைதல் கூடாது என்பதற்காக பலை, அதிபலை என்ற இரு மந்திரங்களை விசுவாமித்திரர் அவர்களுக்கு உபதேசித்தார். அம்மந்திரங்களின் சக்தியால் அவ்விருவரும் சிறிதேனும் களைப்பை உணராமல், தாயின் பக்கத்திலிருக்கும் குழந்தைகளைப் போலக் கவலையின்றி இருந்தனர். இவ்விரண்டு மந்திரங்கள்பசி, தாகம் இவைகளை நீக்கும் சக்தி பெற்றவை.

"क्षुत्पिपासे न ते राम भविष्येते नरोत्तम ।
बलामतिबलां चैव पठतः पथि राघव ॥"

பாலகாண்டம் 22. 17.

பெரும்காரியத்தைச் சாதிக்கப்போகின்றவர்களாதலால் அவர்களுக்கு இம்மந்திரங்கள் உபதேசிக்கப்பட்டன. मातृपार्श्वपरिवर्तिनौ-என்பதால் 'குழந்தைகளின் களைப்பையறிந்து பாலூட்டுதல் தாயின் குணம். தாயருகில் இருக்கும் குழந்தைகள் களைப்பைச் சிறிதும் அறியா. ராமலக்ஷ்மணர்களின் தாய்மார் அருகில்இல்லை. ஆயினும் மந்திரபலத்தால் ராமலக்ஷ்மணர்கள் சிறிதும் களைப்பின்றி இருந்தனர் என்பது பெறப்படுகிறது. கௌஸல்யைக்கு பலையும், ஸுமித்திரைக்கு அதிபலையும் உபமானமாகலாம். பலையினால் பசியும் அதிபலையினால் தாகமும் நீங்குமென்று கொள்வதில் பிழையொன்றுமில்லை.

पूर्ववृत्तकथितैः पुराविदः सानुजः पितृसखस्य राघवः ।
उह्यमान इव वाहनोचितः पादचारमपि न व्यभावयत् ॥ १० ॥

**वाहनोचितः** - வாஹனத்தில் (சென்று) பழகியவரும், **सानुजः** - தம்பியுடன் கூடியவருமான, **राघवः** - ராமர், **पुराविदः** - பூர்வகால சரித்திரத்தை அறிந்துள்ளவரும், **पितृसखस्य** - தந்தையின் நண்பருமான விசுவாமித்திருடைய, **पूर्ववृत्तकथितैः**-(முற்காலத்தில் நடந்த) வரலாற்றைப்

பற்றிய பேச்சுக்களால், उह्यमानः इव - (வாஹனத்தில்) ஏற்றிச் செல்லப்படுபவர்போல, पादचारं अपि - கால்களால் நடந்து செல்வதையும், न व्यभावयत् - உணரவில்லை.

(க-து) வழி நடக்கும்போது கதைகளைப் பேசிக்கொண்டு போனால் சிரமம் தெரிவதில்லை. விசுவாமித்திரர் ராமரையும், லக்ஷ்மணனையும் அழைத்துச் செல்லுகையில், பல கதைகளைக் கூறிக்கொண்டே சென்றார். அக்கதைகளை ஆர்வத்துடன் கேட்டு வந்த ராமலக்ஷ்மணர்கள், நடந்து வழக்கமில்லாத போதிலும் வாகனத்தில் செல்பவர்கள்போல் களைப்பை உணராமல் சென்றனர்.

वाहनोचितः - 'வாஹனத்தில் அழைத்துச் செல்லத்தக்கவர்கள்' என்றும் பொருள் கூறலாம். விசுவாமித்திரரின் வாழ்க்கையே பெரியதொரு சரித்திரமாகும். மேலும் அவர் பழைய வரலாறுகள் எல்லாவற்றையும் நன்கு அறிந்தவர்.

விசுவாமித்திரர் தமது வரலாற்றை, யாகம் முடிந்த பின் மிதிலைக்குச் செல்லும் பொழுது கூறுகின்றதாக ராமாயணத்திலுள்ளது. ஆகையால் இச்சுலோகத்தில் முனிவர் சொன்னதாகக் குறிப்பிடப்பட்டவை மன்மதனது வரலாறு, தாடகை மாரீசன் இவர்களது சரித்திரம், விஷ்ணு ஸித்தாச்ரமத்தில் தவமியற்றியது முதலியனவாகலாம்.

'कथाभिरभिरामाभिः अभिरामौ नृपात्मजौ ।
रमयामास धर्मात्मा कौशिको मुनिपुंगवः ॥' பால.ஸ. 23.23.

तौ सरांसि रसवद्भिरम्बुभिः कूजितैः श्रुतिसुखैः पतत्रिणः ।
वायवः सुरभिपुष्परेणुभिश्छायया च जलदाः सिषेविरे ॥ ११ ॥

सरांसि - தடாகங்கள், तौ - அவ்விரு குமாரர்களையும், रसवद्भिः - இனிமையான, अम्बुभिः - தண்ணீர்களால், सिषेविरे - உபசரித்தன. पतत्रिणः - பக்ஷிகள், श्रुतिसुखैः - காதுகளுக்கு இனிய, कूजितैः - ஒலிகளால், सिषेविरे - உபசரித்தன. वायवः -

காற்றுகள், सुरभि-पुष्परेणुभिः - வாசனையுள்ள மலர்களின் மக ரந்தத் தூள்களால், सिषेविरे - உபசரித்தன. जलदाः च - மேகங் களும், छायया - நிழலினால், सिषेविरे - உபசரித்தன.

(க-து) நற்காரியத்தைச் செய்யப் போகும் அவ்விருவருக்கு, இயற்கையும் தன்னால் இயன்ற உதவியைப் புரிந்தது. காட்டிலுள்ள தடாகங்கள் பருகுதற்கினிய நீரைத் தந்தும், காற்று நறுமணத்துடன் வீசியும், பக்ஷிகள் அழகாகப் பாடியும், மேகங்கள் நிழலைக் கொடுத்தும் ராம லக்ஷ்மணர்களுக்கு வழியில் களைப்புத் தெரியாமலிருக்க உபசரித் தன.

नाम्भसां कमलशोभिनां तथा शाखिनां च न परिश्रमच्छिदाम् ।
दर्शनेन लघुना यथा तयोः प्रीतिमापुरुभयोस्तपस्विनः ॥ १२ ॥

तपस्विनः - தவஞ் செய்பவர்கள், लघुना - மனத்திற்குப் பிடித்த, तयोः उभयोः - அவ்விருவருடைய, दर्शनेन - காட்சி யினால், यथा - எப்படி, प्रीतिं आपुः - சந்தோஷத்தை அடைந் தனரோ, तथा - அப்படி, कमलशोभिनाम् தாமரைகளால் விளங்குகின்ற, अम्भसाम् - நீர்நிலைகளின், दर्शनेन च - காட் சியினாலும், प्रीतिम् - சந்தோஷத்தை, आपुः न - அடைய வில்லை.

(க-து) தாமரை பூத்து விளங்கும் தடாகங்களும், களைப்பைப் போக்குகின்ற அடர்ந்து ஓங்கி வளர்ந்த மரங்களும் காட்டில் வசிக்கும் முனிவர்களுக்கு மனச்சாந்தியைத் தந்து மகிழ்வித்தன. ராம லக்ஷ் மணர்களைக் கண்ட பிறகு அம்முனிவர்களுக்கு இவர்களுடைய அழ கிய தோற்றங்களைக் காண்பதால் ஏற்படும் மனமகிழ்ச்சி, மற்ற தடா கம் முதலியவற்றால் ஏற்படவில்லை. அவர்களுடைய தோற்றம் மனத் திற்கு அமைதியையும் மகிழ்ச்சியையுந் தரவல்லதாக இருந்தது என் பது கருத்து.

மரங்களும், தடாகங்களும் தரும் இன்பம் சிறிது காலமே இருக்கின்றது. ராமலக்ஷ்மணர்களோ வெனின்

அரக்கர்களை யழித்துநிரந்தரமானபயனை அளிக்கப்போவதால் அவர்களது காட்சி அதிகமகிழ்ச்சி யளித்தது எனலாம்.

स्थाणुदग्धवपुषस्तपोवनं प्राप्य दाशरथिरात्तकार्मुकः ।
विग्रहेण मदनस्य चारुणा सोऽभवत् प्रतिनिधिर्न कर्मणा ॥ १३ ॥

**आत्तकार्मुकः** - ஏந்திய வில்லை உடைய, **सः** - அந்த, **दाशरथिः** - ராமர், **स्थाणु-दग्ध-वपुषः** - பரமசிவனால் எரிக்கப் பட்ட உடலை உடைய, **मदनस्य** - மன்மதனுடைய, **तपोवनम्**- தபோவனத்தை, **प्राप्य** - அடைந்து, **चारुणा** - அழகிய, **विग्रहेण** - உடலினால், **प्रतिनिधिः** - (மன்மதனுக்கு) பிரதிநிதி யாக, **अभवत्** - இருந்தார், **कर्मणा** - செயலினால் (பிரதிநிதி யாக), **न अभवत्** - ஆகவில்லை.

(க-து) ராமலக்ஷ்மணர்கள், வழியில் மன்மதனது ஆச்ரமம் சென் றனா. இந்தச சுலோகத்தில் ராமருடைய அழகு கூறப்படுகிறது.

அவர்கள் செல்லும் வழியில் முன்னொரு காலத்தில் பரமசிவன் தவஞ்செய்த காட்டை அடைந்தனர். அங்கு மன்மதன் கையில் வில்லை ஏந்திப் பரமசிவனாரின் தவத்தைக் கெடுக்க முயலுகையில் மஹேசுவரரால் எரிக்கப்பட்டான். அதே காட்டில் ராமர் கையில் வில்லை ஏந்திச் சென்றபொழுது மன்மதன் போலவே அவர் காணப் பட்டார். ஆனால் உருவத்தால் மட்டுமே ராமர் மனமதனை ஒத்திருந் தாரே யன்றித் தவத்தைக் குலைக்கும் செயலில் அவனை ஒத்திருக்க வில்லை. ராமருடைய அவதாரமே தவத்தைக் காப்பதற்காக அன்றோ ஏற்பட்டது!

तौ सुकेतुसुतया खिलीकृते कौशिकाद्विदितशापया पथि ।
निन्यतुः स्थलनिवेशिताटनी लीलयैव धनुषी अधिज्यताम् ॥ १४ ॥

**कौशिकात्** - விசுவாமித்திரரிடமிருந்து, **विदितशापया** அறிந்து கொள்ளப்பட்ட சாபத்தை உடைய, **सुकेतुसुतया** ஸுகேது என்ற அரக்கனின் மகளான தாடகையால்,

**खिलीकृते** - ஜனங்களற்றதாகச் செய்யப்பட்ட, **पथि** - வழியில், **तौ** - அவ்விராம லக்ஷ்மணர்கள், **स्थल-निवेशित-अटनी** - தரையில் ஊன்றப்பட்ட (வில்) முனையையுடையவர்களாக, **धनुषी**-விற்களை, **लीलया एव** விளையாட்டாகவே, **अधिज्यताम्**-ஏற்றிய நாணை உடைய நிலையை, **निन्यतुः** - அடைவித்தனர்.

(க-து) செல்லும் வழியில் அவ்விராம லக்ஷ்மணர்கள் ஸுகேது என்ற யக்ஷன்மகளான தாடகைக்கு அகஸ்தியரால் ஏற்பட்ட சாபத்தைப் பற்றித் தெரிந்து கொண்டனர். அவ்வரக்கியினிடமுள்ள பயத்தால் அந்த வனம் ஜன நடமாட்ட மில்லாததாக இருந்தது. அவ்விடத்தில் அத்தாடகையைக் கொல்லும் நோக்கத்துடன் வில்லின் முனையைத் தரையிலே ஊன்றி நாண் கயிறுகளைப் பூட்டினர்.

யக்ஷராஜனான ஸுகேது என்பவன் தவம் செய்து பிரம்ம தேவரது அருளால் ஆயிரம் யானை பலமுடைய ஒரு பெண்ணைப் பெற்றான். அவளை ஸுந்தன் என்பவன் மணம் செய்து கொண்டான். அவளது மகன்தான் மாரீசன். அவள் அகஸ்தியருடைய தவத்தைக் கெடுத்ததால் ராக்ஷஸியாகும்படி அவரால் சபிக்கப் பட்டாள். மகனும் ராக்ஷஸனானான். அவள் தான் வஸித்த தேசத்தை அழித்து நிர்மானுஷ்யமான காடாகச் செய்தாள்.

**लीलया एव** - இதனால் வில்லை நாணேற்றியது, தாடகையினிடமிருந்து தங்களைக் காத்துக்கொள்ள வேண்டுமென்ற விருப்பத்தாலன்று என்பது புலனாகும்.

ज्यानिनादमथ गृह्णती तयोः प्रादुरास बहुलक्षपाछविः ।
ताडका चलकपालकुण्डला कालिकेव निबिडा बलाकिनी ॥ १९ ॥

**अथ** - பிறகு, **तयोः** - அவர்களுடைய, **ज्या-निनादम्**-நாண் கயிற்றின் ஒலியை, **गृह्णती** - கேட்பவளும், **बहुल क्षपा-छविः** - க்ருஷ்ண பக்ஷத்து இரவைப்போன்ற நிறத்தையுடையவளும், **चल-कपाल-कुण्डला** - ஆடுகின்ற மண்டை யோடுகளைக் காதணியாகக் கொண்டவளுமான, **ताडका** - தாடகை,

**निविडा** - அடர்த்தியானதும், **बलाकिनी** - வெண் கொக்குக் கூட்டங்களை (அருகில்) உடையதுமான, **कालिका इव** - மேக வரிசை போல, **प्रादुरास** - தோன்றினாள்.

(க-து) வில்லின் நாண் ஒலியைக் கேட்டுத் தாடகை அவர்கள் எதிரே வந்தாள். அவளுடைய உருவம் க்ருஷ்ண பக்ஷத்து இரவைப் போன்று கருத்திருந்தது. காதுகளில் மனிதர்களின் மண்டையோடுகளை அணிந்திருந்தாள். இந் நிலையில் அவளுக்கு உபயானமாக இருந்தது, அடர்ந்த மேகக்கூட்டம்; கருத்த மேகங்களுக்கு அருகில் வெண் கொக்குகள் இருப்பது, வெள்ளையான மண்டையோடு, அவளது கருத்த உடலில் காதணியாக இருப்பதற்கு உபமானமாகின்றது.

तीव्रवेगधुतमार्गवृक्षया प्रेतचीवरसा स्वनोग्रया ।
अभ्यभावि भरताग्रजस्तया वात्ययेव पितृकाननोत्थया ॥ १६ ॥

**तीव्रवेग-धुत-मार्गवृक्षया** - தீவிரமான வேகத்தினால் அசைக்கப்பட்ட வழியிலுள்ள மரங்களை உடையவளும், **प्रेत-चीवर-वसा** - பிரேதங்களின் (உடலில் போர்த்தப் பெற்ற) கந்தைகளை அணிந்தவளும், **स्वनोग्रया** - ஒலியினால் அச்சமூட்டுபவளும் ஆன, **तया** - தாடகையினால், **पितृकाननोत्थया**- மயானத்தில் எழுந்த, **वात्यया इव** - காற்றினால் போல, **भरताग्रजः** - பரதனின் மூத்த சகோதரர் ராமர், **अभ्यभावि** - எதிர்க்கப் பட்டார்.

(க-து) தாடகை வரும்பொழுதே வழியிலிருந்தமரங்கள் அவள் வரும் வேகத்தால் அசைந்தன. அவள், தனது உடலில் பிணங்களின் மீது அணியப்பெறும் ஆடைகளைத் தரித்திருந்தாள். அவளது குரல் கேட்பதற்குப் பயங்கரமானதாக இருந்தது. மயானத்தில் வீசும் காற்றைப்போல அருவருக்கத்தக்கவளாக இருந்தாள். இத்தகைய தாடகை ராமரை எதிர்த்து வந்தாள்.

'**तीव्रवेग....,प्रेतचीवरवसा, स्वनोग्रया**' - என்றவைகளை, **वात्यया** - என்பதுடன் சேர்த்தும் பொருள் கூறவேண்டும்.

மயானத்தில் தோன்றும்காற்று அருகிலுள்ள மரங்களை

அசைப்பது, பிணத்துணிகளைக் கவர்வது, அருவருக்கத் தக்க நிலையில் அச்சத்தையும் உண்டாக்குவது; ராமலக்ஷ்மணர் இருவருமே நாணேற்றி ஒலி எழுப்பியவர்களாயினும் முன் நின்று கொண்டிருந்ததால் முதலில் ராமரை எதிர்த்து ஓடினாள் தாடகை.

उद्यतैकभुजयष्टिमायतीं श्रोणिलम्बिपुरुषान्त्रमेखलाम् ।
तां विलोक्य वनितावधे घृणां पत्रिणा सह मुमोच राघवः ॥१७॥

**उद्यत-एकभुज-यष्टिम्** - உயரே தூக்கப்பட்ட தடிபோன்ற கையுடையவளும், **आयतीम्** - (எதிர்த்து) வருகின்றவளும், **श्रोणि-लम्बि-पुरुषान्त्र - मेखलाम्** - இடுப்பில் தொங்குகின்ற-மனிதர்களின் குடல் நரம்புகளையே மேகலையாக உடையவளு மான, **ताम्** - அத் தாடகையை, **विलोक्य** - பார்த்து, **राघवः**- ராமர் **वनिता-वधे**-மாதரைக் கொல்வதில் (ஏற்படும்), **घृणाम्**- கருணையை, **पत्रिणा सह** - அம்புடன் கூட, **मुमोच** - விட் டார்.

(க-து) மனிதர்களின் குடல்களை ஒட்டியாணமாக அணிந்துக் கோரத் தோற்றத்தை உடைய அத்தாடகை தடிபோன்ற தன் கையை உயரத் தூக்கிக் கொண்டு, ராமரைக் கொல்ல எண்ணி அவரெதிரே ஓடிவந்தாள். அதைக் கண்ட ராமர் தன்னைக் கொல்லவரும் பெண் ணையும் கொல்லலாம் என நினைத்து, மனத்தில் கருணை கொள்ளா மல் பாணத்தைப் பிரயோகித்தார்,

**श्रोणि....मेखलाम्** - 'பல ஆண்களைக் கொன்று அதற்கு அடையாளமாக, அவர்களது குடல் நரம்புகளைக் கொண்டு மேகலையணிந்துள்ள தாடகைக்குப் பெண்மை ஏது? அவள் பெண்ணே அல்ல' எனக் கருதினர், என்பது இவ்விசேஷ ணத்தால் குறிக்கப்படுகிறது.

यच्चकार विवरं शिलाघने ताडकोरसि स राममायकः ।
अप्रविष्टविषयस्य रक्षसां द्वारतामगमदन्तकस्य तत् ॥ १८ ॥

**सः** - அந்த, **रामसायकः** - ராமருடைய பாணமானது, **शिलाघने** - கல்லைப்போல் உறுதியான, **ताडकोरसि** - தாடகை யின் மார்பில், **यत् विवरं** - எந்த துவாரத்தை, **चकार** - செய் ததோ, **तत्** - அந்த துவாரமானது, **रक्षसाम्** - அரக்கர் களுடைய, **अप्रविष्टविषयस्य** - உட்புகாத இடத்தை உடைய, **अन्तकस्य** - யமனுக்கு, **द्वारताम्** - வாயிலாயிருக்குந் தன் மையை, **अगमत्** - அடைந்தது.

(க-து) ராமருடைய பாணம், பாறை போன்ற உறுதியான தாடகையின் மார்பைத் தொளைத்தது. இதுவரை அரக்கர் குலத்தில் மரணம் என்று ஒன்று ஏற்பட்டதேயில்லை. ஆகவே யமனுக்கு இங்கு வழியே இல்லாமலிருந்தது. யமன் அரக்கர் நாட்டினுள் புகாது வெளி யிலே சுற்றிக் கொண்டிருந்தான். இப்பொழுது தாடகையின் மார்பில் ஏற்பட்ட துவாரம், இனி ஏற்படப்போகும் பல மரணங்களை யுண் டாக்குவதற்காக யமன் புக வழி திறந்துவிட்டது போல ஆயிற்று.

बाणभिन्नहृदया निपेतुषी सा स्वकाननभुवं न केवलाम् ।
विष्टपत्रयपराजयस्थिरां रावणश्रियमपि व्यकम्पयत् ॥ १९ ॥

**बाण-भिन्न हृदया** -பாணத்தினால் பிளக்கப்பட்ட மார்பை உடைய, **सा** - அத் தாடகை, **निपेतुषी** - கீழே வீழ்ந்தவளாக, **स्वकानन-भुवं केवलाम्** - தனது காட்டைச் சேர்ந்த நிலத்தை மாத்திரமே, **न व्यकम्पयत्** - நடுங்கச் செய்தாள் என்பதில்லை. **(किं तु** - ஆனால்), **विष्टप-त्रय-पराजय स्थिराम्** - மூன்று உல கத்தையும் தோல்வியுறச் செய்ததால் நிலைபெற்றுள்ள, **रावणश्रियं अपि** - ராவணனுடைய ஐசுவரியத்தையும், **व्यकम्पयत्** - நடுங்கச் செய்தாள்.

(க-து) தாடகை, ராமரின் பாணத்தினால் மார்பு பிளக்கப்பட் டுக் கீழே வீழ்கையில் அக்காடு முழுவதுமே நடுங்கியது. இது, மூன்று உலகத்தையும் வெற்றிகொண்டு, தம்மை வெல்பவர் யாரு மில்லாததால் இறுமாந்துள்ள ராவணனுக்கு இனி வரப்போகும் வீழ்ச்சிக்கும் அறிகுறியாக இருந்தது.

रामन्मथशरेण ताडिना दुःसहेन हृदये निशाचरी ।
गन्धवद्रुधिरचन्दनोक्षिता जीवितेशवसतिं जगाम सा ॥ २० ॥

**सा** - *அந்த*, **नीशाचरी** - *அரக்கி*, **दुःसहेन** - *ஸஹிக்கமுடியாத*, **राम-मन्मथ-शरेण** - *ராமர் என்ற மன்மதனது பாணத்தினால்*, **हृदये** - *மார்பில் (மனத்தில்)*, **ताडिना** - *அடிக்கப்பட்டு*, **गन्धवद्-रुधिर चन्दन-उक्षिता** - *நாற்றமுள்ள ரத்தமாகிய சந்தனத்தைப் பூசியவளாக*, **जीवित-ईश-वसतिम्** - *யமனுடைய உலகை*, **जगाम** - *சென்றாள்*.

*(க-து) ராமபாணத்தினால் தாக்கப்பட்டு அவள் யமனுலகு அடைந்தாள். ரத்தம் அவள் உடலெங்கும் பெருகிப் பரவிக் கிடந்தது.*

*இச்சுலோகத்திலே உள்ள பதங்கள் மற்றொரு பொருளையும் குறிக்கும் சக்தி வாய்ந்தன வாதலால், 'இரவிலே தான் விரும்பிய புருஷனையடையச் செல்லும் ஒரு ஸ்திரீயின் வரலாறும்' தொனிக்கின்றது.*

*பொழிப்புரை: இரவிலே திரிகின்ற ஒரு அபிஸாரிகை (ஸ்திரீ) அழகான மன்மதபாணத்தினால் மனத்திலே தாக்கப்பட்டு, நறுமணமுள்ள குங்குமப் பூ கலந்த சந்தனம் பூசியவளாய், தனது காதலனிருப்பிடம் சென்றனள்' என்பது மற்றொரு பொருள். இவ்வாறு ஒன்றுக்கொன்று முரணான பீபத்ஸம் காதல் என இரண்டு சுவைகளைச் சேர்த்து கவி கூறியது விரஸமானது, என்பர் சிலர்.*

नैर्ऋतघ्नमथ मन्त्रवन्मुनेः प्रापदस्त्रमवदानतोषितात् ।
ज्योतिरिन्धननिपाति भास्करात् सूर्यकान्त इव ताडकान्तकः ॥ २१ ॥

**अथ** - *பிறகு*, **ताडकान्तकः** - *தாடகையை முடித்த ராமர்*, **अवदान-तोषितात्** - *பராக்ரமத்தினால் மகிழ்விக்கப்பட்ட*, **मुनेः** - *மகரிஷியினிடமிருந்து*, **नैर्ऋतघ्नम्** - *அசுரர்களைக் கொல்லுகின்றதும்*, **मन्त्रवत्** - *மந்திரத்துடன் கூடி*

யதுமான, अस्त्रम् - அஸ்திரத்தை, सूर्यकान्तः - ஸூரியகாந்தக்கல், भास्करात् - ஸூரியனிடமிருந்து, इन्धन-निपाति - கட்டைகளைக் கொளுத்துகின்ற, ज्योतिः इव - தீயைப் (பெறுவது)போல, प्रापत् - அடைந்தார்.

(க-து) சூரிய காந்தக்கல் சூரியனிடமிருந்து சூட்டைப் பெற்று அச்சூட்டினுல் விறகுகளை எரிக்கும் சக்தியைப் பெறுகிறது. அது போல், ராமர் விசுவாமித்திரரிடமிருந்து மந்திரங்களுடன் கூடிய அஸ்திரங்களைப் பெற்று, அஸுரர்களைக் கொல்லும் வன்மையைப் பெற்றுர்.

अवदानम् - சிறந்த பராக்ரமம்; ராமர் தாடகையைக் கொன்று, அதன்மூலம் அஸ்திரங்களைப் பெறத்தமது தகுதியுடைமையைக் காட்டினுர்.

'ऊषरे निवपेद् बीजम् षण्डे कन्यां प्रयोजयेत्।
सृजेद्वा वानरे मालां नापात्रे शास्त्रमुद्दिशेत्॥' என்றதைக் காண்க.

ஸூர்யனுடைய ஒளி அவனிடமிருக்கும் பொழுது கட்டைகளை எரிப்பதில்லை. ஆயின் அவ்வொளி ஸூர்ய காந்தக்கல் மூலம் நெருப்பாகத்தோன்றிக் கட்டைகளை எரிக்கின்றது. அதுபோல் அரக்கர்களை அழிக்காது விச்வாமித்திரரிடமிருந்த அஸ்த்ரம், ராமரிடம்வந்தபொழுது அரக்கர்களை (नैर्ऋतघ्न) அழிப்பதாயிற்று; 'यथा सूर्यस्थितमेव तेजः सूर्यकान्तसंक्रान्तमिन्धनदाहि भवति एवं मुनेरस्त्रमपि रामसंक्रान्तं सत् रक्षोघ्नं भवतीत्यर्थः।' नारायणः॥ अस्त्रम् என்பது சாதி ஒருமை. பல அஸ்த்ரங்களைப் பெற்றுர் என்பது கருத்து. मन्त्रवत्-'விடுத்த அஸ்த்ரங்களைத் திரும்பவும் தம்மிடம் அழைத்துக் கொள்வதற்கான மந்திரங்களையுடைய' என்று பொருள். 'प्रयोगसंहारविभक्तमन्त्रम्' என முன்பும் (5-57) கூறியிருத்தலைக் காண்க.

'गृहीतास्त्रोऽस्मि भगवन् दुराधर्षः सुरैरपि ।
अस्त्राणां त्वहमिच्छामि संहारान् मुनिपुङ्गव ॥'

என்பது ஸ்ரீமத் ராமாயணம்.

वामनाश्रमपदं ततः परं पावनं श्रुतमृषेरुपेयिवान् ।
उन्मनाः प्रथमजन्मचेष्टितान्यस्मरन्नपि बभूव राघवः ॥ २२ ॥

**ततः परम्** - அதற்குப்பின், **राघवः** - ராமர், **ऋषेः**-முனிவரிடமிருந்து, **श्रुतम्** - கேள்வியுற்றதும், **पावनम्**-மிகத்தூய்மையளிப்பதுமான, **वामन-आश्रम पदम्**- வாமனரின் ஆச்ரமஸ்தானத்தை, **उपेयिवान्**-அடைந்தவராக, **प्रथम-जन्म-चेष्टितानि**-(தமது) பூர்வஜன்ம காரியங்களை, **अस्मरन् अपि** - நினைக்காதபொழுதும், **उन्मनाः**- ஆவலுடன் கூடிய மனமுடையவராக, **बभूव** - ஆனார்.

(க-து) தாடகையைக் கொன்றபின் ராமர், வாமனாச்ரமம் சென்று வாமனருடைய தென்பதை விச்வாமித்ரர் கூற அறிந்தார். வாமனர் வஸித்த காரணத்தால் அது, தூய்மையளிப்பதாக இருந்தது. அத்தகைய ஆச்ரமத்தை அடைந்ததும் ராமர், விவரிக்க இயலாத இன்பகரமான மன வெழுச்சியுடன் இருந்தார்.

தாம் முன் வாமனராக அவதாரஞ் செய்து அந்நிலையில் செய்த காரியங்களையும், முன்பு இவ்வாச்ரமத்தில் தாம்வசித்தோம் என்பதையும் நினைவில் கொண்டுவர இயலாவிடினும் அந்த இடத்தைக்கண்ட மாத்திரத்லே அவர் மனத்தில் புதுமையான ஓர் இன்ப உணர்ச்சி தோன்றியது. பழைய இன்பங்களைநினைத்து மகிழ்வது உலக இயற்கை. மகிழ்ச்சிக்கு நினைவுகாரணமாகின்றது. ராமருக்குத் தமது பூர்வ அவதார நிகழ்ச்சிகள் நினைவுக்கு வராவிடினும் விவரிக்க இயலாத ஓர் உணர்ச்சி வாமனாச்ரமம் அடைந்ததும் உண்டாயிற்று. நினைவின்றி மகிழ்ச்சியுண்டாயின், அதற்குக் காரணம்,'நினைக்கின்றோம் என்ற எண்ணமின்றி ஒரு ஸம்பவத்தை நினைப்பது

தான்.' இத்தகைய அனுபவம் உலகிலே இயற்கையான தொன்றே என்பதைக் கவி,

रम्याणि वीक्ष्य मधुरांश्च निशम्य शब्दान्
पर्युत्सुकी भवति यत्सुखितोऽपि जन्तुः ।
तच्चेतसा स्मरति नूनमबोधपूर्वं
भावस्थिराणि जननान्तरसौहृदानि ॥

என சாகுந்தளத்திலும் கூறினர்.

வாமனாச்ரமம். ஒரு சமயம் விஷ்ணு, பூலோகத்தில் ஒரு ஆச்ரமத்தை அமைத்துக் கொண்டு பல காலம் தவம் செய்து ஸித்திபெற்றதால் அவ்வாச்ரமத்திற்கு ஸித்தாச்ரமம் என்று பெயர் உண்டாயிற்று. அச்சமயத்தில் பலி, தேவர்களின் செல்வம் முழுவதையும் கவர்ந்து கொண்டு யாகாதிகளைச் செய்து வரவும் செல்வமிழந்த தேவர்கள், தவம் செய்யும் விஷ்ணுவிடம் சென்று, பலியினிடமிருந்து செல்வத்தை மீட்டுத் தரவேண்டுமென வேண்டினர். விஷ்ணு கச்யப முனிவருக்குப் புத்திரராக வாமனவடிவில் தோன்றித் தேவர்களின் விருப்பத்தை நிறைவேற்றினர். வாமனராகப் பிறந்த விஷ்ணு வசித்த அவ்வாச்ரமத்திற்குப் பின் வாமனாச்ரமம் என்ற பெயரும் உண்டு. வாமனரிடம் உள்ள அன்பினால் விச்வாமித்ரரும் அவ்வாச்ரமத்தையே தமது உறைவிடமாகக் கொண்டார்.

तेनैव पूर्वमाक्रान्तः आश्रमः श्रमनाशनः ।
मयापि भक्त्या तस्यैव वामनस्योपभुज्यते ॥

என விச்வாமித்ரர் கூறுகிறார்.

**परम्**- என்பதை ஆச்ரமத்திற்கு விசேஷணமாகக் கொண்டு, 'சிறந்த' என்றும்பொருள் கூறலாம். **आश्रमपदम्**- ஆச்ரமமிருக்கின்ற இடம்; விஷ்ணு எடுத்த அவதாரங்கள்

பத்தனுள் வாமனவதாரம் ஐந்தாவது; ஆறாவது, ராமாவதாரம்; ஆகையால் प्रथमजन्म - என்பதற்கு 'முதலாவதான' என்ற பொருள் கொள்ளாது, 'முன்னதான' என்று பொருள் உரைக்க வேண்டும்: चेष्टितानि - பலியினிடம் மண் வேண்டியது, அவனையடக்கியது முதலிய செயல்கள்; अस्मरन्नपि - ஒரே ஜன்மத்தில் நிகழ்ந்தவைகளை நினைப்பது ஸஹஜம். பூர்வ ஜன்மத்தில் நடந்தவைகளை மறு ஜன்மத்தில் நினைவில் கொண்டுவருவது ஸாத்யமன்று. வாமனராக இருந்த ஜன்மம் வேறு. ராமராக இருக்கின்ற ஜன்மம்வேறு. ஆகவே ராமர், வாமன அவதார காரியங்களை நினைக்கவில்லை. நினைக்காவிடினும்,வாமனவதார நிகழ்ச்சிகள் ஆழ்ந்த ஸம்ஸ்காரங்களை உண்டாக்கி இருந்ததால், ஆச்ரமத்தைக் கண்டவுடன் காரணம் காணமுடியாத ஒரு இன்பத்தை அவர் உணர்ந்தார்.

आससाद मुनिरात्मनस्ततः शिष्यवर्गपरिकल्पितार्हणम् ।
बद्धपल्लवपुटाञ्जलिद्रुमं दर्शनोन्मुखमृगं तपोवनम् ॥ २३ ॥

ततः - பிறகு, मुनिः - விசுவாமித்திரர், शिष्य-वर्ग-परिकल्पित-अर्हणम् - சிஷ்யர்களின் கூட்டத்தினால் தயார் செய்யப்பட்ட பூஜைப்பொருளுடையதும், बद्ध-पल्लव-पुटाञ्जलि-द्रुमम्- தளிர்களால் செய்யப்பட்ட அஞ்சலிகளுடன் கூடியமரங்களை உடையதும், दर्शनोन्मुखमृगम् - (தம்மைப்) பார்ப்பதற்காக நிமிர்த்திய முகங்களையுடைய மான்களைப் பெற்றதுமான, आत्मनः - தம்முடைய, तपोवनम् - தபோவனத்தை, आससाद- அடைந்தார்.

(க-து) விசுவாமித்ரரின் ஆசிரமத்தில் பூஜைக்கு வேண்டிய பொருள்களை அவருடைய சிஷ்யர்கள் சேமித்து வைத்திருந்தனர். ஆச்ரமத்தின் அருகிலிருந்த மரங்கள் தளிர்களாகிய கைகளைக்கூப்பி வரவேற்பன போல இருந்தன. அங்குள்ள மான்கள் தலைகளைத் தூக்

கிப் புதிதாக வரும் ராமலக்ஷ்மணர்களைப் பார்த்தன. அத்தகைய தபோவனத்தை விசுவாமித்திரர் அடைந்தார்.

இரவிலே இலைகள் ஒன்று சேர்ந்திருப்பது இயல்பு. அதைக்கவி, முனிவருக்கு மரங்களும் கைகூப்பி வணங்கின வாகக் கூறினர்.

तत्र दीक्षितमृषिं ररक्षतुर्विघ्नतो दशरथात्मजौ शरैः ।
लोकमन्धतमसात्क्रमोदितौ रश्मिभिः शशिदिवाकराविव ॥ २४ ॥

**क्रमोदितौ** - முறையே (ஒன்றன் பின் ஒன்றாக) உதித்த **शशि-दिवाकरौ** - சந்திர சூரியர்கள், **रश्मिभिः** - கிரணங்களால், **अन्धतमसात्** - இருளிலிருந்து, **लोकं इव** - உலகத்தைக் காப்பதுபோல, **तत्र** - அத்தபோவனத்தில், **दशरथात्मजौ** - தசரதரின் பிள்ளைகளான ராமலக்ஷ்மணர்கள், **दीक्षितम्** - (யாகத்திற்காக) ஸங்கல்பம் செய்துகொண்டுள்ள, **ऋषिम्** - விசுவாமித்திர முனிவரை, **शरैः** - பாணங்களால், **विघ्नतः** - இடையூறுகளிலிருந்து, **ररक्षतुः** - காத்தனர்.

(க-து) சூரியன் பகலிலும், சந்திரன் இரவிலும் தங்களது கிரணங்களால் உலகத்தை இருளிலிருந்து காக்கின்றனர். அதைப் போல ராமரும் லக்ஷ்மணனும் யாகம் செய்யும் முனிவரைத் தங்கள் பாணங்களால் இடையூறுகளிலிருந்து காத்தனர்.

वीक्ष्य वेदिमथ रक्तबिन्दुभिर्बन्धुजीवपृथुभिः प्रदूषिताम् ।
संभ्रमोऽभवदपोढकर्मणामृत्विजां च्युतविकङ्कतस्रुचाम् ॥ २५ ॥

**अथ** - பிறகு, **बन्धुजीव-पृथुभिः** - செம்பருத்திப் புஷ்பம் போல பெரிதான, **रक्तबिन्दुभिः** - ரத்தத் துளிகளால், **प्रदूषिताम्** - கெடுக்கப்பட்ட, **वेदिम्**-வேதியை (யாகமேடையை), **वीक्ष्य** - பார்த்து, **अपोढकर्मणाम्** - நிறுத்திய செயல்களை உடையவர்களும், **च्युतविकङ्कतस्रुचाम्** - நழுவிய விகங்கத (மரத்தால் செய்யப்பட்ட) ஸ்ருக்குகளை உடையவர்களுமான,

**ऋत्विजाम्** - (யாகஞ் செய்யும்) *ரித்விக்குகளுக்கு*, **संभ्रमः** - *பரபரப்பு*, **अभवत्** - *ஏற்பட்டது.*

(க-து) *யாகஞ் செய்யும் சமயத்தில் அரக்கர்கள் ஆகாயத்தில் வந்து யாகவேதியின் மீது ரத்தத் துளிகளைத் தெளித்தனர் அத்துளிகள் செம்பருத்திப் புஷ்பம்போல் பெரியனவாக இருந்தன. அதைக் கண்ட ரித்விக்குகள் யாகஞ் செய்வதை நிறுத்திவிட்டனர். அவர்கள் கையிலிருந்து 'ஸ்ருக்' எனப்படும் யாகஞ் செய்வதற்கு வேண்டிய கருவி நழுவிக் கீழே வீழ்ந்தது ; அவர்களிடையே ஒரு பரபரப்பு ஏற்பட்டது.*

*செம்பருத்திப்பூ சிவப்பாக இருப்பதால் ரத்தத்துளிகளுக்கு உவமையாக வந்தன.* **च्युतविकङ्क....चाम्** - *அச்சத்தினால் ரித்விக்குகளின் கையிலிருந்த கரண்டிகள் தாமாக நழுவி விழுந்தன.* **विकंकतः**-ஒரு வகைமரம். இலந்தை என்பர் சிலர். **स्रुचः**-நெய் முதலியவற்றை அக்னியில் ஆஹுதி செய்வதற்காக நீண்ட பிடியுள்ள கரண்டி. இது விகங்கத மரத்தினால் செய்யப்படுவது. **ऋत्विजः** - யாகம் செய்வதில் உதவுபவர்கள். **'ऋत्विजां संभ्रमः अभवत्'**-என்பதால் யஜமானரான விச்வாமித்திரருக்குக் கலக்கம் ஏதும் உண்டாகவில்லை என்பது தொனி. ஏனெனில் ராமபலத்தில் அவருக்கு நம்பிக்கை உண்டு. **'अहं वेद्मि महात्मानम् रामं सत्यपराक्रमम्'** என்று முன்பும் விச்வாமித்திரர், ராமரைப்பற்றித் தாம் கொண்ட எண்ணத்தைத் தெரிவித்துள்ளார்.

उन्मुखः सपदि लक्ष्मणाग्रजो बाणमाश्रयमुखात् समुद्धरन् ।
रक्षसां बलमपश्यदम्बरे गृध्रपक्षपवनेरितध्वजम् ॥ २६ ॥

**सपदि** - உடனே, **लक्ष्मणाग्रजः** - *லக்ஷ்மணருக்கு முன் பிறந்த ராமர்*, **बाणम्** - *பாணத்தை*, **आश्रयमुखात्** - *அம்பறாத் தூணியிலிருந்து*, **समुद्धरन्** - *எடுத்து*, **उन्मुखः** - *நிமிர்த்திய முகத்தை உடையவராக*, **अम्बरे** - *ஆகாயத்தில்*, **गृध्र-**

पक्ष-पवनेरित-ध्वजम् - கழுகுகளின் இறக்கைகளிலிருந்து உண்டாகும் காற்றினால் அசைக்கப்பட்ட கொடிகளையுடைய, रक्षसाम् - ராக்ஷஸர்களின், बलम् - ஸைன்யத்தை, अपश्यत् - பார்த்தார்.

(க-து) ரத்தத் துளிகள் கீழே சிந்தியதும் ராமர் அம்பை எடுத்துத் தயாராக வைத்துக்கொண்டு ஆகாயத்தை நோக்கினார். அங்கு அரக்கர்களின் பெரியதொரு ஸேனை காணப்பட்டது. அவர்களுடைய கொடிகளைச் சுற்றிக் கழுகுகள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன.

கொடிகளைச் சுற்றி கழுகுகள் பறப்பது பின்வரப் போகும் நாசத்திற்கு அறிகுறியாகும்.

'आसन्नमृत्योर्निकटे चरन्ति गृध्रादयो मूर्ध्नि गृहोर्ध्वभागे'
என சகுனார்ணவம் என்ற நூல் கூறும்.

तत्र यावधिपती मखद्विषां तौ शरव्यमकरोत् स नेतरान् ।
किं महोरगविसर्पिविक्रमो राजिलेषु गरुडः प्रवर्तते ॥ २७ ॥

सः - அவ் விராமர், तत्र - அந்த ராக்ஷஸ சேனையில், यौ - எவ்விருவர், मखद्विषाम् - யாகத்திற்குப் பகைவர்களுடைய, अधिपती - தலைவர்களோ, तौ - அவர்களை (ஸுபாஹு மாரீசர்களை) மாத்திரமே, शरव्यं - (தமது) பாணத்திற்கு இலக்காக, अकरोत् - செய்தார். इतरान् - மற்றவர்களை, न अकरोत् - இலக்காகச் செய்யவில்லை. महोरग-विसर्पि-विक्रमः - பெரிய பாம்புகளின் மீது செல்லுகின்ற பராக்ரமத்தை உடைய, गरुडः - கருடன், राजिलेषु - விஷமற்ற பாம்புகளிடத்தில், प्रवर्तते किं? - செல்லுகின்றானா?

(க-து) ராமர் யாகத்தை அழிக்க வந்த பகைவரின் கூட்டத்திற்குத் தலைவர்களான ஸுபாஹு மாரீசர்களையே முதலில் தண்டிக்க விரும்பினார். மற்றவர்களைப் பற்றி அவர் எண்ணவில்லை. கருடன், கொடிய விஷமுள்ள ஸர்ப்பங்களையே கொல்லுகின்றான். சாதாரணமான விஷமற்றப் பாம்புகளை லக்ஷ்யம் செய்வதில்லை.

ஸுபாஹு-இவன் மாரீசனது ஸஹோதரனுகக் கூறப் படுபவன்.

सोऽस्त्रमुग्रजवमस्त्रकोविदः संदधे धनुषि वायुदैवतम् ।
तेन शैलगुरुमप्यपातयत् पाण्डुपत्रमिव ताडकासुतम् ॥ २८ ॥

अस्त्र-कोविदः - அஸ்திரங்களின் உபயோகத்தை நன்கு அறிந்துள்ள, सः - அந்த ராமர், उग्रजवम् - மிகுந்த வேக முடையதும், वायुदैवतम् - வாயுவைத் தேவதையாக உடையதுமான, अस्त्रम् - பாணத்தை, धनुषि - வில்லில், सन्दधे - பூட்டினுர்; तेन - அந்த பாணத்திஞல், शैलगुरुम् अपि - மலையைப் போல் கனமானவஞயினும், ताटकासुतम् - தாடகையின் மகனுன மாரீசனே, पाण्डुपत्रम् इव - உலர்ந்த சருகைப் போல, अपातयत् - வீழ்த்திஞர்.

(க-து) அஸ்திரங்களை நன்கு அறிந்த ராமர், வாயுவைத் தேவதையாகக் கொண்ட, மிக்கவேகமுள்ள, அஸ்திரத்தை உபயோகித்து மலையைப்போல் கனமான பருத்த சரீரமுடைய மாரீசனை, காய்ந்த இலையை வீழ்த்துவதுபோல் வெகு தொலைவில் வீழ்த்திஞர்.

यः सुबाहुरिति राक्षसोऽपरस्तत्र तत्र विससर्प मायया ।
तं क्षुरप्रशकलीकृतं कृती पत्रिणां व्यभजदाश्रमाद्बहिः ॥ २९ ॥

सुबाहुः इति - ஸுபாஹு என்ற, यः अपरः राक्षसः - எந்த மற்ருெரு அரக்கன், तत्र तत्र - அங்கங்கு, मायया - மாயையிஞல், विससर्प - ஸஞ்சரித்தானே, क्षुरप्र-शकलीकृतम् - கத்திபோல் முனையுள்ள பாணத்திஞல் துண்டாக்கப்பட்ட, तम् - அந்த ஸுபாஹுவை, कृती - ஸமர்த்தரான ராமர், आश्रमात् - ஆசிரமத்திற்கு, बहिः - வெளியே, पक्षिणाम् - பக்ஷிகளுக்கு, व्यभजत् - பிரித்தளித்தார்.

(க-து) ஸுபாஹு ராக்ஷஸர்களுக்குரிய மாயையிஞல் ஓரிடத்தில் நில்லாமல் இங்குமங்கும் வெவ்வேறு வடிவில் தோன்றி ராமரு

அம்புக்கு எளிதில் இலக்காகாதபடி தன்னைச் செய்து கொண்டான்; ஆயினும் திறமைசாலியான ராமர் கத்திபோல் முனையுள்ள பாணத்தினால் அவனது உடலைச் சிறுசிறு துண்டுகளாகச் செய்து, ஆச்ரமத்திற்கு வெளியில் பறவைகளுக்கு உணவாகும்படி வீழ்த்தினார்.

மாரீசனைக் காட்டிலும் ஸுபாஹு மாயையினால்கொடியவனாக இருந்ததால் ராமர் அவனைக்கொன்றார். கொல்லாவிடில் மேலும் உபத்ரவிப்பான்; அவனது உடலை துண்டித்தது, பறவைகள் எளிதிலே உண்பதற்காக. ஆச்ரமத்தினுள் அவன் தேஹம் விழுந்தால் யாகத்ரவ்யங்கள் தூய்மையற்றனவாகுமாதலால் ஆச்ரமத்திற்கு வெளியில் விழச் செய்தார்.

இவ்வளவையும் செய்யும் திறன் ராமருக்கு உண்டு என்பதைக் காட்டுகின்றது, कृती - என்ற விசேஷணம்.

इत्यपास्तमखविघ्नयोस्तयोः सांयुगीनमभिनन्द्य विक्रमम् ।
ऋत्विजः कुलपतेर्यथाक्रमं वाग्यतस्य निरवर्तयन्क्रियाः ॥ ३० ॥

**इति** - இவ்வாறு, **आपास्त-मख-विघ्नयोः** - நீக்கப்பட்ட யாகத்தின் இடையூறுகளை உடைய, **तयोः** - அவ்விராமலக்ஷ்மணர்களின், **सांयुगीनम् विक्रमम्** போர் புரியும் பராக்ரமத்தை, **अभिनन्द्य** - மெச்சி, **ऋत्विजः** - ரித்விக்குகள், **वाग्यतस्य** - மௌனவிரதமனுஷ்டிக்கின்ற, **कुलपतेः** - ரிஷிகளுக்கெல்லாம் தலைவரான விசுவாமித்திரருடைய, **क्रियाः** - யாககாரியங்களை, **यथाक्रमम्** - முறைப்படி, **निरवर्तयन्** - நிறைவேற்றினர்.

(க-து) யாகத்தின் இடையே நேர்ந்த தடைகளைப் போக்கியதற்காக அவ் விராமலக்ஷ்மணர்களின் பராக்ரமத்தை அங்கு வந்திருந்த ரித்விக்குகள் மெச்சினர். மௌன விரதமனுஷ்டிக்கும் விசுவாமித்திரரின் யாகத்தை அவர்கள் முறைப்படி நிறைவேற்றினர்.

விச்வாமித்திரர் மௌன விரதத்துடனிருந்ததால், ராமலக்ஷ்மணர்களின் பராக்ரமத்தை அப்பொழுது அவர்

புகழ்ந்து பேசவில்லை. ரித்விக்குகள் மாத்திரமே கொண்டாடினர். முனிவர் மௌன விரதம் நீங்கியபின் கொண்டாடினார். இது அடுத்த சுலோகத்தில் கூறப்படுகின்றது.

**कुलपतिः**-பதினாயிரம் முனிவர்களுக்கு உணவு முதலிய வசதிகளைக் கொடுத்து கல்வி கற்பிப்பவர்; 'ऋषीणां दशसाहस्रं योऽन्नदानादिपोषणात्। अध्यापति विप्रर्षिरसौ कुलपतिः स्मृतः' என்பதைக் காண்க,

तौ प्रणामचलकाकपक्षकौ भ्रातराववभृथाप्लुतो मुनिः ।
अशिषामनुपदं समस्पृशद्दर्भपाटिततलेन पाणिना ॥ ३१ ॥

**अवभृथ-आप्लुतः** - யாகதீக்ஷையின் முடிவில் ஸ்நானம் செய்த, **मुनिः** - விசுவாமித்திரர், **प्रणाम-चल-काकपक्षकौ** - வணங்குவதால் அசைந்தாடும் காகபக்ஷத்தை உடைய, **तौ-भ्रातरौ** - அந்த சகோதரர்களை, **आशिषाम्** - ஆசீர்வாதங்களுக்கு, **अनुपदम्** - பிறகு, **दर्भ-पाटित-तलेन** - தர்ப்பங்களால் கிறப்பட்ட உள்ளங்கையை உடைய, **पाणिना** - கையினால், **समस्पृशत्** - தடவிக் கொடுத்தார்.

(க-து ஒரு யாகம் முடிந்ததும் அதில் தொடர்புள்ள அனைவரும் ஸ்நானம் செய்வது வழக்கம். அவ்வாறே விசுவாமித்திரர் அவப்ருத ஸ்நானம் செய்ததும் ராம லக்ஷ்மணர்கள் அவரை வணங்கினர். அப்படி வணங்கிய அவ் விருவரையும் ஆசீர்வதித்துவிட்டு, விசுவாமித்திரர் தம் கையினால் அவர்களை அன்புடன் தடவிக் கொடுத்தார்.

அவப்ருதம்—யாகத்தின் முடிவில் செய்யப்படும் சடங்கு.

'**आशिषाम्**' என்பதில் பன்மை, முனிவர் ராம லக்ஷ்மணருக்குப் பயன்களைக் கருதிப் பல ஆசீர்வாதங்களைச் செய்தார் என்பதை உணர்த்துகின்றது; **समस्पृशत्** - பெரியோர்களின் கரஸ்பர்சம் தூய்மையளிப்பது; அவர்களது அன்பின் அடையாளமாகவுமிருப்பது: **स्पृशन् करेणानतपूर्वकायम्** • (5-32) என்றார் கவி முன்பும், முனிவர் எப்பொழு

தும் யாகாதிகளைச் செய்துவந்தார் என்பதை—दर्भपाटिततलेन என்ற விசேஷணம் காட்டுகின்றது.

तं न्यमन्त्रयत संभृतक्रतुर्मैथिलः स मिथिलां व्रजन्वशी ।
राघवावपि निनाय बिभ्रतौ तद्धनुःश्रवणजं कुतूहलम् ॥ ३२ ॥

**संभृतक्रतुः** - யாகத்திற்கான பொருள்களைச் சேகரித்து வைத்துள்ள, **मैथिलः** - மிதிலையின் அரசரான ஜனகர், **तम्** - அந்த விசுவாமித்திரரை, **न्यमन्त्रयत** - அழைத்தார். **वशी** - புலனடக்கமுள்ள அந்த முனிவர், **मिथिलाम्** - மிதிலைக்கு, **व्रजन्** - செல்பவராக, **तद्धनुःश्रवणजम्** - ஜனகருடைய வில்லைப்பற்றிக் கேள்வியுற்றதாலுண்டான, **कुतूहलम्** - ஆவலை, **बिभ्रतौ** - கொண்டுள்ள, **राघवौ अपि** - ராமலக்ஷ்மணர்களையும், **निनाय** - அழைத்துச் சென்றார்.

(க-து) மிதிலை நகரத்தரசரான ஜனகர், ஒரு யாகஞ் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டு, அவ் யாகத்திற்கு விசுவாமித்திரரை அழைத்திருந்தார்; ஜனகரிடமிருந்த சிவதனுசைப் பற்றி முன்பே கேட்டிருந்த ராம லக்ஷ்மணர்கள், அத்தனுசைக்காண ஆவல் கொண்டிருந்தனர். விசுவாமித்திரர் அவ்விருவரையும் தம்முடன் அழைத்துச் சென்றார்.

விச்வாமித்திரர் ஜனகரின் யாகத்திற்குச் சென்றதன் காரணம், 'वशी' என்பதால் காட்டப்பட்டது. தம் நலனைக் கருதிச் செல்லவில்லை: ராமவிவாஹத்திற்காகச் சென்றார் என்பது குறிப்பு. சிவதனுசைப்பற்றி ராமலக்ஷ்மணர்கள் யாரிடமிருந்து எப்பொழுது கேள்வியுற்றனர் என்பது தெளிவாக இல்லை. யாகம் முடிந்தபின் மஹரிஷி வில்லைப் பற்றிக் கூறியதாக ஸ்ரீமத்ராமாயணம் தெரிவிக்கின்றது. வில்லைக்காண்பதில் ராமர் அதிக விருப்புடனிருந்தார் என்பது, 'रामभिष्वसन दर्शनोत्सुकम्' (11-37) என மேற் கூறியதனின்றும் விளங்கும். संभृत-சேமிக்கப்பட்ட பொருள்

களையுடையதான, क्रतुः - யாகமுடைய ஜனகர் என்பது பதப்பொருள்.

तैः शिवेषु वसतिर्गताध्वभिः सायमाश्रमतरुष्वगृह्यत ।
येषु दीर्घतपसः परिग्रहो वासवक्षणकलत्रतां ययौ ॥ ३३ ॥

**येषु** - எந்த ஆச்ரம விருக்ஷங்களிடையில், **दीर्घतपसः**— கௌதம முனிவரின், **परिग्रहः** - மனைவி (அஹல்யை), **वासव-क्षण - कलत्रताम्** - இந்திரனுக்குஒரு க்ஷணப்பொழுது மாத்திரம் மனைவியான நிலையை, **ययौ** - அடைந்தனளோ, **(तेषु)** - அததகைய, **शिवेषु** - அழகான, **आश्रम तरुषु** - ஆச்ரம மரங்களிடையிலே, **गताध्वभिः** - வழி நடந்த, **तैः** - அவர்களாலே, **सायम्** - ஒரு ஸாயங்காலம், **वसतिः** - வசித்த லானது, **अगृह्यत** - ஏற்றுக் கொள்ளப்பட்டது.

(க-து) விச்வாமித்ரர் ராமலக்ஷ்மணர்களுடன் மிதிலை நோக்கிச் செல்லுகையில் ஒரு இரவு, கௌதம முனிவரின் ஆச்ரமத்தில் தங்கினார். அவ்வாச்ரமம் அழகான விருக்ஷங்களை யுடையதாக இருந்தது.

பிரம்மதேவர் ஒரு ஸமயம், தமது திறமை எல்லாவற்றையும் உபயோகித்து ஒரு பெண்ணைப் படைத்து, அவளுக்கு அஹல்யை என்ற பெயரையும் இட்டார். இந்திரன், அவளுக்குத் தானே தகுந்த கணவன் எனக் கருதிக் கர்வம் கொண்டு, அவளைத் தனக்குத் தரும்படி பிரம்ம தேவரை வேண்டிக் கொண்டான். ஆனால் அவர், கௌதமரின் தவத்தைக் கண்டு மகிழ்ந்து அவருக்கு அவளை மணம் செய்வித்தார். ஏமாற்றமடைந்த இநதிரன ஒரு ஸமயம் கௌதமரின் ஆச்ரமத்திற்கு அம்முனிவர் வேடத்தில் வந்து அஹல்யையின் கற்புக்கு ஊறு விளைவிக்கவும், இதை அறிந்த கௌதமர் அவ்விருவரையும் சபித்ததுடன் ராமபாதஸ்பர்சத்தினால் அஹல்யையின் சாபம் நீங்குமெனவும் கூறியிருநதார்.

प्रत्यपद्यत चिराय यत्पुनश्चारु गौतमवधूः शिलामयी ।
स्वं वपुः स किल किल्बिषच्छिदां रामपादरजसामनुग्रहः ॥ ३४ ॥

**शिलामयी** - கல்லின் வடிவிலிருந்த, **गौतमवधूः** - கௌதமமுனிவரின் மனைவி (அஹல்யை), **चारु** - அழகிய, **स्वं वपुः** - தனது உடலை, **चिराय** - வெகுகாலத்திற்குப் பின், **पुनः** - மறுபடியும், **प्रत्यपद्यत** - பெற்றாள் (என்று), **यत्** - யாதொன்று உண்டோ, **सः** - அது, **किल्बिष-च्छिदाम्** - பாவங்களை அழிக்கின்ற, **रामपाद-रजसाम्** - ராமரது திருவடித் தூளிகளின், **अनुग्रहः किल** - அருளன்றோ.

(க-து) ராமரது பாதத் தூசி பட்டவுடன் கல் வடிவிலிருந்த அஹல்யை, தனது மானிட உருவைப் பெற்றாள். இது, ராமரது பாதத்தூளிகள் செய்த அருளுக்கு அத்தாட்சியாகுமல்லவா?

'தூளிகளுக்கே இத்தகைய சக்தி யிருக்குமாயின் ராமருடைய அருளுக்கு எல்லையுண்டோ', என்பது தொனி.

**शिलामयी** - கௌதமர், அஹல்யையைக் கருங்கல்லாகுமாறு சபித்ததாகப் பாத்ம புராணம் கூறும்: "**शापदग्धा पुरा राम भर्त्रा शक्रापराधतः । अहल्याख्या शिला जज्ञे**" என்பதைநோக்க. 'அஹல்யை, உருவின்றி, உணவின்றி மனம் வருந்திப்பல்லாயிரம் வருஷங்கள் சாம்பலிலே கிடக்கவேண்டு' மெனச் சபிக்கப் பட்டதாக வால்மீகி ராமாயணம் கூறும்: '**इह वर्षसहस्राणि बहूनि नि सिष्यति । वातभक्षा निराहारा तप्यन्ती भस्मशायिनी । अदृश्या सर्वभूतानाम्**', என்பதைக் காண்க.

राघवान्वितमुपस्थितं मुनिं तं निशम्य जनको जनेश्वरः ।
अर्थकामसहितं सपर्यया देहबद्धमिव धर्ममभ्यगात् ॥ ३५ ॥

**राघवान्वितम्** - ராமலக்ஷ்மணர்களுடன் கூடியவராக, **उपस्थितम्** - வந்திருக்கின்ற, **तं मुनिम्** - அந்த மகரிஷியைப்

பற்றி, निशम्य - கேட்டு, जनेश्वरः - பிரஜைகளுக்கு அரசரான, जनकः - ஜனகர், अर्थकामसहितम् - பொருள், இன்பம் இவற்றுடன் கூடியதும், देहबद्धम् - உருவெடுத்துள்ளதுமான, धर्मं इव - தர்மத்தைப் போல, सपर्यया - பூஜையுடன், अभ्यगात् - (வரவேற்க) எதிர்கொண்டார்.

(க-து) மிதிலா நகரத்தரசர் தம் நகரத்திற்கு விசுவாமித்திரர் ராம லக்ஷ்மணர்களுடன் வந்திருப்பதாக அறிந்து, பொருள், இன்பம் ஆகியவற்றுடன் கூடிய தர்மத்தைப் போல விசுவாமித்திரரை மதித்து, பூஜையுடன் அவரை எதிர் கொண்டழைத்தார்.

அறம், பொருள், இன்பம், வீடு என்பவை நான்கு புருஷார்த்தங்கள் எனப் பெறும். இவற்றுள் பொருள் இன்பம் என்னும் இரண்டனுடன் கூடிய அறத்தை அடைதல் மிகச் சிறப்பாகக் கொள்ளப் பெறும். இங்கு விசுவாமித்திரரை அறத்திற்கும், ராம லக்ஷ்மணர்களைப் பொருள் இன்பம் இவற்றிற்கும் கவி ஒப்பிட்டுள்ளார்.

तौ विदेहनगरीनिवासिनां गां गताविव दिवः पुनर्वसू ।
मन्यते स्म पिबतां विलोचनैः पक्ष्मपातमपि वञ्चनां मनः ॥ ३६ ॥

दिवः - ஆகாயத்திலிருந்து, गाम् - பூமியை, गतौ - அடைந்தவர்களான, पुनर्वसू इव - புனர்வஸு நக்ஷத்திர தேவதைகள் போல (இருந்த), तौ राघवौ - அவ்விராம லக்ஷ்மணர்களை, विलोचनैः - கண்களால், पिबतां - பருகுகின்ற, विदेह-नगरी-निवासिनाम् - விதேஹ நகரமாகிய மிதிலையில் வசிக்கின்றவர்களின், मनः - மனம், पक्ष्मपातं अपि - (கண்) இமைத்தலையும் கூட, वञ्चनाम् - நஷ்டமாக, मन्यते स्म - நினைத்தது.

(க-து) புனர்வஸு நக்ஷத்திரத்தின் அதிஷ்டான தேவதைகள் அழகுக்குப் பெயர் பெற்றவர்கள். அவர்களே ஆகாயத்திலிருந்து கீழே இறங்கி வந்தது போன்றிருந்தது ராமலக்ஷ்மணர்களின் தோற்

றம். மிதிலா நகரவாசிகள் அவ்விருவரின் அழகைக் கண்டு மிகக் களித்தனர். கண் இமைக்கின்ற க்ஷணத்தில் அச்சிறுபொழுது கூட அவர்களைக் காணுமல் வீணுகி விடுவதாக அவர்கள் நினைத்தனர். கண் படைத்ததன் பயன் ராமலக்ஷ்மணர்களைக்காண்பதே என எண்ணினர்.

'புனர்வஸு' என்பது, சேர்ந்துள்ள இரண்டு நக்ஷத்திரங்களுக்குப் பெயர். அவைகள் எப்பொழுதும் சேர்ந்தே இருப்பதாலும், மிக ஒளியுடன் இருப்பதாலும் ராம லக்ஷ்மணர்களுக்கு உபமானமாகக் கூறப்பட்டுள்ளன.

'गां गतौ इव'-என்பதைக் கவியின் உத்ப்ரேக்ஷையாகக் கருதவேண்டும்; நக்ஷத்ரங்கள் பூமிக்கு வருவது அசுபமாதலால், पुनर्वसू - என்பதற்கு, புனர்வஸு நக்ஷத்திரங்களின் அதிஷ்டான தேவதைகள் என்ற பொருள் கொள்ளுதல் சிறந்தது.

यूपवत्यवसिते क्रियाविधौ कालवित् कुशिकवंशवर्धनः ।
राममिष्वसनदर्शनोत्सुकं मैथिलाय कथयांबभूव सः ॥ ३७ ॥

**यूपवति** - யூபஸ்தம்பத்தை உடைய, **क्रियाविधौ** - காரியமானது (யாகமானது), **अवसिते** - முடிந்ததும், **कालवित्** - ஸந்தர்ப்பத்தை அறிந்த, **कुशिक-वंश-वर्धनः** - குசிகவம்சத்தை வ்ருத்தி செய்யும் (குசிக வம்சத்தினரான), **सः** - அந்த விச்வாமித்திரர், **रामम्** - ராமரை, **इष्वसनदर्शनोत्सुकम्** - வில்லைக் காண்பதில் ஆவலுள்ளவராக, **मैथिलाय** - ஜனகருக்கு, **कथयांबभूव** . கூறினர்.

(க-து) யாகங்களில் யூகஸ்தம்பங்கள் நாட்டுவது மரபு. அத்தகைய யாகம் ஜனகரால் செய்யப்பட்டு முடிந்ததும், தகுந்த சந்தர்ப்பத்தில் விசுவாமித்திரர் ஜனகரிடம் அவர் வைத்திருக்கும் சிவதனுஸை ராமர் காண விரும்புவதாகக் கூறினர்.

தாம் பிறந்த க்ஷத்ரிய குலத்திற்குத் தமது தவத்தின் மூலம் பெருமை யளித்தவராதலால் விச்வாமித்ரர், **कुशिक-वंशवर्धनः** - என விசேஷிக்கப் பட்டார்.

तस्य वीक्ष्य ललितं वपुः शिशोः पार्थिवः प्रथितवंशजन्मनः ।
स्वं विचिन्त्य च धनुर्दुरानमं पीडितो दुहितृशुल्कसंस्थया ॥ ३८ ॥

**पार्थिवः** - *அரசரான ஜனகர்*, **प्रथित-वंश जन्मनः** - *பிரசித்தமான குலத்தில் பிறந்துள்ள*, **शिशोः** - *சிறுபிள்ளையான*, **तस्य** - *அந்த ராமரின்*, **ललितम्** - *அழகான*, **वपुः** - *உடலை*, **वीक्ष्य** - *பார்த்தும்*, **स्वम्** - *தமது*, **दुरानमम्** - *வளைக்க இயலாத*, **धनुः** - *வில்லை*, **विचिन्त्य च** - *நினைத்தும்*. **दुहितृ-शुल्क-संस्थया** - *பெண்ணுக்கு சுல்கம் ஏற்படுத்தியது காரணமாக*, **पीडितः** - *மனம் வருந்தியவராக*, **अभवत्** - *ஆனார்*.

*(க-தி) ஜனகர் ராமரின் பருவத்தையும், உயர்ந்த குலத்தையும், அழகான மேனியையுங் கண்டு அவருக்கே தம் மகளைக் கொடுக்க வேண்டுமென நினைத்தார். ஆனால் தம்மிடமுள்ள பரமசிவனாது வில்லை வளைப்பவருக்கே ஸீதையைக் கொடுப்பதென்று ஏற்பாடு செய்ததை நினைத்து "இச்சிறுவன் இத்தனை பெரிய வில்லை எவ்வாறு வளைப்பான்? அப்படி வளைக்காவிடில் ஸீதையைத் தரவேண்டுமென்ற எண்ணம் நிறைவேறாதே" என எண்ணித் தாம் ஏற்படுத்திய சுல்கமே தமது விருப்பத்திற்குத் தடையாயிருப்பதைக் கருதி வருந்தினார்.*

*வரனுக்கு வேண்டிய முக்கிய குணங்களான, நற்குடிப் பிறப்பும், அழகிய தோற்றமும் ராமரிடமிருந்தன வென்பதை* **प्रथितजन्मनः**, **ललितं वपुः**, *என்றவை காட்டின.*

अब्रवीच्च भगवन् मतंगजैर्यद्बृहद्भिरपि कर्म दुष्करम् ।
तत्र नाहमनुमन्तुमुत्सहे मोघवृत्ति कलभस्य चेष्टितम् ॥ ३९ ॥

**अब्रवीत् च** - *(ஜனகர்) கூறினார்.* "**भगवन्** - *மஹரிஷியே*, **बृहद्भिः** - *பெரிய*, **मतङ्गजैः अपि** - *யானைகளால் கூட*, **यत् कर्म** - *எந்தக் காரியமானது*, **दुष्करम्** - *செய்ய முடியாததோ*, **तत्र** - *அக் காரியத்தில்*, **कलभस्य** - *யானைக் குட்டி*

யின், मोघवृत्ति - பயனற்ற, चेष्टितम् - செயலை, अनुमन्तुम् - அனுமதிக்க, अहम् - நான், न उत्सहे - இஷ்டப்படவில்லை.

(க-து) ஜனகர் இவ்வாறு கூறினார்: "மிகப் பெரிய யானைகளாலும் செய்யக் கூடாத காரியத்தைச் சிறு யானைக் குட்டி செய்வது என்பது நடவாத காரியம். அப்படி செய்ய அனுமதித்தல் அறிவுடைமை ஆகாது. அதைப்போல், பலமுள்ள வயதில் மூத்தோர் பலராலும் வளைக்க இயலாத வில்லைச் சிறு பிள்ளை ராமன் வளைப்பானென்பது நடவாத செயல். அதற்கு அனுமதி தருதலும் தவறாகும்.

ह्रेपिता हि बहवो नरेश्वरास्तेन तात धनुषा धनुर्भृतः ।
ज्यानिघातकठिनत्वचो भुजान्स्वान्विधूय धिगिति प्रतस्थिरे ॥४०॥

"तात - ஐயா, तेन धनुषा - அந்த வில்லினால், बहवो धनुर्भृतः - பல வில்லாளிகள், ह्रेपिताः हि - அவமானப் படுத்தப்பட்டனர். नरेश्वराः - அவ்வரசர்கள், ज्या-निघात-कठिन-त्वचः - நாண் கயிற்றின் அடிகளால் தடித்த தோலையுடைய, स्वान् - தங்களுடைய, भुजान् - புஜங்களை, धिक् इति - 'சீ' என்று, विधूय - உதறிவிட்டு, प्रतस्थिरे - புறப்பட்டனர்.

(க-து) "இந்த வில்லினால் சிறந்த வில்லாளிகள் பலர் அவமானமடைந்துள்ளனர். தங்கள் புஜங்கள், இவ் வில்லை வளைக்காததால் பயனற்றவை என அவைகளை நிந்தனைசெய்து உதறிவிட்டுத் திரும்பிச் சென்றிருக்கின்றனர். இது பலரறிந்த உண்மையாகும்."

ज्या...त्वचः என்ற விசேஷணம், அரசர்களின் புஜங்கள் நன்கு பயிற்சி பெற்றவை என்பதைக் காட்டுகின்றது.

प्रत्युवाच तमृषिर्निशम्यतां सारतोऽयमथवा गिरा कृतम् ।
चाप एव भवतो भविष्यति व्यक्तशक्तिरशनिर्गिराविव ॥ ४१ ॥

ऋषिः - விசுவாமித்திரர், तम् - அந்த ஜனகரைப் (பார்த்து), प्रत्युवाच - பதில் கூறினார். "अयं रामः-இவ்விரா

மன், सारतः - பலத்தினால் (பல விஷயத்தில்), निशम्यताम् - கேட்கப்படட்டும். अथवा - அல்லது, गिरा कृतम् - பேச்சு வேண்டாம். (வெற்றுப் பேச்சு இப்பொழுது அவசிய மில்லை); अशनिः - வஜ்ராயுதமானது, गिरौ इव - மலையில் (காண்பிக்கப்பட்ட சக்தியுடையது) போல, भवतः - உம்முடைய, चापे एव - வில்லிலேயே, अयम् - இவன், व्यक्तशक्तिः - காண்பிக்கப்பட்ட பலத்தை உடையவனாக, भविष्यति - ஆகப் போகிறான்.

(க-து) விசுவாமித்திரர் ஜனகரது ஸந்தேஹத்தை தீர்க்க வெண்ணி, இவ்வாறு கூறினார்—'இவ்விராமனது பலத்தைப் பற்றி கூறுகிறேன். கேள்; அல்லது வெற்றுப் பேச்சால் யாது பயன்? வயதையும் உருவத்தையுங் கண்டு ஸந்தேஹப்பட வேண்டாம். ராமனுடைய பலத்தைப் பற்றி நான் சொல்லித்தான் தெரிய வேண்டும் என்பதுமில்லை. இந்திரனுடைய வஜ்ஜிராயுதத்தின் சக்தி மலைகளைப் பிளப்பதால் அறியப்படுகிறது. அதைப்போல ராமனுடைய பலமும் இப்பொழுது உனது வில்லின் மூலம் புலப்படப்போகின்றது.'

एवमाप्तवचनात् स पौरुषं काकपक्षकधरेऽपि राघवे ।
श्रद्दधे त्रिदशगोपमात्रके दाहशक्तिमिव कृष्णवर्त्मनि ॥ ४२ ॥

एवम् - இவ்வாறு, आप्त-वचनात् - (தமது) நண்பருடைய வார்த்தையினால், सः - ஜனகர், काकपक्षकधरे अपि - காக பக்ஷத்தைத் தரித்துக் கொண்டிருப்பவராயினும் (சிறு பருவத்தினராயினும்), राघवे - ராமரிடம், पौरुषं - பராக்கிரமத்தை, त्रिदशगोपमात्रके - இந்திரகோபம் என்ற (சிறு) பூச்சியளவுள்ளதேயாயினும், कृष्णवर्त्मनि - நெருப்பினிடத்தில், दाहशक्तिं इव - எரிக்கும் சக்தியைக் காண்பதுபோல, श्रद्दधे - நம்பினார்.

(க-து) காகபக்ஷத்தை வயதில் மிகச் சிறிய பாலர்களே தரிப்பர். ராமர் அவ்வாறு காக பக்ஷத்தை அணிந்த சிறுவராயிருந்தபோதி

லும் ஜனகர், அவர் பராக்ரமசாலிதான் என நம்பினர். இந்திர கோபப்பூச்சி போல மிகச் சிறிய அளவுள்ள தீப்பொறி உலகத்தையே எரித்துவிடும் சக்தியைத் தன்னுள் கொண்டுள்ளது. சரியான உதவி யிருப்பின் அதன் சக்தி புலப்படும். அதைப்போல் ராமர் சிறுவராக விருந்தபோதிலும் அவரிடமுள்ள பலம் பெரிது என்பதை ஜனகர் உணர்ந்தார்.

**इन्द्रगोपः** - மழைக் காலத்தில் தரையில்லூர்ந்து செல்வதும், ரத்தம் போல் சிவந்த நிறமுடைதுமான ஒருவகைப் பூச்சி; பார்ப்பதற்கு நெருப்புத் துணுக்கு போல் இருக்கும்.

'त्रिदशगोप........वर्त्मनि' இதனுடன் ஒத்த கருத்தை. स्फुलिङ्गावस्थया वह्निरेधापेक्ष इव स्थितः' என்பதால் தெரிவித்தார் கவி.

व्यादिदेश गणशोऽथ पार्श्वगान् कार्मुकाभिहरणाय मैथिलः ।
तैजसस्य धनुषः प्रवृत्तये तोयदानिव सहस्रलोचनः ॥ ४२ ॥

**सहस्रलोचनः** - ஆயிரங் கண்களுடைய இந்திரன், **तैजसस्य** - ஒளிமயமான, **धनुषः** - வில்லினுடைய, **प्रवृत्तये**-தோற்றத்திற்காக, **तोयदान् इव** - மேகங்களை (ஆணையிடுவது) போல, **अथ** - (முனிவர் கூறியதைக் கேட்ட) பிறகு, **मैथिलः**- மிதிலா நகரத்தரசரான ஜனகர், **पार्श्वगान्** - அருகிலிருந்தவர்களை, **कार्मुक-अभिहरणाय** வில்லைக்கொண்டு வருவதற்காக, **गणशः** - கூட்டமாக, **व्यादिदेश** - கட்டளையிட்டார்.

(க-து) இந்திரன் மேகங்களுக்குத் தேவன்; மேகங்கள் ஒன்றுகத் திரண்டெழும்பொழுதுதான் வானவில் தோன்றுவது வழக்கம். இந்திரன் வானவில்லைத் தோன்றச் செய்யும்படி மேகங்களுக்கு ஆணையிடுவது போல, ஜனகர் அருகிலிருந்த ஆட்களுக்கு அவ்வில்லைக் கொண்டு வரும்படி கட்டளையிட்டார். கூட்டமாகச் சேர்ந்து நின்ற அவ்வாட்களுக்குத் திரண்டெழும் மேகங்கள் உபமானம். ஜனகருக்கு இந்திரன்; சிவதனுஸுக்கு இந்திர தனுஸ். உபமானத்தால் வில்லின் பெருமை விளங்கும்.

तत् प्रसुप्तभुजगेन्द्रभीषणं वीक्ष्य दाशरथिराददे धनुः ।

विद्रुतक्रतुमृगानुसारिणं येन बाणमसृजद् वृषध्वजः ॥ ४४ ॥

**वृषध्वजः** - காளையைக் கொடியிலுடைய பரமசிவன், **विद्रुत क्रतु - मृगानुसारिणं** - ஓடிய யாகமானைத் தொடர்கின்ற, **बाणम्** - அம்பை, **येन**-எந்த வில்லினுல், **असृजत्** விட்டாரோ, **तत्** - அந்த, **प्रसुप्त भुजगेन्द्र भीषणम्** - தூங்குகின்ற ஸர்ப்பராஜனைப்போல் பயங்கரமாயுள்ள, **धनुः** - வில்லை, **दाशरथिः** - ராமர், **वीक्ष्य** - பார்த்து, **आददे** - எடுத்தார்.

(க-து) ஜனகரிடமிருந்த அந்த வில் பரமசிவனுருடையது. சிவபிரான், தம்மிடம் பயந்து மான் உருவெடுத் தோடிய தக்ஷ யாகத்தை அந்த வில்லினுல் அழித்தார். தூங்குகின்ற பெரிய பாம்பைப் போல் பயங்கரமாகக் கிடந்த அவ்வில்லை ராமர் நாணேற்றுவதற்காகக் கையில் எடுத்தார்.

**विद्रुत....म्** என்ற பதத்தால் குறிக்கப்படும் வரலாறு, தக்ஷர் என்பவர், தாம் செய்த யாகத்திற்குச் சிவபிரானைத் தவிர மற்ற தேவர்களை அழைத்தார். அதனுல் கோபமடைந்த பரமசிவன் யாகசாலையில் திடீரெனத் தோன்றி யாகத்தை அழிக்கமுற்பட்டார். தேவர்கள் பயந்து மாறு உருவம் கொண்டு பல திசைகளிலும் ஓடி ஒளிந்தனர். யாகதேவதையும் மானுருக் கொண்டு ஓட, சிவபிரான் வில்லுடன் மானைப் பின் தொடர்ந்து அதை அடித்துக் கொன்றூர் என்பது ; பிறகு பரமசிவன் அந்த வில்லை ஜனகருடைய முன்னோர்களில் ஒருவரான தேவராதரிடத்தில் கொடுக்கவும் அவ் வில் தந்தை முறையாக ஜனகரிடம் வந்தது என்பர்.

आततज्यमकरोत् स संसदा विस्मयस्तिमितनेत्रमीक्षितः ।

शैलसारमपि नातियत्नतः पुष्पचापमिव पेशलं स्मरः ॥ ४५ ॥

**सः रामः** - அந்த ராமர், **संसदा** - ஸபையினால், **विस्मय-स्तिमित-नेत्रम्** - ஆச்சரியத்தினால் இமையாத கண்களுடன், **ईक्षितः** - பார்க்கப்பட்டவராக, **शैलसारं अपि** - மலையைப் போன்ற உறுதியைப் பெற்றதாக இருந்தபோதிலும், (அவ் வில்லை), **स्मरः** - மன்மதன், **पेशलम्**-மென்மையுள்ள, **पुष्पचापं इव** - புஷ்பத்தாலாகிய வில்லை வளைப்பது போல, **नातियत्नतः**- அதிக முயற்சி இன்றியே, **आततज्यम्** - நாணேறியதாக, **अकरोत्** - செய்தார்.

(க-து) 'இத்தனை சிறு பிராயத்து ராமர், மலையைப்போல் உறுதியானதும் கனமாக இருப்பதுமான வில்லை எப்படி எடுத்து வளைக்கப் போகிறார்' என்று ஸபையிலுள்ளோர் அனைவரும் கண்களைக்கூட இமையாமல் அவரை நோக்கினர். ஆனால் ராமர், மன்மதன் மிக மென்மையான புஷ்பத்தால் செய்யப்பட்ட தனது வில்லை மிகச் சுலபமாக வளைப்பதுபோல், அப்பெரிய வில்லை அதிக முயற்சி இன்றியே வளைத்து நாணேற்றினார்.

भज्यमानमतिमात्रकर्षणात्तेन वज्रपरुषस्वनं धनुः ।

भार्गवाय दृढमन्यवे पुनः क्षत्रमुद्यतमिव न्यवेदयत् ॥ ४६ ॥

**तेन** - அந்த ராமரால், **अतिमात्र कर्षणात्** - மிகவும் இழுக்கப் பட்டதால், **भज्यमानम्** - முறிவதும், **वज्र-परुष-स्वनम्** - இடிபோல் கொடிய சத்தமுடையதுமான, **धनुः** - அவ் வில்லானது, **दृढमन्यवे** - தீராக் கோபமுடைய, **भार्गवाय** - பரசுராமருக்கு, **क्षत्रम्** - க்ஷத்ரிய ஜாதியை, **पुनः** மறுபடியும், **उद्यतम्** - எழுந்ததாக, **न्यवेदयत् इव** - தெரிவிப்பது போல் இருந்தது.

(க-து) ராமர் வில்லில் நாணேற்றி இழுத்தார். அவ்வில் பயங்கரமான சத்தத்துடன் முறிந்தது. இச்சத்தம், வெகு காலமாக க்ஷத்ரிய ஜாதியை அடக்கி வைத்திருந்த பரசுராமருக்கு, மறுபடியும் க்ஷத்ரிய வம்சம் எழுந்துவிட்டதென்று கூறுவதுபோலிருந்தது எனக் கவி உத்ப்ரேக்ஷிக்கின்றார்.

**भार्गवः** - ப்ருகுமுனிவரின் வம்சத்தில் தோன்றியவர், பரசுராமர்; இவர், ரேணு என்னும் அரசனது மகளான ரேணுகையிடம், விசுவாமித்திரரின் ஸஹோதரி கௌசிகை என்பவளுடைய புத்திரரான ஜமதக்னி முனிவருக்குப் பிறந்தவர். பரசுராமரின் தாய் க்ஷத்ரியப் பெண்; தந்தை பிராம்மணர்.

दृष्टसारमथ रुद्रकार्मुके वीर्यशुल्कमभिनन्द्य मैथिलः ।
राघवाय तनयामयोनिजां रूपिणीं श्रियमिव न्यवेदयत् ॥ ४७ ॥

**अथ** - பிறகு, **मैथिलः** - ஜனகர், **रुद्र-कार्मुके** - சிவபிரானது வில்லில், **दृष्टसारं** - பார்க்கப்பட்ட பலமுடைய, **वीर्यशुल्कं** - வீர்யமாகிய சுல்கத்தை, **अभिनन्द्य** - கொண்டாடி, **राघवाय** - ராமருக்கு, **अयोनिजाम्**-பூமியில் தோன்றியவளும், **रूपिणीम्** - சிறந்த அழகுடைய **श्रियं इव** - லக்ஷ்மிபோல் இருப்பவளுமான, **तनयाम्** - மகள் ஸீதையை, **न्यवेदयत्** - கொடுப்பதாகக் கூறினார்.

(க-து) சிவபிரானது வில்லை வளைப்பதையே தம் பெண்ணை மணப்பதற்கான சுல்கமாக ஏற்படுத்தியிருந்தார் ஜனகர். இது வரை யாரும் வளைத்து தமது வீர்யத்தைக் காட்டாததால் ஜனகர் மிகக் கவலையுடனிருந்தார். இப்பொழுது ராமர் வளைத்ததால், தாம் ஏற்படுத்திய சுல்கம் கடினமானதாயினும் அதைப் பற்றிக் கொண்டாடி ராமருக்குத் தமது பெண் ஸீதையைத் தருவதாகக் கூறினார்.

இச்லோகத்தில் கூறிய கருத்தே அடுத்ததிலும் கூறப்படுவதால் அருணகிரிநாதர் என்ற உரையாசிரியர், இச் சுலோகத்தை இடைச் செருகலாகக் கருதுகின்றார்.

मैथिलः सपदि सत्यसंगरो राघवाय तनयामयोनिजाम् ।
संनिधौ द्युतिमतस्तपोनिधेरग्निसाक्षिक इवातिसृष्टवान् ॥ ४८ ॥

**सत्यसन्धः** - உண்மையான ப்ரதிக்ஞையையுடைய' **मैथिलः** - ஜனகர், **राघवाय** - ராமருக்கு, **अयोनिजाम्** - தாய் வயிற்றில் பிறவாத, **तनयाम्** - பெண்ணை, **द्युतिमतः** - காந்தி பெற்றுள்ள, **तपोनिधेः** - தவத்திற்கு இருப்பிடமான விசுவாமித்திரருடைய, **सन्निधौ** - எதிரில், **अग्निसाक्षिकः इव** - அக்னியை ஸாக்ஷியாக உடையவர்போல, **सपदि** - தாமதமின்றி, **अतिसृष्टवान्** - கொடுத்தார்.

(க-து ஜனகர், தாம் கூறியவாறு, தவத்தில் சிறந்த விசுவாமித்திரர் முன்னிலையில், அக்னியை ஸாக்ஷியாக யுடையவர் போல் சீதையை ராமருக்குக் கொடுத்தார்.

**अतिसृष्टवान्**-'கொடுப்பதாகக் கூறினார்' என்றேபொருள் கொள்ளவேண்டும். '**सीताम् करे गृहीत्वा अर्पितवान्**' என்பர் ஓர் உரையாசிரியர்.

प्राहिणोच्च महितं महाद्युतिः कोसलाधिपतये पुरोधसम् ।
भृत्यभावि दुहितुः परिग्रहाद्दिश्यतां कुलमिदं निमेरिति ॥ ४९ ॥

**महाद्युतिः** - மிகுந்த ஒளியை உடைய ஜனகர், **महितम्** - பூஜிக்கப்பட்ட, **पुरोधसम्** - புரோஹிதரை, **कोसलाधिपतये** - கோசல தேசத்தரசரான தசரதரின் பொருட்டு, "**इदम्** - இந்த, **निमेः कुलम्** - நிமியினது வம்சமானது, **दुहितुः** - பெண்ணை (ஸீதையை), **परिग्रहात्** - (நாட்டுப் பெண்ணாக) ஏற்றுக் கொள்வதால், **भृत्यभावि** - வேலைக்காரத் தன்மையுடையதாக, **दिश्यतां** - அநுமதிக்கப்படட்டும்", **इति** - என்று (கூறும்படி), **प्राहिणोत् च** - அனுப்பவும் செய்தார்.

(க-து) ஜனகர் தம புரோகிதரை தசரதரிடம் அனுப்பி, "எனது பெண்ணான ஸீதையைத் தங்கள் புதல்வர் ராமருக்கு மணஞ் செய்து கொண்டு எங்களுடைய வம்சத்தைப் பெருமைப் படுத்த வேண்டும்." என்று கூறும்படி செய்தார்.

ஜனகருடைய முன்னோர்களில் ஒருவரது பெயர் நிமி. அதனால் ஜனகரது வம்சம் நிமிவம்சம் என அழைக்கப்படுவதுண்டு.

अन्वियेष सदृशीं स च स्नुषां प्राप चैनमनुकूलवाग्द्विजः ।
सद्य एव सुकृतां हि पच्यते कल्पवृक्षफलधर्मि काङ्क्षितम् ॥ ९० ॥

**सः च** - அத் தசரதரும், **सदृशीं** - தகுந்த, **स्नुषाम्** - நாட்டுப் பெண்ணை, **अन्वियेष च** - தேடிக்கொண்டிருந்தார். **अनुकूलवाक्** - (எதிர் பார்த்ததற்கு) அனுகூலமான பேச்சை உடைய, **द्विजः च** - பிராம்மணரும், **एनम्** - இத்தசரதரை, **प्राप** - அடைந்தார். **सुकृताम्** - புண்ணியசாலிகளின், **कां-क्षितम्** - விரும்பமானது, **कल्पवृक्ष फलधर्मि**-கல்பகவிருக்ஷத்தினது பழத்தின் தன்மையுடையதாக, **सद्य एव** உடனேயே, **पच्यते हि** - பலிக்கின்றது அல்லவா?

(க-து) தசரதரும் தம் புதல்வர் ராமருக்குத் தகுந்த பெண்ணைப் பார்த்து மணஞ் செய்து வைக்க வேண்டும் என்று எண்ணியிருந்தார். அதே சமயத்தில் தசரதர் எண்ணத்திற் கியைந்தவாறு ஜனகர் அனுப்பிய புரோஹிதர் அவரிடம் போய்ச் சேர்ந்தார். கல்ப விருக்ஷம் எதை எவர் வேண்டினாலும் உடனே அளிக்கக் கூடியது. அதைப் போல, புண்ணியம் செய்த பெரியோர்களின் விருப்பங்கள் உடனேயே நிறைவேறிவிடுகின்றன.

**सद्य एव...कांक्षितम्** - இதற்குக் கீழ்வரும் வகையிலும் பொருள் உரைக்கின்றனர். கல்பக விருக்ஷத்தின் காய், தோன்றினவுடனேயே பழுத்தும் விடுகின்றது; நாட்கள் ஆகவேண்டுமென்ற நியதில்லை. அதேபோல் புண்ணியம் செய்தோரின் விருப்பம் தோன்றும் பொழுதே பலித்தும் விடுகின்றது. மற்ற மரங்கள் அந்தந்த பருவத்தில் தான்

பழங்களைத் தருகின்றன. கல்பகவிருக்ஷத்திற்குப் பருவம் முதலான காரணங்கள் தேவையில்லை. அது எப்பொழுதும் பலன் அளித்துக் கொண்டிருக்கிறது. அதுபோல் நல்லோரின் எண்ணம், பலனைப் பெறக்காலத்தை எதிர் பார்க்க வேண்டுவதில்லை என்றும் உரைக்கலாம். 'कल्पवृक्षोऽपि कालेन भवेद् यदि फलप्रदः । को विशेषस्तदा तस्य वन्यैरन्यैर्महीरुहैः' என்பதைக் காண்க.

तस्य कल्पितपुरस्क्रियाविधेः शुश्रुवान् वचनमग्रजन्मनः ।
उच्चचाल बलभित्सखो वशी सैन्यरेणुमुषितार्कदीधितिः ॥ ५१ ॥

**वशी** - புலனடக்கமுடையவரும், **बलभित्सखः** - இந்திரனின் நண்பருமான தசரதர், **कल्पित पुरस्क्रिया-विधेः** - செய்யப்பட்ட பூஜையை யுடைய, **तस्य** - அந்த, **अग्रजन्मनः**-வேதியரின், **वचनम्** (ஜனகர் சொல்லி அனுப்பிய) வார்த்தையை, **शुश्रुवान्** - கேட்டார்; **सैन्यरेणु-मुषितार्क-दीधितिः** - சேனைகளின் தூளிகளால் மறைக்கப்பட்ட சூரிய கிரணத்தை உடையவராக, **उच्चचाल** - புறப்பட்டார்.

(க-து) தசரதர், ஜனகர் அனுப்பிய வேதியர் கூறவும், ராமரின் மணத்தைப் பற்றிய செய்தியைக் கேட்டார். உடனே ஏராளமான ஸைனியங்களுடன் மிதிலையை நோக்கிப் புறப்பட்டார்.

आससाद मिथिलां स वेष्टयन् पीडितोपवनपादपां बलैः ।
प्रीतिरोधमसहिष्ट सा पुरी स्त्रीव कान्तपरिभोगमायतम् ॥ ५२ ॥

**सः** - அத்தசரதர், **बलैः** - ஸேனைகளால், **पीडित-उपवन-पादपाम्** - துன்பமடைவிக்கப்பட்ட உபவன மரங்களை

யுடைய, **सिथिलाम्**-மிதிலையை, **वेष्टयन्**-சூழ்ந்து கொண்டு, **आससाद** - அடைந்தார். **स्त्री** - ஒரு ஸ்திரீ, **आयतम्** - அதிக மான, **कान्तपरिभोगम् इव** (தன்) அன்பனது களியாட்டத்தை (ஸஹிப்பது) போல, **सा पुरी** - அந்நகரமானது, **प्रीतिरोधम्**- (தசாதரது) அன்பினாலுண்டான கஷ்டத்தை, **असहिष्ट** - ஸஹித்துக் கொண்டது.

(க-து) தசரதர், பெரும் சேனையுடன் மிதிலையை அடைந்தார். ஸேனையிலுள்ள யானைகளாலும், குதிரைகளாலும், வீரர்களாலும் மிதிலையின் உபவனங்களிலுள்ள மரங்களுக்கு கஷ்டம் உண்டாயிற்று. அன்புள்ள கணவனது உறுதியான ஆலிங்கனத்தை ஸ்திரீ ஸஹிப்பதுபோல் மிதிலாநகரும், அன்புள்ள அதிதியான தசரதரால் உண்டான சிரமங்களைப் பாராட்டாது, அவற்றை எல்லாம் பொறுத்துக் கொண்டது.

तौ समेत्य समये स्थितावुभौ भूपती वरुणवासवोपमौ ।
कन्यकातनयकौतुकक्रियां स्वप्रभावसदृशीं वितेनतुः ॥ ५३ ॥

**समये स्थितौ** -வழக்கத்தை அனுசரிப்பவர்களும் (ஆசார சீலர்களும்), **वरुण वासवोपमौ** - வருணனுக்கும் இந்திரனுக்கும் ஒப்பானவர்களுமான, **तौ उभौ भूपती** - அந்த இரு அரசர்களும், **समेत्य** - வந்து (ஒன்றுகூடி), **स्वप्रभाव-सदृशीम्**-தம் பெருமைக்குத் தகுந்த, **कन्यका-तनय-कौतुकक्रियाम्** - பெண்களுடையவும் பிள்ளைகளுடையவும் மணவிழாவை, **वितेनतुः**- செய்தனர்.

(க-து) ஜனகரும் தசரதரும் முன்னோர்கள் கைப்பிடித்து வந்த ஆசாரங்களை விடாமல் அனுஷ்டிப்பவர்கள். வருணனுக்கும் இந்திரனுக்கும் ஒப்பானவர்கள். இத்தகைய இருவரும் ஒன்று சேர்ந்து தங்கள் பெண்களுக்கும் பிள்ளைகளுக்கும் முறைப்படி விவாஹத்தை நடத்தி வைத்தனர்.

समये-स्थितौ - 'விவாஹம் செய்துகொள்ளுதல் என்ற நிச்சயமுடையவர்கள்' என்றும் உரைக்கலாம்; स्वप्रभावसदृशीम् - 'बहुविधदानोपबृंहिताम्' - என்பர் நாராயணர். ஜனகரும் தசரதரும் ஒத்த செல்வமுடையவர் என்பது, 'वरुणवासवोपमौ' - என்ற உபமானத்தால் பெறப்படும்.

पार्थिवीमुदवहद्रघूद्वहो लक्ष्मणस्तदनुजामथोर्मिलाम् ।
यौ तयोरवरजौ वरौजसौ तौ कुशध्वजसुते सुमध्यमे ॥ ५४ ॥

रघूद्वहः - ராமர், पार्थिवीं ஸீதையை, उदवहत्-மணந்து கொண்டார். अथ लक्ष्मणः - லக்ஷ்மணன், तदनुजाम् - அந்த ஸீதையின் தங்கையான, ऊर्मिलाम् - ஊர்மிளையை, उदवहत्-மணந்து கொண்டார். वरौजसौ - சிறந்த வீரியமுள்ள, यौ-எவர்கள், तयोः अवरजौ - அவர்களுக்குத் தம்பிகளோ, तौ - அவர்கள் (பரத சத்ருக்னர்கள்), सुमध्यमे - அழகிய இடையையுடைய, कुशध्वज-सुते - குசத்வஜருடைய பெண்களை (மாண்டவீ ச்ருதகீர்த்தி என்பவர்களை), उदवहताम्-மணந்து கொண்டனர்.

(க-து) ராமர் ஸீதையையும், லக்ஷ்மணர் சீதையின் தங்கை ஊர்மிளையையும், குசத்வஜரின் பெண்களில் மாண்டவியைப் பரதனும் சுருதகீர்த்தியை சத்ருக்னனும் மணந்து கொண்டனர்.

तयोरवरजौ - ராமரது தம்பி பரதன், லக்ஷ்மணனுடைய தம்பி சத்ருக்னன்; 'रामविवाहानन्तरं लक्ष्मणविवाहकथनं तस्य रामसाहचर्यमात्रेणैव । न तु विवाहक्रमापेक्षया । अन्यथा लक्ष्मणस्य परिवेत्तृत्वदोषप्रसंगात् ।' नारायणः ॥ ऊर्मिला - ஜனகரது சொந்தப்பெண்; कुशध्वजः - ஜனகரது தம்பி, पार्थिवी - பூமியின் மகள்: ஸீதை;

ते चतुर्थसहितास्त्रयो बभुः सूनवो नववधूपरिग्रहाः ।
सामदानविधिभेदनिग्रहाः सिद्धिमन्त इव तस्य भूपतेः ॥ ५५ ॥

**नव-वधू-परिग्रहाः**-புதிதாக மணம் செய்து கொண்டவர்களும், **चतुर्थसहिताः** - நான்காமவனுடன் (சத்ருக்னனுடன்) கூடியவர்களுமான, **ते त्रयः सूनवः**-அம் மூவர்கள், **सिद्धिमन्तः**-காரியஸித்தியுடன் கூடிய, **तस्य भूपतेः** - அவ் வரசரின், **साम-दानविधि-भेद निग्रहाः-इव** - ஸாம, தானம், பேதம் தண்டம் என்ற நான்கு உபாயங்கள் போல, **बभुः** - விளங்கினர்.

(க-து) ராமர், லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன் ஆகிய நால்வரும் அண்மையிலே மணஞ் செய்து கொண்டவர்கள்; எடுத்தகாரியத்தில் பயனைக் காணும் வன்மை பெற்றவர்கள்; இவர்கள் நால்வரும், காரியஸித்தியுடன் கூடிய ஸாமம், தானம், பேதம், தண்டம் என்ற நான்கு உபாயங்களைப் போல் காணப்பட்டனர் எனக் கவி உத்ப்ரேக்ஷிக்கின்றார்.

அரசர்களுக்கு அவசியமான உபாயங்கள் நான்கு.

உபாயங்கள் ராஜகுமாரர்களுக்கும், காரியஸித்திகள் பெண்களுக்கும் உபமானங்கள்.

நால்வர் என்று நேரே கூறவேண்டியிருக்க, 'நான்காமவனுடன் கூடிய மூவர்' என சுற்றிவளைத்துக் கூறுவதும் கவிகளது வழக்கமே; இது போல் பிற கவிகளும் கூறியிருக்கின்றனர். சந்தத்தைக் கருதியும் இவ்வாறு கூறியிருக்கலாம்; **चतुर्थः** - என்ற சொல்லுக்கு 'ராமன்' எனப்பொருளுரைப்பர் அருணகிரிநாதர்; ஆனால் சத்ருக்னன் என்ற பொருளே பொருத்தமானது. பகவான் நாராயணன் தம்மை நான்கு வகையாகப் பிரித்துக் கொண்டு பூமியில் அவதரித்தார்; ராமாவதாரத்தைப் பூர்ணாவதாரம் என்பர். அவ்வவதாரத்திற்குப் பூர்த்தியைத் தருகின்றவன் சத்ருக்னனாதலால் அவ

னது முக்யத்வம் தோன்ற चतुर्थसहिताः என்றார் கவி. ‘चतुष्पूरकत्वात् तेनैव भगवतः अंश पूर्तिः” என்பர் ஸாஹித்ீ வல்லபர். ‘चतुर्णां संख्यापूरकः चतुर्थः शत्रुघ्नस्तेन सहिताः’ என்ற ஹேமாத்ரியின் உரையும் இதற்குப்பலமளிக்கின்றது.

ता नराधिपसुता नृपात्मजैस्ते च ताभिरगमन्कृतार्थताम् ।
सोऽभवद्वरवधूसमागमः प्रत्ययप्रकृतियोगसंनिभः ॥ ९६ ॥

**ताः** - அந்த, **नराधिप-सुताः** - அரசர்களின் பெண்கள், **नृपात्मजैः** - தசரத மஹாராஜரின் புதல்வர்களால், **कृतार्थताम्**- (பிறவியின்) பயனை, **अगमन्** - அடைந்தனர். **ते च** - அவர்களும் (ராமர் முதலியவர்களும்), **ताभिः** - அவர்களால் (ஸீதை முதலியோரால்), **कृतार्थतां** - கிருதார்த்தர்களான தன்மையை, **अगमन्** - அடைந்தனர். **सः** - அந்த, **वर-वधू - समागमः** - மணப்பிள்ளைகள் மணப்பெண்கள் இவர்களது சேர்க்கை, **प्रत्यय-प्रकृति-योगसन्निभः** - பகுதி விகுதிகளின் சேர்க்கைக்கு ஒப்பானதாக, **अभवत्** - இருந்தது,

(க-து) ஸீதை முதலியோர், தங்கள் குலம், வயது, அறிவு முதலியவற்றிற்குத் தகுந்த கணவரை அடைந்து, பிறவியின் பயனை பெற்றதாக எண்ணினர். ராமர் முதலிய நால்வரும் முறையே சீதை முதலியோரை மனைவியராகப் பெற்று அவ்வாறே நினைத்தனர். அவர்களுடைய சேர்க்கை பகுதி - விகுதிகளின் சேர்க்கைபோலிருந்தது. பகுதியின்றி விகுதியோ - விகுதியின்றிப் பகுதியோ இயங்கவல்லதல்ல. அதுபோல அவர்களது சேர்க்கை மிக்கப் பொருத்த முடையதாக இருந்தது.

ஒரு சொல்லின் அடிக்குப் பகுதி எனப்பெயர்; அப்பகுதிக்கு முடிவைத்தந்து, சொல்லாக்கிப் பிரயோகத்திற்குத் தகுந்ததாக செய்வது விகுதி: உதாரணமாக, या - என்பது பகுதி; ति என்பது விகுதி. இரண்டும் சேர்க்கப்படின்

போகின்றான் என்ற பொருளுள்ள याति - என்ற சொல் கிடைக்கின்றது. இப்பொருள், பகுதியை மாத்திரமோ, விகுதியை மாத்திரமோ உபயோகிப்பதால் கிடைக்காது. எனவே பகுதியும் விகுதியும் பயன்பெற ஒன்றை யொன்று தழுவியே நிற்கின்றன: அதுபோல் ராமாதியரும் ஸீதை முதலானவர்களும் முறையே மணவினையால் இணைக்கப்பட்ட பின்பே பிறவிப்பயனைப் பெற்றனர். ராஜகுமாரர்களுக்கு ப்ரத்யமும் (விகுதியும்), அரசர்களின் குமாரிகளுக்குப் பகுதியும் உபமானங்கள்.

एवमात्तरतिरात्मसंभवांस्तान्निवेश्य चतुरोऽपि तत्र सः ।
अध्वसु त्रिषु विसृष्टमैथिलः स्वां पुरीं दशरथो न्यवर्तत ॥ ५७ ॥

आत्तरतिः - அன்பு நிரம்பிய, सः दशरथः - அத் தசரதர், एवं - இவ்வாறு, तान् - அந்த, चतुरः - நான்கு, आत्मसंभवान् अपि - புதல்வர்களுக்கும், तत्र - அங்கு (மிதிலையில்), निवेश्य- விவாஹம் செய்து வைத்து, त्रिषु - மூன்று, अध्वसु सत्सु - பயணங்கள் முடிந்தவுடன், विसृष्ट-मैथिलः - விடப்பட்ட (நிறுத்தப்பட்ட) ஜனகரை உடையவராக, स्वां पुरीम् - தமது நகரத்திற்கு, न्यवर्तत - திரும்பினர்.

(க-து) அன்பு நிரம்பிய மனங்கொண்ட தசரதர், தமது நான்கு பிள்ளைகளுக்கும் மிதிலையில் விவாஹத்தைச் செய்து வைத்து அயோத்திக்குத் திரும்பினர். அன்புடையவர் ஊருக்குச் செல்லும்பொழுது மூன்று நாள் வரை உடன் சென்று வழியனுப்புவது வழக்கம். அவ்வாறு ஜனகர் உடன் செல்லவும், மூன்றுவது நாள் பயணம் முடிந்ததும் தசரதர் அவரை நிற்கும்படி கூறி அவரிடம் விடை பெற்றுத் தமது நகரமாகிய அயோத்தி நோக்கிப் புறப்பட்டார்.

निवेश्य - மணம் செய்வித்து; निवेशः स्याद्विवाहेऽपि इति भागुरिः ।

तस्य जातु मरुतः प्रतीपगा वर्त्मसु ध्वजतरुप्रमाथिनः ।
चिक्लिशुर्भृशतया वरूथिनीमुत्तटा इव नदीरयाः स्थलीम् ॥ ५८ ॥

**जातु** - ஒரு சமயம், **वर्त्मसु**-வழியில், **ध्वजतरुप्रमाथिनः** - கொடி மரங்களை முறிக்கின்ற, **प्रतीपगाः** - எதிராக வீசுகின்ற, **मरुतः** - காற்றுக்கள், **उत्तटाः** - கரைகளின் மீது பெருகுகின்ற, **नदीरयाः** - ஆற்றின் வெள்ளங்கள், **स्थलीं इव** - (அருகிலுள்ள) இடங்களை (உடைப்பது) போல, **तस्य** - அத் தசரதருடைய, **वरूथिनीम्** - சேனையை, **भृशतया** - மிகவும், **चिक्लिशुः** - துன்புறுத்தின.

(க-து) அயோத்திக்குப் போகும் வழியில், பலமான எதிர் காற்று வீசி, தசரதரின் சேனைகளை மிகத் துன்புறுத்தியது. கரைபுரண்டுவரும் ஆற்று வெள்ளம் அருகிலிருக்கும் பிரதேசங்களைக் குழப்புவது போல, காற்று சேனையை அலைக்கழித்தது.

लक्ष्यते स्म तदनन्तरं रविर्बद्धभीमपरिवेषमण्डलः ।
वैनतेयशमितस्य भोगिनो भोगवेष्टित इव च्युतो मणिः ॥ ५९ ॥

**तदनन्तरं** - அதற்குப் பிறகு, **बद्ध - भीम परिवेषमण्डलः** - சுற்றிலும் காணப்பட்ட பயங்கரமான வளையத்தை உடைய, **रविः** - சூரியன், **वैनतेयशमितस्य** - கருடனால் கொல்லப்பட்ட, **भोगिनः** - பாம்பினுடைய, **भोगवेष्टितः** - உடலினால் சுற்றப்பட்டதும், **च्युतः** - (அதன் தலையினின்றும்) நழுவியதுமான, **मणिः इव** - ரத்தினம்போல, **लक्ष्यते स्म** - காணப்பட்டான்.

பெரிய அபாயங்கள் வருவதற்கு முன் அவைகளைத் தெரிவிக்கின்ற சில குறிகள் தோன்றும். அத்தகைய துர்நிமித்தம் ஒன்று இதில் கூறப்படுகிறது

(க-து) சூரியனைச் சுற்றிலும் பயங்கரமான ஒரு வளையம் தோன்றியது. இவ்வட்டத்தின் நடுவில் சூரியன் இருந்தான். கருடனால் கொல்லப்பட்டு, இறக்கும் காலத்திலும் தன் தலையிலுள்ள ரத்

தினத்தைப் பிறர் கவர விடாமல் அதை நடுவே வைத்துத் தன் உடலால் அதைச் சுற்றிக் கொண்டு கிடக்கின்ற பாம்புபோல் அவ் வட்டமும், ரத்தினம் போல் அதனிடையில் சூரியபிம்பமும் காணப் பட்டன.

சூரியனைச் சுற்றிலும் வட்டம் தோன்றுவது அபசகுனமாகும்.

श्येनपक्षपरिधूसरालकाः सांध्यमेघरुधिरार्द्रवाससः ।
अङ्गना इव रजस्वला दिशो नो बभूवुरवलोकनक्षमाः ॥ ६० ॥

**श्येनपक्ष परि धूसर-अलकाः** - கழுகுகளின் சிறகுகளாகிய சாம்பல் நிறங்கொண்ட முன்னுச்சிக்கேசங்களையுடையனவும், **सान्ध्यमेघ रुधिरार्द्र-वाससः** - ஸாயங்கால மேகங்களாகிய ரத்தம் நனைந்த வஸ்திரங்களை யுடையனவும், **रजस्वलाः** - புழுதி நிறைந்தனவுமான, **दिशः** - திசைகள், **श्येन पक्ष-परिधूसर-अलकाः** - கழுகுகளின் சிறகுபோல் சாம்பல் நிறமான அலகங்களையுடையவர்களும், **सान्ध्यमेघ-रुधिरा-र्द्र-वाससः** - ஸந்தியாமேகம் போன்றுள்ள ....வஸ்திரங்களை யுடையவர்களுமான, **रजस्वला अङ्गनाः इव**—......பெண்கள் போல், **अवलोकनक्षमाः** - காணத்தக்கனவாக, **नो बभूवुः** - இல்லை.

(க-து) கழுகுகள் ஆகாசத்தில் வட்டமிட்டன, எங்கும் புழுதி எழுந்து, திசைகளைப் பார்க்க முடியாதபடி செய்தது.

**दिशः अवलोकन क्षमाः नो बभूवुः** என்பது முக்யமான வாக்யம்.

**दिक्** - என்ற சொல், ஸ்திரிலிங்கமாதலால், திசைகளைக் கவி பெண்களாக உருவகம் செய்ததுடன், பெண்களோடும் ஒப்பிட்டார். திசை என்ற பெண்ணுக்குக் கழுகின் சாம்பல்நிறச் சிறகு முன்னுச்சிக் கேசமாயுள்ளது. ஸாயங்

காலச் சென்னிற மேகங்கள், ரத்தத்தில் நனைந்துள்ள வஸ்திரங்களாயுள்ளன. எனவே இத்தகைய கோலத்திலுள்ள திசைப்பெண், அருவருப்பை யுண்டாக்கும் நிலையிலிருந்ததால் காணத்தகாதவளாக இருந்தாள்.

भास्करश्च दिशमध्युवास यां तां श्रिताः प्रतिभयं ववासिरे ।
क्षत्रशोणितपितृक्रियोचितं चोदयन्त्य इव भार्गवं शिवाः ॥ ६१॥

**भास्करः च** - சூரியன், **यां दिशम्** - எந்தத் திசையில், **अध्युवास** - இருந்தானோ, **ताम्** - அந்தத் திசையை, **श्रिताः** - அடைந்துள்ள, **शिवाः** - நரிகள், **क्षत्र-शोणित-पितृक्रियोचितम्**- க்ஷத்திரியர்களின் ரத்தத்தால் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்து பழகிய, **भार्गवम्** - பிருகுவின் குலத்தில் தோன்றிய பரசுராமரை, **चोदयन्त्यः इव**- தூண்டுபவை போல, **प्रतिभयम्**- பயங்கரமாக, **ववासिरे** - ஊளையிட்டன.

(க-து) சூரியனுக்கு எதிராக நின்று நரிகள் ஊளையிடுவது அசுபத்தைக் குறிக்கும். தசரதர் செல்லும்பொழுது நரிகள் அவ்வாறு ஊளையிட்டன. பரசுராமர் இருபத்தொரு முறை உலகிலுள்ள க்ஷத்ரியர்களைக்கொன்று அவர்களுடைய ரத்தத்தால் தம் மூதாதையர்க்குத் தர்ப்பணம் செய்து பழகியவர். நரிகள் ஊளையிட்டு மறுபடியும் க்ஷத்ரியர்களை அழிக்கும்படிப் பரசுராமரைத் தூண்டுவன போல் காணப்பட்டன எனக் கவி உத்ப்ரேக்ஷிக்கின்றார்.

**शिवाः** - நரிகளுக்குப் பொதுப் பெயர். பெண்நரிகள் என்று மட்டும் பொருளில்லை. ஊளையிட்டுப் பரசுராமரை நரிகள் அழைப்பதாக உத்ப்ரேக்ஷித்தது, அவைகள் ரத்தம் குடிப்பதில் ஆசையுடையனவாதல் பற்றிப் போலும்! க்ஷத்ரியர்களின் ரத்தத்தைத் தருவதால் அவை பரசுராமரை அழைத்தன.

तत् प्रतीपपवनादि वैकृतं प्रेक्ष्य शान्तिमधिकृत्य कृत्यवित् ।
अन्वयुङ्क्त गुरुमीश्वरः क्षितेः स्वन्तमित्यलघयत्स तद्व्यथाम् ॥६२॥

तत् - அந்த, प्रतीप-पवनादि - எதிர் காற்று முதலிய, वैकृतम् - கெட்ட நிமித்தங்களை, प्रेक्ष्य - பார்த்து, कृत्यवित् - செய்யவேண்டியதை அறிந்தவரும், क्षितेः-ईश्वरः - பூமிக்கு அரசருமான தசரதர், शान्तिम् - பரிஹாரத்தை, अधिकृत्य - குறித்து, गुरुम् - குருவான வஸிஷ்டரை, अन्वयुङ्क्त - கேட்டார். सः - அவர், स्वन्तम् - நல்ல முடிவு (ஏற்படப் போகிறது), इति - என்று (கூறி), तद्व्यथाम् - அவருடைய மன வேதனையை, अलघयत् - குறைத்தார்.

(க-து) தசரதர் எந்தச் சமயத்தில் எதைச் செய்ய வேண்டுமென்பதை நன்கு அறிந்தவர். இச் சமயத்தில் நேர்ந்த எதிர்காற்று முதலிய கெட்ட சகுனங்களைக் கண்டு மனங் கலங்கிய அவர் இதற்கு என்ன பரிஹாரஞ் செய்யலாமென்று தமது குரு வஸிஷ்டரைக் கேட்டார். அதற்கு வஸிஷ்டர், 'இவற்றால் தீமை ஒன்றும் நேராது. முடிவில் நன்மையே ஏற்படப் போகின்றது' என்று கூறித் தசரதரின் மனக் கலக்கத்தைப் போக்கினார்.

तेजसः सपदि राशिरुत्थितः प्रादुरास किल वाहिनीमुखे ।
यः प्रमृज्य नयनानि सैनिकैर्लक्षणीयपुरुषाकृतिश्चिरात् ॥ ६३ ॥

सपदि - திடீரென்று, उत्थितः - எழுந்த, तेजसः - காந்தியின், राशिः - கூட்டமானது, वाहिनीमुखे - சேனையின் எதிரே, प्रादुरास किल - தோன்றியது. सः (यः) - அந்த ஒளித்திரள், सैनिकैः - சேனைவீரர்களால், नयनानि கண்களை, प्रमृज्य - துடைத்துக்கொண்டு, चिरात् - வெகு நேரஞ்சென்று, लक्षणीय-पुरुषाकृतिः - அறியத் தகுந்த மனித உருவத்தை உடையதாக, (बभूव) - இருந்தது.

இது முதல் மூன்று சுலோகங்கள் பரசுராமரின் வருகையைக் கூறுகின்றன.

(க-து) தசரதருடைய சேனைகளின் எதிரே திடீரென ஒரு ஒளி தோன்றியது. அவ்வொளி சேனாவீரர்களின் கண்களை மங்கச்

செய்தது. சிறிது நேரஞ் சென்று நன்றாக உற்று நோக்கியதும் அது ஒரு மனித உருவம் என்பது புலனாயிற்று. பரசுராமர் அத்தகைய ஒளியுடையவராக இருந்தார் என்பது கருத்து.

पित्र्यमंशमुपवीतलक्षणं मातृकं च धनुरूर्जितं दधत् ।
यः ससोम इव घर्मदीधितिः सद्विजिह्व इव चन्दनद्रुमः ॥ ६४ ॥

**उपवीत-लक्षणम्** - பூணூலே அடையாளமாகக்கொண்ட **पित्र्यम्** - தந்தையினது, **अंशं** - அம்சத்தையும் (குணத்தையும்), **धनुरूर्जितम्** - வில்லினால் உறுதியான, **मातृकं** - தாயினது, **अंशम्** - அம்சத்தையும் (குணத்தையும்), **दधत्** - கொண்ட, **(यः) सः** - அப் பரசுராமர், **ससोमः** - சந்திரனுடன் கூடிய, **घर्मदीधितिः इव**-சூரியன் போன்றும், **सद्विजिह्वः**- பாம்புடன் கூடிய, **चन्दनद्रुमः इव** - சந்தன மரம்போன்றும், (இருந்தார்).

(க-து) பரசுராமர், "ஜமதக்னி என்ற பிராம்மணருக்கும், ரேணு என்ற அரசனின் மகளான ரேணுகைக்கும் பிறந்தவர். ஆகவே அவரிடம் பிராம்மணரின் குணமான சாந்தியும், க்ஷத்திரியரின் குணமான வீரியமும் சேர்ந்து காணப்பட்டன. இத்தகைய அவர், உஷ்ணமான கிரணங்களையுடைய சூரியன் குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரனுடன் சேர்ந்திருப்பது போலவும், குளிர்ச்சியைத் தரும் சந்தன மரம் விஷமுடைய பாம்புடனிருப்பதுபோலவும் இருந்தார்.

இதற்கு முன் சுலோகத்தில் 'ஒளித்திரள் தோன்றியது' எனக் கூறப்பட்டது. இச்சுலோகத்திலும் இதற்கு அடுத்துள்ள இரண்டு சுலோகங்களிலும் எழுவாயாக வருகின்ற சொல்லான **यः** - என்பது ஒளித்திரளைக் குறிக்குமேயன்றிப் பல உரையாசிரியர்களும் கவியும் கருதுகின்றபடி பரசுராமரை நேரிடக் குறிக்காது. '**क्षमादमुं नारद इत्यबोधि सः**' என மாக கவி கூறியது போல், அவ்வொளித்திரள் பரசுராமர் தாம் என்று கூறப்படவேண்டுவது அவசியமா

கும். கவி அவ்வாறு கூறவில்லை. இக்குறையை நீக்க உதவு கின்றது வல்லபதேவர் என்ற உரையாசிரியர் கண்ட பாட பேதம்; இச்சுலோகத்தின் மூன்றாமடியான य. ससोम इव घर्मदीधितिः என்பதற்குப்பதிலாக, भार्गवोऽथ ददृशे महाद्युतिः' என்பது அவர் கொண்டது. இதை அனுசரித்தே நாரா யணரும் அருணகிரிநாதரும் உரையிடுகின்றனர். இவ்விருவ ரில் நாராயணர், यः ससो....तिः என்ற பாடத்தை அறிந்தவ ராகக் காணப்படவில்லை.

'अथ भार्गवः ददृशे - अचिरेण पुरुषाकृतिदर्शनानन्तरम् भार्गव त्वमभिव्यक्तभूदित्यर्थः' नारायणः ॥

'भार्गवोऽथ ददृशे महाद्युतिः' इति तृतीयपादे वल्लभपाठः श्रेयान्। तत्र पितुरेव पुत्रत्वेन जायमानत्वात् पित्र्यांशो भित्तिस्थानीयः। तस्य च विशेषाधायको मातृकः; तस्याः क्षेत्रमात्रत्वात्। अयं च विशेषः उपमानेनाभिव्यज्यते सद्विजिह्व इति चन्दनद्रुम इति। यस्ससोम इव घर्मदीधितिरिति तृतीयपादपाठे तेजसां राशेरेव यच्छब्दपरामृश्यत्वेन भार्गवप्रस्तावः कृतो न स्यात्' अरुणगिरिनाथः ॥

येन रोषपरुषात्मनः पितुः शासने स्थितिभिदोऽपि तस्थुषा।
वेपमानजननीशिरश्छिदा प्रागजीयत घृणा ततो मही ॥ ६५ ॥

रोष-परुष-आत्मनः - கோபத்தினால் கொடிய மனங் கொண்டவராய், स्थिति-भिदः अपि - உலகவழக்கை மீறுகின் றவராயினும், पितुः - தந்தையின், शासने - ஆணையில், तस्थुषा-நின்றவரும், वेपमान-जननी-शिरश्छिदा - நடுங்குகின்ற தாயின் தலையைத் துணித்தவருமான, (येन)-तेन - அப்பரசு ராமரால், प्राक् - முதலில், घृणा - இரக்கம், अजीयत - வெல் லப்பட்டது; ततः - பிறகு, मही - பூமி, (अजीयत) - ஜயிக் கப்பட்டதாயிற்று,

(க-து) இச்சுலோகத்தில் பாசுராமரின் குணவிசேஷமொன்று கூறப்படுகின்றது. வீரனாக இருந்து உலகை வெல்ல விரும்புபவன் இரக்கத்தை வெல்லவேண்டும். இரக்கமற்றவனாக இருக்க வேண்டும். இரக்கம் கொள்ளுதல் வீரனுடைய தகுதியின்மையைக் காட்டும். கர்ணன் ஸேனாபதியாக இருக்கத்தகாதவன் என்பதை பீஷ்மர், घृणी कर्णः प्रमादी च என்பதால் காட்டினார்; பாசுராமர் இரக்கத்தை வென்றவர்.

தம் தாயின் தலையைத் துணிக்கும்படி தந்தை உத்தரவிட, சிறிதும் தாமதியாது வெட்டி வீழ்த்தினார். தந்தை கூறியது நியாயமன்று என அறிந்தும் அதற்குக்கீழ்ப்படிந்தார். கோடரியுடன் அருகில் வருகின்ற தம்மைப் பார்த்து உடல் நடுங்கும் தாயைக் கண்டும் இரக்கம் கொள்ளவில்லை.

தம் தாயின் தலையைத் துணித்தவரைக் காட்டிலும் கொடிய இரக்கமற்றவர் வேறு எவர் இருக்கமுடியும்?

இவ்வாறு இரக்கத்தை வென்றிருந்ததால்தான், அவர் இருபத்தொரு தலைமுறை க்ஷத்ரியர்களைக் கொல்ல மன உறுதி பெற்றிருந்தார். அரசர்களைக் கொன்று பூமி முழுவதையும் தம்முடையதாக்கிக் கொண்டார். இத்தகைய வீரம் நிறைந்தவர் பாசுராமர்.

ஜமதக்னி சாஸ்திரத்தை மீறியதன் காரணம், रोषपरुषात्मनः - என்பதால் விளக்கப்பட்டது. 'ஸ்திரீகளை வதம் செய்தல் கூடாது' என்பது சாஸ்திரங்களின் கட்டளை. 'अवध्या ब्राह्मणा गावो ज्ञातयः शिशवः स्त्रियः । येषां चान्नानि भुञ्जीत ये च स्युः शरणागताः' என்பதைக் காண்க.

ஜமதக்னி ரேணுகையின் தலையைத் துணிக்கும்படி மகனுக்குக் கட்டளையிட்டதன் காரணம்:

ஒரு சமயம் ரேணுகை நீராட நதிக்குச் சென்றாள். அங்கே, மிருத்திகாவதி என்ற நகரின் அரசன் சித்ரரதன்

என்பவன் கழுத்தில் தாமரை மலர் மாலை யணிந்து மனைவி யுடன் ஜலக்ரீடை செய்வதைக் கண்டு அத்தகைய இன்பம் தானும் பெறவேண்டுமென விரும்பினாள். இத்தகாத எண்ணத்தினால் மனத்தூய்மை யிழந்தாள். இதையறிந்து ஜமதக்னி கோபங்கொண்டு, ருமண்வான், ஸுஷேணன், வஸு, விச்வாவஸு என்ற நான்கு புத்திரர்களையும் அழைத்து ரேணுகையின் தலையை வெட்டும்படி பணிக்கவும் அவர்கள் வெட்டமறுத்தனர். பின் பரசுராமர் தந்தை சொற்படி வெட்டினார். அதனால் ஸந்தோஷமடைந்த ஜமதக்னி, விரும்பிய வரத்தைக் கேட்கும்படி கூறவும் பரசுராமர், தம் தாய் உயிர் பெற்றெழவேண்டுமென்றும், நடந்த வரலாறு எதுவும் அவளுக்கு நினைவிலிருத்தல் கூடாதெனவும் வேண்டினார். ஜமதக்னியும் அவ்வரங்களை அளித்தார்.

अक्षबीजवलयेन निर्बभौ दक्षिणश्रवणसंस्थितेन यः ।
क्षत्रियान्तकरणैकविंशतेर्व्याजपूर्वगणनामिवोद्वहन् ॥ ६६ ॥

**सः (यः)** - அப்பரசுராமர், **दक्षिण-श्रवण - संस्थितेन** - வலது காதில் இருந்த, **अक्षबीज-वलयेन** - ருத்ராக்ஷ மாலையினால், **क्षत्रियान्तकरणैकविंशतेः** - க்ஷத்ரியர்களுடைய வதத்தினது இருபத்தொன்று என்ற ஸங்கியையின், **व्याजपूर्व-गणनां** - (ருத்ராக்ஷமாலை தரித்தல் என்ற) வியாஜத்தினால் எண்ணுதலை, **उद्वहन् इव** - செய்பவர்போல, **निर्बभौ** - காணப்பட்டார்.

(க-து) பரசுராமர் அவரது வலது காதில் ருத்ராக்ஷ மாலை ஒன்றை வைத்திருந்ததன் காரணத்தைக் கவி, 'பரசுராமர் தாம் க்ஷத்திரியர்களை இருபத்தொரு தலைமுறை அழித்தலை எண்ணுவதற்கு ருத்ராக்ஷமாலையைக் கருவியாக உபயோகப் படுத்துபவர்போல் காணப்பட்டார்' என உத்ப்ரேக்ஷித்தார்.

*ருத்ராக்ஷமாலை, ஜபத்தின் ஸங்கியையை எண்ணுதற்குக் கருவியாகையால் இவ்வாறு உத்ப்ரேக்ஷிக்கக் காரணமாயிற்று. பரசுராமர், இருபத்தொரு தலைமுறை கொல்வதாகப் பிரதிக்ஞை செய்துள்ளதால் அந்த ஸங்கியையை மறவாமல் இருக்க ருத்ராக்ஷமாலையை உபயோகித்தார்போலும் என்பது கவியின் கருத்து.* 'क्षत्रियाणामन्तकरणस्य यासावेकविंशतिसंख्या तस्याः व्याजपूर्वा गणना, तदविस्मरणार्थमुद्वहन्निवेत्यर्थः' नारायणः ॥

तं पितुर्वधभवेन मन्युना राजवंशनिधनाय दीक्षितम् ।
बालसूनुरवलोक्य भार्गवं स्वां दशां च विषसाद पार्थिवः ॥ ६७ ॥

**पितुः** - *தந்தை ஜமதக்னியின்,* **वधभवेन** - *கொலையினால் உண்டான,* **मन्युना** - *கோபத்தினால்,* **राज-वंश-निधनाय** - *அரசகுலத்தையே அழிப்பதற்காக,* **दीक्षितम्** - *தீர்மானித்திருப்பவரான,* **तं भार्गवम्** - *பிருகுவின் குலத்தவரான பரசுராமரையும்,* **स्वाम्** - *தமது,* **दशां च** - *நிலையையும்,* **अवलोक्य** - *பார்த்து (எண்ணி),* **बालसूनुः** - *சிறு பருவத்தினரான புதல்வர்களையுடைய,* **पार्थिवः** - *அரசர் (தசரதர்),* **विषसाद** - *வருந்தினார்.*

*(க-து) பரசுராமர், தமது தந்தையை ஒரு அரசன் கொன்றுவிட்டதால் க்ஷத்ரிய வம்சத்தையே அழித்துப் பழி வாங்குவதாக ஸங்கல்பம் செய்திருந்தார். அப்படிப்பட்ட பரசுராமர் இங்கு வந்துள்ளார். தசரதருடைய பிள்ளைகளோ சிறு பிராயத்திலுள்ள க்ஷத்ரியர்கள். அவரும் வயது முதிர்ந்தவர். தம் கண்ணெதிரிலேயே பரசுராமர் தமது பிள்ளைகளைக் கொன்றுவிடுவாரோ என்று எண்ணித் தசரதர் வருந்தினார்.*

பரசுராமர் இருபத்தொரு தலை முறை க்ஷத்ரியர்களைக் கொல்வதாகப் பிரதிக்ஞை செய்ததன் காரணம்:

*சந்திரவம்சத்தில் யதுவினது குலத்தவனான கிருதவீர்யனது குமாரன் கார்த்தவீரியன் என்பவன், நாராய*

ணம்சமான தத்தாத்ரேய மஹரிஷியை ஆராதித்து, அவருடைய அருளால் போர்புரியுங்கால் ஆயிரங்கைகளுடனிருத்தல், பூமியை நன்கு பாலிக்கும் திறமை, முதலிய பல வரங்களைப் பெற்றிருந்தான். பல யாகங்களைச் செய்து, தன் குலத்தவனான மஹிஷ்மானால் நிர்மாணிக்கப்பட்ட மாஹிஷ்மதி என்ற நகரில் இருந்துகொண்டுப் பலகாலம் அரசாண்டு வந்தான். இவன் ஒரு சமயம் சேனையுடன் காடு சென்று வேட்டையாடியபின் பரசுராமரின் தந்தையான ஜமதக்னி முனிவரின் ஆச்ரமமடைந்து, அவரால் உபசரிக்கப் பட்டு நாடு திரும்புகையில், அவரது ஆச்ரமவிருக்ஷங்களையெல்லாம் அழித்து விட்டு, அவரது பசுங்கன்றைக் கவர்ந்து செல்லவும், அதனை அறிந்த பரசுராமர், ஆயுதங்களுடனே சென்று கார்த்தவீரியனுடன் போர் செய்து அவனது படையை அழித்ததுடன், அவனது ஆயிரம் தோள்களையும் தமது கோடாலியால் வெட்டி அவனைக் கொன்றார். அவனது குமாரர்கள் பழிக்குப்பழி வாங்கவேண்டுமென நிச்சயித்துப் பரசுராமரில்லாத சமயம் பார்த்துப் பர்ணசாலையில் நுழைந்து அவரது தந்தையின் தலையைவெட்டினர். இதை அறிந்த பரசுராமர் கார்த்தவீரியனதுகுமாரர்களை அழித்துப் பின் கர்வம்கொண்ட க்ஷத்திரியர்கள் எல்லோரையும் அழிப்பதாகக் கூறினார். ஜமதக்னியின் தலையைக் கார்த்தவீரியனுடைய குமாரர்கள் வெட்டிய பொழுது அம்முனிவரின் மனைவியான ரேணுகை இருபத்தொருமுறை மார்பிலடித்துக்கொண்டு புலம்பினளாதலால் பரசுராமர் இருபத்தொரு தலைமுறை க்ஷத்ரியர்களைக் கொன்றார் என்றும், ஸ்யமந்தபஞ்சகம் என்ற இடத்தில் அரசர்களது இரத்தத்தைத் தடாகங்களில் தேக்கித் தந்தைக்குத் தர்ப்பணம் செய்தார் என்றும் கூறுவர்.

नाम राम इति तुल्यमात्मजे वर्तमानमहिते च दारुणे ।
हृद्यमस्य भयदायि चाभवद् रत्नजातमिव हारसर्पयोः ॥ ६८ ॥

**आत्मजे** - *புத்திரனிடத்தும்,* **दारुणे** - *அஞ்சத்தக்க,* **अहिते च** - *பகைவனிடத்தும்,* **तुल्यम्** - *ஸமமாக,* **वर्तमानम्** - *இருக்கின்ற,* **रामः इति** - *ராமன் என்ற,* **नाम** - *பெயர்,* **हारसर्पयोः** - *மாலையிலும் பாம்பினிடத்தும் (இருக்கின்ற),* **रत्नजातं इव** - *சிறந்த ரத்னம்போல,* **अस्य** - *இந்தத் தசரதருக்கு,* **हृद्यम्** - *மனத்திற்கு உகந்ததாகவும்,* **भयदायि च** - *பயத்தைத் தருவதாகவும்,* **अभवत्** - *ஆயிற்று.*

*(க-து) ரத்தினஹாரத்திலும் ரத்தினமுள்ளது. விஷமுள்ள பாம்பினிடத்திலும் ரத்தினமிருக்கிறது. ஆனல் ஹாரத்திலுள்ள ரத்தினந்தான் மனத்திற்கு மகிழ்ச்சியை அளிக்கிறது. பாம்பினிடமுள்ள ரத்தினக்கல் அச்சத்தையே தருகிறது. அதைப் போலராமன் என்ற பெயர், தசரதர் புதல்வர் ராமனுக்கும், பரசுராமருக்கும் பொதுவாக இருந்தபோதிலும், தசரதரின் மனத்திற்கு ,ராமன், என்ற தம் மகனின் பெயர் மகிழ்ச்சியைத் தருவதாகவும், பரசுராமன் என்பதிலுள்ள ராமன் என்பது அச்சத்தைத் தருவதாகவும் இருந்தன.*

अर्घ्यमर्घ्यमिति वादिनं नृपं सोऽनवेक्ष्य भरताग्रजो यतः ।
क्षत्रकोपदहनार्चिषं ततः संदधे दृशमुदग्रतारकाम् ॥ ६९ ॥

**सः** - *அப்பரசுராமர்,* **'अर्घ्यम् अर्घ्यम्' इति** - *'அர்க்யம் அர்க்யம்' என்று,* **वादिनम्** - *சொல்லுகின்ற,* **नृपम्** - *அரசர் தசரதரை,* **अनवेक्ष्य** - *கவனியாமல்,* **यतः** - *எங்கு,* **भरताग्रजः** - *பரதனுக்கு மூத்தவரான ராமர் (இருந்தாரோ),* **ततः** - *அங்கு,* **क्षत्र-कोपदहन-अर्चिषम्** - *க்ஷத்ரியர்களிடமுள்ள கோபமாகிய நெருப்பின் ஜ்வாலை (போன்ற),* **उदग्र - तारकाम्** - *(மேல் நோக்கிய) பயங்கரமான விழிகளையுடைய,* **दृशम्** - *பார்வையை,* **संदधे** - *வைத்தார்,*

(க-து) பரசுராமரைக் கண்டவுடன் தசரதர், அவருக்கு மரியாதை செய்யவிரும்பி 'அர்க்யம் அர்க்யம்' என்று தண்ணீர் கொண்டு வரும்படிக் கூவினர். ஆனால் பரசுராமர் அவரைச் சற்றும் கவனியாமல், ராமர் இருக்குமிடத்தைத் தேடிச் சென்று, கோபம் பொங்க, விழி பிதுங்க பயங்கரமாக அவரைப் பார்த்தார்.

இங்கு, கவி பரசுராமரின் பயங்கரமான பார்வையை, அவர் க்ஷத்ரியர்களிடம் கொண்ட கோபக்கனலின் ஜ்வாலையாக உருவகம் செய்தார்; 'अर्घ्यं अर्घ्यं' என்றதால் தசரதரின் அவசரம் புலனாகும்.

तेन कार्मुकनिषक्तमुष्टिना राघवो विगतभीः पुरोगतः ।
अङ्गुलीविवरचारिणं शरं कुर्वता निजगदे युयुत्सुना ॥ ७० ॥

**कार्मुक-निषक्त-मुष्टिना** - வில்லில் வைக்கப்பட்ட கையை உடையவரும், **शरम्** - பாணத்தை, **अङ्गुली-विवर-चारिणम्** - விரல்களின் இடை வெளிகளில் செல்லும்படி, **कुर्वता** - செய்கின்றவரும், **युयुत्सुना** - போர் புரிய விரும்புகின்றவருமான, **तेन** - அப் பரசுராமரால், **विगतभीः**-அச்சமற்றவராக, **पुरोगतः** - முன்னே வந்துள்ள, **राघवः** - ராமர், **निजगदे** - சொல்லப்பட்டார்.

(க-து) வில்லைக் கையில் உறுதியாகப் பிடித்து அம்பையும் எய்வதற்குச் சித்தமாக வைத்துக்கொண்டு பரசுராமர், போர் புரிய விருப்பமுள்ளவராக அச்சமின்றி எதிரே வந்து நிற்கும் ராமரைப் பார்த்து இவ்வாறு கூறினர்.

क्षत्त्रजातमपकारवैरि मे तन्निहत्य बहुशः शमं गतः ।
सुप्तसर्प इव दण्डघट्टनाद्रोषितोऽस्मि तव विक्रमश्रवात् ॥ ७१ ॥

**क्षत्रजातम्** - க்ஷத்ரிய ஜாதியே, **मे**-எனக்கு, **अपकारवैरि**- (தந்தையைக் கொன்று) அபகாரம் செய்ததால் எதிரியாக உள்ளது. **तत्** - அந்த க்ஷத்ரிய ஜாதியை, **बहुशः** - பலமுறை

(இருபத்தொருமுறை), निहत्य - கொன்று, शमं गतः - மன வமைதி பெற்றுள்ளேன். (ஆயினும்), सुप्तसर्पः - தூங்கிய பாம்பானது, दण्ड-घट्टनात् इव - தடியடியால் (கோபமடை வது) போல, तव - உன்னுடைய, विक्रम-श्रवात् - பராக்ரமத் தைக் கேட்டதால், रोषितः - கோப மூட்டப்பெற்றவனாக, अस्मि - இருக்கிறேன்.

இது முதல் எட்டு சுலோகங்கள் பரசுராமர் கூறுவ தாக உள்ளன.

(க-து) என் தந்தையைக் கொன்றதால், நீ பிறந்த இந்த க்ஷத் ரிய ஜாதி எனக்கு மிகுந்த அபகாரத்தைச செய்து எதிரியாகி விட் டது. அதனால் இருபத்தொரு முறை க்ஷத்ரியர்களைக் கொன்று சிறிது மனவமைதி பெற்றுள்ளேன். ஆயினும் தூங்குகின்ற பாம்பைத் தடியாலடித்து எழுப்பி ஆத்திரமூட்டுவதைப்போல, உன் பராக்ரம மானது என்மன அமைதியைக் குலைத்துக் கோபத்தைக் கிளப்பியது. க்ஷத்ரியன் மறுபடியும் பலவானாய் விட்டான் என்று எண்ணும்பொழுது என்மனம் அடங்காக் கோபமடைகிறது.

मैथिलस्य धनुरन्यपार्थिवैस्त्वं किलानमितपूर्वमक्षणोः ।
तन्निशम्य भवता समर्थये वीर्यशृङ्गमिव भग्नमात्मनः ॥ ७२ ॥

अन्य-पार्थिवैः - மற்ற அரசர்களால், अनमितपूर्वं - இதற்கு முன் வளைக்கப்படாத, मैथिलस्य - மிதிலையரசர் ஜனகரு டைய, धनुः - வில்லை, त्वम् - நீ, अक्षणोः किल - முறித்துவிட் டாயாம்! तत् - அந்தவில்லின் முறிவைப் பற்றி, निशम्य - கேட்டு, भवता - உன்னால், आत्मनः - என்னுடைய, वीर्यशृंगम् - வீரியமாகிய முடியை, भग्नं इव - முறிக்கப்பட்டதுபோல, समर्थये - நினைக்கிறேன்.

(க-து) இதுவரை எவரும் வளைக்காத ஜனகரின் வில்லை வளை த்து நீ முறித்து விட்டாய் என ஜனங்கள் கூறுகின்றனர். அதனால் என்னுடைய கீர்த்தியையே நீ அழித்து விட்டதாக நான் எண்ணுகி

றேன். என்னைவிடப் பராக்ரமசாலி இதுவரை எவரும் தோன்றிய தில்லை. இந்த வில்லை முறித்து நீ பலமுள்ளவன் என்று நிரூபித்து என்னை உனக்குத் தாழ்ந்தவனாகச் செய்துவிட்டாய்.

अन्यदा जगति राम इत्ययं शब्द उच्चरित एव मामगात् ।
व्रीडमावहति मे स संप्रति व्यस्तवृत्तिरुदयोन्मुखे त्वयि ॥ ७३ ॥

**अन्यदा** - மற்ற சமயத்திலெல்லாம் (முன்பெல்லாம்), **जगति** - உலகத்தில், **रामः इति** - ராமன் என்ற, **अयं शब्दः** - இந்தச் சொல்லானது, **उच्चरितः** - உச்சரிக்கப்பட்டு, **मां एव** - என்னையே, **अगात्** - அடைந்தது (குறித்தது). **संप्रति** - தற்பொழுது, **त्वयि** - நீ, **उदयोन्मुखे**-எழுங்காலத்தில் **सः** - அச்சொல், **व्यस्तवृत्तिः** - பிரிதொரு பொருளையுடையதாக, **मे** - எனக்கு, **व्रीडं** - வெட்கத்தை, **आवहति** - உண்டாக்குகின்றது.

(க-து) 'பரசு' என்ற அடைமொழி கொடாமல் 'ராமன்' என்று கூறினால், அச்சொல் இதுவரை உலகத்தில் என் ஒருவனையே குறித்தது. ஆனால் இப்பொழுது நீ வில்லை முறித்துப் புகழ்பெற்று விளங்கத் தொடங்கி யிருப்பதால் இரண்டு பொருள்களையுடையதாக, உன்னையும் குறிக்கிறது. ராமன் என்றால் 'எந்த ராமன்? தசரத ராமனா? பரசுராமனா?' என ஜனங்கள் கேட்கத்தொடங்குவர். இது நீ எனக்கு ஸமமான புகழ் பெற்றாய் என்பதைக் காட்டும். இதைக் காட்டிலும் பெரியதொரு அவமானம் வேறு எனக்கு வேண்டுமா? என்னைக் குறிப்பிடும் அதே சொல் உன்னையுங் குறிப்பிடுவது எனக்கு வெட்கத்தைத் தருகிறது.

बिभ्रतोऽस्त्रमचलेऽप्यकुण्ठितं द्वौ रिपू मम मतौ समागसौ ।
धेनुवत्सहरणाच्च हैहयस्त्वं च कीर्तिमपहर्तुमुद्यतः ॥ ७४ ॥

**अचलेऽपि** - (கிரௌஞ்ச) மலையிலுங்கூட, **अकुण्ठितम्** - தடுக்கப்பெறாத, **अस्त्रम्** - அஸ்திரத்தை, **बिभ्रतः** - பெற்றிருக்கின்ற, **मम** - என்னால், **द्वौ** - இருவர், **समागसौ** - ஸமமான

குற்றமுள்ள, रिपू - பகைவர்களாக, मतौ - கருதப்படுகிறார் கள்; (அவர்கள் யாவர் எனில்), धेनुवत्स-हरणात् - (ஹோ மப்) பசுவின் கன்றைக் கவர்ந்ததால், हैहयः च - கார்த்தவீர் யனும், कीर्तिम् - (எனது) புகழை, अपहर्तुम्-அபகரிப்பதற்கு, उद्यतः - தயாராக இருக்கின்ற, त्वं च - நீயும் (ஆவீர்கள்).

(க-து) மலையைப் பிளக்கும் திறமை வாய்ந்த நான் இரண்டு பேரையே எனக்கு எதிரிகளாக எண்ணுகின்றேன்; ஒருவன் கார்த்த வீரியன்; அவன் என் தந்தையின் பசுங்கன்றைக் கவர்ந்தான். அவனை ஒழித்தாயிற்று. மற்றொருவன் நீ; நீ எனது புகழைக் கவர முயல்கின் றாய். ஆதலால் உன்னை விட்டுவிடுவது சாத்யமன்று; நீங்கள் இரு வரும் கவர்தல் என்ற ஒரே மாதிரியான குற்றத்தை இழைத்தவர்கள்.

கார்த்தவீரியன் பசுங்கன்று கவர்ந்த வரலாற்றை 67-ஆம் சுலோகக் குறிப்பில் பார்க்க.

वत्स - பசுங்கன்று; 'वत्सहरणात्' - என்று கூறினாலே போதுமானதாயிருக்க धेनु - என்று சொல்லை உபயோகித் தது, கார்த்தவீரியன் செய்த குற்றம் மிகப் பெரியதெனக் காட்ட. பிரிந்த கன்று வருந்துவதுபோல் கன்றைப் பிரிந்த தாயும் வருந்தும்; பசுவின் சொந்தக்காரரும் வருந்துவர். 'अत्र वत्सग्रहणमात्रेणैव पर्याप्तत्वेऽपि धेनुग्रहणमपराधगौरवसूचनार्थम्। मातरि जीवन्त्यां हि वत्सग्रहणं धेनुदुःखदर्शनात् तत्स्वामिनं नितरां दुःखयति' नारायणः। 'जीवन्मातृको हि तर्णको ह्रियमाणो धेनुं स्वामिनं च दुःखयति' अरुणगिरिः॥

கன்றை மாத்திரம் கவர்ந்ததாக மஹாபாரதமும், கன்றையும் தாய்ப் பசுவையும் கவர்ந்ததாக ஸ்ரீபாகவதமும் கூறும்:

கிரௌஞ்ச மலையைப் பற்றிய வரலாறு:

ஸுப்ரஹ்மண்யரும் பரசுராமரும் சிவபிரானிடம் வில் வித்தையைப் பயின்றார்கள். ஸுப்ரஹ்மண்யர் ஒரு சமயம்

தமது பாணத்தால் கிரௌஞ்ச மலையைத் துளைத்தார். அத னால் இவருக்கு क्रौञ्चदारणः - என்ற பெயர் ஏற்பட்டது. அவரது புகழைக் கண்டு பொறாமை கொண்ட பரசுராமரும் ஒரு அம்பை எய்து கிரௌஞ்ச மலையைத் துளைத்தார். பலத்தில் ஸுப்ரஹ்மண்யருக்குத் தாம் சமமானவர் என் பதைநிரூபித்தார். ஆகவே அவர் மலையிலும் தடைபெறாத அஸ்திர முடையவரானார்.

क्षत्त्रियान्तकरणोऽपि विक्रमस्तेन मामवति नाजिते त्वयि ।
पावकस्य महिमा स गण्यते कक्षवज्ज्वलति सागरेऽपि यः ॥७५॥

तेन - அக் காரணத்தால், विक्रम. - (எனது) பராக்ரமம், क्षत्रियान्तकरणः अपि - க்ஷத்ரியர்களுக்கு முடிவைச் செய்வ தாயினும், त्वयि - நீ, अजिते सति - ஜயிக்கப்படாதபொழுது, माम् - என்னை, न अवति - மகிழ்விக்கவில்லை; यः - எந்த அக் னியானது, कक्षवत्-உலர்ந்த புல்லில் எரிவதுபோல், सागरे-अपि - ஸமுத்ர ஜலத்திலும், ज्वलति - ஜ்வலிக்கின்றதோ, (तस्य) पावकस्य - அத்தகைய அக்னிக்கு, सः महिमा - அது சக்தியாக, गण्यते - கருதப்படுகின்றது.

(க-து) "எனது பராக்ரமம் இதுவரை க்ஷத்ரியர்களை அழித்த தேயாயினும், உன்னை வெல்லாத வரையில் அதைப் பற்றி நான் மகிழ்ச்சியுறமாட்டேன். காய்ந்த புல்லை எரிப்பதுபோல் ஜலத்தையும் எரிப்பது தான் அக்னியின் உண்மையான சக்தி ஆகும். வடவாக்னி ஒன்று தான் அத்தகைய திறமை பெற்று இருக்கின்றது. "கார்த்தவீரி யனைப் போன்றே குற்றவாளியாயுள்ள உன்னை வென்றபிறகு தான் என் பலத்தை நான் புகழ்ந்துகொள்ளவேண்டும்.

विद्धि चात्तबलमोजसा हरेरैश्वरं धनुरभाजि यत्त्वया ।
खातमूलमनिलो नदीरयैः पातयत्यपि मृदुस्तटद्रुमम् ॥ ७६ ॥

यत् - யாதொரு, ऐश्वरं - சிவபிரானுடைய, धनुः - வில்லானது, त्वया - உன்னால், अभाजि - முறிக்கப்பட்டதோ (तत्) - அந்த வில்லே. हरेः - விஷ்ணுவின், ओजसा - பலத்தினால், आत्तबलं च - கவரப்பட்ட பலமுடையதாக, विद्धि - அறிந்துகொள்; नदीरयैः - ஆற்றின் வேகத்தினால், खातमूलम्- வேரறுக்கப்பட்ட, तटद्रुमम् - கரையிலுள்ள மரத்தை, मृदुः - மெதுவான, अनिलः अपि - காற்றும் கூட, पातयति - வீழ்த்துகின்றது.

(க-து) "ஆற்றிலுள்ள வெள்ளத்தின் வேகத்தினால் கரையிலுள்ள மரத்தின் வேரறுக்கப்பட்டால் அம்மரத்தைச் சிறு காற்று கூடத் தள்ளிவிடும்; அதுபோல் மகா விஷ்ணுவினால் இவ்வில்லின் பலம் முன்பே போக்கப்பட்டு விட்டதால் இதைச் சிறு குழந்தைகூட ஒடித்துவிடும். ஆதலால் நீ இதைப் பற்றிக் கர்வம் கொள்ளாதே.

விஷ்ணுவினால் சிவதனுஸின் பலம் போக்கப்பட்ட வரலாறு:

விசுவகர்மன் என்பவன் மகத்தான பலமுடைய இரண்டு வில்களைத் தயார் செய்தான். தேவர்கள் ஒரு வில்லைச் சிவபிரானிடத்தும, மற்றொன்றை விஷ்ணுவிடத்தும் தந்தனர். ஒருசமயம் சிவன் விஷ்ணு இவர்களின் பலத்தைப் பார்ப்பதற்கான ஆவலினால் அவ் இருவரையும் யுத்தம் செய்யும்படி தேவர்கள் தூண்டினர். அந்தயுத்தத்தில் விஷ்ணுவின் ஹுங்கார சத்தத்தினால் சிவபிரானது வில்லின் சக்தி குறைந்தது.

சிவபிரான் இவ்வில்லைக் கொண்டு தக்ஷயாகஸம்ஹாரம், திரிபுரஸம்ஹாரம் முதலியன செய்தபின் முடிவில் அவ்வில்லை ஜனகன் முன்னோனை தேவராதனிடம் கொடுத்தார். விஷ்ணு தமது வில்லைப் பரசுராமரின் பாட்டனான ரிசீகமுனிவரிடம் அவருடைய தவத்திற்கு மகிழ்ந்து கொடுக்க அவ்வில் பரசுராமரை அடைந்தது.

तन्मदीयमिदमायुधं ज्यया संगमय्य सशरं विकृष्यताम् ।
तिष्ठतु प्रधनमेवमप्यहं तुल्यबाहुतरसा जितस्त्वया ॥ ७७ ॥

**तत्** - ஆகையால், **मदीयम्** - என்னுடையதான, **इदम्** - இந்த, **आयुधम्** - வில், **ज्यया** - நாணோடு, **संगमय्य** - சேர்க்கப் பட்டு **सशरम्** - அம்புடன் இருக்கும்படி, **विकृष्यताम्**-இழுக் கப்படட்டும் **प्रधनम्** - (நம் மிருவருக்கும்) யுத்தம், **तिष्ठतु** - (ஒருபுறம்) இருக்கட்டும்; **एवं अपि**-இவ்வாறு வில் வளைத்து இழுக்கப்படினும், **तुल्य-बाहु तरसा** - ஸமமான பாஹுபல முடைய, **त्वया** - உன்னால், **अहम्** - நான், **जितः** - (நான்) ஜயிக்கப்பட்டவனே.

(க-து) "ஆதலால் பலமுள்ள எனது வில்லை நாண் ஏற்றி அம்பை வைத்து இழு. அவ்வாறு நீ செய்தால், எனக்குச் சமமான பலமுடையவனாக உன்னைக் கருதி, 'என்னை நீ வென்றுவிட்டாய்' என்றே கூறுவேன். நமது பலத்தைச் சோதிக்கச் சண்டைதான் வேண்டுமென்பதில்லை.

'**तुल्यबाहुतरसा**' - தோல்வியை ஏற்கத் தம்மைவிட அதிக பலமுடையவராக ராமர் இருக்கவேண்டுமென்று கூடப் பரசுராமர் கருதவில்லை; தமக்குச் சமமான பலமிருந் தால் போதுமென்றார். தமக்குச் சமமானவர் யாருமில்லை எனக் கருதியதால் இவ்வாறு அவர் கூறினார். **एवमपि** என்ப தால், ராமருக்கு வில்லை வளைக்கவும் திறன் இல்லை எனப் பரசுராமர் நினைத்தது புலப்படும்.

कातरोऽसि यदि वोद्गतार्चिषा तर्जितः परशुधारया मम ।
ज्यानिघातकठिनाङ्गुलिर्वृथा बध्यतामभययाचनाञ्जलिः ॥ ७८ ॥

**वा** - அல்லது, **उद्गतार्चिषा**- எழுகின்ற ஒளியையுடைய தான, **मम** - என்னுடைய, **परशुधारया** - கோடாரியின் முனை யால், **तर्जितः**-பயமுறுத்தப்பட்டு, **कातरः** - பயந்தவனாக, **यदि**

**असि** - இருப்பாயானால், **वृथा** - பயனின்றி, **ज्या-निघात-कठिन-अङ्गुलिः** - நாண் கயிற்றின் அடிகளால் தழும்பேறிய விரல் களையுடைய, **अभय-याचनाञ्जलिः** - அபயத்தை யாசிக்கின்ற அஞ்சலியானது, **त्वया** - உன்னால், **बध्यताम्** - செய்யப்பட்டும்.

(க-து) "அல்லது என் கோடாரியைக் கண்டு அஞ்சுவாயானால், சரணமடைந்து கைகூப்பி அபயத்தை வேண்டு; விற்பிடித்துத் தழும்பேறிய கை உனக்கு இவ்வகையில் தான் உதவும். சண்டையிட உதவாது வீணே தழும் பேறியுள்ளது."

एवमुक्तवति भीमदर्शने भार्गवे स्मितविकम्पिताधरः ।
तद्धनुर्ग्रहणमेव राघवः प्रत्यपद्यत समर्थमुत्तरम् ॥ ७९ ॥

**भीमदर्शने** - பயங்கரமான தோற்றமுள்ள, **भार्गवे** - பரசுராமர், **एवम्** - இவ்வாறு, **उक्तवति** - சொன்னபொழுது, **राघवः**-ராமர், **स्मित-विकम्पित-अधरः**-புன்னகையால் அசைந்த உதடுடையவராக, **तद्धनुर्ग्रहणम् एव** - அவரது வில்லை வாங்கிக்கொள்ளுதலையே, **समर्थम्** - தகுந்த, **उत्तरम्** - பதிலாக, **प्रत्यपद्यत** - கருதினார்.

(க-து) இவ்வாறு பரசுராமர் கூறவும் ராமர், அவரது வில்லைக் கையில் வாங்குவதே அவர் கூறியதற்குத் தக்க பதிலாகும் என நினைத்தார். புன்னகையுடன் அவ்வில்லைக் கையில் எடுத்தார.

'**तद्धनुर्ग्रहणम् एव**'-இங்குள்ள **एव** என்றசொல், 'வில்லை வாங்குவதே சிறந்தது, மற்றது அல்ல' எனக் காட்டவந்தது. **स्मितविकम्पिताधरः** - ராமர், **धीरोदात्त** ராகையால் தமது கோபத்தைக் காட்ட சிறிதே புன்னகை செய்தார். '**स्मितमुत्तमानाम्**' என்பர். பரசுராமரின் தற்புகழ்ச்சியில் அவமதிப்பைக் காட்டவுமாம்.

पूर्वजन्मधनुषा समागतः सोऽतिमात्रलघुदर्शनोऽभवत् ।
केवलोऽपि सुभगो नवाम्बुदः किं पुनस्त्रिदशचापलाञ्छितः ॥८०॥

**पूर्वजन्म-धनुषा** - (அவாது) முன் ஜன்மத்தின் வில்லு டன், **समागतः** - சேர்ந்த, **सः** - அவர் (ராமர்), **अतिमात्र-लघुदर्शनः**-மிகவும் அழகான தோற்றமுடையவராக, **अभवत्**- ஆனார். **नवांबुदः** - புதிய (நீர் நிறைந்த) மேகமானது, **केवलः अपि** - தனியே இருப்பினும், **सुभगः** - அழகானதே; **त्रिदश-चाप-लाञ्छितः** - இந்திர தனுசுடன் கூடிய மேகம் பற்றி, **किम् पुनः** - சொல்லவும் வேண்டுமா?

(க-து) பரசுராமர் கையிலிருந்த வில், மஹா விஷ்ணுவினுடையது. ராமர் விஷ்ணுவேயாதலால், அவர் பரசுராமரிடமிருந்து வில்லைக்கையில் எடுத்தது, தமது வில்லையே தாம் எடுத்துக் கொண்டதாகும். அவ்வில்லுடன் ராமர் மிக அழகாகக் காணப்பட்டார். நீருண்ட மேகம் இயற்கையாகவே எழிலுள்ளது; வான வில்லும் சேருமாயின் அதன் அழகைப்பற்றிக் கூற வேண்டுவதில்லை அன்றோ?

**पूर्वजन्म** - முன் பிறவி; விஷ்ணுவாக இருக்கின்ற தன்மை.

तेन भूमिनिहितैककोटि तत् कार्मुकं च बलिनाधिरोपितम् ।
निष्प्रभश्च रिपुरास भूभृतां धूमशेष इव धूमकेतनः ॥ ८१ ॥

**बलिना** - பலவானுகிய, **तेन** - அந்த ராமரால், **भूमि-निहित-एककोटि** - தரையில் ஊன்றப்பட்ட ஒரு முனையை யுடைய, **तत्** - அந்த, **कार्मुकं च** - வில்லும், **अधिरोपितम्** - நாணேற்றப்பட்டது; **भूभृताम्** - க்ஷத்ரியர்களின், **रिपुः च** - சத்ருவான பரசுராமரும், **धूमशेषः** - புகை மாத்திரமே எஞ்சியுள்ள, **धूमकेतनः इव** - அக்னிபோல் **निष्प्रभः** - ஒளியற்றவராக, **आस** - ஆனார்.

(க-து) ராமர் வில்லில் நாணேற்றவும் பரசுராமர் ஒளியற்று புகை மாத்திரமே மிச்சமுடைய அக்னிபோல் காணப்பட்டார்.

**बलिना** - என்ற விசேஷணம், ராமர் சிரமமின்றியே நாண் ஏற்றினர் என்பதைக் காட்டியது; **भूमि....कोटि** - வில்லாளிகள் நாணேற்றும் வகை இதனால் கூறப்பட்டது.

'**प्राप वर्णविकृतिं च भार्गवो वृष्टिधौत इव वासवध्वजः**' **इति वल्लभारुणगिरिपाठः । 'सोऽपि पूर्वमनेकरागरमणीयो भवति' अरुणगिरिः ॥**

तावुभावपि परस्परस्थितौ वर्धमानपरिहीनतेजसौ ।
पश्यति स्म जनता दिनात्यये पार्वणौ शशिदिवाकराविव ॥ ८२ ॥

**परस्परस्थितौ** - ஒருவரை ஒருவர் நோக்கி நிற்கின்றவர்களும், **वर्धमान-परिहीन-तेजसौ** - (முறையே) வளர்கின்றதும் குறைந்ததுமான ஒளியுடையவர்களுமான, **तौ उभौ अपि**-அவ்விருவரையும், (ராமரையும் பரசுராமரையும்), **जनता** - ஜனஸமூகமானது, **दिनात्यये** - ஸாயங்காலத்தில், **पार्वणौ**-பௌர்ணமியன்று தோன்றிய, **शशि-दिवाकरौ इव** - சந்திரனையும் சூரியனையும் காண்பது போல், **पश्यति स्म** - பார்த்தது;

(க-து) பரசுராமரும் ராமரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு நின்றனர். வெற்றி காரணமாக ராமருக்குத் தேஜஸ் விருத்தியடைய, தோல்வியினால் பரசுராமரது ஒளி குன்றியது. இந்நிலையில் ராமருக்குப் பௌர்ணமியன்று ஸாயங்காலம் கீழ்த் திசையில் பூர்ண ஒளியுடன் உதயமாகும் சந்திரனும், பரசுராமருக்கு மேல் திசையில் ஒளியிழந்து அஸ்தமிக்கின்ற சூரியனும் உபமானங்கள்.

அழகிய தோற்றம் காரணமாக ராமர் சந்திரனோடு உவமிக்கப்பட்டார். கொடிய தன்மை காரணமாக பரசுராமருக்கு உபமானம் சூரியன்.

'**परस्परस्थितौ, वर्धमान-परिहीन तेजसौ**' - என்ற இவ்விரண்டும், **शशिदिवाकरौ**-என்பதற்கும் விசேஷணங்களாகச் செய்து பொருள் கூறவேண்டும்.

तं कृपामृदुरवेक्ष्य भार्गवं राघवः स्खलितवीर्यमात्मनि ।
स्वं च संहितममोघमाशुगं व्याजहार हरसूनुसंनिभः ॥ ८३ ॥

**हर-सूनु-सन्निभः** - ஸுப்ரஹ்மண்யருக்கு ஒப்பானவரும், **कृपामृदुः** - தயையினால் சாந்தமாக இருப்பவருமான, **राघवः** :- *ராமர்*, **आत्मनि** - *தம் விஷயத்தில்*, **स्खलित-वीर्यम्** - *சக்தி யிழந்த*, **तम्** - *அந்த*, **भार्गवम्**-*பரசுராமரையும்*, **स्वम्** -*தமது*, **अमोघम्** - *வீண்போகாத*, **संहितम्**-*தொடுக்கப்பட்ட*, **आशुगं च** - *பாணத்தையும்*, **अवेक्ष्य** - *பார்த்துவிட்டு*, **व्याजहार** - *கூறினார்*.

*(க-து) ராமர் ஒருபொழுதும் வீணே பாணத்தைத் தொடுப்பவ ரன்றாதலால் தமது பாணத்திற்கு எதை இலக்காகச் செய்து கொள்ள லாம் என்ற கருத்துத் தோன்ற பரசுராமரையும் அம்பையும் நோக் கியபின் கூறலானார்.*

न प्रहर्तुमलमस्मि निर्दयं विप्र इत्यभिभवत्यपि त्वयि ।
शंस किं गतिमनेन पत्त्रिणा हन्मि लोकमुत ते मखार्जितम् ॥

**अभिभवति अपि** - *எதிர்ப்பவரேயாயினும*, **त्वयि**-*உம்மை*, **विप्रः इति** - *பிராம்மணர் என்ற காரணத்தால்*, **निर्दयम्**-*இரக்க மின்றி*, **प्रहर्तुम्** - *அடிக்க (தண்டிக்க)*, **अलं न अस्मि** - *நான் மனோபலம் உடையவனல்லன்*. **अनेन** - *இந்த*, **पत्त्रिणा**-*பாணத் தினால்*, **ते** - *உமது*, **गतिम्** - *ஸஞ்சரிக்கும் திறமையை*, **हन्मि किम्** - *அழிக்கட்டுமா?* **उत** - *அல்லது*, **मखार्जितम्** - *யாகங் களால் ஸம்பாதிக்கப்பட்ட*, **लोकम्** - *ஸ்வர்க்கத்தை*, **हन्मि** - *அழிக்கட்டுமா?* **शंस** - *கூறும்*.

*(க-து) "நீர் என்னை எதிர்த்தவரேயானாலும் பிராம்மணராக இருப்பதுபற்றிக் கடுமையாகத் தண்டிக்காமல் விடுகின்றேன். தொடுத்த பாணத்திற்கு இலக்கு ஒன்று தேவை. யோகசக்தியால் எங் கும் செல்லத் திறமை பெற்றுள்ள உமது ஸஞ்சார சக்தியை அழித்து*

விடட்டுமா? அல்லது ஸ்வர்க்கத்தை விரும்பி யாகங்களால் நீர் சம்பாதித்துள்ள புண்யலோகங்களை அழித்துவிடலாமா? கூறும்" என்றார்.

**गतिम्** - பரசுராமர் யோகசக்தியால் நினைத்த மாத்திரத்தில் நினைத்த இடத்திற்குச் செல்லும் சக்தி பெற்றவர். மற்றவர் போல் நடந்தோ வாஹனங்களிலோ செல்லவேண்டுமென்பதில்லை. **लोक** - ஸ்வர்க்கம்; அல்லது ஸ்வர்க்கத்திற்கு ஸாதனமான புண்யம்.

**स्वर्गपद्धतिः** - என 87-ஆம் சுலோகத்தில் கூறியதைக் காண்க.

ராமரது பாணம் தெய்வத் தன்மை வாய்ந்துள்ளதால் புண்யத்தையும், யோகஸித்தியையும் கூட அழிக்க வல்லதாயிருந்தது என அறியவேண்டும் '**तदुभयहननक्षमत्वञ्चास्य शरस्य दिव्यत्वादित्यवसेयम्**' **अरुणगिरिः**।

'**किं हन्मि**' - என்ற கேள்வியினாலேயே 'பதில் கூறும்', என்பது கிடைக்கும் பொழுது, **शंस** - என மறுபடியும் கூறியது, ஆலோசித்துப் பதில் கூறவேண்டுமென்பதை உணர்த்தியது. '**निर्दयम् प्रहर्तुम्**' - இரக்கமின்றித் தண்டித்தலாவது, உடலுக்கும் உயிருக்கும் ஊறு செய்தல்; ராமர் தாம் அவ்வாறு செய்ய விரும்பவில்லை என்றார்.

प्रत्युवाच तमृषिर्न तत्त्वतस्त्वां न वेद्मि पुरुषं पुरातनम् ।
गां गतस्य तव धाम वैष्णवं कोपितो ह्यसि मया दिदृक्षुणा ॥

**ऋषिः** - பரசுராமர், **तम्** - அவரை நோக்கி, **प्रत्युवाच** - பதிலுரைத்தார். "**तत्त्वतः** - உண்மையாக, **त्वाम्** - உம்மை, **पुरातनं पुरुषम्** - ஆதி புருஷராக, **न वेद्मि (इति) न** - அறியவில்லை என்பதில்லை (அறியவே அறிகின்றேன்); **गाम्** - பூமியை, **गतस्य** - அடைந்திருக்கின்றவரான, **तव** - உம்முடைய, **वैष्णवम्** - வைஷ்ணவமான, **धाम** - பராக்ரமத்தை,

**दिदृक्षुणा हि** - காண விரும்பிய, **मया** - என்னால், **कोपितः** - கோபமூட்டப் பெற்றவராக, **असि** - இருக்கின்றீர்.

(க-து) "உம்மை நான் அறியாதவனல்லன். பரமபுருஷரான உமது பராக்ரமத்தை இவ்வுலகில் காண விரும்பியே உமக்குக் கோபம் வரும்படி செய்தேன்.

பகவான் என அறிந்தும் பரசுராமர் முதலில் மரியாதையின்றி நடந்ததன் காரணம் சுலோகத்தின் இரண்டாவது பகுதியில் கூறப்பட்டது: கோபமூட்டப் பட்டாலன்றி வீரனது முழுபலமும் வெளிப்படுவதில்லை: **प्रायः स्वं महिमानं कोपात् प्रतिपद्यते हि जनः** · என்பதையும் காண்க. பகவானது வில்லை அவரே வளைக்கப் பார்க்க விரும்பியதால், கோபமூட்டுவதைத் தவிர வேறுவழியைப் பரசுராமர் காணவில்லை: கோபமில்லையேல், ராமர் பரசுராமரது வில்லைக் கையில் வாங்கவும் மாட்டார். '**दिदृक्षुणा हि**' । हि என்பது एव என்ற பொருளில் வந்தது ; 'பார்க்கவிரும்பியவனாக இருந்ததினாலேயே' என்பது பொருள். '**अक्षय्यं मधुहन्तारं जानामि त्वां सुरेश्वरम्**' என்பது ஸ்ரீமத்ராமாயணம்.

भस्मसात्कृतवतः पितृद्विषः पात्रसाच्च वसुधां ससागराम् ।
आहितो जयविपर्ययोऽपि मे श्लाघ्य एव परमेष्ठिना त्वया ॥ ८६ ॥

**पितृद्विषः** - (என்) தந்தையின் பகைவர்களை, **भस्मसात्** - சாம்பலாக, **कृतवतः** - செய்தவனும், **ससागराम्** - கடலோடு கூடிய, **वसुधाम्**-பூமியை, **पात्रसात्**-தக்க மனிதர்க்குரியதாக, **कृतवतः च** - செய்தவனுமாகிய, **मे** · எனக்கு, **परमेष्ठिना** - பரம புருஷராகிய, **त्वया** - உம்மால், **आहितः** - உண்டாக்கப்பட்ட, **जयविपर्ययः अपि** - தோல்வியும் கூட, **श्लाघ्यः एव** - கொண்டாடத்தக்கதே.

(க-து) "எனது தந்தையின் பகைவர்களை முற்றும் சாம்பலாக்கினேன். கடல்சூழ்ந்த இப்பூமியை வென்றுத் தகுந்தவர்க்குத் தானம் செய்துள்ளேன். இத்தகைய பராக்ரமமும் கொடைக்குணமுமுடைய எனக்கு உம்மால் வந்த தோல்வியும் பெருமை தரத்தக்கதே. தோல்வி யுறுவதுதான் எனக்கு வெற்றியாகும். இதுபற்றி நான் சந்தோஷப்படுகின்றேன்.

**भस्मसात् कृतवतः** - இவ்வரலாறு 67-ஆம் சுலோக உரையில் விளக்கப்பட்டுள்ளது ; **पात्रसात् कृतवतः** - பரசுராமர் க்ஷத்ரியர்கள் எல்லோரையும் கொன்று பூலோகம் முழுவதையும் தம்முடையதாக்கிக்கொண்டார். பின்பு அப்பூமியைக் காச்யபமஹர்ஷிக்குத் தானம் செய்தார். முதலில் கூறப்பட்ட ஸம்பவத்தால் பரசுராமரது வீர்யமும் பிறகு கூறப்பட்டதால் பரசுராமரின் கொடைக்குணமும் விளங்கும்.

तद्गतिं मतिमतां वरेप्सितां पुण्यतीर्थगमनाय रक्ष मे ।
पीडयिष्यति न मां खिलीकृता स्वर्गपद्धतिरभोगलोलुपम् ॥ ८७ ॥

**तत्** - ஆதலால், **मतिमतां वर** - அறிவாளிகளில் சிறந்த ராம, **पुण्य-तीर्थ-गमनाय** - புண்ய தீர்த்தங்களுக்குச் செல்வதன் பொருட்டு, **ईप्सिताम्** - விரும்பப்பட்ட, **मे गतिम्** - எனது நடையை (ஸஞ்சாரத் திறமையை), **रक्ष** - காப்பாற்றுவீராக. **खिलीकृता** - அழிக்கப்பட்ட, **स्वर्गपद्धतिः** - ஸ்வர்க்கத்தின் மார்க்கமானது, **अभोगलोलुपम्** - சுகத்தில் பற்றற்ற, **माम्** - என்னை, **न पीडयिष्यति** - வருத்தாது.

(க-து) "ஆதலால், எனது ஸஞ்சார சக்தியை அழிக்காமல் ஸ்வர்க்கமார்க்கமான புண்ணியத்தை அழித்து விடுவீராக. ஸ்வர்க்க ஸுகத்தில் எனக்கு விருப்பமில்லை யாகையால், புண்ய மழிவது பற்றி எனக்கு வருத்தமில்லை" என்றார்,

**तत्** - ஆகையால்; 'நீர் என்னிடம் அன்பு கொண்டு என் விருப்பத்தைக் கேட்டு அதன் படி நடப்பதாகக் கூறிய

தால்' என்று கருத்து; अभोगलोलुपम्-ஸ்வர்க்கத்திலே விருப்பமில்லை என்று கூறியதால் ஸஞ்சரிப்பதில் விருப்பமுண்டு என்பது தொனி.

प्रत्यपद्यत तथेति राघवः प्राङ्मुखश्च विससर्ज सायकम् ।
भार्गवस्य सुकृतोऽपि सोऽभवत्स्वर्गमार्गपरिघो दुरत्ययः ॥ ८८ ॥

राघवः - ராமர், 'तथा' इति - அப்படியே என்று கூறி, प्रत्यपद्यत - ஏற்றுக் கொண்டார். प्राङ्मुखः - கிழக்கு நோக்கியவராக, सायकम् - பாணத்தை, विससर्ज च - விடுத்தார். सः - அந்த அம்பானது, सुकृतः अपि - நற்காரியங்களைச் செய்தவராயினும், भार्गवस्य - பரசுராமருக்கு, दुरत्ययः - கடக்க முடியாத, स्वर्ग-मार्ग-परिघः - ஸ்வர்க்க மார்க்கத்தின் தாழாக, अभवत् - ஆயிற்று.

(க-து) ராமர் கிழக்கு நோக்கி நின்று பாணத்தை விடவும், பரசுராமரின் புண்யங்களை அழித்த அப்பாணம், பரசுராமர் செல்ல முடியாதபடி ஸ்வர்க்க வாசலுக்கு இடப்பட்ட தாழாக இருந்தது.

सुकृतोऽपि दुरत्ययः - பரசுராமர் புண்யம் செய்தவராயினும் ராமரிட்டதாழ் தாண்ட முடியாததாக இருந்தது.

राघवोऽपि चरणौ तपोनिधेः क्षम्यतामिति वदन् समस्पृशत् ।
निर्जितेषु तरसा तरस्विनां शत्रुषु प्रणतिरेव कीर्तये ॥ ८९ ॥

राघवः अपि - ராமரும் 'क्षम्यताम्' - (எனது குற்றம்) 'மன்னிக்கப்பட வேண்டும்', इति - என்று वदन् - சொல்லிக்கொண்டு, तपोनिधेः - மகரிஷியின், चरणौ - பாதங்களை, समस्पृशत् - (தலையினால்) தொட்டு வணங்கினார். तरसा - பலத்தினால், निर्जितेषु - வெல்லப்பட்ட, शत्रुषु - சத்ருக்களிடத்தில், प्रणतिः एव - வினயத்துடன் இருத்தலே, तरस्विनां - பலசாலிகளுக்கு, कीर्तये - கீர்த்திக்கு, भवति - காரணமாகின்றது.

(க-து) பரசுராமர் கர்வம் நீங்கியவரான பொழுது, ராமர் அவரது பாதங்களில் வீழ்ந்து வணங்கித் தம்மை மன்னிக்கும்படி வேண்டினார். ஏனெனில் தம்மால் வெல்லப்பட்டவர்கள் விஷயத்தில் வினயத்துடன் நடந்து கொள்வதே பெரும் வீரர்களுக்குப் புகழ் தருவதாகும்.

'तपोनिधेः' - இது, 'ராமரால் வணங்குதற்குரிய பெருமை பெற்றவர் பரசுராமர்' என்பதைக் காட்டியது; समस्पृशत् - என்பதற்கு முன் 'शिरसा' - எனக் கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும்.

राजसत्वमवधूय मातृकं पित्र्यमस्मि गमितः शमं यदा ।
नन्वनिन्दितफलो मम त्वया निग्रहोऽप्ययमनुग्रहीकृतः ॥ ९० ॥

मातृकम् - தாயினுடையதான, राजसत्वं - ராஜஸ குணத்தை, अवधूय - விடச்செய்து, पित्र्यम् - தந்தையினுடையதான, शमम् - அமைதியை, यदा - எக் காரணத்தால், गमितः अस्मि - அடைவிக்கப் பட்டிருக்கின்றேனோ, ततः - அதனாலே, त्वया - உம்மால், मम - எனக்கு, अनिन्दितफलः - குற்றமற்ற (சிறந்த) பயனை உடைய, अयं निग्रहः अपि - இத் தண்டனையும், अनुग्रहीकृतः ननु - அருளாக மாற்ற பட்டதல்லவா?

(க-து) "நீர் எனக்கு அளித்த தண்டனையைப்பற்றி நான் குற்றம் கூற முடியாது. ஏனெனில் அத் தண்டனையின் மூலம் நான் விரும்பாத ஸ்வர்க்கமே எனக்கு இல்லாதுபோயிற்று. அதை நான் நஷ்ட மாகவே கருதவில்லை. இது மாத்ரமன்று தண்டனையால் ஏற்பட்ட நன்மை. என் தாயிடமிருந்து நான் அடைந்திருந்த ராஜஸ குணம் நீங்கிற்று. தந்தையின் குணமான ஸத்வகுணத்தை அடைந்துள்ளேன். இவ்வாறு நல்லதன்மையை அடையச் செய்த தண்டனை எனக்குப் பெரிய அனுக்ரஹமாகும். ஆதலால் நீர் என்னிடம் மன்னிப்புக் கேட்கவேண்டிய அவசியமில்லையே!

'अनुग्रहीकृतः' तत् 'किं मां क्षमयसि इति शेषः' अरुणगिरिः मातृकं राजसत्वम् - पित्र्यम् - शमम् — 64-ஆம் சுலோக உரையைக் காண்க.

साधयाम्यहमविघ्नमस्तु ते देवकार्यमुपपादयिष्यतः ।
ऊचिवानिति वचः सलक्ष्मणं लक्ष्मणाग्रजमृषिस्तिरोदधे ॥ ९१ ॥

अहम् - நான், साधयामि - செல்கின்றேன்; देवकार्यं - தேவர்களின் காரியத்தை, उपपादयिष्यतः - செய்யப்போகின்ற, ते - உமக்கு, अविघ्नम् - விக்னமின்மை, अस्तु - இருக்கட்டும்", इति - என்று, वचः - வார்த்தையை, सलक्ष्मणम् - லக்ஷ்மணனோடிருக்கின்ற, लक्ष्मणाग्रजम् - ராமரிடம், ऊचिवान् - சொன்ன, ऋषिः - முனிவர், तिरोदधे - மறைந்தார்.

(க-து) "நான் விடை பெற்றுக் கொள்ளுகின்றேன். தேவர்களின் காரியத்தைச் செய்யப்போகின்ற உமக்கு யாதொருதடையும் உண்டாகாது" என்று கூறிவிட்டுப் பரசுராமர் சென்றார்.

'सलक्ष्मणम्'-இதனால் ராமர் செய்யப் போகின்ற தேவ காரியத்தில் லக்ஷ்மணனுக்கும் பங்கு உண்டு என்பது உணர்த்தப்பட்டது. 'सलक्ष्मणमिति'—अनेन लक्ष्मणमुखेक्षणमपि गम्यते; तस्यापि देवकार्यपरत्वात्' नारायणः ।

तस्मिन् गते विजयिनं परिरभ्य रामं
स्नेहादमन्यत पिता पुनरेव जातम् ।
तस्याभवत् क्षणशुचः परितोषलाभः
कक्षाग्निलङ्घिततरोरिव वृष्टिपातः ॥ ९२ ॥

तस्मिन् - பரசுராமர், गते - சென்றவுடன், पिता - தந்தையான தசரதர், विजयिनम् - வெற்றிகொண்ட, रामम् - ராமரை, स्नेहात्-அன்பினால் परिरभ्य-அணைத்துக்கொண்டு,

पुनः जातम् एव - மறுபடி (ராமரை) பிறந்தவராகவே, अमन्यत - எண்ணினர். क्षणशुचः - சிறிது நேரம் துக்கமடைந்திருந்த, तस्य - அவருக்கு, परितोष-लाभः - ஸந்தோஷமுண்டானது, कक्षाग्नि-लङ्घित-तरोः - காட்டுத் தீயினால் தாக்கப்பட்ட மரத்திற்கு, वृष्टिपातः इव - மழையின் வீழ்ச்சிபோல், अभवत् இருந்தது.

(க து) பரசுராமர் சென்றதும் தசரதர், ராமரை அன்புடன் ஆலிங்கனமசெய்துகொண்டார். அவரைப் புனர் ஜன்மம் எடுத்தவராகவே எண்ணினர். காட்டுத்தீயினால் தாக்கப்பட்ட மரத்திற்கு மழை ஆனந்தமளிப்பது போல், சிறிது காலம் வருந்தும்படி நேர்ந்த தசரதருக்குப் புத்திரனுடைய வெற்றியால் உண்டான ஸந்தோஷம் மிகமிக ஆறுதல் அளிப்பதாயிருந்தது.

कक्षाग्निलंघिततरोः - காட்டுத் தீயினால் தாக்கப்பட்ட மரம், மழை பெய்யுமாயின் தீயினின்றும் விடுதலை பெறுவதோடு மாத்திரமன்றித் தன் உயிருக்கு ஆதாரமான நீரையும் பெறுகின்றது; அதுபோல் தமது மகனாகிய ராமர் பெற்ற வெற்றியினால் உண்டான சந்தோஷம், தசரதரது துக்கத்தைப் போக்கியதோடன்றி அவருக்குப் புத்துயிரையும் அளித்தது; ராமரே தசரதரது உயிர் என்பதைத் தசரதர் கூறுவதனின்றே அறியலாம். 'परा भवति मे प्रीतिः दृष्ट्वा तनयमग्रजम् ॥ अपश्यतस्तु मे रामं नष्टं भवति चेतनम् । तिष्ठेल्लोको विना सूर्यं सस्यं वा सलिलं विना । न तु रामं विना देहे तिष्ठेत्तु मम जीवितम् ॥' [அயோத்யாகாண்டம், 12-12-13]

अहं पुनः देवकुमाररूपमलंकृतं तं सुतमाव्रजन्तम् ।
नन्दामि पश्यन्निव दर्शनेन भवामि दृष्ट्वैव पुनर्युवेव ॥ 13-103.

இச் சுலோகத்தில் தசரதருக்கு மரமும், காட்டுத்தீக்கு பரசுராமரால் வந்த மனச்சோர்வும், மழைக்கு ராமரது வெற்றியும் உவமைகளாயின.

अथ पथि गमयित्वा क्लृप्तरम्योपकार्ये
कतिचिदवनिपालः शर्वरीः शर्वकल्पः ।
पुरमविशदयोध्यां मैथिलीदर्शनीनां
कुवलयितगवाक्षां लोचनैरङ्गनानाम् ॥ ९३ ॥

**अथ** - பிறகு, **शर्वकल्पः** - பரமசிவனுக்குச் சமமான, **अवनिपालः** - அரசர், **क्लृप्त-रम्योपकार्ये** - அமைக்கப்பட்ட அழகான கூடாரங்களையுடைய, **पथि** - வழியில், **कतिचित्** - சில, **शर्वरीः** - இரவுகளை, **गमयित्वा** - போக்கிய பின், **मैथिली-दर्शिनीनाम्** - ஸீதையைக் காண்கின்ற, **अंगनानाम्** - பெண்களின், **लोचनैः** – கண்களால், **कुवलयित-गवाक्षाम्** - நீலோத்பல மலருடையவையாகச் செய்யப்பட்ட ஜன்னல்களையுடைய, **अयोध्यां पुरम्** - அயோத்யா நகரத்தில், **अविशत्** - பிரவேசித்தார்.

(க-து) தசரதர் அழகான கூடாரங்கள் அமைக்கப்பட்ட வழியில் சில இரவுகள் தங்கிப் பின் அயோத்யா நகரம் அடைந்தார். ஸீதையைக் காண்பதற்காக மாளிகைகளின் ஜன்னல் அருகே நின்ற பெண்களின் கண்கள், நீலக்குவளைப் புஷ்பங்கள்போல் பலகணிகளுக்கு அழகு செய்தன.

इति महाकवि श्री कालिदासकृतौ
रघुवंशे महाकाव्ये एकादशः सर्गः ॥

---

॥ श्रीः ॥

# रघुवंशे

## द्वादशः सर्गः

निर्विष्टविषयस्नेहः स दशान्तमुपेयिवान् ।
आसीदासन्ननिर्वाणः प्रदीपार्चिरिवोषसि ॥ १ ॥

**निर्विष्ट-विषय-स्नेहः**-நன்கு அனுபவிக்கப்பட்ட (திருப்தி செய்விக்கப் பெற்ற) பொருள்களிலுள்ள விருப்புடைய வரும், **दशान्तम्**-(வாழ்க்கையின் கடைசி) நிலையின் முடிவை, **उपेयिवान्** - அடைந்துள்ளவருமான **सः** - அத்தசரதர்,— **उषसि** - விடியற்காலையில் (உள்ள), **प्रदीपार्चिः इव** - விளக்கின் ஜ்வாலை போல், **आसन्न निर्वाणः** - ஸமீபத்துள்ள மோக்ஷ முடையவராக, **आसीत्** - இருந்தார்.

(க-து) தசரதர் பல ஆயிரம் வருஷங்கள் இவ்வுலகை ஆண்டு, உலகிலே அனுபவிக்க வேண்டிய இன்பங்களையெல்லாம் அனுபவித்து வயது மிக முதிர்ந்தவராய், உலகைத்துறந்து முத்தி பெறும் தறுவாயிலிருந்தார்.

இந் நிலையிலுள்ள தசரதருக்கு உவமானமாகக் கூறப் படுவது, இரவு முழுவதும் எரிந்து விடியற்காலையில் அணையும் தறுவாயிலுள்ள விளக்கின் ஜ்வாலை. **निर्विष्टविषयस्नेह** - முதலியவிசேஷணங்கள் ஜ்வாலைக்கும் பொருந்தும்; **निर्विष्टवि-षयस्नेहा** - தீபஜ்வாலையும் தகழியிலுள்ள எண்ணெயைக்

குடித்து விடுகின்றது. दशान्तम् - उपेयुषी - எண்ணெய் வற்றிப் போனவுடன் திரி எரியத்தொடங்கி, ஜ்வாலை திரியின் முனைக்கு வந்துவிடுகிறது. दशा - திரி; आसन्ननिर्वाणा - 'அணையும் தறுவாயிலுள்ளது' தீப ஜ்வாலையும். अर्चिः - என்பது ஸ்திரீலிங்கமாதலால் அதற்குப் பொருந்தும்படி விசேஷணங்களை ஸ்திரீலிங்கமாக மாற்றிக் கொள்ள வேண்டும். आर्चिः - ஆண்பால் சொல்லெனவும் சில உரையாசிரியர் கூறுவர்.

இந்த ஸர்க்கத்தில், ராமாயணம் அயோத்யாகாண்டம் தொடங்கி யுத்த காண்டம் வரையுள்ள ஐந்து காண்டங்களில் கூறப்பட்ட வரலாறு சுருங்கக் கூறப்பட்டுள்ளது. சுருங்கக் கூறுவதிலே கவிக்குள்ள திறமை இதில் நன்கு புலனாவதை உணரலாம்.

तं कर्णमूलमागत्य रामे श्रीर्न्यस्यतामिति ।
कैकेयीशङ्कयेवाह पलितच्छद्मना जरा ॥ २ ॥

जरा-கிழப்பருவம், कैकेयी शङ्कया इव - கைகேயியினிடம் பயந்ததினால் (பயந்தது) போல, पलितच्छद्मना - நரை என்ற வியாஜத்தில், कर्णमूलम् - (அரசரது) காதருகில், आगत्य - வந்து, रामे - ராமரிடத்தில், श्रीः - ராஜ்யம், न्यस्यताम् इति - வைக்கப்படட்டும் என, तम् - அவ்வரசரை, आह - கூறியது.

(க-து) கிழப்பருவமானது கைகேயியினிடம் உள்ள அச்சத்தினால் போலும் நரைத்தல் என்ற மாறுவேடத்தில் தோன்றி, தசரதரது காதருகில் சென்று, 'ராமரிடம் ராஜ்யத்தைக் கொடுத்து அவரை அரசராகச் செய்யவேண்டும்' எனக் கூறியது. தசரதர் தாம் கிழப்பருவம் எய்தியதை நினைத்து ராமருக்கு முடிசூட்ட வேண்டுமெனத் தீர்மானித்தார் என்று கருத்து.

கிழப்பருவம் தனது சொந்தவடிவத்தில் வாராது, நரை என்ற புனைவேடத்தில் வந்ததன் காரணத்தைக் கவி

**कैकेयीशंकयेव** - என்பதால் உத்ப்ரேக்ஷித்தார்; ராமரது பட்டாபிஷேகத்தைக் கைகேயி தடுத்து விடுவாள் என அது அஞ்சியது போலும்! **इव** - என்பதை, **आह** - என்பதுடன் சேர்த்து 'கூறியது போலும்!' என்றும் பொருள் கூறுவர்.

सा पौरान् पौरकान्तस्य रामस्याभ्युदयश्रुतिः ।
प्रत्येकं ह्लादयांचक्रे कुल्येवोद्यानपादपान् ॥ ३ ॥

**पौर कान्तस्य** - நகரமக்களின் அன்பரான, **रामस्य**-ராமருடைய, **सा** - அந்த, **अभ्युदय श्रुतिः** - நன்மையைப் பற்றிய செய்தி, **कुल्या** - சிறு கால்வாய், **उद्यान पादपान् इव** - தோட்டத்திலுள்ள மரங்களை (மகிழ்விப்பது) போல், **पौरान्** - நகர ஜனங்கள், **प्रत्येकम्** - ஒவ்வொருவரையும், **ह्लादयांचक्रे**-மகிழ்வித்தது.

(க-து) நகரமக்களின் மனத்தைக் கவர்ந்துள்ள ராமரது அபிஷேகச் செய்தி, தண்ணீரைக் கொண்டுசெல்லும் கால்வாய் தோட்டத்திலுள்ள ஒவ்வொரு மரத்திற்கும் தண்ணீரளித்து மகிழ்விப்பது போல், நகரத்திலுள்ள ஒவ்வொருவரையும் களிப்படையச் செய்தது நகரிலுள்ள யாவரும் இச்செய்தியைக் கேட்டு மனம் மகிழ்ந்தனர்.

तस्याभिषेकसंभारं कल्पितं क्रूरनिश्चया ।
दूषयामास कैकेयी शोकोष्णैः पार्थिवाश्रुभिः ॥ ४ ॥

**क्रूरनिश्चया** - கொடிய தீர்மானம் கொண்ட, **कैकेयी** - கைகேயி, **तस्य** - ராமருக்காக, **कल्पितम्** - தயார் செய்யப்பட்டுள்ள, **अभिषेक संभारम्** - அபிஷேகப் பொருள்களை, **शोकोष्णैः**-துக்கத்தினால் உஷ்ணமாயுள்ள, **पार्थिवाश्रुभिः**-அரசரது கண்ணீர்களால், **दूषयामास** - கெடுத்தாள்.

(க-து) கொடிய எண்ணங்கொண்ட கைகேயி, தசரதரைப் புலம்பச்செய்து அபிஷேகம் நடைபெறாதவாறு செய்தாள்.

இனி கூறப்போகின்ற வரலாறு இச்சுலோகத்திலே சுருக்கமாகத் தெரிவிக்கப்பட்டது; பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தபின் கைகேயியைப் பார்க்கச் சென்ற தசரதர், அவளைக் காணாமல் வருந்தினார்; கைகேயியினிடம் விசேஷ அன்புகொண்டு அவர் மனங்கலங்கியதே அபிஷேகம் தடையுறுவதற்குக் காரணமாயிற்று என '**सा किल आश्वासिता**' என்ற அடுத்துவரும் சுலோகத்தை மனத்தில் கொண்டு உரைப்பர் சிலர்.

> सा किलाश्वासिता चण्डी भर्त्रा तत्संश्रुतौ वरौ ।
> उद्ववामेन्द्रसिक्ता भूर्बिलमग्नाविवोरगौ ॥ ५ ॥

**चण्डी** - அதிக கோபமுடையவளான, **सा किल**-அவள், **भर्त्रा** - கணவரால், **आश्वासिता** - தேறுதல் கூறப்பட்டவளாக இருந்து கொண்டு, **तेन** - அவரால், **संश्रुतौ** - (முன்பு) வாக்குறுதி செய்யப்பட்டுள்ள, **वरौ** - இரண்டு வரங்களை ; **इन्द्र - सिक्ता** - இந்திரனால் (மழையின் மூலம்) நனைக்கப்பட்டுள்ள, **भूः** - பூமி, **बिलमग्नौ** - புற்றிலுள்ள, **उरगौ-इव** - இரண்டு பாம்புகளை (வெளிவிடுவது) போல், **उज्जगार** - வெளியிட்டாள் (கேட்டாள்).

(க-து) ராமாபிஷேகத்தைப் பற்றிக் கேள்வியுற்றுக் கைகேயி கோபமடைந்திருக்க, தசரதர் அவளுக்குப் பலவாறு கூறிக் கோபத்தைத் தணிக்கமுயன்ற பொழுது அவள், முன்பு அவர் பிரதிக்ஞை செய்திருந்த இரண்டு வரங்களைத் தரும்படிக் கேட்டாள்.

தசரதர் கூறிய நல்வார்த்தைகளுக்குப் பயன் தீமையே நேர்ந்தது. மழை பெய்து பூமி குளிர்ந்திருக்கும் பொழுது புற்றினின்றும் ஸர்ப்பங்கள் வெளிவருவது போல், அன்பு காண்பிக்கப்பட்ட கைகேயியினிடமிருந்து கொடிய வரங்கள் இரண்டு புறப்பட்டன. தசரதரைக் கொல்லும் தன்மை

வாய்ந்திருந்தனவாதலால் வரங்களை ஸர்ப்பங்களோடு உவமித்தார். மழை தருபவன் இந்திரனுதலால், इन्द्रसिक्ता - என்று கூறினர்.

தசரதர் தந்தவரங்கள்:

தண்டகாரண்யத்தில் வைஜயந்தம் என்ற நகரத்தில் திமித்வஜன் என்னும் மறுபெயருடன், மாயைகளில் வல்லவனை சம்பரன் என்ற அசுரன் தேவர்களை வென்று ஸ்வர்க்கத்தை அபகரிக்க முயன்ற பொழுது தசரதர், தேவேந்திரனுக்கு உதவியாக, சம்பரனுடன் போர் செய்த காலத்தில் அவ்வசுரனால் தாக்கப்பட்டுக் கீழே வீழ்ந்தார். உடன் சென்றிருந்த கைகேயி, தசரதரை யுத்தகளத்தினின்று எடுத்துச் சென்று காப்பாற்றினள். அவ்வாறு செய்த உதவியை நினைந்து தசரதர், அவளுக்கு இரண்டு வரங்களளிப்பதாகக் கூறவும், கைகேயி தனக்குத் தேவையான பொழுது அவைகளை வாங்கிக் கொள்வதாகக் கூறினள்.

'கடையாணி கழன்ற பொழுது அச்சின் தொளையிலே தன் கையையிட்டுச் சக்கரம் கழன்று போகாதபடி மிக தைரியத்துடன் கைகேயி தசரதருக்கு உதவி செய்தாள்' என அத்யாத்ம ராமாயணம் கூறும்.

तयोश्चतुर्दशैकेन रामं प्राव्राजयत् समाः ।
द्वितीयेन सुतस्यैच्छद्वैधव्यैकफलां श्रियम् ॥ ६ ॥

तयोः - அவ்விருவரங்களுள், एकेन-ஒன்றினல், रामम्- ராமனை, चतुर्दश - பதினன்கு, समाः - வருஷங்கள், प्राव्राजयत् - (காடு) செல்லச் செய்தாள்; द्वितीयेन - இரண்டாவதனல், सुतस्य - (தன்) மகன் பரதனுக்கு, वैधव्यैकफलाम् - (தன்னுடைய) விதவை நிலையையே பயனைக் கொண்ட,

**श्रियम्** - *ராஜ்ய ஐசுவரியத்தை,* **ऐच्छत्** - *விரும்பினாள்; (வேண்டினாள்).*

*(க-து) ராமர் காடு செல்லும்படி ஒருவரத்தை வேண்டினாள். மற்றொன்றினால் தன்மகன் அரசு பெறவேண்டினாள். உண்மையில் அவ்வரத்தின் பயன், அவள் விதவை நிலையடைந்தது தவிர்த்துப் பிறிதொன்றுமில்லை.*

पित्रा दत्तां रुदन् रामः प्राङ् महीं प्रत्यपद्यत।
पश्चाद्वनाय गच्छेति तदाज्ञां मुदितोऽग्रहीत् ॥ ७ ॥

**रामः** - *ராமர்,* **प्राक्** - *முதலில்,* **पित्रा** - *தந்தையினாலே,* **दत्ताम्** - *தரப்பட்ட,* **महीम्** - *பூமியை,* **रुदन्**-*அழுதுகொண்டு,* **प्रत्यपद्यत** - *ஏற்றார்;* **पश्चात्** - *பிறகு,* '**वनाय** - *காட்டிற்கு,* **गच्छ** - *செல்*' **इति** - *என்று,* **तदाज्ञाम्** - *அவரது ஆணையை* **मुदितः** - *சந்தோஷத்துடன்,* **अग्रहीत्** - *ஏற்றார்.*

*(க-து) தசரதர் ராஜ்யத்தைக் கொடுத்தபொழுது, ராமர் அதை விருப்பமின்றியே ஏற்றுக் கொண்டார்; ஏனெனில், ராஜ்யத்தைத் தம்மிடம் ஒப்படைத்தபின் குல முறைப்படித் தசரதர் காடு செல்வாரே என்று எண்ணி வருந்தினார். 'காடு செல்' என்று கூறப்பட்டவுடன், தசரதரை ஸத்யஸந்தராகச் செய்கின்றோமே என்ற எண்ணத்தினால் மனம் மகிழ்ந்தார். தன்னுடைய மேன்மையைக் காட்டிலும் தந்தையின் சிறப்பை மேலானதாகக் கருதி உவந்தார்.*

'न चास्य महतीं लक्ष्मीं राज्यनाशोऽपकर्षति। लोककान्तस्य कान्तत्वं शीतरश्मेरिव क्षयः॥ न वनं गन्तुकामस्य त्यजतश्च वसुन्धराम्। सर्वलोकातिगस्येव लक्ष्यते चित्तविक्रिया॥' *என்பது ராமாயணம்:* [*அயோத்யாகாண்டம்* 19-32-33]

दधतो मङ्गलक्षौमे वसानस्य च वल्कले।
ददृशुर्विस्मितास्तस्य मुखरागं समं जनाः ॥ ८ ॥

**मङ्गलक्षौमे** - மங்களமான பட்டு வஸ்திரங்களை, **दधतः**- தரிக்கிறவரும், **वल्कले** - இரண்டு மரவுரிகளை, **वसानस्य च** - உடுத்துபவருமான, **तस्य** - அவருடைய, **मुखरागम्** - முகத்தின் சாயலை, **समम्** - ஒரே நிலையிலுள்ளதாக, **जनाः** - ஜனங்கள், **विस्मिताः** - வியப்புடையவர்களாய், **ददृशुः** - கண்டனர்.

(க-து) ராஜ்யத்தை ஏற்பதற்குமுன் பட்டாடைகளை அணிந்த பொழுதும், வனத்திற்குச் செல்வதற்காக மரவுரி உடுத்த பொழுதும் ராமர் விருப்போ வெறுப்போ இன்றி ஒரே நிலையிலிருந்தார். அத்தகைய நிலையை அவரது முகம் எடுத்துக் காட்டியது. ஆனால் அதைக் கண்டு ஜனங்கள் வியப்புற்றனர்.

ஜனங்கள் தமது செயலில் வியப்படைந்ததைக் கண்டு ராமர் வியப்புற்றதாக, பாஸர் என்ற கவி கூறுகிறார். 'स्वः पुत्रः कुरुते पितुर्यदि वचः कस्तत्र भो विस्मयः' [தந்தையின் ஆணையை மகன் செய்தால் இதில் என்ன ஐயா வியப்பிருக்கின்றது!].

स सीतालक्ष्मणसखः सत्याद्गुरुमलोपयन् ।
विवेश दण्डकारण्यं प्रत्येकं च सतां मनः ॥ ९ ॥

**सः** - ராமர், **गुरुम्** - தந்தையை, **सत्यात्** - உண்மையினின்றும், **अलोपयन्** - வழுவாதவராகச் செய்து கொண்டு, **सीता लक्ष्मणसखः (सन्)** - ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும், **दण्डकारण्यम्** - தண்டகாரண்யத்துள், **विवेश**-புகுந்தார்; **सताम्** - நல்லோர்களின், **मनः** - மனத்துள்ளும், **प्रत्ये-कम्** - தனித்தனியே, **विवेश** - இடம் பெற்றார்.

(க-து) ராமர், கைகேயிக்குக் கொடுத்த வாக்குறுதியினின்றும் தசரதர் நழுவுதல் கூடாதென்ற காரணத்தினால் வனம் சென்றார்.

ராமரது பெருந்தன்மை வாய்ந்த அச்செயலை நல்லோர் எல்லோரும் கொண்டாடினர். இதைக் கவி, ராமர் பெரியோர்களின் மனத்திலும் இடம் பெற்றார் எனக் குறித்தார்.

'त्वामहं सत्यमिच्छामि नानृतं पुरुषर्षभ।
प्रत्यक्षं तव सत्येन सुकृतेन च ते शपे॥' என ராமர் தசரத ரிடம் கூறுவதைக் கவனிக்க. [அயோத்யா, 34-48.]

தண்டகாரண்யம்: இக்ஷ்வாகு வம்சத்திலிருந்த தண்டகன் என்ற அரசனுடைய காடு, சுக்ர சாபத்தினால் அரண்யமாக மாறியது; முனிவர்கள் தவம் செய்வதற்கு ஏற்ற இடமாக இருந்தது. இது விந்திய மலைக்கும் கோதாவரி நதிக்கும் இடையிலுள்ள வனப்ரதேசம் எனவும், மஹாராஷ்ட்ரத்தின் பெரும் பகுதி யெனவும் கூறுகின்றனர். இவ்வனத்தின் ஒரு பகுதிக்கு ஜனஸ்தானம் என்று பெயர்.

राजाऽपि तद्वियोगार्तः स्मृत्वा शापं स्वकर्मजम् ।
शरीरत्यागमात्रेण शुद्धिलाभममन्यत ॥ १० ॥

**तद्वियोग-आर्तः** - அவரது (ராமரது) பிரிவினால் வருத்தமடைந்த, **राजा-अपि** - அரசரும், **स्वकर्मजम्** - தமது செய்கையினாலுண்டான, **शापम्** - சாபத்தை, **स्मृत्वा** - நினைத்து, **शरीरत्यागमात्रेण** - சரீரத்தை விடுவதொன்றினாலேயே, **शुद्धि-लाभम्** - தூய்மை பெறுதலை, **अमन्यत** - எண்ணினார்.

(க-து) ராமரது பிரிவினால் தசரதர் வருந்தினார்; முனிகுமாரனைக் கொன்றதனால் தமக்குண்டான சாபத்தை நினைந்தார். 'குற்றமற்ற மூத்த மகனை வீட்டினின்றும் துரத்தியது, முனி மகனைக் கொன்றது' என்ற இரண்டு பாவங்களுக்கும் ஏற்ற பிராயச்சித்தம், தாம் உயிர் துறத்தலே என எண்ணினார்.

தசரதர் புத்திர சோகத்தினால் இறந்தார் என்பது கருத்து.

இங்குக் குறிக்கப்பட்ட சாபவரலாற்றை 9-ஆம் ஸர்க்கம் சுலோகம் 73-79-இல் காண்க.

विप्रोषितकुमारं तद्राज्यमस्तमितेश्वरम् ।
रन्ध्रान्वेषणदक्षाणां द्विषामामिषतां ययौ ॥ ११ ॥

**विप्रोषित-कुमारम्** - வெளிச் சென்றுள்ள அரசகுமாரர்களையுடையதும், **अस्तमित-ईश्वरम्** - இறந்த அரசரையுடையதுமான, **तत्-राज्यम्** - அந்த இராஜ்யம், **रन्ध्र-अन्वेषण-दक्षाणाम्** - துர்பல நிலையைத் தேடுவதில் திறமை வாய்ந்த, **द्विषाम्** - எதிரிகளுக்கு, **आमिषताम्** - சுவை மிக்க பொருளாகும் தன்மையை, **ययौ** - அடைந்தது.

(க-து) கோஸல ராஜ்யமன்னர் தசரதர் இறந்தார். ராஜகுமாரர்கள் யாரும் தலை நகரில் இல்லை. அதனால் ராஜ்யத்திற்கு இத்தகைய பலஹீன நிலையை எதிர் பார்த்திருந்த எதிரிகளுக்குக் கோஸல ராஜ்யத்தைக் கைப்பற்றுவதிலே ஆசைபிறந்தது.

**आमिषम्** - சுவை மிக்க பண்டம்; மாம்ஸம்; இங்கே 'கவர்ச்சியுடையது' என்பது பொருள். '**विप्रोषितकुमारम्**' - ராம லக்ஷ்மணர் காட்டிலிருந்தனர்; பரதன் சத்ருக்னனுடன் தன் மாமன் வீட்டிலிருந்தான்; ஆகவே நாட்டில் தலைமை வாய்ந்தவர் யாருமில்லை.

अथानाथाः प्रकृतयो मातृबन्धुनिवासिनम् ।
मौलैरानाययामासुर्भरतं स्तम्भिताश्रुभिः ॥ १२ ॥

**अथ** - பிறகு, **अनाथाः**-தகுந்த காவலனற்ற, **प्रकृतयः** - மந்திரிகள், **मातृबन्धु निवासिनम्** - தாய் வழி உறவினரான மாமனது வீட்டில் வஸிக்கின்ற, **भरतम्** - பரதனை, **स्तम्भित-अश्रुभिः**-கண்ணீரை யடக்கிய, **मौलैः**-நம்பத்தக்க மந்திரிகள் மூலம், **आनाययामासुः** - அழைத்துவந்தனர்.

(க-து) பின் மந்திரிகள், குலமுறையாக வந்துள்ள மந்திரிகளை அனுப்பி மாமன் யுதாஜித்தினுடைய வீட்டில் வசிக்கின்ற பரதனை அழைத்து வரச் செய்தனர்.

'स्तंमित अश्रुसिः - அழைத்துவரச் சென்ற மந்திரிகள், அரசரது மரணத்தையும் ராமர் வனம் சென்றதையும் காட்டாதிருக்கக் கருதிப் பரதனைக் கண்டபொழுது தங்களது கண்களிலுண்டான நீரையும் அடக்கிக்கொண்டனர். பரதன் அயோத்திவரும்வரை துக்கச் செய்தி எதுவும் அவனுக்குக் கூறப்படவில்லை. मौलि-என்பதற்குக் குலமுறையில் வந்த பணியாளர்கள் என்றும் உரைக்கலாம். प्रकृतयः - ஜனங்கள் என்றும் கூறுவர்.

श्रुत्वा तथाविधं मृत्युं कैकेयीतनयः पितुः ।
मातुर्न केवलं स्वस्याः श्रियोऽप्यासीत् पराङ्मुखः ॥ १३ ॥

**कैकेयी तनयः** - கைகேயியின் மகன் பரதன், **पितुः** - தந்தையின், **तथाविधम्** - அத்தகைய, **मृत्युम्** - மரணத்தைப் பற்றி, **श्रुत्वा** - கேள்வியுற்று, **स्वस्याः** - தனது **मातुः-केवलम्** - தாயினிடம் மாத்திரமே, **पराङ्मुखः** - வெறுப்புற்றவனாக, **न** **(आसीत्)** - இருந்தான் என்பதில்லை. **श्रियः अपि** - ராஜ்ய ஐசுவர்யத்திடமும், **पराङ्मुखः** வெறுப்படைந்தவனாக, **आसीत्** - இருந்தான்.

(க-து) தன் தந்தைக்கு நேர்ந்த அத்தகைய மரணத்தைக் கேள்வியுற்ற பரதன், மரணத்திற்குக் காரணமான தாயிடமும், அவன் மூலம் தனக்கு வந்த ராஜ்யத்தினிடமும் ஒருங்கே வெறுப்படைந்தான்.

ससैन्यश्चान्वगाद्रामं दर्शितानाश्रमालयैः ।
तस्य पश्यन् ससौमित्रेरुदश्रुर्वसतिद्रुमान् ॥ १४ ॥

**ससैन्यः**-ஸேனையுடன் கூடியவனாக பரதன், **आश्रमालयैः** - ஆச்ரமங்களில் வஸிக்கின்ற முனிவர்களால், **दर्शितान्**-காண்பிக்கப்பட்டவைகளும், **ससौमित्रेः**-லக்ஷ்மணனுடன் கூடிய,

**तस्य** - ராமரது, **वसति-द्रुमान्** - வாஸஸ்தானமாக இருந்த மரங்களை, **पश्यन्** - பார்த்துக் கொண்டு, **उदश्रुः** - கண்களில் நீருடையவனாக, **रामम्** - ராமரை, **अन्वगात्** - பின் தொடர்ந்தான்.

(க-து) மந்திரிகள் வேண்டியும் ராஜ்யத்தை விரும்பாத பரதன், பெரும்படையுடன் காடுசென்று, முனிவர்கள் ராமர் தங்கியிருந்த மரங்களினடிகளைக் காட்ட, துக்க மிகுதியால் கண்களில் நீர் ததும்ப அம்மரங்களை நோக்கிக் கொண்டே ராமரைத் தேடிச் சென்றான்.

**उदश्रुः** - அரண்மனையில் வசித்தற்குரியவர் மரத்தடியில் வசித்தனரே என்பதால் பரதன் கண்ணீர் உகுத்தான்; அல்லது, 'லக்ஷ்மணனைப் போல் ராமரைப் பின் தொடரும் பாக்கியம் முன்பே பெற்றிலனே' என்ற துக்கத்தினாலும் கண்ணீர் வடித்தான் எனலாம். ...**द्रुमान्** - மரங்கள்; மரங்களின் கீழுள்ள இடங்கள்.

> चित्रकूटवनस्थं च कथितस्वर्गतिर्गुरोः ।
> लक्ष्म्या निमन्त्रयांचक्रे तमनुच्छिष्टसंपदा ॥ १५ ॥

**चित्रकूटवनस्थम्** - சித்ரகூட வனத்துள்ள, **तम् च**-அந்த ராமரை, **गुरोः** - தந்தையின் **कथितस्वर्गतिः** - மரணத்தைப் பற்றிக் கூறிய பரதன், **अनुच्छिष्टसंपदा** - எச்சிலாக்கப் படாத (அனுபவிக்கப்படாத) செல்வமுள்ள, **लक्ष्म्या** - ராஜ்ய ஐசுவரியம் காரணமாக, **निमन्त्रयाञ्चक्रे** - அழைத்தான்.

(க-து) சித்ரகூடமலையைச் சார்ந்துள்ள காட்டில் ராமரைக் கண்ட பரதன், தந்தை இறந்ததைக் கூறிப் பின் தமது ராஜ்யத்தை முன்னிட்டு நகரம் திரும்ப வேண்டுமென அவரை வேண்டினான்.

**अनुच्छिष्टसंपदा** - என்பதால், பரதன் ராஜ்யத்திலிருந்த காலத்தும், ராஜ்யஸுகம் எதையும் அனுபவிக்கவில்லை என்

பதும், ராமரைப் போன்றே முனிவரின் வாழ்க்கையை மேற் கொண்டிருந்தான் என்பதும் புலனுகும்.

स हि प्रथमजे तस्मिन्नकृतश्रीपरिग्रहे ।
परिवेत्तारमात्मानं मेने स्वीकरणाद्भुवः ॥ १६ ॥

हि - ஏனெனில், सः - அப்பரதன், प्रथमजे - மூத்தவரான, तस्मिन् - ராமர், अकृत श्रीपरिग्रहे (सति) ராஜ்யலக்ஷ்மியை மணம் செய்து கொள்ளாத (ஏற்காத) பொழுது, भुवः - பூமியை, स्वीकरणात् - (தான்) ஏற்பதால், आत्मानम् - தன்னை, परिवेत्तारम् - பரிவேத்தாவாக, मेने - எண்ணினுன்.

(க-து) இச்சுலோகத்தில், பரதன் ராமரை அழைத்ததன் காரணத்தைக் கவி கூறுகின்ருர்: அரசை ஏற்பதை அரசர்களது மணமாகக் கூறுவது மரபு. ராமர் அரசை ஏற்காததால், அவர் விவாஹம் செய்து கொள்ளாதவராக இருந்தார். அண்ணன் ராஜ்யமேற்காத பொழுது ராஜ்யத்தை ஏற்ருல், தான் 'பரிவேத்தா' வாக ஆவோமே என்றஞ்சினுன் பரதன் எனக் கவி ரஸமான ஒரு காரணத்தைக் கல்பனை செய்தார்.

परिवेत्ता - அண்ணன் விவாஹம் செய்து கொள்வதற்கு முன் விவாஹம் செய்து கொண்டவன். இத்தகைய செயலைப் பெரும் பாதகமாகப் பெரியோர்கள் கருதினர். அதிலும் அரசன் பரிவேத்தாவாக இருப்பின் நாடு நலனடையாது எனவும் கூறுவர்: பிரதீபன் என்பவனது மகன் சந்தனு என்பவன், தனது தமையன் தேவாபி என்பவனுக்கு முன் ராஜ்யத்தை ஏற்றதால் நாட்டில் பன்னிரண்டு வருஷம் மழைபெய்யாது பஞ்சமுண்டாயிற்றென ஸ்ரீ பாகவதம் கூறும்.

तमशक्यमपाक्रष्टुं निदेशात् स्वर्गिणः पितुः ।
ययाचे पादुके पश्चात् कर्तुं राज्याधिदेवते ॥ १७ ॥

**स्वर्गिण:** - ஸ்வர்க்கம் சென்ற, **पितुः** - தந்தையின், **निदेशात्** - கட்டளையினின்றும், **अपाक्रष्टुम्** - திருப்புதற்கு. **अशक्यम्** - கூடாத, **तम्** - ராமரை, **पश्चात्** -பிறகு, **राज्याधिदेवते** - அரசின் அதிதேவதைகளாக, **कर्तुम्** - செய்ய, **पादुके** - பாதுகைகளை, **ययाचे** - வேண்டினான்.

(க-து) தந்தையின் கட்டளையினின்றும் ராமர் வழுவமாட்டார் என்பதைத் திண்ணமாயறிந்த பிறகு பரதன், அவரது பாதுகைகளைக் கேட்டான். அவைகளை ராஜ்யத்தின் அதிதேவதைகளாகச் செய்து தான் அவற்றின் தாஸனாக இருக்கவிரும்பினான்.

स विसृष्टस्तथेत्युक्त्वा भ्रात्रा नैवाविशत्पुरीम् ।
नन्दिग्राममगतस्तस्य राज्यं न्यासमिवाभुनक् ॥ १८ ॥

**स.** - அவன், **भ्रात्रा** - ஸஹோதரரால், **तथा इति** - 'அப்படியே' என்று, **उक्त्वा** - கூறி, **विसृष्टः (सन्)** - அனுப்பப்பட்டவனாக, **पुरीम्** - (அயோத்யா) நகரத்தில், **न अविशत्**-புக-புகவேயில்லை; **नन्दिग्राम गतः (सन्)** - நந்தி கிராமமடைந்தவனாக, **तस्य** - அவரது, **राज्यम्** - ராஜ்யத்தை, **न्यासम् इव** - அடைக்கலப் பொருளைக் காப்பதுபோல், **अभुनक्** - பாதுகாத்தான்.

(க-து) தன் விருப்பத்திற்கிணங்க ராமர் பாதுகைகளைத் தரவும் அவைகளைப் பெற்றுக்கொண்டு பரதன் அயோத்தியில் புகாமல் நந்தி க்ராமத்திலே இருந்து கொண்டு ராஜ்யத்தை அடைக்கலப் பொருளாக எண்ணித் தான் சிறிதுமனுபவியாது பாதுகாத்து வந்தான்.

दृढभक्तिरिति ज्येष्ठे राज्यतृष्णापराङ्मुखः ।
मातुः पापस्य भरतः प्रायश्चित्तमिवाकरोत् ॥ १९ ॥

**ज्येष्ठे** - மூத்த ஸஹோதரனிடத்தில், **दृढभक्तिः** - உறுதியான பக்தி கொண்டவனும், **राज्य-तृष्णा-पराङ्मुखः** - ராஜ்ய ஆசையினின்று மனத்தைத் திருப்பியவனுமான, **भरतः** - பரதன், **इति** - இவ்வாறு, **मातुः** - தாயின், **पापस्य** - பாவத்திற்கு, **प्रायश्चित्तम्** - பிராயச்சித்தத்தை, **अकरोत्-इव**-செய்தான் போலும்!

(க-து) பரதன் அண்ணனிடத்தில் உறுதியான பக்தியுடையவன்; எனவே அவன் ராஜ்யத்தில் சிறிதும் ஆசை கொள்ளவில்லை. முனிவர்களின் வாழ்க்கையை வலுவில் ஏற்றுக் கொண்டு பரதன், தன் தாய் செய்த பாவத்திற்கு இவ்வகையில் பிராயச்சித்தம் செய்தவன் போலிருந்தான் எனக் கவி உத்ப்ரேக்ஷித்தார்.

தாய் செய்த பாவம் - குற்றமற்ற மகன் ராமனைக் காட்டிற்கு அனுப்பியது.

रामोऽपि सह वैदेह्या वने वन्येन वर्तयन् ।
चचार सानुजः शान्तो वृद्धेक्ष्वाकुव्रतं युवा ॥ २० ॥

**सानुजः** - தம்பியுடன் கூடியவரும், **शान्तः** - மனவமைதியுடையவருமான, **रामः-अपि**-ராமரும், **वैदेह्या-सह** - ஸீதையுடன், **वने** - காட்டில், **वन्येन** - காட்டிலுண்டான பொருளால், **वर्तयन्** - ஜீவித்துக் கொண்டு, **वृद्धेक्ष्वाकु व्रतम्** - வயது முதிர்ந்த இக்ஷ்வாகு வம்சத்தவரின் விரதத்தை, **युवा** - யௌவனப் பருவத்தினராகவே, **चचार** - செய்தார்.

(க-து) வயது முதிர்ந்தபின் காடு சென்று தவம் புரிதல் இக்ஷ்வாகு வம்சத்தினருக்கு வழக்கமாகும். ஆனால் ராமர் இளம் பருவத்தினராக இருக்கும் பொழுதே வயது முதிர்ந்தவர்களின் கடமையான தவத்தை மேற்கொண்டார்.

இத்தகைய தனிச்சிறப்புப் பெற்றிருந்தார் ராமர். '**वार्धके मुनिवृत्तीनाम्**' '**गलितवयसामिक्ष्वाकूणामिदं हि कुलव्रतम्**' என்பனவற்றைக் காண்க.

'करोम्यन्यैर्नृपैर्धर्मं नैवाप्तं नोपपादितम्'
எனத்தாம் கொண்ட தவ வாழ்க்கையைப் பற்றி ராமர் கூறுவதைக் கவனிக்க. [பிரதிமா. 1-24]

प्रभावस्तम्भितच्छायमाश्रितः स वनस्पतिम् ।
कदाचिदङ्के सीतायाः शिश्ये किंचिदिव श्रमात् ॥ २१ ॥

सः - அவர், कदाचित् - ஒருபொழுது, प्रभाव-स्तंभित-च्छायम् - (தமது) மஹிமையால் ஒரே நிலையிலிருக்கும்படி செய்யப்பட்ட நிழலையுடைய, वनस्पतिम् - மரத்தை (மரத்தினடியை), आश्रितः (सन्) - அடைந்தவராக, किञ्चित्-சிறிது, श्रमात् - (इव) - களைப்பினாலே, सीतायाः - ஸீதையின், अङ्के - மடியிலே (தலை சாய்த்து), शिश्ये - உறங்கினார்.

(க-து) ஒரு சமயம் ராமர் சிறிது களைப்பினால் ஒரு மரத்தினடியில் ஸீதையின் மடியில் தலை வைத்து உறங்கினார். அம்மரத்தின் நிழல், ராமரது மஹிமையால் சூரியன் செல்லும் பொழுதும், இடம் விட்டு நகராதிருந்தது.

वनस्पतिः - பூவாமல் காய்க்கும் மரத்திற்குப் பெயர். இங்குப் பொதுவாக மரத்தைக் குறித்தது. इव - என்ற சொல் இங்குப் பொருளில்லை; அல்லது, इव - என்பதை किञ्चित् - என்பதுடன் கூட்டி 'சிறிதே' உறங்கினார் எனவும் கூறலாம். श्रमात् - வேட்டையாடிய களைப்பினால்: 'अत्रानुगोदं मृगयानिवृत्तः तरंगवातेन विनीतखेदः । रहस्त्वदुत्संगनिषण्णमूर्धा स्मरामि वानीरगृहेषु सुप्तः ।' என ராமர் கூறுவதை [13 ஸ. 36] ஒப்பிட்டு நோக்க.

ऐन्द्रिः किल नखैस्तस्या विददार स्तनौ द्विजः ।
प्रियोपभोगचिह्नेषु पौरोभाग्यमिवाचरन् ॥ २२ ॥

ऐन्द्रिः - இந்திரன் மகனான, द्विजः - பறவை - (காகம்), तस्याः - ஸீதையின், स्तनौ - ஸ்தனங்களை, प्रिय - उपभोग -

चिह्नेषु - கணவரது போகத்தின் அடையாளங்களான நகக் கீறல்(குறி)களில், पौरोभाग्यम् - குற்றம் காணுதலை, आचरन्-इव - செய்வது போல், नखैः - தனது நகங்களால், विददार किल - கீறியது.

(க-து) அவ்வாறு ராமர் படுத்துறங்கும் பொழுது; இந்திரன் மகன், காகத்தின் வடிவில் தோன்றி நகங்களால் ஸீதையின் மார்பில் கீறினன்.

காகாஸுரனது விருத்தாந்தம் அயோத்யாகாண்டத்தில் கூறப்படவில்லை. ஸீதை ஹனுமாருக்கு அடையாளம் கூறும் பொழுது இவ்வரலாற்றைக் கூறுவதாக ஸுந்தர காண்டம் 38-ஆம் ஸர்க்கத்தில் காணப்படுகிறது. கவி, பத்ம புராணத்தை யனுசரித்து இங்கே இவ்வரலாற்றைக் குறித்தார். पौरोभाग्यम्-பிறர் செய்த காரியத்தில் குணம் காணுது குற்றத்தையே காணுதல்: காகம் கீறியதற்குக் காரணத்தை, प्रियोपभोगेषु.......चरन् - என்பதில் கவி உத்ப்ரேக்ஷித்தார்.

காக்கை தீண்டுதல் அபசகுனம் என்றும், பின்வரப் போகின்ற ஸீதாபஹாரத்தின் அறிகுறி என்றும் கூறுவர்.

तस्मिन्नास्थदिषीकास्त्रं रामो रामावबोधितः ।
आत्मानं मुमुचे तस्मादेकनेत्रव्ययेन सः ॥ २३ ॥

रामा-अवबोधितः - ஸீதையினுல் எழுப்பப்பட்ட, रामः- ராமர், तस्मिन् - அக்காகத்தினிடம், इषीका-अस्त्रम् - தர்ப்ப அஸ்திரத்தை, आस्थत् - பிரயோகித்தார்; सः - அக்காகம், एक-नेत्र-व्ययेन - ஒரு கண்ணை இழப்பதன் மூலம், तस्मात् - அவ்வஸ்த்ரத்தினின்றும், आत्मानम् - தன்னை, मुमुचे - விடுவித்துக் கொண்டது.

(க-து) காக்கையின் உபத்ரவம் தாங்காது ஸீதையினுல் எழுப் பப்பட்ட ராமர், ஒரு தர்ப்பத்தைக் கிள்ளி அஸ்த்ரமந்திரத்தினுல்

அபிமந்திரித்துக் காக்கையினிடம் பிரயோகித்தார். காக்கை அவ்வஸ்த்ரத்திற்கு இலக்காகத் தன் கண் ஒன்றைத் தந்து உயிரைக் காத்துக் கொண்டது.

इषीका-ஒருவகைப்புல், நாணல் என்பர்; स दर्भं संस्तराद् गृह्य - என்று ராமாயணம் கூறுவதால் 'தர்ப்பம்' என்று பொருள் கூறப்பட்டது; உபயோகித்த அஸ்த்ரம் - பிரம்மாஸ்த்ரம்.

रामस्त्वासन्नदेशत्वाद्भरतागमनं पुनः ।
आशङ्क्योत्सुकसारङ्गां चित्रकूटस्थलीं जहौ ॥ २४ ॥

**रामः तु** - ராமரோ, **आसन्न देशत्वात्** - (அயோத்திக்கு) அருகிலுள்ள இடமாக இருத்தலால், **पुनः** - மறுபடியும், **भरतागमनम्** - பரதனது வருகையை, **आशङ्क्य** - ஸந்தேகித்து, **उत्सुक सारङ्गाम्** - ஆவலுடன் இருக்கின்ற மான்களையுடையதான, **चित्रकूटस्थलीम्** - சித்ரகூடப் ப்ரதேசத்தை, **जहौ** - விட்டு விட்டார்.

(க-து) சித்ரகூடம் அயோத்திக்கு அருகிலிருந்தது. அதனால் பரதன் முதலானோர் திரும்பவும் வருவாரோ எனச் சந்தேஹித்துத் தொலைவில் இருக்க விரும்பிச் சித்ரகூடத்தை விட்டுச் சென்றார். சித்ரகூடத்தில் அவருடன் பழகிய மான்களும், ராமர் அவைகளை விட்டுச் சென்ற பொழுது மனம் கலங்கின.

**उत्सुक सारंगाम्** - ராமர் செல்லும் பொழுது மான்கள் அவரிடமுள்ள அன்பினால் அவரைக் காண்பதில் ஆவலுடனிருந்தன என்றும் உரைப்பர்.

प्रययावातिथेयेषु वसन् ऋषिकुलेषु सः ।
दक्षिणां दिशमृक्षेषु वार्षिकेष्विव भास्करः ॥ २५ ॥

**सः** - ராமர், **आतिथेयेषु** - அதிதிகளிடம் அன்புடனிருக்கின்ற, **ऋषिकुलेषु** - ரிஷிகளின் ஆச்ரமங்களில், **वार्षिकेषु**-

மழைக்காலத்திற்குரிய, ऋक्षेषु - நக்ஷத்ரங்களில், भास्करः - इव - ஸூரியன் (வஸிப்பது) போல், वसन्-வஸித்துக்கொண்டு, दक्षिणाम् दिशम् - தென்திசை நோக்கி, प्रययौ - சென்றார்.

(க-து) ராமர் ரிஷிகளின் ஆச்ரமங்களில் தங்கி, மழைக்காலத்தில் தெற்கில் செல்லும் ஸூரியன் போல்-தென்திசை நோக்கிச் சென்றார்.

ராமரது தேஜஸ்ஸையும், தென்திசை செல்லுதலையும் கருதி, அவர் ஸூரியனுடன் ஒப்பிடப்பட்டார். ஸூரியன் தென்திசையில் செல்லும் பொழுது, வர்ஷாகால நக்ஷத்ரங்களாகிய, திருவாதிரை புனர்வஸு, புஷ்யம், ஆயில்யம், மகம், பூரம், உத்தரம், ஹஸ்தம், சித்திரை, ஸ்வாதி என்ற பத்து நக்ஷத்ரங்களின் மூலம் செல்லுகின்றான். இந்த நக்ஷத்ரங்களைக் கடந்து செல்ல நான்கு மாதங்களாகின்றன வென்றும், ஸூரியன் இக்காலத்தில் மழையளிக்கின்றான் என்றும் கூறுவர். ஆச்ரமத்திற்கு உபமானங்கள்-நக்ஷத்ரங்கள்.

बभौ तमनुगच्छन्ती विदेहाधिपतेः सुता ।
प्रतिषिद्धापि कैकेय्या लक्ष्मीरिव गुणोन्मुखी ॥ २६ ॥

तम् - ராமரை, अनुगच्छन्ती-பின் தொடர்ந்து சென்ற, विदेहाधिपतेः सुता - ஜனககுமாரி ஸீதை, कैकेय्या - கைகேயியினால், प्रतिषिद्धा-अपि - தடுக்கப் பட்டவளாயினும், गुणोन्मुखी - குணங்களிலே ஆசைகொண்ட, लक्ष्मीः इव - ராஜ்யலக்ஷ்மி போல், बभौ - காணப்பட்டாள் (விளங்கினாள்).

(க-து) வனத்தில் ராமரைப் பின் தொடர்ந்து சென்ற ஸீதை, ஸாக்ஷாத் ராஜ்யலக்ஷ்மி போல் விளங்கினாள். ராஜ்யலக்ஷ்மி ராமரை அடைதல் கூடாதென கைகேயி தடுத்துள்ளாள்; ஆயினும் ராமரிடமுள்ள குணங்களிலே ஆசை வைத்து ராஜ்யலக்ஷ்மி தானே ராமருடன் வந்தாள் போலும் என்றார் கவி.

ஸீதையை ராஜ்ய லக்ஷ்மியாக உத்ப்ரேக்ஷிக்கக் காரண மாயிருந்தது அவளது ஸௌந்தர்யம். இதனின்றும் ஸீதை யின் வாடாத அழகு புலனாகும்.

अनसूयातिसृष्टेन पुण्यगन्धेन काननम् ।
सा चकाराङ्गरागेण पुष्पोच्चलितषट्पदम् ॥ २७ ॥

**सा** - ஸீதை, **अनसूया-अतिसृष्टेन** - அநஸூயையினால் தரப்பட்டதும், **पुण्यगन्धेन** - மனங்கவரும் மணமுடையது மான, **अङ्गरागेण**-சந்தனத்தினால், **काननम्** - வனத்தை, **पुष्प-उच्चलित-षट्पदम्** - புஷ்பங்களினின்றும் எழுந்த வண்டுகளை யுடையதாக, **चकार** - செய்தாள்.

(க-து) அத்ரி முனிவரின் மனைவி அநஸூயை, ஸீதையினது நற்குணங்களைக் கண்டு மகிழ்ந்து, மாலை, ஆபரணம், வஸ்திரம், சந்தனம் இவற்றைக் கொடுத்தாள். சந்தனம் இனியமண முடையது. ஒரு தடவை உபயோகித்தாலும் தேஹத்திற்கு ஸ்திரமான காந்தியையும் வாஸனையையும் தரக்கூடியது; ஸீதை, அநஸூயையின் அன்பளிப்பை ஏற்றுச் சந்தனத்தைப் பூசிக்கொண்டாள். காட்டிலுள்ள அவ்வளவு புஷ்பங்களின் வாஸனையைக் காட்டிலும் சந்தனத்தின் மணம் மேலானதாக இருந்ததால், மலர்களிலிருந்த வண்டுகள் தாங்கள் அமர்ந்திருந்த புஷ்பங்களை விட்டுச் சந்தனத்தின் வாஸனையை நுகர வந்தன.

மலர்களினின்றும் வண்டுகள் எழுவதற்குக் காரணம் **पुण्यगन्धेन** - என்பதால் காட்டப்பட்டது. **पुण्यः** - இனிய; **'पुण्यस्त्रिषु मनोज्ञे स्यात् क्लीबं सुकृतधर्मयोः -'** । **अंगरागः** - சந்தனம் எனவும், பச்சைக் கற்பூரம், காரகில், கஸ்தூரி என்ற வாசனைப் பொருள்களின்றும் தயார் செய்யப் பட்ட உடற்பூச்சு எனவும் கூறுவர்.

**'अंगरागेण-भर्तृसमीपे तव शरीरे वर्तमानानि रजांस्यपि अंगरागतां गच्छन्तु इति वररूपेण इत्यर्थः'** என்று உரையிடுவர் நாராயணர். இது வால்மீகிராமாயணத்திற்கு முரணானது.

'इदं दिव्यं वरं माल्यं वस्त्रमाभरणानि च। अंगरागंच वैदेहि महार्हमनुलेपनम्। मया दत्तमिदं सीते तव गात्राणि शोभयेत्। अनुरूपमसंक्लिष्टं नित्यमेव भविष्यति' என்பது அநஸூயா கூறுவது.

संध्याभ्रकपिशस्तस्य विराधो नाम राक्षसः।
अतिष्ठन्मार्गमावृत्य रामस्येन्दोरिव ग्रहः ॥ २८ ॥

सन्ध्या-अभ्र-कपिशः - ஸாயங்கால மேகம் போல் கருஞ்சிவப்பு (செம்பட்டை) நிறமுடைய, विराधः-नाम-விராதன் என்ற, राक्षसः - ராக்ஷஸன், ग्रहः - (ராஹு) க்ரஹம், इन्दोः-इव - சந்திரனுடைய (வழியை மறித்து நிற்பது) போல், रामस्य - ராமருடைய, मार्गम् - வழியை, आवृत्य - மறைத்துக் கொண்டு, अतिष्ठत् - நின்றான்.

(க-து)· ராமர் வனத்தில் செல்லும் பொழுது, விராதன் என்ற அஸுரன் அவரது வழியில் தென்பட்டான்.

ஜீவன் என்ற கந்தர்வனுக்கு சதஹ்ரதா என்ற கந்தர்வஸ்திரீயிடம் பிறந்த தும்புரு என்ற யக்ஷன் ரம்பையினிடம் தகாத காதல் கொண்டதாலே குபேரனால் ராக்ஷஸனாகும்படி சபிக்கப்பட்டான். அவனது ராக்ஷஸப்பெயர் விராதன் என்பது. அவன் தவமியற்றிப் பிரம்மனிடமிருந்து ஆயுதங்களால் கொல்லப் படா நிலையை வரமாகப் பெற்றுக் கொண்டான். ராமரது வழியில் வந்த அவன், ஸீதையைத் தன் இடையிலே தூக்கிக் கொண்டு செல்லவும், ராமலக்ஷ்மணர் பாணத்தினால் அவனது உடலைத் துளைத்தனர். அவன் ஸீதையைக் கீழே போட்டு விட்டு ராமலக்ஷ்மணர்களைத் தோளில் தூக்கிக் கொண்டு செல்ல, ராமர் அவனது வலது கையையும் லக்ஷ்மணன் இடது கையையும் வெட்டிவீழ்த்தினார்கள். கீழே விழுந்த அசுரனைக் காலால் மிதித்தும், முஷ்

டிகளால் குத்தியும் கொல்ல முயன்றனர். எவ்வகையிலும் கொல்ல முடியாத பொழுது, ஒரு பள்ளம் தோண்டி அதில் அவனை உயிருடன் புதைத்தனர். ராமரால் தண்டிக்கப்பட்டு விராதன் சாபம் நீங்கித் தன்னுலகு சென்றான்.

स जहार तयोर्मध्ये मैथिलीं लोकशोषणः ।
नभोनभस्ययोर्वृष्टिमवग्रह इवान्तरे ॥ २९ ॥

**लोकशोषणः** - உலகை வற்றச் செய்த (துன்புறுத்திய), **सः** - அவ்விராதன், **तयोः** - ராமலக்ஷ்மணர்களின், **मध्ये** - மத்தியில் (இருந்த), **मैथिलीम्** - ஸீதையை, **नभो नभस्ययोः** - ஆவணி, புரட்டாசி மாதங்களின், **अन्तरे**-மத்தியில் (உள்ள), **वृष्टिम्** - மழையை, **अवग्रहः-इव** - வறட்சி (கவர்வது) போல, **जहार** - கவர்ந்தான்.

(க-து) ஆவணியும் புரட்டாசியும் மழைமாதங்கள்; வறட்சியான காலம் குறுக்கிட்டால் அம்மாதங்களில் மழை அற்றுப்போகின்றது. அது போல் விராதன் ராமமார்க்கத்தில் குறுக்கிட்டு அவர்களுக்கிடையிலிருந்த ஸீதையைக் கவர்ந்தான்.

ராமலக்ஷ்மணர்களுக்கு ஆவணி புரட்டாசி மாதங்களும், ஸீதைக்கு மழையும் உபமானங்கள். ஆச்ரமத்திலுள்ள முனிவர்களின் ரத்தத்தை உறிஞ்சிக் கொண்டிருந்ததால் விராதன் **लोकशोषणः** - என விசேஷிக்கப்பட்டான். உலகை உலறச் செய்யும் தன்மையால் வறட்சியான காலம் விராதனுக்கு உவமையாயிற்று: **अवग्रहः** - மழையின்மை, வறட்சி. காட்டில் நடக்கும் பொழுது ஸீதையின் பாதுகாப்பைக் கருதி முன்னே ராமரும், அடுத்து ஸீதையும் மூன்றுவதாக லக்ஷ்மணரும் சென்றனர். '**अग्रतः प्रययौ रामस्सीता मध्ये सुमध्यमा। पृष्ठतस्तु धनुष्पाणिर्लक्ष्मणोऽनुजगाम ह ।**' என்பது வால்மீகி ராமாயணம். [அரண்ய. 11-1].

तं विनिक्षिप्य काकुत्स्थौ पुरा दूषयति स्थलीम् ।
गन्धेनाशुचिना चेति वसुधायां निचख्नतुः ॥ ३० ॥

काकुत्स्थौ - ராம லக்ஷ்மணர்கள், तम् - அவனை, विनिक्षिप्य - நசுக்கியபின், 'अशुचिना - அசுத்தமான, गन्धेन-நாற்றத்தினால், स्थलीम् - வனப்ரதேசத்தை, पुरा दूषयति-इति - (அவன்) கெடுத்து விடுவான்' என, वसुधायाम् - பூமியில், निचख्नतुः च - புதைத்தனர்.

(க-து) விராதனை நசுக்கியபின், அவ்வாறே விட்டு வைத்தால் அவனது அழுகும் உடலின் நாற்றத்தால் காடு கெடும் என எண்ணி, ராம லக்ஷ்மணர்கள் பள்ளத்தில் அவனைப் புதைத்தனர்.

விராதனைப் புதைத்ததன் காரணத்தைக் கவி, 'அசுத்தமான நாற்றத்தினால் காடு கெடும்' என்று கூறினார். இறந்த ராக்ஷஸர்களைப் புதைப்பதுதான் முறையாதலால் தன்னைப் பள்ளத்தில் புதைக்கும்படி விராதனே ராமரிடம் கூறுவதாக வால்மீகி ராமாயணம் தெரிவிக்கின்றது. புதைத்தற்கு முக்யகாரணம்:- விராதனை ஆயுதத்தால் கொல்ல முடியாது. ஆதலால் பள்ளத்தில் தள்ளி மண்ணால் மூடி உயிரிழக்கும்படி செய்தனர். अवटे चापि मां राम निक्षिप्य कुशली व्रज । रक्षसां गतसत्त्वानां एष धर्मः सनातनः ॥ अवध्यतां प्रेक्ष्य महासुरस्य तौ शितेन शस्त्रेण तदा नरर्षभौ । समर्थ्य चात्यर्थविशारदावुभौ बिले विराधस्य वधं प्रचक्रतुः ॥ [ராமாயணம், அரண்ய காண்டம். 4-22-30]

पञ्चवट्यां ततो रामः शासनात् कुम्भजन्मनः ।
अनपोढस्थितिस्तस्थौ विन्ध्याद्रिः प्रकृताविव ॥ ३१ ॥

ततः - பிறகு, रामः - ராமர், कुम्भजन्मनः - குடமுனிவர் அகஸ்த்யரின், शासनात् - ஆணையினால், पञ्चवट्याम् - பஞ்ச

வடியில், विन्ध्याद्रिः - விந்தியமலை, प्रकृतौ-इव - தந்நிலையில் (இருந்தது) போல், अनपोढस्थितिः - விடப்படாத நன்னடக்கையுடையவராக, तस्थौ - இருந்தார்.

(க-து) பிறகு ராமர், அகஸ்த்ய முனிவரை வணங்கித் தாம் வஸிப்பதற்குரிய நல்ல இடத்தைக் கூறும்படி வேண்டவும், அவர் கோதாவரியின் கரையிலுள்ள பஞ்சவடியில் வஸிக்கும்படி கூறினார். ராமர் அங்கே தமது தர்மங்களை விடாது வசித்து வந்தார்.

அகஸ்த்யர் சொற்படி நடந்த வகையில் ராமருக்கு உபமானம் விந்தியமலை. ஒருசமயம் விந்தியமலை வளர்ந்து சந்திரசூர்யர்களின் கதியைத் தடுத்ததால் தேவர்களின் வேண்டுகோளை அனுசரித்து அகஸ்த்யர் அம்மலையை வளராதிருக்கும்படிக் கேட்டுக் கொள்ள, மலையும் முனிவரின் வாக்கிற்குக் கீழ்ப்படிந்து வளராது இருந்தது: स्थिति-மரியாதை அல்லது ஸ்வதர்மம்; अनपोढस्थितिः 'ஸ்வதர்மத்தை விடாதவராக.' என்பது பொருள். அகஸ்த்யர், ராமருக்கு விஷ்ணுவினது வில்லையும், பிரம்மதத்தம் என்ற அம்பையும், வற்றாத அம்புகளையுடைய இரண்டு தூணிகளையும் கொடுத்ததாக ஸ்ரீமத்ராமாயணம் கூறும்.

रावणावरजा तत्र राघवं मदनातुरा ।
अभिपेदे निदाघार्ता व्यालीव मलयद्रुमम् ॥ ३२ ॥

तत्र - அங்கு, मदन-आतुरा - காமத்தினால் கலங்கியவளான, रावणावरजा - ராவணன் தங்கை சூர்ப்பணகை, राघवम् - ராமரை, निदाघार्ता - கோடையினால் வருந்திய, व्याली - பெண்பாம்பு, मलय द्रुमम्-इव - சந்தன மரத்தை (அடைவது) போல, अभिपेदे - அடைந்தாள்.

(க-து) ராமர் பஞ்சவடியில் இருக்கும் பொழுது ஒரு சமயம், ராவணன் தங்கை சூர்ப்பணகை, ராமரது வடிவழகைக் கண்டு காமத்

தால் வருந்தி, வெய்யிலில் கஷ்டமடைந்த பாம்பு குளிர்ச்சிக்காகச் சந்தன மரத்தை அணுகுவது போல் ராமரை நெருங்கினாள்.

விச்ரவஸ் என்ற முனிவருக்குக் கைகஸி என்ற ராக்ஷஸியிடம் பிறந்தவள் சூர்ப்பணகை; 'முறம் போன்ற நகமுடையவள்' என்பது பதப்பொருள். சூர்ப்பணகை ஸ்திரீ என்பதால், பெண்பாம்பு உபமானமாகக் கூறப்பட்டது. உபமானத்தினால் ஆசைப்படுகின்ற சூர்ப்பணகைக்கும், அவளாலே விரும்பப்பட்ட ராமருக்கும் உள்ள தாரதம்யமும், பொருந்தாக் காமமும் குறிப்பிடப் பட்டன.

सा सीतासंनिधावेव तं वव्रे कथितान्वया ।
अत्यारूढो हि नारीणामकालज्ञो मनोभवः ॥ ३२ ॥

**सा** - அவள், **कथितान्वया** - (தனது) குலத்தைப்பற்றிக் கூறியவளாக, **तम्** - ராமரை, **सीतासन्निधौ-एव** - ஸீதையின் அருகிலேயே, **वव्रे** - வரித்தாள், (வேண்டினாள்); **नारीणाम्** - பெண்களின், **अत्यारूढः** - மிக முதிர்ந்த, **मनोभवः** - காமம், **अकालज्ञः-हि** - கால மறியாதல்லவா?

(க-து) 'ராமருகில் மற்றொரு பெண்பிள்ளை இருக்கின்றாளே! அவள் எதிரிலே காமத்தைத் தெரிவித்தல் தகாதெ'ன்பதையும் உணராமல், சூர்ப்பணகை, ராமரைத் தன் கணவராக இருக்கும்படி வேண்டினாள்.

அவ்வாறு சூர்ப்பணகை நடந்துகொண்டதன் காரணத்தைச் சுலோகத்தின் பின் பகுதியினால் தெரிவிக்கின்றார் கவி. **कथितान्वया**-என்பதால், அவள் தனது குலப் பெருமையைக் கூறித் தான் ராமருக்குத் தக்கவளே எனப் பொருத்தத்தைக் காட்டியவாறு.

**सीता सन्निधौ एव**-என்பதால் அவளது பொறுமையற்ற தன்மையும், சபலபுத்தியும் தெளிவாகும். **अकालज्ञः** - இங்

குள்ள 'காலம்' என்ற சொல், இடத்தையும், தகுதியையும் கூடக் குறிக்கும். "कालशब्दश्चायमौचित्यमप्युपलक्षयति । अनुचितो हि स्त्रीणां स्वयमभियोगः। 'स्वयमभियोगिनी स्त्री सद्यः सौभाग्यं जहाति' इति वात्स्यायनवचनम् ' नारायणः॥

कलत्रवानहं बाले कनीयांसं भजस्व मे ।

इति रामो वृषस्यन्तीं वृषस्कन्धः शशास ताम् ॥ ३४ ॥

**वृषस्कन्धः रामः**-காளையினது போன்ற தோளையுடைய ராமர், **वृषस्यन्तीम्** - ஆணை விரும்புகின்ற (காமுகியான), **ताम्** - அவளை நோக்கி, '**बाले** - பெண்ணே, **अहम्** - நான், **कलत्रवान्** - மனைவியுடனிருப்பவன்; **मे** - எனது, **कनीयांसम्**- இளைய ஸஹோதரனை, **भजस्व** - அடைவாயாக', **इति** - என, **शशास** - பணித்தார்.

(க-து) அழகிய தோற்றமுள்ள ராமர், காமுகி சூர்ப்பணகையை நோக்கி, 'பெண்ணே, நான் மனைவியுடையவன்; என் தம்பியை அடைவாயாக' எனக் கூறினார்.

**वृषस्कन्धः**-என்றதால் ராமரது அழகு கூறியதாயிற்று. தன்னைவிட அழகான மனிதனைக் காட்டினாலன்றிச் சூர்ப்பணகை தன்னைவிட மாட்டாளாதலால், **कनीयांसम्**-என்ற சொல்லால் லக்ஷ்மணனைக் குறித்தார்: **कनीयान्** - சிறந்த யௌவனமுடையவன்: **अतिशयेन युवा** - என்பது பதப் பொருள். '**पुंश्चल्यो हि रमणीयान्तरदर्शनेनैव सुव्यावर्त्या भवन्ति ।' मरुणगिरिः ।**

ज्येष्ठाभिगमनात् पूर्वं तेनाप्यनभिनन्दिता ।

साभूद्रामाश्रया भूयो नदीवोभयकूलभाक् ॥ ३५ ॥

**पूर्वम्** - முதலில், **ज्येष्ठ-अभिगमनात्** - (தன்) தமையனாரை அடைந்த காரணத்தால், **तेन अपि** -லக்ஷ்மணனாலும், **अनभि**-

**नन्दिता**-ஏற்கபபடாதவளாக, **भूयः**-மறுபடியும், **राम-आश्रया** - ராமரை அடைகின்ற, **सा** - அவள், **उभयकूलभाक्** - இரு கரையையும் தொடுகின்ற, **नदी-इव** - நதிபோல், **अभूत्** - இருந்தாள்.

(க-து) 'முதலில் என் தமையனாரை மனத்தாலும் வாக்கினாலும் வரித்ததால் உன்னை நான் ஏற்கமுடியாது' எனக் கூறி லக்ஷ்மணன் மறுத்து விடவும், சூர்ப்பணகை மறுபடியும் ராமரிடம் வந்தாள். இவ்வாறு மாறிமாறி வருகின்ற அவள், குறைந்த ஜலமுடைய காலத்தில் ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு கரையோரத்தில் ஓடுகின்ற நதி போல் காணப்பட்டாள்.

இதனின்றும், சூர்ப்பணகை முதலில் லக்ஷ்மணனிடம் வந்திருந்தால் அவளை அவன் ஏற்றுக் கொண்டிருப்பான் என நினைத்தல் கூடாது. அப்பொழுதும் வேறு ஒரு காரணத்தைச் சொல்லி விலக்கி இருப்பான். காரணம் வேறு இருக்குமேயன்றிப் பயன் ஒன்றுதான்: 'प्रवाहवशात् उभयकूलगामिनी नदीवाकुलाभवदित्यर्थः' अरुणगिरिः।

संरम्भं मैथिलीहासः क्षणसौम्यां निनाय ताम् ।
निवातस्तिमितां वेलां चन्द्रोदय इवोदधेः ॥ ३६ ॥

**मैथिलीहासः** - ஸீதையின் சிரிப்பு, **क्षणसौम्याम्** - சிறிது நேரமே அழகிய தோற்றத்திலிருந்த, **ताम्** - அவளை, **निवात-स्तिमिताम्** - காற்றில்லாமையால் அசைவற்றிருக்கின்றதான, **उदधेः** - கடலின், **वेलाम्** - ஜலத்தை, **चन्द्रोदयः-इव** - சந்திரோதயம் (கொந்தளிக்கச் செய்வது) போல், **संरम्भं निनाय** கோபம் அடைவித்தது.

(க-து) இவ்வாறு மதியிழந்து நிற்கின்ற சூர்ப்பணகையைக் கண்டு ஸீதை சிரிக்கவும், அச்சிரிப்பு, சந்திரோதயம் கடல் நீரைக் கொந்தளிக்கச் செய்வது போல், சூர்ப்பணகையின் மனத்தில் கோபத்தைக் கிளப்பியது.

ஸீதையின் மந்தஹாஸத்திற்கு சந்திரோதயம் உப மானம்; क्षणसौम्या - என்பதால் சூர்ப்பணகை ராமரிடம் வந்தபொழுது ராக்ஷஸமாயையினால் அழகிய வடிவுடன் வந்தாள் என்பது தெளிவு. वेला - என்ற சொல்லுக்கு அலை என்ற பொருளிருப்பினும் இடத்திற்குச் சேர, स्तिमिता - என்ற விசேஷணத்தையும் நோக்கி அலைக்கு மூலப் பொருளான கடல் நீர் என்றே பொருள் கொள்ளவேண்டும். 'वेला इति .... अत्र प्रकृतिभूतं अंभ्बेव लक्ष्यते' - नारायणः ॥

फलमस्योपहासस्य सद्यः प्राप्स्यसि पश्य माम् ।
मृग्याः परिभवो व्याघ्र्यामित्यवेहि त्वया कृतम् ॥ ३७ ॥

'अस्य - இந்த, उपहासस्य - பரிஹாஸத்தின், फलम् - பயனை, सद्यः - உடனே, प्राप्स्यसि - அடைவாய்; माम् - என்னை, पश्य - பார்; त्वया - உன்னால், कृतम् - செய்யப்பட்ட இக்கார்யம், व्याघ्र्याम् - பெண்புலியினிடத்தில், मृग्याः - பெண்மானால் (செய்யப்பட்ட), परिभवः इति - அவமதிப்பு என, अवेहि - அறிந்து கொள்.'

(க-து) சூர்ப்பணகை கூறினாள்: 'உனது சிரிப்பின் பயனை நீ இப்பொழுதே அடைவாய்; பார் எனது பயங்கர வடிவத்தை. நீ என்னைப் பரிஹஸித்தது, பெண்மான் ஒரு பெண்புலியை அவமதித்தற் கொப்பானது.'

इत्युक्त्वा मैथिलीं भर्तुरङ्के निविशतीं भयात् ।
रूपं शूर्पणखा नाम्नः सदृशं प्रत्यपद्यत ॥ ३८ ॥

भयात् - பயத்தினால், भर्तुः - கணவரது, अङ्के - மடியை, निविशतीम् - அடைகின்ற, मैथिलीम् - ஸீதையை நோக்கி, इति - இவ்வாறு, उक्त्वा - கூறிய பின், शूर्पणखा - சூர்ப்பணகை, नाम्नः सदृशम् - தன் பெயருக்குத் தக்க, रूपम् - உருவத்தை, प्रत्यपद्यत - அடைந்தாள்.

(க-து) சூர்ப்பணகையின் குரலைக் கேட்டு நடுங்கிச் சீதை தன் கணவரது அருகில் சென்ற பொழுது, ராக்ஷஸி தன் பெயருக்கேற்ற வடிவத்தை அடைந்தாள்.

மாயையில் வல்லவர்களான அரக்கர்கள், தாம் விரும்பிய வடிவை எடுத்துக் கொள்வர். ஆனால், அவர்கள் இறக்கும் பொழுதும், தூங்கும் பொழுதும், மிகக் கோபமுற்ற பொழுதும், மிக அச்சமடைந்த பொழுதும், மிக மகிழ்ச்சியுற்ற பொழுதும், அம்மாயவடிவம் அவர்களைவிட்டு நீங்கும். அவர்கள் விரும்பாவிடினும், அவர்களது சுயரூபம் தானே வந்துவிடும். 'स्वभावं प्रतिपद्यन्ते वृहन्तो यक्षराक्षसाः । म्रियमाणाः प्रसुप्ताश्च क्रुद्धाः भीताः प्रहर्षिताः' என வாயுபுராணம் கூறும். [அத்யாயம், 69-145]. இங்குச் சூர்ப்பணகை மிகக் கோபமடைந்ததால் அவள் ஏற்றுவந்த அழகான வடிவம் நீங்க, அவளது சுயவடிவமான கோரரூபம் வந்தது.

32-ஆம் சுலோக உரையையும் காண்க. முறம் போல் நகம் இருந்தால் மற்ற அங்கங்களும் உடலும் எப்படி இருக்க வேண்டுமென்பதை ஊஹித்தறிய வேண்டும். अङ्के निविशतीम् என்பதிலுள்ள இலக்கண வழுவை நீக்க, अंगानि विशतीम् - என்பது நாராயணர், அருணகிரி இருவரும் கொண்ட பாடம். 'अंगानि विशतीं - रामस्य सर्वानवयवान् गच्छन्तीम्.... अंकं विविशतीमित्यपि वा पाठः' नारायणः ।

लक्ष्मणः प्रथमं श्रुत्वा कोकिलामञ्जुवादिनीम् ।
शिवाघोरस्वनां पश्चाद्बुबुधे विकृतेति ताम् ॥ ३९ ॥

लक्ष्मणः - லக்ஷ்மணன், प्रथमम् - முதலில், ताम्-அவளை, कोकिला-मञ्जु-वादिनीम् - பெண்குயில் போல் இனிமையாகப் பேசுகின்றவளாகவும், पश्चात् - பிறகு, शिवा- घोर-स्वनाम् - நரிபோல் கோரமான குரலுடையவளாகவும், श्रुत्वा - கேட்டு

(அறிந்து), विकृता इति - மாறியுள்ளாள் (கோபமடைந்துள்ளாள்) என, बुबुधे - அறிந்தான்.

(க-து) ராமரிடம் சென்ற சூர்ப்பணகையை லக்ஷ்மணன் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. ஸீதையினிடம் கோபம் கொண்டு அவள் உறுமியபொழுது அவளது குரலைக் கேட்டு, அவள் ராக்ஷஸ குணத்தைக் கொண்டு விட்டாள் என அறிந்தான்.

சூர்ப்பணகை வந்த பொழுது தான் கொண்ட அழகிய உருவத்திற்கேற்பக் குயில் போல் இனிய குரலுடனிருந்தாள் என்பது कोकिलामञ्जुवादिनीम् - என்பதால் காட்டப்பட்டது. ताम्-श्रुत्वा - அவளைக் கேட்டு; அவளது குரலைக் காதால் கேட்டு என்று கருத்து; சப்தத்தைக் கேட்பது போல் சப்த காரணத்தையும் காதால் கேட்பதாகக் கவிகளின் ப்ரயோகம் உண்டு. 'निधानमश्रूयत पाञ्चजन्यः' என்பதையும் காண்க.

पर्णशालामथ क्षिप्रं विकृष्टासिः प्रविश्य सः ।
वैरूप्यपौनरुक्त्येन भीषणां तामयोजयत् ॥ ४० ॥

अथ - பிறகு, सः - அவன், क्षिप्रम् - துரிதமாக, पर्णशालाम् - பர்ணசாலையில், प्रविश्य - புகுந்து, विकृष्टासिः - எடுக்கப்பட்ட கத்தியையுடையவனாக, भीषणाम्-பயங்கரமான அவளை, वैरूप्य-पौनरुक्त्येन-இரண்டாவது விகாரத்தன்மையுடன், अयोजयत् - இணைத்தான்.

(க-து) லக்ஷ்மணன், வேகமாக ஆச்ரமத்துள் புகுந்து, கத்தியை எடுத்துவந்து, சூர்ப்பணகையின் காதுகளையும் மூக்கையும் அறுத்து, முன்பே விகாரமாயிருந்த அவளுக்கு மறுமுறையும் (மேலும்) விகாரத்தன்மையை உண்டாக்கினான்.

உரையாசிரியர் எல்லோரும், वैरूप्यपौनरुक्त्येन - என்பதற்கு, 'ஏற்கனவே விகாரமான அவளுக்கு மறுமுறையும் விகாரத்தன்மை யுண்டாக்கப்பட்டது. அதனால் அவளது

விகாரத்தன்மை இருமடங்காயிற்று' என்று உரைப்பர். पौनरुक्त्यम् - என்பதற்கு 'மறுமுறை செய்தல்' என்று பொருள் கூறுவர்.

இனி இதற்கு வேறு வகையிலும் பொருள் கூறலாம். 'वैरूप्यपौनरुक्त्येन' —वैरूप्यम् - அங்கக்குறைவு, அழகின்மை, விகாரத்தோற்றம்; पौनरुक्त्यम् - 'கூறியது கூறல் என்ற குற்றத்தின் தன்மை' என்பது பதப்பொருள். पुनरुक्तम्-கூறியது கூறல்: ஒரு தரம் கூறியதை மறுபடியும் பயனின்றிக் கூறுவது குற்றமாகக் காவ்யங்களிலே காணப்படுகின்ற தொன்று. லக்ஷ்மணன் சூர்ப்பணகைக்குச் செய்த वैरूप्यम, (पौनरुक्त्यम्)-கூறியது கூறல் என்ற குற்றம்போலாயிற்று: அதாவது, முன்பே விகாரமாக இருந்த சூர்ப்பணகைக்கு,லக்ஷ்மணன் செய்த அங்கபங்கம்,புதிதாகப்பெரியதொரு விகாரத்தன்மையை உண்டாக்கவில்லை என்பது கருத்து. ஆகவே அவள் கரனிடமும், ராவணனிடமும், 'विरूपितास्मि क्रूरेण लक्ष्मणेन महाभुज' எனமுறையிட இது தக்க காரணமல்ல என்பதும் புலனாகும். 14-ஆம் ஸர்க்கம் 9-ஆம் சுலோக உரையையும் காண்க. विकृष्टासिः पर्णशालां प्रविश्य-(கத்தியை உருவியவனைப் பர்ணசாலையில் புகுந்து) என்பது மல்லி நாதர் கொண்ட அந்வயம்.

सा वक्रनखधारिण्या वेणुकर्कशपर्वया ।

अङ्कुशाकारयाङ्गुल्या तावतर्जयदम्बरे ॥ ४१ ॥

सा - அவள், वक्र-नख-धारिण्या - வளைந்த நகங்களைத் தரிப்பதும், वेणुकर्कशपर्वया - மூங்கிற்கணுபோல் அழுத்தமான கணுக்களையுடையதும், अङ्कुश-आकारया - அங்குசம் போல் உருவமுடையதுமான, अंगुल्या - விரலினால், तौ -

அவர்களை, (ராமலக்ஷ்மணர்களை), अचरे-ஆகாயத்தில் (இருந்துகொண்டு), अतर्जयत् - அச்சுறுத்தினாள்.

(க-து) லக்ஷ்மணனால் தண்டிக்கப்பட்ட சூர்ப்பணகை ஆகாயத்தில் கிளம்பி, தன் விரலை அசைத்து ராமலக்ஷ்மணர்களை அச்சுறுத்தினாள்.

விரல் என்று கூறியது இங்குச் சுட்டு விரலை. விரலில் நகம் வளர்ந்து வளைந்து இருந்ததால் யானையை அடக்க உபயோகிக்கும் அங்குசம் போல் அது காணப்பட்டது. விரலிலுள்ள கணுக்கள் மூங்கிற் கணுபோல் கடினமாகத் தென்பட்டன. அங்குசம், கணுக்களுள்ள மூங்கில் பிடியுடனும் இரும்பு முனையுடனு மிருக்குமாதலால் பொருத்தமான உபமானமாயிற்று.

'तानतर्जयत इति पाठः; चुरादेः तस्यात्मनेपदित्वात्' अरुणगिरिः ॥ अतर्जयत् 'கரனை அழைத்து வந்து உங்களைக் கொல்லுகின்றேன்' என்பது போன்ற வாக்கியங்களைக் கூறி வெருட்டினாள் எனக் கொள்ளவேண்டும்.

प्राप्य चाशु जनस्थानं खरादिभ्यस्तथाविधम् ।
रामोपक्रममाचख्यौ रक्षःपरिभवं नवम् ॥ ४२ ॥

(सा) - அவள், आशु - வேகமாக, जनस्थानं - ஜனஸ்தானத்தை, प्राप्य - அடைந்து, खरादिभ्यः - கரன் முதலானவர்களுக்கு, रामोपक्रमम् - ராமரால் தொடங்கப்பட்டுள்ள, तथाविधम् - அத்தகைய, नवम् - புதிய, रक्षःपरिभवम् - ராக்ஷஸர்களுக்கு நேர்ந்துள்ள அவமானத்தை, आचख्यौ - கூறினாள்.

(க-து) சூர்ப்பணகை வேகமாக ஜனஸ்தானம் சென்று, முதன் முதலாக ராக்ஷஸர்களுக்கு உண்டான அவமானத்தைக் கரன் முதலியோருக்கு உரைத்தாள்.

சூர்ப்பணகை, தனக்கு நேர்ந்த அவமானம் ராக்ஷஸ இனத்திற்கே செய்யப்பட்டதாகக் கூறுவது கவனிக்கத்தக்கது.

ஜனஸ்தானம், தண்டகாரண்யத்திலுள்ள ஓர் இடம்: இது, ராவணராஜ்யத்தின் வடவெல்லையாயிருந்தது என்பர். ராவணனது படையின் ஒரு பகுதியானது இங்கு வைக்கப்பட்டிருந்தது. சூர்ப்பணகையின் ஒன்று விட்ட ஸஹோதரன் கரன். கொடியவன் என்பது அப்பதப்பொருள். ராவணனது தாய் கைகஸி. அவளது தங்கையான கும்பீநஸிக்கும், ராவணன் தந்தையான விச்ரவஸுக்கும் பிறந்தவன் கரன்; சூர்ப்பணகையின் கணவனை வித்யுஜ்ஜிஹ்வன் என்பவனை ஒரு போரில் ராவணன் அறியாமற் கொன்று விட்டான். அதனால் அவளுக்கு ஆறுதல் கூறி அண்ணனை கரனுடைய பாதுகாப்பில் இருக்கும்படி கூறினான். எனவே சூர்ப்பணகை இச்சம்பவத்தை முதலில் ராவணனிடம் கூறாது கரனுக்குத் தெரிவித்தாள். **खरादिभ्यः** - இங்குள்ள **आदि** - என்றசொல் கரனது சேனைத்தலைவர்களான தூஷணனையும் திரிசிரஸையும் குறிக்கும். தூஷணன்: யாவரையும் நிந்திப்பவன்; திரிசிரஸ் - மூன்று தலையுடையவன், என்பது பதப்பொருள்.

मुखावयवलूनां तां नैरृता यत्पुरो दधुः ।
रामाभियायिनां तेषां तदेवाभूदमङ्गलम् ॥ ४२ ॥

**नैरृताः** - அரக்கர்கள், **मुख-अवयव-लूनाम्** - முகத்திலுள்ள அவயவங்கள் (காது, மூக்கு) அறுக்கப்பட்ட, **ताम्**- அவளை, **पुरः** - (தங்களுக்கு) முன்பு, **दधुः** - வைத்தார்கள் (என), **यत्**-யாதொன்று இருக்கின்றதோ, **तद् एव**-அதுவே, **राम-अभियायिनाम्**-ராமரை எதிர்த்துச் செல்லுகின்ற, **तेषाम्**-

அவர்களுக்கு, **अमंगलम्** - அமங்களமானதாக, **अभूत्** - ஆயிற்று.

(க-து) சூர்ப்பணகையின் வார்த்தையைக் கேட்ட கரன் முதலிய அரக்கர்கள், அவள் முன் சென்று வழிகாட்ட, ராமரை எதிர்க்க வந்தனர். தங்களது யுத்த யாத்ரையில் முன் யோசனையின்றி, மூக்கறுந்த ஒருத்தியை முன் வைத்துக்கொண்டது, அரக்கர்களுக்குப் பெரிய அபசகுனமாக இருந்து, பின் வரப்போகும் அழிவைக் காட்டிற்று.

அங்கஹீனர்களைக் காண்பது அபசகுனமாகக் கருதப் படுகின்றது. **'अंगहीना च निन्दिता'** என சகுனார்ணவம் என்ற நூல் கூறும்.

उदायुधानापततस्तान् दृप्तान् प्रेक्ष्य राघवः ।
निदधे विजयाशंसां चापे सीतां च लक्ष्मणे ॥ ४४ ॥

**उदायुधान्** - உயர்த்தப்பட்ட ஆயுதங்களையுடையவர் களும், **आपततः** - எதிர்த்து வருகின்றவர்களும், **दृप्तान्** - கர்வ முடையவர்களுமான, **तान्** - அவர்களை, **प्रेक्ष्य** - பார்த்து, **राघवः** - ராமர், **विजय-आशंसाम्** - வெற்றிக்கான நம்பிக்கையை, **चापे** - தமது வில்லில், **निदधे** - வைத்தார். **सीताम् च** - ஸீதையையும், **लक्ष्मणे** - லக்ஷ்மணனிடத்தில், **निदधे** - ஒப் படைத்தார்.

(க-து) ஆயுதங்களை ஓங்கிக் கொண்டு, திமிருடன் வருகின்ற அரக்கர்களைப் பார்த்து, 'இவ்வில்லைக் கொண்டு இவர்களை எல்லாம் வென்று விடலாம்'மென உறுதி கொண்டார் ராமர். ஸீதையின் பாது காப்பைக் கருதி அவளைக் காக்கும்படி லக்ஷ்மணனுக்கு உத்தரவிட்டார்.

एको दाशरथिः कामं यातुधानाः सहस्रशः ।
ते तु यावन्त एवाजौ तावांश्च ददृशे स तैः ॥ ४५ ॥

**दाशरथिः** - ராமர், **एकः** - ஒருவர்தாம்; **यातुधानाः** அரக்கர்களோ, **सहस्रशः** - ஆயிரக்கணக்காக, **(आसन्)**-இருந்

தனர்; कामम् - இஃது உண்மைதான்; किन्तु - ஆனால், ते - அவ்வரக்கர்கள், यावन्तः - எத்தனை பேர் இருந்தனரோ, सः- அவரும், आजौ - யுத்தத்தில், तावान् एव - அத்தனைபோரா கவே, तैः - அவ்வரக்கர்களால், ददृशे - பார்க்கப்பட்டார், (கருதப்பட்டார்).

(க-து) அரக்கர் படையுடன் சண்டையிட்டவர் ராமர் ஒருவா தாம்; அரக்கர்கள் மொத்தம் பதினான்காயிரம் இருந்தனர். இஃது உண்மையே; ஆயினும் ராமர் ஒருவரே வெகு வேகமாகச் சண்டை யிட்டதால் அரக்கர்கள், தாங்கள் எத்தனை பேரோ அத்தனை ராமர் களே தம் எதிரில் நின்று சண்டையிடுவதாகக் கருதினர்.

இதினின்று ராமரது வேகமும் போர்த்திறனும் புல னாகும்.

'चतुर्दश सहस्राणि रक्षसाम् भीमकर्मणाम् । एकश्च रामो धर्मात्मा कथं युद्धम भविष्यति ।' [அரண்ய காண்டம், 24. 23] என்ற சுலோகத்திற்குப் பதில் போல் அமைந்துள்ளது இச் சுலோகம். இந்திரஜித்தின் வதத்திற்குப் பின் தம்மை எதிர்த்த அரக்கர்களுடன் ராமர் காந்தர்வ அஸ்த்ரத்தைப் பிரயோகித்துப் போர் செய்தார். அந்த அஸ்த்ரத்தின் மஹிமையால், ராமர் பல இடங்களிலும் இருப்பதாக அரக்கர்களுக்கு மாயத்தோற்றம் உண்டாயிற்று. ஒவ் வொரு ராக்ஷஸனும் தன்னெதிரிலிருப்பவன் ராமனே என மயங்கினான். அதனால் அரக்கர்கள் தம்மைத்தாமே அடித்துக் கொண்டனர். காளிதாஸர் இக்கருத்தை இச்சுலோகத்தில் வைத்துக் கூறியதாகவும் கருதலாம்.

'इति ते राक्षसाः सर्वे रामस्य सदृशान् रणे
अन्योन्यं कुपिता जघ्नुः सादृश्याद् राघवस्य तु ॥

'मोहिताः परमास्त्रेण गान्धर्वेण महात्मना ।
ते तु रामसहस्राणि रणे पश्यन्ति राक्षसाः ॥'

[யுத்த காண்டம் 93-24-25.]

கந்தர்வ அஸ்த்ரத்தின் பெருமையை, 'एतदस्त्रबलं दिव्यं मम वा त्र्यम्बकस्य वा' என [யுத்த 93-37] ராமரே புகழ்ந்து கூறுவதைக் காண்க.

असज्जनेन काकुत्स्थः प्रयुक्तमथ दूषणम् ।
न चक्षमे शुभाचारः स दूषणमिवात्मनः ॥ ४६ ॥

**अथ** - பிறகு, **शुभ-आचारः** - (யுத்ததர்மப்படி) நன்கு நடந்து கொள்ளுகின்ற, **सः** - அந்த, **काकुत्स्थः** - ராமர், **असज्जनेन** - அஸுரர்களால், **प्रयुक्तम्** - ஏவப்பட்ட, **दूषणम्** - தூஷணனை, **शुभ-आचारः** - நல்ல நடக்கையுள்ள அவர், **असज्जनेन** - துஷ்டர்களால், **प्रयुक्तम्** - கூறப்பட்ட, **आत्मनः दूषणम् इव** - தம்மைப் பற்றிய அவதூற்றைப் (பொறுக்காதது) போல், **न चक्षमे** - பொறுக்கவில்லை.

(க-து) கரனால் ஏவப்பட்டுவந்த தூஷணன் என்ற ராக்ஷஸ ஸேனைத்தலைவனைக் கண்டவுடன் ராமர் அவனை அலக்ஷ்யம் செய்யவில்லை. தம்மைப்பற்றிய அவதூற்றை நீக்க எவ்வாறு முயல்வாரோ அவ்வாறே தூஷணனையும் நீக்க முற்பட்டார்.

'शुभाचारः आत्मनः दूषणम् इव'-இங்கே ராமருக்கு அவரே உவமையாகக் கூறப்பட்டார். ஸீதையைப் பிறகு தியாகம் செய்ததற்கும், அவரிடமிருந்த இக்குணமே காரணமாயிற்று என்பதும் நினைவிற் கொள்ளலாம். ராமரை உபமானமாகக் கொள்ளாது, 'நன்னடக்கையுள்ள ஒருவன் தனக்கு அயோக்யர்களால் நேர்ந்த நிந்தனையைப் பொறுக்காதது போல' என்று பொருள் கூறினும் தகும். கவி, दूषण-என்ற சொல்லுக்குள்ள இரண்டு பொருளைக் கொண்டு, சமத்கார

மாக ஒரு கருத்தை இச்சுலோகத்தில் வெளியிட்டார். दूषण- தூஷணன்; மற்றொரு பொருள் :— அவதூறு.

तं शरैः प्रतिजग्राह खरत्रिशिरसौ च सः ।
क्रमशस्ते पुनस्तस्य चापात् सममिवोद्ययुः ॥ ४७ ॥

सः - அவர், तम् - அவனையும், खरत्रिशिरसौ च - கரன் திரிசிரஸ் இவர்களையும், शरैः - பாணங்களினால், क्रमशः - முறையே, प्रतिजग्राह - எதிர்த்தார் (அடித்தார்); तस्य - அவருடைய, ते - அந்த, शराः पुनः - பாணங்களோ, चापात् - வில்லினின்றும், समम् - ஒரே சமயத்தில், उद्ययुः इव - எழுந்தன போலும் (காணப்பட்டன).

(க-து) அம்மூன்று அரக்கர்களையும் ஒருவர் பின் ஒருவராக ராமர் எதிர்த்தார். பாணங்களும் ஒன்றன்பின் ஒன்றாகப் பிரயோகிக்கப் பட்டன. ஆயினும் ராமர் வெகுவேகமாக அம்புகளைத் தொடுத்ததால் எல்லாப் பாணங்களும் ஏககாலத்தில் வில்லினின்றும் புறப்பட்டன போல் பார்ப்போர் கண்களுக்குத் தோன்றின.

இதினின்றும் ராமரது கைத்திறன் புலனாகும். உரையாசிரியர்கள் பலரும், क्रमशः என்பதனுடன், प्रयुक्ताः अपि - என்ற சொற்களை வருவித்து, 'அம்புகள் முறையே விடப்படினும்' எனப் பொருளுரைப்பர்.

तैस्त्रयाणां शितैर्बाणैर्यथापूर्वविशुद्धिभिः ।
आयुर्देहातिगैः पीतं रुधिरं तु पतत्रिभिः ॥ ४८ ॥

शितैः - கூரானவைகளும், देह-अतिगैः-(அரக்கர்களின்) உடலைக் (கிழித்தபின்) கடந்து செல்லுகின்றவைகளும், यथापूर्व-विशुद्धिभिः - முன்போல் நிர்மலமானவைகளுமான, तैः - அந்த, बाणैः - பாணங்களால், त्रयाणां - அம் மூவரின், आयुः - உயிர், पीतम् பானம் செய்யப்பட்டது; रुधिरं तु -

ரத்தமோ, पतत्रिभिः - பறவைகளால், पीतम् - குடிக்கப்பட்டது.

(க-து) ராமரால் பிரயோகிக்கப்பட்ட அக்கூரான பாணங்கள் கரன், தூஷணன், திரிசிரஸ் இவர்களின் உடல்களைக் கிழித்துக் கொண்டு வெகு தொலைவில் விழுந்தன. ஒரு நொடியில் உடல்களை ஊடுருவிச் சென்றதால் அவ்வம்புகளில் ரத்தம் படவில்லை. எனவே அவைகள், பிரயோகிக்கப்படுவதற்கு முன்இருந்தவாறே நிர்மலமாக இருந்தன. அப்பாணங்கள் அரக்கர்களின் உயிரைக் குடித்தன. அவர்களின் ரத்தத்தைப் பறவைகள் பருகின.

पीतम् - என்பதனால் பாணம் பட்டமாத்திரத்திலேயே அவர்கள் இறந்தனர் என்பது தெளிவு. தேஹத்தை நொடியில் கிழித்துக் கொண்டு சென்றதன்காரணம், शितैः - என்ற விசேஷணத்தால் குறிப்பிடப்பட்டது.

तस्मिन् रामशरोत्कृत्ते बले महति रक्षसाम् ।
उत्थितं ददृशेऽन्यच्च कबन्धेभ्यो न किंचन ॥ ४९ ॥

रामशर-उत्कृत्ते - ராமரது பாணத்தினால் துண்டிக்கப்பட்ட, तस्मिन् - அந்த, महति - பெரிய, रक्षसां बले - ராக்ஷஸ ஸேனையில், कबन्धेभ्यः - தலையற்ற உடல்களைக் காட்டிலும், अन्यत् किञ्चन च - வேறு எதுவும், उत्थितम् - எழுந்ததாக, न ददृशे - காணப்படவில்லை.

(க-து) ராமர் கரனது ஸேனை முழுவதையும் அழித்தார். தலைகள் கீழே விழுந்தபின்பும் வீரர்களின் தலையற்ற உடல்கள் மாத்திரம் சிறிது நேரம் உயிரிருந்ததால் எழுந்து நின்றன. முழுஉடலுடனும் உயிரோடும் எழுந்து நின்றவர் யாருமில்லை.

தலை துண்டிக்கப்பட்ட பின்பும் உடல் சிறிது நேரம் உயிருடனிருந்து துள்ளும் என்பதை, नृत्यत्कबन्धं समरे ददर्श [7. 51]. எனக் கவி முன்பும் கூறினார்.

கர யுத்தத்தில் பதினான்கு ஆயிரம் ராக்ஷஸர்கள் கொல்லப்பட்டதாக ஸ்ரீமத்ராமாயணம் கூறும்.

**चतुर्दश सहस्राणि रक्षसां कामरूपिणाम् ।**

**खरदूषणमुख्यानां निहतानि महामृधे॥**[அரண்யகாண்டம். 30. 31] என்பதைக் காண்க.

सा बाणवर्षिणं रामं योधयित्वा सुरद्विषाम् ।

अप्रबोधाय सुष्वाप गृध्रच्छाये वरूथिनी ॥ ६० ॥

**सा** - அந்த, **सुरद्विषां वरूथिनी** - அரக்கர் படை, **बाणवर्षिणम्** - அம்புமாரி பொழிகின்ற, **रामम्** - ராமரை, **योधयित्वा** - போரிடச் செய்தபின், **गृध्रच्छाये** - கழுகுகளின் நிழலில், **अप्रबोधाय** - திரும்பவும் (எழாமற் பொருட்டு) எழாதவாறு, **सुष्वाप** - உறங்கியது.

(க-து) அவ்வரக்கர் படை, இவ்வாறு ராமரைப் போரிடச் செய்து, அவரால் கொல்லப்பட்டுப் போயிற்று.

'அழிந்தது' என்று கூறுவதற்குப் பதிலாகத் 'திரும்பி எழாமைப் பொருட்டு உறங்கியது' என்றார். இவ்வழிவு, அப்படை தானே தேடிக் கொண்டதொன்று என்பதும் படையை எழுவாயாகக் கூறியதால் விளங்கும். இறந்த அரக்கர்களின் ஊனை உண்ண ஏராளமான கழுகுகள் வட்டமிட்டதால் யுத்த களத்தில் நிழலுண்டாயிற்று....छाये-என்ற நபும்ஸக லிங்கச் சொல், நிழலின் அடர்த்தியைக் காட்டியதாய், அதன் மூலம் வட்டமிட்ட கழுகுகளின் மிகுதியையும் உணர்த்தியது.

'**अत्र सुरतपरिश्रान्तनायिकासाम्यध्वनिः**' என்பர் நாராயணர்.

राघवास्त्रविदीर्णानां रावणं प्रति रक्षसाम् ।

तेषां शूर्पणखैवैका दुष्प्रवृत्तिहराभवत् ॥ ६१ ॥

**शूर्पणखा एका एव** - சூர்ப்பணகை ஒருத்தியே, **रावणं-प्रति** - ராவணனுக்கு, **राघव-अस्त्र-विदीर्णानाम्** - ராமரது பாணங்களால் கொல்லப்பட்ட, **तेषाम्** - அந்த, **रक्षसाम्** - ராக்ஷஸர்களைப் பற்றிய, **दुष्प्रवृत्ति हरा**-கெட்ட செய்தியைக் கொண்டு போகின்றவளாக, **अभवत्** - இருந்தாள்.

(க-து) கரன் முதலான அரக்கர்களின் அழிவை, ராவணனுக்குத் தெரிவித்தவள் சூர்ப்பணகையே யன்றி வேறு யாருமில்லை. மற்ற அரக்கர் எல்லோரும் இறந்ததால் இந்த இழவுச் செய்தியை அவளே கொண்டு சென்றாள்.

- வால்மீகி ராமாயணம், சூர்ப்பணகை செல்வதற்கு முன்பே அகம்பனன் என்ற அசுரன் ராவணனிடம் கர வதத்தைச் சொல்லியதாகத் தெரிவிக்கின்றது.

निग्रहात् स्वसुराप्तानां वधाच्च धनदानुजः ।
रामेण निहितं मेने पदं दशसु मूर्धसु ॥ ५२ ॥

**स्वसुः** - (தன்) தங்கையை, **निग्रहात्** - தண்டித்ததனாலும் **आप्तानाम्** - உறவினர்களை, **वधात् च**-கொன்றதனாலும், **रामेण**-ராமரால், **दशसु मूर्धसु** - (தனது) பத்துத்தலைகளிலும், **पदम्**-பாதத்தை, **निहितम्** - வைக்கப்பட்டதாக, **धनदानुजः** - ராவணன், **मेने** - கருதினான்.

(க-து) தனது தங்கைக்கு அங்கபங்கம் செய்ததையும், உறவினர்களான கரன் முதலியோரைக் கொன்றதையும் ராவணன், தன் பத்துத் தலைகளிலும் ராமர் அவரது பாதத்தை வைத்து அவமதித்ததாக எண்ணினான்.

'பத்துத் தலைகளிலும்' என்பதால், ராமர் செய்த அவமானத்தை எத்துணைப் பெரியதாக ராவணன் கருதினான் என்பது புலனாகும். **आप्त**ர்கள் - என்றது கரன் முதலியவர்களை. **धनदानुजः** - குபேரன் தம்பி: ராவணன். ராவணனது தந்தையான விச்ரவஸ் முனிவருக்கு பரத்வாஜ முனிவரின்

பெண்ணான தேவவர்ணினியிடம் பிறந்தவன் குபேரன். இருவருக்கும் தந்தை விச்ரவஸ் முனிவரே யாதலால், ராவணன் குபேரனது தம்பியாகின்றான்.

रक्षसा मृगरूपेण वञ्चयित्वा स राघवौ।
जहार सीतां पक्षीन्द्रप्रयासक्षणविघ्नितः ॥ ५३ ॥

**सः** - அவன், **मृग-रूपेण** - மானினது வடிவமுள்ள, **रक्षसा** - அரக்கன் மாரீசனாலே, **राघवौ** - ராமலக்ஷ்மணர்களை, **वञ्चयित्वा** - ஏமாற்றிவிட்டு, **पक्षीन्द्र-प्रयास-क्षण-विघ्नितः**-சடாயுவின் முயற்சியினால் ஒரு க்ஷணமே இடையூறு உற்றவனாக, **सीताम्** - ஸீதையை, **जहार** - கவர்ந்து சென்றான்.

(க-து) மாரீசனைப் பொன்மான் வடிவில் வரச்செய்து, ராமலக்ஷ்மணர்களை ஏமாற்றிவிட்டு ஸீதையைக் கவர்ந்து சென்றான் ராவணன். ஜடாயு அவனைத் தடுத்துப் போரிட்டது, அவனுக்குச் சிறிது நேரமே தடையை யுண்டாக்கியது.

**पक्षीन्द्रः** - பறவை அரசு: இங்கே ஜடாயு. பலகேசங்களைச் சேர்த்து அமைக்கப்பட்ட ஜடைபோல் திரண்ட ஆயுளுடையவன் என்றும் இப்பதத்திற்குப் பொருள் கூறுவர். சூரியனுடைய ஸாரதியான அருணனது புத்திரர்; ஸம்பாதியின் தம்பி. தசரதருக்கு உயிர்த்தோழராக இருந்தவர்; ராமர் பஞ்சவடிக்குச் செல்லும் வழியில் ஜடாயுவைக் காணவும், அவர் தாம் தசரதரது நண்பர் எனக் கூறி அன்புபாராட்ட, ராமர் அவரது அன்பைக் கண்டு வியந்து ஆலிங்கனம் செய்து, ஆபத்துற்ற காலத்தில் ஸீதையைக் காக்கவேண்டுமென அவரை வேண்டினார். ஜடாயுவும், ராவணனோடு போரிட்டு அடிபட்ட பின்பும் இறந்துவிடாமல் ராமலக்ஷ்மணர்களுக்குச் செய்தியைச் சிறிதளவு கூறிய பின்பே உயிர் துறந்தார்.

கவி, இச் சுலோகத்தில் எவ்வளவு விஸ்தாரமான வரலாற்றை எவ்வளவு சுருக்கமாகக் கூறுகின்றார் என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு சுருக்கியதன் காரணம், கதாநாயகனது சரித்ரத்தைக் கூறும் பொழுது இடையில் ராவணன் ஸந்நியாசி வேடத்தில் வந்தது, ஜடாயுவுடன் போரிட்டது முதலியவற்றை விரிவாகக் கூறின், முக்யமான வரலாறு தொடர்பின்றி நிற்க நேருமாதலால் ஒரே சுலோகத்தில் இவ்வரலாறு முழுவதையும் அடக்கிவைத்தார். அடுத்து வரும் சுலோகத்தில் ராமலக்ஷ்மணர்களே எழுவாயாக வருவதைக் கவனிக்க.

'अत्र प्रकृतस्य नायकव्यापारस्य विच्छेदे(न) वीररसविच्छेदो मा भूदिति कविकुलचक्रवर्तिना नात्यन्तरसोपयोगी रामायणे प्रसिद्धो रावणमारीचजटायुवृत्तान्तः सूचनीमात्रेण प्रदर्शितः' अरुणगिरिः ।

तौ सीतान्वेषिणौ गृध्रं लूनपक्षमपश्यताम् ।
प्राणैर्दशरथप्रीतेरनृणं कण्ठवर्तिभिः ॥ ५४ ॥

सीता-अन्वेषिणौ - ஸீதையைத் தேடுகின்றவர்களான, तौ - ராமலக்ஷ்மணர்கள், लूनपक्षम् - அறுக்கப்பட்ட சிறகுடையவரும், कण्ठ-वर्तिभिः - நெஞ்சிலே நிற்கின்ற, प्राणैः - உயிரினால், दशरथ-प्रीतेः - தசரதருடைய அன்பின், अनृणम्- கடனினின்றும் நீங்கிய, गृध्रम्-முது ஜடாயுவை, अपश्यताम्- கண்டனர்.

(க-து) ஸீதையை ஆச்ரமத்தில் காணாது தேடிவந்த ராமலக்ஷ்மணர்கள், இறக்கும் தறுவாயிலிருந்த ஜடாயுவைக் கண்டனர். தம்மிடம் தசரதர் வைத்த அன்பிற்குத் தக்கவாறு உபகாரம் செய்தாலன்றி நண்பருக்குத் தாம் பட்டுள்ள கடமை நீங்கப்பெறாதலால் கஷ்டப்

பட்டு நெஞ்சிலே உயிரை வைத்துக் கொண்டு ராம லக்ஷ்மணர்களின் வரவை எதிர் நோக்கி நின்றார்.

**अनृणम्** - ராமரைக் காண்பதற்கு முன் ஜடாயு உயிரை விட்டிருந்தால், ராமருக்கு ஸீதையைப் பற்றிய வரலாறு கூறப்படாமற் போம். தசரதர் புத்திரரான ராமருக்கு உதவி செய்யாவிட்டால் நண்பர் திறத்தில் கடன் நீங்க வழி இராது. எனவே உயிரை வைத்துக் கொண்டு அதன் மூலம் கடனற்றவரானார் ஜடாயு.

**लूनपक्षम्** - ராவணன் ஜடாயுவின் சிறகுகளையும் கால்களையும் இருவிலாப் புறங்களையும் வெட்டியதாக ராமாயணம் கூறும். 'तस्य व्यायच्छमानस्य रामस्यार्थे स रावणः। पादौ पक्षौ च पार्श्वौ च खड्गमुद्धृत्य सोऽच्छिनत्' [ஆரண்ய. 51-42] என்பதைக் காண்க.

स रावणहृतां ताभ्यां वचसाचष्ट मैथिलीम् ।
आत्मनः सुमहत् कर्म व्रणैरावेद्य संस्थितः ॥ ५५ ॥

**सः** - அந்த ஜடாயு, **मैथिलीम्** - ஸீதையை, **रावण-हृताम्**- ராவணனால் கவரப்பட்டவளாக, **ताभ्याम्** - அவ்விருவருக்கும், **वचसा** - சொற்களால், **आचष्ट** - கூறினார்; **आत्मनः** - தமது, **सुमहत् कर्म** - பெருஞ் செயலை, **व्रणैः** - (தன் உடலி லுள்ள) காயங்களினால், **आवेद्य** - தெரிவித்து, **संस्थितः** - இறந்தார்.

(க-து) 'ராவணன் ஸீதையைக் கவர்ந்து சென்றான்' என்ற செய்தியை ஜடாயு சொற்களால் கூறினார். ஆனால் தான் ராவணனுடன் செய்த பெரும் போரைத் தாமே கூறிக்கொள்ளவில்லை. ஜடாயுவின் உடலிலிருந்த வெட்டுக் காயங்களைக் கொண்டு ராமர், ராவணனுடன் நடந்த போரை ஊகித்தறிந்தார்.

तयोस्तस्मिन्नवीभूतपितृव्यापत्तिशोकयोः ।
पितरीवाग्निसंस्कारात् परा ववृतिरे क्रियाः ॥ ५६ ॥

**नवीभूत-पितृ-व्यापत्ति-शोकयोः** - *புதுப்பிக்கப் பெற்ற தந்தையின் மரணதுக்கமுடைய,* **तयोः** - *ராம லக்ஷ்மணர்களுக்கு,* **तस्मिन्** - *அந்த ஜடாயுவின் விஷயத்தில்,* **पितरि इव** - *தந்தை தசரதரிடம் (செய்வது) போன்றே,* **अग्निसंस्कारात्** - *தீயிடுதல் தொடங்கி,* **पराः क्रियाः** - *உத்தரக் கிரியைகள் எல்லாம்,* **ववृतिरे** - *நிகழ்ந்தன.*

*(க-து) தந்தையின் நண்பரான ஜடாயுவின் மரணத்தைக் கண்டபொழுது, ராம லக்ஷ்மணர்களுக்கு, காலத்தினால் மறந்திருந்த துக்கம் மறுபடியும் புதுப்பிக்கப்பட்டதாயிற்று. தந்தைக்குச் செய்வது போன்றே அக்னி ஸம்ஸ்காரம் தொடங்கி எல்லா உத்தரக் கிரியைகளையும் ஜடாயுவுக்கு ராம லக்ஷ்மணர்கள் செய்தனர்.*

**तयोः** - *என்பதை* **क्रियाः** - *என்பதுடன் அன்வயிக்க, ராம லக்ஷ்மணர் செய்த உத்தரக்கிரியைகள் என்று பொருள்.*

*சுருக்கிக் கூறுவதை முக்யமாகக் கருதிய கவி, பொருளைத் தெளிவான வாக்யத்திலே கூறவில்லை.*

**नवीभूत....शोकयोः** - *தசரதர் மரித்துப் பதின்மூன்று வருஷங்களுக்குப் பின் ஜடாயு மரணம் நேர்ந்தது. காலங் கடந்ததனால் தசரதரது மரணதுக்கத்தைச் சிறிதே மறந்திருந்தனர் ராம லக்ஷ்மணர்கள். ஜடாயுவின் மரணம் தந்தையின் மரணத்திற் கொப்பானதாக இருந்ததால் தந்தையின் மரணத்தையும் நினைவூட்டியது; அதனால் துக்கமதிகமாயிற்று.* **क्रियाः ववृतिरे** - *கிரியைகள் என்றது, ஸம்ஸ்காரம், தர்ப்பணம் முதலியவற்றை.* 'एवमुक्त्वा चितां दीप्तामारोप्य पतगेश्वरम् । ददाह रामो धर्मात्मा स्वबन्धुमिव दुःखितः ॥ रोहिमांसानि चोद्धृत्य पेशीकृत्वा महायशाः । शकुनाय ददौ रामो रम्ये हरितशाद्वले ॥ ततो गोदावरीं गत्वा नदीं नरवरात्मजौ । उदकं चक्रतुः तस्मै गृध्रराजाय तावुभौ ॥ *[ஆரண்ய. ஸ. 68, 31-33-35.] என்பதை நோக்க.*

वधनिर्धूतशापस्य कबन्धस्योपदेशतः ।
मुमूर्च्छ सख्यं रामस्य समानव्यसने हरौ ॥ ६७ ॥

**वध-निर्धूत-शापस्य** - *(ராமர்) கொன்றதனால் சாபம் நீங்கப்பெற்ற*, **कबन्धस्य** - *கபந்தனது*, **उपदेशतः** - *உபதேசத்தின்படி*, **रामस्य** - *ராமருக்கு*, **समान व्यसने** - *(தம்மோடு) ஒத்த கஷ்டமுடைய*, **हरौ** - *வானரன் ஸுக்ரீவனிடத்தில்*, **सख्यम्** - *நட்பு*, **मुमूर्च्छ** - *வளர்ந்தது (நேர்ந்தது).*

*(க-து) வழியிலே வந்த கபந்தனைக் கொன்றார் ராமர். அதனால் சாபம் நீங்கப்பெற்ற அவன், ஸுக்ரீவனுடைய நட்பைப் பெற்று ஸீதையை யடையும்படியான உபாயத்தை ராமருக்குக் கூறவும், அவர் ஸுக்ரீவனைத் தேடிச் சென்று அவனது நட்பைப் பெற்றார்.*

கபந்தன் வரலாறு. முன்பு *தனு என்பவனுக்கு விசுவாவஸு என்ற ஒரு மகன் மிக அழகுடன் இருந்தான். அவன் தனது துர்ப்புத்தியால் அரக்கனது உருவுடன் மஹரிஷிகளை அச்சுறுத்தி வந்தான். ஒருசமயம் விகாரமான வடிவில் ஸ்தூலசிரஸ் என்ற முனிவரிடம் குற்றமிழைக்க, அவர் அவ்விகாரவடிவுடனே இருக்கும்படி சாபமிட்டார். அவன் முனிவரின் அடிபணிந்து வேண்டவும் அவர், 'ராமர் உனது தோள்களை வெட்டி உடலைக் கொளுத்தும் போது ராக்ஷஸ உருவம் நீங்கும்' எனச் சாபமுடிவும்கூறினர். பிரம்மனைநோக்கித் தவமியற்றி நீண்ட ஆயுளைப் பெற்றுக் கர்வம் கொண்டு இந்திரனோடு போர்புரிய, இந்திரன் வஜ்ராயுதத்தினால் ஓங்கி மண்டையிலடிக்கவும் அவனது தலையும் தொடைகளும் உடலிலே புதைந்தன. 'நீண்ட ஆயுளைப் பெற்றுள்ள நான் உணவின்றி எவ்வாறு வாழ்வது' என இந்திரனைக் கேட்க, இந்திரன் ஒரு யோஜனை தூரம் நீளமானகைகளைக் கொடுத்து, வயிற்றிலே வாயையும் அமைத்தான். கபந்தன்*

இடம் விட்டு நகராது தன் கைகளைக் காட்டிலே செலுத்தித் துழாவிக் கையிலகப்பட்டதை வயிற்றிலடைத்துக் கொண்டு வந்தான். தலையற்ற உடல்போல் தோற்றமுடையவனாக இருந்ததால் அவன் கபந்தன் என்ற பெயர் பெற்றான். இவன் பூர்வ ஜன்மத்தில் ஒரு வித்யாதரன் என்பர்.

ராமர் லக்ஷ்மணனுடன் வரும் பொழுது கபந்தன் தன் கைகளை நீட்டி அவர்களை இழுத்து வாயில் போட்டுக் கொள்ள முயன்றான். உடனே ராம லக்ஷ்மணர்கள் அவனது தோளை வெட்டவும் அவன் தனது உணர்வு பெற்றுத் தன்னைத் தகனம் செய்யும்படி கேட்டுக் கொண்டான். தகனம் செய்தபின் தேவ வடிவம் பெற்றுத் திவ்ய ஞானத்தினால் ஸீதையை ராவணன் கவர்ந்து சென்றான் எனக் கூறி ஸுக்ரீவனது நட்பைப் பெற்று ஸீதையை மீட்க உபாயம் கூறினான்.

वधनिर्धूत - என்பதால் கபந்தனுக்கு ராமர் செய்த உபகாரம் கூறியதாயிற்று. उपदेशतः - கபந்தன் செய்த பிரத்யுபகாரம் - ஸுக்ரீவனிடம் செல்லும்படி அவன் கூறியது. समानव्यसने - ஸுக்ரீவனும் ராமர் போல் ஒத்த வகையான கஷ்டங்களை யுடையவன்; ராஜ்யமிழந்தவன்; வாலி கவர்ந்ததால் மனைவியைப் பறி கொடுத்தவன். இச்சுலோகத்தில் கவி, ப்ரபுசக்தியற்று இருந்த ராமருக்கு, பிரபுசக்திகிடைத்த வகையைக் கூறினார்.

'अनेन श्लोकेन रावणमभियास्यतो नायकस्य प्रभुशक्तिहीनस्य हीनशक्तिपूरणं नाम प्रकरणार्थ उक्तः । अत्रापि महत् प्रकरणं संक्षिप्तम्'–अरुणगिरिः । இச்சுலோகத்தின் முதற் பாதியுடன் ஆரண்ய காண்டக் கதை முடிவுற்றது.

स हत्वा वालिनं वीरस्तत्पदे चिरकाङ्क्षिते ।
धातोः स्थान इवादेशं सुग्रीवं सन्न्यवेशयत् ॥ ५८ ॥

**वीरः सः** - *வீரரான ராமர்*, **वालिनम्** - *வாலியை*, **हत्वा**- *கொன்றபின்*, **चिरकाङ्क्षिते** - *வெகுகாலமாக விரும்பப்பட்ட*, **तत्पदे** - *அவனது இடத்தில்*,-**धातोः** - *தாதுவின்*, **स्थाने** - *இடத்தில்*, **आदेशम् इव** - *ஆதேசத்தை (வைப்பது) போல*,- **सुग्रीवम्** - *ஸுக்ரீவனை*, **संन्यवेशयत्** - *அமரச்செய்தார்.*

*(க-து) ஸுக்ரீவனது அண்ணனை வாலியைக் கொன்று, ஸுக்ரீவனை வானரர்களின் அரசனாக அபிஷேகம் செய்வித்தார்.*

*சாபத்தினால் பெண் வடிவம் பெற்றிருந்த ரிக்ஷரஜஸ் என்ற குரங்கிற்குப் பிறந்த ஸஹோதரர்கள் வாலியும் ஸுக்ரீவனும். ஸுக்ரீவனை இளவரசனாகச் செய்து வாலி கிஷ்கிந்தையில் அரசாண்டு வருகையில், துந்துபி என்ற அஸுரனது மகன் மாயாவி என்பவனுடன் சண்டையிட நேர்ந்தது. மாயாவி தோற்று ஒரு மலைக்குகையில் புகவும், வாலி தன் தம்பியை வாசலில் காவல் வைத்து விட்டு, மாயாவியைத் தொடர்ந்து குகையில் புகுந்தான். வாசலில் காவல் புரிந்த ஸுக்ரீவன், ஒரு மாதத்திற்குப்பின் குகையிலிருந்து ரத்தம் வருவதைக் கண்டு, வாலி கொல்லப்பட்டானென்று எண்ணி, ஒரு பாறையினால் குகையின் வாயிலை மூடிவிட்டுக் கிஷ்கிந்தைக்கு வந்து அரசனாக முடிசூட்டிக் கொண்டான். சிறிது நாளைக் கெல்லாம் மாயாவியைக் கொன்று விட்டு வெளிவந்த வாலி, குகையின் வாயில் மூடியிருந்ததையும், ஸுக்ரீவன் அரசாள்வதையும் கண்டு, தம்பி வேண்டுமென்றே தனக்குத் துரோகம் செய்ததாக எண்ணி அவனை அடித்துத் துரத்தியதுடன் அவன் மனைவி ருமைஎன்பவளையும்தன்னிடமே நிறுத்திக் கொண்டான். ஸுக்ரீவன், வாலி வரமுடி*

யாததான மதங்காச்ரமத்தில் தங்கி இருந்தான், தக்க காரணமின்றித் தன்னைத் துரத்திய வாலியின் ராஜ்யத்தை யும், தன் மனைவியையும் அடையவேண்டுமென விரும்பிய ஸுக்ரீவனுக்கு ராமரது உதவி கிட்டிய பொழுது அவன் கிஷ்கிந்தையின் அரசுபெற்றான். धातोः स्थाने इव आदेशम् - தாது ஒருவினையின் பகுதி. आदेशः - ஒரு சொல்லின் இடத் திலே வருகின்ற மற்றொருசொல். ஒரு வினையடிக்குப் பதி லாக மற்றொரு சொல்லை வருப்பர் இலக்கண நூலாசிரியர் கள். உதாஹரணமாக अस् - என்ற வினையடிக்கு भू - என்ற தாது, சில இடங்களிலே ஆதேசமாக வருகின்றது. அவ் வாறு ஆதேசமாக வந்த சொல்லுக்கு மற்றொரு ஆதேசம் கிடையாது. மேலும், ஆதேசம் என்பது ஒரு சொல்லை அறவே ஒழித்து விட்டு அதனிடத்தில் வருவதாகும். எனவே, 'தாதுவின் இடத்தில் ஆதேசம் வைக்கப்படுவது போல்' வாலியை ஒழித்து அவன் இடத்தில் ஸுக்ரீவன் அமர்த்தப்பட்டான். வாலிக்குத் தாதுவும், ஸுக்ரீவனுக்கு ஆதேசமும் உபமானங்கள். உவமையினால் ஸுக்ரீவன், அசைக்க முடியாதநிலை பெற்றுள்ளான் என்பதும், வாலியை ஒழித்த பின்பே அவனது இடத்தில் வந்தான் என்பதும் பெறப்படும். 'शत्रुवदादेशः' - என்பதைக் கவனிக்க.

च्चिरकांक्षिते - என்ற விசேஷணத்தால், வானர ராஜ்யம் எளிதில் கிடைக்கப் பெறுவதொன்றன்று என்பது புலனா கும்; 'उपमया त्वविकलतदैश्वर्यप्राप्तिः ध्वन्यते' अरुणगिरि ॥ नह्यस्तेर्भूरिति भ्वादेशे प्राप्ते तस्यादेशान्तरप्राप्त्या प्रच्युतिः' नारायणः ।

इतस्ततश्च वैदेहीमन्वेष्टुं भर्तृचोदिताः ।

कपयश्चेरुरार्तस्य रामस्येव मनोरथाः ॥ ५९ ॥

**वैदेहीम्** - ஸீதையை, **अन्वेष्टुम्** - தேடுவதற்காக, **भर्तृ-चोदिताः** - (தங்கள்) அரசனால் ஏவப்பட்ட, **कपयः** - வானரர்கள், **आर्तस्य** - வருத்தமடைந்துள்ள, **रामस्य** - ராமருடைய, **मनोरथाः इव** - விருப்பங்கள் போல், **इतस्ततः च** - இங்குமங்கும் - **चेरुः** - திரிந்தனர்.

(க-து) ஸீதையைத் தேடும்படி ஸுக்ரீவனால் ஆணையிடப்பட்ட வானரர்கள், ஸீதையைத் தேடி எங்கும் திரிந்தனர்.

குரங்குகளை ஸீதையின் பிரிவினால் வருந்திய ராமரின் விருப்பங்களோடு ஒப்பிட்டதன் காரணம்: மனோரதத்திற்கு விஷயமாகாதது எதுவுமில்லை. அதுபோல் வானரர்கள் போக முடியாத இடம் ஒன்று மில்லை என்பதை உணர்த்த. 'மனோரதங்கள் போலுள்ள' என உத்ப்ரேக்ஷையாகவும் கொள்ளலாம்.

प्रवृत्तावुपलब्धायां तस्याः संपातिदर्शनात् ।
मारुतिः सागरं तीर्णः संसारमिव निर्ममः ॥ ६० ॥

**सम्पाति-दर्शनात्** - ஸம்பாதியைக் கண்டதன் மூலம், **तस्याः** - ஸீதையின், **प्रवृत्तौ** - செய்தியானது, **उपलब्धायाम्** - கிடைக்கப் பெற்ற பொழுது, **मारुतिः** - வாயுகுமாரரான, ஹனுமார், **निर्ममः** - ஆசைவிட்ட ஒருவன், **संसारम् इव** - பிறவியை(க்கடப்பது) போல, **सागरम्** - கடலை, **तीर्णः** - கடந்தார்.

(க-து) தென்திசை சென்ற ஹனுமார் முதலியவானரர்கள், ஜடாயுவின் அண்ணனான ஸம்பாதியைக் கண்டனர். ஸம்பாதியிடமிருந்து ஸீதையிருக்குமிடமறிந்தபின் ஹனுமார், ஆசை துறந்த ஒருவன் பிறவிக் கடலைக் கடப்பதுபோல், தென்கடலைக் கடந்து லங்கையை அடைந்தார்.

இந்த சுலோகத்தில் முதற் பகுதியுடன் கிஷ்கிந்தா காண்டக் கதை முடிகின்றது.

ஸம்பாதி ஸீதையைப் பற்றிக் கூறியது:

'तरुणी रूपसंपन्ना सर्वाभरणभूषिता। ह्रियमाणा मया दृष्टा रावणेन दुरात्मना। तां तु सीतामहं मन्ये रामस्य परिकीर्तनात्। अध्यास्ते नगरीं लंकां रावणो नाम राक्षसः। इतो द्वीपे समुद्रस्य संपूर्णे शतयोजने। तस्मिन् लंका पुरी रम्या निर्मिता विश्वकर्मणा॥ तस्यां वसति वैदेही दीना कौशेयवासिनी। इहस्थोऽहं प्रपश्यामि रावणं जानकीं तथा' [கிஷ்கிந்தாகாண்டம். 58.]

निर्ममः - எனது என்ற எண்ணமற்றவன்; பற்றற்றவன். பற்றின்மை தனியே மோக்ஷத்திற்குக் காரணமாகாதாகையால், परमात्मनि यो रक्तः विरक्तोऽपरमात्मनि - [பரமனிடத்தில் அன்பு வைத்தவன் பரமனைத் தவிர்த்த பிற பொருள்களில் பற்றை விடுவான்] என்பதற்கேற்ப, பற்றின்மை என்றது, பகவானிடம் கொண்ட பேரன்பினால் உலகப் பொருளில் வந்த வைராக்யத்தை. निर्ममः - என்பதற்கு உலகப்பொருளில் ஆசையை விட்டுப் பகவானிடத்தில் பேரன்பு பூண்டவன் என்ற வரையில் பொருள் கொள்ள வேண்டும். உபமேயமாக உள்ள ஹநுமானது ராமபக்தியும் மிகப் பிரஸித்தமானதே. காளிதாஸர், பற்றின்மையுடன் கூடிய பகவத் பக்தி முக்திக்குக் காரணமாகின்றதென்பதை, त्वय्यावेशितचित्तानां त्वत्समर्पितकर्मणाम्। गतिस्त्वं वीतरागाणामभूयस्सन्निवृत्तये॥ [ரகு 10-27] என்பதில் கூறியுள்ளதைக் கவனிக்க. संसारः - பிறப்பும் இறப்பும்.

दृष्टा विचिन्वता तेन लङ्कायां राक्षसीवृता।
जानकी विषवल्लीभिः परीतेव महौषधिः॥ ६१॥

**लङ्कायाम्** - லங்கையில், **विचिन्वता** - தேடுகின்ற, **तेन** - ஹநுமாரால், **राक्षसीवृता** - அரக்கியரால் சூழப்பட்டுள்ள **जानकी** - ஸீதை,—**विषवल्लीभिः** - விஷக்கொடிகளால், **परीता**- சூழப்பட்டுள்ள, **महौषधिः इव** - ஸஞ்ஜீவினிக் கொடி (பார்க்கப்படுது) போல், **दृष्टा** - பார்க்கப்பட்டாள்.

(க து) லங்கைக்குச் சென்ற ஹநுமார், ராவணனது அசோக வனத்தில் ராக்ஷஸிகளால் சூழப்பெற்றுள்ள ஸீதையைக் கண்டார். இந்நிலையிலே உள்ள ஸீதை, விஷக்கொடிகளால் சூழப்பட்டுள்ள ஸஞ்ஜீவினிக் கொடிபோல் காணப்பட்டாள்.

ஸீதைக்கு உவமை ஸஞ்ஜீவினி; அரக்கியருக்கு விஷக்கொடிகள். விஷக் கொடிகளினிடையிலிருப்பினும் ஸஞ்ஜீவினி தனது குணத்தை இழக்காதது போல் அச்சுறுத்தும் அரக்கியரின் மத்தியிலிருக்கும் பொழுதும், தனது தன்மை மாறாது இருந்தாள் ஸீதை என்பதும், ஸீதையின் பிற உயர்ந்த குணங்களும் உவமையால் குறிக்கப்பட்டன. '**यामोषधीमिवायुष्मन्नन्वेषसि महावने-सा देवी**' என ஜடாயு ஸீதைக்கு உவமையாகக் கொண்ட ஸஞ்ஜீவினியைக் கவி இங்கே உபமானமாகக்கூறியதைக் காண்க, ஸீதையைக் காணாது பிராயோபவேசம்செய்து இறக்கத்துணிந்த வானரர்களுக்கு உயிர் தந்தவளாதலாலும் ஸீதையை ஸஞ்ஜீவினியுடன் ஒப்பிட்டார். ஸீதையைக் கண்டபின்பே ஹநுமார் முதலிய வானர வீரர்களுக்கு உயிர் வாழ்வது நிச்சயமாயிற்று. '**दृष्टा देवीति हनमद्वदनादमृतोपम्**' என (ஸுந்தர. 64 43) ஸீதையை முதலில் கூறுமல் 'காணப்பட்டாள் தேவி' என வால்மீகி கூறியதை அனுசரித்து, **दृष्टा** - என்ற சொல்லுடன் தொடங்கினார் கவி.

तस्यै भर्तुभिज्ञानमङ्गुलीयं ददौ कपिः ।
प्रत्युद्गतमिवानुष्णैस्तदानन्दाश्रुबिन्दुभिः ॥ ६२ ॥

कपिः - ஹனுமார், भर्तुः - கணவரது, अभिज्ञानम्-அறி குறியானதும், अनुष्णैः-குளிர்ந்த, तद्-आनन्द अश्रु बिन्दुभिः- ஸீதையின் ஆனந்த பாஷ்பத் துளிகளால், प्रत्युद्गतं इव (स्थितम्) - எதிர் கொண்டழைக்கப் பட்டது போல் இருந் ததுமான, अंगुलीयकम् - மோதிரத்தை, तस्यै - ஸீதையினி டம், ददौ - கொடுத்தார்.

(க-து) ஹனுமார், தாம் ராமரிடமிருந்தே வந்தவர் என்ற நம் பிக்கையை உண்டாக்குவதற்காக ராமரது மோதிரத்தை ஸீதையினிடம் கொடுத்தார். மோதிரத்தைக் கண்ட அளவிலே ஸீதை ஆனந்தபாஷ்பத் தைப் பெருக்கவும், மோதிரத்தின் மேல் உதிர்ந்த அவளது கண்ணீர்த் துளிகள், அம்மோதிரத்தை எதிர்கொண்டு வரவேற்பன போலிருந் தன என உத்ப்ரேக்ஷித்தார்.

கையில் வாங்கிய மோதிரம் கண்ணருகே செல்வதற்கு முன்னமேயே கண்ணீர் மோதிரத்தை அடைந்ததால் கவி இவ்வாறு உத்ப்ரேக்ஷிக்கக் காரணமாயிற்று.

अभिज्ञानम् - அறிதற்கான அடையாளம், நம்புதற்குக் காரணமானது.

निर्वाप्य प्रियसंदेशैः सीतामक्षवधोद्धतः ।

स ददाह पुरीं लङ्कां क्षणसोढारिनिग्रहः ॥ ६३ ॥

सः - அவர், प्रिय-सन्देशैः - அன்பர் ராமரது சொற் களால் (செய்திகளால்), सीताम् - ஸீதையை निर्वाप्य - தேற்றி, अक्ष-वध-उद्धतः - அக்ஷகுமாரனைக் கொன்றதால் ஊக்கமடைந்தவராகவும், क्षण-सोढ-अरिनिग्रहः-ஒரு க்ஷணமே ஸஹிக்கப்பட்ட சத்ருவினது பிணித்தலையுடையவராகவும் இருந்து கொண்டு, लङ्काम् पुरीं-லங்கா நகரத்தை, ददाह-எரித் தார்.

(க-து) ஹனுமார், ராமரது வரலாறு முழுவதையும் ஸீதைக்குக் கூறி அவளது மனத்துள்ள துக்க அக்னியைத் தணிப்பித்தார். பின்

தனது வரவை ராவணனுக்குத் தெரிவிக்க விரும்பி அசோகவனத்தை அழித்தவே ராவணன் அனுப்பிய அரக்கர்களையும் அக்ஷகுமாரனையும் கொன்று தாம்பெற்ற வெற்றியினால் மிகவுக்க மடைந்து சண்டை யிட்டார். இந்திரஜித் பிரம்மாஸ்திரத்தைக் கொண்டு தம்மைக் கட்டிய பொழுது சிறிது நேரம் அதற்கு வசப்பட்டு இருந்தபின், தமது வாலி லிட்ட தீயினால் லங்கையைக் கொளுத்தினர்.

प्रियसन्देशः - ராமர் அனுப்பிய செய்தி; செய்தியென்று சொல்லத்தக்க வகையில் ராமர் எதுவும் ஹனுமாரிடம் கூறியதாக ராமாயணத்திலும் சொல்லப்படவில்லை. 'त्वद्वियो-गेन दुःखार्तः' 'स त्वां कौशलमब्रवीत्'-என்று க்ஷேமம் விசாரிக்கும்படி கூறியதாக மட்டுமே உண்டு. அல்லது, ஸீதையைப் பிரிந்தபின் நிகழ்ந்த ராமரைப் பற்றிய செய்தி என்றும் கொள்ளலாம். இப்பொருள் அவ்வளவு சிறந்ததல்ல.

अक्षकुमारः - இவன், ராவணனுக்குத் தான்ய மாலினி-என்பவளிடம் பிறந்தவன்; ஹனுமாரால் பஞ்சஸேனாதிபர்களும் கொல்லப்பட்டதைக் கேட்டு அக்ஷகுமாரன் தானே ஹனுமாருடன் சண்டையிடுவதாக முன் வந்தான்.

उद्धतः - கர்வம் கொண்டவர் என்பது பொருள். ஸந்தர்ப்பத்திற்கு ஏற்ப, அக்ஷகுமாரனைக் கொன்ற வெற்றியால் புதியதொரு உத்ஸாஹம் கொண்டவர் என்று கூறலாம்.

ஹனுமார் இந்திரஜித்தினிடம் கட்டுப்பட்டது.

ராவணன் மனைவி மந்தோதரிக்குப் பிறந்தவன் இந்திரஜித். இந்திரனை வென்றதால் இப்பெயர் பெற்றான். இவனது இயற்பெயர் மேகநாதன் என்பது. எப்பொழுதுமே வெற்றியுடனிருந்த ராக்ஷஸர்களும், அக்ஷகுமாரனும் இறந்தவுடன் ராவணன் இந்திரஜித்தை ஹனுமாருடன் போரிடும்படி அனுப்பினான். இந்திரஜித்தும் பலவகையில் போரிட்டு, முடிவாக பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகிக்க,

அதன் பலத்தால் ஹநுமார் செயலற்றுத் தரையிலே சாய்ந்தார். பிரம்மாஸ்திரத்தால் தாம் கட்டுப்பட்டிருக்கிறோம் எனவும், அப்பிணிப்பு ஒரு முகூர்த்த காலமே இருக்குமெனவும், அதனால் தீங்கு எதுவும் நேராதெனவும் பிரம்மதேவர் தந்த வரத்தை எண்ணி வாளாவிருந்தார். உடனே அரக்கர்கள் கயிறுகள் கொண்டு ஹநுமாரைப் பிணிக்கவும், பிரம்மாஸ்திரம் மற்றொரு பிணிப்பைப் பொறுக்காததாகையால் ஹநுமாரை விட்டு நீங்கியது. எனவே பிரம்மாஸ்திரத்திற்கு வசப்பட்டு ஹநுமார் நின்றது சில க்ஷணங்களே. அரக்கர்கள் கட்டிய பிணிப்பை உதறத் திறனிருந்தும் ராவணனைக் காணும் ஸந்தர்ப்பம் பெறவிரும்பி ராக்ஷஸர்கள் இழுத்தபடி எல்லாம் சென்றார்.

निर्वाप्य-ददाह - ஸீதையின் மனத்திருந்த சோகக் கனலை அணைத்தார். லங்கையில் அக்னியை வைத்தார்.

இச்சுலோகத்திலுள்ள கருத்தை, 'यः शोकवह्निं जनकात्मजायाः। आदाय तेनैव ददाह लङ्काम्' என்ற ஹநுமத் தியான சுலோகக் கருத்துடன் ஒப்பிட்டுப் பார்க்க.

प्रत्यभिज्ञानरत्नं च रामायादर्शयत् कृती ।
हृदयं स्वयमायातं वैदेह्या इव मूर्तिमत् ॥ ६४ ॥

कृती - செய்யவேண்டியதைச் செய்து முடித்த ஹநுமார், स्वयम् - தானாகவே, आयातम् - வெளிவந்ததும், मूर्तिमत् - உருவமுடையதுமான, वैदेह्याः हृदयमिव (स्थितम्) - ஸீதையின் மனம் போலிருப்பதுமான, प्रत्यभिज्ञान रत्नम् च - அடையாளமான (அறிகுறியான) சூடாமணியையும், रामाय - ராமருக்கு, अदर्शयत् - காண்பித்தார்.

(க-து) திறமை வாய்ந்த ஹனுமார், ஸீதை தந்த சூடாமணியை ராமரிடம் கொடுத்தார். அச்சூடாமணி, உருவெடுத்து வந்த ஸீதையின் அன்பு நிறைந்த மனம் போல் காணப்பட்டது.

சூடாமணி - தலையிலே அணியப்படுகின்ற ரத்னம்: இதன் தூய தன்மையைக் கருதி ஸீதையின் மனமாக உருவகம் செய்தார். மனம், ஸூக்ஷ்மவடிவுடையதாகையால் பருஉருவம் கொண்டு காணத் தக்கதாயிற்று என்பதை मूर्तिमत् - என்பதால் காட்டினர்.

हृदयम् - மனம் என்ற பொருள் கூறாது ஹ்ருதயம் என்றே சிலர் பொருள் கூறுவர். மனம் சரீரத்திலே இருப்பது; ராமரிடம் இருந்த அன்பு காரணமாக அது, 'தானே வெளி வந்தது' என்பதைக் குறித்தன स्वयं आयातम्-என்ற சொற்கள்.

स प्राप हृदयन्यस्तमणिस्पर्शनिमीलितः ।
अपयोधरसंसर्गां प्रियालिङ्गननिर्वृतिम् ॥ ६५ ॥

हृदय-न्यस्त-मणि-स्पर्श-निमीलितः - மார்பிலே வைத்துக் கொள்ளப்பட்ட சூடாமணியின் ஸ்பர்ச ஸுகத்தினால் பரவசரான, सः - அவர், अपयोधर-संसर्गाम् - ஸ்தன ஸ்பர்ச மற்றதான, प्रिया-आलिङ्गन-निर्वृतिम् - ஸீதையைத் தழுவுதலால் வரும் இன்பத்தை, प्राप - அடைந்தார்.

(க-து), ஹனுமார் தந்த சூடாமணியை, அன்பினால் தமது மார்பின் மேல் வைத்துக் கொண்டு ராமர், அதன் ஸ்பர்சத்தினாலுண்டான இன்பத்திலே திளைத்தார், சூடாமணியை ஸ்பர்சித்த ராமர், ஸீதையையே அணைத்துக் கொண்டதாக எண்ணினார்.

உண்மையிலே உள்ள ஸீதா ஆலிங்கனத்திற்கும், சூடாமணி ஸ்பர்சத்தினாலே ராமர் கல்பனை செய்து கொண்ட ஸீதா ஆலிங்கனத்திற்கு முள்ள தாரதம்யத்தை, अपयोधर-

संसर्गम्-என்பதால் குறிப்பிட்டார் கவி. ஸ்தனஸ்பர்சமில்லை என்பது தவிர்த்து ஆனந்தத்திலே தாரதம்யம் சிறிது மில்லை என்பதை निर्वृतिम्-என்ற சொல் காட்டியது, निमीलितः-'கண் மூடியவர்' என்பது பதப்பொருள். மனிதர்கள் இன்பம் நுக ருங்கால் அதன் வசப்பட்டு கண்களை மூடியிருத்தல் இயல்பு. பரவசப்பட்டிருத்தல் என்பது கருத்து. 'अद्यास्य दर्शनेनाहं प्राप्तां तामिव चिन्तये' [ஸுந்தர, 66-7] என ராமர் கூறு வதுடன் இச் சுலோகத்தை ஒப்பிடுக.

श्रुत्वा रामः प्रियोदन्तं मेने तत्संगमोत्सुकः ।
महार्णवपरिक्षेपं लङ्कायाः परिखालघुम् ॥ ६६ ॥

प्रिया उदन्तम् - (தனது) அன்பினளான ஸீதையின் செய்தியை, श्रुत्वा - கேட்ட பின், तत्सङ्गम-उत्सुकः-அவளைச் சந்திப்பதில் ஆவல் கொண்ட, रामः - ராமர், लङ्कायाः - லங் கைக்கு, महार्णव-परिक्षेपम् - சுற்றிலுமுள்ள கடலை, परिखा-लघुम् - அகழ்போல் சிறியதாக, मेने - கருதினார்.

(க-து) ஸீதையின் செய்தியைக் கேட்டவுடன் ராமர், அவளைச் சந்திப்பதிலே பேராவல் கொண்டார். அந்த ஆவல் காரணமாக லங்கையைச் சுற்றிலுமிருந்த கடலை, ஒரு சிறு அகழாகக் கருதி, எளிதிலே கடக்கக் கூடியதாக எண்ணினார்.

கடலினும் பெரியது ராமர் ஸீதையினிடம் கொண்ட காதல். ஆதலால் காதலின் அளவைக் கருதிய பொழுது கடல் சிறியதாகப் புலப்பட்டது ராமருக்கு. परिक्षेपः - 'சுற் றிலுமுள்ளது' என்பது பொருள். 'சுற்றிலும் இருத்தல்' என்ற பொருளில் வந்ததன்று.

'कान्तासंगमौत्सुक्यात् लवणाकरमल्पतरमकलयत्' என் பர் நாராயணர்.

स प्रतस्थेऽरिनाशाय हरिसैन्यैरनुद्रुतः ।
न केवलं भुवः पृष्ठे व्योम्नि संबाधवर्तिभिः ॥ ६७ ॥

सः - அந்த ராமர், भुवः पृष्ठे केवलं न - பூமியின்மேல் மாத்திரமேயன்றி, व्योम्नि - ஆகாயத்திலும், संबाध-वर्तिभिः - நெருங்கியிருக்கின்ற, हरिसैन्यैः - வானரப்படைகளால், अनुद्रुतः - பின்தொடரப் பட்டவராய், अरि-नाशाय - சத்ருவை அழிப்பதற்காக, प्रतस्थे - புறப்பட்டார்.

(க-து) ராமர் ஏராளமான வானரப்படைகளுடன் சத்ருவை அழிக்கப் புறப்பட்டார். அவருடன் சென்ற வானரப்படைகளில் சில தரையில் நடந்தும், சில ஆகாயமார்க்கமாகத் தாவியும் சென்றன, எனவே இரண்டிடத்திலும் நெருக்கடி ஏற்பட்டது.

இதனால் வானர சேனையின் மிகுதி கூறப்பட்டது.

निविष्टमुदधेः कूले तं प्रपेदे विभीषणः ।
स्नेहाद्राक्षसलक्ष्म्येव बुद्धिमादिश्य चोदितः ॥ ६८ ॥

स्नेहात् - அன்பினாலே, बुद्धिम् - நற்புத்தியை, आदिश्य - கூறி, राक्षस लक्ष्म्या - ராக்ஷஸ லக்ஷ்மியினால், चोदितः इव - தூண்டப்பட்டவன் போல், विभीषणः - விபீஷணன், उदधेः - கடலின், कूले - கரையில், निविष्टम् - தங்கி யிருந்த, तम् - ராமரை, प्रपेदे - அடைந்தான்.

(க-து) தென் கடலின் கரையில் தங்கியிருந்த ராமரை விபீஷணன் வந்தடைந்தான்.

விபீஷணன் வந்தடைந்ததன் காரணத்தை राक्षस-लक्ष्म्या चोदितः - என்பதால் காட்டினார். ராக்ஷஸ ஐச்வர்ய தேவதை, விபீஷணனிடத்திலுள்ள அன்பினாலே மற்ற அரக்கர்கள் போல் அவனுமழிய வேண்டாமெனக் கருதி அவனுக்கு நல்லறிவைக் கொடுத்துத் தூண்டியது போலும் என உத்ப்ரேக்ஷித்தார் கவி.

बुद्धिमाविश्य - என்ற பாடத்திற்கு 'விபீஷணனது மனத்துள் புகுந்து' என்று பொருள்.

तस्मै निशाचरैश्वर्यं प्रतिशुश्राव राघवः ।
काले खलु समारब्धाः फलं बध्नन्ति नीतयः ॥ ६९ ॥

राघवः - ராமர், तस्मै - விபீஷணனுக்கு, निशाचरैश्वर्यम् - அரக்கர்களின் அரசை, प्रतिशुश्राव - (தருவதாக) வாக்குறுதி செய்தார். काले - தக்க காலத்தில், समारब्धाः - தொடங்கப்பட்ட, नीतयः - உபாயங்கள், फलं बध्नन्ति खलु - பலனைக் கொள்கின்றன அல்லவா?

(க-து) தம்மைச் சரணடைந்த விபீஷணனுக்கு லங்காராஜ்யமளிப்பதாக ராமர் வாக்குறுதி யளித்தார்.

விபீஷணன் லங்காராஜ்யம் பெற்றதன் காரணத்தைச் சுலோகத்தின் இரண்டாவது பகுதி தெரிவிக்கின்றது. தக்க காலத்தில் முயன்றால் வெற்றி திண்ணமாகக் கிடைக்குமாகையால் விபீஷணன், ராவணன் அழியும் காலத்தில் இருக்கிறான் என்பதையும், ராமருக்குத் தனது உதவி தேவையாயிருக்குமாகையால் தனக்குப் பிரதி உபகாரம் செய்வார் என்பதையும் அறிந்து முயன்றான்.

निशाचरैश्वर्यम् - என்பதற்கு ராவணனது செல்வம் என்றும் பொருள் கூறலாம். नीति - ராஜநீதி.

स सेतुं बन्धयामास प्लवगैर्लवणाम्भसि ।
रसातलादिवोन्मग्नं शेषं स्वप्नाय शार्ङ्गिणः ॥ ७० ॥

सः - ராமர், लवणाम्भसि - கடலில், शार्ङ्गिणः - விஷ்ணுவின், स्वप्नाय - நித்ரையின் பொருட்டு, रसातलात् - பாதாளத்தினின்றும், उन्मग्नम् - மேலெவந்துள்ள, शेषम् इव - (स्थितम्) - ஆதிசேஷன் போலிருந்த, सेतुम् - அணையை, प्लवगैः - குரங்குகளைக் கொண்டு बन्धयामास - கட்டுவித்தார்.

(க-து) ராமர் குரங்குகளைக் கொண்டு கடலில் அணைகட்டுவித்தார். அவ்வணை அகலமும் நீளமுமுடையதாக இருந்ததால், (ராமவடிவிலே ஸமுத்ரதீரத்திற்கு வந்திருக்கும்) பகவான் நாராயணனுடைய நித்ரைக்காகப் பாதாளத்தினின்றும் மேலே வந்துள்ள ஆதிசேஷனது சரீரம் போல் காணப்பட்டது.

இவ்வுவமையால் அணையின் அகலமும் நீளமும் புலனாகும். அணை பத்து யோஜனை அகலமும் நூறு யோஜனை நீளமும் இருந்ததாக ஸ்ரீமத் ராமாயணம் கூறும். लवणांभः - உப்புத் தண்ணீரையுடையது: கடல். रसातलम्-ஸர்ப்பங்கள் வசிக்கும் உலகு.

तेनोत्तीर्य पथा लङ्कां रोधयामास पिङ्गलैः ।
द्वितीयं हेमप्राकारं कुर्वद्भिरिव वानरैः ॥ ७१ ॥

(ராமர்), तेन पथा - அவ்வணை வழியாக, उत्तीर्य - (கடலைக்) கடந்து, पिंगलैः - பொன்னிறமானவைகளும், द्वितीयम्- இரண்டாது, हेमप्राकारम् - பொன்மயமான கோட்டைச் சுவர்களை, कुर्वद्भिः इव - செய்வனபோன்ற, वानरैः - வானரர்களைக் கொண்டு, लङ्काम् - லங்கையை, रोधयामास- தகைந்தார்.

(க-து) ராமர், குரங்குகளைக் கொண்டு லங்கையைச் சூழ்ந்து கொண்டார். பொன் போல் நிறமுள்ள வானரர்கள், லங்கையைச் சுற்றிலும் நெருக்கமாக நின்றிருந்தனர். எனவே அவ்வானர வீரர்கள், லங்கையைச்சுற்றிலும் எழுப்பப்பட்ட பொன்மயமான மற்றொரு மதிள் சுவர் போல் காணப்பட்டனர்.

இவ்வுத்ப்ரேக்ஷையால், வானரர்களது தொகையின் மிகுதியும், அவர்கள் நெருங்கி நின்றனர்என்பதும், அதனால் லங்காவாஸிகள் நகருக்குள்ளேயே சிறைப் பட்டிருந்தனர் என்பதும் புலனாகும். முன்பே லங்கைக்கு ஒரு கோட்டைச் சுவர் இருந்ததால்,வானரர்கள் நிற்பதாலே உண்டான தோற்றத்தை, द्वितीयम् हेमप्राकारम् என வருணித்தார்.

रणः प्रववृते तत्र भीमः प्लवगरक्षसाम् ।
दिग्विजृम्भितकाकुत्स्थपौलस्त्यजयघोषणः ॥ ७२ ॥

**तत्र** - லங்கையில், **भीमः** - பயங்கரமானதும், **दिग्-विजृंभित-काकुत्स्थ-पौलस्त्य-जय-घोषणः** - திசைகள் எங்கும் பரவுகின்ற ராம ராவணர்களுக்கான ஜயகோஷமுடையதுமான, **रणः** - யுத்தமானது, **प्लवग रक्षसाम्**-வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்குமிடையே, **प्रववृते** - தொடங்கியது.

(க-து) பிறகு, வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்குமிடையில் பயங்கரமான போர் தொடங்கியது; ராமருக்கு ஜயம் வேண்டுமென வானரர்கள் செய்த ஒலியும், ராவணனுக்கு ஜயம் வேண்டுமென அரக்கர் இட்ட சத்தமும் திசைகளெங்கும் பரவின.

'दशग्रीवं जयेत्याहुरसुराः समवस्थिताः । देवा राममथोचुस्ते त्वं जयेति पुनःपुनः ॥' [யுத்தகாண்டம் 102, 46.]

**दिग्विजृंभित** - என்பதை **जयघोषण** - என்பதற்கு விசேஷணமாகக் கொள்ளாமல், **काकुत्स्थ पौलस्त्य**-என்பனவற்றிற்கு விசேஷித்துத் 'திசையெங்கும் பிரசித்திபெற்ற ராம ராவணர்களின்' எனப் பொருளுரைப்பாரும் உண்டு. அவர்களது பெயரைக் கூறாது குலப் பெருமை தோன்ற **काकुत्स्थ** - என்ற சொல்லினால் ராமரையும், **पौलस्त्य**-என்பதால் ராவணனையும் குறித்தார். வீரவாதத்தில் குலப்பெருமையும் அடங்கும்.

पादपाविद्धपरिघः शिलानिष्पिष्टमुद्गरः ।
अतिशस्त्रनखन्यासः शैलरुग्णमतंगजः ॥ ७३ ॥

**पादप-आविद्ध-परिघः** - மரங்களால் அடிக்கப்பட்ட பரிகம் என்ற ஆயுதமுடையதும், **शिला-निष्पिष्ट मुद्गरः** - பாறைகளால் பொடியாக்கப் பட்ட கதாயுதமுடையதும், **अतिशस्त्र-नख-न्यासः** - ஆயுதங்களையும் விஞ்சியதான நகங்களின் உப

யோகமுடையதும், शैल-रुग्ण-मतङ्गजः -குன்றுகளால் அழிக்கப்பட்ட யானைகளையுடையதுமான, रणः प्रववृते - யுத்தம் தொடங்கியது.

(க-து) ஆயுதங்களினுதவியால் அரக்கர்கள் போர் புரிந்தனர். வானரர்களுக்குக் கையில் கிடைத்தன வெல்லாம் போர்க் கருவிகளாக இருந்தன. ராக்ஷஸர்களின் பரிகாயுதத்தை வானரர்கள் மரங்களைக் கொண்டு அழித்தனர். அவர்களது கதாயுதத்தைப் பாறைகளை வீசிப் பொடி செய்தனர்;வானரர்கள் நகங்களை உபயோகித்தனர். அங்கங்கள் துன்பந் தருவதில் அரக்கர்களின் ஆயுதங்களையும் விஞ்சியனவாய் இருந்தன. ராக்ஷஸர்களின் யானைகளை வானரர்கள், சிறு குன்றுகளைப் பெயர்த்தெறிந்து கொன்றனர்.

இதனால் வானரர்களின் பெருமை புலப்படும். முன் சுலோகத்தினின்றும் रणः प्रववृते-என வருவித்துப் பொருள் கூறப்பட்டது.

परिघः - இருப்பு உலக்கை ; मुद्गरः - கதாயுதம்.

अथ रामशिरश्छेददर्शनोद्भ्रान्तचेतनाम् ।
सीतां मायेति शंसन्ती त्रिजटा समजीवयत् ॥ ॥ ७४ ॥

अथ - பிறகு, राम-शिरश्छेद-दर्शन-उद्भ्रान्त-चेतनाम् - ராமரது துணிக்கப்பட்ட தலையைக் கண்டதால் மூர்ச்சையடைந்த, सीताम् - ஸீதையை, त्रिजटा - திரிஜடை என்ற ராக்ஷஸி, 'माया' - (இது ஒரு) மாயை, इति शंसन्ती-என்று கூறுபவளாய், समजीवयत् - உயிர் பெறச் செய்தாள்.

(க-து) ராவணன், தனது வேவுகாரர்கள் மூலம் ஸுவேல பர்வதத்தில் பெரும்படையுடன் தங்கியுள்ள ராமரைப் பற்றிக் கேள்வியுற்றுச் செய்யவேண்டியதைப் பற்றி மந்திரிகளுடன் ஆலோசித்தான். ராமர் இறந்தார் என ஸீதையை நம்பச் செய்தால் ஸீதை தன் வசப்படுவாள் என நினைத்து, வித்யுஜ்ஜிஹ்வன் என்ற அரக்கனது உதவியைக் கொண்டு ராமரது தலை ஒன்றை மாயையினால் செய்வித்து, அதை ஸீதையின் எதிரில் வைத்து, 'அறிவில்லாதவளே ! உன் கண

வன் பெரும்படையுடன் வந்தான். ஆனல் அவனும் அவனுடைய படையும் அழிந்தன' என்று சொல்லி, தரையில் வைத்துள்ள அத் தலையை உற்று நோக்கும்படி கூறினன். அதைக் கண்ட ஸீதை உண்மையிலே ராமரது தலை துணிக்கப்பட்டுள்ளது என நம்பி மூர்ச்சையடைந்தாள்; இதற்கிடையில் ராவணன் வானரர்களின் ஆரவாரத்தைக் கேட்டு, மந்திரிகளால் அழைக்கப்பட்டு அவ்விடம் விட்டுச் சென்றான். அத்தலையும் உடனே மறைந்தது. ராவணன் சென்றபின் விபீஷணன் மகளான திரிஜடை என்பவள், ஸீதையின் மூர்ச்சையைத் தெளிவித்து, 'ஸீதே! உனது கணவர் மிக்கபலமுடையவர்; கடல் கடந்து லங்கையின் புறத்தில் தங்கியுள்ளார்; அவர் நிச்சயமாக ராக்ஷஸர்களை வென்று உன்னை அழைத்துச் செல்வார். ராவணன் இப்பொழுது செய்ததெல்லாம் மாயை'. உண்மையல்ல' எனத் தேற்றினள்.

விபீஷணன் மனைவி ஸரமா என்பவள் ஸீதையைத் தேற்றியதாக ராமாயணம் கூறுகின்றது: யுத்தகாண்டம் 31, 32, 33 ஸர்க்கங்கள் காண்க.

'समजीवयत्—मरणव्यवसायान्निवर्तयामास' नारायणः ।

'साधु घातय मां क्षिप्रम् रामस्योपरि रावण ।
रावणानुगमिष्यामि गतिं भर्तुर्महात्मनः ॥'

என்பது, ஸீதை தான் இறக்கத் துணிந்ததைக் கூறுவதாக உள்ளது.

काम जीवति मे नाथ इति सा विजहौ शुचम् ।
प्राङ् मत्वा सत्यमस्यान्तं जीवितास्मीति लज्जिता ॥ ७९ ॥

सा - ஸீதை, 'मे नाथः - எனது கணவர், जीवति' इति- உயிரோடிருக்கின்றார்' என்று (அறிந்து), शुचम्-துக்கத்தை, कामम् विजहौ - விடத்தான் செய்தாள்; (किंतु) - ஆனல், 'प्राक् - முதலில், अस्य - ராமரது, अन्तम् - முடிவை (மரணத்தை), सत्यम् - நிஜமானதாக, मत्वा-அறிந்தும், जीविता-अस्मि - உயிருடன் இருந்தேனே!' इति-என்று (நினைத்து), लज्जिता - வெட்கமுற்றாள்.

(க-து) 'ராவணன் செய்தது மாயை; ராமர் இறக்கவில்லை' எனத் திரிஜடையின் மூலம் அறிந்தபொழுது ஸீதை தனது துக்கத்தை விட்டாள்; ஆனால் துக்கத்தைக் காட்டிலும் பெரியதொரு வெட்கம் உடனே அவளைச் சூழ்ந்து கொண்டது; "கணவர் இறந்தார்' என்பதைக் கேட்ட மாத்திரத்திலே பதிவிரதையான ஸ்திரீ உயிர் துறப்பாளே; ராமர் இறந்தார் என்பதை உண்மையாக எண்ணிய பொழுதும் நான் உயிர் துறக்கவில்லையே. எனக்காக வன்றோ ராமர் உயிர் துறந்தார். அவரது அன்பு எங்கே! எங்கே எனது அன்பு! எவ்வளவு கடினம் என் மனம்!" என்று யோசித்தபொழுது ஸீதை வெட்கக் கடலில் ஆழ்ந்தாள். துக்கத்தை காட்டிலும் வெட்கம் ஸஹிக்கக் கூடாததாக இருந்தது.

இச்சுலோகத்தில் கூறியதை விளக்குவனபோலுள்ளன அடியிற் காணும் சுலோகங்கள்; ஸீதை ராமரது தலையைக் கண்டபின் கூறுவதாக உள்ளன இவை. किमेतदिति प्रलपितम् विषमोन्मीलिताभ्यां लोचनाभ्यां दृष्टम्। विगलितलज्जया मया भवति स्फुटं नाथ तव मुखमिति प्ररुदितम्॥ उद्धास्यति राम त्वां गुणान् गणयित्वा पौरुषमय इति जनः। गलितमहिलास्वभावां संस्मृत्य च मां निवर्तयिष्यति कथाम्॥ बाष्पं न धारयति मुखम् आशाबन्धोऽपि मे न रुणद्धि हृदयम्। अनन्तरं च चिन्त्यमाने न विज्ञायते केन जीवितम् रुद्धम्॥ [सेतुबन्ध. आश्वास 11, श्लो 79, 84, 82.]

गरुडापातविश्लिष्टमेघनादास्त्रबन्धनः।

दाशरथ्योः क्षणक्लेशः स्वप्नवृत्त इवाभवत्॥ ७६॥

गरुड-आपात-विश्लिष्ट-मेघनाद-अस्त्र बन्धनः - கருடனது வேகமான வருகையால், தளர்ந்ததான மேகநாதனது அஸ்த்ரப் பிணிப்பையுடைய, क्षणक्लेशः - ஒரு க்ஷணமேயிருந்த கஷ்டமானது, दाशरथ्योः - ராமலக்ஷ்மணர்களுக்கு, स्वप्नवृत्तः इव - கனவிலே நிகழ்ந்த ஒரு ஸங்கடம் போல், अभवत् - இருந்தது.

(க-து) இந்திரஜித் நாகபாசங்களால் ராமலக்ஷ்மணர்களைக் கட்டினான். நாகங்களின் சத்ருவான கருடன் வரவும், நாகபாசங்கள் நீங்கின. நாகபாசத்தால் உண்டான கஷ்டம் சிறிது நேரமே இருந்ததால், கனவில் காணும் ஒரு ஸம்பவம்போல், நாகபாசத்தால் உண்டான கஷ்டம் சிறிது நேரமே இருந்தது.

ராமர் வானர சேனைகளுடன் லங்கையைச் சூழ்ந்து கொண்டு முற்றுகை யிட்டபொழுது, வானரர்களும் ராக்ஷஸர்களும் சண்டையிட்டனர். அப்பொழுது சூரியன் அஸ்தமிக்கவும், போர் நிறுத்தப்படாமல் மேலும் தொடர்ந்து நடந்தது. அங்கதனால் தேர், ஸாரதி முதலியவற்றை இழந்த இந்திரஜித் தனது மாயாசக்தியினால் ஆகாயத்தில் மறைந்து நின்று நாகாஸ்திரங்களைப் பிரயோகிக்க, அவைகள் ஸர்ப்பங்களது வடிவத்தில் ராம லக்ஷ்மணர்களது மேனி எங்கும் பரவிக் கயிறுகள் போல் கட்டி அவ்விருவரையும் கீழே வீழ்த்தியன; அவர்களது உடலினின்றும் ரத்தம் பெருகியது. இந்திரஜித், மேலும் பல பாணங்களால் வானரர்களைக் கலக்கிய பின் மிகக் களிப்புடன் தன் வீடு சென்றான். ராம லக்ஷ்மணர்களது நிலை கண்டு ஸுக்ரீவாதியர் வருந்திய பொழுது விபீஷணன் அவர்கட்கு ஆறுதல் கூறினான். இச்சமயத்தில், கட்டுப்பட்டிருந்த ராமர் இயற்கையிலே தைரியமும் தேகபலமுமுடையவராக இருந்ததால் பிரக்ஞையுற்று, லக்ஷ்மணன் செயலற்றுக் கிடந்ததைக் கண்டு பலவாறு புலம்பவும், கருடன் அங்குத் திடீரெனத் தோன்றினான். அவன் வந்தவுடன், ராமலக்ஷ்மணர்களைக் கட்டியிருந்த நாகபாசங்கள் எல்லாம் பலதிசைகளிலும் ஓடி விட்டன. கருடன் ராம லக்ஷ்மணர்களது தேஹத்தைத் தடவிய பொழுது அவர்களது உடம்பிலிருந்த புண்களெல்லாம் மாறி, மேனி மேனியுடன் விளங்கியது. 'ராம, நான் உமது நண்பன். நீங்கள் இருவரும் நாகபாசங்களால் பிணிக்கப்பட்

டதை யுணர்ந்து உங்களுக்கு உதவி செய்ய வந்தேன். அரக்கர்கள் மாயை வல்லவர்கள். அவர்களுடன் ஜாக்ரதையாகப் போரிடுங்கள்', எனக் கூறி விட்டுக் கருடன் சென்றான்.

இவ்வரலாறு யுத்த காண்டம் 44-50-ஸர்க்கங்களில் கூறப்படுகிறது.

ततो बिभेद पौलस्त्यः शक्त्या वक्षसि लक्ष्मणम् ।
रामस्त्वनाहतोऽप्यासीद्विदीर्णहृदयः शुचा ॥ ७७ ॥

ततः - பிறகு, पौलस्त्यः - புலஸ்தியர் குமாரன் ராவணன், शक्त्या - வேலினால், लक्ष्मणम् - லக்ஷ்மணனை, वक्षसि - மார்பில், बिभेद - பிளந்தான்; रामः तु - ராமரோ, अनाहतः अपि - (அவ்வாயுதத்தால்) தாக்கப்படாதவராயினும், शुचा - துக்கத்தினால், विदीर्णहृदयः - பிளக்கப்பட்ட மனமுடையவராக, आसीत् - இருந்தார்.

(க-து) பிறகு, ராவணன், லக்ஷ்மணன் மேல் வேலை எறிந்தான். அவ்வேல் லக்ஷ்மணனது மார்பில் ஆழப்பாய்ந்து அவனை வீழ்த்தியபின் பூமியில் புதைந்தது. லக்ஷ்மணனது கஷ்டமான நிலையைக் கண்டராமர், வேலால் தாக்கப்படாதவராயினும், துக்கத்தினால் தாக்கப்பட்டு மனமுடைந்தவரானார்.

தமது படையிலுள்ளோர் கொல்லப் பட்டதைக் கேள்வியுற்று ராவணன் ராமருடன் போர் செய்த பொழுது லக்ஷ்மணன் அவனது கொடியையும் ஸாரதியின் தலையையும் அறுத்தான். விபீஷணன் அவனது குதிரைகளைக் கொன்றான். இதனால் கோபமடைந்த ராவணன் விபீஷணன் மேல் ஒரு வேலை வீச அது லக்ஷ்மணனால் துண்டிக்கப்பட்டது. மயன் நிருமித்த மற்றொரு வேலை எடுத்து விபீஷணன் மேல் எறிய முயன்ற பொழுது லக்ஷ்மணன் குறுக்கிடவும், அவன் மேல் எரியும் எண்ணத்தை விட்டு லக்ஷ்மணனை

நோக்கி வீச, அவ்வேல் லக்ஷ்மணனது மார்பில் பாய்ந்து அவனைத் தரையில் தள்ளித் தானும் பூமியில் புதைந்தது. மற்றவர்களால் பெயர்த்தெடுக்க முடியாத அச்சக்தியை ராமர் எடுத்து ஒடித்துப்போட்டபின் ராவணனை அம்புமாரியால் அடிக்க அவன் பயந்து ஓடினான். பின் லக்ஷ்மணனது நிலை பற்றி மிக வருந்திய ராமரைத் தேற்றி ஸுஷேணன் என்ற வானர வீரன், ஸஞ்ஜீவினி ஓஷதியைக் கொணரும்படி ஹநுமாருக்குக் கூற, அவர் அம்மூலிகை உள்ள மலையின் சிகரத்தையே கொண்டு வந்தார். அம்மூலிகையின் பலத்தால் லக்ஷ்மணன் சிரமம் நீங்கி எழுந்தான் என்ற இவ்வரலாறு யுத்தகாண்டம் 100-101-ஆம் ஸர்க்கங்களில் கூறப்படுகின்றது.

கும்பகர்ணனது வதம், இந்திரஜித் வதம் இரண்டிற்கும் பின் இச்சம்பவம் நிகழ்ந்ததாக ராமாயணம் கூறும். கவி ராமாயணம் கூறிய முறையைப் பின்பற்றாது அவ்விருவருவரின் மரணத்திற்கு முன் இது நடந்ததாகக் கூறினார். கும்பகர்ணன் மரித்தபின் இந்திரஜித் இறந்ததாக ராமாயணம் கூறுவதையும் மாற்றி, இந்திரஜித்தின் மரணத்தை முன்னும், கும்பகர்ணன் வதத்தைப் பின்னும் வைத்தார்.

இச்சுலோகத்தில் வந்துள்ள पौलस्त्य என்ற சொல்லுக்கு இந்திரஜித் என்று பொருளுரைப்பர் நாராயணர். அடுத்து வரும் சுலோகங்களில் இந்திரஜித்தின் வதம் கூறப்படுவதால், அவனே வேலை எறிந்து குற்றமிழைத்து லக்ஷ்மணனுக்குக் கோபமூட்டியிருக்க வேண்டுமென அவர் கருதினர் போலும்! இந்திரஜித் வேலெறிந்ததாகக் கூறுவது ராமாயணத்திற்கு முரண்பட்டதாயினும், கதையின்

போக்கை மாற்றிக் கூறும் உரிமை கவிகளுக்கு உண்டாதலால் இவ்வுரையும் கவனிக்கத் தக்கதே.

स मारुतिसमानीतमहौषधिहतव्यथः ।
लङ्कास्त्रीणां पुनश्चक्रे विलापाचार्यकं शरैः ॥ ७८ ॥

**सः** - *அந்த லக்ஷ்மணன்,* **मारुति-समानीत-महौषधि-हत-व्यथः** - *ஹனுமார் கொண்டு வந்த ஸஞ்ஜீவினியால் உடல் நோவு நீங்கப்பெற்றவராய்,* **पुनः** - *மறுபடியும்,* **शरैः** - *பாணங்களால்,* **लङ्कास्त्रीणाम्** *லங்கையிலுள்ள ஸ்திரீகளுக்கு,* **विलाप-आचार्यकम्-चक्रे** - *புலம்புதலைக் கற்பித்தான்.*

*(க-து) ஹனுமார் கொண்டு வந்த மூலிகையினால் வலி நீங்கிய லக்ஷ்மணன், மறுபடியும் யுத்தத்தைத் தொடங்கிப் பல அரக்கர்களைக் கொன்றார். அதன் மூலம் கணவன் இதுவரை இறவாததால் அழுவதறியாது இருந்த லங்கையிலுள்ள ஸ்திரீகளுக்கு லக்ஷ்மணன் அழும் முறையைக் கற்பித்தான்போற் காணப் பட்டான்.*

*இதுவரை ராக்ஷஸர்கள் யாதொரு குறையுமின்றி இருந்ததால், துக்கம் என்ன வென்பதையே அறியாதிருந்தனர். எனவே அவர்களுக்கு அழுவதற்குச் சந்தர்ப்பமே நேராததால் அழத்தெரியாதுமிருந்தனர். லக்ஷ்மணன் தனது அம்புகளின் உதவியால் அழும் வழியை அரக்கிகளுக்கு உபதேசித்தான் எனச்சமத்காரமாகக்கூறுகின்ற கவி, அவன் ராக்ஷஸர்களை மாய்த்தான் என்பதைத் தொனிப்பிக்கின்றார்.*

*இச் சுலோகத்தில் உத்ப்ரேக்ஷையைக் குறிக்கும் சொல் இல்லாவிடினும் '*चक्रे इव*' என இதை உத்ப்ரேக்ஷயாகக் கொள்ள வேண்டும்.*

स नादं मेघनादस्य धनुश्चेन्द्रायुधप्रभम् ।
मेघस्येव शरत्कालो न किंचित् पर्यशेषयत् ॥ ७९ ॥

**सः** - லக்ஷ்மணன், **शरत्कालः** - சரத்காலமானது, **मेघस्य** - **इव** - மேகத்தின் (கர்ஜனையை) போல், **मेघनादस्य** - மேக நாதனுடைய, **नादम्** - வீரகர்ஜனையையும், **इन्द्रायुध-प्रभम्** - வானவில் போல் ஒளியுள்ள, **धनुश्च** - வில்லையும், **किंचित्** - **न पर्यशेषयत्** - சிறிதும் மிச்சம் வைக்க வில்லை.

(க-து) சரத்காலம் வந்தவுடன் மேகங்கள் நீரின்மையால் கர்ஜிப்பதில்லை. வானவில்லும் ஆகாயத்தில் தோன்றுவதில்லை. அது போல் லக்ஷ்மணனும், மேகநாதனது வீரநாதத்தையும் வானவில் போல் ஒளிருகின்ற அவனது வில்லையும் அடியோடு அழித்தான். இந்திரஜித்தை வதம் செய்தான் என்பது கருத்து.

**मेघनादः** - ராவணனுக்கு மந்தோதரியிடம் பிறந்தவன். பிறந்த குழந்தை மேகத்தின் நாதம் போன்ற குரலில் அழுததால் மேகநாதன் எனப் பெயரிடப்பட்டான். இந்திரனையும் போரில் வென்று சிறையில் வைத்ததால் இந்திரஜித் என்ற பெயரும் பெற்றான். இந்திரஜித் வதம் யுத்தகாண்டம் 90-ஆம் ஸர்க்கத்தில் கூறப்படுகின்றது.

कुम्भकर्णः कपीन्द्रेण तुल्यावस्थः स्वसुः कृतः ।
रुरोध रामं शृङ्गीव टङ्कच्छिन्नमनःशिलः ॥ ८० ॥

**कपीन्द्रेण** - வானரர் தலைவனான ஸுக்ரீவனால், **स्वसुः** - தங்கை சூர்ப்பணகைக்கு, **तुल्य-अवस्थः** - ஒத்த நிலையிலிருப்பவனாக, **कृतः** - செய்யப்பட்ட, **कुम्भकर्णः** - கும்பகர்ணன், **टङ्कच्छिन्न-मनःशिलः** - உளியினால் வெட்டப்பட்ட மனச்சிலையுடைய, **शृङ्गी इव** - மலைபோல், (**सन्**) - இருந்துகொண்டு, **रामम्** - ராமரை, **रुरोध** - எதிர்த்தான்.

(க-து) கும்பகர்ணனுடன் போர் செய்த ஸுக்ரீவன், அவனுடைய காதுகளை நகங்களால் கிள்ளி எறிந்தான். மூக்கைப் பற்களால் கடித்து நீக்கினான். சூர்ப்பணகை போலவே காதும் மூக்குமிழந்து

ரத்த மொழுக நின்ற கும்பகர்ணன், உளியினல் வெட்டப்பட்ட மனே சிலை நிறைந்த மலை போல் காணப்பட்டான்.

स्वसुः - 'தங்கை சூர்ப்பணகைக்கு;' मनःशिला செந்நிறமான ஒருவகைப் பாஷாணம். கும்பகர்ணனது பெரிய உடலுக்கு மலை உபமானமாயிற்று: ஒழுகும் ரத்தம், உளியினல் செதுக்கப்பட்டுச் சிவந்து மலைகளில் காணப்படுகின்ற மனேசிலையுடன் ஒப்பிடப்பட்டது.

'कर्णनासाविहीनस्तु कुंभकर्णो महाबलः।
रराज शोणितोत्सिक्तो गिरिः प्रस्रवणैरिव॥' [யுத்தகாண்டம் 67-89] என்பதையும் காண்க.

ராவணன் தன் படை தோல்வியுறுதலைக் கண்டு, அகாலமாயினும் கும்பகர்ணனை எழுப்பித் தனக்கு உதவி செய்ய வேண்டினன். மிக முயற்சி செய்து எழுப்பப்பட்ட கும்பகர்ணன் வேண்டிய உணவை உண்டபின் ரண களம் வரவும், அவனது பெரிய வடிவத்தைக் கண்டு குரங்குகள் அஞ்சி ஓட, வானரவீரர்கள் சேனைகளை நிலைநிறுத்திப் பின் அவனுடன் போர்புரியத் தொடங்கினர். கும்பகர்ணன் ஒரு மலையைப் பெயர்த்துச் சுக்ரீவன் மேல் எறிய அவன் மூர்ச்சையடைந்தான். அவனை இடையிலே இடுக்கிக் கொண்டு கும்பகர்ணன் நகர் நோக்கிச் சென்றான். சிறிது நேரத்தில் நினைவு பெற்ற சுக்ரீவன், கைநகங்களால் அவனது காதுகளைக் கிள்ளியும், பற்களால் மூக்கைக் கடித்தும், கால்நகங்களால் விலாப்புறங்களைக் கீறியும் துன்பம் கொடுத்துவிட்டுப் பந்து போல் ஆகாயத்தில் கிளம்பி ராமரிடம் வந்து சேர்ந்தான். கும்பகர்ணன் மறுபடியும் யுத்த பூமி வந்து, லக்ஷ்மணனை மதியாமல் ராமருடன் போர் புரியவும், அவர், அவனது கால்களையும் கைகளையும் அறுத்துத் தள்ளியபின்

தலையையும் வெட்டி வீழ்த்திக் கொன்றார் என்ற இச்செய்தி யுத்தகாண்டம் 67-ஆம் ஸர்க்கத்தில் கூறப்பட்டுள்ளது.

अकाले बोधितो भ्रात्रा प्रियस्वप्नो वृथा भवान् ।
रामेषुभिरितीवासौ दीर्घनिद्रां प्रवेशितः ॥ ८१ ॥

'प्रिय-स्वप्नः - தூக்கத்திலே பிரியமுள்ள, भवान् - நீ, वृथा-வீணாக, भ्रात्रा-(உன்)ஸஹோதரன் ராவணனால், अकाले-தகாத காலத்தில், बोधितः-எழுப்பப்பட்டுள்ளாய்,' इति इव- என்ற காரணத்தினால் போலும், राम-इषुभिः - ராமரது பாணங்களால், असौ - அவன், दीर्घनिद्राम् - நெடுந்துயிலை, (மரணத்தை), प्रवेशितः - அடைவிக்கப்பட்டான்.

(க-து) 'தூக்கம் முடிந்து நீ எழுந்திருக்கவேண்டிய காலத்திற்கு முன்பே ராவணன் உன்னை வீணாக எழுப்பிவிட்டான்; உனக்குத் தூக்கம் கெட்டது தவிர வேறு பயனில்லை, போய் நன்றாகத்தூங்கு' என்று நினைத்துப் போலும் ராமர் அவனை நெடுந்துயிலடையச் செய்தார்.

'इव—उत्प्रेक्षया भ्रुकुट्यादिना विना स्मितपूर्वमेव तद्वध इति ध्वन्यते' अरुणगिरिः ॥

इतराण्यपि रक्षांसि पेतुर्वानरकोटिषु ।
रजांसि समरोत्थानि तच्छोणितनदीष्विव ॥ ८२ ॥

समर-उत्थानि - யுத்த பூமியினின்றும் எழுந்த, रजांसि- புழுதிகள், तच्छोणित-नदीषु इव - அவ்வரக்கர்களின் ரத்தப் பிரவாஹங்களில் (விழுந்து மறைந்தன) போல், इतराणि - மற்ற, रक्षांसि अपि - அரக்கர்களும், वानर-कोटिषु - கோடிக் கணக்கான வானரர்களிடையில், पेतुः - விழுந்தனர்.

(க-து) யுத்த பூமியினின்றும் எழுந்த புழுதி, அங்குள்ள ரத்தப் பிரவாஹத்தில் விழுந்து மறைவது போல், வானரர் படைமேல் விழுந்த பல அரக்கர்களும் குரங்குகளால் கொல்லப்பட்டு மடிந்தனர்.

அரக்கர்களைப் புழுதியோடு ஒப்பிட்டது அவர்களது புன்மையைக் காட்ட. புழுதிபோல் ஒரு நொடியில் அழிந்தனர் என்பதும் உபமானத்தால் பெறப்படும்.

निर्ययावथ पौलस्त्यः पुनर्युद्धाय मन्दिरात् ।
अरावणमरामं वा जगदद्येति निश्चितः ॥ ८३ ॥

**अथ** - பிறகு, **पौलस्त्यः** - ராவணன், '**अद्य** - இன்று, **जगत्** - உலகம், **अरावणम्**-ராவணனற்றதாகவோ, **अरामं वा**-ராமனற்றதாகவோ, (**भवेत्**) - ஆகும்,' **इति** - என, **निश्चितः** - நிச்சயித்தவனாக, **पुनः** - மறுபடியும், **युद्धाय** - யுத்தம் செய்வதற்காக, **मन्दिरात्** - வீட்டினின்றும், **निर्ययौ** - வெளி வந்தான்.

(க-து) கும்பகர்ணன், இந்திரஜித் முதலான ராக்ஷஸர் தலைவர்கள் எல்லோரும் இறந்தபின் துணையற்றிருந்த ராவணன், தன்னைத் தவிர வேறு எவரும் போர் செய்யத் தகுந்தவர்களில்லாததைக் கண்டு, தானே நகரைவிட்டு வெளியில் வந்தான். ராமரைக் கொல்வது, அல்லது அவரால் தான் கொல்லப்படுவது என்ற இரண்டில் ஒன்று இப்பொழுது நிச்சயமாக வேண்டுமென உறுதி செய்து கொண்டு புறப்பட்டான். வெற்றியோ தோல்வியோ நிர்ணயிக்கப்பட வேண்டும் என்பது அவனது கருத்து.

**पुनः** - 'மறுபடியும்'. இதற்கு முன்பும் ராவணன் யுத்த பூமிக்கு வந்துள்ளான் என்பது குறிப்பிடப் படுகிறது. ராவணன் மூன்று முறை யுத்தகளத்திற்கு வந்து சண்டை செய்ததாக ராமாயணம் கூறும். அவன் இரண்டு முறை வந்ததாக காளிதாஸர் வருணிக்கின்றார். ராவணன் வீசிய வேல் லக்ஷ்மணன் மேல் பாய்ந்த பொழுது, '**अरावणमरामं वा जगद्द्रक्ष्यथ वानराः**'[100-48] எனச் சீற்றம் கொண்டு ராமர் கூறியதாக உள்ளதைக் கவி இங்கே ராவணன் சொல்வதாகக் கூறியது கவனிக்கத் தக்கது; ராவணன், **अरामं**-என்ற சொல்லை

முதலில் வைக்க வேண்டியிருக்க, अरावणम्-என்று தொடங்கியது, இனி நேரப்போவதைக் காட்டும் துர்நிமித்தமாக எண்ணப்படவேண்டும். 'जेतव्यमिति काकुत्स्थः मर्तव्यमिति रावणः' [107-7] என வால்மீகி கூறியுள்ளதைக் காண்க.

राम पदातिमालोक्य लङ्केशं च वरूथिनम् ।
हरियुग्यं रथं तस्मै प्रजिघाय पुरंदरः ॥ ८४ ॥

पदातिम् - (தரையிலே) நடக்கின்ற, रामम् - ராமரையும், वरूथिनम् - தேருடனிருக்கின்ற, लङ्केशम् च - ராவணனையும், आलोक्य - கண்டு, पुरन्दरः - இந்திரன், हरियुग्यम् - பொன் னிறக் குதிரைகள் பூட்டிய, रथम् - தேரை, तस्मै - அவ்விராமருக்கு, प्रजिघाय - அனுப்பினான்.

(க-து) ராவணன் ரதத்திலும், ராமர் தரையிலும் நின்று சண்டையிட்டதைக் கண்ட தேவர்கள், 'இது ஸமமான யுத்தமல்ல' என்று கருதியதால், இந்திரன் தனது ரதத்தை ராமருக்கு அனுப்பினான்.

पदातिः-வாஹனமின்றித் தரையில் நடந்து செல்பவர். पद् - கால்கள் ; वरूथ - ரதங்கள் ஒன்றோடொன்று மோதாமல் இருப்பதற்காக ரதத்திற்கு முன்னும் பின்னும் அமைக்கப்பட்டுள்ள மரம் ; இங்கு இச்சொல் அதையுடைய ரதத்தைக் குறித்தது. पुरन्दरः - இந்திரன், பகைவர்களின் நகரை அழிப்பவன் என்பது பதப்பொருள் ; हरि - பொன் னிறமான.

'त्वक्केशवालरोमाणि सुवर्णाभानि यस्य तु । हरिः स वर्णतोऽश्वः स्यात् पीतकौशेयसप्रभः ॥' என்பதைக் காண்க. हरिभिः सूर्यसंकाशैः - என வால்மீகியும் இந்திரனது குதிரைகளை விசேஷித்தார். युग्य - ரதத்தை இழுக்கின்ற காளை அல்லது குதிரை; हरि - என்பதற்குக் குதிரை என்ற பொருள் கொண்டு, 'हरियुग्य - குதிரைகளை ரதமிழுப்பன

வாகக் கொண்ட,' என்றும் பொருள் கூறுவர். இந்திரனது தேர்க்குதிரைகளின் நிறம் பொன்னிறமென்பர்.

तमाधूतध्वजपटं व्योमगङ्गोर्मिवायुभिः ।
देवसूतभुजालम्बी जैत्रमध्यास्त राघवः ॥ ८५ ॥

राघवः - ராமர், व्योम-गङ्गा ऊर्मि-वायुभिः - ஆகாச கங்கையினது அலைகளின் காற்றினாலே, आधूत-ध्वजपटम् - அசைக்கப்பட்ட கொடித் துணிலையயுடையதும், जैत्रम् - வெற்றி கொள்வதுமான. तम् - அந்த ரதத்தில், देवसूत-भुज-आलंबी - மாதலியின் தோளைப் பிடித்துக் கொண்டு, अध्यास्त - (ஏறி) அமர்ந்தார்.

(க-து) இந்திரன் அனுப்பிய ரதத்தில் மாதலி கைலாகு கொடுக்க ஏறி அமர்ந்தார். தேவருலகினின்றும் வரும்பொழுது அந்த ரதத்தின் கொடித்துணி மீது, ஸ்வர்க்கத்தில் பிரவஹிக்கின்ற கங்கையின் அலைகளினின்றும் எழுந்த குளிர்ந்த காற்று வீசியது.

தேவகங்கையின் குளிர்ந்த காற்று வீசியது சுபசகுனமென்பர்; அதனால் தேருக்கு जैत्रम् - என்ற அடைமொழி கொடுத்தார். தேவரதம் பூமியை ஸ்பர்சிக்காதாகையால் மாதலி கை கொடுத்து ராமரை ரதத்திலே ஏற்றுவித்தான் என்பதை, देवसूतभुजालंबी-என்பதால் காட்டினர்.

'आधूतेत्यादिविशेषणमागमनसमयसंभविशुभसूचकम् । देवसूतभुजालंबी—भूमिमस्पृशतो दिव्यस्य रथस्यारोहणे मातलिना देवराजबहुमानेन भुजावलंबो दत्त इत्यर्थः' अरुणगिरिः ।

मातलिस्तस्य माहेन्द्रमामुमोच तनुच्छदम् ।
यत्रोत्पलदलक्लैब्यमस्त्राण्यापुः सुरद्विषाम् ॥ ८६ ॥

यत्र - எந்தக் கவசத்தின் மேல், सुरद्विषाम् - அஸுரர்களின், अस्त्राणि - அஸ்த்ரங்கள், उत्पलदल क्लैब्यम् - நீலோத்

பல இதழ்களின் பலமற்ற தன்மையை, आपुः - அடைந்தனவோ, तम् - அத்தகைய, माहेन्द्रम् - மஹேந்திரனுடைய தான, तनुच्छदम् - கவசத்தை, मातलिः - மாதலி, तस्य-ராமருக்கு, आमुमोच - அணிவித்தான்.

(க-து) மாதலி, இந்திரனுடைய கவசத்தை ராமருக்கு அணிவித்தான். முன்பு இந்திரன் தேவாஸுர யுத்தத்தில் போர் செய்த காலத்து, அஸுரர்கள் எறிந்த அம்புகள் எல்லாம் அவனணிந்திருந்த கவசத்தின் மேல் படும்பொழுது தாமரை இதழ் போல் பலமற்றனவாயின. அத்தகைய உறுதி பெற்றுள்ளது அக்கவசம்.

'ராவணனும் அவனைச் சேர்ந்தவர்களும் எறிந்த அம்புகள் ராமர் அணிந்திருந்த கவசத்தின் மேல் பட்டுத் திறமையற்றனவாயின' என்றும் உரைப்பர்.

माहेन्द्रम् - இந்திரனுடைய தேகத்தில் பொருந்திய கவசம் ராமரது உடலுக்கும் பொருத்தமாயிருந்த தென்பது தெளிவு; இதனால் ராமரது உடல் வனப்புப் புலனாகும்.

कवचं चाग्नि सन्निभम्। எனக் கவசத்தை ஸ்ரீமத் ராமாயணம் கூறும்.

अन्योन्यदर्शनप्राप्तविक्रमावसरं चिरात् ।
. रामरावणयोर्युद्धं चरितार्थमिवाभवत् ॥ ८७ ॥

चिरात् - வெகு காலத்திற்குப் பின், अन्योन्य-दर्शन-प्राप्त-विक्रम-अवसरम् - ஒருவரை ஒருவர் காண்பதால் (சந்தித்தலால்) அடையப் பெற்ற பராக்ரம ஸந்தர்ப்ப முடைய, रामरावणयोः युद्धम् - ராமராவணர்களின் யுத்தமானது, चरितार्थम् - பயனுடையதாக, अभवदिव-ஆயிற்றுப் போலும்!

(க-து) சிறந்த வீரர்களான ராவணனும் ராமரும் வெகு காலத்திற்குப்பின் தமக்கு ஒத்த பகைவனைச் சந்தித்தலால் தமது முழு பராக்ரமத்தைக் காண்பிக்க ஒரு வாய்ப்புப் பெற்றனர். எனவே, அவ்விருவரது வீரத்தை முற்றிலும் காண்பதற்குக் காரணமான அவ் யுத்தம்

உண்மையிலே ஒப்பற்றதாய் இருந்து கொண்டு, யுத்தம் என்ற சொல்லின் முழுப் பொருளையும் உடையதாக இருந்தது.

'रामरावणयोर्युद्धं रामरावणयोरिव' [யு.107-52]என வால்மீகி கூறியதை ஒட்டிவந்தது இச்சுலோகம். ராவணனும் பலருடன்போர்செய்துள்ளான். ஆனால் அவர்கள் எல்லோரும் அவனுக்குச் சமமான எதிரிகளல்லராதலால் ராவணன், தனது பராக்ரமம் முழுவதும் காட்டும்படியான ஸந்தர்ப்பம் பெறவில்லை. அதேபோல் ராமர், கரன், விராதன், கும்பகர்ணன் முதலிய அரக்கரைக் கொன்றிருந்தபோதிலும் தமது முழு வீரத்தையும் காட்ட வாய்ப்புப் பெற்றாரில்லை. ஆகையால் சிறந்த பராக்ரமமுள்ள ராமர் ஒத்த பலமுள்ள ராவணனை வெகுகாலத்திற்குப் பிறகே கண்டதால் இருவருக்கும் அவர்களது பராக்ரமத்தை முற்றிலும் காட்டச் சந்தர்ப்பமளித்த இந்தயுத்தம் வீரர்களால் கொண்டாடத் தக்கதாயிருந்தது.

भुजमूर्धोरुबाहुल्यादेकोऽपि धनदानुजः ।
ददृशे ह्ययथापूर्वो मातृवंश इव स्थितः ॥ ८८ ॥

अयथापूर्वः - முன்போலில்லாதவனும், भुज-मूर्ध-ऊरु-बाहुल्यात् - புஜங்கள், தலைகள், தொடைகள் இவைகளின் பன்மை காரணமாக, एकोऽपि-ஒருவனாக (தனியனாக) இருப்பினும், धनदानुजः - ராவணன், मातृवंशे-(அவனது) தாயின் இனத்தவரிடையில், स्थितः इव - நிற்பவன் போல், ददृशे-காணப்பட்டான்.

(க-து) அரக்கர் பலரும் மாண்டதால் ராவணன் முன்போல் சுற்றத்தாராலும், மக்களாலும், அரக்கர்களாலும் சூழப்படாது, யுத்த பூமியில் தனியேநின்று கொண்டு போர் புரிந்தான். ஆயினும், அவன் இருபதுகைகளும், பத்துத்தலைகளும் நான்கு கால்களுமுடையவனாக இருந்ததால் ஒருவனாயிருப்பினும், அவனது தாய் இனத்தவரான

அரக்கர்களிடையில் நிற்பவன் போல் பார்ப்பவர் கண்களுக்குத் தென் பட்டான்.

'ऊरुबाहुल्यात्'-'दशास्यो विंशतिभुजः चतुष्पान्मानमन्दिरः। लंकेश्वरो यातुपतिः सन्नाहोऽस्य विलोचकः' என்ற வைஜயந்தி நிகண்டுவை ஆதாரமாகக் கொண்டு ராவணனுக்குக் கால்கள் நான்கு என்பர் உரையாசிரியர்கள். வால்மீகி ராவணனது உருவத்தை வர்ணிக்குங்கால், दशास्यो विंशतिभुजः - என இருமுறை கூறுகின்றார். 'ராவணன் நான்கு கால்களுடைய வன்' என வைஜயந்தி நிகண்டு கூறியதற்கு ஆதாரம் வாயு புராணமாக இருக்கலாமெனத் தோன்றுகிறது. ராக்ஷஸர்கள் எல்லோருமே குரூபிகள் எனப் பொதுவாகக் கூறி உதாஹரணம் காட்ட ராவணனை வர்ணிக்குமிடத்தில் கீழ்வரும் சுலோகம் அப்புராணத்திலுள்ளது.

'शंकुकर्णो दशग्रीवः पिंगलो रक्तमूर्धजः।
चतुष्पाद् विंशतिभुजो महाकायो महाबलः॥
निसर्गाद् दारुणः क्रूरः रावणाद् रावणस्तु सः' [வாயுபுராணம்: அத். 70, சு. 42-44.]

'भुजानाम् मूर्ध्नां च, उरु-अत्यन्तम्, बाहुल्यात् बहुलत्वात्'- என்று உரை இடுவதும் உண்டு. 'भुजोत्तमांगबाहुल्यात्'-என்ற பாடபேதம் சிலர் கொள்கின்றனர்.

मातृवंशः - என்று பாடம் கொண்டு, 'ராக்ஷஸர்களின் கூட்டமே எதிரில் நிற்பது போல்' ராவணன் காணப்பட்டான் என்பர் சிலர். 'हतपरिवारः सन्नपि रावणः एक एव भुजादिबाहुल्यात् पुरःस्थितराक्षसलोक इवादृश्यतेति।...तथा च प्रवरसेनः—निश्शेषनिहतबन्धुः स एकोऽपि बहुभुजो दुष्प्रेक्ष्यः। भीषणमुखसंघातो राक्षसलोक इव निर्गतो दशवदनः॥' [15-40] अरुणगिरिः॥

जेतारं लोकपालानां स्वमुखैरर्चितेश्वरम् ।
रामस्तुलितकैलासमरातिं बह्वमन्यत ॥ ८९ ॥

**लोकपालानाम्** - திக்பாலகர்களை எல்லாம், **जेतारम्** - வென்றவனும், **स्वमुखैः** - தன்தலைகளால், **अर्चित-ईश्वरम्** - சிவபிரானை அர்ச்சித்தவனும், **तुलित-कैलासम्** - கைலாஸ மலையைத் தூக்கியவனுமான, **अरातिम्** (தமது) பகைவன் ராவணனை, **रामः** - ராமர், **बहु अमन्यत** - மிக மதித்தார்.

(க-து) ராவணன் திக்பாலகர்களை எல்லாம் வென்றவன். தன் தலைகளை ஒவ்வொன்றாக அறுத்து அக்னியில் ஹோமம் செய்து சிவபிரானை மகிழ்வித்தவன்; கைலாஸ மலையையும் பெயர்த்தவன். இத்தகைய வீரமுள்ள ராவணனை நேரில் கண்ட பொழுது, தமக்குத் தகுந்த பகைவனே எதிரிலே வந்துள்ளான் என அறிந்து ராமர் அவனது வீரத்தை மனத்திலே மதித்தார்.

**जेतारं लोकपालानाम्** - என்பதால் ராவணனது பராக்ரமமும், **स्वमुखैरर्चितेश्वरम्** - என்பதால் மனோ தைர்யமும் வர ப்ரபாவமும், **तुलितकैलासम्** - என்பதால் புஜபலமும் கூறப்பட்டன.

ராவணன் தன் தலைகளை அறுத்துச் சிவபிரானை மகிழ்வித்தது.

ராவணன் தவம் செய்வதற்காகக் கோகர்ணாச்ரமம் சென்று பஞ்சாக்னி மத்தியில் நின்று பதினாயிரம் வருஷம் தவமியற்றினான். ஒவ்வொரு ஆயிரம் வருஷங்கள் முடிவிலும் தன் தலைகளை ஒவ்வொன்றாக அறுத்து ஆஹுதி செய்தான். இவ்வாறு ஒன்பது தலைகளையும் ஒன்பதாயிரவருஷங்களில் அறுத்தபின் பத்தாவது ஆயிரம் வருஷமுடிவில் மிஞ்சியுள்ள பத்தாவது தலையையும் அறுக்க முயன்றான். அப்பொழுது பிரம்மதேவர் அவன் முன் தோன்றி அவன் விரும்பிய வரத்தைக் கொடுத்தவுடன், அவன் இழந்த ஒன்பது தலைகளும் தோன்றும்படி வரமளித்தார் என ராமா

யணம் கூறுகின்றது. ராவணன் இத்தகைய கொடிய தவத்தால் சிவபிரானை மகிழ்வித்ததாகக் கவி கூறினார்.

ராவணன் கைலாயத்தைத் தூக்கியது.

குபேரனிடமிருந்த புஷ்பக விமானத்தைக் கவர்ந்து கொண்டு வந்த ராவணன், கைலாயமலைக்குமேல் அவ்விமானம் செல்லாது தடையுற்று நின்றதைக் கண்டு யோசித்த பொழுது நந்தி, சிவபிரான் வசிக்கின்ற இம்மலைக்குமேல் யாரும் செல்லமுடியாதெனக் கூறினான். உடனே ராவணன் கோபங்கொண்டு அம்மலையைப் பெயர்த்தெறிவதாகக் கூறித் தனது இருபது கைகளாலும் அம்மலையை அசைத்தான். மலை அசைவதை யுணர்ந்த சிவபிரான் தமது கால் கட்டை விரலால் அழுத்தவும் தன் கைகள் மலையினடியில் சிக்குறத் தவித்த ராவணன் ஓராயிரம் வருஷங்கள் ஸாமகானம் செய்து சிவபிரானை மகிழ்வித்து விடுதலை பெற்றான்.

तस्य स्फुरति पौलस्त्यः सीतासंगमशंसिनि ।
निचखानाधिकक्रोधः शरं सव्येतरे भुजे ॥ ९० ॥

अधिक क्रोधः - அதிகம் கோபமுடைய, पौलस्त्यः - ராவணன், स्फुरति - துடிப்பதும், सीता संगम-शंसिनि - ஸீதையின் சேர்க்கையைத் தெரிவிக்கின்றதுமான, तस्य - ராமருடைய, सव्येतरे - வலது, भुजे-தோளில், शरम् - பாணத்தை, निचखान - புதைத்தான்.

(க-து) ராவணன் மிகக் கோபம் கொண்டவனாய் ராமரது வலது தோளில் பாணத்தினால் அடித்தான்.

யுத்தத் தொடக்கத்தில் ராமருக்கு நேர்ந்த சுப நிமித்தத்தை, 'स्फुरति' என்ற சொல் காட்டுகின்றது. வலது தோள் துடிப்பது நற்சகுனமாகும். 'वामेतरभुजस्पन्दो वरस्त्रीलाभसूचकः' என்பர். ராமரது வலது தோள் துடிப்பு, அவ

ருக்கு வெகு சீக்கிரத்திலேயே ஸீதையுடன் சந்திப்பு நேரப் போகின்ற தென்பதைக் காட்டியது.

रावणस्यापि रामास्तो भित्त्वा हृदयमाशुगः ।
विवेश भुवमाख्यातुमुरगेभ्य इव प्रियम् ॥ ९१ ॥

**राम-अस्तः** - ராமரால் பிரயோகிக்கப் பட்ட, **आशुगः** - **अपि** - பாணமும், **रावणस्य**-ராவணனுடைய, **हृदयम्**-மார்பை, **भित्त्वा** - பிளந்து கொண்டு, **उरगेभ्यः** - நாகர்களுக்கு, **प्रियम्** - பிரியமான செய்தியை, **आख्यातुम्-इव** - சொல்வதற்கு (விரும்பியது) போல், **भुवम्** - பூமிக்குள், **विवेश** - புகுந்தது.

(க-து) ராமர் பிரயோகித்த பாணம், ராவணனது மார்பைப் பிளந்த பின்பும் தனது வேகம் குன்றாததால் பூமியில் புதைந்தது; அவ்வாறு பூமியினுள் சென்ற பாணம், நாகலோகத்திலுள்ள ஸர்ப்பங்களுக்கு ராவணவதமாகிய ஸந்தோஷச் செய்தியைக் கூறச் சென்றது போலும் என உத்ப்ரேக்ஷித்தார்.

ராவணன் அழகான நாக கன்னிகைகளை எல்லாம் கவர்ந்து வந்ததால் அவனது சாவு நாகர்களுக்கு மனமகிழ்ச்சியைத் தருவதாக இருந்தது. நாகலோகம் பூமிக்கு அடியிலுள்ளதென்பர்.

वचसैव तयोर्वाक्यमस्त्रमस्त्रेण निघ्नतोः ।
अन्योन्यजयसंरम्भो ववृधे वादिनोरिव ॥ ९२ ॥

**वाक्यम्** - (ஒருவர் கூறும்) வாக்கியத்தை, **वचसा** - சொற்களால், **इव** - (மறுப்பது) போல், **अस्त्रम्**-(ஒருவரது) அஸ்த்ரத்தை, **अस्त्रेण** - அஸ்த்ரத்தினால், **निघ्नतोः** - அடிக்கின்ற, **तयोः** - அவ்விருவருக்கும், **वादिनोः इव** - வாதம் செய்கின்ற இருவர்களுக்கு (இருப்பது) போல், **अन्योन्य-जयसं-**

रणः ஒருவரை யொருவர் வெல்வதில் ஊக்கமானது, वबृधे- விருத்தியடைந்தது.

(க-து) சொற்போர் புரிகின்ற இரு அறிஞர்களில் ஒருவர் கூறுவதை மற்றவர் தமது யுக்தியுடன் கூடிய சொற்களால் மறுத்து வெற்றியடைய விரும்புவது போல் ராமரும் ராவணனும், ஒருவர் அம்பை மற்றவர் தமது அம்பால் தடுத்து வெற்றியடைவதில் மிக ஊக்கமுடையவராக இருந்தனர்.

ராம ராவணர்களுக்கு உபமானம் வாதம் செய்கின்ற இரு அறிஞர்கள். வாதமாவது, ஒரு பொருளை நிலைநாட்ட விரும்பித் தக்க ஆதாரம் (பிரமாணம்) காட்டல், சாஸ்திரங் களிலே கூறியுள்ள கொள்கைக்குக் கட்டுப்பட்டு யுக்திகளைக் கூறுதல் முதலியன கொண்டுள்ள விவாதம்; வெற்றுக் கூச் சல் அன்று.

विक्रमव्यतिहारेण सामान्याभूद्द्वयोरपि ।
जयश्रीरन्तरा वेदिर्मत्तवारणयोरिव ॥ ९२ ॥

वेदिः-மேடையானது, मत्तवारणयोः इव - மதங்கொண்ட யானைகளிரண்டிற்கும், अन्तरा - இடையிலே, (பொதுவாக இருப்பது) போல், जयश्रीः-வெற்றி என்னும் லக்ஷ்மி, विक्रम- व्यतिहारेण - பராக்ரம மாற்றத்தினால் (மாறி மாறி இருந்த லால்), द्वयोः अपि - அவ்விருவருக்கும், अन्तरा - இடையிலே सामान्या - பொதுவாக, अभूत् - இருந்தாள்.

(க-து) யானைகளைச் சண்டைக்கு விடுகின்றவர்கள் இரண்டு யானைகளுக்கிடையில் சக்கரங்கள் அமைக்கப்பட்ட மரமேடையை வைத்து முட்டவிடுவர். முட்டுகின்ற இரண்டு யானைகளின் நடுவிலே மேடை இருப்பதுபோல், ராமராவணர்கள் சண்டையிடும் பொழுது வெற்றியும் ஒருவரிடமும் சாராது, பொதுவாக நின்றது. ஏனெனில் ஒரு சமயம் ராமரும், மற்றொரு சமயம் ராவணனும் அதிக பலமுடை யவர்களாகத் தென்பட்டனர். எனவே ஜயலக்ஷ்மி யாரையடைவ தென நிச்சயிக்க முடியாமல் இருந்தாள்.

வெற்றியையும் தோல்வியையும் நிச்சயிக்க முடியாதபடி இருவரும் கடுமையாகப் போரிட்டனர் என்பது கருத்து.

காளிதாஸரின் பொருள்விளங்காச் சுலோகங்களில் இதுவுமொன்று; இச்சுலோகத்திலுள்ள உபமானம் அறியக் கூடியதாக இல்லை. காளிதாஸரிடம் விசேஷ அன்பு கொண்ட வேதாந்த தேசிகரும் தமது காவ்யத்திலே இச் சுலோகத்தின் கருத்தை உபமானத்தை மாத்திரம் நீக்கிக் கூறியுள்ளார். 'कस्य केन परिभूतिरापतेत् कश्च वेद रणवर्तनी-मिति। सन्दिहानमनसैव तत्क्षणं मध्यसीम्नि विजयश्रिया स्थितम्॥' [यादव-17-16]

वेदिः - மேடை என்றும், சுவர் என்றும் உரையாசிரியர்கள் கூறும் பொருள் பொருந்தாதாதலால் இடத்திற்குச் சேர, வெறும் மேடை என்னாது 'சக்காமமைந்த மர மேடை' என்ற பொருள் கொள்ளப்பட்டது. இரண்டு யானைகள் ஒன்றை ஒன்று தாக்கினால் பலமற்றது இறந்து படுமாதலால் இடையிலே மேடை வைத்து அதைத் தள்ளச் செய்து யானைகளின் பலம் நிர்ணயிக்கப் படலாமெனத் தோன்றுகிறது. வேதியும் நடுவிலே குழிந்து, அடியிலும் மேலும் அகன்று இருக்குமாதலால் யானைகள் தங்களுடைய நீண்ட தந்தங்களுக்கு ஊறு இன்றித் தலையினால் முட்ட இயலும்.

"பராக்ரமம் மாறிமாறிக் காணப்பட்டதால் வெற்றித் திரு ஒருசமயம் ராவணனிடமும் மற்றொரு சமயம் ராமரிடமும் சென்றாள். ஒருவரிடத்தே நிலையாக நிற்கவில்லை" என்றும் கருத்துரைப்பர்.

कृतप्रतिकृतप्रीतैस्तयोर्मुक्तां सुरासुरैः ।
परस्परशरत्राताः पुष्पवृष्टिं न सेहिरे ॥ ९४ ॥

**कृत-प्रतिकृत प्रीतैः** - (பாணம்) பிரயோகித்தல், தடுத்தல் என்ற செய்கைகளால் மகிழ்ந்த, **सुर-असुरः** - தேவர்களாலும் அஸுரர்களாலும், **तयोः** - (முறையே) அவ்விருவர் மேலும், **मुक्ताम्** - போடப்பட்ட, **पुष्पवृष्टिम्** - பூமாரியை, **परस्पर-शर-व्राताः** - ஒருவர்க்கொருவர் (பிரயோகித்த) அம்புக் கூட்டங்கள், **न सेहिरे** - பொறுக்கவில்லை.

(க-து) யுத்தத்தைக் காண வந்த தேவர்களும் அஸுரர்களும், ராம ராவணர்களின் பாண ப்ரயோகத்தையும், ஒருவர் பிரயோகித்த பாணங்களைத் திறமையுடன் மற்றவர் தடுப்பதையும் பார்த்து மகிழ்ச்சி கொண்டவர்களாய்ப் புஷ்பங்களை இறைத்தனர். ஆனால் ராமரும் ராவணனும் பிரயோகித்த அம்புகள் இடையிலே வந்து அம் மலர்களை அவர்கள் மேல் விழாதவாறு செய்தன.

'அம்புமாரிமுன் புஷ்பமாரி எதற்கு?' எனப் பாணங்கள் கருதின போலும்! ராமாது பராக்ரமத்தை வியந்து தேவர்கள் பூமாரி பொழிந்தனர். ராவணனை மெச்சி அஸுரர்கள் புஷ்பங்களைச் சொரிந்தனர் எனக் கொள்ளவேண்டும்.

अयश्शङ्कुचितां रक्षः शतघ्नीमथ शत्रवे ।
हृतां वैवस्वतस्येव कूटशाल्मलिमक्षिपत् ॥ १९ ॥

**अथ** - பிறகு, **रक्षः** - ராக்ஷஸன், **अयः-शङ्कु चिताम्** - இரும்பு ஆணிகள் நிறைந்ததும், **हृताम्** - (யமனை வென்று) கொண்டுவந்ததும், **वैवस्वतस्य** - யமனுடைய, **कूटशाल्मलिम् इव- (स्थिताम्)** - கூடசால்மலி போல் இருந்ததுமான, **शतघ्नीम्** - சதக்னியை, **शत्रवे** - சத்ருவான ராமரைக் கொல்வதன் பொருட்டு, **अक्षिपत्** - எறிந்தான்.

(க-து) ராவணன் 'சதக்னீ' என்ற ஆயுதத்தை ராமர் மேல் வீசினான்; யமனை வென்று கொண்டு வந்த 'கூடசால்மலி' போலிருந்தது அச்சதக்னி.

சதக்னி-ஒரு வகை ஆயுதம்; இரும்பு ஆணிகள் நிறைந்த இரும்புத்தடி; இதை நூற்றுவர் கொல்லி எனத் தமிழ்க்

காவ்யங்களிலே கூறுவர். இவ்வாயுதத்திற்கு உபமானமாக வந்தது, யமனது கூடசால்மலி என்ற ஆயுதம்; कूटशाल्मलिः- முள்ளிலவுமரம்; இரும்பு ஆணிகள் நிறைந்து முள்ளிலவு மரம்போல் இருந்ததால் அவ்வாயுதமும் கூடசால்மலி எனப் பெயர் பெற்றது; कूट - இரும்பிலானது எனினுமாம்; பாபிகளை யமன் இவ்வாயுதத்தின் மேல்வைத்துத் தேய்த்து இழுக்கின்றான் என ஸ்ரீ பாகவதம் கூறும்.

राघवो रथमप्राप्तां तामाशां च सुरद्विषाम् ।
अर्धचन्द्रमुखैर्बाणैश्चिच्छेद कदलीसुखम् ॥ ९६ ॥

राघवः - ராமர், रथम् - (தமது) ரதத்தை, अप्राप्ताम् - அடையாததான, ताम् - அந்தச் சதக்னியையும், सुरद्विषाम्- அஸுரர்களின், आशाम् च - (வெற்றியில்) நம்பிக்கையையும், अर्धचन्द्रमुखैः - பிறைச் சந்திரன் போல் முனையுள்ள, बाणैः - பாணங்களால், कदलीसुखम् - வாழையை (வெட்டுவது) போல் எளிதாக, चिच्छेद - துணித்தார்.

(க-து) ராமர், அச்சதக்னி தமது ரதத்தை அணுகு முன்பே அர்த்தசந்திரன் போல் முனையுள்ள பாணங்களால், வாழை மரத்தை வெட்டுவது போல் எளிதிலே அதை வெட்டி வீழ்த்தினார். சதக்னியை ராவணன் வீசியபொழுது அஸுரர்கள் எல்லோரும் நிச்சயம் ராமர் வெல்லப்படுவார் என எண்ணினர். சதக்னி முறிந்தவுடன் அவர்களது நம்பிக்கையும் முறிந்தது. இவ்வகையில், சதக்னியைத் துணித்த ராமர் அஸுரர்களின் மனோரதமும் முறியும்படி செய்தார்.

अमोघं संदधे चास्मै धनुष्येकधनुर्धरः ।
ब्राह्ममस्त्रं प्रियाशोकशल्यनिष्कर्षणौषधम् ॥ ९७ ॥

एकधनुर्धरः - ஒப்பற்ற வில் வீரரான ராமர், प्रिया-शोक-शल्य निष्कर्षण-औषधम् - தமது காதலியின் துக்கமாகிய சல்யத்தை வெளி எடுப்பதன் மருந்தாக உள்ளதும், अमोघम् -

வீண்போகாததுமான, ब्राह्मम्-अस्त्रम् - பிரம்மாஸ்த்ரத்தை, अस्मै च - அவன் பொருட்டு, धनुषि - வில்லில், सन्दधे - தொடுத்தார்.

(க-து) ராவணனைக் கொல்வதற்காக ராமர் முடிவில் பிரம் மாஸ்த்ரத்தைத் தமது வில்லில் பூட்டினார்.

பிரம்மாஸ்த்ரம் திண்ணமாய் ராவணனைக் கொல்லப் போவதால் அதை, ஸீதையின் மனத்துள்ள துக்கமாகிய சல்யத்தை எடுக்கும் மருந்தாக உருவகம் செய்தார்.

சல்யம்-பாணத்தின் முனை. சாமணம் கொண்டும் எடுக்க முடியாதபடி உடலிலே புகுந்துள்ள முள் முதலியவற்றை ஔஷதங்களைக் கொண்டு வெளிவரச் செய்தலுண்டு. ஹநு மார் கொண்டு வந்த ஔஷதிகளில் விசல்யகரணி என ஒன்று இருத்தலைக் காண்க.

तद्व्योम्नि दशधा भिन्नं ददृशे दीप्तिमन्मुखम् ।
वपुर्महोरगस्येव करालफणमण्डलम् ॥ १८ ॥

व्योम्नि - ஆகாயத்தில், दशधा-பத்தாக, भिन्नम्-(பிரிந்து) பரவியதும், दीप्तिमन्मुखम् - ஜ்வலிக்கின்ற முனையுடையது மான, तत् - அந்த அஸ்த்ரமானது, करालफणमण्डलम् - பயங்கரமான படங்களையுடைய, महोरगस्य वपुः इव - பெரிய ஸர்ப்பத்தின் உடல் போல், ददृशे-பார்க்கப் பட்டது.

(க-து) ராமர் அபிமந்திரித்துப் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோ கித்தவுடன், வெட்டப்பட வேண்டிய தலைகள் பத்தாதலால், ஜ்வலிக் கின்ற பத்து முனைகளுடன் அஸ்த்ரம் ஆகாயத்தினூடே சென்றது. அவ்வாறு வேகமாகப் பாய்ந்து சென்ற அது, பயங்கரமான பத்துத் தலைகளுடன் கூடிய ஸர்ப்பத்தின் உடல் போலிருந்தது.

महोरगः - ஆதிசேஷன் என்றும் உரைப்பர்.

तेन मन्त्रप्रयुक्तेन निमेषार्धादपातयत् ।
स रावणशिरःपङ्क्तिमज्ञातव्रणवेदनाम् ॥ ९९ ॥

**सः** - *ராமர்*, **मन्त्र प्रयुक्तेन** - (*பிரம்மாஸ்த்ர*) *மந்த்ரத்துடன் பிரயோகிக்கப்பட்ட*, **तेन** - *அந்த அஸ்த்ரத்திலை*, **अज्ञात व्रण-वेदनाम्** - *அறியப்படாத விரண வலியையுடைய*, **रावण-शिरः-पङ्क्तिम्** - *ராவணனது தலைகளின் வரிசைகளை*, **निमेष-अर्धात्** - *அரைநொடியிலே*, **अपातयत्** - *கீழே வீழ்த்தினர்.*

(*க-து*) *அபிமந்த்ரணம் செய்து பிரயோகிக்கப்பட்ட அந்த அஸ்த்ரத்திலல் ராவணனது பத்துத் தலைகளையும் அரை க்ஷணத்தில் அறுத்துத்தள்ளினர். அரைநொடியிலே துணிக்கப்பட்டதால் அறுப்பதாலே உண்டாகும் வலியை அத்தலைகள் உணரவேயில்லை. வலியையுணர்வதற்கு முன்பே தலைகள் கீழே வீழ்ந்தன.*

**निमेष**-*கண்ணிமைக்கும் நேரம்: ஒரு நொடிப்பொழுது.* **अर्धनिमेष** - *அரை நொடி*; **निमेषः** - *நான்கு விநாடி என்ற பொருளும் உண்டு;*

बालार्कप्रतिमेवाप्सु वीचिभिन्ना पतिष्यतः ।
रराज रक्षःकायस्य कण्ठच्छेदपरम्परा ॥ १०० ॥

**पतिष्यतः** - (*தரையில்*) *விழப்போகின்ற*, **रक्षः-कायस्य** - *ராவணனது உடலின்*, **कण्ठच्छेद-परम्परा** - *துணிக்கப்பட்ட கழுத்துக்களின் வரிசை*, **वीचिभिन्ना**-*அலைகளால் பலவாகச் செய்யப்பட்டதாய்*, **अप्सु** - *நீரிலே* (*தோன்றும்*), **बाल-अर्क प्रतिमा इव** - *இளம் சூரியனது பிரதிபிம்பம் போல்*, **रराज** - *தோன்றியது.*

(*க-து*) *ராவணனது தலைகள் கீழே வீழ்ந்தன; உடல் விழவில்லை; வெட்டப்பட்டு, ரத்தத்திலல் சிவந்து ஒன்றையடுத்து ஒன்றாக இருக்கின்ற வட்டமான பத்துக் கழுத்துக்களும், காலைவேளையில்*

நீரின் அலைகளது வரிசைகளிலே தனித்தனியே தோன்றும் இளஞ் சூரியனது பல பிரதிபிம்பங்கள் போல் காணப்பட்டன.

அறுப்புண்ட கழுத்துக்கள் ரத்தம் பெருக்குவனவாய்ச் சிவந்திருந்ததால் செந்நிறமுள்ள இளஞ்சூரியனை உவமையாகக்கூறினர். கழுத்துக்கள் பல வாதலால் அதற்குச் சேரச் சூரிய பிம்பங்களும் பல வெனக்காட்ட, वीचिभिन्ना - எனக் கூறினர். அலையற்ற நீர்நிலையில் ஒரே பிரதிபிம்பம் தான் தோன்றும். அலைகள் பலவாயின் பல உருவங்கள் தோன்றலாம்.

मरुतां पश्यतां तस्य शिरांसि पतितान्यपि ।
मनो नातिविशश्वास पुनःसंधानशङ्किनाम् ॥ १०१ ॥

पतितानि - கீழே விழுந்துள்ள, तस्य शिरांसि - ராவணனது தலைகளை, पश्यताम् अपि - பார்க்கின்றபொழுதும், पुनः - सन्धान शङ्किनाम् - மறுபடியும் இணைந்து கொள்ளுதலை எண்ணிய, मरुताम् - தேவர்களின், मनः - மனம், न अतिविश - श्वास - அதிகம் நம்பிக்கை கொள்ளவில்லை.

(க-து) தேவர்கள், ராவணன் தலை அறுக்கப்பட்டுக் கீழே விழுந்த பின்பும், மறுபடியும் அவைகள் உடலுடன் இணைந்து விடுமோ என நினைத்து, ராவணன் இறந்து விட்டான் என்பதை நம்புவதில் சிறிது தயக்க முடையவர்களாவே இருந்தனர்.

ராமர் வெட்டிய ஒவ்வொரு தலையும் பிரம்மவரம் காரணமாக உடலுடன் ஒட்டிக்கொண்டது! இவ்வாறு நூறு தடவை வெட்டிய பொழுதும் ராவணனது தலைகள் உடலுடன் ஒட்டிக் கொண்டன. இதைக் கண்டிருந்த தேவர்கள், 'முன்போல் தலைகள் ஒட்டிக்கொள்ளுமோ? யமனையும் வென்றவனல்லவோ இவன்! இவன் இறப்பானோ?' என நினைத்தனர். அவ்வாறு நம்பிக்கையற்று இருந்ததால்

தேவர்கள் ராமரது வீரத்தை மெச்சிப் பூமாரி பொழிய வில்லை; தேவ துந்துபியையும் முழக்கவில்லை என அழகு தோன்ற ஒரு கவி கூறுகின்றார்.

'प्रत्युज्जीवनशंकया यमजितो देवस्य लंकापतेः नो मुक्ताः कुसुमस्रजो न च सुरैरास्फालितो दुन्दुभिः'

கீழே விழுந்த தலைக்கு ஒப்பான தலை கழுத்தின் மேல் தோன்றியதாக ஸ்ரீமத்ராமாயணம் கூறுகின்றது. விழுந்த தலைகளை கழுத்துடன் இணைந்ததாகக் கவி இங்கே கூறியுள்ளதைக் காண்க. 'तच्छिरःपतितं भूमौ दृष्टं लोकैस्त्रिभिस्तदा। तस्यैव सदृशं चान्यद्रावणस्योत्थितं शिरः। एवमेव शतं छिन्नं शिरसां तुल्यवर्चसाम् ॥' [யுத்த-107-54, 55, 57]

अथ मदगुरुपक्षैर्लोकपालद्विपाना-
मनुगतमलिबृन्दैर्गण्डभित्तीर्विहाय ।
उपनतमणिबन्धे मूर्ध्नि पौलस्त्यशत्रोः
सुरभि सुरविमुक्तं पुष्पवर्षं पपात ॥ १०२ ॥

अथ - பிறகு, मद-गुरु-पक्षैः - மதஜல (ஸ்பர்ச)த்தினால் கனமான சிறகையுடைய, अलिबृन्दैः - வண்டுகளின் கூட்டத்தினால், लोकपाल-द्विपानाम् - திக்பாலகர்களுடைய யானைகளின், गण्डभित्तीः - விசாலமான கன்னங்களை, विहाय - விட்டு, अनुगतम् - பின்தொடரப் பட்டதும், सुरभि - நறுமணமுடையதும், सुरविमुक्तम् - தேவர்களால் தூவப்பட்டதுமான, पुष्पवर्षम् - பூமாரி, उपनतमणिबन्धे - ஸமீபித்துள்ள மகுடமுடைய, पौलस्त्य शत्रोः मूर्ध्नि - ராமரது சிரஸில், पपात - வீழ்ந்தது.

(க-து) அண்மையிலே முடிசூட விருக்கின்ற ராமரது சிரஸில், அவரது வீரத்தைப் புகழ்ந்து தேவர்கள் பூமாரி பொழிந்தனர். யுத்தத்தைக்காண வந்த திக்பாலகர்களது யானைகளின் கன்னங்களில் அமர்ந்து

மதஜல மணத்தை அனுபவித்துக் கொண்டிருந்த வண்டுகள், தேவர்கள் பொழிந்த புஷ்பங்கள் மிக மணமுடையவையாயிருந்ததால், மதஜலத்தை விட்டுப் புஷ்பங்களைப் பின் தொடர்ந்தன.

अथ - பிறகு- 'மற்றும் பலகாரணங்களைக் கொண்டு ராவணன் இறந்தான் என நிச்சயித்த பிறகு' என்று பொருள்.

मदजलगुरुपक्षैः - யானைகளின் மதநீர் ஸ்பர்சத்தினால் சிறகு நனைந்து பறக்க முடியாத நிலையிலும் வண்டுகள் பூ மணத்தினால் இழுக்கப்பட்டுப் பின் தொடர்ந்தன.

सुरभि - 'மதஜலவாஸனையைக் காட்டிலும் அதிக மணமுடைய,' என்பது பொருள். मणिबन्ध - ரத்னமிழைக்கப் பட்டது: கிரீடம் எனப்பொருள். ராமரது தலை தற்சமயம் கிரீட மில்லாததாயினும் வெகு சீக்ரத்திலேயே முடி சூட்டப் பெறுவது.

यन्ता हरेः सपदि संहृतकार्मुकज्य-
मापृच्छ्य राघवमनुष्ठितदेवकार्यम् ।
नामाङ्करावणशराङ्कितकेतुयष्टि-
मूर्ध्वं रथं हरिसहस्रयुजं निनाय ॥ १०३ ॥

हरेः - இந்திரனுடைய, यन्ता - தேரோட்டி மாதலி, सपदि - உடனே, संहृत-कार्मुकज्यम् - தளர்த்திய வில்லினது நாண் உடையவரும், अनुष्ठित-देवकार्यम् - தேவர்களின் காரியத்தைச் செய்து முடித்தவருமான, राघवम् - ராமரை, आपृच्छ्य - கேட்டு (விடைபெற்று), नाम-अङ्क-रावण शर-अङ्कित-केतुयष्टिम् - பெயர் பொறிக்கப்பட்ட ராவணனது பாணத்தினால் அடையாளமிடப்பட்ட கொடி மரமுடையதும், हरिसहस्र युजम् - ஆயிரம் குதிரைகள் பூட்டப்பெற்ற

தமான, रथम् - ரதத்தை, ऊर्ध्वम् - மேலே, निनाय-கொண்டு சென்றான்.

(க-து) தேவர்களின் விருப்பமான ராவணவதத்தைச் செய்தபின் வில்லின் நாணைத் தளர்த்தி விட்டு நின்ற ராமரிடம் விடைபெற்றபின் மாதலி இந்திரனது ரதத்தை ஸ்வர்க்கத்திற்குக் கொண்டு சென்றான். அந்த ரதத்தின் கொடி மரம் முழுவதும் ராவணனது பெயர்பொறித்த பாணங்கள் புதைந்திருந்தன.

हरिसहस्रयुजम् - இந்திரனது ரதத்தில் ஆயிரம் குதிரைகள் பூட்டியிருந்தன என்பது அதிசயோக்தி.

रघुपतिरपि जातवेदोविशुद्धां प्रगृह्य प्रियां
प्रियसुहृदि विभीषणे संगमय्य श्रियं वैरिणः।
रविसुतसहितेन तेनानुयातः ससौमित्रिणा
भुजविजितविमानरत्नाधिरूढः प्रतस्थे पुरीम् ॥ १०४ ॥

रघुपतिः अपि - ராமரும், जातवेदोविशुद्धाम् - அக்னியினாலே தூய்மை பெற்றுள்ள, प्रियाम् - காதலியை, प्रगृह्य - ஏற்று, प्रियसुहृदि - அருமை நண்பனான, विभीषणे-விபீஷணனிடத்தில், वैरिणः - பகைவன் ராவணனது, श्रियम् - செல்வத்தை, संगमय्य - சேர்ப்பித்து, रविसुत-सहितेन - ஸுக்ரீவனுடன் கூடியவனும், ससौमित्रिणा - லக்ஷ்மணனுடன் கூடியவனுமான, तेन - அவ்விபீஷணனால், अनुयातः - பின்தொடரப் பட்டவராக, भुज-विजित - विमानरत्न - अधिरूढः - (தமது) புஜபலத்தால் வெல்லப்பட்ட சிறந்த விமான (புஷ்பக)த்தில் ஏறியவராக, पुरीम् - அயோத்தி நகரை நோக்கி, प्रतस्थे - புறப்பட்டார்.

(க-து) அக்னிதேவன் ஸீதையின் தூய்மையை எடுத்துக் கூற ராமர் அவளை ஏற்று, விபீஷணனுக்கு லங்கையில் முடி சூட்டியபின் ஸுக்ரீவாதியருடன் புஷ்பகவிமானத்தில் ஏறி அயோத்திக்குப் புறப்பட்டார்.

ஸீதையின் அக்னிப் பிரவேசம்.

ராவண ஸம்ஹாரம் செய்தபின் ராமர் ஸீதையை அசோக வனத்தினின்றும் அழைத்து வரும்படி விபீஷணனுக்குப் பணிக்க, அவன் ஸீதையை ராமர் முன் அழைத்து வந்தான். அப்போது ராமர் அவளை நோக்கி, 'மனைவியைக் காப்பாற்றத் திறனின்றிப் பறிகொடுத்தான் என்ற வசை நீக்குவதற்கே உன்னை நான் மீட்டது. உன்னிடமுள்ள காதலாலன்று. உன் விருப்பப்படி எங்கு வேண்டுமானாலும் செல்லலாம்' எனக் கூற, அக்கடுஞ்சொல் தாங்காது ஸீதை, 'வீர! எவ்வளவு கடுமையாகப் பேசுகின்றீர்? எனது நடக்கையில் பிசகு சிறிதுமில்லை. நீர் என்னைக் கைவிட்டால் எனக்கு உயிர் விடுதலின்றி வேறுவழி இல்லை' எனக் கூறி இறக்கத் துணிந்தவளாய் லக்ஷ்மணனை அழைத்துத் தீமூட்டும்படி சொன்னாள். அவன் தயார் செய்த தீயில், 'நான் மனோவாக்குக் காயங்களினால் கணவர் திறத்தில் தவறு செய்யாதவளாக இருப்பின் அக்னிதேவன் என்னைப்பாதுகாப்பானாக' என்று சொல்லிப் புகுந்தாள். உடனே அக்னி தேவன் புருஷவடிவத்தில் தோன்றி ஸீதை தரித்திருந்த மாலையும் வாடாதபடி அவளை அழைத்து வந்து, 'ராமா! ஸீதை சிறிதும் குற்றமற்றவள்; இவளை நீ ஏற்கவேண்டு'மென வேண்ட, ராமர் ஸீதையை அங்கீகரித்தார்.

जातवेदोविशुद्धाम् - 'அக்னியிலே தூய்மை பெற்றவள்' என்றதற்கு, அக்னிதேவனால் நிரூபிக்கப்பட்ட தூய்மையுடையவள் எனப்பொருள். தூயவளான ஸீதையின்

தூய்மை அக்னிதேவனால் உலகத்தாருக்கு எடுத்துக் கூறப் பட்டதேயன்றி, அக்னி அவளுக்குப்புதியதொரு தூய்மையை அளிக்கவில்லை. "पापमस्यां न विद्यते, विशुद्धभावां निष्पापाम् प्रतिगृह्णीष्व राघव" [உத்தரம். 118-5, 10] என்று அக்னி தேவன் கூறியதைக் காண்க. प्रियसुहृदि - ராவணனை வெல் வதில் உபாயங்களைக் கூறி மிக உதவியதால் सुहृदि - என்று மாத்திரம் கூறாமல் प्रिय என்று விசேஷித்தார். விபீஷண அபிஷேகம் முன்பும் ஸீதையின் அங்கீகாரம் பின்பும் ராமா யணத்தில் கூறப்பட்டுள்ளது. भुज...अधि रूढः - பிரம்ம தேவர் புஷ்பகவிமானத்தைக் குபேரனுக்குக் கொடுக்க அதை ராவணன் கவர்ந்து கொண்டான். ராவணனை வென்ற காரணத்தால் அது ராமருக்கு இப்பொழுது உரியதாயிற்று.

इति महाकवि श्री कालिदासकृतौ
रघुवंशे द्वादशः सर्गः ॥



॥ श्रीः ॥

# रघुवंशे

## त्रयोदशः सर्गः

अथात्मनः शब्दगुणं गुणज्ञः पदं विमानेन विगाहमानः ।
रत्नाकरं वीक्ष्य मिथः स जायां रामाभिधानो हरिरित्युवाच ॥ १ ॥

**अथ** - (புறப்பட்ட) பிறகு, **गुणज्ञः** - (பொருள்களின்) தன்மைகளை அறிந்த, **सः** - அந்த, **रामाभिधानः** - ராமர் என்ற பெயரையுடைய, **हरिः** - விஷ்ணு, **शब्द-गुणम्** - ஒலியைத் தன் பண்பாகக் கொண்ட, **आत्मनः पदम्** - தமது, இடமாகிய ஆகாயத்தை, **विमानेन** - புஷ்பகவிமானத்தினால், **विगाहमानः**-பிரவேசிப்பவராய் (கடக்கின்றவராக), **रत्नाकरम्**-கடலை, **वीक्ष्य** - பார்த்து, **मिथः** - தனிமையில், **जायाम्**-மனைவியை (ஸீதையை நோக்கி), **इति** - இவ்வாறு, **उवाच** - கூறினார்.

(க-து) பகவான் விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீராமர் புஷ்பக விமானத்தில் ஸீதையுடன் ஆகாயத்திலே செல்லும் பொழுது, சமுத்திரத்தைக் கண்டு, அவளிடம் தனிமையில் இவ்வாறு கூறினார்.

பொருள்களின் தன்மைகளை நன்கு அறிந்தவர்தான் அப்பொருள்களைப் பற்றிப் பிறருக்கு எடுத்துக் கூற முடியுமாகையால், **गुणज्ञः** - என்ற அடைமொழியை ராமர் பெற்றார். ஆகாயம் ஒலியைத் தன் பண்பாகக் கொண்டது. உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளுக்கும் தனிக்குணம் உண்டு. நீருக்குத் தண்மையும், நெருப்புக்கு வெம்மையும், மண்ணுக்கு மணமும் உரிய பண்புகளாம். அவற்றைப்

போல ஆகாயம் ஒலியைத் தனது பண்பாகக் கொண்டதா கையால் ஆகாயத்தை, शब्दगुणम् - என்று கூறினர். शब्दगुणकं आकाशम् - எனத் தார்க்கிகர் கூறுவர். विष्णुपदम् - என ஆகாயத்தைத் திருமாலின் இடமாகச் சொல் லுவர்; आकाशम्-என ஒருசொல்லால் கூறவேண்டியிருக்க 'आत्मन. पदम्' என இரண்டு சொல்லால் குறித்தது, 'पदार्थे वाक्यवचनम्' (ஒரு சொல்லால் கூறுவதை ஒரு வாக்யத்தால் கூறுதல்) என்றதை அனுசரித்து. கவிகள் சில ஸமயங்களில் இம்முறையை ஆள்வர்.

रामाभिधानः हरिः - ராவணவதம் வரை ராமருக்கு மனுஷ்ய பாவனை தேவையாயிருந்தது. வதம் முடிந்ததால், கவி, பகவானது இயற்பெயரான हरि-என்பதற்கு முதன்மை வழங்கினர். இனி வரும் 66 சுலோகங்கள் ராமர் கூறுவ தாக உள்ளன; ராமர், அயோத்திக்குத் திரும்புங்கால் வழி யிலுள்ள இடங்களை ஸீதைக்குச் சுட்டிக் காட்டிக் கொண்டு செல்கின்றார். பிரிந்தவர் கூடினல் அவர்கள் பிரிந்திருந்த நிலையிலுண்டான தம் தமது அனுபவத்தைக் கூறுவது இயல்பு. ராமர், ஸீதையைப் பிரிந்தபின் தமக்கு நேர்ந்த அனுபவங்களையும் இடையிலே கூறுவது கவனிக்கத்தக்கது.

रत्नाकरः - முத்து, பவழம் முதலிய சிறந்த பொருள் களுக்கு இருப்பிடமானது: கடல்.

वैदेहि पश्यामलयाद्विभक्तं मत्सेतुना फेनिलमम्बुराशिम् ।
छायापथेनेव शरत्प्रसन्नमाकाशमाविष्कृतचारुतारम् ॥ २ ॥

वैदेहि - ஸீதையே, आ मलयात् மலயமலை வரை, मत्से-तुना - எனது அணையினல், विभक्तम् - (இரண்டாகப்) பிரிக் கப்பட்டதும், फेनिलम् - நுரையுடன் கூடியதுமான, अंबु-राशिम् - சமுத்திரத்தை, छायापथेन - ஒளி வழியினுல்,

विभक्तम् - பிரிக்கப்பட்டதும், शरद्-प्रसन्नम् - சரத்காலத்தில் தெளிந்துள்ளதும், आविष्कृतचारुतारम् - தோன்றியுள்ள அழகிய நக்ஷத்திரங்களை உடையதுமான, आकाशम् इव - ஆகாயத்தை (க்காண்பது) போல, पश्य - பார்.

(க-து) சமுத்திரத்தின் நடுவே ராமரால் கட்டப்பட்ட அணை, மலய பர்வதம்வரை நீண்டிருந்தது. அதை ஸீதைக்குக் காண்பித்து ராமர் கூறுகிறார். "வைதேஹி, நுரைகளுடன் கூடிய சமுத்திரத்தின் இடையே கட்டப்பட்ட இந்த அணை அதை இரண்டாகப் பிரித்துக் காட்டுகிறது. [சரத்காலத்தில் மேகங்களின்றித் தெளிவாக விளங்கும் ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள் நிறைந்து காணப்படும். அதன் இடையில் பிரகாசமான வழிபோன்று ஒன்று தென்படும். அவ்வழியினால் ஆகாசம் இரண்டாகப் பிரிக்கப்பட்டது போலத் தோன்றும்.] அத்தகைய ஆகாசம் போல் காணப்படும் இக்கடலைப் பார்"

சமுத்ரத்திற்கு ஆகாசமும், நுரைகளுக்கு நக்ஷத்ரங்களும், அணைக்கு ஆகாசத்தில் தென்படும் ஒளிவழியும் உபமானங்கள்.

वैदेहि - என ஸீதையை அழைத்தது, அவளது குலப் பெருமை தோன்ற. அதனால் அவளுடைய குணப் பெருமையும் விளங்கும். 'आ मलयात्' - என்பதால் அணையின் நீளம் கூறப்பட்டது. मत्सेतुना - 'எனது அணை' என்றது, வெற்றியிலுள்ள ஸந்தோஷத்தின் மிகுதியாலே; அகம்பாவத்தினாலன்று. ஸீதையின் விஷயத்தில் ராமர் எடுத்த பெருமுயற்சிக்கு அடையாளமாயிருந்ததாலும் 'எனது' என்றார்.

छायापथम् - பல நக்ஷத்ரங்கள் சேர்ந்து வெள்ளிய ஒளியுடன் ஒரு நெடுவழி போல் ஆகாசத்தில் தென்படும் இடத்திற்குப் பெயர்; இதன் வேறு பெயர் स्वातीपथम् - என்பது. இதை நக்ஷத்ரப்பாதை எனவும் பால்வழி எனவும் தமிழில் கூறுகின்றனர்; "स नलेन कृतः सेतुः सागरे मकरा-

स्थे। शुशुभे सुभगः श्रीमान् स्वातीपथमिवाम्बरे॥" என்பது வால்மீகி சுலோகம்.

गुरोर्यियक्षोः कपिलेन मेध्ये रसातलं संक्रमिते तुरंगे।
तदर्थमुर्वीमवदारयद्भिः पूर्वैः किलायं परिवर्धितो नः॥ ३॥

**यियक्षोः** - யாகஞ் செய்ய விரும்பும், **गुरोः** - முன்னோரான ஸகரரின், **मेध्ये** - யாகத்திற்குரிய, **तुरङ्गे** - குதிரையானது, **कपिलेन** - கபிலமுனிவரால், **रसातलम्** - பாதாளத்தை, **सङ्क्रमिते** - அடைவிக்கப்பட்டபொழுது, **तदर्थम्** - அக்குதிரையின் பொருட்டு, **उर्वीम्** - பூமியை, **अवदारयद्भिः** - தோண்டுகின்ற. **नः पूर्वैः** - நமது முன்னோர்களால், **अयम्** - இந்த ஸமுத்திரம், **परिवर्धितः किल** - பெரிதாக்கப்பட்டதன்றோ?

(க-து) 'நமது முன்னோரான ஸகரர் அசுவமேதத்தைச் செய்யக் குதிரையை விட்டபொழுது அக்குதிரையைக் கபிலர் பாதாளம் கொண்டு செல்ல அதைத் தேடுவதற்காக ஸகரரின் புத்திரர்கள் பூமியைத் தோண்டினர். முன்பு சிறியதாக இருந்த ஸமுத்ரமானது, ஸகர புத்திரர்களால் பெரிதாகச் செய்யப்பட்டது என்று அறிஞர் கூறுவர். அதனால், ஸாகரம் எனப் பெயரும் பெற்றது.

இங்குக் கபிலரால் குதிரை கொண்டு போகப்பட்டது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. உண்மையிலே குதிரையைக் கொண்டு போனவன் இந்திரன். அவன், கபிலர் எதிரில் அக்குதிரையைக் கட்டிவைத்தான். ஆனால் ஸகரனின் மைந்தர்கள், 'கபிலர்தான் குதிரையைக் கவர்ந்திருக்கவேண்டும்' என நினைத்ததை அனுசரித்து இங்கே, 'कपिलेन संक्रमिते'- என்று கூறப்பட்டுள்ளது.

'कपिलः कपिलो वर्णः कपिलः पाकशासन.' என்ற யாதவ ப்ரகாசரின் நிகண்டு கூறுகின்றபடி कपिल - என்ற சொல்

னுக்கு இந்திரன் என்று பொருள் கொள்வதில் பிழை யொன்றுமில்லை. ஸர்க்கம் 3, 50-ஆம் ச்லோக உரையை யும் பார்க்க

'परिवर्धित:'-"राघवस्य कुले जातैरुदधि: परिवर्धित:। स त्वां रामहिते युक्तं प्रत्यर्चयति सागर:॥" 'अहमिक्ष्वाकुनाथेन सगरेण विवर्धित:' என்ற ராமாயண சுலோகங்களைக் காண்க. இதனால், ராமர் தமக்கும் கடலுக்கும் உள்ள சிறந்த தொடர்பைக் கூறினர்.

ஸகரபுத்ரர்கள் கடலைப் பெரியதாக்கிய வரலாறு.

*ஸகரசக்ரவர்த்தி அசுவமேதம் செய்யத்தொடங்கி, தனது பேரன் அம்சுமானைக் காவலனாக வைத்துக் குதிரையை விடுத்தான்; இந்திரன் பொறாமையால் அக்குதிரையைக் கவர்ந்து பாதாளத்தில் கபிலமுனிவரின் முன் விட்டுச் சென்றான். அம்சுமானும் புரோஹிதர்களும் குதிரை காணாமற் போனதை மன்னனுக்குத் தெரிவிக்க, அவன் தனது பிள்ளைகளான அறுபதினாயிரவரையும் குதிரையைத் தேடும்படி ஆணையிட்டான். பூமி எங்கும் தேடிய பின் குதிரையைக் காணாது பாதாளம் செல்லவிரும்பிப் பூமியை விசாலமாகத் தோண்டினர். பின் பாதாளஞ்சென்று கபிலர் முன் குதிரையைக் கண்டு, அவரைக் கள்வரெனக் கருதி அவரை நோக்கிக் கோபத்துடன் ஓடவும், அவர்கள் முனிவரது கோபத்தீயினால் சாம்பலாயினர். பின் அம்சுமான் குதிரையைக் கொண்டு வந்து யாகத்தைப் பூர்த்தி செய்வித்தான். அம்சுமானது பேரனான பகீரதன் என்பவன் ஸாகரர்களை நற்கதியடைவிக்கக் கருதி தேவருலகினின்றும் கங்கையைக் கொணர்ந்து பாதாளத்திலிருந்த மூதாதையரின் சாம்பல் மேல் பாயச் செய்தான். இவ்வாறு ஸகர*

புத்திரர்களால் விரிவாக்கப்பட்ட கடல் ஸாகரம் என்ற பெய
ரும் பெற்றது.

गर्भं दधत्यर्कमरीचयोऽस्माद्विवृद्धिमत्राश्नुवते वसूनि ।
अबिन्धनं वह्निमसौ बिभर्ति प्रह्लादनं ज्योतिरजन्यनेन ॥ ४ ॥

**अर्कमरीचयः** - சூரியகிரணங்கள், **अस्मात्** - இந்த சமுத்
திரத்திலிருந்து, **गर्भम्** - கருவை(தண்ணீரை), **दधति** -
தரிக்கின்றன; **अत्र** - இந்தக் கடலில், **वसूनि** - ரத்தினங்கள்,
**विवृद्धिम्** - பெருக்கத்தை, **अश्नुवते** - பெறுகின்றன. **असौ** -
இக்கடல், **अबिन्धनम्** - நீரை விறகாக உடைய, **वह्निम्** - நெரு
ப்பை, **बिभर्ति**-தாங்குகின்றது (போஷிக்கின்றது.); **अनेन** -
இதனால், **प्रह्लादनम्** - (உலகை) மகிழ்விக்கின்ற, **ज्योति** - ஒளி
(சந்திரன்), **अजनि** - உண்டு பண்ணப்பட்டது.

(க-து) இச்சமுத்திரத்திலிருந்து தான் மழை பெய்வதற்கு
வேண்டிய நீரை மேகங்கள் பெறுகின்றன. இதிலேதான் ரத்
னங்கள் மேலும் மேலும் விருத்தியாகின்றன. நீரைக் கொண்டு எரி
யும் நெருப்பும் இதில் தான் உள்ளது. உலகினரைக் களிப்பிக்கும்
சந்திரனும் இக்கடலால் தான் தோற்றுவிக்கப்பட்டது.

**अर्कमरीचयः**-ஸூரியனது கிரணங்கள் கடல் நீரை ஆவி
யாக மாற்றி மேகங்களை உண்டாக்குவதை இதில் குறிப்பிட்
டார். **मरीचि**-என்பது ஸ்திரீலிங்கச் சொல்லாகையால் அதற்
கேற்ப, 'கர்ப்பம் தரிக்கின்றன' என உருவகம் செய்து கூறி
ஞர். [ஸர்க்கம்1-18-ஆம் சுலோகமும் காண்க;] **अबिन्धनं वह्निं
बिभर्ति** - இக்கடல் வடவாக்னியைத் தன்னுள் வைத்திருப்ப
தால், அத்தீயினல் உலகிற்குத் தீங்கு உண்டாகாது இருக்
கின்றது. மிகத் தஹிக்கும் சக்தி வாய்ந்த வடவாக்னி
குதிரை முகத்துடன் கடலினுள் இருந்துகொண்டு மழை
வெள்ளம் முதலியவற்றால் கடலின் நீர் அதிகமாகாதவாறு
உறிஞ்சிக் கொண்டிருக்குமெனப் புராணங்கள் கூறும்.

ஸமுத்ரத்தைக் கடைந்த பொழுது சந்திரன் தோன்றியதால், ஸமுத்திரம் சந்திரனை உண்டாக்கியதாகக் கூறினர். இச் சுலோகத்தில் கடலினது பெருமையும், அதனால் உலகிற்கு ஏற்பட்டுள்ள நன்மைகளில் சிலவும் கூறப்பட்டன.

तां तामवस्थां प्रतिपद्यमानं स्थितं दश व्याप्य दिशो महिम्ना।
विष्णोरिवास्यानवधारणीयमीदृक्तया रूपमियत्तया वा ॥ ९ ॥

**ताम् ताम्** - அந்தந்த (பெருகுவதும் குறைவதுமான) (பலப்பல), **अवस्थाम्**-நிலையை, **प्रतिपद्यमानम्**-அடைகின்றதும், **महिम्ना** - பெருமையினால் (பரவியிருத்தலால்), **दश** - பத்து **दिशः** - திசைகளை, **व्याप्य** - வியாபித்து, **स्थितम्** - இருக்கின்றதுமான, **अस्य रूपम्**-இச்சமுத்திரத்தின் இயல்பானது, [**ताम् ताम्** - அந்தந்த, **अवस्थाम्** - (மீன் ஆமை முதலியவற்றின்) நிலையை, **प्रतिपद्यमानम्** - அடைகின்றதும், **महिम्ना** - (தனது) பெருமையால், **दश दिशः** - பத்துத்திசைகளையும், **व्याप्य** - வியாபித்து, **स्थितम्**] - இருக்கின்ற, **विष्णोः (रूपम्) इव** - விஷ்ணுவின் வடிவம் போல், - **ईदृक्तया** - இத்தகையதென்றாவது, **इयत्तया वा** - இவ்வளவினதென்றாவது, **अनवधारणीयम्** - அறுதியிட முடியாதது.

(க-து) மத்ஸ்யம் முதலான அவதாரங்களை எடுப்பவரும், உலகம் முழுவதையும் வியாபித்துள்ளவருமான விஷ்ணுவினது தன்மை இத்தகையதென அறிய முடியாதது. அதுபோல் பெருகுதல் குறைதல் முதலிய பல இயல்புகளைக் கொண்டு திசைகளின் எல்லைவரை பரந்துள்ள இச்சமுத்திரம், இத்தகையது, இவ்வளவு அளவுடையது என்று உணர முடியாதவாறு அத்தனைப் பெரிதாக உள்ளது.

இச்சுலோகத்தில் கடல் விஷ்ணுவுடன் ஒப்பிடப் பட்டுள்ளது. ஒப்பிடக் காரணமான தன்மைகள் வருமாறு. விஷ்ணு போல் கடலும் ஸர்வவியாபி; பலநிலைகளைக் கொண்

டது; இவற்றின் காரணமாக முற்றிலும் அறிய முடியாதது; இதனால் கடலினது பெருமையும், ஆச்சரியத்தை விளைவிக்கும் இயல்பும் கூறினவாறு.

नाभिप्ररूढाम्बुरुहासनेन संस्तूयमानः प्रथमेन धात्रा ।
अमुं युगान्तोचितयोगनिद्रः संहृत्य लोकान्पुरुषोऽधिशेते ॥ ६ ॥

**युगान्त-उचित-योगनिद्रः** - யுகமுடிவில் அனுஷ்டிக்கப்படுகின்ற யோகநித்திரையை உடைய, **पुरुषः** - பரமபுருஷரான விஷ்ணு, **लोकान्** - உலகங்களை, **संहृत्य** - (தம்முள்) அடக்கிக்கொண்டு, **नाभिप्ररूढ-अंबुरुह-आसनेन** - நாபியில் தோன்றியுள்ள தாமரை மலரை ஆஸனமாகக் கொண்ட, **प्रथमेन** - முதல், **धात्रा** - பிரம்மாவினால், **संस्तूयमानः** - துதிக்கப்படுகிறவராக, **अमुम्** - இக்கடலில், **अधिशेते** - சயனிக்கின்றார்.

(க-து) விஷ்ணு யுகங்களின் முடிவில் உலகங்களனைத்தையும் தம் வயிற்றிலடக்கி அறிதுயில் கொண்டவராய், நாபியினின்றும் தோன்றிய தாமரை மலரின் மீது பிரம்மா வீற்றிருந்து அவரைத் தோத்திரம் செய்ய இக்கடலில் தான் சயனிக்கின்றார்.

இதனால் உலகம் மறைந்த பொழுதும் பகவானைப்போல் மறையாது இருக்கும் பெருமைபெற்றது கடல் என்பதும், உலகத்திற்கெல்லாம் ஆதாரமான ஈசுவரனுக்கும் ஆதாரமாக இக்கடல் உள்ளது என்பதும்விளங்கும். யுகங்களின் முடிவில் உலகம் எல்லாவற்றையும் தம் வயிற்றுள்ளடக்கிக் கொண்டு பகவான் விஷ்ணு யோக நித்திரை செய்வதாகச் சாஸ்திரங்கள் கூறும்.

**प्रथमेन** - முதலாவதான படைப்புத் தொழிலிலே உதவுகின்ற மரீசி, தக்ஷர் முதலான பத்து ஸ்ருஷ்டிகர்த்தர்களுக்கும் முன்பிருந்ததால் சதுர்முகப் பிரம்மதேவருக்கு

இவ்விசேஷணம் தரப்பட்டது. 'சிறந்த' என்றும் பொருள் கொள்ளலாம். ஸ்ருஷ்டித் தொழிலில் உதவுபவர் பதின்மராவர்; मरीचिः, अत्रिः अंगिराः, पुलस्त्यः, पुलहः, क्रतुः, प्रचेताः, वसिष्ठः, भृगुः, नारदः ' என்பர் மனு. प्रचेताः - என்பவருக்குப் பதிலாக தக்ஷரை வைத்துக் கூறுகின்றன புராணங்கள்.

ஒவ்வொரு சதுர்யுகங்களின் முடிவிலும் விஷ்ணு உலகைத் தம்முள் அடக்கிக் கொண்டு யோக நித்ரை செய்வதால் अधिशेते - என நிகழ்கால வினைவந்தது.

पक्षच्छिदा गोत्रभिदात्तगन्धाः शरण्यमेनं शतशो महीध्राः ।
नृपा इवोपप्लविनः परेभ्यो धर्मोत्तरं मध्यममाश्रयन्ते ॥ ७ ॥

**पक्षच्छिदा** - சிறகுகளை வெட்டுகின்ற, **गोत्रभिदा** - இந்திரனால், **आत्तगन्धाः** - அடக்கப்பட்ட கர்வத்தையுடைய, **महीध्राः** - மலைகள், **शतशः** - நூற்றுக் கணக்கில், **शरण्यम्** - காப்பதில் வல்ல, **एनम्** - இச்சமுத்திரத்தை,—**परेभ्यः** - பகைவர்களிடமிருந்து, **उपप्लविनः** - அச்சங் கொண்ட, **नृपाः**- அரசர்கள், **धर्मोत्तरम्** - தருமத்தைச் சிறப்பாகக் கொண்ட, **मध्यमम् इव**-நடுநிலையிலுள்ள அரசனை (அடைவது) போல, —**आश्रयन्ते** - அடைகின்றன.

(க-து) போரிடும் இரு அரசர்களுடைய தேசங்களின் இடையேயுள்ள தேசத்தைக் காப்பவன், நடு நிலையிலுள்ள அரசன். சேர்ந்துள்ள அரசர்களைக் காப்பவனும் பகை கொண்டுள்ள அரசர்களைத் தண்டிப்பதிலேவல்லவனுமான இத்தகைய மன்னனைப் பகைவனிடம் அச்சங்கொண்ட அரசர்கள் சரணமடைவர். அதைப் போல, இந்திரன் தங்கள் சிறகுகளை வெட்ட வருகையில், மலைகள் அச்சங் கொண்டு சமுத்திரத்தைச் சரணடைந்து, அதன் நீரில் மூழ்கித் தப்பின.

சரணமடைந்தவரைக் காக்கும் தன்மையுடையது இச் சமுத்திரம் என்பது கருத்து.

रसातलादादिभवेन पुंसा भुवः प्रयुक्तोद्वहनक्रियायाः ।
अस्याच्छमम्भः प्रलयप्रवृद्धं मुहूर्तवक्त्रावरणं बभूव ॥ ८ ॥

**आदिभवेन** - முதலில் தோன்றிய, **पुंसा** - (ஆதிவராஹ ரூபியான) பரமபுருஷரால், **रसातलात्**-பாதாளத்திலிருந்து, **प्रयुक्त-उद्वहन-क्रियायाः**-தொடங்கப்பட்ட எடுத்தல் (மணந்து கொள்ளுதல்) என்ற செயலையுடைய, **भुवः** - பூமிதேவிக்கு, **प्रलय-प्रवृद्धम्** - பிரளய காலத்தில் விருத்தியடைந்திருந்த, **अस्य** - இக்கடலின், **अच्छम्** - தெளிவான, **अंभः** - நீர், **मुहूर्त-वक्त्र-आवरणम्**-சிறிது நேரம் முகம் மூடியாக, **बभूव**-ஆயிற்று.

(க-து) பிரளய காலத்தில் நீரில் அழுந்திக்கிடந்த பூமியைப் பிரளயத்தின் முடிவில் ஆதி புருஷரான மஹாவிஷ்ணு, வராஹவடிவில் தோன்றி, நீரினின்றும் மேலே கொண்டு வந்தார். அவ்வாறு மேலே கொண்டு வரப்படும் பொழுது, ஸமுத்திரத்தின் நிர்மலமான நீரானது பூமிதேவிக்கு முகமூடியாயுள்ள மெல்லிய வஸ்த்ரம் போலிருந்தது.

முன் சுலோகத்தில் பிரளய காலத்திலே கடல் பகவானுக்கு எவ்வகையில் தொண்டு செய்து பெருமை பெற்றதென்பதைக் கூறிய கவி, இச்சுலோகத்திலே பிரளயத்தின் முடிவில் பகவான் பூமியைக் கடலினின்றும் மேலே தூக்கிய பொழுது ஸமுத்ரம் இருந்த நிலையை வருணிக்கின்றார். **उद्वहन** - என்ற சொல்லுக்கு, 'மேலே தூக்குதல்' என்பது பொருள்; 'மணம் புரிதல்' என்ற பொருளு முடையதாகையால் விஷ்ணுவினால் பூமிமேலே தூக்கப்பட்டதைக் கவி, மணமாகக் கருதி, அதற்கேற்பக் கடலின் தெளிந்த வெண்ணிறமான நீரைப்பூமிதேவியின் முகமூடியாக உருவகம் செய்தார். மணம் செய்விக்கும் காலத்தில் பெண்களுக்கு முகமூடி யணிவிப்பது இன்றும் சிலவிடங்களிலே பழக்கத்தில் உள்ளதே.

கடலினின்றும் பூமி மேலே வரும்வரையே 'நீர் முகமூடி' இருக்குமாதலால், **मुहूर्त** - என்றார்.

**वक्त्राभरणम्** -என்று பாடம் கொண்டால் 'முகத்திற்கு அணியாயிருந்தது' எனப் பொருள் உரைக்கவேண்டும்.

मुखार्पणेषु प्रकृतिप्रगल्भाः स्वयं तरंगाधरदानदक्षः ।
अनन्यसामान्यकलत्रवृत्तिः पिबत्यसौ पाययते च सिन्धूः ॥ ९ ॥

**अनन्यसामान्य कलत्रवृत्ति.** - மற்றவர்களுக்கில்லாதவகையில் மனைவிகளிடத்து ஸஂபோகானுபவமுடையதும், **तरङ्ग-अधर दान दक्षः** - அலைகளாகிய (தனது) உதடுகளைத் தருவதில் திறமையுடையதுமான, **असौ**-இந்த சமுத்திரம், **मुखार्पणेषु**-முகத்தைத் தருவதில், **प्रकृति-प्रगल्भाः** - இயல்பாகவே துணிவை உடைய, **सिन्धूः** - நதிகளை, **स्वयम्** - தான், **पिबति**-சுவைக்கின்றது; **पाययते च** - (தனது உதட்டை) சுவைக்கவும் செய்கிறது.

(க-து) இக்கடல், தனது அலையாகிய உதட்டினால் தனது மனைவிகளாகிய நதிகள் பலவற்றையும் ஒரேகாலத்தில் ஸ்பர்சித்துச் சுவை யனுபவிக்கின்றது; அவ்வாறே அந்நதிகள் எல்லாவற்றிற்கும் தனது அலையாகிய உதட்டை ஏககாலத்தில் சுவைக்கும்படியும் வசதியளிக்கின்றது.

இச்சுலோகத்தில் கவி, ஸமுத்ரத்தை ஒரு காதலனாக வருணிக்கின்றார்; மற்றக் காதலர்களுக்குக் கிட்டாத ஒரு தனி வசதியைப் பெற்றுள்ளான் இக்கடல் காதலன்.

சமுத்திரத்தைக் கணவனாகவும், நதிகளை அதன் மனைவிகளாகவும் கூறுவது கவிமரபு. சமுத்திரத்தில் நதிகளின் நீர் வந்து விழுவதும், அதே சமயத்தில் கடலின் அலை நதிகளில் மோதுவதும் ஸாதாரணமான ஒரு காட்சியாகும். இதைக் கவி, ஸமுத்ரம் என்ற தலைவன் தனது அலை என்ற உதட்டைக் கொண்டு நதிகளாகிய மனைவிகளை முத்தமிட்டுக் கொள்வதாகக் கூறுகின்றார். ஆனால் ஒரு கணவன் ஒரு சம

யத்தில் ஒரு மனைவியைத்தான் முத்தமிட முடியும். இங்கு சமுத்திரமாகிய கணவன் நதிகளாகிய பலமனைவியரை ஒரே சமயத்தில் அலைகளாகிய உதடுகளால் முத்தமிடுகி றான். அதுபோல் நதிகளாகிய பல மனைவிகளும் ஒரே காலத்தில் சமுத்திரத்தை முத்த மிடுகின்றனர். இத்தகைய வசதியைக் கடல் ஒன்றே பெற்றுள்ள தென்பதைக் காட்ட **अनन्यसामान्य...वृत्ति** - என்றார். இத்தகைய ஸுகானுபவம் மற்றவர்களுக்குக் கிட்டாதது; மற்றப் பெண்களைப் போல், கணவரை அணுகுவதில் தோழியரைத் துணைக் கொள்ளா மல் இந்நதிகள் தாங்களே சமுத்திரத்தை நாடிச் செல் வதால், **प्रकृतिप्रगल्भाः** - என்று அவைகளை விசேஷித்தார்.

ससत्त्वमादाय नदीमुखाम्भः संमीलयन्तो विवृताननत्वात् ।
अमी शिरोभिस्तिमयः सरन्ध्रैरूर्ध्वं वितन्वन्ति जलप्रवाहान्॥१०॥

**अमी** - இந்த, **तिमयः** - திமி எனப்படும் மீன்கள், **विवृत-आननत्वात्** - திறந்த வாய்களை உடைமையாலே, **ससत्त्वम्** - (மீன் முதலிய) ஜீவராசிகளுடன் கூடிய, **नदीमुखांभः** - ஆற்றின் முகத்வாரநீரை, **आदाय** - எடுத்து (குடித்து), **संमीलयन्तः** - (வாய்களை) மூடியனவாக, **सरन्ध्रैः** - தொளை களுடன் கூடிய, **शिरोभिः** - தலைகளின் மூலமாக, **जल-प्रवाहान्**- நீர்ப்பெருக்குகளை, **ऊर्ध्वम्** - மேல் நோக்கி இருக்கும்படி, **वितन्वन्ति** - செய்கின்றன (விடுகின்றன).

(க-து) திமி எனப்படும் ஒருவகை மீன்கள் தங்கள் வாய்களை நதியின் முகத்வாரத்தில் அகலத் திறந்து வைத்துக் கொண்டு, மீன் முதலிய நீர்வாழ்ப் பிராணிகளுடன் கூடிய ஆற்று நீரை அப்படியே வாயில் ஏற்றுப் பிறகு வாயை மூடித் தலையிலுள்ள தொளைகள் மூலம் ஜலத்தை வெளிவிடுகின்றன.

நீரெல்லாம் வெளியில் சென்றபின் வாயிலே தங்கி யுள்ள ஜீவராசிகள் திமிக்கு உணவாகின்றன. திமி-திமிங்

கிலம் போல் பெரியவை; மீன் இனத்தைச் சேர்ந்தவை. இச் சுலோகத்திலே இயற்கையிலுள்ள காட்சியொன்று கூறப் பட்டது.

मातंगनक्रैः सहसोत्पतद्भिर्भिन्नान् द्विधा पश्य समुद्रफेनान् ।
कपोलसंसर्पितया य एषां व्रजन्ति कर्णक्षणचामरत्वम् ॥ ११ ॥

**सहसा** - திடீரென்று, **उत्पतद्भिः** - (நீரினின்று) மேலே கிளம்புகின்ற, **मातङ्गनक्रैः** - நீர்யானைகளால், **द्विधा** - இரண்டாக, **भिन्नान्** - பிரிக்கப்பட்ட, **समुद्रफेनान्** - கடலின் நுரைகளை, **पश्य** - பார்; **ये** - (எந்த) இந்நுரைகள், **एषाम्** - இந் நீர்யானைகளின், **कपोलसंसर्पितया** - கன்னங்களில் படிவதால், **कर्णक्षण चामरत्वम्** - காதுகளில் சிறிது நேரம் சாமரமாக இருக்குந் தன்மையை, **व्रजन्ति** - அடைகின்றன.

(க-து) நுரைகள் நிரம்பிய சமுத்திர ஜலத்தினின்றும் நீர்யானைகள் திடீரென்று நீருக்கு மேலே துள்ளிக் கிளம்புகின்றன. அச் சமயம் இந்நுரைகள் இரண்டாகப் பிரிக்கப் படுவதைப் பார்; நீர்யானைகள் அவ்வாறு எழுகையில், அவைகளின் கன்னங்களில் இவ் வெண்மையான நுரைகள் படிந்து சிறிது நேரம் சாமரங்கள் போல் விளங்குவதையுங் காண்.

**मातङ्गनक्रैः** - யானைபோல் தோற்ற முள்ள நீர்வாழ் பிராணி; நீர்யானை என்பர்; நிலத்திலே எத்தனைவகைப் பிராணிகள் உள்ளனவோ அத்தனை வகைப் பிராணிகள் நீரிலுமுண்டு என்பர். 'यावन्तो दृश्यन्ते नरकरितुरगादयः स्थले जीवाः । तावन्तः सलिलेष्वपि जलपूर्वास्ते तु विज्ञेयाः' என்பதைக் காண்க.

वेलानिलाय प्रसृता भुजंगा महोर्मिविस्फूर्जथुनिर्विशेषाः ।
सूर्यांशुसंपर्कसमृद्धरागैर्व्यज्यन्त एते मणिभिः फणस्थैः ॥ १२ ॥

**वेलानिलाय** - கடற்கரைக் காற்றுக்காக, **प्रसृता:** - வெளி வந்த, **महोर्मि-विस्फूर्जथु-निर्विशेषा:** - பெரும் அலைகளின் திரட்சியினின்றும் வேறுபாடறிய இயலாத, **एते** - இந்த, **भुजङ्गा:** பாம்புகள், **सूर्यांशु संपर्क समृद्ध-रागै:** - சூரியனுடைய கிரணங்களின் சேர்க்கையால் அதிகமாகச் சிவந்த காந்தி களையுடைய, **फणस्थै:** - படத்தில் உள்ள, **मणिभि:** - ரத்னங் களால், **व्यज्यन्ते** - நன்கு அறியப்படுகின்றன.

(க-து) கடற்கரையில் பாம்புகள் காற்றை உண்பதற்காக வந்து படுத்துக் கொண்டிருக்கின்றன. கடலில் உள்ள பெரும் அலைகளைப் போல நீண்டும் பருத்தும் இருப்பதால் கரையிலே வந்து மோதும் அலைகளுக்கும் பாம்புகளுக்கும் வேறுபாடறிய இயலாமலுள்ளது. ஆயினும் அப்பாம்புகளின் தலைகளில் உள்ள ரத்னங்கள் மீது சூரிய கிரணங்கள் படுவதாலே அந்த ரத்னங்கள் இன்னும் அதிகமாகச் சிவந்தனவாய் 'இவை அலைகளல்ல, பாம்புகளே' என்று நன்கு அறிய உதவுகின்றன.

**प्रसृता:** - இப்பாம்புகளும், ஸமுத்ர நீரில் வாழ்ப வையே; தரைக்காற்றை அனுபவிக்க நீரினின்றும் வெளி வந்து கரையில் அலைகள் போல் நீளவாக்கில் கிடப்பதால் அலைகளுக்கும் பாம்புகளுக்கும் வேறு பாடறிவது கூடாத தாக இருந்தது; ரத்ன காந்தியைக் கொண்டு இவைகள் பாம்புகள் எனவும், அஃதில்லாததால் அவைகள் அலைகள் எனவும் அறியவேண்டி இருந்தன.

तवाधरस्पर्धिषु विद्रुमेषु पर्यस्तमेतत्सहसोर्मिवेगात् ।
ऊर्ध्वाङ्कुरप्रोतमुखं कथंचित् क्लेशादपक्रामति शङ्खयूथम् ॥ १२ ॥

**तव** - உன்னுடைய, **अधर स्पर्धिषु** - உதட்டுடன் போட் டியிடுகின்ற, **विद्रुमेषु** - பவழங்களில், **सहसा** - திடீரென, **ऊर्मिवेगात्** - அலைகளின் வேகத்தினால், **पर्यस्तम्** - தள்ளப் பட்டதும், **ऊर्ध्वाङ्कुर प्रोतमुखम्** - மேல் நோக்கிய பவழக்

குருத்துகளில் சிக்கிய வாய்ப்புற முடையதுமான, एतत् - இந்த, शङ्खयूथम् - சங்குக் கூட்டம், कथञ्चित् - ஒருவாறு, क्लेशात् - சிரமத்துடன், अपक्रामति - விலகிச் செல்லுகிறது.

(க-து) கடலில் உயிருள்ள சங்குகளும், வளர்கின்ற பவழக் கொடிகளும் ஆங்காங்கு உள்ளன. திடீரென்று அடிக்கும் அலைகளின் வேகத்தினால்சஙகுகள் தங்கள் நிலைபெயர்ந்து, மேல் நோக்கியகூரான குருத்துக்களையுடைய பவழப்புதரில் தள்ளப்படுகின்றன; அப் பொழுது பவழக்குருத்துகள் சங்குகளின் வாய்ப்புறத்தில் குத்த வும், அச்சங்குகள் வலியை உணர்ந்து, கஷ்டப்பட்டு விடுதலை பெற்று மெதுவாகப் பவழத்தினின்றும் வெளி வருகின்றன.

तन्वाधरस्पर्धिषु - நிறத்திலே ஸீதையின் உதடுகள் போலிருந்தன பவழங்கள். எனவே, பவழங்கள் ஸீதையின் உதட்டுடன் போட்டியிடுவதாகக் கூறினார்; உதட்டுக்குப் பவ ழங்களை உபமானமாகக் கூறவேண்டியிருக்க, பவழங்களுக்கு உதட்டை உபமானமாகக் கூறியது, ஸீதையினது அதரத் தின் சிறந்த அழகு பற்றி. பவழத்தை உதட்டுடன் ஒப்பிட்ட தால், வெண்ணிறச் சங்கு, ஸீதையின் புன்னகைபோலிருந் தது என்பது கூறுமலே விளங்கும். 'अत्र विद्रुमवनस्याधर-साम्याच्छङ्खयूथस्य मन्दस्मितसाम्यमनुक्तमपि प्रतीयते' नारायणः ॥

சங்கிற்கு வாய்ப்புறம் ஒன்றே தசையுள்ளபகுதி; மற்றப் பாகங்கள் எல்லாம் அழுத்தமான ஓட்டினால் மூடப்பட்டுப் பாதுகாக்கப் பட்டுள்ளது. பவழக்குருத்து, சங்கின் வாய்ப் புறத்தில் தான் குத்த முடியுமாகையால் 'प्रोत मुखैः' என் றூர்; क्लेशात्—क्लेशं प्राप्य - 'வலியை யுணர்ந்த பின்' என்றும் உரைக்கலாம்.

प्रवृत्तमात्रेण पयांसि पातुमावर्तवेगाद्भ्रमता घनेन ।
अभाति भूयिष्ठमयं समुद्रः प्रमथ्यमानो गिरिणेव भूयः ॥ १४ ॥

**पयांसि** - நீரை, **पातुम्** - குடிப்பதற்கு, **प्रवृत्तमात्रेण** - தொடங்கின அளவிலேயே **आवर्तवेगात्** - நீர்ச் சுழல்களின் வேகத்தினால், **भ्रमता** - சுழலுகின்ற, **घनेन** - மேகத்தினால், **अयं** - இந்த, **समुद्रः** - கடல், **भूयः** - திரும்பவும், **गिरिणा** - (மந்தர) மலையினால், **प्रमथ्यमानः इव** - கடையப் படுகின்றது போல, **भूयिष्ठम्** - பெரும்பாலும், **आभाति** - தோன்றுகின்றது.

(க-து) கருநிறமுள்ள மேகங்கள் நீரைப் பருகுவதற்காகக் கடலின் மீது படிகையில், அவ்விடத்துள்ள நீர்ச்சுழல்களின் வேகத்தினால் அம்மேகங்களும் சுழலுகின்றன. இந்தக் காட்சி, முன்னொரு காலத்தில் மந்தர மலையைக் கொண்டு கடல் கடையப்பட்டதை நிகர்த்துள்ளது. கருநிற முள்ள மேகங்கள் மந்தர மலை போல் கடலின் மேல் புறத்தில் சுழலுகின்றன.

கடல் நீரின் மேற்புறத்தில் தோன்றிய மேகங்கள், நீர் பருகவந்தனவாக வருணிக்கப் பட்டன.

தேவர்களும் அஸுரர்களும் மந்தரமலையைக் கடலில் இட்டு அம்ருதம் பெறக்கடைந்தனர் என்பது இங்குக் குறிப்பிடப் படுவது.

दूरादयश्चक्रनिभस्य तन्वी तमालतालीवनराजिनीला ।
आभाति वेला लवणाम्बुराशेर्धारानिबद्धेव कलङ्करेखा ॥ १५ ॥

**दूरात्** - தொலைவு காரணமாக, **तन्वी** - மெல்லியதாகப் புலப்படுவதும், **तमाल-तालीवनराजि-नीला** - தமால, பனை மரக் காட்டு வரிசையினால் கருத்திருப்பதுமான,-**अयश्चक्र-निभस्य** - இரும்புச்சக்கரம் போன்ற, **लवणाम्बुराशेः वेला** - உப்புக்கடலின், கரை, **धारा-निबद्धा** - (சக்கரத்தின்) விளிம்பில் ஒட்டியுள்ள, **कलङ्करेखा** - **इव** - துரு போல், **आभाति** - தோன்றுகின்றது.

(க-து) கருத்த கடல் இரும்புச் சக்கரம் போன்றுள்து. கட லின் கரை, சக்கரத்தின் விளிம்பு போல் இருக்கிறது. வரிசையாக நிற்கும் தமால மரங்களையும் பனைமரங்களையுமுடைய சமுத்ரக்கரை, தொலைவிலிருந்து பார்க்கும் பொழுது மெல்லியதாகக் காணப்படுவ துடன், கடலாகிய இரும்புச் சக்கரத்தின் விளிம்பிலுள்ள துருப் போல் புலப்படுகின்றது.

தெற்குக்கடல் இயற்கையிலே வளைந்துள்ளதால் அதன் கருநிறம் காரணமாக அதை இரும்புச் சக்கரம் போன்றுள்ள தெனக் கூறினார். தொலைவிலிருந்து நோக்குவதால் சமுத் ரம் சக்கரம் போலும், கடற்கரை அதன் விளிம்பு போலும் தென்படுகின்றன. தமால மரங்களும் பனை மரங்களும் நிரைந் துள்ள கரையானது, கடலாகிய இரும்புச் சக்ரத்தின் முனை யிலுள்ள துருப் போலுமுள்ளது என உத்ப்ரேக்ஷித்தார். அடிக்கடி ஓடிக்கொண்டிருக்கும் சக்கரங்களின் விளிம்பிலும், சிறிது நேரம்ஓடாது நின்று ஈரம் ஏற்படுமாயின் இரும்பின் நிறம் மாறி மாசு ஏற்படும். இம்மாசு कलङ्क-என்ற சொல் லால் இங்கே குறிக்கப் படுகின்றது. 'कलङ्कोऽङ्केऽपवादे च काला-यसमलेऽपि च' என்பது மேதினீநிகண்டு. राजिनीला·என்பதை वेला - என்பதுடன் அந்வயிக்க. तमाल - ஒருவகை மரம்; दूरात्-சக்கரம்போல் கடல் காணப்படுவதற்கும், கரை அதன் விளிம்புபோல் காணப்படுவதற்கும் தொலைவுதான் காரணம்.

'निस्त्रिंशकल्पस्य निधेर्जलानामेषा तमालद्रुमराजिनीला ।
आराद्‌रालक्ष्य विभाति वेला कलङ्करेखामलिनेव धारा ॥' என்பது வல்லபர் கொண்டபாடம்.

वेलानिलः केतकरेणुभिस्ते संभावयत्याननमायताक्षि ।
मामक्षमं मण्डनकालहानेर्वेत्तीव बिम्बाधरबद्धतृष्णम् ॥ १६ ॥

आयताक्षि - நீண்ட கண்களையுடையவளே, वेलानिलः - கடற்கரைக் காற்று, केतकरेणुभिः - தாழம்பூவின் மகரந்தப்

பொடிகளால், ते - உனது, आननम् - முகத்தை, संभावयति- அலங்கரிக்கிறது. (அலங்கரிக்கின்றதாய்), बिम्बाधर - बद्ध - तृष्णम् - கோவைப் பழம் போன்ற (உனது) உதடுகளில் ஆசைவைத்துள்ளவனை, माम् - என்னை, मण्डन-काल-हानेः- அலங்கரிப்பதற்கான காலதாமதத்தை, अक्षमम् பொறுக்காதவனாக, वेत्तीव - (அது) அறிகின்றது போலும்.

(க-து) "ஸீதே! கடற்கரையினின்றும் வீசும்காற்று, தானே தாழம்பூவின் மகரந்தப் பொடிகளைக் கொண்டு உனது முகத்தை அலங்கரிக்கின்றது. ஏனெனில், உனது கோவைப் பழம்போன்ற அதரத்தைச் சுவைப்பதிலே ஆசையுடையவன் நான் எனவும், அலங்காரத்தை நீயே செய்து கொள்ளின் அதனாலேற்படும் காலதாமதத்தை நான் பொறுக்காதவன் எனவும் என்னைக் காற்று கருதுகின்றது போலும்.

விமானம் கடற்கரையினருகில் வந்து விட்டது என்பதை இதனால் குறிப்பிட்டார். இயற்கையிலே மகரந்தப் பொடியுடன் வீசும் காற்றை, ஸீதைக்கு அழகு செய்வதாகக் கூறினார். அவ்வாறு காற்று அணி செய்ய முற்பட்டதன் காரணத்தை, मण्डन कालहानेः अक्षमम् - என்பதால் உத்ப்ரேக்ஷித்தார். உண்மையிலே ராமர் காலதாமதத்தை ஸஹிக்காதவராகத் தம்மைக் கூறிக் கொள்ளவில்லை. आयताक्षि - என்றஸம்போதனத்தினால் ஸீதையின்கண்ணழகைவருணித்தார். बिंबाधर-என்பதால் உதட்டின் அழகு கூறப்பட்டது. 'उत्प्रेक्षया वेलानिलस्य नर्मसचिवसाम्यं प्रतीयते' नारायणः ॥

एते वयं सैकतभिन्नशुक्तिपर्यस्तमुक्तापटलं पयोधेः ।
प्राप्ता मुहूर्तेन विमानवेगात् कूलं फलावर्जितपूगमालम् ॥ १७ ॥

एते - இந்த, वयं - நாம், सैकतभिन्न शुक्ति पर्यस्त मुक्तापटलम् - மணல்திட்டில் வெடித்த சிப்பிகளிலிருந்து இறைந்துள்ள முத்துக்களின் தொகுதிகளையுடையதும், फल-आव-

जित-पूग-मालम्-(முதிர்ந்த) பழங்களால் வளைந்துள்ள பாக்கு மரவரிசைகளையுடையதுமான, पयोधेः कूलम् - சமுத்திரத்தின் கரையை, विमानवेगात् - விமானத்தின் வேகத்திஞல், मुहूर्तेन - நொடிப்பொழுதில், प्राप्ताः - அடைந்திருக்கிறோம்.

(க-து) 'ஸீதே! விமானத்தின் வேகம் காரணமாக, நூறுயோஜனை விஸ்தீர்ணமுள்ள இக்கடலை ஒரு நொடிப் பொழுதில் கடந்து கரையை அடைந்துள்ளோம். இக்கடற்கரையில், அலைகளால் தள்ளப்பட்டு மணல் மேடுகளில் மோதி உடைந்த சிப்பிகளினின்றும் வெளிவந்துள்ள முத்துக்கள் இரைந்து கிடக்கின்றன. பாக்கு மரங்களும் நன்கு முதிர்ந்த பழக் குலைகளின் பாரத்தால் வளைந்துள்ளன.

कुरुष्व तावत् करभोरु पश्चान्मार्गे मृगप्रेक्षिणि दृष्टिपातम् ।
एषा विदूरीभवतः समुद्रात्सकानना निष्पततीव भूमिः ॥ १८ ॥

करभोरु - யானையின் துதிக்கைபோன்ற தொடைகளையுடையவளே, मृगप्रेक्षिणि - மானினது போன்ற பார்வையையுடையவளே, तावत् - சற்று, पश्चान्मार्गे - பின்னுள்ள வழியில், दृष्टिपातं - பார்வையை, कुरुष्व - செலுத்துவாயாக. एषा - இந்த, सकानना - காடுகளுடன் கூடிய, भूमिः - நிலமானது, विदूरीभवतः - தூரத்தே விலகுகின்ற, समुद्रात् - கடலிலிருந்து, निष्पतति-इव - வெளிவருகின்றது போல உள்ளது.

(க-து) 'ஸீதே! நாம் இதுவரை கடந்து வந்த மார்க்கத்தைச் சற்றே திரும்பிப்பார். முன்னேக்கிச் செல்லும் விமானத்தின் வேகத்திஞல், கடல் பின்னிடுவதாகத் தொலைவிலே போய்க் கொண்டிருக்கிறது. தரையும் காடுகளும் நமக்கு நன்கு புலஞகின்றன. இதஞல் இக்காடுகளுடன் கூடிய நிலப்பகுதி கடலிலிருந்து வெளிவருவது போலத் தோற்றம் உண்டாகின்றது.

இத்தகைய தோற்றம், அநுபவத்திஞலே அறியப்படுவதொன்ருதலால் விளக்கம் தேவையில்லை. நிரண்டு உருண்டு

உள்ள நிலையில் ஸ்திரீகளின் அழகிய தொடைகளுக்கு யானையின் துதிக்கையை உபமானமாகக் கூறுவர். **करभ** - யானையின் துதிக்கை; மணிக்கட்டுத் தொடங்கிச் சுண்டுவிரல் வரையுள்ள கையின் புறப்பகுதியை, **करभ** - என்ற சொல் குறிக்கும். அப்பகுதியைப் போல் சதைப்பற்றுள்ள அழகிய தொடை எனினுமாம். மானினது பார்வை மருட்சியுடன் அழகாக இருக்குமாதலால் அதைப் பெண்களது பார்வைக்கு உபமானமாகக் கூறுவர்.

क्वचित् पथा संचरते सुराणां क्वचिद्घनानां पततां क्वचिच्च ।
यथाविधो मे मनसोऽभिलाषः प्रवर्तते पश्य तथा विमानम् ॥१९॥

**विमानम्** - (நாம் செல்லும்) இவ்விமானம், **मे** - எனது, **मनसः** - மனத்தின், **अभिलाषः** - விருப்பம், **यथाविधः** - எப்படியோ, **तथा** - அப்படியே, **प्रवर्तते** - செல்லுகின்றது; **पश्य** - பார்; **क्वचित्** - சில சமயம், **सुराणाम्** - தேவர்களின், **पथा** - வழியில், **सञ्चरते** - செல்லுகின்றது; **क्वचित्** - சில பொழுது, **घनानाम्** - மேகங்களுடைய, **पथा** - வழியில், **सञ्चरते** - செல்லுகின்றது. **क्वचित्** - சிலகாலே, **पततां च** - பறவைகளினுடைய, **पथा** - வழியில், **सञ्चरते**-செல்லுகின்றது.

(க-து 'தேவர்கள் ஆகாயத்தில் மிக உயரத்திலும், மேகங்கள் அதற்குச் சிறிது கீழேயும், பறவைகள் இன்னும் அடியிலும் செல்வதாகக் கூறுவர். ராமர் ஏறிச் சென்ற விமானம், அவர் எந்த எந்த இடங்களைக் காண விரும்பினரோ அந்தந்த இடங்களிலே அவர் விருப்பமறிந்து தானே சென்றது. இவ்வதிசயத்தை ராமர், ஸீதைக்குப் 'பார்' என்ற சொல்லால் குறிப்பிடுவதுடன் தாமும் வியக்கின்றார்.

असौ महेन्द्रद्विपदानगन्धिस्त्रिमार्गगावीचिविमर्दशीतः ।
आकाशवायुर्दिनयौवनोत्थानाचामति स्वेदलवान् मुखे ते ॥ २० ॥

**महेन्द्र द्विप दान गन्धिः** - இந்திரனது யானையின் மத நீரின் வாசனையை யுடையதும், **त्रिमार्गगा - वीचि - विमर्द-शीतः** - கங்கையின் அலைகளுடன் மோதுதலால் தண் மையுடையதுமான, **असौ** - இந்த, **आकाश-वायुः** - ஆகாயக் காற்று, **ते मुखे** - உன் முகத்தில், **दिनयौवनोत्थान्** - நடுப்பக லில் உண்டான, **स्वेद-लवान्** - வேர்வைத் துளிகளை, **आचा-मति** - போக்குகிறது.

(க-து) இவ்வாகாச வீதியில் வீசுங்காற்று, வான வெளியில் ஸஞ்சரிக்கின்ற ஐராவதத்தின் மதஜலத்தினுல் வாசனை பெற்றுள் ளது. ஆகாய கங்கையின் அலைகள்மீது பட்டு வருவதால் குளிர்ச்சி யுடனுள்ளது. இத்தகைய காற்று, நடுப்பகலின் உஷ்ணத்தினுல் உன் முகத்தில் தோன்றியுள்ள வேர்வைத் துளிகளைப் போக்குகிறது.

**त्रिमार्ग-गा** - மூன்று வழியிலே செல்வது என்பது பதப் பொருள். ஆகாசம், பூமி, பாதாளம் என்ற மூன்று இடங் களில் பிரவஹிப்பதால் கங்கைக்கு இச்சொல் பெய ராயிற்று.

करेण वातायनलम्बितेन स्पृष्टस्त्वया चण्डि कुतूहलिन्या ।
आमुञ्चतीवाभरणं द्वितीयमुद्भिन्नविद्युद्वलयो घनस्ते ॥ २१ ॥

**हे चण्डि**-கோபமுள்ளவளே, **कुतूहलिन्या**-(அறிவதிலே) ஆவலையுடைய, **त्वया** - உன்னுல், **वातायन-लम्बितेन** - ஜன்னல் வழியே நீட்டப்பட்ட, **करेण** - கையினுல், **स्पृष्टः** - தொடப் பட்டதும், **उद्भिन्न-विद्युद्वलयः** - தோன்றுகின்ற-மின்னலாகிய வளையையுடையதுமான, **घनः** - மேகம், **ते** - உனக்கு, **द्वितीयम्** - இரண்டாவது, **आभरणम्** - அணிகலனை **आमुञ्चति इव** - போடுவது போல இருக்கிறது.

(க-து) ஸீதை விமானத்தில் செல்லுகையில் தன் கையை விமா னத்தின் சாளரத்தின் வழியாக வெளியே நீட்ட, அச்சமயம் வெளி

யில் மின்னலுடன் கூடிய மேகம் இருக்கவும், அம்மின்னல் சீதையின் கையில் வளைபோல் அமைந்தது. இதைக் கண்ட ராமர் 'ஸீதே! மேகம், உனக்கு ஏற்கனவே இருக்கும் ஆபரணத்துடன் மற்றொன்றை இடுகின்றது போலும்' எனக் கூறினார்.

இவ்வர்ணனையால், விமானம் மேக மண்டலத்தில் ஸஞ்சரிக்கின்ற தென்பது கூறியதாயிற்று. चण्डि - என்பது அன்பு விளி.

अमी जनस्थानमपोढविघ्नं मत्वा समारब्धनवोटजानि ।
अध्यासते चीरभृतो यथास्वं चिरोज्झितान्याश्रममण्डलानि ॥ २२ ॥

**अमी** - இந்த, **चीरभृत:** - வற்கலையை யணிந்த முனிவர்கள், **जनस्थानम्** - ஜனஸ்தானத்தை, **अपोढ विघ्नम्** - இடையூறற்றதாக, **मत्वा** - அறிந்து, **चिरोज्झितानि** - வெகு நாளாக விடப்பட்டவையும், **समारब्ध नव-उटजानि** - (தற்பொழுது) தொடங்கப் பெற்ற புதுக்குடில்களையுடையவையுமான, **आश्रम मण्डलानि** - ஆசிரமப் பிரதேசங்களில், **यथास्वम्** - தம் தமக்குரிய இடத்தில் **अध्यासते** - தங்குகின்றனர்.

(க-து) 'மரவுரியணிந்த முனிவர்கள், ஜனஸ்தானத்தில் இனி ராக்ஷஸர்களின் பயமில்லை யென்று கருதி, வெகு நாட்களுக்கு முன்பே விட்ட ஆசிரமப் பகுதிகளில், புதிய ஆசிரமங்களை நிர்மாணித்துக் கொண்டு, தம் தமது குடில்களில் குடியேறுகின்றனர், பார்.

மஹர்ஷிகளின் உறைவிடமாக இருந்த ஜனஸ்தானம், பின் கரன் முதலிய ராக்ஷஸர்களால் ஆக்ரமிக்கப்பட்டுத் தவமியற்றத் தகாததாயிற்று. ராமர் ராக்ஷஸர்களைக் கொன்று, தவத்தின் இடையூற்றை நீக்கி முனிவர்களை ஜனஸ்தானத்தில் அச்சமேதுமின்றித் தங்கச் செய்தார்.

மேகமண்டலத்திற்கும் கீழே பறவைகள் ஸஞ்சரிக்கு

மிடத்தினருகில் விமானம் சென்றதால் நிலத்தில் மஹரிஷி யின் ஸஞ்சாரம் கண்களுக்குத் தென்பட்டது.

सैषा स्थली यत्र विचिन्वता त्वां भ्रष्टं मया नूपुरमेकमुर्व्याम् ।
अदृश्यत त्वच्चरणारविन्दविश्लेषदुःखादिव बद्धमौनम् ॥ २३ ॥

त्वाम् - உன்னை, विचिन्वता-தேடுகின்ற, मया-என்னால், त्वच्चरणारविन्द-विश्लेष-दुःखात् इव-உன் தாமரைப் பாதங்களைப் பிரிந்த வருத்தத்தினுற்போல், बद्धमौनम् - மௌனமாக (ஒலிக்காமல்) இருந்ததும், उर्व्याम् - தரையில், भ्रष्टम्-விழுந் திருந்ததுமான, एकम् - ஒரு नूपुरम् - நூபுரமானது, (சிலம்பு), यत्र-எங்கு, अदृश्यत-பார்க்கப் பட்டதோ, सा-அது, एषा-स्थली - இந்த இடம்தான்.

(க-து) உன்னைத் தேடி வரும்பொழுது, இதோ இந்த இடத் தில் தான் உன் பாதச் சிலம்பு வீழ்ந்து கிடந்தது காணப்பட்டது. உன்னைப் பிரிந்த வருத்தத்தால்போலும் அது ஒலி எதும் செய்யா மல் மௌனமாக விருந்தது.

நூபுரம்-பெண்கள் காலில் அணியும் ஆபரணம். இதில் சிறு ரத்தினங்கள் இடப்பட்டு நடக்கும் பொழுது ஒலிக் கும். एषा-இதோ எனச் சுட்டிக் காட்டினர். சிலம்பு ஒலிக் காமல் இருந்ததன் காரணத்தை, त्वच्चर...दुःखादिव என உத்ப்ரேக்ஷித்தார்.

ஸீதையை ராவணன் தூக்கிச்சென்ற பொழுது, அவ ளது மேனியினின்றும் விழுந்த ஆபரணங்களில் சிலம்பும் ஒன்று.

'चरणान्नूपुरं भ्रष्टं वैदेह्या रत्नभूषितम् ।
विद्युन्मण्डलसंकाशं पपात धरणीतले ॥' [அரண்ய. 52. 29]

'ஸீதை வானர வீரர்களிடையில் எறிந்த ஆபரணங்களில் ஒன்று இச்சிலம்பு எனச் சிலர் கூறுவது பிழைபட்டது.

இதுமுதல் சில ச்லோகங்களில், ராமர் தாம் ஸீதையைப் பிரிந்தபின் நேர்ந்த அனுபவங்களைக் கூறுகின்றார்.

त्वं रक्षसा भीरु यतोऽपनीता तं मार्गमेताः कृपया लता मे ।
अदर्शयन् वक्तुमशक्नुवत्यः शाखाभिरावर्जितपल्लवाभिः ॥ २४ ॥

**भीरु** - அச்சமுள்ளவளே, **त्वम्** - நீ, **रक्षसा** - அரக்கனால், **यतः** - எந்த வழியாக, **अपनीता** - கவர்ந்து செல்லப்பட்டாயோ, **तम्** - அந்த, **मार्गम्** - வழியை, **वक्तुम्** - கூறுவதற்கு, **अशक्नुवत्यः** - முடியாதவைகளான, **एताः लताः**- இந்தக் கொடிகள், **आवर्जित पल्लवाभिः** - வளைக்கப்பட்ட தளிர்களையுடைய, **शाखाभिः** - கிளைகளால், **कृपया** - இரக்கத்துடன், **मे** - எனக்கு, **अदर्शयन्** - காட்டின.

(க-து) இதோ இவ்விடத்துள்ள கொடிகள், ராவணன் உன்னைத் தூக்கிச் சென்ற வழியை எனக்குக் கூறவேண்டுமென்று விரும்பியும், பேச இயலாமையினாலே, தளிர்களை வளைத்துத் தம் கிளைக் கொடிகளாலே நீ சென்ற வழியைக் குறிப்பிட்டன.

கொடிகளுக்குக் கிளைகளைக் கைகளாகவும் தளிர்களை விரல்களாகவும் கூறினார்.

मृग्यश्च दर्भाङ्कुरनिर्व्यपेक्षास्तवागतिज्ञं समबोधयन् माम् ।
व्यापारयन्त्यो दिशि दक्षिणस्यामुत्पक्ष्मराजीनि विलोचनानि ॥२५॥

**दर्भाङ्कुर-निर्व्यपेक्षाः** - இளம் புல்லில் விருப்பற்ற, **मृग्यः च** - பெண்மான்களும், **उत्पक्ष्मराजीनि** - மேல் நோக்கிய இமைகளின் வரிசைகளையுடைய, **विलोचनानि** - கண்களை, **दक्षिणस्याम्** - தெற்கு, **दिशि** - திசையில், **व्यापारयन्त्यः** - செலுத்தியவைகளாய், **तव-अगतिज्ञम्**-உனது செலவை (செல்லுதலை) அறியாத, **माम्**-எனக்கு, **समबोधयन्** - உணர்த்தின.

(க-து) 'நான் படும் துயரத்தைக்கண்டு, இளம்புல்லைத்தின்னும் பெண்மான்களும் அதில் விருப்பின்றி, நீ சென்ற திசையையே நோக்கினவாய், நீ போன வழி அறியாதிருந்த எனக்கு அவ்வழியைக் காட்டின.

**दर्भाङ्कुरनिर्व्यपेक्षाः** - ஸீதைக்கு நேர்ந்த துக்கத்தைத் தம்முடையதாகக் கருதினபோலும் அம் மான்கள். '**दर्भानुपात्तान् विजहुर्हरिण्यः**' [14-68] என்றார் பின்னும். 'ஆகாசத்தின் மூலம் தென்திசையில் ஸீதை சென்றாள் என்பதைக் கண்ணிமைகளை மேல் நோக்கியனவாகச் செய்ததாலும், தென்திசையை நோக்கியதாலும் மான்கள் குறிப்பிட்டன.

"**दक्षिणाभिमुखाः सर्वे दर्शयन्तो नभस्थलम्**
**मैथिली ह्रियमाणा सा दिशं यामभ्यपद्यत ।**
**तेन मार्गेण गच्छन्तो निरीक्षन्तै नराधिपम् ।**" [அரண்ய : 64-18, 19]

एतद्गिरेर्माल्यवतः पुरस्तादाविर्भवत्यम्बरलेखि शृङ्गम् ।
नवं पयो यत्र घनैर्मया च त्वद्विप्रयोगाश्रु समं विसृष्टम् ॥ २६ ॥

**यत्र** - எங்கு, **घनैः** - மேகங்களால், **नवम्** - புதிய, **पयः** - நீரும், **मया** - என்னால், **त्वद्विप्रयोगाश्रु च** - உன்னைப் பிரிந்ததால் கண்ணீரும், **समम्** - ஒருங்கே (ஒரே அளவில்), **विसृष्टम्** - விடப்பட்டதோ (அந்த), **माल्यवतः** - மால்யவான் எனப்படும், **गिरेः** - மலையின், **अम्बरलेखि** - ஆகாயத்தை அளாவும், **एतत् शृङ्गम्** - இச்சிகரம், **पुरस्तात्** - எதிரில், **आविर्भवति** - தோன்றுகின்றது.

(க-து) 'இதோ எதிரில் தெரியும் மால்யவான் என்னும் மலையின் சிகரத்தில் முன்பு உன்னைக் காணாமல் வருத்தமுற்றுக் கண்ணீர் பெருக்கிக் கொண்டிருந்தேன். மழைக்காலமானதால் மேகமும் மழை பொழிந்து கொண்டிருந்தது.

இங்குக் குறிப்பிடும் ஸம்பவம், வாலியை வதம் செய்து ஸுக்ரீவ பட்டாபிஷேகம் முடித்தபின் நேர்ந்தது. மழைக் காலமானதால் ஸீதையைத் தேடும் முயற்சியில் ஈடுபட முடியாதென நினைத்து ராமர் மால்யவான் என்ற மலையில் தங்கி யிருந்தார். மழைக்காலம், பிரிந்துள்ள காதலர்களுக்கு வேதனை யளிப்பதாகக் கூறுவர். எனவே மேகம் மழை வர்ஷித்த பொழுது ஸீதையின் பிரிவாற்றாது ராமரும் கண்ணீர் சொரிந்தார்.

**समम्** - 'ஒரே காலத்தில்':— மேகம் மழை பொழிந்த அதே சமயத்தில் ராமரும் கண்ணீர் பெருக்கினர். "ஒத்த அளவாக" எனப் பொருள் கொண்டு, மேகம் பொழிந்த அளவு ராமரும் கண்ணீர் உகுத்தார் என்பதும் சிறந்த உரையாகும்.

गन्धश्च धाराहतपल्वलानां कादम्बमर्धोद्गतकेसरं च ।
स्निग्धाश्च केकाः शिखिनां बभूवुर्यस्मिन्नसह्यानि विना त्वया मे ॥

**यस्मिन्** - எந்த மலையின் சிகரத்தில், **धारा-आहत-पल्वलानाम्** மழைத்தாரையினால் அடிக்கப் பட்ட நீர் நிலைகளின், **गन्धः च** - மணமும், **अर्धोद्गत-केसरम्** - பாதி வெளி வந்த கேஸரத்தையுடைய, **कादम्बं च** - காதம்ப மலரும், **स्निग्धाः** - இனிய, **शिखिनाम्** - மயில்களின், **केकाः च** - கேகா சப்தங் களும், **त्वया विना**-நீ இன்றி, **(स्थितस्य)**-இருந்த, **मे**-எனக்கு, **असह्यानि** - பொறுக்க இயலாதனவாக, **बभूवुः** - ஆயினவோ அந்த மலைச்சிகரம் இது.

(க-து) 'காய்ந்திருக்கும் நீர் நிலைகளில் புதிதாக மழை பெய் தால் உண்டாகும் மணமும், சிறிதே மலர்ந்த காதம்ப மலர்களும், மயில்களின் அகவல்களும் உன்னுடன் இருக்கும் பொழுது மனத் திற்கு மகிழ்ச்சியைத் தந்தன. ஆனால் உன்னைப் பிரிந்து இருந்த

பொழுது இவை யெல்லாம் என் மனத்திற்கு வேதனையைத் தந்து உன் பிரிவைச் ஸகிக்க முடியாதனவாகச் செய்தன.

மழைக்காலத்தின் குறிகள் இச்சுலோகத்திலே கூறப்பட்டன. இவை எல்லாம் மழைக்காலம் வந்துற்றதென்பதை நன்கு புலப்படச் செய்து காதலர்களின் மனத்திலே விருப்பைத் தூண்டுவன என்பர்.

पूर्वानुभूतं स्मरता च यत्र कम्पोत्तरं भीरु तवोपगूढम् ।
गुहाविसारिण्यतिवाहितानि मया कथंचिद्धनगर्जितानि ॥ २८ ॥

**भीरु**-பயந்த இயல்புள்ளவளே, **किंच** - மேலும், **पूर्वानुभूतम्** - முன்பு (என்னால்) அனுபவிக்கப்பட்டதும், **कम्पोत्तरम्** - மிக நடுக்கத்துடன் கூடியதுமான, **तव**-உனது, **उपगूढम्** - ஆலிங்கனத்தை, **स्मरता** - நினைக்கின்ற, **मया** - என்னால், **गुहा विसारीणि** - குகையில் பரவுகின்ற (எதிரொலி செய்கின்ற), **घनगर्जितानि** - மேக கர்ஜனைகள், **यत्र** - எந்தச் சிகரத்தில், **कथञ्चित्**-ஒருவாறு, **अतिवाहितानि**-கழிக்கப்பட்டனவோ அந்த மலைச் சிகரம் இது.

(க-து) 'நமது வனவாஸ சமயத்தில் மழைக்காலத்திலே குகைகளில் எதிரொலி செய்யும் இடியோசையைக் கேட்டு அச்சமுற்று நீ நடுக்கத்துடன் என்னைத் தழுவிக் கொள்ளுவாய். நீ தழுவும் பொழுது உனது நடுக்கத்தை நான் நன்கு உணர்ந்துள்ளேன். உன்னைப் பிரிந்து நான் இங்கு வஸித்த சமயத்தில் மேகத்தின் சத்தம் கேட்ட போது உனது அந்தத் தழுவல்கள் ஞாபகத்திற்கு வரும். அவற்றை நினைத்து மிக்க வருத்தத்துடன் இடிச் சத்தங்களை யெல்லாம் பொறுத்தேன்.

**कथञ्चित्**-'என்றாவது ஒரு நாள் திரும்பவும் அத்தகைய இன்பம் கிடைக்கும் என்ற ஆசையால்' என்பது கருத்து.

आसारसिक्तक्षितिबाष्पयोगान्मामक्षिणोद्यत्र विभिन्नकोशैः ।
विडम्ब्यमाना नवकन्दलैस्ते विवाहधूमारुणलोचनश्रीः ॥ २९ ॥

यत्र - எங்கு, विभिन्न-कोशैः - மலர்ந்த மொட்டுக்களை யுடைய, नव कन्दलैः - புதிய கந்தள மலர்களால், आसार-सिक्त-क्षिति-बाष्प-योगात्-புது மழையால் நனைக்கப்பட்ட பூமி யினது ஆவியின் தொடர்பு காரணமாக, विडम्ब्यमाना - அநுகரிக்கப்படுகின்ற, ते - உனது, विवाह धूम-अरुण लोचन-श्रीः - மணப் புகையினால் சிவந்த கண்களின் அழகானது, माम् - என்னை, अक्षिणोत् - வருத்தியதோ அந்த மலைச்சிகரம் இது.

(க-து) 'விவாஹ காலத்தில் ஹோமஞ் செய்யும் பொழுது எழும் புகையால் உனது கண்கள் சிவந்து விளங்கின. காய்ந்த நிலத்தில் புதிதாக மழைத்துளிகள் வீழ்ந்ததும் ஆவி எழுந்து மலர்ந்த கந்தள மலர்களைச் சூழ்ந்தது. அத்தகைய மலர்கள் மணக்காலத்திலிருந்த உன் சிவந்த கண்களை நினைப்பூட்டி என் மனத்திற்குத் துன்பம் விளைவித்தன.

कन्दलम्-மழைக்காலத்திலே பூக்கின்றதும், சிறிதே சிவந்ததுமான ஒருவகைப்புஷ்பம்: இதைத்தமிழிலே செங்காந்தள் என்பர். இயற்கையிலே சிவந்திருந்த கந்தளம் ஸீதையின் கண்களை ஒத்து இருந்தது. புது மழையால் தோன்றிய ஆவி அதனூடே செல்லும் பொழுது அம்மலர், மணப் புகையால் சிவந்த ஸீதையின் கண்களைமுற்றிலும் அநுகரிப்பதாக இருந்தது; எனவே, கந்தள மலர் ஸீதையின் விவாஹ காலத்தில் அவளுக்கிருந்த கண்ணழகை ராமருக்கு நினைவூட்டியது.

उपान्तवानीरवनोपगूढान्यालक्ष्यपारिप्लवसारसानि ।
दूरावतीर्णा पिबतीव खेदादमूनि पम्पासलिलानि दृष्टिः ॥ ३० ॥

उपान्त - वानीर - वनोपगूढानि- அருகிலுள்ள நீர்வஞ்சிக் காட்டினால் மறைந்திருப்பதும், आलक्ष्य - पारिप्लव - सार -

सानि - சிறிதே காணப்படுவனவாய் மிதக்கின்ற ஹம்ஸங்களையுடையதுமான, अमूनि - இந்த, पम्पा सलिलानि - பம்பாநதியின் ஜலத்தை, दूरावतीर्णा - வெகு தொலேவிலிருந்து இறங்கிய (காண்கின்ற), मे दृष्टिः - என் பார்வை, खेदात् - சிரமத்தினல், पिबति इव - குடிக்கின்றது போலும்!

(க-து) 'பம்பாநதி கண்களுக்குப் புலனாகாதவாறு வஞ்சிக் காட்டினல் மறைக்கப்பட்டுள்ளது. ஆனலும், இடைவெளி வழியாகப் பார்க்கையில் ஆற்று நீரில் அன்னப் பறவைகள் நீந்திச் செல்வது காணப்படுகிறது. வெகு தூரத்திலிருந்து ஆவலுடன் பார்க்கும் என் கண்கள் சிரமத்தினல் அதன் நீரைக் குடிப்பனபோலிருக்கிறன.

वानीर - வஞ்சிக் கொடி. நீர் நிலேகளின் அருகிலே வளருவது; उपगूढानि - தழுவிய என்றும் பொருள் கூறுவர். सारसः நீர் வாழ்பறவை: ஹம்ஸம் முதலியன; पम्पा - இது ஒரு ஏரி என்றும் கூறுவர். पिबति इव - ஆவலுடன் பார்ப்பதைக் கண்களால் பானம் செய்வதாகக் கூறுவர். पारिप्लव-'சஞ்சரிக்கின்ற' என்றும் பொருள் உண்டு.

अत्रावियुक्तानि रथाङ्गनाम्नामन्योन्यदत्तोत्पलकेसराणि ।
द्वन्द्वानि दूरान्तरवर्तिना ते मया प्रिये सस्पृहमीक्षितानि ॥ ३१ ॥

प्रिये - அன்பே, अत्र-இங்கு (பம்பாநதியின் ஜலத்தில்), अन्योन्य-दत्त-उत्पल-केसराणि - பரஸ்பரம் தாமரைக் கேஸரங்களைக்கொடுத்துக் கொண்டனவும், अवियुक्तानि-இணைபிரியாதனவுமான, रथाङ्गनाम्नाम् द्वन्द्वानि - சக்ரவாக தம்பதிகள், ते - உனக்கு, दूरान्तर वर्तिना - தொலேவான இடத்தில் உள்ள, मया - என்னல், सस्पृहम् - ஆவலுடன், ईक्षितानि - பார்க்கப்பட்டன.

(க-து) 'இதே பம்பாநதியின் ஜலத்தில் எப்பொழுதும் இணைபிரியாத சக்ரவாகதம்பதிகள் பல, தாமரை மலர்களின்கேஸரங்களைப் பரஸ்

பரம் கொடுத்து இன்பம் துய்த்துக் கொண்டிருந்தன. நீ அருகிலில் லாமையால் இக்காட்சியை ஆவலுடனும், ஏக்கத்துடனும் பார்த்துக் கொண்டிருந்தேன்.

சக்ரவாகம்-ஒருவகை நீர்ப்பறவை. 'ஆண்-பெண்' அன் பிற்குச் சிறந்த உதாஹரணமாகக் கருதப் படுபவை. தாம ரைக் கேஸரங்களைத் தந்து ஸுகமனுபவித்தன என்றது, பிறஇன்பங்களுக்கும் உபலக்ஷணம். सस्पृहम् - 'நாமும் ஸீதையுடன் இவ்வகையான இன்பம் பெறவேண்டும்' என்ற ஆவலுடன் என்பது கருத்து.

इमां तटाशोकलतां च तन्वीं स्तनाभिरामस्तबकाभिनम्राम् ।
त्वत्प्राप्तिबुद्ध्या परिरब्धुकामः सौमित्रिणा सास्रमहं निषिद्धः ॥

किंच-மற்றுமொன்று : स्तन-अभिराम-स्तबक-अभिनम्राम्- ஸ்தனங்கள்போல் அழகான பூங்கொத்துக்களால் வளைந்த, इमाम् - இந்த, तन्वीं - மெல்லிய, तटाशोकलताम् - (ஆற்றங்) கரையிலுள்ள அசோகக் கொடியை, त्वत्प्राप्ति बुद्ध्या- நீ அடை யப் பட்டாய் என்ற எண்ணத்தால், परिरब्धुकामः - தழுவ விரும்பிய, अहम् - நான், सौमित्रिणा-லக்ஷ்மணனால், सास्रम्- கண்ணீருடன், निषिद्धः - தடுக்கப்பட்டேன்.

(க-து) 'இந்த ஆற்றங்கரையில் அசோகக் கொடி, பூங்கொத்துக் களுடன் உன்னைப் போலவே திகழ்ந்தது. அதைக் கண்ட நான் துக் கத்தின் மிகுதியால் அதை நீ எனவே மயங்கி, உன்னையே அடைந்து விட்டதாக எண்ணித் தழுவ முயன்றேன். இந்த என் தடுமாற்றத் தைக் கண்ட லக்ஷ்மணன் மிக வருத்த முற்றுக் கண்ணீருடன் 'இது ஸீதையல்ல' எனக் கூறி என்னை விலக்கினான்.

அசோகின் கிளையைக் கொடி என்று கூறுதல் கவி மரபு. கொடியைக் கண்டு ஸீதையென ராமர் மயங்கியதற் குக் காரணம், तन्वीम् स्तनाभिरामस्तबकाभिनम्रां - என்பன வற்றால் காட்டப்பட்டது. மெல்லியதாய்,ஸ்தனங்கள்போன்ற

பூங்கொத்துடன் சிறிதே முன்னேக்கி வளைந்திருந்ததால் அசோகக்கிளை இத்தகைய மயக்கத்தை உண்டாக்கியது.

अमूर्विमानान्तरलम्बिनीनां श्रुत्वा स्वनं काञ्चनकिङ्किणीनाम् ।
प्रत्युद्व्रजन्तीव खमुत्पतन्त्यो गोदावरीसारसपङ्क्तयस्त्वाम् ॥ ३३ ॥

**विमानान्तर लम्बिनीनाम्** - விமானத்தின் இடைவெளியிலே தொங்குகின்ற, **काञ्चन किङ्किणीनाम्** பொன்னாலான சிறு மணிகளின், **स्वनम्**-ஒலியை, **श्रुत्वा** - கேட்டு, **खम्** - ஆகாயத்தில், **उत्पतन्त्यः** - எழுகின்ற, **अमूः** - இந்த, **गोदावरी-सारस-पंक्तयः**-கோதாவரியில் உள்ள ஸாரஸ பக்ஷிகளின் வரிசைகள், **त्वाम्**-உன்னை, **प्रत्युद्व्रजन्ति-इव** - எதிர்கொண்டு வருகின்றன போலும் !

(க-து) 'விமானத்தில் இடைவெளியிலேயுள்ள மணிகள் விமானம் செல்லுகையில் ஒலிக்கின்றன. அச்சத்தத்தைச் கேட்டு ஸாரஸ பக்ஷிகள், தம் இனத்தைச் சேர்ந்த பறவைகளின் ஒலி இது என நினைத்து விமானத்தின் எதிரே வருகின்றன. இது உன்னை எதிர்கொள்ள அவை வருவதைப் போன்றுள்ளது.

एषा त्वया पेशलमध्ययापि घटाम्बुसंवर्धितबालचूता ।
आनन्दयत्युन्मुखकृष्णसारा दृष्टा चिरात्पञ्चवटी मनो मे ॥ ३४ ॥

**पेशल-मध्ययापि** - மெல்லிய இடையை உடையவளாயினும், **त्वया** - உன்னால், **घटाम्बु-संवर्धित-बालचूता**-குடத்தின் நீரினால் வளர்க்கப்பட்ட மாங்கன்றுகளையுடையதும், **उन्मुख-कृष्णसारा** - தலை நிமிர்த்திய மான்களை உடையதும், **चिरात्** - வெகு நாட்களுக்குப் பின், **दृष्टा** பார்க்கப்பட்டதுமான, **एषा** - இந்த, **पञ्चवटी** - பஞ்சவடீ, **मे** - எனது, **मनः** - மனத்தை, **आनन्दयति** - களிப்பிக்கின்றது.

(க-து) 'இதோ தெரியும் பஞ்சவடியைப் பார்க்க நான் அதிக ஆனந்த மடைகிறேன். எனெனின், மெலிந்த-அதிக பாரம் சுமக்க

முடியாத-இடையை உடைய நீ, குடங்களில் நீரைக் கொணர்ந்து ஊற்றி வளர்த்த மாக்கன்றுகள் இங்கே யுள்ளன. மான்கள் நம் விமான சத்தத்தைக் கேட்டுத் தங்கள் கழுத்தை மேலே தூக்கிப் பார்க்கின்றன. இத்தகைய இடத்தைப் பார்க்கையில் எனக்குக் களிப்பு மிகுகிறது.

अत्रानुगोदं मृगयानिवृत्तस्तरंगवातेन विनीतखेदः ।
रहस्त्वदुत्सङ्गनिषण्णमूर्धा स्मरामि वानीरगृहेषु सुप्तः ॥ ३५ ॥

**अत्र** - இந்தப் பஞ்சவடியில், **मृगया-निवृत्तः** - வேட்டையிலிருந்து திரும்பிய (நான்), **अनुगोदम्** - கோதாவரிக்குச் சமீபத்தில், **वानीर गृहेषु** - வஞ்சிக் கொடி வீடுகளில், **रहः** - தனிமையில், **त्वदुत्सङ्ग निषण्ण मूर्धा (सन्)** - உன் மடியில் வைக்கப்பட்ட தலையையுடையவனாக, **तरंगवातेन** - அலைகளின் காற்றினால், **विनीत खेदः** - போக்கப்பட்ட சிரமத்தையுடையவனாக, **सुप्तः** - தூங்கினேன், **(इति-)स्मरामि** - என இதை (இப்பொழுது) நினைக்கிறேன்.

(க-து) 'இந்தப் பஞ்சவடியில், வேட்டைக்குச் சென்று சிரமத்துடன் திரும்பிய நான், கோதாவரிக் கரையிலுள்ள சோலையில் உன் மடிமீது தலையை வைத்துக் கொண்டு, இந் நதியிலிருந்து வீசும் குளிர்ந்த காற்றினால் என் சிரமமெல்லாம் நீங்க, ஸுகமாகத் தூங்கிய இன்ப நினைவு, இப்பொழுது என் ஞாபகத்திற்கு வருகிறது.

**मृगयानिवृत्तः तरंगवातेन विनीतखेदः, त्वदुत्संगनिषण्ण-मूर्धा** - என்ற மூன்று அடைமொழிகளும், நித்திரையினது இன்பச் சிறப்பைக் காட்டுகின்றன. வேட்டையிலுள்ள உடலுழைப்பினால் தூக்கம் எளிதிலே வரும்; குளிர்ந்த காற்று களைப்பை நீக்கும்; அன்புடையவரின் சரீர ஸ்பர்சம் மனத்திற்கு மகிழ்ச்சியையும், அமைதியையும் தந்து உதவும்.

भ्रूभेदमात्रेण पदान्मघोनः प्रभ्रंशयां यो नहुषं चकार ।
तस्याविलाम्भः परिशुद्धिहेतोर्भौमो मुनेः स्थानपरिग्रहोऽयम् ॥३६॥

**यः** - எந்த முனிவர், **भ्रूभेद मात्रेण** - புருவ நெரிப்பினால் மாத்திரமே, **नहुषम्** - நஹுஷனை, **मघोनः पदात्** - இந்திரனது ஸ்தானத்திலிருந்து, **प्रभ्रंशयाञ्चकार** - நழுவச் செய்தாரோ, **तस्य** - அந்த, **आविलांभः परिशुद्धि हेतोः** - கலங்கிய நீர் தெளியக் காரணமான, **मुनेः**-முனிவரின், **भौमः** - பூமியிலுள்ள, **स्थानपरिग्रहः** - வாஸஸ்தானம், **अयम्** - இது.

(க-து) 'இதோ தெரியும் இந்த இடம், தன் புருவ நெரிப்பினாலேயே நஹுஷனை இந்திர பதவியினின்று விலக்கிப் பாம்பாகச் செய்தவரும், கலங்கிய நீரைத் தெளிவடையச் செய்பவருமான அகஸ்தியரின் பூலோக வாஸஸ்தானம் ஆகும்.

ஆயுஸ் என்பவரின் மூத்த பிள்ளையான நஹுஷன் நூறு யாகங்களைச் செய்து இந்திர பதவியை யடைந்து, கர்வங்கொண்டு ஸப்தரிஷிகளைத் தன்னுடைய பல்லக்கைச் சுமக்க உத்திரவிட்டவனாய், மெதுவாகச் சென்ற அவர்களை, **सर्प, सर्प** - (செல்க செல்க) என்று கூறிக் கட்டளையிட்டான். இதைக் கேட்டுக் கோபங் கொண்ட அகஸ்தியர் **सर्प** - என்று கூறிய நீ (**सर्पः भव**) ஸர்ப்பமாகக் கடவாய் என்று சபித்தார்.

அகஸ்த்ய நக்ஷத்ரம் உதயமானால் ஆறு குளங்களிலுள்ள நீர் தெளிவடையுமாகையால், **आविलांभ...हेतोः** - என விசேஷித்தார் [ஸர்க்கம் 4-21 ஆம் சுலோகம் காண்க.]

त्रेताग्निधूमाग्रमनिन्द्यकीर्तेस्तस्येदमाक्रान्तविमानमार्गम् ।
घ्रात्वा हविर्गन्धि रजोविमुक्तः समश्नुते मे लघिमानमात्मा ॥ १७ ॥

**आक्रान्त विमान मार्गम्** - விமானத்தின் வழியில் பரவியுள்ளதும், **हविर्गन्धि** - ஹவிஸ்ஸின் வாஸனையை யுடையதுமான, **अनिन्द्य कीर्तेः** - குற்றமற்ற புகழையுடைய, **तस्य** - அந்த அகஸ்திய முனிவரின், **इदम्** - இந்த, **त्रेताग्नि धूमाग्रम्** -

மூன்று அக்னிகளின்றும் எழுகின்ற புகையின் சிகரத்தை, **घ्रात्वा** - மோந்து, **रजोविमुक्तः** - ரஜோகுணம் நீங்கியதான, **मे आत्मा** - எனது மனம், **लघिमानम्** - இலேசாக இருக்கும் நிலையை(ஸத்வகுணத்தை), **समश्नुते** - அடைகிறது.

(க-து) 'இங்கே அகஸ்திய முனிவர் இருந்து கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்னி என்ற மூன்று அக்னிகளிலும் நெய் முதலிய ஆஹுதியைத் தேவதைகளை உத்தேசித்துச் சொரிந்து கொண்டிருக்கிறார். புகையிலே வருகின்ற அந்த ஹவிஸ்ஸின் வாஸனையை மோந்த நான், என்னிடமிருந்த ரஜோகுணம் விலகி எனது மனம் எவ்வகைத் தளையுமின்றி இலேசாக விருப்பத்தை உணர்கிறேன்.

ஸத்வகுண மிகுதியால் மனத்திலே தெளிவும், அமைதியும் ஏற்பட்டன; இதனால் மனம் சுமைநீங்கி லேசாக இருப்பதாய் உணர்ந்தார் ராமர். 'सत्त्वं लघु प्रकाशम् इति सांख्याः' नारायणः।

एतन्मुनेर्मानिनि शातकर्णेः पञ्चाप्सरो नाम विहारवारि।
आभाति पर्यन्तवनं विदूरान्मेघान्तरालक्ष्यमिवेन्दुबिम्बम् ॥ ३८ ॥

**मानिनि** - பெருமையுள்ளவளே, **शातकर्णेः** - சாதகர்ணி என்னும், **मुनेः** - முனிவரின், **पञ्चाप्सरः नाम** - பஞ்சாப்ஸரஸ் எனப் பிரசித்தமானதும், **पर्यन्तवनम्** - சுற்றிலும் காடுடையதுமான, **एतत्** - இந்த, **विहारवारि** - ஆடல் தடாகம், **विदूरात्** - தூரத்திலிருந்து, **मेघान्तर-आलक्ष्यम्** - மேகங்களுக்கிடையில் சிறிதே காணப்படும், **इन्दु बिम्बं इव** - சந்திர பிம்பம் போல, **आभाति** - விளங்குகிறது.

(க-து) 'இதோ தெரியும் இந்தக் குளமானது சாதகர்ணி என்னும் முனிவரின் ஜலக்ரீடைக்கான தடாகமாகும். இதன் நான்கு புறங்களிலும் இருண்ட காடுகளிருப்பதால், இடையேயுள்ள வெண்மையான அத்தடாகம், நாற்புறமும் மேகங்களால் சூழப்பட்டு இடை

யிலிருக்கும் வெண்மையான சந்திரபிம்பம் போலக் காட்சியளிக்கிறது.

*சாதகர்ணி*: ராமாயணத்தில் அவரது பெயர் மாண்டகர்ணி எனக் கூறப்பட்டுள்ளது. இவர் பதினாயிரம் ஆண்டு கடுந்தவஞ் செய்ய, அதைக் கெடுப்பதற்காகத் தேவர்கள் சிறந்த ஐந்து அப்ஸரஸ்த்ரீகளை அனுப்ப, அவர்களைக் கண்டு மனநிலை குலைந்த முனிவர், அவர்கள் ஐவரையும் மணந்து கொண்டு, தம் தவவலியால் அத்தடாகத்தையும் அத்தடாகத்தின் அடியில் அரண்மனை யொன்றையும் நிர்மாணித்து அதில் அவர்களுடன் வசித்து வந்தார் என்று ராமாயணத்தில் இவர் சரித்திரம் உரைக்கப் பட்டுள்ளது.

ஐந்து அப்ஸரஸ்த்ரீகள் இருப்பதால் பஞ்சாப்ஸரஸ் என்று அத்தடாகத்திற்குப் பெயர் வந்தது. இருண்ட காட்டிற்கு மேகமும், குளிர்ந்த நீருள்ள தடாகத்திற்குச் சந்திரபிம்பமும் உவமையாயின. **बभूव जलदं नीलं भित्त्वा चन्द्र इवोदित:** - என வால்மீகி பிறிதோர் இடத்தில் கூறியுள்ள உவமையையும் ஒப்பு நோக்குக.

पुरा स दर्भाङ्कुरमात्रवृत्तिश्चरन्मृगैः सार्धमृषिर्मघोना ।
समाधिभीतेन किलोपनीतः पञ्चाप्सरोयौवनकूटबन्धम् ॥ ३९ ॥

**पुरा** - முன்பு, **दर्भाङ्कुरमात्रवृत्तिः** - தர்ப்பத்தின் குருத்துக்களை மாத்திரம் உணவாகக்கொண்டவராக, **मृगैः सार्धम्** - மான்களோடு கூட, **चरन्** - ஸஞ்சரித்துக் கொண்டுஇருந்த, **सः ऋषिः** - அந்த முனிவர், **समाधि-भीतेन** - தவத்தினின்றும் அச்சமுற்ற, **मघोना**-இந்திரனால், **पञ्चाप्सरो यौवन-कूटबन्धम्**- ஐந்து அப்ஸரஸ்த்ரீகளின் யௌவனமாகிய கபடப் பொறியை, **उपनीतः किल** - அடைவிக்கப்பட்டார்.

'க-து) 'இந்த சாதகர்ணி முன்பு, இளம் புல்லையே உணவாகக் கொண்டு மான்களுடன் காட்டில் எவ்வகைப் பற்று மின்றித் தவஞ்

செய்து கொண்டிருந்தார். இவரது தவத்தைக் கண்டு அஞ்சிய இந்திரன், ஐந்து அப்ஸரஸ்த்ரீகளை யனுப்பி, அவர்களின் யௌவனமாகிய பொறியிலே இம்முனிவரைச் சிக்கச் செய்தான்.

**कूटबन्ध:**- மிருகம் பறவைகளைப் பிடிப்பதற்கான பொறி, வலை முதலியன. மான்போல் வாழ்ந்த முனிவரைப் பிடிக்கப் பொறியாக இருந்தது அப்ஸரஸ்களின் யௌவனம்; ஒரு அப்ஸரஸின் யௌவனத்திற்குப் பிடிபடமாட்டாரென எண்ணிப் போலும் இந்திரன் ஐந்து பேரை அனுப்பினான்; **पञ्चेन्द्रियतर्पणाय पञ्चाप्सरस इति वा ॥** - பஞ்சேந்திரியங்களை மகிழ்விக்க ஐந்து அப்ஸரஸ்திரீகள் எனினுமாம்.

तस्यायमन्तर्हितसौधभाजः प्रसक्तसंगीतमृदङ्गघोषः ।
वियद्गतः पुष्पकचन्द्रशालाः क्षणं प्रतिश्रुन्मुखराः करोति ॥ ४० ॥

**अन्तर्हित सौध भाजः**-(நீரில்) மறைந்திருக்கின்ற அரண்மனையிலுள்ள, **तस्य**-அந்த முனிவரின், **अयं**-இந்த, **प्रसक्त-संगीत - मृदङ्ग - घोषः** - இடையறவில்லாத இசையினதும், இசைக் கருவியினதுமான ஒலி, **वियद्गतः(सन्)** - ஆகாயத்தை அடைந்ததாக, **पुष्पक चन्द्रशालाः**-புஷ்பக விமானத்தின் மேற்பகுதிகளை, **क्षणं** - சிறிது நேரம், **प्रतिश्रुन्मुखराः** - எதிரொலியால் சத்தமுடையனவாக, **करोति**-செய்கிறது.

(க-து) இக்குளத்தில் மறைந்துள்ள அரண்மனையில் தம் காதலியருடன் வசிக்கும் சாதகர்ணியின் சங்கீதத்தினதும், மிருதங்கத்தினுடையவும் ஒலி, நமது புஷ்பக விமானத்தின் மேற்பகுதியில் எதிரொலிக்கிறது.

**चन्द्रशाला** - விமானத்தின் மேற்பகுதி; **प्रसक्त** - தொடங்கப்பட்ட என்றுமுரைக்கலாம். **मृदंग** - என்றது, மற்ற இசைக் கருவிகளுக்கும் உபலக்ஷணம்.

**प्रसन्नसलिले रम्ये तस्मिन् सरसि शुश्रुवे ।**
**गीतवादित्रनिर्घोषो न तु कश्चन दृश्यते ॥** [அரண். 11-7]

என்பது ராமாயணம். அரண்ய காண்டத்தில் [ஸர்க்கம் 11] பதினைந்து சுலோகங்களிலே கூறப்பட்டுள்ள சாதகர்ணியின் ஸுசாநுபவம் காளிதாஸரின் மனத்தை மிகக் கவர்ந்துள்ளது; இவ்வரலாற்றை ஒரு முனிவர் வாயிலாகக்கேள்வியுற்ற ராமரும் இதை வியப்பிற்குரியதாகக் கருதினார். आश्चर्यमिति तस्यैतद्वचनं भावितात्मनः । राघवः प्रतिजग्राह என்பர் வால்மீகி.

हविर्भुजामेधवतां चतुर्णां मध्ये ललाटंतपसप्तसप्तिः ।
असौ तपस्यत्यपरस्तपस्वी नाम्ना सुतीक्ष्णश्चरितेन दान्तः ॥ ४१ ॥

**नाम्ना** - பெயரினால், **सुतीक्ष्णः** - ஸுதீக்ஷ்ணர் (கடுமையானவர்) என்பவரும், **चरितेन** - நடக்கையினால், **दान्तः** - (சாந்தரும்) தன்னடக்கமுடையவருமான, **असौ** - இந்த, **अपरः** - மற்றொரு, **तपस्वी** - முனிவர், **एधवताम्** - விறகுகளைக் கொண்ட, **चतुर्णाम्** - நான்கு, **हविर्भुजाम्** - அக்னிகளின், **मध्ये** - இடையில், **ललाटंतप-सप्त-सप्तिः** - நெற்றியைக் கொளுத்துகின்ற சூரியனை உடையவராக, **तपस्यति** - தவம் புரிகிறார்.

(க-து) 'இதோ, புலனடக்கமுடைய ஸுதீக்ஷ்ணர் என்ற முனிவர், விறகுகள் இடப்பட்டு நன்கு எரிந்து கொண்டிருக்கும் தீ நான்கு புறங்களிலும் இருக்க, நெற்றி மீது சூரியன் தகிக்க, அமர்ந்து தவம் புரிகின்றார்.

நான்கு புறங்களிலும் நான்கு அக்னிகள் இருக்க ஐந்தாவது அக்னியாக சூரியனை நோக்கிக் கொண்டு தவம் புரிவதால் இது பஞ்சாக்னி தபஸ் எனப்படும்.

**सुतीक्ष्णः-दान्तः** - இவரது பெயர், கொடியவர் என்ற பொருளுடையதாயினும், இம்முனிவர் மிகவும் சாந்தஸ்வபாவமுடையவர். இவரை ராமர் இருமுறை கண்டிருக்கிறார். இவரது ஆச்ரமத்திலும் சிறிது காலம் வசித்திருக்கிறார்.

अमुं सहासप्रहितेक्षणानि व्याजार्धसंदर्शितमेखलानि ।
नालं विकर्तुं जनितेन्द्रशङ्कं सुराङ्गनाविभ्रमचेष्टितानि ॥ ४२ ॥

**जनित-इन्द्रशङ्कम्** - (தவத்தினால்) இந்திரனுக்கு அச்சத்தை உண்டாக்கிய, **अमुम्** இந்த ஸுதீக்ஷ்ண முனிவரை, **सहास-प्रहित-ईक्षणानि** - புன்சிரிப்புடன் செலுத்தப் பட்ட கண்பார்வைகளும், **व्याजार्ध संदर्शित मेखलानि** - வேறு குறிப்பினால் சிறிது காண்பிக்கப்பட்ட மேகலைகளையுடையவையுமான, **सुराङ्गना विभ्रम चेष्टितानि** - அப்ஸரஸ்த்ரீகளின் அழகான (காதல்) சேஷ்டைகள், **विकर्तुम्** - மனந்தடுமாறச் செய்ய, **अलं न** - வலிமைபெற்றனவாக இல்லை.

(க-து) 'ஸுதீக்ஷ்ண முனிவரின் தவத்தினால் அச்சமுற்ற இந்திரன், தேவஸ்த்ரீகளை அவருடைய தவத்தைக் குலைப்பதற்காக அனுப்பினான். அவர்களும் புன்சிரிப்புடன் பார்த்தல், இடை தெரியும் படியாக மேகலையை வேறு காரணத்தால் நழுவியது போல் நழுவவிடல் முதலிய காதற்குறிகளான சேஷ்டைகளைச் செய்தும் அம்முனிவரின் மன உறுதியைக் குலைக்க முடியவில்லை.

**चेष्टितानि** - இங்கே, காதலை வெளியிடும் செயல்கள்; புன்னகையுடன் கூடிய கண்ணோக்கு, ஏதாவது ஒரு வியாஜத்தை இட்டு அங்கங்களைப் புலனாகச் செய்தல் முதலியன. ஸுதீக்ஷ்ணரின் கண்களுக்கு அழகாயில்லாவிடினும் பிறர் கண்களுக்கு இச்செயல்கள் அழகினதாக இருந்ததால் **विभ्रम** - என அடைமொழி கொடுத்தார் கவி.

**मेखला** - என்றது, மேகலை அணியப்படும் இடத்தை. சாதகர்ணிபோல் ஸுதீக்ஷ்ணர் இந்திரனது வலையில் சிக்கவில்லை என்பதும், அவரது தைர்யமும் இதனால் கூறப்பட்டன.

एषोऽक्षमालावलयं मृगाणां कण्डूयितारं कुशसूचिलावम् ।
सभाजने मे भुजमूर्ध्वबाहुः सव्येतरं प्राध्वमितः प्रयुङ्क्ते ॥ ४३ ॥

**ऊर्ध्वबाहुः** - உயர்த்தப்பட்ட (இடது) கையையுடைய, **एषः** - இம்முனிவர், **अक्षमाला वलयम्** - ருத்ராக்ஷமாலையை வளைபோலணிந்துள்ளதும், **मृगाणाम्** - மான்களின், **कण्डूयितारम्** - தினவை நீக்குவதும், **कुश-सूचि-लावम्**-ஊசிபோன்ற முனையையுடைய தர்ப்பங்களை அறுப்பதுமான, **सव्येतरम्-भुजम्** - வலது கையை, **मे** - எனக்கு, **सभाजने** - மரியாதை செய்வதற்காக, **प्रह्वम्** - அனுகூலமான முறையில், **इतः** - இப்புறம், **प्रयुङ्क्ते** - தூக்குகின்றார்.

(க-து) 'இந்த ஸுதீக்ஷ்ண முனிவர், ருத்ராக்ஷங்களை அணிந்ததும், மான்களைச் சொரிந்து கொடுப்பதும், யாகத்திற்கு வேண்டிய தர்ப்பங்களைக் கொய்வதுமான தம் வலது கையை, நான் விமானத்தில் செல்வதை யறிந்து எனக்கு மரியாதை செய்வதற்காக உயரே தூக்குகிறார்.

**अक्षमालावलयं** என்பதால் எப்பொழுதும் ஜபம் செய்பவர் என்பதும், **मृगाणां कण्डूयितारं** - என்பதால் உயிர்களிடத்து அருளுடையவர் என்பதும், **कुशसूचिलावं** - என்பதால் கர்மானுஷ்டானங்களில் நிபுணர் என்பதும் புலனாகின்றன. **ऊर्ध्वबाहुः** - வலதுகையை உயர்த்துகிறார் என்பதால் இடது கை முன்பே உயர்த்தப்பட்டுள்ளது என்பது பெறப்படும். **'ऊर्ध्वबाहुरिति तपोविशेषज्ञापकम्'** अरुणगिरिः।

वाचंयमत्वात्प्रणतिं ममैष कम्पेन किंचित् प्रतिगृह्य मूर्ध्नः।
दृष्टिं विमानव्यवधानमुक्तां पुनः सहस्रार्चिषि संनिधत्ते ॥ ४४ ॥

**एषः** - இந்த ஸுதீக்ஷ்ணர், **वाचंयमत्वात्** - மௌனத்தைக் கைக்கொண்டிருப்பதால், **मम** - எனது, **प्रणतिम्** - வணக்கத்தை, **किंचित्** - சற்றே, **मूर्ध्नः** - தலையின், **कम्पेन** -

அசைப்பினால், प्रतिगृह्य - ஏற்று, विमान व्यवधान मुक्ताम् - விமானத்தின் மறைப்பினின்றும் விடுபட்ட, दृष्टिम् - (தமது) பார்வையை, पुनः - மறுபடியும், सहस्रार्चिषि - சூரியனிடத்தில், सन्निधत्ते - நன்கு பொருத்துகின்றார்.

(க-து) இந்த ஸுதீக்ஷ்ணர் தற்சமயம் மௌனத்தைக் கைக்கொண்டிருப்பதால் என்னிடம் வாயால் எதுங் கூறாமல், தம் தலையைச் சற்றே அசைத்து என் வணக்கத்தை ஏற்கிறார். பிறகு விமானத்தால் சற்று நேரம் மறைக்கப்பட்டிருந்த சூரியனிடத்துத் தம் பார்வையை முன்போல செலுத்துகிறார்.

अदः शरण्यं शरभङ्गनाम्नस्तपोवनं पावनमाहिताग्नेः ।
चिराय संतर्प्य समिद्भिरग्निं यो मन्त्रपूतां तनुमप्यहौषीत् ॥४९॥

यः - எவர், चिराय - வெகுகாலம், अग्निम् - அக்னியை, समिद्भिः - ஸமித்துக்களால், सन्तर्प्य - திருப்தி செய்வித்து (ஹோமஞ் செய்து), मन्त्रपूताम् - மந்திரங்களால் தூயதான, तनुमपि - (தமது) உடலையும், अहौषीत् - ஹோமஞ் செய்தாரோ, तस्य - அத்தகைய, आहिताग्नेः - ஆஹிதாக்னியான, शरभङ्ग-नाम्नः - சரபங்கர் என்று பெயருடைய முனிவருடையதும், शरण्यम् - சரணடையத் தக்கதும், पावनम् - தூயதுமான, तपोवनम् - தபோவனம், अदः - அது.

(க-து) 'அதோ தெரியும் அந்த பரிசுத்தமான தபோவனம் ஆஹிதாக்னியான சரபங்கர் என்னும் முனிவருடையது. இம் முனிவர் வெகுகாலம் ஸமித்துக்களால் அக்னியில் ஹோமஞ் செய்து மந்திரத்தால் தூய்மையடைந்த தம் உடலையே முடிவில் அக்னியிலே ஹோமஞ் செய்தார். அத்தகைய பெருமை பெற்ற முனிவரின் தபோவனம் இது.

விராதனைக் கொன்றபின் ராமர் சரபங்கர் என்ற மஹரிஷியைக் கண்டார். முனிவர், ராமரது வருகையால் தாம் கிருதார்த்தரானதாகக் கூறி, அக்னியில் ஸமித்துக்களை

ஹோமம் செய்தபின் தமது உடலையும் ஆஹுதி செய்து நற்கதி பெற்றார்.

**शरण्यम्** - இயற்கையிலே பகையுள்ள பிராணிகளும் பகை நீங்கி இருந்ததால் ஆச்ரமம் எல்லா ஜீவன்களுக்கும் அபயமளிப்பதாயிருந்தது.

छायाविनीताध्वपरिश्रमेषु भूयिष्ठसंभाव्यफलेष्वमीषु ।
तस्यातिथीनामधुना सपर्या स्थिता सुपुत्रेष्विव पादपेषु ॥ ४६ ॥

**अधुना** - இப்பொழுது, **छाया विनीत-अध्वपरिश्रमेषु** - நிழலினால் வழி நடைக் களைப்பைப் போக்குவனவும், **भूयिष्ठ-संभाव्यफलेषु** - அதிகமான - சிறந்த பழங்களையுடையனவு மான, **अमीषु** - இந்த, **पादपेषु** - மரங்களிடத்தில், **सुपुत्रेषु-इव**-ஸத்புத்திரர்களிடத்தில் (இருப்பது) போல, **तस्य** - அவருடைய (சரபங்கருடைய) **अतिथीनाम्** - அதிதிகளின் **सपर्या** - பூஜை, **स्थिता** - இருக்கின்றது.

(க-து) சரபங்கர் தாமிருந்தவரை தமது ஆசிரமத்திற்கு வரும் அதிதிகளைத் தாமே நன்கு உபசரித்து வந்தார். அவர் இப்பொழுது இல்லாமற் போயினும், தந்தை செய்து வந்த நற்செயல்களை ஸத்புத்தி ரர்கள் தொடர்ந்து செய்து வருவது போல, அவரால் வளர்க்கப் பட்ட இம்மரங்கள் ஆசிரமத்திற்கு வருபவர்களின் வழிநடைக்களைப்பு நீங்கு மாறு நல்ல நிழலை உதவியும், பல சிறந்த பழங்களை யளித்து அவர்கள் பசியைப் போக்கியும் சரபங்கர் செய்து வந்த அதிதி பூஜையைத் தொடர்ந்து செய்து வருகின்றன.

சரபங்கர் வளர்த்த மரங்கள் அவரது புத்திரர்கள் போலிருந்து, அவர் செய்து வந்ததர்மத்தை அனுஷ்டித் தன. இதனால் தந்தையின் தர்மத்தை மக்கள் பாதுகாக்க வேண்டுமென்பது புலனாகும். **छाया विनीत....श्रमेषु भूयिष्ठ-संभाव्यफलेषु** - என்பனவற்றை **सुपुत्रेषु** - என்பதற்கும்

விசேஷணமாகக் கொள்ள வேண்டும். छाया - முகத்தின் தெளிவு; फलम् - செல்வம்:

धारास्वनोद्गारिदरीमुखोऽसौ शृङ्गाग्रलग्नाम्बुदवप्रपङ्कः ।
बध्नाति मे बन्धुरगात्रि चक्षुर्दृप्तः ककुद्मानिव चित्रकूटः ॥ ४७ ॥

बन्धुरगात्रि - அழகிய உடலுடையவளே, धारा-स्वनोद्गारि-दरीमुखः - மலையருவியின் சப்தத்தை வெளிவிடும் குகைவாயிலையுடையதும், शृङ्गाग्र लग्न-अम्बुद वप्र पङ्कः - சிகரங்களின் உச்சியில் ஒட்டியுள்ள மேகமாகிய சேற்றை யுடையதுமான, असौ चित्रकूटः - இந்த சித்திர கூடமலை, दृप्तः - கொழுத்த, ककुद्मान्-इव - எருது போல, मे - என்னுடைய, चक्षुः - கண்ணை, बध्नाति - கவருகிறது.

(க-து) அருவிகளின் வீழ்ச்சியால் தொடர்ந்த எதிரொலியுடையதும் சிகரங்களிலே மேகம் படிந்துள்ளதுமான இச்சித்ரகூட மலை, மண் முட்டி விளையாடிக் கர்ஜிக்கின்ற எருது போல் தோற்றமுடையதாய் என் கண்ணைக் கவர்கின்றது.

இச்சுலோகத்தில் கவி, சித்திரகூட மலையை ஒரு விருஷபத்துடன் ஒப்பிடுகிறார். காளை தனது கொம்புகளினால் மண்மேடுகளில் முட்டி விளையாடும். அச்சமயம் அதன் கொம்புகளில் மண்படியும். இவ்விளையாட்டை वप्रक्रीडा - என்று கூறுவர். இங்கு சித்திரகூடமலை ஒரு எருது போலுள்ளது. அதன் சிகரங்கள் கொம்புகள் போலுள்ளன. அச்சிகரங்களில் படியும் கறுத்த மேகங்கள், கொம்புகளின் நுனியிலுள்ள சேற்றைப் போலக் காண்கின்றன. மலைகளிலிருந்து விழும் அருவிகளின் ஓசை, மலைக்குகைகளில் எதிரொலித்து, எருதுகள் மண்மேடுகளில் முட்டி விளையாடுகையில் மகிழ்ச்சியினால் கத்துதலைப் போன்றுள்ளது. बन्धुरगात्री - உயர்ந்து இருக்கவேண்டிய அங்கங்கள் உயர்ந்தும், தாழ்ந்திருக்க

வேண்டிய அவயவங்கள் தாழ்ந்தும் இருக்கின்ற அழகிய உடலுடையவள் என்பது பொருள்.

एषा प्रसन्नस्तिमितप्रवाहा सरिद्विदूरान्तरभावतन्वी ।
मन्दाकिनी भाति नगोपकण्ठे मुक्तावली कण्ठगतेव भूमेः ॥ ४८ ॥

**प्रसन्न स्तिमित प्रवाहा**-தெளிந்த அசைவற்ற (ஒருசீரான) பிரவாஹத்தை உடையதும், **विदूरान्तर भाव तन्वी**-தொலைவில் இருப்பதால் மெல்லியதுமான, **एषा** - இந்த, **मन्दाकिनी-सरित्** - மந்தாகினிநதி, **नगोपकण्ठे** - மலையின் அருகில், **भूमेः**- பூமிக்கு, **कण्ठगता** - கழுத்திலுள்ள, **मुक्तावली इव** - முத்து ஹாரம் போல், **भाति** - தோன்றுகிறது (விளங்குகிறது).

(க-து) இதோ, கலக்கமின்றி மிச்சலமான பிரவாஹத்துடன் ஓடும் இந்த மந்தாகினீ நதி பூமிக்கு அணிவித்த ஒரு முத்து மாலை போலுள்ளது. தூரத்திலிருந்து பார்ப்பதால் மெல்லியதாகக் காணப் படுகிறது.

இங்கு மலையைப் பூமிதேவியின் தலையாகவும், அதனருகிலுள்ள நிலத்தைக் கழுத்தாகவும் கூறுகிறார். **प्रसन्नस्तिमितप्रवाहा** - என்பதை **मुक्तावली** - என்பதற்கும் விசேஷணமாகக் கொண்டு, 'பிரகாசமானதும் நல்ல தொகுத்தலையுடையதுமான மாலை' எனவும் பொருளுரைக்கலாம்.

**मन्दाकिनी** - என்பது, இங்கு கங்கையைக் குறிப்பிடவில்லை. சித்திரகூடத்தின் அருகிலுள்ள ஒரு சிற்றாற்றைக் குறிப்பிடுகிறது. **विदूरान्तरभावतन्वी** - ராமர் விமானத்திலிருந்துகொண்டு நோக்குவதால் இடையிலுள்ள தொலைவு காரணமாக நதி மெல்லியதாகப் புலப்படுகின்றது.

अयं सुजातोऽनुगिरं तमालः प्रवालमादाय सुगन्धि यस्य ।
यवाङ्कुरापाण्डुकपोलशोभी मयावतंसः परिकल्पितस्ते ॥ ४९ ॥

**यस्य** - எந்த தமாலமரத்தின், **सुगन्धि** - வாசனையுள்ள, **प्रवालम्** - தளிரை, **आदाय** - எடுத்து, **मया** - என்னால், **ते** - உனக்கு, **यवाङ्कुरापाण्डु कपोलशोभी**-யவதான்னயமுளைபோல் சிறிதே வெளுத்த கன்னங்களில் விளங்குகின்ற, **अवतंसः** - அணியானது, **परिकल्पितः**-செய்யப்பட்டதோ, **सः**-அத்தகை யதும், **अनुगिरम्** - மலையின் அருகில், **सुजातः**-நன்கு வளர்ந் துள்ளதுமான, **तमालः अयम्** - தமால மரம் இது.

(க-து) இதோ மலையின் அருகில் நன்கு வளர்ந்துள்ள தமால மரம் காணப்படுகிறது. முன்பு நாம் இங்கு இருந்த பொழுது, இம் மரத்தின் மணமுள்ள தளிரைத்தான் எடுத்து, யவ முளைபோலச் சற்று வெளுத்த உன் கன்னங்களுக்கு ஆபரணமாகவிருக்குமாறு உன் காதுகளில் அணிவித்தேன்.

'यवांकुरवदापाण्डौ कपोले शोभितुं शीलमस्येति तथा। पर-भागलाभेन शोभावहत्वमनेन ध्वन्यते' तमालो हि कृष्णवर्णः।' नारायणः।

अनिग्रहत्रासविनीतसत्त्वमपुष्पलिङ्गात्फलबन्धिवृक्षम्।
वनं तपःसाधनमेतदत्रेराविष्कृतोदग्रतरप्रभावम्॥ ५० ॥

**अनिग्रह-त्रास-विनीत-सत्त्वम्** - தண்டனையால் ஏற்படும் அச்சமின்றியே சாதுவான மிருகங்களை யுடையதும், **अपुष्प-लिङ्गात्**-புஷ்பமாகிய அடையாள மின்றியே, **फलबन्धिवृक्षम्** - பழந்தரும் மரங்களையுடையதும், **आविष्कृत उदग्रतर प्रभावम्**- (இவ்வகையில்) தோன்றிய சிறந்த மஹிமையை யுடையது மான, **अत्रेः** - அத்திரியின், **तपस्साधनम्** - தவத்திற்குத் தக்க, **वनम्** - வனம், **एतत्** - இது.

(க-து) இதோ தெரிவது அத்ரி முனிவரின் தபோவனம். இங்கு தண்டனையின் பயமின்றித் தாமாகவே தீங்கு செய்யாமல் இருக்கும் மிருகங்களும், பூவாமலே பழந்தரும் மரங்களும் உள்ளன. அத்திரி முனிவர் இவ்விடத்தில் தவஞ் செய்வதால் இதற்கு இத் தகைய பெருமை ஏற்பட்டுள்ளது.

अत्राभिषेकाय तपोधनानां सप्तर्षिहस्तोद्धृतहेमपद्माम् ।
प्रवर्तयामास किलानसूया त्रिस्रोतसं त्र्यम्बकमौलिमालाम् ॥ ९१ ॥

**अत्र** - இத்தபோவனத்தில், **अनसूया** - அநஸூயை, **सप्तर्षि-हस्त-उद्धृत-हेमपद्माम्** ஸப்தரிஷிகளின் கைகளால் பறிக்கப்பட்ட பொற்றாமரைகளையுடையதும், **त्र्यंबकमौलिमालां** - சிவபிரானின் தலைக்கு மாலை போன்றுள்ளதுமான, **त्रिस्रोतसम्** - கங்கையை; **तपोधनानाम्** - முனிவர்களின், **अभिषेकाय** - ஸ்நாநத்திற்காக, **प्रवर्तयामास किल**-பெருக்குவித்தாள்.

(க-து) இந்த இடத்தில் தான் அத்ரிமுனிவரின் மனைவியான அநஸூயை ஸப்தரிஷிகள் ஸ்நானம் செய்வதற்காக கங்காநதியைப் பிரவஹிக்கும்படி செய்தாள்.

**त्रिस्रोतसम्** - ஸ்வர்க்கம், பூமி, பாதாளம் என்ற மூன்றிடங்களிலும் பிரவஹிக்கின்றது : கங்கை.

உலகத்தில் பத்து வருஷங்கள் சேர்ந்தாற்போல் மழையின்றி உணவில்லாமல் உயிர்கள் வருந்த, அநஸூயை தனது தவப் பெருமையால் கங்கையை இவ்வனத்தே வரச் செய்து, உயிர்களின் துன்பத்தை நீக்கினாள்.

दश वर्षाण्यनावृष्ट्या दग्धे लोके निरन्तरम् ।
यया मूलफले सृष्टे जाह्नवी च प्रवर्तिता ॥
उग्रेण तपसा युक्ता नियमैश्चाप्यलङ्कृता ॥ [அயோத்யா காண்டம் 117, 9-10] சுலோகங்களைக் காண்க.

ஸப்தரிஷிகள் :

मरीचिः अत्रिः पुलहः पुलस्त्यः क्रतुः अङ्गिराः ।
वसिष्ठश्च (महाभागः सप्तैते ब्रह्मणः सुताः ॥)

वीरासनैर्ध्यानजुषामृषीणाममी समध्यासितवेदिमध्याः ।
निवातनिष्कम्पतया विभान्ति योगाधिरूढा इव शाखिनोऽपि ॥९२॥

वीरासनैः - வீராஸனங்களுடன், ध्यान जुषाम् - தியானத்தில் இருக்கின்ற, ऋषीणाम् - முனிவர்களின், अमी शाखिनः अपि- இம்மரங்களும், समध्यासित-वेदिमध्याः-மேடைகளின் நடுவிலிருப்பனவாய், निवात निष्कम्पतया - காற்றில்லாமையால் அசைவின்றி யிருத்தலாலே, योगाधिरूढाः इव- யோகத்திலுள்ளவை போன்று, विभान्ति - காணப்படுகின்றன.

(க-து) வீராஸனத்தில் அமர்ந்து அசையாமல் தியானஞ் செய்யும் முனிவர்களைப் போன்று, காற்றடிக்காமையால் அசைவின்றியுள்ள இவ்வனத்திலுள்ள மரங்களும் தியானம் செய்பவை போல் காணப்படுகின்றன.

समध्या - मध्याः - மேடைகளின் மத்தியிலிருக்கின்ற மரங்கள், ஆஸநத்திலமர்ந்துள்ள முனிவர் போல் காணப்பட்டன.

ஆஸனங்கள் பலவகைப்படும். पद्मासनं, स्वस्तिकासनं, भद्रासनं, वीरासनम् என்பன. இவற்றுள் வீராஸநம் என்பது வலது பாதத்தை இடது தொடையின் மீதும், இடது பாதத்தை வலது தொடையின் மீதும் வைத்து அமருவது.

त्वया पुरस्तादुपयाचितो यः सोऽयं वटः श्याम इति प्रतीतः ।
राशिर्मणीनामिव गारुडानां सपद्मरागः फलितो विभाति ॥ ९३ ॥

त्वया - உன்னால், पुरस्तात् - முன்பு, यः - எந்த மரம், उपयाचितः - பிரார்த்திக்கப்பட்டதோ, श्यामः इति (எது) 'சியாமம்' என்று, प्रतीतः - அழைக்கப்பட்டதோ, सः अयं - அத்தகைய இந்த, वटः - ஆலமரம், फलितः (सन्) - பழுத்ததாக (இருந்து கொண்டு), सपद्मरागः - பத்மராகங்களுடன் கூடிய, गारुडानाम मणीनाम् - (பச்சை கருட) ரத்னங்களின், राशिः इव - குவியல் போல, विभाति - காணப்படுகிறது.

(க-து) சியாமம் என்ற பெயரால் அழைக்கப்பட்ட ஆலமரம் இதோ உள்ளது முன்பு நீ இதைத்தான் வேண்டிக் கொண்டாய். இப்பொழுது சிவந்த பழங்களும் பச்சை இலைகளும் கொண்ட இம்மரம் பத்மராகக் கற்களுடன் கூடிய பச்சை ரத்னங்களின் குவியல் போல் தோன்றுகிறது.

யமுனையைக் கடந்தபின் ச்யாமம் எனப் பிரஸித்தி பெற்றுள்ள பெரியதொரு ஆலமரத்தைக் கண்டு ஸீதை, தன் கணவர் எடுத்த வனவாஸ விரதம் இனிதே முடியவேண்டுமென வேண்டிக் கொண்டதாக ராமாயணம் கூறும்.

"न्यग्रोधं समुपागम्य वैदेही वाक्यमब्रवीत् ।
नमस्तेऽस्तु महावृक्ष पालयेन्मे व्रतं पतिः" [அயோத்யா 55-24],

क्वचित्प्रभालेपिभिरिन्द्रनीलैर्मुक्तामयी यष्टिरिवानुविद्धा ।
अन्यत्र माला सितपङ्कजानामिन्दीवरैरुत्खचितान्तरेव ॥ ५४ ॥
क्वचित्खगानां प्रियमानसानां कादंबसंसर्गवतीव पङ्क्तिः ।
अन्यत्र कालागुरुदत्तपत्रा भक्तिर्भुवश्चन्दनकल्पितेव ॥ ५५ ॥
क्वचित्प्रभा चान्द्रमसी तमोभिश्छायाविलीनैः शबलीकृतेव ।
अन्यत्र शुभ्रा शरदभ्रलेखा रन्ध्रेष्विवालक्ष्यनभःप्रदेशा ॥ ५६ ॥
क्वचिच्च कृष्णोरगभूषणेव भस्माङ्गरागा तनुरीश्वरस्य ।
पश्यानवद्याङ्गि विभाति गङ्गा भिन्नप्रवाहा यमुनातरङ्गैः ॥ ५७ ॥

**अनवद्याङ्गि** - குற்றமற்ற உடலுடையவளே, **यमुनातरङ्गैः** - யமுனை நதியின் அலைகளுடன், **भिन्न प्रवाहा** - கலந்த வெள்ளப் பெருக்கையுடை, **गङ्गा** - கங்காநதி, **क्वचित्**-ஓரிடத்தில், **प्रभालेपिभिः** - ஒளி விடுகின்ற, **इन्द्रनीलैः** - நீலக்கற்களுடன், **अनुविद्धा** - கோக்கப்பட்ட, **मुक्तामयी** - முத்துக்களாலான, **यष्टिः इव** - மாலை போலவும், **अन्यत्र** - மற்றோரிடத்

தில், इन्दीवरैः - நீலோத்பல மலர்களுடன், उत्खचितान्तरा - சேர்த்துத் தொடுக்கப்பட்ட இடை வெளியுள்ள, सितपङ्कजानाम् - வெண்தாமரைகளின், माला इव - மாலை போலவும்,

क्वचित् - பிறிதோரிடத்தில், कादंब संसर्गवती - கறுப்பு ஹம்ஸங்களுடன் கூடிய, प्रिय मानसानाम् - மானஸஸரஸில் விருப்பங்கொண்ட, खगानाम् - பக்ஷிகளின் (வெண்ணிற ஹம்ஸங்களின்), पङ्क्तिः इव - வரிசை போலவும், अन्यत्र - மற்றோரிடத்தில், कालागुरु दत्तपत्रा - காரகில் சாந்தின் வரிகளையுடைய, भुवः - தரையின் (மேலுள்ள), चन्दनकल्पिता - வெண் சந்தனத்தினாலான, भक्तिः इव - அலங்கார சித்ரம் போன்றும்,

क्वचित् - ஓரிடத்தில், छाया विलीनैः - நிழலில் மறைந்த, तमोभिः - இருள்களால், शबलीकृता - மங்கலாகச்செய்யப்பட்ட, चान्द्रमसी - சந்திரனுடைய, प्रभा-इव - ஒளிபோலவும், अन्यत्र - மற்றோரிடத்தில், रन्ध्रेषु - இடைவெளிகளில், आलक्ष्य-नभःप्रदेशा - காணத்தகுந்த ஆகாயத்தை உடைய, शुभ्रा - வெண்மையான, शरदभ्र लेखा इव - சரத்கால மேகவரிசைபோலவும்,

क्वचित् - ஓரிடத்தில், कृष्णोरग भूषणा - கறுத்த பாம்பை அணியாகக் கொண்டதும், भस्माङ्गरागा - (வெண்மையான) சாம்பலை உடற்பூச்சாக உடையதுமான, ईश्वरस्य - பரமசிவனின், तनुः इव - உடல் போலவும், विभाति - காணப்படுகிறது. पश्य - பார்.

இந்த நான்கு சுலோகங்களிலும் கவி, கங்கையும் யமுனையும் சேரும் அழகிய காட்சியை வருணிக்கிறார்.

கங்கையின் நீர் வெண்மை நிறங்கொண்டது. யமுனையின் நீர் கருநிற முள்ளது. இவையிரண்டும் கலக்கையில் கருமையும் வெண்மையும் கலந்த ஒரு தனியழகு உள்ளது.

(க-து) யமுனையுடன் கலந்த கங்கைநீர், ஓரிடத்தில் காண்கையில், நீலக்கற்களுடன் விரவிக் கட்டப்பட்ட வெண்முத்து மாலை போலும், மற்றோரிடத்தில் கருநெய்தற் புஷ்பங்களுடன் தொடுக்கப்பட்ட வெண்தாமரை மலர் மாலைபோலும், இன்னோரிடத்தில் கருநிற ஹம்ஸங்களுடன் கூடிய வெண்ணிற ராஜஹம்ஸங்களின் கூட்டம் போலும், பிறிதோரிடத்தில் கரும்சாந்தினால் எழுதப்பட்ட வரிகளுடன் கூடிய வெண்ணிறச் சந்தன அலங்காரக் கோடுகள் போலவும், மரம் முதலியவற்றின் கறுத்த நிழலோடு கலந்து தோன்றும் நிலவுபோலும், மற்றோரிடத்தில் கறுத்த மேகங்களின் இடையில் காணப்படும் வெண்மையான மேகங்களின் பகுதிகள் போலவும், கருநிறமுள்ள பாம்புகளை ஆபரணங்களாக அணிந்து, வெண்ணீறு பூசிய சிவபிரானின் உடல்போலும் காணப்படுகிறது.

கறுத்த நீரும் வெளுத்த நீரும் சேருகையில் சிலவிடங்களில் கருமை நிறம் வெண்மையான நீரிலும், வெண்மை நிறம் கறுத்த நீரிலும் பரவிப் பிரதிபலிக்கின்றன. இக்காட்சியை விளக்குவது 54 ஆவது சுலோகத்தின் முற்பகுதி;

சில விடங்களில் ஒரு நிறத்தில் மற்றொன்று கலக்காமல் தனித்தனியாகக் காணப்படுகின்றன. இதை இச்சுலோகத்தின் பிற்பகுதி கூறுகின்றது. சில விடங்களில் திட்டுத் திட்டாகக் கருநிறமும் வெண்ணிறமுங் காண்கின்றன. இதைக் கூறுவது 55-ஆம் சுலோகத்தின் முற்பகுதி.

சில விடங்களில் ஒன்றினால் மற்றொன்று அழகு பெறுகின்றது. இதைக் கூறுவது இச்சுலோகத்தின் பிற்பகுதி.

சில விடங்களில் ஒரே இடத்தில் மேலே கரு நிறமும் கீழே வெண்ணிறமுங் காணபபடுகின்றன. இதை விளக்குவது 56-ஆம் சுலோகத்தின் முற்பகுதி. சிலவிடங்களில் கரு நிறம் மிக்கு இடையிடையே வெண்மை காணப்படுகிறது. இது பிற்பகுதியில் கூறப்பட்டுள்ளது.

சிலவிடங்களில் யமுனையின் கறுத்த நீர்ச்சுழல்கள் வெண்மையான கங்கையின் நீர்ப்பரப்பில் காணப்படுவது,

வெளுத்த பரமசிவனின் மேனியில் கறுத்த பாம்புகள் சுற்றிக் கொண்டிருப்பது போன்றுள்ள தெனக் கூறுகின்றது 57-ஆம் சுலோகத்தின் முற்பகுதி.

நான்கு சுலோகங்களிலும் பல உவமைகளைக் கூறி அவற்றின் மூலம் கங்கை யமுனை இவை கலக்கும் வகையை எடுத்துக் காட்டினார் கவி.

समुद्रपत्न्योर्जलसंनिपाते पूतात्मनामत्र किलाभिषेकात् ।
तत्त्वावबोधेन विनापि भूयस्तनुत्यजां नास्ति शरीरबन्धः ॥ ५८ ॥

अत्र - இங்கு, समुद्र पत्न्योः - கடலின் மனைவிகளாகிய கங்கை யமுனை நதிகளின், जलसन्निपाते - ஜலம் சேருமிடத்தில், अभिषेकात् - ஸ்நாநம் செய்வதால், पूतात्मनाम् - தூய மனமுடைய, तनुत्यजाम् மனிதர்க்கு, तत्त्वावबोधेन विनाऽपि - மெய்யுணர்வு இன்றியே, भूयः - மறுபடியும், शरीरबन्धः உடற்பிணிப்பு (பிறப்பு), नास्ति किल - இல்லை யன்றோ.

(க-து) 'இந்த கங்கையும் யமுனையும் சேருமிடத்தில் ஸ்நாநஞ் செய்து தூய்மையடைந்தவருக்கு மெய்யுணர்வின்றியே மோக்ஷம் கிடைக்கும். அவர்களுக்கு மறு பிறப்பு இல்லை. அத்தகைய பெருமை பெற்றது இந்த இடம்.

கடின உபாயமான ஞானத்தைக் காட்டிலும் முக்திக்கு ஸுலபமான உபாயமாக ஸ்நாநம் இருக்கின்றது.

पुरं निषादाधिपतेरिदं तद्यस्मिन्मया मौलिमणिं विहाय ।
जटासु बद्धास्वरुदत्सुमन्त्रः कैकेयि कामाः फलितास्तवेति ॥५९॥

यस्मिन् - எங்கு, मया - என்னால், मौलि मणिम् - சிரோரத்தினத்தை, विहाय - நீக்கி, जटासु - சடைகள், बद्धासु - கட்டப்பட்ட பொழுது, सुमन्त्रः சுமந்திரர், 'कैकेयि ! - கைகேயியே, । तव - உனது, कामाः - விருப்பங்கள், फलिताः -

பலித்து விட்டன,' इति - என்று (கூறி), अरुदत् - புலம்பி ஞரோ, तत् - அத்தகைய, इदम् - இந்த இடம், निषादाधिपतेः - வேடர்களின் தலைவஞன குகனுடைய, पुरम् - ஊர்.

(க-து) 'இதோ தெரிவது வேடர்கள் தலைவஞன குகனது ஊர், சிருங்கிபேரபுரம். இங்குதான் நான் அரசர்களின் அணியாகிய சிரோ ரத்னத்தை எடுத்து விட்டு, தவசிகளுக்குரிய சடைகளைத் தரித்த பொழுது மந்திரி சுமந்திரர் 'கைகேயி, உனது எண்ணம் நிறை வேறிற்று' எனக் கூறி அழுதார்.

पयोधरैः पुण्यजनाङ्गनानां निर्विष्टहेमाम्बुजरेणु यस्याः ।
ब्राह्मं सरः कारणमाप्तवाचो बुद्धेरिवाव्यक्तमुदाहरन्ति ॥ ६० ॥

**पुण्य जन-अङ्गनानाम्** - யக்ஷஸ்த்ரீகளின், **पयोधरैः** - ஸ்த னங்களால், **निर्विष्ट हेमाम्बुजरेणु** - அனுபவிக்கப்பட்ட பொன் தாமரை மகரந்ததூள்களையுடைய, **ब्राह्मं-सरः** - பிரம்மஸரஸ் ஸை, **यस्याः**-எந்த (ஸரயூ) நதிக்கு,-**बुद्धेः**-புத்திக்கு, (மஹத்தத் வத்திற்கு) **अव्यक्तं-इव** - அவ்யக்தம் போல,—**कारणम्**-காரண மாக, **आप्तवाचः** - முனிவர்கள், **उदाहरन्ति**-கூறுகின்றனரோ, அச்சரயூநதி என்னை அலைக்கைகளால் அணைத்துக்கொள்வது போல் காண்கின்றது.

ஸரயூநதி இது முதல் நான்கு சுலோகங்களால் வரு ணிக்கப்படுகிறது.

(க-து) ஸ்நானம் செய்கின்ற யக்ஷஸ்ரீகளின் ஸ்தனங்களில் மகரந்தத்துகள் படியும்படிப் பொற்றாமரை நிறைந்துள்ள மானஸ ஸரவிலிருந்து இந்த ஸரயூநதி தோன்றுகின்றது.

மானஸ ஸரஸ் பிரம்மாவினுல் உண்டாக்கப்பட்டதால் பிராம்மம் ஸரஸ் என்று கூறப்படுகிறது. आप्तवाचः - வேதங் கள்; அல்லது வேதமறிந்த முனிவர்கள்; 'अव्यक्तं, बुद्धि' - ஸாங்க்யர்களின் கொள்கைப்படி உலகிற்குக் காரணமான

தத்வங்கள் இரண்டு. ப்ரக்ருதி, பிரதானம், அவ்யக்தம் என மூன்று பெயர்களாலும் குறிக்கப்படும் பொருள் ஒன்று. மற்றொன்று புருஷன் அல்லது ஆத்மா. இவற்றில் முற் கூறப்பட்ட அவ்யக்தத்திலிருந்து எழு பொருள்கள் தோன் றுகின்றன. அவற்றில் ஒன்று मह्त् அல்லது बुद्धि - எனப் படும் उपमया अत्र सरोनद्योर्लोकयात्रार्थत्वं द्योत्यते' अरुणगिरिः।

63-ஆம் சுலோகத்திலுள்ள 'तरंगहस्तैरुपगूहतीव' என்பதன் பொருளைச் சேர்த்து வாக்ய முடிவு காட்டப்பட்டது.

जलानि या तीरनिखातयूपा वहत्ययोध्यामनु राजधानीम् ।
तुरंगमेधावभृथावतीर्णैरिक्ष्वाकुभिः पुण्यतरीकृतानि ॥ ६१ ॥

**तीर निखात यूपा** - கரைகளில் நடப்பட்ட யூபங்களை யுடைய, **या (सरयूः)**-எந்த (ஸரயூ) நதி, **तुरंग मेध-अवभृथ - अवतीर्णैः** - அசுவமேதத்தின் அவப்ருத ஸ்நாநத்திற்காக இறங்கிய, **इक्ष्वाकुभिः** - இக்ஷ்வாகு வம்ச அரசர்களால், **पुण्यतरीकृतानि** - மிகத் தூயவையாகச் செய்யப்பட்ட, **जलानि** - நீர்களை, **अयोध्याम - राजधानीम् - अनु**-அயோத்தி, ராஜ தானிக்கு அருகில், **वहति** - கொண்டு செல்கிறதோ, அத் தகைய ஸரயூநதி என்னைத் தழுவுகின்றது போலுமுள்ளது.

(க-து) இந்த ஸரயூநதியின் கரைகளில் இக்ஷ்வாகு வம்ச அரசர்கள் யாகஞ்செய்து நட்ட பல யூபஸ்தம்பங்கள் காணப்படுகின்றன. யாகஞ் செய்து அதன் முடிவில் அவப்ருதஸ்நாநஞ் செய்தமையால் இந்நதியின் நீர் மிகப் பரிசுத்தமானதாக விருக்கிறது. அத்தகைய நீருடைய இந் நதி அயோத்தியின் அருகே ஓடுகிறது.

यां सैकतोत्सङ्गसुखोचितानां प्राज्यैः पयोभिः परिवर्धितानाम् ।
सामान्यधात्रीमिव मानसं मे संभावयत्युत्तरकोसलानाम् ॥ ६२ ॥

**सैकत-उत्सङ्ग-सुख-उचितानाम्** - மணற்பரப்பாகிய மடியின் ஸுகத்தில் பழகியவர்களும், **प्राज्यैः** - அதிகமான,

**पयोभिः** - நீரால், **परिवर्धितानाम्**-வளர்க்கப்பட்டவர்களுமான, **उत्तर कोसलानाम्** - வடகோசல மன்னர்களின், **सामान्य-धात्रीम इव** - பொதுத் தாயைப்போல், **याम्** - எந்த நதியை, **मे** - எனது, **मानसम्** - மனம், **संभावयति** - கொண்டாடுகிறதோ, அத்தகைய ஸரயூநதி என்னைத் தழுவுகின்றதுபோலுள்ளது.

*(க-து) 'இந்த ஸரயூநதியின் மணலாகிய மடியில் விளையாடியும், இதே நதியின் நீரைக் குடித்தும் உத்தரகோஸல நாட்டு மன்னர்கள் இந்நதியைத் தம் தாயைப் போலக் கொண்டாடினர். ஆதலால் உத்தர கோஸல மன்னர்களின் செவிலித் தாயைப் போல் இந்நதியைக் கருதுகின்றேன்.*

*குழந்தைகள் தாயின் மடியில் விளையாடுவதும் தாயின் பாலைக் குடித்து வளருவதும் இயல்பு.*

**पयः** - *நீர் என்றும் பால் என்றும் பொருள்படும்.* **इव**-*என்ற சொல்லுக்குப் பொருள் இல்லை எனக் கொண்டு, 'தாதியாக' நினைக்கின்றேன் என்பது சிறந்த உரையாகும்.* **'उत्तरकोसलानाम'** - *உத்தர கோஸலத்தில் பிறந்த மக்கள் எல்லோருக்கும்' என்றும் கூறுவர்.*

सेयं मदीया जननीव तेन मान्येन राज्ञा सरयूर्वियुक्ता ।
दूरे वसन्तं शिशिरानिलैर्मां तरंगहस्तैरुपगूहतीव ॥ ६३ ॥

**मदीया** - *எனது,* **जननी इव** - *தாய் போல,* **मान्येन** - *கொண்டாடத்தக்க,* **तेन राज्ञा** - *அந்த-அரசனால்,* **वियुक्ता** - *விடப்பட்ட,* **सा-इयम्** - *அத்தகைய-இந்த,* **सरयूः** -*ஸரயூநதி,* **दूरे** - *தூரத்தில்,* **वसन्तम्** - *வசிக்கின்ற,* **माम्** - *என்னை,* **शिशिरानिलैः** - *குளிர்ந்த காற்றுக்களையுடைய,* **तरंग हस्तैः**-*அலைகளாகிய கைகளால்,* **उप गूहति इव** - *அணைத்துக்கொள்கின்றதுபோல உள்ளது.*

*(க-து) கணவரைப் பிரிந்த என்தாய் போலவே தசரதரைப் பிரிந்த இச்சரயூநதி வெகு தொலைவிலே விருப்பினும் என்னை*

குளிர்ந்த காற்றுள்ள அலைக்கைகளால் அணைத்துக்கொள்ளுகின்றது.

அலைக் காற்றின் ஸ்பர்சத்தை அலையின் ஸ்பர்சமாகக் கூறினார். தசரதரைப் பிரிந்த நிலையில் ஸரயூநதி தமது தாயை ஒத்து இருக்கின்றதாகக் கருதினார்.

विरक्तसंध्याकपिशं पुरस्ताद्यतो रजः पार्थिवमुज्जिहीते ।

शङ्के हनुमत्कथितप्रवृत्तिः प्रत्युद्गतो मां भरतः ससैन्यः ॥ ६४ ॥

**विरक्त-सन्ध्या-कपिशम्** - மிகச் சிவந்த மாலை வேளையைப் போல செக்கிறமான, **पार्थिवम् रजः** - மண் புழுதி, **पुरस्तात्** - எதிரில், **यतः** - எதனால், **उज्जिहीते** - கிளம்புகிறதோ, **(तस्मात्)** - அதனால், **हनुमत्कथित प्रवृत्तिः** - ஹனுமானால் கூறப்பட்ட செய்தியையுடைய, **भरतः**·பரதன், **ससैन्यः (सन्)** - சேனையுடன் கூடியவனாய், **माम्** - என்னை, **प्रत्युद्गतः** - எதிர் கொண்டு வருகிறான், **(इति)** என **शङ्के**· ஊஹிக்கின்றேன்.

(க-து) 'என் வருகையை ஹனுமாரால் அறிந்து, பரதன் சேனைகளுடன் என்னை எதிர் கொண்டு வருகிறனென்று இதோ எதிரில் கிளம்பும் சிவந்த மண் தூளைப் பார்த்து நினைக்கிறேன்.

ராமர் அயோத்திக்கு அருகில் வரும் பொழுது, ஹனுமாரை முன்னதாகவே பரதனிடம் அனுப்பித் தமது வருகையை அவனுக்குத் தெரிவிப்பதுடன் அவனது கருத்தையும் தெரிந்து வரும்படி கட்டளை இட்டிருந்தார். எனவே ஹனுமார் கூறிய செய்தி கேட்டுப் பரதன் ராமரை எதிர் கொண்டு வந்தான்.

अद्धा श्रियं पालितसंगराय प्रत्यर्पयिष्यत्यनघां स साधुः ।

हत्वा निवृत्ताय मृधे खरादीन् संरक्षितां त्वामिव लक्ष्मणो मे ॥ ६५ ॥

**साधुः** - நல்லோனான, **सः** - அப்பரதன், **पालित संगराय**- பரிபாலிக்கப்பட்ட பிரதிக்ஞையையுடைய, **मे** - எனக்கு,

**अनघाम्** - குற்றமற்ற, **श्रियम्** - செல்வத்தை (ராஜ்யத்தை), **मृधे** - போரில், **खरादीन्**-கரன் முதலியவரை, **हत्वा**-கொன்று, **निवृत्ताय** - திரும்பிய, **मे** - எனக்கு, **लक्ष्मण:** - லக்ஷ்மணன், **संरक्षिताम्** - (தன்னால்) நன்கு காக்கப்பட்ட, **अनघाम्** - குற்றமற்ற, **त्वां-इव** - உன்னை (என்னிடம் ஒப்படைத்தது) போல, **अद्धा** - நிச்சயமாக, **प्रत्यर्पयिष्यति**-திருப்பித் தரப் போகிறான்.

(க-து) கரன் முதலியவருடன் சண்டையிடச் சென்ற பொழுது உன்னை லக்ஷ்மணனிடம் ஒப்படைத்துச் சென்றேன் நான். அவர்களைக் கொன்று திரும்பிய பொழுது உனக்கு யாதொரு ஊறுமின்றிப் பாதுகாத்து லக்ஷ்மணன் உன்னை என்னிடம் ஒப்படைத்தது போலவே, இப்பொழுது பித்ருவாக்ய பரிபாலனம் செய்து திரும்பிய எனக்குப் பரதன் அயோத்தி ராஜ்யத்தை ஊறு இன்றித் திருப்பித் தரப் போகின்றான். [ஸர்க்கம் 12, 44-ஆம் சுலோகம் காண்க.]

असौ पुरस्कृत्य गुरुं पदातिः पश्चादवस्थापितवाहिनीकः ।
वृद्धैरमात्यैः सह चीरवासा मामर्घ्यपाणिर्भरतोऽभ्युपैति ॥ ६६ ॥

**पदातिः** - நடந்து வருபவனும், **चीरवासाः** - மரவுரி ஆடையுடையவனுமான, **असौ भरतः** - அந்த பரதன், **पश्चात्** - பின்னால், **अवस्थापित-वाहिनीकः** - நிறுத்தப்பட்ட சேனைகளையுடையவனாக, **गुरुम्** - குருவான வஸிஷ்டரை, **पुरस्कृत्य** - முன்னிட்டுக் கொண்டு, **वृद्धैः** - வயது சென்ற, **अमात्यैः सह**- மந்திரிகளுடன் கூட, **अर्घ्यपाणिः** (सन्) - அர்க்யத்தைக் கையில் உடையவனாக, **माम्** - என்னை, **अभ्युपैति** - நெருங்குகிறான்.

(க-து) மரவுரிகளைத் தரித்துக் கொண்டுள்ள இப்பரதன், சேனைகளையெல்லாம் பின்புறம் நிறுத்தி விட்டு, குலகுருவான வஸிஷ்டரை முன்னும், வயது சென்ற மந்திரிகளை இருபுறமும் கொண்டு, என்னைப் பூஜிப்பதற்கு வேண்டிய பொருள்களைக் கையில் ஏந்திக் கால்நடையாக வருகிறான்.

पित्रा विसृष्टां मदपेक्षया यः श्रियं युवाप्यङ्कगतामभोक्ता ।
इयन्ति वर्षाणि तया सहोग्रमभ्यस्यतीव व्रतमासिधारम् ॥ ६७॥

**युवापि** - வாலிபனாயினும், **यः** - எந்த பரதன், **पित्रा** - தந்தையால், **विसृष्टाम्** - அளிக்கப்பட்டதாக, **अङ्कगतां-अपि** - அருகிலேயே இருப்பதாயினும், **श्रियम्** - ராஜ்யத்தை, **मदपेक्षया** - என்னிடமுள்ள பக்தியினால், **अभोक्ता (सन्)** - அனுபவிக்காதவனாக, **इयन्ति वर्षाणि** - இத்தனை வருஷங்கள், **तया सह** - அந்த ராஜ்ய லக்ஷ்மியுடன், **उग्रम्** - கடுமையான, **आसिधारं-व्रतम्** - 'கத்தி முனை' விரதத்தை, **अभ्यस्यति-इव** - பழகுகிறான் போலுமுள்ளானோ அப்பரதன் வந்துகொண்டிருக்கின்றான்.

(க-து) பரதனுக்கு இந்த ராஜ்யம் தந்தையாலே அளிக்கப்பட்டது. அவன் கைக்கு வந்து விட்டது. அவனும் வாலிபன். ஆகவே பரதன் இந்த ராஜ்யத்தைத் தனதாகவே கொண்டு அனுபவிப்பின் அச்செய்கை, குற்றமுள்ள தென்றோ, ஒவ்வாததென்றோ கூற இயலாது. ஆனால் திடமனமுடைய பரதன் என்னிடமுள்ள பக்தியால் மனத்தில் சிறிதும் ராஜ்யத்தின் மீது பற்றின்றி இத்தனை வருஷங்கள் அதைப் பாதுகாத்து வந்திருக்கிறான். ராஜ்யத்திலிருப்பினும் ராஜ்ய ஸுகமனுபவியாது இருந்திருக்கிறான். இவ்வாறு இருப்பது மிகக் கடினமானது. அஸிதாரா விரதம் அனுஷ்டிப்பவன் போலுள்ளான்.

**असिधाराव्रतम्** - யுவன் ஒருவன் யுவதியுடன் ஒரே சயனத்திலிருப்பினும் இன்ப உணர்வில் மனமின்றிப் புலனடக்கத்துடனும் நெறியுடனும் இருத்தல் அஸிதாரா வ்ரதம் எனப்படும். கத்தியின் முனைகளில் நடப்பது போல் கடினமானதால் இவ்விரதம் இப்பெயர் பெற்றது.

**यत्रैकशयनस्थापि प्रमदा नोपभुज्यते ।**

**असिधाराव्रतं नाम वदन्ति मुनिपुंगवाः** என்பது அஸிதாரா வ்ரதத்தை அறிவிடுவது.

एतावदुक्तवति दाशरथौ तदीया-
मिच्छां विमानमधिदेवतया विदित्वा ।
ज्योतिष्पथादवततार सविस्मयाभि-
रुद्वीक्षितं प्रकृतिभिर्भरतानुगाभिः ॥ ६८ ॥

**दाशरथौ** - ராமர், **एतावत्** - இவ்வளவு, **उक्तवति** - கூறியதும், **विमानम्** - விமானமானது, **तदीयाम्** - அவருடைய, **इच्छाम्** - விருப்பத்தை, **अधिदेवतया** - (அதன்) தேவதையின் மூலமாக, **विदित्वा** - அறிந்து, **सविस्मयाभिः** - வியப்புடன் கூடியவர்களும், **भरतानुगाभिः** - பரதனைத் தொடர்பவர்களுமான, **प्रकृतिभिः** - குடிமக்களால், **उद्वीक्षितम् (सत्)** - (தலை நிமிர்த்திப்) பார்க்கப்பட்டதாக, **ज्योतिष्पथात्** - ஆகாயத்திலிருந்து, **अवततार** - இறங்கியது.

(க-து) ராமர் ஸீதைக்கு இவ்வாறு கூறி முடிக்கவும், அயோத்தியும் நெருங்கியது. ராமர் கீழே இறங்கவேண்டுமென்ற விருப்பங் கொண்டார். அவ் விருப்பத்தைத் தன் அதிதேவதையின் மூலயாக அறிந்த புஷ்பகவிமானம் கீழே இறங்கியது. பரதனைத்தொடர்ந்து வந்த குடிமக்கள் விமானம் கீழிறங்குவதை ஆச்சரியத்துடன் அண்ணாந்து பார்த்தனர்.

**अधिदेवतया**-விமானத்திற்கு இரண்டு வடிவம் உண்டு; தேவவடிவம் ஒன்று, மற்றொன்று எல்லோர் கண்களுக்கும் புலனாகின்ற விமான வடிவம். 'विमानस्य हि दृश्यमानं रूपं विना रूपान्तरमप्यस्ति । यथा हिमवदादीनाम्' नारायणः ॥ 'उभयं हि विमानस्य रूपं जडं देवतात्मकं च' अरुणगिरिः ।

तस्मात् पुरःसरविभीषणदर्शितेन
सेवाविचक्षणहरीश्वरदत्तहस्तः ।

यानादवातरददूरमहीतलेन
मार्गेण भङ्गिरचितस्फटिकेन रामः ॥ ६९ ॥

रामः - ராமர், सेवा विचक्षण-हरीश्वर-दत्तहस्तः - பணி செய்வதில் தேர்ந்த வானரவரசனால் கை கொடுக்கப்பட்டவராய், पुरस्सर-विभीषण दर्शितेन - முன்னே செல்லும் விபீஷணனால் காண்பிக்கப்பட்டதும், अदूर महीतलेन - அருகில் உள்ள தரையையுடையதும், भङ्गिरचित स्फटिकेन - படிக்கட்டுகளாக அமைக்கப்பட்ட ஸ்படிகக் கற்களை யுடையதுமான, मार्गेण - வழியினால், तस्मात् - அந்த, यानात् - விமானத்திலிருந்து, अवातरत् - இறங்கினார்.

(க-து) ராமர் விமானத்திலிருந்து ஸ்படிகக் கற்களாலான படிக்கட்டுகளின் வழியே அருகிலிருந்த தரையில் இறங்கினார். அப்பொழுது வேலை செய்வதில் தேர்ந்த ஸுக்ரீவன் தன் கைகளை நீட்டி, அவற்றைப் பற்றிக் கொண்டு ராமர் இறங்குமாறு கைலாகு கொடுத்தான். விபீஷணன் முன் சென்று வழிகாட்டினான்.

इक्ष्वाकुवंशगुरवे प्रयतः प्रणम्य
सभ्रातरं भरतमर्घ्यपरिग्रहान्ते ।
पर्यश्रुरस्वजत मूर्धनि चोपजघ्रौ
तद्भक्त्यपोढपितृराज्यमहाभिषेके ॥ ७० ॥

प्रयतः - பரிசுத்தரான, सः - அந்த ராமர், इक्ष्वाकुवंश गुरवे - இக்ஷ்வாகு வம்சத்தின் குருவான வஸிஷ்டரின் பொருட்டு, प्रणम्य - வணங்கி, अर्घ्य परिग्रह अन्ते - அர்க்யத்தை ஏற்றுக் கொண்டதன் முடிவில், पर्यश्रुः (सन्) - கண்ணீருடன், भ्रातरम् - ஸஹோதரனை, भरतम् - பரதனை, अस्वजत - தழுவிக் கொண்டார். तद्भक्ति-अपोढ-पितृराज्य-महाभिषेके - அவரிடத்துள்ள பக்தியால் கைவிடப்

பட்ட தந்தையினுடைய ராஜ்யத்தின் அபிஷேகத்தையு டைய, **मूर्ध्नि** - தலையில், **उपजघ्रौ च** - மோந்தார்.

(க-து) ராமர் தம் குலகுருவாகிய வஸிஷ்டரை வணங்கி, பரதன் கொண்டுவந்த அர்க்யத்தை ஏற்றபின் தம்பி பரதனைக் கண்ணீர் மல்கத் தழுவிக் கொண்டார் தம்மிடமுள்ள பக்தியால் அபிஷேக ஜலத்தை வெறுத்த அவனது தலையை மோந்தார். (உச்சிமோந்தார்.)

உச்சி முகர்தல் ஆலிங்கனாதிகளைப்போல் அன்பின் அடையாளமாகக் கருதப்படுவது; **"प्रेमातिशये एष समुदाचारः" हेमाद्रिः ।**

> श्मश्रुप्रवृद्धिजनिताननविक्रियांश्च
> प्लक्षान् प्ररोहजटिलानिव मन्त्रिवृद्धान् ।
> अन्वग्रहीत् प्रणमतः शुभदृष्टिपातै-
> र्वार्तानुयोगमधुराक्षरया च वाचा ॥ ७१ ॥

**श्मश्रुप्रवृद्धि जनित - आननविक्रियान्** - முகரோமங்களின் மிக வளர்ச்சியினால் உண்டான முக மாறுதலகளையுடையவர்களும், **प्ररोह जटिलान्** - விழுதுகளால் அடர்ந்துள்ள, **प्लक्षान् इव (स्थितान्)** - ஆலமரங்களைப்போல இருப்பர்களும், **प्रणमतः** - வணங்குகின்றவர்களுமான, **मन्त्रिवृद्धान्-च** - வயது சென்ற மந்திரிகளை, **शुभैः** - சுபமான, **दृष्टिपातैः** - பார்வைகளாலும், **वार्त-अनुयोग-मधुर-अक्षरया** க்ஷேமம் விசாரிப்பதால் இனிய எழுத்துக்களை யுடைய, **वाचा च** - வார்த்தையாலும், **अन्वग्रहीत्** - அனுக்ரஹித்தார்.

(க-து) அயோத்தியிலிருந்த மந்திரிகள் தசரதரையும் ராமரையும் பிரிந்த துக்கத்தால் வபனஞ்செய்து கொள்ளாததாலே முகங்களில் மயிர்களடர்ந்து, விழுதுகள் நெருங்கியுள்ள ஆலமரங்கள் போல் இருந்தனர். அவர்களெல்லோரும் வந்து ராமரை வணங்கினர். ராமர்

அவர்களைத் தமது அருள் நிரம்பிய பார்வைகளால் பார்த்தும், அவர்களின் நலன்களை விசாரித்தும் அம்மந்திரிகளை அனுக்ரஹித்தார்.

கீழ் நோக்கி வளர்ந்த தாடியுடனிருக்கின்ற வயது முதிர்ந்த மந்திரிகளுக்கு, அவ்வாறே தரையை நோக்கி வளரும் விழுதுகளுடனிருக்கின்ற ஆலமரங்கள் மிகப் பொருத்தமான உபமானமாயின. प्लक्षः - இச்சிலிமரமென்பர் சிலர்.

दुर्जातबन्धुरयमृक्षहरीश्वरो मे
पौलस्त्य एष समरेषु पुरःप्रहर्ता ।
इत्यादृतेन कथितौ रघुनन्दनेन
व्युत्क्रम्य लक्ष्मणमुभौ भरतो ववन्दे ॥ ७२ ॥

ऋक्ष हरीश्वरः - கரடிகளுக்கும் வானரர்களுக்கும் அரசனாகிய, अयम् - இந்த ஸுக்ரீவன், मे - எனக்கு, दुर्जातबन्धुः - ஆபத்தில் (உதவிய) நண்பன்; एष - இவன், समरेषु - யுத்தங்களில், पुरः प्रहर्ता - முன் நின்று பொருதுபவனாகிய, पौलस्त्यः - விபீஷணன்; इति - என்று (கூறி), आदृतेन - அன்புடன் கூடிய, रघुनन्दनेन - ராமரால், कथितौ - சொல்லப்பட்ட, उभौ - இருவரையும், लक्ष्मणम् (अपि) - லக்ஷ்மணனையும் (கூட), व्युत्क्रम्य - தாண்டி, भरतः - பரதன், ववन्दे - வணங்கினான்.

(க-து) ராமர், 'இதோ நிற்கும் இவன் எனக்கு ஆபத்துக் காலத்தில் உதவிய நண்பன் ஸுக்ரீவன் கரடிகளுக்கும் வானரர்களுக்கும் தலைவன். இதோ இவன் சண்டைகளில் அஞ்சாது முன் நின்று போர் புரியும் புலஸ்த்ய வம்சத்தவனான விபீஷணன்' என ஆதரவுடன் அவ்விருவரையும் சுட்டிப் பரதனுக்கு அறிமுகப் படுத்தினார். பரதன், லக்ஷ்மணனை விட்டு, ஸுக்ரீவனும் விபீஷணனும் ராமருக்கு இவ்வளவு உதவி செய்துள்ளார்களே என நினைத்து உடனே அவ்விருவரையும் வணங்கினான்.

सौमित्रिणा तदनु संससृजे स चैन-
मुत्थाप्य नम्रशिरसं भृशमालिलिङ्ग ।
रूढेन्द्रजित्प्रहरणव्रणकर्कशेन
क्लिश्यन्निवास्य भुजमध्यमुरःस्थलेन ॥ ७३ ॥

तदनु - அதன் பிறகு, सः - அப்பரதன், सौमित्रिणा - லக்ஷ்மணனோடு, संससृजे - கூடியவனுன்; नम्रशिरसम् - வணங்கிய தலையையுடைய, एनम् - அந்த லக்ஷ்மணனை, उत्थाप्य - எழச் செய்து, रूढ-इन्द्रजित् प्रहरणव्रण-कर्कशेन - தழும்பு பட்டதும் இந்திஜித் ஆயுதங்களால் உண்டான புண்களால் காடு தட்டியதுமான (கடினமுமான), अस्य - இவனுடைய, उरःस्थलेन - மார்பகத்தால், भुज मध्यम् - தனது மார்பை, क्लिश्यन् (इव) - வருத்துபவன் போல், भृशम् - आलिलिङ्ग च - இறுகத் தழுவினுன்.

(க-து) அவ்விருவரையும் வணங்கிய பிறகு, பரதன் லக்ஷ்மணனை நெருங்க அவன் பரதனது அடி பணிந்தான். பரதன் அவனை எழச் செய்து, இந்திரஜித்தின் ஆயுதங்களால் தழும்பேறியுள்ள அவனது மார்பைத் தன் மார்புடன் சேர்த்து இறுகத் தழுவிக் கொண்டான்.

"क्लिश्यन्–पीडयन् । लक्ष्मणस्य वक्षसा निजं वक्षः पीडयन्निवेत्यर्थः । दृढत्वमुत्प्रेक्षा हेतुः" नारायणः ।

रामाज्ञया हरिचमूपतयस्तदानीं
कृत्वा मनुष्यवपुरारुरुहुर्गजेन्द्रान् ।
तेषु क्षरत्सु बहुधा मदवारिधाराः
शैलाधिरोहणसुखान्युपलेभिरे ते ॥ ७४ ॥

तदानीम - அப்பொழுது, हरि चमूपतयः-வானர சேனை பதிகள், रामाज्ञया - ராமரின் கட்டளையால், मनुष्यवपुः-மனித சரீரத்தை, कृत्वा - எடுத்து, गजेन्द्रान् - சிறந்த யானைகளை, आरुरुहुः - ஏறினர்; बहुधा - மிக அதிகமாக, मदवारिधाराः - மத நீர்த்தாரைகளை, क्षरत्सु - பெருக விடும், तेषु - அவை கள் விஷயத்தில், ते - அவர்கள், शैलाधिरोहण-सुखानि - மலை மேல் ஏறுவதால் பெறும் ஸுகங்களை, उपलेभिरे - அடைந் தனர்.

(க-து) ராமர் வானரத் தலைவர்களை மனித உருவெடுக்கும்படிக் கட்டளை யிட்டார். அதற்கிணங்க அவர்களும் மனித உருவெடுத் துக் கொண்டு மதநீர் பெருகும் யானைகளின் மீதேறி அமர்ந்தனர். இப்படிச் செய்வதால் அவர்கள், அருவிகள் பெருகும் மலைகள் மீதேறி எப்பொழுதும் அடையும் ஆனந்தத்தைப் பெற்றனர்.

कृत्वा मनुष्यवपुः - அவ்வானரத் தலைவர்கள், விரும்பிய வடிவெடுக்கும் திறன் பெற்றவர்கள்.

नव नागसहस्राणि ययुरास्थाय वानराः ।
मानुषं विग्रहं कृत्वा सर्वाभरणभूषिताः ॥ [யுத்த 128-32]

सानुप्लवः प्रभुरपि क्षणदाचराणां
भेजे रथान् दशरथप्रभवानुशिष्टः ।
मायाविकल्परचितैरपि ये तदीयै-
र्न स्यन्दनैस्तुलितकृत्रिमभक्तिशोभाः ॥ ७९ ॥

क्षणदाचराणाम् - ராக்ஷஸர்களின், प्रभुः अपि - தலைவ னை விபீஷணனும், दशरथ प्रभव-अनुशिष्टः - தசரதரின் புத்திரரான ராமரால் கட்டளையிடப்பட்டு, सानुप्लवः - பணி யாளர்களுடன் கூடியவனாய், रथान् ரதங்களில் (களை), भेजे - ஏறினான் (அடைந்தான்); ये - (எ) அந்த (ராமாது) ரதங் கள், तदीयैः - அவ்விபீஷணனுடையனவும், माया-विकल्प-

रचितैः अपि - பலவிதமான மாயாசக்தியினால் செய்யப்பட்டிருந்தபோதிலும், स्यन्दनैः - தேர்களுடன், तुलित-कृत्रिम-भक्ति शोभाः - ஒப்பிடத்தக்க செய்வகை அழகையுடையனவாக, न (भवन्ति) - ஆகவில்லை.

(க-து) ராமரது கட்டளைப்படி ராக்ஷஸர்களின் அரசனை விபீஷணனும், அவன் பணியாளர்களும் தேர்களில் ஏறிக் கொண்டனர். விபீஷணனது தேர்கள் அவனுடைய விருப்பப்படி மாயையினால் நினைத்த மாத்திரத்திலே செய்யப்பட்டவை. அப்படியிருந்த போதிலும் அழகிலே ராமரால் அளிக்கப்பட்ட-மனிதர்களின் முயற்சியால் ஆக்கப்பட்டுள்ள-ரதங்களுடன் ஒப்பிடத் தக்கனவாக இல்லை.

இச்சுலோகத்தின் இரண்டாவது பகுதி, கவி விரும்பிய கருத்தை வெளியிடுவதாக இல்லை. வலியப் பொருள் கொள்வதற்கு உதாஹரணமாக உள்ளது இச்சுலோகம்.

> भूयस्ततो रघुपतिर्विलसत्पताक-
> मध्यास्त कामगति सावरजो विमानम् ।
> दोषातनं बुधबृहस्पतियोगदृश्य-
> स्तारापतिस्तरलविद्युदिवाभ्रवृन्दम् ॥ ७६ ॥

ततः - பிறகு, रघुपतिः - ராமர், सावरजः - தம்பிகளோடு கூடியவராய், विलसत्पताकम् - ஒளிரும் கொடியையுடையதும், कामगति-விருப்பப்படி செல்லக் கூடியதுமான, विमानम्-விமானத்தில், बुध बृहस्पति योग दृश्यः - புதன் பிருகஸ்பதி இவர்களோடு சேர்ந்திருப்பதால் காண்டற்குரிய, तारापतिः . சந்திரன், दोषातनम् - இரவில் உண்டான, तरल-विद्युत्-சஞ்சலமான மின்னலை உடைய, अभ्र वृन्दम्-इव மேகக் கூட்டத்தை (அடைவது) போல, भूयः - திருப்பவும், अध्यास्त - ஏறினர்.

(க-ரு) புதன், பிருகஸ்பதி ஆகிய இவ்விரு கிரஹங்களுடன் சந்திரன், இரவில் மின்னல்களுடன் கூடிய மேகங்களின் இடையே காணப்படுவது போல, ராமர் தன் தம்பிகளாகிய பரதலக்ஷ்மணர்களுடன், கொடியுடன் விளங்கும் புஷ்பகவிமானத்தில் அமர்ந்தார்.

तत्रेश्वरेण जगतां प्रलयादिवोर्वी
वर्षात्ययेन रुचमभ्रघनादिवेन्दोः ।
रामेण मैथिलसुतां दशकण्ठकृच्छ्रात्
प्रत्युद्धृतां धृतिमतीं भरतो ववन्दे ॥ ७७ ॥

तत्र - அவ்விமானத்தில், जगताम् - உலகங்களுக்கு, ईश्वरेण - தலைவரான மஹாவிஷ்ணுவினால், प्रलयात् - பிரளயத்திலிருந்து (விடுவிக்கப் பட்ட), उर्वी इव - பூமியைப்போல (இருந்தவளும்), वर्षात्ययेन - சரத்காலத்தினாலே, अभ्रघनात् - மேகக் கூட்டத்திலிருந்து (விடுபட்ட), इन्दोः - சந்திரனின், रुचं इव - காந்தியைப் போல் (இருந்தவளும்), रामेण - ராமரால், दशकण्ठ कृच्छ्रात् - ராவணனாகிய தொல்லையிலிருந்து, प्रत्युद्धृताम् - மீட்கப்பட்டவளும், धृतिमतीम् - மனஉறுதி பெற்றவளுமான, मैथिलसुताम् - ஜனகரின் மகளான ஸீதையை, भरतः - பரதன், ववन्दे - வணங்கினான்.

(க-ரு) மஹாவிஷ்ணு வராஹாவதார மெடுத்துப் பிரளயத்திலிருந்து பூமியை மீட்டது போலவும், - மேகத்திரையிலிருந்து சந்திரனின் ஒளியை சரத்ருது மீட்டது போலவும், ராமரால் - ராவணனிடமிருந்து மீட்கப்பட்ட ஸீதையைப் பரதன் வணங்கினான்.

लङ्केश्वरप्रणतिभङ्गदृढव्रतं तद्-
वन्द्यं युगं चरणयोर्जनकात्मजायाः ।
ज्येष्ठानुवृत्तिजटिलं च शिरोऽस्य साधो-
रन्योन्यपावनमभूदुभयं समेत्य ॥ ७८ ॥

लङ्केश्वर-प्रणति-भङ्ग दृढ व्रतम् - லங்கையரசன் ராவண னின் வணக்கங்களை மறுப்பதில் கடும் விரதங்கொண்டதும், वन्द्यम् - வணங்கத் தகுந்ததுமான, तत् - அந்த, जनकात्मजायाः - ஸீதையின், चरणयोः युगम् - இரு பாதங்கள், ज्येष्ठ-अनुवृत्ति जटिलम् - மூத்தவனைப் பின்பற்றுவதால் சடைகளுடன் கூடிய, साधोः - ஸாதுவான, अस्य - இந்த பரதனின், शिरः च - தலை,—इति उभयम् - என்ற இவ்விரண்டும், समेत्य - சேர்ந்து, अन्योन्य पावनम् - ஒன்றுக் கொன்று தூய்மையளிப்பனவாக, अभूत् - ஆயின.

(க-து) ராவணன் பணிந்து வேண்டியும் அவனுக்கு இணங்காததும், வணங்கத் தகுந்ததுமான ஸீதையின் பாதங்களில் பரதன் தன் முடிபட வணங்கினான். ராமர் சடைமுடிதரித்ததால் பரதன் தானும் அவ்வாறே இருத்தல் வேண்டுமென்று கருதிச் சடை இட்டு இருந்தான்.

எனவே, பெருமை பெற்ற ஸீதையின் பாதமும், பரதனது முடியும் ஒன்றை ஒன்று ஸ்பர்சித்தபொழுது ஸீதையின் பாதத்தால் பரதனுக்குத் தூய்மையும் பரதனது முடியின் ஸ்பர்சத்தினால் ஸீதைக்குப்பெருமையும் உண்டாயின.

क्रोशार्धं प्रकृतिपुरःसरेण गत्वा
काकुत्स्थः स्तिमितजवेन पुष्पकेण ।
शत्रुघ्नप्रतिविहितोपकार्यमार्यः
साकेतोपवनमुदारमध्युवास ॥ ७९ ॥

आर्यः - சிறந்த, काकुत्स्थः - ராமர், प्रकृति पुरस्सरेण - முன்னால் செல்லுகின்ற ஜனங்களை உடையதும், स्तिमित-जवेन - குறைந்த வேகத்தையுடையதுமான, पुष्पकेण - புஷ்பக விமானத்தினால், क्रोशार्धम् - அரைக்குரோச தூரம், गत्वा - சென்று, शत्रुघ्न-प्रतिविहित-उपकार्यम् - சத்ருக்ன

ஞால் தயார் செய்யப்பட்ட கூடாரங்களையுடையதும், उद्धारस- விஸ்காரமானதுமான, साकेतोपवनम् - ஸாகேத நகர உத்யா னவனத்தில், अध्युवास - தங்கினார்.

(க-து) ஜனங்களெல்லாம் முன் செல்ல, மெதுவாகச் செல் லும் புஷ்பக விமானத்தின்மூலம் ராமர் அரைக்குரோச தூரஞ் சென்று, அயோத்தியின் அருகிலுள்ள உபவனத்தில் தங்கினார் அவ் வனத்தில் சத்ருக்னன் ராமருக்காகவும், அவரோடு வருபவர்களுக் காகவும் பெரும் கூடாரங்கள் அமைத்திருந்தான்.

க்ரோசம்: வழியின் அளவைக் குறிக்கும் ஒரு சொல்.

इति श्री कालिदास कृतौ

रघुवंशे त्रयोदशः सर्गः ॥



|| श्रीः ||

# रघुवंशे

## चतुर्दशः सर्गः

भर्तुः प्रणाशादथ शोचनीयं दशान्तरं तत्र समं प्रपन्ने ।
अपश्यतां दाशरथी जनन्यौ छेदादिवोपघ्नतरोर्व्रतत्यौ ॥ १ ॥

**अथ** - *பிறகு,* **दाशरथी** - *ராமரும் லக்ஷ்மணனும்,* **उपघ्नतरोः** - *ஆதாரமான மரத்தை,* **छेदात्** - *வெட்டுதலினால் (நிராதாரமான நிலையை யடைந்த),* **व्रतत्यौ इव** - *இரு கொடிகள் போல்,* **भर्तुः** - *கணவரான தசரதரின்,* **प्रणाशात्**-*மரணத்தினால்,* **शोचनीयं**-*வருந்தத்தக்க,* **दशान्तरं**-*வேறு (வைதவ்ய) நிலையை,* **प्रपन्ने** - *அடைந்திருக்கின்ற,* **जनन्यौ** - *(தங்கள்) தாய்மார்களை,* **तत्र**-*அங்கு (அயோத்திக்கு வெளியில் உள்ள உத்யானவனத்தில்),* **समं** - *ஒரே சமயத்தில்,* **अपश्यताम्** - *பார்த்தார்கள்.*

---

(க-து) *ராமரும் லக்ஷ்மணனும் அயோத்திக்கு வெளியில் உள்ள உத்யான வனத்தில் தங்கள் தாய்மார்களான கௌஸல்யையையும் ஸுமித்ரையையும் பார்த்தார்கள்.*

**तत्र** - *முன் ஸர்க்கத்தின் இறுதியில்,* **'साकेतोपवनमुदारमध्युवास'** *என்று கூறியகற்கிணங்க, 'அயோத்திக்குப் புறத்திலுள்ள உத்யான வனத்தில்', என்று பொருள். புத்திரர்களைப் பார்க்கவேண்டுமென்ற ஆசையினால் கௌஸல்யையும் ஸுமித்ரையும் வந்திருந்தனர். ராமரைப் பார்க்க மிக விருப்புடையவளாயினும் அவரைக் காண வெட்கமுற்றுக் கைகேயி அங்கே வரவில்லை. தம்மைப் பார்க்கக் கை*

கேயி வெட்கப்படுகிறதை அறிந்து ராமர், அவளது லஜ்ஜை யைப் போக்கியதாகக் கவி, जहार लज्जां भरतस्य मातुः' (14-16) என்று பிறகுகூறியதையும் காண்க: 'कैकेयी तु लज्जावशात् भवनान्न निर्गता। अतएव तस्या लज्जापनयनप्रकारं वक्ष्यति' नारायणः।

**शोच्यं दशान्तरम्** - விதவைக் கோலத்தில் இருந்ததால் கௌஸல்யை ஸுமித்ரையின் நிலை பார்ப்பவர்களின் மனத்திலும் சோகத்தை உண்டாக்கியது. **उपघ्नतरोः व्रतत्यौ इव** - 'கொழுகொம்பு அழிந்ததால் ஆதாரமின்றிக் கீழே விழுந்துள்ள கொடிபோலே' என்றது, அவ்விருவர்களின் பரிதாப நிலையைக் காட்டுதற்காக; வேறுவகையில் கொடிகளுடன் உவமை கொள்ளுதல் கூடாது. **समम्-अपश्यताम्** - ஒரே ஸமயத்தில் கண்டனர். 'दशान्तरं समं प्रपन्ने' என்று கொண்டால், 'கஷ்டமான நிலையை ஸமமான வகையில் அடைந்துள்ள' என்று உரைக்கவேண்டும்.

उभावुभाभ्यां प्रणतौ हतारी यथाक्रमं विक्रमशोभिनौ तौ।
विस्पष्टमस्त्रान्धतया न दृष्टौ ज्ञातौ सुतस्पर्शसुखोपलम्भात् ॥ २ ॥

**यथाक्रमं** - முறையே, **प्रणतौ** - நமஸ்கரித்தவர்களும், **हतारी** - சத்ருக்களைக் கொன்றவர்களும், **विक्रम-शोभिनौ** - பராக்ரமத்தினால் விளங்குபவர்களுமான, **तौ उभौ** - அந்த (ராம லக்ஷ்மணர்) இருவரும், **उभाभ्यां** - அவ்விருதாய்மார்களாலும், **अस्त्रान्धतया** - கண்ணீர் மறைத்ததால், **विस्पष्टं** நன்றாக, **न दृष्टौ** - பார்க்கப்படவில்லை; (**किन्तु**-ஆனால்), **सुत-स्पर्श-सुखोपलंभात्** - புத்ரர்களின் ஸ்பர்சத்தால் உண்டாகும் ஸுகானுபவத்தால், **ज्ञातौ** - அறியப்பட்டார்கள்.

(க-து) சத்ருவைக் கொன்று பராக்ரமத்தினால் விளங்கிய ராமரும் லக்ஷ்மணனும் தாய்மார்களில் முதியவளான கௌஸல்யையை முதலிலும் இளையவளான ஸுமித்ரையை இரண்டாவதாகவும் வணங்கினர்.

அவ்வரசிகள் இருவரும், தம்மை வணங்கிய குமாரர்களைக் கண்களால் பார்த்து அறிந்து கொள்ளவில்லை. ஏனெனில் வெகு நாட்களுக்குப் பின் அவர்களைச் சந்தித்ததனாலுண்டான உணர்ச்சியின் மிகுதியாலே கண்களில் நீர் தோன்றிக் காணமுடியாமல் செய்தது. பின் அவர்கள் தம்மக்களைத் தொட்டுப் பார்த்துத் தாம் முன்பு அனுபவித்த ஸுகத்திற்கு ஒத்த இன்பத்தைப் பெற்றதால் அதன் மூலமே ராமலக்ஷ்மணர்களை அவர்கள் அறிந்து கொண்டனர். புத்ர ஸ்பர்சம் தனிவகையானதென்றும் மிகச் சிறந்ததென்றும் கூறுவர். 'पुत्रः स्पर्शवतां वरः, पुत्रस्पर्शात् प्रियतरः स्पर्शो लोके न विद्यते ।' 'மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம்' என்பனவற்றைக் காண்க. ஸ்பரிசத்தினாலேயே அறியுமாறு அவர்களது தாயன்பு இருந்தவாறு.

आनन्दजः शोकजमश्रु बाष्पस्तयोरशीतं शिशिरो बिभेद ।
गङ्गासरय्वोर्जलमुष्णतप्तं हिमाद्रिनिष्यन्द इवावतीर्णः ॥ ३ ॥

तयोः - அவ்விருதாய்மார்களின், आनन्दजः - ஆனந்தத்தினால் உண்டான, शिशिरः - குளிர்ந்த, बाष्पः - கண்ணீர் शोकजं - சோகத்தினால் உண்டான, अशीतं - உஷ்ணமான, अश्रु - கண்ணீரை,—उष्णतप्तं - கோடையினால் உஷ்ணமான, गङ्गासरय्वोः - கங்கை, ஸரயூ இவ்விரண்டு நதிகளின் जलं - ஜலத்தை (ஜலத்தில்), अवतीर्णः - பிரவேசித்த (கலந்த) हिमाद्रि-निष्यन्दः इव - ஹிமய மலையின் அருவி (குளிரச்) செய்வது போல், बिभेद - மாற்றியது.

(க-து) ராமலக்ஷ்மணர்கள் காடு சென்றது முதல் அவர்களது தாய்மார்கள் சோகக் கண்ணீர் வடித்து வந்தனர்; இப்போது தம் மக்களைக் கண்டவுடன் ஆநந்த பாஷ்பம் பெருக்கினர். பின் வந்த குளிர்ந்த ஆநந்த பாஷ்பம் தனக்கு முன்பாக வந்த உஷ்ணமான சோகபாஷ்பத்துடன் கலந்து அதையும் குளிர்வித்தது. [அதிகமகிழ்ச்சியோ துக்க

மோ ஏற்பட்டால் கண்ணினின்றும் நீர் பெருகும். ஆநந்தக் கண்ணீரைக் குளிர்ச்சியாகவும் சோகக் கண்ணீரை உஷ்ணமாகவும் கூறுவது கவி மரபு].

ஹிமாலயத்திலுள்ள பனிக்கட்டிகள் வெய்யிலினால் உருகிக் குளிர்ந்த அருவி வடிவில் கங்கையிலும் ஸரயூவிலும் கலந்து, கோடையில் வெய்யிலினால் சூடான அவற்றின் ஜலத்தை குளிர்விக்கின்றது. அது போல் பின் தோன்றிய ஆநந்த பாஷ்பம் முன்தோன்றிய சோகக் கண்ணீரின் வெம்மையை மாற்றிக் குளிர்ச்சி யடைவித்தது.

'बिभेद-'भेदं अनयत्-अन्यथात्वं अनयत् अरुणगिरिः'। भेदमनयत्-शीतलतामनयदित्यर्थः' नारायणः। बिभेद - நீக்கியது எனப் பொருள் கொண்டு ஆநந்த பாஷ்பம் சோகக் கண்ணீரை நீக்கியது என்றும் உரைப்பர். தங்களது புதல்வர்களைக் கண்டதால் தாய்மார்கள் நெடு நாளைய வருத்தத்தை மறந்தனர் என்பது கருத்து.

ते पुत्रयोर्नैर्ऋतशस्त्रमार्गानार्द्रानिवाङ्गे सदयं स्पृशन्त्यौ।
अपीप्सितं क्षत्रकुलाङ्गनानां न वीरसूशब्दमकामयेताम् ॥ ४ ॥

ते - அவ்விரு தாய்மார்களும், पुत्रयोः - தம் குமாரர்களின், अङ्गे - சரீரத்தில், नैर्ऋत-शस्त्र-मार्गान् - ராக்ஷஸர்களுடைய ஆயுதங்களினால் செய்யப்பட்ட வ்ரணங்களை, आर्द्रानिव - உலராதவைகளை(த்தொடுவது) போல், सदयं - மிக்க இரக்கத்துடன், स्पृशन्त्यौ - தடவுபவர்களாய், क्षत्रकुलाङ्गनानां - க்ஷத்திரியகுல ஸ்திரீகளுக்கு, ईप्सितं अपि - விருப்பமானதாயினும், वीरसूशब्दं - வீரமாதா என்னும் பதத்தை, न अकामयेताम् - விரும்பவில்லை.

(க-து) கௌஸல்யையும் ஸுமித்ரையும் ராமலக்ஷ்மணர்களின் சரீரத்திலுள்ள விரணங்களை, அவை உலர்ந்தன வாயினும், உலராதவைகளைத் தொடுவது போல் நினைத்து மிக இரக்கத்துடன் தடவிக்

கொடுத்தனர். க்ஷத்ரியப்பெண்கள் எல்லோருமே தம் மகன் வீரனாக இருக்கவேண்டுமென்றும், தாம் 'வீரமாதா' என்ற புகழ்பெறவேண்டுமென்றும் விரும்புவர். ஆனால் ராமலக்ஷ்மணர்களின் சரீரத்தில் அஸுரர்களின் ஆயுதத்தினால் உண்டாக்கப்பட்டகாயங்களின் தழும்புகளைக் கண்டபொழுது, தாய்மார்கள், தங்களுக்கு வீரமாதா என்ற பட்டத்தைத் தரவிரும்பித் தம்மக்கள் இவ்வளவு கஷ்டங்கள் பட்டனரே என எண்ணி, 'வீரமாதா' என்ற பெயரையே அருவருத்தனர். தாங்கள் பட்டம் பெறுவதைக் காட்டிலும் தம்மக்கள் துன்பமடையாமல் இருப்பதே நலமென அவர்கள் நினைத்தனர்.

கௌஸல்யையும் ஸுமித்ரையும் தம் குமாரர்களிடம் கொண்ட தாயன்பு இதனால் காட்டப்பட்டதேயன்றி உண்மையிலே இவ்விருவரும் தம் புத்திரர்கள் வீரர்களாக இருக்கவேண்டுவதில்லை என நினைத்தனர் என்று கூறவந்ததன்று இச்சுலோகம். 'न अकामयेताम्-निनिन्दतुरिति यावत्' । नारायणः ॥ 'नाकामयेताम्-अजुगुप्सेताम्- 'वीरसुवश्चैवं पुत्रान् पश्यन्तीति' अरुणगिरिः ॥

**शस्त्रमार्गः** - ஆயுதங்கள் சென்ற வழி: புண், காயம்; 'ஆயுத மார்க்கம்' என்று புண்களைக் குறிப்பிட்டது, 'வ்ரணங்கள் மிகப் பெரியன' என்பதைக் காட்டுகின்றது. मार्गशब्देन क्षतं लक्ष्यते। ध्वन्यते चाभोगवत्ता।' अरुणगिरिः। आर्द्रान् इव- உலர்ந்த புண்ணையும் உலராது ரத்தம் கசிகின்றதைத் தொடுவது போல் மெதுவாகத் தொட்டனர். காரணம், **सदयम्** - என்பதால் காட்டப்பட்டது.

क्लेशावहा भर्तुरलक्षणाहं सीतेति नाम स्वमुदीरयन्ती ।
स्वर्गप्रतिष्ठस्य गुरोर्महिष्यावभक्तिभेदेन वधूर्ववन्दे ॥ ५ ॥

"**भर्तुः** - கணவருக்கு, **क्लेशावहा** - துக்கத்தைச் செய்தவளும், **अलक्षणा** - (நல்ல அதிருஷ்டத்திற்குரிய) சின்னங்களற்றவளுமான, **अहं** - நான், **सीता** - ஸீதை", **इति**-என்று,

स्वं - தன்னுடையதான, नाम - பெயரை, उदीरयन्ती-சொல்லிக்கொண்டு, वधू: - நாட்டுப்பெண், स्वर्गप्रतिष्ठस्य - ஸ்வர்க்கத்திலிருக்கின்ற, गुरो: - மாமனாரான தசரதரின், महिष्यौ - மனைவியரான கௌஸல்யையும், ஸுமித்ரையையும், अभक्तिभेदेन - ஸமமான மரியாதையுடன், ववन्दे - வணங்கினாள்.

(க-து) 'கணவரது தேஹத்திற்கும் மனத்திற்கும் பலவகையான துன்பம் தந்தவள்; மஹாபாக்யங்களுக்கான சுபலக்ஷணம் ஏதுமில்லாதவள் நான்' என்று கூறிக்கொண்டு தனது மாமியார் இருவரையும் ஒத்தமரியாதையுடன் வணங்கினாள் ஸீதை.

பெரியோரை வணங்குகையில் இந்த கோத்திரத்தில் பிறந்தவன் எனத் தன்னை அறிமுகம் செய்து கொண்டு வணங்குவது வழக்கம். ஸீதையும் அவ்வழக்கத்தைப் பின்பற்றித் தன்னை அறிவித்துக் கொண்டாள்.

क्लेशावहा - கஷ்டம் தந்தவள்; இதன் காரணம் अलक्षणा - என்ற விசேஷணத்தால் குறிக்கப்பட்டது. ராமரது வனவாஸம், தசரதர் மரணம், ராமர் காட்டிலே பட்ட கஷ்டங்கள் முதலியன, தான் ராமரது கிருஹத்திற்கு வந்தபின் நேர்ந்துள்ளதால் இவற்றிற்கெல்லாம் தானே காரணம் என்பது ஸீதையின் கருத்து.

स्वर्गप्रतिष्ठस्य महिष्यौ—அயோத்தியில் கண்ட தசரதரை, ஸீதை, அக்னிப்ரவேசம் செய்த காலத்தில் இந்திராதி தேவர்களிடையில் கண்டதால் அவரிடம் முன் தான் கொண்டிருந்ததைக் காட்டிலும் அதிகமான பக்தி கொண்டாள்; கௌஸல்யையும் ஸுமித்ரையையும் அத்தகைய தசரதரின் மனைவியர் என்று கருதிப் பக்தியில் தாரதம்யமின்றி வணங்கினாள்; 'இவள் என் கணவரின் தாய்; அவள் என்மைத்துனரின் தாய்' என்று பேதம் பாராட்டவில்லை. अभक्तिभेदेन भक्तिभेदं विना। इयंभर्तुर्माता। इयं देवरमाता इति भक्तिभेदस्तदानीं

न जात इत्यर्थः ।...मम गुरो मर्हिष्यावेते इति बुद्धिरेव तदा जाते-त्यर्थः ॥

उत्तिष्ठ वत्से ननु सानुजोऽसौ वृत्तेन भर्ता शुचिना तवैव।
कृच्छ्रं महत्तीर्ण इति प्रियार्हां तामूचतुस्ते प्रियमप्यमिथ्या ॥ ६ ॥

"ननु वत्से - குழந்தாய்!, उत्तिष्ठ - எழுந்திரு, सानुजः - தம்பியுடன் கூடிய, असौ - இந்த, भर्ता - (உன்) கணவன், तव - உன்னுடைய, शुचिना - பரிசுத்தமான, वृत्तेनैव - நடத்தையினாலேயே, महत् - மிகப்பெரிய, कृच्छ्रं - கஷ்டத்தை, तीर्णः - கடந்தான்" इति - என்று, प्रियार्हां - பிரியமாகப் பேசத் தகுந்த, तां - அவளை நோக்கி, प्रियमपि - பிரியமாயிருந்த போதிலும், अमिथ्या - உண்மையான வார்த்தையை, ते - அவ்விரு மாமிமார்களும், ऊचतुः - சொன்னார்கள்.

(க-து) 'குழந்தாய்! எழுந்திரு; உனது சுபமான நடத்தையினாலேதான் உன் கணவன் பெருகஷ்டங்களைக்கடந்து தம்பியுடன் வந்திருக்கின்றான்' என அவ்விருவரும், பிரியமானதும் உண்மையானதுமான வார்த்தையைக் கூறி ஸீதையைக் கொண்டாடினர்.

प्रियार्हाम् - प्रियवचनार्हाम् - இனிய வார்த்தை கூறத் தகுந்தவள்; प्रियम्-अपि अमिथ्या - உலகிலே பிரியமான வாக்கு உண்மையானதாக இருப்பதில்லை. ஆனால் கௌஸல்யையும் ஸுமித்ரையும் கூறியது, பிரியமானதாகவும் உண்மையானதாகவும் இருந்தது.

अथाभिषेकं रघुवंशकेतोः प्रारब्धमानन्दजलैर्जनन्योः ।
निर्वर्तयामासुरमात्यवृद्धास्तीर्थाहृतैः काञ्चनकुम्भतोयैः ॥ ७ ॥

अथ - பிறகு, जनन्योः - தாய்மார்களின், आनन्दजलैः - ஆனந்தபாஷ்பங்களினால், प्रारब्धं - ஆரம்பிக்கப்பட்ட, रघुवंशकेतोः - ராமருடைய, अभिषेकं - பட்டாபிஷேகத்தை

**अमात्यवृद्धाः** - வயதுமுதிர்ந்த மந்திரிகள், **तीर्थाहृतैः**-(கங்கை முதலிய) புண்ய தீர்த்தங்களிலிருந்து கொண்டுவரப்பட்ட, **काञ्चनकुम्भतोयैः** - தங்கக்குடங்களிலுள்ள ஜலங்களினால், **निर्वर्तयामासुः** - நிறைவேற்றினார்கள் (நடப்பித்தார்கள்).

(க-ரு) ராமர் தமது தாய்மார்களின் பாதங்களில் பணிந்த பொழுது அவரது சிரஸில் அவர்களது கண்களினின்றும் ஆனந்த பாஷ்பம் வீழ்ந்தது; அதுவே பட்டாபிஷேகத்தின் தொடக்கமாக அமைந்தது. பின் மந்திரிகள், பல புண்யதீர்த்தஙகளிலிருந்து பொற் குடங்களில் கொண்டு வரப்பட்ட ஜலத்தால் ராமருக்கு மகுடாபி ஷேகம் செய்வித்தனர்.

வால்மீகி ராமாயணத்தில் பட்டாபிஷேகம் அயோத் தியில் நடந்ததாகக் கூறப்பட்டிருப்பினும் கவி, அயோத்திக் குப் புறத்திலே உள்ள உத்யானத்திலே நடந்ததாகக் கூறினார்.

सरित्समुद्रान् सरसीश्च गत्वा रक्षःकपीन्द्रैरुपपादितानि ।
तस्यापतन्मूर्ध्नि जलानि जिष्णोर्विन्ध्यस्य मेघप्रभवा इवापः ॥ ८ ॥

**रक्षःकपीन्द्रैः**-ராக்ஷஸ ச்ரேஷ்டர்களாலும் வானர ச்ரேஷ்டர்களாலும், **सरित्समुद्रान्** - நதிகளுக்கும் ஸமுத்திரங் களுக்கும், **सरसीश्च** - பெரிய தடாகங்களுக்கும், **गत्वा** - சென்று, **उपपादितानि** - கொண்டுவரப்பட்ட, **जलानि** - ஜலங் கள், **जिष्णोः** - ஜயசீலரான, **तस्य**-அந்த ராமருடைய, **मूर्ध्नि**- சிரஸில்,—**विन्ध्यस्य**-விந்தியபர்வதத்தின், **मूर्ध्नि** - சிகரத்தில்- **मेघप्रभवाः** - மேகத்திலிருந்து உண்டான, **आपः इव**-ஜலங்கள் (விழுவது)போல், **अपतन्** - விழுந்தன.

(க-ரு) ராக்ஷஸர்களும் வானரர்களும் நதி ஸமுத்ரம் முதலான புண்ய தீர்த்தஙகளுக்குச சென்று கொணடுவந்த ஜலம், மேகத்தினின் றும் நீர் விந்த்யமலையின் சிகரத்தில் வீழ்வது போல்-ராமருடைய சிர ஸில் அபிஷேக காலத்தில் ஊற்றப்பட்டன.

ராமருடைய நிமிர்ந்த சிரஸிற்கு விந்தியமலையின் சிகரம் உவமையாக வந்துள்ளது. இச்சுலோகம் அபிஷேகம் செய்த வகையைக் கூறியது.

तपस्विवेषक्रिययापि तावद् यः प्रेक्षणीयः सुतरां बभूव।
राजेन्द्रनेपथ्यविधानशोभा तस्योदितासीत् पुनरुक्तदोषा ॥ ९ ॥

यः - எந்த ராமர், तपस्वि-वेष-क्रिययापि - தவம் செய்பவர்களுக்குரிய வேஷத்தைத் தரித்ததனாலும், सुतरां - மிகவும், प्रेक्षणीयः तावत् - பார்க்கத்தக்க (அழகுடைய) வராகவே, बभूव - இருந்தாரோ, तस्य - அப்படிப்பட்ட அவருக்கு, उदिता - உண்டான, राजेन्द्रनेपथ्य-विधान-शोभा - சக்ரவர்த்திக்குரிய அலங்காரத்தைச் செய்வதால் - (உண்டான) சோபையானது, पुनरुक्तदोषा - கூறியது கூறல் என்னும் குற்றம் உடையதாக, आसीत् - ஆயிற்று.

(க-து) ராமர் முனிவர்களுக்குரிய வேஷம் தரித்தபோதும் அழகாகவே இருந்தார். பட்டாபிஷேக காலத்தில் அவர் தரித்த ராஜராஜர்க்குரிய அலங்காரம் அவருக்கு அதிக சோபையைத் தரவில்லை. இயற்கையிலேயே கம்பீரமான தோற்றமுடைய ராமருக்கு அவ்வலங்காரம் ஒன்றும் செய்யவில்லை.

पुनरुक्तदोषा - ஒரு முறை கூறியதையே பயன் ஏதுமின்றித் திரும்பவும் கூறினால் அது புனருக்தம், (கூறியது கூறல்) எனப்படும். இது காவ்யங்களிலே காணப்படுகின்ற குற்றமாம். பயனின்றி இருத்தலால் இது குற்றமாகக் கருதப்படுகிறது. காவ்யம் தவிர்தது மற்ற இடங்களிலே வழங்கப்படும் பொழுது இப்பதம், 'பயனற்றது' என்ற பொருளுடையதாகின்றது. எனவே 'ராமருக்கு அரசர்க்குரிய உடை அணிவித்தது புனருக்தமாயிற்று' எனின், இயற்கையிலே அழகுடைய அவருக்கு இவ்வுடை அழகு ஒன்

றம் செய்ய வில்லையாதலால் பயனற்றதாயிற்று என்ற பொருளைத் தருவதாயிற்று: மல்லிநாதர் முதலிய உரையாசிரியர் எல்லோரும் 'இரு மடங்கு அழகுதருவதாயிற்று' என உரைத்திருக்கின்றனர். 'द्विगुण आसीत्' என்பது உரை. वैरूप्य पौनरुक्त्येन भीषणां तामयोजयत्' - என முன்பும் [12-40] கவி கூறியிருத்தலைக் காண்க.

समौलरक्षोहरिभिः ससैन्यस्तूर्यस्वनानन्दितपौरवर्गः ।
विवेश सौधोद्गतलाजवर्षामुत्तोरणामन्वयराजधानीम् ॥ १० ॥

**ससैन्यः** - சேனையுடன் கூடிய, **सः** - அந்த ராமர், **तूर्यस्वन-आनन्दितपौरवर्गः (सन्)** - வாத்யகோஷத்தினால் சந்தோஷம் அடைவிக்கப்பட்ட நகர ஜனங்களையுடையவராய் இருந்துகொண்டு, **मौल रक्षो-हरिभिः**-மந்திரிகள், ராக்ஷஸர்கள், வானரர்கள் இவர்களுடன், **सौधोद्गत-लाजवर्षां** - மாளிகைகளிலிருந்து எழுந்த பொரிமாரியையுடையதும், **उत्तोरणां** - தோரணங்கள் கட்டப்பட்டதுமான, **अन्वयराजधानीं**-(தம்), குலத்தின் ராஜதானியான அயோத்தியை(யில்), **विवेश** - பிரவேசித்தார்.

(க-து) பட்டாபிஷேகம் முடிந்தபின் ராமர் தமது பரிவாரங்கள் சூழ, பலவகை வாத்ய கோஷத்தினால் நகரஜனங்களை மகிழ்வித்தவராக, நண்பர்களான ராக்ஷஸர்களுடனும், வானரர்களுடனும் தமது வம்ச மன்னர்களின் ராஜதானியான அயோத்யா நகரத்தில் பிரவேசித்தார்.

सौमित्रिणा सावरजेन मन्दमाधूतवालव्यजनो रथस्थः ।
धृतातपत्रो भरतेन साक्षादुपायसंघात इव प्रवृद्धः ॥ ११ ॥

**सावरजेन** - தம்பியுடன் (சத்ருக்னனுடன் கூடிய), **सौमित्रिणा** - லக்ஷ்மணனால், **मन्दं** - மெதுவாக, **आधूत-वाल-व्यजनः** - வீசப்படுகின்ற சாமரங்களையுடையவரும், **भरतेन**-

பரதனால், धृत-आतपत्रः - பிடிக்கப்பட்ட (அரசர்க்குரிய) குடையை உடையவரும். रथस्थः - ரதத்தில் வீற்றிருப்ப வருமான ராமர், प्रवृद्धः - உருவெடுத்ததும், साक्षात् - கண்களுக்குப் புலப்படுகின்றதுமான, उपायसंघात इव - (ஸாம, தான, பேத, தண்டம் என்னும் நான்கு) உபாயங் களின் ஸமூஹம் போல், (विवेश) - பிரவேசித்தார்.

(க-து) தன் தம்பியான சத்ருக்னனுடன் லக்ஷ்மணன் மெது வாகச் சாமரம் வீசினன்; பரதன் அரசர்க்குரிய வெண்குடை பிடித் தான். ரதத்தில் வீரர்களான மூன்று ஸஹோதரர்களிடையிலே இருந்த ராமர், ஸாமம், தானம், பேதம், தண்டம் என்ற நான்கு உபா யங்களின் தொகுதி போல்காணப்பட்டார்.

ராமாதியரை முன்பும் கவி, सामदानविधिभेदनिग्रहाः सिद्धिमन्त इव - (11-55) என நால்வகை உபாயங்களுடன் ஒப்பிட்டிருத்தலைக் காண்க.

भ्रातृसहिते रामे उपायसमूहः उत्प्रेक्ष्यते। समस्तार्थसाधनत्वादि द्योत्यते। दृश्यते चानेकसान्निध्येनैकस्मिन् अपि समूहारोपणम्। यथा माघे-राजयक्ष्मेव रोगाणां समूहः स महीक्षिताम् अरुणगिरिः।

प्रासादकालगुरुधूमराजिस्तस्याः पुरो वायुवशेन भिन्ना।
वनान्निवृत्तेन रघूत्तमेन मुक्ता स्वयं वेणिरिवाबभासे ॥ १२ ॥

वायुवशेन - காற்றின் வேகத்தால், भिन्ना - பிரிக்கப் பட்ட, प्रासाद-कालगुरु धूमराजिः - மாளிகைகளில் (உண் டான) காரகில் கட்டையின் புகைக்கூட்டமானது,—वनात् - காட்டிலிருந்து, निवृत्तेन - திரும்பிய, रघूत्तमेन स्वयं - ராம ராலேயே, मुक्ता - அவிழ்த்து விடப்பட்ட, तस्याः पुरः - அவ் வயோத்யா நகரம் என்னும் ஸ்திரீயின், वेणिः इव - பின் னலைப் போல், आबभासे - விளங்கியது.

(க-து) ராமரது நகரப்ரவேசத்தைக் கருதி நகரமெங்கும் ஜனங்கள் அலங்காரம் செய்து தமது வீடுகளில் நறுமணமகமழும் காரகில் கட்டைகளின் புகையை எழச் செய்து வாசனை யூட்டினர். வீடுகளினின்றும் ஜன்னல் வழியே வந்த புகைத் தொகுதி காற்றினால் பலவாகப் பிரிக்கப்பட்டது.

கணவன் அயல் நாடு சென்றிருக்கும் பொழுது பதிவிரதையான ஸ்திரீமலர்களால் அணி செய்யாது, கூந்தலை ஒற்றைப் பின்னலாக விட்டிருப்பாள். திரும்பிய கணவன், தன் பொருட்டு வருந்தியுள்ள மனைவியின் பின்னலை அவிழ்த்துக் கூந்தலை ஆற்றி அழகு செய்வர் எனக் கவிகள் கூறுவர்.

அதுபோல், காற்றில் பிரிந்துள்ள புகை, ராமர் என்ற தலைவரால் அவிழ்த்து ஆற்றி விடப்பட்ட அயோத்தி என்ற ஸ்திரீயின் கூந்தல் போல் காணப்பட்டது என்று கவி உத்ப்ரேக்ஷிக்கின்றார்.

கருநிறம், தோற்றத்தில் ஒற்றுமை, நறுமணம் முதலியன புகையைக் கூந்தலுடன் ஒப்பிடக் காரணமாயின.
'वर्ण संस्थान सादृश्यं, सौरभ्यं चोत्प्रेक्षाहेतु:' नारायणः ।

'मोक्ष्यध्वे स्वर्गबन्दीनां वेणीबन्धानदूषितान्' என இக்கருத்தைக் கவி முன்பும் கூறியுள்ளார்.

श्वश्रूजनानुष्ठितचारुवेषां कर्णीरथस्थां रघुवीरपत्नीम् ।
प्रासादवातायनदृश्यबन्धैः साकेतनार्योऽञ्जलिभिः प्रणेमुः ॥ १३ ॥

**श्वश्रूजन-अनुष्ठित - चारुवेषां** - மாமிமார்களினால் செய்யப்பட்ட அழகிய அலங்காரத்தை யுடையவளும், **कर्णीरथस्थां** - பல்லக்கில் அமர்ந்திருப்பவளுமான, **रघुवीर-पत्नीं**- ஸீதையை, **साकेतनार्यः** - அயோத்தியா நகர ஸ்திரீகள், **प्रसाद-वातायन - दृश्यबन्धैः** - மாளிகைகளின் ஜன்னல்கள் மூலம் காணத்தகுந்த குவித்தலையுடைய, **अञ्जलिभिः** - அஞ்ஜலிகளால், **प्रणेमुः** - வணங்கினார்கள்.

(க-து) மாமிமார்களால் அழகாக அலங்கரிக்கப்பட்ட ஸீதை நகரஸ்திரீகள் எல்லோரும் காணும்படி பல்லக்கில் அமர்ந்து செல்லவும், அயோத்யா நகரப்பெண்கள் தமது மாளிகைகளின் ஜன்னல்களினருகே நின்று கைகுவித்து ஸீதையை வணங்கினர். பெண்கள் செய்த அஞ்சலி, தெருவிலுள்ளோரும் ஸீதையும் ஜன்னல்களிடை வழியே காணும்படியாக இருந்தது.

**कर्णीरथः** - பல்லக்கு; சிறிய ரதம் என்றும் கூறுவர். **रघुवीरपत्नीम्** - ராமரை ரகுவீரர் என இங்கே குறிப்பிட்டது, ஸமுத்திரத்தில் அணை கட்டியது, அரக்கரை வென்றது முதலிய பெருங்காரியங்கள் செய்துள்ளமை பற்றி.

स्फुरत्प्रभामण्डलमानसूयं सा बिभ्रती शाश्वतमङ्गरागम् ।
रराज शुद्धेति पुनः स्वपुर्यै संदर्शिता वह्निगतेव भर्त्रा ॥ १४ ॥

**स्फुरत्प्रभा-मण्डल** - பிரகாசிக்கின்ற காந்தி ஸமூகத்தையுடையதும், **आनसूयं** - அனஸூயையினால் கொடுக்கப்பட்டதும், **शाश्वतं** - ஸ்திரமாக இருப்பதுமான, **अङ्गरागं** - வாசனை த்ரவ்யத்தை (சந்தனத்தை), **बिभ्रती** - தரித்துக் கொண்டிருக்கும், **सा** - அவள், **भर्त्रा** - தன் கணவரால், **स्वपुर्यै** - தம் நகரத்தின் பொருட்டு, **शुद्धा इति**-பரிசுத்தமானவள் என்று, **सन्दर्शिता** - காண்பிக்கப்பட்டவளாக, **पुनः** - மறுபடியும், **वह्निगता इव** - அக்னியில் பிரவேசித்தவள் போல், **रराज** - விளங்கினாள்.

(க-து) வனவாஸகாலத்தில் அத்ரியின் மனைவியான அனஸூயை தந்த சந்தனம் பூசியிருந்ததால், ஸீதையைச் சுற்றிலும் ஒளிவட்டம் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அவ்வாறு அக்னிபோல் ஒளிர்கின்ற ஒளியிடையே ஸீதை இருந்தது, ஸீதை தூய்மையுடையவள் என்பதை ராமர், ஜனங்களுக்குக் காட்ட விரும்பவும், அவள் (லங்கையில் செய்தது போல்) மறுபடியும் அக்னி பிரவேசம் செய்து நின்றவள் போல் காணப்பட்டாள்.

அனஸூயை தந்த சந்தனம் திவ்யமானது. ஒரு தடவை பூசிக் கொண்டாலும் அது தரும் நிறம் என்றும் நீங்காது. எப்பொழுதும் நறு மணம் உடையது. சந்தனத்தினால் ஏற்பட்ட ஒளி, அக்னியின் தேஜஸ் போல் இருந்ததால், ஸீதை மறுபடியும் அக்னி பிரவேசம் செய்ததாக உத்ப்ரேக்ஷிக்கக் காரணமாயிற்று. இத்தகைய ஒளியைக் கண்ட எவர் மனத்தில்தான் ஸீதையின் தூய்மை பற்றி நம்பிக்கை யுண்டாகாது என்பது கருத்து.

இவ்வளவு சிறப்பாக ஸீதையின் தூய தன்மையை எடுத்துக் காட்டிய பின்பும் ஜனங்கள் நம்பிக்கை கொள்ளவில்லையே எனின் அது அவர்களது துர்க்குணத்தைக் காட்டுவதாகும். இக்கருத்தையே பவபூதி 'अतिदुर्जन इति वक्तव्यम्' என்பதால் குறிப்பிட்டார்.

ஸீதை வனவாஸ காலத்தில் அனஸூயையைச் சந்திக்கவும் அவள், ஸீதையின் குணத்தைப் புகழ்ந்து சிறந்த மாலை வஸ்த்ரம், ஆபரணம், சந்தனம் முதலியவைகளைக் கொடுத்துக் கௌரவித்தாள். इदं दिव्यं वरं माल्यं वस्त्रमाभरणानि च। अंगरागं च वैदेहि महार्हमनुलेपनम्॥ मया दत्तमिदं सीते तव गात्राणि शोभयेत्। अनुरूपमसंक्लिष्टं नित्यमेव भविष्यति॥ [अयोध्या-118 18, 19].

वेश्मानि रामः परिबर्हवन्ति विश्राण्य सौहार्दनिधिः सुहृद्भ्यः।
बाष्पायमाणो बलिमन्निकेतमालेख्यशेषस्य पितुर्विवेश ॥ १९ ॥

सौहार्दनिधिः - நட்பிற்கு நிதிபோன்ற, रामः - ராமர், सुहृद्भ्यः - தம் நண்பர்களுக்கு, परिबर्हवन्ति விரிப்பு முதலிய (வேண்டிய) பொருள்களையுடைய, वेश्मानि மாளிகைகளை, विश्राण्य - கொடுத்துவிட்டுப் பிறகு, आलेख्यशेषस्य - படம் ஒன்றிலே எஞ்சியுள்ள, पितुः - தகப்பனாரின், बलिमत् - பூஜாத்ர

வ்யங்களுடன் கூடிய, **निकेतं** - வீட்டை (வீட்டில்), **बाष्पायमाणः** - கண்ணீரை விட்டுக்கொண்டு, **विवेश** - பிரவேசித்தார்.

(க-து) கட்பிற்கு நிதி போன்ற ராமர், தமது நண்பர்களான ஸுக்ரீவன் விபீஷணன் முதலியோர் தங்கியிருப்பதற்காகத் தேவையான பொருள்கள் எல்லாம் நிறைந்துள்ள மாளிகைகளைக் கொடுத்த பின், படத்தில் மாத்திரமே காணும்படியான நிலையை அடைந்துள்ள தந்தையின் அரண்மனையில் சோகமிகுதியால் கண்ணீர் விட்டுக் கொண்டே புகுந்தார். அவ்வரண்மனையில் தசரதரைப் பூஜிப்பதற்கான பொருள்கள் வித்தஞ் செய்யப்பட்டிருந்தன.

**परिबर्हः** விரிப்புக்கள்; இங்கு, வீட்டிற்குத் தேவையான ஆஸனங்கள் முதலியவைகளையும் குறிக்கும். **परिच्छदे नृपार्हेऽर्थे परिबर्हः** - என்பது அமரம்; **बलिमत्** ராமரை வரவேற்பதற்கான பொருள்களை யுடையது என்றும் கூறுவர்.

कृताञ्जलिस्तत्र यदम्ब सत्यान्नाभ्रश्यत स्वर्गफलाद्गुरुर्नः ।
तच्चिन्त्यमानं सुकृतं तवेति जहार लज्जां भरतस्य मातुः ॥ १६ ॥

**तत्र** - அங்கு, **कृताञ्जलिः (सन्)** - கைகூப்பியவராக இருந்துகொண்டு ராமர், “**अंब** - தாயே, **नः** - எங்களுடைய **गुरुः** - பிதா, **स्वर्गफलात्** - ஸ்வர்க்கத்தைப் பலனாக உடைய, **सत्यात्** - உண்மையிலிருந்து, **नाभ्रश्यत** - நழுவவில்லை, **इति**- என்று, **यत्** - யாதொருவிஷயம் இருக்கின்றதோ, **तत्** (அவ்வாறு) நழுவாமல் இருத்தல் என்பது, **चिन्त्यमानं (सत्)** - ஆலோசிக்கப்பட்டதாக (இருந்துகொண்டு), **तव** - உன்னுடைய **सुकृतं** நற்காரியமாக, **आसीत्** - இருந்தது”, **इति**-என்று சொல்லி, **भरतस्य** - பரதனின், **मातुः** - தாயான கைகேயியினது, **लज्जां** - வெட்கத்தை, **जहार** - போக்கினார்.

(க-து) நான் குற்றம் செய்து விட்டதாக எண்ணிக்காணவெட்கப்படுகின்ற கைகேயியை அங்கேபார்த்து; ‘தாயே, உண்மையின்

பயன் ஸ்வர்க்கம்; தந்தை தசரதர் ஸ்வர்க்கம் இழக்காதபடி அவரை ஸத்யவாதியாகச் செய்தது நீர் அல்லவா? தாங்கள் செய்த காரியம் யோசித்துப் பார்க்கும் பொழுது, நற்காரியமாகவே யுள்ளது. நீங்கள் தசரதருக்கு உதவியே செய்தீர்கள்' என்று கூறி அவளது லஜ்ஜையைப் போக்கினர்.

செய்த வாக்குறுதியைக் காப்பாற்றாதவர் நரகம் புகுவர் என தர்மசாஸ்திரம் கூறும்.

'यो वरं वरदो दत्त्वा न करोति च तत् तथा ।
स याति नरकं घोरं सह पूर्वैर्न संशयः ॥

तथैव सुग्रीवविभीषणादीनुपाचरत्कृत्रिमसंविधाभिः ।
संकल्पमात्रोदितसिद्धयस्ते क्रान्ता यथा चेतसि विस्मयेन ॥ १७ ॥

**सङ्कल्पमात्र-उदित सिद्धयः** - விருப்பத்தினால் மாத்திரமே தோன்றிய - பொருள் நிறைவையுடைய, **ते** - ஸுக்ரீவன் முதலியவர்கள், **चेतसि** - மனத்தில், **विस्मयेन** - வியப்பு உணர்ச்சியால், **यथा** - எவ்வகையிலே, **क्रान्ताः** - ஆக்ரமிக்கப் பட்டனரோ, **तथैव** - அவ்வகையிலே, **कृत्रिम-संविधाभिः** - மனிதர்களின் முயற்சியினால் பெறப்பட்ட பொருள்களைக் கொண்டு, **सुग्रीव-विभीषणादीन्**-ஸுக்ரீவன் விபீஷணன் முதலியவர்களை, **उपाचरत्** - (ராமர்) உபசரித்தார்.

(க-து) விபீஷணனும், தெய்வாம்சமுள்ள ஸுக்ரீவன் முதலியவர்களும், விரும்பிய பொருள்களை இச்சை மாத்திரத்தினாலே பெறும் ஆற்றல் பெற்றவர்கள். முயன்று தான் பெறவேண்டுமென்பதில்லை. ராமர், முயன்று பெறப்பட்ட பலவகைப் பொருள்களைக் கொண்டு அவர்களுக்கு உபசாரங்களைச் செய்தார். நினைத்த மாத்திரத்தில் வேண்டிய வஸ்துக்களைப் பெறத் திறமைவாய்ந்த விபீஷணாதியரும் கூட, ராமர் செய்த உபசாரத்தைக் கண்ட பொழுது பேராச்சர்யம் அடைந்தனர். ஏனெனில் அவர்கள் மனத்தினாலும் நினைக்க முடியாத அளவில் சிறந்து இருந்தன ராமர் செய்த உபசாரங்களும், அவர் பெற்ற பொருள்களும்.

सभाजनायोपगतान् स दिव्यान् मुनीन् पुरस्कृत्य हतस्य शत्रोः।
शुश्राव तेभ्यः प्रभवादि वृत्तं स्वविक्रमे गौरवमादधानम् ॥ १८ ॥

सः - அவர், सभाजनाय - (தம்மை) கௌரவிப்பதற்காக, उपागतान् - வந்த, दिव्यान् - தேவலோகத்திய, मुनीन्- முனிவர்களை, पुरस्कृत्य - பூஜித்த பிறகு, स्वविक्रमे - தம் பராக்ரமத்தில், गौरवं - மதிப்பை, आदधानं - கொடுக்கின்ற, हतस्य - கொல்லப்பட்ட, शत्रोः - சத்ருவான ராவணனின், प्रभवादि - பிறப்புத் தொடக்கமான, वृत्तं - சரித்திரத்தை, तेभ्यः - அவர்களிடமிருந்து, शुश्राव-கேட்டார்.

(க-து) ராமர் தம்மைக் கௌரவிப்பதற்காக வந்த மஹரிஷிகள் எல்லோரையும் தக்கவாறு கௌரவித்தார். பிறகு, ராவணனது பிறப்பு முதலான வரலாற்றை அம்முனிவர்கள் கூறக் கேட்டார்.

ராமர் தமது பராக்ரமத்தை மிகவும் பாராட்டினவரல்லர். ராவணனது வரபலம் முதலியவற்றைக் கேட்டபின் அத்தகைய பலம்பொருந்திய வீரனை வெல்லக் காரணமாயிருந்த தமது பராக்ரமத்தை மதித்தார். இவ்வகையிலே ராவணனது வரலாறு ராமரது பராக்ரமத்திற்குக் கௌரவம் அளிப்பதாக இருந்தது. 'स्वविक्रमे गौरवमादधानम् - रामस्य स्वविक्रमेऽवनास्थैव । तद्वृत्तान्तश्रवणानन्तरं गौरवं जातमिति भावः' नारायणः ॥

காவ்யங்களிலே தலைவனுடைய பெருமையை இரண்டு முறையிலே வர்ணிப்பர் கவிகள்; ஒன்று: தலைவனுடைய குணங்களையே விரிவாகக் கூறுதல்; மற்றொன்று: தலைவனது சத்ருவின் பராக்ரமத்தைப் பலபடியாகக் கூறி அத்தகைய பகைவனை வென்றவன் எனத் தலைவனைப் புகழ்தலாம். இரண்டாவது முறையும் தலைவனுக்குப் பெருமை தரத்தக்கதே. இவ்விரண்டு முறைகளையும் ஆசிரியர் தண்டி ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

'वंशवीर्यश्रुतादीनि वर्णयित्वा रिपोरपि। तज्जयान्नायकोत्कर्ष-वर्णनं च धिनोति नः ॥' என்பதைக் காண்க.

எனவே ராமபட்டாபிஷேக காலத்தில் ராவண சரித்ர வர்ணனம் ராமாது கௌரவத்திற்குக் காரணமாயிற்று. सभाजनम् - அன்பினால் காணுதல்: आजग्मुः मुनयः सर्वे राघवं प्रतिनन्दितुम् - என்பது ராமாயணம். ராவணனது வரலாற்றைக் கூறியவர் அகஸ்த்யர்.

प्रतिप्रयातेषु तपोधनेषु सुखादविज्ञातगतार्धमासान् ।
सीतास्वहस्तोपहृताग्र्यपूजान् रक्षःकपीन्द्रान्विससर्ज रामः ॥ १९ ॥

तपोधनेषु - முனிவர்கள், प्रतिप्रयातेषु (सत्सु) - திரும்பிச் சென்ற பிறகு, सुखात् - ஸந்தோஷத்தினாலே, अविज्ञात-गतार्धमासान् - அறியாமலே பாதி மாதத்தைக் கடத்தியவர்களும், सीता - स्वहस्त-उपहृत - अग्र्यपूजान् - ஸீதையின் கையினாலேயே கொடுக்கப்பட்ட உயர்ந்த ஸம்மானங்களை உடையவர்களுமான, रक्षःकपीन्द्रान् - விபீஷணன் ஸுக்ரீவன் முதலியவர்களை, रामः - ராமர், विससर्ज - அனுப்பினார்.

(க-து) முனிவர்கள் எல்லோரும் சென்றபின் ராமர் விபீஷணன் முதலிய எல்லோருக்கும் தக்க ஸம்மானங்களை ஸீதையைக் கொண்டே அளிக்கச் செய்து, அவர்கள் தம்தம் இடம் செல்ல அனுமதி கொடுத்தார். விபீஷணாதியர் அயோத்தியில் பதினைந்து நாட்கள் தங்கியிருந்தனராயினும் ஆநந்தத்தின் மிகுதியால் நாட்கள் சென்றதையும் அவர்கள் உணரவில்லை. அவ்வளவு இன்பமாக அவர்கள் அயோத்தியிலிருந்தனர்.

ஸுக்ரீவாதியர் இரண்டு மாதங்கள் அயோத்தியிலிருந்ததாக ராமாயணம் கூறும்.

तच्चात्मचिन्तासुलभं विमानं हृतं सुरारेः सह जीवितेन ।
कैलासनाथोद्वहनाय भूयः पुष्पं दिवः पुष्पकमन्वमंस्त ॥ २० ॥

**आत्मचिन्तासुलभं** - தாம் நினைத்த மாத்திரத்தில் கிடைக்கக்கூடியதும், **सुरारेः** - தேவர்களின் சத்ருவான ராவணனுடைய, **जीवितेन सह** - உயிருடன், **हृतं** - கவரப்பட்டதும், **दिवः** - ஸ்வர்க்கத்தின், **पुष्पं** - புஷ்பம் போன்றதுமான, **तत्** - அந்த, **पुष्पकं विमानं च** - புஷ்பகம் என்ற விமானத்தையும், **भूयः** - மறுபடி, **कैलासनाथोद्वहनाय** - குபேரனை வஹிப்பதற்காக, **अन्वमंस्त** - அநுமதித்தார்.

(க-து) ராவணனைக் கொன்றபின் ராமர், வெற்றிகாரணமாகத் தமக்கு உரிய பொருளான புஷ்பகவிமானத்தைத் தாம் நினைத்த மாத்திரத்தில் தம்மிடம் வந்து சேரும்படி நியமித்தபின், அதற்கு உரியவனை குபேரனிடம் அனுப்பினார்.

புஷ்பக விமானம், புஷ்பம் போல் தேவருலகிற்கு அணியாக இருந்து வந்தது; ராவணன் அதைக் குபேரனிடமிருந்து கவர்ந்து கொண்டான். அதற்கு உரியவன் குபேரனாதலால் ராமர் அவ்விமானத்தை அவனுக்கே திருப்பியளித்தார்.

पितुर्नियोगाद्वनवासमेवं निस्तीर्य रामः प्रतिपन्नराज्यः ।
धर्मार्थकामेषु समां प्रपेदे यथा तथैवावरजेषु वृत्तिम् ॥ २१ ॥

**रामः** - ராமர், **एवं** - இவ்வாறு, **पितुः** - பிதாவின் **नियोगात्** - உத்தரவினால், **वनवासं** - வனவாஸத்தை, **निस्तीर्य** - முடித்து, **प्रतिपन्नराज्यः** - ராஜ்யமடைந்தவராக, **अवरजेषु** - தம்பிகளிடத்தில், **यथा** - எவ்வாறு (ஸமமான எண்ணமுடையவராக இருந்தாரோ), **तथैव** -, அவ்வாறே, **धर्मार्थकामेषु** - தர்மம், அர்த்தம், காமம் இவைகளில், **समां** - ஸமமான, **वृत्तिं** - மன நிலையை, **प्रपेदे** - அடைந்தார்.

(க-து) தந்தையின் ஆணைப்படி வனவாஸத்தை முடித்து ராஜ்யம் பெற்ற ராமர், தம்பிகளிடத்தில் எவ்வாறு பக்ஷபாத

மின்றி ஒத்த கருத்துடையவராக இருந்தாரோ அவ்வாறே, அரசரான பின்பும் தர்மம் அர்த்தம், காமம் என்ற மூன்றிலும் ஸமமான நோக்குடன் இருந்தார்.

இக்கருத்து அருணகிரி நாதரின் உரையைப் பின் பற்றியது. 'तथा यथैव' என்பது அவர் கொண்ட பாடம்.

'राज्यप्राप्तेः पूर्वं अग्रजेषु समां वृत्तिं प्राप्तवान् राजप्राप्त्यनन्तरन्तु राजर्षिवृत्तानुसारित्वात् तथैव धर्मार्थकामत्रयेऽपीत्यर्थः' नारायणः।

தர்மார்த்த காமங்களை உரிய அளவில் அனுபவிக்க வேண்டுமே யன்றி வேறு வகையில் கூடாது.

'धर्मार्थकामाः सममेव सेव्याः यस्त्वेकसेवी स जनो जघन्यः।'

'न धर्ममर्थं कामाभ्यां बबाधे न च तेन तौ।

नार्थं कामेन कामं वा सोऽर्थेन, सदृशस्त्रिषु॥' என்பவற்றைக் காண்க.

மல்லிநாதர், 'தர்மார்த்த காமங்களிடத்தில் எவ்வாறு ஸமநோக்குடன் இருந்தாரோ அவ்வாறே தம்பிகளிடமும் இருந்தார்' என உரைத்தார்.

सर्वासु मातृष्वपि वत्सलत्वात् स निर्विशेषप्रतिपत्तिरासीत्।
षडाननापीतपयोधरासु नेता चमूनामिव कृत्तिकासु॥ २२॥

चमूनाम् - (தேவர்களது) ஸேனைகளின், नेता - தலைவரான ஸுப்ரஹ்மண்யர், षड्-आनन-आपीत-पयोधरासु - ஆறு முகங்களினாலே நன்கு பானம் செய்யப்பட்ட பாலையுடைய, कृत्तिकासु इव - கிருத்திகை தேவிகளிடம் (ஒத்த அன்புடன் இருந்தது) போல், सः - அவர், वत्सलत्वात् - (உண்மையிலே) அன்புடையவராக இருந்ததால், सर्वासु - எல்லா, मातृषु अपि - தாய்மார்களிடத்திலும், निर्विशेष प्रतिपत्तिः - ஒத்த பக்தியுடையவராக—आसीत् - இருந்தார்.

(க-து) ராமர் இயற்கையிலே அன்பு நிறைந்தவர். ஆதலால் பெற்ற தாயான கௌஸல்யையேயன்றித் தசரதர் மனைவியர் எல்லோருமே தாய் முறையுடையவர்களாதலால் அவர்களிடம் ஒத்த பக்தியுடன் நடந்து கொண்டார். தாய்மாரிடம் பாரபக்ஷம் கொள்ளவில்லை.

கிருத்திகாதேவிகள் என்று கூறப்படும் ஆறு தேவஸ்திரீகளால் வளர்க்கப்பட்ட ஸுப்ரஹ்மண்யர் அவ்வாறுவரிடமும் ஸமமான அன்பு கொண்டிருந்தது போல் ராமரும் இருந்தார் என உவமை கூறப்பட்டது.

முன் சுலோகத்திலே தர்மார்த்த காமங்களில் பக்ஷபாதமின்றி நடந்து கொண்டார் என்று கூறியதற்கேற்ப, இங்குத் தர்மம் கூறப்பட்டது. அடுத்து வரும் இரண்டு சுலோகங்களில் முறையே அர்த்தமும், காமமும் கூறப்படுகின்றன.

तेनार्थवाँल्लोभपराङ्मुखेन तेन घ्नता विघ्नभयं क्रियावान् ।
तेनास लोकः पितृमान् विनेत्रा तेनैव शोकापनुदेन पुत्री ॥ २३ ॥

लोकः - ஜனங்கள், लोभपराङ्मुखेन - ஆசையற்ற, तेन - அந்த ராமரால், अर्थवान् - செல்வமுடையவர்களாக, आस - இருந்தார்கள். विघ्नभयं - இடையூறுகளிலிருந்து உண்டான பயத்தை, घ्नता - அழிக்கின்ற, तेन - அவரால், क्रियावान् - (யாகாதி) கார்யங்களை உடையவர்களாக, आस - இருந்தார்கள். विनेत्रा - படிப்பிக்கின்ற (நற்குணங்களை விருத்தி செய்கின்ற), तेन - அவரால், पितृमान् - பிதாவை உடையவர்களாக, आस - இருந்தார்கள். शोकापनुदेन - துக்கத்தைப் போக்குகின்ற, तेनैव - அவராலேயே, पुत्री - புத்ரனை உடையவர்களாகவும், आस - இருந்தார்கள்.

(க-து) ராமர் பேராசையின்றி இருந்ததால் ஜனங்களிடமிருந்து அதிகம் வரி பெறவில்லை. அதனால் குடிகள் செல்வமுடைய

வராயிருந்தனர். யாகாதி நற்காரியங்களுக்கு உண்டாகும் இடையூறு களை நீக்கியதால் ஜனங்கள் யாகம் முதலானவற்றைச் செய்வதில் ஈடுபட்டனர். கல்வியளித்துக் குணங்களை விருத்தி செய்ததால் அவர், அவர்களுக்குத் தந்தைபோலிருந்தார். துன்பமடைந்தவர்களின் துன் பத்தைப் போக்கிய அவர், அவர்களுக்கு ஸத்புத்ரன் போல் உதவினார்.

எனவே, அவர் அரசராக மாத்திரமின்றி மக்களின் தந்தையாகவும் மகனாகவும் இருந்து அவர்களைப் பாதுகாத் தார். 'येन येन वियुज्यन्ते प्रजाः स्निग्धेन बन्धुना । स स पापादृते तासां दुष्यन्त इति घुष्यताम् ॥' என்ற சுலோகம் மேற் கூறி யதை விளக்கும்.

'आस - असगति दीप्त्यादानेषु इति धातोरयं शब्दः । दिदीपे इत्यर्थः' என்பர் நாராயணர்.

स पौरकार्याणि समीक्ष्य काले रेमे विदेहाधिपतेर्दुहित्रा ।
उपस्थितश्चारु वपुस्तदीयं कृत्वोपभोगोत्सुकयेव लक्ष्म्या ॥ २४ ॥

सः - அந்த ராமர், काले - (தகுந்த) காலத்தில், पौर- कार्याणि - நகர ஜனங்களின் கார்யங்களை, समीक्ष्य - கவ னித்தபின், उपभोगोत्सुकया-(ராமரை) அனுபவிக்க வேண்டு மென்ற ஆசையுடையவளும், तदीयं - அந்த ஸீதையினுடை யதான, चारु - அழகிய, वपुः - சரீரத்தை, कृत्वा - எடுத் துக் கொண்டு, (स्थितया) - இருக்கின்றவளுமான, लक्ष्म्या इव-லக்ஷ்மியால் (உபசரிக்கப்படுவது) போல், विदेहाधिपतेः - ஜனகருடைய, दुहित्रा-பெண்ணான ஸீதையினால், उपस्थितः - (सन्) - உபசரிக்கப்படுபவராக இருந்து கொண்டு, रेमे - ஸுகித்தார்.

(க-து) ராமர் உரிய காலத்தில் ராஜ்ய காரியங்களைக் கவனித்த பின் ஸீதையுடன் உலக வின்பங்களைத் துய்த்தார். பகவான் விஷ்ணு ராமராகத் தோன்றியபடியால் மஹாலக்ஷ்மியும் அவருடன் இருக்க

விரும்பி ஸீதையின் வடிவத்தில் வந்துள்ளனளோ என்று நினைக்கும் படி அவ்வளவு அழகுடன் ஸீதை காணப்பட்டாள்.

இதனாலே ஸீதையின் அழகு புலப்படும்.

இச்சுலோகத்தினால் ராமரது காம புருஷார்த்தம் மற்றவைகளுக்குத் தடையாக இருந்ததில்லை என்பது தெளிவு.

तयोर्यथाप्रार्थितमिन्द्रियार्थानासेदुषोः सद्मसु चित्रवत्सु ।
प्राप्तानि दुःखान्यपि दण्डकेषु संचिन्त्यमानानि सुखान्यभूवन्॥२५॥

**चित्रवत्सु** - (தம் வனவாஸ) சித்திரங்களையுடைய, **सद्मसु** - மாளிகைகளில், **यथाप्रार्थितं** - விரும்பியபடி, **इन्द्रियार्थान्** - இந்திரிய ஸுகங்களை, **आसेदुषोः** - அடைந்தவர்களான, **तयोः** - அவ்விருவர்களுக்கும், **दण्डकेषु** - தண்டகாரண்யத்தில், **प्राप्तानि** - அடையப்பட்ட, **दुःखान्यपि** - கஷ்டங்களும், **संचिन्त्यमानानि (सन्ति)** - நினைக்கப்படுகின்றவைகளாய் (இருந்துகொண்டு), **सुखानि** - ஸுகத்தைக் கொடுப்பனவாக, **अभूवन्** - ஆயின.

(க-து) ராமரும் ஸீதையும் அவர்களது வனவாஸ வாழ்க்கையைச் சித்திரித்துள்ள மாளிகையில் வசித்துக் கொண்டு விரும்பிய வகையில் ஸுகங்களை அனுபவித்து வந்தனர். மாளிகையில் வரைந்துள்ள சித்திரங்கள், வனவாஸத்தில் அவர்கள் ஒருவரை ஒருவர் பிரிந்து பட்ட கஷ்டங்களை நினைவூட்டினவாயினும், கஷ்டங்களின் நினைவு அவர்களுக்கு மனவருத்தம் அளிக்கவில்லை. இப்பொழுது நுகருகின்ற இன்பம், இன்பமாக இருப்பதற்கு அக்கஷ்டங்களே காரணமாக இருந்தனவாதலால் அவைகள் அவர்களுக்கு மகிழ்ச்சியையே விளைவித்தன.

நிழலினருமை வெய்யிலில் தான் தெரியும், நிழலை நன்கு அனுபவிக்க வெய்யிலில் கஷ்டப்படுவதும் ஓரளவு தேவைதான். கணவனும் மனைவியும் சேர்ந்திருப்பதிலே கிடைக்கும் இன்பம் பிரிந்து இருப்பதால்தான் புஷ்டி

யடையும். 'न विना विप्रलंभेन श्रृंगारः पुष्टिमश्नुते' என்பர் போஜ ராஜர். எனவே ராமரும் ஸீதையும் கூடியிருந்ததற்கு முன்பு இருந்தபிரிவும், அக்காலத்தில் அவர்கள் அனுபவித்த கஷ்டங்களும் சித்திரங்களைப் பார்க்கும் பொழுது நினைவிலே வந்து மகிழ்ச்சியை அளித்தன.

இன்பமனுபவிக்கும் பொழுது பழைய துன்ப நினைவு இன்பமளிப்பது போல், துன்பமனுபவிக்கும் பொழுது பழைய இன்ப நினைவு வருமாயின் அது துன்பமே அளிக்கும் "अथ स रशनोत्कर्षी पीनस्तनविमर्दनः। नाभ्यूरुजघनस्पर्शी नीवी विस्रंसनः करः॥" என்பது இதற்கு உதாஹரணமாகும். கடல் தன்னிடம் விழும் நீரைத் தன் மயமாக்குவது போல் தற்கால மனுபவிக்கும் இன்பதுன்பங்களும் தம்மோடு கலக்கும் உணர்ச்சிகளைத் தம்மைப்போல் ஆக்கும் திறமையுள்ளன என்பர் அருணகிரிநாதர்.

अथाधिकस्निग्धविलोचनेन मुखेन सीता शरपाण्डुरेण।
आनन्दयित्री परिणेतुरासीदनक्षरव्यञ्जितदौहृदेन॥ २६॥

**अथ** - பிறகு, **सीता** - ஸீதை, **अधिक-स्निग्ध-विलोचनेन** - மிக அழகிய பளபளப்பான கண்களையுடையதும், **शर-पाण्डुरेण** - நாணலைப் போல் வெண்மையானதும், **अनक्षर-व्यञ्जितदौहृदेन** - வார்த்தையின்றியே கர்ப்பத்தைத் தெரிவிப்பதுமான, **मुखेन** - முகத்தினாலே, **परिणेतुः** - கணவரான ராமருக்கு, **आनन्दयित्री** - ஆனந்தத்தைக் கொடுப்பவளாக, **आसीत्** - இருந்தாள்.

(க-து) காலக்ரமத்தில் ஸீதை கருவுற்றதை மிக ஒளிருகின்ற அவளது கண்களும், நாணல் தண்டு போல் வெளுத்துள்ள முகமும் சொல்லின்றியே ராமருக்குத் தெரிவித்தன. அவர் மனமகிழ்ந்தார்.

கண்களில் பளபளப்பும், முகம் வெண்மை கொள்வதும் கர்ப்பவதிகளின் அடையாளங்களாம்.

तामङ्कमारोप्य कृशाङ्गयष्टिं वर्णान्तराक्रान्तपयोधराग्राम् ।
विलज्जमानां रहसि प्रतीतः पप्रच्छ रामां रमणोऽभिलाषम् ॥ २७॥

**प्रतीतः** - ஸந்தோஷமுற்ற, **रमणः** - கணவர் ராமர், **कृशाङ्ग यष्टिम्** - மெலிந்த உடலுடையவளும், **वर्णान्तर-आक्रान्त - पयोधराग्राम्** - வேறு (கரு) நிறம் கொண்ட பயோதரங்களின் முனையுடையவளும், **विलज्जमानाम्** - வெட்கப்படுபவளுமான, **ताम् रामां** - அந்த ஸீதையை, **रहसि** - தனிமையில், **अङ्कं आरोप्य** - மடியிலே அமரச் செய்து, **अभिलाषं** - (அவளது) விருப்பத்தை, **पप्रच्छ** - கேட்டார்.

(க-து) கர்ப்பவதிகளுக்குரிய உடல் மெலிவைக் கண்டு ராமர், ஒருஸமயம் தனிமையில் ஸீதையைத் தம்மருகில் அமரச் செய்து, கருவுற்றவர்கள் ஏதேனும் ஒரு பொருளில் ஆசை கொள்வது இயல்பாதலால் ஸீதையின் விருப்பத்தைக் கேட்டார்.

பலர் எதிரில் கேட்பதும் பதில் கூறுவதும் உசிதமன்றாகையால் **'रहसि'** என்றார். **विज्जमानाम** - 'மனத்திலுள்ளதைக் கூறவும் வெட்கப்படுகின்ற' என்பது பொருள். **वर्णान्तराक्रान्तः......ग्राम्** - என்பதால் கர்ப்பமுடைமையின் அடையாளம் கூறப்பட்டது.

सा दष्टनीवारबलीनि हंसैः संबद्धवैखानसकन्यकानि ।
इयेष भूयः कुशवन्ति गन्तुं भागीरथीतीरतपोवनानि ॥ २८ ॥

**सा** - அந்த ஸீதை, **हंसैः** - ஹம்ஸங்களினால், **दष्ट-नीवार- बलीनि** - சாப்பிடப்பட்ட நீவாரதான்யமாகிய உணவை உடையவைகளும், **सम्बद्ध-वैखानस कन्यकानि** - ஸ்னேஹத்தோடு கூடிய வானப்ரஸ்தர்களின் பெண்களையுடையவைகளும், **कुशवन्ति** - அழகிய தர்ப்பங்களையுடையவைகளுமான, **भागीरथी-तीर- तपोवनानि** - கங்கையின் கரையிலுள்ள

தபோவனங்களைக் குறித்து, भूयः - மறுபடியும், गन्तुं - செல்வதற்கு, इयेष - விரும்பினாள்.

(க-து) ஸீதை கங்கையின் கரையிலுள்ள தபோவனங்களுக்கு மறுபடியும் செல்ல விரும்பினாள். தபோவனங்களிலே ரிஷிகள் தருகின்ற நீவாரதான்யங்களை உண்கின்ற அன்னப் பறவைகள் இருந்து அழகு செய்தன. நட்பினாலே இணைந்துள்ள தாபதப்பெண்கள் ஆங்கே இருந்தனர். காண்பதற்கு இனிய தர்ப்பங்களும் இருந்தன.

'अत्र हंसानां क्रीडासाधनत्वात्, वैखानसकन्यकानां चिरपरिचितत्वात्, कुशानां क्रियापयोगित्वाच्च स्पृहाविषयत्वम्' नारायणः ॥.

तस्यै प्रतिश्रुत्य रघुप्रवीरस्तदीप्सितं पार्श्वचरानुयातः ।
आलोकयिष्यन् मुदितामयोध्यां प्रासादमभ्रंलिहमारुरोह ॥ २९ ॥

रघुप्रवीरः - ராமர், तस्यै - ஸீதையின் பொருட்டு, तदीप्सितं - அவளுடைய விருப்பத்தை, प्रतिश्रुत्य - (நிறைவேற்றுவதாக) வாக்களித்து, पार्श्वचरानुयातः (सन्) - வேலைக்காரர்களால் பின் தொடரப்பட்டவராக (இருந்துகொண்டு), मुदितां - ஸந்தோஷமடைந்திருக்கின்ற, अयोध्यां - அயோத்தியா நகரத்தை, आलोकयिष्यन् - பார்க்கவிரும்பியவராய், अभ्रलिहं - ஆகாயத்தையளாவிய, प्रासादं - மாளிகையின் மேலமாடியில், आरुरोह - ஏறினார்.

(க-து) ஸீதையின் விருப்பத்தை நிறைவேற்றுவதாகச் சொல்லிய பிறகு அவர், அயோத்தியா நகரம் முழுவதையும் காண விரும்பி மாளிகையின் சிகரத்தை அடைந்தார்.

ஸீதையின் விருப்பத்தை நிறைவேற்றுவதாகக் கூறிய பின், ராமர் தமது ஆட்சியிலே ஸந்தோஷத்துடனிருக்கின்ற அயோத்தி நகரம் முற்றிலும் காண விரும்பி, சில வேலைக்காரர்கள் பின் தொடர, ஆகாயத்தை யளாவியுள்ள மாளிகையின்மேல் தளமடைந்தார்.

ऋद्धापणं राजपथं स पश्यन् विगाह्यमानां सरयूं च नौभिः।
विलासिभिश्चाध्युषितानि पौरैः पुरोपकण्ठोपवनानि रेमे ॥ २० ॥

सः - அந்த ராமர், ऋद्धापणं - பொருள் நிறைந்த கடைகளையுடைய, राजपथं - ராஜ வீதியையும், नौभिः - படகுகளாலே, विगाह्यमानां - ப்ரவேசிக்கப்படுகின்ற, सरयूं - ஸரயூ நதியையும், पौरैः - பட்டணத்திலுள்ள, विलासिभिः - அழகிய ஸ்திரீ புருஷர்களால், अध्युषितानि - தங்கி இருக்கப் பட்ட, पुरो-उपकण्ठ-उपवनानि च - நகரத்திற்கு ஸமீபத்திலுள்ள உத்யானவனங்களையும், पश्यन् - பார்த்துக்கொண்டு, रेमे - ஸந்தோஷித்தார்.

(க-து) ராமர், பொருள் நிறைந்த கடைகளையுடைய ராஜவீதியையும், படகுகள் செல்லுகின்ற ஸரயூநதியையும், உல்லாஸ புருஷர்களும் ஸ்திரீகளும் அமர்ந்துள்ள உத்யான வனங்களையும் கண்டு மக்களுடைய ஸுகமே அரசாது ஸுகமாகையால், மனம் மகிழ்ந்தார்.

रेमे—'प्रजासुखे सुखं राज्ञः' என்பதைக் காண்க.

स किंवदन्तीं वदतां पुरोगः स्ववृत्तमुद्दिश्य विशुद्धवृत्तः।
सर्पाधिराजोरुभुजोऽपसर्पं पप्रच्छ भद्रं विजितारिभद्रः ॥ २१ ॥

वदतां - பேசுபவர்களில், पुरोगः - முதல்வரும், विशुद्धवृत्तः - பரிசுத்தமான நடத்தையுடையவரும், सर्पाधिराजोरुभुजः - ஆதிசேஷன் போன்ற பெரும் புஜங்களையுடையவரும், विजितारिभद्रः - பெரிய சத்ருக்களை ஜயித்தவருமான, सः - அந்த ராமர், स्ववृत्तं - தம்முடைய நடத்தையை, उद्दिश्य - குறித்து, भद्रं - பத்ரன் என்னும், अपसर्पं - வேவுகாரனிடத்தில், किंवदन्तीं - ஜனங்கள் பேசிக் கொள்வதை, पप्रच्छ - கேட்டார்.

(க-து) பேசுபவர்களில் சிறந்தவர் ராமர்; தூய நடத்தையுடையவர்; ஸகல உலக பாரத்தையும் தாங்கும் ஆதிசேஷன் போல் பலம் பெற்ற நீண்ட புஜங்களையுடையவர்; பெரும் சத்ருக்களை வென்றவர். அத்தகைய ராமா, தம்முடைய நடத்தை பற்றி ஜனங்கள் கொண்டுள்ள கருத்தை அறிய விரும்பி பத்ரன் என்ற வேவுகாரனை வினவினார்.

**वदतां पुरोगः** - உண்மையைத் தாம் ஒளிக்காது கூறுவது போல் பிறரும் தம்மிடம் நடந்து கொள்வதை ராமர் எதிர் பார்ப்பவர் என்பதை இவ்விசேஷணம் காட்டியது.

निर्बन्धपृष्टः स जगाद सर्वं स्तुवन्ति पौराश्चरितं त्वदीयम् ।
अन्यत्र रक्षोभवनोषितायाः परिग्रहान्मानवदेव देव्याः ॥ ३२ ॥

**निर्बन्ध-पृष्टः** - நிர்ப்பந்தத்துடன் கேட்கப்பட்ட, **सः** - அவன், "**मानवदेव** - அரசே!, **रक्षोभवन-उषितायाः** - ராக்ஷஸனுடைய கிருஹத்தில் வஸித்த, **देव्याः** - ஸீதையை, **परिग्रहात्** - ஏற்றுக்கொண்டதைத் தவிர, **अन्यत्र** - மற்ற விஷயங்களில், **त्वदीयं** - உம்முடையதான, **सर्वं चरितं** - எல்லாச் செய்கையையும், **पौराः** - நகரஜனங்கள், **स्तुवन्ति** - புகழ்கிறார்கள்," (**इति**) - என்று, **जगाद** - சொன்னான்.

(க-து) ராக்ஷஸ கிருஹத்தில் வஸித்த ஸீதையை அழைத்து வந்ததைப் பற்றி ஜனங்கள் அவதூறாகப் பேசுகின்றார்கள் என்று அவன் தெரிவித்தான்.

'அரசே! ராக்ஷஸக்ருஹத்தில் வஸித்த ஸீதாதேவியைத் தாங்கள் ஏற்றுக் கொண்ட ஒன்றைத் தவிர்த்துத் தங்களுடைய மற்ற எல்லாச் செயல்களையும் ஜனங்கள் கொண்டாடுகின்றனர்' என்றான் வேவுகாரன்.

'कीदृशं हृदये तस्य सीता संभोगजं सुखम् ।
'अङ्कमारोप्य तु पुरा रावणेन बलाद्धृताम् ॥

रक्षसां वशमापन्नां कथं रामो न कुत्स्यति ।
अस्माकमपि दारेषु सहनीयं भविष्यति ।
यथा हि कुरुते राजा प्रजास्तमनुवर्तते ॥"

என்பதைக் காண்க. (உத்தர ஸ்ரீராமாயணம் 43-17, 18, 19.)

कलत्रनिन्दागुरुणा किलैवमभ्याहतं कीर्तिविपर्ययेण ।
अयोघनेनाय इवाभितप्तं वैदेहिबन्धोर्हृदयं विदद्रे ॥ ३३ ॥

**एवं** - இவ்வாறு, **कलत्र निन्दा गुरुणा** - *மனைவியின் நிந்தையினால் மிகப்பெரியதான,* **कीर्तिविपर्ययेण** - *அபகீர்த்தியால்,* **अभ्याहतं** - *தாக்கப்பட்டதான,* **वैदेहिबन्धोः** - *ராமருடைய,* **हृदयं** - மனம், **अभितप्तं** - *காய்ச்சப்பட்டதும்,* **अयोघनेन**-*சம்மட்டியால்,* **अभ्याहतं** - *அடிக்கப்பட்டதுமான,* **अयः इव** - இரும்புபோல், **विदद्रे** - *உடைந்தது.*

*(க-து) தமது மனைவியைப் பற்றிய நிந்தை காரணமாக நேர்ந்துள்ள அபகீர்த்தியினால் தாக்கப்பட்ட ராமரது மனம், பெரும் சம்மட்டியால் தாக்கப்பட்ட பழுக்கக் காய்ச்சிய இரும்புபோல் உடைந்தது.*

किमात्मनिर्वादकथामुपेक्षे जायामदोषामुत संत्यजामि ।
इत्येकपक्षाश्रयविक्लवत्वादासीत् स दोलाचलचित्तवृत्तिः ॥ ३४ ॥

"**आत्म - निर्वादकथां** - *என்னைப்பற்றிய அவதூறான வார்த்தையை,* **किं उपेक्षे** - *அலக்ஷ்யம் செய்வேனா?* **उत** - *அல்லது,* **अदोषां** - *குற்றமற்ற,* **जायां** - *மனைவியை,* **सन्त्यजामि** - *விடுவேனா?*" **इति**-*என்று,* **एकपक्ष आश्रय-विक्लवत्वात्** - (இரண்டில்) *ஒரு விஷயத்தை அங்கீகரிப்பதில் தைர்யமின்மையால்,* **सः** - *அவர்,* **दोला चल-चित्तवृत्तिः** - *ஊஞ்சல் போல் சஞ்சலமான எண்ணமுடையவராக,* **आसीत्** - *இருந்தார்.*

(க-து) "என்னைப் பற்றிய அவதூற்றை அலக்ஷ்யம் செய்து ஸீதையை வீட்டிலே வைத்துக் கொள்வது தகுந்ததா? சிறிதும் குற்றமற்ற மனைவியைத் துறந்து அபகீர்த்தியை நீக்கிக் கொள்வது உசிதமானதா?" என்ற இவ்விரண்டினுள் எதைக்கொள்வது என நிச்சயிக்கத் திறனின்றி ராமரது மனம் ஊசலாடியது.

'जायामि त्यापन्नसत्त्वता द्योत्यते -' अरुणगिरिः ।

निश्चित्य चानन्यनिवृत्ति वाच्यं त्यागेन पत्न्याः परिमार्ष्टुमैच्छत् ।
अपि स्वदेहात्किमुतेन्द्रियार्थाद्यशोधनानां हि यशो गरीयः ॥ ३५ ॥

(किं) च - மேலும், वाच्यं - நிந்தையை, अनन्यनिवृत्ति- வேறு உபாயத்தால் நீங்காததாக, निश्चित्य - நிச்சயித்து, पत्न्याः - மனைவியை, त्यागेन - த்யாகம் செய்வதால், परिमार्ष्टुं- (அதைத்) துடைப்பதற்கு, ऐच्छत्-விரும்பினார். हि-ஏனெனில், यशोधनानां-கீர்த்தியையே செல்வமாகவுடைய மனிதர்களுக்கு स्वदेहादपि - தம்முடைய தேஹத்தைக் காட்டிலும், यशः - கீர்த்தியே, गरीयः - உயர்ந்தது ; इन्द्रियार्थात् - இந்திரிய ஸுகத்திற்குரிய பொருளைக்காட்டிலும், गरीयः-(அது) உயர்ந்தது, इति - என்று, (वक्तव्यं) किमुत - சொல்லப்படவும் வேண்டுமோ?

(க-து) ஸீதையை விடுதலன்றிப் பிற உபாயங்களால் அபவாதம் நீங்காது என்பதை நிச்சயித்து ராமர், ஸீதையைத் தியாகம் செய்து, தமது அபகீர்த்தியைப் போக்கிக் கொள்ள விரும்பினார். ஏனெனில் மான முடையவர் தமது உடலைக் காட்டிலும் மேலானதாக மானத்தைக் கருதுவர். உடலை விட்டும் மானத்தைக் காத்துக் கொள்வர். எனவே மானத்திற்காக, ஸுக ஸாதனமான மனைவி முதலிய பொருள்களையும் துறப்பர் என்பது கூறவேண்டுவதன்று.

कीर्त्यर्थं तु समारंभः सर्वेषां सुमहात्मनाम् ।
अप्यहं जीवितं जह्यां युष्मान् वा पुरुषर्षभाः ।
अपवादभयाद् भीतः किंपुनर्जनकात्मजाम् ॥

என ராமர் தம்பிகளிடம் கூறுவதாக உள்ளது [உத்தர 45-14, 15-]

**पत्न्याः** - யாகாதி நற்காரியங்களிலே பங்கு உடையவள். இச்சொல், ஸீதை விடத்தகாதவள் என்பதைக் காட்டியது.

स संनिपात्यावरजान् हतौजास्तद्विक्रियादर्शनलुप्तहर्षान् ।
कौलीनमात्माश्रयमाचचक्षे तेभ्यः पुनश्चेदमुवाच वाक्यम् ॥ ३६ ॥

**हतौजाः** - காந்தியற்ற, **सः** - அவர், **तद्विक्रिया दर्शनलुप्तहर्षान्** - அவருடைய மாறுபாட்டைக் கண்டதால் ஸந்தோஷமற்ற, **अवरजान्** - தம்பிகளை, **सन्निपात्य** - ஒன்று கூட்டி, **आत्माश्रयं** - தம்மைப் பற்றியதான, **कौलीनं** - நிந்தையை, **तेभ्यः** - அவர்களுக்கு, **आचचक्षे** - சொன்னார். **पुनः** - மேலும், **इदं वाक्यं** - (பின் வரும்) இந்த வாக்கியத்தை, **उवाच च** - சொல்லவும் செய்தார்.

(க-து) முகப் பொலிவிழந்து நின்ற ராமர் தம் தம்பிகளை வரவழைத்து அவர்களிடம் தமது அவதூற்றைக் கூறினார். தம்பிகளும் தமையனாது முகத்திலுள்ள மாறுபாட்டைக் கண்டு ஸந்தோஷமற்று இருந்தனர்.

राजर्षिवंशस्य रविप्रसूतेरुपस्थितः पश्यत कीदृशोऽयम् ।
मत्तः सदाचारशुचेः कलङ्कः पयोदवातादिव दर्पणस्य ॥ ३७ ॥

**रविप्रसूतेः** - ஸூர்யனிடமிருந்து உண்டானதும், **सदाचारशुचेः** - நன்னடத்தையால் பரிசுத்தமாக இருப்பதுமான, **राजर्षिवंशस्य** - ராஜரிஷியான இக்ஷ்வாகுவின் வம்சத்திற்கு, **मत्तः** - என்னிடமிருந்து, **दर्पणस्य** - கண்ணாடிக்கு, **पयोदवातात् इव** - மேகத்திலிருந்து வந்த காற்றினாலே (மாசு ஏற்படுவது) போல, **कीदृशः** - எப்படிப்பட்ட, **अयं कलङ्कः** - இம்மாசு, **उपस्थितः** - ஏற்பட்டது! **पश्यत** - பாருங்கள்!

(க-து) 'ஸர்வத்தையும் தூயதாக்குகின்ற சூரியனிடம்தோன்றி யதாய் மனு இக்ஷ்வாகு முதலான ராஜர்ஷிகளினால் விருத்தி செய்யப் பட்டு, நன்னடக்கையால் எப்பொழுதுமே சுத்தமாயிருப்பது நமது குலம். மேகத்தினின்றும் வரும் காற்றினால் கண்ணாடி மாசு உறுவது போல் என்னால் இக்குலத்திற்கு எத்தகைய மாசு வந்தது! பாருங்கள்'.

पौरेषु सोऽहं बहुलीभवन्तमपां तरङ्गेष्विव तैलबिन्दुम् ।
सोढुं न तत्पूर्वमवर्णमीशे आलानिकं स्थाणुमिव द्विपेन्द्रः ॥ ३८ ॥

**सोऽहं** - இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த நான், **अपां तरङ्गेषु** - ஜலத்தின் அலைகளில் (பரவுகின்ற), **तैलबिन्दुमिव** - எண்ணெய்த்துளியைப்போல், **पौरेषु** - பட்டணத்து ஜனங் களிடத்தில், **बहुलीभवन्तं** - பரவுகின்றதும், **तत्पूर्वं** - அதுவே முதலாவதுமான, **अवर्णम्**-நிந்தையை, **द्विपेन्द्रः** சிறந்தயானை, **आलानिकं** - கட்டுவதற்கான, **स्थाणुमिव** - தூணை (ஸஹிக் காதது) போல,- **सोढुम्** - ஸஹிப்பதற்கு, **न ईशे** - சக்தியற்ற வனாக இருக்கிறேன்.

(க-து) 'எண்ணெய்த் துளி தண்ணீரில் பரவுவது போல் இவ் வபகீர்த்தி, ஜனங்களிடையில் வெகு வேகமாகப் பரவுகின்றது. இதுவே என்னைப் பற்றிய முதல் அபவாத மாகும். காட்டிலே சுதந் திரமாகத் திரிந்து கொண்டிருந்த ஒருயானை, தன்னைக் கட்டுப் படுத்து கின்ற தூணை ஸஹிக்காதது போல, நானும் இவ்வபவாதத்தைப் பொறுக்க மாட்டேன்.'

தூணை யானை முறிக்க விரும்புவது போல் நானும் இவ்வபவாதத்தைப் போக்க விரும்புகின்றேன்.

'तैलबिन्दुम् इव - 'उपमया दूरप्रसरत्वादिर्ध्वन्यते' अरुण गिरिः ।

तस्यापनोदाय फलप्रवृत्तावुपस्थितायामपि निर्व्यपेक्षः ।
त्यक्ष्यामि वैदेहसुतां पुरस्तात् समुद्रनेमिं पितुराज्ञयेव ॥ ३९ ॥

**तस्य** - அந்த நிந்தையை, **अपनोदाय** - போக்குவதற்காக, **फलप्रवृत्तौ** புத்திரன் பிறப்பது, **उपस्थितायां (सत्यां)अपि**- ஸமீபத்தில் இருக்கும்பொழுதும், **निर्व्यपेक्षः (सन्)** - ஆசையற்றவனாக (இருந்துகொண்டு), **पुरस्तात्** - முன்பு, **पितुः** - பிதாவின், **आज्ञया**-உத்தரவினாலே, **समुद्रनेमिं इव** - கடல் சூழ்ந்த. பூமியை (த்யாகம் செய்தது) போல, **वैदेहसुतां** - ஸீதையை, **त्यक्ष्यामि** - விட்டுவிடப்போகிறேன்.

(க-து) 'ஆதலால் அந்நிந்தையைப் போக்குதற்காக, எனக்குப் புத்திரன் பிறப்பு ஸமீபத்தில் இருக்கும்பொழுதும் அதை நினையாது, தசரதரது ஆணையால் முன்பு பூமியைத் தியாகம் செய்ததுபோல் - இப்பொழுது ஸீதையை விட்டுவிடப் போகின்றேன்.

**समुद्रनेमिं इव** - இவ்வுபமானத்தினால், ராமர், அரும்பெரும் பொருளைத் தியாகம் செய்து பழக்கமுண்டு என்பதைக் காட்டுகின்றார்.

अवैमि चैनामनघेति किंतु लोकापवादो बलवान् मतो मे ।
छाया हि भूमेः शशिनो मलत्वेनारोपिता शुद्धिमतः प्रजाभिः ॥ ४० ॥

**एनां** - இந்த ஸீதையை, **अनघा इति च** - தோஷமற்றவள் என்றும், **अवैमि** - அறிகின்றேன், **किन्तु** - ஆனால் **लोकापवादः** - ஜன நிந்தையானது, **बलवान्** - பலமானதாக, **मे** - என்னால், **मतः** - எண்ணப்படுகின்றது ; **हि** - ஏனெனில், **प्रजाभिः** - ஜனங்களினாலே, **भूमेः**-பூமியின், **छाया** - ப்ரதிபிம்பமானது, **शुद्धिमतः** - பரிசுத்தனான, **शशिनः** - சந்திரனுடைய, **मलत्वेन** - களங்கமாக, **आरोपिता**-சொல்லப்பட்டு இருக்கிறது.

(க-து) 'ஸீதை பரிசுத்தமானவள் என்று நான் அறிந்தும் ஜன நிந்தையைப் பெரிதென மதிக்கின்றேன்.

'ஸீதை பரிசுத்தமானவள் என்பதை நான் நன்கு அறிகின்றேன். ஜனங்களுக்கு இது தெரியாதே! ஆனால் உலகம் கூறுவதை நான்

புறக்கணிக்க முடியாது. ஜனங்கள் விஷய மறியாது கூறுவாரோ என்றால் கூறுவர்; பலரும் கூறுவர். சந்திரனுக்கு உண்மையிலே களங்கம் ஒன்றுமில்லை. பூமியின் பிரதிபிம்பமே சந்திர மண்டலத்தில் கறுத்துத் தோன்றுகிறது. ஆயினும் ஜனங்கள் சந்திரனைக் களங்க முடையவனாகக் கூறவில்லையா? அதுபோல் ஸீதையின் தூய்மை அறியாது தூற்றுகின்றனர் ஜனங்கள்.

**'अवैमि चैनामनघेति'** – **'अन्तरात्मा च मे वेत्ति सीतां शुद्धां यशस्विनीम्'** – என்பது ராமாயணம்.

**'लोकापवादो बलवान् मतो मे'** ராமர் தாம் ஸீதையைத் தியாகம் செய்வதன் காரணத்தை ஸூத்ரம் போலுள்ள இவ் வடியினால் விளக்கினர். மற்றவர்களுக்கு வழி காட்டியா யிருக்க வேண்டியவராதலால், அவர் அபவாதத்திற்கு இடம் சிறிதும் தர விரும்பவில்லை.

**"अस्माकमपि दारेषु सहनीयं भविष्यति । यथा हि कुरुते राजा प्रजास्तमनुवर्तते"॥** [நம் மனைவிகள் விஷயத்திலும் நாம் இவ்வாறு பொறுத்துக் கொள்ளவேண்டியதுதான். 'அரசன் எவ்வாறு நடந்து கொள்ளுகிறானோ அவ்வாறுதான் மக்க ளும் நடப்பர்.'] என்ற ஜனங்களின் சொல்லைப் பத்ரனிடம் கேட்ட ராமருக்கு வேறு வகையில் நடக்க வழி ஏது?

रक्षोवधान्तो न च मे प्रयासो व्यर्थः स वैरप्रतिमोचनाय ।
अमर्षणः शोणितकाङ्क्षया किं पदा स्पृशन्तं दशति द्विजिह्वः ॥ ४१ ॥

(किं) **च** - மேலும், **रक्षोवधान्तः** - ராவணனுடைய வதத்தை முடிவாகக்கொண்ட, **मे** - என்னுடைய, **प्रयासः** - முயற்சி, **न व्यर्थः** - வீணாகவில்லை; **सः**- அம்முயற்சியானது, **वैर प्रतिमोचनाय** - விரோதத்தைத் தீர்த்துக்கொள்ளுவதற் காக(ச்செய்யப்பட்டது). **अमर्षणः**-கோபம் கொண்ட, **द्विजिह्वः**- பாம்பு, **पदा** - பாதத்தினாலே, **स्पृशन्तं**-மிதிக்கின்ற மனிதனை,

**शोणितकाङ्क्षया** - (அவனுடைய) ரத்தத்தில் விருப்பத்தினாலே, **दशति किम्** - கடிக்கின்றதா ?

(க-து) 'இவ்வளவு எளிதிலே ஸீதையைத் தியாகம் செய்ய நிச்சயிப்பதாயின் ராவணனைக் கொல்வதற்காக மேற் கொண்ட முயற்சியெல்லாம் வீணன்றோ எனின் அன்று: பகை முடிப்பதற்காக நான் ராவணனைக் கொன்றேன். பழி வாங்குதல் க்ஷத்ரிய தர்மமல்லவா? தன்னை மிதித்தவனைப் பாம்பு கடிக்கின்றதே! அவனது ரத்தத்தைக் குடிக்கவிருப்பத்தினாலல்லவே! அதுபோல் ஸீதையை அடைந்து இன்புற வேண்டு மென்பதற்காக அல்ல ராவணனைக் கொன்றது. பின் அவனைத் தண்டித்தற் பொருட்டே.

" गतोऽस्म्यन्तममर्षस्य धर्षणा संप्रमार्जिता ।
अवमानश्च शत्रुश्च युगपन्निहतौ मया ॥
संप्राप्तमवमानं यस्तेजसा न प्रमार्जति ।
कस्तस्य पौरुषेणार्थो महताप्यल्पचेतसः ॥
.... .... .... योऽयं रणपरिश्रमः

सुतीर्णः सुहृदां वीर्यान्न त्वदर्थं मया कृतः " என ராமர் ஸீதையிடம் கூறுவதையும் காண்க. [யுத்தகாண்டம் 115-3, 6, 15]

तदेष सर्गः करुणार्द्रचित्तैर्न मे भवद्भिः प्रतिषेधनीयः ।
यद्यर्थिता निर्हृतवाच्यशल्यान्प्राणान्मया धारयितुं चिरं वः ॥ ४२ ॥

**तत्** - ஆகையால், **निर्हृत-वाच्य-शल्यान्** - எடுக்கப்பட்ட அபகீர்த்தி என்னும் பாணத்தையுடைய, **प्राणान्** - உயிரை, **मया** - என்னால் (நான்), **चिरं** - வெகுகாலம், **धारयितुं** - தரிப்பதன் பொருட்டு, **वः** - உங்களுக்கு, **अर्थिता** - ஆசை, **यदि (अस्ति)** - இருக்குமாயின், **मे** - என்னுடைய, **एषः सर्गः** - இத் தீர்மானம், **करुणार्द्रचित्तैः** - தயையினால் மிருதுவான மனத்தையுடைய, **भवद्भिः** - உங்களாலே, **न प्रतिषेधनीयः** - தடுக்கப்படக்கூடாது.

(க-து) 'என் உயிரிலே அவமானம் என்ற பாணம் தைத்துக் கொண்டிருக்கிறது. அதை எடுத்தாலன்றி நான் வெகு காலம் உயிர் தரிக்க மாட்டேன். அத்தகைய சல்யமின்றி நான் உயிர்வாழ வேண்டு மென விரும்புவீர்களாயின் அப்பொழுது ஸீதையினிடம் கருணை கொண்டு நீங்கள் எனது தீர்மானத்தைத் தடுத்தல் கூடாது.'

इत्युक्तवन्तं जनकात्मजायां नितान्तरूक्षाभिनिवेशमीशम् ।
न कश्चन भ्रातृषु तेषु शक्तो निषेद्धुमासीदनुमोदितुं वा ॥ ४३ ॥

**इति** - இவ்வாறு, **उक्तवन्तं** - பேசியவரும், **जनकात्मजायां** ஸீதையின் விஷயத்தில், **नितान्त-रूक्षाभिनिवेशं** - மிகக் கொடிய பிடிவாதமுடையவருமான, **ईशं** - அரசரை, **तेषु भ्रातृषु** - அச் சகோதரர்களில், **कश्चन** - ஒருவனும், **निषेद्धुं** - தடுப்பதற்கோ, **अनुमोदितुं वा** - அனுமதிப்பதற்கோ, **शक्तः** - சக்தி உள்ளவனாக, **नासीत्** - இல்லை.

(க-து) ராமர் ஸீதையின் விஷயத்தில் உறுதியான தீர்மானத்துடன் இவ்வாறு கூறவும், அவரது ஸஹோதரர்களில் ஒருவரும் அவர் கூறியதை அனுமதிக்கவோ மறுக்கவோ துணியவில்லை.

स लक्ष्मणं लक्ष्मणपूर्वजन्मा विलोक्य लोकत्रयगीतकीर्तिः ।
सौम्येति चाभाष्य यथार्थभाषी स्थितं निदेशे पृथगादिदेश ॥ ४४ ॥

**लोकत्रय-गीत-कीर्तिः** - மூவுலகிலும் பாடப்பெற்ற கீர்த்தியையுடையவரும், **यथार्थभाषी** - உண்மையையே பேசுகின்றவரும், **लक्ष्मण-पूर्वजन्मा** - லக்ஷ்மணனுக்கு முன்பிறந்தவருமான, **सः** - அந்த ராமர், **निदेशे** - தம் உத்தரவில், **स्थितं** - இருந்த, **लक्ष्मणं** லக்ஷ்மணனை, **विलोक्य** - பார்த்தும், "**सौम्य**- ஸௌம்யனே", **इति** - என்று, **अभाष्य च** - கூப்பிட்டும், **पृथक्** - தனிமையில், **आदिदेश** - கட்டளையிட்டார்.

(க-து) ராமர் லக்ஷ்மணனைத் தனியாகக் கூப்பிட்டுக் கட்டளையிட்டார்.

पृथक् - ஸீதையைத் தியாகம் செய்யவேண்டிய முறை ரஹஸ்யமானதால் லக்ஷ்மணனைத்தனிமையிலே அழைத்துக் கூறினார்.

प्रजावती दोहदशंसिनी ते तपोवनेषु स्पृहयालुरेव।
स त्वं रथी तद्व्यपदेशनेयां प्रापय्य वाल्मीकिपदं त्यजैनाम्॥४५॥

**दोहद-शंसिनी** - (கர்ப்பிணிக்குரிய) ஆசையைத் தெரிவித்தவளான, **ते प्रजावती** - உன்னுடைய மதனி, **तपोवनेषु** - தபோவனங்களில், **स्पृहयालुः एव** - ஆசையுள்ளவளாகவே (இருக்கின்றாள்); **सः त्वं** - என்னால் உத்தரவிடப் பட்ட நீ, **रथी (सन्)** - ரதமுடையவனாக (இருந்து கொண்டு), **तद्व्यपदेशनेयां** - அந்த வியாஜத்தினாலே அழைத்துச் செல்லத் தகுந்த, **एनां** - இவளை, **वाल्मीकिपदं** - வால்மீகியின் இருப்பிடத்தை, **प्रापय्य** - அடைவித்தபின், **त्यज**-விட்டுவிடு.

(க-து) 'கர்ப்பிணியான ஸீதை, தபோவனம் செல்ல வேண்டுமெனத் தனது விருப்பத்தைத் தெரிவித்துள்ளாள். நீ அதை வியாஜமாகக் கொண்டு அவளை ரதத்தில் அழைத்துச் சென்று பரமகாருணிகரான வால்மீகி முனிவரின் ஆச்ரமத்தினருகில் விட்டுவிடு'.

**प्रजावती** - ஸஹோதரன் மனைவி; **तपोवनेषु** - இதன் பின் **गमनाय** - எனச் சேர்த்துப் பொருள் கூறுதல் நலம் என்பர் அருணகிரி. **तद्व्यपदेशनेयाम्** - 'அவளது விருப்பத்தை நிறைவேற்றுவதாகக் கூறி வனத்திற்கு அழைத்துச் செல்; சென்ற பிறகு உண்மையான காரணத்தைச் சொல்,' என்பது கருத்து. **वाल्मीकिपदम्** - 'பரமகாருணிகர் எனப் பிரசித்திபெற்ற அம்முனிவர்தாம், சரணமற்ற ஸீதைக்குத் தஞ்சமாக இருப்பார்' என்பது இதனால் குறிப்பிக்கப்படுகிறது.

स शुश्रुवान् मातरि भार्गवेण पितुर्नियोगात् प्रहृतं द्विषद्वत्।
प्रत्यग्रहीदग्रजशासनं तदाज्ञा गुरूणां ह्यविचारणीया॥४६॥

पितुः - பிதாவான ஜமதக்னியின், नियोगात् - உத்தரவினாலே, भार्गवेण - பரசுராமரால், द्विषद्वत् - சத்ருவினிடத்தில் (செய்வது) போல், मातरि - தாயினிடத்தில் (செய்யப்பட்ட) प्रहृतं - வதத்தை, शुश्रुवान् - கேட்டிருந்த, सः - லக்ஷ்மணன், तत् - அந்த, अग्रज-शासनं - தமையனின் உத்தரவை, प्रत्यग्रहीत् - அங்கீகரித்தான்; हि - ஏனெனில், गुरूणां - பெரியோர்களுடைய, आज्ञा - உத்தரவு, अविचारणीया - ஆராய்ந்து பார்க்கக் கூடாதது.

(க-து) பிதாவின் ஆணைக்குக் கீழ்ப்படிந்து தம் தாயையும் ஒரு பகைவனைக் கொல்வதுபோல் இரக்கமின்றிக் கொன்ற பரசுராமரின் சரிதையைக் கேட்டிருந்த லக்ஷ்மணன், பெரியோரின் உத்தரவு எத்தகையதாயினும் செய்யப் படவேண்டியதே என நிச்சயித்துத் தமையனாது உத்தரவை நிறைவேற்றுவதாக வாக்குறுதியளித்தான்.

பரசுராமர் செய்த காரியத்தோடு ஒப்பிடும் பொழுது லக்ஷ்மணன் செய்யப்போகின்ற காரியம் அவ்வளவு கடூரமானதன்று. பூர்வபுருஷர்களின் உதாஹரணத்தைப் பின்பற்றி அவன் ஏற்றான் என்பது சுலோகத்தின் முதலடியால் காட்டப்பட்டது. தமையனாது ஆணைக்குக் கீழ்ப்படிந்ததற்கு மற்றொரு காரணத்தை आज्ञा गुरूणां ह्यविचारणीया - என்பது காட்டியது. अकृत्यमपि कार्यं वै गुर्वाज्ञां नैव लङ्घयेत् - என்பர்.

गुरूणाम् - குரு என்றது ஆசிரியரை மாத்திரமன்று.
'उपाध्यायः पिता ज्येष्ठः भ्राता चैव महीपतिः ।
मातुलः श्वशुरश्चैव मातामहपितामहौ ॥
वर्णज्येष्ठः पितृव्यश्च सर्वे ते गुरवः स्मृताः ॥'
என்பதைக் காண்க: [கூர்மபுராணம் அத்யாயம் 12].

பரசுராமர், தாயின் தலை துணித்த வரலாற்றை, ஸர்க்கம் 11, 65-ஆம் சுலோக உரையில் காண்க.

अथानुकूलश्रवणप्रतीतामत्रस्नुभिर्युक्तधुरं तुरंगैः ।
रथं सुमन्त्रप्रतिपन्नरश्मिमारोप्य वैदेहसुतां प्रतस्थे ॥ ४७॥

**अथ** - *பிறகு (லக்ஷ்மணன்),* **अनुकूल-श्रवण-प्रतीतां** *இஷ்டமான விஷயத்தைக் கேட்டதனால் ஸந்தோஷமடைந்த,* **वैदेहसुतां**-*ஸீதையை,* **अत्रस्नुभिः**-*மருளாத,* **तुरङ्गैः**-*குதிரைகளுடன்,* **युक्तधुरं** - *இணைக்கப்பட்ட ஏர்க்காலையுடையதும்,* **सुमन्त्र-प्रतिपन्नरश्मि** - *ஸுமந்திரரால் பிடிக்கப்பட்ட கடிவாளங்களையுடையதுமான,* **रथं** - *ரதத்தில்,* **आरोप्य** - *ஏற்றிக்கொண்டு,* **प्रतस्थे** - *புறப்பட்டான்.*

*(க-து) லக்ஷ்மணன், மருளாத குதிரைகள் பூட்டிய ரதத்தில் ஸீதையை ஏற்றிக்கொண்டு புறப்பட்டான். [முன்பு காட்டிற்குத் தேரோட்டிய ஸுமந்திரரே இப்பொழுதும் ஸாரதியாயிருந்தார்.]*

**अत्रस्नुभिः** - *இதனால், கர்ப்பிணி செல்லும் ரதத்தை இழுத்துச்செல்லத் தகுதியுள்ளன அக்குதிரைகள் என்பது காட்டப்பெற்றது.*

सा नीयमाना रुचिरान् प्रदेशान्प्रियंकरो मे प्रिय इत्यनन्दत् ।
नाबुद्ध कल्पद्रुमतां विहाय जातं तमात्मन्यसिपत्रवृक्षम् ॥ ४८ ॥

**रुचिरान्** - *அழகிய,* **प्रदेशान्** - *ப்ரதேசங்களைக் குறித்து* **नीयमाना** - *அழைத்துச் செல்லப்படுகின்ற,* **सा** - *அவள்,* "**मे** - *என்னுடைய,* **प्रियः** - *கணவர்,* **प्रियङ्करः** - *(எனக்குப்) பிரியத்தைச் செய்கின்றார்"* **इति** - *என்று* **अनन्दत्** - *ஸந்தோஷித்தாள்.* **आत्मनि** - *தன் விஷயத்தில்,* **कल्पद्रुमतां** - *கல்பக விருக்ஷமாக இருக்கும் தன்மையை,* **विहाय** - *விட்டு,* **असि-पत्रवृक्षं** - *வாளிலைமரமாய்,* **जातं** - *ஆகிய (மாறிய),* **तं** - *அக் கணவரை,* **न अबुद्ध** - *அறியவில்லை.*

*(க-து) தான் விரும்பியபடி கங்கையின் கரையிலுள்ள அழகான தபோவனங்களுக்கு அழைத்துச் செல்லப்படுவதாக நினைத்த ஸீதை,*

'ராமர் என் விருப்பத்தை நிறைவேற்றுவதிலே எத்தகைய அன்பு கொண்டிருக்கிறார்!' என எண்ணி மிக மகிழ்ந்தாள். உண்மையில் இதுவரை கல்பக விருக்ஷம்போல் விரும்பியதை எல்லாம் தந்து கொண்டிருந்த ராமர் ஒரு க்ஷணத்திலே, (அருகிலுள்ளவர்களின் உடலை அறுத்துப் புண்படுத்தும்) வாளிலை மரமாக மாறிப்போனதை உணரவில்லை. எனவே தனக்கு வரப்போகும் தீங்கை அறியாத அவள் மிக்க குதூஹலத்துடன் சென்றாள்.

கல்பக விருக்ஷம், அம்ருதத்திற்காகப் பாற்கடலைக் கடைந்த பொழுது தோன்றியது; ஸ்வர்க்கத்திலே இருப்பது; விரும்பியதை யெல்லாம் தருவது. இதற்கு நேர் மறுதலையாக, நரகத்தில் இருப்பது வாளிலை மரம்; அதன் இலை வாள்போல் இருக்கும். இம்மரங்களே நிறைந்துள்ள காடு ஒன்று, ஏழாவது நரகமாகக் கூறப்படுகின்றது; வேதமார்க்கத்தைத் துறந்து சென்றவர்களை இவ்வனத்திலே தள்ளி யமகிங்கரர்கள் சாட்டையினால் அடித்துத் துரத்துவர். இங்குமங்கும் ஓடுகின்ற ஜீவர்கள் தமது உடல் வாளிலைகளால் அறுக்கப்பட்டு மூர்ச்சித்து விழுவர் என ஸ்ரீ பாகவதம் கூறுகின்றது.

ராமரது முன்பிருந்த நிலையையும் தற்போது ஸீதை விஷயத்தில் மாறியுள்ள அவர் தன்மையையும் தெளிவாகக் காட்டுகின்றது, नानुज.... என்ற பகுதி.

जुगूह तस्याः पथि लक्ष्मणो यत् सव्येतरेण स्फुरता तदक्ष्णा ।
आख्यातमस्यै गुरु भावि दुःखमत्यन्तलुप्तप्रियदर्शनेन ॥ ४९ ॥

**पथि** - மார்க்கத்தில், **लक्ष्मणः** - லக்ஷ்மணன், **यत्** - **दुःखं** - எந்தத் துக்கத்தை, **तस्याः** - அவளிடமிருந்து, **जुगूह** - மறைத்தானோ, **गुरु** - மிகப்பெரியதும், **भावि** - வரப்போகின்றதுமான, **तत्** - அந்தத் துக்கமானது, **अत्यन्त-लुप्त-प्रिय-दर्शनेन** - கணவரின் தரிசனத்தை முற்றிலும் இழந்ததும்,

स्फुरता - துடிக்கின்றதுமான, सव्येतरेण - வலது, अक्ष्णा - கண்ணால், अस्यै - அவள் பொருட்டு, आख्यातम् - தெரிவிக்கப்பட்டது.

(க-து) அவளுக்கு நேரப்போகின்ற துக்கத்தை லக்ஷ்மணன், போகுங்கால் கூறவில்லை. ஆயினும் ஏதோ ஒரு தீங்கு நேரப்போகின்றதென்பதை, அவளது வலது கண் துடித்துக் காட்டியது.

सव्येतरेण अक्ष्णा - பெண்களுக்கு வலது அங்கங்களின் துடிப்பை அபசகுனமாகக் கொள்வர்: 'अंगविस्फुरण पुंसां दक्षिणं सर्वकामदम्। तदेव शस्यते सद्भिर्नारीणामप्रदक्षिणम् ॥' என்பதைக் காண்க.

अत्यन्तलुप्तप्रियदर्शनेन - ராமரைக் காணுதல் என்ற பெரும் பயனை இழந்தது கண்ணே யாதலால், அதைஅறிந்து போலும் கண், துடித்து, வரப்போகின்ற தீங்கைக் காட்டியது.

"अशुभानि बहून्येव पश्यामि रघुनन्दन। नयनं मे स्फुरत्यद्य गात्रोत्कंपश्च जायते। हृदयं चैव सौमित्रे अस्वस्थमिव लक्षये। अपि स्वस्ति भवेत् तस्य भ्रातुस्ते भ्रातृवत्सल॥ इत्यञ्जलिकृता सीता देवता अभ्ययाचत॥ [உத்தரகாண்டம் 46,-14, 15, 16, 18.]

सा दुर्निमित्तोपगताद्विषादात्सद्यः परिम्लानमुखारविन्दा।
राज्ञः शिवं सावरजस्य भूयादित्याशशंसे करणैरबाह्यैः॥ ५० ॥

सा - அவள், दुर्निमित्तोपगतात् - துர்நிமித்தத்தினால் ஏற்பட்ட, विषादात् - துக்கத்தினாலே, सद्यः - உடனே, परिम्लान-मुखारविन्दा-தாமரைப்புஷ்பம் போன்ற (தன்) முகம் வாடியவளாக, "सावरजस्य - தம்பிகளுடன் கூடிய, राज्ञः - அரசருக்கு, शिवं - க்ஷேமம், भूयात् - உண்டாகட்டும்" इति - என்று, अबाह्यैः करणैः - மனத்தினால், आशशंसे -(பல முறையும்) விரும்பினாள்.

(க-து) துர்நிமித்தத்தைக் கண்ட ஸீதை, அரசர் தம் தம்பிக ளுடன் க்ஷேமமாக இருக்க வேண்டுமென்று வேண்டினாள்.

அபசகுனத்தைக் கண்ட ஸீதை, துக்கத்தினால் முகம் வாடியவளாய், தன் கணவரும் அவரது தம்பிகளும் க்ஷேம மாக இருக்கவேண்டும் எனத் தெய்வங்களைவேண்டிக் கொண்டாள்.

தனனலம் கருதாது பதியின் நலம் கருதியது கவனிக் தற்குரியது. தன் ஒருத்திக்கு மாத்திரமேயன்றி உலகிற்கே ராமர் நன்மை செய்பவராதலால் भर्तुः शिवं - என் றது राज्ञः शिवम् - என்றாள் ஸீதை. अन्तःकरणैः - மனம் ஒன்றாயினும் இங்குள்ள பன்மை ஸீதை பல முறையும் வேண்டினாள் எனக் காட்டியது.

गुरोर्नियोगाद्वनितां वनान्ते साध्वीं सुमित्रातनयो विहास्यन् ।
अवार्यतेवोत्थितवीचिहस्तैर्जह्नोर्दुहित्रा स्थितया पुरस्तात् ॥ ५१ ॥

गुरोः - தமையனுருடைய, नियोगात् - உத்தரவினாலே, साध्वीं - பதிவ்ரதையான, वनितां - ஸ்திரீயை, वनान्ते - வனப்பிரதேசத்தில், विहास्यन् - விடப்போகின்றவனை, सुमित्रा-तनयः - லக்ஷ்மணன், पुरस्तात् - எதிரில், स्थितया - இருந்த, जह्नोः दुहित्रा - கங்காநதியினால், उत्थित-वीचिहस्तैः - எழுந்த அலைகளாகிய கைகளால், अवार्यत इव - தடுக்கப் பட்டவன் போலும் காணப்பட்டான்.

(க-து) லக்ஷ்மணன் கங்கைக் கரையை அடைந்தான். அதன் மறுகரையிலுள்ள வனத்திலே ஸீதையை விடப்போகின்ற அவனை, கங்காநதி, தனது எழுகின்ற அலைகளாகிய கைகளாலே, அத்தகைய கொடுஞ் செயலைச் செய்ய வேண்டாம் எனத் தடுப்பது போலிருந்தது.

கரையின் மீது மோதுகின்ற அலைகளை நதியின் கைகளாக உருவகம் செய்து, அவைகள் அவனைத் தடுப்பதாகக் கவி

உத்ப்ரேக்ஷித்தார். (கங்கை என்ற) ஒரு பெண்ணிற்கு மற்றொரு பெண்ணிடம் இரக்க முண்டாவது இயற்கையே. **साध्वीम्** - என்ற அடைமொழி ஸீதை விட்டத்தகாதவள் என்பதைக் காட்டியது; **सुमित्रातनयः** - லக்ஷ்மணனது தாயின் பெயரைக் கூறியது, பெண்ணிடம் இரக்கம்கொள்ள வேண்டியதன் அவச்யத்தைக் காட்டுதற்காக.

रथात् स यन्त्रा निगृहीतवाहात्तां भ्रातृजायां पुलिनेऽवतार्य ।
गङ्गां निषादाहृतनौविशेषस्ततार संधामिव सत्यसंधः ॥ ९२ ॥

**सत्यसन्धः** - உண்மையான ப்ரதிஜ்ஞையை யுடைய **सः** - அந்த லக்ஷ்மணன், **यन्त्रा** - ஸாரதியினாலே, **निगृहीतवाहात्** - நிறுத்தப்பட்ட குதிரைகளையுடைய, **रथात्** - ரதத்திலிருந்து, **तां** - அந்த, **भ्रातृजायां** - ஸஹோதரன் மனைவியை, **पुलिने** - மணல் நிறைந்த கரையில், **अवतार्य** - இறக்கி, **निषादाहृत नौविशेषः** - செம்படவனால் கொண்டு வரப்பட்ட அழகிய படகை உடையவனாக, **गङ्गां** - கங்கா நதியை, **सन्धां इव** - ப்ரதிஜ்ஞையை (கடப்பது) போல, **ततार** - கடந்தான்.

(க-து) லக்ஷ்மணன் வாக்குறுதி தவறாதவன். எனவே, கடமையை நிறைவேற்ற வேண்டிய தருணத்தில் சிலர் மனம் தளர்வது போல் இல்லாதவனாக, ஸுமந்திரர் குதிரைகளை நன்கு அடக்கி நிறுத்தியபின் ஸீதையை ரதத்தினின்றும் மணற்பாங்கான கங்கையின் கரையில் இறக்கினான். பிறகு செம்படவர்கள், ஸீதை செல்வதற்குரிய சிறந்த படகு ஒன்றைக் கொண்டு வரவும், அதன் மூலம் லக்ஷ்மணன் ஸீதையுடன் கங்கையைக் கடந்தான். தமையனுக்கு அளித்திருந்த வாக்குறுதியும் இதனால் நிறை வேற்றப் பட்டதாயிற்று.

**निगृहीतवाहात् रथात्** - ஸீதையை இறக்குவதற்கு முன் லக்ஷ்மணன் எடுத்துக்கொண்ட கவனம் இதனால் புலனாகின்றது. **पुलिने** - ரதத்தில் வந்த சிரமத்தை உட்கார்ந்துதீர்த்

துக்கொள்வதற்காக மணலுள்ள இடத்தில் ஸீதையை இறக்கினான். नौविशेषः - சாதாரணமான படகு அன்று; அரசர் செல்லத் தகுந்த சிறந்த படகு என்பது பொருள்.

अथ व्यवस्थापितवाक् कथंचित् सौमित्रिरन्तर्गतबाष्पकण्ठः ।
औत्पातिकं मेघ इवाश्मवर्षं महीपतेः शासनमुज्जगार ॥ ५३ ॥

अथ - பிறகு, कथञ्चित् - சிரமத்துடன், व्यवस्थापितवाक् - தயாரிக்கப்பட்ட வார்த்தையையுடையவனும், अन्तर्गतबाष्पकण्ठः - நெஞ்சில் அடங்கிய துக்க முடையவனுமான, सौमित्रिः - லக்ஷ்மணன், महीपतेः - அரசரின், शासनं - ஆணையை,-मेघः - மேகம், औत्पातिकं - கெடுதிக்கறிகுறியான अश्मवर्षं इव - கல்மாரியை (வர்ஷிப்பது) போல், उज्जगार - உரக்கச் சொன்னான்.

க-து) மறுகரை யடைந்த லக்ஷ்மணன், ராமரது ஆணையைக் கூற முயன்றானாயினும் துக்கம் அவனைப் பேச விடாது தடுத்தது. பின் ஒருவாறு பேச முயன்று, தீம்பின் அறிகுறியாக மேகம் கல்மாரி பெய்வது போல், ராமரது ஆணையை ஸீதைக்குத் தெரிவித்தான்.

उज्जगार-அடக்கியிருந்த துக்கம் வெளிவரும் பொழுது உரத்த குரலில் புலப்படுவது இயற்கை. இனிய தோற்றமுள்ள மேகம் லக்ஷ்மணனுக்கும், கற்கள் அவன் கூறிய ராமரது ஆணைக்கும் உவமையாக வந்தன.

கங்கையின் கரையடைந்த பின் லக்ஷ்மணன் இருந்த நிலையைக் கண்டு ஸீதை கூறுகின்றதாயுள்ள ராமாயண சுலோகங்கள் மிகவும் கவனிக்கத்தக்குரியன.

सीता :— किमिदं रुद्यते त्वया । जाह्नवीतीरमासाद्य चिराभिलषितं मम । हर्षकाले किमर्थं मां विषादयसि लक्ष्मण ॥ नित्यं त्वं रामपार्श्वेषु वर्तसे पुरुषर्षभ । कच्चिद्विनाकृतस्तेन द्विरात्रं शोकमागतः ॥ ममापि दयितो रामः जीवितादपि लक्ष्मण ।

**न चाहमेवं शोचामि मैवं त्वं बालिशो भव ॥ — तारयस्व च मां गंगां दर्शयस्व च तापसान् । ततो मुनिभ्यो वासांसि दास्याम्याभरणानि च ॥ ........ तत्र चैकां निशामुष्य यास्यामस्तां पुरीं पुनः । तस्यास्तद्वचनं श्रुत्वा प्रमृज्य नयने शुभे । नाविकानाह्वयामास ॥** [உத்தர காண்டம். 46-26-32.]

ततोऽभिषङ्गानिलविप्रविद्धा प्रभ्रश्यमानाभरणप्रसूना ।
स्वमूर्तिलाभप्रकृतिं धरित्रीं लतेव सीता सहसा जगाम ॥ ५४ ॥

**ततः** - பிறகு, **अभिषङ्गानिलविप्रविद्धा** - அவமான மென்கிற காற்றினாலே அடிக்கப்பட்டவளும், **प्रभ्रश्यमान आभरण-प्रसूना** - நழுவுகின்ற ஆபரணங்களாகிற புஷ்பங்களையுடையவளுமான, **सीता** - ஸீதை, **लता इव** - கொடிபோல், **स्वमूर्तिलाभ-प्रकृतिं** தன் சரீரம் கிடைத்ததற்குக் காரணமான, **धरित्रीं** - பூமியை, **सहसा** - திடீரென, **जगाम** - அடைந்தாள்.

(க-து) பெருங்காற்றினாலே தாக்கப்பட்ட கொடி, புஷ்பங்கள் உதிரத் தரையிலே வீழ்வது போல் தன்னைப்பற்றிய அவதூறான செய்தியைக் கேட்ட ஸீதை, தன் தாயான தரைமீது மூர்ச்சித்து வீழ்ந்தாள். அவளது ஆபரணங்கள் அவள் உடலின்றும் நழுவிப் புஷ்பங்கள் போல் தரையில் வீழ்ந்து சிதறிக்கிடந்தன.

இச்சுலோகத்தில் கவி, ஸீதையைக் கொடியுடன் உவமித்தார். **प्रभ्रश्यमान आभरण प्रसूना** - அவதூற்றைக் கேட்டவுடனுண்டான சோகத்தினால் அவள் உடல் மெலிவுறக் கைவளைகள் கழன்று விழுந்தன போலும்! சோகத்தினால் உடல் திடீரெனமெலிவுறுவதாகக் கூறுதல் கவி மரபு. **प्रकृतिः**- உத்பத்தியின் காரணம்: கொடிக்கும் ஸீதைக்கும் உத்பத்தி காரணம் பூமியே.

**धरित्रीम् - जगाम** - பதிவ்ரதையான ஸ்திரீகளுக்குக் கணவனிடமிருந்து கஷ்டம் வந்தபொழுது, தாயே

தஞ்சமாகையால், ஸீதையும் தன் தாயான பூமியை யடைந்தாள் என்பர்.

इक्ष्वाकुवंशप्रभवः कथं त्वां त्यजेदकस्मात् पतिरार्यवृत्तः ।
इति क्षितिः संशयितेव तस्यै ददौ प्रवेशं जननी न तावत् ॥ ५५ ॥

"इक्ष्वाकुवंश-प्रभवः - இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவரும், आर्यवृत्तः - நன்னடத்தை உடையவருமான, पतिः- கணவர், त्वां - உன்னை, अकस्मात् - காரணமின்றி, कथं त्यजेत् - எவ்வாறு விடுவார்?", इति - என்று, संशयिता इव - ஸந்தேஹமுடையவள்போல், तावत् - அப்போது, जननी क्षितिः - தாயான பூமிதேவி, तस्यै - அந்த ஸீதையின் பொருட்டு, प्रवेशं-ப்ரவேசத்தை, न ददौ-கொடுக்கவில்லை.

(க-து) 'இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்து நன்னடக்கையுள்ள உன் கணவர் நிஷ்காரணமாக உன்னை எவ்வாறு துறப்பார்? உன்னைத் தியாகம் செய்து விட்டார் என்பது நம்பமுடியாதது' என ராமர் தியாகம் செய்ததை நம்பாதவள் போலும் பூமி தேவி ஸீதையைத் தன்னிடம் அழைத்துக் கொள்ளவில்லை.

इक्ष्वाकुवंशप्रभवः - என்பதனால் ராமரது குலப்பெருமை கூறப்பட்டது. நற்குடியில் பிறந்தும் நடத்தைகெட இடமுண்டு. ஆகையால் அத்தகைய குற்றம் ராமரிடம் இல்லை என்பதைக் காட்ட, आर्यवृत्तः - என்ற விசேஷணம் வந்தது. संशयिता इव - 'ராமர் உன்னைத் தியாகம் செய்திருக்க முடியாதே. அதற்குத் தக்க காரணம் ஒன்றுமில்லையே' என அவரது செய்கையிலே ஸந்தேகம் கொண்டதாக" என்று பொருள் கொள்ளவேண்டும். சிலர், "நன்னடத்தை யுள்ள ராமர் உன்னை நிஷ்காரணமாக விடுவாரோ! ஆதலால் உன்னிடம் ஏதோ குற்றமிருக்க வேண்டும்" எனப் பூமிதேவி ஸீதையினிடம் ஐயம் கொண்டதாக உரைப்பர்.

**तावत्** - இப்பொழுது; தற்சமயம்: பின்னொரு சமயம் ஸீதை, 'தான் பதிவ்ரதையாக இருப்பின் பூமிதேவி தன்னை ஏற்றுக்கொள்ள வேண்டும்' எனக் கேட்டவுடன் பூமி அவளை எடுத்துச் சென்றதை நினைவிற் கொள்க. [ஸர்க்கம் 15. சுலோகம் 81-84-காண்க]

सा लुप्तसंज्ञा न विवेद दुःखं प्रत्यागतासुः समतप्यतान्तः ।
तस्याः सुमित्रात्मजयत्नलब्धो मोहादभूत्कष्टतरः प्रबोधः ॥ ५६ ॥

**लुप्तसंज्ञा** - ப்ரஜ்ஞையை இழந்த, **सा** - அந்த ஸீதை, **दुःखम्** - துக்கத்தை, **न विवेद** - அறியவில்லை. **प्रत्यागतासुः** - ப்ரஜ்ஞை அடைந்தவளாக, **अन्तः** - மனத்தில், **समतप्यत** - மிகத் தபித்தாள். **तस्याः** - அவளுக்கு, **सुमित्रात्मज यत्नलब्धः** - லக்ஷ்மணனுடைய முயற்சியினால் கிடைத்த, **प्रबोधः** - தன் நினைவு, **मोहात्** - மயக்கத்தைக்காட்டிலும், **कष्टतरः** - மிகவும் கஷ்டம் உள்ளதாக, **अभूत्** - ஆயிற்று.

(க-து) மூர்ச்சை யடைந்திருந்த பொழுது, ஸீதை துக்கத்தை உணரவில்லை. லக்ஷ்மணன் அவளுக்குக் குளிர்ந்த உபசாரங்களைச் செய்து மூர்ச்சை தெளியச் செய்தான். நினைவு பெற்ற அவள் தனக்கு நேர்ந்த கஷ்டத்தை நினைத்து மிகமிகத் தவித்தாள். பிரஜ்ஞை இழந்திருந்த நிலையைக் காட்டிலும் பிரஜ்ஞையுடனிருந்த நிலை, துக்கத்தை முற்றிலும் உணரக் காரணமாக இருந்ததால் மிகவும் கஷ்டமானதாக இருந்தது. லக்ஷ்மணனது உதவி அவளுக்குப் பிரதி கூலமான பயனையே விளைவித்தது.

न चावदद्भर्तुरवर्णमार्या निराकरिष्णोर्वृजिनादृतेऽपि ।
आत्मानमेव स्थिरदुःखभाजं पुनः पुनर्दुष्कृतिनं निनिन्द ॥ ५७ ॥

**आर्या** - பதிவ்ரதையான அவள், **वृजिनादृतेऽपि** - குற்றமின்றியும், **निराकरिष्णोः** - தன்னை நிராகரித்தலைப் பழக்கமாக உடைய, **भर्तुः** - கணவருக்கு, **अवर्णं** - வசையை, **न**

चावदत् - சொல்லவேயில்லை. (किन्तु) - ஆனால், स्थिरदुःखभाजं - ஸ்திரமாகத் துக்கத்தை அடைகின்ற, दुष्कृतिनं - பாபமுடைய, आत्मानमेव - தன்னையே, पुनःपुनः - அடிக்கடி, निनिन्द - நிந்தித்துக்கொண்டாள்.

(க-து) பதிவ்ரதையான ஸீதை குற்றமின்றியே தன்னைத் தியாகம் செய்த ராமர் விஷயத்தில் வசை கூறவில்லை. தான் பாவம் செய்தவள் என்றும், நிரந்தரமான துக்கத்தை அனுபவிக்கவே பிறந்தவள் என்றும் கூறித் தன்னையே நொந்து கொண்டாள்.

கணவனை நிந்திக்காததன் காரணத்தை आर्या - என்ற விசேஷணம் காட்டியது. "स्थिरदुःखभाजम्—मामिकेयं तनुर्नूनं सृष्टा दुःखाय लक्ष्मण"। "दुष्कृतिनम्—" "किं नु पापं कृतं पूर्वम् को वा दारैर्वियोजितः" என்பன ராமாயணம். निराकरिष्णोः - நிராகரித்தலைத் தம் இயற்கையாகக் கொண்டவர் என்பது பதப்பொருள். இப்பொழுது த்யாகம் செய்ய முற்பட்டது இரண்டாவது முறையாகையால், அவரது இயற்கையைக் காட்ட, निराकर्तुः - என்னாது निराकरिष्णोः - என்ற சொல் வந்தது.

தந்தையின் ஆணையினால் காட்டிற்குப் புறப்பட்ட பொழுது ராமர், ஸீதையை நகரத்திலே விட முயன்றார். இதை ஒரு நொடியிலே அறிந்த ஸீதை, किं त्वामन्यत वैदेहः पिता मे मिथिलाधिपः। राम जामातरं प्राप्य स्त्रियं पुरुषविग्रहम्॥... किं हि कृत्वा विषण्णस्त्वं कुतो वा भयमस्ति ते। यत्परित्यक्तकामस्त्वं मामनन्यपरायणाम्। என்று கூறியதைக் காண்க

ராக்ஷஸர்களைக் கொன்று மஹரிஷிகளைக் காப்பதாக ராமர் வாக்குறுதி யளித்த பொழுது, ஸீதை அத்தகைய வாக்குறுதி தருதல் கூடாதெனக் கூறிய காலத்து ராமர், अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते सलक्ष्मणाम्' என ஸீதா தியாகத்தைக் குறிப்பிட்டதும் கவனிக்கத் தக்கது.

आश्वास्य रामावरजः सतीं तामाख्यातवाल्मीकिनिकेतमार्गः।
निघ्नस्य मे भर्तृनिदेशरौक्ष्यं देवि क्षमस्वेति बभूव नम्रः ॥ ९८ ॥

**रामावरजः** - லக்ஷ்மணன், **सतीं** - பதிவ்ரதையான, **तां** - அவளை, **आश्वास्य** தேற்றி, **आख्यात वाल्मीकि निकेतमार्गः** - வால்மீகியின் ஆச்ரமத்தினுடைய வழியை அறிவித்தவனாக, "**देवि** - தேவிகளே!, **निघ्नस्य** - பிறர் வசத்திலிருக்கின்ற, **मे** - என்னுடைய, **भर्तृ-निदेश रौक्ष्यं**-அரசரின் உத்தரவினால் உண்டான கொடூரத் தன்மையை, **क्षमस्व** - பொறுத்துக் கொள்ளுங்கள்," **इति** - என்று (சொல்லிவிட்டு), **नम्रः**- வணங்கியவனாக, **बभूव** - இருந்தான்.

(க-து) லக்ஷ்மணன், ஸீதைக்கு ஆறுதல் கூறி, வால்மீகி முனிவரின் ஆசிரமத்திற்குச் செல்லவேண்டிய வழியைக் காட்டியபின், "தேவிகளே! நான் தமையனாரது அடிமை. அவர் சொற்படி நடப்பவன். தங்களுக்குத் துக்கம் உண்டாகும் வகையில் நான் நடந்து கொண்டதற்குக் காரணம் அவரது ஆணையே. ஆதலால் இவ்வடிமையின் கொடிய செயலைத் தாங்கள் மன்னிக்கவேண்டு" மெனக் கூறி ஸீதையை வணங்கினான்.

सीता समुत्थाप्य जगाद वाक्यं प्रीतास्मि ते सौम्य चिराय जीव।
बिडौजसा विष्णुरिवाग्रजेन भ्रात्रा यदित्थं परवानसि त्वम् ॥ ९९ ॥

**सीता** - ஸீதை, **तं** - அந்த லக்ஷ்மணனை, **उत्थाप्य** - எழுந்திருக்கச்செய்து, **वाक्यं** - (இவ்) வார்த்தையை, **जगाद**- சொன்னாள். "**सौम्य** - ஸௌம்ய!, **ते** - உம்மால், **प्रीताऽस्मि** - ஸந்தோஷமுடையவளாக இருக்கின்றேன்; **चिराय** - வெகுகாலம், **जीव** - வாழ்வீராக. **यत्** - ஏனெனில், **बिडौजसा** - இந்திரனுக்கு, **विष्णुः इव**-உபேந்திரன் (அடிமையாக இருந்தது) போல், **अग्रजेन भ्राता** - மூத்த ஸஹோதரருக்கு, **त्वं** - நீர், **इत्थम्** - இவ்வாறு, **परवान्** - பராதீனராக, **असि** - இருக்கின்றீர்.

(க-து) தன்னருகில் தரையிலே வீழ்ந்து வணங்கிய லக்ஷ்மணனை ஸீதை, எழுந்திருக்கும்படி சொல்லி மேலும் கூறினாள்.

'லக்ஷ்மண, உம்மிடம் எனக்குச் சிறிதும் வருத்தமில்லை; பின் அதற்கு மாறாக, உமது நடத்தை கண்டு நான் மிக மகிழ்கின்றேன். ஏனெனில் நீர், உமது தமையனுக்குப் பரம விதேயராக இருக்கின்றீர். இத்தகைய தம்பி கிடைப்பது மிக அருமை. நீர் நீடூழி வாழவேண்டும்' என்றாள்.

**जगाद वाक्यम्** - வெற்றுச் சொல்லைக் கூறாது பொருள் செறிந்த சொல் கூறினாள் என்பது கருத்து.

**बिडौजसा विष्णुरिव** - கச்யபருக்கும் அதிதிக்கும் புத்திரர்களாகப் பிறந்தவர்கள் இந்திரனும், உபேந்திரனாகத் தோன்றிய விஷ்ணுவும். தேவதேவரான விஷ்ணு, இந்திரனுக்குத் தம்பியாகப் பிறந்த காலத்தில் தமது பரத்வத்தைப் பாராட்டாது மிக விநயத்துடன் தம் முன் பிறந்தானை இந்திரனுக்கு அடிமை செய்தார். வாமனராக இருந்து பலியை அடக்கித் தேவர்களின் செல்வத்தை மீட்டுவந்தார்.

இச்சுலோகத்தில் லக்ஷ்மணனுக்கு உபமானமாக உபேந்திரர் (வாமனர்) கூறப்பட்டுள்ளார்.

श्वश्रूजनं सर्वमनुक्रमेण विज्ञापय प्रापितमत्प्रणामः ।
प्रजानिषेकं मयि वर्तमानं सूनोरनुध्यायत चेतसेति ॥ ६० ॥

**सर्वं श्वश्रूजनं** - எல்லா மாமிமார்களுக்கும், **अनुक्रमेण** - முறையே, **प्रापितमत्प्रणामः** - என் நமஸ்காரத்தைத் தெரிவித்தவராக, **(सन्)** - இருந்துகொண்டு, "**मयि** - என்னிடத்தில் **वर्तमानं** - இருக்கின்ற, **सूनोः** - (அவர்களது) புத்திரரின், **प्रजानिषेकं** - ஸந்ததியை, **चेतसा** - நல்ல மனத்தினால், **अनुध्यायत** - நினையுங்கள் (ஆசீர்வதியுங்கள்)", **इति** - என்று, **विज्ञापय** - (அவர்களிடம்) தெரிவிப்பீராக.

(க.து) 'எனது மாமிமார்கள் எல்லோருக்கும் முறையே என் வணக்கத்தைத் தெரிவித்தபின் என்னிடமுள்ள ராமரது ஸந்ததியை ஆசீர்வதிக்கும்படி அவர்களிடம் விண்ணப்பம் செய்வீராக.

वाच्यस्त्वया मद्वचनात्स राजा वह्नौ विशुद्धामपि यत्समक्षम्।
मां लोकवादश्रवणादहासीः श्रुतस्य किं तत्सदृशं कुलस्य ॥ ६१ ॥

सः - அந்த, राजा - அரசர், त्वया - உம்மால், मद्वचनात् - என்னுடைய வார்த்தை என்பதாக (வைத்து), वाच्यः - சொல்லப்படவேண்டும். "समक्षं - (பலர்) கண்ணெதிரில், वह्नौ - அக்னியில், विशुद्धामपि - பரிசுத்தமானவளாக இருந்தும், मां - என்னை, लोकवाद-श्रवणात् - உலக நிந்தையைக் கேட்டது காரணமாக, अहासीः - தியாகம் செய்தீர், इति - என்று, यत् - யாதொன்று இருக்கின்றதோ, तत् - அது (தியாகம் செய்தல்), श्रुतस्य - (உம்முடைய) ஜ்ஞானத்திற்கும், कुलस्य(च)-குலத்திற்கும், सदृशं किम्-தகுந்ததா?"

(க-து) "நான் பதிவ்ரதை என்பதை உமது கண்ணெதிரே நிகழ்ந்த அக்னிப்ரவேசத்தினால் அறிந்தபின்பும் ஜன நிந்தைக்குப் பயந்து என்னைத் தியாகம் செய்தது உமது குலத்திற்கும் அறிவிற்கும் பொருத்தமானதுதானா?" என நான் சொன்னதாக அரசரிடம் கூறும்.

'मद्वचनात्'-'நான் கூறியதாகக் கூறுவதில் உமக்கு ஒன்றும் பிழையில்லை' என்பது கருத்து. भर्ता - என்னாது राजा- என்றது, 'அரசர்களுக்கு இயற்கையான செல்வச் செருக்கு ராமரை விடவில்லை போலும்' எனக் குறிப்பிட. 'लोकवाद-श्रवणात्'—'लोकापवादो बलवान् मतो मे' என ராமர் கொண்ட கருத்துக்குப் பதிலாக வந்தது. அறிவுள்ளவன், லோகவாதம் முழுவதையும் உண்மையென நம்பமாட்டான். 'मूढः परप्रत्ययनेयबुद्धिः'। ஆராய்ந்து உண்மை காண்பான். உண்மை காண்பதில் ராமர் அறிவு பயன்படாது போயிற்றே

என்பது ஸீதையின் கருத்து. 'समक्षं वह्नौ विशुद्धाम् - கண்ணால் கண்ட உண்மையை விட்டு, காதால் கேட்ட செய்திக்கு அதிகம் மதிப்புக் கொடுத்தது தகாது; 'प्रत्यक्षप्रमाणेनाधिगतं नैर्मल्यमनादृत्य सत्यमसत्यं वेति संशययुक्तात् परोक्षाज्जनापवादश्रवणादेव त्यक्तवतस्तव - सदसद्व्यवहाराभिज्ञस्य - विद्यान्वययोः सदृशं किमिति,' चारित्रवर्धनः ।

कल्याणबुद्धेरथवा तवायं न कामचारो मयि शङ्कनीयः ।
ममैव जन्मान्तरपातकानां विपाकविस्फूर्जथुरप्रसह्यः ॥ ६२ ॥

"अथवा - இல்லாவிடில், कल्याणबुद्धेः - நல்ல அறிவையுடைய, तव - உம்முடைய, मयि - என் விஷயத்தில் (செய்யப்பட்ட), अयं - இந்தத் தியாகமானது, कामचारः - விருப்பத்துடன் செய்த கார்யமாக, न शङ्कनीयः - ஸந்தேஹிக்கத் தக்கதன்று. (किन्तु) - ஆனால், मम - என்னுடைய, जन्मान्तर-पातकानां - முன் ஜன்மத்தில் செய்த பாவங்களின், अप्रसह्यः-தாங்கமுடியாத, विपाक-विस्फूर्जथुरेव - இடியோசை போன்ற பலனே (இது).

(க-து) எப்பொழுதும் சுபமான புத்தியை யுடைய நீர் என்னைத் தியாகம் செய்தது, வேண்டுமென மனம் போனவாறு செய்த காரியமாக கருதப்படுதல் கூடாது; நான் முற் பிறப்பில் செய்த தீவினைகளின் பயனே இப்பொழுது இடியோசை போன்று தோன்றியுள்ளது.

ஸீதை முதலில் சிறிது கோபத்தினால் பேசிய போதிலும் ராமரது குணத்தை நன்கு அறிந்தவளாதலால், ராமர் மன விருப்பத்துடன் தன்னைத் தியாகம் செய்யவில்லை எனவும், தான் பூர்வ ஜன்மத்தில் செய்துள்ள பாபங்கள் இப்பொழுது பயனளிக்கத் தொடங்கி விட்டனவென்றும் கூறுகிறாள்.

தியாகம் திடீரென நேர்ந்ததாலும், தாங்க முடியாத துக்க மளிப்பதாலும் இடிஓசையுடன் ஒப்பிடப்பட்டது. **स्फूर्जथुः** - இடியோசை; இடி என்றும் பொருள் கொள்ளலாம்.

**उपस्थितां पूर्वमपास्य लक्ष्मीं वनं मया सार्धमसि प्रपन्नः ।**
**तदास्पदं प्राप्य तयातिरोषात्सोढास्मि न त्वद्भवने वसन्ती ॥ ६३ ॥**

"**पूर्वं** - முன்பு, **उपस्थितां** - வந்த, **लक्ष्मीं** - (ராஜ்ய) லக்ஷ்மியை, **अपास्य** - விட்டு, **मया सार्धं** - என்னுடன், **वनं** - காட்டை, **प्रपन्नोऽसि** - அடைந்தீர்; **तत्** - அதனாலே, **तया** - அந்த லக்ஷ்மியினால், **अतिरोषात्** - மிக்க கோபத்தினாலே, **त्वद्भवने** - உம்முடைய மாளிகையில், **आस्पदं** - வாஸஸ்தானத்தை, **प्राप्य** - அடைந்து, **वसन्ती** - வசித்துக்கொண்டிருக்கிற (**अहं**) - நான், **सोढा** - ஸஹிக்கப்பட்டவளாக, **नास्मि** - இல்லை.

(க-து) "முன்பு ராஜ்யலக்ஷ்மி உம்மிடம் வந்த பொழுது, அவளைத் தியாகம் செய்து, அன்பினால் என்னுடன் காடு சென்றீர். அவளைத் தியாகம் செய்ததற்கு நானே காரணம் என எண்ணிக் கோபம் கொண்ட அவ்விராஜலக்ஷ்மி, இப்பொழுது நான் உமது மாளிகையில் வசிப்பதைப் பொறுக்கவில்லை போலும்! எனவே, அவள் என்னைத் துரத்தி விட்டாள் என நினைக்கின்றேன்.

'கஷ்டகாலங்களிலே உமக்குத் துணையாக இருந்த என்னைச் செல்வத்தில் இருக்கும் பொழுது த்யாகம் செய்வது தகுமா?' என்ற கருத்துத் தொனிக்கின்றது.

உத்ப்ரேக்ஷையைக் காட்டுகின்ற **इव** - முதலான சொல் இல்லாவிடினும் இச்சுலோகம் உத்ப்ரேக்ஷையிலே கருத்துள்ளது. ராமர் தன்னை விட்டதன் காரணத்தை வேறொரு வகையில் ஸீதை ஊஹிக்கின்றாள். **राज्यलक्ष्मीः** - அரசப் பதவி.

निशाचरोपप्लुतभर्तृकाणां तपस्विनीनां भवतः प्रसादात् ।
भूत्वा शरण्या शरणार्थमन्यं कथं प्रपत्स्ये त्वयि दीप्यमाने ॥ ६४ ॥

**निशाचर-उपप्लुत-भर्तृकाणां** - ராக்ஷஸர்களால் துன் புறுத்தப்பட்ட கணவரையுடைய, **तपस्विनीनां** - ரிஷி பத்தினிகளுக்கு (பத்தினிகளை), **भवत:** - உம்முடைய, **प्रसादात्** - அருளினுலே, **शरण्या** - ரக்ஷிப்பவளாக, **भूत्वा** - இருந்துவிட்டு, **त्वयि** - (இப்பொழுது) தாங்கள், **दीप्यमाने** - விளங்கிக்கொண்டிருக்கும்பொழுதே, **शरणार्थं** - (என்னை) காப்பாற்றுதற்காக, **अन्यं** - வேறு ஒருவரை, **कथं प्रपत्स्ये** - எவ்வாறு அடைவேன்."

(க-து) "முன்பு உம்முடன் காடு சென்ற காலத்தில் ரிஷிபத்தினிகள் பலர், தம் கணவரை ராக்ஷஸர்களின் துன்பத்தினின்று காக்கவேண்டுமென என்னை வேண்டினர். தவ வேடத்திலிருந்த உமது பலத்தைக் கொண்டு நான் அவர்களுக்கு அபயமளித்தேன். அவ்வாறிருக்க, இப்பொழுது, தேவரீர், அரசராக விளங்கிக் கொண்டிருக்கும் இச்சமயத்தில், நான் தற்காப்பிற்காக மற்றொருவரை எவ்வாறு சரண மடைவேன்?

ஸீதை இச்சுலோகத்திலே தனக்கு நேர்ந்துள்ள தாழ்நிலையைக் கூறுகிறுள். காட்டில் வசித்தாலும், ராமருடன் இருந்த காலத்தில் தனக்கிருந்த பெருமையும், அவரை விட்டுப் பிரிந்ததால் தற்பொழுது நேர்ந்த சிறுமையும் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றுள்.

'யாரை அடைவேன்' என்னுது 'எவ்வாறு அடைவேன்? (**कथं प्रपत्स्ये**) என ஸீதை கூறியதைக் காண்க.

**त्वयि दीप्यमाने**· 'முனிவர் வேடத்தில் சேனை பலமின்றி இருந்த பொழுதும் தேவரீர் எனது ரக்ஷாராக இருந்தீர். இப்பொழுது அரசராகப் பெரும் படையுடன் இருக்கும்

பொழுது, நான் வேறு எவரையேனும் சரணமடைதல் தகுமா? என் மனம் விரும்புமா ?'

அல்லது, 'நான் என்ன தவறு செய்ததாகக் கூறிக் கொண்டு மஹரிஷிகளைச் சரணமடைவேன்? ஏனெனில் த்யாகம் செய்யும்படியாகத் தவறு ஒன்றும் நான் இழைக்கவில்லையே! ஆதலால் எவ்வாறு அடைவேன்?' என்றும் உரைக்கலாம். "किं नु वक्ष्यामि मुनिषु कर्म चासत्कृतं प्रभो। कस्मिन्वा कारणे त्यक्ता राघवेण महात्मना।" "என்ன தவறுசெய்தாய் நீ? எக்காரணத்திற்காக மஹாத்மா ராமர் உன்னைத் துறந்தார்?' என மஹரிஷிகள் கேட்டால் நான் என்ன கூறுவேன்?" என ஸீதை லக்ஷ்மணனிடம் சொல்வதைக் காண்க.

किं वा तवात्यन्तवियोगमोघे कुर्यामुपेक्षां हतजीवितेऽस्मिन् ।
स्याद्रक्षणीयं यदि मे न तेजस्त्वदीयमन्तर्गतमन्तरायः ॥ ६१ ॥

" किंवा - அல்லது: रक्षणीयम् - காப்பாற்றவேண்டியதும், अन्तर्गतम् - என்னிடத்தில் இருப்பதுமான, त्वदीयम् - உம்முடைய, तेजः - ஸந்ததி, मे - எனக்கு, अन्तरायः - (உயிர் விடுவதில்) தடையாக, न स्यात् यदि - இராவிடில், तव - உம்முடைய, अत्यन्त-वियोग-मोघे - ஸ்திரமான பிரிவினால் வீணான, अस्मिन् - இந்த, हतजीविते - பாழான வாழ்க்கையில், उपेक्षां कुर्याम् - அலக்ஷ்யத்தைச் செய்து விடுவேன்."

(க-து) 'மேலும் உமது பிரிவு ஸ்திரமாய்விட்டதால் என் வாழ்வும் பயனற்றதாயிற்று. என்னிடமுள்ளதும் காப்பாற்றுதற்குரியதுமான உமது ஸந்ததி தடையாக இராவிடில், பிறரை ஆச்ரயித்து உயிர் வாழ்வதை விரும்பாது, இப்பாழான உயிரை அலக்ஷியம் செய்து முடித்திருப்பேன். உமது ஸந்ததியைக் கருதி உயிர் வாழ நினைக்கிறேன்.

'நான் இப்பொழுது உயிர் துறப்பதால் கர்ப்பத்தி லுள்ள சிசுவும் இறக்குமாகையால் அதன் பாதுகாப்பிற் காக நான் உயிர் தரிக்கின்றேன்' என்பது கருத்து;

साहं तपः सूर्यनिविष्टदृष्टिरूर्ध्वं प्रसूतेश्चरितुं यतिष्ये ।
भूयो यथा मे जननान्तरेऽपि त्वमेव भर्ता न च विप्रयोगः ॥६६॥

**यथा** - எவ்வாறு, **भूयः** - மறுபடியும், **मे** - எனக்கு, **जननान्तरेऽपि** - மறு ஜன்மத்திலும், **त्वमेव** - தாங்களே, **भर्ता**- கணவராக,(**स्याः**)-ஆவீர்களோ; **विप्रयोगश्च**-பிரிவும்,**न**(**स्यात्**)- உண்டாகாதோ, (**तथा**) - அவ்வாறு, **सा** - இத்தகைய துரத் ருஷ்டம் வாய்ந்த, **अहं** - நான், **प्रसूतेः ऊर्ध्वं**-பிரஸவத்திற்குப் பிறகு, **सूर्यनिविष्टदृष्टिः** - ஸூர்யனிடத்தில் வைக்கப்பட்ட பார்வையையுடையவளாக, **तपः** - தவத்தை, **चरितुं** - செய்ய, **यतिष्ये** - முயல்வேன்.

க-து) "மறு ஜன்மத்திலும் தங்களையே எனக்குக் கணவராகப் பெறுதற்காகவும், ஆனால் இத்தகைய பிரிவு நேராதிருத்தற்காகவும் கருதி நான் பஞ்சாக்னி மத்தியிலிருந்து தவம் செய்வேன்.

**ऊर्ध्वं प्रसूतेः** - இப்பொழுது தவம் செய்து உடலை வருத் துதல் சிசுவிற்கு ஹானியைச் செய்யுமாதலால் 'பிரஸவத் திற்குப் பின்' என்றாள். **सूर्य...दृष्टिः** - பஞ்சாக்னிதபஸில் ஸூர்யன் ஐந்தாவது அக்னியாகக் கருதப் படுவதால்-'ஸூர்ய னிடம் வைத்த பார்வையுடையவளாக' என்றாள். **त्वमेव भर्ता**- என்றது, ஸீதைக்கு ராமரிடமுள்ள ஸ்திரமான அன்பைக் காட்டியது. '**न च विप्रयोगः**'-என்றது, அதேபோல் அடுத்த ஜன்மத்திலாவது, பிரியாமைக்குக் காரணமான ஸ்திரமான அன்பு ராமருக்கு ஸீதை விஷயத்தில் இருக்கவேண்டு மென் பதைக் குறிப்பிட்டது.

नृपस्य वर्णाश्रमपालनं यत् स एव धर्मो मनुना प्रणीतः ।
निर्वासिताप्येवमतस्त्वयाहं तपस्विसामान्यमवेक्षणीया ॥ ६७ ॥

'**वर्णाश्रम-पालनं** - வர்ணங்களையும், ஆச்ரமங்களையும் காப்பாற்றுதல் என்று, **यत्** - யாதொன்று இருக்கின்றதோ, **स एव** - அதுவே, **नृपस्य** - அரசருடைய, **धर्मः**-கடமையாக, **मनुना** - மனுவினால், **प्रणीतः** - சொல்லப்பட்டு இருக்கிறது; **अतः** - ஆகையால், **एवं** - இவ்வாறு, **त्वया** - உம்மால், **निर्वासिता अपि** - வெளியேற்றப்பட்டவளாயினும், **अहं**-நான் **तपस्विसामान्यम्** - (மற்ற) தபஸ்விக்கு ஸமமாக, **अवेक्षणीया** - பார்க்கத்தகுந்தவளாக இருக்கின்றேன்."

(க-து) "உங்கள் வம்சத்து முதல்வரான மனு, வர்ணாச்ரம பாலனத்தை க்ஷத்ரிய தர்மமாகக் கூறியுள்ளார். ஆதலால் தாங்கள், என்னை மனைவியாகக் கருதாவிடினும் உமது பிரஜைகளான தவசிகளில் ஒருத்தியாகக் கருதி அவர்களுக்கு ஒப்பாக என்னைக் காப்பாற்ற வேண்டுகின்றேன்."

**मनुना प्रणीतः** - **वर्णानामाश्रमाणां च राजा सृष्टोऽभिरक्षिता**- என்பது மனுஸ்ம்ருதி [7. 38].

**एवम् निर्वासिता** - 'இவ்வாறு காரணமின்றியும் இரக்கமின்றியும், துரத்தப்பட்ட' என்பது கருத்து. '**निष्कारणं निष्करुणञ्च**' என உரைப்பர் அருணகிரி.

तथेति तस्याः प्रतिगृह्य वाचं रामानुजे दृष्टिपथं व्यतीते ।
सा मुक्तकण्ठं व्यसनातिभाराच्चक्रन्द विग्ना कुररीव भूयः ॥ ६८ ॥

**तथेति** - அப்படியே என்று, **तस्याः** - அந்த ஸீதையின், **वाचं** - வார்த்தையை, **प्रतिगृह्य** - ஏற்றுக் கொண்டு, **रामानुजे** - லக்ஷ்மணன், **दृष्टिपथं** - பார்வையின் மார்க்கத்தை, **व्यतीते** - கடந்தபொழுது, **सा** - அந்த ஸீதை, **व्यसनाति**-

भारात् - அதிக துக்கத்தால்,—विग्ना - பயந்த, कुररी इव - அன்றில் பக்ஷிபோல்,—भूयः - மிகவும், मुक्तकण्ठं - குரல் விட்டு, चक्रन्द - கதறினள்.

(க-து) அவன் சொன்னதை யெல்லாம் கவனமாக மனத்திலே கொண்ட லக்ஷ்மணன், ஸீதை கூறியபடியே ராமரிடம் தெரிவிப்பதாக ஒத்துக்கொண்டு, திரும்பினான். லக்ஷ்மணன் செல்வதைப் பார்த்துக் கொண்டிருந்த ஸீதை, அவன் காணமுடியாத தொலைவில் சென்றவுடன், துக்கத்தின் பாரத்தை உணர்ந்தவளாய், பயந்த அன்றில் பறவைபோல், குரல் விட்டுக் கதறினள்.

रामानुजे दृष्टिपथं व्यतीते-லக்ஷ்மணன் கண்களுக்குப் புலப்பட்டுக் கொண்டிருந்தவரை ஸீதை துக்கத்தை அவ்வளவாக உணரவில்லை; லக்ஷ்மணனும் மறைந்து, தான் தனியே இருப்பதைக் கண்டபொழுது துக்கத்தை முற்றிலும் அவள் உணர்ந்தாள். உரக்க அலறினள்.

विग्ना कुररी इव - அன்றில் பறவையின் சத்தம், கேட்போர் மனத்தில் மிக இரக்கம் விளைவிக்குமென்பர். அன்றிலை உபமானமாகக் கூறியதனால், பரமகாருணிகரான வால்மீகியின் பிரவேசம் ஸூசிப்பிக்கப்பட்டது. கிரௌஞ்சப் பக்ஷியின் புலம்பல் வால்மீகியின் மனத்தில் கருணையைத் தோன்றச் செய்தது. அன்றில் போல் அலறிய ஸீதையின் குரல் அவரை அவளிடம் கருணையுடன் வரச் செய்தது.

नृत्यं मयूराः कुसुमानि वृक्षा दर्भानुपात्तान् विजहुर्हरिण्यः ।
तस्याः प्रपन्ने समदुःखभावमत्यन्तमासीद्रुदितं वनेऽपि ॥ ६९ ॥

मयूराः - மயில்கள், नृत्यं - நர்த்தனத்தை, विजहुः - விட்டன. वृक्षाः-மரங்கள், कुसुमानि - புஷ்பங்களை, विजहुः - விட்டன. हरिण्यः - பெண்மான்கள், उपात्तान् - (தின்பதற்கு) எடுத்த, दर्भान् - தர்ப்பங்களை, विजहुः - விட்டன. तस्याः -

ஸீதைக்கு, समदुःखभावं-ஸமமான துக்கம் உடையதாயிருக்கும் தன்மையை, प्रपन्ने - அடைந்த, वनेऽपि - வனத்திலும், अत्यन्तं-மிகவும், रुदितं-அழுகையானது, आसीत् -இருந்தது.

(க-து) ஸீதையின் அழுகுரலைக் கேட்ட வனமும் சோகத்துடன் புலம்பியது போல் காணப்பட்டது; வனத்திலுள்ள மயில்கள் தங்களது நடனத்தை விட்டன; மரங்களிலுள்ள புஷ்பங்களும் வாடிக் கீழே உதிர்ந்தன; மான்கள், தின்பதற்காக வாயில் வைத்துக்கொண்டிருந்த புல்லையும் வாய்வழியே சோரவிட்டு நின்றன. இக்காரணங்களால் வனமும் ஸீதையோடு ஒத்த துக்கமுடையது போல் காணப்பட்டது.

இக்கருத்தை, 8-ஆம் ஸர்க்கம் 69-70 சுலோகங்களிலும் காண்க.

वनेऽपि-இங்குள்ள, अपि-என்ற சொல், அசேதனமான காடும் புலம்பியது என்பதைக் காட்ட வந்தது; அயோத்தியில் ராஜகிருஹத்தில் பிறகு நேரப்போகின்ற புலம்பலை மனத்திலே கொண்டு, வனத்திலும் எனக் கவி கூறினதாகவும் கொள்ளலாம்.

वने...समदुःखभावं प्रपन्ने सति तस्याः रुदितं अत्यर्थमासीत् इति दक्षिणावर्तः । रुदितम् शोकः इति वल्लभः॥.

तामभ्यगच्छद्रुदितानुसारी कविः कुशेध्माहरणाय यातः ।
निषादविद्धाण्डजदर्शनोत्थः श्लोकत्वमापद्यत यस्य शोकः ॥ ७० ॥

निषाद·विद्ध-अण्डज दर्शन-उत्थः - வேடனால் அடிக்கப்பட்ட (அன்றில்) பக்ஷியைப் பார்த்ததனால் உண்டான, यस्य-எந்த மஹரிஷியின், शोकः - சோகமானது, श्लोकत्वं - ச்லோகவடிவத்தை, आपद्यत - அடைந்ததோ, कुश इध्म-आहरणाय-தர்ப்பத்தையும், ஸமிதுக்களையும் கொண்டுவருவதற்கு, यातः-சென்ற, (सः) कविः-அந்தக் கவியான வால்மீகி, रुदित-

**अनु-सारी**-அழுகைக் குரலை அனுசரித்துக் சென்றவராக, **तां**- அந்த ஸீதையை, **अभ्यगच्छत्** - அடைந்தார்.

(க-து) தர்ப்பம், ஸமித்து இவைகளைக்கொண்டு செல்வதற்காக வந்திருந்த வால்மீகி, அழுகைக் குரலைக்கேட்டு அதைப் பின் பற்றி ஸீதை இருக்குமிடம் வந்தார்.

வால்மீகியின் கருணை மிகுந்த தன்மை சுலோகத்தின் முதற்பாதியினாலே தெரிவிக்கப் பட்டது.

உலகிலே சிறந்த மனிதர் யார் என்றறிய ஆவல் கொண்ட வால்மீகி, தம்மிடம் எதிர் பாராது வந்த நாரதரிடமிருந்து ராமரது குணங்களைக் கேட்ட பிறகு, நடுப்பகல் ஸ்நாநம் செய்யத் தமஸா நதியை அடைந்தார். அங்கு, ஒரு வேடன் இனிதே களித்துக் கொண்டிருந்த இரண்டு கிரௌஞ்ச பக்ஷிகளிலே ஆண் பறவையை அடித்துக் கொன்றான், தரையிலே விழுந்து ரத்தத்தில் நனைந்து புரளுகின்ற ஆண் பறவையைக் கண்டு பெண்பக்ஷி மிக தீனமாய்ப் புலம்பவும், அதைக் கண்ணுற்ற முனிவர் வால்மீகி, கருணாசீலராதலால் மனத்திலே மிக்க சோகம் கொண்டார். அத்தகைய அடாச் செயலைச் செய்தவனை, 'வேடனே, காமத்துக்கு வசப்பட்டுக் களித்திருந்த இவ்வாண்பறவையைக் கொன்ற நீ இவ்வுலகில் நெடுநாள் வாழக்கடவாய் அல்லை' என்று சபித்தார். அவருடைய சோகம் சுலோகவடிவில் தோன்றியது. அதுவே ராமாயணத்தின் தொடக்கமாகவும் அமைந்தது: சுலோகம். "**मा निषाद प्रतिष्ठां त्वमगमः शाश्वतीः समाः । यत् क्रौञ्चमिथुनादेकमवधीः काममोहितम् ॥**" என்பதாம்.

तमश्रु नेत्रावरणं प्रमृज्य सीता विलापाद्विरता ववन्दे ।

तस्यै मुनिर्दोहदलिङ्गदर्शी दाश्वान्सुपुत्राशिषमित्युवाच ॥ ७१ ॥

सीता - ஸீதை, विलापात् - புலம்புவதினின்றும், विरता (सती) - ஓய்ந்தவளாய், नेत्र आवरणं - கண்களை மறைக்கின்ற, अश्रु - கண்ஜலத்தை, प्रमृज्य - துடைத்துக்கொண்டு, तं - அம்முனிவரை, ववन्दे - வணங்கினாள். दोहद-लिङ्गदर्शी - கர்ப்பத்திற்குரிய சின்னங்களைக்கண்ட, मुनिः - முனிவர், तस्यै - அவளுக்கு, सुपुत्राशिषं - நல்ல புத்திரனை அடைவதற்கான ஆசீர்வாதத்தை, दत्त्वा - கொடுத்தவராக, इति इவ்வாறு, उवाच - சொன்னார்.

(க-து) முனிவரைக் கண்ட ஸீதை புலம்புவதை நிறுத்தினாள். பார்வையை மறைக்கின்ற கண்ணீரைத்துடைத்துக் கொண்டு, முறை பிறழாதவளாதலால் அம்முனிவரை வணங்கினாள். ஸீதை கர்ப்பிணி என்பதை அறிந்த முனிவர், அதற்கேற்ப, நற்புதல்வன் பிறக்கவேண்டுமென ஆசீர்வாதம் செய்த பின் கூறலுற்றார்.

மரியாதைக்குரியவர்முன்பு புலம்புதலும், கண்ணீர் பெருக்குதலும் முறையன்றாதலால், வால்மீகியினிடமுள்ள கௌரவம் காரணமாக, அடக்கமுடியாத அழுகையையும் அடக்கிக் கொண்டாள். ववन्दे - கஷ்டகாலத்திலும் ஸீதை ஸதாசாரத்தை விட்டவளன்று.

जाने विसृष्टां प्रणिधानतस्त्वां मिथ्यापवादक्षुभितेन भर्त्रा ।
तन्मा व्यथिष्ठा विषयान्तरस्थं प्राप्तासि वैदेहि पितुर्निकेतम् ॥७२॥

त्वां - உன்னை, मिथ्या-अपवाद-क्षुभितेन - பொய்யான அபவாதத்தினால் கலக்கமுற்ற, भर्त्रा - கணவரால், विसृष्टां - விடப்பட்டவளாக, प्रणिधानतः - தியான திருஷ்டியால், जाने - அறிகின்றேன். वैदेहि - ஸீதையே, विषयान्तरस्थं - வேறு தேசத்தில் இருக்கின்ற, पितुः - (உன்) தந்தையின், निकेतं - வீட்டை, प्राप्ता असि - அடைந்திருக்கிறாய்; तत् - ஆகையால், मा व्यथिष्ठाः - வருந்தாதே.

(க-து) ஸீதே! ராமர், பொய்யான லோகாபவாதத்திற்குப்பயந்து உன்னைத்துறந்தார் என்பதை நான் ஜ்ஞான திருஷ்டியால் அறிகின்

றேன். நான் உன்னுடைய நடத்தையை ஸந்தேஹிக்கின்றேனே என வருந்தாதே. உனது தந்தைபோன்றவன் நான். எனவே நீ உன் தந்தையின் வீட்டிற்கே வந்துள்ளாய்.

**प्रणिधानतः** - ஸீதையை அவளது கஷ்டங்களைக் கூற வைக்காது, முனிவர் ஜ்ஞான திருஷ்டியால் அறிந்ததாகக்கவி கூறியதிலே உள்ள நயம் பாராட்டத்தக்கது. **विषयान्तरस्थम्** - தமது ஆச்ரமத்தை ஸீதை தன் தந்தையின் வீடாகக் கருத வேண்டுமெனக் கூறுகின்றார். எல்லாவகையிலும் வால்மீகியின் ஆச்ரமம் ஸீதைக்குப் புகலிடமாயிருப்பதற்குத் தக்கதே என்பது கருத்து.

उत्खातलोकत्रयकण्टकेऽपि सत्यप्रतिज्ञेऽप्यविकत्थनेऽपि ।
त्वां प्रत्यकस्मात्कलुषप्रवृत्तावस्त्येव मन्युर्भरताग्रजे मे ॥ ७३ ॥

**उत्खात-लोकत्रय-कण्टकेऽपि** - மூவுலகத்திற்கும் சத்ருவான ராவணனைக் கொன்றவராயினும், **सत्य-प्रतिज्ञेऽपि** - உண்மையான பிரதிஜ்ஞையுடையவராயினும், **अविकत्थनेऽपि**- தற்புகழ்ச்சியற்றவராயினும், **त्वां प्रति** - உன்னைக் குறித்து, **अकस्मात्** - காரணமின்றி, **कलुष-प्रवृत्तौ** - நிந்திக்கத்தக்க செயலை உடைய, **भरताग्रजे** - ராமரிடத்தில், **मे** - எனக்கு, **मन्युः** - கோபம், **अस्त्येव** - இருக்கவே இருக்கின்றது.

(க-து) "ராமர், லோக கண்டகனை ராவணனை ஸம்ஹரித்து உபகாரம் செய்துள்ளார். உண்மையான சொல்லுடைமை, தற்பெருமை பேசாதிருத்தல் என்ற சிறந்த குணங்கள் நிறைந்துள்ளவர். இக்குணங்களிலே ஒவ்வொன்றுமே அவரிடம் நான் பெரும் மதிப்புக் கொள்ளக் காரணமாக இருக்கின்றது; ஆயினும் உன் விஷயத்தில் நிஷ்காரணமாகக் கருணையின்றி அவர் நடந்து கொண்டதை நினைக்கும் பொழுது, முன் கூறிய அவரது குணங்களை எல்லாம் மறந்து நான் கோபமே அடைகின்றேன்.

ஏனெனில் குற்றவாளிகளைத் தண்டிக்காததால் அரசருக்குப் பெரும் பாதகம் ஒன்று மில்லை. குற்றமற்றவர்களை மனம் வருந்தச் செய்தல் தகுதியன்று. வால்மீகி, ராமரிடம் கோபம் கொண்டது உண்மையானதே. ஸீதையின் நடக்கையில் தாம் கொண்ட நம்பிக்கை உறுதியானதெனக் காட்ட இதை வாய்விட்டுக் கூறினார்.

तवोरुकीर्तिः श्वशुरः सखा मे सतां भवोच्छेदकरः पिता ते
धुरि स्थिता त्वं पतिदेवतानां किं तन्न येनासि ममानुकम्प्या॥७४॥

**उरु-कीर्तिः** - விசாலமான கீர்த்தியையுடைய, **तव श्वशुरः** - உன் மாமனார், **मे सखा** - என் ஸ்னேகிதர். **ते** - உன்னுடைய, **पिता**-பிதா (ஜனகராஜர்,) **सतां**-(மோக்ஷத்தை விரும்பும்) நல்ல மனிதர்களுக்கு, **भवोच्छेदकरः** - (ஞானோபதேசங்களினால்) ஸம்ஸார துக்கத்தை நீக்குகின்றவராக, இருக்கின்றார். **त्वं** - நீ, **पतिदेवतानां** - பதிவ்ரதைகளுக்கெல்லாம், **धुरि** - முதலில், **स्थिता** - இருக்கின்றாய். **येन** - எக்காரணத்தினால், **मम** - எனக்கு, **अनुकम्प्या** - இரங்கத்தக்கவளாக, **नासि** - நீ இருக்கமுடியாதோ, **तत्** - அப்படிப்பட்ட காரணம், **किम्** - என்ன இருக்கின்றது ?

(க-து) "ஸீதே, என்னுடைய கருணைக்கு நீ எவ்வகையிலும் உரியவளாக இருக்கின்றாய். உனது மாமனார், மூவுலகிலும் கீர்த்தி பெற்ற தசரதர். உன் தந்தையோ, ஜ்ஞானோபதேசத்தின் மூலம் ஸாதுக்களின் ஸம்ஸார பந்தத்தை நீக்குகின்ற பிரம்மஞானியான ஜனகர். நீயோ பதிவிரதைகளின் முதன்மை வாய்ந்தவள். எனவே எல்லாவகையிலும் நீ என் இரக்கத்திற்கு உரியவளாக இருக்கின்றாய். நான் கருணை காட்டாதிருக்கும்படி உன்னிடம் என்ன குற்ற முள்ளது. ஒன்றுமில்லை"

**भवोच्छेदकरः तेपिता च मे सखा इत्यन्वयः**-என உரைப்பர் அருணகிரி. **सखा दशरथस्यापि जनकस्य च मन्त्रकृत्** [15 81] எனக் கவி பிறகு கூறியுள்ளதையும் காண்க.

"स्नुषा दशरथस्य त्वं रामस्य महिषी प्रिया ।

जनकस्य सुता राज्ञः स्वागतं ते पतिव्रते ॥" (49-7) என்பது உத்தர ஸ்ரீராமாயணம்.

तपस्विसंसर्गविनीतसत्त्वे तपोवने वीतभया वसास्मिन् ।

इतो भविष्यत्यनघप्रसूतेरपत्यसंस्कारमयो विधिस्ते ॥ ७९ ॥

**तपस्वि-संसर्ग-विनीतसत्त्वे** - மஹரிஷிகளின் சேர்க்கையினால் அடங்கிய மிருகங்களை உடைய, **अस्मिन्** - இந்த, **तपोवने** - தபோவனத்தில், **वीतभया** - பயமற்றவளாக, **वस** - வசிப்பாயாக. **इतः** - இங்கேயே, **अनघप्रसूतेः** - ஸுகப்ரஸவமுடையவளான, **ते** - உன்னுடைய, **अपत्यसंस्कारमयः** - குழந்தையின் ஜாதகர்ம முதலிய, **विधिः**-கார்யம், **भविष्यति**- ஏற்படும் (செய்யப்படும்).

(க-து) "மஹரிஷிகளுடைய சேர்க்கையினால் துஷ்ட மிருகங்களும் இங்கே அடங்கிச் சாதுவாக இருக்கின்றன. ஆதலால் நீ என்னாச்ரமத்தில் அச்சமின்றி வசிப்பாயாக; ப்ரஸவமும் ச்ரமமின்றி இருக்கும். உன் குழந்தைக்கு ஜாதகர்ம முதலிய நற்காரியங்களும் ஒன்று கூட விடப்படாது நன்கு நிறைவேற்றப்படும்."

**विनीतसत्त्वे** - யோகிகளின் முன்னிலையில் இயற்கையிலே பகையுள்ள பிராணிகளும் பகையின்றி இருக்கும். **'सन्निधौ च वैरत्यागः'** - என்பது யோகஸூத்ரம்:

**अपत्यसंस्कारमयो विधिः** -ஸம்ஸ்காரம் என்றது, ஆத்மாவுக்குத் தூய்மையளிக்கின்ற ஜாதகர்ம முதலிய நற்காரியங்கள். அவைகளின் தொகை நாற்பது என்பர் கௌதமர். இத்தகைய ஸம்ஸ்காரங்களின்றி இருத்தல் பெரும் குறைவாகக் கருதப்படுகின்றது.

மஹர்ஷி, தமது ஆச்ரமத்தில் வசிப்பதால் ஸீதைக்கு ஏற்படும் நலன்களை இது முதல் நான்கு ச்லோகங்களிலே கூறுகின்றார்.

अशून्यतीरां मुनिसंनिवेशैस्तमोपहन्त्रीं तमसां वगाह्य ।
तत्सैकतोत्सङ्गबलिक्रियाभिः संपत्स्यते ते मनसः प्रसादः ॥ ७६ ॥

**मुनिसन्निवेशैः** - முனிவர்களின் ஆச்ரமங்களினால், **अशून्यतीरां** - நிறைந்துள்ள கரைகளையுடையதும், **तमोपहन्त्रीं** - துக்கத்தைப் போக்குகின்றதுமான, **तमसां** - தமஸா நதியில், **वगाह्य** - ஸ்நானம்செய்து, **तत्सैकत उत्सङ्ग बलिक्रियाभिः**-அந்த நதியின் மணற்பாங்கான இடங்களில் (இஷ்ட தேவதைகளை (பூஜை செய்வதினால், **ते**-உன்னுடைய, **मनसः** - மனத்திற்கு, **प्रसादः** - தெளிவு, **संपत्स्यते** - உண்டாகும்.

(க-து) தமஸா நதிக்கரை முற்றிலும் மஹரிஷிகளின் ஆச்ரமங்கள் நிறைந்துள்ளது. அமைதியுள்ளது அந்த இடம். தமஸாநதியின் தீர்த்தம் துக்கத்தையும் பாபத்தையும் போக்கக்கூடியது; ஆதலால் இந் நதியிலே ஸ்நானம் செய்து, மணல்பாங்கான இடத்திலே உனது இஷ்டதேவதைகளை ஆராதித்து வருவதால் உன் மனத்திற்கு, துக்கம் நீங்கித் தெளிவுண்டாகும்."

**मुनिसन्निवेशैः अशून्यतीराम्** - நற்காரியத்திலே தூண்டுபவர்களான மஹரிஷிகள் உள்ளனர் என்பதும் அமைதி நிலவுகின்ற இடம் என்பதும் இதனால் குறிக்கப்பட்டன. **तमः** - பாபம் என்றும் பொருள் கொள்ளலாம்.

पुष्पं फलं चार्तवमाहरन्त्यो बीजं च बालेयमकृष्टरोहि ।
विनोदयिष्यन्ति नवाभिषङ्गामुदारवाचो मुनिकन्यकास्त्वाम्॥ ७७ ॥

**आर्तवम्** - (உரிய) பருவங்களிலே தோன்றிய, **पुष्पम्**- புஷ்பங்களையும், **फलं च** - பழங்களையும், **अकृष्टरोहि** - உழாத

நிலத்தில் தானே வளர்ந்த, बालेयम् - (தேவ) பூஜைக்குத் தக்க, बीजम् च - (நீவாரம் (முதலிய) தான்யத்தை யும், आहरन्त्यः - (உனக்காகக்) கொண்டு வருகின்ற, उदार-वाचः - கம்பீரமான பேச்சையுடைய, मुनिकन्यकाः - ரிஷிப் பெண்கள்; नव-अभिषङ्गाम् - புதியதுக்கமுடைய, त्वाम् - உன்னை, विनोदयिष्यन्ति - மகிழ்விப்பர்.

(க-து) "ஆச்ரமத்திலுள்ள ரிஷிப்பெண்கள், அவ்வப்பருவங் களிலே உண்டான புஷ்பம், பழம், நீவாரம் முதலியவற்றைக் கொணர்ந்து உனக்குத் தருவர். அப்பெண்கள், அழகாகப் பேசும் திறன் உடையவர்கள்; தங்களது இனிய சொற்களாலே நீ உனது துக்கத்தை மறந்திருக்கும்படி செய்வர்."

आर्तवम् - காலமல்லாக் காலத்திலே உண்டான பழம் முதலியவற்றை உண்பது நல்லதல்லவாகையால், 'உரிய பருவத்திலே தோன்றிய' என விசேஷிக்கப் பட்டன புஷ் பமும் பழமும். अकृष्टरोहि - 'நீவாரதான்யம்' தானே விளைந் தது. பிறரால் உழுது பயிரிடப்பட்டு விளைந்ததன்று; இத னால் தான்யத்தின் மிகுதி தெரிவிக்கப்பட்டது. उदार-वाचः - ரிஷிப்பெண்கள் நகரத்திலே இல்லாதவர்கள்; அதிதிகளுடன் இனியசொல் பேச அறியாதவர்கள் என நினைக்கவேண்டாம். அழகாகவும் கம்பீரமாகவும் பேசும் திறன் பெற்றவர்கள் என்பதை, 'उदारवाचः' என்ற விசே ஷணம் காட்டியது.

पयोघटैराश्रमबालवृक्षान् संवर्धयन्ती स्वबलानुरूपैः ।
असंशयं प्राक्तनयोपपत्तेः स्तनंधयप्रीतिमवाप्स्यसि त्वम् ॥ ७८ ॥

स्व बल अनुरूपैः - உனது (சரீர) பலத்திற்கு ஒத்த पयोघटैः - நீர்க்குடங்களினால், आश्रम बालवृक्षान् - ஆச்ரமத் திலுள்ள சிறியமரங்களை, संवर्धयन्ती - வளரச் செய்கின்ற

வளாய், त्वम् - நீ, तनय-उपपत्तेः प्राक् - புத்திரன் பிறப்பதற்கு முன்பே, स्तनन्धय-प्रीतिम् - குழந்தையினிடம் (தாய் கொள்ளும்) அன்பை, असंशयम् - திண்ணமாக, अवाप्स्यसि - அடைவாய்.

(க-து) உனது சக்திக்குத் தக்கவாறு குடத்திலே நீர் கொண்டு வந்து ஊற்றி ஆச்ரமத்திலே யுள்ள இளம் மரங்களை வளர்த்து வருவாயாக; அம்மரங்களைக் குழந்தைகளாகக் கருதுகின்ற உனக்கு குழந்தை பிறப்பதற்கு முன்பே, அவற்றிடம் குழந்தையன்பு தோன்றும்.

குழந்தை பிறந்த பின்பே தாய்மையுண்டாகின்றது. தாயான பின்பு தான், ஒரு தாய் குழந்தையினிடம் வைக்கும். அன்பு எத்தகைய தென்பதை முற்றிலும் அறிய இயலும். இளம் மரங்களுக்குத் தண்ணீர் ஊற்றி வளர்த்தால், ஸீதை மகனைப் பெறுவதற்கு முன்பே அத்தகைய குழந்தை யன்பை— தாயன்பை — உணரமுடியும் என்பதை, முனிவர் प्राक्तनयोपपत्तेः - என்பதால் கூறினார். தாய்மைக்குரிய பயிற்சியாகவும் இதைக் கருதலாம்.

இச்சலோகத்தில் ஆச்ரமத்திலே வசிக்கப் போகின்ற ஸீதைக்குத் துக்கத்தை மறப்பதற்கான மற்றொரு பொழுது போக்குக் கூறப்பட்டது.

अनुग्रहप्रत्यभिनन्दिनीं तां वाल्मीकिरादाय दयार्द्रचेताः ।
सायं मृगाध्यासितवेदिपार्श्वं स्वमाश्रमं शान्तमृगं निनाय ॥ ७९ ॥

दयार्द्रचेताः - தயையினால் மிருதுவான மனமுடைய, वाल्मीकिः - வால்மீகி முனிவர், अनुग्रह-प्रत्यभिनन्दिनीं - தம்முடைய அனுக்ரஹத்தைப் பிரியமாக ஏற்றுக் கொள்ளுகின்ற, तां - அவளை, आदाय - அழைத்துக்கொண்டு, सायम् - ஸாயங்காலத்தில், मृग - अध्यासित-वेदिपार्श्वं - மான்களால்

அமர்ந்திருக்கப்பட்ட யாக மேடைகளின் புறங்களையுடைய தும், शान्तमृगं - அமைதியான ப்ராணிகளையுடையதுமான, स्वं आश्रमं - தம்முடைய ஆச்ரமத்திற்கு, निनाय - சென்றார்.

(க-து) வால்மீகி, தாம் செய்யப்போகின்ற உதவியை அன்புடன் ஏற்க விரும்பிய ஸீதையை அழைத்துக் கொண்டு ஆச்ரமம் சென்றார். பொழுதமரும் நேரமாதலால் ஆச்ரமத்திலேயுள்ள யாக மேடைகளின் அருகிலே மான்கள் படுத்திருந்தன. எங்கும் அமைதி நிலவியிருந்தது.

दयार्द्रचेताः - என்ற விசேஷணம், வால்மீகி முனிவருக்குள்ள இயற்கையான தன்மையை கூறியது. 'वेदिः - யாக மேடை; ஆச்ரமத்திலே யுள்ள மரங்களைச் சுற்றிலும் அமைக்கப்பட்டுள்ள மேடை என்றும் கொள்ளலாம்.

तामर्पयामास च शोकदीनां तदागमप्रीतिषु तापसीषु ।
निर्विष्टसारां पितृभिर्हिमांशोरन्त्यां कलां दर्श इवौषधीषु ॥ ८० ॥

शोकदीनां - துக்கத்தினால் வருந்துகின்ற, तां - அவளை, तदागमप्रीतिषु - அவளுடைய வருகையினால் ஸந்தோஷமடைந்த, तापसीषु - தாபஸ ஸ்திரீகளிடத்தில்,—पितृभिः - பித்ருக்களினாலே, निर्विष्टसारां- அனுபவிக்கப்பட்ட ஸாரத்தையுடைய, हिमांशोः - சந்திரனின், अन्त्यां कलां - கடைசிக் கலையை, दर्शः - அமாவாஸ்யை தினமானது, ओषधीषु इव - ஓஷதிகளிடத்தில் (வைப்பது) போல,—अर्पयामास च ஒப்படைத்தார்.

(க-து) வால்மீகி, ஆச்ரமம் சென்றவுடன் ஸீதையை, தாபஸ ஸ்திரீகளிடத்தில் ஒப்படைத்தார்; ஸீதை வேறு எங்கேனும் செல்லாமல் தங்களிடம் வந்து சேர்ந்ததைப்பற்றி அவர்கள் மன மகிழ்ந்தனர்.

பௌர்ணமியன்று சந்திரன் எல்லா கலைகளுடனுமிருக்கிறான். கிருஷ்ண பக்ஷத்தில் ஒவ்வொரு நாளும் ஒவ்

வொருவகைத் தேவர்கள் சந்திரனது கலையை அனுபவிக்கின்றனர். பதினைந்தாவது கலையின் ஸாரத்தைப் பித்ருக்கள் என்ற தேவவகையினர் குடிக்கின்றனர். ஸாரமற்ற பதினைந் தாவது கலையை, அமாவாஸ்யை தினமானது, ஓஷதிகளிடத்திலே ஒப்படைக்கவும் அது ஓஷதிகளிடமிருந்து பலம் பெற்று மேலும் வளருகின்றது என்பர். தர்ச (அமாவாஸ்யை) தினம் சந்திரகலையை ஓஷதிகளிடம் ஒப்படைப்பது போல் வால்மீகி ஸீதையை தாபஸிகளிடம் ஒப்படைத்தார். ஓஷதிகளிடம் தரப்பட்ட சந்திரகலை ஹானியின்றி வளர்வது போல், தாபஸிகளிடம் ஒப்படைக்கப்பட்ட ஸீதையும் தீங் கொன்றுமின்றி நலமுடனிருப்பாள் என்பது உபமானத்தால் புலனாகும். வால்மீகிக்குத் தர்சதினமும், ஸீதைக்குச் சந்திர கலையும், தாபஸிகளுக்கு ஓஷதிகளும் உபமானங்கள். [ஸர்க்கம் 5, சுலோகம் 16, உரையைக் காண்க.]

तदागमप्रीतेषु तापसीषु - கணவரால் திரஸ்கரிக்கப்பட்டமை பற்றி வருதப்பட்டனராயினும், ஸீதை வேறு இடங்களுக்குச் செல்லாது தங்களிடம் வந்தனளே எனத் தாபஸிகள் மகிழ்ந்தனர்.

पितरः - இறந்தவர்களின் ஆத்மாக்களுக்குத் தலைவர்களாயுள்ள தேவர்வகையினர். இவர்கள் वैराजाः, अग्निष्वात्ताः, बर्हिषदः, सुकालाः, अंगिरसः, सुस्वधाः, सोमपाः - என ஏழு குழுவினராக வகுக்கப் பட்டுள்ளனர்.

अन्त्यां कलाम् - சந்திரனது பதினாறுவது கலை நிரந்தரமாகச் சிவபிரானது முடியிலிருப்பதால், இங்குக் கடைசியான கலை என்றது பதினைந்தாவது கலையை.

संपूर्णमण्डलः श्रीमांश्चन्द्रमा उपरज्यते ।
यस्मादाप्यायते सोमः पञ्चदश्यां तु पूर्णिमा ॥

दशभिः पञ्चभिश्चैव कलाभिर्दिवसक्रमात् ।
तस्मात् कलाः पञ्चदशी सोमे नास्ति तु षोडशी ।
तस्मात् सोमस्य भवति पञ्चदश्यां महाक्षयः

என்ற வாயுபுராண வசனமும் இதை வலியுறுத்தும். [அ. 56- சு 59, 60].

ता इङ्गुदीस्नेहकृतप्रदीपमास्तीर्णमेध्याजिनतल्पमन्तः ।
तस्यै सपर्यानुपदं दिनान्ते निवासहेतोरुटजं वितेरुः ॥ ८१ ॥

ताः - அத் தாபஸ ஸ்திரீகள், तस्यै - அந்த ஸீதையின் பொருட்டு, सपर्यानुपदं - வரவேற்று உபசரித்ததற்குப் பிறகு, दिनान्ते - ஸாயங்காலத்தில், निवासहेतोः - (அவள்) வஸிப்பதின் பொருட்டு, इङ्गुदी-स्नेह-कृतप्रदीपं - இங்குணத் தைலத்தினால் ஏற்றப்பட்ட தீபத்தையுடையதும், अन्तः-உள்ளே, आस्तीर्णमेध्याजिनतल्पं - விரிக்கப்பட்ட பரிசுத்தமான மான் தோலினாலாகிய படுக்கையை யுடையதுமான, उटजं - பர்ணசாலையை, वितेरुः - கொடுத்தார்கள்.

(க-து) தாபதப் பெண்கள் ஸீதையை வரவேற்று உபசரித்த பின், அவள் வசிப்பதற்காக ஒரு பர்ணசாலையைத் தந்தனர். அப் பர்ணசாலையில், மான் தோல் பரப்பப்பட்ட படுக்கையும் இங்குணத் தைலத்தைக் கொண்டு ஏற்றப்பட்ட தீபமும் இருந்தன.

இங்குணம்-ஒருவகைமரம்; இதன் விதைகளிலிருந்து எண்ணெய் எடுத்து முனிவர்கள் உபயோகித்துக் கொள்வர்; இம்மரம் முனிவர்களுக்கு அதிகம் உபயோகமாக இருப்பதால் तापसतरुः - என்றும் இதற்குப் பெயர் உண்டு.

तत्राभिषेकप्रयता वसन्ती प्रयुक्तपूजा विधिनातिथिभ्यः ।
वन्येन सा वल्कलिनी शरीरं पत्युः प्रजासंततये बभार ॥ ८२ ॥

**तत्र** - அந்த ஆச்ரமத்தில், **वसन्ती** - வஸிக்கின்றவளும், **अभिषेक-प्रयाता** - ஸ்நானம் செய்து நியமத்துடன் இருப்பவளும், **अतिथिभ्यः** - அதிதிகளின் பொருட்டு, **विधिना** - முறைப்படி, **प्रयुक्तपूजा** - பூஜை செய்தவளும், **वल्कलिनी** - மரவுரியைத் தரித்தவளுமான, **सा** அவள், **पत्युः**- தன் கணவரின், **प्रजासन्ततये** - ஸந்ததியின் தொடர்பிற்காக, **वन्येन**-காட்டிலுண்டான பொருள்களால், **शरीरं**-சரீரத்தை, **बभार** - தரித்தாள (காப்பாற்றிவந்தாள்).

(க-து) ஸீதை அவ்வாச்ரமத்தில் வசித்துக் கொண்டு, தமஸா நதியில் ஸ்நானம் செயது தூய்மை பெற்றவளாக, மரவுரி தரித்து, தன்கணவரின் ஸந்ததியைக் காப்பதற்காக, காட்டிலுள்ள பழம் முதலியவற்றை ஆஹாரமாகக் கொண்டு தன் உடலைக் காப்பாற்றி வந்தாள்.

अपि प्रभुः सानुशयोऽधुना स्यादित्युत्सुकः शक्रजितोऽपि हन्ता।
शशंस सीतापरिदेवनान्तमनुष्ठितं शासनमग्रजाय ॥ ८३ ॥

"**प्रभुः** - அரசர், **अधुना** - இப்பொழுது, **सानुशयः** - மனவிரக்கமுடையவராக, **अपि स्यात्** - இருப்பாரா?" **इति** என, **उत्सुकः** - ஆவலுடையவனும், **शक्रजितः हन्ता अपि** - இந்திரஜித்தைக் கொன்றவனுமான லக்ஷ்மணனும், **सीतापरिदेवनान्तं** - ஸீதையின் புலம்புதலை முடிவாகக் கொண்டதும், **अनुष्ठितं** - செய்யப் பட்டதுமான, **शासनं** - உத்தரவை, **अग्रजाय** - தமையனாரின் பொருட்டு, **शशंस** - சொன்னான்.

(க-து) 'இப்பொழுது ஒருகால் ராமர் மன விரக்க முடையவராக இருப்பாரோ?' என ஆசை கொண்ட லக்ஷ்மணன், அயோத்தி வந்து, ஸீதையை ரதத்தில் ஏற்றி அழைத்துச் சென்றது தொடங்கி, அவளது புலம்பலிலே முடிந்தவரை, ராமாஜ்ஞை நிறைவேற்றப்பட்ட தென்பதைத் தமையனுருக்குத் தெரிவித்தான்.

अपि-प्रभुः सानुशयः - 'ராமர், யோசியாது ஸீதையைக் காட்டிலே விடச்சொல்லியிருப்பார்; ஒரு வேளை இப்பொழுது இரக்கம் கொண்டு, பிறருக்கு இவ்விஷயம் தெரிவதற்கு முன் ஸீதையை அழைத்துவா எனக் கூறுவார்' என்று லக்ஷ்மணன் நம்பிக்கையுடன் அயோத்தி திரும்பினான் போலும். रामो द्विर्नाभिभाषते என்பதை அறிந்தும் ராமரிடம் இத்தகைய மன மாற்றத்தை லக்ஷ்மணன் எதிர்பார்த்தது, அவனுக்கு ஸீதையினிடமுள்ள கருணையாலும், ஸீதைபடும் கஷ்டத்தை நேரிலே காட்டில் கண்டதினாலும் என்க. शक्रजितो हन्ता-अपि - அஸாதாரணனை இந்திரஜித்தை வென்றபெரும் வீரனாயினும், லக்ஷ்மணன் இச்சோக உணர்ச்சியை வெல்லமுடியவில்லை என்பதை अपि - என்ற சொல் காட்டியது. शक्रजितः हन्ता - என்பதால் லக்ஷ்மணனது சரீர பலமும் மனோ பலமும் குறிக்கப்பட்டன.

सीतापरिदेवनान्तम् - ஸீதையின் புலம்பலைக் கூறியது, ராமரது மனத்திலே இரக்கத்தை உண்டாக்குவதற்காகவுமாம்.

बभूव रामः सहसा सबाष्पस्तुषारवर्षीव सहस्यचन्द्रः ।
कौलीनभीतेन गृहान्निरस्ता न तेन वैदेहसुता मनस्तः ॥ ८४ ॥

रामः - ராமர், सहसा - உடனே, सबाष्पः - கண்களில் ஜலமுடையவராக, बभूव - ஆனார்; (அதனால்), तुषार - वर्षी - பனித்துளிகளை வர்ஷிக்கின்ற, सहस्यचन्द्र इव - பனிக் காலசந்திரன் போல், (अलक्ष्यत) - காணபபட்டார். कौली - नभीतेन - அபவாதத்திற்குப் பயந்த, तेन - அவரால், वैदे- हसुता - ஸீதை, गृहात् - வீட்டிலிருந்து, निरस्ता - நீக்கப் பட்டாள்; मनस्तः - மனத்திலிருந்து, न - இல்லை (நீக்கப் படவில்லை.)

(க-து) லக்ஷ்மணன் கூறியதைக் கேட்டவுடன், பனிக்காலத்திலே சந்திரன் பனித்துளிகளைப் பெருக்குவதுபோல், ராமசந்திரரும் கண்களில் நீர் பெருக்கினார். ஜன நிந்தைக்குப் பயந்து ஸீதையை வீட்டினின்றும் அனுப்பினாரே யன்றி, தம் மனத்திலிருந்து நீக்கினாரல்லர்.

இச்சுலோகத்தின் முதற்பகுதி லக்ஷ்மணன் சொன்ன செய்தியைக் கேட்டபின் ராமர் இருந்த நிலையைக் கூறியது; இப்படி வருந்துபவர் ஸீதையை ஏன் விடவேண்டுமெனின் அதன் காரணம் இரண்டாவது பகுதியிலே கூறப்பட்டது.

**सहस्यचन्द्रः** - பனிக்காலச் சந்திரன் ஒளியின்றி இருப்பான்; இவ்வுபமானம், ராமர் கண்ணீர் பெருக்கியதுடன் முகதேஜஸின்றியும் இருந்தார் என்பதைக் காட்டியது.

रविसंक्रान्तसौभाग्यः तुषारारुणमण्डलः ॥
निश्श्वासान्ध इवादर्शः चन्द्रमा न प्रकाशते ॥
[ஆரண்யம் 16-13.]

எனப் பனிக்கால சந்திரனை வர்ணிப்பர் வால்மீகி; பனியைச்சந்திரன் வர்ஷிப்பதாகக் கூறுவது கவி மரபு. **हिमांशुः** - என்பதும் சந்திரன் பெயர்களில் ஒன்று. **सहस्य**-தைமாதம்: இங்குப் பனிக்காலத்தைக் காட்டியது.

निगृह्य शोकं स्वयमेव धीमान् वर्णाश्रमावेक्षणजागरूकः ।
स भ्रातृसाधारणभोगमृद्धं राज्यं रजोरिक्तमनाः शशास ॥ ८५ ॥

**धीमान्** - புத்திமானும், **वर्णाश्रमावेक्षणजागरूकः** - வர்ணங்களையும் ஆச்ரமங்களையும் பாதுகாப்பதில் கருத்துடையவரும், **रजोरिक्तमनाः** - ஆசையற்ற மனமுடையவருமான, **सः** - அவர், **स्वयमेव** - தாமே, **शोकं** - துக்கத்தை, **निगृह्य** — அடக்கி, **भ्रातृसाधारणभोगं** - தம் ஸஹோதரர்களுக்குப்

பொதுவான ஸுகமுடையதும், ऋद्धं - ஐச்வர்யமுடையது மான, राज्यं - ராஜ்யத்தை, शशास - பரிபாலித்தார்.

(க-து) நல்ல அறிவு பெற்றுள்ளவராதலால் ராமர், தம் மனத்தெழுந்த சோகத்தைத் தாமே யடக்கியவராய், வர்ணாச்ரமங்களைக் கவனித்துச் செல்வம் நிறைந்த ராஜ்யத்தை நன்கு பரிபாலித்தார்.

स्वयमेव निगृह्य-தமது சோகத்தைத் தாமேயடக்கிக் கொண்டார். பிறர் உபதேசம் கேட்டு அன்று; சோகத்தை அடக்கத் திறனுண்டு என்பதை 'धीमान्' என்ற அடைமொழி காட்டியது; [ஸர்க்கம் 8-சலோகம், 27, ஐயும் காண்க.]

भ्रातृसाधारणभोगम्-'ராஜ்ய ஸுகத்தைத் தம்பிகள் எல்லோருக்கும் பொதுவாக வைத்தார்; ராஜ்யப் பாதுகாப்பைத் தாம் ஏற்றுக்கொண்டார்' என்பது ஓர் உரை; 'தம்பிகளுக்குத் தரப்படாத ராஜ்ய ஸுகம் எதையும் ராமர் அனுபவிக்கவில்லை; ராஜ்ய ஸுகத்தைத் தம்பிகளுடன் சேர்ந்தே (அவர்களோடொப்ப) அனுபவித்தார்' என்பது மற்றொரு உரை.

तामेकभार्यां परिवादभीरोः साध्वीमपि त्यक्तवतो नृपस्य ।
वक्षस्यसंघट्टसुखं वसन्ती रेजे सपत्नीरहितेव लक्ष्मीः ॥ ८६ ॥

परिवादभीरोः - உலகநிந்தைக்குப் பயந்தவரும், एकभार्यां (अपि) - ஒரே மனைவியாயினும், साध्वीं अपि - பதிவ்ரதையாயினும், तां - அந்த ஸீதையை, त्यक्तवतः - விட்டவருமான, नृपस्य - அரசருடைய, वक्षसि - மார்பில், असङ्घट्टसुखं - போட்டியற்ற ஸுகத்துடன், वसन्ती - வஸிக்கின்ற, लक्ष्मीः - ராஜ்யலக்ஷ்மி, सपत्नीरहिता इव - ஸபத்னியற்றவள்போல், रेजे - விளங்கினாள்.

(க-து) பதிவ்ரதையும் ஒரே மனைவியுமான ஸீதையை, ஜன நிந்தைக்குப் பயந்து பரித்யாகம் செய்து விட்ட ராமரது ஹ்ருதயத்திலே, ராஜ்யலக்ஷ்மி, சக்களத்தி யின்றிக் கணவரது அன்பை ஏகபோக

மாகப் பெற்றுள்ள ஸ்திரீபோல், ஸீதையின் போட்டியின்றிச் சுக மாக இடம் பெற்று இருந்தாள்.

மனைவியைத் துறந்தபின் ராஜ்யம் ஒன்றே ராம ரது கவனத்தைக் கவர்ந்தது என்பது கருத்து.

**साध्वीं अपि, एकपत्नीम् अपि** - இங்குள்ள **अपि** என்ற சொல், ஸீதை எவ்வகையிலும் விடத்தகாதவள் என்பதைக் காட்டியது. ராஜ்யத்தை அரசரின் மனைவியாகக் கூறுவது கவி மரபு. **संघट्टः** - இட நெருக்கடி - என்றும் பொரு ளுண்டு; **सपत्नीरहितेव** - என்பதை உபமானமாகவும் உத்ப் ரேக்ஷையாகவும் கொள்ளலாம்.

सीतां हित्वा दशमुखरिपुर्नोपयेमे यदन्यां
तस्या एव प्रतिकृतिसखो यत् क्रतूनाजहार।
वृत्तान्तेन श्रवणविषयप्रापिणा तेन भर्तुः
सा दुर्वारं कथमपि परित्यागदुःखं विषेहे ॥ ८७ ॥

**दशमुखरिपुः** - ராமர், **सीतां** - ஸீதையை, **हित्वा**-விட்ட பிறகு, **अन्यां** - வேறு ஸ்திரீயை, **न उपयेमे** - விவாஹம் செய்து கொள்ளவில்லை; **(इति)** - என்றும், **तस्याः एव** – அவளுடையதேயான, **प्रतिकृतिसखः** – (பொன்மயமான) பதுமையைத் துணையாகக்கொண்டு, **क्रतून्** – யாகங்களை, **आजहार** - செய்தார்; **(इति च)** - என்றும், **श्रवणविषयप्रापिणा**- (தன்)காதிற்கெட்டிய, **तेन**-அந்த, **भर्तुः** - கணவரின், **वृत्तान्तेन**- செய்தியினால், **सा** - அவள், **दुर्वारं** - ஸஹிக்கமுடியாத, **परित्यागदुःखं** - த்யாகத்தினால் உண்டான துக்கத்தை, **कथमपि** – எவ்வாறோ, **विषेहे** – ஸஹித்தாள்.

(க-து) தன்னைத் தியாகம் செய்தபின் வேறு ஸ்திரீயை ராமர் மணந்து கொள்ளவில்லை என்றும், தன்னைப் போன்ற தங்கப்

பதுமையைத் துணையாகக் கொண்டு யாகங்களைச் செய்தாரென்றும் கேள்வியுற்ற ஸீதை, கணவருக்குத் தன்னிடமுள்ள உறுதியான அன்பை யறிந்து, மனந்தேறியவளாய், தன்னை விட்டதினாலுண் டான துக்கம் பொறுக்க முடியாததாயினும் ஒருவாறு பொறுத்து வந்தாள்.

[यत् यत् தெளிவைக் கருதி இவ்விரண்டும் பதவுரையில் விடப்பட்டன.]

**तस्याः एव प्रतिकृतिसखः**- மனைவியில்லாதவர்க்கு யாகம் செய்ய உரிமையில்லாததால், ராமர் பொன்மயமான ஸீதை யை வைத்துக் கொண்டு யாகங்களைச் செய்தார்.

इति महाकवि श्रीकालिदासकृतौ

रघुवंशमहाकाव्ये चतुर्दशः सर्गः ॥



॥ श्रीः ॥

# रघुवंशे

## पञ्चदशः सर्गः

कृतसीतापरित्यागः स रत्नाकरमेखलाम् ।

बुभुजे पृथिवीपालः पृथिवीमेव केवलाम् ॥ १ ॥

**कृत-सीता-परित्यागः** - செய்யப்பட்ட ஸீதையின் பரித்தியாகத்தை உடைய (ஸீதையைவிட்ட), **सः** - அந்த, **पृथिवीपालः** - பூபாலர் (ராமர்), **रत्नाकर-मेखलां** - ஸமுத்திரத்தை மேகலையாகக் கொண்ட (கடல்சூழ்ந்த), **पृथिवीं केवलां एव** - பூமி ஒன்றை மாத்திரமே, **बुभुजे** - அனுபவித்தார்.

(க-து) ஸீதையைத் தியாகம் செய்தபின் ராமர் மறுபடியும் விவாஹம் செய்து கொள்ளாது, பூமியை மாத்திரமே அனுபவித்து வந்தார்.

**रत्नाकर मेखलाम्** - **पृथिवीमेव** - என்பது அகண்ட பூமண்டலத்தைக் குறித்து; **आसमुद्रक्षितीशानां** - என்பதை யும் காண்க: **बुभुजे** என்பதை, **भ्रातृसाधारणभोगमृद्धं राज्यं रंजोरिक्तमनाः शशास** (14.85) என்பதுடன் சேர்த்து நோக்கின் ராஜ்யப் பாதுகாப்பு செய்தலையே கவி, ராமர் அனுபவித்ததாகக் கூறினர் என்பது புலனாகும்.

लवणेन विलुप्तेज्यास्तामिस्रेण तमभ्ययुः ।

मुनयो यमुनाभाजः शरण्यं शरणार्थिनः ॥ २ ॥

**लवणेन** - லவணன் என்ற, **तामिस्रेण** - அஸுரனால், **विलुप्तेज्याः** - அழிக்கப்பட்ட யாகங்களையுடையவர்களும், **शरणार्थिनः** - ரக்ஷகனை விரும்பியவர்களும், **यमुनाभाजः** - யமுனாநதியின் தீரத்தில் வசிப்பவர்களுமான, **मुनयः** - முனிவர்கள், **शरण्यं** - ரக்ஷிப்பதில் ஸமர்த்தரான, **तं** - அந்த ராமரை, **अभ्ययुः** - அடைந்தார்கள்.

(க-து) அப்பொழுது லவணனால் பீடிக்கப்பட்ட முனிவர்கள் ராமரைச் சரணமடைந்தார்கள்.

லவணன் என்ற அஸுரனால் துன்புறுத்தப்பட்ட யமுனாதீரவாஸிகளான மஹர்ஷிகள், அரக்கரிடமிருந்து துன்பத்தை நீக்கிக் கொள்ள விரும்பி ராமரைச் சரணமடைந்தனர்.

லவணன், மது என்ற அரக்கனுக்குக் கும்பீநஸி என்ற அரக்கியினிடம் பிறந்தவன்; இக் கும்பீநஸி ராவணனுக்கு ஸஹோதரி முறையிலிருந்தவள்; மது, கடும் தவம் செய்து சிவபிரானிடமிருந்து ஒரு சூலாயுதம் பெற்றிருந்தான்; அவ்வாயுதம் அவனை எதிர்க்கின்ற எவரையும் சாம்பலாக்குமெனவும், அவன் மகனும் இச்சூலாயுதத்தை உபயோகித்துக் கொள்ளலாமெனவும் வரம் சிவபிரானால் அளிக்கப்பட்டிருந்தது. ஆயுதபலத்தினால் கர்வம் கொண்ட லவணன் மஹர்ஷிகளைத் துன்புறுத்திக் கொண்டிருந்தான்.

"मधुनामा महादैत्यः पुरा कृतयुगे प्रभो ।
.........................................
तस्य तुष्टो महादेवः ददौ शूलमनुत्तमम् ॥
रावणस्यानुजा भार्या तस्य कुंभीनसी प्रभो ।
तस्यां तु लवणो नाम राक्षसो भीमविक्रमः ॥
पीडितास्तेन राजेन्द्र वयं त्वां शरणं गताः ॥"

அத்யாத்ம-ராமாயணம்.-உத்தரகாண்டம்.

यश्च त्वामभियुञ्जीत युद्धाय विगतज्वरः ।
तं शूलो भस्मसात् कृत्वा पुनरेष्यति ते करम् ॥
भवतः पुत्रमेकं तु शूलमेतद् गमिष्यति ।
यावत् करस्थः शूलोऽयं भविष्यति सुतस्य ते ।
अवध्यः सर्वभूतानां शूलहस्तो भविष्यति ॥

*உத்தர ஸ்ரீ ராமாயணம் ஸர்க்கம் 61.*

अवेक्ष्य रामं ते तस्मिन् न प्रजह्रुः स्वतेजसा ।
त्राणाभावे हि शापास्त्राः कुर्वन्ति तपसो व्ययम् ॥ ३ ॥

**ते** - *அவர்கள் (முனிவர்கள்)*, **रामं** - *ராமரை*, **अवेक्ष्य** - *(தங்களுக்கு ரக்ஷகராக) எண்ணி*, **तस्मिन्** - *அந்த லவணாசுரனை*, **स्वतेजसा** - *தங்களுடைய தேஜஸினால் (சக்தியினால்)*, **न प्रजह्रुः** - *அடிக்கவில்லை. (தண்டிக்கவில்லை)*; **हि** - *ஏனென்றால்*, **त्राणाभावे (सति)**-*ரக்ஷகன் இல்லாதபொழுது*, **शापास्त्राः** - *சாபத்தை ஆயுதமாகக்கொண்ட மகர்ஷிகள்*, **तपसः** - *தவத்தின்*, **व्ययं** - *செலவை*, **कुर्वन्ति** - *செய்கிறார்கள்.*

*(க-து) தங்களுக்கு ரக்ஷகராக ராமர் இருப்பதைக் கருதி, லவணனை மஹரிஷிகள் சாபத்தினால் தண்டிக்காது விட்டனர்; ஏனெனில் சாபம் தருவதையே ஆயுதமாகக் கொண்ட முனிவர்கள், வேறு ரக்ஷகர் இல்லாத பொழுதே தவத்தைச் செலவழித்துத் தற்காப்புச் செய்து கொள்வர்.*

*தாங்கள் தரும் சாபம் பலிக்கத் தபோபலம் செலவாகின்றதாகையால் மஹரிஷிகள் தவவலிமையை வீணே செலவு செய்ய விரும்பவில்லை.*

प्रतिशुश्राव काकुत्स्थस्तेभ्यो विघ्नप्रतिक्रियाम् ।
धर्मसंरक्षणार्थैव प्रवृत्तिर्भुवि शार्ङ्गिणः ॥ ४ ॥

**काकुत्स्थः** - ராமர், **तेभ्यः** - அந்த முனிவர்கள் பொருட்டு, **विघ्नप्रतिक्रियां** - இடையூற்றின் பரிஹாரத்தை, **प्रतिशुश्राव** - பிரதிஜ்ஞை செய்தார். **भुवि** - பூமியில், **शार्ङ्गिणः** - விஷ்ணுவின், **प्रवृत्तिः** - அவதாரமானது, **धर्मसंरक्षणार्था एव** - தர்மப் பாதுகாப்பையே பிரயோஜனமாக உடையது.

(க-து) இவ்வுலகிலே மஹாவிஷ்ணுவின் அவதாரம் தர்மத்தைக் காப்பதற்காகவே ஏற்பட்டதாகையால், ராமர் அவர்களின் இடையூற்றை நீக்குவதாக வாக்குறுதி யளித்தார்.

ராமர் விஷ்ணுவின் அவதாரம் என்பதைக் கவி இங்கு நினைவூட்டுகின்றார். இச்சுலோகத்தின் இரண்டாவது பாதியை, **परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् । धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे** என்ற கீதா வாக்யத்தை மனத்திலே கொண்டு கவி பேசுகின்றார்.

"प्रतिशुश्राव"— सपदि क्रिया केवलमुत्तरम् - [माघ-2] என்றபடி முனிவர்களின் கஷ்டத்தை நீக்குவதற்கான வேலையைச் செய்யவேண்டியிருக்க, ராமர் வாக்குறுதி அளித்ததற்குப் பயன் யாதெனில், அவர்களது அச்சத்தை நீக்கி ஆறுதலளித்தற்காக.

ते रामाय वधोपायमाचख्युर्विबुधद्विषः ।
दुर्जयो लवणः शूली विशूलः प्रार्थ्यतामिति ॥ ५ ॥

**ते** - அவர்கள், **रामाय** - ராமர் பொருட்டு, **विबुधद्विषः** - தேவர்களின் சத்ருவான லவணாஸுரனின், **वधोपायं** - வதத்திற்கான உபாயத்தை, —"**शूली**-சூலத்தைக் கையில் உடைய, **लवणः** - லவணாஸுரன், **दुर्जयः** - ஜயிக்கக்கூடாதவன்; (அதனால்) **विशूलः** - சூலமற்ற அவன், **प्रार्थ्यताम्** - எதிர்க்கப்படவேண்டும்", **इति** - என்று, **आचख्युः** - சொன்னார்கள்.

(க-து) 'சூலத்துடனிருக்கும்பொழுது லவணனைக் கொல்வது முடியாது; ஆகையால் சூலமின்றி இருக்கும் பொழுதே அவனை எதிர்க்கவேண்டு'மென அவனைக் கொல்வதற்கான உபாயத்தையும் ரிஷிகள் ராமருக்கு உரைத்தனர்.

**दुर्जयः लवणः शूली**—இரண்டாவது சுலோகத்தின் உரையைக் காண்க.

आदिदेशाथ शत्रुघ्नं तेषां क्षेमाय राघवः ।
करिष्यन्निव नामास्य यथार्थमरिनिग्रहात् ॥ ६ ॥

**अथ** - பிறகு, **तेषां** - அந்த முனிவர்களுக்கு, **क्षेमाय** - க்ஷேமத்தைச் செய்வதற்காக, **राघवः** - ராமர், **शत्रुघ्नं** - சத்ருக்னனை, **अस्य** - அவனுடைய (சத்ருக்னனுடைய), **नाम** - பெயரை, **अरिनिग्रहात्** - சத்ருவை ஸம்ஹரித்தல் என்ற காரணத்தினால், **यथार्थं** - அர்த்தமுடையதாக, **करिष्यन्निव** - செய்யவிரும்புகின்றவர்போல், **आदिदेश** - ஆஜ்ஞாபித்தார்.

(க-து) முனிவர்களுக்கு க்ஷேமத்தைச் செய்வதன் பொருட்டு, ராமர், சத்ருக்னனுக்கு உத்தரவிட்டார்.

சத்ருக்னன், என்ற சொல்லுக்குப் பகைவர்களைக் கொன்றவன் என்பதுபொருள். சத்ருக்னன் இதுவரை எந்தப் பகைவனையும் கொன்றவனல்லனாதலால் அப்பெயர் அவனுக்குப் பொருளுடையதாக இல்லை; எனவே, அச்சொல், இப்பொழுது லவண ஸம்ஹாரத்தினால் பொருளோடு கூடியதாக வேண்டுமெனக் கருதிப் போலும் ராமர் சத்ருக்னனை ஏவினார் எனக் கவி, சத்ருக்னனை அனுப்பியதன் காரணத்தை உத்ப்ரேக்ஷித்தார். இவ்வுத்ப்ரேக்ஷையால், சத்ருக்னனுடைய பலம் உலகு அறிய வேண்டுமென ராமருக்கு விருப்புண்டு என்பதும் தொனிக்கின்றது.

சத்ருக்னனை அனுப்பியதன் உண்மையான காரணம் அடுத்து வரும் சுலோகத்தில் கூறப்படுகின்றது.

यः कश्चन रघूणां हि परमेकः परंतपः ।
अपवाद इवोत्सर्गं व्यावर्तयितुमीश्वरः ॥ ७ ॥

**हि** - ஏனென்றால், **परंतप:**-சத்ருவைத் தபிக்கச் செய்கின்ற, **रघूणां** ரகுவம்சத்தில் பிறந்தவர்களில், **य: कश्चन एक:** - எவன் ஒருவனும் (எவனும்),—**अपवाद:** - விசேஷ விதியானது, **उत्सर्गं इव**-ஸாமான்ய விதியை (பாதிப்பது) போல்,—**परं** - சத்ருவை, **व्यावर्तयितुं**-திருப்புவதற்கு (பாதிப்பதற்கு), **ईश्वर:** - சக்தியுடையவன்.

(க-து) ரகு குலத்தில் பிறந்த எவருமே பகைவரைத் தபிக்கச் செய்யும் ஆற்றல் உடையவர்கள்; பொது விதியைச் சிறப்பு விதி விலக்கி விடுவது போல் ரகு குலத்தினர் எவருமே பகைவரை அழிக்கும் வன்மை பெற்றவர்.

சாஸ்த்ரங்களிலே பொதுவிதி, சிறப்புவிதி என இருவகை விதிகள் காணப்படுகின்றன. உதாஹரணமாக 'உயிர்களைக் கொல்லுதல் கூடாது' [न हिंस्यात् सर्वा भूतानि] என்பது பொது விதி; இவ்விதியின்படி ஒரு பிராணியையும் கொலை செய்தல் கூடாது என்பது கூறப்படுகின்றது; [अग्नीषोमीयं पशुमालभेत] ஜ்யோதிஷ்டோமயாகத்தில் ஆடு கொல்லப்படவேண்டும் என்பது விசேஷவிதி; **न हिंस्यात्** - என்ற பொது விதிக்கும், **अग्नीषोमनीयं**....என்ற சிறப்பு விதிக்கும் முரண் ஒன்றுமில்லை; ஏனெனில், இச்சிறப்பு விதியானது, தனக்கு இலக்காகிய விஷயத்தில் பொது விதியைச் செல்லாததாகச் செய்து விடுகின்றது.

**'सामान्यशास्त्रतो नूनं विशेषो बलवान् भवेत्'** என்பதையும் காண்க.

சத்ருக்னனுக்குச் சிறப்பு விதியும் பகைவர்களுக்குப் பொது விதியும் உபமானம்.

अग्रजेन प्रयुक्ताशीस्ततो दाशरथी रथी ।
ययौ वनस्थलीः पश्यन् पुष्पिताः सुरभीरभीः ॥ ८ ॥

**ततः** - பிறகு, **अग्रजेन**-தமையனுரான ராமரால், **प्रयुक्ताशीः** - செய்யப்பட்ட ஆசிர்வாதத்தை உடையவனும், **रथी** - ரதத்தில் ஏறியவனும், **अभीः** - பயமற்றவனுமான, **दाशरथिः**- சத்ருக்னன், **पुष्पिताः** - புஷ்ப முடையவைகளும், **सुरभीः** - வாஸனை யுடையவைகளுமான, **वनस्थलीः** - வனப்ரதேசங்களை, **पश्यन्** - பார்த்துக்கொண்டு, **ययौ** - சென்றான்.

(க-து) சத்ருக்னன், ராமரால் ஆசிர்வதிக்கப்பட்டுப் பயமின்றி ரதத்தில் ஏறியவனுகப் புஷ்பமுள்ள வனப்பிரதேசங்களைப் பார்த்துக் கொண்டு சென்றான்.

**दाशरथिः** - என இங்கே சத்ருக்னனைக் குறித்தது, அஸுரர்களை அழித்த தசரதரது மகனுதலால் இவனும் அரக்கர்களை யழிக்கும் ஆற்றல் பெற்றவன் எனக் காட்டுதற்காக; **अग्रजेन प्रयुक्ताशीः**—'सा हि रक्षणविधौ तयोः क्षमा' (11-6 என முன்பும் கவி கூறியுள்ளதைக் காண்க.

रामादेशादनुगता सेना तस्यार्थसिद्धये ।
पश्चादध्ययनार्थस्य धातोरधिरिवाभवत् ॥ ९ ॥

**रामादेशात्** - ராமருடைய ஆஜ்ஞையினுல், **अनुगता**-பின் சென்ற, **सेना** - சேனை, **तस्य** - அந்தச் சத்ருக்னனுக்கு,— **अध्ययनार्थस्य**—படித்தல் என்பதைப் பொருளாகக் கொண்ட, **धातोः** - इ என்னும் தாதுவிற்கு, **पश्चात्** - பின்னுல் (உள்ள) **अधिः इव** - 'अधि' - என்னும் உபஸர்க்கம் போல், - **अर्थसिद्धये**-காரியத்தை ஸாதிப்பதின் பொருட்டு, **अभवत्**-இருந்தது.

(க-து) ராமரால் அனுப்பப்பட்ட சேனை, சத்ருக்னன் பின்னே சென்றது ; ஆனுல், சத்ருக்னன் ஏற்றுக்கொண்ட காரியத்தை நிறை

வேற்றும் விஷயத்தில் அச்சேனை, பெரிய உதவி ஒன்றும் செய்ய வில்லை. ஏனெனில் சேனையின் உதவியின்றியே சத்ருக்னன் சத்ருவை அழிக்கச் சக்தி வாய்ந்தவன்.

**पश्चाद्ध्ययनार्थस्य धातोरधिरिव** - इ என்ற வினையடிக்குப் 'போதல்' எனப் பொருள்; அவ்வினையே अधि - என்ற உபஸர்க்கத்திற்கு முன்னிருக்கும் பொழுது 'படித்தல்' என்ற அர்த்தத்தைக் கொடுக்கின்றது; இரண்டு பொருளையும் வினையடியே தருகின்ற தன்றி உபஸர்க்கம் ஒரு பொருளையும் கூறுவதில்லை ; इ என்ற தாதுவிற்கே படித்தல் என்ற பொருளும் உண்டென்பதை, अधि - என்ற உபஸர்க்கம் காட்டுகின்றது, தீபத்தின் ஒளி பொருள்களைக் காட்டுவது போல. தீப ஒளி பொருள்களை உண்டாக்காது; இருக்கும் பொருளைத்தான் காட்டும். அதுபோல வெற்றியைப்பெறும் விஷயத்திலே ஸேனைகள் உதவி யொன்றும் செய்யவில்லை. வெற்றியை அவனே பெற்றான், வினையடியே பொருளை வெளியிடுவது போல; உபஸர்க்கத்துடன் தாது இருக்க வேண்டுமென வியாகரண நியதியையனுசரித்து உபஸர்க்கம் வருவது போல், அரசனுக்கு ஸேனை அங்கமாதலால் சத்ருக்னனுடன் ஸேனை சென்றது. இங்கே சத்ருக்னனுக்கு इ என்ற தாதுவும், ஸேனைக்கு अधि - என்ற உபஸர்க்கமும், வெற்றிக்குப் பொருளும் உபமானங்களாம்.

**सेनापरिच्छदस्तस्य** (1 - 19) **स्ववीर्यगुप्ता हि मनोः प्रसूतिः**, (2 - 4) **अनीकिनीनां समरेऽग्रयायी** (18-10) என்றவைகளைக் காண்க.]

'வினையடி தெரிவிக்கின்ற பொருளையே பின்வந்த உபஸர்க்கம் காட்டுவது போல், முன் சென்ற சத்ருக்னன் கொண்டவெற்றியை உலகிற்குக்காட்டவே சேனை பயன்பட்டது; வெற்றியைப் பெறுவதிலே யன்று' எனவும் இவ்வுப

மானக் கருத்தை விளக்கலாம் अजयदेकरथेन स मेदिनीमुदधिनेमिमधिज्य शरासनः । जयमघोषयदस्य तु केवलं गजवती जवतीव्रहया चमूः ॥ (9-10) என்றதன் இரண்டாவது பகுதி இக் கருத்தை வலியுறுத்தும். 'रामादेशात् या सेना अनुगता सा पश्चात् तस्य सिद्धये अभवत्। प्रथमं तु स एव कार्यसिद्धयेऽभूदित्यर्थः' என்பர் நாராயணர்.

आदिष्टवर्त्मा मुनिभिः स गच्छंस्तपतां वरः ।
विरराज रथप्रष्ठैर्वालखिल्यैरिवांशुमान् ॥ १० ॥

रथप्रष्ठैः - (தன்னுடைய) ரதத்திற்கு முன்னால் செல்லுகின்ற, मुनिभिः - முனிவர்களினால், आदिष्टवर्त्मा - காண்பிக்கப்பட்ட மார்க்கமுடையவனாக, गच्छन् - சென்றுகொண்டு-तपतां - வீரர்களில், वरः - சிரேஷ்டனான, सः - அந்தச் சத்ருக்னன்,—वालखिल्यैः - (சூரியன் ரதத்திற்கு முன் செல்லுகின்ற) வாலகில்யர்கள் என்ற ரிஷிகளினாலே, अंशुमानिव - சூர்யன் (விளங்குவது) போல,—विरराज - விளங்கினான்.

(க-து) முனிவர் காட்டிய வழியில் சத்ருக்னன் சென்றான்.

ரதத்திற்கு முன் சென்று மஹர்ஷிகள் வழி காட்டவும் சத்ருக்னன் அவ்வழியே சென்றான்.

வாலகில்யர்கள் - என்ற அறுபதினாயிரம் தேவரிஷிகள் சூரியனுக்கு முன் அவனைப் புகழ்ந்து கொண்டு செல்வதாக ஸ்ரீ பாகவதம் கூறும்; முனிவர்கள் பின் சென்ற சத்ருக்னன், வாலகில்யர்கள் பின் செல்லும் சூரியன் போல் விளங்கினான்; சத்ருக்னனுக்குச் சூரியனும் மஹர்ஷிகளுக்கு வாலகில்யர்களும் உபமானம். तपतां वरः - என்பதை சூரியனுக்கும், रथप्रष्ठैः-என்பதை வாலகில்யர்களுக்கும் விசேஷணமாகக் கொள்ள வேண்டும். तपतां वरः - ஒளிருகின்றவை

களில் சிறந்தவன்; रथप्रष्ठैः - '(சூரியனது) ரதத்திற்கு முன் செல்கின்ற' என்பது பொருள்.

"वालखिल्याः सहस्राणि षष्टिर्ब्रह्मर्षयोऽमलाः ।
पुरतोऽभिमुखं यान्ति स्तुवन्ति स्तुतिभिर्विभुम् ॥"
(8-11) என்பது பாகவதம்'

तस्य मार्गवशादेका बभूव वसतिर्यतः ।
रथस्वनोत्कण्ठमृगे वाल्मीकीये तपोवने ॥ ११ ॥

यतः - போய்க்கொண்டிருக்கிற, तस्य - அந்த சத்ருக்னனுக்கு, मार्गवशात् - மார்க்கவசததால், रथस्वन-उत्कण्ठ - मृगे - ரதத்தின் சப்தத்தினால் கழுத்தை (தலை) நிமிர்த்திய மான்களையுடைய, वाल्मीकीये - வால்மீகியினுடையதான, तपोवने - தபோவனததில், एका वसतिः - ஓர் இரவு (வாஸம்), बभूव - இருந்தது (நேர்ந்தது).

(க-து) செல்லும் பொழுது சத்ருக்னன், வழியில் இருந்த காரணத்தால் வால்மீகியின் ஆச்ரமத்திலே ஓர் இரவு தங்கினான்; அவ்வாச்ரமத்திலுள்ள மான்கள், ரத ஒலியைக் கேடுத் தலை நிமிர்த்தி அவனை நோக்கின.

मार्गवशात् - விரும்பிச் சென்றவனன்று; தான் செல்லும் வழியிலே இருந்ததால் வால்மீகியின் ஆச்ரமத்திற்குச் சத்ருக்னன் சென்றான்.

"रथस्व........मृगे-इति - मृगाणामपि हर्षकथनात् तपोवनस्यातिथेयत्वमुक्तम्" अरुणगिरिः ॥

तमृषिः पूजयामास कुमारं क्लान्तवाहनम् ।
तपःप्रभावसिद्धाभिर्विशेषप्रतिपत्तिभिः ॥ १२ ॥

क्लान्तवाहनं - சிரமமடைந்த குதிரைகளையுடைய, तं - कुमारं - அந்த ராஜகுமாரனை, ऋषिः - வால்மீகி மகர்ஷி, तपः-

**प्रभाव-सिद्धाभिः** – *தபோமஹிமையினால் கிடைத்த,* **विशेष-प्रतिपत्तिभिः** - *சிறந்தபொருள்களினால்,* **पूजयामास**–*பூஜித்தார் (உபசரித்தார்).*

*(க-து) வால்மீகி முனிவர், தமது தவத்தின் மஹிமையால் கிடைத்த சிறந்த பொருள்களைக் கொண்டு, களைப்படைந்த பரிவாரங்களையுடைய சத்ருக்னனுக்கு உபசாரங்களைச் செய்தார்.*

*ராஜோபசாரத்திற்குரிய பொருளை வால்மீகி எவ்வாறு பெற்றார் என்பது,* **तपःप्रभावसिद्धाभिः** - *என்பதால் தெரிவிக்கப்பட்டது.*

तस्यामेवास्य यामिन्यामन्तर्वत्नी प्रजावती ।
सुतावसूत संपन्नौ कोशदण्डाविव क्षितिः ॥ १३ ॥

**तस्यामेव** - *அதே,* **यामिन्यां** - *ராத்திரியில்* **अन्तर्वत्नी** - *கர்ப்பிணியும்,* **अस्य** - *அந்தச் சத்ருக்னனுடைய,* **प्रजावती** - *ஸஹோதரர் பத்தினியுமான ஸீதை,—***क्षितिः**-*பூமியானது,* **संपन्नौ** - *பூர்ணமான,* **कोशदण्डौ इव** - *ஐச்வர்யத்தையும் சேனையையும் (ஈவது) போல—***सुतौ** - *இரண்டு குமாரர்களை* **असूत** - *ஈன்றாள்.*

*(க-து) அதே இரவில் ஸீதை இரண்டு புத்ரர்களைப் பெற்றாள்.*

*சத்ருக்னன் தங்கியிருந்த அவ்விரவிலேயே, ஸீதை, அரசர்களுக்குப் பூமி செல்வத்தையும் சேனையையும் ஈவது போல்—இரண்டு குழந்தைகளைப் பெற்றாள்.* 'उपमया तस्याश्चरितार्थता द्योत्यते' - अरुणगिरिः ।

संतानश्रवणाद्भ्रातुः सौमित्रिः सौमनस्यवान् ।
प्राञ्जलिर्मुनिमामन्त्र्य प्रातर्युक्तरथो ययौ ॥ १४ ॥

**भ्रातुः** - *ஜ்யேஷ்டஸஹோதரரின்,* **सन्तानश्रवणात्** - *ஸந்ததியைப்பற்றிக் கேட்டதினால் (புத்திரர் பிறந்ததைக்*

கேட்டதினால்), सौमनस्यवान् - ப்ரீதியடைந்த, सौमित्रिः - சத்ருக்னன், प्रातः - காலையில், युक्तरथः सन् - பூட்டிய ரத முடையவனாக இருந்துகொண்டு, प्राञ्जलिः - கைகூப்பிய வனாக, मुनिं - முனிவரை (வால்மீகியினிடம்), आमन्त्र्य - கேட்டுக்கொண்டு (விடை பெற்றுக்கொண்டு), ययौ - சென் றான்.

(க-து) குழந்தைகள் பிறந்ததைக் கேட்டுச் சந்தோஷித்த சத் ருக்னன் காலையில் முனிவரிடம் விடைபெற்றுக்கொண்டு சென்றான்.

தன் ஸஹோதரருக்கு ஸந்ததி பிறந்ததைக் கேட்டுச் சந்தோஷமடைந்தான் சத்ருக்னன்.

स च प्राप मधूपघ्नं कुम्भीनस्याश्च कुक्षिजः ।
वनात् करमिवादाय सत्त्वराशिमुपस्थितः ॥ १९ ॥

स च - அந்தச் சத்ருக்னனும், मधूपघ्नं - 'மதுபக்னம்' என்ற லவணாஸுரனின் நகரத்தை, प्राप - அடைந்தான். कुम्भीनस्याः - கும்பீநஸியின், कुक्षिजश्च - புத்ரனான லவண னும், वनात् - காட்டிலிருந்து, करं इव - கப்பத்தை (வாங்கிக் கொண்டு வருவது) போல, सत्त्वराशिं - பிராணிகளின் குவி யலை, आदाय - எடுத்துக்கொண்டு, उपस्थितः - வந்தான்.

(க-து) சத்ருக்னன் லவணனது வாஸ ஸ்தானமான மதுபக்னம் செல்ல அதே சமயத்தில் லவணனும் காட்டினின்றும் கப்பம் பெற்று வருபவன் போல் பிராணிகளின் குவியலை எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்தான்.

वनात् करमिव - லவணன் தனது உணவுக்காகக் கொன்று கொண்டு வந்த மிருகங்களை, வனம் அவனிடம் அச்சமுற்றுக் கொடுத்த கப்பமாகக் கவி உத்ப்ரேக்ஷித்தார்.

मधूपघ्नम् - மது என்ற லவணனது தந்தை இருந்த இடம்.

धूमधूम्रो वसागन्धी ज्वालाबभ्रुशिरोरुहः ।
क्रव्याद्गणपरीवारश्चिताग्निरिव जंगमः ॥ १६ ॥

**धूमधूम्रः** - புகைபோல் கருஞ்சிவப்பானவனும், **वसागन्धी** - மாம்ஸக்கொழுப்பின் நாற்றமுடையவனும், **ज्वाला-बभ्रुशिरोरुहः** - அக்னிஜ்வாலை போன்ற செம்பட்டையான தலைமயிர்களை உடையவனும், **क्रव्याद्गणपरीवारः** - பசசை மாமிசம் தின்னும் ராக்ஷஸக்கூட்டமாகிய பரிவாரத்தை யுடையவனுமான லவணன், **जङ्गमः** - சஞ்சரிக்கின்ற, **चिताग्निरिव** - சிதையின் அக்நிபோல், (**स्थितः**) - இருந்தான்.

(க-து) சிதையின் அக்னி போல் மிகவும் அருவருக்கத்தக்க நிலையில் அவன் காணப்பட்டான்.

புகைபோல் கருஞ்சிவப்பான நிறமுடையவனும், மாம்ஸக் கொழுப்பின் நாற்றம் வீசுகின்றவனும், அக்னிஜ்வாலை போல் செம்பட்டையான தலைமயிர்களையுடையவனும், மாமிசம் தின்கின்ற ராக்ஷஸர்களால் சூழப்பட்டவனுமான லவணன், பிணத்தை எரிக்கின்றதும் நகர்ந்து செல்லுகின்றதுமான சிதையிலுள்ள அக்னி போல் மிகவும் அருவருக்கத் தக்க நிலையில் காணப்பட்டான்.

**चिता** - சிதை; பிணங்களைக் கொளுத்துவதற்காக வைக்கப்பட்டுள்ள விறகு அடுக்கு. கவி லவணனைச் சிதைநெருப்புடன் ஒப்பிடுகிறார். ஒப்பிடுதற்குக் காரணமான தன்மைகள் நான்கு விசேஷணங்களால்காட்டப்படுகின்றன; **धूमधूम्रः**- சிதை நெருப்பு அதனின்றும் எழும் புகை காரணமாகக் கருஞ் சிவப்பாக இருப்பது; (2) **वसागन्धी** - எரிகின்ற பிணங்களின் நிண நாற்ற முடையது சிதாகனி, (3) **ज्वाला-बभ्रुशिरोरुहः** - ஜ்வாலைகளாகிய சிவந்த கேச முடையது; (4) **क्रव्याद्गणपरीवारः** - பச்சை மாமிசந் தின்னும் கழுகுகளை அரு

நிலையுடையது சிதையின் அக்னி. இந்நான்கு அடைமொழிகள் லவணனுக்குப் பொருந்தும்வகையைப் பதவுரையில் காண்க.

**जङ्गमः चिताग्निः इव** – சிதை நெருப்புத் தானே இடம் விட்டுப் பெயராதாயினும் நகர்ந்து வரும் லவணனுக்குப் பொருத்தமான உபமானமாக இருக்கவேண்டியதைக் கருதி அதை, **जङ्गम** - என்ற சொல்லால விசேஷித்தார்.

अपशूलं तमासाद्य लवणं लक्ष्मणानुजः ।
रुरोध संमुखीनो हि जयो रन्ध्रप्रहारिणाम् ॥ १७ ॥

**लक्ष्मणानुजः** - சத்ருக்னன், **अपशूलं** - சூலமில்லாமல் இருக்கின்ற, **तं** - அந்த லவணனை, **आसाद्य** - அடைந்து (பார்த்து), **रुरोध** - எதிர்த்தான், (ஏனென்றால்), **रन्ध्रप्रहारिणां** - (சத்ருக்களின்) பல மற்ற நிலையில் எதிர்ப்பவர்களுக்கு, **जयः** - ஜயமானது, **संमुखीनः हि** - எதிரில் இருக்கிறது.

(க-து) சத்ருவின் பலமற்ற நிலையில் எதிர்ப்பவர்களுக்கு வெற்றி நிச்சயமாதலால, சத்ருக்னன், சூலமின்றி இருந்த லவணனை உடனே எதிர்த்தான்.

नातिपर्याप्तमालक्ष्य मत्कुक्षेरद्य भोजनम् ।
दिष्ट्या त्वमसि मे धात्रा भीतेनेवोपपादितः ॥ १८ ॥

इति संतर्ज्य शत्रुघ्नं राक्षसस्तज्जिघांसया ।
प्रांशुमुत्पाटयामास मुस्तास्तम्बमिव द्रुमम् ॥ १९ ॥

**राक्षसः** - ராக்ஷஸன் (லவணன்), "**अद्य** - இன்று, **मत्कुक्षेः** - என் வயிற்றிற்கு, **भोजनं** - ஆகாரத்தை, **नातिपर्याप्तं** - மிகவும் போதாததாக, **आलक्ष्य** - கண்டு, **भीतेनेव** - பயந்த

வன் போன்ற, धात्रा - பிரம்மதேவனால், दिष्ट्या - அத்ருஷ்ட வசமாக, मे - என்பொருட்டு, त्वं - நீ, उपपादितः - ஏற்படுத்தப்பட்டவனாக, असि-இருக்கிறாய்", इति - என்று (சொல்லி), शत्रुघ्नं - சத்ருக்னனை, सन्तर्ज्य - பயமுறுத்தி விட்டு, तज्जिघांसया - அவனைக் கொல்ல வேண்டு மென்கின்ற விருப்பத்தினால், प्रांशुं - உயரமான, द्रुमं - ஒரு மரத்தை, मुस्तास्तम्बमिव - கோரையைப் (பிடுங்குவது) போல், उत्पाटयामास - பிடுங்கினான்.

(க-து) 'இன்றைய தினம் எனக்கு உணவு போதாதென அஞ்சிப் பிரம்மதேவன் உன்னை எனக்கு உணவாக அனுப்பி வைத்திருக்கின்றான்போலும்' என்று சொல்லி லவணன் சத்ருக்னனை மிரட்டியபின், அவனைத் தாக்குவதற்காக, அருகிலிருந்த பெரிய மரத்தைக் கோரையைப் பிடுக்குவது போல் அநாயாஸமாகப் பிடுங்கி சத்ருக்னன் மேல் எறிந்தான்.

सौमित्रेर्निशितैर्बाणैरन्तरा शकलीकृतः ।
गात्रं पुष्परजः प्राप न शाखी नैर्ऋतेरितः ॥ २० ॥

नैर्ऋतेरितः - ராக்ஷஸனால் எறியப்பட்ட, शाखी - அந்த மரம், अन्तरा - மத்தியிலேயே, निशितैः - மிகக் கூர்மையான, बाणैः - பாணங்களினால்: शकलीकृतः - துண்டு துண்டாகச் செய்யப்பட்டு, सौमित्रेः - சத்ருக்னனுடைய, गात्रं - சரீரத்தை, न प्राप - அடையவில்லை; (किन्तु - ஆனால், पुष्परजः - (அம்மரத்திலுள்ள) புஷ்பங்களின் மகரந்தப்பொடி, प्राप - (அவன் சரீரத்தை) அடைந்தது.

(க-து) சத்ருக்னன் அம்மரம் தன்னிடம் வருவதற்கு முன்பே அதனைத் துண்டு துண்டாகச் செய்தான்.

தன்னை நோக்கி வீசப்பட்ட அம்மரத்தைச் சத்ருக்னன் கூர்மையான பாணங்களினால் அது தன்னை அடைவதற்கு

முன்பே துண்டுதுண்டாகச் செய்தான்; காற்றிலே வீசப் பட்ட அம்மரத்தின் மகரந்தப்பொடிகள் தான் சத்ருக்னனை அடைந்தன.

विनाशात्तस्य वृक्षस्य रक्षस्तस्मै महोपलम् ।
प्रजिघाय कृतान्तस्य मुष्टिं पृथगिव स्थितम् ॥ २१ ॥

रक्षः - ராக்ஷஸன், तस्य - அந்த, वृक्षस्य - மரத்தின், विनाशात् - நாசத்தால்,—पृथक् - தனியாக, स्थितं - இருக் கின்ற, कृतान्तस्य - யமனுடைய, मुष्टिमिव - முஷ்டியைப் போன்ற,—महोपलं - பெரும்பாறையை, तस्मै - அந்தச் சத் ருக்னன் பொருட்டு, प्रजिघाय - (அனுப்பினான்) எறிந்தான்.

(க-து) பிறகு லவணன் ஒரு பாறையைச் சத்ருக்னன் மீது எறிந்தான்.

தான் எறிந்த மரம் வீணானதை யறிந்து லவணன், யமனுடைய உடலினின்றும் தனியே பிரிந்து இருக்கின்ற அவனது முஷ்டி போலிருந்த பெரும்பாறையைச் சத்ருக் னன் மீது எறிந்தான்.

पृथगिव स्थितम् मुष्टिम् - பாறையை எமனுடைய முஷ்டி யோடு உவமித்தது, அதன் கொல்லும் தன்மை பற்றி; யமனுடைய முஷ்டி அவனின்றித்தனியே காணப்படாதா யினும், உவமைப்பொருத்தம் கருதி, 'தனியாக இருக்கின்ற' என்ற விசேஷணம் வந்தது. முஷ்டி - மூடிய கை.

ऐन्द्रमस्त्रमुपादाय शत्रुघ्नेन स ताडितः ।
सिकतात्वादपि परां प्रपेदे परमाणुताम् ॥ २२ ॥

ऐन्द्रं - இந்திரனைத் தேவதையாகக் கொண்ட, अस्त्रं - அஸ்திரத்தை, उपादाय - எடுத்து, शत्रुघ्नेन - சத்ருக்னனால், ताडितः - அடிக்கப்பட்ட, सः - அந்தப்பாறையானது, सिक-

**तात्वात्** - மணலாக இருக்கும் தன்மையைக் காட்டிலும், **परां** - மிகவும், **परमाणुतां**-பரமாணுவாக இருக்கும் நிலையை, **प्रपेदे** - அடைந்தது.

(க-து) சத்ருக்னன் இந்திராஸ்திரத்தினால் அப்பாறையை அடிக்க, அது மிக நுட்பமான பொடியாயிற்று.

இந்திரன் மலைகளின் சிறகுகளை வெட்டியவனாதலால், பாறையை அழிப்பதற்குச் சத்ருக்னன் இந்திராஸ்த்ரத்தை உபயோகித்தான் போலும்! **परमाणु** - அணுவிற்கும் சிறியது பரமாணு.

जलान्तरस्थसूर्यांशौ यत्सूक्ष्मं दृश्यते रजः
भागस्तस्य च षष्ठो यः परमाणुः स उच्यते ॥

என்பது பரமாணுவின் பரிமாணத்தைக் கூறுவது.

तमुपाद्रवदुद्यम्य दक्षिणं दोर्निशाचरः ।
एकताल इवोत्पातपवनप्रेरितो गिरिः ॥ २३ ॥

**निशाचरः** - ராக்ஷஸன், **दक्षिणं दोः** - வலக்கையை, **उद्यम्य** - ஓங்கிக்கொண்டு,—**एकतालः**-ஒற்றைப் பனைமரத்தை உடையதும், **उत्पातपवनप्रेरितः** - துர்நிமித்தமான காற்றினால் தள்ளப்பட்டதுமான, **गिरिः इव** - பர்வதம் போல், **तं**-அந்தச் சத்ருக்னனை, **उपाद्रवत्** - எதிர்த்து ஓடினான்.

(க-து) பிறகு அரக்கன் தன் வலதுகையை ஓங்கிக்கொண்டு சத்ருக்னனை எதிர்த்தான். ஓடிவரும் லவணன், துர்நிமித்தமான காற்றினால் தள்ளப்பட்டதும் ஒற்றைப் பனைமரமுடையதுமான பர்வதம் போல் காணப்பட்டான்.

மலைக்கு, **अचलः** - என்ற பெயரும் உண்டு; அசையாதது என்பது பதப்பொருள். காற்றினால் மலை இடம் விட்டுப் பெயராதாதலால் இங்கு **गिरि** என்றது, மலையின் சிகரத்தைக் குறித்தது; லவணனுடைய பெரிய உருவம் அவனை

மலையோடு ஒப்பிடக் காரணமாயிற்று. கருத்து நீண்டுள்ளதை, அம்மலையின் சிகரத்திலுள்ள ஒற்றைப் பனைமரத்துடன் ஒப்பிடப்பட்டது.

காற்றில் மலை அசையாது என்பதைக்கவி द्रुमसानुमतां किमन्तर यदि वायौ द्वितयेऽपि ते चलाः (8-90) என முன்பும் கூறியுள்ளார். அல்லது, இவ்வுபமையை, अभूतोपमा - என்ற வகையில் சேர்ந்ததாகவும் கருதலாம்.

काष्णेंन पत्रिणा शत्रुः स भिन्नहृदयः पतन् ।
आनिनाय भुवः कम्पं जहाराश्रमवासिनाम् ॥ २४ ॥

सः शत्रुः - அந்தச் சத்ரு (லவணன்), काष्र्णेन - விஷ்ணுவைத் தேவதையாகக்கொண்ட, पत्रिणा - பாணத்தினால், भिन्नहृदयः - பிளக்கப்பட்ட ஹிருதயமுடையவனாய், पतन् - கீழே விழுந்து, भुवः - பூமிக்கு, कंपं - நடுக்கத்தை, आनिनाय- கொண்டுவந்தான். आश्रमवासिनां - ஆச்ரமத்தில் வசிக்கின்ற மகர்ஷிகளின், कंपं - நடுக்கத்தை, जहार - அபகரித்தான் (போக்கினான்).

(க-து) சத்ருக்னன் நாராயணாஸ்திரத்தைப் பிரயோகித்து, லவணனது மார்பைப் பிளந்தான்; லவணன் கீழே விழும் பொழுது அனைத்து உடலின் கனத்தினால் பூமி அதிர்ந்தது; இது வரை நடுங்கிக் கொண்டிருந்த மஹர்ஷிகளின் மனத்திலிருந்து, அவன் இறந்ததால், நடுக்கம் நீங்கியது.

काष्णेंन - இரும்பினாலான என்றும் உரைக்கலாம்-कंपः இச் சொல் பூமிவிஷயத்தில் அதிர்ச்சியையும், மஹரிஷிகள் விஷயத்தில் அச்சத்தையும் குறித்தது.

वयसां पङ्क्तयः पेतुर्हतस्योपरि विद्विषः ।
तत्प्रतिद्वन्द्विनो मूर्ध्नि दिव्याः कुसुमवृष्टयः ॥ २५ ॥

**हतस्य** - கொல்லப்பட்ட, **विद्विषः** - சத்ருவான ராக்ஷஸனின், **उपरि** - மேலே, **वयसां** - பக்ஷிகளின், **पङ्क्तयः** - வரிசைகள் (கூட்டங்கள்), **पेतुः** - விழுந்தன (பறந்து வந்து தங்கின). **तत्प्रतिद्वन्द्विनः** - அவனுடைய சத்ருவான சத்ருக்னனுடைய, **मूर्ध्नि** - சிரஸில், **दिव्याः** - தேவலோகத்திய, **कुसुमवृष्टयः** - புஷ்பமாரிகள், **पेतु** - விழுந்தன.

(க-து) லவணன் மேல் பறவைகளும் சத்ருக்னன் மேல் பூமாரிகளும் விழுந்தன.

ஊனைத் தின்பதற்காகப் பறவைகள் லவணன் மேல் விழுந்தன. லவணவதத்தைக் கண்டு தேவர்கள் பொழிந்த பூமாரி சத்ருக்னன் மேல் விழுந்தது.

स हत्वा लवणं वीरस्तदा मेने महौजसः ।
भ्रातुः सोदर्यमात्मानमिन्द्रजिद्वधशोभिनः ॥ २६ ॥

**सः वीरः** - அந்த வீரன், **लवणं** - லவணாஸுரனை, **हत्वा** - கொன்றுவிட்டு; **तदा** - அப்பொழுது, **आत्मानम्** - தன்னை, **महौजसः** - மிகுந்த பலமுடையவனும், **इन्द्रजिद्वधशोभिनः** - இந்திரஜித்தின் வதத்தினால் விளங்குகின்றவனுமான, **भ्रातुः** - லக்ஷ்மணனுக்கு, **सोदर्यं** - தகுந்த ஸஹோதரனாக, **मेने** - எண்ணினான்-

(க-து) லவணனைக் கொன்ற சத்ருக்னன் இந்திரஜித்தைக் கொன்ற லக்ஷ்மணனுக்குத் தகுந்த ஸஹோதரனாகத் தன்னை நினைத்தான்.

லவணனைக் கொன்ற பின்பே சத்ருக்னன், இந்திரஜித்தைக் கொன்ற லக்ஷ்மணனுக்குத் தகுந்த ஸஹோதரனாகத் தன்னைக் கருதினான்.

तस्य संस्तूयमानस्य चरितार्थैस्तपस्विभिः ।
शुशुभे विक्रमोदग्रं व्रीडयावनतं शिरः ॥ २७ ॥

**चरितार्थैः** - செய்யப்பட்ட (அடையப்பட்ட) ப்ரயோஜனத்தை உடைய, **तपस्विभिः** - மகர்ஷிகளினால், **संस्तूयमानस्य** - புகழப்படுகின்ற, **तस्य** - அந்த சத்ருக்னனின், **विक्रमोदग्र** - பராக்ரமத்தினால் நிமிர்ந்ததும், **व्रीडया** - லஜ்ஜையினால், **अवनतम्** - வணங்கி இருக்கின்றதுமான, **शिरः** - தலை, **शुशुभे** - விளங்கிற்று.

(க-து) தங்கள் மனோரதம் ஈடேறியதால் மனமகிழ்ந்த முனிவர்கள் சத்ருக்னனைப் புகழ்ந்தனர். தனது வீரம் காரணமாகத் தலை நிமிர்ந்து இருக்கவேண்டியவனாயினும் சத்ருக்னன், தன் புகழ்ச்சியைக் கேட்கும் பொழுது வெட்கிக் குனிந்திருந்தான். இந்நிலை அவனுக்கு மிக அழகு அளித்தது.

**गुणाढ्यस्य सतः पुंसः स्तुतौ लज्जैव भूषणम्** - என்பது ஆன்றோர்வாக்கு; **स्तूयमानः स जिह्राय** - [17-73] என்றார் கவி பின்பும்.

उपकूलं स कालिन्द्याः पुरीं पौरुषभूषणः ।
निर्ममे निर्ममोऽर्थेषु मधुरां मधुराकृतिः ॥ २८ ॥

**पौरुषभूषणः** - பராக்ரமத்தை ஆபரணமாகக் கொண்டவனும், **अर्थेषु** - லோகவஸ்துக்களில், **निर्ममः** - ஆசையற்றவனும், **मधुराकृतिः** - அழகிய ரூபமுடையவனுமான, **सः** - அவன், **कालिन्द्याः** - யமுனா நதியின், **उपकूलं** - கரையில், **मधुरां पुरीं** - மதுராபுரியை, **निर्ममे** - நிர்மாணம் செய்தான்.

(க-து) ஆண்மையையே தன் அணிகலனாகக் கொண்ட சத்ருக்னன், உலகவஸ்துக்களிலே பற்றின்றியே, யமுனையின் கரையில் மதுராநகரத்தை நிர்மாணம் செய்தான்.

**उपकूलं कालिन्द्याः** - என்பதால், நகரத்தின் ஜலவசதியும் நீர் அரணமைப்பும் கூறியதாயின; **अर्थेषु निर्ममः-अगृध्नुराददे सोऽर्थम्** - [21] என்பதைக் காண்க; '**अर्थेषु-लवणवधमुनि-**

रक्षणादिरूपेषु निर्ममः निरहंकारः' என்பர் நாராயணர். मधुराकृतिरित्यभिगम्यताहेतुः ॥

या सौराज्यप्रकाशाभिर्बभौ पौरविभूतिभिः ।
स्वर्गाभिष्यन्दवमनं कृत्वेवोपनिवेशिता ॥ २९ ॥

या - எந்த நகரமானது, सौराज्य - प्रकाशाभिः - நல்ல அரசனை உடையதாயிருப்பதால் பிரகாசிக்கின்ற, पौरविभूतिभिः - நகர ஜனங்களின் ஐச்வர்யங்களினல், स्वर्ग-अभिष्यन्दवमनं कृत्वा - ஸ்வர்க்கத்திலுள்ள அதிகஜனங்களைக் கொணர்ந்து, उपनिवेशिता इव - ஸ்தாபிக்கப்பட்டதுபோல், बभौ- விளங்கியதோ (அப்படிப்பட்ட நகரத்தை நிருமித்தான் என்றபடி).

(க-து) அந் நகரமானது, நல்ல அரசாது ஆட்சியிலிருந்த தென்பதை, நகரமக்களின் செல்வம் காட்டியது; தேவருலகிலுள்ள அதிக ஜனங்களைக் குடியேறச் செய்து அமைக்கப்பட்டது போல் மிக சோபையுடன் அந்நகரம் விளங்கியது.

அந்தப் பட்டினத்திலுள்ள ஜனங்கள் தேவர்கள்போல் பொலிவுடனும் மகிழ்ச்சியுடனுமிருந்ததாலும், அந்நகரவாஸம் ஸ்வர்க்க வாஸம் போல் ஆனந்தகரமாக இருந்ததாலும், ஸ்வர்க்கவாஸிகளைக் குடியேற்றி அமைக்கப்பட்ட நகரம் போன்றிருந்தது எனக்கவி உத்ப்ரேக்ஷித்தார்.

புதியதொரு நாட்டை அமைக்க விரும்பும் அரசன், 'தன் நாட்டிலோ, தான் வென்ற அயல் நாட்டிலோ உள்ள அதிக ஜனங்களை அங்குக் குடியேறச்செய்து அமைக்கவேண்டும்' எனக்கௌடில்யர் கூறியுள்ளார். 'भूतपूर्वमभूतपूर्वं वा जनपदं परदेशप्रवाहेण स्वदेशाभिष्यन्दवमनेन वा निवेशयेत्' என்பது கௌடில்ய அர்த்தசாஸ்த்ரம். अभिष्यन्दः- அதிக ஜனங்கள்; ஜனப்பெருக்கு; वमनम् - கொண்டுவருதல்; குடியேறச் செய்

தல்; இனி अभिष्यन्दवमनम - என்பதற்குக் கிளைநகர் என்ற பொருள் கொண்டு, மதுரை, ஸ்வர்க்கத்தின் கிளைநகர்போல் அமைக்கப்பட்டது எனவும் பொருள் உரைக்கலாம். இரு வகை உரையிலும், அந்நகரம் ஸ்வர்க்கம்போல் இருந்த தென்பதே கருத்து.

तत्र सौधगतः पश्यन् यमुनां चक्रवाकिनीम् ।
हेमभक्तिमतीं भूमेः प्रवेणीमिव पिप्रिये ॥ ३० ॥

तत्र - அங்கு (மதுரையில்), सौधगतः - மாளிகையை அடைந்த. सः - அவன், चक्रवाकिनीं - சக்ரவாகப் பக்ஷிகளை உடைய, यमुनां - யமுநாநதியை, 'हेमभक्तिमतीं - ஸ்வர்ண மயமான ஆபரணமுடைய, भूमेः - பூமிதேவியின், प्रवेणीमिव - நீண்ட பின்னலைப்போல', पश्यन् - பார்த்து, पिप्रिये - சந் தோஷமடைந்தான்.

(க-து) நகரத்தை நிர்மாணித்து அதை ஆட்சி செய்துவந்த அர சன் சத்ருக்னன், தனது மாளிகையில் இருந்தவனாக, சக்ரவாகப் பக்ஷி களுடன் கூடிய யமுநாநதியைக் கண்டு மகிழ்ந்தான். பொன்னணி யால் அழகு செய்யப் பட்டுள்ள பூமிதேவியின் கேசபாரம் போலிருப்ப தாக அந்நதியைக் கருதினான்.

யமுனாஜலத்தின் கருத்த நிறமும், சக்ரவாகப் புட் களின் சிவந்தவர்ணமும், யமுனையைப் பூமிதேவியின் கூந் தலாகக் கூறக் காரணமாயின: 'जलकार्ष्ण्यं चक्रवाकरक्तिमा चोत्प्रेक्षाहेतुः' नारायणः ।

ஜீவநதி இருப்பது நாட்டின் நலனுக்குக் காரணமா கும். நாட்டை 'நதிமாத்ருகமாகச் செய்யவேண்டுவது அரச னது கடமை. अदेवमातृको रम्यः श्वापदैः परिवर्जितः' [अयोध्या-100-45] என நல்ல நாட்டைப் பற்றித்தாம் கொண்ட

கருத்தைப் பரதனுக்கு ராமர் கூறினார். இங்கே யமுனையின் வற்றாத நீருடைமை கூறப்பட்டது. அதனால் நாட்டின் செழிப்பும், அதன் காரணமாக அரசனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியும் குறிக்கப்பட்டன.

"क्षेत्राणि सस्ययुक्तानि.... । तां समृद्धां (पुरीं) समृद्धार्थः शत्रुघ्नः....। निरीक्ष्य परमप्रीतः परं हर्षमुपागमत्-[உத்தர.70-10,15]

**नदीमातृकम्**-நதியைத் தாயாக உடையது; நதியின் ஜலத்தினால் உழவு முதலான தொழில் செய்து வாழ்கின்ற நாடு. **नद्यंबुजीवनो देशो नदीमातृक उच्यते ।** வானம்பார்த்த நாட்டை தேவமாத்ருகம் என்பர். **वृष्टिनिष्पाद्यसस्यस्तु विज्ञेयो देवमातृकः ॥.**

सखा दशरथस्यापि जनकस्य च मन्त्रकृत् ।
संचस्कारोभयप्रीत्या मैथिलेयौ यथाविधि ॥ २१ ॥

**दशरथस्य जनकस्य च** - தசரதருக்கும் ஜனகருக்கும், **सखा** - ஸ்நேஹிதரும், **मन्त्रकृत् अपि** - மந்திரங்களைக் கண்டவருமான வால்மீகி, **उभयप्रीत्या** - அவ்விருவர்களிடத்திலும் உள்ள பிரியத்தினால், **मैथिलेयौ** - ஸீதையின் இரண்டு குமாரர்களையும், **यथाविधि** - சாஸ்திரப்படி, **संचस्कार** - பரிசுத்தர்களாகச் செய்தார்.

(க-து) வால்மீகி ஜாதகர்மம் முதலியவற்றை அவர்களுக்குச் செய்தார்.

வால்மீகி, ஸீதையின் இரண்டு குழந்தைகளுக்கும் சாஸ்திரம் கூறிய முறை வழுவாதபடி எவ்விதக் குறைவுமின்றி ஜாதகர்ம முதலியவற்றைச் செய்தார்.

स तौ कुशलवोन्मृष्टगर्भक्लेदौ तदाख्यया ।
कविः कुशलवावेव चकार किल नामतः ॥ २२ ॥

**कविः सः** - கவி வால்மீகி, **कुशलवोन्मृष्ट - गर्भक्लेदौ** - தர்ப்பத்திலும் பசுவின் வால் மயிரிலும் துடைக்கப் பட்ட கர்ப்பத்தின் நனைவையுடைய, **तौ** - அந்த ஸீதை யின் குமாரர்களை, **नामतः** - பெயர் (இடும்) விஷயத்தில், **तदाख्यया** - அவைகளின் (कुश, लव) - பெயராலே, **कुशलवौ एव** - குசன், லவன் என்றே, **चकार किल**-செய்தார்.

(க-து) முனிவர், குசன், லவன் என முறையே அவ்விரு குழந்தைகளுக்கும் பெயரிட்டார்.

தர்ப்ப (குச) த்திறல் துடைக்கப்பட்ட குழந்தைக்குக் குசன் என்றும், பசுவின் வால்மயிரிறல் துடைக்கப்பட்ட குழந்தைக்கு, அதன் பெயரான லவன் என்றும் பெயர்கள் வைக்கப்பட்டன. குழந்தைகள் பிறந்ததைக் கேட்டவுடன், வால்மீகிமுனிவர் தர்ப்பத்தின் முனைப்பகுதியையும் அடிப் பகுதியையும், ஸ்திரீகளிடம் கொடுத்து முனையால் முதற் குழந்தையையும், அடியால் இரண்டாவது குழந்தையையும் தடவச் செய்து, அதன் மூலம் அவற்றிற்கு ரக்ஷையைச் செய்தார். தடவுதற்கு உபயோகித்த பொருளின் பெயரையே குழந்தைகளின் பெயராக வைத்தார் என ராமாயணத்திலே கூறப்பட்டுள்ளது. **कुशः** - தர்ப்பத்தின் முனை; **लवः** - அதன் அடிப்பாகம்.

कुशमुष्टिमुपादाय लवं चैव तु स द्विजः ।
वाल्मीकिः प्रददौ ताभ्यां रक्षां भूतविनाशिनीम् ॥

[உத்தர காண்டம் 66-6.]

साङ्गं च वेदमध्याप्य किंचिदुत्क्रान्तशैशवौ ।
स्वकृतिं गापयामास कविप्रथमपद्धतिम् ॥ ३२ ॥

**किंचिदुत्क्रान्त-शैशवौ** - சிறிது கடந்த குழந்தைப் பருவத்தை உடைய அவ்விருவர்களையும், **साङ्गं** - அங்கங்களோடு

கூடிய, वेदं - வேதத்தை, अध्याप्य - ஓதும்படி செய்து, कवि-प्रथम-पद्धतिं - கவிகளுக்கு முதல் மார்க்கமான; स्वकृतिं - தாம் இயற்றிய ராமாயணத்தை गापयामास - பாடும்படி செய்தார்:

(க-து) முனிவர் வேதம் முதலியவற்றை அவர்களுக்கு ஓதுவித்துத் தாம் இயற்றிய ராமாயணத்தையும் பாடும்படி செய்தார்.

குழந்தைப்பருவம் கடந்து பின் பாலபருவத்தை யடைந்த அவ்விரு குமாரர்களுக்கும் வேதங்களையும் அவற்றின் அங்கங்களையும் ஓதுவித்துத் தாம் இயற்றிய ராமாயணத்தையும் கற்பித்தார்.

பின் வந்தகவிகளுக்கு மார்க்கமாக இருந்ததால், कवि-प्रथमपद्धतिं - என ராமாயணத்தை விசேஷித்தார். परं कवीनामाधारम् - என்று (பாலகாண்டம் 4-27) கூறப்பட்டுள்ளதையும் காண்க.

रामस्य मधुरं वृत्तं गायन्तौ मातुरग्रतः ।
तद्वियोगव्यथां किंचिच्छिथिलीचक्रतुः सुतौ ॥ ३४ ॥

सुतौ - குமாரர்கள் இருவரும், रामस्य - ராமருடைய, वृत्तं - சரித்ரத்தை, मातुः - தாயின், अग्रतः - எதிரில், मधुरं - இனிமையாக, गायन्तौ - பாடிக்கொண்டு, तद्वियोग व्यथां - ராமருடைய பிரிவினால் (அவளுக்கு) உண்டான துக்கத்தை, किञ्चित् - சிறிது, शिथिलीचक्रतुः - தளரச் செய்தார்கள்.

(க-து) அவ்விருகுமாரர்களும் ராமசரித்ரத்தைத் தாயின் முன்னிலையில் இனிமையாகப் பாடி, ராமர் பிரிவினால் வருந்துகின்ற தாயின் வருத்தத்தைக் குறைத்தனர்.

इतरेऽपि रघोर्वंश्यास्त्रयस्त्रेताग्नितेजसः ।
तद्योगात् पतिवत्नीषु पत्नीष्वासन् द्विसूनवः ॥ ३५ ॥

**रघोः** - ரகுவினுடைய, **वंश्याः** - வம்சத்தில் பிறந்தவர்களும், **त्रेताग्नितेजसः** - த்ரேதாக்னியின் காந்திக்குச் சமமான காந்தியையுடையவர்களுமான, **इतरे त्रयोऽपि** - மற்ற மூவரும், **तद्योगात्** - (தங்கள்) ஸம்பந்தத்தினால், **पतिवत्नीषु** - சிறந்த பதிகளை உடையவர்களான, **पत्नीषु** - பத்னிகளிடத்தில், **द्विसूनवः** - இரண்டிரண்டு புத்ரர்களை உடையவர்களாக, **आसन्** - இருந்தார்கள்.

(க-து) ராமரது ஸஹோதரர்களில் ஒவ்வொருவருக்கும் இரண்டிரண்டு புத்திரர்கள் பிறந்தனர்.

பரதாதியரின் தூய்மையைக் காட்ட அவர்கள் யாகாக்னிக்கு ஒப்பிடப்பட்டனர். யாகம் செய்தற்காக மூன்றிடங்களில் யாகசாலையில் அக்னி வைக்கப்பட்டிருக்கும். தக்ஷிணாக்னி, ஆஹவனீயாக்னி கார்ஹபத்யாக்னி என அவைகளுக்குப் பெயர்.

பரதன் மனைவி-மாண்டவி; லக்ஷ்மணனுடைய மனைவி ஊர்மிளா ; சத்ருக்னனது மனைவி ச்ருதகீர்த்தி ; **पतिवत्नी** - கணவனையுடையவள், கணவனோடு வாழ்கின்றவள்; சிறந்த கணவனையுடையவள் என்பது பொருள் ; குணங்களிலே சிறந்துள்ள பரதாதியரை முறையே மாண்டவி முதலியோர் கணவராகப் பெற்றுள்ளதால் அப்பெண்கள், **पतिवत्नीषु** - என்ற சொல்லால் குறிக்கப்பட்டனர்; **पतिवत्नीषु** - பதிவிரதைகளான என்றும் பொருளுரைப்பர் ; **तद्योगात्** - **द्विसूनवः आसन्** - என அந்வயித்து, ராமரது ஸஹோதரராக இருந்தமையால் (ராமர் போலவே) பரதாதியரும் இரண்டிரண்டு புத்திரர்களையுடையவராயினர் என்று விளக்குவர் சில உரையாசிரியர்கள். 'तद्योगात् रामस्य योगाद् द्विपुत्ररामसाहचर्यात्' என்பர் வல்லபர். 'तद्योगात् - रामस्य योगात् भ्रातृत्वरूपात् संबन्धात्......;इतरे भरतादयो राघवाः....।...महा-

त्मना कुले ज्येष्ठगुणाः कनिष्ठेष्वनुवर्तन्त इति न्यायात्' என்று உரையிடுவர் நாராயணரும் அருணகிரியும்.

ராமாநு ஸஹோதரர்கள் ஒவ்வொருவருக்கும் இரண்டிரண்டு புத்திரர்களே இருந்ததின் காரணத்தைக் கவி சமத்காரமாக உத்ப்ரேக்ஷித்துக் கூறினார். इव என்ற உத்ப்ரேக்ஷா வாசகமான சொல் இங்கு இல்லாவிடினும் இதை உத்ப்ரேக்ஷையாகக் கொள்ளவேண்டும். 'இரண்டே புத்திரர்களையுடைய ராமாநு தம்பிகளாதலால் போலும் அவர்களும் இரண்டிரண்டு புத்திரர்களையுடையவராயிருந்தனர்' என்பது கருத்து; இங்குள்ள तत् என்ற சொல், முன் சுலோகத்திலே तद्वियोगव्यथा - என்பதிலுள்ள சொல்லைப்போல், ராமரையே குறித்தது; பரதன் குமாரர்கள் - தக்ஷன், புஷ்கலன்; லக்ஷ்மணன் பிள்ளைகள் - அங்கதன், சந்திரகேது; சத்ருக்னன் மக்கள் - சத்ருகாதி, ஸுபாஹு.

शत्रुघातिनि शत्रुघ्नः सुबाहौ च बहुश्रुते ।
मधुराविदिशे सून्वोर्निदधे पूर्वजोत्सुकः ॥ ३६ ॥

पूर्वज-उत्सुकः-தமையனான ராமரிடத்தில் பிரியமுள்ள, शत्रुघ्नः - சருக்னன், सून्वोः-தன் புத்ரர்களான, शत्रुघातिनि - சத்ருகாதியினிடத்திலும், बहुश्रुते - மிகப் படித்தவனான, सुबाहौ च-ஸுபாஹுவினிடத்திலும், मधुरा-विदिशे - மதுரை விதிசை என்னும் இரண்டு நகரங்களையும், निदधे - வைத்தான்.

(க-து) ராமருடன் வஸிக்க விரும்பிய சத்ருக்னன், மதுரை விதிஸை என்ற இரண்டு நகரங்களையும் பாதுகாக்கும்படி தன் புத்திரர்களான சத்ருகாதியையும் ஸுபாஹுவையும் நியமித்தான்.

भूयस्तपोव्ययो मा भूद् वाल्मीकेरिति सोऽत्यगात् ।
मैथिलीतनयोद्गीतनिःस्पन्दमृगमाश्रमम् ॥ ३७ ॥

सः - அவன், मैथिली·तनय-उद्गीत-निःस्पन्द-मृग - ஸீதையின் குமாரர்களுடைய சிறந்த பாட்டினால் அசைவற்ற மான்களை உடைய, वाल्मीकेः - வால்மீகியின், आश्रमं - ஆச்ரமத்தை, - भूयः - மறுபடியும், तपोव्ययः - (வால்மீகியின்) தவத்திற்குச் செலவு, मा भूत् உண்டாக வேண்டாம், इति - என்ற காரணத்தினால், अत्यगात् - கடந்து சென்றான்.

(க-து) தன்னை உபசரிப்பதற்காக வால்மீகி தவத்தைச் செலவு செய்வாராதலால் அவருடைய தவத்திற்குச் செலவு வேண்டாமெனக் கருதிய சத்ருக்னன் திரும்பும் பொழுது அவரது ஆச்ரமம் செல்லாமலே அயோத்தி சென்றான்.

वशी विवेश चायोध्यां रथ्यासंस्कारशोभिनीम् ।
लवणस्य वधात् पौरैरीक्षितोऽत्यन्तगौरवम् ॥ ३८ ॥

वशी - ஜிதேந்திரியனான அவன், लवणस्य - லவணாஸுரனின், वधात् - வதத்தினால் (சந்தோஷித்த), पौरैः - நகரஜனங்களினால், अत्यन्तगौरवं - மிகவும் மரியாதையுடன், ईक्षितः (सन्)-பார்க்கப்பட்டவனாக இருந்து கொண்டு, रथ्या-संस्कारशोभिनीं - வீதிகளின் அலங்காரங்களினால் விளங்குகின்ற, अयोध्यां - அயோத்தியை, विवेश च - பிரவேசித்தான்.

(க-து) அயோத்தியா ஜனங்கள், லவணனை வதம் செய்தபின் வெற்றியுடன் திரும்புகின்ற சத்ருக்னனை மிக்க மரியாதையுடன் வரவேற்றனர். நகரவீதிகள் அவனது வரவைக் கருதி விசேஷமாக அலங்கரிக்கப்பட்டிருந்தன.

अत्यन्त गौरवं ईक्षितः - நகர ஜனங்களின் பார்வையே, அவர்கள் அவனிடம் கொண்ட மதிப்பைக் காட்டியது.

स ददर्श सभामध्ये सभासद्भिरुपस्थितम् ।
रामं सीतापरित्यागादसामान्यपतिं भुवः ॥ ३९ ॥

**सः** - அவன், **सभामध्ये** - சபையின் நடுவில், **सभासद्भिः** - சபையில் உள்ளவர்களால், **उपस्थितं** - ஸேவிக்கப்பட்டவரும், **सीता - परित्यागात्** - ஸீதையை த்யாகம் செய்ததினால், **भुवः असामान्यपतिं** - பூமி ஒருத்திக்கே பதியாக இருக்கின்றவருமான, **राघवं** - ராமரை, **ददर्श** - கண்டான்.

(க-து) சத்ருக்னன், மந்திரிகளிடையே ராஜஸபையில் வீற்றிருந்த ராமரைக் கண்டான்.

तमभ्यनन्दत् प्रणतं लवणान्तकमग्रजः ।
कालनेमिवधात् प्रीतस्तुराषाडिव शार्ङ्गिणम् ॥ ४० ॥

**अग्रजः** - ராமர், **लवणान्तकम्** - லவணனைக் கொன்றவனும், **प्रणतं** - நமஸ்கரித்தவனுமான, **तं** - அவனை, **कालनेमिवधात्** - காலநேமியைக் கொன்றதினால், **प्रीतः** - பிரீதியடைந்த, **तुराषाट्** - இந்திரன், **शार्ङ्गिणं इव** - உபேந்திரனைப் (பிரீதியுடன் புகழ்ந்தது) போல, **अभ्यनन्दत्** ச்லாகித்தார்.

(க-து) காலநேமி என்ற அஸுரனைக் கொன்ற விஷ்ணுவை இந்திரன் புகழ்ந்ததுபோல் லவணனைக் கொன்று வந்த சத்ருக்னனை ராமர் கொண்டாடினார்.

காலநேமி - ஒரு அரக்கன்; விஷ்ணுவினால் கொல்லப் பட்டவன்; விஷ்ணு, உபேந்திரனாக அவதரித்த பொழுது இந்திரனுக்குத் தம்பியாகக் கருதப்படுவர்.

स पृष्टः सर्वतो वार्तमाख्यद्राज्ञे न संततिम् ।
प्रत्यर्पयिष्यतः काले कवेराद्यस्य शासनात् ॥ ४१ ॥

**सः** - அவன், **पृष्टः (सन्)** - (ராமரால்) கேட்கப்பட்டவனாக, **सर्वतः** - எல்லா இடத்திலுமுள்ள, **वार्तं** - நற்செய்தியை, **राज्ञे** - அரசருக்கு, **आख्यत्** - சொன்னான். **काले** - தகுந்த காலத்தில், **प्रत्यर्पयिष्यतः** - (குமாரர்களை ராமரிடம்) ஒப்பு

விக்கப்போகின்ற, आद्यस्य कवेः - ஆதி கவியின் (வால்மீகியின்), शासनात् - ஆஜ்ஞையினால், सन्तति - (ராமருக்குக்) குழந்தைகள் பிறந்ததைப் பற்றி, नाख्यत् - சொல்லவில்லை.

(க-து) க்ஷேமம் விசாரிக்கப்பட்ட பொழுது, சத்ருக்னன், எங்கும் க்ஷேமமே நிலவுகின்றதெனக் கூறினன்; வால்மீகியின் கட்டளையை அனுசரித்து அவன் குசலவர்களின் பிறப்பைப் பற்றி ராமருக்குச் சொல்லவில்லை.

अथ जानपदो विप्रः शिशुमप्राप्तयौवनम् ।
अवतार्याङ्कशय्यास्थं द्वारि चक्रन्द भूपतेः ॥ ४२ ॥

**अथ** - பிறகு (ஒரு சமயம்), **जानपदः** - நாட்டிலுள்ள, **विप्रः** - பிராம்மணர் ஒருவர், **अप्राप्तयौवनं** - யௌவனப்பருவத்தை அடையாத, **शिशुं** - (தமது இறந்த) குழந்தையை **भूपतेः** - அரசருடைய, **द्वारि** - (அரண்மனையின்) வாயிலில், **अङ्क-शय्या-स्थं**-(தம்) மடியாகிற படுக்கையில் இருக்கும்படி, **अवतार्य** - (தோளிலிருந்து) இறக்கிவைத்துக் கொண்டு, **चक्रन्द** - அழுதார்.

பிறகு ஒரு சமயம், நாட்டிலுள்ள ஒரு பிராம்மணர், அகாலத்தில் இறந்த குழந்தையைத் தம்மடி மீதிட்டு, அரண்மனை வாசலில் புலம்பினர்.

இறந்தபிறகும் குழந்தையைத்தரையில்விடாதுமடியில் வைத்திருந்தது, பிராம்மணருக்குக் குழந்தையிடமுள்ள அன்பைக் காட்டுகின்றது. अंकशय्यास्थं (भूपतेः) द्वारि अवतार्य - என அந்வயித்து, उत्संगशयनादवतार्य - என உரைப்பர் அருணகிரி. 'மடியிலிருந்த குழந்தையை அரண்மனை வாசலில் இறக்கி வைத்து' என்பது பொருள்.

शोचनीयासि वसुधे या त्वं दशरथाच्च्युता ।
रामहस्तमनुप्राप्य कष्टात् कष्टतरं गता ॥ ४३ ॥

वसुधे - பூமியே, दशरथात् - தசரதரிடமிருந்து, च्युता - நழுவிய, (या) त्वं - நீ, रामहस्तं - ராமருடைய கரத்தை, अनुप्राप्य - அடைந்து (அதனால்), कष्टात् - கஷ்டமான தசையிலிருந்து, कष्टतरं - மிகவும் கஷ்டமான தசையை, गता - அடைந்தவளாக இருந்து கொண்டு, शोचनीया - வருந்தத்தக்கவளாக, असि - இருக்கின்றாய்.

(க-து) 'பூமிதேவியே, தசரதரது ஆட்சியை இழந்து, ராமரின் ஆட்சியில் அகப்பட்டாய்; ஆதலால் நீ இரங்கத் தக்க நிலையிலுள்ளாய்' என்று கூறிப்புலம்பினார்.

தசரதர் ஆட்சியை இழந்தது பூமிக்கு நேர்ந்த முதல் கஷ்டம்; ராமர் கையில் சிக்கியது, அதைவிட அதிகமான கஷ்டம்:' என்பது கருத்து; 'दशरथहस्तात् परिच्यवनं हि कष्टम् । सद्य एव दुष्टराजवशवर्तित्वम् कष्टतरमित्यर्थः' नारायणः ।

"रामस्य दुष्कृतं किञ्चिन्महदस्ति न संशयः.... । राजदोषैर्विपद्यन्ते प्रजा ह्यविधिपालिताः" [உத்தர காண்டம்-73-10,16.]

श्रुत्वा तस्य शुचो हेतुं गोप्ता जिह्राय राघवः ।
न ह्यकालभवो मृत्युरिक्ष्वाकुपदमस्पृशत् ॥ ४४ ॥

गोप्ता - ரக்ஷகரான, राघवः - ராமர், तस्य - அவருடைய, शुचः - சோகத்தின், हेतुम् - காரணத்தை (புத்ரமரணத்தை), श्रुत्वा - கேட்டு, जिह्राय - வெட்கமடைந்தார். हि - ஏனென்றால், अकालभवः - அகாலத்தில் உண்டான, मृत्युः - மரணமானது, इक्ष्वाकुपदं - இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவர்களின் ராஜ்யத்தை, न अस्पृशत् - ஸ்பர்சித்ததில்லை.

(க-து) பிராம்மணரது துக்க காரணத்தை அறிந்த ராமர் தமது அரசாட்சியிலே, இதற்கு முன்பு நேராத ஒரு குறை நேர்ந்ததே என வெட்கமுற்றார்.

ராமர் வெட்கப்பட்டதன் காரணத்தை சுலோகத்தின் இரண்டாவது பகுதி கூறியது; 'गोप्ता - ரக்ஷகர் என்று பெயர் கொண்ட நாம் இப்பாலகன் விஷயத்தில்ரக்ஷகராக இல்லாமையாலும் வெட்கினார் என்க. अधीतस्य च तप्तस्य कर्मणः सुकृतस्य च । षष्ठं भजति भागं तु प्रजा धर्मेण पालयन् । षड्भागस्य च भोक्तासौ रक्षते न प्रजाः कथम् । [உத்தரம் 74,30, 31] என்பதும் ராஜதர்மத்தை வலியுறுத்துகின்றது.

स मुहूर्तं क्षमस्वेति द्विजमाश्वास्य दुःखितम् ।
यानं सस्मार कौबेरं वैवस्वतजिगीषया ॥ ४५ ॥

**सः** - அவர், **दुःखितं** - துக்கமடைந்த, **द्विजं** - பிராம்மணரை, '**मुहूर्तं** - சிறிது நேரம், **क्षमस्व** - பொறுத்துக் கொள்ளும்', **इति** - என்று, **आश्वास्य** - தேறுதல் செய்துவிட்டு, **वैवस्वत-जिगीषया** யமனை ஜயிப்பதற்கு விருப்பத்தினால், **कौबेरं** - குபேரனுடைய, **यानं** - ரதமான புஷ்பக விமானத்தை, **सस्मार** - நினைத்தார்.

(க-து) 'சிறிது நேரம் பொறுத்துக் கொள்ளுங்கள்;' என பிராம்மணருக்கு ஆறுதல் கூறிவிட்டு, ராமர் குழந்தையின் உயிரை மீட்பதற்காக அதைக கவாந்து சென்ற யமனை ஜயிக்க விரும்பி அவனிடம் செல்லச் சாதனமாக புஷ்பக விமானத்தை மனத்தில் நினைத்தார்.

आत्तशास्त्रस्तदध्यास्य प्रस्थितः स रघूद्वहः ।
उच्चचार पुरस्तस्य गूढरूपा सरस्वती ॥ ४६ ॥

**स रघूद्वहः** - அந்த ராமர், **आत्तशस्त्रः (सन्)** - எடுத்துக் கொள்ளப்பட்ட ஆயுதமுடையவராய் இருந்து கொண்டு, **तत्** - அந்த புஷ்பகத்தில், **अध्यास्य** - அமர்ந்து, **प्रस्थितः** - புறப்பட்டார். **तस्य पुरः** - அவர் எதிரில், **गूढरूपा** மறைந்த ரூபமுடைய (அசரீரியான), **सरस्वती** வாக்கானது, **उच्चचार**- தோன்றிற்று (கேட்டது).

(க-து) புஷ்பகத்தில் ராமர் புறப்பட்ட பொழுது ஒரு அசரீரி வாக்குத் தோன்றியது.

राजन् प्रजासु ते कश्चिदपचारः प्रवर्तते ।
तमन्विष्य प्रशमयेर्भवितासि ततः कृती ॥ ४७ ॥

'राजन् - அரசரே, ते - உம்முடைய, प्रजासु - பிரஜைகளுள், कश्चित् - ஒரு, अपचारः - அதர்மம், प्रवर्तते - நடந்து வருகிறது; तं - அதை, अन्विष्य தேடி, प्रशमयेः - அடக்குவீராக; ततः - அதனால், कृती கிருதார்த்தராக, भवितासि - ஆவீர்.'

(க-து) "அரசே, உமது பிரஜைகளிடையில் ஒரு அதர்மம் நடந்து வருகிறது. அதை அடக்கினால் உமது எண்ணம் கை கூடியவராவீர்" என்று அசரீரி கூறியது.

நாரதர் இவ்விஷயத்தை ராமருக்குச் சொன்னதாக வால்மீகி ராமாயணம் கூறும்.

इत्याप्तवचनाद्रामो विनेष्यन् वर्णविक्रियाम् ।
दिशः पपात पत्रेण वेगनिष्कम्पकेतुना ॥ ४८ ॥

इति - இவ்வாறு, आप्तवचनात् - நம்பத்தகுந்த வார்த்தையினால், रामः - ராமர், वर्णविक्रियां - வர்ணதர்மத்தின் அதிக்ரமத்தை, विनेष्यन् - போக்க விரும்பியவராக, वेगनिष्कम्पकेतुना - வேகத்தினால் அசைவற்ற த்வஜத்தை உடைய, पत्रेण - புஷ்பக விமானத்தினால், दिशः - எல்லா திக்குகளிலும், पपात - பறந்து சென்றார்.

(க-து) நம்பத் தகுந்த அவ்வசனத்தைக் கேட்டு ராமர் அதர்மத்தை நீக்க விரும்பி விமானத்தினால் பல திசைகளிலும் பறந்து சென்றார்.

விமானம் வெகு வேகமாகச் சென்றதினால் அதன் கொடி அசைவற்று நின்றது.

अथ धूमाभिताम्राक्षं वृक्षशाखावलम्बिनम् ।
ददर्श कंचिदैक्ष्वाकस्तपस्यन्तमधोमुखम् ॥ ४९ ॥

अथ - பிறகு, ऐक्ष्वाकः - இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ராமர், धूम अभिताम्र अक्षं - புகையினால் மிகச்சிவந்த கண்களையுடையவனும், वृक्षशाखा अवलंबिनं - (கால்களால்) மரத்தின் கிளையைப் பிடித்துக் கொண்டிருப்பவனும், अधोमुखम - கீழ்நோக்கிய முகமுடையவனும், तपस्यन्तम् - தவம் செய்து கொண்டிருப்பவனுமான, कञ्चित् - ஒருவனை, ददर्श - பார்த்தார்.

(க-து) மரத்திலிருந்து தலைகீழாகத் தொங்கிக் கொண்டு தவம் செய்யும் ஒருவனை ராமர் கண்டார்,

மரத்தின் கிளையைக் கால்களால் பற்றியவனைத் தலை கீழாகத் தொங்கிக் கொண்டு தவம் செய்யும் ஒருவனை ராமர் கண்டார்.

ददर्श राघवः श्रीमान् लंबमानमधोमुखम' - [ 75-14] என்பது உத்தர ராமாயணம். वृक्षशाखावलंबिनम् - என்பதுடன் - पादाभ्यां - என்பதை வரவழைத்துப் பொருள் கூற வேண்டும்.

पृष्टनामान्वयो राज्ञा स किलाचष्ट धूमपः ।
आत्मानं शम्बुकं नाम शूद्रं सुरपदार्थिनम् ॥ ५० ॥

राज्ञा - அரசரால், पृष्टनामान्वयः - கேட்கப்பட்ட பெயர் குலம் இவற்றை உடையவனும், धूमपः - புகையைப் பானம் செய்கின்றவனுமான, सः - அவன், आत्मानं - தன்னை, सुरपदार्थिनं - ஸ்வர்க்கத்தை விரும்புகின்றவனும், शंबुक - नाम - சம்புகன்' என்பவனுமான, शूद्रं - நான்காவது வர்ணத்தவனாக, आचष्ट·किल - சொன்னான்.

(க-து) கீழே எரிகின்ற நெருப்பினின்று எழும்புகையை ஆஹாரமாகக் கொண்ட அவன், ஸ்வர்க்கத்தை விரும்பித் தவம் செய்கின்ற நான்காவது வருணத்தவனாகத் தன்னைத் தெரிவித்துக் கொண்டான்.

तपस्यनधिकारित्वात् प्रजानां तमघावहम् ।
शीर्षच्छेद्यं परिच्छिद्य नियन्ता शस्त्रमाददे ॥ ५१ ॥

**तपसि** - தபஸில், **अनधिकारित्वात्** - உரிமை இன்மையினால், **प्रजानां** - ஜனங்களுக்கு, **अघावहं** - துக்கத்தைச் செய்கின்றவனை, **तं** - அவனை, **शीर्षच्छेद्यं** - சிரச்சேதத்திற்குத் தகுந்தவனை, **परिच्छिद्य** - நிச்சயித்து, **नियन्ता** - (துஷ்டர்களை) அடக்குகின்ற ராமர், **शस्त्रं** - ஆயுதத்தை, **आददे** - (கையில்) எடுத்தார்.

(க-து) தவம் செய்ய உரிமையில்லாத அவன் தவம் செய்வதால் தண்டனைக்குரியவன் என நிச்சயித்து ராமர் ஆயுதத்தைக் கையில்எடுத்தார்.

स तद्वक्त्रं हिमक्लिष्टकिञ्जल्कमिव पङ्कजम् ।
ज्योतिष्कणाहतश्मश्रु कण्ठनालादपातयत् ॥ ५२ ॥

**सः** - அவர் (அதனால்), **ज्योतिष्कणाहतश्मश्रु** - நெருப்புப் பொறியினால் தகிக்கப்பட்ட தாடியை உடையதும், **हिम-क्लिष्ट-किञ्जल्कं** - பனியினால் கருகிய கேஸரங்களை உடைய, **पङ्कज-मिव (स्थितं)** - தாமரை மலர் போன்றதுமான, **तद्वक्त्रम्** - அவனுடைய முகத்தை (தலையை), **कण्ठनालात्** - கழுத்தாகிய தண்டிலிருந்து, **अपातयत्** - (கீழே) தள்ளினார்.

(க-து) கீழே எரிகின்ற தீயின்பொறி பட்டதினால் அவனது தாடி தீய்ந்திருந்தது. இந்நிலையில் அவனது முகம் பனியினால் கருகிய கேஸரமுடைய தாமரைமலர் போல் காணப்பட்டது; அத்தலையைத் துணித்தார் ராமர்.

பனிபடுமாயின் தாமரை கருகும். தீயினால் கருகிய தாடி கேஸாங்களுக்கும், அவனது முகம் தாமரைக்கும், கழுத்து தாமரைத்தண்டிற்கும் உவமிக்கப்பட்டன.

कृतदण्डः स्वयं राज्ञा लेभे शूद्रः सतां गतिम् ।
तपसा दुश्चरेणापि न स्वमार्गविलङ्घिना ॥ ५३ ॥

शूद्रः - சம்புகன், राज्ञा - स्वयम् - அரசர் தம்மாலேயே (வேறொருவர் மூலமாக இல்லாமல்), कृतदण्डः - தண்டிக்கப் பட்டவனாக, सतां गतिं - நல்லவர்களுடைய கதியை (ஸ்வர்க்கத்தை), लेभे - அடைந்தான். दुश्चरेण- கஷ்டத்துடன் செய்யத்தக்கதும், स्वमार्गविलङ्घिना - தன்னுடைய மார்க்கத்தை மீறியதுமான, तपसा अपि - தபவினாலும், न लेभे - அடையவில்லை.

(க-து) கடுந்தவம் செய்தாலும் தன்னால் அடையமுடியாத ஸ்வர்க்கத்தை அரசரால் தண்டிக்கப்பட்ட காரணத்தால் சம்புகன் அடைந்தான்.

சம்புகன் ஸ்வர்க்கம் சென்றான் என்பது கருத்து.

राजभिः कृतदण्डास्तु कृत्वा पापानि मानवाः ।
निर्मलाः स्वर्गमायान्ति सन्तः सुकृतिनो यथा ॥
என்பர் [8-318] மநு.

रघुनाथोऽप्यगस्त्येन मार्गसंदर्शितात्मना ।
महौजसा संयुयुजे शरत्काल इवेन्दुना ॥ ५४ ॥

रघुनाथोऽपि - ராமரும், मार्ग-सन्दर्शित-आत्मना - மார்க்கத்தில் வந்தவரும், महौजसा-மிக்க தேஜஸ் உடையவருமான अगस्त्येन - அகஸ்தியருடன், शरत्कालः - சரத்காலம், इन्दुना- சந்திரனுடன், इव- (சேர்ந்தது) போல संयुयुजे - சேர்ந்தார்.

(க-து) ராமர், எதிர்பாராவகையில் எதிரே வந்த அகஸ்திய முனிவரைச் சந்தித்தார் சரத்காலம் சந்திரனைச் சந்தித்தது போல.

இவ்வுவமை சந்திப்பின் எதிர்பாராவகையைக் காட்ட வந்ததன்று. மேகமற்ற சரத்காலம் சந்திரனுடன் சேரும் பொழுது மிகப் பொலிவுடன் விளங்குவதுபோல் ராமரும் அகஸ்த்யரின் சேர்க்கையால் பெருமை பெறுவர் என்ற கருத்துடையது.

நாராயணரும் அருணகிரியும் கொண்ட शरत्काल इवा-मलः-என்ற பாடம் சிறந்ததாகப் புலப்படுகின்றது. 'நிர்மலமான சரத்காலம், உதயமாகின்ற அகஸ்த்ய நக்ஷத்ரத்துடன் சேருவது போல' என்பது பொருள். சரத்காலத்தில் அகஸ்திய ஸம்பந்தத்தை, प्रससादोदयादंभः कुंभयोने-र्महौजसः என்பதால் முன்பும் [4-21] கவி கூறியுள்ளார்.

अमलः என்பதை, निरस्तसमस्तधर्मव्यतिक्रममलः என்று நாராயணரும், अपनीतप्रजापचारमलः என அருணகிரியும் வியாக்யானித்து ராமருக்கு விசேஷணமாகத் தருவர்.

कुम्भयोनिरलंकारं तस्मै दिव्यपरिग्रहम् ।
ददौ दत्तं समुद्रेण पीतेनेवात्मनिष्क्रयम् ॥ ५५ ॥

कुम्भयोनिः - அகஸ்திய மகர்ஷி, पीतेन - பானம் செய்யப்பட்ட, समुद्रेण - ஸமுத்ர ராஜனால், आत्मनिष्क्रयम् इव - தன்னை விடுவித்துக் கொள்வதற்கான த்ரவ்யம்போல, दत्तं - கொடுக்கப்பட்டதும், दिव्यपरिग्रहं - தேவர்களும் பெறத் தக்கதுமான, अलंकारं - ஒரு ஆபரணத்தை, तस्मै - அவருக்கு (ராமருக்கு), ददौ - கொடுத்தார்.

(க-து) அகஸ்த்யர் ராமருக்கு மிகச்சிறந்த ஆபரணத்தைக் கொடுத்தார். அவ்வாபரணம், அகஸ்திய முனிவரால் முன்பு பானம் செய்யப்பட்ட ஸமுத்ர ராஜன் தன்னை அவரிடமிருந்து விடுவித்துக் கொள்வதற்காகத் தந்த விலை போலுமிருந்தது.

காலேயர்கள் என்ற அரக்கர்கள், மஹர்ஷிகளுக்குத் துன்பமளித்து ஸமுத்ரத்தில் ஒளிந்து வந்தனர். அவர்களை ஸம்ஹரிப்பதற்காகத் தேவர்களுக்கு உதவி செய்யவிரும்பிய அகஸ்த்தியர் தமது தபோபலத்தால் ஸமுத்ரஜலம் முழுவதையும் குடித்து விட்டார். பின் தேவர்கள் காலேயரைக் கொன்றனர்.

'இவ்வாறு பானம் செய்யப்பட்ட ஸமுத்ரராஜன், தன்னை விடுவித்துக் கொள்வதற்காகத் தந்ததுபோலும்!' என ஆபரணம் அகஸ்தியரிடம் வந்து சேர்ந்த வழியை உத்ப்ரேக்ஷித்தார் கவி. ரத்னாகரமான ஸமுத்ரம் தனக்கு விலையாகத் தந்தது என்றதால் அவ்வாபரணத்தின் விலை மதிக்கவொண்ணாத தன்மை புலனாகும். இங்குக் கூறிய ஆபரணம் கடகம் என்றும், தோள்வளை யென்றும் கூறுவர்.

அகஸ்தியர் இவ்வாபரணம் பெற்ற வகையை ராமாயணம் வேறு விதமாகக் கூறும். சுவேதன் என்ற அரசன் கடும் தவம் செய்து பிரம்மலோகம் சென்றானாயினும், தானதர்மங்கள் செய்யாததால் பசியாலும் தாகத்தினாலும் துன்பமடைந்தான். இதற்குப் பரிஹாரத்தைப் பிரம்மதேவரிடம் அவன் கேட்க, அவர், முன்பு அவன் தவம் செய்த இடத்தில் அவனது உடல் கிடப்பதாயும், அதன் மாமிசத்தைத் தினந்தோறும் தின்று பசியாறலாமென்றும், அகஸ்த்யரைச் சந்தித்த பின்பே அவரது அருளால் அக்கஷ்டம் அவனுக்குத் தீருமென்றும் கூறினார். சுவேதன் பிணம் தின்பதை ஒரு சமயம் கண்ட அகஸ்த்யர், அவன் கொடுத்த கடகத்தை வாங்கிக் கொண்டதனால் அவனைப் புண்யம் பெற்றவனாகச் செய்து அருவருக்கத்தக்க அந்நிலையினின்றும் அவனுக்கு விடுதலை அளித்தார் என்பதாம்.

तं दधन्मैथिलीकण्ठनिर्व्यापारेण बाहुना ।
पश्चान्निववृते रामः प्राक्परासुर्द्विजात्मजः ॥ ९६ ॥

**मैथिली-कण्ठ-निर्व्यापारेण** - ஸீதையை ஆலிங்கனம் செய்யாத, **बाहुना** - கையில், **तं** - அந்த ஆபரணத்தை, **दधत्** - தரித்துக்கொண்டு, **रामः** - ராமர், **पश्चात्** - பின்பு, **निववृते** - (நகரத்திற்குத்) திரும்பினர்; **परासुः** - இறந்த, **द्विजात्मजः** - பிராம்மண குமாரன், **प्राक्** - முன்பே, **निववृते** - (யமன் உலகிலிருந்து) திரும்பினன்.

(க-து) அகஸ்தியர் தந்த ஆபரணத்தைப் பெற்றுக் கையில் அணிந்து கொண்டு ராமர் நகர் திரும்பினர். அவர் வருவதற்கு முன்பே பிராம்மண குமாரன் உயிர் பெற்று எழுந்து விட்டான்.

ராமர் ஆபரணமணிந்து கொண்டது முனிவரைக் கௌரவிப்பதற்காகவே யன்றி, தான் அழகு செய்து கொள்ள வேண்டுமென்ற விருப்பத்தாலன்று. கணவனது அழகைக் கண்டு களிக்க உரிமை பெற்றவர் மனைவியே யாதலால், ராமரது அழகை அனுபவிக்க ஸீதை இல்லை என்பதை, **मैथिली कण्ठ निर्व्यापारेण** - என்ற விசேஷணத்தினல் குறித்தார். **प्रियेषु सौभाग्य फला हि चारुता**-என்றார் கவி குமாரஸம்பவத்திலும்

तस्य पूर्वोदितां निन्दां द्विजः पुत्रसमागतः ।
स्तुत्या निवर्तयामास त्रातुर्वैवस्वतादपि ॥ ९७ ॥

**पुत्रसमागतः** - புத்ரனோடு சேர்ந்த, **द्विजः** - பிராம்மணர், **वैवस्वतात् अपि** - யமனிடமிருந்தும், **त्रातुः** - ரக்ஷிக்கின்ற, **तस्य**-அந்த ராமருடைய, (விஷயத்தில்), **पूर्वोदितां**-முன்னே சொல்லப்பட்ட, **निन्दां** - நிந்தையை, **स्तुत्या** - ஸ்தோத்திரத்தினல், **निवर्तयामास** - போக்கினர்.

(க-து) புத்திரனை யடைந்த பிராம்மணர் மகிழ்ந்தவராகத் தாம் முன் சொல்லிய வசை யாறும்படி ராமரைப் புகழ்ந்து சென்றார்.

तमध्वराय मुक्ताश्वं रक्षःकपिनरेश्वराः ।
मेघाः सस्यमिवाम्भोभिरभ्यवर्षन्नुपायनैः ॥ ९८ ॥

**अध्वराय** - யாகத்தின் பொருட்டு, **मुक्ताश्वं** - விடப்பட்ட குதிரையை உடைய, **तं** - அந்த ராமரை, **रक्षः कपिनरेश्वराः** - விபீஷணனும், ஸுக்ரீவனும், அரசர்களும், **मेघाः** - மேகங்கள், **अम्भोभिः** - ஜலத்தினால், **सस्यमिव** - பயிரை (தின்மேல் வர்ஷிப்பது) போல, **उपायनैः** - காணிக்கைகளினால், **अभ्यवर्षन्** - வர்ஷித்தார்கள்.

(க-து) பின்பு ராமர் அச்வமேதம் செய்ய ஆரம்பித்தார். பல வகை அரசர்களும் காணிக்கைகளைக் கொண்டு வந்தனர்.

பின்பு ராமர் அசுவமேதம் செய்ய ஆரம்பித்தார். விபீஷணனும் ஸுக்ரீவனும் மற்ற அரசர்களும், மேகம் பயிர்களின் மேல் மழையை வர்ஷிப்பதுபோல் ஏராளமான பொருளை ராமருக்கு அளித்தனர்.

ராமருக்கு உவமை பயிர்; **'सस्यमिवेत्यखिलोपजीव्यसमृद्धिकत्वं ध्वनितम्'** என்பர் அருணகிரி.

दिग्भ्यो निमन्त्रिताश्चैनमभिजग्मुर्महर्षयः ।
न भौमान्येव धिष्ण्यानि हित्वा ज्योतिर्मयान्यपि ॥ ९९ ॥

**निमन्त्रिताः** - (பிரியமாக) அழைக்கப்பட்ட, **महर्षयश्च** - மகர்ஷிகளும், **भौमानि** - பூமியில் உள்ள, **धिष्ण्यानि एव** - வாஸஸ்தானங்களை மாத்திரமேயன்றி, **ज्योतिर्मयानि अपि** - ஒளி (நக்ஷத்ர)மயமான வாஸஸ்தானங்களையும், **हित्वा** - விட்டு, **दिग्भ्यः** - பல திசைகளிலிருந்து, **एनं**-ராமரை, **अभिजग्मुः** - அடைந்தனர்.

(க-து) யாகத்திற்காக அழைக்கப்பட்ட பொழுது பூலோக மஹரிஷிகளே யன்றி மரீசி முதலான தேவரிஷிகளும் வந்தனர்.

उपशल्यनिविष्टैस्तैश्चतुर्द्वारमुखी बभौ ।
अयोध्या सृष्टलोकेव सद्यः पैतामही तनुः ॥ ६० ॥

**चतुर्द्वारमुखी** — நான்குக் கோட்டை வாயில்களாகிய முகங்களையுடைய, **अयोध्या** - அயோத்யா நகரமானது, **उपशल्य निविष्टैः** - நகரத்தின் எல்லைப்புறத்தில் தங்கியிருந்த, **तैः** - அந்த மகரிஷிகளால், **सद्यः** - (அப்பொழுதே) உடனே, **सृष्टलोका** - ஸ்ருஷ்டிக்கப்பட்ட உலகத்தை உடைய, **पैतामही** - பிரம்மாவினுடையதான, **तनुः इव** - சரீரம் போல, **बभौ** - விளங்கிற்று.

(க-து) முனிவர்கள் எல்லோரும் அயோத்திக்கு வெளியிலே தங்கியிருந்தனர். முனிவர்களால் சூழப்பட்டதும் நான்கு வாயில்களோடு கூடியதுமான அயோத்தி இந்நிலையில், அப்பொழுதே படைக்கப்பட்ட பிரஜைகளாலே சூழப்பட்டுள்ள சதுர்முகரான பிரம்மதேவரது மேனிபோல் காணப்பட்டது.

நான்கு வாயில்களுடன் கூடிய அயோத்தி, நான்குமுகமுடைய பிரம்மதேவரின் சரீரத்திற்கு உவமானம்; பிரம்மதேவர் ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் படைப்பிலே தமக்கு உதவுவதற்காக மரீசி, அத்ரீ, அங்கிரஸ், புலஸ்த்யர், புலஹர், க்ரது, ப்ரசேதஸ், வஸிஷ்டர், ப்ருகு, நாரதர் என்ற—பிரஜைகளின் தலைவர் என்றழைக்கபபடுகின்ற—பதின்மரைப் படைத்தார். எனவே மரீசி முதலான பதின்மரால் சூழப்பட்டுள்ள பிரம்மதேவரின் சரீரம் இங்கு, அயோத்திக்கு உவமையாயிற்று.

"यथा ब्रह्मणः शरीरं जगत्सृष्ट्यनन्तरं तदुचितदेशप्राप्तेः पूर्वं शोभते तथेत्युपमा । तैः मुनिराक्षसवानरनाथैः" नारायणः ।
अहं प्रजाः सिसृक्षुस्तु तपस्तप्त्वा सुदुश्चरम् ।

पतीन् प्रजानामसृजं महर्षीनादितो दश ॥

[மனு. 1-34.] என்பதைக் காண்க.

लोकः-என்பதற்கு ப்ராணிவர்க்கங்கள் என்று பொருள் கொண்டு, "தம் தமக்குத் தரப்பட்ட இடங்களுக்குச் செல்லு முன், படைக்கப்பட்டுள்ள ஜீவராசிகளால் சூழப்பட்டுப் பிரம் மதேவரது மேனி விளங்குவது போல," எனவும் விளக்குவர் சிலர். இவர் கருத்துப்படி அயோத்திக்கு வெளியிலே தங்கி யிருந்தவர்கள் மஹர்ஷிகளே யன்றி அரக்கர்களும், வானரர் களும் நரர்களுமாவர்.

श्लाघ्यस्त्यागोऽपि वैदेह्याः पत्युः प्राग्वंशवासिनः ।
अनन्यजानेः सैवासीद्यस्माज्जाया हिरण्मयी ॥ ६१ ॥

यस्मात् - யாதொரு காரணத்தில், प्राग्वंशवासिनः-'ப்ராக் வம்சம்' என்னும் இடத்தில் வசிக்கின்றவரும், अनन्यजानेः - வேறொருத்தியைப் பத்தினியாக அடையாதவருமான, पत्युः- ராமருக்கு, हिरण्मयी - ஸ்வர்ணமயமான, सा एव - அந்த ஸீதையே, जाया-பத்நியாக, आसीत् - இருந்தாளோ, (तस्मात्- அக்காரணத்தினால்), वैदेह्याः - ஸீதையின், त्यागोऽपि - பரித் யாகமும், श्लाघ्यः-சிலாகிக்கத் தக்கதாக, अभवत्-இருந்தது.

(க-து) ராமர் பொன்மயமான ஸீதையின் பதுமையை வைத் துக் கொண்டு யாகம் செய்தார்; இதனைக் கண்டவர்கள், அவருக்கு ஸீதையிடம இருந்த அன்பை அறிந்து மகிழ்ந்தனர். இதுவரை ஸீதாத் யாகத்தைக் குற்றமாகக் கருதியவர்களும் கூட இப்பொழுது அதைக் கொண்டாடத்தக்க ஒரு செயலாகக் கருதினார். ஸீதையை விடாது இருந்திருந்தால் தமக்கு ஸீதையிடமுள்ள போன்பைக் காட்ட ராம ருக்கு இத்தகைய ஸந்தர்ப்பம் வாய்த்திராது. இதன் மூலம்,ஸீதையின் தூய்மையைத் தாம் ஸந்தேகிக்க வில்லை என்பதையும் காட்டினார்.

மனைவி இல்லாதவர் யாகம் செய்தல் கூடாதாகையால் ராமர் ஸீதையின் பொற்பதுமையை மனைவியின் ஸ்தானத்

தில் வைத்துக் கொண்டார். प्राग्वंशः-யாகசாலைக்குக் கிழக்கி லுள்ள மண்டபம்; யாகம் செய்பவர் தம்மனைவி முதலியோருடன் யாகம் முடியும் வரை இங்கே தங்கியிருப்பர்.

न सीतायाः परां भार्यां वव्रे स रघुनन्दनः ।
यज्ञे यज्ञे च पत्न्यर्थं जानकी काञ्चनी भवत् ॥

என வால்மீகி கூறியதையும் காண்க. [உத்தர.99-7]

विधेरधिकसंभारस्ततः प्रववृते मखः ।
आसन् यत्र क्रियाविघ्ना राक्षसा एव रक्षिणः ॥ ६२ ॥

**ततः** - பிறகு, **यत्र** - எந்த யாகத்தில், **क्रियाविघ्नाः** - யாக காரியத்திற்கு இடையூறுகளைச் செய்கின்ற, **राक्षसा एव** - ராக்ஷஸர்களே, **रक्षिणः** - (யாகத்தை) காப்பாற்றுகின்றவர்களாக, **आसन्** - ஆனார்களோ, (அத்தகைய), **विधेः** - சாஸ்திரத்தில் சொல்லப்பட்டதைக் காட்டிலும், **अधिकसंभारः** - அதிகப் பொருள்களை உடைய, **मखः** - யாகமானது, **प्रववृते** - தொடங்கிற்று.

(க-து) சாஸ்திரத்திலே கூறியுள்ள அளவைக் காட்டிலும் அதிகமான அளவிலே பொருள்களைக் கொண்டு யாகம் தொடங்கியது; ராமர் செய்த யாகத்தின் தனிச் சிறப்பு என்னவெனின், யாகத்திற்கு இடையூறு செய்யும் ராக்ஷஸர்களே இங்கு ரக்ஷகர்களாக அமைந்திருந்தனர்.

ईदृशो दृष्टपूर्वो न एवमूचुस्तपोधनाः ।
सर्वत्र वानरास्तस्थुः सर्वत्रैव च राक्षसाः ।
वासोधनान्नकामेभ्यः पूर्णहस्ता ददुर्भृशम् ।
[உத்தரம் 92-18, 19].

என யாகத்தை வர்ணித்தார் வால்மீகி; கண்ணில் பட்டதை எல்லாம் கவரும் சுவபாவமுள்ள வானரர்களும் ராக்ஷஸர்களும் தாநாதிகாரிகளாக இருந்தனர் என்பது கவனிக்கத் தக்கது.

अथ प्राचेतसोपज्ञं रामायणमितस्ततः ।
मैथिलेयौ कुशलवौ जगतुर्गुरुचोदितौ ॥ ६३ ॥

**अथ** - பிறகு **मैथिलेयौ** - ஸீதையின் குமாரர்களான, **कुशलवौ** - குசனும் லவனும், **गुरुचोदितौ**-குருவான வால்மீகியினால் உத்தரவிடப்பட்டவர்களாய், **प्राचेतसोपज्ञं** - வால்மீகியினால் முதலில் அறியப்பட்ட (செய்யப்பட்ட), **रामायणं** - ராமாயணத்தை (ராமரது சரிதத்தை), **इतस्ततः** -பல இடங்களிலும், **जगतुः** - பாடினார்கள்.

(க-து) வால்மீகி முனிவரால் ஆக்ஞாபிக்கப்பட்டகுசனும் லவனும் முதற்காவ்யமான ராமசரிதத்தை அயோத்தியில் பல இடங்களிலே பாடினர்.

**प्राचेतसः**-ப்ரசேதஸின் குமாரர் வால்மீகி. **प्राचेतसोऽहं दशमः पुत्रो राघवनन्दन** [உத. 96-18] என்பதைக் காண்க; சத்ருக்னனிடம் கூறியபடி ராமகுமாரர்களைத் தெரிவிக்கும் காலம் வந்துள்ளதால் முனிவர் அவர்களை அயோத்தியில் ராமாயணத்தைப் பாடும்படி ஏவினர். **आदिकाव्यम्-इदंराम** - [உத்தரம் 98-18] என பிரம்மதேவர் கூறியுள்ளார்.

वृत्तं रामस्य वाल्मीकेः कृतिस्तौ किन्नरस्वनौ ।
किं तद्येन मनो हर्तुमलं स्यातां न शृण्वताम् ॥ ६४ ॥

**वृत्तं** - (வர்ணிக்கப்பட்ட) சரித்ரம், **रामस्य** - ராமருடையது; **कृतिः** - காவ்யம், **वाल्मीकेः** - வால்மீகியினுடையது; **तौ** - பாடுகின்ற அவ்விருவர்களும், **किन्नरस्वनौ** - கின்னரர்களின் சாரீரம் போன்ற சாரீரம உடையவர்கள், **येन** - எந்தக் காரணத்தினால், (**तौ** - அவ்விருவர்களும), **शृण्वतां** - (பாட்டைக்) கேட்கின்றவர்களின், **मनः** - மனத்தை, **हर्तुं** - வசீகரிப்பதற்கு, **अलं न स्यातां** - சக்தி உடையவர்களாக

இருக்க மாட்டார்களோ, तत् - அப்படிப்பட்ட காரணம், किम् - என்ன இருக்கிறது ?

(க-து) ராமசரிதமும், வால்மீகியின் கவிதையும், குசலர்களின் இனிய கானமும் கேட்பவர்களின் மனத்தைப் பரவசப் படுத்தின.

वृत्तं रामस्य - என்பதனுல் காவ்யத்திலே சொல்லப்படும் விஷயத்தின் சிறப்புக் கூறப்பட்டது. 'न ह्यन्योऽर्हति काव्यानां यशोभाग् राघवादृते' [உத். 98-18] ராமரைத் தவிர வேறு எவரும் காவ்யத் தலைவராகத் தக்கவரல்லர்என்பர். वाल्मीकेः - புற்றினின்றும் வெளி வந்தவர் ; தவம் செய்து அதன் பயனுக நாரதருடைய அருள், பிரம்மதேவரின் வரம், தானுகவந்த ஸரஸ்வதியின் ஸாந்நித்யம் என்ற பெருமை களைப் பெற்றவர் என்பது இதனுலே கூறப்பட்டது; दिव्यमद्भुतरूपं च सत्यवाक्यमनावृतम् என்று ராமாயணத்தைப் பற்றிக்கூறுவர் பிரம்மதேவர். किन्नरस्वनौ என்பதால் குரலினி னிமை கூறியதாயிற்று.

रूपे गीते च माधुर्यं तयोस्तज्ज्ञैर्निवेदितम् ।
ददर्श सानुजो रामः शुश्राव च कुतूहली ॥ ६९ ॥

तज्ज्ञैः - அவற்றை (அழகையும் இனிமையையும்) அறிந்தவர்களால், निवेदितं - தெரிவிக்கப்பட்ட, तयोः - அவ் விருவர்களின், रूपे - உருவததிலும், गीते च - பாட்டிலும் உள்ள, माधुर्यं - இனிமையை, सानुजः - தம்பிகளுடன் கூடிய, रामः - ராமர், कुतूहली (सन्) ஆவல் உடையவராக, ददर्श - பார்த்தார்; शुश्राव च - கேட்கவும் கேட்டார்.

(க-து) குழந்தைகளின் வடிவழகையும் அவர்களது கானத் தின் இனிமையையும், உணர்ந்தவர்கள் கூற, ராமர் தமது தம்பிகளு டன் ஸபையில் இருந்து கொண்டு, மிகக்களிப்புடன் அவர்களுடைய அழகைக்கண்டார், அவர்களது பாட்டையும் கேட்டார்.

**कुतूहली** - 'அவர்களைப்' பார்த்த பின்பும், பாட்டைக் கேட்ட பின்பும் கூட மன வெழுச்சி அடங்காதவராக' என்று கருத்து.

तद्गीतश्रवणैकाग्रा संसदश्रुमुखी बभौ ।
हिमनिष्यन्दिनी प्रातर्निर्वातेव वनस्थली ॥ ६६ ॥

**तद्गीत-श्रवणैकाग्रा** - அவர்களுடைய பாட்டைக் கேட்பதில் ஈடுபட்ட, **अश्रुमुखी** - ஆனந்த பாஷ்பத்தை முகத்திலுடைய, **संसत्** - அந்த ஸபையானது, **प्रातः** - விடியற்காலையில், **हिम-निष्यन्दिनी** - பனித்துளிகளைப் பெருக்குவதும், **निर्वाता** – காற்றில்லாததுமான, **वनस्थली इव** - வனப்ரதேசம் போல், **बभौ** - விளங்கிற்று.

(க-து) அவர்களது பாட்டைக் கேட்டு ஆனந்த பாஷ்பம் பெருக்கிய அச்சபை, பனிக்காலத்திலே விடியற்காலை வேளையில் இலைகளின் நுனியினின்றும் பனித்துளிகளைச் சொட்டுகின்ற வனப் பிரதேசம் போல் அசைவற்று இருந்தது.

பனிக்காலத்திலே விடியற்காலையில் குளிரினால் பறவைகளும் விலங்குகளும் கூட வெளிவராது இருக்குமாதலால், காடு சலனமின்றி இருக்கும்; அதுபோல் பலர் கூடியிருந்த சபையும் அசைவின்றி இருந்தது.

वयोवेषविसंवादि रामस्य च तयोस्तदा ।
जनता प्रेक्ष्य सादृश्यं नाक्षिकम्पं व्यतिष्ठत ॥ ६७ ॥

**तदा** - அப்பொழுது, **जनता** - ஜன சமூகமானது, **वयो-वेष-विसंवादि** - வயதிலும், உடையிலும் மாத்திரம் வேறு பட்டதாக, **उभयोः** - அவ்விருகுமாரர்களுக்கும், **रामस्य च** - ராமருக்கும் (இருந்த), **सादृश्यं** - ஸமபாவத்தை, (ஒப்புமையை), **प्रेक्ष्य**-கண்டு, **नाक्षिकंपं**-கண் இமைக்காமல், **व्यतिष्ठत**-இருந்தது.

(க-து) ஸபையிலுள்ளவர்கள், ராமருக்கும் அக்குழந்தைகளுக்கும் தோற்றத்திலுள்ள ஒற்றுமையைக் கண்டு வியப்புற்று இமை கொட்டாது இருந்தனர்.

தோற்றத்திலே ஒற்றுமை இருந்தது; வயதிலும் உடையிலும் ராமருக்கும் அக்குழந்தைகளுக்கும் வேறுபாடு காணப்பட்டது; ராமர் வயது அதிகமுடையவர்; அரசருடையணிந்திருந்தார். குசலவர்கள் வயதிலேமிக இளைவர்கள்; முனிவருடையான மரவுரி அணிந்திருந்தனர்; ராமரது மக்களே அவர்கள் என்பது, சத்ருக்னனைத் தவிர வேறு எவருக்குமே தெரியாதாதலால் வடிவிலே உள்ள ஒற்றுமையைக் கண்டு ஜனங்கள் ஆச்சர்ய முற்றனர்.

ऊचुः परस्परं चेदं सर्व एव समाहिताः ।
उभौ रामस्य सदृशौ बिंबाद् बिंबमिवोद्धृतौ ।
जटिलौ यदि न स्यातां न वल्कलधरौ यदि ।
विशेषं नाधिगच्छामो गायतोः राघवस्य च ॥

[உத்தரம் 94-13-14] என்பதைக் காண்க.

उभयोर्न तथा लोकः प्रावीण्येन विसिष्मिये ।
नृपतेः प्रीतिदानेषु वीतस्पृहतया यथा ॥ ६८ ॥

लोकः - ஜனங்கள், नृपतेः - ராமருடைய, प्रीतिदानेषु - பிரீதியினால் கொடுக்கப்பட்ட வஸ்துக்களில், उभयोः - குசலவர்களின், वीतस्पृहतया ஆசையின்மையால், यथा - எப்படி, विसिष्मिये - ஆச்சர்யம் அடைந்தனரோ, तथा - அப்படி, प्रावीण्येन - அவ்விருவர்களின் பாடும் ஸாமர்த்தியத்தினால், न विसिष्मिये - ஆச்சர்யம் அடையவில்லை.

(க-து) கானத்தைக் கேட்டு மகிழ்ந்த ராமர் குசலவர்களுக்கு அன்புடன் பொற்காசு தந்தபொழுது, அவர்கள் அதில் ஆசை வைக்காதவர்களாய் ஏற்க மறுத்தனர். குசலவர்களின் பாடும் திறமை கண்டு ஆச்சரியமுற்றதைக் காட்டிலும் ராமர் கொடுத்த பரிசைப்

பெற்றுக் கொள்ள அவ்விருவரும் மறுத்தபொழுது ஜனங்கள், அவர்களின் ஆசையின்மையைக் கண்டு மிகவும் வியப்புற்றனர்.

இருபது ஸர்க்கங்கள் பாடப்பட்டவுடன் பதினெண்ணாயிரம் பொற்காசுகளைத் தர ராமர் முயன்றாரென ராமாயணம் கூறும்.

दीयमानं सुवर्णं तु नागृह्णीतां कुशीलवौ ।
ऊचतुश्च महात्मानौ किमनेनेति विस्मितौ ।
वन्येन फलमूलेन निरतौ वनवासिनौ ।
सुवर्णेन हिरण्येन किं करिष्यामहे वयम् ॥
श्रोतारश्चैव रामश्च सर्व एव सुविस्मिताः ॥
[உத்தரம் 94-19-21.]

गेये को नु विनेता वां कस्य चेयं कृतिः कवेः ।
इति राज्ञा स्वयं पृष्टौ तौ वाल्मीकिमशंसताम् ॥ ६९ ॥

"गेये - ஸங்கீதத்தில், वां - உங்களுக்கு, को नु विनेता - யார் உபாத்தியாயர்?, इयञ्च - (நீங்கள் பாடிய) இதுவும், कस्य कवेः - எந்தக் கவியின், कृतिः-காவ்யம்?" इति-என்று, राज्ञा स्वयं - அரசராலேயே, पृष्टौ - கேட்கப்பட்ட, तौ - அவ்விருவர்கள், वाल्मीकिं - வால்மீகியை, अशंसताम् - (குருவாகவும் கவியாகவும்) சொன்னார்கள்.

(க-து) "உங்கள் உபாத்யாயர் எவர்? நீங்கள் பாடும் க்ருதி யாருடையது?" என்று ராமர் குசலவர்களைக் கேட்க, அவ்விருவர்களும் வால்மீகியைத் தங்களுடைய குருவாகவும் காவ்யம் செய்த கவியாகவும் சொன்னார்கள்.

நாராயணரும் அருணகிரியும் கொண்டபாடம் 'गेये-केन विनीतौ वाम्' என்பது. वाम् - என்றது युवाम् - என்ற பொருளில் வந்த உருபேற்காச் சொல் என்று கருதுவர். இதுவே பழைய பாடம் என்பதற்குவேண்டிய ஆதாரங்களும் இருக்கின்றன.

अथ सावरजो रामः प्राचेतसमुपेयिवान् ।
ऊरीकृत्यात्मनो देहं राज्यमस्मै न्यवेदयत् ॥ ७० ॥

**अथ** - பிறகு, **सावरजः** - தம்பிகளுடன் கூடிய, **रामः** - ராமர், **प्राचेतसं** - வால்மீகியை, **उपेयिवान् (सन्)** - அடைந்தவராகி, **देहं** - சரீரத்தை மாத்திரம், **आत्मनः** - தமக்கு, **ऊरीकृत्य** - உரியதாகச் செய்து கொண்டு, **राज्यं** - ராஜ்யத்தை, **अस्मै** - அவருக்கு, **न्यवेदयत्** - தெரிவித்தார் (அர்ப்பணம் செய்தார்).

(க-து) காவ்யத்தைக் கேட்டு மிக மகிழ்ந்த ராமர் தமது ராஜ்யம் முழுவதையுமே வால்மீகிக்கு அர்ப்பணம் செய்தார்.

இவ்வளவு இனிய காவ்யத்தைச் செய்தவர்க்குராஜ்யமே தக்க ஸம்மானமாகும் என எண்ணி ராமர் தம்பிகளுடைய அனுமதியும் பெற்று, ராஜ்யத்தை முனிவருக்குத் தர முன் வந்தார். யாகம் முடிக்கவேண்டியிருந்ததால் அதற்குச் சாதனமான தம் உடலை மஹர்ஷிக்கு அவர் அர்ப்பணம் செய்யவில்லை.

ராஜ்யத்தைத் தருவதற்குத் தம்பிகளின் ஸம்மதியைப் பெற்றுள்ளார் என்பது, **सावरजः** என்ற விசேஷணத்தால் குறிக்கப்பட்டது.

स तावाख्याय रामाय मैथिलेयौ तदात्मजौ ।
कविः कारुणिको वव्रे सीतायाः संपरिग्रहम् ॥ ७१ ॥

**कारुणिकः** - கருணை உடைய, **सः कविः**-அக்கவி, **रामाय**- ராமர் பொருட்டு, **तौ** - அந்த, **मैथिलेयौ** - குச லவர்களை, **तदात्मजौ** - அவருடைய (ராமருடைய) புத்ரர்களாக, **आख्याय** - சொல்லி, **सीतायाः** - ஸீதையின், **संपरिग्रहं** - அங்கீகாரத்தை (ஸீதையை அழைத்துக் கொள்ளும்படி), **वव्रे** - வேண்டினார்.

(க-து) வால்மீகி குசனும் லவனும் ராமருடைய குமாரர்கள் என்பதைத் தெரிவித்து, பதிவ்ரதையான ஸீதையை ஏற்றுக் கொள்ளும்படி ராமரை வேண்டினார்.

**कारुणिकः** - என்பது வால்மீகியின் அஸாதாரணமான குணத்தைக் காட்டியது; 'ततः करुणवेदित्वात्' என ராமாயணத்தில் வால்மீகியின் சிறப்பான குணமாகக் கருணை காட்டப்பட்டுள்ளது. ராமரால் ஸீதை ஏற்றுக் கொள்ளப் படுதலையே வால்மீகி ராஜ்யத்தைக் காட்டிலும் மேலானதாகக் கருதினார். 'संपरिग्रहः', सम्यक् परिग्रहः-संम्यक्त्वं च पुनरपि वियोगाभावः' नारायणः ॥

तात शुद्धा समक्षं नः स्नुषा ते जातवेदसि ।
दौरात्म्याद्रक्षसस्तां तु नात्रत्याः श्रद्दधुः प्रजाः ॥ ७२ ॥

**तात** - தந்தையே, **ते स्नुषा**-உம்முடைய நாட்டுப்பெண் (ஸீதை), **नः** - எங்களுடைய, **समक्षं** - கண்ணெதிரில், **जातवेदसि** - அக்னியில் (பிரவேசித்து), **शुद्धा** - பரிசுத்தமானாள்; (**किं**)**तु** - ஆனால், **रक्षसः** - ராக்ஷஸனுடைய, **दौरात्म्यात्** - கெட்ட ஸ்வபாவத்தினாலே, **अत्रत्याः** - இங்குள்ள, **प्रजाः** — ஜனங்கள், **तां** - அவளை, **न श्रद्दधुः** நம்பவில்லை (பரிசுத்தமுடையவளாக எண்ணவில்லை).

(க-து) "அக்னிப்ரவேசம் செய்து பதிவ்ரதை என்பதை நிரூபித்த பிறகும் அயோத்தியில் உள்ள ஜனங்கள் அவளை நம்பவில்லை'

தந்தையின் நண்பராதலால் வால்மீகியை ராமர், தந்தையை அழைக்கும் சொல்லால் அழைத்தார். 'பிரஜைகள் நம்பவில்லை!' என்று கூறியதால் ராமர் தாம் நம்புவதாக ஸூசிப்பித்தார். ஜனங்கள் நம்பாததன் காரணம் **अत्रत्याः**- என்பதால் காட்டப்பட்டது. ஸீதை அக்னிப்ரவேசம் செய்ததை இங்குள்ள ஜனங்கள் காணவில்லை; எனவே நம்பாமை அவர்களது பிழையன்று என்பதும் கருத்து.

ताः स्वचारित्रमुद्दिश्य प्रत्याययतु मैथिली ।
ततः पुत्रवतीमेनां प्रतिपत्स्ये त्वदाज्ञया ॥ ७३ ॥

**मैथिली** - ஸீதை, **स्वचारित्र उद्दिश्य** - தன்னுடைய நடத்தையைக் குறித்து, **ताः** - அந்தப் பிரஜைகளை, **प्रत्याययतु** - நம்பும்படி செய்யவேண்டும்; **ततः** - பிறகு, **पुत्रवतीं** - புத்ரர்களோடு கூடிய, **एनां** - இவளை, **त्वदाज्ञया** - உம்முடைய ஆஜ்ஞையினால், **प्रतिपत्स्ये** - அங்கீகரித்துக் கொள்வேன்.

(க-து) "இங்குள்ள ஜனங்களும் அவளுடைய பாதிவ்ரத்யத்தை நம்பும்படி செய்தால் பிறகு அவளையும் புத்திரர்களையும் ஏற்றுக் கொள்வேன்" என்று ராமர் சொன்னார்.

'श्वः प्रभाते तु शपथं मैथिली जनकात्मजा ।
करोतु परिषन्मध्ये शोधनार्थं ममैव च' என்பது ராமாயணம்.

**शोधनार्थं ममैव च** - 'என்பழி நீங்குவதற்கும்' என்பது பொருள்; லங்கையில் ஸீதை அக்னி ப்ரவேசம் செய்த பொழுது தன் கற்பை நிரூபித்தல் என்ற ஒருகவலை தான் அவளுக்கு இருந்தது. இப்பொழுதோ என் பழிதீர்த்தலும் அவளது கடமையாயிற்று என்பது இச்சொற்களால் குறிக்கப்பட்டன.

इति प्रतिश्रुते राज्ञा जानकीमाश्रमान्मुनिः ।
शिष्यैरानाययामास स्वसिद्धिं नियमैरिव ॥ ७४ ॥

**राज्ञा** - அரசரால், **इति** - இவ்வாறு, **प्रतिश्रुते (सति)** - பிரதிக்ஞை செய்யப்பட்டபொழுது, **मुनिः** - முனிவர், **आश्रमात्** - (வனத்திலுள்ள தம்முடைய) ஆச்ரமத்திலிருந்து, **जानकीं** - ஸீதையை, **शिष्यैः** - சிஷ்யர்களின் மூலம், **स्वसिद्धिं** - (முக்தியாகிய) தம்முடைய ஸித்தியை, **नियमैरिव** - தபஸினால் (வரவழைத்துக் கொள்வது) போல, **आनाययामास** - வரவழைத்தார்.

(க-து) வால்மீகி தபச்சக்தியைக் கொண்டு ஸித்தியைப் பெறு வதுபோல் ஶிஷ்யர்கள் மூலம் ஆச்ரமத்தினின்றும் ஸீதையை அழைத் துவரச் செய்தார்.

ஶிஷ்யர்களுக்குத் தவமும், ஸீதைக்கு ஸித்தியும் உப மானங்கள். உவமையினால் ஸீதையின் பெருமை கூறப்பட் டது.

अन्येद्युरथ काकुत्स्थः संनिपात्य पुरौकसः ।
कविमाह्वाययामास प्रस्तुतप्रतिपत्तये ॥ ७५ ॥

अथ - பிறகு, काकुत्स्थः - ராமர், अन्येद्युः - மறுநாள், प्रस्तुत प्रतिपत्तये - பிரஸ்தாபிக்கப்பட்ட காரியத்தை செய்வ தற்காக, पुरौकसः - நகர வாஸிகளை, सन्निपात्य - கூடும்படி செய்து, कविं - வால்மீகியை, आह्वाययामास - கூப்பிடச் செய்தார்.

(க-து) ராமர் மறுநாள் நகர ஜனங்களைக் கூடும்படி செய்து பின் வால்மீகியை வரவழைத்தார்.

अन्येद्युः - மறுநாள்; பின்னொருநாள் என்றும் பொரு ளுண்டு.

स्वरसंस्कारवत्यासौ पुत्राभ्यामथ सीतया ।
ऋचेवोदर्चिषं सूर्यं रामं मुनिरुपस्थितः ॥ ७६ ॥

अथ - பிறகு, स्वरसंस्कारवत्या - ஸ்வரத்தையும் இலக் கணத் தூய்மையுமுடைய, ऋचा - வேத மந்திரத்தினால் (காயத்ரி மந்திரத்தினால்), उदर्चिषं - மிகக் காந்தி பொருந் திய, सूर्यमिव - ஸூர்யனை (ஸேவிப்பது) போல், पुत्राभ्यां - புத்ரர்களுடன் கூடிய, सीतया - ஸீதையுடன், रामं - ராமரை, असौ मुनिः - அந்த முனிவர், उपस्थितः - அடைந்தார்.

(க-து) வால்மீகி ஸீதையோடும் குசலவர்களுடனும் வந்தார்.

ஸுஸ்வரமுடையதும் இலக்கண வரம்பை மீறாதது மான வேதமந்திரத்தினால் ஸூர்யனை ஸ்துதிப்பதுபோல்

முனிவர், குசலவர்களுடன் கூடிய ஸீதையை அழைத்துக் கொண்டு ஸபையில் ராமரிடம் வந்தார்.

ऋचा - என்றது காயத்ரியை; ஸீதைக்கு காயத்ரியும் குசலவர்களுக்கு ஸ்வரஸம்ஸ்காரங்களும் உபமானங்கள்; संस्कारः - ஸ்பஷ்டமான உச்சாரணம் என்றும் சிலர் பொருள் கொள்வர்.

तां दृष्ट्वा श्रुतिमायान्तीं ब्रह्माणमनुगासिनीम्
वाल्मीकेः पृष्ठतः सीतां साधुवादो महानभूत् ॥
[உத்தரம் 96-11.]

काषायपरिवीतेन स्वपदार्पितचक्षुषा ।
अन्वमीयत शुद्धेति शान्तेन वपुषैव सा ॥ ७७ ॥

काषायपरिवीतेन - காவி வர்ணமுடைய வஸ்திரத்தினால் முற்றும் மறைக்கப்பட்டதும், स्वपदार्पितचक्षुषा - தனது பாதங்களில் வைக்கப்பட்ட கண்களை உடையதும், शान्तेन - அடக்கமுடையதுமான, वपुषा एव - சரீரத்தினாலேயே, सा - அவள், "शुद्धा - பரிசுத்தையான பதிவ்ரதை," इति - என்று, अन्वमीयत - ஊஹிக்கப்பட்டாள்.

(க-து) ஸீதையைப் பார்த்தமாத்திரத்திலேயே அவள் மிகவும் பரிசுத்தமுடையவள் என்பதை ஜனங்கள் அறிந்து கொண்டார்கள். காவி நிறமுள்ள வஸ்திர மணிந்து அவள் தனது உடல் முழுவதையும் மறைத்துக் குனிந்த தலையுடன் இருந்தாள்.

सीता काषायवासिनी - என்பது ராமாயணம் [96-14.]

जनास्तदालोकपथात् प्रतिसंहृतचक्षुषः ।
तस्थुस्तेऽवाङ्मुखाः सर्वे फलिता इव शालयः ॥ ७८ ॥

तदालोकपथात् - ஸீதையின் பார்வையிட விழும் மார்க்கத்திலிருந்து, प्रतिसंहृतचक्षुषः - திருப்பப்பட்ட கண்களை உடைய, ते सर्वे जनाः - அந்த ஸமஸ்த ஜனங்களும், फलिताः - விளைந்திருக்கிற, शालयः इव - நெற்பயிர்கள் போல், अवा-

**ङ्मुखाः** - கீழ் நோக்கிய முகமுடையவர்களாக, **तस्थुः**- இருந் தார்கள்.

(க-து) 'இத்தகைய பதிவ்ரதைக்குக் கொடுமை செய்தோமே' என்ற எண்ணத்தால் வெட்கி, அவள் தங்களைப் பார்த்து விடுவாளோ வென அஞ்சியவர்களாய்த் தலை குனிந்து இருந்தனர் சபையிலுள்ள ஜனங்கள்; தலை குனிந்திருந்த நிலையில் அவர்கள், கதிர் முதிர்ந்து தலை சாய்ந்துள்ள நெற்பயிர்போல் காணப்பட்டனர்.

'फलिताः इव शालयः-उपमया सर्वेषामपि युगपदधोमुखत्वं ध्वन्यते' नारायणः ॥

तां दृष्टिविषये भर्तुर्मुनिरास्थितविष्टरः ।
कुरु निस्संशयं वत्से स्ववृत्ते लोकमित्यशात् ॥ ७९ ॥

**आस्थितविष्टरः** - ஆஸநத்தில் அமர்ந்த, **मुनिः** - முனிவர், "**वत्से** - குழந்தாய், **भर्तुः** - பர்த்தாவின், **दृष्टि - विषये** - கண் முன்பு, **स्ववृत्ते** - உன்னுடைய நடத்தை விஷயத்தில், **लोकं** - இந்த ஜனங்களை, **निस्संशयं** - சந்தேகமற்றவர்களாக, **कुरु** - செய்", **इति** - என்று, **तां** - அவளை, **अशात्**- ஆக்ஞாபித்தார்.

(க-து) வால்மீகி ஸீதையை அழைத்து, "உன்னுடைய நன்னடத்தையை அவர்களுக்குக் கணவர் கண் முன்பு நிரூபித்துவிடு" என்று உத்தரவிட்டார்.

अथ वाल्मीकिशिष्येण पुण्यमावर्जितं पयः ।
आचम्योदीरयामास सीता सत्यां सरस्वतीम् ॥ ८० ॥

**अथ** - பிறகு, **वाल्मीकि-शिष्येण** - வால்மீகியின் சிஷ்யரால், **आवर्जितं** - கொடுக்கப்பட்ட, **पुण्यं** - பரிசுத்தமான, **पयः** - தீர்த்தத்தை, **आचम्य** - ஆசமனம் செய்து விட்டு, **सीता** - ஸீதை, **सत्यां** - உண்மையான, **वाचं** - வார்த்தையை, **उदीरयामास** - சொன்னாள்.

(க-து) வால்மீகியின் சிஷ்யர் தந்த தீர்த்தத்தைக் கொண்டு ஆசமனம் செய்தபின் ஸீதை கூறத்தொடங்கினாள்.

वाङ्मनःकर्मभिः पत्यौ व्यभिचारो यथा न मे ।
तथा विश्वंभरे देवि मामन्तर्धातुमर्हसि ॥ ८१ ॥

'वाङ्मनःकर्मभिः - வாக்கினாலும் மனத்தாலும் கார்யத்தினாலும், पत्यौ - பதிவிஷயத்தில், मे - எனக்கு, व्यभिचारः - குற்றமானது, न यथा - இல்லாவிட்டால், तथा - அப்பொழுது, विश्वंभरे देवि - எல்லாவற்றையும் தாங்குகின்ற ஹே பூமிதேவியே, मां - என்னை, अन्तर्धातुं - உள்ளே வைத்துக் கொள்வதற்கு, अर्हसि - (நீ) தகுந்தவளாக இருக்கின்றாய்.'

(க-து) "நான் பாதிவ்ரத்யம் தவறுதவளாக இருந்தால், ஹே பூமிதேவியே, நீ என்னை அழைத்துக் கொள்" என்று கூறினாள்.

यथाहं राघवादन्यं मनसाऽपि न चिन्तये ।
तथा मे माधवी देवी विवरं दातुमर्हति ॥
मनसा कर्मणा वाचा यथा रामं समर्चये ।
तथा मे माधवी देवी विवरं दातुमर्हति॥
[உத்தரம். 97, 14-15.]

एवमुक्ते तया साध्व्या रन्ध्रात्सद्योभवाद्भुवः ।
शातह्रदमिव ज्योतिः प्रभामण्डलमुद्ययौ ॥ ८२ ॥

साध्व्या - பதிவ்ரதையான, तया - அவளால், एवं - இப்படி, उक्ते - சொல்லப்பட்ட பொழுது, सद्योभवात् - உடனே உண்டான, भुवः - பூமியின், रन्ध्रात् - த்வாரத்தினின்று, शातह्रदम् - மின்னலினுடையதான, ज्योतिरिव - காந்திபோல, प्रभामण्डलं - காந்தி சமூஹமானது, उद्ययौ - மேலே வந்தது.

(க-து) அவள் அவ்வாறு சொன்ன உடனே பூமி பிளந்து அங்கு மின்னல் போன்ற ஒரு ப்ரகாசம் தோன்றியது.

तत्र नागफणोत्क्षिप्तसिंहासननिषेदुषी ।
समुद्ररशना साक्षात्प्रादुरासीद्वसुंधरा ॥ ८३ ॥

तत्र - அந்த ஒளிக்கூட்டத்தின் மத்தியில், नागफणोत्क्षिप्त-सिंहासन-निषेदुषी - பாம்புகளின் படங்களினுல் தாங்கப்பட்ட ஸிம்மாஸனத்தில் உட்கார்ந்திருந்தவளும், समुद्ररशना - சமுத்ரத்தை மேகலையாகக் கொண்டவளுமான, वसुन्धरा - பூமிதேவி, साक्षात् - ப்ரத்யக்ஷமாக, प्रादुरासीत्- தோன்றினுள்.

(க-து) அதில் பாம்புகளின் படங்களால் தாங்கப்பட்ட ஆஸனத்தில் அமர்ந்து பூமிதேவி தோன்றினுள்.

सा सीतामङ्कमारोप्य भर्तृप्रणिहितेक्षणाम् ।
मा मेति व्याहरत्येव तस्मिन् पातालमभ्यगात् ॥ ८४ ॥

सा - அந்த பூமிதேவி, भर्तृ प्रणिहितेक्षणां - கணவரிடத்தில் (ராமரிடத்தில்) வைக்கப்பட்ட கண்களையுடைய. सीतां- ஸீதையை, अङ्कं - மடியை (மடியில்), आरोप्य - ஏற்றிவைத்துக்கொண்டு, तस्मिन् - அவர் (ராமர்) 'मा मा' - வேண்டாம் வேண்டாம்,' इति - என்று, व्याहरति एव - சொல்லும்பொழுதே, पातालं-பாதாளத்தை நோக்கி, अभ्यगात् - சென்றுள்.

(க-து) ஸீதையை எடுத்துக்கொண்டு போக வேண்டாம் என்று ராமர் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே பூதேவி அவளை எடுத்துச் சென்றுள்.

धरायां तस्य संरम्भं सीताप्रत्यर्पणैषिणः ।
गुरुर्विधिबलापेक्षी शमयामास धन्विनः ॥ ८५ ॥

सीता प्रत्यर्पणैषिणः வீதையைத் திரும்பத் தரவேண்டுமென்று விரும்புகின்ற, धन्विनः - வில்லை உடைய, तस्य - அந்த ராமருக்கு, धरायां - பூமியினிடத்துள்ள, संरम्भं - கோபத்தை, विधिबलापेक्षी - தைவபலத்தைக் கருதிய, गुरुः - குருவான வஸிஷ்டர், शमयामास - சாந்தப் படுத்தினுர்.

(க-து) பூமிதேவியினிடம் கோபமடைந்த ராமரை வஸிஷ்டர் சாந்தப்படுத்தினுர்.

गुरुः — ராமாயணத்தில் கூறியுள்ளபடி பிரம்மதேவர் என்றும் பொருள் கொள்ளலாம்.

ऋषीन् विसृज्य यज्ञान्ते सुहृदश्च पुरस्कृतान् ।
रामः सीतागतं स्नेहं निदधे तदपत्ययोः ॥ ८६ ॥

**रामः** - ராமர், **यज्ञान्ते**-யாகத்தின் முடிவில், **पुरस्कृतान्**- மரியாதை செய்யப்பட்ட, **ऋषीन्** - ரிஷிகளையும், **सुहृदश्च** - ஸ்நேஹிதர்களையும், **विसृज्य** - அனுப்பவிட்டு, **सीतागतं** - ஸீதையினிடமிருந்த, **स्नेहं** - பிரியத்தை, **तदपत्ययोः** - அவளுடைய புத்ரர்களான குசலவர்களிடத்தில், **निदधे** - வைத்தார்.

(க-து) ஸீதையைப் பிரிந்த ராமர் ஸீதையினிடம் வைத்திருந்த பிரியத்தை அவள் குமாரர்களான குசலவர்களிடத்தில் வைத்தார்.

ஸீதையிடம் வைக்கவேண்டிய அன்பையும் குசலவர்களிடம் வைத்ததால், புத்திரர்கள் என்ற முறையில் ராமரின் அன்பைப் பெற்றிருந்த குசலவர்கள், இருமடங்கு அன்பு பெற்றவராயினர்.

युधाजितश्च संदेशात् स देशं सिन्धुनामकम् ।
ददौ दत्तप्रभावाय भरताय भृतप्रजः ॥ ८७ ॥

**(किं च)** - மேலும் **भृतप्रजः** - பரிபாலிக்கப்பட்ட ப்ரஜைகளை உடைய, **सः** - அந்த ராமர், **युधाजितः** - யுதாஜித்தின், **संदेशात्** - வார்த்தையினால், **सिन्धुनामकं** - ஸிந்து என்ற பெயரை யுடைய, **देशं** - தேசத்தை, **दत्तप्रभावाय** - கொடுக்கப்பட்ட ஐச்வர்யமுடைய, **भरताय** - பரதன் பொருட்டு, **ददौ** - கொடுத்தார்.

(க-து) யுதாஜித்து அனுப்பிய செய்தியை அனுசரித்து ஸிந்து தேசத்திலுள்ள துஷ்டர்களை அடக்கும்படி பரதனைச் சேனையுடன் அனுப்பினார்.

**युधाजितः सन्देशः** - பரதனது மாமனும் கேகய நாட்டு அரசனுமான யுதாஜித் என்பவன், அருகிலுள்ள ஸிந்து

தேசத்து அரசனை வென்று உதவும்படி செய்தியனுப்பவும் ராமர் பரதனை யுதாஜித்தின் உதவிக்கு அனுப்பினார். ஸிந்து நாட்டினரை வென்று அத்தேசத்தைப் பரதன் ஆளவேண்டு மென ராமர் உத்தரவிட்டார்.

भरतस्तत्र गन्धर्वान् युधि निर्जित्य केवलम् ।
आतोद्यं ग्राहयामास समत्याजयदायुधम् ॥ ८८ ॥

**तत्र** - அந்த ஸிந்துதேசத்தில், **भरतः** - பரதன் **युधि** - யுத்தத்தில், **गन्धर्वान्** - (ஸிந்து தேச வாஸிகளான) கந்தர்வர்களை, **निर्जित्य** - ஜயித்து, **आतोद्यं केवलम्** - (அவர்களின் தொழிலுக்கு ஸாதனமான) வாத்யத்தைமாத்திரம், **ग्राहयामास** - எடுத்துக் கொள்ளும்படி செய்தான்; **आयुधम्** - ஆயுதத்தை, **समत्याजयत्** - விடும்படி செய்தான்.

(க-து) அவன் ஸிந்துதேச ஜனங்களை ஜயித்து அவர்களின் குலத்தொழிலை அனுசரிக்கும்படி செய்தான்.

ஸிந்து நாட்டினர் பாணர்கள்; வாத்யம் வாசித்துப் பிழைப்பவர்கள்; எனவே, பரதன் அவர்களை வென்று அவர்களது தொழிலான ஸங்கீதத்தையே கைக்கொள்ளும்படி செய்தான்.

**आतोद्यम्** - நால்வகை இசைக்கருவிகள். ஸர்க்க 8. சுலோகம் 34 உரையைக்காண்க.

स तक्षपुष्कलौ पुत्रौ राजधान्योस्तदाख्ययोः ।
अभिषिच्याभिषेकार्हौ रामान्तिकमगात् पुनः ॥ ८९ ॥

**सः** - அந்தப் பரதன், **अभिषेकार्हौ** - அபிஷேகம் செய்யத் தகுந்த, **तक्षपुष्कलौ** - தக்ஷன், புஷ்கலன் என்ற, **पुत्रौ** - (தன்)புத்ரர்களை, **तदाख्ययोः** - அவ்விருவர்களின் பெயரையுடைய, **राजधान्योः** - இரண்டு நகரங்களில், **अभिषिच्य** - அபிஷேகம் செய்து விட்டு, **पुनः** - மறுபடி, **रामान्तिकं** - ராமன் ஸமீபத்தை, **अगात्** - அடைந்தான்.

(க-து) பரதன் தன் குமாரர்களைத் தக்ஷசிலாவிலும் புஷ்கராவதியிலும் அபிஷேகம் செய்தான்.

हतेषु तेषु सर्वेषु भरतः कैकयीसुतः।
निवेशयामास तदा समृद्धे द्वे पुरोत्तमे ॥
तक्षं तक्षशिलायां तु पुष्कलं पुष्कलावते।
[உத்தரம். 101-10, 11.]

अङ्गदं चन्द्रकेतुं च लक्ष्मणोऽप्यात्मसंभवौ ।
शासनाद् रघुनाथस्य चक्रे कारापथेश्वरौ ॥ ९० ॥

**लक्ष्मणोऽपि** - லக்ஷ்மணனும், **रघुनाथस्य** - ராமருடைய, **शासनात्** - ஆஜ்ஞையினால், **अङ्गदं चन्द्रकेतुं च** - அங்கதன் சந்திரகேது என்ற, **आत्मसंभवौ** - தன்னுடைய இரண்டு குமாரர்களையும், **कारापथेश्वरौ** - 'காராபதம்' என்னும் தேசத்திற்கு அரசர்களாக, **चक्रे** - செய்தான்.

(க-து) ராமருடைய ஆஜ்ஞையினால் லக்ஷ்மணனும் தன் குமாரர்களைக் 'காராபதம்' என்னும் காட்டிற்கு அதிபர்களாகச் செய்தான்.

அங்கதனுடைய தலைநகர் அங்கதீயா ; சந்திரகேதுவினுடையது சந்திரகாந்தா என்பது. தேசத்தின் பெயர் காருபதம் என ஸ்ரீமத்ராமாயணம் கூறும்.

इत्यारोपितपुत्रास्ते जननीनां जनेश्वराः ।
भर्तृलोकप्रपन्नानां निवापान् विदधुः क्रमात् ॥ ९१ ॥

**इति** - இவ்வாறு, **आरोपित-पुत्राः** - (ஸிம்மாஸனத்தில்) ஏற்றுவிக்கப்பட்ட புத்ரர்களை உடைய, **ते**-அந்த, **जनेश्वराः**- அரசர்கள் (ராமர் முதலியவர்), **भर्तृलोकप्रपन्नानां** - பதியின் (தசரதரின்) லோகத்தை (ஸ்வர்க்கத்தை) அடைந்த, **जननीनां** - தம் தாய்மார்களுக்கு, **क्रमात्**-முறைப்படி, **निवापान्**-தர்ப்பணம் முதலியவற்றை, **विदधुः** - செய்தார்கள்.

(க-து) ராமரும் அவருடைய தம்பிகளும் இறந்த தாய்மார்களுக்குத் தர்ப்பணம் முதலியன செய்தார்கள்.

भर्तृलोकं प्रपन्नानाम्—सर्वाः प्रमुदिताः स्वर्गे राज्ञा दशरथेन च - என்பர் வால்மீகி. பதிவ்ரதைகள், இறந்தபின் தம் கணவரது உலகை யடைந்து வாழ்வர் என்பர் மனு.

पतिं या नाभिचरति मनोवाग्देहसंयता।
सा भर्तृलोकानाप्नोति सद्भिः साध्वीति चोच्यते॥ [9-29]

उपेत्य मुनिवेषोऽथ कालः प्रोवाच राघवम्।
रहःसंवादिनौ पश्येदावां यस्तं त्यजेरिति॥ ९२॥

अथ - பிறகு, कालः - யமன், मुनिवेषः - முனிவரின் வேஷமுடையவனாக (இருந்து கொண்டு), उपेत्य - வந்து, राघवं - ராமரிடம் "रहःसंवादिनौ - தனிமையில் பேசிக் கொண்டிருக்கிற, आवां - நம்மிருவரையும், यः पश्येत् - எவன் பார்க்கின்றானோ, तं - அவனை, त्यजेः-(தாங்கள்) விட்டு விட வேண்டும்", इति - என்று, प्रोवाच - சொன்னான்.

(க-து) பிறகு, ஒரு சமயம் முனிவர் வேஷத்தில் தோன்றிய யமன் "நாமிருவரும் பேசும் பொழுது பார்ப்பவனை நீர் உடனே பரித்யாகம் செய்ய வேண்டும்" என்ற ஒப்பந்தத்தை ராமருடன் செய்துகொண்டு பேச ஆரம்பித்தான்.

त्यजेः - 'த்யஜிக்க வேண்டும்' என்றதற்குக் 'கொன்று விடவேண்டும்' என்பது பொருள்: कस्यचित्त्वथ कालस्य रामे धर्मपरे स्थिते। कालस्तापसरूपेण राजद्वारमुपागमत्........यः शृणोति निरीक्षेद्वा स वध्यो भविता तव॥ [உத்தரகாண்டம் 103 1, - 12] என்பதைக் காண்க.

तथेति प्रतिपन्नाय विवृतात्मा नृपाय सः।
आचख्यौ दिवमध्यास्व शासनात्परमेष्ठिनः॥ ९३॥

'तथा - அப்படியே', इति - என்று, प्रतिपन्नाय - அங்கீகரித்த, नृपाय - அரசர் பொருட்டு, विवृतात्मा - வெளியிடப்பட்ட ஸ்வரூபமுடைய, सः - அவன் (யமன்), परमेष्ठिनः - பிரம்மதேவரின், शासनात् - ஆஜ்ஞையினால், दिवं -

ஸ்வர்க்கத்தை, अध्यास्व-(நீங்கள்) அடையவேண்டும்" (इति-என்று) आचख्यौ - சொன்னான்.

(க-து) "பிரம்மதேவரின் ஆஜ்ஞையை அனுசரித்துத் தாங்கள் இப்பொழுது பூலோகத்தை விட்டு ஸ்வர்க்கம் செல்ல வேண்டும்", என்று யமன் சொன்னான்.

மனிதர்களின் ஆயுளை நிச்சயிப்பவர் பிரம்மதேவர்; ஆதலால், शासनात् परमेष्ठिनः - என்றார்; பிரம்மதேவரால் குறிக்கப்பட்ட காலம் முடிந்தவுடன் உயிர்களைக் கவரவருப வன் யமன். எனவே ராமரின் ஆயுள் முடிவைத் தெரிவிக்க வந்தான் காலன். 'शरीरिणामायुर्नियामको ब्रह्मा; अहं तु तन्नियोगकारीत्यर्थः' नारायणः ॥

இத்தகைய கடுமையான நிபந்தனையை யமன் கூறியதற் குக் காரணம், அவன் கூறப்புகுந்த தேவரஹஸ்யமே.

विद्वानपि तयोर्द्वास्थः समयं लक्ष्मणोऽभिनत् ।
भीतो दुर्वाससः शापाद् रामसंदर्शनार्थिनः ॥ ९४ ॥

द्वास्थः - வாயிற்படியில் இருந்த, लक्ष्मणः - லக்ஷ்மணன், (समयं - அவ்விருவர்களின் ஒப்பந்தத்தை), विद्वानपि - அறிந் தவனாக இருந்தும், रामसन्दर्शनार्थिनः - ராமனைப் பார்க்க விரும்பிய, दुर्वाससः - துர்வாஸ மகரிஷியின், शापात्-சாபத் தினின்றும், भीतः - பயந்தவனாய், तयोः - அவ்விருவர்களின், समयं - ஒப்பந்தத்தை, अभिनत् - (தான் பிரவேசித்ததன் மூலம்) முறித்தான்.

(க-து) வாயிலைக் காக்கும்படி நியமிக்கப் பட்டிருந்த லக்ஷ்ம ணன், அந்த க்ஷணத்திலேயே ராமரைக் காணவேண்டுமென வந்த துர்வாஸரின் சாபத்திற்கு அஞ்சி, அவரது வருகையைத் தெரிவிக்க, ராமரும் யமனும் பேசிக் கொண்டிருக்கையில் இடையிலே சென் றான்; அதன் மூலம் ராமர் யமனுடன செய்து கொண்ட ஒப்பந்தத் திற்கு இடையூறு நேர்ந்தது.

ராமர் வாயிற்காப்பாளர்களை நீக்கிவிட்டு லக்ஷ்மணனைக் காவலாக வைத்திருந்தார். இச்சமயத்தில் தன்னை உள்ளே

அனுமதிக்காவிடில் அவ்வம்சத்தையே சபிப்பதாகக் கூறித் தூர்வாஸர் பயமுறுத்தவும், லக்ஷ்மணன் குடும்பம் அழிவதைக் காட்டிலும் தான் ஒருவன் இறப்பது நலமெனக் கருதி அவர்களது சம்பாஷணையின் மத்தியில் புகுந்தான்.

"अस्मिन् क्षणे मां सौमित्रे रामाय प्रतिवेदय।
(अन्यथा)
विषयं त्वां पुरं चैव शपिष्ये राघवं तथा।
भरतं चैव सौमित्रे युष्माकं या च सन्ततिः॥
न हि शक्ष्याम्यहं भूयो मन्युं धारयितुं हृदि।
तच्छ्रुत्वा घोरसंकाशं वाक्यं तस्य महात्मनः॥
चिन्तयामास मनसा तस्य वाक्यस्य निश्चयम्॥
एकस्य मरणं मेऽस्तु मा भूत् सर्वविनाशनम्।
इति बुद्ध्या विनिश्चित्य राघवाय न्यवेदयत्॥
[உத்தரம். 105-6-9.]

स गत्वा सरयूतीरं देहत्यागेन योगवित्।
चकारावितथां भ्रातुः प्रतिज्ञां पूर्वजन्मनः॥ ९९॥

**योगवित्** - யோக (மார்க்க) மறிந்த, **सः** - அந்த லக்ஷ்மணன், **सरयूतीरं** - ஸரயூநதியின் கரைக்கு, **गत्वा** - சென்று, **देहत्यागेन** – தன் உடலை விடுவதனால், **पूर्वजन्मनः** - (தனக்கு) முன் பிறந்த, **भ्रातुः** - ஸகோதரரின், **प्रतिज्ञां** - பிரதிக்ஞையை, **अवितथां** - உண்மையானதாக, **चकार** - செய்தான்.

(க-று) லக்ஷ்மணன் யோகமுறை அறிந்தவன். ஆதலால் யோகத்தினால் ப்ராணனை அடக்கி உயிர்விட்டு அதன் மூலம் தன் தமையனரை ஸத்யவாதியாகச் செய்தான்.

'தூர்வாஸர் தம்மைப் பார்த்துச்சென்றபின்பே ராமருக்குத் தாம் யமனுக்குத் தந்தபிரதிக்ஞை நினைவில் வந்தது; தமது தம்பியைக் கொல்லவேண்டிவந்ததே என நினைத்து மிகமிக மனம் நொந்தார். லக்ஷ்மணன் தன்னைக் கொன்று

வாக்குறுதியை நிறைவேற்ற ராமரை வற்புறுத்தினன். லக்ஷ்மணனைக் கொல்வதற்கு ராமர் முற்றிலும் மறுக்கவே வஸிஷ்டர், ராஜ்யத்தை விட்டுத் துரத்தி விடுதல் கொல்வதற்கு ஒப்பாகுமெனக் கூறினர்-பின் ராமர் லக்ஷ்மணனை த்யஜித்தார். தியாகம் செய்யப்பட்ட லக்ஷ்மணன் தன் வீடு செல்லாமல் நேரே ஸரயூதீரம் சென்று யோகமுறையால் உயிர் துறந்தான் என ஸ்ரீமத்ராமாயணம் கூறும்.

"विसर्जये त्वां सौमित्रे मा भूत् धर्मविपर्ययः ।
त्यागो वधो वा विहितः साधूनां ह्युभयं समम् ॥
स गत्वा सरयूतीरमुपस्पृश्य कृताञ्जलिः ।
निगृह्य सर्वस्रोतांसि निश्श्वासं न मुमोच ह ॥"

[உத்தரம். 106-13, 15.]

தந்தையின் வாக்கை உண்மையாக்கக் காடுசென்ற ராமரைக் காட்டிலும், தமையனாரின் வார்த்தையை உண்மையாக்கத் தன் உயிரை விருப்பத்துடன் தாமதமின்றித் துறந்த லக்ஷ்மணன் ஒருபடி மேலாகவே விளங்குகின்றான் என்பது கவனிக்கத் தக்கது.

तस्मिन्नात्मचतुर्भागे प्राङ्नाकमधितस्थुषि ।
राघवः शिथिलं तस्थौ भुवि धर्मस्त्रिपादिव ॥ ९९ ॥

**आत्मचतुर्भागे** - தம்முடைய நான்காவது அம்சமான, **तस्मिन्** - அந்த லக்ஷ்மணன், **प्राक्**-(தமக்கு) முன்பே, **नाकं**-ஸ்வர்க்கத்தை, **अधितस्थुषि** - அடைந்த பொழுது, **राघवः** - ராமர், **भुवि** - பூமியில், **त्रिपात्** - மூன்று பாதங்களையுடைய, **धर्म इव** - தர்மம் போல, **शिथिलं तस्थौ** - தளர்ந்து இருந்தார்.

(க-து) லக்ஷ்மணன் இறந்தபின், ராமர், பூலோகத்திலிருந்த தம்முடைய தைவாம்சத்தில் நான்கில் ஒரு பாகம் குறைந்தவரானர்.

விஷ்ணு தமது அம்சத்தை நான்கு கூறுகப் பகிர்ந்து பூமியில் நான்கு ஸஹோதரர்களாகப் பிறந்தார் என்பது

ராமயணத்தின் கருத்து. ततः पद्मपलाशाक्षः कृत्वात्मानं चतुर्विधम् । पितरं रोचयामास तदा दशरथं नृपम्-என்பர் வால்மீகி.

त्रिपाद् धर्मः - தபஸ், தூய்மை, தயை, ஸத்யம் என்ற நான்கு பாதங்களுடன் தர்மதேவதை வ்ருஷப ரூபத்தில் இருப்பதாகப் புராணங்கள் கூறும். ஒவ்வொரு யுகத்திலும் தர்மத்தின் ஒவ்வொரு பாதம் குறைவதாகக் கருதுவர். இங்கு மூன்று பாதங்களுடன் இருக்கும் தர்மம் ராமருக்கு உவமையாகக் கூறப்பட்டது.

तपः शौचं दया सत्यमिति पादाः प्रकीर्तिताः—धर्मोऽसि वृषरूपधृक् [1-17, 22.] என்ற ஸ்ரீபாகவதவசனத்தைக் காண்க.

स निवेश्य कुशावत्यां रिपुनागाङ्कुशं कुशम् ।
शरावत्यां सतां सूक्तैर्जनिताश्रुलवं लवम् ॥ ९७ ॥
उदक्प्रतस्थे स्थिरधीः सानुजोऽग्निपुरस्सरः ।
अन्वितः पतिवात्सल्याद्गृहवर्जमयोध्यया ॥ ९८ ॥

स्थिरधीः - உறுதியான எண்ணமுடைய, सः - அவர், रिपुनागाङ्कुशं - சத்ருக்களாகிய யானைகளுக்கு அங்குசம் போன்ற, कुशं - குசனை, कुशावत्यां - குசாவதி என்னும் நகரத்திலும், सूक्तैः - நன்மொழிகளால், सतां - பெரியோர்களுக்கு, जनिताश्रुलवं - ஆனந்த பாஷ்பத் திவலைகளை உண்டு பண்ணிய, लवं - லவனை, शरावत्यां - சராவதி என்னும் நகரிலும், निवेश्य - ஸ்தாபித்து விட்டு, सानुजः - தம்பிகளுடன் கூடியவராக, अग्निपुरस्सरः - அக்னியை முன் வைத்தவராய் இருந்துகொண்டு, पतिवात्सल्यात् - அரசரிடத்தில் உள்ள பிரியத்தினால், गृहवर्जं - வீடுகளை மாத்திரம் விட்டு (வந்த), अयोध्यया - அயோத்தியையினால் (அங்கு வஸிக்கும் மனிதர் முதலியவர்களால்), अन्वितः - பின்தொடரப் பட்டவராய், उदक् - வடக்கு நோக்கி, प्रतस्थे - புறப்பட்டார்.

(க-து) ராமர் குசலவர்களை ராஜ்யத்தில் ஸ்தாபித்து விட்டு, ஸ்வர்க்கம் செல்வதற்காகத்தகம்பிகளுடன் வடதிசையை நோக்கிப்புறப் பட்டார். அரசரிடம் உள்ள பிரியத்தினால் நகரஜனங்கள் தம்தம் வீடு களை விட்டு அவரைப் பின் தொடர்ந்தார்கள்.

'रिपुनागांकुशम्', कुशम्–'जनिताश्रुलवं' लवम् - இவ் விரு அடைமொழிகளால் குசலவர்களின் பெயர்க் காரணம் பற்றிக் கவி, தாம் கொண்ட கருத்தை வெளியிட்டார். வால்மீகி அவர்களுக்கு அப் பெயரிட்டதன் காரணம், 32-ஆம் சுலோகத்திலே கூறப்பட்டது.

'गृहवर्जम् - உயிரற்ற வீடு முதலான பொருள் தவிர பிற உயிருள்ள ஜீவராசிகள் எல்லாம் ராமரைப் பின் தொடர்ந்தன.

नोच्छ्वसत्तदयोध्यायां सुसूक्ष्ममपि दृश्यते
तिर्यग्योनिगताश्चैव सर्वे राममनुव्रताः ॥
[உத்தரம், 109·22.]

उदक् प्रतस्थे - வடக்கிலுள்ள மேரு மலையில் ஸ்வர்க்கம் இருப்பதாகக் கருதுவர். எனவே, ராமர் வடக்கு நோக்கிப் புறப்பட்டார்.

जगृहुस्तस्य चित्तज्ञाः पदवीं हरिराक्षसाः ।
कदम्बमुकुलस्थूलैरभिवृष्टां प्रजाश्रुभिः ॥ ९९ ॥

चित्तज्ञाः-(ராமருடைய) மனத்தையறிந்த, हरिराक्षसाः - வானரர்களும் ராக்ஷஸர்களும், कदंबमुकुलस्थूलैः - கடம்ப மரத்தின் அரும்பு போல் பெரியதான, प्रजाश्रुभिः - பிரஜை களின் கண் ஜலங்களினால்; अभिवृष्टां - நனைக்கப்பட்ட, तस्य - ராமருடைய, पदवीं - மார்க்கத்தை, जगृहुः - பற்றினார்கள்.

(க-து) ராமருடன் ஜனங்கள், தாமும் ராமரை விட்டுப் பிரி யாது ஸ்வர்க்கம் செல்லுகின்றோம் என்ற ஸந்தோஷ மிகுதியால் ஆனந்த பாஷ்பம் சொரிபவர்களாய்த்தாம் சென்ற வழியை நனைத்துக் கொண்டே சென்றனர்; ராமர் செல்வதை அறிந்து வந்த வானரர் களும் ராமரைப் பின் தொடர்ந்தனர்.

ஜனங்கள் கண்ணீர் சொரிந்ததற்குக் காரணம் ஆனந்தமேயன்றித் துக்கமன்று.

'राघवस्यानुगाः सर्वे हृष्टा विगतकल्मषाः....सर्वे हृष्टपुष्टाश्च वानराः। न तत्र कश्चिद्दीनो वा पीडितो वापि दुःखितः। हृष्टं समुदितं सर्वं बभूव परमाद्भुतम्" [109-15, 17] என்ற வால்மீகி சுலோகங்களைக் காண்க.

துக்கத்தினால் கண்ணீர் விட்டதாக (स्वामिविरहशोकोद्भवैः) க்கூறுவர் நாராயணரும் அருணகிரியும்.

उपस्थितविमानेन तेन भक्तानुकम्पिना ।

चक्रे त्रिदिवनिश्रेणिः सरयूरनुयायिनाम् ॥ १०० ॥

**उपस्थितविमानेन** - (நினைத்தமாத்திரத்தில்) வந்த விமானத்தை உடையவரும், **भक्तानुकंपिना** - பக்தர்களிடத்தில் தயை செய்கின்றவருமான, **तेन** - அவரால், **अनुयायिनां** - (தன்னைப்) பின் தொடர்பவர்களுக்கு, **सरयूः** - ஸரயூ நதியானது, **त्रिदिवनिश्रेणिः** - ஸ்வர்க்கம் (ஏறுவதற்கான) ஏணியாக, **चक्रे** - செய்யப்பட்டது.

(க-து) ராமர், ஸ்வர்க்கம் அடைய விரும்புகின்ற எல்லா ஜனங்களையும் நதியில் மூழ்கும்படி சொன்னார்.

நினைத்த மாத்திரத்திலே விமானம் வரவும், ராமர் தம்முடன் வந்த ஜனங்களை ஸரயூ நதியில் ஸ்நாநம் செய்வித்து திவ்ய தேஹம்பெறச்செய்து 'ஸாந்தானிகம்' என்ற ஸ்வர்க்கத்தில் வாழச் செய்தார். உயரமான இடத்தை அடைய ஏணி உதவுவதுபோல் ஜனங்கள் ஸ்வர்க்கம் அடைய ஸரயூ நதி உதவியதால், கவி அதை ஏணியாகக் கூறினார்.

यद्गोप्रतरकल्पोऽभूत् संमर्दस्तत्र मज्जताम् ।

अतस्तदाख्यया तीर्थं पावनं भुवि पप्रथे ॥ १०१ ॥

**यत्** - யாதொரு காரணத்தினால், **तत्र** - அந்த ஸரயூ நதியில், **मज्जतां** - மூழ்குகின்றவர்களுடைய, **संमर्दः** - நெருக்

கடியானது, गोप्रतरकल्पः - பசுக்கள் (நதியில் நீந்தி) கடப்பது போல், अभूत् - இருந்ததோ, अतः - அக்காரணத்தினால், तदाख्यया - அப்பெயராலேயே, (गोप्रतरं - என்ற பெயராலேயே), पावनं - பரிசுத்திகரமான, तीर्थं - புண்யதீர்த்தமாக, भुवि - பூமியில், पप्रथे - பிரசித்தியையடைந்தது.

(க-து) பசுக்கள் நதியின் ஜலத்தில் நெருக்கிக்கொண்டு நீந்திக் கடப்பது போல், ஜனங்கள் அந்த நதியில் மூழ்கி ஒருவரை ஒருவர் இடித்துக்கொண்டு ஸ்வர்க்கம் சென்றதினால் அந்த இடம் கோப்ரதரம் என்று பிரஸித்திபெற்ற புண்ய தீர்த்தமாயிற்று.

गोप्रतरः - ஸரயூவில் ஒரு துறைக்குப் பெயர். பெயர் வந்ததன் காரணத்தைக் கவி இதில் உத்ப்ரேக்ஷித்தார். गोप्रतरः - 'பசுக்களின் நீச்சல்' என்னும் பொருள்.

स विभुर्विबुधांशेषु प्रतिपन्नात्ममूर्तिषु ।

त्रिदशीभूतपौराणां स्वर्गान्तरमकल्पयत् ॥ १०२ ॥

विभुः - ஸர்வசக்தரான, सः - ராமர், विबुधांशेषु - தேவாம்சமுடைய ஸுக்ரீவன் முதலியவர்கள். प्रतिपन्नात्ममूर्तिषु - அடையப்பட்ட தங்கள் தேவரூபத்தை உடைத்தாயிருக்கும் பொழுது, त्रिदशीभूत-पौराणां - (நதியில் மூழ்கி) தேவர்களாக மாறிய அயோத்தியா நகர ஜனங்களுக்கு, स्वर्गान्तरं - மற்றொரு ஸ்வர்க்கத்தை, अकल्पयत् - ஏற்படுத்தினார்.

(க-து) ஸுக்ரீவன் முதலானவர்கள் தம் தம் தேவவடிவத்தைப் பெற்ற பிறகு, ராமர் தேவ ரூபம் பெற்ற நகர ஜனங்களுக்காக "ஸாந்தானிகம்" என்னும் லோகத்தை ஏற்படுத்தினார்.

निर्वर्त्यैवं दशमुखशिरश्छेदकार्यं सुराणां

विष्वक्सेनः स्वतनुमविशत् सर्वलोकप्रतिष्ठाम् ।

लङ्कानाथं पवनतनयं चोभयं स्थापयित्वा

कीर्तिस्तंभद्वयमिव गिरौ दक्षिणे चोत्तरे च ॥ १०३ ॥

**विष्वक्सेनः** - மகாவிஷ்ணு, **एवं** - இவ்வாறு, **सुराणां** - தேவர்களுடைய, **दशमुख-शिरश्छेदकार्यं** - ராவணனுடைய தலைகளை வெட்டுவதென்கிற கார்யத்தை, **निर्वर्त्य** - முடித்து விட்டு, **लङ्कनाथं** - விபீஷணன், **पवनतनयं च**-ஹநுமார் ஆகிய, **उभयं**- இவ்விருவரையும், **कीर्तिस्तंभद्वयं इव** - (தமது) கீர்த்தியின் இரண்டு ஸ்தம்பங்கள் போல, **दक्षिणे गिरौ च** - தெற்கிலுள்ள 'ஸுவேல' பர்வதத்திலும், **उत्तरे (गिरौ)च**-வடக்கிலுள்ள ஹிமாலயத்திலும், **स्थापयित्वा** - ஸ்தாபித்து விட்டு, (வைத்துவிட்டு), **सर्वलोकप्रतिष्ठां** - எல்லா உலகத்திற்கும் ஆதாரமான, **स्वतनुं** - தம்முடைய திவ்ய சரீரத்தை, **अविशत्** - பிரவேசித்தார்.

(க-து) பகவான் விஷ்ணு (ராமர்) தேவகார்யமான ராவண வதத்தை முடித்த பிறகு ஹநுமாரையும் விபீஷணனையும் இவ்வுலகில் தமது வெற்றித் தூண்களாக நிறுத்திவிட்டுத் தம்முடைய திவ்ய சரீரத்தை அடைந்தார்.

यावच्चन्द्रश्च सूर्यश्च यावत्तिष्ठति मेदिनी।
यावच्च मत्कथा लोके तावद् राज्यं तवास्त्विह॥
आराधय जगन्नाथमिक्ष्वाकुकुलदैवतम्।

என விபீஷணனுக்கும்,

मत्कथाः प्रचरिष्यन्ति यावल्लोके हरीश्वर।
तावद् रमस्व सुप्रीतो मद्वाक्यमनुपालयन्॥

என ஹநுமாருக்கும் ராமர் உத்தரவிட்டதாக ராமாயணம் கூறுகிறது.

इति महाकवि श्री कालिदासकृतौ
रघुवंशे महाकाव्ये पञ्चदशः सर्गः॥

---

|| श्रीः ||

# || रघुवंशः ||

## रघुवंशे षोडशः सर्गः

अथेतरे सप्त रघुप्रवीरा ज्येष्ठं पुरोजन्मतया गुणैश्च ।

चक्रुः कुशं रत्नविशेषभाजं सौभ्रात्रमेषां हि कुलानुसारि ॥१॥

**अथ**-பிறகு, **इतरे** - மற்ற, **सप्त**-ஏழு, **रघुप्रवीराः** - ரகு குல வீரர்களும், **पुरोजन्मतया**-முன் பிறந்தமையாலும், **गुणैः च** - பராக்ரமம் முதலிய குணங்களாலும், **ज्येष्ठं** - சிறந்துள்ள, **कुशम्**-குசனை, **रत्न विशेष-भाजं** - சிறந்த பொருள்களுக்குரியவனாக, **चक्रुः**-செய்தனர்; **सौभ्रात्रम्** - நற்சஹோதர மனப்பான்மை, **एषाम्** - இவர்களுக்கு, **कुलानुसारि हि** - வம்ச பரம்பரையாக வந்தது அன்றோ!

(க-து) ராமாதியரான நான்கு ஸஹோதரர்களின் புதல்வர்களான லவன் முதலியவர்கள் தங்கள் எல்லோரைக் காட்டிலும் சிறந்துள்ளவனும் வயதினாலே மூத்தவனுமான குசனுக்கு ராஜ்யத்தில் உள்ள சிறந்த பொருள்களை எல்லாம அளித்தனர். அவர்கள் அவ்வாறு அளிப்பதற்குக் காரணம் ஸஹோதர வாஞ்சையே. உடன் பிறந்தோர் ஒற்றுமையுடனும் நேசத்துடன் இருத்தல் என்பது ரகு குலத்தின் தனிப் பண்பு ஆகும்.

**सप्त रघुप्रवीराः** - லவன், தக்ஷன், புஷ்கலன், அங்கதன், சந்த்ரகேது, சத்ருகாதி, ஸுபாஹு என்ற ஏழு பேர். இவர்கள் எல்லோருக்கும் மூத்தவன் குசன்; குணங்களிலும் சிறந்தவன்; **रत्नविशेषभाजम्** - சிறந்த பொருள்களை மூத்த மகனுக்குக் கொடுக்க வேண்டுமென மனுவும் கூறியுள்ளார்.

ते सेतुवार्तागजबन्धमुख्यैरभ्युच्छ्रिताः कर्मभिरप्यवन्ध्यैः ।
अन्योन्यदेशप्रविभागसीमां वेलां समुद्रा इव न व्यतीयुः ॥२॥

**सेतु-वार्ता-गजबन्ध-मुख्यैः** - அணை கட்டுதல், பயிர் செய்தல், (காட்டினின்றும்) யானைகளைப் பிடித்தல் முதலான, **अवन्ध्यैः** - பயனுள்ள, **कर्मभिः** - தொழில்களாலே, **अभ्युच्छ्रिताः अपि**-மிக உன்னத நிலையடைந்துள்ளாராயினும், **ते** - அவர்கள், **अन्योन्य-देशप्रविभाग-सीमाम्** - ஒருவருக்கொருவரது நாட்டைப் பிரிக்கும் எல்லையை, **वेलाम्** - கரையை, **समुद्राः इव** - கடல்கள்-(மீறுதன) போல், **न व्यतीयुः** - மீறவில்லை.

(க-து) ரகு குமாரர்களான குசன் முதலியோர், அணை கட்டித் தம் நாட்டிலே நீர் வளம் பெருக்கினர்; உழவுத் தொழிலை விருத்தி செய்தனர். காட்டினின்றும் யானைகளைப் பிடித்துப் பழக்கிச் சேனையைப் பலமுடையதாக்கினர். இவ்வாறு பயனுள்ள முயற்சிகளால் மிகப் பலமுடையவர்களாக இருப்பினும், நதி ஜலத்தினால் விருத்தியடைந்த பொழுதும் ஸமுத்ரம் கரை மீறாது அடங்கி இருப்பதுபோல்—தம் நாட்டு எல்லையை மீறாது இருந்தனர்

चतुर्भुजांशप्रभवः स तेषां दानप्रवृत्तेरनुपारतानाम् ।
सुरद्विपानामिव सामयोनिर्भिन्नोऽष्टधा विप्रससार वंशः ॥ ३ ॥

**चतुर्भुजांश-प्रभवः** - மஹாவிஷ்ணுவின் அம்சமான ராமாதியரிடம் தோன்றியதும், **दान-प्रवृत्तेः** - தானம் கொடுத்தலினின்றும், **अनुपारतानाम्** - ஓயாத, **तेषाम्** - குசன் முதலியவர்களுடையதுமான, **सः वंशः** -அவ் வம்சமானது, **सामयोनिः** - ஸாமவேதத்தினின்றும் தோன்றியதும், **दान प्रवृत्तेः अनुपारतानाम्** - மதநீரைப் பெருக்குவதனின்றும் ஓயாத, **सुरद्विपानाम्**-தேவலோக யானைகளுடையதுமான, **वंशः इव** - வம்சம்போல், **अष्टधा** - எட்டு வகையாக, **भिन्नः** - பிரிந்ததாக, **विप्रससार** - பரவியதாயிற்று.

(க-து.) விஷ்ணுவின் அம்சமாக உள்ளவர் ராமரும் அவரது சகோதரர்களும். அவர்களுடைய குமாரர்கள் எண்மரும் புத்திரர்களையும் பேரன்களையும் அடைந்ததால் அவ் வம்சம் பல கிளைகளாகப் பிரிந்து மேன்மேலும் வளர்ந்து பரவியது.

வம்சத்திற்கு உபமானமாகக் கூறப் படுவது தேவலோகத்திலுள்ள எட்டு திக்கஜங்களின் வம்சம். இவ் வம்சம் ஸாமவேதத்தினின்றும் தோன்றியதாகப் பாலகாப்ய முனிவர் கூறுவர். எட்டு யானைகளின் பெயர் :

'**ऐरावतः पुण्डरीको वामनः कुमुदोऽञ्जनः पुष्पदन्तः सार्वभौमः सुप्रतीकश्च दिग्गजाः** ; என்பனவாம்.

'**दानप्रवृत्तेः अनुपारतानाम्**' என்பதை யானைகளுக்கும் விசேஷணமாகக் கொள்ள வேண்டும்.

अथार्धरात्रे स्तिमितप्रदीपे शय्यागृहे सुप्तजने प्रबुद्धः ।
कुशः प्रवासस्थकलत्रवेषामदृष्टपूर्वां वनितामपश्यत् ॥ ४ ॥

**अथ** - பிறகு, **अर्धरात्रे** - நடு நிசியில், **स्तिमित-प्रदीपे** - அசையாது (எரிகின்ற) தீபமுடையதும், **सुप्त-जने** - தூங்கிய ஜனங்களையுடையதுமான, **शय्यागृहे** - சயனக்ருஹத்தில், **प्रबुद्धः** - விழித்து எழுந்த, **कुशः** - குசன், **प्रवासस्थ-कलत्रवेषाम्** - அயல் நாடு சென்றவன் மனைவி போல் உடை தரித்துள்ளவளும், **अदृष्टपूर्वाम्** - இதற்கு முன் பார்க்கப் படாதவளுமான, **वनिताम्** - ஒரு ஸ்திரீயை, **अपश्यत्** - கண்டான்.

(க-து) ஒருநாள் நடு இரவில் குசன், கண் விழித்தவனாய், தனது சயன அறையில் முன் தான் கண்டிராத ஒரு ஸ்திரி நிற்பதைக்கண்டான். அவள், கணவனைப் பிரிந்துள்ள பெண்போல் உடை தரித்திருந்தாள். அறையின் கதவுகள் மூடப்பட்டு, காற்று அதிகம் வீசாதிருந்ததால் தீபங்கள் அசைவின்றி எரிந்துகொண்டிருந்தன. மற்ற பணியாளர்கள் எல்லோரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தனர்.

இச் சுலோகம் தொடங்கிக் குசனது வரலாறு கூறப்படுகின்றது. **प्रबुद्धः** இவ்விசேஷணம் குசன் கண்டது கன

வன்று என்பதைக் காட்டியது. **स्तिमित प्रदीपे** என்பதால் கதவு மூடப்பட்டிருந்தது என்பது புலனாகும். **सुप्तजने**- என்பதை **अर्धरात्रे**-என்பதற்கு விசேஷணமாகக் கொள்வர் நாராயணர். **प्रवास.... वेषाम्**-கணவன் அயல்நாடு சென்றிருக்குங்கால் மனைவி தன்னை அலங்கரித்துக் கொள்ளாது சாதாரண உடையுடன் இருக்கவேண்டும் என்பர். குசனது அறையில் தோன்றிய பெண்ணும், கவர்ச்சிகரமான உடை தரிக்காமல் விரஹிணி உடையில் தென்பட்டாள்.

सा साधुसाधारणपार्थिवर्द्धेः स्थित्वा पुरस्तत्पुरुहूतभासः ।
जेतुः परेषां जयशब्दपूर्वं तस्याञ्जलिं बन्धुमतो बबन्ध ॥ ५ ॥

**सा** - அவள், **साधु-साधारण-पार्थिवर्द्धेः** - பெரியோர்களுக்கு உரியதாக்கப்பட்ட ராஜ்ய ஐசுவர்யமுடையவனும், **पुरुहूत-भासः** - இந்திரன் போல் ஒளி பொருந்தியவனும், **परेषाम्** - பகைவர்களை, **जेतुः** - வென்றவனும், **बन्धुमतः** - சிறந்த உறவினர்களையுடையவனுமான, **तस्य पुरस्तात्** - அவனுக்கு எதிரில், **स्थित्वा** - நின்று, **जयशब्द पूर्वम्** - முதலில் 'ஜய' என்ற சொல்லைச் சொல்லி, **अञ्जलिम् बबन्ध** - (பிறகு) கை கூப்புதலைச் செய்தாள்.

(க-து.) குசன் தன்னை நோக்கியதைக் கண்டவுடன் அந்த ஸ்திரி அவன் எதிரில் நின்று, 'ஜய' எனக் கூறிய பின் கை கூப்பினாள்.

**'साधुसाधारण......ऋद्धिः - अनेनाभिगम्यगुणाः उक्ताः । पुरुहुतभासः - अनेनाधृष्यगुणाः । वन्धुमतः - इत्यनेन स्वकार्य-साधकोऽयमिति द्योत्यते' नारायणः ।**

अथानपोढार्गलमप्यगारं छायामिवादर्शतलं प्रविष्टाम् ।
सविस्मयो दाशरथेस्तनूजः प्रोवाच पूर्वार्धविसृष्टतल्पः ॥ ६ ॥

**अथ** - பிறகு, **सविस्मयः** - ஆச்சரியமடைந்தவனும், **पूर्वार्ध-विसृष्ट-तल्पः** - (தன்) சரீரத்தின் மேற் பாதியினல் படுக்கையை விட்டெழுந்தவனுமான, **दाशरथेः तनूजः** - ராம குமாரன் குசன், **आदर्शतलम्** - கண்ணாடியினுள், **छायां इव** - நிழல் புகுவது போல், **अनपोढार्गलं-अपि** - தாழ் நீக்கப் படாதிருப்பினும், **अगारम्** - அறையினுள், **प्रविष्टाम्** - புகுந்துள்ள அவளை நோக்கி, **प्रोवाच** - கூறினன்.

(க-து.) தாழிடப்பட்டுள்ள அறையிலே, கதவு திறக்கப் படாமல் இருக்கும் பொழுதே உட்புகுந்துள்ள அந்த ஸ்திரீயைக் கண்டு ஆச்சர்யமடைந்த குசன் தலையணையில் கையூன்றிப் படுக்கையினின்றும் சிறிது எழுந்து அவளை நோக்கிக் கூறினன்.

கதவு தாழிடப்பட்டிருக்கும் பொழுதே ஸ்திரீ உட் புகுந்ததற்கு **आदर्शतले छायामिव** என அழகான உபமானம் கொடுத்தார் கவி. நிழல் விழும்பொழுது கண்ணாடியில் மேற் புறத்தில் மாறுதல் ஒன்றும் ஏற்படுவதில்லை. கண்ணாடியில் பிம்பம் தோன்றுவது போல் இப் பெண் உட்புகுந்ததால் குசன் வியப்புற்றான். '**पूर्वार्धविसृष्टदेहः - अनेनासंभ्रमत्वं द्योत्यते ।**'

लब्धान्तरा सावरणेऽपि गेहे योगप्रभावो न च लक्ष्यते ते ।
बिभर्षि चाकारमनिर्वृतानां मृणालिनी हैममिवोपरागम् ॥ ७ ॥

का त्वं शुभे कस्य परिग्रहो वा किं वा मदभ्यागमकारणं ते ।
आचक्ष्व मत्वा वशिनां रघूणां मनः परस्त्रीविमुखप्रवृत्ति ॥ ८ ॥

**सावरणेऽपि** - மூடப்பட்டுள்ள கதவையுடையதாயினும், **गेहे** - இவ் வீட்டினுள், **लब्धान्तरा (त्वं)** - இடம் பெற்றுள் ளாய் நீ; **योग-प्रभावः च** - யோக சக்தியும், **ते** - உனக்கு, **न लक्ष्यते** - (இருப்பதாகக்) காணப்படவில்லை; **मृणालिनी** - தாமரைக் கொடி, **हैमम्** - பனியினலுண்டான, **उपरागं इव** - கஷ்டத்தை அடைந்திருப்பது போல், **अनिर्वृतानाम्** -

துக்கமடைந்தவர்களின், **आकारं** - தோற்றத்தை, **बिभर्षि च** - தாங்கியுள்ளாய்; **शुभे** - குணங்களுடையவளே, **त्वं का?** - நீ யார்? **कस्य वा** - எவருடைய, **परिग्रहः** - மனைவி? **ते** - உனக்கு (நீ), **मदभ्यागम कारणं वा** - என்னிடம் வருவதன், காரணம் தான், **किम्?** - என்ன? **वशिनाम्** - புலனையடக்கிய, **रघूणाम्** - ரகு குலத்தவரின், **मनः** - மனத்தை, **पर स्त्री-विमुख-प्रवृत्ति** - பிறர் மனைவியரிடம் நோக்கற்றதாக, **मत्वा** - அறிந்து, **आचक्ष्व** - கூறுவாயாக.

(க-து.) குசன் கூறினான்: கதவு மூடப்பட்டிருப்பினும் நீ உள்ளே வந்துளளாய்; யோகிகளுக்குத்தான் இது கூடும். ஆயினும் உன்னிடம் யோக சக்தி இருப்பதாகத் தெரியவில்லை. உன் தோற்றம் நீ துக்கமடைந்துள்ளாய் என்பதைக் காட்டுகின்றது. நீ யார்? தேவ ஸ்திரீயா? எவர் மனைவி? இங்கு வந்ததன் காரணம் என்ன? ரகு குலத்தவரின் மனம் பர ஸ்திரீகளை விரும்பாதென்பதைத் திண்ணமாக அறிந்து, கூற வேண்டியதைக் கூறுவாயாக.

'परस्त्रीषु विमुखी प्रवृत्तिः इच्छा यस्य' नारायणः ।

तमब्रवीत्सा गुरुणानवद्या या नीतपौरा स्वपदोन्मुखेन ।
तस्याः पुरः संप्रति वीतनाथां जानीहि राजन्नधिदेवतां माम् ॥९॥

**सा** - அவள், **तम्** - அவனை நோக்கி, **अब्रवीत्** - கூறினாள்; **(हे) राजन्** - அரசே, **अनवद्या** - குற்றமற்ற, **या** - எந்த நகரமானது, **स्वपद - उन्मुखेन** - தமது இடமான ஸ்ரீ வைகுண்டம் செல்வதில் விருப்புள்ள, **गुरुणा** - (உமது) தந்தை ராமரால், **नीत-पौरा** - அழைத்துச் செல்லப்பட்ட ஜனங்களையுடையதோ, **तस्याः** - அத்தகைய, **पुरः** - நகரத்தின், **अधिदेवतां** - அதிதேவதையாகவும், **संप्रति** - இப்பொழுது, **वीतनाथाम्** - ரக்ஷகனற்றவளாகவும், **मां** - என்னை, **जानीहि** - அறிந்துகொள்.

(க-து) அவள் பதில் கூறினாள்: 'அரசே, உமது தந்தை ராமர் தம்மிடமான பரமபதம் செல்லுங்கால் அயோத்தி மக்கள்

அவனை வரையும் கொண்டு சென்றார். குற்றமற்ற அந்த நகரத்தின் அதிதேவதை நான்; இப்பொழுது ரக்ஷகரின்றி இருப்பவள்.

वस्वौकसाराममिभूय साहं सौराज्यबद्धोत्सवया विभूत्या ।
समग्रशक्तौ त्वयि सूर्यवंश्ये सति प्रपन्ना करुणामवस्थाम् ॥

**सौराज्य - बद्ध - उत्सवया** - நல்ல அரசரை உடையதாயிருந்ததால் தொடர்ச்சியான விழாவையுடைய, **विभूत्या**- செல்வத்தினுல், **वस्वौकसाराम्**- அளகாபுரியையும், **अभिभूय**- அவமதித்து (விஞ்சி), (**स्थिता**) - இருந்த, **सा** - அந்தகைய, **अहम्** - நான், **समग्र - शक्तौ** - நிறைந்த சக்தியுடையவனும், **सूर्यवंश्ये** - ஸுர்ய வம்சத்தில் பிறந்தவனுமான, **त्वयि** - நீ, **सति - अपि** - இருக்கும்பொழுதே, **करुणाम्** - இரங்கத்தக்க, **अवस्थाम्** - நிலையை, **प्रपन्ना** - அடைந்துள்ளேன்.

(க-து) அயோத்தியை நல்ல அரசர் ஆண்டுவந்ததால் செல்வம் நாட்டிலே ஏராளமாக இருந்தது. அதனுல் ஜனங்கள் தொடர்ச்சியாக விழாக்கொண்டாடி எப்பொழுதுமே மகிழ்ச்சியுடன் இருந்தனர். இவ்வகையில் நான் பொருள் நிறைந்துள்ள குபேரனது நகரமான அளகாபுரியையும் விஞ்சி இருந்தேன். ஆனல் இப்பொழுதோ, நீ அயோத்தியைத் தலைநகரமாகக் கொள்ளாது விட்டதால நகரம் பாழடையவும் நான் துக்ககரமான நிலையயடைந்துள்ளேன்.

**स्थिता** என்ற சொல் வருவித்துப் பொருள் கூறப்பட்டது. குசன் குசாவதியில இருந்து ஆண்டுவந்தான் என்பது முன்பே [ஸ-15-சு. 97] கூறப்பட்டுள்ளது. இது முதல் பதினெரு சுலோகங்களிலே அயோத்தியின் நிலை கூறப்படுகின்றது.

विशीर्णतल्पाट्टशतो निवेशः पर्यस्तसालः प्रभुणा विना मे ।
विडम्बयत्यस्तनिमग्नसूर्यं दिनान्तमुग्रानिलभिन्नमेघम् ॥ ११ ॥

**विशीर्ण-तल्प-अट्ट-शतः** - சிதறிய பல உப்பரிகைகளேயும் மாளிகைகளேமுடையதும, **पर्यस्त सालः** - இடிந்த மதில்

உடையதுமான, **मे निवेशः** - எனது வாஸஸ்தானம் (அயோத்தி), **प्रभुणा विना** -அரசனில்லாததால், **अस्त-निमग्न-सूर्यम्** - அஸ்தகிரியில் மறைந்த ஸூர்யனை உடையதும், **उग्रानिल-भिन्न-मेघम्** - வேகமான காற்றினால் சிதறிய மேக முடையதுமான, **दिनान्तम्** - ஸாயங்கால வேளையை, **विडम्बयति** - ஒக்கின்றது.

(க-து.) நாதனாகிய நீ இல்லாததால் நகரம், கவனிப்பற்று மாளிகைகளின் மேல் தளங்கள் இடிந்தும், மதிள் சுவர் சிதறியும் சோபையிழந்ததாய், ஸூரியன் மறைந்து, காற்றினாலே சிதறி யுள்ள மேகங்களுடன் ஒளியின்றி இருக்கும் ஸந்தியா காலத்தை ஒத்து இருக்கின்றது.

**तल्पः** - மாளிகையின் மேல் தளங்களிலே கட்டப் பட்டுள்ள அறைகள். வீடு இடியும் கால் முதலிலே ஊறு அடைவது மேல் தளமேயாகும். **अट्ट** - மாளிகைகள்.

சோபையற்ற அயோத்திக்கு ஒளியற்ற ஸந்தியாகாலம் பொருத்தமான உபமானமாயிற்று. காற்றினால் சிதறி உருவின்றிக் கிடக்கின்ற மேகங்கள் இடிந்த வீடுகளுக்கு உபமானமாயின.

निशासु भास्वत्कलनूपुराणां यः संचरोऽभूदभिसारिकाणाम् ।
नदन्मुखोल्काविचितामिषाभिः स वाह्यते राजपथः शिवाभिः ॥

**निशासु** - இரவுகளிலே, **भास्वत्-कल-नूपुराणाम्** - ஒளிருகின்ற—இனிதே ஒலிக்கின்ற—சிலம்பை யணிந்த, **अभिसारिकाणाम्** - அபிஸாரிகைகளுக்கு, **यः** - எந்த ராஜ வீதியானது, **संचरः** - (செல்லும) வழியாக, **अभूत्** - இருந்ததோ, **नदन्मुख-उल्का-विचित आमिषाभिः** - ஊளையிடுகின்ற வாயினின்றும் வரும் ஜ்வாலையினால் மாமிசத்தைத் தேடு கின்ற, **शिवाभिः** - நரிகளாலே, **सः राजपथः** - அந்த ராஜ வீதி, **वाह्यते** - (இப்பொழுது) ஸஞ்சரிக்கப் படுகின்றது.

(க-து.) முன்பு அயோத்தியின் ராஜவீதிகளிலே, இரவில் காலில் சிலம்பு இனிதே ஒலிக்க, அபிஸாரிகைகள், தம் காதலரின் இருப்பிடம் சென்று கொண்டிருந்தனர். இப்பொழுது அயோத்தி நிர்ஜனமாக இருப்பதால் இரவில் நரிகள் ஊளையிட்டுக் கொண்டு தம் வாயினின்றும் வரும் அக்னி ஜ்வாலையின் வெளிச்சத்தில் மாமிசத்தைத் தேடி அதே ராஜ வீதிகளில் திரிகின்றன.

காவியங்களிலே கூறப்படுகின்ற பலவகைத் தலைவிகளிலே ஒருத்தி அபிஸாரிகை. ஓர் இடத்தைக் குறிப்பிட்டுக் காதலனைச் சந்திப்பதற்காக அவ்விடம் செல்பவள்: **कान्तार्थिनी तु या याति संकेतं साभिसारिका'** என்பது காண்க. **उल्का** - நரிகள் வாய் திறந்து ஊளையிடும்பொழுது வாயினின்றும் நெருப்பு ஜ்வாலை தோன்றும் என்று கூறுவர்.

आस्फालितं यत्प्रमदाकराग्रैर्मृदङ्गधीरध्वनिमन्वगच्छत् ।
वन्यैरिदानीं महिषैस्तदम्भः शृङ्गाहतं क्रोशति दीर्घिकाणाम् ॥

**दीर्घिकाणां** - நீண்ட வாவிகளின், **यत् ( अंभः )** - எந்த ஜலமானது, **प्रमदा·कराग्रैः** - (முன்பு) பெண்களின் அகங்கைகளால், **आस्फालितम् ( सत् )** - அடிக்கப்பட்டதாக இருந்து கொண்டு, **मृदंग धीर-ध्वनिम्** - மிருதங்கத்தின் கம்பீரமான ஒலியை, **अन्वगच्छत्** - அனுகரித்ததோ, **तत् अंभः** - அதே ஜலம், **इदानीम्** - இப்பொழுது, **वन्यैः महिषैः** - காட்டு எருமைகளாலே, **शृंग-आहतं ( सत् )** - கொம்புகளால் அடிக்கப்பட்டு, **क्रोशति** - அலறுகின்றது.

(க-து) முன் அயோத்திலிருந்த நடைவாவிகளிலே பெண்கள் ஜலக்ரீடை செய்யும் பொழுது தம் கைகளாலே ஜலத்தை அடித்து விளையாடிய சமயத்தில், ஜலம் மிருதங்க நாதத்தை ஒத்து இனிதே ஒலித்தது. இப்பொழுதோவெனில காட்டு எருமைகள அமிழ்ந்து கொம்புகளால் நீரை அடிக்கின்றன. அவ்வாறு அடிக்கப்பட்டதனால் உண்டான ஒலி கர்ண கடூரமாக உள்ளது.

वृक्षेशया यष्टिनिवासभङ्गान्मृदङ्गशब्दापगमादलास्याः ।
प्राप्ता दवोल्काहतशेषबर्हाः क्रीडामयूरा वनबर्हिणत्वम् ॥१४॥

**यष्टि-निवास-भंगात्** -வாஸஸ்தானமான கழிகள் முறிந்ததால், **वृक्षे-शयाः** - மரங்களிலே தங்குபவைகளும், **मृदंग-शब्द-अपगमात्** - மிருதங்க ஒலி இன்மையால், **अलास्याः** - ஆடாதவைகளும், **दव-उल्का-हत-शेष-बर्हाः** காட்டுத் தீயின் பொரிகளால் தாக்கப்பட்டு எஞ்சிய தோகையுடையவைகளுமான, **क्रीडा-मयूराः** - விளையாட்டு (வளர்ப்பு) மயில்கள், **वन-बर्हिणत्वम्** - காட்டு மயிலின் நிலையை, **प्राप्ताः** - அடைந்துவிட்டன.

(க-து.) மயில்கள் தங்கி இருத்தற்குரிய கழிகள் முறிந்து போயின. எனவே, அவைகள் மரங்களில் வசிக்கின்றன. மிருதங்க சப்தமின்மையால் மயில்கள் ஆடுவதில்லை. காட்டுத் தீயினால் அவைகளின் இறகும் பொசுக்கப்பட்டு சிறிதே இறகுடையனவாய் முன்பு வளர்க்கப்பட்டுவந்த 'வீட்டு மயில்கள்' வளர்ப்பாரில்லாமையால் இப்பொழுது காட்டு மயில்களாகிவிட்டன.

**यष्टिः** - மயில் தன் தோகை தரையிலே படாதவாறு வசதியுடன் உட்காருவதற்காக உயரமான கழி ஒன்றைத் தரையில் நட்டு அதன் நுனியில் குறுக்காக ஒரு கழியை அமைப்பர். அத்தகைய கழிகள் முறிந்ததால் மயில்கள் மரத்திலே இபபொழுது உட்காருகின்றன.

सोपानमार्गेषु च येषु रामा निक्षिप्तवत्यश्चरणान् सरागान् ।
सद्यो हतन्यङ्कुभिरस्रदिग्धं व्याघ्रैः पदं तेषु निधीयते मे ॥१५॥

15. **येषु**-(முன்பு) எந்த, **सोपान मार्गेषु**-படிகளமைந்த வழிகளிலே, **रामाः** - பெண்கள், **सरागान्** - (செம்பஞ்சு ரஸத்தினால்) ஈரமான, **चरणान्** - பாதங்களை, **निक्षिप्तवत्यः**- வைத்தனரோ, **तेषु** - அத்தகைய, **मे (मार्गेषु)** - என் வழிகளிலே, **सद्यो-हत-न्यंकुभिः** - அப்பொழுதே கொல்லப்பட்ட மான்களையுடைய, **व्याघ्रैः** -புலிகளாலே, **अस्रदिग्धम्**-ரத்தம் தோய்ந்த, **पदम्** -காலானது, **निधीयते च** -வைக்கப்படுகிறது.

(க-து.) பெண்கள் செம்பஞ்சு ரஸம் பூசிய பாதத்துடன் நடந்ததால் தடாகம் முதலியவற்றின் படிகளிலே முன்பு சிவந்த அடிச்சுவடுகள் பதிந்திருந்தன. இப்பொழுதோ, மான்களைக் கொன்ற புலிகள் ரத்தம் தோய்ந்த தமது பாதங்களை அப்படிகளிலே வைத்து நடக்கின்றன.

चित्रद्विपाः पद्मवनावतीर्णाः करेणुभिर्दत्तमृणालभङ्गाः ।
नखाङ्कुशाघातविभिन्नकुम्भाः संरब्धसिंहप्रहृतं वहन्ति ॥ १६ ॥

**पद्म वन-अवतीर्णाः** - தாமரைக் காடுகளிலே இறங்கியனவும், **करेणुभिः** - பெண் யானைகளால், **दत्त-मृणाल भङ्गाः**- தரப்பட்ட தாமரைத் துண்டுகளை யுடையனவுமான, **चित्र-द्विपाः** - சித்திரத்தில் வரையப்பட்ட யானைகள், **नख अंकुश-आघात-विभिन्न कुम्भाः** - அங்குசம் போன்ற நகங்களின் தாக்குதலால் சிதறின மஸ்தகமுடையனவாய், **संरब्ध-सिंह-प्रहृतम्** -கோபங்கொண்ட சிங்கங்களின் தாக்குதலை, **वहन्ति**- தாங்கி நிற்கின்றன.

(க-து.) சித்திரத்திலே எழுதப் பட்டுள்ள யானைகள், உண்மையான சிங்கங்களால் தாக்கப்பட்டு, அவைகளின் நகங்களால் மஸ்தகங்கள் சிதற நிற்கின்றன. மாளிகைகளின் சுவரிலே யானைகள் தாமரைக் காட்டில் இறங்கி இருப்பன போன்றும், பெண் யானைகள் தாமரைத் துண்டுகளைத் தர அவற்றை வாங்கிக் கொள்வன போன்றும் படம் வரையப் பட்டிருந்தது. சித்திரம் தத்ரூபமாக இருந்ததால், பாழடைந்த நகரில் திரிகின்ற சிங்கங்கள் சித்திர யானைகளை உயிருள்ள யானைகளாக எண்ணித் தாக்க, அவற்றின் கூர்ந்த அங்குசம் போன்ற நகங்களால், அவ் யானைகளின் மஸ்தகங்கள் பிளந்தன போல் (வர்ண மழிந்ததால்) தென்படுகின்றன. இவ்வகையான சித்திர யானைகள் சிங்கத்தின் தாக்குதலை இன்னும் தாங்கி நிற்கின்றன.

स्तम्भेषु योषित्प्रतियातनानामुत्क्रान्तवर्णक्रमधूसराणाम् ।
स्तनोत्तरीयाणि भवन्ति सङ्गान्निर्मोकपट्टाः फणिभिर्विमुक्ताः ॥

**उत्क्रान्त-वर्णक्रम-धूसराणाम्** - வர்ணங்கள் அழிந்ததால் நிறம் குறைந்த, **स्तंभेषु** - தூண்களிலே (உள்ள), **योषित्**-

प्रतियातनानाम् - பெண் வடிவினையுடைய பதுமைகளுக்கு, फणिभिः - ஸர்ப்பங்களாலே, विमुक्ताः - விடப்பட்ட, निर्मोक-पट्टाः - துணி போன்ற தோல்களே, सङ्गात् - ஒட்டிக்கொண்டிருத்தலால், स्तनोत्तरीयाणि - மார்பின் மேல் அணியும் வஸ்த்ரமாக, भवन्ति - இருக்கின்றன.

(க-து) மாளிகைகளின் தூண்களிலே செதுக்கப்பட்டுள்ள பெண் வடிவிலுள்ள பதுமைகளின் மேல் ஸர்ப்பங்கள் உராய்ந்து சென்று உரித்த தோல் அப் பதுமைகள் மேல் படிந்து, மார்பிலணியும் வஸ்திரமாக இருக்கின்றது.

धूसर - சாம்பல் நிறம் கொண்டது.

वर्णक्रम - வர்ண அமைப்பு, उत्क्रान्त - சென்றது அல்லது அழிந்தது என்பது பொருள்; प्रतियातना - மரத்தில் செய்த பதுமை. பதுமைகளைக் கல்லிலும் மரத்திலும் செதுக்கிய பின் ஏற்ற வர்ணங்களைப் பூசுவர் என்பதும் இதனால் புலனாகும்.

कालान्तरश्यामसुधेषु नक्तमितस्ततो रूढतृणाङ्कुरेषु ।
त एव मुक्तागुणशुद्धयोऽपि हर्म्येषु मूर्च्छन्ति न चन्द्रपादाः ॥

कालान्तर-श्याम-सुधेषु - காலம் மாறியதால் (நாட்கள் பல சென்றதால்) கறுத்த சுண்ணமுடையனவும், इतस्ततः இங்குமங்கும் (பல இடங்களிலும்), रूढ-तृण-अङ्कुरेषु - முளைத்த புல் முளைகளையுடையனவுமான, हर्म्येषु - மாளிகைகளில், नक्तम् - இரவில், मुक्ता-गुण-शुद्धयः अपि - முத்துஸரம் போல் பிரகாசமானவையாயினும், ते-एव - அதே, चन्द्र-पादाः - சந்திர கிரணங்கள், न मूर्च्छन्ति - (இப்பொழுது) பிரதிபலிக்கவில்லை.

(க-து.) முன்பு சந்திர கிரணங்கள் மாளிகைகளின் மேல் பட்டுப் பிரதிபலித்து எங்கும் பரவும். இப்பொழுது மாளிகை

களில் பூசப்பட்டுள்ள சுண்ணும்பு காலம் கடந்ததால் கறுத்து இருக்கின்றது. வீடுகளில் எங்கும் புல் முளைத்திருக்கின்றது. எனவே, வெண்ணிறமான சந்திரனது காந்தி மாளிகைகளின் மேல் பட்ட போதிலும ஒளி வீசுவதில்லை.

आवर्ज्य शाखाः सदयं च यासां पुष्पाण्युपात्तानि विलासिनीभिः ।
वन्यैः पुलिन्दैरिव वानरैस्ताः क्लिश्यन्त उद्यानलता मदीयाः ॥

**शाखाः** - கிளைகளை, **सदयम्** - இரக்கத்துடன், **आवर्ज्य** - வளைத்து, **विलासिनीभिः** - அழகிய பெண்களால், **यासाम्** - எந்தக் கொடிகளின், **पुष्पाणि** - புஷ்பங்கள், **उपात्तानि** - பறிக்கப்பட்டனவோ, **मदीयाः** - என்னுடைய, **(ताः)** - அந்த **उद्यान - लताः** - உத்யானக் கொடிகள், **वन्यैः** - காட்டிலுள்ள, **पुलिन्दैः इव** - வேடுவர்களால் கசக்கப்படுவன போல், **वानरैः** - குரங்குகளால், **क्लिश्यन्ते** - துன்புறுத்தப்படுகின்றன.

(க-து) அழகிய பெண்கள் கொடிகளின் நுனிகளை மெதுவாக வளைத்துப் புஷ்பங்களை முன்பு எடுத்தனர். அக்கொடிகளே இப்பொழுது வேடர்களாலும் குரங்குகளாலும் கசக்கப்படுகின்றன.

रात्रावनाविष्कृतदीपभासः कान्तामुखश्रीवियुता दिवापि ।
तिरस्क्रियन्ते कृमितन्तुजालैर्विच्छिन्नधूमप्रसरा गवाक्षाः ॥२०॥

**रात्रौ** - இரவிலே, **अनाविष्कृत दीपभासः** - தீபத்தின் ஒளியற்றவையும், **दिवा अपि** - பகலிலும், **कान्ता-मुख-श्री-वियुताः** - அழகிய பெண்களின் முக சோபையற்றவையும், **विच्छिन्न-धूम-प्रसराः** - (நறுமணம் கமழும் காரகில்) புகை பரவாதவையுமான, **गवाक्षाः** - ஜன்னல்கள், **कृमि-तन्तु-जालैः** - சிலந்திகளின் வலைகளால், **तिरस्क्रियन्ते** - மறைக்கப்படுகின்றன.

(க-து.) வீடுகளிலுள்ள ஜன்னல்களுக்கு இரவிலே அழகு செய்வது விளக்கொளி. பகலிலே பெண்களின் முகம்; ஸந்தியா

காலங்களிலே நறுமணமுள்ள காரகில் புகை ஜன்னல் புறங்களை வாசனையுடையதாக்கும். இவைகளில் ஒன்றுமில்லாததால் இப்பொழுது சிலந்திகளின் நூல் வலை ஜன்னல்களை மறைத்துக் கொண்டிருக்கின்றது. எனவே, வீடுகள் சோபையின்றி இருக்கின்றன.

बलिक्रियावर्जितसैकतानि स्नानीयसंसर्गमनाप्नुवन्ति ।
उपान्तवानीरगृहाणि दृष्ट्वा शून्यानि दूये सरयूजलानि ॥ २१ ॥

**बलिक्रिया - वर्जित - सैकतानि** - பூஜைப் பொருள்களற்ற மணல் திட்டுகளையுடையனவும், **स्नानीय-संसर्गम्**- ஸ்நானப் பொருள்களின் சேர்க்கையை, **अनाप्नुवन्ति** - அடையாதனவுமான, **सरयू-जलानि** - ஸரயூ நதியின் ஜலத்தையும், **शून्यानि** - மனிதர்களற்ற, **उपान्त-वानीर गृहाणि -(च)** அருகிலுள்ள - நீர் வஞ்சிப் புதர்களையும், **दृष्ट्वा**-கண்டு, **दूये** - வருந்துகின்றேன்.

(க-து.) தேவ பூஜை செய்பவர்கள் இல்லாததால் ஸரயூ நதியின் மணற்பிரதேசத்தில் பூஜைப்பொருளான புஷ்பம் முதலியன காணப்படுவதில்லை. ஸ்நானம் செய்பவர்களில்லாததால் ஸரயூ நதியின் ஜலத்தில் ஸ்நான ஸமயத்தில் உபயோகிக்கப்படும் வாசனைப் பொடிகள் காணப்படுவதில்லை. நதியின் கரையிலுள்ள வஞ்சிக் கொடி வீடுகள் இப்பொழுது காலியாகக் கிடக்கின்றன. ஏனெனில், அங்குச் செல்ல உல்லாஸ ஸ்திரீ புருஷர்கள் யாருமில்லை. ஸரயூ நதியின் இந் நிலையைக் கண்டு நான் மிக வருந்துகின்றேன்.

**वानीर** - 'பிரம்பு' என்றும் பொருள் கூறுவர்.

तदर्हसीमां वसतिं विसृज्य मामभ्युपैतुं कुलराजधानीम् ।
हित्वा तनुं कारणमानुषीं तां यथा गुरुस्ते परमात्ममूर्तिम् ॥२२॥

**तत्** - ஆகையால், **ते** - உனது, **गुरुः** - தந்தை, **कारण-मनुषीम् तनुम्** - (ஒரு) காரணத்தினாலே (தாம் ஏற்றுக் கொண்ட) மனுஷ்ய சரீரத்தை, **हित्वा** - விட்டு, **ताम्** -

**परमात्म-मूर्तिम् यथा** - சிறந்த தமது திவ்ய தேஹத்தை அடைந்தது போல், **इमाम्** - இந்த, **वसतिम्** - வாஸஸ்தான மான குசாவதியை, **विसृज्य** - விட்டு, **कुल-राजधानीम्** - (உனது) குல ராஜதானியாகிய, **माम्** - என்னை (அயோத்தியை), **अभ्युपैतुम्** - அடைவதற்கு, **अर्हसि** - தகுந்தவனாக இருக்கின்றாய்.

(க-து.) உனது தந்தை, காரணத்தை முன்னிட்டுத் தாம் கொண்ட மனுஷ்ய சரீரத்தை விட்டுத் தமது திவ்ய தேஹத்தை மறுபடியும் ஏற்றுக் கொண்டது போல், நீயும் இக்குசாவதியை விட்டு, உனது குலத்தினரின் ராஜதானியாகிய அயோத்தியை அடைய வேண்டும்.

तथेति तस्याः प्रणयं प्रतीतः प्रत्यग्रहीत् प्राग्रहरो रघूणाम् ।
पूरप्यभिव्यक्तमुखप्रसादा शरीरबन्धेन तिरोबभूव ॥ २३ ॥

**रघूणाम्** - ரகு வம்சத்தவருள், **प्राग्रहरः** - சிறந்தவனை குசன், **तस्याः** - அத் தேவதையின், **प्रणयम्**-வேண்டுகோளை, **प्रतीतः (सन्)**-மனக்களிப்புடன் இருந்து கொண்டு, **तथा-इति** - 'அப்படியே' எனக் கூறி, **प्रत्यग्रहीत्** - ஏற்றுக் கொண்டான். **पूः अपि** - நகர அதி தேவதையும், **अभिव्यक्त-मुख प्रसादा** - நன்கு புலனாகின்ற முகத்தெளிவுடையவளாய், **शरीर-बन्धेन** - சரீரத்துடன், **तिरोबभूव** - மறைந்தாள்.

(க-து.) குசன், தேவதையின் வேண்டுகோளை ஸந்தோஷத்துடன் ஏற்று அவ்வாறே செய்வதாக உறுதி கூறினான். தேவதையின் சரீரமும் மறைந்தது.

**'शरीरबन्धेन तिरोबभूव - शरीरबन्धमात्रेण तिरोहिता-भूत्। आत्मना तु सन्निहितैवेति भावः।' नारायणः**

तदद्भुतं संसदि रात्रिवृत्तं प्रातर्द्विजेभ्यो नृपतिः शशंस ।
श्रुत्वा त एनं कुलराजधान्या साक्षात्पतित्वे वृतमभ्यनन्दन् ॥

**नृपतिः** - அரசன், **तत् अद्भुतम्** - அவ்வியத்தற் குரிய, **रात्रिवृत्तं** - இரவு நிகழ்ச்சியை, **प्रातः** - காலையில் **संसदि** - ஸபையில், **द्विजेभ्यः** - பிராம்மணர்களுக்கு, **शशंस** - கூறினன். **ते** - அவர்கள், **श्रुत्वा** - (இதைக்) கேட்டு, **एनम्**- அவனை, **कुल-राजधान्या-साक्षात्** குல ராஜதானியின் தேவதை யினுல் நேரிலே தோன்றி, **पतित्वे** - ரக்ஷகனை தன்மை யில், **वृतम्** - வரிக்கப்பட்டவனுக, **अभ्यनन्दन्** - கொண்டா டினர்.

(க-து.) மறுநாட் காலையில் குசன் இரவில் நடந்த ஸம்பவத்தை ஸபையில் வஸிஷ்டர் முதலான பிராம்மணர்களுக் குத் தெரிவித்தான். அவர்களும் ராஜதானியின் அதிதேவதை யினுல் நேரிலே தோன்றி யாசிக்கப்படும் பாக்யம் பெற்றுள்ள அவனைக் கொண்டாடினர்.

**अद्भुतम्-रात्रिवृत्तम्** - இரவு நிகழ்ச்சி ; அதைக் கண்ட வனை மாத்திரமே யன்றிக் கேட்டவர்களையும் வியப்பிலே ஆழ்த்துவது என்பது கருத்து.

कुशावतीं श्रोत्रियसात्स कृत्वा यात्रानुकूलेऽहनि सावरोधः ।
अनुद्रुतो वायुरिवाभ्रवृन्दैः सैन्यैरयोध्याभिमुखः प्रतस्थे ॥२५॥

**सः** - அவன், **कुशावतीम्** - குசாவதி நகரத்தை, **श्रोत्रियसात् कृत्वा**-வேதமறிந்த பிராம்மணர்களுக்குரியதாகச் செய்துவிட்டு, **यात्रा-अनुकूले** - பிரயாணத்திற்கு அனுகூல மான, **अहनि**-நாளில், **सावरोधः** - அந்தப்புர ஸ்திரீகளுடன் கூடியவனுக, **वायुः** - காற்று, **अभ्रवृन्दैःइव** - மேகக் கூட்டங் களால், (பின்தொடரப்படுவது) போல், **सैन्यैः** - ஸேனை களால், **अनुद्रुतः** - பின்தொடரப்பட்டு, **अयोध्या-अभिमुखः** - அயோத்தியை நோக்கி, **प्रतस्थे** - புறப்பட்டான்.

(க-து.) குசாவதியை பிராம்மணர்களுக்குத் தானம் செய்து விட்டு அந்தப்புர ஸ்திரீகளுடனும் ஸேனைகளுடனும் அயோத்தி நோக்கிப் புறப்பட்டான்.

'श्रोत्रियसात् कृत्वा-तस्याः शोच्यत्वपरिहारार्थम्' 'मङ्गलार्थं चेदम्' नारायणः । அயோத்திபோல் குசாவதி பாழடைதல் கூடாதென்பதற்காகவும் மங்கலம் கருதியும் நகரம் வேத மறிந்த அந்தணர்களுக்கு அளிக்கப்பட்டது.

**वायुः अभ्रबृन्दैरिव** - காற்று செல்லுமிடத்திற்கு மேகம் செல்வதுபோல் அரசன் சென்ற இடத்திற்குச் சேனைகள் சென்றன. அவனது ஸேனை அவ்வளவு ஸ்வாதீனமாக இருந்ததென்பது உவமையால் பெறப்படும்.

**सैन्य**-ஸேனை வீரர்கள்-என்றும் பொருள்.

सा केतुमालोपवना बृहद्भिर्विहारशैलानुगतेव नागैः ।

सेना रथोदारगृहा प्रयाणे तस्याभवज्जङ्गमराजधानी ॥ २६ ॥

**केतु-माला-उपवना**-கொடிகளின் கூட்டமாகிய உத்யான முடையதும், **बृहद्भिः** - பெரிய, **नागैः** யானைகளால், **विहार-शैल अनुगता इव - (स्थिता)** விளையாடுவதற்கான குன்று களுடன் கூடியதுபோல் இருப்பதும், **रथ उदारगृहा** - தேர் களாகிய சிறந்த வீடுகளையுடையதுமான, **सा सेना**-அந்த ஸேனை, **तस्य**-அவனது, **प्रयाणे**-பிரயாண காலத்தில், **जङ्गम-राजधानी** - நடந்து செல்லும் ராஜதானியாக, **अभवत्** - இருந்து.

(க-து.) குசனது பிரயாண காலத்தில், ஸேனை நடந்து செல்லும் ராஜதானியாக இருந்தது. ராஜதானியில் இருக்க வேண்டிய உதயானம் முதலியன இங்கும் காணப்பட்டன. கொடிகளின் ஸமூஹம் உத்யானவனம் போல் இருந்தது. பெரிய யானைகள், நகரின் உத்யானத்தில் அமைக்கப்பட்ட விளையாடு தற்கான குன்றுகள் போல் இருந்தன. விசாலமான தேர்கள் வீடுகளை போன்றிருந்தன. சேனைகள் சென்றது அவனது தலை நகரமே நகர்ந்து செல்வது போல் காணப்பட்டது.

குசாவதியை விட்ட பிறகும் அயோத்தியை அடைவ தற்கு முன்னுமுள்ள சில நாட்கள் குசன் தலைநகரின்றி இருந்தானோ என்ற ஐயம் இச்சுலோகத்தில் நீக்கப்பட்டது.

அவனது தலைநகரமே நகர்ந்து சென்றுகொண்டிருந்த தெனக்கூறினார் கவி. இதனால் குசனது பிரபு சக்தியும் தெளிவாகும்.

तेनातपत्रामलमण्डलेन प्रस्थापितः पूर्वनिवासभूमिम् ।
बभौ बलौघः शशिनोदितेन वेलामुदन्वानिव नीयमानः ॥२७॥

**आतपत्र-अमल-मण्डलेन** - வெண் கொற்றக் குடையாகிய பிம்பமுடைய, **तेन** - அக்குசனால், **पूर्व-निवास भूमिम्** - முன்னோர்களின் வாஸஸ்தானத்தை நோக்கி, **प्रस्थापितः** - செல்லும்படி செய்யப்பட்ட, **बलौघः** - சேனையின் ஸமூஹம், **आतपत्र - अमल - मण्डलेन** - குடை போல் நிர்மலமான பிம்பமுடைய, **उदितेन**-உதித்த, **शशिना**-சந்திரனால், **वेलाम्** - கரைக்கு, **नीयमानः** - கொண்டு செல்லப்படுகின்ற, **उदन्वान्-इव**-ஸமுத்ரம் போல், **बभौ**-விளங்கியது.

(க-து) குசனால் அயோத்தியை நோக்கி அனுப்பப்பட்ட அச்சேனை, சந்திரனால் கரையை நோக்கிக்கொண்டு செல்லப்படும் ஸமுத்ரம்போல் காணப்பட்டது.

குசனுக்குச் சந்திரனும் ஸேனைக்கு ஸமுத்ரமும் உபமானங்கள். **आतपत्र-अमलमण्डलेन** - என்ற விசேஷணம் குசனுக்கும் சந்திரனுக்குமுள்ள ஒப்புமையைக் காட்ட வந்தது. குசன், வெண்பட்டுக் குடையாகிய பிம்பமுடையவன், சந்திரன், குடைபோன்ற நிர்மலமான பிம்பமுடையவன். **वेलाम् उदन्वान् इव** - இவ்வுவமையாலே ஸேனையின் பரப்பு புலனாகும். சந்திரன் உதயமானால் கடல் நீர் பொங்கிக் கரையில் பிரவஹிக்கும்.

तस्य प्रयातस्य वरूथिनीनां पीडामपर्याप्तवतीव सोढुम् ।
वसुन्धरा विष्णुपदं द्वितीयमध्यारुरोहेव रजश्छलेन ॥ २८ ॥

**प्रयातस्य**-செல்லுகின்ற, **तस्य**-அவனுடைய, **वरूथिनीनाम्**-சேனைகளின், (சேனையினாலுண்டான) **पीडाम्**-உபத்ரவத்தை, (நெருக்கடியை), **सोढुम्** - ஸஹிக்க, **अपर्याप्तवती इव** - சக்தியற்றது போல், **वसुन्धरा** - பூமி, **रजः-छलेन** - புழுதி என்ற வியாஜத்தினாலே, **द्वितीयम्** - இரண்டாவது, **विष्णु-पदम्** - விஷ்ணுவின் அடி வைப்பான ஆகாசத்தை, **अध्यारुरोह-इव** - ஏறியது போல் (காணப்பட்டது).

८ (க-து) குசனது ஸேனை செல்லும்பொழுது தரையினின்றும் ஏராளமான புழுதி எழுந்து ஆகாசமெங்கும் பரவியது.

இதைக் கவி, சேனையின் பாரத்தைத் தாங்கமுடியாத பூமி, புழுதி என்ற வியாஜத்தினாலே ஆகாசத்தில சென்று விட்டது போலும் என உத்ப்ரேக்ஷித்தார். வேலையின் கஷ்டத்தைத் தாங்க முடியாத பொழுது பணியாளர்கள் சொல்லிக் கொள்ளாமல் ஓடி விடுவதும் உண்டு.

**विष्णुपदम्** - விஷ்ணு வாமனராக அவதரித்து பலியினிடம் மூன்று அடி மண் பெற்றபின் திரிவிக்ரமராகி முதலடியினால் பூமியை அளந்தார். இரண்டாவது அடியினால் அளக்கப் பட்டதாலே ஆகாசம், **द्वितीयं विष्णुपदम्** எனக் கூறப் பட்டது.

उद्यच्छमाना गमनाय पश्चात् पुरो निवेशे पथि च व्रजन्ती ।
सा यत्र सेना ददृशे नृपस्य तत्रैव सामग्र्यमतिं चकार ॥२९॥

**पश्चात्** - பின்னால், **गमनाय**-(குசாவதியினின்றும்) செல்வதற்காக, **उद्यच्छमाना** - முயன்று கொண்டிருப்பதும், **पुरः** - முன்னால் - தங்குமிடத்தில், **निवेशे** - இருத்தற் பொருட்டு, **उद्यच्छमाना** - முயலுவதும், **पथि च** - வழியில், **व्रजन्ती**-சென்று கொண்டிருப்பதுமான, **नृपस्य**-அரசனது, **सा सेना** - அந்த ஸேனை, **यत्र (यत्र)** - எங்கு (எங்கு), **ददृशे**-பார்க்கப் பட்டதோ, **(तत्र) तत्र एव** - ஆங்காங்கே, **सामग्र्य**-

**मतिम्** - *நிறைந்துள்ளதென்ற எண்ணத்தை,* **चकार**-*(பார்ப்பவர்களுக்கு) உண்டாக்கியது.*

(க-து) புறப்பட்ட குசனது ஸேனையின் ஒரு பகுதி கூடாரங்களில் தங்கிச் சென்று கொண்டிருந்தது. ஒரு பகுதி நடந்து கொண்டிருந்தது. மற்றொருபகுதி குசாவதியினின்றும புறப்பட ஆயத்தம் செய்து கொண்டிருந்தது. அவனுடைய ஸேனை மிகப் பெரியதாக இருந்ததால் ஸேனையின் ஒருபகுதி எந்த இடத்தில் பார்க்கப்பட்ட போதிலும் அந்த இடத்திலேயே ஸேனை முற்றிலும் உள்ளது என்ற எண்ணத்தைப் பார்ப்பவர்களின் மனத்தில் உண்டாக்கியது. அவ்வளவு விஸ்தீர்ணமாக இருந்தது படை என்பது கருத்து.

सेनाया बहुत्वमनेनोक्तम्। अन्यथा कथं शून्यजनपदपूरणोपपत्तिरिति भावः' नारायणः।

तस्य द्विपानां मदवारिसेकात्खुराभिघाताच्च तुरङ्गमाणाम्।
रेणुः प्रपेदे पथि पङ्कभावं पङ्कोऽपि रेणुत्वमियाय नेतुः ॥३०॥

**नेतुः** - *தலைவனுகிய,* **तस्य** - *அவனுடைய,* **द्विपानाम्** - *யானைகளின்,* **मदवारि-सेकात्** - *மத ஜல நனைப்பினுல்,* **पथि** - *வழியில் உள்ள,* **रेणुः** - *புழுதியானது,* **पङ्क-भावम्** - *சேருன தன்மையை,* **प्रपेदे** - *அடைந்தது.* **तुरंगमाणाम्** - *குதிரைகளின்,* **खुर-अभिघातात् च** - *குளம்படிகளால்,* **पथि** - *வழியிலுள்ள,* **पङ्कोऽपि** - *சேறும்,* **रेणुत्वम्**- *புழுதியின் தன்மையை,* **इयाय** - *அடைந்தது.*

(க-து) ஸேனை செல்லும் பொழுது, யானைகளின் மத ஜலத்தினுல நனைந்த புழுதி சேருக மாறியது. குதிரைகளின் குளம்புகளால் அடிக்கப்பட்ட சேறு ஈரம் நீங்கிப் புழுதியாக மாறியது.

*இவ்வாறு, அவனது படை சென்ற வழி பலவகையில் மாறுதலடைந்து கொண்டிருந்தது.*

मार्गैषिणी सा कटकान्तरेषु वैन्ध्येषु सेना बहुधा विभिन्ना।
चकार रेवेव महाविरावा बद्धप्रतिश्रुन्ति गुहामुखानि ॥ ३१ ॥

वैन्ध्येषु - விந்திய மலையைச் சார்ந்த, कटकान्तरेषु - பல சரிவுகளிலும், मार्गैषिणी-வழியைத் தேடுகின்றதும், बहुधा- பலவாக, विभिन्ना - பிரிந்துள்ளதும், महाविरावा - பெருஞ் சத்தமுடையதுமான, सा सेना - அந்த சேனை, रेवा इव - நர்மதா நதி போல, गुहामुखानि - குகையின் வாயில்களை, बद्ध प्रतिश्रुन्ति -எதிரொலி உடையனவாக, चकार-செய்தது.

(க-து) விந்திய வனத்தில் வழியைத் தேடிக்கொண்டு பல கிளைகளாகப் பிரிந்து சத்த மிட்டுக்கொண்டு சென்ற அப்படை, நர்மதா நதிபோல் அம்மலையின் குகைகளை எல்லாம் எதிரொலி யுடையனவாகச் செய்தது.

நர்மதா : விந்திய மலையில் தோன்றிப் பெருஞ் சத்தத் துடன் பல கிளைகளாகப் பிரிந்து செல்லும் நதி. இங்கு ஸேனைக்கு உபமானமாக வந்தது.

स धातुभेदारुणयाननेमिः प्रभुः प्रयाणध्वनिमिश्रतूर्यः ।

व्यलङ्घयद्विन्ध्यमुपायनानि पश्यन्पुलिन्दैरुपपादितानि ॥ ३२ ॥

धातु भेद-अरुण-याननेमिः - தாதுக்களை உடைப்பதால் சிவந்த ரத சக்ரமுனையுடையவனும், प्रयाण ध्वनि-मिश्र-तूर्यः- பிரயாண சத்தத்துடன் கலந்த வாத்ய சத்தமுடையவனு மான, सः प्रभुः - அவ்வரசன், पुलिन्दैः - வேடுவர்களால், उपपादितानि-தரப்பட்ட, उपायनानि - காணிக்கைப் பொருள் களை, पश्यन् - பார்த்துக் கொண்டு, विन्ध्यम् - விந்திய மலையை, व्यलङ्घयत् - கடந்தான்.

(க-து) விந்தியமலை வழியே சென்ற பொழுது, அவனது ஸேனையின் ரதசக்கரங்கள் மார்க்கத்திலுள்ள சிவந்த தாதுக்களை உடைத்துக் கொண்டு சென்றதால் சக்கர விளிம்புகள் சிவந்து காணப்பட்டன. பிரயாண காலத்தில் ஸேனாவீரர்கள் செய்த சத்தம், வாத்ய கோஷத்துடன் கலந்திருந்தது. காட்டிலுள்ள வேடர்கள் தந்த காணிக்கைகளைப் பார்த்துக்கொண்டு அவன் பிரயாணம் செய்தான்.

குசாவதி விந்தியமலைப்புறத்தில் அமைக்கப்பட்டிருந் தது.

कुशस्य नगरी रम्या विन्ध्यपर्वतरोधसि ।
कुशावतीति नाम्ना सा कृता रामेण धीमता ॥

[ உத்தர. 108. 4. ] என்பது ராமாயணம்.

तीर्थे तदीये गजसेतुबन्धात्प्रतीपगामुत्तरतोऽस्य गङ्गाम् ।
अयत्नवालव्यजनीबभूवुर्हंसा नभोलङ्घनलोलपक्षाः ॥ ३३ ॥

**गज-सेतु-बन्धात्** - யானைகளாலான பாலத்தைக் கட்டியதால், **प्रतीपगाम्** - மேற்கு நோக்கிச் செல்லுகின்ற, **गङ्गाम्** - கங்கா நதியை, **तदीये** - அதன், **तीर्थे** - சரியான துறையில், **उत्तरतः** - கடக்கின்ற, **अस्य** - அவனுக்கு, **नभोलङ्घन-लोल-पक्षाः** - ஆகாசத்தை அடைவதால் அசைகின்ற இறகுகளையுடைய, **हंसाः** - ஹம்ஸங்கள், **अयत्न-वाल व्यजनी बभूवुः** - முயற்சியின்றிப் பெற்ற சாமரங்களாக ஆயின.

(க-து) குசன், கங்கா நதியை, சிரமமின்றிக் கடக்கக் கூடிய ஒரு துறையில், யானைகளை வரிசையாக ஆற்று நீரில் நிறுத்திப் பாலமாக அமைத்துக் கடந்தான். யானைகளை இடையே நிறுத்தியதால் பிரவாஹம் தடுக்கப் பெற்று மேற்கு நோக்கிச் சென்றது. நீரிலிருந்த அன்னப்பறவைகள அவன் தலைக்குமேல் பறந்தன. அவ்வாறு பறந்த வெண்ணிற அன்னங்கள் மனிதர்களின் முயறசி இன்றியே வீசப்படும் சாமரங்கள் போன்று இருந்தன.

स पूर्वजानां कपिलेन रोषाद्भस्मावशेषीकृतविग्रहाणाम् ।
सुरालयप्राप्तिनिमित्तमम्भस्त्रैस्रोतसं नौलुलितं ववन्दे ॥ ३४ ॥

**सः** - அவன், **कपिलेन** - கபில முனிவரால், **रोषात्** - கோபத்தினாலே, **भस्मावशेषीकृत-विग्रहाणाम्**-சாம்பலாக மாத்திரமே எஞ்சியிருக்கும்படி செய்யப்பட்ட உடலையுடைய, **पूर्वजानाम्** - (தம்) முன்னோர்கள், **सुरालय-प्राप्ति-निमित्तम्** - தேவருலகு அடைவதற்குக் காரணமானதும், **नौलुलितम्** - படகுகளால் அலைக்கப்பட்டதுமான, **त्रैस्रोतसम् अंभः** - கங்கா ஜலத்தை, **ववन्दे** - வணங்கினன்.

(க-து) குசன் கங்கையைக் கடக்கும்பொழுது அதை வணங்கினான்.

வணங்குவதற்குக் காரணங்கள் இரண்டு கூறப்படுகின்றன: தம் முன்னோர்களான ஸகர புத்திரர்கள் அறுபதினாயிரவரும் கபில மஹரிஷியினால் சாப பலாக்கப்பட்டு நற்கதியின்றி இருந்தனர். கங்கையின் நீர் அவர்களைத் தேவருலகுக்கு உய்வித்தது. மற்றொரு காரணம்: குசனது படகுகள் நீரில் சென்று அதைக் கலக்கியதால் அக்குற்றத்தையும் பொறுத்தற்காக வணங்கினான். கங்கை ரகு வம்சததவரின் குல தேவதை யாகையால் வணங்கினான் என்பர் சிலர்.

इत्यध्वनः कैश्चिदहोभिरन्ते कूलं समासाद्य कुशः सरय्वाः ।
वेदिप्रतिष्ठान्विततांध्वराणां यूपानपश्यच्छतशो रघूणाम् ॥३५॥

**इति**-இவ்வாறு, **कैश्चित्** - சில, **अहोभिः** - நாட்களாலே, **अध्वनः** - வழியின், **अन्ते (सति)** - முடிவு வந்த பொழுது, **कुशः** - குசன், **सरय्वाः** - ஸரயூ நதியின், **कूलम्** - கரையை, **समासाद्य** - அடைந்து, **विततांध्वराणाम्** - விரிவான யாகமுடைய, **रघूणाम्**-ரகு குலத்தவரின். **वेदिप्रतिष्ठान्** மேடையிலே நடப்பட்டுள்ள, **यूपान्** - யூப ஸ்தம்பங்களை, **शतशः** - நூற்றுக் கணக்கில, **अपश्यत्** - கண்டான்.

(க-து) குசன் சில நாட்கள் பிரயாணம் செய்து முடிவில் ஸரயூ நதியின் தீரமடைந்தான். அங்கு ரகு குலத்தவர் நீண்ட காலம் யாகம் செய்து நாட்டிய பல யூபஸ்தம்பங்கள் அப்பொழுதும் கெடாமலிருப்பதைக் கண்டான்.

आधूय शाखाः कुसुमद्रुमाणां स्पृष्ट्वा च शीतान् सरयूतरङ्गान् ।
तं क्लान्तसैन्यं कुलराजधान्याः प्रत्युज्जगामोपवनान्तवायुः ॥३६॥

**कुल राजधान्याः** - குலத்தவரின் ராஜதானியினது, **उपवनान्तवायुः** - உத்பானத்தினின்றும் எழுந்த காற்று, **कुसुमद्रुमाणाम्** - புஷ்பங்கள் நிறைந்த மரங்களின், **शाखाः** - கிளை

कளை, **आधूय** - அசைத்தும், **शीतान्** - குளிர்ச்சியான, **सरयू-तरङ्गान्** - ஸரயூ நதியின் அலைகளை, **स्पृष्ट्वा च** - தொட்டும், **क्लान्त सैन्यम्** - களைத்த ஸேனைகளையுடைய, **तम्** - அவனை, **प्रत्युज्जगाम** - எதிர்கொண்டழைத்தது.

(க-து) அயோத்தியின் உத்யானங்களிலிருந்து நறுமணத்துடன் எழுந்த காற்று ஸரயூநதிகளின் அலைகளில் பட்டுக் குளிர்ந்து அவனைவரவேற்பதுபோல் வீசியது.

अथोपशल्ये रिपुमग्नशल्यस्तस्याः पुरः पौरसखः स राजा ।
कुलध्वजस्तानि चलध्वजानि निवेशयामास बली बलानि ॥ ३७ ॥

**अथ** - பிறகு, **रिपु-मग्न शल्यः** - சத்ருக்களிடத்தில் செலுத்திய அம்புடையவனும், **पौर सखः** - நகர மக்களின் நண்பனும், **कुल ध्वजः** - (ரகு) குலத்திற்குக்கொடி போன்றவனும், **बली** - பலவானுமான, **सः राजा** - அவ்வரசன், **चल-ध्वजानि** - அசைகின்ற கொடிகளையுடைய, **बलानि** - சேனைகளை, **पुरः** - நகரத்திற்கு, **उपशल्ये** - வெளிப் புறததிலேயே, **निवेशयामास** - தங்கச் செய்தான.

(க-து) குகன் ஸேனையை நகரத்திற்கு வெளியிலேயே தங்கச்செய்தான்.

அவ்வாறு தங்கச் செய்ததன் காரணம் அடுத்து வரும் சுலோகத்தில் கூறப்படுகிறது.

**पौरसखः**—“ कुशावतीपौरानुगतः इत्यर्थः । न ह्ययोध्यायां केचित् सन्ति ” नारायणः ।

तां शिल्पिसंघाः प्रभुणा नियुक्तास्तथागतां संभृतसाधनत्वात् ।
पुरं नवीचक्रुरपां विसर्गान्मेघा निदाघग्लपितामिवोर्वीम् ॥३८॥

**मेघाः**-மேகங்கள், **अपाम्** ஜலத்தை, **विसर्गात्** - வர்ஷிப்பதால், **निदाघ-ग्लपिताम्**-கோடைக் காலத்தினால் உலர்த்தப்பட்ட, **उर्वीम्-इव**-பூமியைப் (புதுப்பிப்பது) போல், **प्रभुणा** -

அரசனுன குசனுல், नियुक्ताः-நியமிக்கப்பட்ட, शिल्पि संघाः- சில்பிகளின் கூட்டங்கள், संभृत साधनत्वात् - சேகரிக்கப்பட்ட பொருளுடையவர்களாய் இருந்ததால், तथागताम् - அந்நிலையிலுள்ள, पुरम् - அயோத்தியா நகரத்தை, नवीचक्रुः - (எளிதிலே) புதுப்பித்தன.

(க-து) கோடை வெய்யிலிலுல் தீய்ந்து புல்லுமின்றி இருக்கும் பூமியில் மேகம் மழையை வர்ஷித்துத் தரையை அழகுடையதாகச் செய்வதுபோல் அரசரால் நியமிக்கப்பட்ட சிற்பிகள், வேண்டிய பொருள்கள் எல்லாம் பெற்றிருந்தபடியால் வெகு சீக்ரத்திலேயே அயோத்தியா நகரத்தைப் புதுப்பித்தனர்.

ततः सपर्यां सपशूपहारां पुरः परार्घ्यप्रतिमागृहायाः ।
उपोषितैर्वास्तुविधानविद्भिर्निर्वर्तयामास रघुप्रवीरः ॥ ३९ ॥

ततः - பிறகு, रघुप्रवीरः - ரகு வீரன் குசன், परार्घ्य प्रतिमा गृहायाः - சிறந்த கோயில்களையுடைய, पुरः - அந் நகரத்திற்கு, उपोषितैः - உபவாஸமிருந்த, वास्तु - विधान-विद्भिः - வாஸ்து பூஜையின் முறையை அறிந்தவர்களைக் கொண்டு, सपशूपहाराम्-உயிர்ப் பலியுடன் கூடிய, सपर्याम्- பூஜையை, निर्वर्तयामास - செய்வித்தான்.

(க-து) குசன், வாஸ்து பூஜை செய்யும் முறையறிந்தவர்களைக் கொண்டு புதுப்பிக்கப்பட்ட அந்நகரத்திற்குப் பூஜை செய்தான்.

वास्तु-வீடு கட்டுவதற்கான இடம்; அங்குச் செய்யப்படும் பூஜையையும் இச்சொல் குறிக்கும். वास्तुविधानवित्- ஸ்தபதி என்றும் பொருள் கூறுவர்.

तस्याः स राजोपपदं निशान्तं कामीव कान्ताहृदयं प्रविश्य ।
यथार्हमन्यैरनुजीविलोकं संभावयामास यथाप्रधानम् ॥ ४० ॥

कामी - காதலன், कान्ता हृदयम् इव - அன்புள்ள ஸ்திரீயின் மனத்தில் (புகுவது) போல், सः - அவன், तस्याः - அந்

நகரத்தின், **राजोपपदम्** - 'ராஜ' என்ற சொல்லை முன் கொண்டுள்ள, **निशान्तं** - மாளிகையில், **प्रविश्य** - புகுந்து, **अनुजीविलोकम्** - தன்னை அண்டியவர்களை, **यथाप्रधानम्** - முதன்மையை அனுசரித்தும், **यथार्हम्** - தகுதிக்கு ஏற்பவும், **अन्यैः** - மற்ற வீடுகளாலே (வீடுகளைத்தந்து), **संभावयामास** - கௌரவித்தான்

(க-து) குசன், ராஜ க்ருஹத்தில் ப்ரவேசித்தபின், மற்ற வீடுகளை மந்திரி முதலானவர்களுக்கு, அவரவர்களின் தகுதியும் முதன்மையுமறிந்து கொடுத்துக் கௌரவித்தான்.

**राजोपपदम् निशान्तम्** - ராஜ என்ற சொல்லை முன் கொண்ட வீடு; அதாவது 'ராஜ க்ருஹம்' என்பது பொருள்.

**'कामी कान्तहृदयमिवेत्युपमया परस्परशोभाजननादयो द्योत्यन्ते' नारायणः ।**

सा मन्दुरासंश्रयिभिस्तुरंगैः शालाविधिस्तम्भगतैश्च नागैः ।

पूराबभासे विपणिस्थपण्या सर्वाङ्गनद्धाभरणेव नारी ॥ ४१ ॥

**विपणिस्थ-पण्या** - கடைகளிலுள்ள வியாபாரப் பொருளையுடைய **सा पूः** - அந் நகரம், **मन्दुरा संश्रयिभिः** - கொட்டகையிலே இருக்கின்ற, **तुरंगैः** - குதிரைகளாலும், **शाला-विधि-स्तंभ गतैः** - கொட்டகைகளிலே முறைப்படி நடப்பட்ட தூண்களிலே கட்டப்பட்டிருக்கின்ற, **नागैः च** - யானைகளாலும், **सर्वाङ्ग-नद्ध-आभरणा** - எல்லா அவயவங்களிலும் அணியப்பட்ட ஆபரணங்களையுடைய, **नारी इव** - ஸ்திரீ போல், **आबभासे** - விளங்கியது.

(க-து) அயோத்யாநகரின் கடைகளிலே விற்பனைக்கான பொருள்கள் நிறைந்திருந்தன. யானைச்சாலையில் யானைகளும் கொட்டகையில் குதிரைகளும் இருந்தன. இதனால் நகரம், சரீரம் முற்றிலும் ஆபரண மணிந்துள்ள ஸ்திரிபோல் அழகாக விளங்கியது.

वसन् स तस्यां वसतौ रघूणां पुराणशोभामधिरोपितायाम् ।
न मैथिलेयः स्पृहयांबभूव भर्त्रे दिवो नाप्यलकेश्वराय ॥४२॥

**मैथिलेयः सः** - ஸீதையின் குமாரனான அக் குசன், **पुराणशोभाम्**-முன்னிருந்த அழகை, **अधिरोपितायाम्** -அடைவிக்கப்பட்டதும, **रघूणाम्** - ரகு குலத்தவரின், **वसतौ** - வாஸஸ்தானமுமான, **तस्याम्** - அந் நகரில், **वसन्** - வசிப்பவனாக, **दिवः** - ஸ்வர்க்கத்தின், **भर्त्रे** - நாதனான இந்திரனையும், **न स्पृहयां बभूव** - விரும்பவில்லை; **(तथा) अलकेश्वराय-अपि** - அலகாபுரியின் தலைவனான குபேரனையும், **न स्पृहयां-बभूव** - மதிக்கவில்லை.

(க-து) அயோத்தி முன்னிருந்த சோபையைத் திரும்பவும் பெற்று விளங்கியது. அதில் வசித்த குசன் இந்திரனையும் குபேரனையும் கூட மதிக்க வில்லை.

ஸ்வர்க்கம் அலகாபுரி இரண்டினைக் காட்டிலும் செல்வத்திலும் அழகிலும் அயோத்தி சிறந்திருந்ததென்பது கருத்து.

अथास्य रत्नग्रथितोत्तरीयमेकान्तपाण्डुस्तनलम्बिहारम् ।
निश्श्वासहार्यांशुकमाजगाम घर्मः प्रियावेषमिवोपदेष्टुम् ॥४३॥

**अथ**-பிறகு, **रत्न-ग्रथित-उत्तरीयम्** - முத்துக்கள் கோத்த உத்தரீயமுடையதும், **एकान्त-पाण्डुस्तनलम्बि-हारम्** - மிகவும் வெண்மையான ஸ்தனங்களின் மேல் புரளுகின்ற முத்து மாலையுடையதும, **निश्श्वासहार्यंशुकम्** - மூச்சுக் காற்றும் கவரக்கூடிய வஸ்த்ரமுடையதுமான, **प्रियावेषम्** - (அவனது) மனைவிகளின் (வெய்யிற்கால) உடையை, **अस्य** -அவனுக்கு, **उपदेष्टुम् इव**-எடுத்துக்கூறுதற்குப் போல், **घर्मः** - கோடைக்காலமானது, **आजगाम** - வந்தது.

(க-து) குசன் அயோத்தி சென்றபின் கோடைக்காலம் வந்தது.

குசனுடைய மனைவியர் உடை அணிய வேண்டிய வகையை உபதேசிக்க விரும்பியது போல் அக்கோடை இருந்ததெனக் கவி உத்ப்ரேக்ஷித்தார். முத்துக்களின் ஸ்பர்சம் குளிர்ச்சியானதால் முத்துக்கள் கோத்த வஸ்த்ரத்தை அக்காலத்தில் அணிவர். மார்பிலும் முத்துமாலை தரிப்பர். மூச்சுக் காற்றும் கவரும்படி மெல்லியதான வஸ்தரத்தை இடையிலே உடுப்பர். இது கோடைக் கால உடையாகும். **रत्न ग्रथित** - இடப் பொருத்தம் கருதி ரத்னம் என்பது இங்கே முத்தைக் குறித்தது. முத்தும் நவரத்னங்களில் ஒன்று. **एकान्तपाण्डुस्तन** - ஸ்தனங்களை வெண்மை நிறமுடையனவாகக் கவிகள் வர்ணிப்பர். **'यौवने स्तनपाण्डुत्वस्य कविषु सिद्धत्वात् नित्यं कञ्चुकाच्छादित्वात्' —अरुणगिरिः**

अगस्त्यचिह्नादयनात्समीपं दिगुत्तरा भास्वति संनिवृत्ते ।
आनन्दशीतामिव बाष्पवृष्टिं हिमस्रुतिं हैमवतीं ससर्ज ॥४४॥

**अगस्त्य चिह्नात्** - அகஸ்த்யரை அடையாளமாகக் கொண்ட, **अयनात्** - மார்க்கத்தினின்றும், **भास्वति** - ஸூரியன், **समीपम्** - அருகில், **सन्निवृत्ते (सति)** - திரும்பி வந்த பொழுது, **उत्तरा-दिक्** - வடக்குத் திசை, **आनन्द शीताम्** - ஆனந்தத்தினால் குளிர்ச்சியான, **बाष्पवृष्टिम् इव** - கண்ணீர்ப் பெருக்குப்போன்ற, **हैमवतीम्** - ஹிமயமலையின், **हिमस्रुतिम्**- பனிப் பெருக்கை, **ससर्ज** - உண்டாக்கியது.

(க-து) அகஸ்த்திய முனிவர் இருந்த தென் திசையின்றும் ஸூர்யன், வடதிசை சென்ற பொழுது ஹிமாலயத்திலுள்ள பனி உருகிப் பெருகியது.

இதைக் கவி, தனது நாயகனது வருகையில் ஸந்தோஷித்த வடதிசை என்ற ஸ்திரீயின் ஆனந்த பாஷ்பமாகக் கூறினார்.

'अगस्त्यचिह्नादित्यनेनागस्त्यस्येव तन्मार्गगतभास्वतोऽप्यनिवृत्तिसंभावना ध्वन्यते। सा चोत्प्रेक्षामुपकरोति'— अरुणगिरिः ॥

प्रवृद्धतापो दिवसोऽतिमात्रमत्यर्थमेव क्षणदा च तन्वी ।

उभौ विरोधक्रियया विभिन्नौ जायापती सानुशयाविवास्ताम् ॥

**अतिमात्रम्** - *மிகவும்*, **प्रवृद्ध तापः** - *அதிகமான தாபமுடைய*, **दिवसः** - *பகற் பொழுது*, **अत्यर्थमेव** - *மிகவும்*, **तन्वी**-*குறுகியதான*, **क्षणदा च** - *இரவு*, **(एतौ) उभौ** - *என்ற இரண்டும்*, **विरोधक्रियया** - *மாறுபாடான செய்கையால்*, **विभिन्नौ** - *பிரிந்தவர்களும்*, **सानुशयौ**-*பின் வருந்துபவர்களுமான*, **जयापती-इव**-*கணவனும் மனைவியும் போல்*, **आस्ताम्**-*இருந்தன.*

*(க-து) பிரணயகலஹத்திலை் பிரிந்து வருந்தும் கணவன் போல் பகல்பொழுது மிகதாபத்துடனும், மெலிந்த மனைவிபோல் இரவுப்பொழுது குறுகியும், கோடையில் காணப்பட்டன.*

दिने दिने शैवलवन्त्यधस्तात्सोपानपर्वाणि विमुञ्चदम्भः ।

उद्दण्डपद्मं गृहदीर्घिकाणां नारीनितम्बद्वयसं बभूव ॥ ४६ ॥

**दिने-दिने** - *ஒவ்வொரு நாளும்*, **शैवलवन्ति** - *பாசியுடையனவும்*, **अधस्तात्** - *கீழே உள்ளனவுமான*, **सोपान पर्वाणि** - *படிகளின் வரிசைகளை*, **विमुञ्चत्**-*விடுகின்றதும்*, **उद्दण्डपद्मम्**-*(நீருக்கு) மேலுள்ள காம்போடு கூடிய தாமரையுடையதுமான*, **गृहदीर्घिकाणाम्** **अंभः**-*வீட்டின் நடைவாவிகளது நீர்*, **नारी-नितम्ब-द्वयसम्** - *ஸ்திரீகளின் இடுப்பளவினதாக*, **बभूव**-*ஆயிற்று.*

*(க-து) கோடையிலை் நடைவாவியிலுள்ள நீர் தினந்தோறும் வற்றிக்கொண்டிருந்தது. நீருக்குள் இருந்த படிகளும் பாசிகளுடன் கண்களுக்குப்புலனாயின. தாமரைகளின் தண்டுகள் நீர*

மட்டத்திற்குமேல் தெரிந்தன; வாவிகளில் நீரின் ஆழம் பெண்களின் இடுப்பளவினதாக இருந்தது.

**सोपानपर्व** - படிகளின் வரிசை அல்லது இணைப்பு. நீர் வற்ற வற்ற, பாசிகள் படிகளின் இணைப்பிலே ஒட்டிக் கொண்டிருந்தன.

वनेषु सायंतनमल्लिकानां विजृम्भणोद्गन्धिषु कुड्मलेषु ।
प्रत्येकनिक्षिप्तपदः सशब्दं संख्यामिवैषां भ्रमरश्चकार ॥ ४७ ॥

**नवेषु** - புதியனவும், **विजृम्भण-उद्गन्धिषु** - மலர்ச்சியினால் அதிகம் மணமுடையனவுமான, **सायंतन मल्लिकानाम्**- ஸாயங்கால மல்லிகைக் கொடிகளின், **कुड्मलेषु** - அரும்புகளில், **सशब्दं** - ஒலியுடன், **प्रत्येक-निक्षिप्त-पदः** - ஒவ்வொன்றின் மேலும் பாதத்தை வைத்த, **भ्रमरः** - வண்டு, **एषाम्** - இவ்வரும்புகளை, **संख्याम् चकार-इव** - எண்ணியது போலும் இருந்தது.

(க-து) கோடையின் தொடக்கமாகையால் ஸாயங்காலத்தில் மல்லிகை, அரும்பியது. புதிய அவ்வரும்புகள் ஒவ்வொன்றின்மேலும் தேனைத்தேடுவதற்கு உட்கார்ந்து எழுந்த வண்டு அவ்வரும்புகளின் மொத்த எண்ணை எண்ணியதுபோலுமிருந்தது.

**सायन्तन मल्लिका** - பல வகை மல்லிகைகளில் ஒன்று. ஸாயங்காலத்தில் புஷ்பிப்பது.

"संख्यामिवेति' संख्येयकुसुमत्वेन ऋत्वारंभः उक्तः" **अरुणगिरिः** । அரும்புகள் அதிகமில்லாமல் எண்ணக் கூடிய நிலையிலிருப்பதால கோடையின் ஆரம்பமே உள்ளது என்பது புலனாகின்றது. **जनस्य तस्मिन्** (சு. 53) என்ற சுலோகத்தில் கோடையின் முதிர்ச்சி கூறப்படுகின்றது.

स्वेदानुविद्धार्द्रनखक्षताङ्के भूयिष्ठसंदष्टशिखं कपोले ।
च्युतं न कर्णादपि कामिनीनां शिरीषपुष्पं सहसा पपात ॥

**स्वेदानुविद्ध-आर्द्र-नखक्षत-अङ्के** - வியர்வையுடன் கூடிய புதிய நகக்ஷதங்களையுடைய, **कामिनीनाम् कपोले** - ஸ்திரீகளின் கன்னங்களில், **भूयिष्ठ-सन्दष्ट शिखम्**-மிகவும் ஒட்டிக் கொண்ட முனையையுடைய, **शिरीष पुष्पम्** - வாகைப் பூ, **कर्णात्** - (பெண்களின்) காதினின்றும், **च्युतं अपि** - நழுவியதாயினும், **सहसा** - உடனே, **न पपात** - கீழே விழவில்லை.

(க-து) பெண்கள் காதுகளின்மேல் அணிந்துள்ள வாகைப் பூவின் நுனி, அவர்களது கன்னங்களில் கலவிக்காலத்தில் காதலர்களால் உண்டாக்கப்பட்டனவும், கோடையிறுலுண்டான வியர்வையுடையனவுமான நகக்குறிகளில் பட்டு, ஒட்டிக் கொண்டிருந்தது. வாகைப்பூ காதினின்றும் நழுவினதாயினும் கன்னத்தில் நன்கு ஒட்டிக்கொண்டிருந்ததால் கீழே விழாதிருந்தது.

**नखक्षत** - காதலர்களால் கலவிக் காலத்தில் உண்டாக்கப்பட்ட நகக் கீறல்கள்; இவை புதியனவாகவும் வியர்வையுடனுமிருந்ததால் வாகைப் பூவின் மெல்லிய கேஸரங்கள் இவைகளிலே புதைந்து ஒட்டிக் கொண்டன. **शिरीषम्** - வாகைப் பூ. மிக மென்மையானது.

यन्त्रप्रवाहैः शिशिरैः परीतान् रसेन धौतान्मलयोद्भवस्य ।
शिलाविशेषानधिशय्य निन्युर्धारागृहेष्वातपमृद्धिमन्तः ॥ ४९ ॥

**ऋद्धिमन्तः** - செல்வமுடைய மனிதர்கள், **धारागृहेषु** - நீர் ஊற்றுக்கள் அமைக்கப்பட்ட வீடுகளில், **शिशिरैः** - குளிர்ந்த, **यन्त्र प्रवाहैः**-இயந்திரங்களினுதவியாலே கொண்டு வரப்பட்ட ப்ரவாஹங்களால், **परीतान्** - சூழப்பட்டனவும், **मलयोद्भवस्य** - சந்தனத்தின், **रसेन** - குழம்பினால், **धौतान्** - அலம்பப்பட்டனவுமான, **शिला विशेषान्** - சிறந்த பாறைகள் மீது, **अधिशय्य** - படுத்து, **आतपम्** - கோடையின் தாபத்தை, **निन्युः** - போக்கிக் கொண்டனர்.

(க-து) செல்வமுடையவர்கள், நீரூற்று அமைக்கப்பட்ட வீடுகளில் சந்தனக் குழம்பு பூசிய பாறைகளிலே அமர்ந்து கோடையின் தாபத்தைப் போக்கிக்கொண்டனர். இயந்திரங்களின் உதவியால் தாங்கள் அமர்ந்திருந்த பாறைகளைச் சுற்றிலும் நீர்ப்ரவாஹம் ஓடும்படி அமைத்திருந்தனர்.

**शिलाविशेष** - சிறந்த பாறைகள். சந்திர காந்தக் கல் முதலியன. பாறைகளைக் குளிர்ச்சியாகச் செய்வதற்காகக் கெட்டியான சந்தனக் குழம்பைப் பூசிச் சுற்றிலும தண்ணீர் ஓடும்படியும் செய்திருந்தனர்.

**धारागृहम् — अदृश्यप्रभवाभिः निष्यन्दिनीभिर्जलधाराभिः परिवृतं मण्टपम्' अरुणगिरिः ॥**

स्नानार्द्रमुक्तेष्वनुधूपवासं विन्यस्तसायंतनमल्लिकेषु ।

कामो वसन्तात्ययमन्दवीर्यः केशेषु लेभे बलमङ्गनानाम् ॥५०

**वसन्त-अत्यय-मन्दमीर्यः** - வஸந்த ருது சென்றதால் பலம் குறைந்த, **कामः**-மன்மதன், **स्नान-आर्द्र-मुक्तेषु**-ஸ்நானத்தினால் ஈரமுடையதாய் அவிழ்த்து விடப்பட்டனவும், **अनुधूपवासम्** - புகைமூலம் நறுமணமூட்டியபின், **विन्यस्त-सायन्तन-मल्लिकेषु** - ஸாயங்கால மல்லிகைப்பூ சூட்டப்பெற்றனவுமான, **अङ्गनानाम् केशेषु** - வனப்புள்ள பெண்களின் கூந்தல்களிலே, **बलम् लेभे** - பலம் பெற்றான்.

(க-து) தன் துணையான வஸந்த ருது சென்றதால் மன்மதன் பலம் குறைந்தவன் ஆனான். க்ரீஷ்மருதுவில் பெண்கள் சிரஸ் ஸ்நானம் செய்து ஈரமான தங்களது கூந்தலை அவிழ்த்து விட்டு நறுமணப் புகையூட்டியபின் மல்லிகைப் பூவை அணிந்து அழகு செய்து கொண்டனர், அக்கூந்தலின் உதவியால், இழந்த பலத்தை மன்மதன் திரும்பவும் பெற்றான்.

அத்தகைய கூந்தலைக் கண்டவர்கள் மனத்தில் காதல் உணர்ச்சி மேலோங்கி எழுந்ததால் மன்மதன் அதன்மூலம் பலம் பெற்றான் எனக்கூறினார்.

**'संस्कृतकेशपाशदर्शनाद्विलासिनः समुल्लसितस्मरा बभूवुरित्यर्थः' चारित्रवर्धनः ।**

आपिञ्जरा बद्धरजःकणत्वान्मञ्जर्युदारा शुशुभेऽर्जुनस्य ।
दग्ध्वापि देहं गिरिशेन रोषात् खण्डीकृता ज्येव मनोभवस्य ॥

**आबद्ध-रजः कणत्वात्** - தோன்றிய மகரந்தப் பொடியை உடையதாக இருந்ததால, **आपिञ्जरा** - சிவந்த மஞ்சள் நிற மானதும், **उदारा** - நீண்டதுமான, **अर्जुनस्य मञ्जरी** - அர்ஜுன மரத்தின் பூங்கொத்து, **देहम्**-(மன்மதனது) உடலை, **दग्ध्वा-अपि** - எரித்த பின்பும், **रोषात्** - கோபத்தினாலே, **गिरिशेन**- பரமசிவனால், **खण्डीकृता** - அறுக்கப்பட்ட, **मनोभवस्य** - மன்மதனது, **ज्या-इव** - நாண் கயிறு போல், **शुशुभे**-விளங்கியது.

(க-து) கிரீஷ்மருதுவில் அர்ஜுன மரத்தில் தோன்றிய நீண்ட பூங்கொத்து, மகரந்தப்பொடிகளால் சிவந்த மஞ்சள் நிற முடையதாய், சிவபிரானால் துண்டு துண்டாக அறுக்கப்பட்ட மன்மதனது நாண் கயிறுபோல் காணப்பட்டது.

**देहं दग्ध्वापि रोषात्** - சிவபிரான், மன்மதனது உடலை எரித்த பின்பும் கோபம தணியாததால் அவனது நாண் கயிரையும் அறுத்ததாகக் கூறினார்

அர்ஜுன விருக்ஷத்தின் பூவினது பொன்னிறமான நீண்ட ஸரம பார்பபவர் மனத்தில இனப நுகர்ச்சிக்கான விருப்பததைத் தூண்டியதால மன்மதனது நாணாகக் கூறப் பட்டது. ‘**मञ्जर्याः उद्दीपनत्वमुत्प्रेक्षाहेतुः**’ **नारायणः** ।

मनोज्ञगन्धं सहकारभङ्गं पुराणशीधुं नवपाटलं च ।
संबध्नता कामिजनेषु दोषाः सर्वे निदाघावधिना प्रमृष्टाः ॥

**मनोज्ञ गन्धम्** - இனிய வாசனையுள்ள, **सहकार भङ्गम्** - மாந்துளிர்த்துண்டுகளையும், **पुराण शीधुम्** - பழைய மது வையும், **नव पाटलं-च**-புதிய பாதிரிப் பூவையும், **संबध्नता**-ஒன்று சேர்த்த, **निदाघावधिना** - கோடைக் காலத்தினாலே, **कामिजनेषु** - உல்லாஸி ஸ்த்ரீ புருஷர்கள் விஷயத்தில் (உண்

டாக்கப்பட்ட,) सर्वे दोषाः -எல்லாக் குற்றங்களும், प्रमृष्टाः- போக்கப்பட்டன.

(க-து) தாபம், தாஹம், வியர்வை யுண்டாக்குதல் முதலிய குற்றங்களைக் காமிஜனங்கள் விஷயத்தில் இழைதத கோடைக் காலம், மாந்துளிரையும் பாடலிப் பூவையும் தோற்றுவித்து மது பானத்திற்கு வசதியை அளித்ததால், தான் இழைத்த தவறு களை நீக்கிக்கொண்டது.

வஸந்த ருதுவில் மாந்தளிரை மதுவில் இட்டு அருந்துவர். ஆனால் அக்காலததில் மதுவில் போடுவதற்குப் பாதிரிப் பூ கிடைக்காது. கிரீஷ்ம ருதுவில் தான் பாதிரி பூக்கும். எனவே இம்மூன்றையும் ஒன்று சேர்த்த கிரீஷ்ம ருதுவின் ஆரமபமானது தான் செய்த தவறுகளுக்குப் பரிஹாரத்தைச் செய்து காதலர்களின் மன்னிப்பைப் பெற்றது. மதுபானம் செய்ய வசதி பெற்ற உல்லாஸ புருஷர் கள் கிரீஷ்மருதுவில் உண்டான கஷ்டங்களைப் பாராட்ட வில்லை என்பது கருத்து.

शीधुः - முதிர்ந்த கரும்பின் சாற்றினின்றும் காய்ச்சி எடுக்கப்படும் மது; இது பழையதாயின் சிறக்குமாதலால் पुराण என அடை மொழி கொடுத்தார்; मनोज्ञगन्धं என்ற விசேஷணம் பாதிரிப் பூவிற்கும் மதுவிற்கும் கூட சேர்க்கப் பட வேண்டியதாகும். अवधिः - காலம்.

जनस्य तस्मिन्समये विगाढे बभूवतुर्द्वौ सविशेषकान्तौ ।
तापापनोदक्षमपादसेवौ स चोदयस्थौ नृपतिः शशी च ॥९३॥

तस्मिन्-समये-அக்கிரீஷ்ம ருதுவானது, विगाढे-முதிர்ந்த பொழுது, जनस्य - ஜனங்களுக்கு, द्वौ - இருவர் தாம், सविशेष-कान्तौ - மிக விரும்பப்பட்டவர்களாக, बभूवतुः - இருந்தனர்; (அவர் எவர் எனின்), ताप-अपनोद-क्षम-पाद-सेवौ - தாபத்தைப் போக்குவதில் திறமை வாய்ந்த பாத (கிரண) ஸேவையை யுடையவர்களும்; उदयस्थौ-(செல்வத்

தில்) உதயத்தில் இருப்பவர்களுமான, **सः नृपतिः च** - அவ் வரசனும், **शशी च** - சந்திரனும் ஆவர்.

(க-து) முதிர்ந்த கோடையில், தங்களது தாபத்தைப் போக்கிக்கொள்வதற்காக ஜனங்களால் அதிகம் விரும்பப்பட்டவர் இருவர்தாம். முதல்வன்-அரசன் குசன். அவனது பாதங்களில் செய்த (ஸேவை) தொண்டு அவர்களது ஏழ்மை முதலான தாபங்களை நீக்குவதாக இருந்தது. இரண்டாமவன் சந்திரன். உதய கிரியில் வந்த சந்திரனது கிரணங்களை ஸேவித்து (அனுபவித்து) பகற்பொழுதிலுண்டான தாபத்தைப்போக்கிக் கொண்டனர்.

இச்சுலோகத்தில் சில பதங்கள் இரு பொருள் உடையன. **ताप**-கஷ்டம், உஷ்ணம்; **पाद्**-கால், சந்திர கிரணங்கள்; **सेवा**-பணிவிடை செய்தல, அனுபவித்தல்; **उदयस्थ** - செல்வத்தில் இருப்பவன், உதயபர்வதத்தில் இருப்பவன்.

अथोर्मिलोलोन्मदराजहंसे रोधोलतापुष्पवहे सरय्वाः ।

विहर्तुमिच्छा वनितासखस्य तस्यांम्भसि ग्रीष्मसुखे बभूव॥ १४॥

**अथ**-பிறகு, **ऊर्मिलोल-उन्मद-राजहंसे** - அலைகளின் மேல் சஞ்சரிக்கின்ற மதங் கொண்ட ராஜ ஹம்ஸமுடையதும், **रोधो लता पुष्प वहे**-கரையிலுள்ள செடிகளின் புஷ்பங்களைக் கொண்டு செல்வதும், **ग्रीष्म सुखे** - கிரீஷ்ம ருதுவினால் ஸுகமாயிருப்பதுமான, **सरय्वाः अंभसि**-ஸரயூ நதியின் ஜலத்தில, **वनिता-सखस्य** - ஸ்திரீகளுடன் கூடிய, **तस्य** - அவனுக்கு, **विहर्तुम्**-விளையாடுவதற்கு, **इच्छा**-விருப்பம், **बभूव**-உண்டாயிற்று.

(க-து) ஹம்ஸங்கள் சஞ்சரிக்கின்ற அலைகளையுடையதும், கரையிலுள்ள கொடிகளின் புஷ்பங்களைக் கொண்டு செல்வதுமான ஸரயூ நதியில் தம் காதலிகளுடன் ஜலக்ரீடை செய்ய அவ்வரசன் விரும்பினான். கோடைக்காலமானதால் நீர் விளையாட்டு மனத்திற்கு மிக இன்பம் தருவதாக இருந்தது.

स तीरभूमौ विहितोपकार्यामानायिभिस्तामपकृष्टनक्राम् ।
विगाहितुं श्रीमहिमानुरूपं प्रचक्रमे चक्रधरप्रभावः ॥ ५५ ॥

**चक्रधर प्रभावः**-விஷ்ணுவிற்கு ஒத்த பராக்ரமமுடைய, **सः** - அவன், **तीर भूमौ** - கரையின் மேல், **विहित-उपकार्याम्**-அமைக்கப்பட்ட கூடாரமுடையதும், **आनायिभिः**-வலைஞர் களாலே, **अपकृष्ट नक्राम्**-நீக்கப்பட்ட முதலைகளையுடையது மான, **ताम्**-அந்நதியில், **श्रीमहिमानुरूपम्**-செல்வத்திற்கும் பெருமைக்கும் ஏற்ற வகையில், **विगाहितुम्** - பிரவேசிப்ப தற்கு, **प्रचक्रमे** - தொடங்கினன்.

(க-து) ஸரயூநதியின் கரையில், அரசன் தங்கி இருப்பதற்காகவும், மற்றும் பலவகை களியாட்டங்களுக்காகவும், கூடாரங்கள் அமைக்கப்பட்டிருந்தன. செம்படவர்கள் ஆற்று நீரினின்றும் முதலைகளை எல்லாம் அப்புறப்படுத்தினார். குசன் நதியில் இறங்கி விளையாடத் தொடங்கினன்.

"**चक्रधरप्रभावः इति—अनेन अयत्ननिर्वर्तितलोकतन्त्रत्वात् विहाराधिकार उक्तः। विहितोपकार्याम् - विहारान्तरस्थित्यर्थम् । श्रीमहिमानुरूपम् - क्रीडोपयोगिसमग्रद्रव्यसंभरणमुक्तम् ।**

**अपकृष्टनक्राम्-मत्स्यग्राहविशुद्धमुदकमवगाहेतेति कौटिल्यः" अरुणगिरिः ।**

सा तीरसोपानपथावतारादन्योन्यकेयूरविघट्टिनीभिः ।
सनूपुरक्षोभपदाभिरासीदुद्विग्नहंसा सरिदङ्गनाभिः ॥ ५६ ॥

**सा सरित्** - அந்நதி, **तीर-सोपान पथ-अवतारात्** - கரையினின்றும் படிகளின் வழியே இறங்குவதால், **अन्योन्य-केयूर-विघट्टिनीभिः** - ஒருவருக்கொருவர் தோள் வளைகளில் இடித்துக் கொள்பவர்களும், **सनूपुर क्षोभ-पदाभिः** - அசைகின்ற (ஒலிக்கின்ற) சிலம்புடன் கூடிய பாதமுடையவர்களு

மான, अङ्गनाभिः - ஸ்திரீகளாலே, उद्विग्नहंसा - பயந்த ஹம்ஸங்களையுடையதாக, आसीत् - ஆயிற்று.

(க-து) குசனது ஸ்திரீகள் பலரும் ஒரே காலத்தில் கரையினின்றும படிவழியே. பரஸ்பரம் தோளவளைகளை இடித்துக் கொண்டும், பாதங்களிலுள்ள சிலம்புகளை ஒலித்துக் கொண்டும் நதியில் இறங்கினர். திடீரென்று உண்டான சத்தத்தைக் கேட்டு ஆற்றிலிருந்த ஹம்ஸங்கள் அச்சமுற்றன.

'ताः दृष्ट्वा सरिदपि स्वाभरणक्षोभं व्यधादिवेत्युत्प्रेक्षा-ध्वनिः ।' नारायणः ।

परस्पराभ्युक्षणतत्पराणां तासां नृपो मज्जनरागदर्शी ।

नौसंश्रयः पार्श्वगतां किरातीमुपात्तवालव्यजनां बभाषे ॥१७॥

नौसंश्रयः - படகிலே இருந்தவனும், परस्पर-अभ्युक्षण-तत्पराणाम् - ஒருவர் மேல் ஒருவர் நீரைத் தெளிப்பதில் ஆவலுடைய, तासाम् - அப்பெண்களுக்கு, मज्जन राग दर्शी- நீர் விளையாட்டிலுள்ள விருப்பத்தைக் கண்டவனுமான, नृपः -அரசன், पार्श्वगताम् -அருகிலிருந்தவளும், उपात्त-वाल-व्यजनाम्-சாமரத்தைக் கையிலேந்தியவளுமான, किरातीम् - வேடுவப் பெண்ணை (நோக்கி), बभाषे - கூறினான்.

(க-து) பெண்களுக்கு நீர் விளையாட்டிலுள்ள ஆசையைக் கண்ட குசன் அவர்கள் விளையாடுவதைக் காண விருப்புடையவனாய்ப் படகிலே அமர்ந்து, தன்னருகில் நின்று சாமரம் வீசிக் கொண்டிருந்த வேடுவப் பெண்ணிடம் இவ்வாறு கூறினான்.

किराती - ராஜ க்ருஹத்தில் சாமரம் வீசுவதற்காக நியமிக்கப்பட்டவள்.

पश्यावरोधैः शतशो मदीयैर्विगाह्यमानो गलिताङ्गरागैः ।

सन्ध्योदयः साभ्र इवैष वर्णं पुष्यत्यनेकं सरयूप्रवाहः ॥ १८ ॥

गलित-अङ्गरागैः -நழுவிய உடற் பூச்சு உடைய, शतशः- நூற்றுக்கணக்கான, मदीयैः - எனது, अवरोधैः - அந்தப்புர

ஸ்திரீகளால், विगाह्यमानः - கலக்கப்படுகின்ற, एषः - இந்த, सरयू प्रवाहः - ஸரயூ பிரவாஹம், साभ्रः - மேகங்களுடன் கூடிய, सन्ध्योदयः इव - ஸந்தியா காலத்தோற்றம்போல், अनेकम् - பல, वर्णम् - வர்ணத்தை, पुष्यति - அடைகின்றது, पश्य - பார்.

(க-து) நூற்றுக்கணக்கான அந்தப்புர ஸ்திரீகளால் கலக்கப்பட்ட ஸரயூஜலம், அவர்களுடைய உடலில் பூசப்பட்ட வாசனைத்ரவ்யதுடன் கலந்து, மேகங்களுடன் கூடிய ஸந்த்யா காலம் போல் பல நிறமுடையதாகக் காணப்படுகிறது.

பெண்கள் பூசியுள்ள உடற் பூச்சும் பலநிறமுடையதால் ஜலமும் பலநிறமுடையதாயிற்று. மேகங்களின் நிறத்திற்கேற்ப ஸந்தியாகாலமும் பலநிறமுடையதாக இருக்கும். शतशः - என்றது அதிசயோக்தி. पुष्यति-' காட்டுகின்றது ' என்றும் கூறுவர்.

विलुप्तमन्तःपुरसुन्दरीणां यदञ्जनं नौलुलिताभिरद्भिः ।

तद्बध्नतीभिर्मदरागशोभां विलोचनेषु प्रतिमुक्तमासाम् ॥५९॥

नौलुलिताभिः - படகுகளால் அலைக்கப்பட்ட, अद्भिः - ஜலத்தினால, अन्तःपुर-सुन्दरीणाम् - அந்தப்புர ஸ்திரீகளின், यत्-अञ्जनम् - எந்த (கண்) மையானது, विलुप्तम् - அழிக்கப்பட்டதோ, तत् - அது, विलोचनेषु - கண்களில், मदरागशोभाम् - களிப்பினாலே உண்டாகிற செந்நிற அழகை, बध्नतीभिः - உண்டாக்குகின்ற, अद्भिः - நீரினாலே, आसाम् - இந்த ஸ்திரீகளுக்கு, प्रतिमुक्तम् - திருப்பித்தரப்பட்டது.

(க-து) 'ஸரயூநதியின் ஜலம், பெண்களின் கண்களிலிருந்து மையை அழித்து விட்டபோதிலும் கண்களுக்கு செந்நிற அழகைக் கொடுத்து, அதன்மூலம மையிக்குச் சரியான பதில் பொருளைத்தந்ததுபோலும் இருந்தது.

நீரில் அதிகநேரம் விளையாடினால் கண்கள் சிவப்பது இயற்கை. ' மையும் கடைக்கண்களில் செந்நிறமுண்டாக்

குவது; மை செய்யும் காரியத்தையே ஜலமும் செய்ததால் ஜலம மையைத் தந்ததாகக் கூறினர்' என்பர் அருணகிரி.

" मदरागशोभाम् - अञ्जनस्यापि कार्यं भूताम् कुर्वन्तीभिरद्भिः तदेवाञ्जनं प्रतिमुक्तमर्पितमासीदित्युत्प्रेक्षा ।" अरुणगिरिः ।

एता गुरुश्रोणिपयोधरत्वादात्मानमुद्वोढुमशक्नुवत्यः ।

गाढाङ्गदैर्बाहुभिरप्सु बालाः क्लेशोत्तरं रागवशात्प्लवन्ते ॥६०॥

**गुरु-श्रोणि पयोधरत्वात्** - பருத்த (கனமான) இடையையும் ஸ்தனங்களையுமுடையதாயிருப்பதால், **आत्मानम्** - (தமது) தேஹத்தை, **उद्वोढुम्** - தாங்க, **अशक्नुवत्यः** - திறமையற்றவாகளாய், **एताः-बालाः** - இந்தப் பெண்கள், **गाढ-अङ्गदैः** - இறுகிய தோள்வளையுடைய, **बाहुभिः** - கைகளால் (கைகளின் உதவியால்), **क्लेशोत्तरम्** - மிகக்கஷ்டத்துடன், **रागवशात्** - (நீர் விளையாட்டில்) ஆசை காரணமாக, **अप्सु** - நீரில், **प्लवन्ते** - நீந்துகின்றனர்.

(க-து) 'இப்பெண்கள், இடையும் ஸ்தனங்களும் பருத்து இருப்பதால் தம தேஹத்தைக் தாங்கத் திறமையின்றி, தண்ணீர் பட்டதால் புதைந்த தோளவளையையுடைய கைகளால் சிரமத்துடன் நீந்துகின்றனர்.

**अंगदम्** - முழங்கைக்குமேலே அணியப்படும் ஒருவகை ஆபரணம; நீர்பட்டதனுலோ, மேலே உயர்த்தப்பட்டதாலோ அவ்வாபரணம தோளில் புதைந்திருந்தது. **प्लवन्ते** - மிதக்கின்றனர் என்றும கூறலாம்.

अमी शिरीषप्रसवावतंसाः प्रभ्रंशिनो वारिविहारिणीनाम् ।

पारिप्लवाः स्रोतसि निम्नगायाः शैवाललोलांश्छलयन्ति मीनान् ॥

**प्रभ्रंशिनः** - நழுவுகின்றனவும், **निम्नगायाः** - ஆற்றின், **स्रोतसि** - வெள்ளத்தில், **पारिप्लवाः** - அசைகின்றனவுமான, **अमी** - இந்த, **वारिविहारिणीनां** - நீரில் விளையாடுகின்ற

ஸ்திரீகளின், शिरीषप्रसव-अवतंसाः - காதுகளில் அணியாக இருந்த வாகைப் புஷ்பங்கள், शैवाललोलान् -வேலம்பாசியில் விருப்புள்ள, मीनान् -மீன்களை, छलयन्ति-ஏமாற்றுகின்றன.

(க-து) ஸ்திரீகளது காதுகளின் மேலிருந்த சிரீஷபுஷ்பங்கள் நீரில் விழுந்து அசைகின்றபொழுது, வேலம்பாசியின் கொழுந்தைத் தின்பதில் விருப்புள்ள மீன்கள் அவற்றிடம் வந்து ஏமாற்றமடைகின்றன.

வாகைப்பூ நீரில் மிதக்கும்பொழுது வேலம்பாசிபோல் இருக்குமாகையால் புஷ்பங்களைப்பாசியாக எண்ணி அவற்றைச் சாப்பிட மீன்கள் அருகில் வருகின்றன. கடித்தபின் பாசியில்லை என்பதை உணர்கின்றன. வேலம்பாசியை மீன் உண்ணும்என்பர் 'अमी' -இப்பதம், शिरीष ......अवतंसाः என்பதுடன் சேர்க்கப்படவேண்டும்.

आसां जलास्फालनतत्पराणां मुक्ताफलस्पर्धिषु शीकरेषु ।
पयोधरोत्सर्पिषु शीर्यमाणः संलक्ष्यते न च्छिदुरोऽपि हारः ॥

जल - आस्फालन - तत्पराणाम् - ஜலத்தை அடிப்பதிலே ஊக்கம்கொண்ட, आसाम् - இந்த ஸ்திரீகளின், पयोधर - उत्सर्पिषु-ஸ்தனங்களின்மேல் பரவி இருப்பனவும், मुक्ताफल-स्पर्धिषु- முதிர்ந்த முத்துக்கள் போன்றனவுமான, शीकरेषु- ஜலத்துளிகளின் நடுவே, हारः -முத்துமாலையானது, छिदुरः अपि - இற்றதாயினும், शीर्यमाणः -சிதறியதாக, न संलक्ष्यते - உணரப்படவில்லை.

(க-து) பெண்கள் தமது உள்ளங்கையால் தண்ணீரை அடித்து விளையாடிய பொழுது எழுந்த நீர்த்துளிகள் அவர்களது மார்பில் எங்கும் பரவி இருந்தன. 'பெண்களணிந்திருந்த முத்து மாலை விளையாட்டின் வேகத்தினால் இற்றதாயினும் நீர்த்துளிகள் முத்துக்கள்போல் இருந்து மாலை இருக்கின்றது என்ற எண்ணத்தை உண்டாக்கின. மாலை நழுவியதை அப்பெண்கள் உணரமுடியாதபடி செய்தன அத்துளிகள்.

ஸாதாரண ஜலத் துளிகளும், தாங்கள் பெற்றிருந்த ஸ்தானம் காரணமாக முத்துக்கள் போல் மிளிர்ந்தன; இதனின்றும் ஸ்திரீகளின் வர்ண ஸௌந்தர்யம் புலனாகும்.

आवर्तशोभा नतनाभिकान्तेर्भङ्गा भ्रुवां द्वन्द्वचराः स्तनानाम् ।
जातानि रूपावयवोपमानान्यदूरवर्तीनि विलासिनीनाम् ॥६३॥

**विलासिनीनाम्** - அழகான ஸ்திரீகளது, **रूपावयव-उपमानानि** - சரீர அவயவங்களின் உபமானப் பொருள்கள், **अदूर वर्तीनि**-(இப்பொழுது) அருகிலிருப்பனவாக, **जातानि**- ஆய்விட்டன. (அவைகள் எவை எனின்), **नत नाभि कान्तेः**- ஆழ்ந்த நாபியின் அழகிற்கு (உபமானமான), **आवर्त शोभा**- நீர்ச் சுழலின் அழகும், **भ्रुवाम्** - புருவங்களுக்கு (உபமான மான), **भङ्गाः** - சிற்றலைகளும, **स्तनानाम्** - ஸ்தனங்களுக்கு (உபமானமான), **द्वन्द्वचराः** - இணைந்து சஞ்சரிக்கின்ற சக்ரவாகப் பறவைகளும் ஆம்

(க-து) ஸ்திரீகளின் அவயவங்களுக்கு உபமானமாகக்கூறப் படுகின்ற பொருள்கள் எல்லாம் முனபு தொலைவிலே இருந்தன. இப்பொழுது, அவர்கள் ஜலத்தில் இறங்கிய காலததில், அவவுப மானப் பொருளகளையாவும ஸமீபத்திலேயே இருந்தன. அழகிய, ஆழ்ந்த, வட்டமான நாபிக்கு உபமானப் பொருள நீர்ச்சுழல். அது ஸரயூஜலத்தில் ஸ்திரீயின் நாபிக்கு அருகிலே இருந்தது. அவ் வாறே புருவததிற்கு உபமானமான சிற்றலைகளும், நெருங்கி யுள்ள ஸ்தனங்களுக்கு உபமானமாகக் கூறப்படும சக்ரவாகப் பறவைகளும் அந்தந்த அவயவங்களுக்கு அருகிலே காணப் பட்டன.

तीरस्थलीबर्हिभिरुत्कलापैः प्रस्निग्धकेकैरभिनन्द्यमानम् ।
श्रोत्रेषु संमूर्च्छति रक्तमासां गीतानुगं वारिमृदङ्गवाद्यम् ॥

**उत्कलापैः** - தோகையை விரித்தனவும், **प्रस्निग्ध-केकैः** - மிக இனிய அகவுதலையுடையனவுமான, **तीर स्थली बर्हिभिः**- நதியின் கரைகளிலுள்ள மயில்களால், **अभिनन्द्यमानम्**-விரும

படுவதும், रक्तम् - காதிற்கு இனிமையானதும், गीतानुगम् - பாட்டைத் தொடர்ந்துள்ளதுமான, आसाम् - இப்பெண்களுடைய, वारि मृगङ्ग वाद्यम् - ஜலமாகிய மிருதங்க சத்தம், श्रोत्रेषु - காது முழுவதும், संमूर्च्छति - பாவுகின்றது.

(க-து) 'இப்பெண்கள் ஜலத்தைக் கையினால் அடித்துத் தாளமிட்டுக்கொண்டு பாடுகின்றனர். ஜலம் அவர்களுக்கு மிருதங்க வாத்யமாயுள்ளது. அதை அடிப்பதால் உண்டாகும் சப்தம் கேட்பதற்கு இனியதாய் அவர்கள் பாடும் இன்னிசையுடன் கலந்து நமது காதுகளிலே நிரம்புகின்றது. அம்மிருதங்க சத்தத்தை மேகத்தின் ஒலியாக எண்ணி மகிழ்ந்து கரையிலுள்ள மயில்கள் தம் தோகையை விரித்து, இனிய குரலில் அகவுகின்றன.

संदष्टवस्त्रेष्वबलानितम्बेष्विन्दुप्रकाशान्तरितोडुतुल्याः ।
अमी जलापूरितसूत्रमार्गा मौनं भजन्ते रशनाकलापाः ॥६५॥

संदष्टवस्त्रेषु - (ஈரமானதால்) ஒட்டிக்கொண்ட வஸ்த்ரமுடைய, अबला नितम्बेषु - ஸ்திரீகளின் இடைகளிலே, इन्दु प्रकाश-अन्तरित-उडु तुल्याः - சந்திரனது ஒளியினால் மறைக்கப்பட்ட நக்ஷத்ரங்களுக்கு ஒப்பானவையும், जल-आपूरित-सूत्रमार्गाः - நீர் நிரம்பிய (நூலின் மார்க்கம்) துவாரமுடையனவுமான, अमी रशना कलापाः - இந்த முத்து மேகலைகள், मौनम् - ஒலியற்ற நிலையை, भजन्ते - அடைகின்றன.

(க-து) பெண்கள் உடுத்தியுள்ள மெல்லிய வஸ்திரங்கள் நீரில் நனைந்ததால் அவர்களது இடையே ஒட்டிக்கொண்டிருக்கின்றன. அவ்வஸ்திரங்களின் மேல் அணியப்பட்ட மேகலையின் முத்துக்கள் சந்திரனது வெளிச்சத்தில் ஒளிகுன்றியுள்ள நக்ஷத்ரங்கள் போல் இருக்கின்றன. மேலும், அம்முத்துக்களின் இடையே நூல் சென்ற த்வாரம் நீர் நிரம்பியதால் மேகலைகள் ஒலியின்றி இருக்கின்றன.'

कलापाः - ஆபரணங்கள்; रशना - பெண்கள் இடையிலணியும் அணி; ஒட்டியாணம்; இங்குக் கூறப்பட்ட

அணி நூலிலே கோக்கப்பட்டு முற்றிலும் முத்துக்களாலா னது. इन्दुप्रकाश उडुकल्पाः - அதிக ஒளியுள்ள சந்திரன் முன் நக்ஷத்ரங்கள் ஒளியின்றி இருக்கும். அதுபோல் வெண்மையான ஈரவஸ்திரங்கள் மேல் உள்ள மேகலையின் முத்துக்களும் அதிகம் பிரகாசமின்றி இருந்தன.

एताः करोत्पीडितवारिधारा दर्पात्सखीभिर्वदनेषु सिक्ताः ।

वक्रेतराग्रैरलकैस्तरुण्यश्चूर्णारुणान्वारिलवान्वमन्ति ॥ ६६ ॥

दर्पात्-யௌவன மதம் காரணமாக, कर-उत्पीडित-वारि-धाराः - (தோழிகளின் மீது) கையினால் இறைக்கப்பட்ட நீர்த் தாரைகளை யுடையவர்களும், सखीभिः - அத்தோழி களால், वदनेषु-(தம்) முகங்களில், सिक्ताः-ஜலம் தெளிக்கப் பட்டவர்களுமான, एताः तरुण्यः - இந்த யுவதிகள், वक्रेतर-अग्रैः - சுருண்டிராத நுனியை யுடைய, अलकैः - முன்னுச்சி மயிர்களின் மூலம், चूर्णारुणान् - வாஸனைப் பொடிகளால் சிவந்துள்ள, वारिलवान् - ஜலத் துளிகளை, वमन्ति - சிந்து கின்றனர் (வர்ஷிக்கின்றனர்).

(க-து) இப்பெண்கள் யௌவனத்திற்கு உரியதான மதத் தினாலே ஒருவர் மேல் ஒருவர் ஜலத்தை அடித்துக் கொண்டு விளை யாடுகின்றனர். ஜலத்தைக் கையினாலடித்து மேலே தெளித்த பெண்களின் முகங்கள் மீது அவர்களது தோழிகள் பதிலுக்குத் தண்ணீரை இறைக்கின்றனர். அவ்யுவதிகளின் வளைந்திருந்த முன்னுச்சி மயிர்கள், தண்ணீர்பட்டதால் வளைந்த தன்மையை விட்டு நீண்டனவாக, அலகங்களிலிருந்த வாசனைப் பொடிகள் கரைந்ததால் சிவந்துள்ள நீர்த்துளிகளை வர்ஷிக்கின்றன.

कर-उत्पीडित वारिधाराः - தண்ணீர், கையினாலே அடித் தும், அள்ளியும் இறைக்கப்பட்டது. பீச்சாங்குழலின் உதவியாலன்று. [ சுலோகம் 70 காண்க.]

चूर्णारुणान् - வாஸனைப் பொடிகளை, முகத்தை அழகு செய்ய உபயோகிப்பது போல் அலகங்களுக்கும் உபயோ

ஒப்பர். சிவந்த பொடிகள் ஜலத்துடன் கலந்ததால் ஜலத் துளிகள் சிவந்திருந்தன. दर्पात्—वारिसेकाद्रक्षितमुखमण्डना वयम् यूयं न तथा इति दर्पात्; नारायणः ॥

उद्बन्धकेशश्च्युतपत्रलेखो विश्लेषिमुक्ताफलपत्रवेष्टः ।

मनोज्ञ एव प्रमदामुखानामम्भोविहाराकुलितोऽपि वेषः ॥६७॥

**उद्बन्ध केशः** - அவிழ்ந்த கூந்தலை உடையதும், **च्युत-पत्रलेखः** - அழிந்த வர்ண வரிகளை யுடையதும், **विश्लेषि-मुक्ताफल-पत्रवेष्टः** - தளர்ந்த முத்துத் தோடுடையதுமான, **प्रमदा मुखानाम् वेषः** - பெண்களின் முக அலங்காரம், **अंभो विहार-आकुलितः-अपि** - நீரில் விளையாடுதலால் கலைந்த தாயினும், **मनोज्ञः एव**-மனம் கவர்வதாகவே இருந்தது.

(க-து) நீரில் விளையாடும் காலத்தில் பெண்களின் அணி கலைந்திருந்தது. கூந்தலின் முடிச்சு அவிழ்ந்திருந்தது. மேனி யில் எழுதப்பட்டுள்ள மகரிகை போன்ற வர்ணவரிகள் நீர் படுவதால சிதைந்திருந்தன, காதுகளில் அணிந்திருந்த முத்துக் குண்டலம் தளர்ந்திருந்தது. இவ்வாறு பெண்களின் அலங்காரம் மனத்தைப் பரவசப் படுத்துவதாக இருந்தது.

**उद्बन्ध - केशः** - 'உயர்த்தி முடியப்பட்ட கூந்தல்' என்பர் நாராயணர். **पत्रलेखः** - மார்பிலும் தோள்களிலும் கன்னங்களிலும் பெண்கள் வரைந்து கொள்ளும் வர்ண வரிகள். 'திலகம்' என்றும் பொருளுரைப்பர்: **मुक्ताफल-पत्रवेष्टः** - முற்றிலும் முத்தினாலான பெண்களின் காதணி: தோடு: **वेषः** - அணி: **रम्याणां विकृतिरपि श्रियं तनोति** என்பதைக் காண்க.

स नौविमानादवतीर्य रेमे विलोलहारः सह ताभिरप्सु ।

स्कन्धावलम्बोद्धृतपद्मिनीकः करेणुभिर्वन्य इव द्विपेन्द्रः ॥६८॥

**सः** - அவன், **नौ विमानात्** - விமானம் போன்ற ஓடத்தினின்றும், **अवतीर्य** - இறங்கி, **विलोलहारः** - அசை

கின்ற முத்துமாலையுடையவனாய், ताभिः सह - அப்பெண்களுடன், स्कन्ध-अवलग्न-उद्धृत-पद्मिनीकः - பிடரியில் ஒட்டிக் கொண்ட தாமரைத் தண்டையுடைய, वन्यः द्विपेन्द्रः-காட்டு யானை, करेणुभिः सह-इव - பெண் யானைகளுடன் விளையாடுவது போல, अप्सु - நீரில், रेमे - விளையாடினான்.

(க-து) விமானம்போல் அழகுவாய்ந்த அப்படகினின்றும் நீரில் இறங்கி, மார்பிலுள்ள முத்துமாலை அசைந்தாட அப் பெண்களுடன் விளையாடினான் குசன். அவனது பெருந்தோற்றத்திற்குச் சேர அவனை யானையோடு உவமித்தார். அவன் கழுத்தில் புரளும் முத்துமாலைக்கு உபமானம் யானையின் பிடரியின்றும் தொங்குகின்ற தாமரைத்தண்டு. பிடிகள் பெண்களுக்கு உபமானமாய் வந்தன.

उद्धृत - பிடுங்கப்பட்ட என்பது பொருள்; पद्मिनी - என்றதற்கு விசேஷணமாக வந்தது. பதவுரையில் இதன் பொருள் தரப்படவில்லை. द्विपेन्द्रः - विशृङ्खलत्वादि व्यङ्ग्यम् ॥ अरुणगिरिः ।

ततो नृपेणानुगताः स्त्रियस्ता भ्राजिष्णुना सातिशयं विरेजुः ।
प्रागेव मुक्ता नयनाभिरामाः प्राप्येन्द्रनीलं किमुतोन्मयूखम् ॥

ततः - பிறகு, भ्राजिष्णुना - ஒளி பொருந்திய, नृपेण - அவ்வரசனுடன், अनुगताः -சேர்ந்த ताः स्त्रियः -அந்த ஸ்திரீகள், सातिशयम् - மிகவும், विरेजुः - (அழகு பெற்று) விளங்கினார்கள், प्राक् एव - (நீலக்கற்களுடன் சேருவதற்கு) முன்பே, मुक्ताः - முத்துக்கள், नयनाभिरामाः - கண்களை மகிழ்விக்கின்றன; उन्मयूखम् - மிக ஒளிவிடுகின்ற, इन्द्रनीलम्- இந்திர நீலக்கல்லை, प्राप्य -அடைந்த பின், किमुत - மிகவும் கண் கவர்கின்றன.

(க-து) அழகுள்ள அப்பெண்கள் குசனுடன் சேர்ந்து விளையாடியபொழுது, மிகஅழகு பெற்று விளங்கினர். இயற்கையில் அழகுள்ள முத்து, நீலரத்னத்துடன் சேரும்பொழுது மிக அழகுபெறுகிறதென்பது கூறவேண்டுவதன்று.

**किमुत** - மிகவும் என்பது பதப் பொருள்.

**बलवत् सुष्ठु किमुत स्वत्यतीव च निर्भरे-अमरः** -குசனை இந்திர நீலத்துடன் ஒப்பிட்டதால் அவனது நிறம் கறுப்பு என்பர் சிலர். **इन्द्र नीलोपमया तस्य पितृवर्णत्वमुक्तम् ॥ अरुणगिरिः ।**

वर्णोदकैः काञ्चनशृङ्गमुक्तैस्तमायताक्ष्यः प्रणयादसिञ्चन् ।
तथागतः सोऽतितरां बभासे सधातुनिष्यन्द इवाद्रिराजः ॥

**आयताक्ष्यः** - நீண்ட கண்களை யுடைய அப் பெண்கள், **काञ्चन शृंग मुक्तैः**-பொன்னாலான பீச்சுங் குழலினின்று வெற் றப்பட்ட, **वर्णोदकैः** - வர்ணம் கலந்த ஜலத்தினால், **प्रणयात्** - அன்பு காரணமாக, **तम्** - அவனை, **असिञ्चन्** - நனைத்தனர். **तथागतः** - அந் நிலையிலுள்ள, **सः** - அவன், **सधातुनिष्यन्दः** - தாதுப் பொருள்களின் பெருக்கை யுடைய, **अद्रिराजः इव** - சிறந்த மலை போல், **अतितराम्** - மிக்வும், **बभासे** - விளங் கினான்.

(க-து) அப்பெண்கள் பொன் மயமான பீச்சுங் குழலின் மூலம் குங்குமம் முதலான வர்ணப்பொருள் கரைந்த நீரை அவன் மேல் அடித்தனர். வர்ணநீர மேனி எங்கும் வழிந்தோட நின்ற அக்குசன், தாதுப்பொருள் கரைந்த ஜலப்பெருக்கையுடைய மலைபோல் காணப்பட்டான்.

तेनावरोधप्रमदासखेन विगाहमानेन सरिद्वरां ताम् ।
आकाशगङ्गारतिरप्सरोभिर्वृतो मरुत्वाननुयातलीलः ॥ ७१ ॥

**अवरोध-प्रमदा-सखेन** - அந்தப்புர ஸ்திரீகளுடன் கூடிய வனும், **ताम् सरिद्वराम्** - அச்சிறந்த நதியில், **विगाहमानेन** - இறங்கி யுள்ளவனுமான, **तेन** - அவனால், **आकाशगङ्गारतिः** - ஆகாச கங்கையில (விளையாடுவதிலே) ஆசையுடையவனும், **अप्सरोभिः** - அப்ஸர ஸ்திரீகளால், **वृतः** - சூழப்பட்டவனு

மான, **मरुत्वान्** - இந்திரன், **अनुयातलीलः** - அனுகரிக்கப் பட்ட செயலை யுடையவனாக, **(अभूत्)** - இருந்தான்.

(க-து) பெண்களால் சூழப்பட்டு ஸரயூநதியில் விளையாடிய அக்குசன், ஆகாசகங்கையில் அப்ஸரஸ்திரீகளுடன் நீராடிக்களிக்கின்ற இந்திரனது செயலை அனுகரிப்பவன்போல் இருந்தான்.

'**तेन मरुत्वान् अनुयातलीलः अभूत्**' என்பது இச் சுலோகத்திலுள்ள வாக்கியம். 'இந்திரன் குசனாலே அனுகரிக்கபபட்ட செயலை உடையவனாக இருந்தான்.' **प्रमदा-सखः** - 'பெண்களின் நண்பன்' என்பது பதப்பொருள்.

**लीला** - கேளிக்கை ; **लीला विलास क्रिययोः** - என்பது அமரம்.

यत्कुम्भयोनेरधिगम्य रामः कुशाय राज्येन समं दिदेश ।
तदस्य जैत्राभरणं विहर्तुरज्ञातपातं सलिले ममज्ज ॥ ७२ ॥

**यत्-आभरणम्** - எந்த ஆபரணத்தை, **रामः** - ராமர், **कुम्भयोनेः** - அகஸ்தியரிடமிருந்து, **अधिगम्य** - பெற்று, **कुशाय** - குசனுக்கு, **राज्येन-समं** - ராஜ்யத்துடன், **दिदेश** - கொடுத்தாரோ, **सलिले** - நீரிலே, **विहर्तुः** - விளையாடுகின்ற, **अस्य** - அவனது, **तत्** - அந்த, **जैत्राभरणम्** - வெற்றியளிக்கின்ற அணி, **अज्ञातपातम्** -(அதன்) வீழ்ச்சி அறியப்படாததாக, **ममज्ज** - (நீரில்) மூழ்கியது.

(க-து) ராமர் அகஸ்த்யரிடமிருந்து பெற்ற தோள்வளையை அரசுடன் குசனுக்குக் கொடுத்திருந்தார். அவ்வளை. நீரில் அவனறியாது வீழ்ந்து மறைந்தது.

அகஸ்தியரிடம் ராமர் ஆபரணம் பெற்ற வரலாறு முன்பே [ ஸ. 15. சு. 55 ] கூறப்பட்டுள்ளது.

स्नात्वा यथाकाममसौ सदारस्तीरोपकार्यां गतमात्र एव ।
दिव्येन शून्यं वलयेन बाहुमुपोढनेपथ्यविधिर्ददर्श ॥ ७३ ॥

**असौ** - அவன், **सदारः (सन्)** - மனைவியருடன் கூடிய வனாய், **यथाकामम्** - விரும்பியபடி, **स्नात्वा** - நீராடிய பின், **तीरोपकार्याम्** - கரையிலுள்ள கூடாரத்திற்கு, **गतमात्रः-एव** - சென்ற அளவிலேயே, **उपोढ नेपथ्यविधिः** - அணிதற்கான பொருள்களை அருகிலேயுடையவனாக, **दिव्येन-वलयेन-शून्यम्** - திவ்யமான வளையின்றி இருக்கின்ற, **बाहुम्-(तनतु)** தோளை, **ददर्श** - கண்டான்.

(க-து) மனைவியருடன் இஷ்டப்படி நீராடியபின் கரையிலுள்ள கூடாரத்திற்குச் சென்றவுடனேயே குசன், தன் தோளில் அச்சிறந்த ஆபரணம் இல்லாததை உணர்ந்தான்.

**उपोढनेपथ्यविधिः** - அலங்காரம் செய்து கொள்வதற்கான பொருள்கள் அவன் எதிரிலே வைக்கப்பட்டன. அவற்றைக் கண்டவுடன் தோள் வளை இல்லாமையை அறிந்து கொண்டான். **'अलङ्कारप्रसंगादलंकारभूतस्य वलयस्य स्मरणमिति भावः' नारायणः।**

जयश्रियः संवनं यतस्तदामुक्तपूर्वं गुरुणा च यस्मात्।
सेहेऽस्य न भ्रंशमतो न लोभात्स तुल्यपुष्पाभरणो हि धीरः॥

**यतः** - எக்காரணத்தினால், **तत्**-அந்த ஆபரணமானது, **जयश्रियः** - வெற்றித் திருவின், **संवननम्** - வசீகரணத்திற்குக் கருவியாக (இருந்ததோ), **यस्मात् च** - எதனால், **गुरुणा** - (அவனது) தந்தையால், **आमुक्तपूर्वम्** - முன்பு அணியப் பட்டிருந்ததோ, **अतः** - அக்காரணத்தினாலே, **अस्य भ्रंशम्** - அதன் மறைவை, **न सेहे**-அவன் ஸஹிக்கவில்லை. **लोभात् न**-பேராசையினாலன்று (அவன் ஸஹிக்காதது); **हि**-ஏனெனில், **धीरः सः** - அறிவுள்ள அவன், **तुल्य-पुष्प-आभरणः** - புஷ்பங்களையும் ஆபரணங்களையும் ஒன்றாகக் கருதுபவன்.

(க-து) அவ்வாபரணம் எங்கும் அவனுக்கு வெற்றியளித்தது; அவனது தந்தையினால் தரிக்கப்பட்டிருந்தது. இவ்விரண்டு காரணங்களாலேதான் அவன் அது காணமற் போனமை பற்றி வருத்தம் கொண்டான் அணிந்த புஷ்பம் எவ்வாறு விலக்கப் படவேண்டிய பொருளோ அவ்வாறே ஒரு தடவை அணிந்த அணியையும் விலக்கப் படவேண்டிய பொருளாகக் கருதுபவன் அவன். தரிந்த ஆபரணத்தையும் நிர்மால்யமாகக் கருதும்படி அத்தகைய செல்வம் வாய்ந்தவன். அப்பொருளின் மதிப்பைக் கருதி அன்று அவன் வருந்தியது.

ततः समाज्ञापयदाशु सर्वानानायिनस्तद्विचये नदीष्णान् ।
वन्ध्यश्रमास्ते सरयूं विगाह्य तमूचुरम्लानमुखप्रसादाः ॥ ७५ ॥

**ततः** - பிறகு, **नदीष्णान्** - நதியில் மூழ்குவதில் திறமை வாய்ந்த, **आनायिनः सर्वान्** - வலைஞர்கள் எல்லோரையும், **तद्विचये** - அதைத்தேடுவதிலே, **आशु** - சீக்ரமாக, **समाज्ञापयत्** - ஆஞ்ஜாபித்தான்; **ते** - அவர்கள், **सरयूम्** - ஸரயூ நதியில, **विगाह्य** - மூழ்கி, **वन्ध्य श्रमाः (अपि)** - பயனற்ற முயற்சியுடையவர்களாயினும், **अम्लान मुख प्रसादाः (सन्तः)**- வாடாத முகத் தெளிவையுடையவர்களாக, **तम् ऊचुः** - அவனிடம் கூறினார்.

(க-து) குசன், நதியில் மூழ்கித்தேடுவதிலே திறமை வாய்ந்த பல வலைஞர்களை அழைத்து அவ்வாபரணத்தைத் தேடும்படி கட்டளை இட்டான். அவர்களும் நன்கு தேடியபின், ஆபரணத்தைக் காணவில்லை. ஆயினும ஆபரணம் சென்ற இடத்தையும் குசனது பராக்ரமத்தையும உணாந்த அவர்கள் முகத்தெளிவுடன் குசனிடம் கூறினார்.

कृतः प्रयत्नो न च देव लब्धं मग्नं पयस्याभरणोत्तमं ते ।
नागेन लौल्यात्कुमुदेन नूनमुपात्तमन्तर्ह्रदवासिना तत् ॥७६॥

**देव**-அரசே, **प्रयत्नः**-மிகமுயற்சியானது, **कृतः**-(எங்களால்) செய்யப்பட்டது; **पयसि**-நீரில், **मग्नम्**-மூழ்கிய, **ते आभरणोत्तमम्**-உமது சிறந்த ஆபரணம், **न च लब्धम्**-கிடைக்

கப்பெறவில்லை; (किन्तु) - ஆனால், तत् - அவ்வணியானது, अन्तर्ह्रदवासिना - மடுவினுள் வசிக்கின்ற, कुमुदेन - नागेन - குமுதன் என்ற ஸர்ப்பத்தினால், लौल्यात् - ஆசையினாலே, उपात्तम् - கவரப்பட்டுள்ளது; नूनम् - இது திண்ணமானதே.

(க-து) 'அரசே, நாங்கள் மிக முயன்றும் அவ்வாபரணம் கிடைக்கப் பெறவில்லை. எனவே, ஸரயூநதியின் மடுவில் வஸிக்கின்ற குமுதன் என்ற நாகன் அதைக் கவர்ந்துள்ளான் என உறுதியாக நம்புகின்றோம்' என்று கூறினர் செம்படவர்கள்.

'रत्नप्रिया भुजङ्गा इति च प्रसिद्धम्'—नारायणः।

ततः स कृत्वा धनुराततज्यं धनुर्धरः कोपविलोहिताक्षः।
गारुत्मतं तीरगतस्तरस्वी भुजंगनाशाय समाददेऽस्त्रम् ॥७७॥

ततः - பிறகு, धनुर्धरः - வில்லைத்தாங்கியவனும், कोप-विलोपहित-अक्षः - கோபத்தினால் மிகச் சிவந்த கண்களையுடையவனும், तरस्वी - பலமுடையவனுமான, सः - அவன், तीरगतः (सन्) - (நதியின்) கரையை அடைந்தவனாக, धनुः - வில்லை, आततज्यम् - நாணேற்றப்பட்டதாக, कृत्वा - செய்து, भुजंग-नाशाय - நாகன் குமுதனை அழிப்பதற்காக, गारुत्मतम् - கருடனைத் தேவதையாகக்கொண்ட, अस्त्रम् - அஸ்த்ரத்தை, समाददे - (கையில்) எடுத்தான்.

(க-து) குசன் கூடாரத்தை விட்டு ஸரயூநதியின் கரையை அடைந்து வில்லில் நாணை ஏற்றியபின், குமுதனைக் கொல்வதற்காகக் கருடாஸ்த்ரத்தைக் கையிலே எடுத்தான்.

பாம்புகளுக்கு இயற்கையிலே பகைவன் கருடன்.

तस्मिन्ह्रदः संहितमात्र एव क्षोभात्समाविद्धतरङ्गहस्तः।
रोधांसि निघ्नन्नवपातमग्नः करीव वन्यः परुषं ररास ॥ ७८ ॥

तस्मिन् - அவ்வஸ்த்ரமானது, संहितमात्रे-एव - தொடுக்கப்பட்ட அளவிலேயே, ह्रदः - அம்மடு, क्षोभात् - கலக்கத்தினால், समाविद्ध-तरंग-हस्तः - மோதுகின்ற அலைகளாகிய

கைகளையுடையதாக, रोधांसि-கரைகளை, निघ्नन् - இடித்துக் கொண்டு,—अवपात मग्नः-படுகுழியில் விழுந்த, वन्यः करी-इव-காட்டு யானைபோல்,—परुषम् - (கர்ண) கடோரமாக, ररास-பேரொலி செய்தது.

(க-து) அந்த அஸ்திரத்தைத் தொடுத்தவுடனே அம்மடு, குழப்பமடைந்து அலைகள் கரையில் மோதி இடிக்க, பள்ளத்தில் விழுந்த காட்டு யானை கதறுவதுபோல் பயங்கரமாகப் பேரொலி செய்தது.

(1) समाविद्धतरंगहस्तः (2) रोधांसि निघ्नन् । இவ்விரண்டு சொற்களை யானைக்கும் விசேஷணமாகக் கொள்ள வேண்டும். யானையும் அலைபோன்ற தன் துதிக்கையை வீசுவதும், தான் விழுந்துள்ள குழியின் கரைகளை இடிப்பது மாகும். அந்த அஸ்த்ரம், விடப்படுவதற்கு முன்பே தனது சக்தியால் அம்மடுவைக் கலக்கியது. குமுதன் அதன் வேகத்தை உணர்ந்தான் என்பது கருத்து. अवपातः - யானையைப் பிடிப்பதற்காக வெட்டப்பட்டுள்ள குழி; இப்பள்ளம் வெளியில் தெரியாதவாறு புல் முதலியவற்றால் மறைக்கப்பட்டிருக்கும்.

तस्मात्समुद्रादिव मथ्यमानादुद्वृत्तनक्रात्सहसोन्ममज्ज ।
लक्ष्म्येव सार्धं सुरराजवृक्षः कन्यां पुरस्कृत्य भुजंगराजः ॥७९॥

उद्वृत्त-नक्रात् - கலங்கிய முதலைகளையுடைய, तस्मात् - அம்மடுவினின்றும்,—लक्ष्म्या सार्धम् - லக்ஷ்மியுடன் கூட, सुरराजवृक्षः - इव-பாரிஜாத விருக்ஷம், मथ्यमानात्-கடையப் படுகின்ற, समुद्रात् - इव-ஸமுத்ரத்தினின்றும் தோன்றியது போல்,—कन्याम् - ஒரு பெண்ணை, पुरस्कृत्य - முன்வைத்துக் கொண்டு, भुजंगराजः - ஸர்ப்பராஜன் குமுதன், सहसा-உடனே, उन्ममज्ज-வெளிவந்தான்.

(க-து) அம்ருதத்திற்காகக் கடையப்பட்ட பாற்கடலினின்றும் பாரிஜாத விருக்ஷம் லக்ஷ்மியுடன் வெளிவந்ததுபோல் குமுதன் தன் தங்கையுடன் அம்மடுவினின்றும் வெளிவந்தான்.

**उद्धृत्तनक्रात्** - என்பதை ஸமுத்ரத்திற்கும் விசேஷண மாகக் கொள்ளவேண்டும்; 'தூக்கி எறியப்பட்ட முதலே களையுடைய' என்றும் பொருள் கொள்ளலாம்; குமுதன் தன் தங்கையோடு வந்ததால் அதற்கேற்ப ஓர் உபமானத் தைக் கூறினர். பாற்கடலில் தோன்றிய பாரிஜாதத்தை லக்ஷ்மியின் ஸஹோதரனாகக் கொள்வதில் பொருத்தம் உண்டு.

विभूषणप्रत्युपहारहस्तमुपस्थितं वीक्ष्य विशांपतिस्तम् ।
सौपर्णमस्त्रं प्रतिसंजहार प्रह्वेष्वनिर्बन्धरुषो हि सन्तः ॥ ८० ॥

**विशांपतिः** - அரசன், **विभूषण - प्रत्युपहार - हस्तम्** - ஆபரணத்தைத் திருப்பியளிக்கும் கரங்களுடன், **उपस्थितम्**- வந்துள்ள, **तम्** - அவனை, **वीक्ष्य** - கண்டு, **सौपर्णम् अस्त्रम्** - கருடாஸ்த்ரத்தை, **प्रति संजहार** - திரும்பப் பெற்றான்; **सन्तः**-பெரியோர்கள், **प्रह्वेषु**-வணக்கமுடையவர்களிடத்தில், **अनिर्बन्धरुषः**-**हि**-உறுதியான கோபமுடையவர்கள் அல்லர்.

(க-து) திருப்பித்தரவேண்டிய ஆபரணத்தைக் கையிலேந்தி வந்துள்ள குமுதனைக்கண்டவுடன் குசன், கருடாஸ்த்ரத்தை விடாது நிறுத்திக்கொண்டான். சரணமடைந்தவர்களிடம் பெரியோர்களின் கோபம் நீடித்திராது.

எனவே, குசன் குமுதனிடம் கொண்ட கோபம் ஒரு நொடியே இருந்தது. வணக்கத்துடன் வருகின்ற அவனைக் கண்டதும் கோபம் மறைந்தது. **'निर्बन्धा स्थिरेति यावत्'** **नारायणः ।**

त्रैलोक्यनाथप्रभवं प्रभावात्कुशं द्विषामङ्कुशमस्त्रविद्वान् ।
मानोन्नतेनाप्यभिवन्द्य मूर्ध्ना मूर्धाभिषिक्तं कुमुदो बभाषे ॥

**अस्त्रविद्वान्** - அஸ்த்ர பலத்தை அறிந்த, **कुमुदः** - குமுதன, **त्रैलोक्य नाथ प्रभवम्** - மூவுலகிற்கும் நாதரான

ராமரது புத்திரனும், **प्रभावात्**-பௌருஷத்தினாலே, **द्विषाम्**-பகைவர்களுக்கு, **अङ्कुशम्** - அங்குசமாக இருப்பவனும், **मूर्धाभिषिक्तम्** -அரசனுமான, **कुशम्** - குசனை, **मान-उन्नतेन-अपि**-தன் மானத்தால் நிமிர்ந்துள்ள (இதுவரை வணங்காத), **मूर्ध्ना** - தலையினால், **अभिवन्द्य** - வணங்கிய பின், **बभाषे** - கூறலுற்றான்.

(க-து) குமுதன் கருடாஸ்த்ரத்தின் பலத்தை உணர்ந்தவனாதலால், தன்னைப்பற்றி உயர்வான எண்ணத்தினால் இதுவரை யாரையும் வணங்காதிருந்த தன் தலையாலே குசனை வணங்கினான்.

தெய்வாம்சமுள்ள குமுதனால் வணங்குதற்குரிய பெருமையுடையவன் குசன் என்பதைக் காட்ட வந்தன **त्रैलोक्यनाथप्रभवम्, अंकुशम्, मूर्धाभिषिक्तम्** என்ற மூன்று விசேஷணங்களும். **मूर्धाभिषिक्तः** - சிரஸிலே அபிஷேகம் செய்யப்பட்டவன் - க்ஷத்ரியன். **अंकुशम्** - தனது சக்தி காரணமாகப் பகைவர்களின் கர்வத்தை அடக்குவதிலே, திறமை வாய்ந்தவன்; அங்குசம் போன்றவன்; அங்குசம்-யானையை அடக்குவதற்காக உபயோகிக்கும் கருவி: மாவெட்டி.

अवैमि कार्यान्तरमानुषस्य विष्णोः सुताख्यामपरां तनुं त्वाम् ।
सोऽहं कथं नाम तवाचरेयमाराधनीयस्य धृतेर्विघातम् ॥८२॥

**त्वाम्** - உம்மை, **कार्यान्तर मानुषस्य** - சிறந்த ஒரு காரியத்தினால் மனுஷ்யராகப் பிறந்த, **विष्णोः** - விஷ்ணுவின், **सुताख्याम्** - புத்திரன் என்ற பெயரையுடைய, **अपराम्** - மற்றொரு, **तनुम्** - சரீரமாக, **अवैमि** - அறிகின்றேன்; **सः**- அத்தகைய, (இதை அறிந்த), **अहम्** - நான், **आराधनीयस्य**- பூஜிக்கத்தக்கவரான, **तव** - உமது, **धृतेः** - பிரியத்திற்கு, **विघातम्**-இடையூற்றை, **कथं नाम**-எவ்வாறுதான், **आचरेयम्?** செய்வேன்?

(க-து) 'அரசே, ஒரு பயனைக்கருதி மனித வடிவத்தில் தோன்றிய மஹாவிஷ்ணுவின் மற்றொரு சரீரமாகத் தங்களைக் கருதுகின்றேன். எவ்வகையிலும் எனது மரியாதைக்குரியவரான தங்களுக்குப் பிரியமில்லாததை நான் செய்வேனா?

'தந்தையே மகன்' என்ற கருத்துக்கொண்ட 'आत्मा वै पुत्रनामासि' என்ற வேதவாக்குப்படி குசனை மஹாவிஷ்ணுவாகவே கருதினான் குமுதன்.

कार्यान्तर: இங்குள்ள अन्तर என்ற சொல்லுக்கு, 'பயன்' என்ற பொருளை மல்லிநாதர் கூறுகிறார். कार्यान्तरात् कार्यविशेषात् हेतोः என்பர் நாராயணர். இங்குக் கூறப்பட்ட காரியம், ராவண வதம்.

करामिघातोत्थितकन्दुकेयमालोक्य बालातिकुतूहलेन ।
ह्रदात्पतज्ज्योतिरिवान्तरिक्षादादत्त जैत्राभरणं त्वदीयम् ॥८३॥

कर - अभिघात - उत्थित - कन्दुका - கையினலடிப்பதாலே மேலே எழுந்த பந்தையுடைய, इयम् बाला - இப்பெண், अन्तरिक्षात् - ஆகாயத்திலிருந்து, ज्योतिः-इव - நக்ஷத்திரம் (விழுவது) போல், ह्रदात् - மடுவிலிருந்து, पतत् - கீழே விழுகின்ற, त्वदीयम् - உம்முடைய, जैत्राभरणम् - வெற்றி யணியை, आलोक्य - கண்டு, अतिकुतूहलेन - மிக ஆவலினால், आदत्त - எடுத்தாள்.

(க-து) 'தான் அடித்த பந்து மேலே எழுவதை நோக்கியபொழுது இப்பெண் மடுவினின்றும் கீழேவிழுகின்ற இவ்வாபரணத்தைக் கண்டு ஆவலினால் எடுத்தாள்.

तदेतदाजानुविलम्बिना ते ज्याघातरेखाकिणलाञ्छनेन ।
भुजेन रक्षापरिघेण भूमेरुपैतु योगं पुनरंसलेन ॥ ८४ ॥

तत् - एतत् - அத்தகைய இவ்வணியானது, आजानुविलम्बिना - முழந்தாள்வரை நீண்டதும், ज्याघातरेखाकिणलाञ्छनेन - நாண் அடித்தலால், ரேகை வடிவிலுள்ள தழும்பை

அடையாளமாக உடையதும், भूमेः-பூமியை, रक्षापरिघेण- ரக்ஷிப்பதற்கான தாழ்போல் இருப்பதும், अंसलेन-பருத்துள் ளதுமான, ते भुजेन-உமது புஜத்துடன், पुनः योगम् - மறுபடி யும் சேர்க்கையை, उपैतु - அடையட்டும்.

(க-து) 'இவ்வாபரணம் மறுபடியும் தங்கள் புஜத்தை அலங்கரிப்பதாக.

கை முழந்தாள் வரை நீண்டிருப்பதாகக் கவிகள் வர்ணிப்பர். க்ஷத்ரியர்களின் கை, நாண் அடிகளால் தழும்பேறியிருக்கும்.

इमां स्वसारं च यवीयसीं मे कुमुद्वतीं नार्हसि नानुमन्तुम् ।
आत्मापराधं नुदतीं चिराय शुश्रूषया पार्थिव पादयोस्ते ॥८५॥

(हे) पार्थिव-அரசே, ते-உமது, पादयोः - பாதங்களில், चिराय - வெகுகாலம், शुश्रूषया - பணிவிடை செய்வதால், आत्मापराधम् - தனது குற்றத்தை, नुदतीम् - போக்கவிரும்பு கின்றவளும், मे - எனது, यवीयसीम् - இளைய, स्वसारम्- ஸஹோதரியுமான, इमाम् कुमुद्वतीम् - இக்குமுத்வதியை अनुमन्तुम् - அனுமதிக்க, नार्हसि - इति - न - தகுந்தவராகவே யுள்ளீர்.

(க-து) 'ஆபரணமெடுத்தல் என்ற குற்றத்தை, உமது பாதஙகளிலே வெகுகாலம் பணிவிடை செய்து போக்க விரும்பு கின்றாள். இவள் எனது சஹோதரி; குமுதவதி என்ற பெயரு டையவள். பணிவிடை செய்யத் தாங்கள் அனுமதிதர வேண்டும்.

இவளை மணந்துகொள்ளவேண்டும என்பது கருத்து. यवीयसीं-'மிக யௌவனம வாய்ந்தவளுமான' என உரைப் பர் நாராயணர். 'अतिशयेन युवतिः - अनेन वयोरूपत्वमुक्तम्' मे स्वसारम् - अभिजनोक्तिः । न अर्हसि न-'தகுந்தவரில்லை என் பது இல்லை' என்பது பதபொருள். 'இரண்டு எதிர் மறைப்பதங்கள், கூறவேண்டியதை வலியுறுத்துகின்றன'

**द्वौ नञौ प्रकृतमर्थं द्रढयतः**' என்பர். ஆதலால், 'அனுமதிக்கவே வேண்டும்' என்பது கருத்து.

इत्युचिवानुपहृताभरणः क्षितीशं
श्लाघ्यो भवान् स्वजन इत्यनुभाषितारम् ।
संयोजयां विधिवदास समेतबन्धुः
कन्यामयेन कुमुदः कुलभूषणेन ॥ ८६ ॥

**इति**-இவ்வாறு, **ऊचिवान्** - கூறியவனும், **उपहृताभरणः**-ஆபரணத்தை அளித்தவனுமான, **कुमुदः**-குமுதன், '**भवान्**-நீ, **श्लाघ्यः** சிறந்த, **स्वजनः**-உறவினனே' **इति**-என, **अनुभाषितारम्** - பின்தொடர்ந்து பேசிய, **क्षितीशम्** - அரசனை, **समेतबन्धुः (सन्)** தன் உறவினருடன் கூடியவனாக, **कन्यामयेन**-பெண் வடிவத்திலேயுள்ள, **कुलभूषणेन**-தனது குல அணியுடன், **विधिवत्** - சாஸ்திரப்படி, **संयोजयामास** - சேர்த்து வைத்தான்.

(க-து) குசன், 'நீ எனக்குச்சிறந்த உறவினன்தான்' எனக் கூறி குமுதன் கூறியதை ஆமோதித்தான். பின் குமுதன், உறவினர்களுடன் வந்து, தன் குலத்திற்கு அணியாக உள்ள குமுதவல்லியைக் குசனுக்கு மணம் செய்வித்தான்.

ஓர் ஆபரணத்தைத் தரவந்த குமுதன் தன் குல ஆபரணத்தையும் தந்தான் என நயம்படக் கூறினார் கவி. **कुमुदः, क्षितीशम् कुलभूषणेन संयोजयामास** என்பது வாக்யம்.

तस्याः स्पृष्टे मनुजपतिना साहचर्याय हस्ते
माङ्गल्योर्णावलयिनि पुरः पावकस्योच्छिखस्य ।
दिव्यस्तूर्यध्वनिरुदचरद्व्यश्नुवानो दिगन्तान्
गन्धोदग्रं तदनु ववृषुः पुष्पमाश्चर्यमेघाः ॥ ८७ ॥

**मनुजपतिना**-அரசன் குசனாலே, **साहचर्याय**-(தனனுடன்) தர்மங்களை அனுஷ்டிப்பதற்காக, **माङ्गल्य - ऊर्णा -वलयिनि**-

மங்களகரமான நூலை வளையலாகக் கொண்டுள்ள, तस्याः- हस्ते - அவளது கை, उज्ज्वलस्य - ஜ்வாலையுடன் கூடிய, पावकस्य- அக்னியின், पुरः-முன், स्पृष्टे ((सति)-பிடிக்கப்பட்ட பொழுது, दिगन्तान् - திசைகளின் எல்லைகளை, व्यश्नुवानः - வியாபிக்கின்ற, दिव्यः-தேவருலகின், तूर्यध्वनिः - வாத்ய கோஷம், उदचरत्-ஒலித்தது; तदनु-அதன்பின், आश्चर्यमेघाः- ஆச்சர்யமான மேகங்கள், गन्ध-उदग्रम्-வாசனை மிகுந்த, पुष्पम् - புஷ்பங்களை ववृषुः-வர்ஷித்தன.

(க-து) குசன் மங்கள நூலணிந்த குமுத்வதியின் கரத்தை அக்னி ஸாக்ஷியாகப் பற்றிய அளவில் தேவதுந்துபி முழங்கியது. மேகங்கள் புஷ்பங்களை வர்ஷித்தன.

मनुजपति-மனிதர்களின் தலைவன்; அரசன்; ऊर्णा- ஆடு முதலியவற்றின் ரோமம்; இங்கு அவற்றாலான நூலைக் குறிக்கது; இந்நூலில மஞ்சள் தடவிப் பெண்ணின் கையில் அணிவிப்பா. पुष्पम् - சாதி ஒருமை. புஷ்பங்களை என்பது பொருள்.

'अत्र पूर्वार्धे विशेषणैः पाणिग्रहणस्याविकलत्वं सन्तानप्रवृत्ति-हेतुभूतत्वं चोक्तम्। सन्तानप्रवृत्तिश्च भाविनीति दिव्यतूर्यपुष्प-वर्षाभ्यां सूच्यते'—अरुणगिरिः

इत्थं नागस्त्रिभुवनगुरोरौरसं मैथिलेयं

लब्ध्वा बन्धुं तमपि च कुशः पञ्चमं तक्षकस्य।

एकः शङ्कां पितृवधरिपोरत्यजद्वैनतेया-

च्छान्तव्यालामवनिमपरः पौरकान्तः शशास ॥ ८८ ॥

इत्थम्-இவ்வாறு, नागः-நாகன் குமுதன், त्रिभुवनगुरोः- மூவுலகிற்கும நாதரான ராமருடைய, औरसम्-புத்திரனை, मैथिलेयम् - குசனை, बन्धुम् - உறவினனாக, लब्ध्वा - பெற்றும்,

कुशः अपि च - குசன், तक्षकस्य-தக்ஷகனுக்கு, पञ्चमम् - ஐந்தாவது புத்ரனை, तम्-அவனை, (बन्धुम् लब्ध्वा) உறவினனாகப்பெற்றும், (அவ்விருவரில்), एकः-ஒருவன் (குமுதன்) पितृवधरिपोः-தந்தையின் வதத்தினால் பகைவனை, वैनतेयात्-கருடனிடமிருந்து, शङ्काम्-பயத்தை, अत्यजत्-விட்டொழித்தான்; अपरः-மற்றவனும் (குசனும்), शान्त-व्यालाम्-அடங்கிய ஸர்ப்பங்களையுடைய, अवनिम् - பூமியை, पौरकान्तः - ஜனங்களின் அன்பனாக இருந்து, शशास-ஆண்டான்.

(க-து) குமுதன் மஹாவிஷ்ணுவின் புத்ரனான குசனை உறவினனாகப் பெற்றதால் கருட பயமின்றி இருந்தான். நாகராஜனான குமுதனை உறவினனாகப் பெற்றதால் குசனது நாட்டில் ஸர்ப்ப பயமில்லாதிருந்தது எனவே, குசன் ஜனங்களின் அன்பைப்பெற்று ராஜ்யம் ஆண்டு வந்தான்.

तक्षकस्य पञ्चमम्-தக்ஷகனது போனது போன் என்பது சிலரது உரை. पितृवधरिपोः-கருடனுக்கும் குமுதனுக்கும் உள்ள பகையின் காரணம் இதனால் குறிக்கப்பட்டது. ஆயினும், இங்குக் கூறப்படும் வரலாறு எது என்பது தெளிவாக இல்லை. 'गरुडपितरं काश्यपं दष्टवान् तक्षकः इति प्रसिद्धमिति दाक्षिणावर्तः' என்பார் அருணகிரி. शान्तव्यालम् - குமுதனது ஆணையால் ஸர்ப்பங்கள் குசனது ராஜ்யத்தில் எவரையும் கடிக்காது அடங்கியிருந்தன.

இச்சுலோகத்திலுள்ள வாக்ய அமைப்பைப்பற்றி அறிய ஸர்க்கம் 8 சுலோகம் 28, குறிப்பைக் காண்க.

इति महाकवि श्रीकालिदासकृतौ

रघुवंशमहाकाव्ये षोडशः सर्गः समाप्तः ॥

---

|| श्रीः ||

# || रघुवंशः ||

## रघुवंशे सप्तदशः सर्गः

अतिथिं नाम काकुत्स्थात् पुत्रं प्राप कुमुद्वती ।
पश्चिमाद्यामिनीयामात् प्रसादमिव चेतना ॥ १ ॥

**चेतना** - புத்தியானது. **पश्चिमात्** - கடைசி, **यामिनी-यामात्** - இரவின் ஜாமத்திலிருந்து, **प्रसादम्-इव** - தெளிவைப் பெறுவதுபோல், **कुमुद्वती** - குமுத்வதி, **काकुत्स्थात्** - ககுத்ஸ்தவம்சத் தோன்றலான குசனிடமிருந்து, **अतिथिं नाम** - அதிதி எனப் புகழ்பெற்ற, **पुत्रम्** - மகனை, **प्राप** - பெற்றாள்.

(க-து) இரவின் கடைசி ஜாமத்தில் மனிதர்களின் புத்தி தெளிவைப்பெறும். அதுபோல் குமுத்வதி குசனிடமிருந்து அதிதி என்ற மகனைப் பெற்றாள்.

இரவின் கடைசியாமம் குசனுக்கும், புத்தி குமுத்வதிக்கும், தெளிவு அதிதிக்கும் உவமையாயின. '**पुत्रस्यापि पुरुषार्थ साधकत्वं वर्णयिष्यमाणमभिप्रेत्य चेतनाप्रसादः उपमानीकृतः' अरुणगिरिः ।**

இரவின் கடைசி ஜாமத்தில் புத்தி, தெளிவுடனும் ஊக்கத்துடனும் இருக்கும் என்பதை மாக கவியும் கூறுகின்றார். '**अपररात्रप्राप्तबुद्धिप्रसादाः कवय इव महीपाश्चिन्तयन्त्यर्थजातम्' माघः** [ஸ. 11-ச. 6]

தர்மத்தை ஆங்காங்கு நிரூபித்த கவி, அர்த்த சாஸ்திரப் பொருளை இச் சர்க்கத்திலே வர்ணிக்கின்றார். பத்

தொன்பதாவது ஸர்க்கம் காமத்தை வர்ணிக்க உபயோகிக்கப்பட்டுள்ளது.

स पितुः पितृमान् वंशं मातुश्चानुपमद्युतिः ।
अपुनात् सवितेवोभौ मार्गावुत्तरदक्षिणौ ॥ २ ॥

**अनुपमद्युतिः** - ஒப்பற்ற ஒளியுடைய, **सविता** - சூரியன் **उत्तर-दक्षिणौ** - வடக்கு, தெற்கு, (என்ற), **उभौ** - இரண்டு, **मार्गौ-इव** - வழிகளையும் (தூயதாக்குவது) போல, **पितृमान्** - சிறந்த தந்தையுடையவனும், **अनुपमद्युतिः** - ஒப்பற்ற ஒளியுடையவனுமான, **सः**- அவன் **पितुः**-தந்தையினுடையவும், **मातुः च** - தாயினுடையவுமான, **वंशम्** - (இரு வம்சத்தையும,—**अपुनात्** - தூயதாகச் செய்தான்.

(க-து), சூரியன் ஒருவனே உத்தராயணம் தக்ஷிணாயனம் என்ற இரு மார்க்கங்களையும் தூயதாக்குவதுபோல், தந்தையால் நன்கு பயிற்றுவிக்கப்பட்ட அதிதி. தாய் தந்தையரின் குலங்களைத் தனது நன்னடக்கையால் தூயதாக்கினான்.

அதிதி இயற்கையிலே நற்குணம் பெற்றிருந்தான் என்பதை **पितृमान्-अनुपमद्युतिः** என்ற விசேஷணங்கள் காட்டின.

तमादौ कुलविद्यानामर्थमर्थविदां वरः ।
पश्चात्पार्थिवकन्यानां पाणिमग्राहयत्पिता ॥ ३ ॥

**अर्थविदां-वरः**-பொருளை அறிந்தவர்களில் சிறந்தவனை, **पिता** - (அவனது) தந்தை குசன், **तम्** - அவனை, **आदौ** - முதலில், **कुल विद्यानाम्** - குல வித்தைகளின், **अर्थम्** - பொருளை, **अग्राहयत्** - கற்கச் செய்தான்; **पश्चात्** - பிறகு, **पार्थिवकन्यानाम्** - அரசகுமாரிகளின், **पाणिम् अग्राहयत्** - கையைப் பிடிக்கச் செய்தான்.

(க-து) முதலிலே க்ஷத்ரியர்களின் குலவித்யையைக் கற்கச் செய்த பின் குசன் தன் மகனுக்கு மணம செய்வித்தான்.

குலவித்யை என்றது க்ஷத்ரியர்கள் அவச்யம் கற்க வேண்டிய வித்யையை; அவை **आन्वीक्षिकी** - தர்க்கம், **त्रयी** - வேதங்கள், **वार्ता** - கிருஷி சாஸ்திரம், **दण्डनीतिः**- அர்த்த சாஸ்திரம் முதலியன. இச்சுலோகத்தில் படிப்பினுலேற்பட்ட நலன் கூறப்பட்டது.

जात्यस्तेनाभिजातेन शूरः शौर्यवता कुशः

अमन्यतैकमात्मानमनेकं वशिना वशी ॥ ४ ॥

**जात्यः** - நற்குடியில் பிறந்தவனும், **शूरः** - சூரனும், **वशी-कुशः** -புலனடக்கமுடையவனுமான குசன், **अभिजातेन**, நல்ல வம்சத்தில் தோன்றியவனும், **शौर्यवता** - சௌர்ய முடையவனும், **वशिना** - புலனடக்க முடையவனுமான, **तेन** - அம் மகனால், **एकम्** - ஒருவனாகிய, **आत्मानम्** - தன்னை **अनेकम्** - இருவனாக, **अमन्यत** - எண்ணினான்.

(க-து) நற்குடியில் பிறந்தவனும் சூரனும் இந்திரியங்களை வென்றவனுமான குசன் தன்னைப்போலவே தன் மகனும் இருந்ததால் தான் ஒருவனே இருவனாய் இருப்பதாகக் கருதினான். மகன் வேறொருவன் அல்லன்; தனது மற்றொரு வடிவமே அவன் எனக் குசன் எண்ணினான் என்பது கருத்து.

இச் சுலோகத்திலே அதிதி இளவரசனாவதற்கு வேண்டிய தகுதியெல்லாம் பெற்றிருந்தான் என்பது கூறப்பட்டது.

स कुलोचितमिन्द्रस्य साहायकमुपेयिवान् ।

जघान समरे दैत्यं दुर्जयं तेन चावधि ॥ ५ ॥

**सः** - அக் குசன், **कुलोचितम्** - (தன்) குலத்திற்குப் பழக்கமான, **इन्द्रस्य साहायकम्** - இந்திரனுக்கு உதவும்

தன்மையை, **उपेयिवान् (सन्)** - அடைந்தவனாக, **समरे** - யுத்தத்தில், **दुर्जयम् दैत्यम्** - துர்ஜயன் என்ற அஸுரனை, **जघान** - கொன்றான்; **तेन** - அவனால், **अवधि च** - கொல்லப் பட்டான்.

(க-து) இந்திரனுக்கு உதவி புரிதல் இக்ஷ்வாகு குலத்திற்குப் பழக்கமானதொன்று. எனவே குசனும் இந்திரனுக்கு உதவி செய்பவனாகி, யுத்தத்தில் துர்ஜயன் என்ற அஸுரனைக் கொன்றான். தானும் அவனால் கொல்லப்பட்டான்.

ஒரே காலத்தில் குசனும் துர்ஜயனும் ஒருவரை ஒருவர் கொன்று கொண்டனர். இதனின்றும் மூன்று சுலோகங்களிலே குசனது வரலாறு கூறி முடிக்கப்படுகின்றது.

तं स्वसा नागराजस्य कुमुदस्य कुमुद्वती ।
अन्वगात्कुमुदानन्दं शशाङ्कमिव कौमुदी ॥ ६ ॥

**कुमुदानन्दम्** - அல்லி மலர்களுக்கு ஆனந்தமளிப்பவனை, **शशाङ्कम्** - சந்திரனை, **कौमुदी-इव** - நிலவு (பின் தொடர்வது) போல், **नागराजस्य** - நாகங்களின் அரசனான, **कुमुदस्य** - குமுதனுடைய, **स्वसा कुमुद्वती** - தங்கை குமுத்வதி, **कुमुद-आनन्दम्** - பூமியிலுள்ள ஜனங்களின் மகிழ்ச்சியையே தனது ஆனந்தமாகக் கொண்ட, **तम्** - அக்குசனை, **अन्वगात्** - பின் தொடர்ந்தாள்.

(க-து) அல்லிக்கு மகிழ்ச்சியை விளைவிக்கும் சந்திரனுடன் நிலவும் மறைகின்றது. அதுபோல், குசன் இறக்கவும் அவனுடன் குமுத்வதி அனுமரணம் செய்தாள்.

நிலவைச் சந்திரனது மனைவியாகக்கூறுவர். **कुमुदानन्दं** என்பதைக் குசனுக்கும் விசேஷணமாகக் கொள்ள வேண்டும், '**कु** - பூமியின், **मुद्** - ஆனந்தத்தை, **आनन्दं** - தனது மகிழ்ச்சியாகக் கொண்ட' என்பது பதப்பொருள்.

तयोर्दिवस्पतेरासीदेकः सिंहासनार्धभाक् ।
द्वितीयापि सखी शच्याः पारिजातांशभागिनी ॥ ७ ॥

**तयोः** - குசன் குமுத்வதி இவ்விருவரில், **एकः** - குசன்; **दिवस्पतेः** - இந்திரனுடைய, **सिंहासन-अर्धभाक्** - ஸிம்மாஸனத்தில் ஒரு பாகத்தை அடைபவனாக (அமர்பவனாக), **आसीत्** - ஆனான்; **द्वितीया अपि** - குமுத்வதியும், **शच्याः** - இந்திராணியினது, **पारिजातांश भागिनी** - பாரிஜாத மலர்களில் பங்கு பெறுகின்ற, **सखी** - நட்பினளாக, **आसीत्** - ஆனாள்.

(க.து) இந்திரனுக்கு நண்பனாகிய குசன் அவனுடன் ஒரே ஸிம்மாஸநத்தில் அமர்ந்தான். குமுத்வதியும் இந்திராணிக்கு நட்பினளாகி, அவளுடன் பாரிஜாத மலர்களை அனுபவிக்கும் பேறு பெற்றாள்.

இந்திரனுடன் ஒரே ஆஸனத்தில் அமர்வது பெரிய கௌரவமாகக் கருதப்படுவதாகும். இச் சுலோகத்தில் குசனுடைய வாழ்க்கை சுபமான முடிவுபெற்றமை கூறப்பட்டது.'

तदात्मसंभवं राज्ये मन्त्रिवृद्धाः समादधुः ।
स्मरन्तः पश्चिमामाज्ञां भर्तुः सङ्ग्रामयायिनः ॥ ८ ॥

**सङ्ग्राम यायिनः** - யுத்தத்திற்குச் செல்லப் போகின்ற, **भर्तुः** - அரசன் குசனது, **पश्चिमाम्-आज्ञाम्** - கடைசி ஆணையை, **स्मरन्तः** - நினைக்கின்ற, **मन्त्रिवृद्धाः** - வயது முதிர்ந்த மந்திரிகள், **तदात्मसंभवम्** - அவனுடைய மகனை, **राज्ये** - அரசபதவியில், **समादधुः** - நன்கு வைத்தனர்.

(க-து) யுத்தத்திற்குப் போவதன் முன் குசன் தான் இறந்துவிட்டால் தன் மகன் அரசனாக்கப்பட வேண்டுமென மந்திரிகளிடம் கூறிச் சென்றானதலால் அவ்வாணையை நினைவிற்கொண்டு மந்திரிகள் அதிதியை அரச பதவியில் வைத்தனர்.

ते तस्य कल्पयामासुरभिषेकाय शिल्पिभिः ।
विमानं नवमुद्वेदि चतुस्तम्भप्रतिष्ठितम् ॥ ९ ॥

**ते** - அம்மந்திரிகள், **अभिषेकाय** - பட்டாபிஷேகத்திற்காக, **शिल्पिभिः** - சிற்பிகளைக் கொண்டு, **उद्वेदि** - உயர்ந்த மேடையுடையதும், **चतुःस्तम्भ-प्रतिष्ठितम्** - நான்கு தூண்களிலே தாங்கப்பட்டதுமான, **नवं-विमानम्** - புதிய மண்டபத்தை, **कल्पयामासुः** - செய்வித்தனர்.

(க-து) அதிதியின் அபிஷேகத்திற்காக மந்திரிகள் உயர்ந்த மேடையுடையதும் நான்கு தூண்களால் தாங்கப்பட்டதுமான புதியதொரு மண்டபத்தைச் சிற்பிகளைக் கொண்டு கட்டுவித்தனர்.

**प्रतिष्ठितम्** - 'வைக்கப்பட்ட என்பது பொருள்.'

'विमानपदप्रयोगेणौन्नत्यरमणीयत्वादयो द्योत्यन्ते' नारायणः।

तत्रैनं हेमकुम्भेषु संभृतैस्तीर्थवारिभिः ।
उपतस्थुः प्रकृतयो भद्रपीठोपवेशितम् ॥ १० ॥

**तत्र** - அம் மண்டபத்தில், **भद्रपीठ उपवेशितम्** - பத்ராஸநத்தில் அமர்த்தப்பட்ட, **एनम्** - அவ்வதிதியை, **हेम-कुम्भेषु** - பொற் குடங்களிலே, **संभृतैः** -கொண்டு வரப்பட்ட **तीर्थवारिभिः** - புண்ய தீர்த்தஙகளுடன், **प्रकृतयः** -மந்திரிகள், **उपतस्थुः** - அணுகினர்.

(க-து.) அம்மண்டபத்திலே சுபமான ஆஸநத்தில் அதிதியை அமரச் செய்த பின், மந்திரிகள், பொற்குடங்களிலே கொண்டு வரப்பட்ட புண்ய தீர்த்தங்களுடன் அருகில நின்றனர்.

பத்ரபீடம்: பட்டாபிஷேக காலத்தில் அரசர் அமருகின்ற ஸ்நான ஆஸநம்: அதன் அமைப்பை வாஸ்து சாஸ்த்ரம் கூறுகின்றது.

श्लक्ष्णं षडंगुलोत्सेधं षोडशांगुलिविस्तृतम् ।
द्वात्रिंशदंगुलायामं क्षीरवृक्षसमुद्भवम् ।
पद्मांकितं भवेद् भद्रपीठं स्नपनकर्मणि ॥

இங்குக் கூறிய பத்ரபீடம ஸிம்மாஸனமன்று. 28-ஆவது சுலோகத்திலே அதிதி ஸிம்மாஸனத்தில் அமர்ந்ததாகக் கூறப்படுவதைக் காண்க.

नदद्भिः स्निग्धगम्भीरं तूर्यैराहतपुष्करैः ।

अन्वमीयत कल्याणं तस्याविच्छिन्नसंतति ॥ ११ ॥

**आहत पुष्करैः** - நன்கு தட்டப்பெற்ற (ஒலிக்கப்பட்ட) முகமுடையனவும், **स्निग्ध गंभीरम्**-இனிமையாகவும் கம்பீரமாகவும், **नदद्भिः** - ஒலிக்கின்றனவுமான, **तूर्यैः** - (மிருதங்கம் முதலிய) வாத்யங்களினால், **तस्य** - அதிதியின், **अविच्छिन्न-सन्तति** - இடையறுத தொடர்ச்சியையுடைய, **कल्याणम्** - (இனி வரப் போகின்ற) நன்மை, ' **अन्वमीयत** - ஊஹிக்கப்பட்டது.

(க-து) பட்டாபிஷேக காலத்தில் வாசிக்கப்பட்ட மிருதங்கம் முதலிய வாத்யங்கள் இனிமையாகவும் கம்பீரமாகவும் ஒலித்ததால், சுப நிமித்தமாயின. இடையறுது தொடர்ச்சியாக அதிதிக்கு நன்மையே இனி நேரப் போகின்றதென்பதை இதனால் ஊஹித்தனர்.

இனிமையாக ஒலிக்கும் வாத்யங்கள் சுபத்தைக் காட்டும் என்பர். **आहतानि च वाद्यानि स्निग्धवाचा च मंगलम्**- என்பது சகுனார்ணவம். **पुष्करम्** - மிருதங்கம் முதலிய வாத்யங்களின் வாய்ப்புறம்.

दूर्वायवाङ्कुरप्लक्षत्वगभिन्नपुटोत्तरान् ।

ज्ञातिवृद्धैः प्रयुक्तान् स भेजे नीराजनाविधीन् ॥ १२ ॥

**सः** - அவன், **दूर्वा-यवाङ्कुर-प्लक्षत्वक्-अभिन्नपुट-उत्तरान्**- அறுகு, யவமுளை, ஆலம்பட்டை, இளந்தளிர் இவைகளை மிகுதியாகக் கொண்டவையும், **ज्ञातिवृद्धैः**- வயது முதிர்ந்த உறவினர்களால், **प्रयुक्तान्** - செய்யப்பட்டவையுமான, **नीराजनाविधीन्** - நீராஜன அனுஷ்டானத்தை, **भेजे** - அனுபவித்தான்.

(க-து.) பத்ராஸநத்திலமர்ந்துள்ள அவனுக்கு வயது முதிர்ந்த உறவினர்கள், ஆரத்தி எடுத்தனர்.

அறுகம்புல் முதலியன நீராஜனத்தில் உபயோகிக்கப் பட்ட பொருள்களாகும். अभिन्नपुटम् - இதுப்பைப் பூ, தாமரை மொட்டு, பருத்திக்காய் எனவும பொருள் உரைப்பர். 'விரியாத இதழுடையது' என்பது பதப் பொருள். नीर-आजनम् - நீர சுற்றுதல என்பது பொருள். 'தீபங்களைக்கொண்டு ஆரத்தி எடுத்தல' என்பர் நாராயணர்.

नीराजनविधीन् - पटलदीपिकाभ्रमणविधीन् - என்பது அவர் உரை.

पुरोहितपुरोगास्तं जिष्णुं जैत्रैरथर्वभिः ।

उपचक्रमिरे पूर्वमभिषेक्तुं द्विजातयः ॥ १३ ॥

**पुरोहित पुरोगाः** - (குலப்) புரோஹிதரை முன்னிட்ட வர்களான, **द्विजातयः**-பிராம்மணர்கள், **जिष्णुम्**-வெற்றியைத் தன் குணமாகக் கொண்ட, **तम्** - அவனை (அவனுக்கு), **जैत्रैः** - ஜயமளிப்பனவான, **अथर्वभिः** - அதர்வ வேத மந் திரங்களினால், **पूर्वम्** - முதலில், **अभिषेक्तुम्** - அபிஷேகம் செய்ய, **उपचक्रमिरे** - தொடங்கினர்.

(க-து) பின் அந்தணர்கள், குலப்புரோகிதரை முன்னிட்டுக் கொண்டு, அதர்வ மந்திரங்களை உச்சரிதது அவனுக்குப் பட்டாபி ஷேகம் செய்யத் தொடங்கினர்.

**पूर्वम्**-மந்திரிகள் சுற்றத்தார் முதலியோர் அபிஷேகம் செய்வதற்கு 'முன்பு' அந்தணர்கள் அபிஷேகம்செய்தனர். **पुरोहितः**-வஸிஷ்டர் எனவும் கொள்ளலாம்.

तस्यौघमहती मूर्ध्नि निपतन्ती व्यरोचत ।

सशब्दमभिषेकश्रीर्गङ्गेव त्रिपुरद्विषः ॥ १४ ॥

**तस्य** - அவ்வதிதியின், **मूर्ध्नि** - சிரஸில், **सशब्दम्** - ஒலி யுடன், **निपतन्ती** விழுகின்ற, **ओघ महती**-பெரும் ப்ரவாஹ

முடைய, **अभिषेकश्री** :- அபிஷேக ஜலத்தின் நிறைவு, **त्रिपुरद्विषः** - பரமசிவனுடைய, (**मूर्ध्नि निपतन्ती**) - சிரஸிலே விழுகின்ற, **गङ्गा इव** - கங்கை போல், **व्यरोचत** - விளங்கியது.

(க-து) அதிதியின் சிரஸிலே ஊற்றப்பட்ட அபிஷேகஜலம் சிவபிரானது தலையிலே விழும் கங்கைபோல் காணப்பட்டது.

**त्रिपुरद्विष्** - முப்புரங்களை வெறுத்தவர் என்பது பதப்பொருள். **ओघमहती** - பிரவாஹத்தினால் பெரியதான். '**ओघमहती सशब्दं निपतन्ती**' - என்பன கங்கைக்கும் விசேஷணம்.

स्तूयमानः क्षणे तस्मिन्नलक्ष्यत स वन्दिभिः ।

प्रवृद्ध इव पर्जन्यः सारङ्गैरभिनन्दितः ॥ १५ ॥

**तस्मिन् क्षणे**- அந்த ஸமயத்தில், **वन्दिभिः**-வந்திகளால், **स्तूयमानः** - புகழப்படுகின்ற, **सः** - அவன், **प्रवृद्धः** - நன்கு நீர் நிரம்பியதும், **सारङ्गैः** -சாதக பக்ஷிகளால், **अभिनन्दितः** - கொண்டாடப்பட்டதுமான, **पर्जन्यः इव** - மேகம் போல், **अलक्ष्यत** - காணப்பட்டான்.

(க-து) சாதகப் பக்ஷிகளால் மகிழ்ச்சியுடன் ஒலி செய்து கொண்டாடப்படுகின்ற நீர் நிறைந்த மேகம்போல் அபிஷேக காலத்தில் ஸ்துதி பாடகர்களால் புகழ்ந்து கொண்டாடப்பட்ட அதிதி இருந்தான்.

சாதக பக்ஷிகள் தரையிலுள்ள நீரைக் குடிக்காதெனவும், மேகத்தினின்றும் மழை நீர் வரும்பொழுதே குடிக்குமெனவும கூறுவர். நீர் நிறைந்த மேகம் அதிதிக்கும், சாதக பக்ஷிகள் வந்திகளுக்கும் உபமானமாயின.

तस्य सन्मन्त्रपूताभिः स्नानमद्भिः प्रतीच्छतः ।

ववृधे वैद्युतस्याग्नेर्वृष्टिसेकादिव द्युतिः ॥ १६ ॥

**वैद्युतस्य**-மின்னலினின்றும் எழுகின்ற, **अग्नेः** - அக்னியின், **द्युतिः** - ஒளி, **वृष्टि सेकात् इव**-மழை பொழிவதால்,

(அதிகமாவது போல்), **सन्मन्त्र पूताभिः** - நல்ல மந்த்ரங்களினால் பரிசுத்தமான, **अद्भिः** - ஜலங்களால், **स्नानम् प्रतीच्छतः** - ஸ்நானம் செய்கின்ற, **तस्य** - அவ்வரசனுக்கு, **द्युतिः** - தேஜஸ், **ववृधे** - அதிகமாயிற்று.

(க-து) மழையினிடையே தோன்றும் மின்னல் ஜலத்தின் ஸம்பந்தத்தினால் மிக ஒளிருகின்றது. அதுபோல் மந்திரங்களினாலே தூய்மைபெற்ற ஜலத்தினால் அவ்வரசனுக்கு அதிக சோபை உண்டாயிற்று.

**'वैद्युतस्याग्नेः - स हि जल सेकाद्वर्धते' नारायणः ॥**

स तावदभिषेकान्ते स्नातकेभ्यो ददौ वसु ।
यावतैषां समाप्येरन् यज्ञाः पर्याप्तदक्षिणाः ॥ १७ ॥

**यावता** - எவ்வளவு பொன்னால், **एषाम्** - இவர்களது (கிருஹஸ்தர்களது), **यज्ञाः** - யாகங்கள், **पर्याप्त दक्षिणाः** - போதுமான தக்ஷிணைகளைக் கொண்டனவாக, **समाप्येरन्** - முடிக்கப்படுமோ, **तावत् वसु** - அவ்வளவு பொன்னை, **सः** - அவன், **अभिषेकान्ते** - அபிஷேக முடிவில், **स्नातकेभ्यः**- கிருஹஸ்தர்களுக்கு, **ददौ** - கொடுத்தான்.

(க-து) அபிஷேகம் முடிந்தவுடன் அதிதி, ஏராளமான பொற்காசுகளைக் கிருஹஸ்தர்களுக்கு வழங்கினான். அவன் தந்த பொன் அந்தக் கிருஹஸ்தர்கள் தங்கள் ஆயுட் காலம் முழுவதும் போதுமான அளவு தக்ஷிணைகொண்ட யாகங்களைச் செய்ய உதவுவதாக இருந்தது.

ते प्रीतमनसस्तस्मै यामाशिषमुदैरयन् ।
सा तस्य कर्मनिर्वृत्तैर्दूरं पश्चात्कृता फलैः ॥ १८ ॥

**प्रीतमनसः**- மகிழ்ந்த மனமுடைய, **ते**- அவ்வந்தணர்கள், **तस्मै** - அவனுக்கு, **याम् आशिषम्** - எந்த ஆசீர்வாதத்தை, **उदैरयन्** - கூறினார்களோ, **सा (आशीः)** - அந்த ஆசீர்வாதம், **तस्य** - அவனுக்கு, **कर्मनिर्वृत्तैः** - பூர்வ புண்யத்தினால் உண்

டான, **फलैः**-பலன்களால், **दूरम्**-வெகு தூரம், **पश्चात्कृता**-பின்னிட்டதாகச் செய்யப்பட்டது.

(க-து) மனம் மகிழ்ந்த அந்தணர்கள் கூறிய ஆசிமொழி, பூர்வஜன்ம புண்யங்களாலே பலவகைப்பயன்கள் பெற்றுள்ள அவன் விஷயத்தில் பயனளிக்க இடம் பெறுது, பலன் தருவதற்கான ஸந்தர்ப்பத்தை எதிர் நோக்கிய புண்ணியங்களின் வரிசையில் பின்னணியில் வெகு தொலைவிலே நின்று கொண்டிருந்தது.

இவ்வாசீர்வாதத்திற்கு முன்பே அவன் பல நற்பயன்களையும் பெற்று விட்டதால் இவ்வாசீர்வாதம் பயனளிக்க இடமில்லாததாலே காலத்தை எதிர் நோக்கி நின்றது என்பது கருத்து.

बन्धच्छेदं स बद्धानां वधार्हाणामवध्यताम् ।

धुर्याणां च धुरो मोक्षमदोहं चादिशद्गवाम् ॥ १९ ॥

**सः** - அவன், **बद्धानाम्** - தளையிடப் பட்டவர்களுக்கு, **बन्धच्छेदम्** - தளை நீக்குதலையும், **वधार्हाणाम्** - மரண தண்டனைக்குரியவர்களுக்கு, **अवध्यताम्** - கொல்லப்படாமையையும், **धुर्याणाम्** - பாரம் சுமக்கும் பிராணிகளுக்கு, **धुरः** - பாரத்தினின்று, **मोक्षम्** - விடுதலையையும், **गवाम्** - பசுக்களுக்கு, **अदोहं च** - கறவாமையையும், **आदिशत्** - கட்டளையிட்டான்.

(க-து) அதிதி, தான் பட்டாபிஷேகம் செய்து கொண்ட நாளில் சிறையிடப்பட்டவர்களுக்கு விடுதலையளித்தான். தூக்கிலிடவேண்டியவர்களுக்குத் தூக்குத் தண்டனையை இல்லாமற் செய்தான். எருது குதிரை முதலியவைகளை வண்டியிற் பூட்டாதிருக்கச் செய்தான். கன்றுகள் முற்றிலும் குடிக்கும்படி பசுக்களைப்பால் கறக்காதிருக்க உத்தரவிட்டான்.

அரசர் ஸிம்மாஸனம் ஏறும் பொழுது இம்மாதிரி விடுதலையும், விடுமுறையும் அளிப்பது தொன்று தொட்டு வந்த வழக்கமாகும்.

'युवराजाभिषेके वा परराष्ट्रावमर्दने ।

**पुत्रजन्मनि वा मोक्षो बन्धनस्य विधीयते ॥'**

என்பதைக் காண்க.

क्रीडापतत्रिणोऽप्यस्य पञ्जरस्थाः शुकादयः ।

लब्धमोक्षास्तदादेशाद्यथेष्टगतयोऽभवन् ॥ २० ॥

**पञ्जरस्थाः** - கூண்டிலுள்ள, **शुकादयः** - கிளி முதலான, **अस्य क्रीडा पतत्रिणः अपि** - அவனது ஆசைப் பறவைகளும் கூட, **तदादेशात्** - அவனுடைய ஆணையால், **लब्ध-मोक्षाः** - விடுதலை பெற்றனவாய், **यथेष्ट गतयः**-விருப்பப்படி செல்வனவாக, **अभवन्** - ஆயின.

(க-து) கூண்டிலே வைத்து வளர்க்கப்பட்ட ஆசைப் பறவைகளான கிளி முதலியனவும் விடுதலை பெற்றுத் தம்மிச்சைப் படி பறந்து சென்றன. எனின் பிறவற்றைப்பற்றிக் கூற வேண்டாததாயிற்று.

**क्रीडापतत्रिणः** - 'விளையாடுவதற்காக வளர்க்கப்படும் பறவைகள்' என்பது பதப் பொருள். **'अपिशब्देन तेषां लोभनीयत्वेन तन्मोक्षस्य असंभवना द्योत्यते ' नारायणः ।**

ततः कक्ष्यान्तरन्यस्तं गजदन्तासनं शुचि ।

सोत्तरच्छदमध्यास्त नेपथ्यग्रहणाय सः ॥ २१ ॥

**ततः** - பிறகு, **सः** - அவன், **नेपथ्य ग्रहणाय**- அணிகளை ஏற்பதற்காக, **कक्ष्यान्तर-न्यस्तम्** - மற்றொரு அறையில் வைக்கப்பட்டதும், **शुचि** நிர்மலமானதும், **सोत्तर च्छदम्** - மேல் விரிப்புடன் கூடியதுமான, **गज दन्त-आसनम्**-யானைத் தந்தத்தாலான ஆஸநத்தில், **अध्यास्त** - அமர்ந்தான்.

(க-து) நாற்கால் மண்டபத்தில் பத்ராஸநத்திலமர்ந்து அபிஷேகம் செய்து கொண்டபின் உடை உடுப்பதற்காக, அருகிலே உள்ள மற்றோர் அறையில வைக்கப்பட்டுள்ள யானைத் தந்தாஸநத்தில் உட்கார்ந்தான்.

शुचि - 'வெண்ணிறமுடைய' என்றும் கூறலாம்.

तं धूपाश्यानकेशान्तं तोयनिर्णिक्तपाणयः ।
आकल्पसाधनैस्तैस्तैरुपसेदुः प्रसाधकाः ॥ २२ ॥

**तोय निर्णिक्त-पाणयः**-ஜலத்தினால் நன்கு அலம்பப்பட்ட கைகளையுடைய, **प्रसाधकाः** - அலங்காரம் செய்பவர்கள், **धूप-आश्यान-केशान्तम्** - நறுமணப் புகையினால் உலர்ந்த கேசத்தை யுடைய, **तम्** - அவனை, **तैः तैः** - அந்த அந்த, **आकल्प साधनैः** - அலங்காரப் பொருள்களுடன், **उपसेदुः** - அடைந்தனர்.

(க-ரு) அணி செய்விக்கும் பணியாட்கள், ஜலத்தினால் கைகளை நன்கு அலம்பிக்கொண்டபின், நறும்புகையினால் அவன் தலைமயிரை உலரச் செய்தனர். பிறகு கஸ்தூரி முதலான அலங்காரப் பொருளகளுடன் அவனை அணுகினார்.

**धूपः - संस्कृतधूमः धूपः** - நறுமணப் புகையினால் தலைமயிரின் ஈரத்தைப் போக்குதல் இப்பொழுதும் பழக்கத்திலுள்ளதே. **आकल्प - साधनैः** - அலங்காரத்திற்குச் சாதனமான கஸ்தூரி, சந்தனம், மாலை முதலியன. **प्रसाधकाः**- அலங்காரம செய்வதற்கெனப் பணியாட்கள் தனியே இருந்தனர் என்பது இதனின்றும் புலனாகும். **केशान्तः** - இங்குளள **अन्त** என்ற சொல கேசத்தையே குறித்தது. 'நுனி' எனப் பொருள் இல்லை. வாக்யாலங்காரம் என்பர் வல்லபர்.

तेऽस्य मुक्तागुणोन्नद्धं मौलिमन्तर्गतस्रजम् ।
प्रत्यूपुः पद्मरागेण प्रभामण्डलशोभिना ॥ २३ ॥

**ते** - அணி செய்விப்பவர்கள், **मुक्तागुण-उन्नद्धम्** -முத்து ஸரத்தினால் உயர்த்திக் கட்டப்பட்டுள்ளதும், **अन्तर्गत-स्रजम्** - உள்ளே இருக்கின்ற புஷ்ப ஸரமுடையதுமான,

**अस्य मौलिम्**-அவனுடைய கேசத்தை, **प्रभा मण्डल-शोभिना** - ஒளி வட்டத்திஞல் பிரகாசிக்கின்ற, **पद्म रागेण** - பத்ம ராக ரத்னததிஞல், **प्रत्यूपुः** - அலங்கரித்தனர்.

(க-து) அலங்காரம் செய்யும் பணியாளர்கள், முத்துஸரங் களிஞல் அவனது கேசத்தைத் தூக்கிக்கட்டி, வெளியில் தெரியாத படி அதனுள் புஷ்பஸரத்தை வைத்த பின் ஒளிருகின்ற பத்ம ராகத்தை வைத்து அலங்கரித்தனர்.

**अन्तर्गतस्रजम्** - வெளியில தெரியும்படி புஷ்பத்தைச் சிரஸில் ஆண்கள் அணியக் கூடாதென தர்ம சாஸ்த்ரம் கூறுகின்றதால் கவி 'உள்ளடங்கிய புஷ்ப ஸரமுடைய' என்ருர். பத்மராக ரத்னம் ஒளித் திரளுடன் பிரகாசித் துக் கொண்டிருந்தது.

चन्दनेनाङ्गरागं च मृगनाभिसुगन्धिना ।
समापय्य ततश्चक्रुः पत्रं विन्यस्तरोचनम् ॥ २४ ॥

**मृगनाभि-सुगन्धिना** - கஸ்தூரியிஞல் நறுமணமுடைய, **चन्दनेन** - சந்தனததிஞலே, **अङ्गरागम्** - உடற் பூச்சை, **समापय्य ततः**-முடித்துப் பின், **विन्यस्त रोचनम्**-கோரோசனை யால் அமைக்கப்பட்ட, **पत्रम् च** - இலை போல் எழுதுதலை யும், **चक्रुः** - செய்தனர்.

(க-து) கஸ்தூரி சேர்ப்பதால் நறுமணமுடையதான சந்தனத்தைப்பூசிய பின் கோரோசனைத் திரவம் கொண்டு அவனது உடலில அலங்கார வரிகளை எழுதினர்.

**पत्रम्** - இலை. இங்கு இலை போன்ற வடிவில் எழுதப் படும் அலங்காரக் கோடுகளைக் குறித்தது. இலை போன்ற வடிவில் நெற்றியிலே இடப்பட்ட திலகம் என்பர் சில உரையாசிரியர். **'ततः इति सप्तम्यर्थे तसिः । तत्र - अंगरागे इत्यर्थः ' नारायणः ।**

आमुक्ताभरणः स्रग्वी हंसचिह्नदुकूलवान् ।
आसीदतिशयप्रेक्ष्यः स राज्यश्रीवधूवरः ॥ २५ ॥

आमुक्त-आभरणः-அணிவிக்கப்பட்ட ஆபரணங்களுடையவனும், स्रग्वी - மாலை யணிந்தவனும், हंसचिह्न-दुकूलवान् - ஹம்ஸங்களை அடையாளமாகக் கொண்ட வெண் பட்டு தரித்தவனும், राज्यश्री-वधू-वरः-ராஜ்ய லக்ஷ்மியாகிய பெண்ணிற்கு வரனாக இருப்பவனுமான, सः-அவ்வதிதி, अतिशय-प्रेक्ष्यः - மிக அழகாக, आसीत् - இருந்தான்.

(க-து) ஹம்ஸக்கரையுடைய வெண்பட்டணிந்தவனும், ராஜ்ய லக்ஷ்மியை மணக்கப் போகின்ற வரனுமான அவன் இவ்வணிகளால் மிக அழகுடையவனாகத் தென்பட்டான்.

பட்டாபிஷேகத்தை மணமாகக் கருதி அதற்கேற்ப ராஜ்யத்தை வதூவாகவும், அரசனை வரனாகவும் கூறினார்.

नेपथ्यदर्शिनश्छाया तस्यादर्शे हिरण्मये ।
विरराजोदिते सूर्ये मेरौ कल्पतरोरिव ॥ २६ ॥

हिरण्मये - பொன்மயமான, आदर्शे - கண்ணாடியில், नेपथ्यदर्शिनः - (தன்) அலங்காரத்தை நன்கு காண்கின்றவனாகிய, तस्य - அவனுடைய, छाया -பிரதி பிம்பம்,-उदिते- உதித்திருக்கின்ற, सूर्ये - ஸூர்யனிடம் (தோன்றியுள்ள), मेरौ - மேருமலையில் (இருக்கின்ற,) कल्पतरोः - கல்பக விருக்ஷத்தின், (छाया)-इव-பிரதி பிம்பம்போல், विरराज-விளங்கியது.

(க-து) பொன்னாலான கண்ணாடியில் தன் வடிவத்தை அவன் நன்கு நோக்கினான். அக்கண்ணாடியில் பிரதி பலித்த அவனது வடிவம் உதித்துள்ள ஸூர்யபிம்பத்தில் பிரதிபலித்த கல்பக விருக்ஷத்தின் பிரதிபிம்பம்போல் காணப்பட்டது.

பொன் தகடுகளில் மெருகு கொடுத்து முகத்தைத் தெளிவாகக் காட்டும் கண்ணாடிகளாக அவற்றை முற்காலத்திலே உபயோகித்தனராதலால் हिरण्मये-என விசேஷித்தார். கல்பகவிருக்ஷத்தின் இலை, பூ முதலியன ரத்னங்களாலாயின வென்பர். எனவே, அது அரசனுக்கு உவமையாக வந்தது.

கல்பக விருக்ஷம் மேருமலையிலிருப்பதாகவும், ஸூர்ய பிம்ப மாகிய கண்ணாடியில் பிரதி பலிப்பதாகவும் கூறினர் கண்ணாடிக்கு ஸூர்யபிம்பமும், அரசனுக்குக் கல்ப விருக்ஷமும், அாசனமர்ந்துள்ள ஆஸநத்திற்கு மேரு மலையும உபமான மாயின.

स राजककुदव्यग्रपाणिभिः पार्श्ववर्तिभिः ।
ययावुदीरितालोकः सुधर्मानवमां सभाम् ॥ २७ ॥

**सः** - அவ்வதிதி, **राजककुद्-व्यग्र-पाणिभिः** - ராஜ சின்னங்களை ஏந்துகின்ற கைகளையுடைய, **पार्श्व-वर्तिभिः** - வேலைக்காரர்களால், **उदीरित-आलोकः**-ஜயகோஷம் செய்யப் பட்டவனாக, **सुधर्मा-अनवमाम्** - தேவர்களின் ஸபைக்குச் சிறிதும் தாழாத, **सभाम्** - ஆஸ்தான மண்டபத்தை, **ययौ** - அடைந்தான்.

(க-து) ராஜ சின்னங்களான குடை, சாமரம் முதலிய வற்றை ஏந்திய பணியாளர்கள், 'ஜய, விஜயீபவ' என்று முன் சென்று கோஷமிட, இந்திரனது சபை போன்ற தனது ஆஸ்தான மண்டபத்தை அடைந்தான்.

'उदीरितः उच्चारितः आलोकः, आलोकय आलोकयेति शब्दः यस्य सः' नारायणः ।

वितानसहितं तत्र भेजे पैतृकमासनम् ।
चूडामणिभिरुद्धृष्टपादपीठं महीक्षिताम् ॥ २८ ॥

**तत्र** - அங்கு, **वितान सहितम्** - விதானத்துடன் கூடியதும், **महीक्षिताम्** - அரசர்களின், **चूडामणिभिः** - தலையிலுள்ள ரத்னங்களால், **उद्धृष्ट-पादपीठम्** நன்கு தேய்ந்த பாத பீடமுடையதுமான, **पैतृकम् आसनम्** தந்தையின் ஸிம்மாஸனத்தில், **भेजे** - அமர்ந்தான்.

(க-து) ஆஸ்தான மண்டபத்தில், விதானமுடையதும் வணங்கும அரசர்களின் கிரீட ரத்னங்கள் உராய்ந்ததால்

வழிவழிப்பான பாதாஸநத்துடன் கூடியதுமான தந்தையின் ஸிம்மாஸனத்தில் அமர்ந்தான்.

**वितानम्** - வீட்டிற்குக் கூரைபோல் ஸிம்மாஸனம் முதலியவற்றிற்கு மேலே பட்டினால் அமைக்கப்பட்டுள்ள தொன்று விதானம். **उद्घृष्टपादपीठम्**-ஸிம்மாஸனத்திற்கு அருகிலுள்ள பாதபீடம், வணங்கும் சிற்றரசர்களின் முடி படுவதால் நன்கு தேய்ந்திருந்தது.

शुशुभे तेन चाक्रान्तं मङ्गलायतनं महत् ।
श्रीवत्सलक्षणं वक्षः कौस्तुभेनेव कैशवम् ॥ २९ ॥

**तेन च** - அவ்வதிதியினால், **आक्रान्तम्** - அமரப்பட்டதும, **श्रीवत्सलक्षणम्** -'ஸ்ரீவத்ஸ' வடிவிலிருப்பதும், **महत्** - விசாலமுமான, **मङ्गलायतनम्** -ஆஸ்தான மண்டபம், **कौस्तुभेन (आक्रान्तम्)** - கௌஸ்துபரத்னத்துடன் கூடியதும், **(श्रीवत्सलक्षणम्)**- ஸ்ரீ வத்ஸம் என்ற மருவை அடையாள மாக உடையதுமான, - **कैशवम्** - விஷ்ணுவினது, **वक्षः इव** - மார்புபோல், **शुशुभे** - விளங்கியது.

(க-து) அதிதி அமர்ந்திருந்தபொழுது விசாலமான அவ் வாஸ்தான மண்டபம், மஹாவிஷ்ணுவின் மார்புபோல் மிகப் பொலிவுற்று விளங்கியது.

**श्रीवत्सलक्षणम्** - வீடுகளின் அமைப்பில் ஒருவகை என்பது மல்லிநாதர் உரை. மற்ற அமைப்புகள் **स्वस्तिकम्**, **सर्वतोभद्रम्** முதலியன. 'வீட்டிலே இருக்க வேண்டிய எண் வகை மங்கலப் பொருளில் ஒன்று ஸ்ரீவத்ஸம். இங்கே கூறியுள்ளது லக்ஷ்மீ தேவியின் பிம்பம்' என்பர் அருணகிரி. 'श्रीवत्सः - स चाष्टमंगलेष्वेकः । यथाहुः - दर्पणं पूर्णकुंभश्च वृषभं युग्मचामरम् । श्रीवत्सं स्वस्तिकं शंखं दीपश्चाप्यष्टमङ्गलम् इति । स च श्रीदेवीसंस्थानप्रतिकृतिः' अरुणगिरिः ।

बभौ भूयः कुमारत्वादाधिराज्यमवाप्य सः ।

रेखाभावादुपारूढः सामग्र्यमिव चन्द्रमाः ॥ ३० ॥

**कुमारत्वात्** - குமரப்பருவத்தினின்றே, **आधिराज्यम्** - சக்ரவர்த்தித் தன்மையை, **अवाप्य** - அடைந்து உள்ள, **सः** - அவன், - **रेखाभावात्** - வரி வடிவத்திலிருந்தே, **सामग्र्यम्** - முழு வடிவத்தை, **उपारूढः** - (கிடீரென) அடைந்துள்ள, **चन्द्रमाः इव** - சந்திரன்போல், - **भूयः** - மிகவும், **बभौ** - விளங்கினான்.

(க-து) உலகிலே ராஜகுமாரர்கள் குமரப்பருவத்திற்குப் பின் யௌவன வயதையடைந்து இளவரசராக ஆகிப் பின் மஹாராஜராகின்றனர். அதிதியோவெனில் சிறுபருவததிலேயே அரசனுனன்; இடைநிலையான யுவராஜ பதவியில் அவன் சிறிது காலமும் இல்லை. இது எவ்வாறு இருந்ததெனில், ரேகையின் வடிவிலுள்ள பிறைச் சந்திரன், நாளடைவிலே வருகின்ற வளர்ச்சியின்றித் திடீரெனப் பூர்ண சந்திரனுக மாறியதுபோல் இருந்தது.

இங்கு, அதிதியின் உயர்வுக்குக் கவி கல்பனை செய்த சந்திரனது வளர்ச்சி உபமானமாக வந்துள்ளது. இத்தகைய உவமையை **अभूतोपमा**-இல் பொருள் உவமை-என்பர்.

प्रसन्नमुखरागं तं स्मितपूर्वाभिभाषिणम् ।

मूर्तिमन्तममन्यन्त विश्वासमनुजीविनः ॥ ३१ ॥

**प्रसन्न मुखरागम्**-தெளிவான முக காந்தியுடையவனும், **स्मित पूर्व-अभिभाषिणम्** - புன் சிரிப்புடன் பேசுகின்றவனுமான, **तम्** - அவனை, **अनुजीविनः** - வேலைக்காரர்கள், **मूर्तिमन्तम्** - உருவுடன் கூடிய, **विश्वासम्** - நம்பிக்கையாகவே, **अमन्यन्त** - கருதினர்.

(க-து) முகத் தெளிவுடனும் புன்சிரிப்புடனும் பேசுகின்ற அவனிடம வேலைக்காரர்கள அன்புடன் நம்பிக்கை கொண்டனர்.

स पुरं पुरुहूतश्रीः कल्पद्रुमनिभध्वजाम् ।
क्रममाणश्चकार द्यां नागेनैरावतौजसा ॥ ३२ ॥

**पुरुहूतश्रीः** - இந்திரனுக்கு ஒப்பான செல்வமுடைய, **सः** - அவன், **ऐरावत-ओजसा** - ஐராவதம்போல் பலமுடைய **नागेन** - யானையின் மூலம், **क्रममाणः** - (நகரத்தில்) செல்கின்றவனாக, **कल्पद्रुमनिभ-ध्वजाम्**-கல்பக விருக்ஷங்களை ஒத்த கொடி மரமுடைய, **पुरम्** - அயோத்தியை, **द्याम् चकार** - ஸ்வர்க்கமாகச் செய்தான்.

(க-து) பட்டாபிஷேக முடிவில், ஐராவதம் போன்ற யானையின் மீதேறி நகரத்தை வலம் வருகின்ற அவன் இந்திரன்போல் காணப்பட்டான். கல்பக விருக்ஷம் போன்ற த்வஜங்களை அவன் உயர்த்தியிருந்தான். எனவே, அயோத்தி ஸ்வர்க்கம் போன்றிருந்தது

பட்டாபிஷேகம் ஆனவுடன் கொடியை ஏற்றி அரசன் நகரத்தில் வலம் வரவேண்டுமென்பது முறை.

तस्यैकस्योच्छ्रितं छत्रं मूर्ध्नि तेनामलत्विषा ।
पूर्वराजवियोगौष्म्यं कृत्स्नस्य जगतो हृतम् ॥ ३३ ॥

**तस्य एकस्य** - அவன் ஒருவனது, **मूर्ध्नि** - தலையின் மேல், **छत्रम्** - குடையானது, **उच्छ्रितम्** - உயர்த்தப்பட்டதாக, **(आसीत्)** - இருந்தது; **अमलत्विषा**-நிர்மலமான காந்தியுடைய, **तेन** - அக்குடையினால், **कृत्स्नस्य जगतः** - முழு உலகிற்கும், **पूर्वराज-वियोग-औष्म्यम्** - முன் அரசனான குசனது பிரிவினாலுண்டான உஷ்ணமானது, **हृतम्** - நீக்கப்பட்டது.

(க-து) ராஜ சின்னமாகிய குடை அவன் ஒருவனது தலைக்கு மேல் பிடிக்கப்பட்டதாயினும், குசனைப் பிரிந்த உலகத்தின் தாபத்தை நீக்கியது.

எவரது தலைக்கு மேல் குடை பிடிக்கப்படுகின்றதோ அவரது தாபம் மாத்திரமே நீங்க வேண்டியிருக்க, மற்ற

வாது தாபமும் நீங்கியதாகக் கூறியது நோக்கத்தக்கது. குசனைப் போன்றேயுள்ள அதிதியை அரசனாக அடைந்ததால் ஜனங்கள் குசனைப் பிரிந்த துக்கம் தணியப் பெற்றனர் என்பது கருத்து

धूमादग्नेः शिखाः पश्चादुदयादंशवो रवेः ।

सोऽतीत्य तेजसां वृत्तिं सममेवोत्थितो गुणैः ॥ ३४ ॥

**धूमात् पश्चात्** - புகைக்குப் பின், **अग्नेः** - அக்னிக்கு, **शिखाः** - ஜ்வாலைகள், (எழுகின்றன); **उदयात् पश्चात्** - உதயத்திற்குப் பின், **रवेः** - ஸூர்யனுக்கு, **अंशवः** - கிரணங்கள் (எழுகின்றன); **सः** - அவன், **तेजसाम्** - (அக்னி ஸூர்யன் முதலிய) ஒளிகளின், **वृत्तिम्** - இயற்கையை, **अतीत्य** - மீறி, **गुणैः-समम्-एव** - (ப்ரதாபம் முதலான) குணங்களுடனேயே, **उत्थितः** - தோன்றினன்.

(க-து) அக்னி முதலில் புகையுடன் தோன்றிப் பிறகு தன் குணமான ஜ்வாலையைப் பெறுகின்றது. ஸூர்யன் உதயமான பிறகே தனது முழுக் கிரணங்களைப் பெறுகின்றான். முதலில் குணமின்றி இருந்து, பின் குணங்களைப் பெறுவது இவ்வொளிப் பொருள்களின் இயற்கையாயுள்ளது. ஆனால் தேஜஸ்வியான அதிதி இந்த நியதியை மீறித் தோன்றும்பொழுதே சௌர்யம் முதலான குணங்களுடன் தோன்றினன்.

குணங்கள் அவனுக்கு, பிறகு உண்டானவை அல்ல. பிறக்கும்பொழுதே தோன்றின. 'தோன்றும்பொழுதே மணத்துடன் தோன்றும் திருத்துழாய்' என்பர் திருவாய்மொழி உரையாசிரியர்கள். **उत्थितः** - என்ற சொல்லுக்கு, இடப்பொருத்தம் கருதி, 'அதிதி யானைமீது ஏறும்பொழுது ப்ரதாபம் முதலிய குணங்களுடன் ஜனங்களுக்குத் தோன்றினன்' என்பர் அருணகிரி. **'उत्थितशब्देन गजारोहणात्मकमूर्ध्वकर्मोच्यते । तत्र गुणानां सहोत्थानं नाम तत्काल एव लोके प्रख्यातत्वं, तच्चानुरागहेतुत्वाल्लब्धप्रशमनांगम्' अरुणगिरिः ।**

तं प्रीतिविशदैर्नेत्रैरन्वयुः पौरयोषितः ।

शरत्प्रसन्नैर्ज्योतिर्भिर्विभावर्य इव ध्रुवम् ॥ ३५ ॥

**शरत्प्रसन्नैः** - சரத்காலத்திலே நிர்மலமான, **ज्योतिर्भिः** நக்ஷத்ரங்களிலே, **विभावर्यः** -இரவுகள், **ध्रुवम् इव**-துருவ நக்ஷத்ரத்தை (த்தொடர்வது) போல, **पौरयोषितः** - நகரத்துப் பெண்கள், **प्रीति विशदैः** - மகிழ்ச்சியினால் தெளிவான, **नेत्रैः** - கண்ணேக்குகளால், **तम्** -அவனை, **अन्वयुः** -தொடர்ந்தனர்

(க-து) வீதியிலே சென்ற அரசனை நகர்ஸ்திரிகள், நல்ல அரசனையடைந்த மகிழ்ச்சியால் தெளிவான கண்களாலே நெடுந் தூரம் நோக்கினர்.

பெண்களுக்கு உபமானமாக வந்தவை இரவுகள். சரத் காலததிலே நிர்மலமாயுள்ள நக்ஷத்ரஙகளாகிய கண்களின் மூலம இரவாகிய பெண்கள், த்ருவ நக்ஷத்திரத்தைக் காண்பதுபோல' என உபமானம் கூறினர். இரவுப் பெண்கள் நக்ஷத்திரக் கண் கொண்டு காண்கின்றனர். உபமானக் கருத்து தெளிவாக இல்லாவிடினும இதனல் புலப்படுவது யாதெனில், த்ருவ நக்ஷத்ரத்தை மையமாகக் கொண்டு பிற நக்ஷத்ரஙகள் செல்வது போல் அதிதியைப் பின் தொடர்ந்து எல்லோர் கண்ணேக்குகளும சென்றன என்பதாம்.

**प्रीतिविशदैः** - **प्रीति** - பக்தி என்பாரும் உண்டு.

अयोध्यादेवताश्चैनं प्रशस्तायतनार्चिताः ।

अनुदध्युरनुध्येयं सान्निध्यैः प्रतिमागतैः ॥ ३६ ॥

**प्रशस्त-आयतन-अर्चिताः** - சிறந்த கோயில்களிலே பூஜிக்கப்பட்ட, **अयोध्यादेवताः च** - அயோத்தியின் தேவதைகளும், **अनुध्येयम्** - அனுக்ரஹிக்கத் தகுந்த, **एनम्** -இவனை,

**प्रतिमागतैः** - பிரதிமைகளிலே உள்ள, **सान्निध्यैः** - (தங்களது) ஸாந்நித்யத்தியங்களாலே, **अनुदध्युः** - அனுக்ரஹித்தனர்.

(க-து) சிறந்த கோயில்களிலே வைத்துப்பூஜிக்கப்பட்ட அயோத்யா தேவதைகளும் விக்ரஹங்களிலே ஸாந்நிதயம் செய்பவர்களாக, அவனுக்கு அருள்புரிந்தனர்.

**सान्निध्यम्** - குடிகொள்ளுதல்; இருத்தல். **अनुदध्युः** - **अनुध्यानमनुग्रहः - उत्पलमाला। 'अनेन कृताभिषेकस्य तस्य तत्तद्देवालयप्राप्तिप्रणामादयः उक्ताः' नारायणः।**

यावन्नाश्यायते वेदिरभिषेकजलाप्लुता ।
तावदेवास्य वेलान्तं प्रतापः प्राप दुस्सहः ॥ ३७ ॥

**अभिषेक जल-आप्लुता** - அபிஷேக ஜலத்தினால் நனைந்த, **वेदिः** - மேடையானது, **यावत्-न-आश्यायते** - எதற்குள் உலரவில்லையோ, **तावत्-एव** - அதற்குள்ளேயே, **अस्य** - அவனுடைய, **दुस्सहः** - தாங்க முடியாத, **प्रतापः** - பிரதாபம், **वेलान्तम्** - ஸமுத்ரக் கரையை, **प्राप** - அடைந்தது

(க-து) அபிஷேக ஜலத்தால் நனைந்த மேடை உலருவதற்கு முன்பே அவனது ப்ரதாபம் நாடு முழுவதும் பரவியது.

அவன் அரசனுகிய செய்தி கேட்டுப் பகைவர் அச்சமுற்றனர் என்பது கருத்து. **आसमुद्रक्षितीशानाम्** - எனக் கூறியுள்ளதால் **वेलान्तम्** என்றார்.

वसिष्ठस्य गुरोर्मन्त्राः सायकास्तस्य धन्विनः ।
किं तत्साध्यं यदुभये साधयेयुर्न संगताः ॥ ३८ ॥

**गुरोः** - குருவான, **वसिष्ठस्य** - வஸிஷ்டரின், **मन्त्राः** - மந்திரங்கள்; - **धन्विनः** - வில்லாளியான, **तस्य** - அவனது, **सायकाः** - பாணங்கள்,-(**इति**) - என்ற, **उभये**-இவ்விரண்டும் **संगताः (सन्तः)** - சேர்ந்தனவாய் இருந்து கொண்டு, **यत्**

எதை, न साधयेयुः - சாதிக்காதனவோ, तत् साध्यम् - அத்தகைய சாதிக்கப்பட வேண்டிய பொருள், किम् - என்ன உள்ளது?

(க-து) வஸிஷ்டரின் மந்த்ரபலமும்; அதிதியின் ஆயுத பலமும் சேர்ந்தபின் சாதிக்கமுடியாதது எதுவுமே இல்லை.

स धर्मस्थसखः शश्वदर्थिप्रत्यर्थिनां स्वयम् ।

ददर्श संशयच्छेद्यान् व्यवहारानतन्द्रितः ॥ ३९ ॥

धर्मस्थ सखः - தர்மத்திலே நிற்கின்ற பெரியோர்களைத் துணைக் கொண்டவனும், अतन्द्रितः - சோம்பலற்றவனுமான, सः - அவன், शश्वत् - எப்பொழுதும், अर्थि-प्रत्यर्थिनाम् - வாதி பிரதிவாதிகளின், संशय च्छेद्यान् - ஸந்தேகம் நீக்கப் படவேண்டிய, व्यवहारान् - வியவஹாரங்களை, स्वयम् - தானே, ददर्श - கண்டான்

(க-து) தர்ம சாஸ்திர மறிந்த பெரியோர்களுடன் இருந்து கொண்டு, வாதி பிரதிவாதிகளின் வியவஹாரங்களைத் தானே நேரில் விசாரணை செய்தான். அவற்றிலுள்ள ஸந்தேகங்களை நீக்கினான்.

பிறரைக் கொண்டு விசாரணை செய்யாமல் அவனே செய்தது, நியாயம வழங்குவதிலே அவனுக்குள்ள கருத்தைக் காட்டியது. விசாரணைக் காலத்தில் தர்மமறிந்தவர்களைத் துணைக் கொள்ள வேண்டுமென ஸ்ம்ருதிகாரர் கூறுவர்.

ततः परमभिव्यक्तसौमनस्यनिवेदितैः ।

युयोज पाकाभिमुखैर्भृत्यान्विज्ञापनाफलैः ॥ ४० ॥

ततः परम् - அதற்குப் பின், अभिव्यक्त-सौमनस्य-निवेदितैः - தெளிவாகப் புலனாகின்ற மன மகிழ்ச்சியினால் காட்டப் பட்டவைகளும், पाकाभिमुखैः - (விரைவிலே) கிடைக்கப்

பெறுமவையுமான, **विज्ञापना-फलैः**-செய்திகளுக்கான பயன் களுடன், **भृत्यान्** - வேலைக்காரர்களை, **युयोज**-இணைத்தான்.

(க-து) தர்மாஸநத்திலிருந்து நியாயம் வழங்கிய பின், தன்னுடைய ஆணைகளை நிறைவேற்றியதாகக் கூறிய பணி யாளர்களுக்குக் கூலி கொடுத்து மகிழ்வித்தான்.

**अभिव्यक्त - सौमनस्य - निवेदितैः** - அவன் கூலி தரப் போவதை அவனது முகத்திலேயுள்ள ஸந்தோஷம் முன் கூட்டித் தெரிவித்தது. **पाकाभिमुखैः**- அரசன் தருவதாகக் கூறிய சம்பளம் உடனே அவர்களது கைக்குக் கிட்டியது. அரசாங்க உத்யோகஸ்தர்கள் அதைத் தருவதிலே கால தாமதம் செய்யவில்லை என்பது கருத்து.

இச்சுலோகத்தின் பொருள் தெளிவாக இல்லை. உரை யாசிரியர்களும் சிரமப் பட்டுள்ளனர்.

प्रजास्तद्गुरुणा नद्यो नभसेव विवर्धिताः ।
तस्मिंस्तु भूयसीं वृद्धिं नभस्ये ता इवाययुः ॥ ४१ ॥

**नभसा** - ஆவணி மாதத்தில், **नद्यः-इव**-நதிகள் (விருத்தி யடைவது) போல், **तद्गुरुणा** - அவனது தந்தை குசனால், **विवर्धिताः**-செழிப்பைப் பெற்ற, **प्रजाः**-பிரஜைகள்,-**नभस्ये**- புரட்டாசி மாதத்தில், **ताः-इव**- அந்நதிகள் (அதிகம் விருத்தி யடைவது) போன்றே, **तस्मिन्-तु** - அவன் காலத்திலும், **भूयसीम्** - அதிகமான, **वृद्धिम्**-செல்வச் செழிப்பை, **आययुः**- அடைந்தனர்.

(க. து.) கோடையில் காய்ந்துள்ள நதிகள் வர்ஷா கால மாதமான ஆவணியில் மழையினால் வெள்ளம் பெறுகின்றன. புரட்டாசியில் அதிக மழையால் நதிகள் மிகவும் விருத்தி யடை கின்றன. அது போல் குசனால் முன்பே அபிவிருத்தி யடைந்த ஜனங்கள் அதிதியின் காலத்தில் அதிக அபிவிருத்தியை அடைந் தனர்.

यदुवाच न तन्मिथ्या यद्ददौ न जहार तत् ।

सोऽभूद्भग्नव्रतः शत्रूनुद्धृत्य प्रतिरोपयन् ॥ ४२ ॥

**सः** - அவன், **यत्** - எதை, **उवाच** - கூறினானோ, **तत्** - அது, **न-मिथ्या-अभूत्** - ஒரு சமயமும் பொய்யாக வில்லை. **यत्** - எதை, **ददौ** - கொடுத்தானோ, **तत्** - அதை, **न जहार**- திரும்ப எடுத்துக் கொள்ளவில்லை; **शत्रून्** - பகைவர்களை, **उद्धृत्य** - வேரறுத்த பின், **प्रतिरोपयन् सः**-(மறுபடியும் அவர் களது இடத்தில்) நிலை நாட்டிய அவன், **भग्नव्रतः** - தன் உறுதிப்பாடு முறிந்தவனாக, **अभूत्** - ஆனான்.

(க-து.) அதிதி, சொன்ன சொற்படி நடந்து வந்தான். ஒரு தடவை அளித்த பொருளை எக்காரணம் கொண்டும் திரும்பக் கவர்ந்து கொள்ள வில்லை. தான் ஒரு முறை செய்ததை மாற்று வதில்லை என்பது அவனது விரதமாயிருந்தது. இத் தகைய விரதமுடைய அவன் ஒரு விஷயத்திலே மாத்திரம் தனது கொள் கைக்கு மாறி நடந்தான். அது எதுவெனில், அடியோடு முறிய டிக்கப்பட்ட அரசர்களை மறுபடியும் அவர்களது ராஜ்யத்திலே ஸ்தாபித்தான். தான் முன் செய்த காரியத்தை மாற்றியது இவ் வொன்றிலே தான். அதுவும் அவனது பெருமைக்குக் காரண மாகவே இருந்தது.

**'शत्रूनिति - प्रकृतिष्वन्तर्भूताः शत्रवो विवक्षिताः । न तु प्रतिराजाः । तज्जयस्य वक्ष्यमाणत्वात्' अरुणगिरिः ।**

वयोरूपविभूतीनामेकैकं मदकारणम् ।

तानि तस्मिन् समस्तानि न तस्योत्सिषिचे मनः ॥ ४३ ॥

**वयो-रूप-विभूतीनाम्** - பருவம், அழகு, செல்வம் இவை களில், **एकैकम्** - ஒவ்வொன்றும், **मदकारणम्**-செருக்கிற்குக் காரணம்; **तानि**-அவை மூன்றும், **तस्मिन्**-அவனிடத்தில், **समस्तानि** சேர்ந்திருந்தன; **तस्य**-அவனுடைய, **मनः**-மனம், **न उत्सिषिचे** - கர்வப்படவில்லை.

(க-து.) யௌவனம், அழகு, செல்வம் இம் மூன்றில் ஒவ்வொன்றும் மனிதனைக் கர்வமடையச் செய்யும். அவனிடம் இம் மூன்று காரணங்களிருப்பினும், சிறிதும் செருக்கின்றி இருந்தான் அதிதி.

इत्थं जनितरागासु प्रकृतिष्वनुवासरम् ।

अक्षोभ्यः स नवोऽप्यासीद्दृढमूल इव द्रुमः ॥ ४४ ॥

**इत्थम्** - இவ்வாறு, **अनुवासरम्** - தினந்தோறும் (எப்பொழுதும், **प्रकृतिषु** - ஜனங்கள், **जनित रागासु (सतीषु)** - அவனிடம் அன்புடையவர்களாக இருக்குங்கால், **सः**- அவன், **नवः अपि** - புதியவனாயினும், **दृढमूलः** - நன்கு வேரூன்றிய, **द्रुमः इव**-மரம் போல், **अक्षोभ्यः** - அசைக்க முடியாதவனாக, **आसीत्** - இருந்தான்.

(க-து) ஜனங்கள் தன்னிடம் ப்ரீதி செய்யும்படியான வகையில் நடந்த அவன் நன்கு வேரூன்றிய மரம் போல், உட்பகைவர், வெளிப் பகைவர் இருவராலும் வெல்ல முடியாத நிலையிலிருந்தான்.

ஜனங்களின் உதவி அவனுக்கு எப்பொழுதுமிருந்தது என்பது கருத்து.

अनित्याः शत्रवो बाह्याः विप्रकृष्टाश्च ते यतः ।

अतः सोऽभ्यन्तरान्नित्यान् षट् पूर्वमजयद्रिपून् ॥ ४५ ॥

**यतः** - எக் காரணத்தினாலோ, **बाह्याः** - புறத்திலுள்ள, **शत्रवः**-பகைவர்கள், **अनित्याः**-ஒரு நிலையிலில்லாதவர்களோ, **ते** - அவர்கள், **विप्रकृष्टाः च**-தொலைவிலும் இருப்பவர்களோ, **अतः**- அக் காரணத்தினாலே, **सः**- அவன், **अभ्यन्तरान्**- உள்ளே இருப்பவையும், **नित्यान्** - நிரந்தரமுமான, **षट् रिपून्** - ஆறு பகைவர்களை, **पूर्वम्**-முதலில், **अजयत्** - வென்றான்.

(க-து) புறத்திலேயுள்ள பகைவர்கள்—சத்ரு அரசர்கள்,—எப்பொழுதும பகைப்பவர்களல்லா. மேலும் அவர்கள் தொலை

விலே இருப்பவர்கள். ஆதலால் அவர்களை முதலில் வெல்ல வேண்டுவதில்லை. மனிதனது மனத்திலே இருப்பதால் உட் பகைவர்கள் எனக் கருதப்படுகின்ற காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்ற அறு பகையை முதலில் வென்றான். இவ்வுட் பகைகள் அருகிலே உள்ளன. எப் பொழுதுமே தீங்கை விளைவிக்கின்ற காரணத்தால் நித்ய (நிரந் தரமான) சத்ருக்களாம்.

प्रसादाभिमुखे तस्मिंश्चपलापि स्वभावतः ।

निकषे हेमरेखेव श्रीरासीदनपायिनी ॥ ४६ ॥

**स्वभावतः** - இயற்கையிலே, **चपला-अपि** - ஸ்திரமற்ற, (சஞ்சலமான), **श्रीः** -லக்ஷ்மியும், **प्रसादाभिमुखे** - அருள் புரி வதிலே நோக்குடையவனான, **तस्मिन्** - அவனிடத்தில்,- **निकषे**-உறை கல்லில், **हेमरेखा-इव**-தங்க ரேகை (இருப்பது) போல்,-**अनपायिनी** - நீங்காதவளாக, **आसीत्** - இருந்தாள்.

(க-து.) எல்லோரிடமும் அன்புடனிருந்த அவனிடத்தில் செல்வம், உறை கல்லில் தேய்த்த தங்க ரேகை நீங்காது நிற்பது போல், நீங்காது நிரந்தரமாக இருந்தது.

செல்வம் யாரிடமும் நீடித்து நிற்காது என்பதை **स्वभावतः चपलापि** - என்பதால் காட்டினார். உறை கல்லில் தேய்ப்பதால் அதில் ஒட்டிக் கொள்ளுகின்ற தங்கம், மெழுகை ஒத்தி எடுத்தாலன்றி எளிதிலே நீங்காது. அது போல் லக்ஷ்மி அவனிடம நித்யவாஸம் செய்து வந்தாள். **प्रमादविमुखे** - எனப்பாடம் கொண்டு, இந்திரியங்களின் வெற்றியால் கிடைத்த பயனாகிய நீடித்த செல்வத்துடன் இருத்தல் என்பது இதிலே கூறப்பட்டதென அருணகிரி உரை செய்வர்.

कातर्यं केवला नीतिः शौर्यं श्वापदचेष्टितम् ।

अतः सिद्धिं समेताभ्यामुभाभ्यामन्वियेष सः ॥ ४७ ॥

**केवला नीतिः** - ஆண்மையற்ற ராஜநீதி, **कातर्यम्**-பயந்த தன்மையாகிறது; **(केवलम्) शौर्यम्** - ராஜ நீதியற்ற வெற்றுப் பராக்ரமம், **श्वापदचेष्टितम्** - காட்டு மிருகங்களின் செயலாகும்; **अतः**-ஆகையால், **सः** - அவன், **समेताभ्याम्** - சேர்ந்த, **उभाभ्याम्** - இவ் விரண்டினுலும், **सिद्धिम्**-காரிய ஸித்தியை, **अन्वियेष** - அடைய முயன்றான்.

(க-து.) பௌருஷத்தை உபயோகிக்காமல் ராஜ நீதியினுல் மாத்திரம் காரியத்தை ஸாதிப்பது, அவ்வாறு முயல்பவர் பயங்கொள்ளி என்பதைக் காட்டும். அதே போல் ராஜ தந்திரத்தை உபயோகிக்காமல் சரீர பலத்தால் மாத்திரம் காரியங்களைச் சாதிப்பவர் முரட்டுத்தனமுள்ள காட்டுமிருகம் போன்றவராவர். எனவே, ராஜ தந்திரம், பராக்ரமம் இரண்டையும் தக்க அளவிலே சேர்த்து அதன் மூலம் காரியங்களைச் சாதிக்க முயன்ருன் அதிதி.

न तस्य मण्डले राज्ञो न्यस्तप्रणिधिदीधितेः ।

अदृष्टमभवत् किञ्चिद्व्यभ्रस्येव विवस्वतः ॥ ४८ ॥

**न्यस्त-प्रणिधि-दीधितेः**-எங்கும் ஏவப்பட்ட சாரர்களாகிய கிரணங்களையுடைய, **तस्य** -அவனுக்கு, **व्यभ्रस्य** - மேகமற்ற, **विवस्वतः इव** - சூரியனுக்குப் போல், **मण्डले** - ராஜ்யத்தில், **अदृष्टम्** - அறியப்படாதது, **किञ्चिदपि** - எதுவும், **न अभवत्** - இல்லை.

(க-து.) மேகமற்ற ஆகாயத்திலுள்ள சூரியனது கிரணங்கள் செல்லாத இடமில்லை. அது போல் எங்கும் சாரர்களை அனுப்பிய அதிதி அறியாத விஷயம் எதுவும் அவன் ராஜ்யத்தில் கிடையாது. சாரர்கள் மூலம் அவன் எல்லாவற்றையும் அறிந்திருந்தான்.

அதிதியாகிய சூரியனுக்குக் கிரணங்கள் அவனது வேவுகாரர்களே. 'गावः पश्यन्ति गन्धेन वेदैः पश्यन्ति वै द्विजाः । चारैः पश्यन्ति राजानः चक्षुर्भ्यामितरे जनाः ॥' என்பதைக் காண்க.

रात्रिंदिवविभागेषु यदादिष्टं महीक्षिताम् ।
तत्सिषेवे नियोगेन स विकल्पपराङ्मुखः ॥ ४९ ॥

**रात्रिन्दिव-विभागेषु** - இரவு, பகல் இவைகளின் பகுதி களில், **महीक्षिताम्** - அரசர்களுக்கு (செய்யப்பட வேண்டிய தாக), **यत् आदिष्टम्** - எது (சாஸ்திரங்களிலே) விதிக்கப் பட்டுள்ளதோ, **तत्**-அதை, **सः** - அவன், **विकल्प-पराङ्मुखः (सन्)** - ஸந்தேகமற்றவனாக, **नियोगेन**- உறுதியாக, **सिषेवे** - செய்து வந்தான்.

(க-து) அரசரால் பகலிலும் இரவிலும் அவ்வக்காலங்களில் அனுஷ்டிக்கப்பட வேண்டியதாக மனு முதலியவர்களால் விதிக் கப்பட்டுள்ள காரியங்களை அதிதி சிறிதும ஸந்தேகமின்றி உறுதி யான மனத்துடன் அனுஷ்டித்து வந்தான்.

मन्त्रः प्रतिदिनं तस्य बभूव सह मन्त्रिभिः ।
स जातु सेव्यमानोऽपि गुप्तद्वारो न सूच्यते ॥ ५० ॥

**तस्य** - அவ்வரசனுக்கு, **प्रतिदिनम्** - ஒவ்வொரு நாளும், **मन्त्रिभिः सह**-மந்திரிகளுடன் கூட, **मन्त्रः** - ரஹஸ்ய ஆலோ சனை, **बभूव** - இருந்தது. **सः** - அவ்வாலோசனை, **सेव्यमानः- अपि** - (பிரதி தினம) செய்யப்பட்டதாயினும், **गुप्तद्वारः** - வெளி வரும் வழிகள் பாதுகாக்கப்பட்டதாக, **जातु (अपि)**- ஒரு பொழுதும், **न सूच्यते** - (பிறருக்குக்) காண்பிக்கப்பட வில்லை.

(க-து.) அதிதி தினந்தோறும் ராஜாங்கக் காரியங்களை மந் திரிகளுடன் ரஹஸ்யத்தில் ஆலோசித்தான். ரஹஸ்யங்கள் வெளி வரும வழிகள நன்கு பாதுகாககப்பட்டிருந்ததால் அவனது ஆலோசனைகள் பிறர் அறிய முடியாதிருந்தன.

'**तस्य संवृतमन्त्रस्य गूढाकारेङ्गितस्य च**' [1-20] எனக் கூறியதையும் நோக்குக. இச் சுலோகத்திலேயுள்ள நிகழ் கால வினை பொருத்தமானதன்று; '**स**' என்ற சொல்லைச் சேர்த்துப் பொருள் கூறுவது நலம்.

परेषु स्वेषु च क्षिप्तैरविज्ञातपरस्परैः ।

सोऽपसर्पैर्जजागार यथाकालं स्वपन्नपि ॥ ५१ ॥

**यथाकालम्** - உரிய காலத்தில், **स्वपन्-अपि** - தூங்கு கின்றவனாயினும், **सः** - அவன், **परेषु** - சத்ருக்கள் விஷயத் திலும், **स्वेषु च** - தம்மைச் சேர்ந்தோரிடத்திலும், **क्षिप्तैः** - ஏவப்பட்டுள்ளவர்களும், **अविज्ञात परस्परैः** - ஒருவரை ஒரு வர் அறியாதவர்களுமான, **अपसर्पैः**-வேவுகாரர்களின் மூலம், **जजागार** - விழிப்புடனிருந்தான்.

(க-து.) அதிதி தம்மைச் சேர்ந்த மந்திரி முதலானவர்களை யும், சத்ருக்களையும் கவனித்து வரும்படி வேவுகாரர்களை நியமித் திருந்தான். அவ் வேவுகாரர்களும் கூட ஒருவரை ஒருவர் தெரிந்து கொள்ள முடியாதபடி அவ்வளவு திறமையாக அவனது வேவு பார்க்கும் முறை அமைந்திருந்தது. எனவே, நாட்டில் நடக் கும் எல்லாவற்றையும் அவன் நன்கு அறிந்தான்.

'**स्वपन्नपि जजागार**' - 'தூங்குபவனாயினும் விழிப்புட னிருந்தான்' என்பது முரண் போல் தோன்றுகின்றதாயி னும், **जजागार** - என்பதற்கு 'அறிந்தான்' எனப் பொருள் கொள்வதால் அம்முரண் நீங்குகின்றது.

दुर्गाणि दुर्ग्रहाण्यासंस्तस्य रोद्धुरपि द्विषाम् ।

न हि सिंहो गजास्कन्दी भयाद्गिरिगुहाशयः ॥ ५२ ॥

**द्विषाम्** - பகைவர்களை, **रोद्धुः अपि**- தகைபவனாயினும், **तस्य** - அவனது, **दुर्गाणि** - அரண்கள்; **दुर्ग्रहाणि** - பிறரால் பிடிக்க முடியாதனவாக, **आसन्**- இருந்தன. **गज-आस्कन्दी**- யானைகளை எதிர்க்கின்ற, **सिंहः**-சிங்கம், **भयात्**-பயத்தினால், **गिरि-गुहा-शयः न हि** - மலைக் குகையில் வசிப்பதில்லை அல் லவா ?

(க-து.) அதிதி பகைவர்களை எதிர்ப்பவனேயன்றி, பிறரால் அவன் எதிர்க்கப்படுபவன் அல்லன்; பிறரால் எதிர்க்கப்படுதற் கான அச்சமில்லாவிடினும் அவன் அரண்களை நன்கு அமைத் திருந்தான். அவைகள் எளிதிலே பகைவரால் எதிர்க்கப்பட முடியாதனவாயிருந்தன. அரசர்க்குப் பல வகை அரண்கள் வேண்டுமென ராஜநீதி கூறுவதால் அவன் அரண்கள் அமைத் திருந்தானே அன்றிப் பகைவர்களிடம் அச்சத்திலைன்று. பல முள்ள யானைகளைக் கொல்லுகின்ற சிங்கம் தன்னிச்சையால் குகையில் வசிக்கின்றதேயன்றி மற்றப் பிராணிகளிடம் அச்சம் கொண்டல்லவே!

भव्यमुख्याः समारम्भाः प्रत्यवेक्षानिरत्ययाः ।
गर्भशालिसधर्माणस्तस्य गूढं विपेचिरे ॥ ५३ ॥

**भव्यमुख्याः** - நன்மையையே முக்ய லக்ஷ்யமாகக் கொண்டவையும், **प्रत्यवेक्षा-निरत्ययाः** - அடிக்கடி கவனித் தலால் இடையூறற்றனவுமான, **तस्य राज्ञः** - அவ்வரசனது, **समारंभाः** - முயற்சிகள், **गर्भशालि-सधर्माणः** - உள்ளே முதிர் கின்ற நெல்லரிசியின் தன்மையுடையனவாக, **गूढम्** - பிறர் அறியாவண்ணம், **विपेचिरे** - பயனளித்தன.

(க-து) அவனது முயற்சிகள் எல்லாம் நன்மை பெறு வதையே நோக்காகக் கொண்டன, தீங்கிழைப்பதை யன்று. அடிக்கடி கவனித்து வந்ததால் அம்முயற்சிகள் இடையூறின்றி, நெல்லுக்குள் அரிசி முதிராவதுபோல் பிறர் அறியாவண்ணம் பயனளித்தன. பயனளித்த பின்பே அவனது முயற்சிகள் பிறர்க்குப் புலப்பட்டன.

**फलानुमेयाः प्रारम्भाः**- என [1-20] முன்பு கூறியதையும் காண்க. **गर्भशालि-सधर्माणः** - நெற்கதிர் வெளி வரும் பொழுதே நெல்லின் முழு உருவும் உண்டாகிறது. பிறகு அதன் உருவும் அளவும் மாறுவதில்லை. அதனுள் பால் உண்டாகி, அப்பால் இறுகிப் பிறகு அரிசியாகின்றது. நெல்லினுள் அரிசி உண்டாவது உண்டாகும் நிலையில் கண் களுக்குப் புலனாகாது முற்றிய பிறகே தெரிகின்றது. நெல்,

அரிசியை மூடி வைத்துத் தருவது போல் அவனது முயற்சிகளும் பிறர் அறியாவண்ணம் பயன்களை அளித்தன.

शालि - 'கதிர் நிலையில் வெளியிலே தெரியாது தண்டினுள்ளே முதிர்கின்ற ஒரு வகை நெல்' என்பர் நாராயணர். 'स्तंबाभ्यन्तरे एव ये परिणमन्ति ते गर्भशालय:' உளுந்து என்று பொருள் கூறுவர் வல்லபர்.

अपथेन प्रववृते न जातूपचितोऽपि स: ।

वृद्धौ नदीमुखेनैव प्रस्थानं लवणाम्भस: ॥ ५४ ॥

स: - அதிதி, उपचित:-अपि - மிகச் செல்வமுடையவனாயினும், जातु (अपि) - ஒரு பொழுதும், अपथे - தகாத வழியில், न प्रववृते-செல்லவில்லை; लवणाम्भस: - கடலிற்கு, वृद्धौ (सत्यां अपि)-விருத்தி ஏற்படும் பொழுதும், नदी मुखेन-एव-நதியின் முகத்வாரம் வழியாகவே, प्रस्थानम्-செல்லுதல் (இருக்கின்றது)..

(க-து) கடல் பொங்குமாயின், நதிகளின் முகத்வார வழியே பெருகுகின்றதேயன்றிக் கரையை உடைத்துக் கொண்டு செல்வதில்லை. அதுபோல் மிகச்செல்வமுடையவனாயினும் அவன் தகாதவழிகளில் செல்லவில்லை.

उपचित:-செல்வத்திலும் பலத்திலும் உயர்ந்துள்ளவன்

कामं प्रकृतिवैराग्यं सद्य: शमयितुं क्षम: ।

यस्य कार्य: प्रतीकार: स तन्नैवोदपादयत् ॥ ५५ ॥

प्रकृति वैराग्यम् - ஜனங்களின அதிருப்தியை, सद्य: - உடனே, कामम् - நன்கு, शमयितुम् - தடுப்பதற்கு, क्षम: - சக்தியுடையவனை, स: - அவன், यस्य- எந்த அத்ருப்திக்கு, प्रतीकार: - பரிஹாரம், कार्य: - செய்யப்பட வேண்டியதாக இருந்ததோ, तत् (वैराग्यम्) - அத்தகைய அத்ருப்தியை; न-उदपादयत् - உண்டாக்கவில்லை.

(க-து) ஜனங்கள் அத்ருப்தி கொள்வார்களாயின் அதை உடனே பரிஹரிப்பதற்கான திறமையுடையவனுயினும் அதிதி அத்தகைய அத்ருப்தி எதையும் ஜனங்களுக்கு உண்டாக்கவில்லை.

மருந்து கையிலிருக்கிற தென்பதற்காக எவரும் வியாதியை வரவழைத்துக் கொள்ளார். 'சேற்றைத் தொட்ட பின் அலம்புவதைக் காட்டிலும் தொடாமல் இருப்பதே சாலச் சிறந்தது'. என்பது போல் அத்ருப்தி உண்டான பின் பரிஹாரம் செய்வதைக் காட்டிலும் அத்ருப்தியை உண்டாக்காமலிருப்பதே நல்லதென்பது அதிதி கருத்து. **जुगोपात्मानमत्रस्तः** என்று [1-21] முன் கூறியதற்கு வியாக்யானமாக இச்சுலோகத்தைக் கருதலாம்.

शक्येष्वेवाभवद्यात्रा तस्य शक्तिमतः सतः ।

समीरणसहायोऽपि नाम्भःप्रार्थी दवानलः ॥ १६ ॥

**शक्तिमतः सतः-अपि** - சக்தி நிறைந்தவனுயினும், **तस्य** - அவனுக்கு, **शक्येषु-एव** - (தன்னுல்) வெல்லத் தக்கவர்கள் விஷயத்திலேயே, **यात्रा**-யுத்த யாத்ரை, **अभवत्**-இருந்தது ; **समीरण सहायः-अपि** - காற்றைத் துணையாகக் கொண்டதாயினும், **दवानलः** - காட்டுத் தீ, **अंभः - प्रार्थी** - தண்ணீரை எதிர்ப்பதாக, **न (भवति)** - ஆவதில்லை

(க-து) ப்ரபுசக்தி, உத்ஸாஹ சக்தி, மந்த்ரசக்தி என்ற மூவகைச்சக்தி நிறைந்தவனுயினும், அதிதி, தான் ஜயிக்கக்கூடியவர்களை மாத்திரமே எதிர்த்துப் போரிட்டானே அன்றி, தன்னைக் காட்டிலும் அதிகபலமுடையவர்களை அவன் எதிர்க்க வில்லை. காற்றைத்துணைக்கொண்டு பலம் பெற்றுள்ள காட்டுத்தீ காட்டை எரிக்க முற்படுமே யன்றி தண்ணீரை எரிக்கத் துணியாதல்லவா?

அதிதி தன் பலமறிந்து போரிட்டான். அபஜயத்தைப் பெற வீணே முயன்றுனில்லை என்பது கருத்து.

न धर्ममर्थकामाभ्यां बबाधे न च तेन तौ ।

नार्थं कामेन कामं वा सोऽर्थेन सदृशस्त्रिषु ॥ १७ ॥

**सः** - அவ்வரசன், **अर्थकामाभ्याम्** - அர்த்தம், காமம் இரண்டினலும், **धर्मम्**-தர்மத்தை, **न बबाधे**-பாதிக்கவில்லை; **तेन च**-தர்மத்தினலும், **तौ** - அர்த்த காமங்களை, **न (बबाधे)**-பாதிக்கவில்லை; **अर्थम्**-அர்த்தத்தை, **कामेन**-காமத்தினலோ, **कामं वा** - காமத்தை, **अर्थेन** - அர்த்தத்தினலோ, **न बबाधे** - பாதிக்கவில்லை; **(किन्तु)** - ஆனல், **त्रिषु** - அம்மூன்றினிடத்திலும், **सदृशः** - ஒத்த மனே நிலையுடையவனுக, **अभूत्** - இருந்தான்.

(க-து) பொருளிலும் இன்பத்திலும் கருத்தை வைத்துத் தர்மத்தைக் கைவிடவில்லை. அதேபோல் தர்மத்திலே மிகப்பற்றுக்கொண்டு பொருளையும் இன்பத்தையும் அவன் இழக்கவில்லை. மிக இன்பம் நுகர வேண்டுமென்பதற்காகப் பொருளை இழக்கவில்லை. பொருளீட்டும் விருப்பத்தினல் இன்பம் துய்க்காமலுமில்லை. எனவே தர்மார்த்த காமங்களை அவ்வவற்றின் தன்மைக்கு ஏற்ற அளவில் ஸம்பாதித்தும் அனுபவித்தும் வந்தான்.

**'धर्मार्थकामाः सममेव सेव्याः योऽप्येकसक्तः स जनो जघन्यः ।'** என்பதைக் காண்க. **'कच्चिदर्थेन वा धर्मं अर्थं धर्मेण वा पुनः । उभौ वा प्रीतिलोभेन कामेन च न बाधसे ॥ कच्चिदर्थं च कामं च धर्मं च जयतां वर । विभज्य काले कालज्ञ सर्वान् वरद सेवसे'** [அயோத்யா. 100-62, 63] என்பது ராமாயணம்.

हीनान्यनुपकर्तॄणि प्रवृद्धानि विकुर्वते ।

तेन मध्यमशक्तीनि मित्राणि स्थापितान्यतः ॥ ५८ ॥

**हीनानि** - பலம் குறைந்த, **मित्राणि**-நண்பர்கள், **अनुपकर्तॄणि** - உபகாரம் செய்யமாட்டார்கள்; **प्रवृद्धानि** - அதிக பலமுடைய நண்பர்கள், **विकुर्वते** - விரோதமாக நடந்து கொள்வர்; **अतः** - இக்காரணத்தால், **तेन** - அவ்வரசனலே, **मित्राणि** - (அவனது) நண்பர்கள், **मध्यम शक्तीनि** - நடுத்தர

மான பலமுடையவர்களாகவே, **स्थापितानि** - வைக்கப்பட்டனர்.

(க-து) பலம் குறைந்த நண்பர்களால் உதவி ஒன்றுமிராது. அதிக பலமுடையவர்களாயின் ஏதாவது தீங்கு செய்யவும் முற்படலாம். ஆகவே அதிதி, தன் நண்பர்களை, பல மற்றவர்களாகவோ, அதிக பலமுடையவர்களாகவோ செய்யாமல், தனக்கு ஒத்த பலமுடையவர்களாகவே வைத்திருந்தான்.

परात्मनोः परिच्छिद्य शक्त्यादीनां बलाबलम् ।
ययावेभिर्बलिष्ठश्चेत्परस्मादास्त सोऽन्यथा ॥ १९ ॥

**सः** - அவன், **पर-आत्मनोः** - சத்ருவினுடையவும், தன்னுடையவும், **शक्त्यादीनाम्** - சக்தி முதலியவற்றின், **बल-अबलम्** - நிறைவையும் குறைவையும், **परिच्छिद्य** - நன்கு அறிந்து கொண்டு, **एभिः**-(மேற்கூறிய) சக்தி முதலியவற்றால், **परस्मात्**-சத்ருவைக் காட்டிலும், **बलिष्ठः चेत्** - (தான்) மிகப் பலமுடையவனாயிருப்பின், **ययौ**-(அவனை) எதிர்த்துச் சென்றான்; **अन्यथा** - அவ்வாறு இல்லாவிடின், **आस्त** - (எதிர்க்காது) இருந்தான்.

(க-து) அதிதி தன் எதிரியினுடைய பலாபலங்களை நன்கு அறிந்தபின், சத்ருவை விடத்தான் அதிக பலமுடையவனாக இருந்தபொழுதே போரிடச்சென்றான். பலம் குறைந்தபொழுது செல்லவில்லை

**शक्त्यादीनाम्** - சக்தி; ப்ரபு சக்தி, உத்ஸாஹ சக்தி, மந்த்ர சக்தி என்பன. இங்கு **आदि** என்ற சொல், இடம், காலம் முதலியவற்றைக் குறிக்கும்.

यदा मन्येत मतिमान् हृष्टं पुष्टं स्वकं बलम् ।
परस्य विपरीतं च तदा विग्रहमाचरेत् ॥

என்பர் காமந்தகர்.

कोशेनाश्रयणीयत्वमिति तस्यार्थसंग्रहः ।
अम्बुगर्भो हि जीमूतश्चातकैरभिनन्द्यते ॥ ६० ॥

**कोशेन हि** - நிதியினாலேயே, **आश्रयणीयत्वम् (भवति)** - (அரசனுக்கு) எல்லோராலும் அணுகப்படும் தன்மை (உண்டாகின்றது), **इति** - என்ற காரணத்தால், **तस्य** - அவ்வதிதிக்கு, **अर्थसङ्ग्रहः**-பொருளீட்டுதல் இருந்தது. **अम्बुगर्भः**- நீர் நிறைந்த, **जीमूतः हि** - மேகம் தான், **चातकैः** - சாதகப் பறவைகளால், **अभिनन्द्यते** - கொண்டாடப்படுகிறது.

(க-து) நீருள்ள மேகத்தையே சாதகப்பக்ஷிகள் வரவேற்கும். நீரற்றதை அல்ல. அதுபோல் பணமிருப்பின் அரசனை எல்லோரும் அணுகுவர். பலருக்கும் உதவ இயலும், என்ற இக்காரணத்தினாலே அதிதி பொருளீட்டினானன்றிப் பேராசையால் அல்ல.

'धर्महेतोस्तथार्थाय भृत्यानां रक्षणाय च ।
आपदर्थं च संरक्ष्यः कोशो धर्मवता सदा ॥'

என்பர் [4. 22] காமந்தகர்.

परकर्मापहः सोऽभूदुद्यतः स्वेषु कर्मसु ।
आवृणोदात्मनो रन्ध्रं रन्ध्रेषु प्रहरन् रिपून् ॥ ६१ ॥

**सः** - அவ்வதிதி, **स्वेषु** - தனது, **कर्मसु**-(நன்மைக்கான) செயல்களில், **उद्यतः** முயற்சியுள்ளவனாக இருந்துகொண்டு, **पर-कर्म-अपहः** - பிறருடைய முயற்சிகளை அழிப்பவனாய், **अभूत्** - இருந்தான். **रिपून्** - பகைவர்களை, **रन्ध्रेषु** - பலமற்ற நிலையில், **प्रहरन्** - தாக்குபவனாய், **आत्मनः** - தனது, **रन्ध्रम्** - துர்பல நிலையை, **आवृणोत्** - வெளிக் காட்டாதிருந்தான்.

(க-து) தனது நன்மைக்கான முயற்சிகளிலீடுபட்ட அதிதி, மற்ற அரசர்களின் முயற்சிகள் வீணாகும்படிச் செய்தான். தனக்குள்ள குறைகளைப் பிறர் அறியாவண்ணம் செய்துகொண்டு பகைவரின் துர்பல நிலையை அறிந்து தாக்கினான்.

பகைவரின் விருத்தியைத் தடுப்பதும் தன்னுயர்வுக்கான காரணங்களில் ஒன்றாகுமாதலால் அதிதி பகைவரின் அரண் முதலியவற்றை அழித்தான்.

தன் பலக் குறைவு எது என்பதைப் பிறர் அறிய விடுதல் கூடாது.

'नास्य च्छिद्रं परो विद्याद् विद्याच्छिद्रं परस्य तु ।
गूहेत् कूर्म इवांगानि रक्षेद् विवरमात्मनः ॥'

என்பர் [7. 105] மனு.

पित्रा संवर्धितो नित्यं कृतास्त्रः सांपरायिकः ।

तस्य दण्डवतो दण्डः स्वदेहान्न व्यशिष्यत ॥ ६२ ॥

**पित्रा** - அவனுடைய தந்தையினால், **नित्यम्**-எப்பொழுதும், **संवर्धितः** - விருத்தி செய்விக்கப்பட்டதும், **कृतास्त्रः** - ஆயுதங்களிலே நன்கு பயிற்றுவிக்கப்பட்டதும், **सांपरायिकः**- போர் செய்வதில் திறமையுடையதுமான, **दण्डवतः तस्य** - புலனடக்கமுடைய அவ்வரசனது, **दण्डः**-ஸேனை, **स्वदेहात्**- அவனது தேஹத்திலின்றும், **न व्यशिष्यत**-வேறுபட்டதாக இல்லை.

(க-து) தன் தந்தையால் நன்கு விருத்தி செய்விக்கப்பட்டு, ஆயுதங்களிலே நன்கு பயிற்றுவிக்கப்பட்டதாய், போர் செய்வதில் திறமை கொண்டதான மூல பலத்தை, தன் சரீரம் போல் கருதிக் காத்து வந்தான்.

தந்தை முறையாக வந்த ஸேனையை மூலபலம் என்பர். இப்படை அரசரிடம் மிக்க பக்தியுடையது. பகைவர்களின் சூழ்ச்சிக்கு வசமாகாதது. ஆதலால் அதிதி அதைத் தன்னுடல் போல் கருதிக் காப்பாற்றினான். **दण्डवतः** - 'பெரும் படையுடைய' என்றும் பொருள் உரைப்பர். **संवर्धित**, **कृतास्त्र**, **सांपरायिक** என்ற சொற்களின் வேற்றுமையை மாற்றி, **स्वदेहात्** என்பதற்கு விசேஷணமாகக் கொள்ள

வேண்டும்; ' संवर्धितात् - வளர்க்கப்பட்டதும், कृतास्त्रात् - ஆயுதங்களிலே பயிற்றுவிக்கப்பட்டதும், सांपरायिकात् - போரில் திறமையுடையதுமான, स्वदेहात् - தன்னுடலினின்றும் ' என உரைக்க வேண்டும். உடல் தனக்கு வசமாக இருப்பது போல் மூல பலமும் அவனுக்கு அடங்கி இருந்தது என்பது உவமையால் பெறப்படும். 'एवंविधं मौलबलं स्वशरीरमिव तस्य कार्येषु विधेयमासीदित्यर्थः ' अरुणगिरिः।

सर्पस्येव शिरोरत्नं नास्य शक्तित्रयं परः ।
स चकर्ष परस्मात्तदयस्कान्त इवायसम् ॥ ६३ ॥

**सर्पस्य** - ஸர்ப்பத்தின், **शिरोरत्नम् इव** - சிரஸிலுள்ள ரத்னத்தை (யாரும் கவராதது) போல், **अस्य**- அவனுடைய, **शक्तित्रयम्** - மூவகைச் சக்திகளையும், **परः** - பகைவன், **न चकर्ष** - கவரவில்லை; **सः (तु)** - அவன், **परस्मात्**-பகைவனிடமிருந்து, **तत्** - அம்மூன்றையும், **अयस्कान्तः** - காந்தக் கல், **आयसम् इव** - இரும்பை (இழுப்பது) போல், **चकर्ष** - (தன்னிடம்) இழுத்துக் கொண்டான்.

(க-து) ஸர்ப்பத்தின் தலையிலுள்ள ரத்னத்தை எவரும் கவர முடியாதது போல அவனுடைய மூவகைச் சக்திகளை எவரும் கவர முடியவில்லை. ஆனால் அவன், அயஸ்காந்தம் முயற்சி ஏதுமின்றி எளிதிலே இரும்பைத் தன்னிடம் இழுத்துக் கொள்வது போல பகைவரின் மூவகைச் சக்திகளையும் தன்னிடம் இழுத்துக் கொண்டான்.

இவ்வுபமானத்தினால் அவன் சிரமமின்றி எளிதிலே சக்திகளைக் கவர்ந்தான் என்பது தெளிவு. இங்குச் சக்தி என்றது சக்தியினால் கிடைக்கப்பட்ட பொருள்களை.

वापीष्विव स्रवन्तीषु वनेषूपवनेष्विव ।
सार्थाः स्वैरं स्वकीयेषु चेरुर्वेश्मस्विवाद्रिषु ॥ ६४ ॥

**स्रवन्तीषु** - நதிகளிலே, **वापीषु-इव** - சிறு தடாகங்களில் (செல்வது) போலும், **वनेषु** - காடுகளிலே, **उपवनेषु-इव** - உத்யானங்களில் (சஞ்சரிப்பது) போலும், **अद्रिषु** - மலை களிலே, **वेश्मसु-इव** - (தமது) வீடுகளில் (சஞ்சரிப்பது) போலும், **सार्थाः** - (அவனுடைய) வணிகர்கள், **स्वैरम्** - தம் இச்சைப்படி, **चेरुः** - சஞ்சரித்தனர்.

(க-து.) அவனுடைய நாட்டிலுள்ள வியாபாரிகள் திருடர் பயமும், துஷ்ட பிராணிகளின் பயமுமின்றி நதிகளிலும், வனங்களிலும், மலைகளிலும் தம்மிச்சைப்படித் தடையின்றிச் சென்றனர்.

வியாபாரிகள் ஜல மார்க்கத்திலும் தரை மார்க்கத்தி லும் அச்சமின்றிச் சென்றனர் என்பது கருத்து.

तपो रक्षन् स विघ्नेभ्यस्तस्करेभ्यश्च संपदः ।
यथास्वमाश्रमैश्चक्रे वर्णैरपि षडंशभाक् ॥ ६१ ॥

**विघ्नेभ्यः** - இடையூறுகளினின்று, **तपः** - தவத்தையும், **तस्करेभ्यः** - திருடர்களினின்று, **संपदः च** - செல்வத்தையும், **रक्षन्** - ரக்ஷிப்பவனாகிய, **सः राजा** - அவ்வரசன், **आश्रमैः** - நால்வகை ஆச்ரமத்தினராலும், **वर्णैः-अपि** - நான்கு வர்ணத் தவராலும், **यथास्वं** - தம் தமது பொருளுக்குத் தக்கவாறு, **षडंश-भाक्** - ஆறுவது பாகத்தைப் பெறுமவனாக, **चक्रे** - செய்யப்பட்டான்.

(க-து) நன்கு பாதுகாக்கும் அரசன் ஜனங்களது வருவா யில் ஆறில் ஒரு பகுதியைப் பெறுகின்றான். அதிதி, மஹர்ஷி களின் தவத்தை இடையூறு நேராதபடி பாதுகாத்தான். மக்களின் செல்வத்தைத் திருடர் கொள்ளாதபடி ரக்ஷித்தான். எனவே, மஹரிஷிகள் தம் பொருளான தவத்தில் ஒரு பகுதி யையும், ஜனங்கள் தம் செல்வத்தில் ஆறில் ஒரு பங்கையும் அவனுக்கு அளித்தனர்.

**आश्रमाः** - பிரம்மசர்யம், கிருஹஸ்தாச்ரமம், வானப்ர ஸ்தம், ஸந்நியாஸம் என நான்கு; பிராம்மணர், க்ஷத்ரியர்,

வைசியர், நான்காமவர் என வர்ணமும் நான்கு. ஆச்ரமம் வர்ணமிரண்டில் ஒன்றைக் கூறினாலே போதுமானது. ஆச்ரமம, வர்ணம் என்றது ஆச்ரமத்தினரையும் வர்ணத்தினரையும். ஆச்ரமம் என்ற சொல் மஹரிஷிகளை மாத்திரம குறித்தது என்பர் நாராயணர்.

खनिभिः सुषुवे रत्नं क्षेत्रैः सस्यं वनैर्गजान् ।
दिदेश वेतनं तस्मै रक्षासदृशमेव भूः ॥ ६६ ॥

**भूः** - பூமி, **तस्मै** - அவனுக்கு, **रक्षासदृशम्-एव** - (அவனளித்த) பாதுகாப்பிற்குத் தக்க வாறே, **वेतनम्** - கூலியை, **दिदेश** - கொடுத்தது; **खनिभिः** - சுரங்கங்களின் மூலம், **रत्नम्** - ரதனங்களையும், **क्षेत्रैः** - நிலங்களின் மூலம், **सस्यम्** - தான்யங்களையும், **वनैः** - காடுகளின் மூலம, **गजान्** - யானைகளையும, **सुषुवे** - ஈன்றது.

(க-து) அரசன் எந்த அளவு பூமியைச் சிரத்தையுடன் பாதுகாக்கின்றானோ அந்த அளவிற்கே பூமி அவனுக்குக் கூலி தரும். எனவே, அதிதி பூமியை ரக்ஷித்ததற்கு ஏற்றபடி பூமியும், சுரங்கங்களினின்றும் ரத்னங்களையும, நிலங்களின் மூலம் தான்யங்களையும், காடுகளின் மூலம் யானைகளையும் அளித்தது.

**रत्नम्** - ஜாதி ஒருமை ; பலவகை ரத்னங்களை என்பது பொருள்.

स गुणानां बलानां च षण्णां षण्मुखविक्रमः ।
बभूव विनियोगज्ञः साधनीयेषु वस्तुषु ॥ ६७ ॥

**षण्मुख विक्रमः** - ஸுப்ரமண்யருக்கு ஒத்த பராக்ரமமுடைய, **सः** - அவன், **साधनीयेषु** - சாதிக்கப்படவேண்டிய, **वस्तुषु** - காரியங்களில், **षण्णाम्** - அறுவகை, **गुणानाम्** - குணங்களுடையவும், **बलानाम् च** - பலங்களுடையவும், **विनियोगज्ञः** - உபயோகத்தை அறிந்தவனாக, **बभूव** - இருந்தான்.

(க-து) அதிதி, எந்தக் காரியத்தில் எவ்வகைப் படையை உபயோகிக்க வேண்டுமென்பதையும், எந்த உபாயத்தைக் கைக் கொள்ள வேண்டுமெனவும நன்கு அறிந்திருந்தான்.

, அறுவகைப் படைகள்: ஸர்க்கம் 8. சுலோகம் 21 குறிப்பைக் காண்க.

அறுவகை உபாயங்கள்: ஸர்க்கம் 4. சுலோகம் 26 குறிப்பைக் காண்க.

**"यो यस्मिन् कर्मणि कुशलस्तं तस्मिन्नेव योजयेद्' इति हि चाणक्यसूत्रम्" नारायणः।**

इति क्रमात् प्रयुञ्जानो राजनीतिं चतुर्विधाम् ।

आ तीर्थादप्रतीघातं स तस्याः फलमानशे ॥ ६८ ॥

**इति** - இவ்வாறு, **चतुर्विधाम्** - நால்வகை, **राजनीतिम्**- ராஜ நீதியை, **क्रमात्** - முறையே, **प्रयुञ्जानः** - உபயோகிக்கின்ற, **सः** - அவன், **आ तीर्थात्** - (பதினெட்டு வகை) அதிகாரிகள் வரை, **तस्याः** - அந்நீதியின், **फलम्** - பயனை, **अप्रतीघातम्** - தடையின்றி, **आनशे** - பெற்றான்.

(க-து) ஸாம, தான. பேத, தண்டம் என்ற நால்வகை உபாயங்களை இடமறிந்து தக்க முறையில் உபயோகித்து, அவ்வரசன் அவற்றின் பயனை எல்லோரிடமிருந்தும் தடையின்றிப் பெற்றான்.

**तीर्थः** - என்றது, அரசருடன் நெருங்கிப் பழகுகின்ற மந்திரி, புரோஹிதர், இளவரசன், கோட்டைத் தலைவன் முதலிய பதினெட்டு அதிகாரிகளை; இவர்களிடையில மேற் கூறிய நால்வகை உபாயங்களை சாஸ்திரங்களில் கூறிய முறையில உபயோகித்துப் பன்னிரண்டு வகை அரசர்களிலும் தான் தலைவனாக இருக்கும் நிலையைப்பெற்றான்.

பன்னிரண்டு வகை அரசர்: ஸர்க்கம் 9, சுலோகம் 15, குறிப்பைக் காண்க.

कूटयुद्धविधिज्ञेऽपि तस्मिन् सन्मार्गयोधिनि ।

भेजेऽभिसारिकावृत्तिं जयश्रीर्वीरगामिनी ॥ ६९ ॥

**कूट युद्ध विधिज्ञे-अपि** - கபட யுத்த முறையை அறிந்தவனாயினும், **सन्मार्ग योधिनि** - தர்ம முறையில் சண்டையிடுகின்ற, **तस्मिन्** - அவன் திறத்தில், **वीर गामिनी**-வீரனையடைவதையே இயற்கையாகக் கொண்ட, **जयश्रीः**-வெற்றித் திரு, **अभिसारिका वृत्तिम्**-'அபிஸாரிகை'யின் தன்மையை, **भेजे** - ஏற்றாள்.

(க-து) கபட யுத்தமுறைகளை அறிந்தவனாயினும் அதிதி, தர்மயுத்தமே புரிந்தான் வீரர்களையடைகின்ற வெற்றித்திரு அவனிடம் தானே அன்பு கொண்டு வந்தாள்.

அவன் எங்கும் எளிதிலே வெற்றி பெற்றான் என்பது கருத்து. வெற்றியை லக்ஷ்மியாக உருவகம் செய்தார். காதலனை விரும்பித் தானே அவனிருக்குமிடம் செல்பவளை **अभिसारिका** என்பர். வெற்றி அதிதியைத் தேடி வந்ததால் வெற்றித் திரு அவன் விஷயத்தில அபிஸாரிகையின் தன்மையை (வலிய வருதலை)க் கொண்டதாகக் கூறினார்.

'**कान्तार्थिनी तु या याति संकेतं साभिसारिका**' என்பதைக் காண்க. **वीरगामिनी** - **वीरकामिनी** - என்றும் பாடம் உண்டு. **कूटयुद्धम्** - வெளிப் படையாக நின்று யுத்தம் செய்யாது மறைந்திருந்து தாக்குதல் முதலியன.

प्रायः प्रतापभग्नत्वादरीणां तस्य दुर्लभः ।
रणो गन्धद्विपस्येव गन्धभिन्नान्यदन्तिनः ॥ ७० ॥

**गन्ध भिन्न-अन्य दन्तिनः** - வாசனையினாலேயே தோற்ற பிற யானைகளையுடைய, **गन्ध द्विपस्य-इव** - கந்த கஜத்திற்கு (ச் சண்டை கிடைக்காதது) போல், **अरीणाम्** - (எல்லாப்) பகைவர்களும், **प्रताप भग्नत्वात्**-(அவனது) பிரதாபத்தினாலே முறிந்தமையால், **तस्य**-அவ்வதிதிக்கு, **प्रायः**-பெரும்பாலும், **रणः** - யுத்தம், **दुर्लभः** - அரிதாயிருந்தது.

(க-து) யானை வகையிலே ஒன்று கந்தகஜம் என்பது. அதன் வாசனையை மோந்தமாத்திரத்திலே மற்ற யானைகள் ஓடிவிடும். கந்தகஜத்துடன் சண்டையிட எந்த யானையும் முற்படாததால் கந்தகஜத்திற்குச் சண்டையிடச் சந்தர்ப்பமே இராது. அதுபோல், அதிதியின் பராக்ரமத்தைச் செவியுற்ற அளவிலே பகைவர்கள் எல்லோரும் ஒடுங்கிவிட்டதால் அவனுக்குச் சண்டை கிடைப்பது அரிதாயிருந்தது.

யுத்தம் இன்றியே அரசர்கள் கப்பம் தந்தனர் என்பது கருத்து.

**'यस्य गन्धं समाघ्राय न तिष्ठन्ति प्रतिद्विपाः । स वै गन्धगजो नाम नृपतेर्विजयावहः '** என்பது கந்த கஜத்தைப் பற்றிக் கூறுவது. **'गन्धहस्तिनः - चन्दनहरितालादिगन्धयुक्तहस्तिनः क्षत्रियजातीयगजान्**............**'भद्रः श्रीहरितालगुग्गुलुशिला-गन्धोऽतिशूरो रणे नानाशस्त्रनिघातवेगसहनः स्तम्बेरमः क्षत्रियः ।'** என்பதையும் காண்க. யானை இனத்திலே கந்த கஜத்தை க்ஷத்ரிய வகுப்பைச் சேர்ந்ததாகக் கூறுவர்.

प्रवृद्धौ हीयते चन्द्रः समुद्रोऽपि तथाविधः ।

स तु तत्समवृद्धिश्च न चाभूत्ताविव क्षयी ॥ ७१ ॥

**प्रवृद्धौ (सत्याम्)** - (முழு) வளர்ச்சி ஏற்பட்டபொழுது, **चन्द्रः** - சந்திரன், **हीयते** - குறைகின்றான்; **समुद्रः-अपि** - ஸமுத்திரமும், **तथाविधः** - அத் தகையதே; **सः तु**-அதிதியோ, **तत्समवृद्धिः च** - அவ்விரண்டோடு ஒப்ப வளர்ச்சியுடையவனாக, **अभूत्** - இருந்தான்; **तौ इव**-அவ்விரண்டும் போல், **क्षयी च** - குறைபவனாக, **न-(अभूत्)** - இருக்கவில்லை.

(க-து) சந்திரன் முழுவளர்ச்சியைப் பெற்றபின் குறையத் தொடங்குகின்றான். ஸமுத்ரமும் பொங்கியபின் வடிந்துவிடுகிறது. அதிதி அவ்விரண்டினைப்போல் வளர்ந்தானாயினும் அவை குறைவதுபோல் குறையவில்லை.

सन्तस्तस्याभिगमनादत्यर्थं महतः कृशाः ।

उदधेरिव जीमूताः प्रापुर्दातृत्वमर्थिनः ॥ ७२ ॥

**अत्यर्थम्** - மிகவும், **कृशाः** - தரித்ரர்களும், **अर्थिनः - सन्तः** - பொருளை விரும்பியவர்களுமான வித்வான்கள், **महतः** - மிகப்பெரிய, **तस्य** - அவனை, **अभिगमनात्** - அடைவதனால், —**उदधेः** - கடலை, (**अभिगमनात्**) - அடைவதால், **जीमूताः-इव** - மேகங்கள் (வள்ளல் தன்மையடைவது) போல், —**दातृत्वम्** - வள்ளல் தன்மையை, **प्रापुः** - அடைந்தனர்.

(க-து) மிக வறியர்களான வித்வான்கள் அவனிடம் பொருள் வேண்டிப் பெற்ற பின், பிறர்க்குப் பொருள் தரும்படிப் பெரும் வள்ளல்களாக ஆயினர். முதலில் நீரற்றிருப்பினும் கடலிலிருந்து நீரைப்பெற்றுப் பிறாக்குதவும் மேகங்களோடொப்பக் கொடையில் அவர்கள் விளங்கினர்.

வள்ளல் தன்மைக்கு மேகங்களை உதாரணமாகக் கூறுவர். இதனால் அதிதியின் கொடைச் சிறப்புக் கூறியதாயிற்று. இதே ஸர்க்கத்தில் 17-ஆம் சுலோகத்தையும் காண்க.

**अत्यर्थम्-कृशाः** என்பதை மேகத்திற்கும், **महतः** என்பதை ஸமுத்ரத்திற்கும் விசேஷணமாகவும் கொள்ள வேண்டும். இச்சுலோகததிலே அதிதி ஸத்பாத்ரத்திலே பொருளைச் செலவிட்டான் என்பது கூறப்பட்டது.

स्तूयमानः स जिह्राय स्तुत्यमेव समाचरन् ।
तथापि ववृधे तस्य तत्कारिद्वेषिणो यशः ॥ ७२ ॥

**स्तुत्यम्-एव** - புகழத்தக்க காரியத்தையே, **समाचरन्** - செய்கின்ற, **सः** - அவன், **स्तूयमानः** (**सन्**) - புகழப்படுபவனுய், **जिह्राय** - லஜ்ஜையுற்முன்; **तथापि** - ஆயினும், **तत्कारि-द्वेषिणः** - புகழ்தலை வெறுக்கின்ற, **तस्य** - அவனது, **यशः** - புகழ், **ववृधे** - (மேலும்) வளர்ந்தது.

(க-து) கொண்டாடத் தக்க காரியங்களையே செய்து வந்ததால் அவனைப் பெரியோர்கள் புகழ்ந்தனர். பிறர் புகழும் பொழுது அவன் வெட்கமுற்முன். புகழ்தலை வெறுதத காரணத்தாலேயே அவன் புகழ்மேன்மேலும் வளர்ந்தது.

குண மிகுந்த நன் மகனுக்குப் புகழப் படுங்கால் வெட்க முறுதலே அணியாகும' என்பர் பரிமேலழகர். 'गुणाढ्यस्य सतः पुंसः स्तुतौ लज्जैव भूषणम्' என்பதையும், ஸர்க்கம 15 சுலோகம 27-ஐயும் காண்க.

'तत्कारीति भावप्रधानो निर्देशः, स्तुतिकारित्वं द्वेष्टुं शीलमस्येति' नारायणः ॥

दुरितं दर्शनेन घ्नंस्तत्त्वार्थेन नुदंस्तमः ।

प्रजाः स्वतन्त्रयांचक्रे शश्वत्सूर्य इवोदितः ॥ ७४ ॥

उदितः -உதயமான, सूर्यः-इव -சூரியன் போல், दर्शनेन- (தன்னைக்) காண்பதனாலேயே, दुरितम् - (ஜனங்களின்) பாவத்தை, घ्नन् - அழித்துக் கொண்டும், तत्त्व-अर्थेन - உண்மைப் பொருளைக் கூறுவதாலே, तमः - அஞ்ஞானத்தை, नुदन् च - விலக்கிக் கொண்டும், सः - அவன், शश्वत् - எப்பொழுதும், प्रजाः - ஜனங்களை, स्वतन्त्रयाञ्चक्रे - சுதந்திரர்களாகச் செய்தான்.

(க-து) அரசனையும், சூரியனையும் தரிசித்தாலே பாவம் நீங்குமென்பர். அதிதி தனது காட்சியினாலே மக்களின் பாவத்தை நீக்கினான் உண்மையறிவை அளித்து அவர்களின் அஜ்ஞான இருளை விலக்கியதால் அவன் பிரஜைகளைத் தம் மிச்சைப்படி நலவழியில் நடக்கச் சுதந்திரம் பெற்றவர்களாகச் செய்தான்.

சூரியனும் இருளைப் போக்குபவன். காண்பதால் பாவத்தையும் நீக்குபவன். இதனால் அவன் அதிதிக்கு உபமானமானான்.

'अग्निचित् कपिला सत्री, राजा भिक्षुर्महोदधिः ।
दृष्टमात्राः पुनन्त्येते तस्माद् पश्येत नित्यशः ॥'

स्वतन्त्रयाञ्चक्रे -स्व என்பது அரசனைக் குறிப்பதாகக் கொண்டால், "ஜனங்களைத் தன் வசத்திலிருப்பவர்களாகச் செய்தான்" எனப் பொருள்.

इन्दोरगतयः पद्मे सूर्यस्य कुमुदेऽशवः ।
गुणास्तस्य विपक्षेऽपि गुणिनो लेभिरेऽन्तरम् ॥ ७५ ॥

**इन्दोः** - சந்திரனுடைய, **अंशवः** - கிரணங்கள், **पद्मे** - தாமரை மலரிடத்தில், **अगतयः** - செல்லாதன ; **सूर्यस्य** - ஸூர்யனுடைய **(अंशवः)** - கிரணங்கள், **कुमुदे** - அல்லி மலரிடத்து, **(अगतयः)**- செல்லா ; **गुणिनः** - சிறந்த நற்குண முடைய, **तस्य** - அவனுடைய, **गुणाः** - குணங்கள், **विपक्षे - अपि** -எதிரிகளிடத்தும், **अन्तरम् लेभिरे** - இடம் பெற்றன.

(க-து) தாமரை மலர் இரவிலே குவிவதால் சந்திரகிரணங்கள் அதனுள் புகுவதில்லை. அதேபோல் அல்லி சூரிய கிரணங்களால் மலர்வதில்லை, உலகம் கொண்டாடுகின்ற சந்திர சூர்யர்களை வெறுக்கும் பொருளும் உலகில் இருக்கின்றன. அனால் அதிதியின் குணங்கள் அவனை வெறுக்கும் பகைவர்களின் மனத்திலும் இடம்பெற்று அவர்களது புகழ்ச்சியைப் பெற்றன.

பகைவர்களும் கொண்டாடும்படி அதிதியின் குணநலம் இருந்தபடி.

पराभिसंधानपरं यद्यप्यस्य विचेष्टितम् ।
जिगीषोरश्वमेधाय धर्म्यमेव बभूव तत् ॥ ७६ ॥

**अश्वमेधाय** - அசுவமேதம செய்தற் பொருட்டு, **जिगीषोः** - வெல்ல விரும்பிய, **अस्य** - அவனது, **विचेष्टितम्** - (வெற்றி கொள்ளுதல் என்ற) காரியமானது, **यद्यपि पराभिसंधान परम्** - பகைவரை வஞ்சித்தலை (வெல்லுதலை) நோக்காகக் கொண்டதே ; **(तथापि) तत्** ஆயினும் அது, **धर्म्यम् - एव** - தர்மமாகவே, **बभूव** - இருந்தது.

(க-து) சிற்றரசரை வஞ்சித்துப் பணம் பெற்றான் ; தான் இன்பம் நுகருதற்காகவன்றி அசுவமேதம் செய்தற்காகப் பணம் பெற்றதால் அவன் செய்த வஞ்சனையும் தர்மமாகவே ஆயிற்று.

வஞ்சித்தல் குற்றமாயினும நன்னோக்குடன் செய்யப் படுவதால் குற்றமன்று என்பது கருத்து.

एवमुद्यन्प्रभावेण शास्त्रनिर्दिष्टवर्त्मना ।

वृषेव देवो देवानां राज्ञां राजा बभूव सः ॥ ७७ ॥

**एवम्** - இவ்வாறு, **शास्त्र-निर्दिष्ट-वर्त्मना** - சாஸ்திரம் காட்டிய வழி மூலம், **प्रभावेण** - (கிதி, ஸேனை இவற்றால் கிடைக்கும) பலத்தினால், **उद्यन् सः** - மேலே எழுகின்ற அவன், **वृषा** -இந்திரன், **देवानाम् देवः इव** -தேவர்களுக்குத் தேவனாக (இருப்பது) போல், **राज्ञाम् राजा** - அரசர்க் கரசனாக, **बभूव** - இருந்தான்.

(க-து) சாஸ்திரம் காட்டிய வழியிலே சென்று, பிரபு சக்தியின்மூலம் உன்னத நிலைக்கு எழுகின்ற அவன், தேவேந் திரன் தேவர்களுக்குத் தலைவனாக இருப்பதுபோல், அரசர்க் கரசனாக இருந்தான்,

இந்திரனும சாஸ்திரம் கூறிய வழியில் நூறு அசுவ மேதம செய்து உயர்நிலை எய்தியவன்.

पञ्चमं लोकपालानामूचुः साधर्म्ययोगतः ।

भूतानां महतां षष्ठमष्टमं कुलभूभृताम् ॥ ७८ ॥

**(तम्)**- அவ் வரசனை, **साधर्म्य योगतः**-ஒப்புமை காரண மாக, **लोक पालानाम्** - லோக பாலர்களுக்கு, **पञ्चमम्** - ஐந்தாமவனாகவும, **महताम् भूतानाम्**-(பூமி முதலான ஐந்து) மஹா பூதங்களுக்கு, **षष्ठम्** - ஆறுவதாகவும, **कुलभूभृताम्** - குலாசலஙகளுக்கு, **अष्टमम् (च)** - எட்டாவதாகவும, **ऊचुः** - (ஜனங்கள்) கூறினர்.

(க-து) லோக பாலர்கள், பஞ்ச மஹா பூதங்கள், குலசைலங் கள் இவைகளிடம் முறையே காணப்படுகின்ற குணங்களான, உலகைப் பாதுகாத்தல், பிறருக்கு உதவுதல், பூமியைத் தாங்குதல் என்ற இவை அவ்வரசனிடமிருந்ததால், அவனுக்கும் அவற் றிற்கும் ஒப்புமை இருந்தது. எனவே, அவனை ஐந்தாவது லோக பாலனாகவும், ஆறுவது மஹா பூதமாகவும், எட்டாவது குலசைல மாகவும் ஜனங்கள் வருணித்தனர்.

இந்திரன், யமன், வருணன், குபேரன் இவர்கள் நான்கு திக் பாலகர்கள். உலகைப் பாதுகாத்தல் என்பது இவர்களுக்கும் அதிதிக்குமுள்ள பொதுவான குணம். [ஸ. 9, சு. 6 நோக்குக]. மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என இவை ஐந்தும் மஹாபூதங்கள் எனப்படும். இவை பிறர்க்கே உதவுவன அதிதிக்கும் இப்பூதங்களுக்கும் பொதுவான குணம் பிறர்க்கே உதவுதல் எனபது. ஆகலால் மக்கள் அவனை ஆறுவது பூதமாகக்கருதினர் [ஸ. 1, சு. 29-காண்க] மஹேந்திரம், மலயம், ஸஹ்யம், சுக்திமான், ரிக்ஷம், விந்த்யம், பாரியாத்ரம என்ற குல சைலஙகள் ஏழும் பூமியைத் தாங்குவதாகக் கூறுவர். மலைகளுக்கும அதிதிக்கும பொதுவான தன்மை பூமியைத் தாஙகுதல் என்பதாம். எனவே, அவனை எட்டாவது குல சைலமாகக் கூறினர்.

दूरापवर्जितच्छत्रैस्तस्याज्ञां शासनार्पिताम् ।
दधुः शिरोभिर्भूपाला देवाः पौरन्दरीमिव ॥ ७९ ॥

**भूपालाः**-அரசர்கள், **शासन-अर्पिताम्**-ஓலையிலே எழுதப் பட்டுள்ள, **तस्य** - அவனது, **आज्ञाम्** - ஆணையை,–**देवाः** - தேவர்கள், **पौरन्दरीम् (आज्ञाम्) इव** - இந்திரனது ஆணையை (த்தாங்குவது) போல,–**दूर-अपवर्जित च्छत्रैः** - வெகு தொலைவிலேயே விலக்கப்பட்ட குடைகளையுடைய, **शिरोभिः** - (தமது) தலைகளாலே, **दधुः** - தாங்கினர்.

(க.து) ஓலையில் எழுதப்பெற்று அனுப்பப்பட்ட அவனது ஆணையைச் சிற்றரசர்கள், ராஜசின்னமாகிய வெண்குடையை வெகு தொலைவிலேயே நீக்கிவிட்டுத் தம் தலையிலே தாங்கினா.

ऋत्विजः स तथानर्च दक्षिणाभिर्महाक्रतौ ।
यथा साधारणीभूतं नामास्य धनदस्य च ॥ ८० ॥

**यथा** - எவ்வகையில், **अस्य** - அவனுக்கும், **धनदस्य च**-குபேரனுக்கும், **नाम** - 'தனதன்' என்ற பெயர், **साधारणीभूतम्** - பொதுவானதாக, **भवेत्** - ஆகுமோ, **तथा** - அவ்

வகையிலே, **सः** - அவன், **महाक्रतौ** - பெரும் யாகமான அசுவமேதத்தில், **ऋत्विजः** - ரித்விக்குகளை, **दक्षिणाभिः** - தக்ஷிணைகளாலே, **आनर्च** - பூஜித்தான்.

(க-து) குபேரனுக்குத் 'தனதன்' என்ற பெயருண்டு; அதற்குச் 'செல்வம் தருபவன்' எனப்பொருள். யாகத்திலே ஏராளமான பணத்தை ரித்துவிக்குகளுக்குக் கொடுத்ததால் அப் பெயரை அதிதியும் பெற்றான். எனவே 'தனதன்' என்ற சொல் குபேரன், அதிதி இருவரையும் குறிப்பதாயிற்று.

குபேரனைக் கொடையாளியாக ராமாயணம் கூறும். **धनदेन समस्त्यागे** [பால காண்டம் 1-19] என்பதைக் காண்க.

> इन्द्राद्वृष्टिर्नियमितगदोद्रेकवृत्तिर्यमोऽभू-
> यादोनाथः शिवजलपथः कर्मणे नौचराणाम् ।
> पूर्वापेक्षी तदनु विदधे कोशवृद्धिं कुबेर-
> स्तस्मिन् दण्डोपनतचरितं भेजिरे लोकपालाः ॥ ८१ ॥

**इन्द्रात्** - இந்திரனிடமிருந்து, **वृष्टिः** - மழை, **अभूत्** - உண்டாயிற்று; **यमः** - யமன், **नियमित-गद-उद्रेक-वृत्तिः** - வியாதிகளின் கொடுந் தன்மையை அடக்கியவனாக, **अभूत्** - இருந்தான்; **यादो-नाथः** - வருணன், **नौचराणां** - படகில் சஞ்சரிப்பவர்களின், **कर्मणे** - தொழிலுக்காக, **शिव-जलपथः** - ஆபத்தற்ற ஜல மார்க்கம தருபவனாக, **अभूत्** - இருந்தான்; **तदनु** - அதன் பின், **पूर्वापेक्षी** - முன்னவர்களை நோக்கிய, **कुबेरः** - குபேரன், **कोश-वृद्धिम्** - நிதி விருத்தியை, **विदधे** - செய்தான்; **लोक-पालाः** - லோக பாலர்கள், **तस्मिन्** - அவன் விஷயத்தில, **दण्ड-उपनत-चरितम्** - பலத்தினால வெல்லப் பட்டவர்களின் தொழிலை, **भेजिरे** - கைக் கொண்டனர்.

(க-து) சரணமடைந்த சிற்றரசர்கள் சக்ரவர்த்திக்குத் தொண்டுசெய்பவராவர். சிற்றரசன் போன்றே திக்பாலகர்களும்

அதிதிக்கு உதவி செய்தனர். மழைக்கு அதிபனான இந்திரன் தக்க காலத்தில் அவன் நாட்டில் மழை பொழிந்தான். யமன் அவனது நாட்டில் வியாதிகள் தம் கடுமையைக் காட்டாதவாறு அடக்கி வைத்திருந்தான். வருணன் வணிகர் ஸஞ்சரிக்கும்படி ஜல மார்க்கத்தை ஆபத்தின்றிக் காத்து வந்தான். இம் மூவரை யும் கண்ட குபேரன், அவர்களைப்போல் உதவ விரும்பி அதிதி யின் பொக்கிஷத்தைத் தன் செல்வத்தினால் வளர்த்தான்.

வியாதிகளை யமனுடைய தூதர்களாகக் கூறுவர். யமன் தன் பணியாளர்களை அதிதியின் நாட்டில் அதிகாரம் செலுத்தாதவாறு அடக்கியிருந்தான்.

**पूर्वापेक्षी** - 'முன்னோர்களான ரகு, ராமர் இவர்களது பலத்தை அறிந்த' என்றும் பொருளுரைப்பர் மல்லிநாதர். ரகுவின் மஹிமை அறிந்துக் குபேரன் பணமளித்தது ஐந் தாவது ஸர்க்கத்திலும், ராவணன் கவர்ந்த புஷ்பக விமா னத்தை ராமர் திருமபவும் குபேரனுக்கு அளித்தது பதி னைன்காவது ஸர்க்கத்திலும் கூறப்பட்டுள்ளன

இந்திராதி தேவர்களும் உதவி புரிந்தனர் என்பதால் மற்ற அரசர்கள் உதவினர் என்பது கூறவேண்டாததாயிற்று.

इति महाकवि श्री कालिदासकृतौ
रघुवंशे महाकाव्ये सप्तदशः सर्गः ॥

---

॥ श्रीः ॥

# ॥ रघुवंशः ॥

## अष्टादशः सर्गः

स नैषधस्यार्थपतेः सुतायामुत्पादयामास निषिद्धशत्रुः ।
अनूनसारं निषधान्नगेन्द्रात्पुत्रं यमाहुर्निषधाख्यमेव ॥ १ ॥

**निषिद्धशत्रुः** - தடுக்கப்பட்ட பகைவர்களையுடைய, **सः** — அதிதி என்னும் அவ்வரசன், **नैषधस्य-अर्थपतेः** - நிஷத நாட்டரசனுடைய, **सुतायाम्** - மகளிடத்தில், **निषधात्** - நிஷதம் என்ற, **नगेन्द्रात्** - சிறந்த மலைக்கு, **अनूनसारम्** - குறையாத பலத்தையுடைய, - **पुत्रम्** - ஒரு புதல்வனை, **उत्पादयामास** -- அடைந்தான். **यम्** - அப்புதல்வனை, **निषधाख्यम् एव** - நிஷதன் என்ற பெயருடையவனாகவே, **आहुः** - (ஜனங்கள்) சொல்லுவர்.

(க-து) பகைவர்களை வெற்றி கொண்ட அதிதி என்னும் அவ்வரசன், நிஷத நாட்டரசனுடைய மகளை மணந்து கொண்டான். அவர்களுக்கு நிஷதமலைபோன்று பலம் மிகுந்த புதல்வன் ஒருவன் பிறந்தான். அவனது பலத்தைக் கருதி அம்மகனை நிஷதன் என்றே அழைத்தனர்.

நிஷதமலை —மேரு மலைக்குத் தென்கிழக்கில் உள்ளது என்பர். நிஷதன் என்ற பெயர் அவனுக்கு உவமையால் வந்தது. ஒன்பதாம் ஸர்க்கத்திலே யமக அனுப்ராஸங்களிலே ஈடுபட்ட கவி, இரண்டாவது முறையாகப் பதினெட்டாவது ஸர்க்கத்திலே அதே வகையான சொல்லணியில ஈடுபடுவதைக் காண்க.

तेनोरुवीर्येण पिता प्रजायै कल्पिष्यमाणेन ननन्द यूना ।
सुवृष्टियोगादिव जीवलोकः सस्येन संपत्तिफलोन्मुखेन ॥ २ ॥

**सुवृष्टियोगात्**-நல்ல மழையைப் பெற்றதால், **संपत्तिफल-उन्मुखेन** - பயன்தரச் சித்தமாக உள்ள, **सस्येन** - பயிரினால், **जीवलोकः-इव** - ஜன ஸமூகம் (ஸந்தோஷிப்பது) போல், **उरुवीर्येण** - மிக்க பலத்தையுடையவனும், **प्रजायै** - ஜனங்களைப் பாதுகாத்தற் பொருட்டு, **कल्पिष्यमाणेन** - திறமை வாய்ந்தவனாகப் போகின்ற, **तेन** - அந்த, **यूना** - வாலிபனான நிஷதனால், **पिता**-தகப்பன் (அதிதி), **ननन्द** - களித்தான்.

(க-து) நல்ல மழையைப் பெற்று, விளைவதற்குத் சித்தமாக உள்ள பயிரைக் கண்டு மக்கள் மனமகிழ்வதுபோல உலகத்தின் நன்மைக்காகப் பலத்துடன் விளங்கும் தன் மகனைக்கண்டு அதிதி மனமகிழ்ச்சி கொண்டான்.

**प्रजायै कल्पिष्यमाणेन** - என்னும் தொடருக்கு 'ஸந்ததியை விருத்தி செய்யக்கூடியவனை' என்றும் பொருள் கொள்வர். மகனைப் பெறுதல ஸந்ததியின் விருத்திக்காகவே என்று கூறுவர். '**प्रजायै गृहमेधिनाम्**' எனக் காளிதாஸர் முதல் ஸர்க்கத்தில் கூறியிருப்பதும் கவனிக்கத்தக்கது.

शब्दादि निर्विश्य सुखं चिराय तस्मिन्प्रतिष्ठापितराजशब्दः ।
कौमुद्वतेयः कुमुदावदातैर्द्यामर्जितां कर्मभिरारुरोह ॥ ३ ॥

**कौमुद्वतेयः**-குமுத்வதியின் மகனாகிய அதிதி, **शब्दादि**-ஒலி முதலிய, **सुखम्** - இன்பப்பொருளை, **चिराय** - வெகு காலம், **निर्विश्य** - நுகர்ந்து, **तस्मिन्** - அவனிடத்தில் (நிஷதனிடத்தில்), **प्रतिष्ठापित - राजशब्दः (सन्)** - வைக்கப்பட்ட 'ராஜா' என்ற சொல்லுடையவனாக, **कुमुद-अवदातैः** : அல்லி மலர்போல் மாசற்ற, **कर्मभिः** - (யாகம் முதலான) நற்காரியங்

களால், **अर्जिताम्** -ஸம்பாதிக்கப்பட்ட, **द्याम्**-ஸ்வர்க்கத்தை **आरुरोह** - அடைந்தான்.

(க-து) அதிதி, சப்தம், ஸ்பரிசம் முதலிய ஸுகத்தை எல்லாம் அனுபவித்துவிட்டு, தன் மகன் நிஷதனிடம் அரசுரிமையை ஒப்படைத்தான். அசுவமேதம் முதலிய பல சிறந்த குற்றமற்ற யாகங்களைச் செய்து அதன் பயனாக ஸ்வர்க்கத்தை யடைந்தான்.

ஐம்புலன்களாலே அனுபவிக்கப்படுகின்ற பொருள்கள் ஒலி, சுவை, மணம் முதலியன.

पौत्रः कुशस्यापि कुशेशयाक्षः ससागरां सागरधीरचेताः ।
एकातपत्रां भुवमेकवीरः पुरार्गलादीर्घभुजो बुभोज ॥ ४ ॥

**कुशेशयाक्षः** - தாமரை மலர் போன்ற கண்களையுடையவனும், **सागर-धीर-चेताः** - கடல்போல் ஆழ்ந்த மனமுடையவனும், **एकवीरः** - அஸஹாய சூரனும், **पुर-अर्गला-दीर्घ भुजः**- நகர (க்கதவின்) தாழ்ப்பாள் போனற நீண்ட கைகளையுடையவனுமான, **कुशस्य-पौत्रः-अपि** - குசனது பேரனும், **ससागराम्** - கடலுடன் கூடிய, **एकातपत्राम्** - ஒரே குடைக் கீழுள்ள, **भुवम्** - உலகை, **बुभुजे** - ஆண்டான்.

(க-து) வடிவின் அழகிலும், மனஉறுதியிலும், உடல்வலியிலும் சிறந்த குசனின் பேரன் நிஷதன் உலகம முழுவதையும் தனது ஒரு குடைக்கீழ் ஆண்டான்.

तस्यानलौजास्तनयस्तदन्ते वंशश्रियं प्राप नलाभिधानः ।
यो नड्वलानीव गजः परेषां बलान्यमृद्नान्नलिनाभवक्त्रः ॥ ५ ॥

**अनलौजाः** - தீ போன்ற ஒளியுடையவனும், **नलाभिधानः** - நளன் என்ற பெயருடையவனுமான, **तस्य तनयः** - அந் நிஷதனின் மகன், **तदन्ते** - அந் நிஷதனது இறுதியில, **वंश श्रियम्**-குலச் செல்வமாகிய ராஜ்யத்தை, **प्राप**-அடைந்

தான்; **नलिनाभ-वक्त्रः** - தாமரை போன்று ஒளி பொருந்திய முகத்தையுடைய, **यः**-நளன், **गजः**-யானை, **नड्वलानि-इव**- கோரை நிறைந்த இடத்தை (அழிப்பது) போல், **परेषाम्** - பகைவர்களுடைய, **बलानि** - சேனைகளை, **अमृद्नात्** - அழித்தான்.

(க-து) நிஷதன் இறந்ததும் அவன் மகன் நளன் ராஜ்யத்தை அடைந்தான். யானை நெடுங்கோரையுள்ள இடத்தை அனாயாஸமாக அழிப்பது போல் அவன் பகைவர்களது ஸேனைகளைச் சிறிதும் சிரமமன்றி எளிதிலே அழித்தான்.

**यः** என்பதை எழுவாயாகக் கொண்டு, ஒரு முக்யமான வாக்யத்தின் அங்கமாக மற்றொரு வாக்யம் ஸம்ஸ்கிருதத்தில் அமைவது உண்டு. ஆயினும் தமிழிலே அத்தகைய வாக்யங்கள் அதிகம் காண்பதில்லை. ஆதலால் இச்சுலோகத்தில் **यः** - என்ற 'சொல்லுக்கு—' எவன்' என்பது பதப்பொருளாயினும் பொருளின் தெளிவைக்கருதி இச் சொல் இங்கு நளனைக் குறித்தலால் நளன் என்றே பொருள் தரப்பட்டது.

இனி வரும் சில சுலோகங்களிலும் இம்முறையை அனுசரித்தே பொருள் தரப்பட்டுள்ளதையும் காண்க.

नभश्चरैर्गीतयशाः स लेभे नभस्तलश्यामतनुं तनूजम् ।
ख्यातं नभश्शब्दमयेन नाम्ना कान्तं नभोमासमिव प्रजानाम् ॥

**नभश्चरैः** - ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் கந்தர்வர் முதலியோரால், **गीतयशाः** - பாடப்பட்ட புகழையுடைய, **सः** - அவன் (நளன்), **नभस्तल - श्याम - तनुम्**-ஆகாயத்தின் இடம் போன்று கறுத்த உடலுடையவனும், **नभश्शब्दमयेन**-' நபஸ் ' என்ற சொல்லைக் கொண்ட, **नाम्ना** - பெயரால், **ख्यातम्** - பிரசித்தி பெற்றவனும், **नभोमासम्-इव** - ஆவணி மாதம் போல், **प्रजानाम्** - மக்களுக்கு, **कान्तम्** - பிரியமானவனுமான, **तनूजम्** - புத்திரனை, **लेभे** - அடைந்தான்.

(க-து) மிக்க புகழையுடைய அவ்வரசனுக்கு ஆகாசம் போல் ச்யாமள வர்ணமுள்ள ஒரு மகன் பிறந்தான். நபன் என்பது அவன் பெயர். மழை பயிர் முதலியவைகளால் ஆவணி மாதம் மக்களை மகிழ்விப்பதுபோல, நபன் தனது நற்குணங்களால் குடிகளை மகிழ்வித்தான்.

तस्मै विसृज्योत्तरकोसलानां धर्मोत्तरस्तत्प्रभवे प्रभुत्वम् ।
मृगैरजर्यं जरसोपदिष्टमदेहबन्धाय पुनर्बबन्ध ॥ ७ ॥

**धर्मोत्तरः** - தர்மத்தைப் பிரதானமாகக் கொண்ட அந்நளன், **प्रभवे** - திறமை வாய்ந்த, **तस्मै** - அந் நபனுக்கு, **उत्तर कोसलानाम्** - உத்தர கோஸலநாட்டின், **तत् प्रभुत्वम्** - அந்த அரசுரிமையை, **विसृज्य** - வழங்கி, **जरसा**-கிழப்பருவத்தினல், **उपदिष्टम्** - உபதேசிக்கப்பட்டதான, **मृगैः अजर्यम्** - மான்களுடன் கூட்டுறவை, **पुनः** - திரும்பவும், **अदेहबन्धाय** - உடம்பு எடுக்காமைக்காக (மோக்ஷத்தின் பொருட்டு), **बबन्ध** - கடைப்பிடித்தான்.

(க-து) தர்மத்தில் மிக்க பற்றுடைய அந்நளன், தான் முதுமையடைந்ததும், அரசு புரிவதில் ஸமர்த்தனை நபனிடம் அரசுரிமையை ஒப்படைத்துவிட்டு, மான்கள் சஞ்சரிக்கும் காட்டை அடைந்து, திரும்பவும் பிறவி எடுக்காமைக்காகத் தவம் புரியலுற்றுன்.

மான்களின் கூட்டுறவு என்றது இங்கே, தவமியற்றுதலை; தவமியற்றும் பருவம் வந்தெய்தியதை முதுமை அவனுக்கு உணர்த்தியதால் '**जरसा उपदिष्टम्**' என்றுர். **अजर्यम्** - நட்பு, சேர்க்கை.

तेन द्विपानामिव पुण्डरीको राज्ञामजय्योऽजनि पुण्डरीकः ।
शान्ते पितर्याहृतपुण्डरीका यं पुण्डरीकाक्षमिव श्रिता श्रीः ॥

**द्विपानाम्** - (மற்ற) யானைகளால் (ஜயிக்க முடியாத), **पुण्डरीकः इव** - புண்டரீகம் என்ற திக்கஜம போல, **राज्ञाम्** -

அரசர்களாலே, **अजय्यः** - ஜயிக்க முடியாத, **पुण्डरीकः** - புண்டரீகன் (என்ற), **पुत्रः** - மகன், **तेन** - அந்த நபனால், **अजनि** - உண்டாக்கப்பட்டான்; **आहृत पुण्डरीका** - வெண் தாமரையையுடைய, **श्रीः** - லக்ஷ்மீ, **पितरि** - தகப்பன், **शान्ते** - இறந்ததும், **यम्** - புண்டரீகனை, **पुण्डरीकाक्षम्-इव** - திருமாலை அடைவதுபோல, **श्रिता**- அடைந்தனள்.

(க-து) அந்நபனுக்குப் புண்டரீகன் என்ற ஒரு புதல்வன் பிறந்தான். புண்டரீகம் என்ற திக்கஜம் போல, அம்மகன் மற்ற அரசர்களால் ஜயிக்க இயலாதவனாக இருந்தான். தந்தையாகிய நபன் இறந்ததும், புண்டரீகன் ராஜ்யத்தை அடைந்தான்.

புண்டரீகம் - எட்டுத் திக்கஜங்களிலே ஒன்று; தென் கிழக்குத் திசையைப் பாதுகாப்பது. அவன் அரசு பெற்றதைக் கவி, தாமரை மலருடன் கூடிய லக்ஷ்மி அவனை அடைந்ததாக கூறினார்

स क्षेमधन्वानममोघधन्वा पुत्रं प्रजाक्षेमविधानदक्षम् ।
क्ष्मां लम्भयित्वा क्षमयोपपन्नं वने तपः क्षान्ततरश्चचार ॥९॥

**अमोघ धन्वा** - பயனை யளிக்கின்ற வில்லையுடைய, **सः** - அப்புண்டரீகன், **प्रजा-क्षेम-विधान-दक्षम्**-மக்களின் க்ஷேமத்தைச் செய்வதில் ஸமர்த்தனும், **क्षमया** - பொறுமையுடன், **उपपन्नम्** - கூடியவனுமான, **क्षेम धन्वानम्** - க்ஷேமதன்வா என்ற, **पुत्रम्** - புதல்வனை, **क्ष्माम्** - பூமியை, **लम्भयित्वा** - பெறும்படிசெய்து, **क्षान्ततरः** - மிக்க பொறுமையுடையவனாக, **वने** -காட்டில், **तपः** - தவத்தை, **चचार** - புரிந்தான்.

(க-து.) புண்டரீகன் என்ற அவ்வரசன், மக்களின் க்ஷேமத்தில் கருத்துள்ள க்ஷேமதன்வா என்ற பெயருடைய தன் மகனிடத்தில் ராஜ்யத்தை ஒப்படைத்து விட்டு, மிக்க பொறுமையைக் கைக் கொண்டு காட்டில் தவம் புரிந்தான்.

अनीकिनीनां समरेऽग्रयायी तस्यापि देवप्रतिमः सुतोऽभूत् ।
व्यश्रूयतानीकपदावसानं देवादि नाम त्रिदिवेऽपि यस्य ॥१०॥

**समरे** - யுத்தத்தில், **अनीकिनीनाम्** - சேனைகளுக்கு, **अग्रयायी** - முன்னே செல்லுகின்றவனும், **देवप्रतिमः** - தேவனைப் போன்றவனுமான, **सुतः**-ஒரு மகன், **तस्य-अपि** - அந்த க்ஷேமதன்வாவிற்கும், **अभूत्** - உண்டானான். **अनीक पद-अवसानम्** - அநீக என்ற பதத்தை இறுதியிலே உடைய, **देवादि**-தேவ என்று தொடங்கும், **यस्य नाम**-அம்மகனுடைய பெயர், **त्रिदिवे-अपि** - ஸ்வர்க்கத்திலும், **व्यश्रूयत** - பிரசித்தி பெற்றதாக இருந்தது.

(க-து.) க்ஷேமதன்வா என்ற அவ்வரசனுக்குப் போரில் சிறந்த, தேவனைப் போன்ற தேவாநீகன் என்ற மகன் பிறந்தான். அவன் புகழ் ஸ்வர்க்கத்திலும் பரவியது.

पिता समाराधनतत्परेण पुत्रेण पुत्री स यथैव तेन ।
पुत्रस्तथैवात्मजवत्सलेन स तेन पित्रा पितृमान्बभूव ॥ ११ ॥

**सः पिता** - அந்த தந்தை க்ஷேம தன்வா, **समाराधन-तत्परेण**-உபசரிப்பதில் கருத்துடனுள்ள, **तेन**- அந்த, **पुत्रेण** - மகன் தேவானீகனால், **यथैव**-எப்படி, **पुत्री**-சிறந்த புத்திரனை உடையவனாக, **बभूव** - ஆயினானோ, **तथैव**-அப்படியே, **सः- पुत्रः** - அந்த புத்திரன் தேவானீகன், **आत्मज वत्सलेन** - புத்திரனிடத்தில் அன்புள்ள, **तेन पित्रा** - அந்த தந்தையால் (க்ஷேம தன்வாவினால்), **पितृमान्**-சிறந்த தந்தையையுடையவனாக, **बभूव** - ஆனான்

(க-து.) தந்தைக்கு மகன் ஆற்றவேண்டிய கடனறிந்து அவற்றைச்செய்த தேவானீகனால் க்ஷேமதன்வா சிறந்த புத்திரனைப் பெற்ற தந்தையாக ஆனான். மகனிடம் அன்புள்ள க்ஷேமதன்வாவினால் தேவானீகன் சிறந்த தந்தையைப் பெற்றவனாகவானான்.

पूर्वस्तयोरात्मसमे चिरोढामात्मोद्भवे वर्णचतुष्टयस्य ।
धुरं निधायैकनिधिर्गुणानां जगाम यज्वा यजमानलोकम् ॥१२॥

**गुणानाम्** - குணங்களுக்கு, **एकनिधिः** - முக்யமான இருப்பிடமானவனும், **यज्वा** - முறைப்படி யாகஞ் செய்தவனும், **तयोः** - அவர்களுக்குள் (தந்தை புதல்வருக்குள்), **पूर्वः** - முதல்வனுமான தந்தை க்ஷேமதன்வா, **आत्मसमे** - தனக்கு நிகரான, **आत्मोद्भवे** - மகனிடத்தில் (தேவானீகனிடத்தில்), **चिरोढाम्** - வெகு காலமாக (த் தான்) வகித்து வந்த, **वर्ण चतुष्टयस्य** - நான்கு வருணங்களின், **धुरम्** - (ரக்ஷண) பாரத்தை, **निधाय** - வைத்தபின், **यजमान लोकम्** - யாகம் செய்பவர்கள் அடையும் புண்ய லோகத்தை, **जगाम** - அடைந்தான்.

(க-து.) நற்குணங்களுக்கெல்லாம் நிதியாகிய க்ஷேமதன்வா யாகங்களை பல புரிந்தான். அவன் தன் மகன் தேவானீகனிடத்தில் ராஜ்யத்தைக் கொடுத்து விட்டு யாகங்களை செய்ததன் பயனாகிய புண்ணிய லோகத்தை அடைந்தான்.

वशी सुतस्तस्य वशंवदत्वात् स्वेषामिवासीद्द्विषतामपीष्टः ।
सकृद्विविग्नानपि हि प्रयुक्तं माधुर्यमीष्टे हरिणान् ग्रहीतुम् ॥

**तस्य** - அத்தேவாநீகனுக்கு, **वशी** - கெட்டிக்காரனை, **सुतः** - ஒரு புதல்வன், **वशंवदत्वात्** - (வசீகரிக்கின்ற) இன்சொல் கூறும காரணத்தால், **स्वेषाम्-इव** - தன்னைச் சேர்ந்தவர்களுக்கு (இருந்தது) போன்றே, **द्विषताम्-अपि** - பகைவர்களுக்கும், **इष्टः** - அன்பனாக, **आसीत्** இருந்தான். **(तथा)** **हि** - ஏனெனில், **प्रयुक्तम्** - உபயோகிக்கப்பட்ட, **माधुर्यम्** - இனிய கீதம், **सकृत्** - ஒரு முறை, **विविग्नान्-अपि** - அச்சமுற்றிருப்பினும், **हरिणान्** - மான்களை, **ग्रहीतुम्** - பிடிப்பதற்கு, **ईष्टे** - சக்தியுடையதாகிறது.

(க-து.) தேவானீகனுக்கு அஹீநகு என ஒரு மகன் இருந்தான். அவன் இன்சொல்லாலேயே தன்னவரைப் போல் பகைவரையும் மகிழ்வித்து அவர்களுக்கும் பிரியனாக ஆனான். அச்சமுற்ற மான்களும் அச்சம் நீங்கி இன்சொல்லால் அருகே வருகின்றன, எனின், அறிவுடைய மனிதர் வசப்படுவர் எனக் கூற வேண்டுவதன்று.

**माधुर्यम्**-சொல்லின் இனிமை எனப்பொருளுரைப்பர். நாராயணர் இச் சொல்லை, மான்களை மயக்குவதற்காகப் பாடும் பாட்டைக் குறிப்பதாகக் கூறுவர்.

**"माधुर्यम्-गीतमाधुर्यम् । 'माधुर्यं माधुरत्वे स्यात् व्याधानां मृगमोहने गाने' इति केशवः"** என்பது அவரது உரை.

अहीनगुर्नाम स गां समग्रामहीनबाहुद्रविण: शशास ।
यो हीनसंसर्गपराङ्मुखत्वाद्युवाप्यनर्थैर्व्यसनैर्विहीन: ॥१४॥

**अहीन-बाहु-द्रविणः** - குறையாத பாஹு பராக்ரமமுடையவனும், **हीन संसर्ग-पराङ्मुखत्वात्** - சிற்றினஞ் சேரலை விரும்பாதவனாக இருந்ததால், **युवा-अपि** - வாலிபன் ஆயினும், **अनर्थैः** - தீங்கு விளைவிக்கக்கூடிய, **व्यसनैः** - குடி முதலிய கெட்ட பழக்கங்கள், **विहीनः** - இல்லாதவனுமான, **यः** - எந்த மகன், **अहीनगुः-नाम** - அஹீனகு எனப் பிரசித்தனாக இருந்தானோ, **सः** - அவன், **समग्राम् गाम्** - முழு உலகத்தையும், **शशास** - ஆண்டான்.

(க-து.) அஹீனகு என்ற அவ்வரசன் குறையாத தோள் வலியுடையவன். கீழோருடன் நட்புக் கொள்ளாததால் வாலிபப் பருவத்தினனாயினும் குடி, சூது முதலியவற்றைக் கருதாதிருந்தான். இத்தகைய அஹீனகு உலகனைத்தையும் தன் குடைக் கீழாண்டான்.

**अहीन-गु** - என்ற சொல்லிற்கு 'நிறம்பிய நிலமுடையவன்' என்பது பதப்பொருள். தன் பெயரின் பொருளுக்கேற்ப அவன் நிலமனைத்தையும் ஆண்டு வந்தான்.

गुरोः स चानन्तरमन्तरज्ञः पुंसां पुमानाद्य इवावतीर्णः ।
उपक्रमैरस्खलितैश्चतुर्भिश्चतुर्दिगीशश्चतुरो बभूव ॥ १५ ॥

**पुंसाम्** - மனிதர்களின், **अन्तरज्ञः** - தராதரங்களை அறிந்தவனும், **चतुरः** - ஸமர்த்தனுமான, **सः च** - அவ்வஹீனகு, **अवतीर्णः**-(உலகில்) அவதரித்த, **आद्यः-पुमान्-इव**- முதல் புருஷனான மஹாவிஷ்ணு போல, **अस्खलितैः** - தவறாத, **चतुर्भिः** - நான்கு, **उपक्रमैः** - உபாயங்களால், **गुरोः** - தந்தைக்கு, **अनन्तरम्** - பிறகு, **चतुर्दिगीशः** - நான்கு திசைகளுக்கும் தலைவனாக, **बभूव** - ஆனான்.

(க-து.) தக்கவர் இவர் தகாதவர் இவர் என மனிதர்களின் தராதரத்தை நன்கு அறிந்த அஹீனகு, உலகத்தில் அவதரித்த திருமால் போல், ஸாம, தான, பேத, தண்டம் என்ற நான்கு உபாயங்களை உபயோகித்து நான்கு திசைகளையும் தந்தைக்குப் பின் ஆண்டு வந்தான்.

**अन्तरज्ञः** - என்பதை விஷ்ணுவிற்கும் விசேஷணமாகக் கொள்ள வேண்டும். **विष्णुः इव** - என்பது உவமை. உத்ப்ரேக்ஷை என்பர் நாராயணர்.

तस्मिन्प्रयाते परलोकयात्रां जेतर्यरीणां तनयं तदीयम् ।
उच्चैःशिरस्त्वाज्जितपारियात्रं लक्ष्मीः सिषेवे किल पारियात्रम् ॥

**अरीणाम्** - பகைவர்களை, **जेतरि** - வெற்றி கொண்ட, **तस्मिन्** - அந்த அஹீனகு, **परलोक यात्राम्** - மறு உலக யாத்திரையை, **प्रयाते-(सति)** அடைந்ததும், **उच्चैःशिरस्त्वात्**- நிமிர்ந்த தலையை உடையவனாக இருத்தலால், **जित पारियात्रम्** - பாரியாத்ர மலையை வென்றவனான, **पारियात्रम्** - பாரியாத்ரன் என்ற, **तदीयम् तनयम्** - அவனது மகனை, **लक्ष्मीः** - லக்ஷ்மி, **सिषेवे-किल** - ஸேவித்தாள்.

(க-து.) அஹீனகு இறந்ததும் தோள்வலியிற் சிறந்த அவன் மகன் பாரியாத்ரன் ராஜ்யத்தை அடைந்தான்.

பிறர்க்கு வணங்காத முடியுடையவனாகவும், பாரியாத்ர என்ற பெயருடையவனாகவும் இருந்ததால, அவன் உன்னத மான சிகரமுடைய பாரியாத்ர மலையை வென்றவனாகக் கூறி னார் கவி. பாரியாத்ரம்: பெரும் மலைகளென கருதப்படு கின்ற ஏழு மலைகளில் ஒன்று. அவை: **महेन्द्रो मलयः सह्यः शुक्तिमान् ऋक्षपर्वतः विन्ध्यश्च पारियात्रश्च सप्तैते कुलपर्वताः ॥**

'அஹீனகுவின் மகன் குரு (**कुरु**); குருவின் மகன் பாரியாத்ரன்' என விஷ்ணு புராணம் கூறுகின்றதென நாராயணர் உரைப்பர்.

तस्याभवत् सूनुरुदारशीलः शिलः शिलापट्टविशालवक्षाः ।
जितारिपक्षोऽपि शिलीमुखैर्यः शालीनतामव्रजदीड्यमानः ॥

**तस्य** - அந்த பாரியாத்ரனுக்கு, **उदार शीलः** - பெருந் தன்மையையுடையவனும், **शिलापट्ट विशाल-वक्षाः**-கற்பலகை போன்று அகன்ற மார்பையுடையவனுமான, **शिलः**-சிலன் (என்ற), **सूनुः**-மகன், **अभवत्** - தோன்றினான்; **यः**-அச்சிலன், **शिलीमुखैः** - அம்புகளால், **जित-अरि-पक्षः-अपि**-ஜயிக்கப்பட்ட பகைவர் பக்கத்தை உடையவனாயினும், **ईड्यमानः**-துதிக்கப் பட்டபொழுது, **शालीनताम्**-வெட்கத்தை, **अव्रजत्**-அடைந் தான்.

(க-து) அப்பாரியாத்ரனுக்கு விரிந்த மார்பையும், பரந்த நோக்கத்தையுமுடைய சிலன் என்ற மகன் பிறந்தான். பகைவர் களைத் தோல்வியுறச்செய்து வெற்றியையடைந்த போதிலும், அச்சிலன், அவ்வெற்றியை மற்றவர் புகழ்ந்துரைத்தபோது, அப்புகழ்மொழிகளைக் கேட்க நாணினான்.

**स्तूयमानः स जिह्राय**-[17-73] என முன்பும் வந்ததைக் காண்க.

तमात्मसंपन्नमनिन्दितात्मा कृत्वा युवानं युवराजमेव ।
सुखानि सोऽभुङ्क्त सुखोपरोधि वृत्तं हि राज्ञामुपरुद्धवृत्तम् ॥

**अनिन्दितात्मा** - குற்றமற்ற ஸ்வபாவத்தையுடைய, **सः** - அப்பாரியாத்ரன், **आत्म संपन्नम्** - அறிவுடன் கூடிய, **युवानम्** - வாலிபனை, **तं** - அந்த சிலனை, **युवराजम्** - இளவரசனாக, **कृत्वा-एव** - செய்த பிறகே, **सुखानि** - இன்பங்களை, **अभुङ्क्त** - நுகர்ந்தான்; **हि** - ஏனெனில், **राज्ञाम्** - அரசர்களது, **वृत्तम्** - (காத்தல் முதலிய) தொழில், **सुख-उपरोधि** - இன்பம் நுகருதற்கு இடையூறாகவுள்ளது; **उपरुद्ध वृत्तम्** - சிறையிலுள்ளவர்களின் நடத்தைக்கு ஒப்பானது.

(க-து) மக்களைக் காப்பதே அரசர் தொழில். சிறையிடப்பட்டவர்கள் சுதந்திரமின்றி இருப்பதுபோல் ராஜாங்கக் காரியங்களுக்கு வசப்பட்டு இருப்பர் அரசர். ஆதலால் நாட்டைக் காப்பதில் கருத்துள்ள அரசர்க்குத் தம் விருப்பப்படி இன்பங்களை அனுபவிக்கப் பொழுது இராது. அதனால் பாரியாத்ரன், தன் மகன் சிலனை இளவரசனாகச் செய்து, நாட்டைப் பாதுகாக்க அமைத்த பின்பே இன்பங்களை நுகர்ந்தான்.

तं रागबन्धिष्ववितृप्तमेव भोगेषु सौभाग्यविशेषभोग्यम् ।
विलासिनीनामरतिक्षमापि जरा वृथा मत्सरिणी जहार ॥१९॥

**रागबन्धिषु** - ஆசையைப் பெருக்கக் கூடிய, **भोगेषु** - போகங்களில், **अवितृप्तम्-एव** - திருப்தியடையாதவனாகவே இருப்பவனும், **विलासिनीनाम्** - பருவப் பெண்களாலே, **सौभाग्यविशेष - भोग्यम्** - அழகின் மிகுதியால் அனுபவிக்கத்தகுந்தவனுமான, **तम्** - அப்பாரியாத்ரனை, **अरतिक्षमा-अपि** - அனுபவிப்பதற்குத் தகுதியற்றதாயினும், **वृथा** - வீணாக, **मत्सरिणी** - பொறாமைகொண்ட, **जरा** - முதுமை (என்னும் ஸ்திரீ), **जहार** - ஆட்கொண்டது.

(க-து) பாரியாத்ரன், தன் மகனை இளவரசனுக்கிய பின் ராஜ்யத்தின் கவலையின்றி போகங்களை அனுபவித்து வந்தான். அப்படி அனுபவித்தும் அவன் இன்பங்களில் திருப்தியடைய வில்லை. இருப்பினும், யுவதிகளையே அனுபவித்து வருகிருன் என்று பொருமை கொண்டது போல் கிழத்தனம் (என்ற ஸ்திரீ) அவனை அடைந்தது. கிழத்தனத்தால் பெண்களைப் போல அவனுக்கு இன்பந்தர இயலாதாயினும் வீணை பொருமையைக் கொண்டு அவனையடைந்தது.

கிழத்தனத்தைக்குறிக்கும் சொல்லான जरा - என்பது ஸ்திரீலிங்கச் சொல்லாகையால் ஸ்திரீயாக உருவகம் செய்தார். विलासिनीनाम् - सौभाग्यविशेषभोग्यम् - பாரியாத்ரன் சிறந்த அழகுடையவன். எனவே, பருவப்பெண்களாலே நுகரப் படவேண்டிய அவனை முதுமை வந்துற்றது என இரக்கம் தோன்றக் கூறினர் கவி.

உலக இன்பங்களை அனுபவித்து ஆசையைத்தீர்த்துக் கொள்வதற்கு முன்பே அவன் கிழவனுய்விட்டான் என்பது கருத்து.

उन्नाभ इत्युद्गतनामधेयस्तस्यायथार्थोन्नतनाभिरन्ध्रः ।
सुतोऽभवत्पङ्कजनाभकल्पः कृत्स्नस्य नाभिर्नृपमण्डलस्य ॥२०॥

तस्य-அந்த சிலனுக்கு, उन्नाभः-इति -உந்நாபன் என்று, उद्गत नामधेयः - பிரசித்தமான பெயரையுடைய, अयथार्थ-उन्नत-नाभि रन्ध्रः - ஆழ்ந்த நாபியை யுடையவனும், पङ्कज-नाभ कल्पः - விஷ்ணுவைப் போன்றவனும், कृत्स्नस्य-எல்லா, नृप मण्डलस्य-அரசர் தொகுதிக்கும், नाभिः-தலைவனுமான, सुतः - மகன், अभवत् - உண்டானுன்.

(க-து.) அச் சிலனுக்கு ஆழ்ந்த நாபியை யுடையவனும், விஷ்ணு போன்றவனுமான உந்நாபன் என்ற மகன் பிறந்தான். அவன் பன்னிருவகை அரசர்களுக்கும் தலைவனுகத் திகழ்ந்தான்.

अयथार्थोन्नतनाभिरन्ध्रः । उन्नाभ - என்ற சொல்லுக்கு உயரமான நாபியை உடையவன் என்பது பொருள். நாபி ஆழ்ந்திருத்தலே சிறப்பாகக் கருதப்படுவது. ' स्वरः सत्वं च

**नाभिश्च गांभीर्यं त्रिषु शस्यते'** என்பர். ஆழ்ந்த நாபியுடையவனாக இருந்ததால் அவன் தன் பெயருக்கு ஏற்ப உயர்ந்த நாபியையுடையவனாக இல்லை. எனவே, **उन्नतनाभि** - என்பது அவன் விஷயத்தில், **अयथार्थ**மாக — உண்மைக்கு மாறானதாக—இருந்தது.

तत: परं वज्रधरप्रभावस्तदात्मज: संयति वज्रघोष: ।

बभूव वज्राकरभूषणाया: पति: पृथिव्या: किल वज्रणाभ: ॥

**तत: परम्** - அவனுக்குப் பிறகு, **वज्रधर प्रभाव:** - இந்திரனுக்கு ஒப்பான பிரபாவத்தையுடையவனும், **संयति** - யுத்தத்தில், **वज्रघोष:** - இடிபோல் பேரொலி செய்கின்றவனுமான, **वज्रणाभ:** - வஜ்ரநாபன் என்ற, **तदात्मज:** - அவனுடைய மகன், **वज्राकरभूषणाया:** - வஜ்ர சுரங்கங்களை அணியாக உடைய, **पृथिव्या:** - பூமிக்கு, **पति:** - அரசனாக, **बभूव-किल** - ஆனான்.

(க-து.) உந்நாபனுக்குப் பிறகு, இந்திரனைப் போன்ற பலசாலியும் போரில் சிறந்தவனுமான வஜ்ரநாபன் என்ற அவனது புதல்வன் உலகிற்கரசனானான்.

**वज्राकर** - 'ரத்னங்களுக்கு இருப்பிடமான ஸமுத்ரம்,' எனப் பொருள் கூறுவர் நாராயணர்.

तस्मिन् गते द्यां सुकृतोपलब्धां तत्संभवं शङ्खणमर्णवान्ता ।

उत्खातशत्रुं वसुधोपतस्थे रत्नोपहारैरुदितै: खनिभ्य: ॥२२॥

**तस्मिन्** - அந்த வஜ்ரநாபன், **सुकृतोपलब्धाम्** - புண்யத்தால் சம்பாதிக்கப்பட்ட, **द्याम्** - ஸ்வர்க்கத்தை, **गते (सति)** அடைந்ததும, **उत्खातशत्रुम्** - அழிக்கப்பட்ட சத்ருக்களை உடைய, **शङ्खणम् (नाम)** - சங்கணன் என்ற, **तत्संभवम्** - அவன் மகனை, **अर्णवान्ता** - கடலை எல்லையாக உடைய, **वसुधा** - பூமி, **खनिभ्य:** - சுரங்கங்களிலிருந்து, **उदितै:** - உண்டான, **रत्नोपहारै:** - ரத்தினக் காணிக்கைகளால், **उपतस्थे** - ஸேவித்தது.

(க-து.) வஜ்ரநாபன் இறந்ததும் அவன் மகன் சங்கணன் இவ்வுலகிற்கரசனானான்.

तस्यावसाने हरिदश्वधामा पित्र्यं प्रपेदे पदमश्विरूपः ।
वेलातटेषूषितसैनिकाश्वं पुराविदो यं व्युषिताश्वमाहुः ॥ २३ ॥

**तस्य** - அந்த சங்கணனது, **अवसाने** - முடிவில், **हरिदश्वधामा** - ஸூரியனைப் போன்ற ஒளியுடையவனும், **अश्विरूपः** - அச்விநீ தேவர்களைப் போன்ற உருவத்தை யுடையவனுமான (அவன் மகன்), **पित्र्यम्** - தந்தையின், **पदम्** - பதவியை, **प्रपेदे** - அடைந்தான்; **वेला तटेषु** - கடற் கரைகளில், **उषित-सैनिक-अश्वम्** - வசித்த காலாட்படை களையும், குதிரைகளையுமுடைய, **यम्** - (அம்)மகனை, **पुराविदः** - சரித்ரம் அறிந்தவர்கள், **व्युषिताश्वम्**-வ்யுஷிதாச்வன் என, **आहुः** கூறுகின்றனர்.

(க-து) அச்சங்கணன் இறந்ததும் சூரியனைப் போன்ற ஒளி யுடையவனும் அச்வினீ தேவர்களைப் போன்ற அழகுடையவனு மான அவனது மகன் அரசனானான். கடற்கரைகளில் ஸேனையின் பகுதிகளான குதிரைகளையும் காலாட்களையும் வசிக்கும்படி செய்ததால் வ்யுஷிதாச்வன் என்னும் பொருளோடு கூடிய பெயருடையவனாக இருந்தான்.

**व्युषिताश्व** - 'வசிக்கும்படி செய்யப்பட்ட குதிரைகளை யுடையவன்,' என்பது பதப்பொருள்.

**हरिदश्वनामा** - எனப்பாடம் கொண்டு ஹரிதச்வன் என்பது அவனது இயற்பெயரென்றும், வ்யுஷிதாச்வன் என்பது காரணப் பெயர் எனவும் நாராயணர் கூறுவர்.

आराध्य विश्वेश्वरमीश्वरेण तेन क्षितेर्विश्वसहो विजज्ञे ।
पातुं सहो विश्वसखः समग्रां विश्वंभरामात्मजमूर्तिरात्मा ॥२४॥

विश्वेश्वरम् - விச்வேச்வரனை, आराध्य-பூஜித்து, क्षितेः-ईश्वरेण - உலகின் அரசனை, तेन-அந்தவ்யுஷிதாச்வனாலே, आत्मा - தன் வடிவம், विश्वसहः (नाम)-விச்வஸஹன் என்ற பெயருடையதாகவும், विश्वसखः - உலகிற்குத் தோழனாக வும், समग्राम् - முழு, विश्वंभराम् - உலகத்தையும், पातुम् - காக்க, सहः - திறமை வாய்ந்ததாகவும், आत्मजमूर्तिः - புத்திரன் உருவினதாகவும், विजज्ञे - உண்டாக்கப் பட் டது.

(க-து) அந்தவ்யுஷிதாச்வன் காசியிலுள்ள விச்வேசுவரரைப் பூஜித்து உலகிற்கெல்லாம் தோழனை விச்வஸஹன் என்ற ஒரு புதல்வனை யடைந்தான்.

எல்லா வகையிலும் மகன் தன்னைப்போன்றே இருந்த தால் வ்யுஷிதாச்வன் தன் வடிவத்தையே வேறு பெயருடன் படைத்துக் கொண்டான் எனக் கூறினார் கவி.

'विजज्ञे अन्तर्भूतण्यर्थः- उत्पादितः इत्यर्थः' नारायणः

अंशे हिरण्याक्षरिपोः स जाते हिरण्यनाभे तनये नयज्ञः ।
द्विषामसह्यः सुतरां तरूणां हिरण्यरेता इव सानिलोऽभूत् ॥

नयज्ञः - (ராஜ) நீதியை அறிந்த, सः - அந்த விச்வ ஸஹன்,—हिरण्याक्षरिपोः - ஹிரண்யாக்ஷனின் பகைவரான விஷ்ணுவின், अंशे - அம்சமான, हिरण्यनाभे-ஹிரண்யநாபன் என்ற, तनये-மகன், जाते (सति) - பிறந்தவுடன்,—तरूणाम्-மரங்களால், सानिलः - காற்றுடன் கூடிய, हिरण्यरेताः इव - நெருப்பு (தாங்க முடியாதது) போல—द्विषाम् - பகைவர் களால், सुतराम् - மிகவும், असह्यः - தாங்க முடியாதவனாக, अभूत् - ஆனான்.

(க-து) நீதி சாஸ்திர மறிந்த அவ்விச்வஸஹனுக்கு விஷ்ணு வின் அமசமான ஹிரண்யநாபன் என்ற புதல்வன் பிறந்தான். காற்றுடன் கூடிய நெருப்பு மரங்களை அழிப்பதுபோல் மகனு

டன் கூடிய விச்வஸஹன் பகைவர்களை அழித்தான். எனவே, காற்றுடன் கூடிய நெருப்பை எவ்வாறு மரங்கள் தாங்க முடியாதோ அவ்வாறு பகைவர் அவ்விருவரின் பலத்தைத் தாங்கமுடியாதிருந்தனர்.

पिता पितॄणामनृणस्तमन्ते वयस्यनन्तानि सुखानि लिप्सुः ।
राजानमाजानुविलम्बिबाहुं कृत्वा कृती वल्कलवान् बभूव ॥

**पितॄणाम् अनृणः** - பித்ருக்களின் கடனைத் தீர்த்த, **कृती** - செய்ய வேண்டியதைச் செய்து முடித்த, **पिता** - தந்தை (விச்வஸஹன்), **अन्ते वयसि** - கடைசி வயதில், **अनन्तानि** - அழியாத, **सुखानि** - இன்பங்களை, **लिप्सुः** - அடைய விரும்பினவனாக, **आजानु-विलम्बि-बाहुम्** - ஆஜானு பாஹுவான, **तम्** - அந்த ஹிரண்யநாபனை, **राजानम्** - அரசனாக, **कृत्वा** - செய்த பின், **वल्कलवान्** - மரவுரியை யடையவனாக, **बभूव** - ஆனான்.

(க-து) புத்திரனைப் பெற்றதால் பித்ருக்களின் கடனைத் தீர்த்த விச்வஸஹன் தன் புதல்வன் ஹிரண்யநாபனை அரசனாக்கி விட்டு மோக்ஷத்தை யடைய விரும்பி மரவுரி தரித்துத் தவம் புரியலானான்.

**अनन्तानि सुखानि** - முடிவிலாவின்பம் என்றது மோக்ஷத்தை; **आजानु-विलंबिबाहुं**-'முழங்காள்வரை நீண்ட கைகளையுடைய' என்பது பதப் பொருள்.

कौसल्य इत्युत्तरकोसलानां पत्युः पतङ्गान्वयभूषणस्य ।
तस्यौरसः सोमसुतः सुतोऽभून्नेत्रोत्सवः सोम इव द्वितीयः ॥

**उत्तरकोसलानाम्** - உத்தர கோஸல நாட்டின், **पत्युः** - அரசனும், **पतङ्ग-अन्वय-भूषणस्य** - சூரிய குலத்திற்கு அணிகலனும், **सोमसुतः** - ஸோமயாகம் செய்தவனுமான, **तस्य** - அவனுக்கு (ஹிரண்யநாபனுக்கு), **द्वितीयः** -இரண்டாவது,

**सोमः-इव** - சந்திரன் போல, **नेत्र-उत्सवः** - கண்களுக்கு விருந்தான, **कौसल्यः-इति** - கௌஸல்யன் என்ற, **औरसः-सुतः** - தர்ம பத்னியிடம் தோன்றிய மகன், **अभूत्** - இருந்தான்.

(க-து) கோசலநாட்டரசனும், சூரியகுலத்திற்குச்சிறப்பைத் தந்தவனும், ஸோம யாகம் செய்தவனுமான அந்த ஹிரண்ய நாபனுக்குச் சந்திரன் போன்று அழகிய கௌஸல்யன் என்ற ஒரு புதல்வன் பிறந்தான்.

**औरसः** - அரசருக்குப் பல மனைவியர் இருக்கலாம். தர்மானுஷ்டானத்தைக் கருதி முதலில் மணம் செய்து கொள்ளப் பட்டவள் தர்ம பத்னி; அவளிடம் பிறந்தவனை இங்கு இச்சொல் குறித்தது. இன்ப நுகர்ச்சிக்காகப் பின் வந்த மனைவியர் காமபத்னிகள் என அழைக்கப்படுவர்.

**सोमसुत्** - ஸோம யாகம் செய்தவன்.

यशोभिराब्रह्मसभं प्रकाशः स ब्रह्मभूयं गतिमाजगाम ।
ब्रह्मिष्ठमाधाय निजेऽधिकारे ब्रह्मिष्ठमेव स्वतनुप्रसूतम् ॥२८॥

**आब्रह्मसभम्** - பிரம்மலோகம் வரை, **यशोभिः** - புகழ்களால், **प्रकाशः** - ஒளிரும், **सः** - அந்தக் கௌஸல்யன், **ब्रह्मिष्ठम्** - பிரம்மத்தை அறிந்த, **ब्रह्मिष्ठम्** - பிரம்மிஷ்டன் என்ற, **स्वतनु-प्रसूतम्** - தன் புதல்வனை, **निजे** - தனது, **अधिकारे** - கடமையில், **आधाय**-வைத்து விட்டு, **ब्रह्मभूयम् गतिम्** - பிரம்மத்தின் தன்மை என்ற நிலையை, **आजगाम** - அடைந்தான்.

(க-து) தேவர்களெல்லாம் புகழும் அக்கௌஸல்யன், பிரம்ம ஞானமுடைய பிரம்மிஷ்டன் என்ற தன் புதல்வனை அரசனாக்கி விட்டு மோக்ஷத்தை அடைந்தான்.

तस्मिन्कुलापीडनिभे विपीडं सम्यङ्महीं शासति शासनाङ्काम् ।

प्रजाश्चिरं सुप्रजसि प्रजेशे ननन्दुरानन्दजलाविलाक्ष्यः ॥२९॥

**कुल-आपीड निभे** - வம்சத்திற்கு மாலை போன்றவனும், **सुप्रजसि** - சிறந்த புதல்வனையுடையவனுமான, **तस्मिन्** - அந்த, **प्रजेशे** - அரசன் பிரம்மிஷ்டன், **शासनाङ्काम्** - (சிலா) சாஸனங்களை அடையாளமாகக் கொண்ட, **महीम्** - பூமியை **विपीडम्** - துன்பங்களற்றிருக்கும்படி, **सम्यक्** - நன்றாக, **शासति (सति)** - ஆளும்பொழுது, **आनन्दजल-आविल-अक्ष्यः** - ஆனந்தக் கண்ணீர் நிரம்பிய கண்களையுடைய, **प्रजाः** - பிரஜைகள், **चिरम्** - வெகுகாலம், **ननन्दुः** - மகிழ்ந்திருந்தனர்.

(க-து) அந்த பிரம்மிஷ்டன் உலகத்தை நன்றாக ஆண்டு வந்ததால் மக்கள் மனமகிழ்ச்சியுடனிருந்தனர்.

**कुल आपीडनिभे । आपीड** - தலையிலணியும் பூமாலை. பிரம்மிஷ்டனால் அவனது குலம பெருமை பெற்றதாலே அவனைச் சிரஸிலணியும் மாலையோடு ஒப்பிட்டார் கவி;

**शासनांकाम्** -'அவன் அளித்த தானங்களைத் தெரிவிக்கும் சாஸனங்கள் பூமியெங்கும் நிறைந்திருந்தன' என்பது நாராயணர் உரை. 'அவனது நல்லாட்சியின் சின்னங்களையுடைய' என்பது மற்றவர்களின் உரை.

पात्रीकृतात्मा गुरुसेवनेन स्पष्टाकृतिः पत्ररथेन्द्रकेतोः ।

तं पुत्रिणां पुष्करपत्रनेत्रः पुत्रः समारोपयदग्रसंख्याम् ॥

**गुरुसेवनेन** - பெரியோர்களுக்குப் பணிவிடை செய்வதால், **पात्रीकृतात्मा** - தன்னைத் தக்கவனாக்கிக் கொண்டவனும், **पत्ररथेन्द्रकेतोः** - கருடத்துவஜரான விஷ்ணுவுக்கு, **स्पष्टाकृतिः** - சமமான உருவமுடையவனும், **पुष्करपत्रनेत्रः** -

தாமரை இதழ் போன்ற கண்களையுடையவனுமான, **पुत्रः** - புத்திரன் என்ற மகன், **तम्** - அந்த பிரம்மிஷ்டனை, **पुत्रिणाम्** - புத்திரரைப் பெற்றவருள், **अग्रसंख्याम्** - முதல் எண்ணிக்கையை,, **समारोपयत्** - அடைவித்தான்.

(க-து) திருமாலுக்குச் சமமான உருவத்தையுடைய பிரம்மிஷ்டனுக்குப் புத்திரன் என்ற புதல்வன் பிறந்தான். அவன் தன் பணிவிடைகளால் தன் தந்தை பிரம்மிஷ்டனைப் புத்திரரைப் பெற்றவருள் முதல்வனாக விருக்கும்படி செய்தான்.

இச் சுலோகத்தில் உள்ள **पुत्र** என்ற சொல் பிரம்மிஷ்டனைக் குறிப்பதாகக் கொண்டு, 'பிரம்மிஷ்டன் தந்தைக்குப் பணிவிடை செய்து அவரைத் தந்தையருள் சிறந்தவராகச் செய்தான்' என்பர் நாராயணர்.

वंशस्थितिं वंशकरेण तेन संभाव्य भावी स सखा मघोनः ।
उपस्पृशन्स्पर्शनिवृत्तलौल्यस्त्रिपुष्करेषु त्रिदशत्वमाप ॥ २१ ॥

**स्पर्श-निवृत्त-लौल्यः** - இன்பப் பொருள்களிருந்து நீங்கிய ஆசையுடையவனும், **मघोनः** - இந்திரனின், **सखा** - நண்பனாக, **भावी** - ஆகப்போகிறவனுமான, **सः** - அந்த பிரம்மிஷ்டன், **वंशकरेण** - வம்சத்தை விருத்தி செய்யும், **तेन** - அந்தப் புத்திரனால், **वंशस्थितिम्** - வம்சத்தின் நிலைப்பை, **संभाव्य** - செய்த பின், **त्रिपुष्करेषु** - மூன்று புண்ய தீர்த்தங்களில், **उपस्पृशन्** - ஸ்நானம் செய்து, **त्रिदशत्वम्** - தேவ நிலையை, **आप** - அடைந்தான்.

(க-து) பிரம்மிஷ்டன் முதுமையை அடைந்தான். தன் மகன் புத்திரனுக்கு அரசுரிமையை அளித்தான் த்ரிபுஷ்கரம் என்ற புண்யதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து புண்யம் பெற்றுச் சுவர்க்கம் எய்தினன்.

**पुष्करम्** - புண்ய தீர்த்தம்; மூன்று புண்ய தீர்த்தங்கள் என்றது, கங்கை, யமுனை, ஸரஸ்வதி என்ற மூன்று நதி

களின் ஸங்கம ஸ்தலத்தை. பிரயாகையிலே இம்மூன்றும் சேருவதாகக் கூறுவர்; த்ரிபுஷ்கரம் என்பது பிரயாகையின் மறு பெயராக இருக்கலாமெனத் தோன்றுகின்றது.

तस्य प्रभानिर्जितपुष्परागं पौष्यां तिथौ पुष्यमसूत पत्नी ।
तस्मिन्नपुष्यन्नुदिते समग्रां पुष्टिं जनाः पुष्य इव द्वितीये ॥

**तस्य** - அந்தப் புத்திரன் என்பவனுடைய, **पत्नी** - மனைவி, **पौष्याम् तिथौ** - புஷ்ய நக்ஷத்ரத்துடன் கூடிய (பௌர்ணமி) திதியில், **प्रभानिर्जित-पुष्परागम्** - ஒளியால் ஜயிக்கப்பட்ட புஷ்பராக ரத்தினத்தையுடைய, **पुष्यम्** - புஷ்யன் என்பவனை, **असूत** - பெற்றாள்; **द्वितीये** - இரண்டாவது, **पुष्ये इव स्थिते** - புஷ்ய நக்ஷத்ரம் போல் (இருக்க), **तस्मिन्** - அவன், **उदिते (सति)** - பிறந்ததும், **जनाः** - மக்கள், **समग्राम्** - பூரணமான, **पुष्टिम्** - விருத்தியை, **अपुष्यन्** - அடைந்தனர்.

(க-து) புத்திரன் என்பவனுடைய மனைவி புஷ்ய நக்ஷத்திரமும் பௌர்ணமியும் கூடிய சுபதினத்தில் புஷ்யன் என்று பெயருள்ள ஒரு மகனைப் பெற்றாள். அவன் பிறந்ததும் புஷ்ய நக்ஷத்ரத்தில் மக்கள் எல்லாச் செல்வங்களையும் பெறுவது போல் குடிகள் அவர்கள் விரும்பிய நலன்களைப் பெற்றனர்.

நக்ஷத்ரங்களிலே புஷ்ய நக்ஷத்ரத்தைச் சிறந்ததாகக் கொள்வர். **'पुष्यः परकृतं हन्ति न तु पुष्यकृतं परः'** என்பதைக் காண்க. **'पुष्णाति कार्याणि इति पुष्यः'**। காரியங்களை ஸாதித்துத் தருவதால் இந் நக்ஷத்ரம் இப்பெயர் பெற்றது.

महीं महेच्छः परिकीर्य सूनौ मनीषिणे जैमिनयेऽर्पितात्मा ।
तस्मात्सयोगादधिगम्य योगमजन्मनेऽकल्पत जन्मभीरुः ॥३३॥

**महेच्छः** - பெருந்தகையான அப் புத்திரன், **जन्मभीरुः** - மறு பிறவியில் அச்சமுற்றவனாக, **सूनौ** - புதல்வனிடத்தில்,

**महीम्** - பூமியை, **परिकीर्य** - விட்டு, **मनीषिणे** - வித்வானான, **जैमिनये** - ஜைமினி முனிவரிடம், **अर्पितात्मा**-ஒப்படைக்கப் பட்ட ஆத்மாவை உடையவனாக, **सयोगात्** - யோகியான; **तस्मात्** - அவரிடமிருந்து, **योगम्** - யோக மார்க்கத்தை, **अधिगम्य** - அறிந்து, **अजन्मने** - பிறவி நீக்கத்திற்காக, **अकल्पत** - தக்கவனானான்.

(க-து) புத்திரன் என்னும் அரசன் தன் மகனை அரசனாக்கி விட்டு, சிறந்த யோகியான ஜைமினி முனிவருக்குச் சிஷ்யனாக வாகி அவரிடமிருந்து யோகநெறியை யறிந்து வீடு பேறடைந் தான்.

तत: परं तत्प्रभव: प्रपेदे ध्रुवोपमेयो ध्रुवसंधिरुर्वीम् ।
यस्मिन्नभूज्ज्यायसि सत्यसंधे संधिर्ध्रुव: सन्नमतामरीणाम्॥३४॥

**तत: परम्** - பிறகு, **तत्प्रभव:** - அவனுடைய மகனும், **ध्रुवोपमेय:**-துருவனோடு ஒப்பிடத்தக்கவனுமான, **ध्रुवसन्धि:**-த்ருவஸந்தி, **ऊर्वीम्** - பூமியை, **प्रपेदे** - அடைந்தான்; **ज्यायसि** - சிறந்தவனும், **सत्यसन्धे** - உண்மையாளனுமான, **यस्मिन्**-த்ருவனிடத்தில், **सन्नमताम्**-வணங்குகின்ற, **अरीणाम्**-பகைவர்களுக்கு, **सन्धि:**-ஒப்பந்தமானது, **ध्रुव:**-ஸ்திரமான தாக, **अभूत्** - இருந்தது.

(க-து.) பிறகு புஷ்யனது மகன் துருவ ஸந்தி ராஜ்யத்தை அடைந்தான். அவன் குணத்தினால் சிறந்து ஸத்ய ஸந்தனாக இருந்ததால், பகைவர்கள் அவனுடன் செய்து கொண்ட ஸந்தி பிற்காலத்தில் மாறாததாக இருந்தது. அதனால் அவ்வரசர்கள் கவலையின்றி அரசு நடத்தினர்.

புஷ்யனது அந்திய காலம் பற்றி ஒன்றும் கூறாது விட்டிருத்தலைக் காண்க.

सुते शिशावेव सुदर्शनाख्ये दर्शात्ययेन्दुप्रियदर्शने स: ।
मृगायताक्षो मृगयाविहारी सिंहादवापद्विपदं नृसिंह: ॥ ३५ ॥

**मृगायताक्ष:** - மானினுடையன போன்ற நீண்ட கண் களையுடையவனும், **नृसिंह:** - ஆண்களில் சிறந்தவனுமான

**सः**-அந்த துருவஸந்தி, **दर्शात्यय-इन्दु-प्रिय-दर्शने**-(சுக்லபக்ஷ) பிரதமையன்றுள்ள சந்திரனைப் போல் காணுதற்கினியனை, **सुदर्शनाख्ये** ஸுதர்சனன் என்ற, **सुते**-(தன்) மகன், **शिशौ** - குழந்தைப்பருவத்தினனாக (**सति**) **एव** - இருக்கையிலேயே, **मृगयाविहारी** - வேட்டை ஆடுபவனாக, **सिंहात्** - சிங்கத்திடமிருந்து, **विपदम्** - மரணத்தை, **अवापत्** -அடைந்தான்.

(க-து) அழகும், பலமும் உடைய அந்தத் துருவஸந்திக்கு, பிரதமாசந்திரன்போல அழகிய ஒரு மகன் பிறந்தான். அம்மகன் சிறு குழந்தையாயிருக்கையிலேயே துருவஸந்தி, வேட்டைக்குச் சென்று அங்குச் சிங்கத்தால் கொல்லப்பட்டு மரணமடைந்தான்.

**दर्शात्ययः** - அமாவாஸ்யையின் முடிவு; அதன் பின் வருகின்ற பிரதமை; சுக்லபக்ஷத்தில் சந்திரனைக்காண்பது நலனளிப்பதாகக் கூறுவர். **प्रतिपच्चन्द्र इव प्रियाः प्रजाः — नवोदयं नाथमिवौषधीनाम्**·(2-73) என்பனவற்றையும் காண்க.

**नृसिंह** - என்ற விசேஷணம், அவனடைந்த விபத்திற்குக் காரணமான அதிக தைர்யத்தைக் காட்டியது.

स्वर्गामिनस्तस्य तमैकमत्यादमात्यवर्गः कुलतन्तुमेकम् ।
अनाथदीनाः प्रकृतीरवेक्ष्य साकेतनाथं विधिवच्चकार ॥ २६ ॥

**स्वर्गामिनः** - ஸுவர்க்கத்தையடைந்த, **तस्य** - அந்த துருவஸந்தியின், **अमात्यवर्गः** - மந்திரிக் குழு, **अनाथ दीनाः** தலைவனின்றி வருந்துகின்ற, **प्रकृतीः** - குடிகளை, **अवेक्ष्य** - கண்டு, **कुलतन्तुम्** - குலத்திற்கு நூலானவனும், (ஆதாரமானவனும்), **एकम्** - தனியனுமான, **तम्** - அப்பாலனை, **ऐकमत्यात्** - ஏகமனதாக, **विधिवत्** - முறைப்படி, **साकेतनाथम्** - அயோத்திக்கு அரசனாக, **चकार** - செய்தது.

(க-து.) துருவஸந்தி இறந்ததும், ராஜ்யம் அரசனின்றி இருப்பதைக் கண்ட அவன் மந்திரிகள், துருவ ஸந்தியின் ஒரே மகனைக் குழந்தைப் பருவத்திலிருந்த போதிலும் அரசனாக்கினர்.

**एकम्** - 'ஒப்பற்றவன்' என்றும் பொருள் உரைக்கலாம்.

**कुलतन्तुम्** - நூலிழைபோல் சிறு வடிவிலே உள்ளவன்; இழை துணிக்கு ஆதாரமாக இருப்பதுபோல் குலத்திற்கு ஆதாரமாகவும் இருப்பவன்.

नवेन्दुना तन्नभसोपमेयं शावैकसिंहेन च काननेन ।
रघोः कुलं कुड्मलपुष्करेण तोयेन चाप्रौढनरेन्द्रमासीत् ॥

**अप्रौढ नरेन्द्रम्** - சிறு வயதினனான அரசனையுடைய, **तत्** - அந்த, **रघोः-कुलम्** - ரகுவின் வம்சம், **नवेन्दुना** - பிறைச் சந்திரனையுடைய, **नभसा** - ஆகாயத்துடனும், **शाव-एक-सिंहेन** - குட்டியாகவிருக்கும் ஒற்றைச் சிங்கத்தையுடைய, **काननेन च** - காட்டுடனும், **कुड्मल-पुष्करेण** - மலராத (ஒற்றைத்) தாமரையை உடைய, **तोयेन च** - தண்ணீருடனும், **उपमेयम्** - ஒப்பிடத் தகுந்ததாக, **आसीत्** - இருந்தது.

(க-து.) பூர்ணமான வளர்ச்சியை அடையாத சந்திரனையுடைய ஆகாயம் போலவும், வயது நிரம்பாத சிங்கக் குட்டியையுடைய காடு போலவும், மலராத ஒரே தாமரை மொட்டையுடைய குளம் போலவும், குழந்தைப் பருவத்திலுள்ள அரசனையுடைய ரகுவம்சம் இருந்தது.

குழந்தைப் பருவத்திலுள்ள அரசனுக்குப் பிறைச் சந்திரனும், சிங்கக் குட்டியும், தாமரை மொட்டும் உபமானங்கள்.

ரகு வம்சத்திற்கு ஆகாயமும், காடும், குளமும் உவமானங்கள்; முதல உபமானம் அவ்வரசன் வளரும் ஒளியுடையவன் என்பதையும், இரண்டாவது உபமானம் எளிதில பகைவரால் வெல்ல முடியாதவன் என்பதையும், மூன்றாவது செல்வத் திருவின் வாஸஸ்தானமாக உள்ளான் என்பதையும் காட்டின.

'अत्रोपमानेषु आद्येन राज्ञः प्रतिदिनवर्धमानतेजस्त्वं, द्वितीयेन दुरभिभवत्वं, तृतीयेन तु लक्ष्मीपतित्वं च द्योत्यते' नारायणः।

लोकेन भावी पितुरेव तुल्यः संभावितो मौलिपरिग्रहात् सः।
दृष्टो हि वृण्वन्कलभप्रमाणोऽप्याशाः पुरोवातमवाप्य मेघः॥

सः - அப்பாலகன், मौलिपरिग्रहात् - முடிசூடியதால், पितुः - தந்தைக்கு, तुल्यः-एव - சமமானவனாகவே, भावी (इति) - ஆவான் என்று, लोकेन - மக்களால், संभावितः - எண்ணப்பட்டான்; हि - ஏனெனில், कलभप्रमाणः-अपि - யானைக்குட்டி அளவினதாயினும், मेघः-மேகம், पुरोवातं- கீழ்த்திசைக்காற்றை, अवाप्य - அடைந்து, आशाः - திசைகளை, वृण्वन् - வ்யாபிப்பதாக, दृष्टः - பார்க்கப்படுகின்றது.

(க-து) மேகம் ஒரு யானைக்குட்டியளவினதாய்ச் சிறியதாக இருந்தபோதிலும் கீழ்க் காற்றினால் நான்கு திசைகளிலும் பரவிப் பெரிய தோற்றத்தை அடைகிறது. அதுபோல, இக்குழந்தையரசன் சிறியவனாக விருந்தபோதிலும் அரசுரிமையைப் பெற்றவுடன், தந்தை போன்றே ஆவான் என மக்கள் கருதினர். தந்தையின் தோற்றப் பொலிவு அவனை வந்தடைந்தது.

पुरोवात - கீழ்க்காற்று. வர்ஷ ருதுவில் கீழ்த்திசையினின்றும் வீசும் காற்று மேகத்தைப் பல இடங்களிலும் பரப்புகின்றது. காற்றினால் பரவும் மேகம்போல் யௌவனப் பருவம் வந்துற்றதும குழந்தையான ஸுதர்சனனும தந்தைபோல் ஆவான் என்பர் நாராயணர்.

तं राजवीथ्यामधिहस्ति यान्तमाधोरणालम्बितमग्र्यवेषम्।
षड्वर्षदेशीयमपि प्रभुत्वात्प्रैक्षन्त पौराः पितृगौरवेण॥ ३९॥

राजवीथ्याम् - ராஜவீதியில், अधिहस्ति - யானையின் மீது, यान्तम् - செல்லுகின்றவனும், आधोरणालम्बितम् - மாவுத்தனால் பிடித்துக்கொள்ளப்பட்டவனும், अग्र्यवेषम् - அழகிய உடையுடையவனுமான, तं - அப் பாலகனை,

(க-து.) துருவஸந்தி இறந்ததும், ராஜ்யம் அரசனின்றி இருப்பதைக் கண்ட அவன் மந்திரிகள், துருவ ஸந்தியின் ஒரே மகனைக் குழந்தைப் பருவத்திலிருந்த போதிலும் அரசனாக்கினர்.

एकम् - 'ஒப்பற்றவன்' என்றும் பொருள் உரைக்கலாம்.

कुलतन्तुम् - நூலிழைபோல் சிறு வடிவிலே உள்ளவன்; இழை துணிக்கு ஆதாரமாக இருப்பதுபோல் குலத்திற்கு ஆதாரமாகவும் இருப்பவன்.

नवेन्दुना तन्नभसोपमेयं शावैकसिंहेन च काननेन ।
रघोः कुलं कुड्मलपुष्करेण तोयेन चाप्रौढनरेन्द्रमासीत् ॥

अप्रौढ नरेन्द्रम् - சிறு வயதினனான அரசனையுடைய, तत् - அந்த, रघोः-कुलम् - ரகுவின் வம்சம், नवेन्दुना - பிறைச் சந்திரனையுடைய, नभसा - ஆகாயத்துடனும், शाव-एक-सिंहेन - குட்டியாகவிருக்கும் ஒற்றைச் சிங்கத்தையுடைய, काननेन च - காட்டுடனும், कुड्मल-पुष्करेण - மலராத (ஒற்றைத்) தாமரையை உடைய, तोयेन च - தண்ணீருடனும், उपमेयम् - ஒப்பிடத் தகுந்ததாக, आसीत् - இருந்தது.

(க-து.) பூர்ணமான வளர்ச்சியை அடையாத சந்திரனையுடைய ஆகாயம் போலவும், வயது நிரம்பாத சிங்கக் குட்டியையுடைய காடு போலவும், மலராத ஒரே தாமரை மொட்டையுடைய குளம் போலவும், குழந்தைப் பருவத்திலுள்ள அரசனையுடைய ரகுவம்சம் இருந்தது.

குழந்தைப் பருவத்திலுள்ள அரசனுக்குப் பிறைச் சந்திரனும், சிங்கக் குட்டியும், தாமரை மொட்டும் உபமானங்கள்.

ரகு வம்சத்திற்கு ஆகாயமும், காடும், குளமும் உவமானங்கள்; முதல உபமானம அவ்வரசன் வளரும் ஒளியுடையவன் என்பதையும், இரண்டாவது உபமானம் எளிதில பகைவரால் வெல்ல முடியாதவன் என்பதையும், மூன்றாவது செல்வத் திருவின் வாஸஸ்தானமாக உள்ளான் என்பதையும காட்டின.

'अत्रोपमानेषु आद्येन राज्ञः प्रतिदिनवर्धमानतेजस्त्वं, द्वितीयेन दुरभिभवत्वं, तृतीयेन तु लक्ष्मीपतित्वं च द्योत्यते' नारायणः।

लोकेन भावी पितुरेव तुल्यः संभावितो मौलिपरिग्रहात् सः।
दृष्टो हि वृण्वन्कलभप्रमाणोऽप्याशाः पुरोवातमवाप्य मेघः॥

**सः** - அப்பாலகன், **मौलिपरिग्रहात्** - முடி சூடியதால், **पितुः** - தந்தைக்கு, **तुल्यः-एव** - சமமானவனாகவே, **भावी (इति)** - ஆவான் என்று, **लोकेन** - மக்களால், **संभावितः** - எண்ணப்பட்டான்; **हि** - ஏனெனில், **कलभप्रमाणः-अपि** - யானைக்குட்டி அளவினதாயினும், **मेघः**-மேகம், **पुरोवातं**-கீழ்த்திசைக்காற்றை, **अवाप्य** - அடைந்து, **आशाः** - திசைகளை, **वृण्वन्** - வ்யாபிப்பதாக, **दृष्टः** - பார்க்கப்படுகின்றது.

(க-து) மேகம் ஒரு யானைக்குட்டியளவினதாய்ச் சிறியதாக இருந்தபோதிலும் கீழ்க் காற்றினால நான்கு திசைகளிலும் பரவிப் பெரிய தோற்றத்தை அடைகிறது. அதுபோல, இக்குழந்தையரசன் சிறியவனாக விருந்தபோதிலும் அரசுரிமையைப் பெற்றவுடன், தந்தை போன்றே ஆவான் என மக்கள் கருதினர். தந்தையின் தோற்றப் பொலிவு அவனை வந்தடைந்தது.

**पुरोवात** - கீழ்க்காற்று. வர்ஷ ருதுவில் கீழ்த்திசையினின்றும் வீசும் காற்று மேகத்தைப் பல இடங்களிலும் பரப்புகின்றது. காற்றினால் பரவும் மேகம்போல் யௌவனப் பருவம் வந்துற்றதும குழந்தையான ஸுதர்சனனும் தந்தைபோல் ஆவான் என்பர் நாராயணர்.

तं राजवीथ्यामधिहस्ति यान्तमाधोरणालम्बितमग्र्यवेषम्।
षड्वर्षदेशीयमपि प्रभुत्वात्प्रैक्षन्त पौराः पितृगौरवेण॥ ३९॥

**राजवीथ्याम्** - ராஜவீதியில், **अधिहस्ति** - யானையின் மீது, **यान्तम्** - செல்லுகின்றவனும், **आधोरणालम्बितम्** - மாவுத்தனால் பிடித்துக்கொள்ளப்பட்டவனும், **अग्र्यवेषम्** - அழகிய உடையுடையவனுமான, **तं** - அப் பாலகனை,

**षड्वर्षदेशीयम्-अपि** - ஆறுவது வயது நிரம்பப்பெறுதவனுக விருப்பினும், **पौराः** - பட்டணத்து ஜனங்கள், **प्रभुत्वात्** அவன் அரசனுக இருத்தலால், **पितृगौरवेण** - (அவனது) தந்தையிடமுள்ள கௌரவத்துடன், **प्रैक्षन्त** - பார்த்தனர்.

(க-து) அரசர்க்குரிய உடையுடன் யானைமீதமர்ந்து ராஜவீதியில் செல்லும் அப்பாலகனை நகரமக்கள், அப்பையனின் தந்தையைக் காண்பதுபோலவே மதிப்புடன் பார்த்தனர்.

அபிஷேகம் முடிந்ததும் அரசர் நகரில் வலம் வருதல் முறை. **आधोरणालंबितम्** - சிறுவனுகையால் அவன் கீழே விழுந்து விடாதபடி மாவுத்தன் பிடித்துக் கொண்டிருந்தான்.

कामं न सोऽकल्पत पैतृकस्य सिंहासनस्य प्रतिपूरणाय ।
तेजोमहिम्ना पुनरावृतात्मा तद्व्याप चामीकरपिञ्जरेण ॥ ४० ॥

**सः** - அவன், **पैतृकस्य** - தந்தையின், **सिंहासनस्य** - ஸிம்மாஸனத்தை, **प्रतिपूरणाय** - (உடலின் அளவினுல்) நிரப்புவதற்கு, **न - अकल्पत - कामम्** - இயலவில்லைதான்; (ஆனல்), **चामीकरपिञ्जरेण** - பொன் போன்று மஞ்சள் நிற மான, **तेजो महिम्ना पुनः** - (தன்) ஒளியின் மிகுதியால், **आवृतात्मा** - பரந்த உடலுடையவனுக, **तत्** - அச் சிங்காதனத்தை, **व्याप** - வியாபித்து இருந்தான்.

(க-து) அவ்வரசன் சிறுவனுக விருந்ததால் தந்தையின் சிங்காதனத்தைத் தான் அமருவதால் நிரப்ப முடியவில்லை. ஆனல் பொன் போன்ற தன் ஒளி மிகுதியால் அச்சிங்காதனம் முழுவதும் வியாபித்து இருந்தான்.

तस्मादधः किंचिदिवावतीर्णावसंस्पृशन्तौ तपनीयपीठम् ।
सालक्तकौ भूपतयः प्रसिद्धैर्ववन्दिरे मौलिभिरस्य पादौ ॥४१॥

**तस्मात्** - அந்தச் சிம்மாஸனத்திலிருந்து, **अधः** - கீழே, **किञ्चिदिव** - சிறிதே, **अवतीर्णौ** - தொங்கி இருப்பனவும்,

**तपनीय पीठम्** - தங்கப்பீடத்தை, **असंस्पृशन्तौ** - தொடாதன வும, **सालक्तकौ** - செம்பஞ்சு ரஸம் பூசப்பட்டனவுமான, **अस्य पादौ** - அவ்வரசனின் பாதங்களை, **भूपतयः** - அரசர்கள், **प्रसिद्धैः**-அலங்கரிக்கப்பட்ட, **मौलिभिः** - (தங்கள்) முடிகளால், **ववन्दिरे** - வணங்கினர்.

(க-து) சிறுவனாகையால் இவ்வரசனின் பாதங்கள் சிம்மா ஸனத்தின் கீழே அமைக்கப் பட்டுள்ள பாத பீடத்தைக் கூடத் தொடவில்லை. ஆயினும் மற்ற அரசர்கள் தங்கள் முடிகளைத் தாழ்த்தி இவ்வரசனை வணங்கினர்.

சிறுவனாகவிருப்பினும் வம்சத்தின்பெருமை குன்றாத வாறு மந்திரிகளின் துணைகொண்டு அரசுபுரிந்து வந்தா னென்பது கருத்து. **सालक्तकौ** - சிறு குழந்தையாகையால் அவனது பாதங்களில் செம்பஞ்சு ரஸம் பூசி அழகு செய் திருந்தனர்.

मणौ महानील इति प्रभावादल्पप्रमाणेऽपि यथा न मिथ्या ।
शब्दो महाराज इति प्रतीतस्तथैव तस्मिन् युयुजेऽर्भकेऽपि ॥

**अल्पप्रमाणे- अपि**-சிறிய அளவினதாயினும், **मणौ** ரத்தி னத்தில, (இந்திர நீலக்கல்லில), **प्रभावात्**-ஒளி மிகுதியால், **महानीलः इति** - மஹா நீலம் என்ற சொல, **यथा** - எப்படி, **मिथ्या न**-பொய்யாகாதோ, **तथा-एव**-அப்படியே, **अर्भके-अपि**-சிறு குழந்தையாயினும், **तस्मिन्** - ஸுதாசனனிடத்தில், **प्रतीतः** - பிரஸித்தமான, **महाराजः-इति शब्दः** - மஹாராஜன் என்ற சொல், **युयुजे** - பொருந்தியதாயிற்று.

(க-து) அளவில் சிறியதாயினும் இந்திர நீலக்கல், ஒளி குன்றாத காரணத்தால் மஹா நீலம என்றே கூறப்படும், அது போல, சிறுவனாகவிருந்தபோதிலும் ஒளி மிகுதியால் அவ்வரசன் மஹாராஜன் என்றே அழைக்கப்பட்டான். அச்சொல் பொருளு டையதாய் அவனிடம் பொருந்தி இருந்தது.

पर्यन्तसंचारितचामरस्य कपोललोलोभयकाकपक्षात् ।
तस्याननादुच्चरितोऽपवादश्चस्खाल वेलास्वपि नार्णवानाम् ॥

**पर्यन्त-सञ्चारित-चामरस्य** - (இரு) பக்கங்களில் வீசப் பட்ட சாமரங்களையுடைய, **तस्य** - அவ்வரசனது, **कपोल-लोल-उभय - काकपक्षात्** - கன்னங்களில் - அசைகின்ற - இரு -காக பக்ஷங்களையுடைய, **आननात्** - முகத்தினின்றும், **उच्चरितः** - எழுந்த, **अपवादः** - ஆணை, **अर्णवानाम्** - கடல்களின், **वेलासु** - **अपि** -(மறு) கரைகளிலுங்கூட, **न चस्खाल**- தவறவில்லை (மீறப்படவில்லை).

(க-து) சிறு வயதினனாகவிருப்பினும் அவனுடைய கட்டளை கடலுக்கு அப்பாலும் சென்றது. மீறப்படாமலும் இருந்தது.

अपवादः- ஆணை ; 'अपवादौ तु निन्दाज्ञे' என்பது அமரம் ; 'अपवादस्तु निर्देशो निदेशश्शासनं तथा' என்பது வைஜயந்தி. **विवादः**-என்ற பாடம் பொருத்தமற்றது.

निर्वृत्तजाम्बूनदपट्टबन्धे न्यस्तं ललाटे तिलकं दधानः ।
तेनैव शून्यान्यरिसुन्दरीणां मुखानि स स्मेरमुखश्चकार ॥४४॥

**निर्वृत्त - जाम्बूनद पट्ट बन्धे** - பொன் மயமான முடியை யுடைய, **ललाटे** - நெற்றியில, **न्यस्तम्** -இடப்பட்ட, **तिलकम्**- திலகத்தை, **दधानः** - அணிந்தவனும், **स्मेरमुखः** - புன்னகை யுள்ள முகத்தை உடையவனுமான, **सः**- அவ்வரசன், **अरि - सुन्दरीणाम्** - பகைவர்கள் மனைவிகளின், **मुखानि**-முகங்களை, **तेन एव शून्यानि** - திலகம் அற்றனவாக, **चकार**-செய்தான்

(க-து) பொன்னாலான முடியை அவன் சிரஸில் அணிவித்து நெற்றியிலே திலகமிட்டனர். அவனது நெற்றியில் அமைந்த திலகம் பகைவரது மனைவியரின் நெற்றியைத் திலகமில்லாத தாகச் செய்தது.

அழகிய அவ்வரசன் பகைவர்கள் அனைவரையும் வெற்றி கொண்டான். எனவே, அவர்களது மனைவியர் பயத்தினாலும் கவலையினாலும திலகமணியவும எண்ணம கொள்ளாதிருந்தனர் என்பது கருத்து.

**पट्टः** - கிரீடம்; இதைப் பற்றி வராஹமிஹிரர் கூறுவதைக் காண்க.

**पट्टः शुभदो राज्ञां मध्येऽष्टावंगुलानि विस्तीर्णः ।**
**सप्त नरेन्द्रमहिष्याः षड् युवराजस्य निर्दिष्टः ।**
**पञ्चशिखो भूमिपतेः त्रिशिखो युवराजपार्थिवमहिष्योः ॥**
[பிருஹத் ஸம்ஹிதை அத்யாயம் 48 சுலோகம் 2-4.]

शिरीषपुष्पाधिकसौकुमार्यः खेदं स यायादपि भूषणेन ।
नितान्तगुर्वीमपि सोऽनुभावाद्धुरं धरित्र्या बिभरांबभूव ॥४५॥

**शिरीष पुष्प-अधिक-सौकुमार्यः** - வாகைப் பூவைக்காட்டிலும் அதிகமான மென்மையுடைய, **सः** - அவன், **भूषणेन-अपि**-ஆபரணங்களாலும் கூட, **खेदम्** - சிரமத்தை, **यायात्** - அடையக்கூடியவனே; **सः** - (அத்தகைய) ஸுதர்சனன், **नितान्तगुर्वीम्** - **अपि** - மிகக் கனமானதாயினும், **धरित्र्याः** - பூமியின், **धुरम्** - பாரத்தை, **अनुभावात्** - இயற்கையான திறமையால், **बिभराम्बभूव** - தாங்கினான்.

(க-து) இளம் குமாரனை ஸுதர்சனன் மிக மிருதுவான வாகைப் பூவைக்காட்டிலும் மென்மையுடையவன் தான். ஆபரணங்களை அணிவதிலும கூட அவன் உடல் வருந்தக்கூடியது தான். ஆயினும் அத்தகைய சிசுவான ஸுதர்சனன் தனக்கு இயற்கையாயுள்ள திறமையினால் ராஜ்ய பாரத்தைத் தாங்கினான்.

**शिरीष**-காட்டுவாகைப்பூ. மிருதுத் தன்மைக்கு உதாஹரணமாயுள்ளது.

न्यस्ताक्षरामक्षरभूमिकायां कार्त्स्न्येन गृह्णाति लिपिं न यावत् ।
सर्वाणि तावच्छ्रुतवृद्धयोगात्फलान्युपायुङ्क्त स दण्डनीतेः ॥४६॥

**अक्षर भूमिकायाम्** - எழுதும் பலகையில், **न्यस्ताक्षराम्**- எழுதப்பட்ட வரிகளையுடைய, **लिपिम्** - எழுத்துக்களை, **यावत्** - எப்பொழுது, **कार्त्स्न्येन न गृह्णाति** - முற்றிலும்

அறியவில்லையோ, तावत् - அப்பொழுதே, सः - அவன் श्रुतवृद्ध योगात् - படித்த பெரியோர்களின் சேர்க்கையால், दण्डनीतेः - ராஜநீதியின், सर्वाणि फलानि - எல்லாப் பலன் களையும், उपायुङ्क्त - அனுபவித்தான்.

(க-து) சிறுவனாகிய ஸுதர்சனன், பலகையில் எழுதப் பட்ட எழுத்துக்களைக் கற்பதற்கு முன்பே படித்த பெரியோர் களின் சேர்க்கையால் ராஜநீதியின் அறிவை நன்கு பெற்று விட்டான், அதனால் கிடைக்கப்பெறும் பயன்களையும் அனுப வித்தான்.

எழுத்தறிவு அடைவதன் முன்னமே அவன் பொருள் அறிவு பெற்றிருந்தான் என்பது கருத்து.

'முன்பே பயனை அனுபவித்துவந்த அவன், பின் ராஜ நீதியைக் கற்றது, அதை அனுபவத்திலே கண்டு ஒப்பு நோக்குதற்குப் போலுமிருந்தது' எனக்கருத்துரைப்பர் மல்லிநாதர்.

अक्षरभूमिका-சிறுபிள்ளைகளுக்காக எழுத்துக்கள் எழு தப்படும் பலகை அல்லது சுவர். लिपि - எனறது, अ தொடங்கி क्ष வரையுள்ள ஐம்பது முதலெழுத்துக்களை दण्डनीति -ராஜநீதி

'दमो दण्ड इति प्रोक्तो तात्स्थ्याद्दण्डो महीपतिः ।
तस्य नीतिर्दण्डनीतिर्नयनान्नीतिरुच्यते ।'

என்பதைக் காண்க.

उरस्यपर्याप्तनिवेशभागा प्रौढीभविष्यन्तमुदीक्षमाणा ।
संजातलज्जेव तमातपत्रच्छायाच्छलेनोपजुगूह लक्ष्मीः ॥४७॥

उरसि-(ஸுதர்சனனது) மார்பில், अपर्याप्त निवेशभागा- போதாத வாஸஸ்தானமுடையவளாக, प्रौढीभविष्यन्तम् - வளரப்போகின்ற அவனை, उदीक्षमाणा-எதிர்நோக்கியவளாய், लक्ष्मीः-ராஜ்யலக்ஷ்மி, सञ्जातलज्जा-इव-(நேரே அணைவதிலே) வெட்கமுற்றவள்போல், तम् - அவனை, आतपत्र-छाया-छलेन-

குடைநிழல் என்ற வியாஜத்தினால், उपजुगूह-அணைத்துக் கொண்டான்.

(க-து) மிகச் சிறியவனை ஸுதர்சனனது மார்பு விசாலமானதாக இல்லாமையால், ராஜ்யலக்ஷ்மி, ஆலிங்கனத்திற்கு அது பற்றாதெனக் கண்டு, தன்னைவிடத் தன் கணவன் சிறியவனாயிருக்கின்றான் என்பதால் வெட்கமுற்று, அவனை நேரிட அணைத்துக் கொள்ளாமல், குடை நிழல் மூலமாகத் தழுவிக் கொண்டாள்.

ராஜ்யத்தை லக்ஷ்மியாக உருவகம் செய்து, அரசனின் மனைவியாகக் கூறுவது கவி மரபு. அரசரது குடைநிழலை லக்ஷ்மியின் வடிவமாகக் கூறுவர். லக்ஷ்மிக்கு அரசரது மார்பும் உறைவிடமாகும்

**संजातलज्जेव** - லக்ஷ்மி வெட்கமுற்றதற்குக் காரணம், தன் கணவனை அரசன் தன்னை விட வயதில் மிகச்சிறியவனாக இருத்தல் பற்றி. அவ்வரசன் மேல் வெண் கொற்றக் குடையின் நிழல் படிந்தது என்பதைக் கவி, ராஜ்ய லக்ஷ்மி அவனை ஆலிங்கனம் செய்வதாகப் புனைந்து கூறினார்.

अनश्नुवानेन युगोपमानमबद्धमौर्वीकिणलाञ्छनेन ।
अस्पृष्टखड्गत्सरुणापि चासीद्रक्षावती तस्य भुजेन भूमिः ॥४८॥

**युगोपमानम्** - நுகத்தடிக்கு ஒப்பான தன்மையை, **अनश्नुवानेन** - அடையாததும், **अबद्ध मौर्वीकिण - लाञ्छनेन** - நாண் கயிற்றினால் வரும் தழும்படையாளத்தைப் பெறாததும், **अस्पृष्ट-खड्गत्सरुणा-अपि च**-கத்தியின் பிடியைத்தொடாததுமான, **तस्य**-அவனுடைய, **भुजेन** - கையால், **भूमिः** - பூமி, **रक्षावती**-பாதுகாப்புடையதாக, **आसीत्** - இருந்தது.

(க-து) சிறு குழந்தையான ஸுதர்சனனது புஜம் நுகத்தடியுடன் ஒப்பிடும்படியான நிலைக்கு வளரவில்லை வில்லைப் பிடிக்கும் பருவம் எய்தாதலால் நாண் கயிறு உராய்வதால் தோன்றும் தழும்பும் அவனது கையில் ஏற்படவில்லை, வாளின் பிடியையும் அவன் தொட்டவனல்லன். அத்தகைய சிறுபருவத்தினனாயினும், பூமி அவனால் பாதுகாப்புடையதாக இருந்தது.

இதனின்றும் அவனது பெருமை புலனாகும்.

न केवलं गच्छति तस्य काले ययुः शरीरावयवा विवृद्धिम् ।
वंश्या गुणाः खल्वपि लोककान्ताः प्रारम्भसूक्ष्माः प्रथिमानमापुः॥

**काले** - காலம், **गच्छति (सति)** - செல்லும்பொழுது, **तस्य**- அவனுடைய, **शरीरावयवाः-केवलम्** - உடலுறுப்புக்கள் மாத்திரமே, **विवृद्धिम्** - வளர்ச்சியை, **ययुः न**-பெற்றன என்ப தில்லை; **(किन्तु)** - ஆனால், **वंश्याः**-(அவனது) குலத்தினவும், **लोककान्ताः** - உலகத்தினரை வசீகரிப்பனவும்; **प्रारम्भसूक्ष्माः**- தொடக்கத்திலே நுண்ணியனவாயிருப்பனவுமான, **गुणाः- अपि**-குணங்களும், **प्रथिमानम्** - வளர்ச்சியை, (விசாலமான தன்மையை) **आपुः खलु** - அடைந்தன.

(க-து) காலக்ரமத்தில் அவனது உடலுறுப்புக்களேயன்றி அவனது குணங்களும் வளர்ந்தன. அக் குணங்கள் அவனது வம்சத்திறகு இன்றியமையாதன. மக்களின் மனத்தைக் கவர்ந் தன. பிறக்கும பொழுதே அவனிடம் ஸூக்ஷ்ம ரூபத்தில் இருந் தன.

**खलु**-வாக்யாலங்காரம்.

स पूर्वजन्मान्तरदृष्टपाराः स्मरन्निवाक्लेशकरो गुरूणाम् ।
तिस्रस्त्रिवर्गाधिगमस्य मूलं जग्राह विद्याः प्रकृतीश्च पित्र्याः ॥

**सः** - அவன், **पूर्व-जन्मान्तर दृष्टपाराः** - முன் ஜன்மத் தில் கரை காணப்பட்ட, **विद्याः** - வித்தைகளை, **स्मरन्-इव** - நினைப்பவன் போல், **गुरूणाम्** - ஆசிரியர்களுக்கு, **अक्लेशकरः (सन्)**-கஷ்டமளிக்காதவனாக, **त्रिवर्ग-अधिगमस्य**-தர்மார்த்த காமங்களை அடைவதற்கு, **मूलम्** - காரணமான, **तिस्रः** - மூன்று, **विद्याः** - வித்யைகளையும், **पित्र्याः** - தந்தையினது, **प्रकृतीः च** - பிரஜைகளையும், **जग्राह** - தன் வசமாக்கிக் கொண்டான்.

(க-து) ஸுதர்சனன், எளிதிலே கல்வியைக் கற்றது, பூர்வ ஜன்மத்திலே நன்கு கற்கப்பட்ட வித்யைகளை நினைப்பதுபோலிருந்ததேயன்றிப் புதிதாய்க் கற்பதாகத் தோன்றவில்லை. இதனால் கற்பிக்கும் ஆசிரியர்களுக்குச் சிறிதும் சிரமமில்லாதிருந்தது. எளிதிலே கல்வியைக்கற்றதால் அவன், ஜனங்களது மனத்தையும் கவர்ந்தான்.

தங்கள் அரசன் சிறந்த அறிவாளியாயிருந்தது பற்றி மக்கள் மகிழ்ச்சியுற்றனர்.

**तिस्रः विद्याः** - வித்யைகள் மூன்று ; தர்மாதர்மங்களை அறிவதற்கான வேதங்கள், கிருஷி சாஸ்திரம், ராஜ நீதி என்பனவாம்.

व्यूह्य स्थितः किंचिदिवोत्तरार्धमुन्नद्धचूडोऽञ्चितसव्यजानुः ।
आकर्णमाकृष्टसबाणधन्वा व्यरोचतास्त्रेषु विनीयमानः ॥९१॥

**सः**- அவன், **अस्त्रेषु** - ஆயுத வித்யையில், **विनीयमानः** - (ஆசிரியர்களால்) பயிற்றுவிக்கப்படுபவனாய், **उत्तरार्धम्**-உடலின் மேற் பாகத்தை, **किञ्चिदिव** - சிறிதே, **व्यूह्य** - நீட்டி **स्थितः** - நின்று கொண்டு, **उन्नद्ध चूडः** - நிமிர்த்துக் கட்டிய சிகையுடையவனாகவும், **अञ्चित-सव्य-जानुः** - வளைத்த இடது முழங்காலுடையவனாகவும், **आकर्णम्** - காதளவு, **आकृष्ट-सबाण-धन्वा**- இழுக்கப்பட்ட அம்புடன் கூடிய வில்லையுடையவனாகவும, **व्यरोचत** - விளங்கினான்-

(க-து) பிறகு ஸுதர்சனன் ஆயுதங்களிலே பயிற்சியைப் பெற்றான். பயிலும் காலத்திலும் அவன் அழகுடன் விளங்கினான்.

अथ मधु वनितानां नेत्रनिर्वेशनीयं
मनसिजतरुपुष्पं रागबन्धप्रवालम् ।
अकृतकविधि सर्वाङ्गीणमाकल्पजातं
विलसितपदमाद्यं यौवनं स प्रपेदे ॥ ९२ ॥

**अथ** - பிறகு, **सः** - அவன், **वनितानाम्** - ஸ்திரீகளுக்கு, **नेत्र निर्वेशनीयम्** - கண்களால் அனுபவிக்கத் தக்க, **मधु** - மதுவாக இருப்பதும், **रागबन्ध प्रवालम्** - காதல் உணர்ச்சியின் தோற்றத்தைத் துளிராகயுடையதும், **मनसिज-तरु-पुष्पम्** - மன்மதனுகிய மரத்தின் புஷ்பமானதும், **सर्वाङ्गीणम्** - சரீரமெங்கும் பரவியுள்ளதும், **अकृतक विधि** - இயற்கையிலே உண்டானதும், **आकल्पजातम्** - அணிகளின் குவியல் போன்றதும், **आद्यम्** - முதலாவதான, **विलसितपदम्** - சிருங்கார லீலைகளுக்குக் காரணமுமான, **यौवनम्** - யௌவனப பருவத்தை, **प्रपेदे** - அடைந்தான்.

(க-து) பெண்களது கண்களால் பருகப்படும் மதுபோன்றது ஆணின் யௌவனம்; மன்மதனுகிய மரத்தின் புஷ்பம் போன்றுள்ளது; யௌவனக் கொடியின் தளிர் போலுள்ளது; முதலில் தோன்றும் காதலுணர்ச்சி; இப்பருவம் இயற்கையிலே அமைந்து உடல் எங்கும் பரவியிருப்பது; அழகு செய்யும் ஆபரணங்களின் குவியல் போன்றது; கலவிச் செயல்களுக்கெல்லாம் முதற்காரணமானது; அத்தகைய யௌவனத்தை ஸுதர்சனன் பெற்றான்.

இச்சுலோகத்தில் கவி, யௌவனத்தைப் பல வகையில் உருவகம் செய்து வர்ணிக்கின்றார்.

प्रतिकृतिरचनाभ्यो दूतिसंदर्शिताभ्यः
समधिकतररूपाः शुद्धसंतानकामैः ।
अधिविविदुरमात्यैराहृतास्तस्य यूनः
प्रथमपरिगृहीते श्रीभुवौ राजकन्याः ॥ ५२ ॥

**दूति सन्दर्शिताभ्यः** - தூதிகளால் காண்பிக்கப் பட்ட, **प्रतिकृति रचनाभ्यः** - சித்திர வடிவைக்காட்டிலும், **समधिकतर-रूपाः** - மிகச் சிறந்த அழகுடையவர்களும், **शुद्ध-सन्तान-कामैः-आमात्यैः** - தூயதான ஸந்ததியை விரும்பிய மந்திரிகளால், **आहृताः** - கொண்டுவரப் பட்டவர்களுமான, **राज-**

**कन्याः** - ராஜ குமாரிகள், **यूनः** - யுவ புருஷனை, **तस्य** - அந்த ஸுதர்சனனுல், **प्रथम परिगृहीते** - முதலில் மணக்கப் பட்டுள்ள, **श्रीभुवौ** - ராஜ்ய லக்ஷ்மியையும் பூமியையும், **अधिविविदुः** - தம் சக்களத்திகளாகச் செய்து கொண்டனர்.

(க-து) மிகச் சிறந்த அழகுள்ள அரச குமாரிகள் ஸுதர் சனனை மணந்தனர். நற்சந்ததியை விரும்பிய மந்திரிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அப்பெண்கள். பல நாடுகளிலும் சென்று அரசனுக்காகப் பெண்பார்த்துத் தூதிகள் கொணர்ந்த சித்திரததில் இருந்ததைவிட மிக அழகுள்ளவர்களாக இருந்தனர் அவர்கள்.

**प्रकृतिरचनाभ्यः-रचितप्रतिकृतिभ्यः ।** சித்திரம வரை பவர்கள் அப்பெண்களின் அழகை முற்றிலும் வரைய இயலவில்லை. எனவே, அப்பெண்கள் சித்திரத்தில் காணப் பட்ட அழகைக் காட்டிலும் அதிக அழகுடையவர் களாகவே தென்பட்டனர் நேரில் பார்க்கப்பட்டபொழுது.

**अधिविविदुः** - பூமியையும் ராஜ்ய லக்ஷ்மியையும் அரச ரின் மனைவியாகக் கூறுவர். எனவே, ராஜகுமாரிகளை அவ்விருவருக்கும ஸகளத்ரமாகக் கூறினர்.

**इति महाकवि श्री कालिदासकृतौ**
**रघुवंशे महाकाव्ये अष्टादशः सर्गः ॥**

|| श्रीः ||

# || रघुवंशः ||

## एकोनविंशः सर्गः

अग्निवर्णमभिषिच्य राघवः स्वे पदे तनयमग्नितेजसम् ।
शिश्रिये श्रुतवतामपश्चिमः पश्चिमे वयसि नैमिशं वशी ॥ १ ॥

**श्रुतवताम्** - சிறந்த அறிவுடையவர்களில், **अपश्चिमः** - முதல்வனும், **वशी** புலன்களை அடக்கியவனுமான, **राघवः**- (ரகு வம்ச) சுதர்சனன், **पश्चिमे वयसि**-முதுமையில், **स्वे पदे**- தன்னுடைய ஸ்தானத்தில், **अग्नितेजसम्** - அக்னி போல் ஒளியுடைய, **तनयम्** - **अग्निवर्णम्** - மகன் 'அக்னி வர்ணனை, **अभिषिच्य** - அபிஷேகம் செய்துவிட்டு, **नैमिशम्** - நைமி சாரண்யத்தை **शिश्रिये** - அடைந்தான்.

(க-உ) சிறந்த அறிவாளியாகவும் புலன்களை அடக்கிய வனாகவுமிருந்தமையால், சுதர்சன், முதுமை வந்துற்ற பொழுது தன் மைந்தனாகிய அக்கினி வர்ணனை முடி சூட்டித் தன் இடத்தில் வைத்து விட்டு, நைமிசாரண்யம் சென்றான்.

நைமிசம்: மகரிஷிகள் பலர் வசித்த ஒரு காடு. புரா ணங்கள் பலவும் இக்காட்டில் ஸூதமுனிவரால் பலருக்கு எடுத்துரைக்கப்பட்டன என்பர். பதினெட்டாம் ஸர்க்கத் தில் அர்த்த புருஷார்த்தத்திற்கான ராஜ நீதியை விளக்கினார் கவி.

'சுவை பலவென்று கூறுவார் கூறுக; நாம் கூறுவது இன்பச்சுவை ஒன்றனையே' எனப் போஜராஜன் கூறியதற் கிணங்க, எல்லோராலும் ஒப்பச் சுவைக்கப்படுவதால் ச்ருங் கார ரஸத்தை ரஸ ராஜன் எனக்கருதிக்கவி அச்சுவையை நன்கு விளக்குதலையே இச்சர்க்கத்தில் பெரும பகுதிக்கு விஷயமாகக் கொண்டார்.

तत्र तीर्थसलिलेन दीर्घिकास्तल्पमन्तरितभूमिभिः कुशैः ।
सौधवासमुटजेन विस्मृतः संचिकाय फलनिस्स्पृहस्तपः ॥ २ ॥

**तत्र** - அந் நைமிசாரண்யத்தில், **तीर्थ सलिलेन** - புண்ணிய தீர்த்தங்களின் ஜலத்தால், **दीर्घिकाः** - நடைவாவிகளையும், **अन्तरित भूमिभिः** - தரையை மறைக்கின்ற, **कुशैः** - தர்ப்பங்களால், **तल्पम्** - படுக்கையையும், **उटजेन** - பர்ணசாலையால், **सौधवासम्** - மாளிகையின் வாஸத்தையும், **विस्मृतः** - மறந்தவனான, **(सः)** - அவ்வரசன், **फलनिस्स्पृहः** - (ஸ்வர்க்கம் முதலிய) பலனில் ஆசையற்றவனாக, **तपः** - தவத்தை, **सञ्चिकाय** - சேமித்தான.

(க-ரு) அவ்வரசன் அரண்மனையில் நல்ல ஜலமுள்ள நடைவாவியில் ஸ்நானத்தையும், மாளிகையில் வாஸத்தையும், மெல்லிய படுக்கையில் படுத்துறங்குதலையும் செய்து பழகியவன்; தவம்செய்த காலத்துப்புண்ய தீர்த்தங்களிலே ஸ்நாநம் செய்தான். தர்ப்பங்களை விரித்துத் தரையில் படுத்தான். பர்ணசாலையில் வசித்தான். தவத்திலே கருத்திருந்ததால் பழைய இன்பகரமான வாழ்க்கையை நினைவிலே கொள்ளவில்லை.

लब्धपालनविधौ न तत्सुतः खेदमाप गुरुणा हि मेदिनी ।
भोक्तुमेव भुजनिर्जितद्विषा न प्रसाधयितुमस्य कल्पिता ॥ ३ ॥

**तत्सुतः** - அவனது புதல்வன் அக்னி.வர்ணன், **लब्ध-पालन विधौ** - கிடைத்த ராஜ்யத்தைக் காப்பாற்றும் முறையில், **खेदम्** - கஷ்டத்தை, **न-आप** - அடையவில்லை; **हि** - ஏனெனில், **भुज-निर्जित-द्विषा** - (தனது) கையால் ஜயிக்கப்பட்ட பகைவர்களையுடைய, **गुरुणा** - தந்தையால், **मेदिनी** - பூமியானது, **अस्य** - இந்த அக்னி வர்ணனுக்கு, **भोक्तुम्-एव** - அனுபவிப்பதற்காகவே, **कल्पिता**-ஏற்படுத்தப்பட்டிருந்தது; **प्रसाधयितुम्** - சத்ருக்களை அழிப்பதற்காக, **न** - அன்று.

(க-து.) அவனது தந்தை பூமியை அவனுக்கு அனுபவிப்பதற்காகக் கொடுத்தானேயன்றிப் பகைவர்களை நீக்குவதற்காக வன்று. ஏனெனில் பகைவரை யெல்லாம் அவன் முன்பே நீக்கி யிருந்தான்.

ராஜ்யம் கிடைத்தது எவ்வாறு எளிதாக இருந்ததோ அவ்வாறே காத்தலும் அவனுக்குச் சிரமமின்றி இருந்தது.

सोऽधिकारमभिकः कुलोचितं काश्चन स्वयमवर्तयत्समाः ।
संनिवेश्य सचिवेष्वतः परं स्त्रीविधेयनवयौवनोऽभवत् ॥ ४ ॥

**अभिकः** - காமங்கொண்டவனை, **सः** - அந்த அக்னிவர்ணன், **कुलोचितम्** - (தன்) குலத்திற்குத் தக்க, **अधिकारम्** - கடமையை, **काश्चन-समाः** - சில வருஷங்கள் (வரை) **स्वयम्** - தானே, **अवर्तयत्** - நடத்தினன்; **अतः परम्** - அதன் பிறகு **(तं)** - அக் கடமையை, **सचिवेषु** - மந்திரிகளிடம், **संनिवेश्य** - ஒப்படைத்துவிட்டு, **स्त्रीविधेय नव यौवनः** - ஸ்த்ரீகட்கு அடிமையான புதிய வாலிபப் பருவமுடையவனாக, **अभवत्** - ஆனன்.

(க-து.) அவன் சில வருஷங்கள் வரையில் தன் குலத்திற்கேற்றவாறு தானே அரசு புரிந்து வந்தான். பிறகு, காமம் மிகுந்திருந்ததால் ராஜ்யப் பாதுகாப்பை அமைச்சரிடம் ஒப்படைத்து விட்டு, தன் யௌவனத்தை மாதர்கட்கே உரியதாகச் செய்தான்.

இன்ப நுகர்ச்சியிலே மனம் வைத்தான் என்பது கருத்து.

कामिनीसहचरस्य कामिनस्तस्य वेश्मसु मृदङ्गनादिषु ।
ऋद्धिमन्तमधिकर्द्धिरुत्तरः पूर्वमुत्सवमपोहदुत्सवः ॥ ५ ॥

**कामिनी-सहचरस्य** - அழகான ஸ்திரீகளுடன் வாழ்கின்ற, **तस्य कामिनः**- அக்காமுகனது, **मृदङ्ग-नादिषु**-மிருதங்க ஒலியையுடைய, **वेश्मसु** - வீடுகளில், **अधिकर्द्धिः** - அதிகம் செல்வமுடையதான, **उत्तरः-उत्सवः** - அடுத்து வந்த களி

யாட்டம், ऋद्धिमन्तम् - செல்வச் சிறப்புள்ள, पूर्वम् उत्सवम् - முன் நிகழ்ந்த கொண்டாட்டத்தை, अपोहत् - விலக்கியது.

(க-து.) அக்னி வர்ணனுடைய வீட்டில் எப்பொழுதும் சிறந்த வகையில் கொண்டாட்டங்கள் ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்து நிகழ்ந்தன. பின் வந்த கொண்டாட்டம் முன்னுள்ளதை வென்றிருந்தது. அவனது அரண்மனையில் ஸங்கீதம் எப்பொழுதும் ஒலித்துக் கொண்டிருந்தது.

इन्द्रियार्थपरिशून्यमक्षमः सोढुमेकमपि स क्षणान्तरम् ।
अन्तरेव विहरन् दिवानिशं न व्यपैक्षत समुत्सुकाः प्रजाः ॥६॥

इन्द्रिय अर्थपरिशून्यम् - இந்திரியங்களால் நுகரப்படும் ஒலி முதலிய இன்பப் பொருளிராத, एकम्-अपि क्षणान्तरम् ஒரு க்ஷண நேரத்தையும், सोढुम् - பொறுத்துக் கொள்வதற்கு, अक्षमः - திறமையற்றவனான, सः - அந்த அக்கினி வர்ணன், दिवानिशम् - பகலும் இரவும், अन्तः एव - (வீட்டிற்கு) உள்ளேயே, विहरन् - இன்பம் துய்ப்பவனாக, समुत्सुकाः - (பார்ப்பதற்கு) ஆவல்கொண்ட, प्रजाः - ஜனங்களை, न व्यपैक्षत - விரும்பவில்லை.

(க-து.) சிறப்பான ஸுகமின்றி அவனால் ஒரு க்ஷணமும் இருக்க முடியவில்லை. எனவே, அவன் அந்தப்புரத்திலேயே இருந்துகொண்டு இந்திரிய இன்பங்களை நுகர்ந்துகொண்டிருந்தான். ஜனங்களுக்குக் காட்சிதரும் சிறிது நேரத்திலும் இன்ப அனுபவமில்லாமையை விரும்பாததால் அவன் தன்னைக் காண விரும்பிய ஜனங்களை மதிக்கவில்லை.

गौरवाद्यदपि जातु मन्त्रिणां दर्शनं प्रकृतिकांक्षितं ददौ ।
तद्गवाक्षविवरावलम्बिना केवलेन चरणेन कल्पितम् ॥ ७ ॥

जातु-ஒருசமயம், मन्त्रिणाम् - மந்திரிகளிடம், गौरवात् - மரியாதை காரணமாக, प्रकृति कांक्षितम् - ஜனங்கள் விரும்பிய, यद् दर्शनम् ददौ, - எந்தக் காட்சியை (அவன்) அளித்தானே, तत् अपि - அதுவும், गवाक्ष-विवर-अवलम्बिना

ஜன்னலின் இடைவெளியிலே நீட்டப்பட்ட, **केवलेन चरणेन-** காலால் மட்டுமே, **कल्पितम्** - ஏற்படுத்தப்பட்டதாக, (अभूत्) இருந்தது.

(க-து.) மந்திரிகளின் விருப்பத்திற்கிணங்க ஒரொரு ஸமயம் அவன் ஜனங்களுக்குத் தரிசனம் தந்தானாயினும், முழு உருவை யோ, முகத்தையோ காட்டாது, ஜன்னலின் இடைவெளியே நீட்டப்பட்ட தனது பாதத்தின் தரிசனத்தை மாத்திரமே அளித் தான்.

तं कृतप्रणतयोऽनुजीविनः कोमलात्मनखरागरूषितम् ।
भेजिरे नवदिवाकरातपस्पृष्टपङ्कजतुलाधिरोहणम् ॥ ८ ॥

**कोमल - आत्म नख - राग-रूषितम्** - அழகான தன் நகங் களின் சிவப்பு நிறத்துடன் கூடியதும், **नव-दिवाकर-आतप-स्पृष्ट-पङ्कज तुला - अधिरोहणम्** - இளம் சூரியனது வெய்யில் பட்ட தாமரை மலரோடு ஒப்புமை யடைந்ததுமான, **तम्** - அப்பாதத்தை, **अनुजीविनः** - பிரஜைகள், **कृतप्रणतयः**-நமஸ் காரம் செய்தவர்களாக, **भेजिरे** - பணி செய்தனர்.

(க-து) அரசனது பாதம் அழகான நகங்களின் செந்நிற முடையதாய், காலையில் இளம் சூரியனது வெய்யில் படிந்த தாமரை மலர்போலிருந்தது. அப்பாதத்தையே வணங்கிப் பேறு பெறறதாக மக்கள் எண்ணி மகிழ்ந்தனர்.

பாதத்தைக் கண்டும் மகிழ்ச்சியடையக்கூடிய நிலையி லிருந்தது ஜனங்களின் ராஜபக்தி என்பது புலனாகும்.

यौवनोन्नतविलासिनीस्तनक्षोभलोलकमलाश्च दीर्घिकाः ।
गूढमोहनगृहास्तदम्बुभिः स व्यगाहत विगाढमन्मथः ॥ ९ ॥

**विगाढ मन्मथः**-நன்கு விருத்தியடைந்த காமமுடைய லனை, **सः**-அவ்வரசன், **यौवन-उन्नत-विलासिनीस्तन-क्षोभ-लोल-कमलाः** - யௌவனப் பருவம் காரணமாக நிமிர்ந்துள்ள ஸ்திரீ ஸ்தனங்கள் மோதுதலால் அசைகின்ற தாமரை மலர் களையுடையதும், **तदम्बुभिः** - அவைகளின் ஜலங்களால்,

**गूढमोहनगृहाः-च** - மறைக்கப்பட்டுள்ள கலவி வீடுகளை யுடையதுமான, **दीर्घिकाः** - நடைவாவிகளிலே, **व्यगाहत**- இறங்கி விளையாடினன்.

(க-து.) காமம் மிகுந்த அவ்வரசன் நடைவாவிகளில் இறங்கி ரமித்தான். இன்பம் நுகருதற்காக அமைக்கப்பட்ட அறைகள் நடைவாவியின் நீருள் இருந்தன. வாவியிலுள்ள தாமரை மலர்கள் ஸ்திரீகள் விளையாடுங்கால் அவர்களின் ஸ்தனங்கள் மோதுதலால் அசைந்தன.

நீருக்குள் அறைகளை அமைத்துக்கொண்டு இன்பம் நுகருதலைப்பற்றி முன்பும் கவி கூறியுள்ளார்.

[ஸ. 1?. சு. 40]

तत्र सेकहृतलोचनाञ्जनैर्धौतरागपरिपाटलाधरैः ।
अङ्गनास्तमधिकं व्यलोभयन्नर्पितप्रकृतिकान्तिभिर्मुखैः ॥ १० ॥

**तत्र**- அந்த நடைவாவிகளில், **अङ्गनाः**-சிறந்த உடலமைப் புள்ள ஸ்திரீகள், **सेक हृत लोचनाञ्जनैः**-(ஜலம்) படுவதால் மை அற்றவையும், **धौत राग परिपाटल-अधरैः** - வர்ணப்பொருள் அலம்பப்பட்டதாயினும் சிவந்த உதடுகளையுடையனவும், **अर्पित-प्रकृति कान्तिभिः** - நன்கு புலனாகின்ற இயற்கையான அழகுடையனவுமான, **मुखैः** - முகங்களால், **तम्** - அவனை, **अधिकम्** - மிகவும், **व्यलोभयन्** - மயக்கினர்.

(க.து) வாவிகளிலே இறங்கி யுவதிகள் ஒருவர்மேல் ஒருவர் நீரை இறைத்துக்கொண்டு விளையாடினர். ஜலம் படுவதால் கண்ணிலுள்ள மை கரைந்தது. உதட்டிலே பூசிய வர்ணம் அலம்பப்பட்டதாயினும் அவர்களது உதடுகள் சிவப்பாகவே இருந்தன. மையிடுதல், வர்ணம் பூசுதல் முதலான செயற்கையழகின்றி இயற்கையிலேயுள்ள முகப் பொலிவினால் அப்பெண்கள் அவனை வசீகரித்தனர்.

'**धौतरागा अपि परिपाटलाः**' என்பது அருணகிரியின் விளக்கம்.

घ्राणकान्तमधुगन्धकर्षिणीः पानभूमिरचनाः प्रियासखः ।
अभ्यपद्यत स वासितासखः पुष्पिताः कमलिनीरिव द्विपः ॥

**वासितासखः** - பெண் யானைகளுடன் கூடிய, **द्विपः** - ஆண் யானை, **पुष्पिताः** - பூக்கள் நிரம்பிய, **कमलिनीः - इव** - தாமரைத்தடாகங்களை (அடைவது) போல், **प्रियासखः** - காதலிகளுடன் கூடிய, **सः** - அவ்வரசன், **घ्राण कान्त-मधुगन्ध-कर्षिणीः** - மூக்கைக் களிப்பிக்கும் மதுவின் வாசனையால் (மனத்தைக்) கவர்கின்ற, **पानभूमिरचनाः** - மதுபான இடங்களை, **अभ्यपद्यत** - அடைந்தான்.

(க-து.) ஜலக்ரீடை முடிந்தபின் அவ்வரசன், தன் காதலிகளுடன் நன்கு அமைக்கப்பட்டுள்ள மதுபானம் செய்யுமிடம் சென்றான். அங்குள்ள மது, தனது இனிய மணத்தால் மனத்தை இழுப்பதாக இருந்தது.

सातिरेकमदकारणं रहस्तेन दत्तमभिलेषुरङ्गनाः ।
ताभिरप्युपहृतं मुखासवं सोऽपिबद्बकुलतुल्यदोहदः ॥ १२ ॥

**अङ्गनाः** - ஸ்திரீகள், **रहः** - தனிமையில், **सातिरेकमद-कारणम्** - அதிக மதத்திற்குக் காரணமானதும், **तेन दत्तम्** - அவனால் கொடுக்கப்பட்டதுமான, **मुखासवम्** - வாய் மதுவை, **अभिलेषुः** - விரும்பினார்கள் ; **बकुल-तुल्य दोहदः** - மகிழ மரம் போல் விருப்புக்கொண்ட, **सः अपि**- அவ்வரசனும், **ताभिः** - அந்த ஸ்திரீகளால், **उपहृतम्** - கொடுக்கப்பட்ட, **मुखासवम्**- வாய் மதுவை, **अपिबत्** - குடித்தான்.

(க-து) பெண்கள் பாத்திரத்திலிருந்து மதுவைக்குடிக்க விரும்பாது அக்னிவர்ணனது வாய்மதுவையே விரும்பினர். அதேபோல் அவனும், அப்பெண்கள் தம் வாயில் ஊற்றிக்கொண்ட மதுவை, அவர்கள் வாயினின்றும் பருக விரும்பினன்.

இவ்வகையிலே மதுவை அருந்திக் களித்தனர். அத்தகைய மதுபானம் காதலை வளர்ப்பதாக இருந்தது. **बकुलतुल्यदोहदः** - மகிழ் பூக்காவிடின், பெண்கள் தம்

வாயில் மதுவை ஏந்தி, அதன்மேல் உமிழ்வர். மகிழ மரம்போல் அக்னிவர்ணனும் பெண்களின்வாய் மதுவையே விரும்பியதால், वकुल तुल्य दोहद : என அவனை விசேஷித்தார். இத்தகைய மதுபானம் பலர் எதிரில் நடவாதாகை யால் ' रहसि ' என்றார். [ஸர்க்கம் 8. சு. 62, 68 காண்க.]

अङ्कमङ्कपरिवर्तनोचिते तस्य निन्यतुरशून्यतामुभे ।

वल्लकी च हृदयंगमस्वना वल्गुवागपि च वामलोचना ॥ १३॥

**अङ्क परिवर्तन - उचिते** - (அவனது) மடியில் இருந்து பழகிய, **उभे**-இரண்டு, **तस्य**-அவனுடைய, **अङ्कम्** - மடியை, **अशून्यताम् निन्यतुः** - (எப்பொழுதும) காலியாக இல்லாத தாகச்செய்தன; (அவை எவை எனின்), **हृदयङ्गम-स्वना**-மனதைக்கவரும் ஓசையுடைய, **वल्लकी च** - வீணையும், **वल्गु-वाक्** - **(अपि)** இனிய சொலலுடைய **वामलोचना च** - ஸ்த்ரீயும் ஆம்

(க-து) இனிய நாதமுடைய வீணையும், இனிய சொல் உடைய ஸ்த்ரீயும் அவனது மடியை ஸதாகாலமும் அலங்கரித்தனர்

வீணையோ ஸ்திரீயோ தனித்து அவன் மடியில் இருந்ததில்லை போலும! அல்லது, ' வீணையோ ஸ்திரீயோ இன்றித் தனியே அவனது மடி ஒருபொழுதும இருந்ததில்லை என்றும கருததுக் கொளளலாம

स स्वयं प्रहतपुष्करः कृती लोलमाल्यवलयो हरन् मनः ।

नर्तकीरभिनयातिलङ्घिनी पार्श्ववर्तिषु गुरुष्वलज्जयत् ॥ १४ ॥

**कृती**-திறமையுடையவனும, **स्वय-प्रहत पुष्करः** - தானே மிருதங்கம வாசிப்பவனு , **लोल-माल्य वलयः** - அசைகின்ற மாலையும் பாஹுவலயங்களையுமுடையவனும, **मनः**-(நாட்டியமஆடுபவரின்) மனத்தை, **हरन्**-கவர்கிறவனுமான, **सः**- அவ்வரசன, **अभिनय अतिलङ्घिनीः** அபினயத்தில தவறுகின்ற,

**नर्तकीः** - நர்த்தகிகளை, **गुरुषु** - நாட்டிய ஆசிரியர்கள் **पार्श्ववर्तिषु (सत्स्वेव)**- அருகிலிருக்கும்பொழுதே, **अलज्जयत्** - வெட்கமுறச்செய்தான்.

(க-து) ஆடலில் திறமையுள்ள அவ்வரசன், நர்த்தகிகளை ஆடச்செய்து அவர்களுக்காகத் தானே ம்ருதங்கம் வாசித்தான். வாசிக்குங்கால் அவனணிந்திருந்த மாலையும் கை வலயங்களும் அழகாக அசைந்தன. இந்நிலையிலிருந்த அரசனது ஸௌந்தர்யத்தினால் வசீகரிக்கப்பட்ட நர்த்தகிகள அபிநயத்தில் தவறு செய்தனர். தமது ஆசிரியர்களின் முன்பு தவறு நேர்ந்ததே என அப் பெண்கள் வெட்கமுற்றனர்.

चारु नृत्यविगमे च तन्मुखं स्वेदभिन्नतिलकं परिश्रमात् ।
प्रेमदत्तवदनानिलः पिबन्नत्यजीवदमरालकेश्वरौ ॥ १५ ॥

**नृत्यविगमे** - நாட்டியத்தின் முடிவில், **परिश्रमात्** - சிரமத்தினால், **स्वेदभिन्नतिलकम्** - வியர்வையினால் கலைந்த திலகமுடைய, **चारु** - அழகான, **तन्मुखम् च**-நர்த்தகிகளின் முகத்தை, **प्रेमदत्तवदनानिलः** - அன்புடன் வாயினால் ஊதிக் காற்றைக் கொடுப்பவனாய், **पिबन्** - சுவைத்து, **अमर-अलका-ईश्वरौ**-இந்திரனையும், குபேரனையும், **अत्यजीवत्**-விஞ்சி (மேலாக) வாழ்ந்தான்.

(க-து) அவ்வரசன் நாட்டியத்தின் முடிவில், சிரமத்தினால் திலகமழிந்த அப்பெண்களின் களைப்புத்தீர அன்புடன் வாயினால் ஊதிக்காற்றையளிப்பவனாக அவர்களது முகத்தில் முத்தமிட்டான். கிடைக்கப்பெறாத இத்தகைய இன்பம் பெற்ற அவன் இந்திரன், குபேரன் இவ்விருவரைக் காட்டிலும் சிறந்து இருந்தான்.

तस्य सावरणदृष्टसंधयः काम्यवस्तुषु नवेषु सङ्गिनः ।
वल्लभाभिरुपसृत्य चक्रिरे सामिभुक्तविषयाः समागमाः ॥१६॥

**नवेषु** - புதிய (முன்பு அனுபவிக்கப் பெறாத), **काम्य-वस्तुषु** - ஸ்திரீகளிடத்தில், **सङ्गिनः** - பற்றுள்ளவனான, **तस्य** - அவ் வரசனுடைய, **समागमाः** - ஸந்திப்புக்கள்.

(கூடல்கள்), **सावरण-दृष्ट-सन्धयः** - மறைக்கப்பட்டிருப்பினும் நன்கு அறியப்பட்ட உபாயங்களையுடையனவாய், **वल्लभाभिः**- மனைவிகளால், **उपसृत्य**- இடையே வந்து, **सामि भुक्त विषयाः**- சிறிதே அனுபவிக்கப்பட்ட பொருளுடையவனாய், **चक्रिरे** - செய்யப்பட்டன.

(க-து.) முன்பு அனுபவிக்கப் பெறாத ஸ்திரீகளிடத்திலே அவன் காதல் கொண்டான். அந்த யுவதிகளைச்சந்திப்பதற்காக அவன்கைக்கொண்ட உபாயங்கள் மிக ரஹஸ்யமாக இருப்பினும், அவற்றை அவனது மனைவிகள் அறிந்து கொண்டனர். எனவே, அக்னி வர்ணன் புதிய யுவதிகளைச் சந்திக்குங்கால் அவனது மனைவிகள் இடையே வந்து அவனது விருப்பம் முற்றிலும் நிறைவேறாதபடி செய்தனர்.

இச் சுலோகத்திற்கு மல்லிநாதர் வேறு வகையில் பொருள் கூறியுள்ளார்.

अंगुलीकिसलयाग्रतर्जनं भ्रूविभङ्गकुटिलं च वीक्षितम् ।
मेखलाभिरसकृच्च बन्धनं वञ्चयन्प्रणयिनीरवाप सः ॥ १७ ॥

**सः**- அவ்வரசன், **प्रणयिनीः**-(புதிய காதலிகளிடம் செல்வதன்மூலம் தன்) மனைவிகளை, **वञ्चयन्**-ஏமாற்றியபொழுது, **अङ्गुली-किसलय-अग्र-तर्जनम्** - தளிர் போன்ற விரல்களின் நுனிகளால் மிரட்டப்படுதலையும், **भ्रूविभङ्ग-कुटिलम्** - புருவ நெறித்தலால் சாய்வாக, **वीक्षितम्-च**-பார்க்கப்படுதலையும், **मेखलाभिः** - மேகலைகளால், **बन्धनञ्च** - கட்டப்படுதலையும், **असकृत्** - அடிக்கடி, **अवाप** - அடைந்தான்

(க-து.) தம்மை ஏமாற்றிவிட்டு வேறு காதலிகளிடம்சென்ற அக்னிவர்ணனை அவனது மனைவியர் தம் விரலை அசைத்து அச்சுறுத்தினர். தங்களது கோபம் தோற்றும் வகையில் புருவததை நெரித்து நோக்கினர். தம் இடையிலுள்ள மேகலையின் நூலால் அவனைப் பிணித்தனர்.

காதலிகளால் இவ்வாறு நடத்தப்படுவதைக் காமுகர்கள் பரமானந்தமாகக் கருதுவர்.

மேகலை: பட்டு நூலிலே முத்து முதலியன கோத்து அமைக்கப்பட்ட இடையணி.

तेन दूतिविदितं निषेदुषा पृष्ठतः सुरतवाररात्रिषु ।
शुश्रुवे प्रियजनस्य कातरं विप्रलम्भपरिशङ्किनो वचः ॥ १८ ॥

**सुरत वार रात्रिषु** - கலவி நாட்களின் இரவுகளில், **दूति विदितम्** - தூதிகட்கு மாத்திரமே தெரியும்படி, **पृष्ठतः** - (காதலிக்குப்) பின்னால், **निषेदुषा** - உட்கார்ந்த, **तेन** - அவ்வரசனால், **विप्रलम्भ-परिशङ्किनः** - ஏமாற்றமிருக்குமோ வென ஐயமுறுகின்ற, **प्रियजनस्य** - காதலியின், **कातरम्** - பயத்தைக் காட்டுகின்ற, **वचः** - வார்த்தை, **शुश्रुवे** - செவியுறப் பட்டது.

(க-து) அக்னி வர்ணன், தன் காதலி அறியாதபடி அவள் பின் சென்று நின்று, அரசன் வராது ஏமாற்றி விடுவானோ என அஞ்சி அவள் கூறுகின்ற,—தன்னிடம் அவளது காதலைத் தெரிவிக்கின்ற—சொற்களைக் கேட்டு மகிழ்ந்தான்.

लौल्यमेत्य गृहिणीपरिग्रहान्नर्तकीष्वसुलभासु तद्वपुः ।
वर्तते स स कथंचिदालिखन्नंगुलीक्षरणसन्नवर्तिकः ॥ १९ ॥

**गृहीणीपरिग्रहात्** - மனைவிகளின் பிடிப்பினால், **नर्तकीषु** - நர்த்தகிகள், **असुलभासु** - எளிதிலே கிடைக்கப் பெறாத பொழுது, **लौल्यम् एत्य** - (அவர்களிடத்தில் அதிகம) ஆவல் கொண்டு, **अङ्गुली क्षरण सन्न वर्तिकः** - விரல்கள் வியர்த்து தால் நழுவிய தூலிகையுடைய, **सः** - அவ்வரசன், **तद्वपुः** - அவர்களின் மேனியழகை, **आलिखन्** - (படத்தில்) வரைபவனாக, **कथञ्चित्** - சிரமத்துடன், **वर्तते स** - இருந்தான் (பொழுது போக்கினான்).

(க-து) நர்த்தகிகளிடம் காதல்கொண்ட அவனை மனைவியர் தம்மிடம் நிறுத்திக்கொண்டனர். நர்த்தகிகளைச் சந்திக்கமுடியாத

தால் காதல் மிகுந்த அவன் அவர்களது உருவைப் படத்தில் வரைந்து பொழுது போக்கினான்.

படம் வரையுங்கால் உணர்ச்சி மிகுதியால் அவன் கையிலிருந்த தூலிகையும் நழுவியது.

प्रेमगर्वितविपक्षमत्सरादायताच्च मदनान्महीक्षितम् ।
निन्युरुत्सवविधिच्छलेन तं देव्य उज्झितरुषः कृतार्थताम् ॥

**प्रेम गर्वित-विपक्ष-मत्सरात्** -(அரசனது) அன்பைபெற்றதால் கர்வங்கொண்ட சக்களத்திகளிடம் பொறுமையாலும், **आयतात्** - அதிகமான **मदनात् च** - காமத்தாலும், **देव्यः**- அரசிகள், **उज्झितरुषः** - கோபம் நீக்கியவர்களாக, **उत्सव-विधिच्छलेन** - பண்டிகை கொண்டாடுதல் என்ற வியாஜத்தினாலே, **तम् महीक्षितम्** - அவ்வரசனை, **कृतार्थताम् निन्युः** - இன்பம் பெற்றவனாகச் செய்தனர்.

(க-து.) அக்னி வர்ணன் பிற ஸ்திரீகளிடம் காதல் கொண்டதைக் கருதி அரசிகள் முதலில் கோபம் கொண்டனராயினும், அரசனது அன்பைப் பெற்றுள்ள ஸ்திரீகளிடம் பொறாமையாலும், தமது காதல்மிகுதியாலும் கோபத்தைவிட்டு, பண்டிகை கொண்டாடுதல் என்ற வியாஜத்தை முன்னிட்டுத் தமது மாளிகைக்கு அவனை அழைத்து வந்து அவனது மனம் மகிழும்படி நடந்து கொண்டனர்.

प्रातरेत्य परिभोगशोभिना दर्शनेन कृतखण्डनव्यथाः ।
प्राञ्जलिः प्रणयिनीः प्रसादयन्सोऽदुनोत्प्रणयमन्थरः पुनः ॥

**सः** - அந்த அக்கினி வர்ணன், **प्रातः** - காலையில், **एत्य**- வந்து, **परिभोग शोभिना** - கலவியின் அடையாளங்களால் அழகுடனிருக்கின்ற, **दर्शनेन** - (தனது) தோற்றத்தினாலே, **कृत खण्डन व्यथाः** - வருத்தமடைவிக்கப்பட்ட, **प्रणयिनीः** - ஸ்திரீகளை-(அரசிகளை), **प्राञ्जलिः**-கைகூப்பி, **प्रसादयन् (अपि)**- ஸமாதானம் செய்தானாயினும், **प्रणय मन्थरः** - அன்பு காட்டு

வதில் ஊக்கமில்லாதவனுக, पुनः-மறுபடியும், अदुनोत्-(அவர் களை) வருந்தச் செய்தான்.

(க-து.) வேறு ஸ்திரீகளுடன் இரவைப் போக்கிய பின் காலையில் கலவிக் குறிகளுடன் அரசிகளின் முன் அக்னிவர்ணன் நின்றுன்; அவனது தோற்றத்தைக் கண்டு தம்மை அவன் வஞ்சித்ததால் கோபம் கொண்ட மனைவியரைக் கை கூப்பி வணங்கிச் சாந்தப் படுத்தினுன். ஆனுல் அவர்களிடம் முழு அன்பையும் செலுத்தாது அவர்களை மறுபடியும் மனம் வருந்தச் செய்தான்.

'परिभोगशब्देनात्र तच्चिह्नभूता नखदन्तव्रणादयो लक्ष्यन्ते' नारायणः।

स्वप्नकीर्तितविपक्षमंगनाः प्रत्युभैत्सुरवदन्त्य एव तम्।

प्रच्छदान्तगलिताश्रुबिन्दुभिः क्रोधभिन्नवलयैर्विवर्तनैः॥ २२॥

स्वप्न-कीर्तित-विपक्षम्-தூக்கத்தில் சக்களத்திகளின் பெயரைக்கூறிய, तम्-அவனை, अवदन्त्यः एव-(யாதும்) கூறுமலேயே, अंगनाः-ஸ்திரீகள், प्रच्छदान्त गलित-अश्रुबिन्दुभिः-படுக்கைவிரிப்பின் ஓரங்களில் பெருகிய கண்ணீர்த்துளிகளையுடையனவும், क्रोध-भिन्न-वलयैः-கோபத்தினுல உடைந்த வளையல்களையுடையனவுமான, विवर्तनैः-மறுபுறம் திரும்பிப் படுப்பதன்மூலம், प्रत्यभैत्सुः-அவமதித்தனர்.

(க-து.) தூங்குங்கால் அக்னிவர்ணன் தன் அருகிலேயுள்ள ஸ்திரீயின் பெயரைக் கூருது தான் மிக நேசித்த வேறு ஒருத்தியின் பெயரைக் கூறினுன். அதனுல் கோபம் கொண்ட மனைவியர் அவன் விழித்தவுடன். யாதும் கூருது, கோபத்தினுல் கை வளையல்களை உடைத்தும், புலம்பியும், மறுபுறம் திரும்பிப் படுத்தும் தாம் அவனிடம் கொண்ட கோபத்தைப்புலப்படுத்தி அவனை அவமதித்தனர்.

विवर्तनम्-படுக்கையில் புரளுதல், புரண்டு படுத்தல்.

क्लृप्तपुष्पशयनाँल्लतागृहानेत्य दूतिकृतमार्गदर्शनः।

अन्वभूत्परिजनाङ्गनारतं सोऽवरोधभयवेपथूत्तरम्॥ २३॥

सः-அவன், दूति कृत-मार्गदर्शनः-தூதிகளால் வழி காண்பிக்கப்பட்டவனுய், क्लृप्त-पुष्पशयनान्-புஷ்ப சயனங்

களையுடைய, लतागृहान् - கொடி வீடுகளை, एत्य-அடைந்து, अवरोध-भय-वेपथूत्तरम् -அரசிகளிடம் பயத்தால் நடுக்கம் மிகுந்த, परिजन - अङ्गना-रतम् - அழகிய பணிப்பெண்களின் கலவியை, अन्वभूत् - அனுபவித்தான்.

(க-து) பணிப்பெண்களிலே அழகானவர்களிடம் காதல் கொண்ட அவன், தூதிகள் வழிகாட்ட, கொடி வீடுகளிலே புஷ்ப சயனங்களில், அவர்களது இன்பத்தைப் பெற்றான். அந்தப்புர ஸ்திரிகள் இதை அறிந்துகொள்வரோ என்ற அச்சத்தால் அக் கலவியில் நடுக்கம் மிகுந்திருந்தது.

அரசனும் அப்பெண்களும் கலவிக் காலத்திலும் நடுங்கிக் கொண்டிருந்தனர் என்பது கருத்து.

இங்குக்கூறிய பணிப்பெண்கள், சிற்றரசர்களின் குமாரி கள். 'समरादिलब्धा महाकुलप्रसूताः राजकुमार्यो हि देवीभिः परिजनपदे स्थाप्यन्ते । यथा वासवदत्तायाः सागरिका । ता एवात्र परिजनाङ्गनाशब्देनोच्यन्ते' नारायणः।

नाम वल्लभजनस्य ते मया प्राप्य भाग्यमपि तस्य कांक्ष्यते ।
लोलुपं ननु मनो ममेति तं गोत्रविस्खलितमूचुरंगनाः ॥ २४ ॥

'मया - என்னால், ते-உனது, वल्लभजनस्य - இஷ்டமான வளின், नाम - பெயரை, प्राप्य - அடைந்த பிறகு, तस्य - (जनस्य) அவளது, भाग्यमपि - அத்ருஷ்டமும், काङ्क्ष्यते - விரும்பப் படுகிறது ; ननु -அந்தோ! मम - என்னுடைய, मनः - மனது, लोलुपम् - பேராசையுடையது" इति-என்று இவ் வகையில், गोत्र विस्खलितम्- பெயரைக் கூறுவதில் இடறிய, तम् - அவ்வரசனை நோக்கி, अङ्गनाः-ஸ்த்ரீகள், ऊचुः-கூறினர்.

(க-து) வேறு ஸ்திரீயின் பெயரைக்கூறி அருகிலுள்ள வர்களை அவன் அழைத்தபொழுது அவர்கள், "அரசே, எதிர் பாராது உன் அன்பினளது பெயரைப் பெற்றுவிட்டோம்; எங்கள் பேதை மனம் அவர்களது அத்ருஷ்டத்தையும்பெற விருபுகின்றது" என்றிந்தை தோன்றக்கூறி அவனைப் பரிஹஸித் தனர்.

चूर्णबभ्रु लुलितस्रगाकुलं छिन्नमेखलमलक्तकाङ्कितम् ।
उत्थितस्य शयनं विलासिनस्तस्य विभ्रमरतान्यपावृणोत् ॥२५॥

**चूर्णबभ्रु**-(முன்னெற்றியினின்றும் உதிர்ந்த, வாசனைப் பொடிகளால் மஞ்சள் நிறமானதும், **लुलित-स्रक्-आकुलम्** - கசங்கிய பூமாலைகளால் நிரம்பியுள்ளதும், **छिन्न मेखलम्** - கழுவிய மேகலையுடையதும், **अलक्तकाङ्कितम्** - செம்பஞ்சுரஸ அடையாளமுடையதுமான, **शयनम्** - (அவனது) சயனம், **विलासिनः** - காமுகனுகிய, **उत्थितस्य** - சயனத்தை விட்டு எழுந்த, **तस्य**- அவனது, **विभ्रमरतानि**-பலவகைக் கலவிகளை **अपावृणोत्** - காட்டியது.

(க-து) அவனது சயனம் அவன் அனுபவித்த பலவித கலவிகளுக்கு அத்தாட்சியாக இருந்தது; பெண்கள் முகத்திலும் அலகங்களிலும் இட்ட வாசனைப் பொடி படுக்கையில் சிதறி இருந்தது. புஷ்பங்கள் உதிர்ந்திருந்தன. பாதத்தில் இட்ட செம்பஞ்சு வர்ணம் படுக்கையில் படிந்திருந்தது. மேகலை மணிகளுமிருந்தன.

स स्वयं चरणरागमादधे योषितां न च तथा समाहितः ।
लोभ्यमाननयनः श्लथांशुकैर्मेखलागुणपदैर्नितम्बिभिः ॥ २६ ॥

**सः** - அவன், **योषितां**-ஸ்திரீகளின், **चरणरागम्** - கால்களில் செம்பஞ்சு வர்ணத்தை, **स्वयं आददे** - தானே இட்டான்; **(किन्तु)**-ஆனல், **श्लथांशुकैः**-தளர்ந்த ஆடையையுடையனவும், **नितम्बिभिः**-அழகிய நிதம்பங்களையுடையனவுமான, **मेखलागुणपदैः**-இடைகளாலே, **लोभ्यमान नयनः (सन्)** - கண் கவரப்பட்டவனுக, **तथा समाहितः** - அவ்வளவு கவனமுடையவனய், **न च आदधे**- (செம்பஞ்சு வர்ணத்தைத்) தடவவில்லை.

(க-து) அன்பு காரணமாக ஸ்திரீகளின் பாதங்களிலே செம்பஞ்சு ரஸம் தடவ முயன்ற அவன், அவர்களது இடையழ

கினால் வசீகரிக்கப்பட்டதால் வேண்டிய அளவு கவனத்துடன் அதைப்பூசவில்லை.

चुम्बने विपरिवर्तिताधरं हस्तरोधि रशनाविघट्टने ।
विघ्नितेच्छमपि तस्य सर्वतो मन्मथेन्धनमभूद्वधूरतम् ॥ २७ ॥

**चुम्बने** - முத்தமிடுங்கால், **विपरिवर्तित - अधरम्** - உதட்டை மறுபுறம் திருப்புதல், **रशनाविघट्टने**-மேகலையைத் தளர்த்துங்கால், **हस्तरोधि**-கையைத் தடுத்தல் என்றிவ்வாறு, **सर्वतः**-எல்லா வகையிலும், **विघ्नितेच्छम्-अपि**-(அவன்) ஆசை தடையுற்றதாயினும், **वधूरतम्** - யுவதிகளின் கலவி, **तस्य**-அவ்வரசனுக்கு, **मन्मथेन्धनम्** - காமத்தை வளர்ப்பதாகவே, **अभूत्** - ஆயிற்று.

(க-து) கலவியிலே அவனது விருப்பத்திற்குத் தடையிருப்பினும் அவன் காமம் மிகப்பெருகியது.

**वधू:** - கலவிக் கலையிலே முதன்முதலாகப் பிரவேசிக்கின்ற யுவதி. '**अचिरव्यूढा तु वधूः**' என்பது வைஜயந்தி.

दर्पणेषु परिभोगदर्शिनीर्नर्मपूर्वमनुपृष्ठसंस्थितः ।
छायया स्मितमनोज्ञया वधूर्ह्रीनिमीलितमुखीश्चकार सः ॥२८॥

**सः** - அவன், **दर्पणेषु** - கண்ணாடிகளில், **परिभोगदर्शिनीः**-கலவிக்குறிகளைக் காண்கின்ற, **वधूः** - ஸ்த்ரீகளை, **नर्मपूर्वम्** - பரிஹாஸத்துடன், **अनुपृष्ठसंस्थितः** - (அவர்களுக்குப்) பின்னால் நின்று, **स्मितमनोज्ञया** - புன்சிரிப்பினாலே அழகிய, **छायया** - தனது பிரதி பிம்பத்தால், **ह्रीनिमीलितमुखीः** - வெட்கத்தால் தலை குனிந்தவர்களாக, **चकार** - செய்தான்.

(க-து) தனிமையில் கலவியின் அடையாளங்களைக் கண்ணாடியில் பார்க்கின்ற ஸ்திரீகளின் பின்னால் நின்று பரிஹாஸமாகச் சிரித்தான். அவனது நிழலைக் கண்ணாடியில் கண்ட ஸ்திரீகள் தமது செயலை, அரசன் அறிய நேர்ந்ததே என வெட்கி முகத்தை மறைத்துக்கொண்டனர்.

कण्ठसक्तमृदुबाहुबन्धनं न्यस्तपादतलमग्रपादयोः ।
प्रार्थयन्त शयनोत्थितं प्रियास्तं निशात्ययविसर्गचुम्बनम् ॥२९॥

**प्रियाः** - காதலிகள், **शयनोत्थितम्** - படுக்கையிலிருந்து எழுந்திருந்த, **तम्** - அவ்வரசனிடம், **निशात्यय - विसर्ग - चुम्बनम्** - விடியற் காலத்தில் பிரியுங்கால் தரப்படும் முத்தத்தை, **कण्ठसक्त-मृदु-बाहुबन्धनम्** - கழுத்தில் இடப்பட்ட மிருதுவான ஆலிங்கனத்துடனும், **अग्रपादयोः** - (அவனது) கால்களின் நுனியில், **न्यस्तपादतलम् (यथातथा)** - (தங்களது) பாதத்தை வைத்தநிலையில் இருந்தும், **प्रार्थयन्त** - வேண்டினர்.

(க-து) விடியற் காலையில் படுக்கையை விட்டெழுந்து அரசன் செல்லுங்கால் காதலிகள் பிரிவு முத்தம் தரும்படி அவனை வேண்டினார்.

முத்தத்தை வேண்டியபொழுது அப்பெண்கள் இருந்த நிலையைக் கூறுகின்றது, 'कण्ठसक्तमृदुबाहुबन्धनं, अग्रपादयोः न्यस्तपादतलम्' என்ற சொற்கள். அவர்கள அவனது பாதங்களின்மேல் நின்று அவனது கழுத்தைத் தமது மெல்லிய கரங்களால் அணைத்துக்கொண்டு வேண்டினார்.

प्रेक्ष्य दर्पणतलस्थमात्मनो राजवेषमतिशक्रशोभिनम् ।
पिप्रिये न स तथा यथा युवा व्यक्तलक्ष्म परिभोगमण्डनम् ॥

**युवा सः** - வாலிபனான அவ்வரசன், **व्यक्तलक्ष्म**-ஸ்பஷ்டமான அடையாளமுடைய, **परिभोग-मण्डनम्** - கலவிக்குறிகளாலான அழகை, **यथा** - எவ்விதம், **(प्रेक्ष्य - पिप्रिये)** - பார்த்துக் களித்தானோ, **तथा**-அவ்விதம், **अतिशक्र शोभिनम्** - இந்திரனையும் விஞ்சி விளங்குகின்ற, **दर्पणतलस्थम्** - கண்ணாடியில் இருக்கின்ற, **आत्मनः राजवेषम्** - தனது அரசகோலத்தை **प्रेक्ष्य** - பார்த்து, **न पिप्रिये** - மகிழவில்லை.

(க-து) அக்னிவர்ணன் அபசருடையில் இந்திரனைவிட அதிகமான தோற்றப் பொலிவுடன் இருந்தான்; அத்தகைய தோற்றச்சிறப்பைக் கண்ணாடியில் கண்டபொழுது மகிழ்ந்ததை விட தன் உடலிலே கலவிக் குறிகளைக் கண்டபொழுது அதிகம் மகிழ்ச்சியுற்றான்.

கலவியிலே கருத்துள்ள அவன் நகக்குறி முதலியன வற்றையே தனக்கு அலங்காரமாகக் கருதினானேயன்றி பிறவற்றையல்ல.

मित्रकृत्यपदिश्य पार्श्वतः प्रस्थितं तमनवस्थितं प्रियाः ।

विद्म हे शठ पलायनच्छलान्यञ्जसेति रुरुधुः कचग्रहैः ॥२१॥

**मित्रकृत्यम्** - நண்பனின் காரியத்தை, **अपदिश्य**-வியாஜ மாகச் செய்து, **पार्श्वतः** - தம் அருகிலிருந்து, **प्रस्थितम्** - புறப்படத் தொடங்கியவனும், **अनवस्थितम्** - மன உறுதி யற்றவனுமான, **तम्** - அவ்வரசனை, **प्रियाः** - காதலிகள், “**हे शठ** -மறைவிலே பிரியமில்லாததைச் செய்கின்றவனே !, **पलायन च्छलानि** - (நீ) ஓடுவதற்கான வியாஜங்களை, **अञ्जसा**- உண்மையில, **विद्म**-நாங்கள் அறிவோம்”, **इति**-என்று (கூறி), **कच ग्रहैः**-(அவனது) சிகையைப் பற்றி, **रुरुधुः**-தடுத்தனர்.

(க-து) அக்னிவர்ணன் நண்பனது காரியத்தைக் கருதிச் செல்வதாகக் கூறிக்கொண்டு தான் விரும்பாத ஸ்திரிகளின் அண்மையினின்றும் புறப்படதொடங்கினான். உடனே அவர்கள் அவனது வஞ்சனையை அறிந்து, ‘உனது தந்திரத்தை நாங்கள் அறிந்துகொணடோம்’ என்று சொல்லி அவனது சிகையைப் பிடித்திழுததுத் தமமிடம நிறுததிக்கொண்டனர்.

तस्य निर्दयरतिश्रमालसाः कण्ठसूत्रमपदिश्य योषितः ।

अध्यशेरत बृहद्भुजान्तरं पीवरस्तनविलुप्तचन्दनम् ॥ ३२ ॥

**निर्दय रति श्रम-अलसाः** - இரக்கமற்ற கலவியின் சிரமத் தினால் கஷ்டமடைந்த, **योषितः** - ஸ்திரீகள், **कण्ठ सूत्रम्** - கண்ட ஸூத்ர மென்ற ஆலிங்கனத்தை, **अपदिश्य** - வியாஜ

மாகக் கொண்டு, **पीवर स्तन-विलुप्त-चन्दनम्**-பருத்த ஸ்தனங்களால் அழிந்த சந்தனமுடைய, **तस्य**-அவ்வரசனது, **बृहत्**-பெரியதான, **भुजान्तरम्** - மார்பகத்தில், **अध्यशेरत**-சயனித்தனர்.

(க-து) அக்னிவர்ணன் இரக்கமின்றிக் கலவிகொண்டதால் சிரமமடைந்த ஸ்திரீகள் கண்டஸூத்ரம் என்னும் ஒருவகை ஆலிங்கனம் செய்துகொள்வதாகப் பாவனை செய்து அவனது பரந்த மார்பில் சயனித்தனர். அம்மார்பிலுள்ள சந்தனம் ஸ்திரீகளின் ஸ்தன ஸ்பரிசத்தினால் அழிந்ததாயிற்று.

கண்ட ஸூத்ரம் - ஆலிங்கன வகைகளில் ஒன்று.

संगमाय निशि गूढचारिणं चारदूतिकथितं पुरोगताः ।
वञ्चयिष्यसि कुतस्तमोवृतः कामुकेति चकृषुस्तमङ्गनाः ॥३३॥

**सङ्गमाय** - கலவியின் பொருட்டு, **निशि**-இரவில், **गूढचारिणम्** - மறைவாக செல்பவனும், **चार दूति कथितम्**- வேவு பார்க்கின்ற தூதிகளால் தெரிவிக்கப்பட்டவனுமான, **तम्** - அவ்வக்னிவர்ணனை, **अङ्गनाः** - மனைவியர், **पुरोगताः** (அவன்) எதிரில் சென்று, " **कामुक**-காமுகனே! **तमोवृतः**- இருளிலே மறைந்தவனாக, **कुतः** - ஏன், **वञ्चयिष्यसि** - (எங்களை) ஏமாற்றுகின்றாய்?" **इति** - என்று கூறி, **चकृषुः** - இழுத்தனர்.

(க-து) அக்னிவர்ணன் தான் விரும்பிய ஒருத்தியை அடைதற்காக மற்றக் காதலிகளை ஏமாற்றிவிட்டு இருளிலே சென்றான். அவன் செல்வதை வேவு பார்க்கும் தூதிகள் மூலமறிந்து அவனது காதலிகள் அவன் செல்லும் வழியில் முன்னமே நின்று வழி மறித்து 'காமுகனே! எங்களை ஏன் ஏமாற்றுகின்றாய்?'. எனக் கூறித் தங்களிடத்திற்கு இழுத்துச் சென்றனர்.

योषितामुडुपतेरिवार्चिषां स्पर्शनिर्वृतिमसाववाप्नुवन् ।
आरुरोह कुमुदाकरोपमां रात्रिजागरपरो दिवाशयः ॥ ३४ ॥

**उडुपतेः** - சந்திரனுடைய, **अर्चिषां इव** - கிரணங்களின் (ஸ்பர்சத்தினால் இன்பமடைவது) போல, **योषितां** - பெண்

களின், स्पर्शनिर्वृतिम् - ஸ்பர்ச இன்பத்தை, अवाप्नुवन् - அடைபவனும், रात्रि - जागरपरः - இரவுகளில் விழித்திருப்பதில் கருத்துடையவனும், दिवाशयः-பகலில் தூங்குபவனுமான, असौ - அவன், कुमुदाकर-उपमाम् - ஆம்பல் தடாகத்தின் ஒப்புமையை, आरुरोह - அடைந்தான்.

(க-து) அக்னிவர்ணன் சந்திர கிரண ஸ்பரிசம் போன்ற பெண்களின் ஸ்பரிசத்தினால் இன்பமடைந்தவனாக, இரவு முழுவதும் விழித்துப் பகலிலே தூங்கினான். இவ்வகையில் சந்திர கிரண ஸ்பரிசத்தால் இரவிலே மலர்கின்றதும், பகலிலே குவிகின்றதுமான ஆம்பல் தடாகத்தை ஒத்தவனாக இருந்தான்.

பெண்களுக்கு உபமானம் சந்திரகிரணங்கள். இரண்டிற்கும் பொதுவான குணம ஸ்பர்சத்தினாலே இன்ப முண்டாக்குதல் நிலவின் ஸ்பர்சம் இருப்பின் தூக்கம் எளிதில் வராது. அதுபோல் பெண்களின் ஸ்பர்ச இன்பம் அக்னிவர்ணனுக்குத் தூக்கம் வராமற் செய்தது.

वेणुना दशनपीडिताधरा वीणया नखपदाङ्कितोरवः ।
शिल्पकार्य उभयेन वेजितास्तं विजिह्मनयना व्यलोभयन् ॥३५॥

दशन-पीडित-अधराः - (அக்னி வர்ணனது) பற்களால் சுவைக்கப்பட்ட உதடுடையவர்களும், नख-पद-अङ्कित-ऊरवः- நகக் குறிகளுடன் கூடிய தொடையுடையவர்களுமான, शिल्पकार्यः - பாடகிகள், वेणुना - புல்லாங்குழல், वीणया च- வீணை, इति उभयेन - என்ற இவ்விரண்டினாலும், वेजिताः - வருத்தமுற்று, विजिह्म नयनाः - சாய்ந்த பார்வையுடையவர்களாய், तं - அவனை, व्यलोभयन् - வசீகரித்தனர்.

(க-து) கலவிக் காலத்திலே அக்னிவர்ணன் பாடகிகளின் உதடுகளைச் சுவைத்ததால் அவற்றில் வ்ரணம் உண்டாகியிருந்தது உதட்டில் குழலை வைத்து வாசிக்க முடியாதிருந்தனர் அப்பாடகிகள். அவர்களது தொடையில் அவனுண்டாக்கிய நகக்குறிகளிருந்ததால் வீணையை மடியில் வைத்து வாசிக்கவும் அவர்களுக்கு இயலவில்லை. அவர்களைப் பாடும்படி அக்னிவர்ணன் தூண்டியபொழுது, தங்களது இயலாமைக்கு அவனே காரணம்

என்பதைக் குறிப்பவர்களாய், தலை சாய்த்துக் குறுக்காக அவனை நோக்கினர். இந்நிலையிலும் அவர்கள் அவனது மனத்தைக் கவரும் அழகுடையவராயிருந்தனர்.

**शिल्पकार्यः** - குழல் முதலியன வாசிக்கும் பெண்கள்.

अंगसत्त्ववचनाश्रयं मिथः स्त्रीषु नृत्यमुपधाय दर्शयन् ।

स प्रयोगनिपुणैः प्रयोक्तृभिः संजघर्ष सह मित्रसंनिधौ ॥ ३६ ॥

**अङ्ग-सत्त्व-वचन-आश्रयम्** - உடலுறுப்புக்கள், மனம், ஸங்கீதம் இவற்றை ஆதாரமாகக்கொண்ட, **नृत्यम्** அபிநயக் கலையை, **मिथः** - தனிமையில், **स्त्रीषु** - அந்தப்புர ஸ்திரீகளுக்கு, **उपधाय** - (தானே) கற்பித்து, **दर्शयन्** - (நண்பர்களுக்கு) காண்பிக்கின்ற, **सः** - அவன், **मित्र सन्निधौ** - நண்பர்களின் முன்னிலையில், **प्रयोग-निपुणैः** - அபிநயக் கலையில் திறமை வாய்ந்த, **प्रयोक्तृभिः सह** - நாட்டிய ஆசிரியர்களுடன், **संजघर्ष** - போட்டியிட்டான்.

(க-து) அந்தப்புரத்திலுள்ள பெண்களுக்குத் தனிமையில் அபிநயக் கலையைக் கற்பித்து அவன், தன் நண்பர்களின் எதிரில் தான் கற்பித்த அபிநயத்தைக் காட்டச்செய்து, நாட்டியம் கற்பித்தலைத் தொழிலாகக்கொண்ட ஆசிரியர்களைக்காட்டிலும் தான் உயர்ந்தவன் என நினைத்து அவர்களுடன் போட்டியிட்டான்.

அபிநயம் மூவகைப்படும்: உடலுறுப்பான கை, விரல் முதலியவற்றைக்கொண்டு செய்யப்படுவது **आंगिकम्** ஆகும். மனத்திலுள்ள கருத்தை வெளியிடும் வகையிலுள்ள முகத்தோற்றத்தை **सात्त्विकाभिनयम्** என்பர். **अव्यक्तरूपं विज्ञेयं सत्त्वं भावरसाश्रयम्** என்பதைக் காண்க. ஸங்கீதத்தை ஆதாரமாகக் கொண்டது **वाचिकाभिनयम्** ஆகும். ஆஹார்யாபிநயம் என்ற நான்காவதை நீக்கி மூவகை அபிநயங்களையே இங்கே கவி கூறினார்.

**मिथः** - தனிமையில்: 'பலர் எதிரிலில்லாமல்' என்பது கருத்து. அக்னிவர்ணன் பெண்களுக்குத் தனிமையிலேயே அபிநயத்தைக் கற்பித்தான்.

**स्त्रीषु उपधाय दर्शयन्** - அபிநய ஞானத்தைத் தானே நேரில் காட்டாமல், ஸ்திரீகளிடம் வைத்துக் காட்டினான். தனது அறிவைத்தனது சிஷ்யைகளான ஸ்திரீகளின் மூலம் புலப்படுத்தினான் என்பது கருத்து

अंसलम्बिकुटजार्जुनस्रजस्तस्य नीपरजसाङ्गरागिणः ।

प्रावृषि प्रमदबर्हिणेष्वभूत्कृत्रिमाद्रिषु विहारविभ्रमः ॥ ३७ ॥

**प्रावृषि** - மழைக்காலத்தில், **अंस लंबि-कुटज-अर्जुन-स्रजः**- தோளிலே தொங்குகின்ற, குடஜ, அர்ஜுன புஷ்ப மாலையுடையவனும், **नीपरजसा** - கடம்ப மலர்களின் மகரந்தப் பொடிகளால், **अङ्गरागिणः** - உடற் பூச்சு உடையவனுமான, **तस्य**- அவனுக்கு, **प्रमदबर्हिणेषु**-களிப்புற்ற மயில்களையுடைய, **कृत्रिम-अद्रिषु** - செய் குன்றுகளில், **विहार-विभ्रमः** - பல்வகை கேளிக்கை, **अभूत्** - நிகழ்ந்தது.

இது முதல பத்து சுலோகங்களிலே அக்னி வர்ணன் ஆறு ருதுககளிலும் ஸுகமனுபவித்த வகை கூறப்படுகின்றது.

(க-து) மழைக் காலத்தில் குடஜார்ஜுன மாலைகளைத் தரித்தவனாய், கடம்ப மலரின் மகரந்தப் பொடிகளை உடலிற் பூசிக் கொண்டு, மயில்களா வசிக்கின்ற செய்குன்றுகளிலே விளையாடிக் களித்தான்.

**कृत्रिमाद्रि** - விளையாடுதற் பொருட்டு அமைக்கப்பட்ட சிறிய குன்று.

**कुटज** - ஒரு வகை மரம்; மலை மல்லிகை என்பர்.

**अर्जुनः** - மருத மரம்; இவை மழைக் காலத்திலே புஷ்பிப்பன.

विग्रहाच्च शयने पराङ्मुखीर्नानुनेतुमबलाः स तत्वरे ।

आचकांक्ष घनशब्दविक्लवास्ता विवृत्य विशतीर्भुजान्तरम् ॥

(प्रावृषि) - மழைக் காலத்தில், सः - அவன், विग्रहात्-பிரணய கலஹத்தினல் (ஊடலினல்), शयने - படுக்கையில், पराङ्मुखीः - மறுபுறம் திருப்பியுள்ள, अबलाः - பெண்களே, अनुनेतुम् -சமாதானப்படுத்த, न तत्वरे-அவசரப்படவில்லை; (किन्तु) - ஆனல், घन-शब्द-विक्लवाः - மேக சத்தத்தினுல அச்சமுற்று, विवृत्य-(தாமே) திருப்பி, भुजान्तरम् - (தனது) மார்பகத்தை, विशतीः - புகுகின்ற (அடைகின்ற), ताः - அவர்களே, आचकांक्ष - எதிர்பார்த்திருந்தான்.

(க-து) பிரணய கலஹத்தினுல் தன்னை நோக்காது மறுபுறம் திரும்பிப் படுத்திருக்கும் பெண்களைச் சமாதானம் செய்து தன் புறம் திருப்ப அவன் முயலவில்லை. இடிச் சத்தம் கேட்டால் அச்சமுற்றுத் தாமே வந்து அணைவர் என எண்ணி வாளாவிருந்தான்.

பெண்கள் தம்மாலேயே வலியச் செய்யப்படும் ஆலிங்கனத்தையே விருப்பினன் அக்னிவர்ணன்.

இவ்விரண்டு சுலோகங்களில் வர்ஷ ருதுவின் அனுபவ வகை கூறப்பட்டது.

कार्तिकीषु सवितानहर्म्यभाग्यामिनीषु ललिताङ्गनासखः ।
अन्वभुंक्त सुरतश्रमापहां मेघमुक्तविशदां स चन्द्रिकाम् ॥

कार्त्तिकीषु - கார்த்திகை மாதத்து, यामिनीषु - இரவுகளிலே, सवितान-हर्म्य-भाक् - விதானத்துடன் கூடிய உப்பரிகையின் மேல் தளத்திலிருப்பவனுக, ललित-अंगना-सखः- அழகான பெண்களுடன் கூடியவனுய், सः - அவன், सुरत-श्रम-अपहाम् - கலவிக் களைப்பைப் போக்குவதும், मेघ-मुक्त-विशदाम् - மேகங்களினின்றும் விடுபட்டுத் தெளிவாயிருப்பதுமான, चन्द्रिकां - நிலவை, अन्वभुङ्क्त - அனுபவித்தான்.

(க-து) சரத்ருதுவில் விதானத்துடன் கூடிய மேல் மாடியில் பெண்களுடன் கூடியவனுகக்கலவியினல் உண்டாகும் களைப்பை நீக்குவதில திறமை வாய்ந்த நிலவை அனுபவித்தான். ஆகாசம் மேகமின்றி இருந்ததால் நிலவு தெளிவாக இருந்தது.

**कार्त्तिकीषु यामिनीषु** - என்றது சரத்கால இரவுகளை. ஐப்பசியும் கார்த்திகையும் சரத் ருதுவாகும். சரத் காலத்தில் ஆகாயத்தில் மேகங்கள் இரா. **अंगनाः** - அழகான உடலமைப்புள்ள பெண்கள் என்பது பதப்பொருள். திறந்த வெளியிலே அதிக நேரம் இருப்பது ஆரோக்யக் குறைவை உண்டாக்குமாகையால் உப்பரிகையில விதானமமைக்கப் பட்டிருந்தது. **वितानम्** - துணியினுல் அமைக்கப்பட்ட பந்தல்.

'हर्म्याणां सवितानत्वं हिमनिवारणार्थम् ।' नारायणः ।

सैकतं च सरयूं विवृण्वतीं श्रोणिबिम्बमिव हंसमेखलम् ।
स्वप्रियाविलसितानुकारिणीं सौधजालविवरैर्व्यलोकयत् ॥४०॥

**हंसमेखलम्** - ஹம்ஸங்களாகிய மேகலையையுடையதும், **श्रोणि बिम्बं इव (स्थितम्)** - (ஸ்திரீகளின்) நிதம்பம் போலுள்ளதுமான, **सैकतं**-மணற் திட்டை, **विवृण्वतीम्** -புலப்படுத்துகின்றதும், **स्व-प्रिया-विलसित-अनुकारिणीम्** - தனது காதலிகளின் செயல்களை அனுகரிக்கின்றதுமான, **सरयूं च**-ஸரயூ நதியை, **सौध जाल-विवरैः** - மாளிகையின் ஜன்னல்களது இடைவெளிவழியாக, **व्यलोकयत्** - கண்டான்.

(க-து) வர்ஷா காலத்தில் வெள்ளம் பெருக்கிய நதிகளில் சரத்காலத்தில் பிரவாஹம் வடிந்து மணற்திட்டுகள் தோன்றும். அக்னிவர்ணன் தன் காதலிகளின் நிதம்பஙகளைப் போன்றுள்ள ஸரயூநதியின் மணல்திட்டுகளைச் சரத்ருதுவில் கண்டுகளித்தான். பெண்களின் நிதம்பங்கள் மேகலையால் அழகுற்று விளங்குவது போல் மணல்திட்டுகள் இனிதே ஒலிக்கின்ற ஹம்ஸப் பறவைகளால் விளங்கின.

எவ் வகையிலே ஸரயூ நதி அக்னி வர்ணனுடைய காதலிகளின் அழகிய செயலகளை அனுகரிக்கின்றதென்பது, '**श्रोणिबिंबमिव. सैकतं विवृण्वतीम्**' என்பதால் குறிக்கப் பட்டது.

'दर्शयन्ति शरन्नद्यः पुलिनानि शनैः शनैः ।
नवसङ्गमसव्रीडाः जघनानीव योषितः ॥'

என வால்மீகி கூறியுள்ளதை இச்சுலோகம் நினைவூட்டும்.

இவ்விரண்டு சுலோகங்களிலே சாத்ருத்துவின் ஸாகாருபவம் கூறப்பட்டது.

मर्मरैरगुरुधूपगन्धिभिर्व्यक्तहेमरशनैस्तमेकतः ।
जह्रुराग्रथनमोक्षलोलुपं हैमनैर्निवसनैः सुमध्यमाः ॥ ४१ ॥

**मर्मरैः** - 'மர்மர்' என ஓசை செய்பவைகளும் (முறமுறப்பானவைகளும்), **अगुरु-धूप-गन्धिभिः** - அகில் புகையின் நறுமணமுடையவைகளும், **एकतः**-(இடையின்) ஒருபுறத்தில், **व्यक्त हेमरशनैः**-பொன் மேகலைகளை புலப்படுத்துபவையும், **हैमनैः** -பனிக் காலத்திற்கு ஏற்றவையுமான, **निवसनैः** - வஸ்திரங்களினால், **सुमध्यमाः**-அழகிய இடையுடையுடைய பெண்கள், **आग्रथन-मोक्ष लोलुपम्** - (இடை) முடிச்சை தளர்த்துவதிலே ஆவலுள்ள, **तम्**-அவனை, **जह्रुः**-வசீகரித்தனர்.

(க-து) பனிக்காலத்திற்கு ஏற்ற வகையில் வஸ்திரங்கள் 'கஞ்சி' சேர்த்து சலவை செய்யப்பட்டதால் முறமுறப்புடன் இருந்து, இடையிலே நில்லாது அடிக்கடி நழுவியனவாய், அப்பெண்களின் மேகலையைப் புலப்படுத்தின. தாமே நழுவிய அவ்வஸ்திரங்கள அவர்களின் இடை முடிச்சை அவிழ்ப்பதிலே ஆவலுள்ள அவ்வரசனுக்கு உதவுகின்றனவாய் ஆயின. இத்தகைய உடையணிந்திருந்த பெண்கள்—அவன் மனத்தை வசீகரித்தனர்.

**मर्मरैः** - 'हेमन्ते वसनानां उपश्लेषरसस्य भूयस्त्वात् मर्मरशब्दवत्त्वम्' वस्त्रशैथिल्यं च उपश्लेषरसभूयस्त्वकृतम्' नारायणः ।

अर्पितस्तिमितदीपदृष्टयो गर्भवेश्मसु निवातकुक्षिषु ।
तस्य सर्वसुरतान्तरक्षमाः साक्षितां शिशिररात्रयो ययुः ॥४२॥

**निवात कुक्षिषुः**-காற்றற்ற உட்புறமுடைய, **गर्भ वेश्मसु**-உள்ளறைகளில, **अर्पित-स्तिमित-दीप-दृष्टयः** - வைக்கப்பட்டுள்ள சலனமற்ற விளக்குகளாகிய கண்களையுடையனவும், **सर्व-सुरतान्तर-क्षमाः** - எல்லா வகையான கலவிகளுக்கும் ஏற்றனவுமான, **शिशिर रात्रयः**-பனிக்கால இரவுகள், **तस्य**-அவ்வரசனுக்கு, **साक्षितां** - ஸாக்ஷிகளாக இருக்கும் தன்மையை, **ययुः** - அடைந்தன.

பனி அதிகமுள்ள சிசிர ருதுவின் ஸுகானுபவம் கூறப்படுகிறது.

(க-து) காற்றில்லாததால் அசைவற்று எரியும் விளக்குகளையுடைய உள்ளறைகளிலே, இரவுப்பொழுது நீண்டிருக்கும் காரணத்தால் பலவகைக் கலவிகளையும், சிசிர ருதுவில் துய்த்தான் அவன்.

அவன் ஸுகம் அனுபவித்த காலமாகிய இரவை ஸாக்ஷியாகக் கூறினார். இரவாகிய ஸாக்ஷிக்கு விளக்கு கண்ணாக இருந்தது. இரவை ஸாக்ஷியாகக் கூறியது அத்தகைய ஏகாந்தமான காலத்தை உணர்த்துவதற்காக.

**सर्वसुरतान्तरक्षमाः** - தாபமும் களைப்பும் வியர்வையுமின்றி இருப்பதாலும் பகற் பொழுதைக் காட்டிலும் இரவுக் காலம் நீண்டிருத்தலால் காம சாஸ்திரங்களில் கூறியுள்ள கலவிவகைப் பலவற்றையும் ஒன்றன் பின் ஒன்றாக அனுபவிக்க நேரமிருப்பதாலும், இரவுகளை இவ்வாறு விசேஷித்தார்.

दक्षिणेन पवनेन संभृतं प्रेक्ष्य चूतकुसुमं सपल्लवम् ।

अन्वनैपुरवधूतविग्रहास्तं दुरुत्सहवियोगमङ्गनाः ॥ ४२ ॥

**अङ्गनाः** - பெண்கள், **दक्षिणेन पवनेन** - தென்னலினால், **संभृतं** - உண்டாக்கப்பட்ட, **सपल्लवं** - தளிருடன் கூடிய, **चूतकुसुमं** - மாப்பூவை, **प्रेक्ष्य** - கண்டு, **अवधूत विग्रहाः** - பிரணய கலஹத்தை விட்டு, **दुरुत्सह-वियोगम्** - பொறுக்க

முடியாத பிரிவையுடைய, तम् - அவனை, अन्वनैषुः - சமா தானம் செய்தனர்.

(க-து) வஸந்த ருது வந்ததும் தென்றல் வீசத் தொடங் கியது. மாமரங்களில் தளிரும் புஷ்பங்களும் தோன்றின. பிர ணய கலகத்தினால் அவனிடம் கோபங்கொண்டு பிரிந்திருந்த பெண்களுக்கு அவனது பிரிவு ஸஹிக்கக் கூடாததாக இருந்தது. எனவே, அவர்களே தம் சண்டையை விட்டு அவனைச் சமா தானம் செய்தனர்.

மாப்பூ காதலர்களின் காதலை தூண்டி விடுமென்பர். [ஸ. 9. சு. 23. காண்க.] இதில் வஸந்தருதுவின் ஸ்வானு பவம் கூறப்பட்டது. दुरुत्सह वियोगम् - அவனைப் பிரிந் திருத்தல் அவர்களுக்குத் தாங்கக் கூடாததாக இருந்தது.

ताः स्वमंकमाधिरोप्य दोलया प्रेङ्खयन्परिजनापविद्धया ।
मुक्तरज्जु निबिडं भयच्छलात्कण्ठबन्धनमवाप बाहुभिः ॥४४॥

ताः - அப் பெண்களை, स्वम्-अङ्कम् - தனது மடியில், अधिरोप्य - ஏற்றி வைத்துக் கொண்டு, परिजन-अपविद्धया - பணிப்பெண்களால் ஆட்டப்பெற்ற, दोलया-ஊஞ்சலினாலே, मुक्तरज्जु - ஊஞ்சலின் கயிற்றை விடும் வகையில், प्रेङ्खयन् - அசைப்பவனாக, भयच्छलात् - பயப்படுதல என்ற வியாஜத் தில், बाहुभिः - (அவாகளது) கைகளால (செய்யப்படும), निबिडं कण्ठबन्धनम् - இறுக்கமான தழுவுதலை, अवाप - அடைந்தான்.

(க-து) ஸ்திரீகளை மடியில் வைத்துக்கொண்டு ஊஞ்சலாடிய அவன், அவர்கள் ஊஞ்சலின் கயிற்றை விடும் வகையில அசைத் தான். அதனால் பயப்படுவதுபோல் பாசாங்கு செய்த அப்பெண் கள் அவனை இறுகத் தழுவினர்

तं पयोधरनिषिक्तचन्दनैर्मौक्तिकग्रथितचारुभूषणैः ।
ग्रीष्मवेषविधिभिः सिषेविरे श्रोणिलम्बिमणिमेखलैः प्रियाः ॥

प्रियाः - காதலிகள், पयोधर-निषिक्त-चन्दनैः - ஸ்தனங் களின் மேல் ஊற்றப்பட்ட சந்தனக் குழம்புடையனவும்,

**मौक्तिक ग्रथित चारुभूषणैः** - முத்துக்கள் தொடுக்கப் பெற்ற அழகிய அணிகளை யுடையனவும், **श्रोणि-लंबि मणि मेखलैः** - இடையிலே தொங்கும ரத்ன மேகலை யுடையனவுமான, **ग्रीष्म वेष विधिभिः** - கிரீஷ்ம ருதுவிற் குரிய அலங்கார முறைகளால், **तम्** - அவனை, **सिषेविरे** - ஸேவித்தனர் (மகிழ்வித்தனர்,

(க-து) உஷ்ண காலமான கிரீஷ்மருதுவிற்கு ஏற்ற வகையில் அலங்காரம் செய்துகொண்டு பெண்கள் அவனுக்கு மன மகிழ்ச்சியளித்தனர். ஸ்தனங்களின் மேல் சந்தனக் குழம்பைப் பூசியிருந்தனர். குளிர்ச்சியான ஸ்பரிசமுடைய முத்துமாலைகளை அணிந்திருந்தனர். இடையிலே முற்றிலும் பொன்னாலான மேகலையணியாது மரகதம், கோமேதகம் முதலியன பதித்த மேகலை தரித்திருந்தனர்.

यत्स लग्नसहकारमासवं रक्तपाटलसमागमं पपौ ।
तेन तस्य मधुनिर्गमात्कृशश्चित्तयोनिरभवत्पुनर्नवः ॥ ४६ ॥

**सः** - அவன், **लग्नसहकारम्** - இடப்பெற்ற மாம்பூவை யுடையதும், **रक्त पाटल समागमं** - செம்பாதிரிப் பூவுடன் கூடியதுமான, **आसवम्** - மதுவை, **पपौ** - பானம் செய்தான் **इति यत्** - என்பது யாதொன்றிருக்கிறதோ, **तेन** - அதனாலே, **मधु निर्गमात्** - வஸந்த ருது சென்றதால், **कृशः** - குறைந்து போன, **तस्य चित्तयोनिः** - அவனது காமம, **पुनर्नवः** - மறுபடியும புதுமை பெற்றதாக, **अभवत्** - ஆயிற்று.

(க-து) வஸந்த ருது சென்றதால் அவனது காமம் குறைந்தது. மாம்பூவும், செம்பாதிரியும் இடப்பெற்று வாசனையூட்டப்பட்ட மதுவை அருந்தியதால், குறைந்துபோன அவனது காமம் மறுபடியும் பலம் பெற்றுப் பெருகியது

காமத்தை விருத்தி செய்யும் பொருளாக மதுவைக் கூறுவர். மாம்பூவும் செம்பாதிரியும் இட்டது, மதுவிற்கு வாசனை யூட்டுதற்காக. [ஸ 16. சுலோகம் 52 காண்க.]

एवमिन्द्रियसुखानि निर्विशन्नन्यकार्यविमुखः स पार्थिवः ।
आत्मलक्षणनिवेदितानृतूनत्यवाहयदनङ्गवाहितः ॥ ४७ ॥

**एवं** - இவ்வாறு, **अनङ्ग वाहितः** - காமத்தால் தூண்டப்பட்டவனாகவும், **अन्य कार्य विमुखः**-வேறு வேலையை நோக்காதவனாகவும், **सः पार्थिवः** - அவ்வரசன், **इन्द्रियसुखानि** - இந்திரிய ஸுகங்களை, **निर्विशन्** - அநுபவித்துக் கொண்டு, **आत्मलक्षण निवेदितान्**-(அந்தந்த) ருதுக்களின் அடையாளங்களால் தெரிவிக்கப்பட்ட, **ऋतून्** - (ஆறு) ருதுக்களையும், **अत्यवाहयम्** - கடத்தினான்.

(க-து) வேறு வேலை எதையும் கவனிக்காது அந்தந்த ருதுக்கேற்றவகையில் அலங்காரம் செய்துகொண்டு காமத்தால் தூண்டப்பெற்ற அவ்வரசன் புலன்களின் இன்பத்தை நுகர்ந்தான்.

**आत्मलक्षणनिवेदितान्** - அவனணிந்த அணிகளே அந்தந்த ருதுவைக் காட்டின என்றும் பொருள் கூறுவர்.

**इन्द्रियसुखानि** - ‘கண்ணால் கண்டும், செவியால் கேட்டும், நாவாலுண்டும், மூக்கால் மோந்தும், மெய்யால் தீண்டியும் அநுபவிக்கப்படும்’ ஐவகை இன்பங்களாம்.

तं प्रमत्तमपि न प्रभावतः शेकुराक्रमितुमन्यपार्थिवाः ।
आमयस्तु रतिरागसंभवो दक्षशाप इव चन्द्रमक्षिणोत् ॥४८॥

**प्रमत्तं अपि** - கவனக் குறைவுடையவனாயினும், **तं**-அவ்வரசனை, **प्रभावतः**-(அவனது) பிரபு சக்தி காரணமாக, **अन्य-पार्थिवाः** - மற்ற அரசர்கள், **आक्रमितुं** - அவமதிக்க, **न शेकुः** - சக்தியுடையவர்களாக இல்லை; **दक्ष शापः** - தக்ஷனுடைய, சாபமானது. **चन्द्रं इव** - சந்திரனை (இளைக்கச் செய்தது) போல, **रति राग संभवः** - கலவியின் மிக விருப்பினாலுண்டான, **आमयः तु** - வியாதியோ, **तम्** - அவனை, **अक्षिणोत्** - மெலியச் செய்தது.

(க-து) மோகத்திலீடுபட்டு, ராஜ்ய காரியங்களை கவனிக்காதிருந்தபோதிலும், அவன் மிகப் பலமுடையவனுக இருந்ததால் மற்ற அரசர்கள் அவனை எதிர்க்கக் கூடவில்லை. தக்ஷனுடைய சாபத்தால் சந்திரன் மெலிவதுபோல் கலவியில் விருப்பினுல் உண்டான வியாதி அவனை மெலிவுறச் செய்தது.

சத்ருக்கள் செய்ய முடியாத பலக் குறைவை வியாதி அவனுக்கு உண்டாக்கியது.

தக்ஷ சாபம் :—தக்ஷனது பெண்கள் இருபத்தேழு பேரைச் சந்திரன் மணந்திருந்தான். அவர்களில் ரோஹிணியிடம் சந்திரன் அதிக ப்ரீதி வைத்து மற்ற மனைவிகளை அலக்ஷ்யம செய்ததால் அபபெண்கள் தந்தையிடம் முறையிடவும, தக்ஷன், சந்திரனுக்கு க்ஷயரோக முண்டாக வேண்டுமெனச் சாபமிட்டான்.

இவ்வரலாறு மஹா பாரதத்தில் கூறப்பட்டுள்ளது.

दृष्टदोषमपि तन्न सोऽत्यजत्सङ्गवस्तु भिषजामनाश्रवः ।

स्वादुभिस्तु विषयैर्हृतस्ततो दुःखमिन्द्रियगणो निवार्यते ॥४९॥

**भिजषां** - வைத்யர்களின், **अनाश्रवः** - சொல் கேளாத, **सः** - அவ்வரசன், **दृष्ट दोषं अपि**-புலப்படுகின்ற குற்றமுடைதாயினும், **तत् सङ्ग-वस्तु** - அவ்வாசைப் பொருள்களை, **न अत्यजत्** - விடவில்லை ; **इन्द्रियगणः** - இந்திரியங்களின் கூட்டம், **स्वादुभिः** - இனிய, **विषयैः** - பொருள்களால், **हृतस्तु** - கவரப்படுமாயின், **दुःखम्** - மிக சிரமத்துடன், **ततः** - அப்பொருள்களினின்றும், **निवार्यते** - தடுக்கப்படுகின்றது.

(க-து) அக்னிவர்ணன், வைத்தியர் சொல் கேளாது, கலவியிலே அதிகம் விருப்புக்கொண்டது ஆபத்தையுண்டாக்கியதென்பதை அறிந்தபின்னும, தான் பற்று வைத்த பொருளான மதுவையும், மங்கையரையும் விடவில்லை. இனிய பொருள்களுக்கு வசப்பட்ட புலன்களை மீட்பது மிக மிக அரிது.

तस्य पाण्डुवदनाल्पभूषणा सावलम्बगमना मृदुस्वना ।

राजयक्ष्मपरिहानिराययौ कामयानसमवस्थया तुलाम् ॥ ५० ॥

**तस्य** - அவனுக்கு, **पाण्डु वदना** - வெளிரிய முகமுடையதும், **अल्पभूषणा** - குறைந்த அணியுடையதும், **सावलंबगमना** - பிடிப்புடன் கூடிய நடையுடையதும், **मृदुस्वना** - ஈனக்குரலுடையதுமான, **राजयक्ष्म परिहानिः** - க்ஷயரோகத்தினால் வந்த உடலிளைப்பு (க்ஷீண தசை), **कामयान-समवस्थया** - காதலிப்பவனுடைய நிலைக்கு, **तुलाम्** - ஸமமான தன்மையை, **आययौ** - அடைந்தது.

(க-து) க்ஷயரோகத்தினால் க்ஷீணதசையடைந்த அவனது முகம் வெளுத்தது. உடலில் பலம் இல்லாததால் சில அணிகளே அணிந்திருந்தான். வேலைக்காரர்கள் தாங்க, மெதுவாக நடந்தான். குரல் மெலிந்து ஈன நிலையை அடைந்தது.

அக்னி வர்ணனது இந்நிலை காதல் நோயால் வருந்துபவனது நிலைக்கு ஒத்து இருந்தது.

காம நோயால் வருந்துபவனது முகம் கவலையால் வெளுத்திருக்கும். ஆபரணமும் அதிகம் அணியான். உத்ஸாஹமில்லாததால உடல் சோர்வுற்றுக் குரலும் மெலிந்திருக்கும்.

व्योम पश्चिमकलास्थितेन्दु वा पङ्कशेषमिव घर्मपल्वलम् ।
राज्ञि तत्कुलमभूत्क्षयातुरे वामनार्चिरिव दीपभाजनम् ॥५१॥

**राज्ञि** - அரசன், **क्षयातुरे (सति)** - க்ஷயரோகத்தினால் பீடிக்கப்பட்டிருக்குமபொழுது, **तत्कुलम्** - அவ்வம்சமானது, **पश्चिमकलास्थितेन्दु** - கடைசிக் கலையிலே (எஞ்சி) இருக்கின்ற சந்திரனையுடைய, **व्योम वा** - ஆகாசம் போலவும், **पङ्कशेषम्** - சேறு மாத்திரமே மிஞ்சியுள்ள, **घर्मपल्वलम्-इव** - கோடைகாலக் குட்டை போலவும், **वामनार्चिः** - சிறிய ஜ்வாலையுடைய, **दीपभाजनं इव** - தகழி போலவும், **अभूत्** - இருந்தது.

(க-து) வம்ச விருத்திக்கான அடையாளம் ஏதுமின்றி, அவ்வரசனும் க்ஷயரோகத்தினால் பீடிக்கப்பட்டு மெலிந்திருந்த காலத்தில், கிருஷ்ணபக்ஷ முடிவில் ஒரு கலையுடனிருக்கின்ற

சந்திரனையுடைய ஆகாசம் போன்றும், கோடை காலத்தில் நீரின்றிச் சேறு மாத்திரமே எஞ்சியுள்ள சிறு குட்டை போலவும், சிறிய ஜ்வாலையுடன் கூடிய விளக்குத் தகழி போலவும் அவ் வம்சம் காணப்பட்டது.

बाढमेष दिवसेषु पार्थिवः कर्म साधयति पुत्रजन्मने ।
इत्यदर्शितरुजोऽस्य मन्त्रिणः शश्वदूचुरघशङ्किनीः प्रजाः ॥

**अदर्शितरुजः** - (அரசனது) வியாதியை மறைத்தவர்களாக, **अस्य मन्त्रिणः** - அவனது மந்திரிகள், "**बाढं**-உண்மையாகவே, **पार्थिवः** - அரசர், **एषु दिवसेषु** - இந்நாட்களில்- **पुत्रजन्मने** - புத்திரப் பிறப்பைக் கருதி, **कर्म** - (புத்திர காமேஷ்டி முதலிய) காரியங்களை, **साधयति** - அனுஷ்டிக்கின்றார்" **इति**-என, **अघशङ्किनीः** - ஆபத்தைச் சந்தேகித்த, **प्रजाः** - ஜனங்களிடம், **शश्वत्** - எப்பொழுதும், **ऊचुः** - சொன்னார்கள்.

(க-து) அரசனுக்குத் தீங்கு நேருமெனச் சந்தேகித்த ஜனங்களிடம் மந்திரிகள், 'ஸந்ததியின் விருத்தியைக் கருதி மன்னன் யாகாதிகளைச் செய்துவருகிறான்' எனக் கூறினர்.

स त्वनेकवनितासखोऽपि सन् पावनीमनवलोक्य संततिम् ।
वैद्ययत्नपरिभाविनं गदं न प्रदीप इव वायुमत्यगात् ॥ ५३ ॥

**सः तु** - அவனோ, **अनेक-वनिता-सखः सन् अपि** - பல மனைவியரையுடையவனாக இருப்பினும், **पावनीम्**-தூய்மையுள்ள, **सन्ततिम्**-ஸந்ததியை (மகனை), **अनवलोक्य**-காணாமல் (அடையாமல்), **वैद्य-यत्न परिभाविनम्** - வைத்தியர்களின் முயற்சியை அவமதிக்கின்ற, **गदम्** - வியாதியை,—**प्रदीपः** - விளக்கு, **वायुम् इव** - (பெருங்) காற்றை (மீறாதது) போல, —**न अत्यगात्** - மீறி வாழவில்லை.

(க-து) பல மனைவியரையுடையவனாயினும் அவனுக்கு ஒரு மனைவியிடமும் மகப்பேறு கிட்டவில்லை. விளக்கு பெருங் காற்

றுக்குத் தப்பாததுபோல் அவன் அவ்வியாதிக்குத் தப்பிப் பிழைக்கவில்லை.

அக்னி வர்ணன் இறந்தான் என்பது கருத்து.

तं गृहोपवन एव संगताः पश्चिमक्रतुविदा पुरोधसा ।
रोगशान्तिमपदिश्य मन्त्रिणः संभृते शिखिनि गूढमादधुः ॥

**पश्चिम-क्रतु-विदा** - ஈமச் சடங்கு முறையை யறிந்த, **पुरोधसा**-புரோஹிதருடன், **संगताः**-கூடியவர்களாய், **मन्त्रिणः**-மந்திரிகள், **गृहोपवने एव** - அரண்மனையின் தோட்டத்திலேயே, **रोगशान्तिम्** - வியாதியின் தணிவை, **अपदिश्य** - வியாஜமாக கூறி, **संभृते** - வளர்க்கப்பட்ட, **शिखिनि**- அக்னியில், **तम्**- அவ்வக்னிவர்ணனை, **गूढम्**-ரஹஸ்யமாக, **आदधुः**- வைத்தனர்.

(க-து) அரசன் இறந்ததை வெளியில் கூறாது மந்திரிகள், புரோஹிதருடைய உதவி பெற்று, அரண்மனைக்கு அருகிலுள்ள தோட்டததில் அரசனது வியாதியின் தணிவைக் கருதி, ஹோமம் முதலியன செய்வதாகக் கூறி வளர்த்த தீயிலே அவனை வைத்தனர்.

அரசன் இறந்தது பகைவர்களுக்குத் தெரிதல் கூடாதாகையால் அதை நாட்டு மக்களுக்கும் மந்திரிகள் தெரிவிக்கவில்லை.

तैः कृतप्रकृतिमुख्यसंग्रहैराशु तस्य सहधर्मचारिणी ।
साधु दृष्टशुभगर्भलक्षणा प्रत्यपद्यत नराधिपश्रियम् ॥ ५५ ॥

**आशु** - சீக்ரமாக, **कृत प्रकृति मुख्य संग्रहैः** - நகர ஜனத் தலைவர்களைக் கூட்டுவித்த, **तैः** - அம்மந்திரிகளாலே, **साधु**- நன்றாக, **दृष्ट-शुभ-गर्भ-लक्षणा** - அறியப்பட்ட சுபமான கர்ப்ப சின்னங்களையுடைய, **तस्य सहधर्मचारिणी**- அவனது மனைவி, **नराधिपश्रियम्** - அரசனது செல்வத்தை, **प्रत्यपद्यत** - அடைந்தாள்.

(க-து) மந்திரிகள் நகர ஜனங்களின் தலைவர்களைக் கூட்டி செய்யவேண்டியதைத் தீர்மானித்தனர். அக்னிவர்ணனது மனைவியரில் ஒருத்தி கர்ப்பிணியாக இருந்ததை அதற்குரிய அடையாளங்களாலறிந்து. அவளை அரசுரிமையுடையவளாகச் செய்தனர்.

तस्यास्तथाविधनरेन्द्रविपत्तिशोका-
दुष्णैर्विलोचनजलैः प्रथमाभितप्तः ।
निर्वापितः कनककुम्भमुखोज्झितेन
वंशाभिषेकविधिना शिशिरेण गर्भः ॥ ५६ ॥

**तथाविध-नरेन्द्र-विपत्ति शोकात्**- அத்தகைய அரசனது மரணத்தினாலுண்டான துக்கத்தினாலே, **उष्णैः**-உஷ்ணமான, **विलोचनजलैः** - கண்ணீரால், **प्रथमाभितप्तः** - முதலிலே தாபமடைந்த, **तस्याः गर्भः** - அவளது கரு, **कनक कुंभ-मुख-उज्झितेन** - பொற் குட வாயினின்றும் ஊற்றப்பட்டதும், **शिशिरेण** - குளிர்ந்ததுமான, **वंश-अभिषेकविधिना** - குல முறைப்படி வந்த அபிஷேக ஜலத்தினாலே, **निर्वापितः** - குளிர்ச்சியடைவிக்கப்பட்டது.

(க.து.) அரசனிறந்த துக்கத்தினாலே வருந்திப் புலம்பிய அரசியின் உஷ்ணமான கண்ணீரால் நனைந்து தாபமடைந்த கர்ப்பம், பின் குல முறைப்படி செய்த குளிர்ந்த ஜல அபிஷேகத்தால் தாபம் தீர்ந்து குளிர்மை பெற்றது.

பிரஜைகள் கருவிற்கு அபிஷேகம் செய்தனர் என்பது கருத்து.

तं भावार्थं प्रसवसमयाकांक्षिणीनां प्रजाना-
मन्तर्गूढं क्षितिरिव नभोबीजमुष्टिं दधाना ।
मौलैः सार्धं स्थविरसचिवैर्हेमसिंहासनस्था
राज्ञी राज्यं विधिवदशिषद्भर्तुरव्याहताज्ञा ॥ ५७ ॥

**क्षितिः** - பூமி, **अन्तर्गूढम्** - உள்ளே மறைந்திருக்கின்ற, **नभो बीज मुष्टिं इव** - ஆவணி மாதத்தில் விதைக்கப்பட்ட விதை(ப் பிடி)களைத் தாங்குவது போல், **तं**- அக்கர்ப்பத்தை, **प्रसव समय-आकांक्षिणीनाम्** - பிரஸவ ஸமயத்தை எதிர்பார்த்திருந்த, **प्रजानां** - ஜனங்களின், **भावार्थम्** - நன்மையின் பொருட்டு, **दधाना** - தரிக்கின்ற, **राज्ञी** - அரசி, **हेम-सिंहासनस्था** - பொன்மயமான ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்தவளாகவும், **अव्याहत आज्ञा** - தடையுறாத ஆணையுடையவளாகவும் (இருந்து கொண்டு), **मौलैः** - குல முறையாக வந்த, **स्थविर सचिवैः सार्धम्**-வயது முதிர்ந்த மந்திரிகளுடன், **भर्तुः राज्यं** - கணவனது ராஜ்யத்தை, **विधिवत्**-முறைப்படி, **अशिषत्** - ஆண்டு வந்தாள்.

(க-து) விதைப்பதற்குரிய காலமான ஆவணியில் விதைக்கப்பட்ட விதையைப் பூமி தன்னுள் வைத்து இருப்பதுபோல் உலகின் நன்மைக்காக அவ்வரசி கர்ப்பத்தைத் தாங்கி இருந்தாள். அரியணையில் அமர்ந்து, குலமுறையாக வந்த வயது முதிர்ந்த மந்திரிகளுடைய உதவி பெற்று, கணவனது ராஜ்யத்தை நன்கு பரிபாலித்துவந்தாள்.

**बीजमुष्टिः** - விதையை கைப்பிடியால் எடுத்து விதைப்பதால் **मुष्टि** என்ற சொல்லை உபயோகித்தார்; மழைக்காலத்தின் தொடக்கமான ஆவணி மாதத்தில் ஊன்றப்பட்ட விதை திண்ணமாக முளைத்துப்பயனளிக்குமாகையால் **नभो-बीज** என்றார். ஆவணியில் விதைக்கப்பட்ட விதை என்பது பொருள்.

**क्षितिः इव** - பலனை எதிர்பார்க்கின்ற ஜனங்களின் நன்மைக்காகவே பூமியும் விதையைத் தாங்குகின்றது.

इति महाकवि श्री कालिदासकृतौ
रघुवंशे महाकाव्ये एकोनविंशः सर्गः ॥

समाप्तोऽयं ग्रन्थः

Printed At The Kalyan Press, Tiruchirapalli

# பிழையும் திருத்தமும்

## VOL. I

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 18 | श्रुद्धिमति | शुद्धिमति |
| 7 | 18 | பரிசுத்தமான் | பரிசுத்தமான |
| 7 | 19 | श्रुद्धिमत्तर: | शुद्धिमत्तर: |
| 14 | 5 | आस्तात् | आस्ताम् |
| 35 | 14 | भवं | सुखम् |
| 41 | 20 | நந்தியின் | நந்தினியின் |
| 48 | 10 | இருந்து, | இருந்தது ; |
| 50 | 11 | आस्वद | आस्वाद |
| 50 | 20-21 | கொடுத்தாள். | கொடுத்தான். |
| 61 | 14 | वत्सो सुका | वत्सोत्सुका |
| 74 | 22 | विसज्यतां | विसृज्यताम् |
| 82 | 4 | चन्मतो | चेन्मतो |
| 99 | 13 | न्यथां | व्यथाम् |
| 102 | 16 | कुमर | कुमार |
| 107 | 5 | மகத அரசனாகிய | ஸுதக்ஷிணையின் நாதனாகிய |
| 131 | 9 | अमोय | अमोघम् |
| 131 | 9 | साधकं | सायकं |
| 172 | 11 | शिलावर्षि | शिलावर्षी |
| 178 | 14 | लीन | लीढ |
| 192 | 11 | उपद | उपदा: |
| 199 | 2 | तुलितस्य | तुलितस्य |
| 233 | 19 | ஸம்மதம் | ஸம்பந்தம் |
| 238 | 6 | क्षणमत्र | क्षणमात्र |
| 240 | 2 | रूपमुत्सृज्य | रूपमुन्मृज्य |
| 245 | 7 | கிழக்கு | வடக்கு |
| 251 | 26 | சந்திரடன் | சந்திரனுடன் |
| 253 | 13 | ससृज्यते | संसृज्यते |
| 259 | 7 | सौकतं | संकेतम् |
| 262 | 15 | सोपन | सोपान |

E

## பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 265 | 11 | विघता | विधुता |
| 273 | 16 | सन्निवेशाद्वय | सन्निवेशाद्वय |
| 274 | 24 | परतपः | परंतपः |
| 280 | 2 | हराः | हाराः |
| 298 | 14 | भविता | भवित्री |
| 312 | 2 | त | तै |
| 316 | 20 | पुत्रा | पुत्रो |
| 439 | 13 | நந்தவனத்தின் | நந்தனவனத்தின் |
| 447 | 14 | रघूद्वहान् | रघूद्वहात् |
| 450 | 13 | चरणोः | चरणयोः |
| 466 | 6 | வண்டுகளால் | குயில்களால் |
| 468 | 27 | उक्लोदल | उदक्लोल |
| 477 | 25 | पचरियं | परिचयम् |
| 503 | 16 | प्रावाच | प्रोवाच |
| | | **VOL. II** | |
| 563 | 27 | प्रसूतिमये | प्रसूतिसमये |
| 570 | 11 | मजिव्याजेन | मणिव्याजेन |
| 577 | 24 | भम्नैदत्य | भम्नदैत्य |
| 623 | 14 | காணப்பட்டனர் | காணப்பட்டனர் |
| 719 | 16 | வீழ்த்தின | வீழ்த்தியன |
| 724 | 16 | வடிவத்தைக்கண்டு | வடிவத்தைக் கண்டு |
| 797 | 22 | யக்ஷஸ்ரீகளின் | யக்ஷஸ்த்ரீகளின் |
| 837 | 16 | विजमानां | विलज्जमानां |
| 898 | 17 | கேடு | கேட்டு |
| 926 | 22 | பசியாரலாம் | பசியாறலாம் |
| 988 | 2 | நீருற்று | நீரூற்று |
| 988 | 15 | मन्दमीर्यः | मन्दवीर्यः |
| 1076 | 6 | சிலனோ | சிலனோ |
| 1107 | 18 | கனிந்து | தனிந்து |

## ஸர்க்கங்கள்: 1-9

## ॥ श्लोकानुक्रमणिका ॥

### ஶ்லோகங்களின் முதற்குறிப்பகராதி



—*—

मद्रास प्रिन्टर्स, ५ शुंकुराम चेट्टि स्ट्रीट, मद्रास—१.

ஸர்க்கங்கள்: 10-19

## ॥ श्लोकानुक्रमणिका ॥

ச்லோகங்களின் முதற்குறிப்பகராதி





मद्रास प्रिन्टर्स, ५ शुंकुराम चेट्टि स्ट्रीट, मद्रास—१.

